ஓம்

நவக்கிரஹ தேவதாப்யோ நமஃ

**கீரனூர் நடராஜர் அவர்கள்**

அருளிச்செய்த

# சாதக அலங்காரம்

வேலூர் வேலப்பாடி

சோதிட கணித ஆரூட சித்தாந்த வல்லவரும்

சோதிட கலாநிதி பத்திராதிபருமாகிய

**V. K. வேலுநாயகர் அவர்களாலும்**

காவேரிப்பாக்கம் - பாலசோதிடம்

**K. M. தெய்வசிகாமணி சோதிடராலும்**

எழுதப்பட்ட

**விளக்க விருத்தியுரை**

அமரம்பேடு ரங்கசாமி முதலியார் குமாரர்

அ. இராஜரத்தின முதலியார்

மலர்மகள் விலாசம் பிரஸில்

பதிப்பிக்கப்பட்டது.

சென்னை - 1.

ரிஜிஸ்டர்ட் காபிரைட்]  1964  [இதன் விலை ரூபா 15 0

நெ-23, தாண்டவராயப்பிள்ளை வீதி.

முதற் பதிப்பு 1955
இரண்டாம் பதிப்பு 1964



"மலர்மகள்"
10-4-64.

# நூன்முகம்



பரப்பிரம்ம சொரூபமாயும், பக்தர்களைக் காக்கும்பொருட்டே ஓர் உருவாய்த் திரண்டு, ஜோதியுடைய வேலும் சூலமும் கையில் தாங்கி, மயில் வாகனமீது அமர்ந்து, ஆத்மகோடிகளைப் பிறப்பு இறப்பு என்றும், சுகம் துக்கம் என்றும் அளித்து அரசுபுரிந்திரா நின்ற சிவசண்முகக் கடவுளின் திருவருளை முன்னிட்டு, உலக மனுக்களாகிய மக்களுக்கு வரும் இன்ப துன்பங்களை அறியும் வண்ணம் ஜோதிடம் என்னும் பிரகாசத்தை அநேக மேதாவிகளாலும் ரிஷிகளாலும் பற்பல புலவர்களாலும் தர்க்கித்து நிலைபெற்ற ஜோதிட சாஸ்திரங்கள் இப்பூமியில் பல உண்டென அறிந்திருப்போமாயினும் அவற்றிற்கு முக்கிய காரணமாக விளங்கும் நூல் **சாதக அலங்காரமே** இந்நூல் சோதிட சார்வபௌமராகிய **கீரனூர் நடராஜர்** என்பவரால் இயற்றப்பட்டனவாகும்.

இந்நூல் மூலபாடமாக இயற்றப்பட்டதாதலால் தற்போதுள்ளவர்கள் இதையறிவது வெகு கடினமெனக் கண்டு இவரைப் போன்ற 'சோதிட வல்லோர்களால் இயற்றிய சர்வார்த்த சிந்தாமணி, குமாரசாமியம், புலிப்பாணி, வீமகவி, தூய்ய கேரளம், மணிகண்ட கேரளம், சாதக சிந்தாமணி, சோதிட சிகாமணி, தாண்டவமாலை, வீமேசுர உள்ளமுடையான் என்னும் இன்னும் பற்பல நூற்களையும் கொண்டு ஒவ்வொரு விஷயங்களுக்கும் தக்க உதாரணத்துடன் பொது லக்ஷணம், கிரகதேவதை, கிரகவலி, குணம், ஆட்சி-உச்சம் நீச்சம்-பகை, கிரகபகை, கிரகதேசம், மூலத்திரிகோணம், ஆண் பெண் விபரம், லக்கினம் ஸ்புடம் செய்யும் விதம், வடிவு, விழிப்பு, ஜாதி நிறம், பஞ்சபூத கிரகம், இராசி மானசங்கியை, லக்கின தியாஜ்யம், பிரசவ அடையாளம், பாலாரிஷ்ட விபரம், நக்ஷத்திரதோஷம், நக்ஷத்திரபலன்கள், சந்திரன் நின்ற பலனும் மற்றும் கிரகங்கள் நின்ற லக்கின பலன், அங்கிஷ பலன், லக்கின பலன், கிரகங்கள் லக்கினத்தில் நின்றபலன், கரண பலன், காலவோரை, திதி தியாஜ்யம், நக்ஷத்திர தியாஜ்யம், வார தியாஜ்யம், நாட்கண்டம், திரேகாணம், நவக்கிரக லக்கின விபரம், துவாதசாங்கிசம். திரிசாங்கிசம், உச்சபலன், கிரகங்கள் நின்ற யோகம், அவயோகம், தரித்திரயோகம், அங்கவீனம், நித்திய

பலன் சொல்லும் விபரம், 12-பாவங்களின் பலன், கர்ப்பாதான பலன், பெண்கள் ஜாதகம், வியாதி அறியும் வகை, வியாதி தோன்றுமிடம், நாய்கடி, பாம்புகடி, தூர்க்குணம், நெய்யினில் கை விடுகை, ஆயுதங்களால் ரணம், இலங்கை ராசிமானம், ஜீவனம், கேந்திரபலன், வருடங்களின் துர்பிக்ஷம், கிரகதிசைபுக்தி, அதன் விபரம், திசை பலன், புத்தி பலன், கோசாரம், அஸ்டகவர்க்கம், காலசக்கரம் முதலியவைகளை விவரமாயும் பொருத்தமான அத்தாக்ஷியுடனும் வரையப்பட் டிருக்கின்ற இதற்கு முதன்முதல் வேலூர் வேலப்பாடி கணித ஜோதிடர் திருவாளர் வபலூர் - இ. குப்புசாமி நாயகர் குமாரர் **வ. கு. வேலு நாயகர்** அவர்களால் விருத்தியுரை வரையப்பட்டு வந்ததாயினும் அவர் விண்ணுலகு எய்தினமையால், இவ்வரியநூல் வீண்போகாவண்ணம் நமது அச்சுக்கூடத் தலைவரின் வேண்டுகோளின்படியும் மற்றுமுள்ள சிலரும் என்னைக் கோரியபடியாலும் மேற்சொன்ன **வ. கு. வேலு நாயகர்** அவர்கள் எழுதியவை போக மற்றும் மிகுந்துள்ளதை என் சிற்றறிவுக்கு ஏற்றவாறு என் தகப்பனார் காவேரிப்பாக்கம் கணிதநூற் புலவரான மார்க்கலிங்க சோதிடர் அவர்கள் உபதேசித்தபடி ஸ்ரீ சண்முகக்கடவுள் உதவியால் நமது அச்சுக்கூடத் தலைவர் **அமரம்பேடு. இராஜரத்தின முதலியார்** அவர்களின் உத்தேசப்படி சிற்சில இடங்களில் சுருக்கியும் மற்றும் முக்கியமான இடங்களில் விரிவுபடுத்தியும் எழுதப்பட்டன.

ஆதலால் இதனைக் கைக்கொண்ட ஒவ்வொருவருக்கும் வேறு ஜோதிடநூல் விசேஷமாகத் தேவையில்லை என்பதை அறிவிற் சிறந்தோர் அறிவார் என்பதை இதை வாங்கி வாசிப்பவர்கள் நன்கு அறியலாம். ஆயினும் கற்றறிந்தோர் ஆங்காங்குச் சில தவறு காணப்படினும் திருத்தி வாசிக்கும்படியாய்க் கேட்டுக் கொள்ளுகிறேன்.

இப்படிக்கு

**கே. எம். தெய்வசிகாமணி**

# முகவுரை



முன் ஜன்மங்களில் செய்துள்ள புண்ணிய பாப கர்மங்களின் காரணமாய் இந்த ஜென்மத்தில் சுகம் துககம் முதலியன ஏற்படு கின்றன என்பதை சாஸ்திரங்கள் கூறுகின்றன. அவ்விதம் ஊழ் வினை காரணமாய் இப்பிறவியில் எந்த சமயத்தில் எதன்மூலம் மேற்கூறிய சுக துக்கங்கள் நேரக்கூடும் என்பதை சூரியன் முத லான ஒன்பது கிரகங்களும் ஜீவர்களுக்கு பிறக்கும் காலத்தில் உண்டான மேஷாதி பனிரெண்டு லக்கினங்களில் ஏற்படும் தத்தமது சஞ்சாரமூலம் சூசிப்பிக்கின்றன வென்பது சோதிட சாஸ்திரங்களின் முக்கியமான கொள்கை

ஜனன காலத்தில் அமையப்பெற்ற மேஷாதி ராசிகளில் சூரியகதி கிரகங்களின் சஞ்சாரமே **'ஜாதகம்'** என்று கற்றுணர்ந்த வர்கள் அறிவித்து இருக்கிறார்கள். ஜனன காலத்திய கிரகநிலையை நாம் அறிந்தாலும், கிரகங்களின் ஸம்யோகங்களினால் நேரும் பலா பலன்களை எவ்விதம் தெரிந்துகொள்ளவேண்டும்.

நம் முன்னோர்களான மஹரிஷிகளினால் நம்முடைய க்ஷேம லாபங்களை முன்னிட்டு முன்னமேயே சொல்லிவைக்கப்பட் டிருக்கும் சாஸ்திர நூல்கள்மூலம் அறியவேண்டும்.

ஸ்ரீ சுகப்பிரம்மம் பரீக்ஷித்து மகாராஜாவுக்கு **ஸ்ரீபாகவதம்** என்ற மோக்ஷ கிரந்தத்தையும் இன்னும் ஐஹிகபலப்ரதானமான ஸாதனங்களுக்கு ஹோரா சாஸ்திர ஸர்வஸ்வமான **சுகர் நாடி** என்னும் ஒரு ஹோரா சாஸ்திரத்தையும் நன்கு உபதேசித்தார். இந்த ஸம்ஹிதையில் சொல்லப்பட்ட லக்கின பலத்தினாலேயும் கிரகங்களுடைய இருப்பு சேர்க்கை வீக்ஷணங்கள் மைத்திரம் முதலான பல யோகாங்களினாலே அதிக விஸ்தாரமாக இருப்பது கணிசித்து ஜோதிஷ பண்டிதர்களின் சௌகர்யத்திற்காக **'ஸ்ரீ கணேசாசாரியர்'** என்னும் மஹாகவி **"ஜாதக அலங்காரம்"** என்ற ஸமஸ்கிருத கிரந்தத்தை இயற்றினார். இதுவும் கூடார்த்த மாக இருந்ததால் ஹரதேவன் எனப்பட்ட தைவக்ஞ சிகாமணி அவர்கள் ஸமஸ்கிருதத்திலேயே வியாக்கியானம் செய்துள்ளார். ஆனால் மேற்கூறிய இரண்டு கிரந்தங்களும் திராவிட தைவக்ஞர் களுக்கு உள்ளங்கை நெல்லிக்கனிபோல விளங்குமாறு கீரனூரில் வாழ்ந்துவந்த வரகவி **"நடராஜர்"** என்னும் ஹரீயர் சுமார் 290-ஆண்டுகளுக்குமுன் செய்யுள் ரூபமாக **"ஜாதக அலங்காரம்"** என்ற பெயருடன் இந்த உயர்ந்த சோதிட சாஸ்திரத்தை அமைத்துள்ளார்.

# முகவுரை

இந்த ஜாதக அலங்காரம் செய்யுள் ரூபமாக இருந்தாலும் வேதம் ஆகமம் உபநிஷத் புராணம் இதிகாசம் தர்மசாஸ்திரம் திவ்யப்ரபந்தம் பெரியபுராணம் காமசாஸ்திரங்கள் உள்பட அநேக ஸமஸ்கிருத உதாரணங்களுடன் நன்கு விளக்கப்பட்டு படிப்போர் மனம் களிக்குமாறு வெளியிடப்பட்டு இருக்கிறது. இந்த சிறந்த தமிழ்நூலுக்கு இவ்வளவு ஸமஸ்கிருத பிரமாணங்களைக்கொண்டு இருவகை நூலுக்கும் ஒற்றுமையைக் காட்டி நன்கு விளக்கியிருப்பது மெச்சத்தக்கது.

மேலும் மூலபாடங்களில் சுத்தமான பிழையற்ற பதிப்பாயும் ஒரே புத்தகத்தில் ஜோதிஷ சசஸ்திர பலாபலன்கள் பூராவும் சந்தேகமறத் தெரிந்துகொள்ளக் கூடியதாயும் இது அமைந்து உள்ளது. இதை ஸ்ரீமான் அமரம்பேடு இரங்கசாமி முதலியார் குமாரரும் சென்னை அருணாசலேசுவரர் வரதராஜப் பெருமாள் தேவஸ்தான தர்மகர்த்தர்களில் ஒருவரும், மலர்மகள் விலாஸ அச்சுக்கூடத் தலைவரும், ஜோதிட நூல்களை சுத்தப் பிரதியாய் வெளியிட்டு வருபவரும் ஆகிய **அ. இராஜரத்தின முதலியார்** அவர்கள் இந்த லோகோபகாரமான வெளியீட்டினால் ஜோதிட உலகை மகிழ்ச்சியடையச் செய்திருக்கிறார். இந்தப் புத்தகத்தை ஒவ்வொருவரும் வாங்கிப் படித்து, அதிலுள்ள பலாபலன்களை நன்கு அறிந்து முறைப்படி பலன் சொல்லுவார்களேயானால் ஜோதிட சாஸ்திரம் உண்மையாக விளங்குமென்பதில் சிறிதும் ஐயமில்லை.

சோதிட சாஸ்திரத்தைப் பயிற்சிசெய்ய விரும்பும் எவரும் இந்நூலைப் படித்தறிந்தபின்னர் மற்றையகிரந்தங்களைப் படித்தறிய வேண்டியது என்று கூறுவது மிகையாகாது.

அன்பில். எஸ். ஸௌமிய நாராயண அய்யங்கார்
"ஜோதிர் பூஷண"

சென்னை - 3
11-3-1955

# நூலாசிரியர் வரலாறு



இந்நூல் இயற்றிய கீரனூர் நடராஜர் என்பவர் வடமொழியில் மிக்க பயிற்சி பெற்றவராய், ஐயந்திரிபறக் கற்று ஆராய்ந்து தமிழிலும் வல்ல புலவராய், அவ்வணம் ஆராய்ந்த அவ்விடயங்களை முறையே விருத்தப் பாக்களில் அமைத்துச் சித்திர விசித்திரம் பெற இந்நூலை அமைத்திருக்கின்றார். இவர் புலமைத் திறன் இந்நூலை ஆராய்ந்த புலவர்க்கு விளங்காமலிராது. ஆதலின் இவர் பெருமை நம்மனோரால் எளிதில் எடுத்து உரைக்குந் தரத்தன்று. இனி இவர் கீரனூரில் பிறந்தவரென்றும், அதனால் கீரனூர் நடராஜர் என அழைக்கப் பெற்றார் என்றும் பலருங் கூறுகின்றனர்.

இக் கீரனூர் இக்காலத்து புதுக்கோட்டை சமஸ்தானத்தில் உள்ளதாகிய கீரனூர்தானோ, அல்லது வேறென்றோ என விளங்க வில்லை. ஆயினும் இவர் காப்புச் செய்யுள்களில் விநாயகர், சிவபெருமான், அம்பிகை, சுப்பிரமணியர் முதலியோரை வணக்கஞ் செய்து இருத்தலின் இவர் சைவ மதத்தினர் என்று நன்கு நிச்சயிக்கப்படும்.

*" சேவடி நாதன்வர உருவாய் வந்தோன் "* என்பதனால்

இவர் தந்தையார் சாக்ஷாத் நடராஜப்பெருமானிடத்தில் அன்புமிகுந்து அப்பெருமானை உபாசனா மூர்த்தியாகக் கொண்டு தவம் இயற்றி இவரைப் பெற்றனர் என்று தெரிகிறது. இவர் சைவ சமயாசாரியர்களையும், அறுபான்மும்மை நாயன்மார்களையும் வணங்கி இருத்தலின் சைவ குலத்தவர் என்றும், சிவதீக்ஷை பெற்றவர் என்றும் தெரிகிறது.

*மற்றும் " ஓம்விதியுஞ் சமய யேதுமுதல் உரைத்தே*
*ஓர்எழுத்தில் ஐந்து எழுத்தின் உண்மையும் "* என்று

நான்காஞ் செய்யுளில் கூறியதனால் ஞானப்பிரகாச சுவாமிகளிடம் சிவதீக்ஷை பெற்று, அவரைத் தமது ஞானாசாரியராகக் கொண்டவர் என்று நன்கு நிச்சயிக்கப்படும்.

---

# சாதகாலங்காரம்



**சாதகம் + அலங்காரம் = சாதகாலங்காரம்.**

*பிறவிக்கு அணிசெய்யும் நூல் என்பது பொருள்; நான்காம் வேற்றுமைத் தொகைநிலைத்தொடர். அலங்காரம் - காரியவாகுபெயர். பிறவிக்கு அழகு செய்தலாவது பிறவிப் பயனை அறிந்து அதற்கு ஏற்ப நடந்துகொள்ளு மாறு செய்தல். பிறவிப் பயனாவது "பொருளிலார்க் கிவ்வுலக மில்லாகி யாங்கு" என்ற நாயனார் திருவாக்குக் கிணங்க, பொருளைப் பெறாதவர்க்கு இன்பங்களில்லை. ஆதலால் அப்பொருளைத் தருமவழியில் ஈட்டுதலும், "மன்னிய மூன்றனுள் நடுவண தெய்த இருதலையும் எய்தும்" என்ற நாலடியின் கருத்துக்கு இணங்க, அப்பொருளைப் பெற்றதாலாய பயன்க ளாகிய அறத்தையும் இன்பத்தையும் அழகுபெறப் பெற்று, அவற்றின் பயனைச் சீர்பெறத் துய்த்தலும் ஆகிய இவையேயாம். இனிப் பொருள் மிகுதியாகப் பெறும் வழிதான் யாது என்று ஆராய்வுழி அதனை இச் சாதக அலங்காரம் ஒருவன் பிறந்த காலத்து நின்ற நவக்கோள் நிலைகொண்டு நன்கு காட்டுகின்றது.*

*அன்றியும் இந்நூல் உடற்குறும் துன்பங்கள் இவை யெனவும், அவை இன்னின்ன காலத்துறுமெனவும் வெள்ளிடை மலையென விளக்கிக்காட்டி அவற்றினின்று ஒழிவு பெற்று நன்னிலை யுற்று இருக்கும் வகையையும் தெரிவிக்கின்றது. ஆதலின் இதற்கு இந்நிலவுலகத்தில் மானிடராய்ப் பிறந்தவர்க்கு அழகு செய்கின்றதாகிய ஒரு நூலெனப் பெயரிட்டது முற்றிலும் பொருட் பொருத்தமானதேயாம்.*



## இந்நூல் உரையில் காட்டிய

# தமிழ்நூல்-வடமொழிநூல்கள்

வில்லிபுத்தூரார் பாரதம்
கலிங்கத்துப்பரணி
தாயுமானவர் பாடல்
இலிங்கபுராணம்
கோயிற்புராணம்
வாயுசங்கிதை
சித்தாந்த சிகாமணி
அறப்பளீசுர சதகம்
நல்லாப்பிள்ளை பாரதம்
நன்னூல்
திருத்தொண்டபுராணசாரம்
ஐயாசுவாமீயம்
நீதிசாரம்
வடவேங்கட நாராயணசதகம்
சரசோதி மாலை
பட்டினத்தார் பாடல்
குசேலோபாக்கியானம்
விநாயகபுராணம்
சூதசம்மிதை
திருவானைக்காபுராணம்
திருவிளையாடற்புராணம்
வாகீசபெருந்தகையார்புராணம்
பாகவதம்
குப்புசுவாமீயம்
வாக்குண்டாம்
கந்தபுராணம்
அரிச்சந்திரபுராணம்
தேவாரம்
நல்வழி
அருணகிரி அந்தாதி
நீதிநெறி விளக்கம்
செகராசசேகரமாலை
சூடாமணி உள்ளமுடையான்
வீமேசுர உள்ளமுடையான்
சாதகசாகரம்
குமாரசுவாமீயம்
சாதக சிந்தாமணி
தாண்டவமாலை
இசைநுணுக்கம்
திருக்குறள்
சாதக சூடாமணி
பி-ஜா-கோசாரதீபிகை
திருவான்மியூர் புராணம்
பணவிடுதூது
நைடதம்
ஏலாதி
அகத்திணையியல்
தொல்காப்பிய உரை
சேனாவரையர்
நச்சினார்க்கினியர்
வீமேசுரம் (எட்டுப்பிரதி)
சாதக கணிதாமிர்தம்
திருமந்திரம்
வள்ளலார்
சிவநெறிப்பிரகாசம்
சிவஞானசித்தியார்
அமுத கலைஞானம்
மச்சபுராணம்
கண்ணுசாமீயம்
திருவருட்பிரகாசவள்ளலார்
காஞ்சிபுராணம்
மங்களேஸ்வரியம்
திருவாசகம்
தனிப்பாடல்
பிரபுலிங்கலீலை
வேலூர் அமிர்தலிங்க சுவாமிகள்
நான்மணிமாலை
கேரளம்
சோதிடப்ரகாசம்
வீமகவி
சந்திரகாவியம்
புலிப்பாணி சோதிடம்
திருமுட்டபுராணம்
கபிலர்
புறநானூறு
சாதிராபரணம்
சர்வார்த்த சிந்தாமணி
முண்டகோபநிஷத்து

கசியப சம்மிதை
நாரத சம்மிதை
பிருகத் சம்மிதை
கர்க்கஜாதகம்
தைவக்ஞவிலாசம்
லகுஜாதகம், சாராவளி
பூர்வ காலாமிர்த சந்திரிகை
முகூர்த்ததர்ப்பணம்
காலாமிருதம், காலவிதானம்
உத்தரகாரணகமம்
சமயிதாஸ்கந்தம்
சூரியசித்தாந்தம்
ஜாதகாபரணம், அமரகோசம்
விவகாபட்டீயம்
பராசரஹோரை, பலதீபிகை
ராஜீயநீலகண்டீயம்
பைரவதீபிகை
யவனதாஜிகம், கிரந்தாந்தரம்
நீலகண்டதாஜிகம்
ஜாதக பாரிஜாதம்
புவனதீபிகை
ஜாதகானுபவதர்ப்பணம்
ஜாதகசந்திரிகை
தாஜிகமுக்தாவளி
யவனசாரியர், நீலகண்டர்
பிருகத் யவன ஜாதகம்
மனுதர்ம சாஸ்திரம்
யாகஞவர்க்கியர், பிருகத்ஜாதகம்
பிருகத் பராசரஹோரை
விருத்த சம்மிதை
கேசவ தைவக்ஞர்
பகவத்கீதை
ஸ்ரீபதி ஜாதகபத்ததி
ஜாதகாரணவம், வாமனதாஜிகம்
முகூர்த்த ரத்னவளி
பிர்மாண்ட புராணம்
வாயுபுராணம்
பவிஷ்யோத்தரபுராணம்
ஹகோபலநாதம்
ஞானப்ரதீபிகை
குருபாலபிரபோதிகை
வாஞ்சனதீயம்
பிருகதாரணிய உபநிஷத்து
சத்தியாசாரியர், வராகமிகிரர்
பைங்கள உபநிடதம், மணித்தர்
மதனரத்தினம்
ஜோதிஷார்ணவம்
ஸ்ரீகந்தபுராணம்
தேவலர், தேவகீர்த்தி
நாரதர், ரத்தினமாலை
நிர்ணயசிந்து, பிரம்மயாமளம்
வசிஷ்டசம்மிதை
உததரகார்க்கியம்
பாரத்வாஜ சம்மிதை
ஸ்ரீபதியாசாரியர்
சௌனகசம்மிதை
யவனஜாதகம்
சத்கிருத்ய முக்தாவளி
ஜோதிஷ தத்துவ சுதார்ணவம்
பிராசீனர், உடுதசாபிரதீபிகை
சியாமசங்கிரகம்
கலியாணவர்மர்
கேசவ லகுதாசகம்
பாவகுதூகலம், கேரளாசாரியர்
ஜாதகசங்கிரகம்
பாவார்ததரத்னாகரம், ஜாதகராஜீயம்
ஜாதகபல முக்தாவளி
ஜாதகதீபம், காரிகை
ஜயமுனிவர் சூத்திரம்
ஜாதகசிரோமணி
பட்டோத்பலர், கிருஷ்ணமிசிரர்
சுருதகீர்த்தி, கர்க்கசம்மிதை
பிருகத் பாராசாரியம்
திரிலோகப்பிரகாசம்
ஜோதிசாகரம்
ஜோதிபிரகாசம்
சமயிதாபிரதீபிகை
சாரவகதர சம்மிதை
ஜம்புஹோரா பிரகாசிகை
பிருகஸ்பதி
கோபால ரத்னாகரம்
சாந்தி ரத்னாகரம்
ஜாதக தத்துவம்
விருத்தபாராசரர், ஸ்ரீபதி.

உ

சிவமயம்

## சாதக அலங்கார

# பொருள் விளக்க அட்டவணை






ஓம் நவக்கிரக தேவ சகாயம்

# சாதக அலங்காரம்

### விளக்க விருத்தியுரை



## 1-வது பாயிரப் படலம்

காப்பு

**விநாயகர் துதி**

நீருலவு புவியில்நரர் சனனகா லயினில்
 நின்றநவக் கிரகத்தால் நிகழ்த்துபலன் புகலும்
ஏருலவு வடமொழியைச் செந்தமிழ்ச் சாதகநூல்
 எனத்தமியேன் உரைசெய்ய எழில்வேத முனிவன்
பாருலகில் குருகுலபா ரதக்கதையை வழுத்தப்
 பயிலும்வட கிரிமிசையில் பரிந்துமருப் பதனால்
சீருலவ வரைந்தருளுந் தெய்வதவா ரணத்தின்
 செழுங்கமலத் தாள்இணையைச் சிரந்தனில்வைத் திடுவாம்.

(இதன்பொருள்) கடல்சூழ்ந்த இந்தப் பூவுலகத்தின்கண் வசிக்கும், மன்பதைகளுடைய சனனகாலத்தில் இருந்த நவக்கிரகங்களினால் நடத்தப் படுகின்ற, நன்மை தீமைகளாகிய பல பாகங்களைச் சொல்லப்பட்ட, சிறந்த சமஸ்கிருத பாஷையிலுள்ள சோதிட பல சாஸ்திரங்களை, இயற்றமிழ் மொழியில் சாதக அலங்காரம் என்ற பெயரால் (ஓர் நூலை) கல்வி-அறிவு-ஒழுக்கங்கள் நிரம்பப் பெற்றிலாத நான் சொல்லுவதற்காக, சிறப்புப் பொருந்திய வேதவியாச மகாமுனிவர் இந்நிலவுலகத்தின்கண் பிரசித்தி பெற்ற குருகுலத்து பாண்டவர் முதலாயினோர் சம்பந்தமான பாரத காவியத்தைச் சொல்ல, மஹாமேருகிரியின்மீது அன்புடன் தனது கொம்பை எழுதுங் கருவியாகக் கொண்டு அழகுபெற எழுதியருளிய, தெய்வீகத் தன்மை பொருந்திய யானையாகிய சாக்ஷாத் விநாயகக் கடவுளினுடைய செந்தாமரைப் புட்பத்தை யொத்த இரண்டு திருப்பாதங்களையும் தலையின் மீது சூட்டிக்கொள்வாம் என்றவாறு.

'பாயிரம்' என்பது வரலாறு ஆகும்; இது வடமொழியில் உபோத்காதம் எனப்படும். பாயிரமானது பொதுப்பாயிரம், சிறப்புப்பாயிரம் என இருவகைப்படும். பொதுப்பாயிரத்தின் இலக்கணமாவது: நூலினுடைய

வரலாறு, நூலைக் கற்பிக்கும் ஆசிரியன் வரலாறு, மாணுக்கன் வரலாறு, பாடங்கேட்டலின் வரலாறு முதலியனவாம். சிறப்புப்பாயிரத்தின் இலக்கணமாவது: நூலைச் செய்தவனது பெயர், நூல் வந்தவழி, நூல் வழங்கும் நிலத்தின் எல்லை, நூலின் பெயர், நூலைக் கேட்டற்குரிய அதிகாரிகள் நூல்செய்த காலம் முதலியனவாம்.

காப்பு - காத்தல்; 'பு' விகுதி பெற்ற தொழிற்பெயர்; அது இங்கு காக்கின்ற கடவுளின் விஷயமான வணக்கத்துக்குத் தொழிலாகுபெயர். ஆகவே இந்நூலாசிரியர் தமக்கு நேரிடத்தக்க இடையூறுகளை நீக்கித் தமது எண்ணத்தை முடிக்கவல்லதோர் பொருளின் விஷயமாகச் செய்யுந் தோத்திரம் என்பது கருத்து. இதுவே தம்மால் பூசிக்கப்படும் வழிபடு கடவுள் என்பதாம்.

எல்லா நூல்களும் மங்கலமொழி முதல் வகுத்துக் கூறவேண்டியதால் 'நீர்' என்று தொடங்கப்பெற்றதாகும். இதனை "வழிபடு தெய்வ வணக்கஞ் செய்து, மங்கலமொழி முதல் வகுத்தெடுத்துக்கொண்ட இலக்கண இலக்கியம், இடுக்கணின்றி இனிது முடியும்" என்ற சூத்திரத்தினுல் நன்கு அறியலாம். மற்றும் "நஞ்சும் அமிழ்தமாம் மங்கலம் பொருந்தின்" என்ற பழமொழியாலும் அறிக. தம்மை வழிபட்டுத் தொடங்கும் கருமங்களை இடையூறு வாராமல் காக்கும் அதிகார தெய்வம் விநாயகர் என்பது வேதாகம புராணேதிகாச வுண்மை. அவர் கணங்களுக்கு அதிபர் ஆதலால் கணேசரென்றும், விக்கினங்களைக் காப்பவரும் செய்பவருமாதலால் விக்னேசுவரர் என்றும் பல திருநாமங்களைப் பெறுவர். இவ்வுண்மைபற்றி முதல் முதல் விநாயகரை வணங்கினர் என்க.

அமிழ்தினும் இனிய நம் தாய்மொழியில் சோதிட சாஸ்திரங்களும், ஏனைய கலைகளும் தமிழ் வேந்தர்கள் அரசியல் புரிந்த காலத்தில், அவர்களுடைய பேராதரவினுல் அபிவிருத்தியடைந்து செழித்தோங்கி வளர்ந்தன. வேற்றரசர் படையெழுச்சியினுல் தமிழ்மாதும், சைவ-வைஷ்ணவ சமயங்களும், ஆலயங்களும், வித்தியா மண்டபங்களும் அவர்கள் சந்நிதியிலே உயிர்ப்பிசசை வேண்டும் கதியிற் புகுந்தன. தமிழிலிருந்த அரும்பெரும் நூற்கள் வேற்றரசர்கள் படையெழுச்சிகாலத்தில் அக்கினிக் கிரையாயின. தமிழ்நாடு கடலாற் கொள்ளப்பட்டதனுல் சில நாசமாயின. எஞ்சிநின்றவை தாலபத்திரத்திலிருந்து வன்மீகத்திற்கிரையாயின. ஆதலால் பிற்காலத்தில் நம்மனேர்க்கு அவை கிடைக்காமற்போயிற்று. இத்தகைய காரணங்களால் நந்தமிழ்மொழியில் சோதிட சாஸ்திரங்களில்லாத பெருங் குறையை யுணர்ந்து அக்குறையை நிவர்த்திக்கும்பொருட்டு சமஸ்கிருத பாஷையிலுள்ள சோதிட சாஸ்திரங்களை நன்கறிந்து தமிழ்மொழியில் ஓர் நூல் செய்து உபகரிக்கமுற்போந்தமையினுல் "ஏர்உலவும் வடமொழியைச் செந்தமிழ்ச் சாதகநூல் எனத் தமியேன் உரைசெய்ய" என்று கூறினரென்க.

வேதவியாசமுனிவர் மறைப்பொருளை பாரதமாகச்செய்யத் திருவுளங்கொண்டு, அதனை எழுதி முடிக்கத் துணைசெய்யுமாறு விநாயகக் கடவுளைத் தியானித்து அவரை சாக்ஷாத்கரித்துத் தாம் செய்யக்கருதிய அரியபெரிய நூலை எழுதியருளுமாறு அக்கடவுளை வேண்ட, அவர் அதற்கு உடன்பட்டு "எனது எழுத்தாணி தடைப்படாது நீர் கவி சொல்லிவருவீராயின் எழுதி

முடிப்பேன்; அப்படிக்கின்றித் தாமதிப்பீராயின் அக்கணமே மறைந்துப் போவேன்'' எனத் திருவாய்மலர்ந்தருள முனிவர்பெருமான் ஓம் என்றுடன் பட்டு "என் கவிகளில் பொருளாராய்ந்து சீர்ப்படுத்தி வரைந்தருளல் வேண்டும்'' என்று வேண்டி, அவரது ஆசியைப் பெற்று சொல்லிவர, விநாயகர் தனது கொம்பை எழுத்தாணியாகவும் மேருமலையை ஏடாகவும் எழுதி முடித்தார். இதனை,

நீடாழி யுலகத்து மறைநாலொ டைந்தென்று நிலைநிற்கவே
வாடாத தவவாய்மை முனிராசன் மாபாரதஞ் சொன்னநாள்
ஏடாக வடமேரு வெற்பாக வங்கூர் எழுத்தாணிதன்
கோடாக எழுதும் பிரானைப் பணிந்தன்பு கூர்வாமரோ.

என்ற வில்லிபுத்தூர் ஆழ்வார் வாக்கான் இனிதறியலாம். மற்றும் "பண்டு பாரதம் எனுங்கதை பராசரன்மகன், பகரவெங்கரிமுன் பருமருப்பை யொருகைக், கொண்டு மேருசிகரத் தொருபுறத்தி லெழுதிக், குவலயம் பெறுதவப் பயனுரைப்ப வரிதால்'' என்ற கலிங்கத்துபரணியிலும் அறிய லாம். இதுபற்றியே "வடகிரி மிசையில் பரிந்து மருப்பதனால், சீருலவ வரைந்தருளும் தெய்வத வாரணம்'' என்று கூறினரென்க.

"நின்ற நவக்கிரகத்தால் நிகழ்த்து பலன் புகலும்'' என்றது என்னை யெனின்? இந்த பூகோலத்தை அரசியல்புரியும் அரசர்பெருமான் ஓரிடத்தி லிருந்து மந்திரி, சேனாதிபதி, நியாயாதிபதிகளைக்கொண்டு மிகப் பரப்பா யுள்ள தனது இராச்சியத்தில் ஆங்காங்கு நீதிமன்றங்களையமைத்துத் தமது பிரதிநிதிகளைக்கொண்டு மக்கள் செய்யும் நன்மை தீமைகளை யோர்ந்து காத்துந் தண்டித்தும் இராச்சிய பரிபாலனஞ் செய்வதைப்போலவே எல்லாம் வல்ல இறைவனும் சர்வேஸ்வரன் சூரியன் சந்திரன் முதலான தமது பிரதிநிதிகளைக்கொண்டு ஜீவர்களின் வினைக்கு ஏற்ப சுக துக்கங் களைக் கொடுத்து வருகின்றனரென்க. "அண்டமுமாய்ப் பிண்டமுமாய் அளப்பிலாத, ஆருயிருக் கோருயிராய் அமர்ந்தானால்'' என்ற ஸ்ரீ தாயுமானர் திருவாக்கின்படி முதல்வன் அண்டத்தில அகமாகிய அக்கினியிலும, அகப்புறமாகிய சூரியனிலும், புறமாகிய சந்திரனிலும், புறப்புறமாகிய நக்ஷத்திரங்களிலும், பிண்டத்தில் அகமாகிய ஆன்மாவிலும், அகப்புறமாகிய ஜீவனிலும், புறமாகிய மனத்திலும், புறப்புறமாகிய இந்திரியங்களிலும் விளங்குகின்றனர். "அண்டத்தி லுள்ளது பிண்டத்தில'' என்றபடி அமைந்து ஜீவர்களின் கர்மானுசாரத்திற்கு ஏற்றபடி நன்மை தீமைகள் ஆகிய பலாபலன்களைக் கொடுத்துவருகின்றனர். இதனை,

பரிதிமுதலாங் கோளனைத்தும் மாயன்முதலாம் பலதேவும்
புரியுங்கரும மெவையுமதது எவல்தலையின் மிசைப்பூண்டு
மருவியியற்று நிற்குமென மனத்தின் உணரவேண்டுமால்.

என்னும் இலிங்கபுராண வசனத்தினால் நன்கறியலாம். ஆகவே இறைவன் ஏவலின்படி நல்வினை செய்தோர்கட்கு நவக்கிரகங்கள் நல்ல ஸ்தானங்களி லும், தீவினை செய்தோர்கட்குக் கெட்ட ஸ்தானங்களிலும் நின்று அவரவர் கள் வினைக்கேற்ப நன்மை தீமைகளாகிய இன்ப துன்பங்களைக் கொடுத்து உலகம் நடைபெறச்செய்கின்றனர். ஆதலால் "நின்ற கிரகத்தால் நிகழ்த்து பலன் புகலும்'' என்றனர் என்க.

பூதாரா க்ரஹ கோளாநாம் கஸ்தாநாம் குணஸங்க்ரமாத்
பௌதிகாநாஞ்ச ஜந்தூநாம் பித்யந்தேஹி குணக்ரியா
தத்தத் கர்ம விபாகஸ்ய ஸூசகங் கோளலக்ஷணம்
க்ஞாத்வா ததனு ஸாரேண ஜந்மாதி பலமுந்நயேத்.

என்னும் சர்வார்த்தசிந்தாமணி வசனத்தினால் பூமியினுடையவும், ஆகாயத்தி லுள்ள கிரக நக்ஷத்திர கோளங்களுடையவும், குணசம்பந்தத்தினால் பிருதிவி-அப்பு-தேயு-வாயு-ஆகாச முதலிய பூத காரியங்களுக்கும், மனிதர் களாதி ஜந்துக்களுக்கும், குணம் செய்கைகள் பேதப்படுகின்றது. அந்தந்த கர்ம பரிபக்குவங்களை அறிவிக்கும் (கிரக நக்ஷத்ர) கோள இலட்சணத்தை அறிந்து அதன் அனுசரணமாக ஜனனாதி பலாபலன்களை யூகித்து அறிய வேண்டியது அவசியமாகும். சமஸ்கிருதம் என்ற சொல்லுக்கு சுத்தி செய்யப்பெற்ற பாஷை என்பது தாத்பரியம். இது தேவபாஷை, வடமொழி, ஆரியம், கீர்வாணம் என்று வழங்கப்படும். சகல வேத புராணேதிகாசங்க ளெல்லாம் அப்பாஷையிலேயே இருத்தல்பற்றி அது நூற்பாஷையாயிற்று. ஆதலால் அதற்குக் கிரந்தமென்ற பெயருமொன்று உண்டாவதாயிற்று (1)

## தில்லை நடராஜர், சிவகாம சௌந்தரி, சத்திக் கணபதி சண்முகன் இவர்களுடைய துதி

வைத்தபல பூதபே தங்களெழு வகையில்
　மன்னும்உயிர்க்கு உயிராகி மணிஒளிகள் இலங்கு
பைத்தலைவாள் அரவுஅரசன் வியாக்கிரமா முனியும்
　பணியநடம் புரிபரமன் பங்கயத்தாள் தொழுதே
கைத்திகிரி நெடுமாலோடு அலர்விரிஞ்சன் மகவான்
　கருணைஉற வணங்குசிவ காமசௌந் தரியின்
சத்திகண பதிஅமரர் உறுசிறைமீட்டு அருளும்
　சண்முகன்பொன் கமலமலர் தலைக்குஅணிவோம் அன்பாய்.

(இ-ள்) எல்லாம்வல்ல இறைவனால் படைக்கப்பட்ட பலவேறு வகை யாயுள்ள பூத விகற்பங்களால் உண்டாகின்ற எழுவகைப்பட்ட தோற்றங்க ளாக நிலைத்திருக்கின்ற ஆன்மாக்களுக்கு ஆன்மாவாகியும், இரத்தினங்கள் ஒளி நிறைந்து விளங்குகின்ற பசிய படத்தலையை யுடைய நாகலோக வாசி களாகிய சர்ப்பகணங்களுக்குத் தலைவனாகிய ஆதிசேஷனுடைய அமிசாவ தாரரான பதஞ்சலி மகரிஷியும், வியாக்கிரபாத மகரிஷியும் வணங்கிப் போற்ற, (தில்லை சிதம்பரத்தில்) ஆனந்த தாண்டவஞ் செய்தருளும் சாக்ஷாத் நடராஜப்பெருமானுடைய பாததாமரைகளை வணங்கி (மற்றும்) சுதரிசனம் என்னுஞ் சக்கராயுதத்தைக் கையிலேந்திய மஹாவிஷ்ணுவும், தாமரைமலரில் எழுந்தருளியிருக்கும் பிரம்மதேவனும், கருணையைப் பெறு வான்வேண்டி, தொழுதேற்றும் சாக்ஷாத் சிவகாம சௌந்தரியாகிய அம்பிகையினுடையவும், சத்திக்கணபதியினுடையவும், தேவர்கள் சிறை யைத் தவிர்த்து திருவருள்செய்த சண்முகக்கடவுளுடையவும், பொற் றாமஸர மலரையொத்த திருப்பாதங்களை அன்புகொண்டு எமது தலையின் மேல் அணிந்துகொள்வோம் எ-று.

பைத்தலை=படத்தை யுடைய தலை என்பதாம். உலக வடிவாயுள்ள விராட்புருஷனது இதய கமல ஸ்தானமான சிதம்பர தலத்தும் பொன்னம்

பலத்தில் சாக்ஷாத் நடராஜப்பெருமாள் ஆனந்ததாண்டவஞ்செய்து பஞ்ச கிருத்தியங்களையும் நடத்துகின்றாராகலின் "நடம்புரியும் பரமன்" என்று வணங்கினர். சிதம்பரம் என்பது சர்வான்மாக்களுக்கும்பொதுவாய், சங்கார வழக்கறுக்கின்ற அம்பலமாய், களங்கமற்ற கனகமயரூபமாய், சுத்த கேவலமாய், பூமிக்கு இருதயகமலமாய், யாவர்க்கும் புகலிடமாய், சாக்கிராதீதங் கழன்ற சுத்தமாய், பரஞானமாய், காணுந்தோறும் காணுந்தோறும் புதுமையாயிருப்பதாய், சத்தியஞானரூபமாய், சுழுமுனைமார்க்கத்தில் எழுந்தருளியிருக்கின்ற பிரகாசமான ஞானமாய்த் தன்னைத் தரிசித்தவர்களுக்கு ஞானானந்தத்தைத் தோற்றுவிக்கும் பொருளாய், பசுபாசஞானம் நீக்கி இருப்பதாய், சர்வத்திற்கும் இடங்கொடுப்பதாய், பதமுத்திகளைக் கைவிட்டவிடமாய், மகாமாயைக்கு மேலாய், எப்பொழுதும் எல்லாபாதத்திலும் விளங்கும் ஞானமாகிய சபையாய், சிவசொரூபமாய், தத்துவாதீத சிவபெருமான் அனவரத தாண்டவத்திற்கு அதிட்டானமாய் இருப்பதாகும்.

இளாவிருத வருஷத்தில் அங்கிரனுக்குச் சதியிடத்தில் பிறந்தவர் பதஞ்சலிமுனிவர். இவர் பிறந்தவுடன் திரிகாலஞானமுடையவராய் எல்லாமுணர்ந்தவர். மகமேருவில் ஓர் ஆலமரத்துப் பொந்திலிருந்த லோலுமை என்ற கன்னிகையைக்கண்டு மணம்புரிந்தவர். பதஞ்சலி யோகசூத்திரம் செய்தவரும், பாணினிவியாகரணத்திற்கு மகாபாஷியஞ் செய்தவரும் இம் முனிவர்பெருமானேயாகும். இவர் ஆதிசேஷனுடைய அமிசாவதாரமாதல் பற்றி "பைத்தலை + வாள் + அரவு + அரசன்" என்றார் இந்நூலாசிரியர் என்றறிக. மஹாவிஷ்ணுவினால் சாக்ஷாத் சிவபெருமானுடைய நடனதரிசனத்தின் மகிமையைக் கேள்வியுற்ற ஆதிசேடன் அந்த திவ்விய நடனங் காணவேண்டி பதஞ்சலிமுனிவராக அவதரித்துத் தில்லைச் சிதம்பரக்ஷேத்திரத்தில் ஆனந்ததாண்டவ தரிசனஞ்செய்துகொண் டிருந்தவரென்பது கோயிற்புராணம். யோகசூத்திரஞ் செய்தவரும், மஹாபாஷியஞ்செய்தவரும் இருவேறு பதஞ்சலிமுனிவர் என்பார் சிலர். சத்திக்கணபதி என்பது தலவிநாயகர் திருநாமம்; திருத்தில்லையின் மேற்குக் கோபுரவாயிலில் வீற்றிருந்தருளும் தலவிநாயகர் திருநாமம் கற்பகவிநாயகர். இதனை ஆசிரியர் சத்திக்கணபதி என்று வணங்கியிருக்கின்றனர்.

பூதம் = சிருஷ்டிப்பொருள்கள். பேதம் = அவற்றின் வேறுபாடுகள், அஃது ஜீவவிகற்பமென்னப்படுவதாம். இவ்விகற்பம் சீவர்களின் நல்வினை, தீவினை என்னும் இருவினைக்கீடாக நால்வகைத்தோற்றம், எழுவகைப் பிறப்பையும், எண்பத்துநான்கு நூறாயிரம் யோனிபேதத்தையும் உடையவைகளாய்ப் பிறந்திறந்து உழலும். இவற்றுள் நால்வகைத் தோற்றமாவது அண்டசம், சுவேதசம், உற்பிச்சம், சராயுசம் என்பவைகளாம். அண்டசம்-முட்டையிற் றோன்றுவன. சுவேதசம்-வேர்வையிற்றோன்றுவன. உற்பிச்சம்-வித்து வேர் கிழங்கு முதலியவைகளை மேற்பிளந்து தோன்றுவன. சராயுசம்-கருப்பையிற் றோன்றுவனவாகும். எழுவகைப் பிறப்புகளாவன: தேவர், மனிதர், விலங்கு, பறவை, ஊர்வன, நீர்வாழ்வன, தாவரம் என்பவைகளாம். இந்த எழுவகையினுள் முன்னின்ற ஆறும் இயங்கும் இயற்பொருள்கள்; இறுதியில் நின்ற தாவரங்கள் நிலையியற் பொருள்கள்; இவை முறையே சரம், அசரம் எனப்படும். தேவர்கள்-மனிதர்கள்-நாற்கால்விலங்குகள் கருப்பையிலும், பறவைகள்-ஊர்வன-நீர்வாழ்வன முட்டை

யிலும், கிருமி, கீடம், பேன், சில ஊர்வன, விட்டில்பூச்சி வேர்வையிலும், வேர்-மரம்-கொடி-கிழங்குகள் வித்துக்களிலும் பிறப்பனவாம்.

84-நூறாயிர யோனி பேதங்களாவன:—

| | | | | | |
|---|---|---|---|---|---|
| தேவர் | 11 | இலட்சம் | ஊர்வன | 15 | இலட்சம் |
| மனிதர் | 9 | ,, | நீர்வாழ்வன | 10 | ,, |
| நாற்கால் விலங்கு | 10 | ,, | தாவரம் | 19 | ,, |
| பறவை | 10 | ,, | ஆ | 84 | இலட்சம் ஆம். |

இப்படி 84-லட்ச யோனிபேதங்களில் ஒவ்வொரு யோனிவர்க்கங்கள் தோறும் உண்டான ஆன்மாக்களை அளவு படுத்தப்படாததுகொண்டு "வைத்த பல பூதபேதங்கள் எழுவகையின்" எனவும், இறைவன் ஆன்மாக்களுக்கெல்லாம் பிராணநாயகனாய் இருத்தலின் "உயிர்க்கு உயிராகி" எனவும் கூறினார் என்க. இதனை "இகபரம் இரண்டினிலும் உயிரினுக் குயிராகி எங்கு நிறைகின்றபொருளே" என்ற தாயுமானார் திருவாக்கினாலறிக.(2)

## சமயகுரவர், திருத்தொண்டர் துதி

அன்புருவாம் திருநாவுக் கரயர்வெண்ணெய் நல்லூர்
ஆதிசைவ குலதிலகர் ஆகியவன் றொண்டர்
என்புருவாக் கியஞான சம்பந்தர் எழில்சேர்
ஏதம்அறு வேதமதை இன்றமிழால் உரைத்த
இன்புஉருவா கியவாத ஊரரறு பானேடு
இயன்மூவர் முண்டகத்தாள் என்றலைமேல் கொண்டே
முன்புபெரி யோர்வகுத்த சாதகசா கரத்தில்
மொழிபொருளைச் சுருக்கிமுறை யேபுகலு வாமே.

(இ-ள்) அன்பே திருமேனியாகக்கொண்டு அவதரித்த திருநாவுக்கரசு சுவாமிகளுடையவும், திருவெண்ணைநல்லூர் என்னுந் திவ்விய க்ஷேத்திரத்தில் அவதரித்த ஆதிசைவப் பிராம்மணர்குல திலகராகிய சுந்தரமூர்த்தி சுவாமிகளுடையவும், எலும்பைப் பெண்ணுருவாகச்செய்த திருஞானசம்பந்தசுவாமிகளுடையவும், சிறப்பின் மிகுத்துக குற்றமற்ற இருக்கு-எசுர்-சாமம்-அதர்வணம் என்னும் வேதங்களை, அமிழ்தினுமினிய தமிழ் வேதமாக அருள்செய்த, இன்பமே திருமேனியாகக்கொண்டு அவதரித்த மாணிக்கவாசக சுவாமிகளுடையவும், அறுபத்துமூன்று நாயன்மார்களுடையவும், தாமரைமலரையொத்த திருப்பாதங்களை எனது சிரசில் வைத்து, முற்காலத்தில் சோதிட சாஸ்திரத்தில் வல்லவர்களால் அருள்செய்யப்பட்டிருக்கும் சாதகபலபாகமென்னும் சமுத்திரத்திலுள்ள அரிய பொருள்களை திட்ப நுட்பமாகச் சுருக்கி ஒழுங்காகச் சொல்லுவாம் எ-று. (3)

## ஆசிரிய வணக்கம்

வாமமுதல் பல்சமய வகைநூல்ஆ கமங்கள்
மன்னுசிவ சமயசாஸ் திரஉண்மை பலவும்
தாமுமிக உணர்ந்துஅடியார் பரிபாகம் அறிந்து
தயவுடனே திருநோக்கால் சஞ்சிதங்கள் அகற்றி

ஓமவிதி யுஞ்சம பேதமுதல் உரைத்தே
ஓரெழுத்தில் ஐந்தெழுந்தின் உண்மையும் மெய்யுயிர்க்குப்
பூமலிதண் சேவடியுங் காட்டியருள் வழங்கும்
புகழ்ஞானப் பிரகாசன் பொன்னடியைப் பணிவாம்.

(இ-ள்) வாமம், வைரம், பாசுபதம் முதலாகவுள்ள அகச்சமயங்கள் ஆறின் நூற்களும், காமிகம் யோகசமுதலாகிய இருபத்தெட்டு ஆகம சாஸ்திரங்களும், நிலைபேறுகவுள்ள சைவசித்தாந்த சாஸ்திரங்களும் ஆகிய இவற்றின் மெய்ப்பொருள் அனைத்தையும் நன்கு ஆராய்ந்தறிந்து, தன்னை யடுத்த மாணவர்களுடைய பரிபக்குவத்தைக் கண்டுணர்ந்து, தமது கருணை நிரம்பிய பார்வையினால், அவர்களது சஞ்சித வினையைப் போக்கியருளி, வைதிகச் சடங்குகள் செய்யும் விதிமுறைகளையும், பல்வேறுவகைப்பட்ட சமயங்களினுடைய வேற்றுமைகளையும் உபதேசஞ்செய்தருளி, ஒரு எழுத்தென்னும் ஓங்காரத்தில், ஐந்தெழுத்தென்னும் பஞ்சாக்ஷரங்களும் சேர்ந்திருக்குந் தன்மையையும், மெய்யுணர்வைப்பெற்ற ஆன்மாக்களுக்குத் தம்முடைய அழகிய திருவடிகளையுங் காட்டித் திருவருள் செய்கின்ற புகழுடைய ஞானபிரகாச சுவாமிகள் என்னுந் திருநாமம் பெற்ற எமது ஆசாரிய சுவாமிகளுடைய பொன்போன்ற பாததாமரைகளை வணங்குவாம் எ-று.

(வி-ரை) அகச்சமயம்:-வைரம், வாமம், பாசுபதம், காளாமுகம், மாவிரதம், சைவம்என ஆறாகும். சிவாகமங்கள்:—காமிகம், யோகசம், சிந்தியம், காரணம், அசிதம், தீப்தம், சூக்குமம், சகத்திரம், அஞ்சுமான், சுப்பிரபேதம், விசயம், நிசுவாசம், சுவாய புவம், அனலம், வீரம், இரௌரவம், மகுடம், விமலம், சந்திரஞானம், விம்பம், புரோற்கீதம், இலளிதம், சித்தம், சந்தானசருவோத்தமம், பாரமேச்சுரம், கிரணம், பேதம், வாதுளம் என இருபத்தெட்டாம். அகச்சமயங்கள் ஆறனுள் முதலானது வைரமாதலின் "வைரமுதல்" என்று இருத்தல் வேண்டுவது நியதி. ஆனால் ஆசிரியர் செய்யுள்களை அந்தாதித்தொடையாக இயற்றி இருத்தலின், 3-வது செய்யுளின் ஈற்றில் "வாமே" என முடித்திருத்தலின் அந்தாதித்தொடை நயங்கருதி "வாமமுதல்" எனக் கூறினாரென்றறிக.

எல்லாம்வல்ல முழுமுதற் பரம்பொருளாகிய சிவபிரான் தமது திருவருளையே சிவாயநம என்னும் ஐந்து எழுத்துக்களாகப் பிரித்துக் கொடுத்தருளினார். இந்த மந்திரமாகிய திருவைந்தெழுத்தின் பிரமாணத்தை ஞானாசிரியர் நன்குயுணர்ந்து சீடர்களின் மனந்தெளியும்படி சொல்லி அருள்வது விதியாதல்பற்றி "ஓர் எழுத்தில் ஐந்து எழுத்தின் உண்மையும் காட்டி அருள் வழங்கும், புகழ்ஞானப்பிரகாசன்" என்று தமது ஞானாசாரியரை வணங்கினார் என்க.

ஓர் எழுத்தில் ஐந்து எழுத்தின் உண்மை காட்டுதலாவது:—

உரைத்தவைஞ் செழுத்தின்வீறிங் கொருநூறு கோடி யாண்டு
விரிக்கினும் விரிக்க லாகா தாயினும் விமலற் போற்றிச்
சுருக்கமா யுரைப்பா முன்னைத் துகளறு குடிலை யோடும்
இருக்குமா றெழுத்தா யிறில் இறைவனஞ் செழுத்து மன்னோ.

என்று வாயுசங்கிதையில் கூறியுள்ளபடி திருவைந்தெழுத்தும் பிரணவத்

துடன் சேர்ந்து சடக்கரமாயிருக்கும். இம்மந்திரம் மற்றைய மந்திரங்கள் அனைத்திற்கும் மேலாய் உயர்ந்து, நான்கு வேதங்களின் சாரமாய்ச் சிவன் அடியார்களுக்கு மோட்சவீட்டைப் பாலித்து, அச்சிவபிரான் திருமேனி யாகவுமிருந்து, ஆலம்விதையைப்போல அநேகம் பொருள்களை அடக்கிக் கொண்டு, மற்றெவைக்குங் காரணமாய் நிலைபெற்று, முக்குண ரகிதமாய், சிவபிரானது மேன்மைபொருந்திய பிரணவத்தில் வீற்றிருக்கும். இந்தத் திருவைஞ்செழுத்தின் சிறப்பை நூறுகோடி வருஷம் சொல்லினும் சொல் லிமுடியாது. ஐம்பூதம், ஐம்பொறி, ஐம்புலன், ஐங்கருமேந்திரம், பஞ்ச கர்த்தர்கள், பஞ்சகிருத்தியங்கள், பஞ்சபிரமங்கள் ஆகிய இவையனைத்தும் இத்திருவைஞ்செழுத்திலேயே பெரியோர்கள் ஆன்மாக்களுக் குணர்த்து வார்கள். பிரணவசகிதமாகிய இந்த ஆறு எழுத்துக்களும் நிட்கள சகள சொரூபத்தை முறையே காட்டும். எனவே முன்னுள்ள பிரணவம் நிட்கள சொரூபத்தையும், பின்னின்ற திருவைந்தெழுத்தும் சகள சொரூபத்தை யும் தெரிசிப்பிக்கும் என்றறிக. இதனை,

"ஐம்பூதம் ஐம்பொறிக ளோடைம் புலனமர்ந்த
ஐந்தெனுங் கர்மேந்திரிய மைவர்கா ரணராம்
ஐந்தெனுந் தொழிலைம் பெரும்பிரமங்க ளனைத்தும்
ஐந்தெழுத்தில் உணர்த்துவர் அறிவ ரறிந்தவரே."

"காட்டும் ஓம்எனும் எழுத்து நிட்கள சிவன்றனை
ஈட்டும் ஐம்பெரும் பிரமாந் தனுவுடை இறையைக்
காட்டும் அஞ்செழுத்து உபயமாம் ஒருபொருள் கொடுக்கும்
ஓட்டுறும் பவம் பிரணவம் அஞ்செழுத்து ஒன்றி."

எனவருஞ் சித்தாந்த சிகாமணித் திருவிருத்தங்களால் அறிக. சத்தகோடி மஹாமந்திரங்கட்கும் இத்திருவஞ்செழுத்தே பரிசுத்தமாகிய மந்திரமாகும். அன்றியும் இத்திருவஞ்செழுத்தில் நம என்னும் இரண்டெழுத்தை முன் னும், சிவாய என்னும் மூன்றெழுத்தைப் பின்னுமாக வரிசைப்படுத்திச் செபிக்கவேண்டும். இதனை,

"முன்னர் ஓதுக நமஎன விளம்புறு மொழியைப்
பின்னர் ஓதுக சிவாய என்றிங்ஙனம் பிறங்கும்
அன்ன அஞ்செழுத்து ஆகியமந்திர அரசைப்
பன்னருஞ்செழும் மறைகளின் முடியெலாம் பரிக்கும்."

என்னும் சித்தாந்த சிகாமணியினுல் அறிக. மற்றும் இத்திருவஞ்செழுத் துக்கள் முறையே சிவம், சத்தி, ஆன்மா, மாயை, மலம் என்னும் இவ் வைந்தின் சொரூபமாய் இருக்கும். இவற்றுள் நடுநின்ற ஆன்மா தன்பின் நின்ற மாயை, மலம் இவற்றின்வழிச் செல்லாது தன்முன்னின்ற சத்தி என்னுந் திருவருளைக்கொண்டு சிவத்தை யடைதல்வேண்டுமெனப் புலப் படுதல் காண்க. இவ்வைந்தெழுத்துமே சிருஷ்டியாதி பஞ்சகிருத்தியங் கட்கும் ஏதுவாம். பிரணவ சகிதமாகிய இவ்வைந்தெழுத்து ஆறு திரு முகங்களும், சதுர்புஜங்களும், பொன்னிறமும், திரிநேத்திரமும், சத்தி பாகமும், சந்திரசடாதரமும், அத்திருக்கரங்கள் நான்கினுள், வரதாபயாஸ் தங்களிரண்டுடன் மற்றை இரண்டு திருக்கரங்களில் முறையே செங்கழு நீரும் கமலமும் தாங்கி விளங்கும். எனவே அர்த்தநாரீசுரகோலமெனக் குறிப்பித்தமை காண்க. ஆதலால் இத்திருவைந்தெழுத்து சிவபிரான்

திருமேனியாதல் திண்ணம். அன்றியும் இவ்வெழுத்துக்கள் ஐந்தும் பொன்னிறம், கருநிறம், புகைநிறம், மஞ்சள் நிறம், செந்நிறம் நிறங்களை முறையே பெற்றிருக்கும் சந்திரனைப்போன்றும், அவனுடைய நிலவைப்போன்றும் முறையேவிளங்கும்விந்து நாதங்களுடன் இவ்வைந்தெழுத்துக்களைச்செபித்தல்வேண்டும். இவற்றுள் இரண்டாம் எழுத்து பீஜமும், ஐந்தாம் எழுத்து சத்தியுமாம். ஐந்தெழுத்துக்கூடிய இம்மந்திரத்திற்கு வாமதேவனே இருடியும் இவ்வெழுத்துக்களின் வரிசையே சந்தசும், இம்மந்திரத்திற்குப் பொதுவில் சிவபிரானே தெய்வமுமாம். மேலும் கௌதமர், அத்திரி, விசுவாமித்திரர், அங்கிரசர், பரத்துவாசர் என்னும் ஐவரும் முறையே தனித்தனி இருடிகளாவர். இதற்கு அனுட்டுப்பு, திருட்டுப்பு, பிரகதி, விராட்டு, சந்தசு என்னும் இவ்வைந்தும் காயத்திரியும், இந்திரன்-உருத்திரன்-திருமால் - பிரமன் - முருகன் என்னுமிவர்கள் ஐவரும் தனித்தனி அதிதேவதைகளுமாம். இவ்வைந்தெழுத்துக்களும் சிவபிரான் ஐந்து திருமுகங்களிலும் முறையே அமர்ந்திருக்கும். இதனை முறைப்படி ஞானாசிரியரிடத்து உபதேசம்பெற்று கடற்கரை, நதிக்கரை, சிவாலயம், பசுத்தோழம் பரிசுத்தமான வீடு இவ்விடங்களுள் ஒன்றில் நல்ல முகூர்த்தத்தில் தியானிக்கத் தொடங்கவேண்டும். அவ்வாறு தொடங்குவோர் தங்கள் ஆயுள் உள்ளவரையில் தினமொன்றுக்கு ஆயிரத்தெட்டுஉரு செபித்தல்வேண்டும். இவ்வாறு இடைவிடாமல் ஒவ்வொரு எழுத்திற்கு நான்குலக்ஷம் உருவாகக் கூடிய இருபதுலக்ஷம் உரு மனவொருப்பட்டு செபிப்பார்களாயின் அவர்கள் சித்தராவார்கள். மற்றும் இவற்றின் விரிவையும் உண்மைகளையும் அறிய வேண்டுவோர் குருமுகத்தால் அறிக.

'ஓர் எழுத்து' என்பது ஓங்காரமாகும். இதுவே பிரணவசொரூபமாம்; இதுவே ஆதிஅக்ஷரமாகும். இதுவே சிருஷ்டிக்குமுன்னுள்ள அவசரத்திலே பிரமத்தின் வேறுகாத சிற்சோதியாகவுள்ளது பிரணவசொரூபத்தை இதுவென்று எடுத்துரைத்தல் கூடாதென்று சாஸ்திரங்களெல்லாங் கூறுதலின் உண்மையுணர்ந்த ஞானிகளுக்கே அதன் பரப்பெல்லாம் புலனாகும். மந்திரங்களுள்ளே பிரணவமே சிறந்ததும் மோக்ஷசாதனமாயுள்ளதுமாம். முண்டகோபநிஷத்தில் இப்பிரணவமாகிய ஓங்காரத்தைக் குறித்துச் சொல்லப்பட்ட ஒருவாக்கியம் வருமாறு: "ஓம்" என்பது வில்லு, ஆன்மாவே பாணம், பிரமமே குறி. இடையறாத்தியானத்தினாலே குறியை எய்தல் கூடும். குறியில் புதைந்த பாணம்போல ஆன்மா பிரமத்திற் புதையக்கடவது, "பிரணவம் அழியாதது; கழிந்ததும், நிகழ்வதும், வருவதுமாகிய முக்கூற்றுப் பிரபஞ்சமெல்லாம் ஓம் என்னும் பொருளே" என்பதனாலறிக. பிரணவம் ஸ்தூலபிரணவம், சூக்குமபிரணவம் என இருவகைப்படும். ஹ்ரீம் என்பது ஸ்தூலமும், ஓம் என்பது சூக்குமமுமாம். ஐந்து அக்கரங்கள் சிவாயநம என்பவைகளாகும். (3)

## சோதிட சாஸ்திரத்தின் முதல் நூல் ஆசிரியர்கள்

ஆதவன்பங் கயன்வேத வியாசன்பரா சரனும்
அத்திரிரோ மகன்வசிட்டன் அணிமரிசி தானும்
போதபௌ லகன்யவனன் சௌனன்மனு பிருகு
புகழ்சனகன் ஆங்கீரன் காசிபன்கார்க் கியனும்

**ஓதியநா ரதன்முதல்ஈர் ஒன்பதின்மர் கூடி**
**உரைசெய்த நான்கிலக்கத்து ஐம்பதிஞ யிரமாம்**
**நீதிபெறுஞ் சோதிடத்தில் தெரிந்தெடுத்த உண்மை**
**நிறைந்தபொருள் தனைக்கருத்தில் நினைந்துமிகத் தானே.**

(இ-ள்) சூரியன், பிரமன், வேதவியாசர், பராசரர், அத்திரி, உரோமகன், வசிட்டர், மரிசி, பௌலசர், யவனர், சௌனகர், மநு, பிருகு, ஜனகர், அங்கிரசர், காசிபர், கார்க்கியர், நாரதன்முதல் ஆகிய பதினெண் பேர்களும் ஒன்றுகூடி அருள்செய்த நான்குலட்சத்து ஐம்பதினுயிரம் என்னுந் தொகைச் சுலோகங்களையுடைய நியாயமாகிய சோதிடசாஸ்திரத்தில் ஆராய்ந்து எடுக்கப்பட்ட உண்மை நிறைந்த பொருளை எனது மனத்தில் அதிகமாக சிந்தனைசெய்து எ-று.

(வி-ரை) சோதிட சாஸ்திரத்தின் முதல் நூலாசிரியர்கள் பதினெண்மராவர் என்பது பலருக்கும் சம்மதம். ஆனால் இந்த பதினெண் பேர்களின் பெயர்களைமட்டும் ஒருவர்க்கொருவர் மதபேதமாகக் கூறியிருக்கின்றனர்.

சூர்யஃ-பிதாமஹோ - வ்யாஸோ - வஸிஷ்டோ-அத்ரிஃ-பராசரஃ
கச்யபோ - நாரதோ - கர்க்கோ - மரீசிர் - மநுர் - அங்கிராஃ
லோமசஃ பௌலசச்சைவ - ச்யவநோ - யவநோ - மருஃ
சௌனகோஃ அஷ்டா-தசச்சைதே-ஜ்யோதிச்-சாஸ்த்ர-ப்ரவர்தகஃ

என்னும் கசியபசம்மிதையின்படி சோதிட சாஸ்திரத்தின் முதல் நூலாசிரியர்கள் 1-சூரியன், 2-பிரமன், 3-வியாசர், 4-வசிஷ்டர், 5-அத்திரி, 6-பராசரர், 7-கசியபர், 8-நாரதர், 9-கர்க்கர், 10-மரீசி, 11-மநு, 12-அங்கிரசர், 13-உலோமசர், 14-பௌலசர் (புலிசர்), 15-சியவனர், 16-யவனுசாரியர், 17-மரு, 18-சௌனகர் என்று வரபடுகின்றன. இந்த வரிசைக்கிரமத்திலுள்ள பெயர்களில் பிரமன், உலோமசர், சியமனர், மரு என்ற நான்கு பெயர்களை இந்நூலாசிரியர் விடுத்து புங்கவன், உரோமகன், பிருகு, சனகன் என்ற நான்கு பெயர்களைக் கூறியிருக்கின்றனர். இவற்றுள் புங்கவன் சித்தாந்தமென ஒரு சித்தாந்த மிருப்பதாக யாண்டுங் காணப்படாமையாலும், கசியபசம்மிதையின் "சூர்யஃ பிதாமஹோ" என்றுள்ள வசனத்தினுலும், நாரத சம்மிதையிலும் அங்ஙனமே 'சூர்யஃ பிதாமஹோ" என்றுள்ள வசனத்தினுலும், மற்றும் "ஆத்யஸ்து சௌரஸித்தாந்தோ த்விதீயோப்ரஹ்ம உச்யதே" என்ற வசனத்தில் முதலாவது சூரியசித்தாந்தமென்றும், இரண்டாவது பிரம்மசித்தாந்தமென்று காணப்படுதலினுலும் "ஆதவன் புங்கவன்" என்ற பதத்தை பாடபேதம் அல்லவெனக்கருதி அச்சேற்றினுல் நேர்ந்த பிழையெனக்கொண்டு "ஆதவன் பங்கயன்" எனத் திருத்தியமைத்தாமென்க. இங்ஙனமே உரோமக சித்தாந்தமொன்றிருத்தலினுல் உரோமசன் என்ற பதத்தை உரோமகன் எனத் திருத்தியுளேம்.

விஷுவத்ரேகை, நிரட்சரேகை, பூமத்தியரேகை, மேகலாரேகை பல பெயர்களையுடைய ரேகையிலுள்ள இலங்காபுரிக்கு மேற்கே 90-பாகை (6300-மைல்) தூரத்திலுள்ள உரோமகபுரியிலிருந்து ஆரியதேசத்தில் வந்து ஆரிய சாஸ்திரங்களைக் கற்று விளங்கிய பூர்வகாலத்து உரோமக

பண்டிதர் ஒருவரால் செய்யப்பட்டது உரோமக சித்தாந்தமாகும். உரோமக தேசத்தவர்கள் கிரீக்மதத்தைத் தழுவியவர்கள். இவர்களுக்கு ஜூனஸ் என்பவன் சிருஷ்டித்தலைவன். இத்தேவன் ஜனிகூலம் என்னும் பருவதத்தில் இருப்பான். இவனால் வருடம் ஆரம்பிக்கின்றது. ஜனவரிமாதத்தில் இவனை ஆராதிப்பார்கள். இவர்களுக்கு ஜூபிடர் பிரதான தேவன். இவன் ஒம்பஸ் மலையிலிருந்து மோக்ஷங்கொடுப்பவன். ஜூனஸ் என்பது சுக்கிரன். ஜூபிடர் என்பது குரு. இவைகள் முறையே வீனஸ் ஜ்யூபிடர் என வழங்குவர் ஆங்கிலேயர் என்க.

"யவனன்" எனக் கூறியது யவனாசாரியரை என்க. யவனாசாரியர் யவனசித்தாந்தம், யவனஜாதகம், யவனதாஜிகம் என்னும் நூற்களியற்றியுளார். 'யவனம்' என்பது கிரேக்க தேசம்; அத்தேசத்தார் யவனரெனப் படுவர். யவனரும் யவனப்பெண்களும் முற்காலத்தில் ஆரிய வரசர்களுக்கு ஏவலாளராக இருந்தார்கள் என்பது சில சமஸ்கிருத நாடகங்களால் அறியக் கிடக்கின்றது. அவருள்ளே சிலர் ஆரிய சாஸ்திரங்களைக் கற்றுப் பண்டிதராகித் தமது நாட்டிற்சென்று விளக்கியதுமன்றிச் சோதிட சித்தாந்த முதலிய நூல்களுஞ் செய்தார்கள். அச்சித்தாந்தம் ஆரியராலும் எடுத்தாளப்பட்டு வருவதாயிற்று. வராகமிசிராசாரியரவர்கள் தமது பிருகத் சம்மிதை என்கிற கிரந்தத்தில்,

கர்க: ம்லேச்சாஹி யவநாஸ்தேஷு ஸம்யக்சாஸ்த்ர மிதம்ஸ்திதம்
ருஷிவத்தேஹி - பூஜ்யந்தே கிம்புநர் தேவவித்விஜ:

என்ற சுலோக வசனத்தில் துருஷ்ய யவனர்களிடத்தில் இந்த சோதிட சாஸ்திரம் சுத்தசம்பிரதாயமாக இருக்கின்றதாகவும், அதனாலவர்களும் மகரிஷிகளைப்போல பூஜிக்கப்படுகின்றார்கள் என்று கூறியிருக்கின்றார்.

சனகசித்தாந்தம் என்று ஒரு சித்தாந்த மிருப்பதாக யாண்டுங் காணப் படாமையினால் அதனை "சியவனசித்தாந்தம்" என்றே கொள்ளுதல் வேண்டும். ஆனால் செய்யுள் நயங்கருதி திருத்த இயலாமையினால் அங்ஙனமே கூறப்பட்டதென்க.

"கார்க்கியன்" என்னும் பெயருடைய முனிவர்கள் பலருளர். இவர் கர்க்கி; அல்லது கார்க்கியர் என்று வழங்கப்படுவர். வராஹமிசிராசாரியர் தமது பிருகத்சம்மிதையில் 11-வது கேதுசார அத்தியாயத்தின் ஆரம்பத்தில் "கார்கீயம்-சிகிசாரம்" என்ற சுலோகத்திலும், மற்றைய சில அத்தியாயங்களிலும் கூறப்பட்டிருக்கும் முனிவர் இந்த கர்க்கமுனிவரேயாகும். இவர் ஆதிசேடனிடம் தவஞ்செய்து கிமித்த சாஸ்திரத்தையும், சோதிட சாஸ்திரத்தையும் பெற்றனரென்றும் அறியப்படுகின்றது. சிவபுராணத்தில் சிவபூஜாபலத்தினால் சகல சாஸ்திரங்களையும் பெற்றவரென்று கூறப்பட்டிருக்கின்றது. இவரன்றி மற்றொரு கார்கி என்பவர் இருந்தார். அவர் யாஷ்களர் குமாரியிடம் இருக்குவேதமோதிய ஒரு முனிவராகும். கார்க்கன் என்பவர் ஒருவர் இருந்தார். அவர் தொண்டைநாட்டில், திருக்காரகத்தில் திருமால் அருள்பெற்ற ஒரு இருடியாவர். கார்க்கியன் என்பவர் ஒருவரிருந்தார்; அவர் யுதாசித்து என்னும் அரசனது புரோகிதரான ஒரு முனிவராவர். கார்க்கேயன் என்பவர் ஒருவரிருந்தார். அவர் அஜாதசத்துருவினிடம் உபதேசம்பெற்ற ஒரு ஆசிரியராவர். இப்படி பலவிதயான காக்கிகள் இருந்ததாக புராணேதிகாசங்களினால் அறியப்படுகின்றன.

ஆனால் இச்செய்யுளில் கூறிய கார்க்கியர் வேறு; மற்றவர் வேறு என்க. இச்செய்யுளில் காணப்படும் கார்க்கியரே அகஸ்தியர் வியாசர் முதலியோர் காலத்திலிருந்தவர். இவரே கிருஷ்ணபகவான் யாகஞ்செய்த போது இருத்துவிக்காக இருந்தவர். பிற்காலத்தில் கர்க்காசாரியர் என்ற ஒரு சோதிட வல்லவர் வடநாட்டிலிருந்தார். அவர் கர்க்கஜாதகம் என்ற ஒருநூல் செய்தவர் என்க. மருசித்தாந்தம் இருப்பதாக இச்செய்யுளில் கூறப்பட்டில. பிருகுநாடி, பிருகுசம்மிதை என்னும் நூற்கள் இருத்தலின் ஆசிரியர் பிருகு என்று கூறினரென்றறியப்படுகின்றன. ஆகவே கசியப சம்மிதையில் கூறிய சோதிட சாஸ்திரத்தின் முதல்நூல் ஆசிரியர்கள் பதினெண்மர் பெயருக்கு மாறாக பங்கயன் என்பதை புங்கவன் என்றும், லோமசன் என்பதை உரோமசன் என்றும், சியவனன் என்பதை சனகன் என்றும், மரு என்பதை பிருகு என்றும் இந்நூலாசிரியர் கூறியிருப்பதாகத் தெரிகின்றன.

"நீதிபெறுஞ் சோதிடத்தில்" என்று உரைத்தது என்னை எனின்? நீதி - நியாயத்தை, பெறும் - பெற்ற, சோதிடத்தில் - சோதிடசாஸ்திரத்தில் என்பது பொருளாகும். பிரத்தியக்ஷபிரமாணமாக வானஜோதிகளாகிய கிரகணம் கிரகசமாகமாதிகளையும், ஜாதகபலத்தன்மையையும் கூறுமுண்மைபற்றி 'நீதிபெறுஞ்சோதிடம்' என்று உரைத்தாரென்க. இதனை:

விபலாந்யந்ய ஸாஸ்த்ராணி விவாதஸ்தேஷு கேவலம்
ஸபலம் ஜ்யோதிஷம் ஸாஸ்த்ரம் சந்த்ரார்கௌ யத்ரஸாக்ஷிணௌ.

என்ற சுலோகத்தில் ஏனைய சாஸ்திரங்கள் விவாதத் தன்மையையுடையன வென்றும், இச்சோதிட சாஸ்திரமொன்றே பிரத்தியக்ஷ கண்கூடாகக் காண்க. சபலத்தன்மையை யுடையதென்றும், இதற்குச் சூரிய சந்திரர்களின் கிரகணங்களே சான்று எனவும் கூறப்பட்டிருப்பதனால் நன்கு அறியலாம். வானஜோதிர்கணபிரத்தியக்ஷ பலத்தன்மையை "சோதிடம பொய்யாக மெய்யென்ப தறிவரிய, சூழ்கிரகணஞ் சாட்சியாம்" என்ற அறப்பளீசுர சதகத்தினாலும், ஜாதகபலத் தன்மையை:—

ஆதியிற் குந்திமைந்தர் ஐவர்க்கும் உரியளாமென்று
ஓதிய விதியினால் நெஞ்சு உலப்புறு உவகை கூர்வாள்
சோதிடம் பொய்யாதென்றுந் தோற்றுவோர் உரியோரென்றும்
தாரியர் தேற்றத் தேற்றத் தன்மனத் தளர்வு தீர்வாள்.

என்ற நல்லாப்பிள்ளை பாரத வசனத்தினாலும் நன்கறிக. (5)

இதுமுதல் நான்கு செய்யுட்கள் குளகம்.

## வழிநூல் ஆசிரியர்கள்

தானசப தபசீல லோகிதகோத் திரத்தான்
தழைவதிட்டைக் குடிமேவுஞ் சாமசமுத் திரமாம்
மானபரன் நிருமலையங் கார்துணைவன் மேவும்
மறைமுனிஆ ராவமுதின் வரம்எனும்நா ரணையன்
தேனுலவு பொழில்வெதிரி வனப்பரமா நந்தன்
திருவருள்பெற் றிடுஞ்சிதா நந்தசிவ யோகி
ஞானபரன் தருவேதன் கீழ்முத்தூர் மேவும்
நாரணையர் இவர்மூவர் நவின்றவட மொழியும்.

(இ-ள்) தருமம் மந்திரம் தெய்வவழிபாடு ஒழுக்கங்களையுடைய லோகிதகோத்திரத்தில் சிறந்து விளங்கிய வதிஷ்டையர் என்ற பெயருடைய பிராம்மணருடைய குடும்பத்தில் பிறந்து, சாமவேதத்தை ஒருங்கே ஓதியுணர்ந்தறிந்த திருமலை ஐயங்கார் என்பவரும், அவருடைய உடன் பிறந்தவரும், வேதவியாசமகாமுனிவருடைய வரப் பிரசாதம் பெற்றவர் என்று சொல்லப்பட்டவருமான நாராயண ஐயங்கார் என்பவரும், தேன் மிகுதத மலர்களையுடைய சோலைகளால் சூழப்பெற்ற பதரிகாசிரமத்திற்குத் தலைவனுகிய மஹாவிஷ்ணுவின் திவ்விய திருவருளைப் பெற்ற சிதாநந்த சிவயோகிகள் என்னும் மஹாஞானியார் புத்திரராகிய, பிராமணகுல திலகரான கீழ்முத்தூர் என்னுங்கிராமத்தில் வசிக்கின்ற நாராயண ஐயரும் ஆகிய இந்த மூன்றுபேர்களும் சமஸ்கிருத பாஷையில் அருள்செய்த சோதிட சாஸ்திரங்களையும் எ-று.

(வி-ரை) "குளகம் பலபாட் டொருவினை கொள்ளும்" என்பது சூத்திரம். 'வதிரிவனம்' என்பது பதரி அல்லது வதிரிகாசிரமம் என்று வழங்கப்படும். பதரி=இலந்தைமரம்; ஆகவே இலந்தைமரங்கள் அடர்ந்த ஒருவனம். இது சரசுவதிநதிக்கருகிலுள்ளதோர் புண்ணியவனம்; பராசரரைப் புணர்ந்த மச்சகந்தி என்பவள் தான் பெற்ற மகவாகிய வியாச முனிவரை வைத்தஇடம். இதில் மஹாவிஷ்ணு தவஞ்செய்தனர் என்பது பற்றி இந்த ஆசிரமத்தலைவன் மஹாவிஷ்ணு என்பது புராண சம்மதம்; சிவன் என்பாரும் சிலருளர்.

இக்காலத்தில் பிராமணர்கள் உத்தரத்திலும், தக்ஷிணத்திலும் அநேக குலங்களாகப் பிரிந்திருக்கின்றனர். தக்ஷிணத்திலே பிராமணருள் வடமன் பிருகசரணம், சோழியன் முதலிய அநேக குலஙகளிருக்கின்றன. ஆகலின் இச்செய்யுளில் கூறியுள்ள ஐயங்காரர்களும், ஐயரும் எந்த குலத்தைச் சார்ந்தவர்களென்பது நன்கு நிச்சயிக்கக்கூடவில்லை. தற்காலத்துள்ள வழக்கத்தின்படி நோக்க முன்னிருவரும் வைஷ்ணவர்கள் எனவும், பின்னவர் ஸ்மார்த்தரெனவும் அறியப்படுகின்றன. கோத்திரங்கள் இவைகள் அநேகம். அவற்றுள் சில சிஷ பரம்பரையையும், சில புத்திர பரம்பரையையும் தெரிவிக்கும். இவைகளை இவ்வளவென்று கணிக்க முடியாது. ஆயினும் அவற்றுள் மிக முக்கியமானவை ஐம்பது. அவையாவன:—காசிப, பாரத்துவாஜ, அரித, கவுண்டினிய, கவுசிக, வசிஷ்ட, கவுதம, கார்க்கேய, ஸ்ரீவத்ஸ, ஆத்திரேய, முத்கல, சடமருஷணுதிகள். அவற்றுள் ஒவ்வொன்றின் உட்பிரிவு அநேகம். ஆகவே 'லோகிதகோத்திரம்' என்பது எந்த கோத்திர வழியைச் சார்ந்ததென்பது நிசயிக்கக்கூடவில்லை. பிராமணருள் இருக்குவேதிகள், எசுர்வேதிகள், சாமவேதிகள், அதர்வணவேதிகள் என நான்கு பிரிவுகள் இருத்தலின் முன்னிருவரும் சாமவேதிகள் எனப்படுவர்.

சாத்திர மறைதெரி முனிவர் தன்மையில்
காத்திரம் மாறியக் காவல் வேந்தருங்
கோத்திரம் சூத்திரம் குடிஉரைத் துளார்
வேத்திர கியமா நகரின் மேயினுள்.

எனவரும் பாரதம் ஆதிபருவம் வேத்திரகியச் சருக்கத்து 33-வது செய்யுளினுல் பிராமணர்களுக்குப் பாரத்துவாஜம், ஆத்திரேயம்போன்ற கோத்

திரமும், ஆபஸ்தம்பம், ஆச்வலாயனம்போன்ற சூத்திரமும், அவரவர்கள் பிறந்த குடிப்பெயரும் முக்கியமாகத் தெரிந்தாலன்றி அவர்களுக்குள் மரபுவேற்றுமை உணரமுடியாதாகலின் இச்செய்யுளில் அதனை விளக்கியருளினரென்க.

தபம் - தபஸ் என்னும் வடசொல்லின் திரிபு. தவமாவது - மனம் பஞ்சேந்திரியங்களின் வழியிலே போகாமல் நின்றற்பொருட்டு விரதங்களால் உணவு சுருக்குதல் முதலியன, மற்றும் - தவம் - தப்என்னுந் தாதுவின் அடியாகப்பிறந்த வடமொழி. ஈண்டுச் சரியை, கிரியை, யோகம், ஞானம் என்பவற்றை என்னலுமாகும். (6)

மொழிசுருதி ஆகமசாஸ் திரங்களுஞ்சோ திடத்தின்
முறைகணித பலபாகம் முழுவதுங்கா வியமும்
ஒழியாத சமயசாஸ் திரதருக்க விதியும்
உணருமத்தி யார்ச்சுனவே தியனும்உரைத் தருளும்
பழியாத பலபாகம் சாதகதீ பிகையும்
பயிலரிட்ட நவநீதம் நீல்களத்தா சிகமும்
அழியாத அஷ்டஐயிச் சுவரியவிதிப் படியோடு
அலங்கார சாதகத்தின் அடைவுமிக ஓர்ந்தே.

(இ-ள்) சொல்லுதற்கரிய இருக்கு முதலாகிய வேதம், காமிக முதலாகிய ஆகமம் ஆகிய இவைகளையும், சோதிடசாஸ்திரத்தின் ஒழுங்காகிய சித்தாந்தம், ஜாதகம், சம்மிதை முதலியவைகளையும், கலைஞானம் அறுபத்து நான்கனுள் ஒன்றாகிய காவிய சாஸ்திரத்தையும், எதனுணைக்காலம் கழுறாலும் நீங்குதலில்லாத சிறப்பினையுடைய சைவ வைஷ்ணவமுதலிய சமய சாஸ்திரங்கள், தருக்க சாஸ்திரம் ஆகிய இவற்றின் முறைகளையும் ஓதியுணர்ந்தறிந்த மத்தியார்ச்சுன ஐயர் என்னுந் திருநாமமுடைய பிராமணர் குல சிரேஷ்டர் திருவாய்மலர்ந்தருளிய பிழைகளில்லாத ஜாதகப் பலன்களைக் கூறும் நூற்களாகிய ஜாதகதீபிகையையும், அரிஷ்டதீபிகை, ஜாதக நவநீதம், நீலகண்டதாசிகம், அஷ்ட ஐஸ்வரிய சோதிடநூற்களின் முறையையும், ஜாதகாலங்காரமென்று சமஸ்கிருத பாஷையிலுள்ள ஜாதக பல சாஸ்திரத்தின் ஒழுங்குகளையும் மிகவும் ஆராய்ந்து அறிந்து எ-று.

(வி-ரை) குமாரசுவாமீயம் பாயிரம் 4-வது கவியில் வழிநூற்களின் பெயரைக் கூறவந்த ஆசிரியர் வீரவால்லூர் குமாரசுவாமி தேசிகரவர்கள் அரிஷ்டதீபிகை, ஜாதகநவநீதம், என்ற நூற்களைக் கூறி அதற்கடுத்த 5-வது செய்யுளில் அஷ்ட ஐச்சுவரியம், நீலகண்டதாசிகம என்ற நூல்களைக் கூறப்பட்டிருத்தலினால், வழிநூற்பெயர்களைக் கூறவந்த இந்நூலாசிரியரும் அவ்விதமே கூறிப்போந்தனரென்று கொள்ளுதலே சாலக்கற்ற நல்லறிவாளர் மாண்பாகும். அங்ஙனங்கொள்ளாவிடின் "பகர்நாதர் - சிகமும்" என்பதற்குப் பகர்நாதர்சிகம் என்னுஞ் சோதிடநூல் ஒன்று இருப்பதாக யாண்டுங் காணப்படவில்லையாதலால் "நீல்களத் - தாசிகமும்" திருத்தியமைத்தாம். நீலகண்டதாசிகம் என்ற நூல் வடமொழியில் இருக்கின்றது. அஃது சகாப்தம் 1509-ல் இருந்த நீலகண்ட தைவக்ஞரால் செய்யப்பட்டது. இந்நூலாசிரியர் 1587-ல் இருந்தவராதலால் தமக்குமுன் பிரசித்திபெற்

திருந்த நீலகண்ட தாஜிகத்தை வழிநூலாகக் கூறினர் என்று கொள்ளற் சிறப்பாகும். அங்ஙனங் கொள்ளாவிடின் "தாதர்ஜிகம்" என்ற பதத்திற்கு வேறு பொருள் கூற இயலாதென்பது திண்ணம்.

சமஸ்கிருத பாஷையில் ஜாதகாலங்காரம் என்று ஒருநூல் இருக்கின்றது. அஃது வேதவியாச மஹரிஷியால் செய்த ஜோதிஷ விக்ஞான சம்ஹிதையில் ஜாதக பலாத்தியாயங்களுடைய அர்த்தங்களை உலகோபகாரமாக கூர்ஜ்ஜர பிராமணகுலதிலகராகிய ஸ்ரீகணேசதைவக்ஞரால் இயற்றப் பட்டது. பிற நூல்களையும் இந்த நூலையுங் கொண்டு செய்தது இந்த நூலாகும். பிற நூல்களிலுள்ள பொருள்களைவிட இந்த நூலிலுள்ள பொருளைப் பெரும்பாலும் தழுவிச்செய்த நூலாதல்பற்றி "சாதகாலங் காரம்" என்னும் அந்தப் பெயரையே இதற்கும் வழங்கினர் என்பது கருத்தாகலின் "அலங்கார சாதகத்தின் அடைவு மிக ஓர்ந்தே" என்று கூறினரென்க.

சித்தாந்த ஸம்ஹிதா ஹோரா, ரூபஸ்கந்த த்ரயாத்மகம்,
வேதஸ்ய நிர்மலம் சக்ஷுர், ஜ்யோதிஃ சாஸ்த்ர மநுத்தமம்.

(நாரத சம்ஹிதை)

ஸ்கந்த த்ரயாத் மகம் ஸாஸ்த்ரம் ஆத்யம சித்தாந்த சம்ஜ்ஞிகம்
த்விதீயம் ஜாதக ஸ்கந்தம் த்ருதீயம் ஸம்ஹிதாம்வயம்.

என்று தைவக்ஞ விலாஸம் கூறப்பட்டிருத்தலின் சோதிட சாஸ்திரமானது கணிதஸ்கந்தம், ஜாதகஸ்கந்தம், சம்ஹிதாஸ்கந்தம் என்னும் மூன்று பகுதிகளை யுடையதாகும். இவை முறையே கணிதம், பாவம், ஆரூடம், அல்லது முகூர்த்தம் என வழங்கப்படும். இவற்றுள் கணித ஸ்கந்தமானது சித்தாந்தம், தந்திரம், கரணம் என்னும் மூன்று பிரிவுகளை யுடையதாகும். சித்தாந்தத்தில் சிருஷ்டியாதியாகவும், தந்திரத்தில் யுகாதியாகவும், கரணத்தில் இஷ்டக சகவருட முதலாகவும் கணிதங்கள் கூறப்பட்டிருக்கின்றது. இதனை சூரியசித்தாந்தம், ஆரியபடீயம், கரணகுதூகலம் என்னு மிவற்றாலும், இவைபோன்ற பிற நூற்களாலும் அறியலாம். ஜாதகஸ்கந்தம் ஹோரை-தாஜிகம் இரண்டு பிரிவுகளை யுடையதாகும். ஹோரா சாஸ்திரத்தில் ஜனனகால கிரகநிலைகளாலுண்டாகும் பலாபலன்களையும், தாஜிக சாஸ்திரத்தில் அந்தந்த வயது ஆரம்பகால கிரகநிலைகளால் உண்டாகும் பலாபலன்களையும் கூறப்பட்டிருக்கின்றது இதனை பிருகத்பராசரஹோரா சாஸ்திரம், யவனதாஜிகசாஸ்திரம் என்னும் இவற்றாலும், இவைபோன்ற பிற நூற்களான சம்புஹோரா பிரகாசிகை, நீலகண்டதாஜிக முதலிய நூற்களால் அறிக. சம்ஹிதாஸ்கந்தமானது முகூர்த்தம், வாஸ்து, வருஷபணி, ஆரூடம் என்னும் நான்கு பிரிவுகளை யுடையதாகும். முகூர்த்தத்தில் சிரௌத ஸ்மார்த்த நித்திய நைமித்திக சத்கருமாநுஷ்டானங்களுக்கேற்ற சத்கால நிர்ணயங்களும், வாஸ்துவில் தேவாலயம், அரண்மனை, வீடு, மடம், குளம் கூப முதலியவற்றின் நிர்ணய விஷயங்களும், வருஷபணியில் உலக சுபிட்ச துர்ப்பிட்சங்கள், மழை சம்பந்தமான விஷயங்களும், ஆரூடத்தில் பிரஸ்னை, சரம், பஞ்சபட்சி, நட்டமுட்டிச்சிந்தனை முதலிய விஷயங்களும் கூறப்பட்டிருக்கின்றன. இதனை சனத்குமாரவாஸ்து, வருஷபணி சக்கரம், சரநூல், பஞ்சபக்ஷி, சினேந்திரமாலை முதலிய நூற்களால் அறிக. சோதிட சாஸ்திரம் இங்ஙனம் மூன்று பிரிவாயிருக்கின்றதென்பது கருதி "சோதி

டத்தின் முறைகணிதம் பலபாகம் முழுவதும்" என்று விளக்கினர் இந்நூல் ஆசிரியர் என்ப. (7)

ஓராசா ரஞ்சாரா வளிபாரா சரியம்
உயருஞ்சந் தானதீ பம்பிரகசா தகமும்
சீர்ஆரும் சருவார்த்தம் பெருசிந்தா மணியுஞ்
செப்பியகே ரளஞ்சம்பு நாதமுதல் தெரிந்தே
பேர்ஆரும் பாவகங்கள் தொறும்பலனைப் பிரித்துப்
பிறைகதிர்செவ் வாய்புந்தி பிருகுசனி அரசன்
கூர்ஆரும் வாள்அரவு முதலோரைத் தொழுதே
கூறுகின்றேன் அவரருளைக் கொண்டுமிகத் தானே.

(இ-ள்) ஹோராசாரம், சாராவளி, பாராசரியம், சந்தானதீபிகை, பிருகஜ்ஜாதகம் ஆகிய நூற்களையும், சர்வார்த்த சிந்தாமணி, கேரளம், சம்பு நாதவ்விய முதலாகிய நூற்களையும் நன்கறிந்து, இலக்கண முதலான பன்னிரண்டு பாவகங்கள்தோறும் உண்டாகும் பலாபலன்களை நன்றாகப் பகுத்து, சந்திரன்-சூரியன்-செவ்வாய்-புதன்-சுக்கிரன்-சனி-குரு-இராகு-கேது முதலிய நவக்கிரக தேவர்களை வணங்கிப் போற்றி, அவர்களுடைய திவ்விய திருவருட் பெரும்பேற்றை அதிகமாகப் பெற்று, இந்த நூலைச் சொல்லுகின்றேன் எ-று.

(வி-ரை) இலக்கின பாவகத்தினால் சரீரம் தேககாந்தி, வடிவம், தலை, கீர்த்தி முதலியனவும், இரண்டாம் பாவகத்தினால் தனம், குடும்பம், நேத்ர முதலியனவும் கூறுதல்வேண்டும். ஆகவே இவற்றிற்கு உபபாவகங்கள், அல்லது அந்தர பாவகங்கள் என்று பெயர். இவ்வித உபபாவகங்களின் பலாபலன்களை விரித்து இந்நூலில் கூறப்போவதனால் "பாவகங்கள் தோறும் பலனைப் பிரித்து" என்று விளக்கினர் ஆசிரியர் என்க. (8)

## நூல் நுதலிய பொருள்

கொண்டுதமிழ்ச் சாதகா லங்கார மெனப்பேர்
குறித்துஅரிட்டம் சுபம்ராஜ யோகமும்அங் கிசையும்
மண்டியநட்பு ஆட்சிஉச்சம் பகைநீசம் பகைகள்
மருவுதிரை காணம்உடன் மூலதிரி கோணம்
கண்டிடும்வே ளைக்குணங்கள் ஓரைமகா தசையுங்
காலசக் கரமுதலாய் அங்கிசைஆம் சக்கரமும்
மிண்டியலக் கினமுதலாப் பன்னிருபா வகத்தில்
விரித்தபலன் இவைதெரிந்து விளம்பல்உற்ற வாறே.

(இ-ள்) முன்பு கூறப்பட்ட சோதிட சாஸ்திரங்களைப் பிரமாணமாக வைத்துக்கொண்டு, பாலாரிஷ்டம், நன்மை தீமை, இராஜயோகம், நவாமிச சக்கரம், நட்பு-ஆட்சி-உச்சம்-நீச்சம்-பகைகள், திரேக்காண சக்கரம் ஆகிய இவைகளுடன் மூலத்திரிகோணம், தாமத சாத்வீக இராஜத முதலிய முக்குணவேளை, ஹோரைச்சக்கரம், மகாதசை, காலசக்கரதசை முதலாக துவாதசாமிச திரிமிசாமிச சக்கரங்களையும், இலக்கின முதலாக பன்னி

ரண்டு பாவகங்களில் சொல்லியிருக்கும் உபபாவகங்களின் பலன் முதலிய வைகளையும், நன்குணர்ந்தறிந்து தமிழ்மொழியில் சாதகாலங்காரம் என்று பெயர்வைத்ததாகும் எ-று.

(வி-ரை) இச்செய்யுளில் நூல் முதலிய பொருளைச் சுருக்கமாக விளக்கி இருக்கின்றனர் ஆசிரியர் என்க. இரண்டாவது அடியின் ஈற்றி லுள்ள "அங்கிசம்" என்ற பதத்திற்கு நவாமிசசக்கரமென்றும், ஆறாவது அடியின் ஈற்றிலுள்ள "அங்கிசையாம்சக்கரம்" என்ற பதத்திற்கு துவா தசாமிச திரிமிசாமிச சக்கரங்கள் என்றும் பொருள்கொள்ளுதலே சிறப் புடைத்தாகும். இந்நூலுள் சட்வர்க்க படலத்தில் திரைகாணம், நவாமிசம், திரிமிசாமிசம், துவாதசாமிசங்கள் என்ற நான்குவகை அமிசங்களைக் கூறப்பட்டிருத்தலின் இச்செய்யுளில் அவற்றுள் நவாமிசம், திரைகாணங் களை முறையே குறிப்பாகவும் விளக்கமாகவும் கூறியபடி துவாதசாமிசம் திரிமிசாமிசங்களை மறுபடியும் குறிப்பாகக் கூறியிருக்கின்றனர் ஆசிரியர் என்க. (9)

## அவையடக்கம்

உற்றதொகை நான்குஇலக்கத்து ஐம்பதின்ஆயிரம் என்று
  உரைத்தவட மொழிவெற்பின் ஒருகடுகின் அளவில்
பெற்றிடும்அங் கிசம்நூற்றில் ஒருபங்கின் பொருளைப்
  பேர்உலகில் சாதக அலங்காரம் என்றே
வெற்றிசெறி செந்தமிழை உணர்ந்துஅருளும் பெரியோர்
  வீற்றிருக்கும் சபைதனில்யான் விளம்பியபுன் மொழியில்
குற்றமுரை யசர்கருணை புரிவர்அறி யாத
  குதலைமொழிக் குழவியின்சொல் குறித்துஅறிவார் போல.

(இ-ள்) வெற்றியைப் பெற்றதாகிய தமிழ்மொழியை நன்கு ஆராய்ந்து அறிந்துணர்ந்த தமிழ்ப்புலவர்கள் எழுந்தருளியிருக்கும் சபையினிடத்தில், நான்குலட்சத்து ஐம்பதினாயிரம் என்று சொல்லப்படும் சுலோகத் தொகை களையுடைய சமஸ்கிருத பாஷையிலுள்ள சோதிட சாஸ்திரமென்னும் மலையின்கண் ஒரு கடுகின் நூற்றில் ஒருபங்கின் பொருளையே பெரிய இந் நிலவுலகத்தின்கண் சாதகாலங்காரம் என்ற பெயர் சூட்டிச் சொல்லிய எனது அற்பமான சொற்களில் புத்தியறியாத சிறு குழவிகள் பேசும் மழலைச் சொற்களில் குற்றம் பாராது குணங்கொண்டு மகிழ்வதுபோல எவ்வித குற்றத்தையுஞ் சொல்லாமல் கிருபைசெய்வார்கள் எ-று.

(வி-ரை) முதல்நூல் கருத்தன் அளவுமிகுதி
பொருள்செய் வித்தோன் தன்மைமுதல் நிமித்தினும்
இடுகுறியானும் நூற்கு எய்தும் பெயரே.

என்று நன்னூல் சூத்திரம் கூறியதனால், ஒரு நூலுக்கு அந்த நூலின் முதல் நூலாலும்; அந்நூல் செய்தவனும், அந்நூலின் அளவும், அந்நூலிற் சொல்லப்படும் பொருள்கள் மிக்கதான பாகமும், அந்நூலிற் சொல்லப்பட்ட பொருளும், அந்நூல் செய்வோனுக்கும் பொருளுதவி முதலியனசெய்து நூலைச் செய்வித்தவனும், அந்நூலின் குணமும், முதலாகிய காரணங்களா லும், இடுகுறியானும், பெயர்வரும் ஆதலால் இந்நூலுக்கு இதற்கு முதல்

நூலாகிய சாதகாலங்காரம் என்ற பெயரையேவைத்துக் கூறினர் ஆசிரியர் என்க. தருமத்தைத் தாம் அறிந்து நடத்தி உலகத்தார்க்கு உள்ளபடி உணர்த்தவல்ல அறிவினாலும் ஒழுக்கத்தாலும் சிறந்தவர்கள் பெரியோர் எனப்படுவர்.

ஆர்எரிஇட்டு எடுத்தஏடு அவைமுன் ஏற்றி
ஆற்றில்இடும் ஏடுஎதிர்போய் அணைய ஏற்றி
ஓர்அமணர் ஒழியாமே கழுவில் ஏற்றி
ஓதுதிருப் பதிகத்தால் ஓடம் ஏற்றிக்
கார்உதவும் இடிபுத்தன் தலையில் ஏற்றிக்
காயாத பனைமீன்முது கனிகள் ஏற்றி
ஈரம்இலா அங்கம்உயிர் எய்த ஏற்றி
இலங்குபெரும் மணத்துஅரனை எய்தினரே.

எனவரும் திருத்தொண்ட புராணசாரத் திருவிருத்தத்தினால் தமிழ்மொழியின் வெற்றியை இனிது அறியலாம். இதுபற்றியே "வெற்றிசெறி செந்தமிழ்" என்று கூறினர் ஆசிரியர் என்க. (10)

### சாதகம் இன்னதென்பதெனல்

குறித்திடுசா தகம்என்பது அவரவர்தம் வினையின்
குணங்கள்அறிந்து அயன்விதித்த கொள்கைஉளது அன்றோ
மறித்தும்அவர் அவர்தமக்கு வரும்பலபா வகத்தின்
வகைஅறிந்து பெரியோர்கள் வழுத்தியசொல் அதனைப்
பிறித்துஅறிந்து சுபம்வரும்என்று உளம்மகிழ்ச்சி பொங்கப்
பின்அசுபம் வரில்அதற்குப் பிரீதிஎன்கொல் என்று
நெறித்தரும சாஸ்திரத்தின் விதிசாந்தி செய்தே
நிறைந்தசுபம் பெறுவதற்கே நிகழ்த்தினர்சா தகமே.

(இ-ள்) சோதிடர்களால் எழுதப்பட்ட சாதகம் என்று சொல்லப் படுவது என்னவென்றால், அவரவர்கள் முற்பிறப்பில் செய்த நல்வினை தீவினைகளின் தன்மைகளைப் பார்த்துணர்ந்து, நல்வினைசெய்தோர் நன்மையையும், தீவினைசெய்தோர் தீமையையும் அடையும்படி பிரமதேவன் ஏற்படுத்தப்பட்ட கோட்பாடு இருக்கின்றதல்லவா? அந்த கோட்பாட்டின் படி பின்பு அவரவர்களுக்கு உண்டாகும் பலன்களினுடைய தன்மைகளைப் பார்த்தறியும்பொருட்டு முன்னோர்களால் அருள்செய்யப்பட்ட சோதிட சாஸ்திரங்களைக் கொண்டுணர்ந்து, நன்மைவரும் என்றால் மனமகிழ்ச்சி யடையவும், பின்பு தீமை வரும்என்றால் அதற்குக் கவலைப்படாமல், தரும சாஸ்திரங்களில் விதித்தபடியே சாந்தி கர்மங்களைச்செய்து, நிரம்பிய பிரயோசனத்தை மக்கள் பெற்றுய்வதற்காகவே சாதகத்தைப் பெரியோர் அருள்செய்தார்கள் எ-று.

(வி-ரை) சாதகம் - சனனம். சாதகபலன் - பிறப்பின்படி கிரகங் களாலாகும் பலன். சாதகம்-ஓர் பிரபந்தம்; அஃது திதி-வாரம்-நக்ஷத்ரம் யோகம், கரணம், இலக்கினம், கிரகங்களாகிய ஏழ்வகை உறுப்புகள்நிலையை யும், சோதிடநூலால் உணர்ந்து அவற்றால் வரும்பயன் கூறுவதாகும்.

ஜநநீ ஜந்ம ஸௌக்யாநாம் வர்த்தநீ குலசம்பதாம்
பதவீ பூர்வ புண்யாநாம் லிக்யதே ஜந்மபத்ரிகா,

(இ-ள்) பிறப்பின் மகிழ்ச்சியை யுண்டாக்குவதும், குலச்செல்வத்தை விருத்திசெய்வதும், முன் நல்வினையின் வழியுமாகிய ஜன்னபத்திரிகை எழுதப்படுகின்றதென்பதாம்.

இதன் பொருள்கொண்ட தமிழ்வெண்பா வருமாறு:—

சீராரும் சன்மசுகம் செய்குவ துங்குலத்தின்
ஏராரும் செல்வவளம் ஏற்றுவ துந்—தேரா
முனஞ்செய்த நல்வினையின் முன்னுவழி யும்மாஞ்
சுனனபத்தி ரம்மெழுது தல். (ஜயாசுவாமீயம்)

மேலே கூறிய சுலோகத்தை இமசேதுபரியந்தமுள்ள நமது பாரத வருஷத்தில் அவரவர்கள் ஜாதகங்களில் முதல்முதல் மங்கள சுலோகமாகசோதிடர்கள் எழுதிவருகின்றனர். இதன்பொருள் இன்னதென்பதை அறிந்தவர் மிகச்சிலர். அறியாதாரோ மிகப்பலர். அதுபற்றி இதுவிஷயமாய் இங்கு ஒருவாறு விளக்கப்படும். "தமஸித்ரவ்யாணிதீப இவ" என்றற்றொடக் கத்து லகுஜாதக சுலோகத்தில் ஆசிரியர் வராஹமிகிரனாரவர்கள் ஆன்மாக்கள் முற்பிறவிகளில் செய்த நல்வினை தீவினைகளின் பயனை இப்பிறப்பில் அனுபவிக்கக்கூடிய இன்பதுன்பங்களாகிய பலாபலன்கள்இன்னதென்பதை, இருட்டிலுள்ள வஸ்துக்களைத் தீபமானது எப்படிபிரகாசிக்கச் செய்கின்றதோ அப்படி ஆன்மாக்கள் என்னும் இருட்டிடத்திலுள்ள நல்வினை தீவினைகளென்னும் சுபாசுப கர்மங்களை, தீபம் என்னும் சோதிட சாஸ்திரம் நன்கு தெரியப்படுத்துகின்றது எனக் கூறியிருக்கின்றனர்.

இதனை வலியுறுத்தவே,

அவரவர் தமக்கும் உள்ள ஆயுசும் தொழிலும் பொன்னும்
இவர்களின் வித்தை செல்வம் எழில்மர ணங்கள் ஏழும்
தவமுடைப் பிரமதேவன் தனதுகைத் தொடங்கி முன்னஞ்
சிவனுடை அருளி னலே கர்ப்பதில் நிச்ச யிப்பான். (நீதிசாரம்)

அயனார் எழுத்து அளவு அன்றியே அதிகங்கணப் பொழுது ஆயினும்
பவனாய் இருப்பவர் இல்லை இப்படி மீதில் அப்படி அன்றியே
வியனாய்உனைத் தொழுவார்கள் அவ் விதிவெல்வர் ஆய்மறை
நயநாரதன் புகழ்சோதியே நாராயணா நாராயணா சொல்லுமே.
(வடவேங்கட நாராயணசதகம்)

வேண்டிமுற் பிறப்பிற் செய்த வினைகளின் பயனை எல்லாம்
காண்தகும் இந்நூல் கொண்டு காணலாம் தீபம் ஒத்தே.

என்று சரசோதிமாலை கூறப்பட்டிருப்பது உணர்க. எவனுக்கு ஜாதகபத்திரிகை எழுதப்படவில்லையோ அவனுடைய வாழ்நாள்முற்றும் தீபமில்லாத இரவைப்போல் அந்தகாரமாகப் பயனற்றொழியும். இதனை:—"அந்தகம் பவதி தஸ்ய-ஜீவிதம்-தீப-ஹீநமிவ-மந்திரம் - நிசி" என்ற யவனாசாரியர் திருவாக்கால் இனிதுணர்ந்துய்க.

பிரமதேவனால் ஜீவர்கள் அநுபவிக்கும்படியான நன்மை தீமைகள் முன்னரே எழுதப்பட்டிருக்கின்றனவா எனின்? ஆம் எழுதப்பட்டிருக்கின்றது. அஃது வருமாறு:—"அழுதாற்பயன் என்ன நன்மையும் தீமையும் பங்கயத்தோன், எழுதாப்படி வருமோ சலியாதிருஎன் ஏழைநெஞ்சே" என்று பட்டினத்தடிகளும், "அலரவன் தீட்டிவைத்த ஆயுளின் அளவை

காறும்" என்று குசேலர் உபாக்கியானமும், "போமோதலையில் பொறித்தான் பிறழ்ந்து நினைப்பினுமே" என்று விநாயகபுராணமும் கூறுமாற்றால் நன்குணரலாம்.

ஜந்மாந்த ரார்ஜித சுபாசுப ஸூசநாய
ஸம்லிக்யதே ஜநநகாலஜ பத்ரமேதத்
யஸ்யாவலோகந பலாதபிவ்ருத்த ஸௌக்யா:
சாந்த்யாவதூத துரிதாச்ச பவந்திஸர்வே.

(இ-ள்) ஜந்மாந்தரங்களில் சம்பாதிக்கப்பட்ட சுபங்களையும், அசுபங்களையும், தெளிவிக்கும்பொருட்டு, இந்த ஜந்மபத்திரிகை நன்கு எழுதப்படுகிறது. எந்த பத்திரிகையினுடையதை பார்த்துத் தெரிந்துகொள்ளும் பலத்தால் மென்மேலும் விருத்தியடையும் சுகத்துடன் கூடினவர்களாயும், சாந்தியாதிகளினாலே பீடை கழிந்தவர்களாயும் எவரும் ஆவார்கள் எ-று.

நிறையும் நமதுஆணையினால் நெடுநிலத்து விசேடமுறும்
மறையவர்தங் குலத்துதித்தோன் வளர்சாத கருமமுதல்
அறைகருமங் களால்அசுத்தம் அறச்சுத்தி யடைந்தானாய்க்
கறையில்உப நீதனாய் காமர்குரு அடியடைந்து.

என சூதசம்மிதை கூறுமாற்றால் வருணாசிர தருமங்களைக் கைவிடாமல் அநுஷ்டித்து வருதல்வேண்டும் எனவும், அங்ஙனம் அநுஷ்டிப்பதனால் பெறற்கரிய பெரும்பேறாகிய முத்தியின்பங் கைகூடுமெனவும், கர்ப்பாதானமுதலிய பதினாறு கருமங்களால் ஒருவன் சுத்தமடைகின்றான் எனவும் நன்கு உணரப்படும். கருமங்கள் பதினாறுவன:—

பூண்இருது சங்கமனம் கருப்பா தானம்
புஞ்சவனம் சீமந்தம் சாத கன்மம்
பேணுமுத்தா பனம்நாம கரணம் அன்னப்
பிராசனமே பிரவாசம் பிண்ட விர்த்தி
காணல்உறுஞ் சவுளம்உப நயநங் காண்டோ
பக்கிரமணங் காண்ட மோசனஞ் சீர்
மாணுசமா வர்த்தனமே விவாகம் இன்ன
வகுத்தபதி னாறுமென மதிக்க மன்னோ.

(திருவானைக்காபுராணம்)

1-வது இருதுசங்கமனம், நாயகியின் ருதுகாலத்தில் நாயகன்கூடும்படி செய்யுங்கிரியை. 2-வது கருப்பாதானம், கருப்பந்தரிக்கும்படி செய்யுங்கிரியை. 3-வது பும்சவனம, ஆண்மகவு பிறக்கும்படி செய்யுங்கிரியை. 4-வது சீமந்தம், மூன்றிடத்து வெளுப்புள்ள பன்றிமுள்ளினால் கர்ப்பஸ்திரியின் தலைமயிரை வகிர்ந்து செய்யுங்கிரியை. 5-வது ஜாதகன்மம், புத்திரோற்பத்தியாயகாலத்தில செய்யுங் கிரியை. 6-வது உத்தாபனம், அசுத்தமாகிய அறை வீட்டினின்றுஞ் சுத்தமாகியவிடத்திற் குழந்தையைச் சோப்பிக்கச் செய்யுங்கிரியை. 7-வது நாமகரணம், பெயரிடுதலிற்செய்யுங் கிரியை. 8-வது பிரவாசம், குழந்தையுடன் ஆலயத்திற்குச் செல்லுங் கிரியை. 9-வது அன்னப்பிராசனம், சோறூட்டுதலிற செய்யுங்கிரியை. 10-வது பிண்டவர்த்தனம், குழந்தையின் தேக விருத்தியின்பொருட்டுச் செய்யுங்கிரியை. 11-வது சௌளம், மயிர்வினைக்குச் செய்யுங் கிரியை.

12-வது உபநயனம், பரமசிவத்தைத் தரிசிப்பதற்குச் சமீபமாகிய கண்ணை உண்டாக்குங் கிரியை. 13-வது காண்டோபக்கிரமணம், வேதபாகங்களை அத்தியயனம் பண்ண ஆரம்பிக்குங் கிரியை. 14-வது காண்டமோசனம், அத்தியயனத்தைவிடச் செய்யுங் கிரியை. 15-வது சாமாவர்த்தனம், பிரம சரிய விரதத்தை யொழித்தற்குச் செய்யுங் கிரியை. 16-வது விவாகம், இல்லற தருமத்தைச் செய்ய அக்கினி சாக்ஷியாகக் கன்னிகையை மணஞ் செய்யுங்கால் செய்யுங் கிரியையாகும்.

இக்கருமங்கள் பதினாறனுள் ஜாதகர்மமே முதன்மைபெற்றது. இந்தப் பதினாறு கருமங்களைக் கைவிட்டோர் அளவில்காலம் கொடிய நரகங்களில் சென்று இடர்ப்படுவர் என ஷை சம்மிதை கூறுநிற்கும். இதனை யுணர்ந்தே நம் தேயத்தில் நமது முன்னோர்கள் தவறின்றி மிக முக்கியமாகச் சாதகன் மத்தைச் செய்துவந்தனர் என்பதை புராணேதிகாசங்களினால் நன்கறிய லாம். இதனை "தென்னவன் பெருமான் சேய்க்குச் சாதகச் செய்தி யாதி, மன்னவர்கு இயன்ற வேத மரபினால் வயங்க ஆற்றி" எனவும், "அவ்வண ணஞ் சாதமுதல் வினை நிரைப்பித் தடாதகை யென்று அழைத்துத் தேவி" எனவும் வரும் திருவிளையாடற்புராண வசனத்தினாலும், மற்றும் "சூதநிகழ் மங்கல வினைத்துழனி பொங்க, சாதக முறைப்பல சடங்குவினை செய்தார" என்ற ஸ்ரீ சம்பந்தமூர்த்தி சுவாமிகள் புராண வசனத்தினாலும், மற்றும் "காதலனார் உதித்ததற்பின் கடன்முறைமை மங்கலங்கள்" என வாகீச பெருந்தகையார் புராண வசனத்தினாலும், மற்றும "சாற்றிய விதிமுறைச் சாத நல்வினை, ஆற்றினர் புவியிசை யறங் களிக்கவே" என மஹாபாகவத வசனத்தினாலும் நன்கு அறியலாம். ஆகவே ஒவ்வொருவரும அவசியம ஜாதகருமத்தைச் செய்தல் வேண்டும் என்பதாம்.

இச்சாதகமானது ஒருவனுக்குத் தன சம்பாத்தியத்தில் மித்திரனைப் போலவும், யாத்திரா சமயத்தில் மந்திரியைப்போலவும், ஆபத்தென்னும் சமுத்திரத்தில் ஆழ்ந்து உழலவோருக்குத் தெப்பம்போலவும் உதவி செய் கின்றது. இதனை,

"அர்தார்ஜநே ஸஹாயஃ புருஷாணும் ஆபதர்ணவே போதஃ
யாத்ரா ஸமயே மந்த்ரி ஜாதக மபஹாயநாஸ் த்யபஃ"

என்ற ஆசிரியர் கலியாணவர்மனாரவர்கள் சாராவளி வசனத்தினால் அறிக.

எங்ஙனமெனின்? வியாபாரம் கல்வி உத்தியோகம் அல்லது வேறு முயற்சிகளைச் செய்பவர்களுக்குச் சோதிடன் சாதகத்தைப் பார்த்து எதிர் காலத்தில் நல்ல சுகபலனைத் தரக்கூடிய கிரகங்கள் மஹா தசாந்தர்தசை கள் வருகின்றதென்றும், அப்போது அதிக தனலாபம் உண்டாமென்றும், முயற்சித்த காரியத்தைச் செய்யலாமென்றும் கூறுவதனால் சிநேகிதனை யொத்ததா யிருக்கின்றபடியால் "அர்தார்ஜநே ஸஹாயஃ" எனவும், மற்றும் எவனாவது தனது இராஜ்யம் அல்லது பூமி முதலிய ஸ்திதிகள் முதலியன கைவிட்டுப்போய ஆபத்து என்னும் பெருந் துக்கசாகரத்தில் ஆழ்ந்து மன சஞ்சலத்துடன் இருக்கும்போதும், அல்லது மனைவி சந்ததி நஷ்டமடைந்த போதும், வியாதியால பீடிக்கப்பட்டிருக்கும்போதும், சோதிடன் சாதகத் தைப் பார்த்து கைவிட்டுப்போன பொருள் மறுபடியும் தனக்குச் சித்திக்கு மென்றும், வேறு கலியாணம் ஆகுமென்றும், புத்திர விருத்தி யுண்டாகு

மென்றும், வியாதி நீங்கி சவுக்கிய முண்டாகுமென்றும், சொல்லும்போது மனத்திடம் ஏற்படுவதனால் ஆபத்தென்னும் கடலைக் கடக்கத்தருந்த தெப் பத்தைப்போ லிருக்கின்றபடியால் ' ஆபதர்ணவேபோத:'' எனவும், மற்றும் யாத்திரை செய்யுங்காலத்தில் இந்த திக்கில் சென்றால் ஜயமுண்டென்றும், இந்த நாளில் சென்றால் காரியசித்தி யாகுமென்றும், இந்தவேளையில் ஆரம் பிக்கும் காரியம் வளர்பிறைச் சந்திரனைப்போல் விருத்தியடைந்து நன்மை யுண்டாய் பலிதத்தைத் தருமென்றும் சோதிடன் சாதகத்தைப் பார்த்துச் சொல்லுவதனால் மந்திரியைப்போல இருக்கின்றபடியால் "யாத்ரா ஸமயே மந்த்ரீ:'' எனவும் விளக்கியருளினர் கலியாணவர்மனார் என்க. இதனை,

தூயகல் விழியாஞ் சாதகச் சுருதி தோற்றிடும் மன்பதைக் கரும்பொன்
ஆயகல் குதலில் சகாயன்போல் மற்றும் ஆபத கடற்கொரு புணைபோல்
நேயமார் வெளியாத் திரையமை யத்தில் நேர்தரும் அமைச்சனே போலும்
தீயன அகற்றி நன்மையைப் பயக்குஞ் செயலினால் இதற்கிணை யெதுவே.

என்ற ஷை சுலோகப் பொருள்கொண்ட எமது சோதிட குப்புச்சுவாமீயம் என்ற நூலின் வசனத்தினால் நன்கு அறியலாம். மற்றும் பூர்வ காலாமிருத சந்திரிகையில் "ஜ்யோதிஸ் சாஸ்திர பரிச்ர மாத்ப்ர தமதச் சாயுர்பலம் ஜ்ஞாயதே '' என்ற தொடக்கத்துச் சுலோகத்தில் சோதிடசாஸ்திரத்தின் உதவியால் சாதகத்தைக் கொண்டு ஆராய்ந்து அறிந்தால் முதல்முதல அச் சாதகனுடைய ஆயுள் எல்லை விளங்குமென்றும், அங்ஙனம் வாழ்நாளின் எல்லையை உணர்ந்ததன் பயனால் நல்ல அறநெறியைப் பின்பற்றி ஒழுகத் தக்க தருமபுத்தி யுண்டாகுமென்றும், அவ்வித தருமபுத்தியின் பயனால் பிரமஞான வித்தை யுண்டாகுமென்றும், அந்த வித்தையின் பயனால் கைவல்லிய நிலையெய்தி மூத்தியின்பத்தை யடைய எது வுண்டாகு மென்றும் கூறப்பட்டிருக்கின்றது. இதனை,

மாமறை யங்கம் ஆறனுள் சிறந்த மங்கல கணிதநூல் தெளிவால்
நாமுறை வாழ்நாள் விளங்குமப் பயனால் நல்லற மதிவரும் அதனால்
காமுறு பிரம ஞானநல் வித்தை கைவரும் அதன்பய னாகத்
தோமுறு கைவல் லியநிலை யெய்தித் துய்யக்கரும் இன்பமெய் திடுமே.

என்ற சோதிட குப்புச்சுவாமீய வசனத்தினால் நன்கு அறியலாம். இத்தியாதி நியாயவசனங்களினால் சாதன தருமத்தைக் கைவிடாமல் ஒழுகும் ஆஸ்திக செல்வர்கள் அனைவருக்கும் சாதகன்மம் அத்தியாவஸ்யம என்பதும், அதுவே முத்திப்பேற்றை யடைவதற்கு ஏற்ற சாதனமென்பதும் நன்கு விளங்காநிற்கும்.

ஆன்மாக்கள் அனைவருக்கும் வினைப்பகுதியின்படி விதிப்பயன் பிரம னாதலால், "அவரவர் தம்வினையின் குணங்கள் அறிந்து அயன் விதித்த கொள்கை உளது அன்றோ'' என்று கூறினர். இங்ஙனம் விதிப்பயன் பிரமன் என்பதை "வேதாவை யிவ்வணம் விதித்ததே தென்னினுன் வினைப்பகுதி யென்பன்'' என்ற தாயுமானர் திருவாக்கானும், மற்றும்,

தாந்தாமுன் செய்தவினை தாமே அனுபவிப்பர்
பூந்தா மரையோன் பொறிவழியே—வேந்தே
ஒறுத்தாரை என்செயலாம் ஊரெல்லாம் ஒன்றாய்
வெறுத்தாலும் போமோ விதி.

என்ற ஔவைப்பிராட்டியார் திருவாக்கானும் இனிதறியலாம். சோதிட சாஸ்திரத்தின் மூலமாய் அவரவர்களுடைய வினையை அறிந்து அதற்குத் தருமசாஸ்திரத்தில் மகான்களால் அருள்செய்யப்பட்டுள்ள சாந்தியைச் செய்து நலம்பெறலாம் என்பது சாஸ்திரப் பிரமாணமாதலால் "நெறித் தரும சாத்திரத்தின் விதிசாந்தி செய்தே, நிறைந்தசுபம் பெறுவதற்கே நிகழ்த்தினர் சாதகமே" என்று கூறினர் என்க.

முதிர்தரு தவமுடை முனிவர் ஆயினும்
பொதுவறு திருவொடு பொலிவர் ஆயினும்
வதியினர் ஆயினும் வலியர் ஆயினும்
விதியினை யாவரே வெல்லும் நீர்மையார். (கந்தபுராணம்)

கதிதரும் அயனும்மாலுங் கடக்கருங் கொடிய நீர்மை
விதியினை எளிய நம்மால் வெல்லலாந் தகைமைத் துண்டோ
அதிகம்வந்து எய்தா மேல்நாள் அமைந்தவே அடுக்கும் அல்லால்
மதிவலோய் இதற்கு வாடி வருந்தலை என்று சொன்னான்.
(அரிச்சந்திரபுராணம்)

என்றபடி ஊழை விலக்க முடியாது விதிப்படிதான் நடக்கும், ஒவ்வொருவரும் பிராரத்துவத்தை அனுபவித்துத்தான் தீரவேண்டும் என்று அநேகர் கூறுவார்கள். அவர்கள் கூறுவதும் சரியே! நாம் ஒப்புக்கொள்ளுகிறோம். சோதிட சாஸ்திரத்தில் மகான்கள் சொல்லியுள்ள சாந்தியைச் செய்து விதியை விலக்கப் பிரயத்தனப்படாமல், விதிப்படிதான் நடக்கும், விதிப்படிதான் நடக்கும் என்று சொல்லிக்கொண்டு விதியை விலக்கப் பிரயத்தனப்படாமல் (சாந்தி ஜபதபம் செய்யாமல்) சும்மாஇருந்துகொண்டு விதியின் வழியாகப் போவார் யாவரோ அவர்கட்கு விதிப்படிதான் நடக்கும். அவர்கள் பிராரத்துவத்தை அனுபவித்தே தீரவேண்டும். முன் சொன்னது இத்தகையோருக்கேயாகும். அப்படிக்கன்றி மகான்களால் சொல்லியிருக்குஞ் சாந்தி முதலியவைகளைச் செய்துகொண்டவர்கள் கடவுளை நோக்கித் தவம்புரிந்தவர்கள் விதியை விலக்கிக்கொள்ளுவார்கள். இதில் எட்டுணையும் சந்தேகமில்லை.

அல்லல் என்செயும் அருவினை என்செயும்
தொல்லை வல்வினைத் தொண்டன்றான் என்செயும்
தில்லை மாநகர்ச் சிற்றம்ப லவனுக்கு
எல்லை இல்லதோர் அடிமைபூண் டேனுக்கே. (தேவாரம்)

பரமன் அருணேசம் பதம்பணிவார்க்கு என்றுங்
கருமஞ் சிதையும்எனக் கண்டோம்—அருமந்த
கூட்டுத் தலைபோய் கொடியதக்கன் வேள்வியிலே
ஆட்டுத் தலையாக லால். (அருணகிரி அந்தாதி)

சிவாய நமவென்று சிந்தித்து இருப்பார்க்கு
அபாயம் ஒருநாளும் இல்லை—உபாயம்
இதுவே மதியாகும் அல்லாத எல்லாம்
விதியே மதியாய் விடும். (ஔவையார்)

ஆதலால் ஒவ்வொருவரும் கடவுளைநோக்கித் தவம்புரிந்து விதியைவிலக்கப் பிரயத்தனஞ் செய்யவேண்டும். விதியின் வழியாகப் போகும் ஒருவன்

விதிப்படிதான் நடக்குமென்று கற்பகவிருட்சத்தைச் சேர்வானுயின் முன் செய்த வினைப்படிக்குக் காஞ்சிரங்காய்தான் கிடைக்கப்பெறுவன். எல்லாம் வல்ல இறைவன் பொன்னடி பணிவார்க்கு வினையானது நாசமாகும். அவர்கட்கு அபாயம் ஒருநாளும் கிடையாது. ஆகவே அபாயமாகிய வினையை யழிக்கத்தக்க உபாயம் இதுவேயாகும். இங்ஙனஞ்செய்து இறைவனடியைப் பணிந்து அபாயத்தை (வினையை) நீக்கிக்கொள்வதே பக்தியாகும். அப்படி நீக்கிக்கொள்ளாதவைகள் யாவும் விதியேயாகும். மதி-மதி, விதி-மதி என்று இரண்டு மதியுண்டு. இவற்றுள் முதல்மதி விதியை விலக்கிக்கொள்ளுகின்றதும், இரண்டாவதுமதி எல்லாம் விதிப்படிதான் நடக்கும் என்று சொல்லிக்கொள்ளுகிறதுமாகும். ஆகவே விதியை விலக்கிக்கொள்ளுகிறதும் உனதுமதி, எல்லாம் விதிப்படிதான் நடக்குமென்று சொல்லிக்கொள்ளுகிறதும் உனது மதியாகும் என்றறிக.

உலையா முயற்சி களைகணு வூழின்
வலிசிந்தும் வண்மையும் உண்டே—உலகு அறியம்
பான்முளை தின்று மறலி உயிர்குடித்த
கான்முளையே போலுங் கரி. (நீதிநெறிவிளக்கம்)

இன்பத்தைக்கொடுக்க ஊழுக்குச் சக்தியில்லாவிட்டாலும், கடவுளைநோக்கி சரீரம் வருந்த ஒருவன் செய்யும்படியான தவம் சாந்தியாகிய முயற்சிகள் அவன் விரும்பிய பயனைத்தரும். அதிகமாகக் கஷ்டப்பட்டு பரீக்ஷையில் தேறியும் ஜீவனோபாயத்திற்கு ஒரு தொழிலும் இல்லாமல் துன்பப்பட்டு தவிக்கவேண்டும் என்று ஊழ் அமைந்த ஒருவன் இராஜதானிமுழுதும் சுற்றிப் பகீரதப் பிரயத்தனஞ்செய்தாலும் அவனுக்குத் தொழில் கிடைக்குமா? கிடைக்காது மகா தீவிர நடையும், மகாவல்லமையுமுடைய ஊழ் என்னும் பகைவன் அந்தந்தவிடங்களில் அவனுக்கு முன்னரே சென்று தொழிலைக் கொடுக்கவொட்டாமல் செய்வான். ஆதலால் அவ்வூழ் என்னும் பகைவனை அழிக்கக் கடவுளைநோக்கித் தவம், சாந்தியாதிய முயற்சிகள் செய்தால் அவனுக்குமேல் அளவிறந்த ஆற்றலையுடைய இறைவன் அவனை அழித்து அனுக்கிரகம் செய்வர் ஆதலால் தளர்வில்லாத முயற்சியுடன் தவஞ்செய்வோர் ஊழை விலக்கிக்கொள்ளுவார்கள். புத்திரன் இல்லாமையால் சிலர் நாகப்பிரதிஷ்டைசெய்து புத்திரனைப் பெறுகின்றார்கள். தசரதசக்கரவர்த்தி புத்திரகாமேஷ்டியாகஞ் செய்து புத்திரனைப் பெற்றார். ஆனால் சிலர் நாகப்பிரதிஷ்டைசெய்தும் புத்திரனைப் பெறாமல் போகின்றனரே என்று கூறினால் தேவசாபம், விஷ்ணுசாபம், பிரமசாபம், பிதுர்சாபம், நாகசாபம், தாய்சாபம், பெரியோர்சாபம்முதலிய அநேக சாபங்களில் ஒன்றிற்குச் செய்யவேண்டிய சாந்தியை மற்றொன்றுக்குச செய்தால் எங்ஙனம் பயன் சித்திக்கும்? ஒருகாலும் சித்திக்க மாட்டாது.

அதாவது பெரியோர் சாபத்திற்குச் சாந்தி செய்யவேண்டியதாய் இருக்க, நாகசாபத்திற்குச் சாந்திசெய்தால் புத்திரனை எங்ஙனம் அடையக் கூடும். மார்க்கண்டேயர் தவஞ்செய்து என்றும் பதினாறுவருடம் ஆயுளைப் பெற்றார். துருவன் தவஞ்செய்து அனைத்திற்கும் மேலான துருவபதத்தைப் பெற்றான். இராவணன் தவஞ்செய்து மூன்றரைகோடிவருடம் ஆயுளைப் பெற்றான். அருச்சுனன் தவஞ்செய்து பாசுபதாஸ்திரம்பெற்றான்.

சாவித்திரி தவஞ்செய்து புருஷன் தீர்க்க ஆயுளுடன் இருக்கப்பெற்றாள். பகீரதன் தவஞ்செய்து கங்காநதியைப் பெற்றான். நகுஷன் தவஞ்செய்து இந்திரபதத்தைப் பெற்றான். இன்னும் அநேகர் தவஞ்செய்து அநேக இஷ்டகாமியார்த்தங்களைப் பெற்றிருக்கின்றனர். அருச்சுனன் பாசுபதாஸ்திரம் பெறவேண்டுமென்றும், இராவணன் மூன்றரைகோடி வருடம் ஆயுள் பெறவேண்டுமென்றும், இவர்களுக்கு ஊழிலேயே அமைந்திருந்தால் இவர்கள் தவஞ்செய்யவேண்டிய அவசியம் கிடையாதன்றோ! இல்லாமையினால்தான் தவஞ்செய்தார்கள். ஊழில் இல்லாததை எப்பொழுது இவர்கள் தவஞ்செய்து பெற்றார்களோ அப்பொழுது ஊழை விலக்கினார்களல்லவா? நாகப்பிரதிஷ்டைசெய்து புத்திரனைப் பெறுவதும் விதிதானென்று ஒருவன் சொன்னால் அப்பொழுது எல்லாம் விதியாகும். எல்லாம் விதியென்று சொன்னால் விதி இவனுக்கு எப்படி வந்தது? அங்ஙனமானால் இவனுக்குப் புத்தியைக்கொடுத்தது என்? ஆதலால் விதியை மதியால் வெல்லலாமென்பது துணிபு. (11)

## சாதகபலன் சொல்லும்வகை

சாதகநற் பலன்வழுத்தும் முறைமையைக்கேள் மடவார்
தமக்குமணப் பொருத்தமதைத் தான்பார்க்கும் அந்தப்
போதுதசப் பொருத்தம்பார்ப் பதற்குமுன்னர் ரச்சுப்
பொருத்தம்பார்ப் பதுபோலும் முகூர்த்தங்கள் தனக்கே
ஓதியசக் கரந்தீட்டி பிராணனொடு வேளை
உணர்வதற்கு முன்விதித்த உடுவுணர்தல் போலும்
நீதியுடன் பலபாகம் பார்ப்பதற்கு முன்னே
நிறைசீவன் தனையறிந்து நிகழ்த்துகசா தகமே.

(இ-ள்.) அவரவர்கள் சாதகத்தைக்கொண்டு நன்மை தீமைகளாகிய பலாபலன்களைக் கூறுகின்ற ஒழுங்கைக் கேளுங்கள். கன்னிகையர்க்குத் திருமணப் பொருத்தத்தை அறிகின்ற காலத்தில், மற்றைப்பொருத்தங்கள் பார்ப்பதற்கு முன்னதாக, திருமாங்கல்யப் பொருத்தம் பார்ப்பதுபோலவும் சகல சுபகாரிய காலநிர்ணயங்களுக்கும், இராசிசக்கரம் அமைத்து மூர்த்த காலம் என்னும் அமிர்தகாலத்தையும், அமூர்த்தகாலம் என்னும் மித (ஸ்தூல) காலத்தையும் அறிவதற்கு முன்னதாக, அந்தந்த சுபகருமம் செய்வதற்கு மகரிஷிகளால் நியமிக்கப்பட்ட நட்சத்திரத்தைத் தெரிந்து கொள்வதுபோலவும், முறைமைப்படி பலன் சொல்லும் பகுதியை அறிவதற்கு முன்னதாக, தீர்க்காயுளைப்பார்த்து சாதகத்தை எழுதக்கடவது எ-று.

(வி-ரை) ஆண் பெண் இருபாலார் திருமணத்தின் பொருட்டு சாஸ்திரங்களிலே மகரிஷிகளால் விதிக்கப்பட்டிருக்கும் பொருத்தங்கள்:-1-வது தினம், 2-வது கணம், 3-வது மாகேந்திரம், 4-வது ஸ்திரீ தீர்க்கம், 5-வது யோனி, 6-வது இராசி, 7-வது இராசி அதிபதி, 8-வது வசியம், 9-வது இரச்சு, 10-வது வேதை எனப் பத்துவகைப்படும். இதனை:—

செப்புநாள் கணங்கள் மாகேந் திரமொடு மங்கை தீர்க்கந்
தப்பிலா யோனி ராசி ராசியின் தலைவர் தம்மோடு
ஒப்பிலா வசியம் நன்னூல் வரைதரு வேதை ஆக
மைப்புயல் அளக மாதே மருவிய பொருத்தம் பத்தே.

எனவரும் சரசோதிமாலை வசனத்தால் அறிக. இந்த பத்துவகைப் பொருத்தங்களில் 1-வது தினம்-ஆயுராரோக்கியத்தையும், 2-வது கணம்-சோபனகரத்தையும், 3-வது மாகேந்திரம்-சந்ததி விருத்தியையும், 4-வது ஸ்திரீ தீர்க்கம்-சர்வ சம்பத்கரத்தையும், 5-வது யோனி-அன்னியோன்னிய சிநேகவிருத்தியையும், 6-வது இராசி-குலவிருத்தியையும், 7-வது இராசி அதிபதி-பரமசிநேகித விருத்தியையும், 8-வது வசியம்-சந்தோஷத்தையும், 9-வது இரச்சு-மாங்கல்ய விருத்தியையும், 10-வது வேதை-துக்க நாசத்தையுந்தரும். இதனை:—

ஆயுசு தினமாம் கணம்சுபம் யோனி அன்புமா கேந்திரம் பிள்ளை
ஏயால் தீர்க்கம் நலங்கிளர் ஓரை இங்குல வர்த்தனை அதிமை
தூயமித் திரராம் சந்துட்டி வசியம் சொற்றிடில் இரச்சுமங் கிலியங்
காயும தின்மைவேதையென்று இவைக்குக் கனங்குழாய் பலன்களை அறியே.

எனவரும் செகராச சேகரமாலை வசனத்தினால் அறிக. முகூர்த்த தருப்பண முதலிய சில நூற்களில் இவ்வித பொருத்தங்கள் பன்னிரண்டு எனவும், இருபது எனவும் கூறப்பட்டிருக்கின்றன. இதனை:—

தினங் கணஞ்ச மகேந்த்ரம் ஸ்திரீதீர்க்கம் யோநிமே வச
ராசி ராச்யதியோ வச்ய ரஜ்ஜூர் வேதாஸ் ததாத்ஸ
புநச்ச வர்ணகூடஞ்ச நாடிகூடம் ப்ரசஸ்யதே
ஏதே த்வாதஸ கூடாஸ்யுஃ கூடபேதாஃ ப்ரகீர்த்திதாஃ

எனவரும் முகூர்த்த தருப்பண வசனத்தினால் அறிக. முன்பு கூறிய பத்துவகைப் பொருத்தங்களுடன் 11-வது ஜாதிப்பொருத்தம், 12-வது நாடிப் பொருத்தம் என்னும் இரண்டு பொருத்தங்களைக்கூட்டி பன்னிரண்டு பொருத்தங்களாகக் கூறப்பட்டிருக்கின்றது. காலாமிருதத்தில் இந்தப் பன்னிரண்டு பொருத்தங்களுடன் 13-வது கணிதம், 14-வது ஆயம், 15-வது பஞ்சபட்சி, 16-வது யோகினி, 17-வது இலிங்கம், 18-வது பஞ்ச பூதம், 19-வது சந்திரயோககூடம், 20-வது கோத்திரம் ஆக எட்டுப் பொருத்தங்களைக்கூட்டி இருபது பொருத்தங்களாகக் கூறப்பட்டிருக்கின்றது. சூடாமணி உள்ளமுடையானில் 21-வது விருட்சப் பொருத்தம் ஒன்றைக்கூட்டி இருபத்தொன்று பொருத்தங்களாக அறியப்படுகின்றன. ஆனால் இவற்றுள் முதற்கூறிய பத்துப் பொருத்தங்களே மிக முக்கியமானவை என்பது சித்தாந்தம். இவ்வித பொருத்தங்களை எம்மால் இயற்றியுள மாதர் ஜாதகத் தருப்பணம் என்ற நூலினால் நன்கு அறியலாம். இற்றைக்கு 700-வருடங்களுக்குமுன் இயற்றப்பெற்ற வீமேசுவர உள்ளமுடையானில் விருட்சப் பொருத்தத்தைக்கூட்டி பதினொன்றுப் பொருத்தமாகக் கூறப்பட்டுளது. நாடி முதலிய பொருத்தங்கள் மிகப் பழைய நூற்களில் கூறப்படாமையின் தசப்பொருத்தங்களே திருமண விஷயத்திற்குப் போதுமானதாகலின் "தசப்பொருத்தம் பார்ப்பதற்கு முன்னர்" என விளக்கினார் ஆசிரியர் என்க. இதனுண்மையை யுணராதார் விரிவான பல பொருத்தங்களைப் பார்த்து இடர்ப்படுகின்றனர்.

விவாக விஷயத்தில் தசப்பொருத்தங்களில் இரச்சுப் பொருத்தமே மிகமிக அவசியமானது. "ரஜ்ஜூ மாங்கல்யமேவச" என்ற வசனப்படி இரச்சுப்பொருத்தம் ஒன்று இருந்து மற்றையப் பொருத்தங்கள் இல்லா

விடினும் விவாகம் செய்விக்கலாம். இரச்சுப் பொருத்தம் ஒன்று இல்லாமல் ஏனைய பொருத்தங்கள் இருந்தால் அவற்றால் பிரயோசனம் ஒன்றுமே கிடையாது. இரச்சுப்பொருத்தம் பார்க்கும் விதி வருமாறு:—

அசுவினி-மகம்-மூலம், ஆயில்யம்-கேட்டை-ரேவதி-பாதரஜ்ஜு
பரணி-பூரம்-பூராடம், பூசம்-அனுஷம்-உத்ரட்-தொடைரஜ்ஜு.
கிருத்தி-உத்திரம்-உத்ராடம், புனர்தம்-விசாகம்-பூரட்-வயிற்றுரஜ்ஜு.
ரோகணி-அஸ்தம்-திருவோணம், திருவா-சுவாதி-சதயம்-கழுத்துரஜ்ஜு.
மிருகசீர்ஷம்-சித்திரை-அவிட்டம்-சிரோரஜ்ஜு.

இரச்சுவினுடைய அங்கநியதி இங்ஙனமாகும். ஆதலால் ஆண் பெண் இருபாலார்க்கு ஒரே அங்கத்தில் இரச்சு இருப்பதால் இரச்சுப்பொருத்தம் இல்லை என்பது சாஸ்திரசித்தம். அதாவது பெண்ணுக்குப் பாதத்திலும், பிள்ளைக்குப் பாதத்திலும் இரச்சுவாக இருந்தால் இரச்சுப்பொருத்தம் கிடையாதென்பதேயாம். பிற அங்கங்களுக்கும் இப்படியேயாம்.

ஏக இரச்சுவின் அங்கஸ்தானபலன்கள் வருமாறு:—

சிரோரஜ்ஜு-பதிம்ஹந்தி-கண்டரஜ்ஜு-ஸ்திரியம்ஹரேத்
நாபிரஜ்ஜுஃப்ரஜாஹந்தி-ஊருரஜ்ஜுர்-தநக்ஷயஃ
பாதரஜ்ஜுஃ-ப்ரவாஸஸ்யாத்-இத்யேவம்-ரஜ்ஜுலக்ஷணம்

எனவரும் காலவிதான வசனத்தின்படி இருவருக்கும் இரஜ்ஜுவானது சிரசில்கூடினால் புருஷனுக்கும், கழுத்தில்கூடினால் பெண்ணுக்கும், வயிற்றில்கூடினால் சந்தானத்திற்கும், தொடையில்கூடினால் தனத்திற்கும், பாதத்தில்கூடினால் இருப்பிடத்திற்கும் ஆணியுண்டாகும். ஆகவே இவற்றுள் பிரபலதோஷமுடைய அங்கங்கள் சிரம், கழுத்து என்னு மிரண்டிடங்களேயாகும். மற்ற அங்கங்கள் ஆண்பெண் இருபாலார்க்குத் தோஷத்தை செய்யுந் தன்மையுடையதல்ல வாதலாலும், வேறு சொற்ப தோஷங்களைச் செய்யுமாதலாலும் அவற்றிற்குச் சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டிருக்கும் விலக்குகளைக்கண்டு, விலக்கிற்கு ஒத்திருக்குமாயின் தோஷமற்றதெனக் கொண்டு ஏகரச்சுவானாலும் விவாகம் செய்யலாம்.

ஏகாதி பத்யே மைத்ரேவா சமசப்தம ஏவச
ரஜ்ஜு வேத கணைர்தோஷோ ராசிதோஷோ நவித்யதே.

எனவரும் காலவிதான வசனத்தின்படி ஸ்திரீ புருஷர்களின் நக்ஷத்திரத்திற்குரிய இராசிபதிகள் ஒரே கிரகமாயிருந்தாலும், இராசியாதிபதிகள் ஒருவருக்கொருவர் மித்திரர்களா யிருந்தாலும், சமசப்தக இராசிகளாக இருந்தாலும் இரச்சு, வேதை, கணம் ஆகிய தோஷங்கள் இருந்தாலும் விவாகம் செய்யலாம். மற்றும், "ஆரோகரஜ்ஜுஸ்த் தவவரோஹரஜ்ஜுஃ-பாணிக்ரஹேமங்களம் மாதகோதி" எனவரும் ஷை நூலின் வசனப்படி ஏகரேகை ரஜ்ஜுக்கள் ஒன்று ஆரோகணத்திலும் மற்றொன்று அவரோகணத்திலும் இருந்தால் விவாகம் செய்யலாமென்று ஏற்படுகின்றது.

முகூர்த்ததருப்பணத்தில்,

ரஜ்ஜோர் அபாவோ யத்யஸ்தி ராசிஸ்ச க்ரஹமைத்ரகம்
தினமாகேந்த்ர யுக்தோபி ரஜ்ஜுதோஷோ நவித்யதே

என்றபடி தினம், மாகேந்திரம், இராசி அதிபர் மித்திரம் ஆகிய பொருத்

தங்கள் இருந்தால் இரச்சுதோஷம் கிடையாதென்று கூறப்பட்டிருக்கின்றது. ஆரோஹம் = ஏறுதல், அவரோஹம் = இறங்குதல் என்பது பொருள்.

அஃது வருமாறு:—

| மிருகசிரம் | | | சித்திரை சிரம் | | | அவிட்டம் சிரம் | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| ரோ- | கழுத்து | திருவா. | அஸ். | கழுத்து | சுவா. | ஓண- | கழுத்து | சத. |
| இரு- | வயிறு | புனர். | உத்ர- | வயிறு | விசா. | உத்ரா- | வயிறு | பூரட். |
| பர- | தொடை | பூசம். | பூர- | தொடை | அனு. | பூரா- | தொடை | உத்ரட். |
| அசு- | பாதம் | ஆயில். | மக- | பாதம் | கேட். | மூல- | பாதம் | ரேவதி |

இந்த முறைமையால் பரணியில் பெண் அல்லது பிள்ளை ஜனனமாகவும், அனுஷம் அல்லது உத்ரட்டாதியில் பெண் அல்லது பிள்ளை ஜனனமாகவும் இருந்தால் பரணி ஆரோஹரஜ்ஜு எனவும், அனுஷம் அலலது உத்ரட்டாதி அவரோஹரஜ்ஜு எனவும் அறிந்துகொள்ளவேண்டியது. பிறவும் இங்ஙனமேயாம்.

மாங்கல்யம்:--இது மங்கல சூத்திரம் எனப்படும். திருமணங்கொண்டோன் கடவுளைவாழ்ததித் தன் தேகரட்சணத்தின் பொருட்டும், சந்தான விருத்தியின் பொருட்டும், கொண்ட மனைவியின் கழுத்தில் தேவர்கள் இருஷிகள் அக்கினிசாக்ஷியாக கட்டும் அடையாளமாகும். இதனைச் செல்வமுள்ளோர் பொனனாலும், மற்றையவற்றாலும் செய்து அணிவர். ஏழைகள் மரம், ஓலையால் செயது அணிவா. தாலபததிரம் என்னும் பனையோலையில் பலா அணிந்திருநத காரணமாகவே தாலியென்று காரணப்பெயருண்டாயிற்று எனபா பெரியோர். இது தற்காலம் வடநாட்டில் சில கீழ்ச்சாதியோரிடத்தில் நடைபெறுகின்றதாம். இதன் உருவம் தேசங்கள்தோறும் ஜாதிகள்தோறும் வேறுபடுகிறது. இதனை, "ஸ்வர்ணேன ரஜதேனை வரதாம்ரேண தாருனைாபி, அதவா தாலபத்ரேவா பேளஞ்ச சதுரஸ்ரகம்" என்னும ஸ்ரீ உத்தர காரணாகமத்தினல் அறியலாம். பதினறு இழைகள் கொண்ட சுததிரத்தில கோக்கவேண்டுமென்பது ஷை ஆகமவாக்கியம். மங்கலநாண் என்றும் சொல்லப்படும்.

இன்னின்ன கருமங்களை இன்னின்ன திதி வாரம் நக்ஷத்திரங்களில் செய்யவேண்டுமென்று சம்மிதாஸ்கந்தத்தில் கூறப்பட்டிருக்கின்றது. அந்தந்த கருமங்களுககேற்ற திதி வாரம் நக்ஷத்திரங்களை அறிந்தபின்னரே அதற்குரிய இலககினத்தையும், அமிர்த காலத்தையும் நிர்ணயித்தல் வேண்டும். ஆகவே திதி-வாரம்-நக்ஷத்திரம் - இலக்கினம்-அமிர்தவேளை என்னும் இவைகளின் மத்தியிலுள்ள நக்ஷத்ரமே பிரதானமானது. இதனை "திதேர்வா ரஸ்ததோருக்ஷம் சர்வேப்யுதயோபலீ" என்ற காலவிதான வசனததினல் நன்கறியவும. திதியைவிட வாரமும், வாரத்தைவிட நக்ஷத்திரமும், நக்ஷத்திரத்தைவிட இலக்கினமும் உத்தரோத்தர பலமுடையதாகும். இவைகளில் இலக்கினம் பலமுடையதென்றாலும் திதி வாரம் நக்ஷத்திரஙகளின் சுத்தியில்லாவிடின் இலக்கினத்தினல் யாதொரு நன்மையும் கிடையாது. இப்படியே திதி வாரம் இவைகளின் சுத்தியிலிருந்து

நக்ஷத்திர சுத்தியில்லாவிடின் திதி வாரங்களினுல் யாதொரு நன்மையுங் கிடையாது, ஆகவே எவ்வித சுபகருமங்களுக்கும் நக்ஷத்திர சுத்தமே முக்கியமானதென்பது பெறப்படும். இது கருதியே "முகூர்த்தங்கள் தமக்கே, ஓதியசக்கரம் தீட்டி பிராணனெனுவேளை, உணர்வதற்கு முன் விதித்த உடு உணர்தல்" என்று விளக்கினர் ஆசிரியர் என்க.

'முகூர்த்தம்' என்பது மௌகூர்த்தம் என்னும் வடமொழியின் பிரதி பதமாகும். தக்ஷனுடைய புதல்வியருள் ஒருத்தியாகிய முகூர்த்தை என்பவள் தர்மனை மணந்து பெற்ற சந்ததியார் மௌகூர்த்தியர் எனப் படுவர். இவர்கள் ஒரு தேவகணத்தலைவராவர். அந்தந்த முகூர்த்தகாலங் கட்கு அதிதேவதைகளாகிய இவர்கள் அவ்வம்முகூர்த்தங்கள்தோறும் உலகத்திலே செய்யப்படுங் கருமங்களை ஏற்று வைத்திருந்து அந்தக் கிரம மாகப் பலன்களை யூட்டுவோராவர். பகலுக்குப் பதினைந்து முகூர்த்தங்கள், இரவுக்குப் பதினைந்து முகூர்த்தங்கள் ஆக நாள் ஒன்றுக்குமுப்பதுமுகூர்த் தங்களாகுமென்றும், * முகூர்த்தமொன்றுக்கு இரண்டுநாழிகை என்றும் கார்க்கர், நாரதர், விருத்தவசிஷ்டர் முதலியோர் தத்தம் சம்மிதைகளில் கூறியிருக்கின்றனர். இவற்றின் கிரமத்தை நமது பிரசுரமாகிய சோதிட கலாநிதி 2-வது தொகுதி ஒன்பதாவது பகுதியில் விளக்கமாக அறியலாம். தற்காலத்தில இது வழக்கத்தில் இல்லாமல் அருகி வழங்குகின்றது. இக் காலத்தில் திதி-வாரம் - நக்ஷத்ரம் - அமிர்தாதியோக சுத்தியுடையநாளை முகூர்த்தநாள் எனவும், கிரகமட சுத்தமுடைய இலக்கினத்தை முகூர்த்த இலக்கினமெனவும் அனுஷ்டிக்கப்பட்டு வருகின்றது.

இன்னின்ன நக்ஷத்திரங்களில் இன்னின்ன கருமம் செய்யலாமென்று விதித்திருக்கும் நியதியாவது: அந்தந்த நக்ஷத்திரங்களின் அதிதேவதைக ளுடைய சுபாவத்தை அனுசரித்ததா யிருக்கின்றது. இதனை வராகமிகிரா சாரியர் தமது பிருகத்சம்மிதையில் நன்கு விளக்கியிருக்கின்றார். பரணிக்கு எமனும், கிருத்திகைக்கு அக்கினியும், ஆயில்யத்திற்கு சர்ப்பமும், கேட் டைக்கு இந்திராக்கினியும் அதிதேவதைகளாதலால் இவைகள் சுபகர்மத் திற்குக் கூடாதென்று விலக்கப்பட்டிருக்கின்றது: ஏனெனின்? இந்த அதிதேவதைகள் உக்கிர சுபாவமுடையவராதலாலென்க. மற்றைய சுப அசுப நக்ஷத்திரங்களையும் இவ்வடைவே ஏற்படுத்தப்பட்டிருக்கின்றன. முகூர்த்த நிர்ணயஞ்செய்யும் ஸ்தூலகாலமாகிய ஒவ்வொரு இலக்கினமும் சுமார் 1-நாழிகைக்கு முதல் 4-அல்லது 5-நாழிகைவரைக்கும் இருக்கலாம். ஆகவே இது ஸ்தூலமுகூர்த்தகால மென்னப்படும். இதனை வேளை என்றும் அமூர்த்தகாலமென்றும் சொல்லப்படும். ஓர் இலக்கினத்திலுள்ள மிக சூட் சுமமான காலத்தை மூர்த்தகாலமெனப்படும். இதுவே பிராணகாலமெனப் படுவதாம். இதனை:

பிராணுதி கதிதோ மூர்த்த ஸ்த்ருட்யாத்யோ அமூர்த்தஸம்க்ஞகஃ
ஷட்பிஃ ப்ராணைர் விநாடிஸ்யாத் தத்ஷஷ்ட்யா நாடிகாஸ்ம்ருதா

எனவரும் சூரிய சித்தாந்த வசனத்தினுல் அறியலாம். ஆகவே பிராணன் என்பது ஒரு விநாடியில் 10-ல் ஒருபங்குகாலம் என்னப்படும். இத்தகைய

---

* முகூர்த்தம் ஒன்றுக்கு இரண்டுநாழிகை என்பது ஸ்தூலமுறை. பகலிரவு பிரமாணங்களைத் தனித்தனி பதினைந்தால் பிரித்துக்கண்டதுவே சுத்தமுகூர்த்த காலபிரமாண மென்றறிக.

அதிருட்டமான அமிர்தகாலத்தை அறிவதற்குமுன்னம் நக்ஷத்திரசுத்தியை அறிந்துகொள்ளவேண்டியது சிறப்பாதல்பற்றி "பிராணனொடு வேளை உணர்வதற்குமுன்" என்று கூறினர் ஆசிரியர் என்க. ஜாதகர்மம் செய்த பின் ஜாதகபலாபலன்களை பாலாரிஷ்டமில்லாத ஜாதகங்களுக்கே எழுத வேண்டியது முறையாதலால் "பலபாகம் பகர்வதற்குமுன்னே, நிறைசீவன் தனை அறிந்து நிகழ்த்துக சாதகமே" எனக் கூறுவதாயினர். இந்த பாலாரிஷ்ட விஷயத்தை பின்பு 72-வது செய்யுளின்கீழ் நன்கு விளக்கப்படும். ()

## மாணுக்கன் விதி

சாதகவா ரிதியதனில் சிறுதிவலை அளவாய்
　　சாற்றுபல பாகமுறுந் தமிழ்ப்பனுவல் அதனில்
ஓதியநல் பலன்அறிந்து பகர்வதற்கே உரிய
　　உத்தமசற் குணம்பொறுமை அறிவுமநு நீதி
ஈதல்பல கலைதெரிவோன் பெரியோர்கள் தம்மை
　　எதிர்த்துவாது உரையாமல் இணக்கம் உடையனுமாய்ச்
சீதநிறை மதிபோலும் அமுதமிகும் வார்த்தை
　　செறிந்திடும் மாணுக்கனுக்கே செப்புவது குணமே.

(இ-ள்) சாதகபல சாத்திரம் என்று சொல்லப்பட்ட சாதகஸ்கந்தமாகிய சமுத்திரத்தில், அற்ப மழைத்துளியளவுக்கு ஒப்பாகச் சொல்லப்பட்ட பலன் சொல்லும் பாகத்தையுடைய இந்தச் சாதகாலங்காரமென்னும் தமிழ் நூலில், சொல்லுதற்கரிய சிறந்த பலாபலன்களைத் தெரிந்து கூறுவதற்கு ஏற்றதான நற்குணம், பொறுமை, உணர்ச்சி, மநுஸ்மிருதி முதலான ஸ்மிருதிகளில் சொல்லியுள்ளபடி ஒழுகுதல், அறஞ்செய்தல், பலவிதமான சாஸ்திரங்களை ஆராய்ந்தறிதல், கல்வி அறிவு ஒழுக்கங்களில் மேம்பட்டவர்களிடத்தில் எதிர்த்துப்பேசாமல் அடங்கி அவர்களிடத்தில் சேர்ந்திருத்தல் முதலியவைகளை யுடையவனும், குளிர்ச்சி பொருந்திய சந்திரனையொத்த முகமலர்ச்சியுடன், இனிமையாகப் பேசுகின்ற சிறந்த சீடனுக்கு இந்த நூலை சொல்லுவதே நன்மையாகும் எ-று.

(வி-ரை) வேதத்திற்கு அங்கம் ஆறு: அவற்றுள் நேத்திராங்கம் சோதிடம் ஆகவே இந்த சாஸ்திரம் வேதாங்கத்துள் ஒன்றாய் மிளிர்வது பற்றி இதனை ஒழுக்கமுடைய மாணுக்கருக்கு உரைப்பதே நன்மையென்பதை இச் செய்யுளில் விளக்கினர் ஆசிரியர் என்க. இதனை:—

கோபநீய-மிதம்நித்யம்-நோபதேஸ்யம்-யதஸ்ததஃ
பரிக்ஷிதாய-சிஷ்யாய-குருபக்தாய-ஸாதவே

எனவரும் சூரிய சித்தாந்த வியாக்கியானத்தின் உதாரண சுலோகத்தினுல் நன்கறியலாம். குருபக்தி - சாந்தகுணம் - நல்லொழுக்கம், நூற்பொருளை எளிதில் கிரகித்துக்கொள்ளும் நுட்பபுத்தி, பல சாஸ்திர ஆராய்ச்சி, இனியவசன முதலியவைகளையுடைய சீடன்தானு என்று பரீட்சித்தறிந்த பின்பே இந்த சோதிடசாஸ்திரத்தைச் சொல்லவேண்டியது முறைமையாகும் என்பது இதனுல் உணரப்படும்.

அபாரஹோரா கமபாரகாமீ, பாட்யாஞ்சபீஜே ஸு-தாரம்ப்ரகல்பஃ
ஸத்கோளவித்யா குஸலஃஸஏவ, பவேத்பலாதேஸா விதௌஸமர்தஃ

எனவரும் சாதகாபரண வசனத்தின்படி ஆதியர்தமில்லாமல் அபாரமா யிருக்கப்பட்ட ஹோராசாஸ்திரத்தை நன்குணர்ந்து பீஜகணிதம், கோள சாஸ்திரங்களில் வல்லவனுயிருப்பவனே பலபாகத்தைச் சொல்லுவதற்கு சமர்த்தன் என்பதை நன்கு அறிக. ஒழுக்கமில்லாதவன், சோம்பேறி, அகங்காரி, காமி, திருடன், நோயாளி அறிவில்லாதவன், கோபி, அதிச மார்கத் தூங்குவோன், பழைய நூற்களின் பரப்பைக்கண்டு பயப்படுவோன், பொய்யன், பாவத்தொழில் செய்பவன், சொன்னசொல்லை விரைவில் அறிந்துகொள்ளும் நுட்ப புத்தியில்லாதவன், வாதாடுவோன், முதலியவர் களுக்கு எந்த நூலையும் சொல்லக்கூடாதென்பது விதி. ஆகவே "உத்தம சற்குணம் பொறுமை..........செறிந்திடு மாணுக்கனுக்கே செப்புவது குணமே" என்று கூறினுரென்க. (18)

செப்பியதோர் பலபாகம் பகர்வதற்கே இரவி
தேசதே சத்தின்விழுச் சாயைதெரிந்து எண்ணித்
தப்பறவே கண்டுஅருளும் சரபிண்டத் தொகையின்
தகைமைபெற மருவிஇலக் கினங்கள் தீமை அறிந்தே
ஒப்புடன்லக் கினசந்தி கண்டால்அக் காலே
உயர்கடிகை லக்கினசுத் திகள்உணர்ந்து கண்டு
விப்பிரர்சோ திடவல்லோர் சரணமதைப் போற்றி
விளம்பினர்க்குப் பலபாகம் விளங்கும்மிகத் தானே.

(இ - ள்) இந்த நூலில் கூறப்பட்ட நன்மை தீமைகளாகிய பலா பலன்களைக் கூறுவதற்கு, விஷுவகாலத்தில் சூரியன் சஞ்சாரத்தினுல் உண் டாகும் அந்தந்த தேசத்திற்குரிய விஷுவத்சாயைக்கண்டு கணிதஞ்செய்து, அதனுல் பிழையின்றி கண்டறிந்த சரகண்ட கண்டத்தொகையின் சமஸ் காரஞ்செய்த சுதேச இராசிமானங்களைக்கொண்டு, இலக்கினங்களை ஏற் படுத்தி, சமமாக நிலை லக்கினத்தின் அந்தமும், வரும் லக்கினத்தின் ஆதியும் ஒன்றற்கொன்று மாறுபடுவதாகிய இலக்கின சந்தியானது காணப் படுமானுல், அந்த சமயத்தில், சிறந்த நாழிகைஸ்புடம், இலக்கினஸ்புடங் களைச் செய்தறிந்து, அந்தணர் சோதிடசாஸ்திரங் கற்றுணர்ந்த வல்லவர் கள் ஆகிய இவர்களுடைய திருவடியை வணங்கி சொல்லப்பட்டவர்களுக்கு பலாபலன்களுடைய திட்பநுட்பங்கள் நன்ருக விளங்கும் எ-று.

(வி-ரை) பகலிரவு பிரமாணங்கள் சமமாய் இருக்குங்காலம்விஷுவகாலம் எனப்படும். இந்த விஷுவகாலம் சித்திரைவிஷு, ஐப்பசிவிஷு என இரு வகைப்படும். இவை மேஷவிஷு புண்யகாலம், துலாவிஷு புண்யகாலம் என பஞ்சாங்கங்களில் குறிப்பிடப்படுவதாகும் இது நிரயன சம்பந்த மானது, நிரயன சூரியஸ்புடத்தில் அயனபாகாதிகளைக்கூட்ட என்றைய தினம் பாகை பூச்சியமாகுமோ அன்றையதினமே அயனதினமாகும். அதாவது அயனசம்பந்தமாகிய மாதாரம்பதினமாகும். இவ்வித அயன மாதங்கள் பன்னிரண்டு. அவற்றுள் ஆரம்பமாதம் மேடாயனமென்றும், மத்தியமாதம் துலாயனமென்றும் வழங்கப்படும். இதனைத் தற்கால திருக் கணித பஞ்சாங்கங்களால் இனிது அறிக. தற்காலத்தில் சற்று ஏறக்குறைய இந்த அயனமாதாரம்பங்கள் ஒவ்வொரு சௌரமாதங்களின் எட்டாந்தேதி நிகழ்கின்றது. ஆகவே பங்குனிமீ 8உ மேடாயன பிரவேசமும், புரட்

டாசிமீ 8உ துலாயன பிரவேசமும் ஆரம்பிக்கின்றன. இந்ததேதிகள்தான் விஷுநாள் என்று சொல்லப்படுவதாகும். இந்த நாட்களில்தான் சூரிய பகவான் விஷுரேகையிலுள்ள மேடாயன துலாயனங்களில் பிரவேசிப் பார். "ஸமராத்ரிம்-திவேகாலே - விஷுவத் - விஷுவஞ்சதத்" என்ற அமரகோசத்தின்படி பகலிரவுகளிரண்டும் சமமாயுள்ள காலத்திற்கு விஷுவத்காலமென்று அறியப்படுகின்றன. மற்றும் இதனை "அஹோ-ராத்ர யோர்-விஷுஸாம்யம் - அத்ராஸ்தீதி-விஷுவத்" என்ற லிங்காபட்டீயத் தாலும் நன்கறியலாம்.

இத்தன்மையான விஷுவத் நாட்கள் ஏதேனுமொன்றில் மத்தியான்னத்தில் நீர்மட்டஞ்செய்த சமமான இடத்தில், அதாவது "விலாதலே-அம்புஸம் சுத்தே-வஜ்ரலேபே-அபிவாஸமே" என்று சூரிய சித்தாந்தம் திரிபிரஸ்னுதிகாரம் முதல் சுலோகங் கூறுமாறு, சமபூமி என்றால் வச்சிரக் காரை செய்த நீர்மட்டமான (அதாவது வெள்ளைக்கல்லை துண்டு துண்டாக்கிச் சூரணஞ்செய்து அதனால் காரைசெய்தால் அதுவே வச்சிரக்காரையாகும். அப்படிப்பட்ட பூமியில் நீரைப்பெய்தால் எல்லா பூமிக்கும் அந்த நீர் வியாபிக்கவேண்டியது) பூமியினுடைய மத்தியபாகத்தில் 12-அங்குல உயரமுள்ள (ஒரு தண்டத்தை) சங்குவை நிறுத்திப்பார்க்க தக்ஷிணோத்தர ரேகையில் ஏற்படும் சாயையின் அங்குலம் வியங்குலங்களே விஷுச்சாயையாகும். இதனை பலச்சாயை, பலபா, அக்ஷபா எனவும் வழங்கப்படும்.

விளங்கியவெங் கதிர்ப்புத்தேள் மேடதுலா யனம்புகுநாள் விஷுநா ளாகும்
அளவுடன்அன்று அம்பரசா தனஞ்செய்து மூந்நான்காம் அங்கு லத்தின்
வளச்சங்கை சமநிலநாப் பண்ணமைத்தாங்கு அதன்சாயைவடக்கு தெற்கில்
உளரேகை தனில்விழுமவ் வளவைவிஷு சாயையென உரைப்பர் மன்னோ.

உரைக்கும்அன்றுச் சாயைசூன் னியமான பிரதேசத்து உளவி ரேகை
நிரையுறால் விஷுரேகை யெனப்படும்அவ் விரேகையினில் நிற்கும் நாடே
புரைசெறிதொல் இலங்கையவ கோடிஉரோ மகஞ்சித்த புரியாம் மற்றும்
வரைதரும்ஒன் றற்குஒன்று தொண்ணூறு பாகைதனில் மன்னும் அன்றே.

எனவரும் எம்மால் இயற்றி அச்சிட்டுள்ள ஜாதகசாகரம் முதல்தரங்கம் முதல்மணி பாவக கணிதத்தின்படி நன்கறிக. இவ்வித விஷுவச்சாயையின் கணித முதலியவற்றை ஷை ஜாதகசாகரத்தில் மிகத்தெளிவாகக் காட்டப் பட்டிருத்தலின் ஆங்கு உணர்ந்தறிக. திருக்கணித பஞ்சாங்கத்தில் பிரதானமான சில முக்கிய பட்டணங்களின் அக்ஷாம்சம், விஷுவச்சாயைகளை காட்டப்பட்டிருத்தலின் அதனாலும் அறியலாம். சுதேச விஷுவச் சாயையை 10-ஆல் பெருக்கியதுமுதல் சரகண்டமாகும். இந்த முதல் சரகண்டத்தை 5-ஆல் வகுக்க வந்த ஈவை முதல் சரகண்டத்தில் கழித்த மீதம் இரண்டாவது சரகண்டமாகும். முதல் சரகண்டத்தை 3-ஆல் வகுத்த ஈவே மூன்றாவது சரகண்டமாகும். சரகண்டம் எனினும், சரபிண்டம் எனினும் பொருள் ஒன்றேயாகும். இதனை:—

சரகண்டங் காணும்வகை சுதேசபலச் சாயையினைத் தசத்தில் ஏற்ற
வருபலமே முதற்கண்டம் என்பரிதை ஓர்ஐந்தில் வகுக்க வந்த [தை
மூரணில்பலந் தனைமுதலில் அகற்றின்நடு கண்டமென்பர் முதற்கண் டத்
ஒருமூன்றிற்கு ஈயவரும் பலம்மூன்றாம் கண்டம்என உரைப்பர் மாதோ.

எனவரும் நமது ஜாதகசாகரம் முதல் தரங்க வசனத்திஞல் அறிக. உதாரணம்:—உயர்திரு மஹாத்மா காந்தியடிகள் உத்தர அக்ஷாம்சம் பாகை-21 கலை 38-லுள்ள போர்பந்தரில் அவதரித்தார். அந்த க்ஷேத்திரத்தின் விழுவச்சாயை அங்குலம்-4 வியங்குலம்-45 என்று அக்ஷாம்சத்தைக்கொண்டு அக்ஷஜ்யா, இலம்பஜ்யாக்களால் கணித்து ஏற்படுத்தப்பட்டது. ஆகவே அந்த க்ஷேத்திரத்தின் சரகண்ட விநாடிகள் வருமாறு:—விஷுவச்சாயாங்குலம் 4-45 × 10 = முதல் சரகண்ட விநாடி-47, இந்த முதல்கண்டம் 47-ஐ ÷ 5-ஆல் வகுத்த ஈவு 9, மீதம் 2 × 60 = 120 ÷ 5 = 20. இதனை 27-ல் கழித்த மீதம் 37-36 அர்த்தாதிகமாக-38. இது இரண்டாவது சரகண்டமாகும். முதல் சரகண்டம் 47-ஐ ÷ 3-ஆல் வகுத்த ஈவு 15-40. அர்த்தாதிகமாக-16. இது மூன்ருவது சரகண்டமாகும். ஆகவே முதல் சரகண்டம்-47, இரண்டாவது சரகண்டம்-38, மூன்ருவது சரகண்டம்-16 என்று ஏற்பட்டதுணர்க. பிற இடங்களுக்கும் இந்தப்படியே சரகண்டங்களை அறிந்துகொள்ளலாம். இவ்வித கணிதப்பிரயாசையின்றி அறியும்படி நமது ஜாதகசாகரத்தில் பதகமுறையாகக் காட்டப்பட்டிருத்தலின் ஈண்டு மறுபடியும் அதனைச் சேர்த்தல் நூல் விரியுமென விடுத்தாம்.

"ஸ்வதேச சரகண்டோனா-பவந்தீஷ்டோதயாஸ்வஃ" என்ற சூரிய சித்தாந்தம் திரிபிரஸ்ஞைத்தியாயத்தின்படி நிரட்சரேகையிலுள்ள இலங்கையின் இராசிமானத்தில் சுதேச சரகண்ட சமஸ்காரம்செய்தால் சுதேச இராசிமானமாகும். ஆதலால் "சரபிண்டத்தொகையின், தகைமைபெற மருவி இலக்கினங்கள் தமைஅறிந்தே" என்று கூறிஞர் என்க. ஜாதகங்களில் இலக்கினம் பிரதானமானதென்று எல்லோரும் அறிவர். ஆனல் இலக்கினத்தைச் சிலரே முறைப்படி கணக்கிட்டு ஸ்புடஞ்செய்கின்றனர். பலர் பஞ்சாங்கங்களில் காணும் மேஷாதி இராசிமானங்களைக்கொண்டு இலக்கினத்தைக் கணக்கிடுகின்றனர். சிலர் மீனம் மேஷம் எவ்விடத்திற்கும் நாலேகால் ($4\frac{1}{4}$) நாழிகை என்று கணக்கிடுகின்றனர். இவ்விருவழிகள் முற்றிலும் பிழையாகும். யாதுபற்றி எனின்? பஞ்சாங்கத்தில் காண்பது "நிரயனஸாவன" இராசிமானமாகும். இலக்கினங் கணிக்கத் தேவையானதுவோ சாயன நக்ஷத்திர இராசிமானமாகும். இதுபற்றியே சூரிய சித்தாந்தம், ஆசிரியர் பாஸ்கரனுருடைய சித்தாந்த சிரோமணி, கிரகலாகவ முதலியவற்றுள் நிரட்சத்தின் சாயன நக்ஷத்ர இராசிமானத்தைக்கண்டு, பிறகு அட்சபிரதேசங்களுக்கு ஏற்ப பலச்சாயைக்கொண்டு, சரபிண்டங் கணித்துக் கழித்தோ, கூட்டியோ அந்தந்த இடங்களுக்கு உரிய தேசிய சாயன நக்ஷத்திர இராசிமானத்தால் இலக்கினங் கணிக்கும்வழியை அருள் செய்திருக்கின்றனர் ஆன்ரோர் என்க. 'கடிகாசுத்தி' என்பது ஜனனகால நாழிகையை சுத்தஞ்செய்தல் என்பதாகும். இதனை 49-ஆம் கவியில் நன்கு விளக்கிக் கூறப்படும். 'இலக்கினசுத்தி' என்பது இலக்கினஸ்புடத்தை 81-ஆல் பெருக்கிவரும் ஸ்புடத்திற்குரிய நக்ஷத்திரபாதம், அல்லது நக்ஷத்திரம், அல்லது அதன் திரிகோண நக்ஷத்திரம், திரிகோண ராசிகளில் சந்திரன் இருப்பது என்பதாம். இதனை நமது ஜாதகசாகரம் முதல்தரங்கத்தில் தெளிவாக அறியலாம். சிலர் "கதம்நாடி சதுர்க்குண்யம்" என்றபடி செய்வது பிறந்த நாழிகை சுத்தம் என்பர். அது இந்நூலுக்கு அங்கீகாரமானதல்ல. (14)

## சிறப்புப்பாயிரம்

### ஆக்கியோன் பெயர்

விளங்கியதோர் சகாத்தம்ஆயி ரத்தைந்நூற் றின்மேல்
மேவுஎண்பத்து ஏழுவிசு வாவசுவாம் ஆண்டில்
களங்கம்இலா வடமொழியைத் தான்தெளிந்து கண்டு
காசினியில் சாதகா லங்காரம் எனவே
வளங்குலவும் புகழ்பெறுநல் கீரனூர் வாழும்
வள்ளல்சே வடிநாதன் வரஉருவாய் வந்தோன்
உளங்களிகூர்ந்து அருள்ஞான யோகநட ராசன் [தானே.
உரைத்தனன்இப் பொருள் உணர்ந்தோர்க்கு உண்மைதரும்

(இ-ள்) பிரசித்திபெற்ற சாலிவாகனன் என்னும் அரசன் அரசியல் தொடங்கியதுமுதல் வழங்கப்பட்டுவரும், சாலிவாகன சகாப்தம் 1587-ல் விசுவாவசு ஆகிய வருஷத்தில், பரிசுத்தமாகிய சமஸ்கிருதபாஷையிலுள்ள சோதிட சாஸ்திரத்தைத் தான் தெளிவுபெற அறிந்துஉணர்ந்து,இந்நிலவுலகத்தில், சாதகாலங்காரம் என்னும் பெயரினுல் இந்த நூலை, பலவகையான வளப்பங்கள் நிறைந்து கீர்த்திபெற்ற சிறந்த கீரனூர் என்னும் கிராமத்தில் வசித்திருக்கும் வரையாது கொடுக்குந் தன்மையுடையவரும், சாக்ஷாத் நடராசப்பெருமானுடைய வரப்பிரசாதமே ஓர் வடிவாகத்திரண்டு பிறந்தவரும், மனமகிழ்ச்சியுடன் கிருபை செய்கின்ற இயமநியமாதி ஞானயோகங்களில் வல்லவருமாகிய, நடராஜன் என்னுந் திருநாமத்தை யுடையவர் அருள்செய்தார். இதில் அருள் செய்யப்பட்ட விஷயங்களைத் தெரிந்து கொண்டவர்களுக்கு இந்த நூலானது மெய்யை விளக்கிக்காட்டும் எ-று.'

(வி-ரை) 'கீரனூர்' என்பது புதுக்கோட்டை சமஸ்தானத்தைச் சேர்ந்த ஒருசிற்றூராகும். காப்புச்செய்யுள்களில் விநாயகர்,சிவபெருமான், அம்பிகை சுப்பிரமண்யர் முதலியோரை வணக்கஞ்செய்திருத்தலின் இவர் சைவமதத்தினர் என்று நன்கு நிச்சயிக்கப்படும். இவர் தந்தையார் சாக்ஷாத் நடராசப் பெருமானிடத்தில் அன்பு மிகுந்து அப்பெருமானை உபாசனுமூர்த்தியாகக் கொண்டு தவமியற்றி இவரைப்பெற்றனர் என்பது "சேவடி நாதன்வர உருவாய் வந்தோன்" என்பதனுல் அறிக. சைவசமயாசாரியர்களையும், அறுபான்மும்மை நாயன்மார்களையும் வணங்கி இருத்தலின் சைவகுலத்தவரென்றும், சிவதீட்சை பெற்றவர் என்றும் அறிக. மற்றும் "ஓமவிதியுஞ் சமயபேதமுதல் உரைத்தே, ஓர் எழுத்தில் ஐந்து எழுத்தின் உண்மையும்" என்று நான்காஞ் செய்யுளில் கூறியதனுல் ஞானப்பிரகாச சுவாமிகளிடம் சிவதீட்சைபெற்று அவரைத் தமது ஞானசாரியராகக் கொண்டவர் என்று நன்கு நிச்சயிக்கப்படும்.

விடயங்களின் வழியே போகாவண்ணம் மனத்தை நிறுத்திச் சிவத்தைத் தியானித்துப் பின்பு தியானிப்போனுகிய தானுந் தியானமுந் தோன்ருது தியானப்பொருளாகிய சிவம் ஒன்றே விளங்கப்பெறுதல்யோக

மாகும். பதி பசு பாசம் என்னும் முப்பொருள்களின் இலக்கணங்களை அறிவிக்கும் ஞானநூல்களைக் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்து நிட்டைகூடல் ஞானமாகும். ஆதலின் "ஞானயோகம்" என விளக்கினார் என்க. யோகத்தினால் அடையும்பலன் சிவசாரூப்பியமாகிய பதமுத்தியும், ஞானத்தினால் அடையும்பலன் சிவசாயுச்சியமாகிய பரமுத்தியுமாம். சாரூப்பியம்=கடவுளது உருப்பெற்றிருத்தல், சாயுச்சியம்=கடவுளோடு இரண்டறக்கலந்து ஐக்கியப்பட்டிருத்தலாம். இது சிறப்புப்பாயிரம் ஆதலால் நடராஜன் என்றதனால் ஆக்கியோன் பெயரும், வடமொழியைத் தெரிந்துகண்டது என்றதனால் நூல்வந்தவழியும், தென்மொழியிற் செய்ததென்பதும், சாதகாலங்காரம் என்றதனால் நூற்பெயரும், சகவருஷம் 1587-என்றதனால் காலமும், இதன் பொருளை அறிந்தவர்களுக்கு உண்மைதரும் என்றதனால் நூற்பயனும், அதிகாரியும், கீரனூர் என்றதனால் இடமும் நன்கு விளங்கும்.

சாலிவாகனன்:—பைடணபுரியிலிருந்த சுலோசனன் என்னும் வேதியன்புத்திரி சுமித்திரா விவாகத்திற்குமுன் நாகராஜனைக்கூடி கருவடைய சுற்றத்தாரால் வெறுத்துத் துரததப்பட்டு அந்நாட்டிற்கு அருகிலுள்ள குலாலச்சேரியில் ஒரு குயவன் வீட்டில் பெற்ற புத்திரனுவன். இவன் இளமைப்பருவத்தில் தன்னோடொத்த சிறுவர்களுடன் தான் அரசனாகவும், மற்றச் சிறுவர் மந்திரி முதலிய அரச காரியக்காரர்களாகவும், நியமித்து விளையாடுகையில் அவ்வழியாகச்சென்ற சோதிடன் ஒருவனைப் பார்த்து ஐயா நம் இராச்சியத்திற்கு யோகம் எப்படி என்று வினவ சோதிடன் யோகமாகவே இருக்கின்றது என அதனால் களித்த சாலிவாகனன் ஒரு மட்பாண்டமளிக்க அதுபொன்னாயிற்று. மண்ணால் யுத்தத்திற்கு வேண்டிய இரதம், கஜம், துரகம், பதாதிகளைச்செய்து விளையாட்டயர்ந்து வருவதானன். புரந்தரபுரத்து தனஞ்சயன் என்னும் வணிகன் தனது அந்திய தசையில் தன் நான்கு பிள்ளைகளை அழைத்து இந்தக் கட்டில் காலின்கீழ் உங்களுக்கு வேண்டியபொருள்களை எடுத்துக்கொள்க என்று காலமானான். பின்பு சோதிக்க ஒரு கும்பல்மண், ஒரு குவைஉமி, ஒரு கூட்டம்கரி, ஒரு குவை எலும்பு இருந்தன. இதனை அவ்வூர் அரசனிடம்கூறி எங்ஙனம் பங்கிட்டுக்கொள்வதென்று வினவ நியாயநதோன்றாமையால் குயச்சேரியின் வழியாய் வருகையில் சாலிவாகனன் கண்டு இவர்களை விசாரித்து மூத்த கனிஷ்ட கிரமமாக பூமி, தானியம், பொன், நாற்கால்களும் உரிய பாகப்பொருள் என்று கூறக்கேட்டு அவ்விதமே பாகப்பிரிவினை செய்துகொண்டனர். இந்தத் தீர்ப்பையும் அச்சிறுவனது அஞ்சாநிலையையுங் கேள்விப்பட்ட விக்கிரமார்க்கன் இவன் நம்நாட்டில் இருக்கக்கூடாதென்று எண்ணி வெளியேபோகும்படி கட்டளையிட போகாமலிருக்கவே சேனைகளுடன் யுத்தத்திற்கு வந்தனன். நாகராசன் அருளால் மண்ணால் செய்துவைத்திருந்த சதுரங்கபலத்தை உயிர்ப்பித்து போர்புரிந்து விக்கிரமார்க்கனை நருமதை நதிக்கு வடக்கில் ஓட்டினான் இதனால் அக்காலமுதல் நருமதை நதிக்கு வடக்கில உள்ளார் விக்கிரமார்க்க சகத்தையும், தெற்கிலுள்ளார் சாலிவாகன சகவருடத்தையும் வழங்கி வருகின்றனர். சகவருடம் எனினும் சாலிவாகன சகனு எனினும் பொருள் ஒன்றாக வழங்கப்படும். (15)

1-வது பாயிரப்படலம் முற்றிற்று.

# 2-வது பாவகப்படலம்



## தனுபாவகம் (முதலாம் இடம்)

சீர்பெறுஞ் சென்ம லக்கினந் தன்னில்
சேர்ந்தினி திருந்திடும் அந்தப்
பேர்தரும் பலன்கள் மெய்நிறஞ் சொரூபம்
பெருநிதி உதரம்மத் தகமும்
ஏர்பெறும் உபாங்கம் சிந்திதங் கிலேச
மிலட்சணம் கீர்த்திமூர்த் திகளும்
பார்தரும் சுபசந் தோஷமும் வயதும்
பகர்முதல் தானமென் றுரைக்கும்.

(இ-ள்) நன்மைதங்கிய சனன லக்கினத்தில் மேன்மையாக சேர்ந்திருக்கின்ற, அந்தப் பெயர் பெற்ற பலன்களானது சரீரகாந்தியும், வடிவமும், பெருத்த செல்வமும், வயிறும், தலையும், அழகு பொருந்திய உப அங்கங்களும், மனத்தினுள்ளிருக்கும் எண்ணமும், மனக்கவலையும், அழகும், புகழும், அங்க அடையாளங்களும், சுபமாகிய சந்தோஷமும். வாழ்நாளும் ஆகிய இவைகளே முதல்ஸ்தான பலன்களாகும் என்று சோதிடநூற்கள் சொல்லும் எ-று.

(வி-ரை) எண்ஜாண் உடம்பிற்குச் சிரசே பிரதானமாவதுபோல, பன்னிரண்டு பாவகங்களுக்கும் இலக்கினபாவகமே பிரதானமாகையாலும், இந்த இலக்கின பாவகத்தைக்கொண்டே மற்றைய பாவாதிபதிகள் இருக்கும் இடம்-சம்பந்தம்-நோக்க முதலியவற்றால் பலாபலன்களை வரையறுத்து நிச்சயித்தல் நியதியாகையாலும் "சீர்பெறும சென்மலக்கினம்" எனச் சிறப்பித்தார் ஆசிரியர் என்க. இதுமுதல் நூல் ஆரம்பமாதலால் முதல் முதல் "சீர்" என்னும் மங்கலச் சொல்லைவைத்துச்செய்யுள் இயற்றலாயினர் என்ப.

பழைய பிரதிகளில் "சீர்பெறுஞ் சென்மலக்கினத்ததிபர் சேர்ந்தினி திருந்திடும் அந்த" எனக் காணப்படுகின்றது. சன்ம லக்கினத்தின் ஆதிபத்தியம் ஒரு கிரகத்திற்கு உண்டாகுமேயன்றி பல கிரகங்களுக்கு உண்டாகாமையாலும், இங்கு கூறவந்த விஷயம் துவாதச பாவகங்களிலுள்ள அந்தர் பாவகமாகிய உபபாவகங்களாதலாலும் "சீர்பெறுஞ் சென்மலக்கினந்தன்னில் சேர்ந்தினிதிருந்திடும் அந்த" என்று இருக்கவேண்டியது ஒழுங்காதலாலும் இங்ஙனம் திருத்தி அமைக்கப்பட்டதென்க. இங்ஙனம் அமைத்துக் கூறுவிட்டால் "நன்மை தங்கிய சனன இலக்கினாதிபதிகள்" என்றே பொருள் கொள்ளல்வேண்டும். அங்ஙனங் கொள்ளுதற்கு விதியில்லை என்பது திண்ணம்.

பெருநிதி - பெருத்த செல்வம்; அதாவது சிறந்த ஐசுவர்யம் என்பதாம். ஐசுவரியம் எட்டு: அவை இராஜாங்கம், மக்கள், சுற்றம், பொன், மணி, நெல், வாகனம், அடிமை முதலியனவாம்.

பெருநிதி - பெருமைதங்கிய பொக்கிஷசாலை; அல்லது களஞ்சியம், பொருள் வைப்பிடம் என்றும் பொருள்கூறல் அமையுமெனக. இராஜாங்கம் 10-ஆம் இடமும், மக்கள் 5-ஆம் இடமும், வாகனம் சுற்றம் 4-ஆம் இடமும், பொன் மணி நெல் முதலியன 2-ஆம் இடமும், ஆளடிமை 3-ஆம் இடமும், ஆகலின் முன்னையதைவிட பின்னையதே சிறந்த பொருளாகும். "சங்கநிதி" என்பதற்குச் சங்கின் உருவமாயிருப்பதொரு தெய்வத்தன்மையுள்ள பொருள்வைப்பு என்றும், "பதுமநிதி" என்பதற்குத் தாமரைமலரின் வடிவை யொத்ததொரு பொருள்வைப்பு என்றும் பொருள் கூறியுளார் பெரியோர் ஆகலின், "பெருநிதி"என்றதற்குப் பெருமைதங்கிய பொருள் வைக்கும் இடம் என்று கூறுதலே பொருத்தமுடையதென்க.

அஃது பொருந்தாது. யாதுபற்றி எனின்? மூர்த்தி என்பதற்குச் சிலர் கடவுள் வணக்கமென்பர் பத்தாம் பாவகத்தில் "தேவதாபக்தி" என்று கடவுள் வணக்கத்தைக் கூறியிருத்தலின் என்க. 'மூர்த்தி'என்பதற்குஉடல் உருவம் என்ற பொருள் காணப்படுதலாலும், இவற்றுள் உருவம்என்பதற்கு உடல் உறுப்பு என்ற அர்த்தப் ஏற்படுதலினாலும் அங்க அடையாளம் என்று உரை எழுதப்பட்டதென்க. ஆசிரியர் இலக்கினபாவகத்தில் இது விஷய மாக இன்னின்ன கிரகங்கட்கு இன்னின்ன இடங்களில் மறுவு இருக்கும் என்று கூறி இருத்தலின் இப்படிக் கொள்வதே சாலச்சிறப்புடையதெனக.

பராசரஹோரையில் உத்தரகாண்டம் 8-வது அத்தியாயத்தில் துவா தசபாவக நிகண்டைக் கூறவந்த முனிபுங்கவர் வசனத்தினால் "ஆத்மா சரீரம் ஹோராச கல்யம் லக்கம்ச மூர்தயஃ" என்று இலக்கினத்தை மூர்தயம் என்ற பெயர் இருப்பதாக அறியப்படுகிறது.

ஜாதகாபரணத்தில் "லக்னஸ்ய நந்தாம்ஸ பதேர்ஹி மூர்த்யா" என்ற சுலோக வசனத்தில் இலக்கின நவாம்சாதிபதிக்குச் சமானமாக மக்களின் சரீர ஆகிருதி (வடிவம்) இருக்குமென்று கூறப்பட்டிருத்தலின் மூர்த்தி என்பதற்குச் சரீர வடிவமென்று பொருள் கிடைக்கின்றது. இஙஙனம் பொருள் கொள்ளுமிடத்து இச்செய்யுள் 2-ஆம் அடியில் சொரூபம் என்று கூறப்பட்டிருத்தலின், அதற்கு என்னபொருள் கொள்வதெனின்? முன்னை யதற்கு சரீரம் பருத்தல், இளைத்தல் முதலியவை என்றும், பின்னையதற்கு சரீரம் நீளல், குறுகல், மச்சம் முதலியவை என்றும் கொள்ளல்வேண்டும். சிலர் "மெய்நிறம்" என்பதை மெய்-நிறம் எனப்பிரித்து தேகமும், தேக காந்தியும் என்பர். அது தவறு. "மெய்நிறம்" என்பதற்கு சரீரகாந்தி (சரீர நிறம்) என்றே பொருள் கொள்ளல்வேண்டும்.

"ரூபம் சேர்ஷஞ்ச வர்த்தமாந ஜந்ம" என்ற மந்திரேஸ்வரமுனிவர் பலதீபிகை வசனத்தால் தற்கால பிறவியை இலக்கினத்தினால் அறிய வேண்டுமெனக. 5-ஆம் இடத்தினால் மறுஜன்மத்தையும், 9-ஆம் இடத் தினால் முன் ஜன்மத்தையும் அறியும்படி இம்முனிவர் பெருந்தகையோர் மொழிந்திருக்கின்றனர்.

துவாதசபாவக சமிக்ஞைகளைக் கூறவந்த வடநூலாசிரியர்கள் தனு-தன-சகோதர-மாதுரு-சந்ததி-சத்துரு - களத்திர-ஆயுசு-பிதிர்-சீவன-லாப-விரயம் என்று கூறப்பட்டிருத்தலின் பன்னிரண்டு பாவகஙகளிலுள்ள பல உபபாவகங்களிலும் இவைகளே சிறப்பு பாவகங்களாதலின்முதலாவதுபாவ

கத்திற்குத் தனுபாவகமென்னும் மகுடஞ் சூட்டப்பெற்றதென்க. உப பாவகங்களைப்பற்றி ஆசிரியர் ஒருவர்க்கொருவர் மதபேதப்படுகின்றனர்.

எங்ஙனமெனின்? கூறுதும்:—

சரீரவர்ண சிந்ஹாயுர் வயோமாநம் சுகாசுகம்
ஜாதிச் சீலஞ்ச மதிமான் லக்நாத் சர்வம் விசிந்தயேத்
(ராஜிக நீலகண்டீயம்)

ரூபலட்சண வர்ணாநாம் க்லேசதோஷ சுகாயுஷாம்
வயஃ ப்ரமாண ஜாதீநாம் தநுஸ்தாநாந் நிரீக்ஷயேத் (பைரவ தீபிகை)

ஆத்யே க்ருஹேது தநுஜீவந ஜீவகார்யாரம்ப
ப்ரயத்ந சுகதுக்க ஜலஸ்தல ஆயுஃ (யவனதாஜிகம்)

எனவரும் இத்தியாதி வசனங்களினால் முதலாவது பாவகத்தைக்கொண்டு ஜாதி-ஆசாரம்-இரட்சகத்வம் - ஜீவனம் - கார்யாரம்ப பிரயத்தன முதலியவைகள் அறியவேண்டுமென்பது நன்கு விளங்கும். "பலதுர்பலாநி பலாநி லக்நஸ்ய வதந்தி ஸந்தஃ" என்ற ஜாதக பாரிஜாத வசனத்தினால் சரீர பலபுஷ்டி, துர்ப்பலத்தையும், கேசவதைவக்ஞர் தமது லகுதாசகத்தில் நித்திரை-கனவு-தலைமயிர் அங்க அடையாளம் முதலியவைகளையும் இலக்கினபாவகத்தைக்கொண்டு அறியவேண்டுமென ஏற்படுகின்றது.

ஆகவே முதலாவது பாவகத்தினால்:—

| | | | |
|---|---|---|---|
| 1-சரீரம் (அ) | 7-ஆபரணம் | 13-மகிழ்ச்சி | 19-சரீர புஷ்டி |
| 2-சரீரகாந்தி | 8-கிளைப்பு | 14-ஆயுசு | 20-நித்திரை |
| 3-வடிவம் | 9-மனக்கவலை | 15-ஜாதி (ஆ) | 21-கனவு |
| 4-பெருந்தனம் | 10-அழகு | 16-ஆசாரம் | 22-தலைமயிர் |
| 5-வயிறு | 11-புகழ் | 17-இரட்சித்தல் | 23-அங்க அடையாளம் |
| 6-சிரசு | 12-அடையாளம் | 18-ஜீவனம | 24-புலன் |

இவைகளைச் சொல்லவேண்டியதென்க.

லக்நாச் சரீர வர்ணாதி லக்ஷ்ம கேசா க்ருதிம் வதேத்
வயோநுமாநம் ஸௌக்யஞ்ச பலாஹங்கார ஸம்ப்ரமாந்
ஆக்ஞாநம் அபிநித்ராஞ்ச ப்ரக்ருதிம் ஜந்மதோவதேத். (கிரந்தாந்தரம்)

(அ) முதல் 14-இந்நூல்கொள்கை. (ஆ) முதல் 6-பிறநூல்கொள்கை. மேல்வருவனவும் இங்ஙனமேயாம்.

தோற்றம் முன்பவத்தில் செய்த தீங்குநன்கு என்னும் இரண்டும்
ஆற்றல்சால் கருமம் என்பர் அக்கரு மத்தை நோக்கிச்
சாற்றும்இப் பிறப்பில் யார்க்கும் தரித்திரம் செல்வம் நல்கிப்
போற்றுவன் உயிரை எல்லாம் பொலிசுடர்த் திகிரிவள்ளல்.

உபாங்கம்:—உபஅங்கங்கள் முப்பத்திரண்டு, அவை தலைமயிர்-நெற்றி-புருவம்-கண் - காது-மூக்கு - வாய்-பல்-முகம்-கழுத்து - தோள் - முன்கை-அகங்கை - விரல்-கைவிரல் - நகம் - கொங்கை - கொங்கைக்கண - வயிறு-வயிற்று ரோமம்-வயிற்று மடிப்பு-இடை-நாபி - குறி-தொடை - முழங்கால்-கணைக்கால் - புறங்கால் - காற்புரடு - குதிகால் - கால்விரல் - அதன் நகம்-உள்ளங்கால் என்பனவாம்.

இலக்கணம்:—உத்தம புருஷலக்ஷணம் அதாவது ஒரு உத்தம புருஷனுக்குள்ள உறுப்புக்களுள் உன்னதமான அவயவங்கள் ஆறு, நீண்ட உறுப்புக்கள் ஐந்து, குறுகிய உறுப்புக்கள் நான்கு, அகன்ற உறுப்புக்கள் இரண்டு சிவந்த உறுப்புக்கள் ஏழு, ஆழ்ந்த உறுப்புக்கள் மூன்று ஆக முப்பத்திரண்டாம். அவற்றின் இலக்கணச்சுருக்கமாவன:—

(1) வயிறு - தோள் - நெற்றி - நாசி - மார்பு - கையடி இவை ஆறும் உயர்ந்திருக்கப்பெறின் அவன் இந்திரபோகத்துடன் இருப்பான் (2) கண்-கபோலம் - செங்கை - மூக்கு - முலை - நடுமார்பு இவை ஐந்தும் நீண்டிருக்கப்பெறின் அவன் நன்மையடைவான். (3) சிகை - சருமம் - விரற்கணு நகம்-பற்கள் இவை ஐந்தும் சிறிதாயிருக்கப்பெறின் அவன் தீர்க்காயுளுடனிருப்பான். (4) கோசம்-கணைக்கால்-நாக்கு-முதுகு இவை நான்கும் குறுகியிருக்கப்பெறின் அவன் செல்வமுள்ளவனுவன். (5) சிரம்-நெற்றி-இவை யிரண்டும் அகன்று இருக்கப்பெறின் அவன் மிக்க நன்மையுடையவனுவன். (6) கண்கள்-உள்ளங்கால்-உள்ளங்கை-இதழ்க்கடை-அண்ணம்-நாக்கு-நகம் இவை ஏழும் சிவந்திருக்கப்பெறின் அவன் மிக்க இன்பமுடையவனுவன். இகல் - ஓசை - நாபி இம்மூன்றும் ஆழ்ந்து இருக்கப்பெறின் அவன் மேலான நன்மையடைவன் என்பதாம். ஆகவே உபாங்கங்களையும் அவற்றின் இலட்சணங்களையும் இலக்கினத்தைக்கொண்டு அறிதல் வேண்டும் என்க. இவை சாமுத்திரிகாலக்ஷண சாஸ்திரத்திலறியலாம். (1)

## தனபாவகம் (இரண்டாமிடம்)

உரைத்திடுஞ் * சவுபாக்கியந் தனங் குடும்ப
மொளிசெறி நேத்திரம் வித்தை
தரைப்பெறுஞ் செல்வ முடன்புகல் வாக்கு
சாஸ்திரக் கேள்விகள் உணவு
விரைத்தெழு கமனம் மனமுமுத் தேசம்
மேம்பட விரும்புசெம் பொன்னும்
நிரைத்திடு நவரத் தினமிரண் டிடத்தில்
நிலைமைகண் டுரைசெய்வர் நின்றே.

(இ-ள்) சொல்லப்பட்ட சுபம் நிறைந்த அதிர்ஷ்டமும், தனவிருத்தியும், இல்வாழ்க்கையும், (வலது) நேத்திரமும், பூமியினுல் கிடைக்கப்பெறும் செல்வமாகிய தானியங்களும், சொல்லும் வசனமும், சகல சாஸ்திரகேள்விகளும்,போசனமும், வேகமாக்செல்லுதலும், மனமும், மறுத்துப்பேசுதலும் சுத்தமான பொன்னும், ஒன்பதுவகை இரத்தினங்களும் ஆகிய இவைகளை, இரண்டாவது பாவகத்தினுடைய இருப்பை நிச்சயித்து அறிந்து அறிவுடையோர் சொல்வார்கள் எ-று.

(வி-ரை) இரத்தினங்கள்: கோமேதகம் - நீலம் - பவளம் - புட்பராகம்-மரகதம்-மாணிக்கம்-முத்து-வைடூரியம்-வைரம்-என ஒன்பது வகைப்படும். வலாசுரன் கொல்லப்பட்டபோது அவன் எலும்பானது சிதறிப் பல மலைகளிலும் வீழ்ந்துகிடந்து வயிரமணிகளாயின. இதனைத் ததீசி எலும்பென்

* சவுபாக்கியம்=ஐஸ்வரியம்.

பாருமுளர். அவ்வைரம் ஒளி வேறுபாட்டான் நான்கு வகைப்படும். சில நூற்களில் வைரம் ஒருவகைக் கல்லென்று கூறப்பட்டுளது. இந்த வைரம் மமங்கமலை, இமயமலை, வேணாநதி முதலியவிடங்களில் கிடைப்பதென்பது ஆரியநூற்றுணிபு. வைரத்தைச் சரீரத்தில் அணிவதனால் கருப்பதோஷத்தினால் புத்திரோற்பத்தியில்லாத பெண்களுக்குப் புத்திரப்பேறும், யாவருக்கும் இடி, விஷ முதலியவற்றுக்கு அச்சம் இன்மையுமுண்டாம்.

வலாசுரன் வயிற்றின் புறத்தைக்கொத்தி விழுங்கிய கருடன் அதனைக் கனைத்து உமிழ, அது வீழ்ந்து பல மலைகளிலும் ஊறிப்பிறந்தகற்கள் மரகதமெனப்படும். வலாசுரன் இரத்தம் மாணிக்கமாகவும், பற்கள் முத்துக்களாகவும், மயிர் வைடூரியமாகவும், எலும்பு வைரமாகவும், பித்தம் மரகதமாகவும், நிணம் கோமேதகமாவும், தசை பவளமாகவும், கண்கள் நீலமாகவும், கபம் புஷ்பராகமாகவும் ஆயின தென்பதாம். முத்தினால் மேக உஷ்ணமும், பவளத்தினால் சருமரோகமும் தீரும். இதன் விரிவை (இரத்தினப்பரிட்சை) என்ற நூலில் பரக்கக்காணலாம். இத்தகைய சிறப்புவாய்ந்த நவமணிகளில் ஏதேனும் ஒன்றை அவசியம் மக்கள் அணிதல்வேண்டும். இதனால் இம்மையில் தேகசுகமும், மறுமையில் மோட்சமும் உண்டாகும்.

லக்னாதியோ போஜ்யகாதா சுகோசோ போஜ்யமீரிதம்
புபுக்ஷாமதப: கர்ம பதிர்போக்தோதி சிந்தயேத்

என்ற நீலகண்ட தாஜிகத்தில் இலக்கினம் போஜனத்திற்குரிய அன்னபானாதிகளைத் தரக்கூடிய இடமென்றும், நான்காமிடம் போஜனத்திற்குரிய அன்னபானாதிகள் இன்னின்னதெனக் கூறுதற்குரிய இடமென்றும், ஏழாமிடம் அன்னபானாதிகளின் உருசியைக் கூறுதற்குரிய இடமென்றும், பத்தாமிடம் அன்னபானாதிகள் நிரம்ப உண்பதும் குறைவாய் உண்பதும் கூறும் இடம் என்றும் கூறப்பட்டிருக்கின்றது. ஆனால் இது ஆருட விஷயத்தைப்பற்றியதேயன்றி, இலக்கினாதி பன்னிரு பாவபலனை அறியும் விஷயத்தைப்பற்றி அல்லவென்பது நிச்சயம்.

கேள்வி:—கேட்கப்படும் நூற்பொருள்களைக் கற்றறிந்தவர் கூறக்கேட்டல். சகல நூற்களையுங் கற்று தேர்ந்த சமர்த்தரும் கேள்வியை விரும்பாமல் இரார். எல்லாப் பொருள்களையும் உணர்ந்த அவர்க்கும் கேள்வி வேண்டுமோ? எனின், தாங்கற்ற கல்வியாலாய அறிவை மென்மேலும் வலியுறுத்தித் தெளிவுண்டாக்குதலின் அவர்க்கும் கேள்வி வேண்டியதே. இனிக் கல்லாதவர்க்கும், நல்லறிவை உண்டாக்கிக் கல்வியின் அருமை பெருமைகளை விளக்கி நாம் இதுகாறும் இவையெல்லாம் கேளாமல் வீணாக இருந்துவிட்டோமே! இனியேனும் அவற்றை அறிவோமென்று எண்ணுவித்துக் கல்வியில் புகுத்தலின் கேள்வி அவசியம் கேட்கப்பாலதாம். இது பற்றியே "கற்றிலனாயினுங் கேட்க" "முற்றப் பகலும் முடியாது இனிது ஓதிக்-கற்றலில் கேட்டலே நன்று" என்றார் ஆன்றோர் என்க.

அனத்து உணவுக்கு இலங்கும் அம்புலிக்கு உடையபெலமும்
அபெலமும் முன்போல இதற்கறிய உரைத்திடுவார்
இனித்தல்முதல் ருசித்தல் பொசித்தற்கு இவர்கட்கு உரைத்த
இயற்குஉளது அப் பொதியவரை இடத்த குடத்தவனே.

(குமாரசுவாமீயம் 2-வது பாவகம்.)

*கும்பாத் வக்தவ்யம் மூகஞ்ச வரக் தக்ஷிணாக்ஷி பூர்வார்தான்*
*ஹ்ருத்யான் புக்தி விசேஷான் வித்யா மந்த்ர ப்ரபேதஞ்ச.*
(சர்வார்த்த சிந்தாமணி)

*புக்திஸ்தரகே சுபயுதே தத்சே சுபஸம்யுதே*
*சுபக்ரஹேண ஸம்த்ருஷ்டே ஸுகபுக் ஸகரோபவேத்*
*புக்திஸ்தாநா திபேமந்தே தத்சேவார்கி ஸம்யுதே*
*நீசேர்க ஸுஹ்ருநாத்ருஷ்டே ச்ராத்தபுக் ஸததம்நரஃ*
(ஜாதக பாரிஜாதம் 2-ஆம் பாவகம்.)

எனவரும் பிரமாண வசனங்களால் 2 - ஆமிடம் போஜன ஸ்தானம் என்று பெறப்படும். ஆனால் ஜாதகசிந்தாமணி நூலுடையார் நான்காம் பாவகத்தில் "சுவைத்துணல் குழம்பு" எனக் கூறியிருத்தலின் போஜன ஸ்தானம் நான்காமிடமென்று ஏற்படுகின்றது. கிரந்தாந்தர வசனத்தில் "ஜிஹ்வா நேத்ரஞ்ச" என்று கூறப்பட்டிருத்தலின் நாக்குக்குரிய ஸ்தானம் 2-ஆமிட மாதல்பற்றியும் மேலே காட்டிய மூன்று நூலாசிரியர்களும் இங்ஙனமே கூறியிருத்தலினாலும், மற்றும் இந்நூலாசிரியரே இரண்டாம் பாவகத்தில் 518-வது செய்யுளில் கிரகங்களுக்குரிய சுவைகளைக் கூறியிருத்தலினாலும் இரண்டாமிடமே போஜன ஸ்தானமென்பது சித்தாந்தம். இந்நூல் 10-ஆம் பாவகத்தில் "கருப்பம் ஊண்" எனக் கூறியிருத்தலின் 10-ஆமிடம் போஜன ஸ்தானமெனக் கொள்ளலாகாதோ எனின்? ஆகாது. யாதுபற்றி எனின்? அது "கற்பவூண்" அதாவது: ஓர் மருந்து. அஃது காயகற்பம் புசித்தல் என்பதாம்.

*அரிபவநா தரிசோரக்ஷித விக்ரக்லேச*
*நாப்யுதர தேசான் மதுராதி ஷடுபதம்சான்*
*க்ரஹராச் யுதிதாங்வதேத் ப்ராக்ஞஃ*

எனவரும் சர்வார்த்த சிந்தாமணி வசனத்தினால் ஆறுமிடம் மிருமதுர முதலிய அறுவகைச் சுவைக்கும், போஜனத்தின் மத்தியில் உண்ணப்படும் ஊறுகாய் முதலியவற்றிற்கும் உரிய ஸ்தானமென்று அறியப்படுகின்றன. "ஷட் + உபதம்சான்" அறுவகைச் சுவை, ஊறுகாய் என்பது பொருள். அறுவகைச்சுவை: கைப்பு-தித்திப்பு - புளிப்பு - உவர்ப்பு - துவர்ப்பு-கார்ப்பு என்பனவாம். உண்டி-உண்ணல் - தின்றல் - நக்கல்-பருகல் என நான்கு வகைப்படும். அவையாவன:—சோறு முதலியன உண்டலும், கறி முதலியன தின்றலும், தேன் முதலியன நக்கலும், நீர் முதலியன பருகலுமாம்.

மற்றும்:—

*திறமாக இவ்வண்ணம் மூன்றில்இருந் தாலும்*
*தெரிந்துசொல்வர் அற்பசுக போசனம்என்றே தான்*
*உறவாகும் இலக்கினத்தில் பாவியே இருக்க*
*உற்றஇரண் டாந்தனத்து இறையும் பவவர்க்கம் ஆயின்*
*முறவாக மேகண்ட வயிறும்அளவு இன்றி*
*முழுப்பூசை கொள்ளுமகா முனிஎன்னல் ஆகும்*
*மறம்உடைய வாக்குஈசன் பாபியாய் சுபவீ*
*க்ஷணம்இன்றி எஇருக்கில் அரியபெரும் பொசிப்பன்.*

என்ற செய்யுள் சாதக சிந்தாமணி 2-வது பாவகத்தில் காணப்படுதலினாலும், இக்கவிக்கு முன்பின் கவிகளிலும் போசனத்தின் பலனைக் கூறி

யிருத்தலினாலும் சாதக சிந்தாமணி வசனத்தினாலும் இரண்டாமிடமே போஜன ஸ்தானமென்று ஐயமற விளங்குகின்றது. பாவகப் பெயரில் "சுவைத்துண்ணல் குழம்பு" என்று நான்காமிடம் போஜனஸ்தானமென்று கூறிப் பின்பு நான்காம் பாவகபலன் கூறியவிடத்தில் அது சம்பந்தமான பிரஸ்தாபங்கள் ஒன்றுமே கூருமல் விடுத்து, இரண்டாம் வீட்டில் கூறி யிருத்தலின் முன்னுக்குப்பின் முரணுகக் காணப்படுதலினாலும் பாவகப் பெயரை கூறிய 243-வது கவியைத் திருத்தி யமைத்தல் வேண்டும்.

சௌபாக்கியம் எனின் ஐசுவரியம் என்று பொருள்படும். ஐசுவரியம் எண்வகைப்படும். அவை: இராஜாங்கம்-மக்கள்-சுற்றம்-பொன்-மணி-நெல் வாகனம்-அடிமை என்பனவாம்.

மனத்திற்குரிய ஸ்தானம் ஐந்தாமிடமென்பது பலர் சம்மதம். இந் நூலாசிரியர் இரண்டாமிடமெனக் கூறிய காரணம் அறியக்கூடவில்லை. "விரைத்தெழுகமனமனம்" எனக்கொண்டு மனோவேக ஸ்தானமென்றும், பொருள் கூறலாம்.

மாணிக்ய முக்தர பலமுக்த தாது
வஜ்ராம்பரம் ஸ்வர்ண ஹயாதி ஸர்வம்
தாம்ராதி தாந்யம் க்ரவிக்ரயாதி
ஸாதாரணம் தத் கதிகம் த்விதியே. (பைரவதீபிகை)

முக்தாபலஞ்ச மாணிக்யம் ரத்நதாது தநாம்பரம்
ஹயகார்யாத் வவிக்ஞாநம் வித்தஸ்தாநாத் விலோகயேத்.
(நீலகண்டதாஜிகம்)

வித்தம் நேத்ரம் முகம் வித்யா வாக்குடும்பா சநாநிச
த்விதீய ஸ்தாந ஜந்யாநி க்ரமாஜ்யோதிர் விதோவிபுஃ
(ஜாதக பாரிஜாதம்)

த்விதீயாதே வாக்வித்தம் குடும்பஸ்வத்வ சஞ்சயாந்
ஜிஹ்வா நேத்ரஞ்ச ரஜிதம் ஸ்வர்ண ரத்நாதி காநபி
நகாந் புக்திம் மநஸ்தைர்யம் ஸத்யமப் யந்ருதம் ததா
க்ரோதம் கார்பட்யம் இத்யாதி தநபா வேத சிந்தயேத். (கிரந்தாந்தரம்)

எனவரும் இத்தியாதி வசன பிரமாணங்களால் இரண்டாம் பாவகத்தைக் கொண்டு உலோகம்; அதாவது: பொன்-வெள்ளி-செம்பு-இரும்பு-ஈயம்-வெண்கலம்-தரா முதலியன. தானியம் - கிரயவிக்கிரயம்-தனசம்பாத்திய பிரயத்தனம் - சிநேகிதரால் தனசம்பாத்தியஞ் செய்தல் - அன்னியரால் ஜீவித்தல்-வஸ்திரம்-குதிரை-முகம் - நாக்கு-நகம் - போஜனம் - ஸ்திரபுத்தி-சத்தியம் - அசத்தியம் - கோபம் - கபடம் - ஆஸ்தி முதலியவைகளை அறிய வேண்டுமென்பது பெறப்படும். "தாம்ராதி தாந்யம்" என்ற பைரவதீபிகை வசனத்தைக்கொண்டு "தரைப்பெறுஞ் செல்வம்" என்பதற்குப் பூமியினால் பெறப்படும் செல்வமாகிய தானியம் எனப் பொருள் கூறப்பட்டதென்க.

இவ்வுண்மையை உற்றுணராத ஒருசிலர் "தரைப்பெருஞ் செல்வம்" என்பதற்கு புதையற்செல்வம் என்றும், வேறு சிலர் மிக்கநிதி என்றும் பொருள்கொண்டு இடர்ப்படுவர். இவை எட்டுணையும் பொருத்தமுடைய தல்லவென்பது முற்கூறிப்போந்த எடுத்துக்காட்டுவனினால் இனிதுபுலனும்

ஆகவே இரண்டாவது பாவகத்தினுல்:—1-அதிர்ஷ்டம், (அ) 2-தன விருத்தி, 3-குடும்பம், 4-வலக்கண், 5-கல்வி, 6-பெருஞ்செல்வம், 7-வாக்கு, 8-சாஸ்திரக்கேள்வி, 9-வேகமானநடை, 10-மனம், 11-மறுத்துரைத்தல், 12-பொன் (உலோகம்), 13-நவரத்தினம், 14-தானியம் (ஆ), 15-கிரய விக்கிரயம், 16-தனசம்பாத்ய முயற்சிகள், 17-சிநேகிதரால் வருமானம், 18-அன்னியரால் ஜீவனம், 19-வஸ்திரம், 20-குதிரை, 21-முகம்-நாக்கு, 22-நகம், 23-போஜனம், 24-சத்யாசத்யம், 25-கோபம், 26-கிரபுத்தி, 27-கபடம், 28-ஆஸ்தி. ஆகிய இவைகளை அறிதல் வேண்டும். (அ) முதல் 13-வரையில் இந்நூல் கொள்கை; (ஆ) முதல் 15-வரையில் பிறநூல் கொள்கை. மேல் வருவனவும் இங்ஙனமேயாம். (2)

## * சகோதர பாவகம் (மூன்ருமிடம்)

நின்றிடும் மூன்றும் இடத்தினில் நிற்கும்
நிருபரால் உரைசெயும் பலன்கள்
வென்றிகொள் போகம் அடிமையாள் காணம்
வீரியச் சத்துவம் துணைவர்
பொன்றிடா தணிய காதுநோய் கன்ன
பூடணம் புசித்திடும் கலன்கள்
துன்றுவிக் கிரமஞ் சேவகா விருத்தி
சூழ்தயி ரியங்களுஞ் சொல்வர்.

(இ-ள்) மூன்ரும் பாவகத்தில் இருக்கப்பட்ட கிரகங்களைக்கொண்டு சொல்லவேண்டிய பலன்களாவன. வெற்றியும், மனத்திற்கிசைந்த எண் வகை போகங்களும், ஆள் ஊழியக்காரர் முதலிய ஏவலாளர்களும், கியான வித்தையும், பலவன்மையும், (கனிஷ்ட) சகோதரர்களும், காது நோயும், காதில் அணியப்பட்ட நகைகளும், போஜன பாத்திரங்களும், பராக்கிரமமும், அபிவிருத்தியும், சேவகத்தொழிலின் தயிரியமும் ஆகிய இவைகளைச் சோதிட வல்லவர்கள் கூறுவார்கள் எ-று.

(வி-ரை) போகம் எட்டாகும்; அவை: பெண் - ஆடை-அணிகலன்-போஜனம்-தாம்பூலம்-பாட்டு-பூவமளி என்பனவாம். வெற்றி எண்வகைப் படும்; அவை: பகை நிரைகவர்தல்-பகைவர் கவர்ந்த தன்னிரை மீட்டல்-பகைமேற் செல்லல்-வரும்பகை முன்னெதிர் ஊன்றல்-தன்னரண்காத்தல். பகையரண் வளைதல்-பொருதல்-போர் வெல்லல் முதலியனவாம். இவற்றிற்கு மாலை முறையே வெட்சி - கரந்தை - வஞ்சி - காஞ்சி - நொச்சி - உழிஞை-தும்பை-வாகை என்பனவாம். இது அரசர்க்குரிய வெற்றியின் இயலாகும். ஏனையோர்க்கு எடுத்த காரியத்தை இனிது முடித்தலாகும். ஆருமிடம் வெற்றி ஸ்தானம் அல்லவோ? எனின் அதுவும் சத்துருக்களை வெற்றிபெறும் ஸ்தானமாமென்க. பலவன்மையாவது தேகபலம் என்க. பராக்கிரமமாவது வீரத்தன்மைக் காட்டுதல் என்க. தைரியம் என்பது எந்த விஷயத்தையும் பயமின்றி துணிவாக செய்து முடித்தல் என்க.

---

* சகோதரர்-ஒரு தாயின் வயிற்றில் பிறந்தவர்; ஸஹ + உதர + அர்; ஸஹ - கூட, உதரம் - வயிறு.

"வென்றிகொள்போகம்" என்பதை ஒரு தொடர்மொழியாகக் கொண்டு பெண்களிடத்தில் வெற்றிபெறும் போகசக்தி என்று சிலர் பொருள் கூறுவர். தமிழ்ச் சோதிட சிகாமணி நூலுடையார் இக்கருத்தை தழுவியே மூன்றும் வீட்டினுல் ஸ்திரீ போகவன்மையைக் கூறியிருக்கின்றுர். அது பொருந்தாதென்க. யாதுபற்றியெனின்? சாதக சிந்தாமணி-குமாரசுவாமீயம் வீமேசுவர முதலிய தமிழ்மொழிச் சோதிட நூற்களிலும், சர்வார்த்த சிந்தாமணி, சாராவளி, பாராசாரீயம், புவனதீபிகை முதலிய வடமொழிச் சோதிட நூற்களிலும் மூன்றும்பாவகத்தில் பெண்போகவன்மையைக் கூறப் பட்டிலாமையினுலென்க. சோதிட பிரஞானதீபிகை நூலுடையார் மூன்று மிடத்தில் ஜயத்தைக் கூறியிருத்தலின் "வெற்றி" என்பதைத் தனி மொழியாகக்கொண்டு ஜயம்பெறுதல் என்னும் பொருள் கொள்ளுதலே சிறப்பாகும்.

பகினீ ப்ராதரு ப்ருத்யாநாம் தாஸ கர்ம க்ருதாமபி
குர்வீத வீக்ஷணம் வித்வாந் ஸம்யத்துச் சிக்யவேச்மதః (புவனதீபிகை)

சூராநுஜ க்ஷேத்ர ஸவ்ருத்தி லாபஃ
ப்ருத்யாதி தாஸா படகர்ம பர்துஃ
மாத்ராதி சிந்தா விஷயம் ஸமக்ரம்
பாபர்ய மேதத் கதிதம் த்ருதியே. (பைரவ தீபிகை)

தார்த்தீய கேச்வ ஜநஸேவக பந்துமித்ர
ஸம்யோக ஸோதர பகிந்யுருசேஷ்டி தாநி. (யவனதாசகம்)

ஓதும்மூன்று உடையோன் பாவர் உடன்கூட மூன்றில் பாவர்
போதுற உதயந் தொட்டுப் புகல்ஆறு இராசிக்கு அப்பால்
ஓதுவாம் இராசி மூன்றுக்கு இறைவரில் ஒருவர் நீசம்
மீதுஉறின் வீரியம் தான் விழுந்துபோம் தரணிமீதே. (சாதகசிந்தாமணி)

எனவரும் வசனத்தினுல் மூன்றுமிடம் வீரியஸ்தானம் எனவே, வீரியம் என்பதற்கு இந்திரியம் என்று பொருள் கூறலும் பொருந்தும் என்று அறி யப்படுகின்றது.

அஷ்டமம் ஹ்யாயு ஷஸ்தாநம் அஷ்டமா தஷ்டமஞ் சதத்த
போரபி வ்யஸ் தாநம் மாரகஸ் தாந முச்யதே. (ஜாதகாநுபவதர்ப்பணம்)

என்ற வசனத்தின்படி எட்டாமிடமும், அதற்கு எட்டாமிடமான மூன்று மிடமும் ஆயுள் ஸ்தானமாகும். இவற்றிற்கு விய (விரய) ஸ்தானங்களாகிய 2, 7-ஆம் இடங்கள் மாரகஸ்தானம் என்னப்படும். இதனை பின்வரும் தாண்டவமாலை வசனத்திலும் நன்கறியலாம். அதாவது;

எட்டும் அதற்கு எட்டாம் இடந்தனையும் ஆயுவென்று
திட்டம் உடன் அறிந்து சீரிலா—நட்டத்தை
மாரகம்என்று வகுத்து அறிவாய் மாமயிலே
ஆர்கலிசூழ் அம்புவியு ளார்க்கு.

"ஏகாதசே ஜ்யேஷ்ட ப்ராதுஸ் த்ரிதீயே துகநிஷ்டகஃ" (பராசர ஓரை)

த்ருதீயாத் விக்ரம் தைர்யம் ஸோதரம் யத்தமேவச
கர்ணௌ பாதௌ ஸச்சைவ கேலநஞ்ச பலாட்யதா
குபோஜநம் ஸ்வபக்ஷயஞ்ச வ்ருதிர் தாயஸ்ய பாஜநம். (கிரந்தாந்தரம்)

சொன்னவிக் கிரமம் கேள்வி சுரம்குரல் துணைவர் மார்பு
கன்னபூ டணமும் காது கடித்துண்ணல் செவிடே யுத்தம்
உன்னிய பலம் குணத்தோ(டு) உரைத்திடல் மூன்றுந் தானம்
பன்னக மணியே காட்டும் பையர அல்கு லாளே. (ஜாதகசிந்தாமணி)

எனவரும் இத்தியாதி வசன பிரமாணங்களினாலும், மற்றும் 'விக்ரமே ப்ராத்ரு ப்ருத்தியாத்வா பித்ரய ஸ்கலஸ ஸாஹஸம்" என்ற நீலகண்டர் வசனத்தினாலும் மூன்றும் பாவகத்தைக்கொண்டு எஜமானன்-சகோதரி சகோதரன் - க்ஷேத்ரவிருத்தி-க்ஷேத்திரங்களினால் வரும்படி- நல்ல காரியங்கள்-சௌர்யம்-சாகசம் (வெற்றி) ஆளடிமைகளினால் நடைபெறுங் காரியங்கள்-பாபகாரியங்கள் - தாயினாலுண்டாம் விசனம் - பாதம்-கழுத்து - காது-கண்டஸ்வரசுருதி - தாயபாகம் - கஷ்டபோஜனம்-சக்தி-சாமர்த்தியம் - யுத்தம் ஆகிய இவைகளை அறியவேண்டும் என்பதாம்.

ஆகவே மூன்றாவது பாவகத்தினால்:—1-வெற்றி, (அ) 2-எண்வகை போகம், 3-ஆளடிமை, 4-சங்கீதம், 5-தேகபலம், 6-கனிஷ்ட சகோதரம், 7-காதுநோய், 8-கர்ணபூஷணம், 9-போஜன பாத்திரம், 10-பராக்கிரமம், 11-தொழில்விருத்தி, 12-தைரியம், 13-எஜமானன் (ஆ), 14-பூமிவிருத்தி, 15-பூமியில் லாபம், 16-நல்லகாரியம், 17-சௌரியம், 18-வெற்றி, 19-பாதம், 20-கழுத்து, 21-கண்டசுருதி, 22-தாயபாகம், 23-கஷ்டபோசனம், 24-சாமர்த்தியம், 25-யுத்தம், 26-தாய்விசனம் இவைகளைக் கூறுதல்வேண்டும். (அ) முதல் 12-ம் இந்நூல்கொள்கை. (ஆ) முதல் 14-ம் பிறநூல் கொள்கை. "அஷ்டமம் ஆயுஷஃ ஸ்தாநம் அஷ்டாதஷ்டமஞ்சயத் தபோரபி வயயஸ்தாநம் மாரகஸ்தாநம் உச்யதே" என்ற ஜாதக சந்திரிகையின்படி 8-க்கு 8-ஆம் இடமான 3-ஆம் இடம் ஆயுள் ஸ்தானம் என்று ஏற்படுதலின் இந்த மூன்றாமிடத்தினால் ஆயுளைப்பற்றிய விசாரம் செய்யவேண்டியது மிக ஆவசியகமாகும். வென்றி - தொழிற்பெயர். வெல்-பகுதி, றி-விகுதி லகரம் னகரமானது சந்திவிகாரம்.

"வென்றிகொள் போகம்" என்பதற்கு வெற்றியைச் செல்வமாகப் பெற்று வாழ்தல் என்றும் பொருள்கூறலாம். இது விசயம் எனப்படும். விசயம்-வடமொழி. விசேஷமான வெற்றியை அடைதல் என்பது பொருள். வி-விசேஷம் என்க. வெற்றி-தொழிற்பெயர். வெல்-பகுதி, றி-விகுதி; இது வென்றி என மெலிந்து வந்ததாகும். பகைவரை அழித்து வெற்றி பெறுதல் என்ப. மிக்கத் துன்பம் அனுபவிக்கும்படி நேர்ந்தகாலத்தும் தமது பல பராக்கிரமங்களை மேலாகக்கொண்டு அவற்றைக் காட்டித் தமது நியமத்தை விட்டுவிடாமல் ஒழுகுவது விக்கிரமம் எனப்படும். ஆதலால் "துன்று விக்கிரமம்" எனக் கூறினார் என்க. விக்கிரமமாகிய பராக்கிரமம் வேறு, வீரிய சத்துவமாகிய பலம் வேறு என்றறிக. இதனை;

சரிகம பதநியென் றேழெழுத்தால் தானம்
வரிபரந்த கண்ணினாய் வைத்துத்—தெரிவரிய
ஏழிசையுந் தோன்றும் இவற்றுள்ளே பண்பிறக்கும்
சூழ்முதலாஞ் சுத்தத் துளை. (இசைநுணுக்கம்)

அச்சகட் டினிலொ ரெட்டிணைச் சுவடும்
அற்றபின் சிறிதும் அச்சமற்று

உச்சமுற்ற வெயில் அரக்கன்ஒத் திவனோடு
　　உத்தரித் துரைசெய் தொட்டினன்
மெச்சும் மெச்சும்உல கத்தரக் கர்களில்
　　விக்கிரமத் திறலின் மிக்கநீ
கச்ச கச்சபல கத்தைவிட் டுனது
　　கடார றத்தினொடு கட்டுவாய்.

எனவரும் பாரதம் ஆதிபர்வம் வேத்திரகீயச் சருக்கம் 57-ம் பாசுரத்தில் விக்கிரமத்திறல் என்பதற்கு பராக்கிரமத்தோடு கூடிய வலிமை எனக் கூறப்பட்டிருத்தலால் அறியலாம். (3)

## மாதுரு பாவகம் (நான்காமிடம்)

சொல்லிய வித்தை வாகனம் சுபங்கள்
　　சூழ்வியா பாரமும் மனையும்
வெல்லுமேம் பாடும் சவுக்கியம் அன்னை
　　விரும்புநல் உறவினர் ஆகும்
நல்லநிட் சேபம் பரவிஷ யங்கள்
　　நறைகமழ் பால்பசு கன்று
வல்லதோர் தேவ தானம்இப் பலனை
　　வழுத்துநான்(கு) ஆம்இடங் கொண்டே.

(இ-ள்) புகழுடைய கல்வியும், ஏறி நடத்தப்படுபவை (பண்டி - பல்லக்கு-குதிரை)களும், நன்மையான (மங்களகரமான) காரியங்களும், செய்யப்பட்ட வியாபாரமும், வீடும், வெற்றியால் உண்டாகும் புகழ்ச்சியும், சுகமும், தாயும், நன்மையை விரும்புகின்ற பந்துக்களும், புதையலும், தாயின் கற்புக்குறைவும் வாசனைத் திரவியங்களும், பால் - பசு-கன்று முதலியனவும், ஆலய வழிபாடும், ஆகிய இவைகளை நான்காம் பாவகத்தைக் கொண்டு சோதிட விற்பன்னர்கள் கூறுவார்கள் எ-று.

(வி-ரை) இலக்கினத்தினால் நல்லொழுக்கத்தால் வரும் புகழ்ச்சியையும், நான்காமிடத்தினால் வெற்றியால் உண்டாகும் புகழ்ச்சியையும் கூறுதல் வேண்டும். "தேவதானம்" என்பதற்குச் சிலர் பதிபுண்ணியதருமம் என்பர் அது பொருந்தாது. யாதுபற்றி எனின்? ஒன்பதாமிடம் தருமத்திற்குரிய ஸ்தானமாகலினென்க. ஆலயம் அல்லது ஆலயவழிபாடு என்று பொருள் கொள்ளுதலே முறையாகும். இங்ஙனமே "பரவிஷயம்" என்பதற்குத் தெய்வ விஷயமென்று மயங்கி பொருள்கொண்டு இடர்ப்படுவர் சிலர். பரவிஷயம் எனின் பாஜாதகம்; அதாவது தாய் கணவனுக்கன்றிவிபசாரத்தினால் அன்னிய புருடனுக்குப் பெற்றபிள்ளை என்பதாகும். இதனை சர்வார்த்த சிந்தாமணியில் 4-ஆம் பாவகத்தில் "லக்நேச பாக்யேச சுகேச யுக்தே, ஷஷ்டாதி பேஸ்யாத் பாஜாத ஏவ" எனக் கூறியிருத்தலினாலும், இந்நூலில் 578-ஆம் செய்யுள் 7-வது அடியில் "தேரில் இது பாவிஷயம் என்று சொல்வர்" எனவும், 579-ஆம் செய்யுளில் 3-வது அடியில் "பாரில் அறியச் சனித்தவனும் பரவுங் குலபுத்திரன் அல்லன்" எனவும் வருதலினால் திண்ணமாக அறியலாம். "நறைகமழ்" என்பதற்கு வாசனைத் திரவியங்கள் என்பது பொருள். சிலர் இதனை "நறைகமழ்பால்" என ஒரு தொடர் மொழியாகக்கொண்டு வாசனை வீசுகின்ற பால் என்று பொருள் கூறுவர்.

அது பொருந்தாது. இதனை ஜாதக பாரிஜாதத்தில், "வதந்தி வித்யா ஜநநீ ஸுகாநி ஸுகந்த கோ பந்து மநோகுணநீ" எனவரும் நான்காம் பாவக விசார சுலோகத்தில் சுகந்தம்-பசு எனக் கூறப்பட்டிருத்தலினால் "நறைகமழ்" என்பதற்கு வாசனைத் திரவியமென்று பொருள் கொள்ளுதல் சிறப்புடைத்தாகும்.

வித்தை-கல்வி; இது வித் என்ற தாதுவின் அடியாகப் பிறந்த வடமொழி, அறிதல் என்பது இதன் சிறந்தபொருள், வித்தை என்றால் கல்வி அல்லது அறிவு எனப்படும், அஞ்ஞானமென்கிற அவித்தையில் பிரதிபலித்து வருந்தும் மானிடர்க்கு அவித்தையை நீக்கி ஞானத்தைப் புகட்டி மோட்ச இன்பத்தைத் தரக்கூடியது கல்வியே யாதலால் கல்வி யானது வித்தை எனப்படும். மிருகாதிகளுக்கும் நமக்குமுள்ள வித்தியாசம் யாதெனில் மிருகாதிகள் புத்தியில்லாமல் மனவலியால் மனத்திற்கு எதிர்ப் பட்டவைகட்கு விஷயமாகி துன்பமடைகின்றன, நாமோ நல்லது கெட்டது என்னும் பகுத்தறிவை யுடையவர்கள் ஆதலால் புத்தியின் வலிமையால் கெடுதியை நீக்கி நன்மையைக் கைக்கொண்டு இன்பத்தை அநுபவிக்க வேண்டியவர்களா யிருக்கின்றோம். இவ்வித பகுத்தறிவாகிய புத்தி வலி வானது கல்வி வாயிலாகத்தான் உண்டாகவேண்டும்.

இதுபற்றியே நமது திருவள்ளுவ நாயனாரும்,

விலங்கொடு மக்கள் அனையர் இலங்குநூல்
கற்றாரோடு ஏனை அவர்.

என்று கல்லாதவர்களை மிருகத்திற்குச் சமானமாகக் கூறியிருக்கின்றார் என்க. ஆகவே கல்வியால் புத்தி விசாலப்படுகிறது. புத்தி விசேடப் படுவதால் பாபங்களாகிய காமக் குரோத முதலிய விலக்குகளைத் தள்ளி சத்தியம், பொறுமை, காருண்யம் முதலிய தருமங்களைத் தழுவி நடக்க வேண்டியவர்களாக இருக்கின்றோம். தருமவழியில் நடப்பதால் தருமவாயி லாக புண்ணியம் அதிகரித்து புத்தி விசேடப்பட்டு பொருளை சம்பாதித்து இன்பத்தை அநுபவிக்க ஏதுவுண்டாகின்றமையால் புகழுடைய கல்வி என்பதை "சொல்லிய வித்தை" என்றார் ஆசிரியர் என்க. கல்வியால் புத்தி விசாலப்படுவதைக்கொண்டு நான்காமிடம் கல்விஸ்தானம் என்றும், ஐந்தாமிடம் புத்திஸ்தானமென்றும் வகுத்தனர் பெரியோர் என்றறிக.

இரண்டாமிடத்தினால் வித்தை-சாஸ்திரக் கேள்விகளையும், நான்கா மிடத்தினால் வித்தையையும் அறியும்படி இந்நூல் ஆசிரியர் கூறியிருக் கின்றா. இங்ஙனமே சாதக சிந்தாமணியில் 2-ஆமிடத்தில் "வாக்குநேத் திரங் குடும்பம் வருந்தனம் வித்தை பாத்ரம்" எனவும், 4-ஆமிடத்தில் 2-ஆம் இடத்தினால் வித்தை-சாஸ்திரக் கேள்வியையும், நான்காமிடத்தினால் வித்தையையும் அறியும்படி இந்நூலாசிரியர் கூறியிருக்கின்றார்.

இங்ஙனமே ஜாதக சிந்தாமணியில் இரண்டாமிடத்தினால்,

வாக்குநேத் திரங்கு டும்பம் வருந்தனம் வித்தை பாத்ரம்
நோக்குமுத் தாப ரணங்கள் நுவல்உப காரம் தாரம்
மாக்கமாம் சத்த சாத்ரம் மந்திரத் தொடுசெற் பாத்ரம்
தூக்கிய குருடோ(டு)அல்லால் சுபர்சாதி இரண்டாந்தானம். எனவும்,

நான்காமிடத்தினுல்,

மாதுரு கிரகச் சேத்ரம் வாகனம் பந்து மித்ரம்
ஓதுதா னியம்நாற் காலி உறுசுகம் கடோ வித்தைத்
தீதில்பா தாளம் மூக்குச் செலம்சுவைத் துணல்கு ழம்பு
மாதடா காதி பால்நெய் வணங்குடை இதங்க ளென்பர்.

எனவும் வருவனவற்ருல் அறிக.

மற்றும் ஜாதக பாரிஜாதத்தில் இரண்டாமிடத்தினுல்:—

வித்தம் நேத்ரம் முகம் வித்யா வாக் குடும்பா சநாசிச
த்விதீய ஸ்தாந ஜந்யாநி க்ரமாஜ் யோதிர் விதேவிபு: எனவும்;

நான்காமிடத்தினுல்:—

வதத்தி வித்யா ஜநநீ ஸுகாநி சுகந்த கோ பந்து மநோகுணாநி
மஹீப யாந க்ஷிதி மந்திராணி சதுர்த்த பாவ ப்ரபவாணி தஜ்ஞா:

எனவும் வருவனவற்ருல் அறிக. ஆகவே இரண்டாமிடத்தினுலும் நான்காமிடத்தினுலும் வித்தை சம்பந்தமான விருத்தி-க்ஷீணங்களை அறியும்படி கூறினுர் இந்நூலாசிரியர் என்க. குமார சுவாமீய நூலுடையார் 2-ஆமிடத்தில் வித்தையைக்கூறி 4-ஆமிடத்தில்வித்தையைக்கூருது விடுத்துளார்.

பிருகத் பராசரஹோரையில்:—

மந்த்ர யந்த்ர ததாவித்யா புத்தேச் சைவ ப்ரபந்தகா:
புத்ர ராஜ்யாயப் ப்ரம்சாதி பஸ்யேத் புத்ராலயாத்புத:

என ஐந்தாமிடத்தில் வித்தையைக் கூறப்பட்டுளது. கிரந்தாந்தரங்களில் "சதுர்த்தாத் வித்யயா ராஜ்யம்" என்று நான்காமிடத்தில் மட்டும் வித்தையைக்கூறப்பட்டுளது. இங்ஙனமே யவனுசாரியர் "வித்யாபராக்ரம விநோத சமீபயாத்ரா ஸ்வப்தே க்ஷிதாநி சமிலந்தி விலோகிதாநி, தூர்யஸ்வபாவவிஜய ஸ்திதி பூமிகேஹே பாதாள பூகததநாநி சதுர்த்தபாவே" என்று கூறியிருக்கின்றனர். இங்ஙனம் சோதிடநூல் ஆசிரியர்கள் வித்தியாஸ்தான விஷயமாய் ஒருவர்க்கொருவர் மதபேதப்படுகின்றனர். அனைத்தையும் சீர்தூக்கிப் பார்க்கும்போது இந்நூலாசிரியர் கூறியபடியே 2-ஆமிடம் 4-ஆமிடங்களைக் கொண்டு வித்தையைக் கூறவேண்டுமென்று ஏற்படுகின்றன.

வாடிகா கலக க்ஷேத்ரம் ஔஷதி நிதிநிஹ
விவராதி ப்ரவேசஞ்ச பச்யேத் பாதாளதோபுத: (புவனதீபிகை)

க்ருஹம் நிதாநம் விவரப்ரவேசோ மஹௌஷத க்ஷேத்ர கலேக்ருதிஞ்ச
மித்ரம் வ்ரதம் ஸ்திரீபுரபும் ப்ரயோகோ கமாகமௌயாந சுகாதிகஞ்ச
ஸ்தாநச்யுதிர் லாப க்ருஹப்ரவேசோ புத்திர் ஜநித்ரீ ஜநகச்ச தத்வத்
தேசாதிகார்யாண் யபிலாபமஸ்ய ஸமஸ்தமேதத்து சதுர்த்தபாவே
(பைரவதீபிகை)

என வரும் பிரமாண வசனங்களினுலும் "பித்ருசிந்தா நிதி: க்ஷேத்ரம் க்ருஷம் பூமிச்சதுர்ய:" என்ற நீலகண்டர் வசனத்தினுலும் நான்காம் பாவகத்தைக்கொண்டு மித்திரம், பூமி, ஔஷதம், கமனுகமனம், ஸ்தானசலனத்தினுல் ஆதாயம், வாகன சுகம், கிருஹவாஸ்து (வீடு), நூதன கிருஹப்பிரவேசம், தேசாதிகாரம், வித்தியா பராக்கிரமம், ஜயம், விநோதம், ஆலோசனை, புதையல், கனவு, பித்ருவிசனம், விரதோபவாசம், சமீப யாத்திரை

ஆகிய இவைகளை அறியவேண்டுமென்பதாம். யவனாசார்யர் வசனத்தின்படி நான்காமிடம் கனவிலை ஸ்தானமென்பது பெறப்படும். இதனை:—

கண்ட கனவதுநாற் காண்டத்தால் காண்பதனை
உண்டென்று எழும்அதனால் ஓர்ந்துரைக்கக்—கண்டங்கு
இறந்ததனைப் பாட்டில் எடுத்துரைக்கச் சிந்தை
சிறந்ததனை உச்சியால் செப்பு.

எனவரும் சினேந்திரமாலை வசனத்தின்படி இலக்கினத்தினால் காணப்போகின்ற கனவையும், நான்காமிடத்தினால் கண்ட கனவையும், ஏழாமிடத்தினால் கண்டு மறந்த கனவையும், பத்தாமிடத்தினால் நனவிற் கனவையும் அறிந்து கூறுதல் வேண்டுமென்பது பெறப்படும். 'நனவிற் கனவு' என்பது நித்திரையில்லாமல் விழித்திருக்கையில் கனவுபோலத் தோன்றி மறைவதாகும். இந்நியதிபற்றியே நமது பிரசுரமாகிய ஜாதகசாகரத்தில் இலக்கினம் நான்காமிடம் இவற்றில் கனவிலையைக் கூறப்பட்டதென்க.

நீலகண்டதாஜிகத்தில்:—

லக்நே அர்க ந்ருபதிம்வஹ்நிம் வஸ்த்ரம் பஸ்யந்திலோஹிதம்
ஸ்வேதம் புஷ்பம் ஸிதம் வஸ்த்ரம் கந்தம் நாரிஞ்ச சீதகௌ.

எனவரும் சுலோக வசனத்தினால் இலக்கினத்தில் சூரியன் இருந்தால் அக்கினி, அரசன் முதலியவைகளைக் காண்பதாகக் கூறியிருத்தலின் இலக்கினம் காணப்போகுங் கனவினை அறியும் ஸ்தானமென்பது துணியப்படும்.

சுபாசுபங்களுக்கு உரிய காலங்களில் வந்து சூழ்தலால் உறவினர்க்குச் "சுற்றத்தார்" என்பது காரணப்பெயர். யோகக்ஷேமங்களை கேட்குந் தன்மையராகலின் உறவினர்க்குக் கேளிர் என்றுபெயர். கேளிர், உறவினர், சுற்றத்தார் என்பன ஒருபொருட் பன்மொழி. ஆகவே "விரும்புநல் உறவினர்" என்று கூறினரென்க.

பர விஷயத்தைப்பற்றி இந்நூலாசிரியர் நான்காமிடத்தினால் அறியும்படி கூறியிருக்கின்றார். சாதக சிந்தாமணி நூலுடையார் ஐந்தாமிடத்தில் "தாரம் சோரம்" என்று கூறியிருத்தலின் களத்திர வியபிசார ஸ்தானம் ஐந்தாமிடமென்று ஏற்படுகின்றது. ஆகவே நான்காமிடம் மாதுரு சோர ஸ்தானமென்றும், ஐந்தாமிடம் களத்திரசோர ஸ்தானமென்றும் அறிதல் வேண்டும். இதனை,

ஓதுநாலுக்கு இறைவன் சனிராகு குளிகன்
உடன்கூடிப் பாவவர்க்கம் உற்றுநிற்கச் சுபர்தான்
போதுறநோக் கார்எனினும் மாதுர்கா ரகனும்
போற்றுநாலுக்கு இறையும் பொருந்தியஅங் கிசரும்
கோதுபடு சநிராகு குளிகன்உடன் கூடிக்
குறித்திடசத் துருநீசம் மூடம்அடைந்து இருக்க
மாதுக்கேழ் குருப்பார்வை அன்றிஇருந் தாலும்
மாதுர்விப சாரியென வகுத்துரைப்பர் தானே.

என்று நான்காம் பாவகத்தில் கூறியிருத்தலினால் நன்கு அறியலாம். ஆனால் இந்நூலாசிரியராம் தில்லை நாயகனார் அவர்கள் ஐந்தாம் பாவகத்திலும் இங்ஙனமே கூறியிருத்தலின் அதனை மாதுரு வியபிசார ஸ்தானமெனக் கருதி கூறியதாக எண்ணுதல் கூடாது. யாதுபற்றி எனின்? பாவகப்பெயர்

கூறியவிடத்தில் ஐந்தாமிடத்தில் "தாரம் சோரம்" என்று களத்திர வியபி சார ஸ்தானமெனக் கூறியிருத்தலிஞ லென்றறிக.

புத்திரகா ரகனுமைந்துக்கு அதிபதியும் இவர்கள்
போற்றும்அங்கி சாதிபரும் பாவவர்க்கம் அடைய
வைத்தருள்வீட் சணம்இல்லாது இருக்கும் எனும்
மதிசெவ்வாய் சத்துருதானத்து இறையைக் கூடி
வித்தகமாம் நாலில்நிற்கச் சுபர்பாரார் எனும்
மிகுராகு ரவிகூடி நால்அதனில் இருக்கச்
சுத்தம்இலாப் பாவருடன் கூடவே பார்க்கச்
சுபர்பாராது இருக்கின்விப சாரிபுத்ரன் என்பார்.

(சாதக சிந்தாமணி)

மற்றும் ஐந்தாமிடத்தில் கூறியுள்ள இந்த செய்புளில் விபசாரி புத்திரன் என்று காணப்படுதலின், இங்ஙனங் கூறியது ஜாதகனைப் பற்றியா? அல்லது ஜாதகனுக்குப் பிறந்த புத்திரனைப் பற்றியா? என்று ஊகிக்கும்போது, முதன் மூன்று அடிகளில் ஐந்தாமிடமான புத்திர ஸ்தானுதிபனையும் புத்திரகாரகனையும் கூறியிருத்தலின் புத்திரனைப்பற்றி என்று ஏற்படுகின்றது. பின் ஐந்து அடிகளில் சந்திரனையும், நாலாமிடத்தையும், அதாவது மாதுருகாரகனையும், ஸ்தானத்தையும் கூறியிருத்தலின் மாதுருவை (ஜாதகனைப்) பற்றி என்று ஏற்படுகிறது. இதற்கு முன்செய்யுளிலும் இங்ஙனமே கூறியிருக்கின்ருர் ஆகலின் ஜாதகனையும், ஜாதகனுக்கு உதிக்கும் புத்திரர்களையும் பற்றியதென்றே நிச்சயிக்கப்படும். ஆயினும் நான்காமிடம் மாதுரு விபசார ஸ்தானமென்பதும், ஐந்தாமிடம் களத்திர விபசார ஸ்தானமென்பதுவுமே உண்மையாகும். குமாரசுவாமீய நூலுடையாரும் சாதக சிந்தாமணியைப்போலவே கூறியிருக்கின்றனர்.

அதாவது ஐந்தாம்பாவகம் 158-ம் செய்யுளில்,

"உளர்உறவர் கூடிபவம்ஆகில் ஒன்றுஆறு அரம்ஆய்
உடையர் இல்சேறில் தேள்ஆன் உடுபதிமால் உறில்தாய்
களர்மருவ இதற்குஇறை காரகர்பாவம் மேவில்"

என்றற் ருெடக்கத்துச் செய்யுளிற் கூறி யிருத்தலுணர்க.

ஆகவே நான்காவது பாவகத்திஞல்:—1-வித்தை (அ), 2-வாகனம், 3-சுபகாரியம், 4-வியாபாரம், 5-வீடு, 6-வெற்றிக்கீர்த்தி, 7-சுகம், 8-மாதுரு, 9-சுற்றத்தார், 10-புதையல், 11-மாதுரு விபசாரம், 12-சுகந்தம், 13-பால் பசு கன்று, 14-ஆலயசேவை, 15-சிநேகிதர் (ஆ), 16-ஔஷதம், 17-கமனுகமனம், 18-ஸ்தான சலனத்திஞல் லாபம், 19-வாகனசுகம், 20-இராஜ கிருகப்பிரவேசம், 21-தேசாதிகாரம், 22-வித்தியாபராக்கிரமம், 23-ஜயம், 24-விநோதம், 25-ஆலோசனை, 26-கனவு, 27-பிதிர்கவலை, 28-விரதோபவாசம், 29-சமீபயாத்திரை ஆகிய இவைகளை அறிதல்வேண்டும் என்க. (4)

## புத்திர பாவகம் (ஐந்தாமிடம்)

கொண்டதோர் பக்தி பிதாமகன் புதல்வர்
குலவுபூ ருவம்செய்புண் ணியமும்
தண்தமிழ் வாணர் புகல்பிர பந்தம்
தரித்திடும் கர்ப்பமந் திரங்கள்

மிண்டிய வித்தை விதரணம் புத்தி
விரும்பும்இப் பலன்எலாம் அறிந்தே
கண்டுஉரைத் திடுவர் ஐந்தாம்இடம் கொண்டே
கற்றுஉணர்ந்து அருளும் மாதவரே.



(இ-ள்) புத்திரர்கள் பிதாவிடத்தில் வைத்தொழுகும் பக்தியின் தன்மையும், தகப்பனைப் பெற்ற பாட்டனும், சந்தானமும், முற்பிறப்பில் செய்த நல்வினைகளும், இனிய தமிழ்ப் புலவர்களால் பாமாலைகள் பாடப்பெறுதலும், கர்ப்போற்பத்தியும் மந்திரோபதேசமும், அதர்வண வேதப் பயிற்சியும், மனக்கூர்மையும், அறிவும் ஆகிய இவைகளை ஐந்தாம் பாவகத்தைக் கொண்டு சோதிடசாஸ்திரத்தைச் செவ்வனே ஓதியுணர்ந்த பெரியோர்கள் சொல்லுவார்கள் எ-று.

(இ-ள்) "கொண்டிடும் மாமன் பிதாப்பெறும் புதல்வர்" என்று பழைய பிரதிகளில் காணப்படுகின்றது. ஆகவே இதனைச் சிலர் பிதா - பெறும் - புதல்வர் எனப் பிரித்து இதற்குத் தகப்பனும், பெறுகின்ற பிள்ளைகளும் எனவும், சிலர் ஒரு தொடர்மொழியாகக்கொண்டு பிதாப்பெற்ற பிள்ளைகள் என்றும் பொருள் கூறுவர். இங்ஙனம் கூறுவது முற்றும் பொருத்தமற்றதேயாம். பிதாவைப்பற்றிக் கூறவேண்டிய இடம் ஒன்பதாமிட மாகையினாலும், எல்லாப் பிள்ளைகளும் ஓர் பிதாவினால் பெறப்பட்ட பிள்ளைகளேயன்றி பல பிதாவினால் பெறப்பட்டவர்களல்ல ஆதலாலும், அப்படி ஒருகால் அன்னிய பிதாவினால் உதித்த பிள்ளைகள் ஆனால் அதனை நான்காமிடங்கொண்டு கூறவேண்டியது நியதி யாகையினாலும்,

எந்தத்தா னத்துக் கேனும் பலன்சொல்ல வேண்டும் ஆகில்
அந்தத்தா னத்தை அன்னோர் லக்கினம் ஆக வைத்து
பந்தித்த ஓரை ஆதி பன்னிரு தானத்து உள்ளும்
சிந்தித்துப் பலன்கள் எல்லாந் தேறியே அறியச செப்பே.
(சாதக சூடாமணி)

இந்நூற்கு முதல்நூற்களிலும் பிறநூற்களிலும் ஐந்தாமிடம் பிதா ஸ்தானமென்று யாண்டும் கூறப்படாமையாலும், அத்தொடர்மொழியை "கொண்டிடும் மாமன் பிதாமகன் புதல்வர்" எனத் திருத்தி பிதாவைப் பெற்ற பிதாவாகிய பாட்டனுக்கும், பிள்ளைகளுக்கும் உரிய இடம் என்று பொருள் கொள்ளுதலே சாஸ்திர சம்மதமாம் என்க. யாதுபற்றி எனின்; ஒன்பதாமிடம் பிதா ஸ்தான மாதலாலும், அதற்கு ஒன்பதாமிடமாகிய ஐந்தாமிடம் பிதாவினுடைய பிதாஸ்தானமாகையினாலும் என்க. இங்ஙனம் கூறுவதற்கு ஆதாரம் என்னே எனின்? கூறுவாம்.

எந்ததா னத்தின் பலனதும் சொல்லுங்கால்
இடம்புதல் உதயமாய் வைத்தே
பந்தித்த இராசிப் பன்னிரண் டையுந்தான்
பந்தமாய் அடைவிலே பார்த்து
சிந்தித்த முறையாய்ப் பலன்களைத் தெரிந்து
செப்புவர் குருகடாட் சததால்
அந்திக்கு முன்னம குடகசெழு பிறைபோல்
அழகிய திருநுதல் அணங்கே.

எனவரும் சாதக சிந்தாமணி வசனத்தினாலும் நன்கு நிச்சயிக்கலாம். அதாவது: இலக்கின முதலாகவுள்ள பன்னிரண்டு பாவகங்களில் எந்த பாவகத்திற்காவது பலனைச் சொல்லும்போது அந்தப் பாவகத்தை இலக்கினமாக வைத்துக்கொண்டு, அதற்குரிய மற்றைய பன்னிரண்டு பாவகங்களின் பலன்களைக் கண்டு, ஆசிரியன் கிருபாநோக்கத்தினால் சோதிடப் புலவர்கள் சொல்லுவார்கள் என்ற பொருளுடைய இச்செய்யுளால் நன்கு துணியப்படும்.

இக்கருத்துடைய ஓர் செய்புள் இந்நூல் மூன்றாம்பாவகத்தில் காணப் படுகின்றது. ஆனால் அந்தச் செய்யுளும் முதல்முதல் அச்சேற்றினரால் நேர்ந்த பிழையினால் இக்கருத்தைச் சிறுபான்மை விளக்கியும், பெரும் பான்மை விலக்கியும் அறிவிக்கின்றது. மூன்றாமிடம் சகோதர ஸ்தானம் என்பது சிறுமகாரும் நன்கு அறிந்த விஷயம். ஆகவே ஒரு ஜாதகத்தைக் கொண்டு ஒவ்வொருபாவகத்திற்கும் சகோதாங்களை அவ்வவற்றின் மூன்றா மிடத்தினால் அறியவேண்டுமென்பதைக்கொண்டு,

அறிதாதைக்கு ஒன்பானுக்கு ஒருமூன்றி னாலும்
அன்னைக்கோ நான்கினுக்கு மூன்றி னாலும்
செறிகனிட்டற்கு ஒன்மூன்றின் மூன்றி னாலும்
சேட்டனுககுப் பன்னொன்றின் பன்னொன் றாலும்
உறுமாமன தனக்கும்புத் திரற்கும் ஐந்திற்கு
ஒருமூன்றி னாலும்உயர் சகோ தாங்கள்
நறுங்குழலஅங் கிசராசி ஆண்பெண் ஓர்ந்தே
நவிலுவாய் அத்தொகையின் அளவை என்றே.

எனவரும் இந்நூல் 527-ஆம் பாசுரத்தில் கூறப்பட்டிருக்கின்றது. அந்தச் செய்யுளும அச்சேற்றினரால் நேர்ந்த பிழையினால்,

அறிதாதை ஒன்பானுக் கொருமூன் றானும்
அன்னைக்கோ நான்கினுக்கு நவினமூன்றி னாலும்
செறிகனிட்டற்கு ஒருமூன்றின் மூன்றி னாலும்
சேட்டனுக்குப் பன்னொன்றின் பனனொன் றாலும்
உறுமாமன் ஆறுக்கும் புதல்வர்கைந் திற்கும்
ஒருமூன்றி னாலும்உயர் சகோத ரங்கள்
நறுங்குழலங் கிசைராசி ஆண்பெண் ஓர்ந்தே
நவிலுவாய் அத்தொகையின் அளவை என்றே.

எனக் காணப்படுகின்றது. இச்செய்யுளின்படி பொருள் உரைக்கப் புகுந்தால் 9-க்கு 9-ஆமிடமான ஐந்தாம்வீட்டினால் தகப்பனுடைய தகப்பனையும், 4-க்கு 4-ஆமிடமான எழாம வீட்டினால் தாயினுடைய தாயையும், 3-க்கு 3-ஆமிடமான ஐந்தாம் வீட்டினால் இளைய சகோதரனுக்கு இளைய சகோதரனையும், 11-க்கு 11-ஆமிடமாகிய ஒன்பதாமிடத்தினால் மூத்த சகோதரனுக்கு மூத்த சகோதரனையும, 5-கரு 5-ஆமிடமான ஒன்பதாமிடத்தினால் மாமன், புத்திரர் இவர்களுடைய புததிரர்களையும் அறியவேண்டும் என்று ஏற்படுகின்றன. இவ்வுண்மையை உள்ளவாறு ஊன்றி நோக்காது, இச் செய்யுளின் மூன்றாம் அடியின் ஈற்றிலுள்ள 'உயா சகோதரஙகள்" என்ற மொழியைக் கொண்டு தகப்பன், தாய், கனிஷ்டன், ஜேஷ்டன், மாமன்

புத்திரர் இவர்களுக்கு முறையே 5-7-5-9-9 இந்த ஸ்தானங்கள் சகோதர ஸ்தானமெனப் பொருள் கூறுதல் எட்டுணையும் பொருந்தாதென்க.

மற்றும் இதனை,

அபீஷ்ட ஸத்மாநி சுபாசுபார்தம்
பித்ராதி காநாம் விதநீத தீமாந்
ப்ரோக்த ப்ரகாரைஸ் தநுவத் ஸ்வஸத்ம
ஸம்யோஜ நேதி குரோர் மிதம்மே.

எனவரும் தாஜிக முக்தாவளியினாலும் இனி அறியலாம். இச்சுலோக கருத்துக்கொண்ட நமது ஜாதகசாகரம் 2-வது தரங்கம் 7-வது மணி 18-வது செய்யுளில்,

முக்கியமாம் தேவதத்தர் முதலானோர் முன்னம்
மொழிதந்தை சோதரர்சா தகமில்லா விட்டால்
பக்குவமாம் அன்னோர்தம் பலபாகம் புகல்வான்
பகர்சகம புடவிதியை சொற்றவணம் உரைப்பாம்
மிக்கதொரு சகமமலது எப்பாவந் தனக்கு
விளம்பியபுண் ணியமுதலாம் சகமங்கள் வேண்டின்
இக்குறையாய் அச்சகமம் அப்பாவந் தன்னை
இலக்கினமாய் கற்பித்து பலனுரைத்தல் நெறியே.
(பி-ஜா-கோசாரதீபிகை)

எனக் கூறியிருத்தலுணர்க. தாயாருக்குச் சகோதரர்களாவார், தாயுடன் பிறந்த ஆண்பாலாராகிய அம்மான் முதலியோரும், பெண்பாலாராகிய தங்கை அக்காள் முதலியோரும் ஆவர். ஆகவே தாயாருடன் பிறந்தோர்களை 4-க்கு 3-ஆமிடமான ஆறும்பாவகத்தினால் அறிதல் வேண்டும். இவ்வுண்மை “ ரிபௌ மாதுல யார்த்யாதி சதுஷ்பாஜ் ஜந்துமீ வ்ரணத் ” எனவரும் நீலகண்டாசாரியர் வசனத்தினாலும்,

ஸௌரபீரிபு ஸங்க்ராமோ கவோஷ்ட்ர க்ரூரகர்மணும்
மாதுலாதங்க சங்காநாம் ரிபுஸ்தாநாத் விநிர்ணயஃ

எனவரும் புவனதீபிகை வசனத்தினாலும் நன்கு விளங்கும். அதாவது ஆறுமிடம் அம்மானுடைய ஸ்தானமென்பது பெறப்படும். ஆகவே இந்நூல் ஆசிரியர் ஐந்தாமிடம் அம்மானுடைய ஸ்தானமென்று கூறியதற்கு முரணாகக் காணப்படுகின்றது. ஆகவே “கொண்டதோர் பக்தி பிதாமகன் புதல்வர்” என்றமைத்து பாடபேதமெனக்கொண்டு புத்திரர்கள் பிதாவினிடத்தில் வைத்துள்ள பக்தி - பக்தியின்மையைக் கூறுதற்குரிய ஸ்தானமென்று பொருளுரைத்தலே சிறப்பாகும் இதனை,

மந்திரங் கியானந் தெய்வம் மந்திரி தார சோரம்
சந்ததி தவசு புத்தி சத்தியம் வயிறு கன்னம்
அந்தமாம் பிதிர்கு ருக்கள் ஆத்துமம் மிருதி வாசம்
உந்திய நேத்ர ரோகம் ஒருகண்போ சனம்பா விப்போர்.
(சாதக சிந்தாமணி)

ஸுத பவநாத் ஸுதவ்ருத்திம் மந்த்ரம்
பித்ரு புத்திம் ஆத்ம வித்யாச
ஹ்ருதயோதா ப்ரவேசம் விவேக சக்திஞ்ச
நிர்திஸேத் மதிமான். (சர்வார்த்த சிந்தாமணி)

எனவரும் பிரமாண வசனங்களினால் நன்கு நிச்சயிக்கப்படும். இந்நூலுக்கு முதல் நூற்களுள் சர்வார்த்த சிந்தாமணியும் ஒன்றாகலின் அதனுள் பித்ரு என்ற பதம் காணப்படுதலாலும் ஐந்தாமிடம் புத்திரர்களுடைய பிதிர் பக்திக்குரிய ஸ்தானமென்பதில் எட்டுணையுஞ் சந்தேகமில்லை. பக்தி என்ற பதப்பிரயோகமின்றி தனிமையாக மேல் உதகரித்த இருநூற்களிலும் பித்ரு எனக் காணபபடுதலின் பிதாஸ்தானமென்று கூறலாகாதோ எனின்; சர்வார்த்த சிந்தாமணி, சாதக சிந்தாமணி முதலிய நூற்களில் ஐந்தாம் பாவகபலன்கூறியவிடத்து பிதிர்சம்பந்தமான சுகதுக்கபலன்கள் யாதொன்றும் கூறப்படாமையினாலும், அங்ஙனம் ஒன்பதாம் பாவகப்பலனில் கூறப் பட்டிருத்தலினாலும், ஒன்பதாமிடமே பிதிர்ஸ்தானமென்பது சித்தாந்தம்.

எந்தத்தா னத்துக் கேனும் பலன்சொல்ல வேண்டு மாகில்
அந்தத்தா னத்தை யன்னோர் லக்கினம் ஆக வைத்து
பந்தித்த ஓரை யாதி பன்னிரு தானத்து உள்ளும்
சிந்தித்துப் பலன்கள் எல்லாம் தேறியே அறியச் செப்பே.
(சாதக சூடாமணி)

பனிரண்டு ராசி என்னும் பதிலக் கினமாய்க் கொண்டு
இனியதாய் தந்தை புத்திரர் இசைமனை உடன்வந் தோர்கள்
தனியுமா யுருத்தா யங்கள் தனலாபம் வாக னங்கள்
முனியும் பாக்கிய கர்மங்கள் முதல்பலன் மொழிந்தி டீரே.
(ஜாதக அலங்காரம் 393-வது செய்யுள்)

இதனை சர்வார்த்த சிந்தாமணி ஐந்தாம் பாவகத்தில்,

லக்னபுத்ரேஸ் வராப்யாந்து மித்ரத்வேனைவ மித்ரதா
சத்ருத்வே சாத்ரவம் ப்ரோக்தம் ஸமத்வேஸ மதுபவேத்.

விலக்ந புத்ரநாதௌது பரஸ்பரம் நிரீக்ஷிதௌ
பரஸ்பர க்ருஹாம்சஸ்தௌ பிதுருக்தம் ஹிகாரயேத்.

லக்நம் பச்யதிவாபுத்ர நாதேபுத்ராந் விதேபிவா
லக்நேச்வரே ஸுதஸ்தேவா பித்ருவாக்ய வசாநுகஃ

புத்ரஸ்தாநேச் வரேதுஸ்தே லக்நேசே நாபிவீக்ஷிதே
ஸம்த்ருஷ்டே குஜராஹுப்யாம் நித்யம் பித்ருவிதூஷகஃ.

எனவரும் சுலோக வசனங்களால் நன்கு அறிந்துணரலாம். பக்தி என்பதற்கு தெய்வ வழிபாடு எனக் கூறலாகாதோ எனின், பத்தாமிடத்தில் "தேவதாபக்தி" எனக் கூறியிருத்தலின் ஆகாதென்க. பக்தி எனப்பொதுவாக ஐந்தாமிடத்தில் கூறப்பட்டிருத்தலால் ஜாதகன் பிதிர் குருக்களிடத்தில் வைத்துள்ள பக்தியையும், ஜாதகனுக்கும் புத்திரர்களுக்கும் உள்ள ஒற்றுமையையும் கூறவேண்டுவது நியதியாகும்.

இந்நூலாசிரியர் ஐந்தாமிடம் அம்மானுடைய ஸ்தானமெனக் கூறியதற்கு முதனூல் ஆதாரங்கள் ஒன்றும் காணப்படாமையாலும், ஒவ்வொரு பாவகங்களுக்கும் அவ்வவற்றிற்கு மூன்றாமிடம் சகோதர ஸ்தானங்கள் என்று 3-வது பாவகம் 527-ஆம் செய்யுளில் ஒருவாறு விளக்கி யிருத்தலாலும், இதனை சாதக சிந்தாமணியின் 222-வது செய்யுள் வலியுறுத்தலி

ஒுலும், மற்றும் ஜாதகசிந்தாமணி, குமாரசுவாமீயம் முதலிய நூற்களில் ஐந்தாம்பாகவத்தில் அம்மான்விஷயமான சுகதுக்கபலன்கள் யாதொன்றுங் கூறப்படாமையாலும், யவன-நீலகண்ட-பைரவதீபிகை முதலிய புராதன நூற்களில் ஆறுமிடம் அம்மானுடைய ஸ்தானமென்று கூறப்பட்டிருத்தலாலும் ஐந்தாமிடத்தை பிதா புத்ர ஒற்றுமைக்குரிய ஸ்தானமென்றும், ஆறுமிடத்தை அம்மானுக்குரிய ஸ்தானமென்றும் சித்தாந்தப்படுத்தினும்.

ஐந்தாகும் இடத்திலுறும் பாவரால் தோஷம்
அணுகும்வகை சனிகுழவிக்கு அருக்கன்தந் தைக்கே
நஞ்சாருங் கரியகோள் சுதற்குச்செவ் வாயேல்
நண்ணிடில்அம் மானுக்குத் தோஷமதே யாகும். (ஜாதகஅலங்காரம்)

மாமன் சிறுவன் தாய்தந்தை மரணம் ஐந்தும் ஈரைந்தும்
பூமன் காரி மதிவெய்யோன் நிற்கில் புகழ்கோள் நோக்கிலையேல்.
(சூடாமணி உள்ளமுடையான்)

ஸுதஸ்தாநே யதாசந்த்ரஃ ஸௌரி ஸூர்ய குஜஸ்ததா
மாத்ரு ஸ்வயம் பித்ருணாந்து மாதுலாநாம் நஜீவதிஃ (கிரந்தாந்தரம்)

மாநேவா யதிபஞ்சமே குஜரவிச் சாயாகுமா ரேந்தவைஸ்
ஸத்யோமாதுல தாத பால ஜநநீ நாசம் ப்ரகுர்வந்திதே.
(ஜாதக பாரிஜாதம்)

எனவரும் பிரமாண வசனங்களால் ஐந்தாமிடத்தில் செவ்வாய் இருந்தால் அம்மானுக்குத் தோஷம் என்று ஏற்படுவதனுல் ஐந்தாமிடம் அம்மானுக்கு உரியஸ்தானம் ஆகாதோ எனின்; இந்நூலாசிரியரும் கிரந்தாந்தரவசனமும் ஐந்தில் இருந்தால் தோஷம் என பொதுவாகவும், இந்நூலுக்கு முந்திய நூலான அதாவது: சகஷு 1100-ல் ஏற்பட்ட சூடாமணி உள்ளமுடையானும், ஜாதக பாரிஜாதமும் ஐந்தாமிடத்திலாவது பத்தாமிடத்திலாவது செவ்வாயிருந்தால் தோஷமென சிறப்பாகவும் கூறியிருத்தலினுலும், யவனசாரியரென்பவர் மிகப் பழைமையாகப் பிரசித்திபெற்ற சோதிட சித்தாந்தியாதலாலும், யவனதேசத்துச் சோதிடர்களிடம் இச்சாஸ்திரம் சுத்த சாம்பிரதாயமாக இருத்தலின் "ருஷிவத்தேஹி பூஜ்யந்தே" என ஆசிரிய வராகமிஹிரரைவர்கள் ருஷிகளைப்போல் அவர்கள் பூசிக்கத்தக்கவ ராவார்கள் எனக் கூறியிருத்தலினுலும் யவனசாரியர் மதத்தையே சித்தாந்தப்படுத்தி ஆறுமிடம் அம்மானுடைய ஸ்தானம் என்று நிச்சயித்தாமென்க.

"வித்தியாபுத்தி ப்ரபந்தாநாம்" என புவனதீபிகையிலும், "யந்த்ர மந்த்ரௌததா வித்யா புத்திச் சைவ ப்ரபந்தகாஃ" என பராசர ஹோரையிலும் கூறப்பட்டிருத்தலின "மந்திரங்கள் மிண்டிய வித்தை" என்பதற்கு மந்திர உபதேசமும், அது சம்பந்தமான அதர்வண வேதப் பயிற்சியும் என்று பொருள் கொள்ளப்பட்டது என்க. புவனதீபிகை வியாக்கியானத்தில் "வித்யா" என்ற சப்தத்திற்கு ஆகாச கமனம் என்று பொருள் கூறப்பட்டு இருத்தலை அறிக. மந்திரம் என்பதற்கு மந்திரோபதேசம், மந்திரசித்தி என்று அறிக. மந்திரம் - மந் = நினைப்பவர்களுடைய, திரம் =(மநத்தைத் திரப்படுத்தி காப்பாற்றுவது) எனவே மனனஞ் செய்பவர்களைக் காப்பாற்றுவது என்பது இதன் சிறந்தபொருளாகும். மந்திரங்களை முறைவழுவாமல்

ஜபம் செய்துவந்தால் விரும்பிய சகல சித்திகளையும் எளிதில் அடையலாம். இங்ஙனம் செய்வதனால் ஜபிக்கப்படும் மந்திரதேவதைகள் பிரத்யக்ஷமாகிப் பல சித்திகளைத்தருவார்கள். இத்தகைய மந்திரங்களின் மூலமாய் வசீகரண முதலிய சித்திகள் ஏற்படும். மற்றும் இதனால் பரகாயபிரவேசம், சாபாநுக்கிரக சாமர்த்தியமும் உண்டாகும். இந்த மந்திரத்தின் பிரிவுகள் எழுகோடியாக விரிந்திருப்பதாக சாஸ்திரங் கூறும். இப்படி விரிவாயுள்ள இம்மந்திரங்களில் சிறந்தது ஏகாக்ஷரம், பஞ்சாக்ஷரம், சடாக்ஷரம், அஷ்டாக்ஷரங்களாகும். மந்திரங்கள் பிரணவம், பீஜம், கீலகம், இருஷிகளைத் தனித்தனி வெவ்வேறாக வுடையது. இவைகள் இல்லாத மந்திரங்கள் எங்கும் கிடையாது. இவற்றுடன் நமஃ, ஸ்வக, பவுஷட், வௌஷட் முதலிய ஆதி பல்லவங்களுடன் முறைப்படி ஜபித்தல்வேண்டும். இன்றேல் இடருண்டாகும். இவற்றின் உண்மைகளைக் குருமுகத்தால் அறிந்து மந்திர மஹோததி முதலிய மந்திர சாஸ்திரங்களினால் தெளிதல் வேண்டும்.

மந்திரோபதேசம் பெறுவோர் சித்தாதி கோஷ்டம் என்றும் மந்திரப் பொருத்தத்தைப் பார்த்து உபதேசம் பெறுதல் வேண்டும்.

அஃது வருமாறு:—

சமஸ்கிருதாக்ஷர முறையாக தனது பெயரின் முதலெழுத்துள்ள கோடுமுதல் தனித்தனியே நான்கு, நான்கு கோடுகளை வலமாகச் சுற்றியெண்ணி, மந்திரத்தின் முதலெழுத்துள்ள கோடு வரையும் கண்டு பூலாபலன் அறிவது.

| | | | |
|---|---|---|---|
| 1<br>அ க<br>த 2 ஹ | 5<br>உ ங<br>ப | 2<br>ஆ க 2<br>த 3 ள | 6<br>ஊ ச<br>ப 2 |
| 13<br>ஒ ட 3<br>வ | 9<br>ஓ ச 4<br>ம | 14<br>ஔ ட 4<br>ஶ | 10<br>ஓ ஞ<br>ய |
| 4<br>ஈ க 4<br>ந | 8<br>ரு ஜ<br>ப பு | 3<br>இ க 3<br>த 4 க்ஷ | 7<br>ரூ ச 2<br>ப 3 |
| 16<br>அ த<br>ஸ | 12<br>ஐ ட 2<br>ல | 15<br>அம் ண<br>ஷ | 11<br>ஏ ட<br>ர |

இவற்றுள் த 2 என்பது வடமொழியிலுள்ள தகரவர்க்க எழுத்து நான்கனுள் இரண்டாவது என்றறிக. பிற எண்குறிப்பு அக்ஷரங்களும் இங்ஙனமே யாகும். சித்தம், சாத்தியம், சுஸித்தம், அரி என்று நான்கும் ஒவ்வொன்றில் நந்நான்குப் பிரிவுகளாகப் பதினறு வகைப்படும்.

அவை வருமாறு:—

இந்தச் சக்காரத்தில் (1) (2) என்று காட்டப்பெற்ற இலக்கங்களே இவ்விதமான பதினாறுவகைப் பெயர்கள் என்றறிக.

| | |
|---|---|
| 1-சித்தசித்தம் | 1-மடங்கு செய்ய சித்தி |
| 2-சித்த சாத்தியம் | 2-மடங்கு செய்ய சித்தி |
| 3-சித்த சுவசித்தம் | ½-மடங்கு செய்ய சித்தி |
| 4-சித்த அரி | தன் கோத்திர நாசம் |
| 5-சாத்திய சித்தம் | இலேசியாவன் |
| 6-சாத்திய சாத்தியம் | பொருள் அழிந்திடும் |
| 7-சாத்திய சுவசித்தம் | அநுகூல சித்தி |
| 8-சாத்திய அரி | பந்துக்கள் நாசம் |
| 9-சுவசித்த சித்தம் | அதற்குரிய கணக்கில் சித்தி |
| 10-சுவசித்த சாத்தியம் | சுலபத்தில் சித்தி |
| 11-சுவசித்த சுவசித்தம் | நினைத்தவுடன் சித்தி |
| 12-சுவசித்த அரி | அனைத்தும் நாசம் |
| 13-அரி சித்தம் | சந்தான நாசம் |
| 14-அரி சாத்தியம் | புத்திரி நாசம் |
| 15-அரி சுவசித்தம் | தார நாசம் |
| 16-அரி அரி | குரு நாசம் |

பிரசாத எழுத்தையும், பிரணவத்தையும் முதலாகவுள்ள மந்திரங்கட்கும் (பஞ்சாக்ஷர மந்திரத்திற்கும்), நரசிம்ம வராஹ சூரியமந்திரங்கட்கும், தனது பெயரின் முதலெழுத்தையே முதலாகவுள்ள மந்திரங்கட்கும் மேற்சொன்ன சித்தாதிமுறை வேண்டியதேயில்லை. ஏனைய மந்திரங்கட்கும் மூர்த்திகளுக்கும் தனக்குமுள்ள ரிணரிண்ய பாவங்களை அறிந்து இலகுவிலே சித்தியாகக்கூடிய மந்திரங்களையும் மூர்த்தி யுபாசனையையும் சதாசார சம்பன்னனாகிய ஆசாரியனிடம் கேட்டுப் பெற்றுக்கொள்க. குரு உபதேசமின்றிச் செய்வன அவலமாம்.

தனது பெயரின் முதலெழுத்துமுதல் எந்த மூர்த்திக்கு அல்லது எந்த மந்திரங்கட்கானாலும் அவ்வவற்றின் முதலெழுத்துவரையும் எண்ணிய தொகையை மூன்றால் பெருக்கி ஏழினால் வகுத்து வருவதின் சேஷமானது தான் செலுத்தவேண்டிய (ரிணம்) கடனாகும்.

மூர்த்தியானாலும் மந்திரமானாலும் அவ்வவற்றின் முதலெழுத்து முதல் தனது பெயரின் முதலெழுத்து வரையும் எண்ணிய தொகையை ஏழால் பெருக்கி மூன்றினால் வகுத்து வருவதின் சேஷம் அம்மூர்த்தியால் அல்லது அம்மந்திரத்தால் தனக்கு வரவேண்டிய (ரிண்யம்) பாக்கியமாகும். எல்லாவற்றிலும் இது கூடியிருத்தல் நன்மை.

தனது பெயரின் எழுத்துக்களை இருமடங்கு செய்து மூர்த்தியின் எழுத்துக்களோடு சேர்த்த தொகையை ஏழால் வகுத்துவரும்சேஷமானது அம்மூர்த்தியின் மந்திரத்தைத் தான் ஜபிக்கவேண்டிய கடனும். சிஷ்யனுடைய நன்மையைக் கோருகின்ற ஆசாரியனும், பிறருக்கு ரக்ஷையின் பொருட்டுத் தரிப்பதற்கு யந்திரத்தை நிர்மிக்கும் மாந்திரிகனும் சித்தாதி முறையை அநுசரித்து உபதேசத்தையும் பிரயோகத்தையும் செய்தல் வேண்டும்.

புவனதீபிகையில் " மந்த்ர ஸாதன யோரபி வித்யா " என்ற சப்தங்களுக்கு மந்திராதி சித்தியும், ஆகாச கமனாதி கல்வியும் என்ற வியாக்கியானங் காணப்படுதலின், இவை முறையே மந்திரம் - மணி எனப்படும். 'மந்திரம்' என்பது பஞ்சாக்கரம், 'மணி' என்பது இரசக்குளிகையாகும். இவ்விரண்டாலும் சித்திநிலை யுண்டாகும். இரசக்குளிகை என்பது ஆகாய கமன முதலியவற்றை. இதனை:—

சுத்தமுறும் முனிவரனே நீபோந் தாரும்
தொல்பொதிகை வரையுமுள ஆண்டு காண்புாய்
இத்தகைய சூதமது வாய்க்கப் பெற்றார்
இனியகம னக்குளிகை நன்கு ஞற்றிப்
பத்தெனுநற் றிசைகளெலாம் நொடிக்குள் ளாகப்
படர்ந்திடுவர் மலைநிகர்மா ழைக்கு விப்பர்
சித்தியெட்டும் அடைந்திடுவர் இவர்கட் கேலாச்
செயலதுதான் ஒன்றுமிலை உலகம் மூன்றும்.

எனவரும் திருவான்மியூர் ஸ்தலபுராண வசனத்தினால் நன்கறிக. மந்திர பாகத்தைக் கூறுவது நான்காவதாகிய அதர்வண வேதமாம். இவ்வேதம் சத்துரு நாசத்திற்காகிய அநேக மந்திரங்களை யுடையதாயினும் மற்றைய வேதங்களைப்போலவே வைதிககிரியாநுட்டானங்களுக்கு வேண்டற்பாலனவாகிய தோத்திரங்களையும், அநேக சூக்தங்களையுமுடையது. இதில் கூறப்படும் சத்துருநாச மந்திரங்கள் ஆபத்து நிவர்த்திக்காக ஓதப்படுவனவாம். அதர்வணவேதம் ஒன்பது சாகைகளையுடையது. மற்றும் வேதம் மந்திரமெனவும், பிராமணமெனவும் இருபிரிவினை யுடையது. மந்திர தேவதைகளைத் தியானிக்கும் வாக்கியங்களாகும். பிராமணம் அம்மந்திரங்களைப் பிரயோகிக்கும் முறையை அறிவிப்பதாகும்.

உரைத்த ஐந்தாதி ஒன்பதில் பானுவேல்
உரைத்த அப்பிரக செந்தூர சித்தியாம்
விரித்த வான்கமனமுமாம் இந்து எனின்
மிக்க காந்தமாம் சேய்க்குநல் தாம்பிரம்
நிரைத்த மால்மருந்தால் குருப் பொன்னினால்
நீரன் வெள்ளியில் சுன்ரச வாதமாம்
பெருத்த வான்பணி ஒன்பதில் தேரிடில்
பிரட்டு வித்தைகள் சித்தியாஞ் சீவர்க்கே.

(வீமேசுர உள்ளமுடையான்)

எனவரும பிரமாணத்தினால் ஐந்தாமிடம் ஔஷதசித்தி ஸ்தானமென்று பெறப்படும். இந்நூலாசிரியர் "மந்திரம்" என்று கூறியிருத்தலின் அதனைச் சார்ந்த மற்றிரண்டு இனங்களையும் இந்த ஸ்தானத்தினால் கூறவேண்டியதென்பது மிகப் பொருத்தமாகும். இனமென்பது மணி-மந்திர ஔஷதங்களை என்றறிக. இதனை "மணிமந்திரம் ஆதியால் வேண்டு சித்திகள் உலக மார்க்கத்தில் வைக்கவிலையோ" என்ற தாயுமானர் திருவாக்கினால் அறிக. மணி-மந்திரத்தைக்கூறி ஆதியால் என்று விடுத்தமையால் ஔஷதமெனக் கொள்ளுக. சந்தேகமுளதேல் திருவான்மியூர் ஸ்தலபுராணம் மருந்தீசப் படலத்தினால் கண்டுதெளிக.

ஐந்தாமாதிபன் 9-ல் இருந்தால் ஔஷதசித்திகள் வருமாறு:—5-க்கு உடையவன் சூரியனாகில்-அபிரக செந்தூரமும் கமன குளிகையும், சந்திரனாகில்-காந்த செந்தூரமும், செவ்வாயாகில-தாமிர பஸ்பமும், புதனாகில்-சாமான்ய மருந்துகளும், குருவாகில்-தங்கபஸ்பமும், சுக்கிரனாகில் - வெள்ளி பஸ்பமும், சனியாகில-இரசவாதமும் சித்தியாகும். இராகு கேதுக்களில் ஒருவர் பலமுடையவராகி 9-ல் இருந்தால் ஔஷத சித்தியின்றியே சித்தியானவனைப்போலக் கூறித் திரியும் புரட்டனா யிருப்பானென்க.

'இரசவாதம்' என்பது பொன் தங்கம் செய்யும் வித்தையை என்க. இரசவாதம் மெய்ம்மை யுடையதேனும் இது துறவி யாவார்க்கன்றிப் பொருள் விருப்புடையார்க்குப் பலியாது. இதுபற்றியே "அளகேசன் நிகராக அம்பொன் மிகப் படைத்தபேரும், நேசித்து ரசவாத வித்தைக்கு அலைந்திடுவர்" என்றருளினார் தாயுமானார் என்க. இங்ஙனம் அலைவோர் இக்காலத்தில் பலருளர். இரசவாத வித்தையை பணவிடுதூது என்ற நூலில் பரக்கக் காண்க.

வங்கத்தைக் குத்திவிட வங்கமும்போய் முன்சொன்ன
தங்கத்தையுங் கெடுத்துத் தாழ்ச்சியாய் ஆங்கே
கரிகண்ட காசுமுதல் காணுமோ வீணே
அரிசண்டமாய் கிடக்கு தையோ - அரிகண்டம்
இவ்வாறு கெட்டவர்கள் எண்ணிறந்த கோடியுனை
செவ்வாகக் கண்டவரோ சீமானே. (பணவிடுதூது)

இதனை இரசவாத வித்தைக் கலையும் பணப்பேய்களின் அறிவிற் சுடர் கொளுவுதற்காக சிறிது விளக்கப்பட்ட தென்றறிக.

அவரவர்கள் ஜாதகத்தைக்கொண்டு இலக்கினாதி பன்னிரண்டு பாவகங்களில் ஐந்தாம் பாவகத்தினால் மனத்தின் மாண்பையும், புத்தியின் யோக்கையும், ஆத்துமாவின் ஆற்றலையும் அறிந்துணருமாறு சோதிட நூலாசிரியர் பலரும் மதபேதமின்றி கூறியிருக்கின்றனர். சாதகசிந்தாமணி நூலுடையார் "சந்ததி தவசு புத்தி சத்தியம் வயிறு கன்னம்" என ஐந்தாமிடம் புத்திஸ்தானமென்று கூறினர். மற்றும் புவனதீபிகை நூலுடையார் "புத்தி" ஐந்தாமிடமென்று கூறினர்.

நாநா ப்ரயோகா விநய ப்ரபந்தா
விநேய வித்யா நயபுத்தி மந்த்ரா:
ஸந்தாந கர்பாங்க பவாதி கிஞ்சித்
ப்ரக்ஞா ஸுதாக்யம் ஸுதஸம் க்ஞபாவே. (பைரவதீபிகை)

ஸந்தாந லாப ஸுபவஸ்து ஸுதுர சிந்தா
வ்ருத்தாந்த லேக ஸுகதா அபிபஞ்ச மேஸ்யு: (யவனாசாரியர்)

புத்ரேமந்த்ர தநோபாய கர்பவித்யாத் மஜேக்ஷணம் (நீலகண்டர்)

யந்த்ர மந்த்ரௌ ததாவித்யா புத்திச் சைவ ப்ரபந்தகா:
புத்ரராஜ்யாப ப்ரம்சாதி பஸ்யேத் புத்ராலயாத புத: (பராசர ஓரை)

புத்திப்ர பந்தாத்மஜ மந்த்ரவித்யா விநேய
கர்ப ஸ்திதி நீதி ஸம்ஸ்தா:

ஸுதாபி தாநே பவநே நராணும்
ஹோராக் மக்ஞைஃ பரிசிந்தநீயாஃ (ஜாதகாபரணம்)

கர்பாத்ய விநேயாநாம் மந்த்ரஸாத நயோரபி।
வித்யா புத்தி ப்ரபந்தாநாம் ஸுதஸ்தாநாத் விநிச்சயஃ (புவனதீபிகை)

எனவரும் பிரமாண வசனங்களினுல் ஐந்தாமிடம் புத்திஸ்தானமென்று ஏற்படுகின்றது. ஆனுல் சர்வார்த்தசிந்தாமணி நூலுடையார் "பந்துபவநேது.........ஆத்மவ்ருத்தி.........ப்ரூயாத" என்ற சுலோக வசனத்தினுல் இருதயஸ்தானம் நான்காமிட மென்றும், விவேக (புத்தி) ஸ்தானம் "ஸுதபவநாத்.........விவேக சக்திஞ்ச நிர்திசேத்" என்றும் கூறியிருக்கின்ருர். ஜாதகார்ணவ முதலிய மிக சமீபகாலத்து நூற்களும் இதையே ஆதரித்து கூறுகின்றன. குமாரசுவாமீய நூலுடையார் "மனத்திணுக்கு ஐந்தினில் மதிபொன் புகரவனுங்கூட" என்ற செய்யுளில் 9-ல் சந்திரன்-குரு-சுக்கிரன் இருந்தால் எனக் கூறவந்தவிடத்தில் மனத்தின் ஸ்தானமாகிய ஐந்தாமிடத்திற்கு ஐந்தில் இருந்தால் என்றுரைத்தலின் ஐந்தாமிடத்தை மனத்தின் ஸ்தானமென்று விளக்கியிருக்கின்ருர். ஆகவே ஐந்தாம் பாவகத்தையே மனம் - புத்தி - சித்தமா மிவற்றின் இயல்புணரும் ஸ்தானங்களென்று சந்தேகமின்றி அறிதல்வேண்டும். மனத்திற்கு இதயம், இருதயம், உள்ளம், சித்தம் என்ற பல பெயர்களுண்டு. இப்படியே புத்திக்கு ஞானம், அறிவு, உண்மை, தெளிவு என்ற பல பெயர்களுண்டு. மனம், புத்தி, சித்தம், அகங்கார மென்னும அந்தக்கரணங்களில் மனம் வேறு, புத்தி வேறு, சித்தம் வேறு, அகங்காரம் வேறு என்று வேதாந்த நூற்களில் கூறப்பட்டிருந்தாலும் சோதிடசாஸ்திர சம்பந்தத்தில் மட்டும் மனம், சித்தம் ஒன்றென்றும், புத்தி வேறுஎன்றும்கூறப்பட்டிருக்கின்றன. வேதாந்த நூற்களில் மனத்திற்கு அதிதேவதை சந்திரன் என்று கூறியபடியே, சோதிடசாஸ்திரத்திலும் "ஆத்மா அர்க்க சந்த்ரமாசித்தஃ......... குருர் ஜ்ஞாநம்" என்ற சுலோக வசனத்தில் ஆத்துமகாரகன் சூரியன் என்றும், சித்தம் (இருதயம்) ஆகிய மனத்தின் காரகன் சந்திரன் என்றும், அறிவு (புத்தி) ஆகிய ஞானகாரகன் குரு என்றும் கூறப்பட்டிருக்கின்றன. ஆகவே ஆத்தும, புத்தி, இருதய (மனம்-சித்த) ஸ்தானங்கள் ஐந்தாமிட மென்பதும், இவற்றின் காரகர்கள் முறையே சூரியன் - குரு - சந்திரன் என்றும் பெறப்பட்டதுணர்க.

இனி மனம், புத்தி, ஆத்துமா என்பவைகளைப் பற்றிக் கூறப்படும். அதாவது மனம் என்பது பகுத்தறிவுக்குக் கருவியாயுள்ள சக்தியாகும்; புத்தி அல்லது அறிவு; அல்லது ஞானம் என்பது ஒருபொருளைஉள்ளவாறு அறியும் ஆற்றலாகும். ஆன்மா; அல்லது உயிர் என்பது அறிவின் வடிவமாகும். ஆகவே ஆத்தும இன்பத்தைப் பெறுதற்கு அறிவு உற்ற சாதனமென்பதும், அறிவின் முதிர்ச்சியைப் பெறுதற்கு மனம் உற்ற சாதனமென்பதும், ஆத்துமா, அறிவு, மனம் இவைகளின் திண்மை புண்மைகளையுணர்தற்குரிய இடம் ஐந்தாமிட மென்பதும் நன்கு பெறப்பட்டன. இங்கு 'ஆத்துமா' என்பது ஆத்துமஞானத்தை என்றறிக. ஆத்துமாவெனின் ஜீவன் எனவே உடம்போடு உயிர்கூடிவாழும் நாட்களை அறிதல் என்பதல்ல. அதற்குரிய ஸ்தானம் 3, 8-ஆமிடங்களாகும்.

ஆகவே ஐந்தாவது பாவகத்தினால்:—

1-புத்திர ஒற்றுமை(அ)
2-தந்தையின் தந்தை
3-சந்ததி
4-பூர்வநல்வினை
5-பிரபந்தவுணர்ச்சி
6-கர்ப்போற்பத்தி
7-மந்திரோபதேசம்
8-அதர்வவேதப்பயிற்சி
9-புத்தி
10-மனக்கூர்மை
11-நீதிசாஸ்திரம்(ஆ)
12-புராணம்
13-மந்திராலோசனை
14-பத்திரிகைகமனம்
15-சுபவார்த்தை
16-தூரதேசத்தாலுண்டாம் விசனம்
17-வித்யாபிரசங்கம்

ஆகிய இவைகளைக் கூறுதல்வேண்டும். (5)

## சத்துரு பாவகம் (ஆறுமிடம்)

மாதுமன் வியாதி சத்துரு பீடை
மற்றும்ஆ யுதங்களால் இரணம்
ஓதிய ஞாதி யால்வரும் துன்பம்
உயுத்தம் மெய் வாதைபொன் கண்டம்
பேதமாம் கள்வர் புனல்மடந் தையரால்
பெருகுபாம் பாலும்நோய் ஊது
நீதிசேர் பிரதா னிகர்விதிச் சிறையின்
நிலைமைஆ றுமிடங் குறித்தே.

(இ-ள்) அம்மானும், நோயும், பகைவர்களால் உண்டாகுந் துன்பமும், ஆயுதத்தால் ஏற்படும் புண்களும், தாயாதிகளால் ஏற்படும் உபத்திரவமும், சண்டையும், சரீரவருத்தமும், பணநஷ்டமும், திருடர்பயமும், நீர்க்கண்டமும், பெண்களாலுண்டாகும் வியாதியும், சர்ப்பகண்டமும் நியாயத்தையுடையஅதிகாரிகளால் விதிக்கப்பட்ட சிறைவாசமும ஆகிய இவைகளை ஆறும் பாவகத்தினால் சோதிட விற்பன்னர்கள் சொல்லுவார்கள் எ-று.

(வி-ரை) வியாதிகள் பலவகைப்படும். அவற்றின் தொகை வருமாறு:-

அகத்தியர் கேட்டிடுக அனாதி எல்லை
ஆவார கத்துஆண வத்தின் நின்றும்
சகத்தின்உழை உருத்திட்ட அனுவ ருக்கம்
தாங்கிடும்ஆல் தனுகரண புவன போகம்
வகுத்தஉடல் தன்மார்த்த காம மோக்கம்
வாய்த்திடற்குச் சாதனமா நண்ணும் ஏனும்
அகத்தடைவே கன்மத்தால் உண்டாம் நோய்நால்
ஆயிரத்து நானூற்று நாற்பத்து எட்டே.

(திருவான்மியூர் புராணம்)

ஐந்தாமிடம் அம்மானுடைய ஸ்தானமென்பது அல்லவென்றும், ஆறுமிடமே அம்மானுடைய ஸ்தானமென்றும், முன்பு கூறிப்போந்த ஏதுக்களால் நன்கு துணியப்படும். ஆகவே மாதுருஸ்தானத்திற்கு 3-ஆமிடமான 6-ஆம் இடத்தைக்கொண்டு தாய்க்குப்பின் பிறந்த கனிஷ்ட ஆண் பெண்

சகோதரர்களுடையவும், மாதுருஸ்தானத்திற்கு 11-ஆமிடமான 2-ஆமிடத்தைக்கொண்டு தாய்க்குமுன் பிறந்த ஜேஷ்ட ஆண் பெண் சகோதரர்களுடையவும் தொகையையும், சுகதுக்கங்களையும் அறிந்துகொள்ள வேண்டியது நியதியாகும். இது பொதுவிதி சிறப்புவிதி எங்ஙனமெனின்? கூறுவாம். தாயுடன்பிறந்த கனிஷ்டஜேஷ்ட ஆண்பாலார் அம்மான் எனப்படுவர். கனிஷ்டஜேஷ்ட பெண்பாலார் முறையே சிறியதாயார், பெரியதாயார் எனப்படுவர். ஆனால் தாய்க்கு நேர்மூத்த ஆண்பாலே ஜேஷ்ட அம்மானுவன், நேர் இளைய ஆண்பாலே கனிஷ்ட அம்மானுவன். தாய்க்கு முன்னே (1) அல்லது (2) பெண் சகோதரங்கள் இருந்துஇவர்களுக்கு முன் (1) அல்லது (2) (3) ஆண் சகோதரங்கள் இருந்தால் இவர்களுள் 1-வது ஆணே ஜேஷ்ட அம்மான் ஆவன். மற்றிருவரில் 2-வது ஆண் ஜேஷ்டனுக்கு ஜேஷ்டனுவான். அதற்குமேலும் இங்ஙனமேயாம். கனிஷ்டபாகத்திலும் இங்ஙனமேயாம்.

இந்த முறையினுல் 6-ஆமிடத்திற்கு 3-ஆமிடமாகிய எட்டாமிடத்தினுல் கனிஷ்ட அம்மானுக்குக் கனிஷ்டர்களுடையவும், 2-ஆமிடத்திற்கு 11-ஆமிடமாகிய 12-ஆமிடத்தினுல் ஜேஷ்ட அம்மானுக்கு ஜேஷ்டர்களுடையவும் நன்மை தின்மைகளை அறிதல்வேண்டும். பின்னும் முன்னும் மறுபடியும் இங்ஙனமே அறிக. சகோதர பாவகத்திற்கும் இப்படியே அறிதல்வேண்டும். அதாவது 3-ஆமிடத்தினுல் தனக்கிளைய சகோதர சங்கியைகளையும், 11-ஆமிடத்தினுல் மூத்தசகோதர சங்கியைகளையும் அறிதல் வேண்டும். 3-ஆமிடத்தினுல் தனக்குப் பின்னுதித்த நேர் இளையசகோதரத்தினுடையவும், 3-க்கு 3-ஆமிடமாகிய ஐந்தாமிடத்தினுல் கனிஷ்டத்திற்குக் கனிஷ்டருடையவும், 11-க்கு 11-ஆமிடமாகிய ஒன்பதாமிடத்தினுல் ஜேஷ்டருக்குச் ஜேஷ்டருடையவும் சுகதுக்கங்களைப் பார்த்துணர்தல் வேண்டும்.

இவ்வுண்மையை உற்றுணராது ஒரு ஜாதகத்தில் "சந்த்ராத் த்ரிகோணகே சூர்யே, மாதுலோம் ரியதேத்ருவம்" என்றபடி அம்மானுக்குத் தோஷமென்று ஏற்பட்டால் அம்மான்மார்கள் பலருக்கும் தோஷமென்று மயங்கி இடர்ப்படுவர் சில்லோர். சகோதர தோஷத்திற்கும், பிதிர் சகோதர தோஷத்திற்கும் இங்ஙனம் ஊகித்துரைத்தல் சாலக்கற்ற நல்லறிவாளர் கடமையாகும்.

பராசரஹோரை பூர்வகாண்டம் 8-வது காரகாத்யாயம் சுலோகம் 81-முதல் 88-வரையில்.

> அர்யம்ண: புண்யபே தாத இர்தோர்மாதாச தூர்யத:
> குஜாத்த்ருதீயதோ ப்ராதா மாதுலோ ரிபுபாத் புதாத்.
>
> தேவேஜ்யாத் பஞ்சமாத் புத்ரௌ தைத்யயேஜ்யாத்த்யூநபாத் ஸ்திரிய மந்தாதஷ்டமதோ ம்ருத்யுஸ் தாதாதீநாம் விநிந்தயேத்.

எனக் கூறப்பட்டிருத்தலின் அம்மான் விஷயத்தை ஆறும்பாவகத்தினுலும் புதனுலும் அறிதல் வேண்டுமெனப் பெறப்படுதலின், அம்மான் பாவகம் ஆறுமிடமென்பதை யாவரே மறுக்க வல்லுநர். அஷ்டகவர்க்கில் அந்தந்த காரகர்கள் இருக்குமிடத்திலிருந்து அந்தந்த காரகபாவகத்திலுள்ள பிந்துவினுல் சோத்தியபிந்துவைப் பெருக்கி 27-ஆல் வகுத்துக்கண்ட மீதத்திரிய நக்ஷத்திரத்திலும், அதன் திரிகோணநக்ஷத்திரங்களிலும் சுபர்வரும்போது

சுபபலத்தையும், பாவர்வரும்போது பாபபலத்தையும் கூறுதற்கு இச்சுலோக வசனமே சாலச் சிறந்ததாகும். மற்றும்:—

வைரிவ்ராதஃ க்ரூரகர்மா மயாநாம்சிந்தா
சங்கா மாதுலாநாம் விசாரஃ
ஹோராபாராவார பாரம் ப்ரயாதைரேதத்ஸர்வ
சத்ருபாவே விசிந்த்யம். (ஜாதகாபரணம்)

எனக் கூறியிருத்தலால் ஆறும் பாவகத்தினால் சத்துரு - குரூரகர்மம் ரோகசிந்தை சங்கை - மாதுலன்விசாரம் இவைகளை விசாரித்தல் வேண்டு மென்பதாம்.

வைரீ வராத க்ரூரகர்மா மயாநாம்
சிந்தா சங்கா மாதுலாநாம் விசாரஃ
ஹோரா பாரா வார பாரம்
ப்ரயாதை ரேதத் ஸர்வம் சத்ருபாவே விசிந்த்யம்.
(பிருகத்யவனஜாதகம்)

அஸ்வாஸ் த்யதா ஸ்போடக வாக்ஷதாஸ
க்ரூரோக கர்ம பரம்ருத்யு சங்கா
யுத்தாரி பீதி மாதுல மாஹிஷாத்யம்
ரோகஸ்ச சிந்த்யோ ரிபுஸம்ஜ்ஞ பாவே. (பைரவதீபிகை)

ரிபௌ மாதுல மார்த்யாதி சதுஷ்பாஜ் ஜந்துபீ ஸ்வர்ணம். (நீலகண்டர்)

ஸௌரபீ ரிபுஸங்க்ராமோ கவோஷ்ட்ர க்ரூரகர்மணும்
மாதுலா தங்கசங்காநாம் ரிபுஸ்தாநாத் விநிர்ணயஃ (புவநதீபிகை)

மாதுலாந்தக சங்காநாம் சத்ரூச்சைவ வ்ரணாதிகாந்
ஸபத்நீ மாதரச்சாபிஹ யரிஸ்தாநாந் நிரீக்ஷயேத். (பராசரஹோரை)

எனவரும் இத்தியாதி சுலோக வசனங்களினால் ஆறும்பாவகமே அம்மானுக் குரிய ஸ்தானமென்பது நன்கு போதரும். மற்றும்:—

பௌம த்ருஷ்டி ஸமவேக்ஷிதே ரிபௌ
வைரி நாசநகரே நரஸ்ய ஹி
மாதுலீய ஸுகநாசநஃ ஸதா
லோஹ சஸ்த்ர ருதிராக்நி பீடநம்.

ஷஷ்டே க்ருஹே சந்த்ரஸுதேந வீக்ஷிதே
விசேஷதோ மாதுலஜம் ச ஸௌக்யம்
பராப வாதீ பரகர்ம காரீ
நாநாரி புத்வேஷ கரச்ச ஸஸ்யாத். (பிருகத்யவநஜாதகம்)

எனவரும் சுலோக பிரமாணத்தினால் ஆறுமிடம் அசுபதிருஷ்டியுடன் இருந்தால் அம்மானுக்கு சுகநாசமுண்டென்றும், சுபதிருஷ்டியுடன் இருந்தால் சுகவிருத்தி யுண்டென்றும் ஏற்படுதலால் ஆறுமிடமே அம்மானுக் குரிய ஸ்தானமென்பதில் எட்டுணையுஞ் சந்தேகமில்லை. ஆதலால் இச் செய்யுளில் "மாதுகேள்" என்ற பதத்தை "மாதுலன்" எனத் திருத்தி அமைக்கப்பட்ட தென்பதாம்.

அதிகாரஸ்தானம் பத்தாமிட மாதலால் ஆறாமிடம் எவ்வாற்றானும் அதிகார ஸ்தானமாகாது. இதுபற்றியே "நீதிசேர் பிரதா னிக்கமும்" என்றதை "நீதிசேர் பிரதா னிகர்விதி சிறையின்" என்று நியாயாதிபதி களால் விதிக்கப்படும் சிறைவாசம் என்று பொருள் கூறப்பட்டதென்க. அதாவது நீதி தவறாத அரசாட்சி செய்பவர் என்பது கருத்து.

ஆகவே ஆறாவது பாவகத்தினால்:—

| | | |
|---|---|---|
| 1-அம்மான் (அ) | 8-பணநஷ்டம் | 15-தாஸஜனங்கள் |
| 2-நோய் | 9-திருடர்பயம் | 16-காரியவிக்னம் |
| 3-பகைவர் | 10-ஜலகண்டம் | 17-சந்தேகம் |
| 4-ஆயுதவிரணம் | 11-ஸ்திரீவியாதி | 18-மந்தகுணம் |
| 5-தாயாதிகள் | 12-சர்ப்பகண்டம் | 19-தூஷணம் |
| 6-கலகம் | 13-சிறைவாசம் | 20-குரூரகாரியம் |
| 7-சரீரவருத்தம் | 14-நாற்கால்ஜீவன் (ஆ) | 21-வைரூரி |

ஆகிய இவைகளைக் கூறுதல்வேண்டும்.

'பொன்' என்பது இருபது சின்னப்பணத்தினுக்குத் தொகைப்பெயர். இஃது சேரசோழபாண்டிய நாட்டு வழக்கு. 'பணம்' என்பது சின்னப் பணம், பெரியப்பணம் என்னும் இருவகைப் பிரிவுடைய ஓர் செப்புநாணய மாகும். ஆதிகாலத்தில் இவ்வித நாணயங்கள் பஞ்சலோகங்களுள் செய்யப் பட்டிருந்தது. பின்பு வெள்ளி, பொன் முதலியவற்றால் செய்யப்படு கின்றன. நாணயம்=சொல் தவறாமை. அது பொன் முதலியவற்றைக் கொடுக்கல் வாங்கலா யுண்டாவது.

*வேந்தன் அவ்வுரை கேட்டலும் வியன்மணி நெடுந்தேர்*
*கூந்தல் மாவுளம் அறிந்தனை குறிப்பின் ஊர்குதியேல்*
*ஆய்ந்த செம்பொன் ஓராயிரம் வைகலும் அளிப்பல்*
*ஏய்ந்த என்னிரு பாகரோடு இருத்திஎன்று இசைத்தான்.*

எனவரும் நைடதம் வேற்றுருவமைந்த படலம் 16-வது கவியின் உரையில் பொன் இருபது சின்னப்பணம் என்று வரைந்திருத்தலால் நன்கறியலாம். 'சின்னப்பணம்' என்பது தற்காலம் வழங்கப்படும் ஒரு ரூபாயில் 12-ல் ஒரு பாகங் கொண்டதாகும். பொன் என்பதற்குக் காசு என்னும் பொருள் காணப்படுதலின், அந்தந்த அரசர் காலங்களில் வழங்கப்படும் ரூபாய் என் பதைப்போன்ற பெரிய நாணயமென்று பொருள் கூறுவாருமுளர். (6)

## களத்திர பாவகம் (ஏழாமிடம்)

குறித்திடும் கமனம் மணம்மடந் தையர்க்கும்
  குமரர்கள் தமக்கும் நல்இன்பம்
நிறுத்திடும் விபகா ரம்தமர் கூட்டம்
  நேமியோர் உதவுசன் மானம்
பிறித்துஅறி வியாபாரம் மணம்புரி நாள்
  பின்மனை யாள்வியம் பெறுதல்
மறிக்கயல் விழியாய் ஏழிடம் கொண்டு
  வழுத்துவர் மறைமொழிப் புலவர்,

(இ-ள்) விவாக விஷயத்தை எண்ணிப்போதலும், ஸ்திரீகளுக்கும் புருடர்களுக்கும் உண்டாகும் சிற்றின்பமும், வழக்கும், சுற்றத்தார் சேர்க்கையும், உலகத்தவர்களால் கொடுக்கப்படும் ஈகையும், வரவு செலவுகளைப் பகுத்தறிந்து செய்யும் வியாபாரமும், திருமணம் நடக்கும் காலநிர்ணயமும், பின்பு மனைவியின் ஆயுளும் ஆகிய இவைகளை ஏழாம் பாவகத்தைக்கொண்டு சோதிட சாஸ்திரத்தில் சிறந்த விற்பன்னர்கள் கூறுவர் எ-று.

(வி-ரை) முன் இரண்டாங் கவியில் "விரைத்தெழு கமனம்" என்று நடையைப்பற்றிக் கூறியிருத்தலின் இங்கு "குறித்திடுங் கமனம் மணம்" என்பதை "மணம் குறித்திடும் கமனம்" எனக் கொண்டு கூட்டி விவாக விஷயத்தைக் குறித்துச் சொல்லுதல் எனப் பொருள் உரைக்கப்பட்டது. யாற்றொழுக்காக "குறித்திடுங் கமனம்" என்பதற்கு நடைஎன்றும், 'மணம்' என்பதற்கு விவாகம் என்றும் பொருள் கொள்ளுதல் எட்டுணையும் பொருந்தாது. இக்கவியில் 3-வது அடியில் 'மணம்புரி நாள்' என்று விவாகம் ஆகும் நாளைக் கூறியிருத்தலின் முதல் அடியில் கூறிய 'மணம்' என்பதற்கு விவாகம் என்று பொருள் உரைத்தல் பொருந்தாது என்க.

'இன்பம்' என்பது சிற்றின்பம் - பேரின்பம் என்று இருவகைப்படும். 'சிற்றின்பம்' என்பது உலக இன்பமென்றும், 'பேரின்பம்' என்பது மோட்ச இன்பமென்றும்சொல்லப்படும். உலக இன்பத்தில் மனைவியிடத்தில் சந்ததி விருத்தியை நாடிக் கூடி அனுபவிக்கும் இன்பம் சிறந்ததாகலின் 'நல் இன்பம்' என்று கூறினர். இதுவே கலவி எனப்படும். இக்கலவி அறுபத்தினான்கு பிரிவினை யுடையதாகும். இதன் பாய்பைச் சிற்றின்ப நூற்களில் கண்டுணர்க.

> ஈதல்அறம் தீவினைவிட்டு ஈட்டல்பொருள் எஞ்ஞான்றும்
> காதல்இருவர் கருத்து ஒருமித்து—ஆதரவு
> பட்டதே இன்பம் பரனைநினைந்து இம்மூன்றும்
> விட்டதே பேரின்ப வீடு.
>
> ஆலிங்கனம் ஐந்தும் இதழ்ப்பானம் பதினொன்றும்
> அமிர்தம் பதினாறும் முகிர்எழுதும் குறியெட்டும்
> கோலம் புனைதந்த குறியெட்டும் குரல்எட்டும்
> குவிதாடனம் இருநான் கொடுகூடுங் கலவிக்கே.

என்பதனால் ஆலிங்கனம்-5, சும்பனம்-11, அமிர்தகலை-16, நகக்குறி-8, பற்குறி-8, குரல்-8, தாடனம்-8 ஆக 64-வகைக் கலவிகாரணங்கள் என்றறிக. தலைவனும் தலைவியுமாகக் கூடி இல்லறம் நடாத்துதலிலே தாங்கள் கொண்டுள்ள அன்பின் மிகுதியால் கூடிக் கலக்கும் புணர்ச்சி இன்பத்தை ஏழாம் இடத்தினால் அறிதல்வேண்டும் என்க.

> ஸந்துஷ்டோ பார்யயா பர்தா பர்த்ரா பார்யா ததைவச
> யஸ்மிந்நேது குலேநித்யம் கல்யாணம் தத்ர வைத்ருவம். (மனு)

என்ற சுலோகப்படி மனைவியால் கணவன் களிப்பினை யடைந்தவனும், மனைவியும் கணவனால் களிப்பினை யடைந்தவளாயும் எப்போதும் எக்குலத்தில் இருப்பாரோ? அக்குலத்தில் மங்கலமுண்டாகும். இது யாவரும் அறிந்தபடி தவறாதது,

யதாகாமீ பவேத்வாபி ஸ்த்ரீணும் பரம நுஸ்மரன
ஸ்வதார நிரதச்சைவ யேநாரக்ஷ்யாஃ ஸ்த்ரிய ஸம்ருதாஃ. (யாக்ஞவற்கியர்)

அதாவது: இந்திரன் மாதர்க்குக் கொடுத்திருக்கும் வரத்தினை ஞாபகஞ் செய்துகொண்டு, தன்னுடைய மனைவியைப் பிரியாதிருந்து (எனவே, வேறு மாதரை விரும்பாது) அவளது காமத்தினைப் போலத் தானுங் காமமுடையவனாய் ருது வல்லாத காலத்திலும் புணர்ச்சி செய்யலாம். ஏனெனில்? மாதர் காக்கப்படத் தக்கவராக இருக்கின்றார்கள். எனவே, கணவன் தான் இச்சைப்படி உடன்படத் தக்கவனும் வேறு மாதரை விரும்பாதவனும் இருந்தால் அந்த மாதுக்கு வியபசாரக்குற்றம் உண்டாகாதென்பது கருத்து. மற்றும்,

ஸ்வயம் தாராந் ருதுஸ்நாதாம் த்ஸ்வஸ்தச் சேந்நோப கச்சதி
ப்ரூணஹத்யாம் ஸமாப்நோதி கர்மம் ப்ராப்தம் விநாசயேத். (தேவலர்)

அதாவது: மனைவி பூப்பினையடைந்து நீராடி இருக்கையில் தான் துன்பம் அற்றவனாக இருந்தும் அகங்காரத்தால் யாரொருவன் புணர்ச்சி செய்யாமல் இருக்கின்றானோ அவன் சிசுக்களைக் கொலைசெய்த பாவத்திற்குப் போகின்றான்; கிடைக்கத்தக்க கருப்பத்தினையும் பாழ்படுத்துகின்றான் என்றறிக.

அமாவாஸ் யாஷ்டமீ சைவ பௌர்ணமாஸீ சதுர்தசீ
ப்ரஹ்மசாரீ பவேந்நித்ப மப்ருயதெள்ஸ் நாதகோத்விஜஃ
தாஸாமாத்யாச் சதஸ்ரஸ்து நிந்திதை காதசீசயா
த்ரயோதசீ ச சேஷாஸ்து ப்ரசஸ்தா தசராத்ரயஃ. (மனு)

எனவரும் சுலோக வசனங்களினால் அமாவாசை, அஷ்டமி, பூரணை, சதுர்த்தசி, சங்கிரமணகாலம் ஆகிய இந்த நாள்களில் இல்லறத்தான் தன் மனைவி இருது ஸ்நானஞ் செய்து சுத்தமாயிருக்கும் நாளேயாயினும் புணர்தல் கூடாது. கூடுதற்குரிய பதினாறு இரவினுள்ளும் முதனான்கிரவும், பதினோராம்நாள் இரவும், பதின்மூன்றாம்நாள் இரவும் விலக்கப்படவேண்டும்.

மனைவி பூத்து நீராடியபின் பன்னிரண்டு நாளும் அவள் கருப்பங் கொள்ளும் காலம் ஆதலால் அவளினின்று பிரியாதொழுகுதல் தலைவன் கடனாகும். இதனை,

பூத்த காலை புனையிழை மனைவியை
நீரா டியபின் ஈரா று நாளும்
கருவயிற் றுறூஉங் கால மாதலில்
பிரியப் பெறாஅன் பரத்தையிற் பிரிவோன்.

(அகத்திணையியல் சூத்திரம்)

இதன் விரிவை சோதிடகலாநிதி முதல் தொகுதியில் கர்ப்பாதானம் என்ற வியாசத்தில் நன்கு தெளிக.

"தமர் கூட்டம்" சுற்றத்தார் நேயம் என்க. முன்பு நான்காம் பாவகத்தில் "விரும்பு நல்லுறவினர்" என்றது சுற்றத்தாருடைய சுகதுக்கங்களை என்க. இக்கவியில் கூறியது சுற்றத்தார்க்கும் தனக்குமுள்ள ஒற்றுமையை என்றறிக.

"நேயியோர் உதவு சன்மானம்" என்பதற்கு அரசர்கள் அளிக்கும் சன்மானம் என்பர் சிலர். தொல்காப்பிய வுரையில் "வடநூலுள் உலக

மென்பது இருபொருட்கு முரித்தாக ஓதப்பட்டமையின், மக்கட் டொகுதியை யுணர்த்தும் வழியும் உரிய பெயரே யாதலின் ஆகுபெய ரன்று" என்று சேனாவரையரும் "அங்ஙனம் மக்கட் டொகுதியை யுணர்த்துங்கால் உரிய பெயராலே யுணர்த்திற்று. "ஆகுபெய ரன்று" என்று நச்சினார்க்கினியாரும் உரைத்தவாற்றாலும், நேமி என்பது இடத்தை உணர்த்தும் பொழுதிற்போலவே இடத்திலுள்ளாரை யுணர்த்தும்பொழுதும் ஆகுபெய ரன்றி இயற்பெயராகுதலால் நேமி என்பதற்கு இங்கே உலகத்துள்ளார் எனப் பொருள் கொள்ளப்பட்டது என்க.

"பின் மனையாள் வியம் பெறுதல்" என்பதற்குச் சிலர் மனைவியின் க்ஷேமசுகங்கள் என்று பொருள்கூறுவர். அது எட்டுணையும் பொருந்தாது. வியம்பெறுதல் எனின் மனைவியை இழத்தல்; மனைவியின் ஆயுள் முடிவை அறிதல் என்றறிக. வியம் என்பதற்கு செலவு என்று பொருளாகும். இதனை "அருள் சன்ம லக்கினாதி பாவனாய் வியம் ஆறெட்டில்" எனவும், "பற்றிய வியம் ஆறு எட்டில் சுபர் நோக்க கிற்கில்" எனவும் வரும் இந்நூல் 436-445-ஆம் செய்யுள்களினால் வியம் என்பதற்குப் பன்னிரண்டாமிடம் எனக் கூறியிருத்தலின் அஃது செலவுக்குரிய இடமாகலின் மனைவியின் ஆயுளை அறியக்கூடிய இடம் ஏழாமிடம் என்று அறிக.

அந்த மாகிய சத்தமம் ரண்டுமே
ஆன சாதக னுக்கிது மாரகம்
சிந்தை மேவிய பத்துடன் ஐந்துமே
சேரவே யன்னைக் கேயது மாரகம்
விந்தை மேவிய நாலுடன் ஒன்பதும்
வீறும் சோதர மாரக மாகுமே
புந்தி மேவிய ஆறுபன் னொன்றுமே
புத்திர மாரக மென்று புகலுமே.

ஆகும்ஏழ் பன்னி ரணடிடஞ் சத்துரு
ஆன எட்டுடன் சன்மம் களத்திரம்
வாகு சேருமுன் மூன்றுடன் பத்துமே
மன்னுந் தந்தையின் மாரக மாகுமே
ஏகுமே ழன்பனி ரண்டிடம் மாதுலன்
என்று முன்ன மியம்பினர் நூல்வலோர்
பாக மேவிய வீமேசர் போற்றியே
பாருளோர் மார கத்தி னியலையே.

(வீமேசுரம்-எட்டுப்பிரதி)

எனவரும் செய்யுள் வசனத்தினால் அந்தந்த பாவகங்களுக்கு இரண்டு ஏழாமிடங்கள் மாரகஸ்தானம் என்று அறியலாம். ஆகவே ஏழாம் வீட்டிற்கு 2-ஆமிடமாகிய 8-ஆமிடமும், 7-ஆமிடமாகிய இலக்கினமும் களத்திர மாரகஸ்தானமென்று ஏற்படுதலின் 7-ஆமிடத்தை களத்திர நஷ்ட ஸ்தானமென்று கூறுவது என்னே? எனின், ஏழாமிடம் அதன் அதிபன், அதில் இருந்தவர் பார்த்தவர்களால் களத்திரத்தின் நிறம் குணம் ஆயுள் முதலியவற்றையும், 8-1-ஆமிடம், அவ்வதிபன், அதிலிருந்தவர் பார்த்தவர், அவ்வதிபனுடன் சம்பந்தப்பட்டவர்கள் திசை புக்தி காலங்களில் களத்திர நஷ்டம் உண்டாதலையும் அறிதல்வேண்டும் என்றறிக.

மனை-வீடு; அதிலிருந்து சமுசார காரியங்களை நடத்தி ஆள்பவன் ஆதலால் மனையாள் எனக் காரணக்குறியாகும். மனையாள் இல்லாவிட்டால் சமுசார வாழ்க்கைச் செவ்வையாக நடவாது. இதுபற்றியே மனையாளுக்கு வாழ்க்கைத் துணைவி என்று ஒரு பெயருமுண்டு. இதுபற்றியே "இல்லாள் அகத்திருக்க இல்லாத தொன்றுமில்லை" எனக் கூறினர் பெரியார் என்க. மனை-மனையாளுக்கு இடவாகுபெயர்.

வஸ்த்ர க்ரயஸ்தாந வணிக் ஸுவாதா:
க்ரயோஜயோ தாஸ களத்ர ஸௌர்யம்
நிவ்ருத்தி மத்யேச கமாக மாத்யம்
களத்ர பாவே விசார்ய மேதத். (பைரவ தீபிகை)

உத்வாஹம் சத்ருஜய தஸ்கர நஷ்டவஸ்து
யுக்மேத மந்த்ரய நுகதாநிச ஸப்தமே. (யவனாசாரியர்)

த்யூநே களத்ர வாணிஜ்ய நஷ்டவிஸ் ம்ருதிஸங்கதா
ம்ருதாத்வக விமார்காதி சிந்த்யம் த்யூநக்ர ஹோரசுப: (நீலகண்டர்)

வாணிஜ்யம் வ்யவஹாரஞ்ச விவாதஞ்ச ஸமம்பரை:
கமாகம களத்ராணி பச்யேத் ப்ராக்ஞ களத்ரத:. (புவநதீபிகை)

நான்காம் பாவகத்தில் "சூழ்வியாபாரம்" என்றும், ஏழாம் பாவகத்தில் "பிறித்தறி வியாபாரம்" என்றும் கூறியிருத்தலின் 4-7-ஆமிடங்கள் வியாபார ஸ்தானமென்று அறியப்படுகின்றன. ஆனால் பைரவதீபிகை நூலுடையார் "வஸ்த்ர க்ரயஸ்தாந வணிக்" என்று கூறியிருத்தலால் 4-ஆமிடம் தானியாதி பலவகைப்பட்ட வியாபார ஸ்தானமென்றும், 7-ஆமிடம் வஸ்திரம் கம்பள முதலிய வியாபார ஸ்தானமென்றும் அறிதல் வேண்டும்.

குமாரசுவாமீய நூலுடையார்,

ஊழ்அனலன் நீலன்பார்க்க பார்க்கவன் இல்சேரில்
ஒழியாத வெகுகாமத்து உழலுவது இங்குஇவனும்
வீழுவது வாக்குஉடலம் கேள்வி இறையம்புகராய்
மேதை வர்க்கத்து உறில்காமம் வெறுத்திடுவது இவனே.

என்றுகூறி இருத்தலின் ஏழாமிடம் காமஸ்தானம் என்று நன்கு துணியப் படும். மற்றும் "போகத்தானத்தோன் சுங்கன் வலியினில் பொலியச் செவ்வாய்" எனவும், மருவிய மதனத்தானம் வருஞ்சல ராசியாக" எனவும், சாதக கணிதாமிர்தம் கூறுமாற்றால் ஏழாமிடம் போகஸ்தான மென்பது திண்ணம். முன் மூன்றாவது கவியில் "வெற்றிகொள் போகம்" என்பதற்கு பெண்போகமென்று மயங்குவோர்க்கு இதனால் அம்மயக்கு ஒழியுமென்பது நிச்சயம். ஆகவே ஏழாம் பாவகத்தினால்,

| | | |
|---|---|---|
| 1 விவாககமனம் (அ) | 5 சன்மானம் | 9 வஸ்திரவியாபாரம் (ஆ) |
| 2 சிற்றின்பம் | 6 வியாபாரம் | 10 போகசக்தி |
| 3 வழக்கு | 7 விவாககாலம் | 11 களத்திர சுகதுக்கம் |
| 4 சுற்றம் சூழ்தல் | 8 மனைவி ஆயுள் | |

ஆகிய இவைகளை அறிதல் வேண்டும்.

ரமலரஹஸ்யம் ஐந்தாம் அத்தியாயத்தில் "யதிதர்ம பார்யாயா: ப்ரச்நம் சேத்ததா ஸப்தமக்ருஹே அவலோகநம் குர்யாத், போகபத்நீநாந்து சதுர்த்த

க்ருஹாத் ஏவம் ஸர்வாபிப்ராயாணும்" என்ற வசனத்தினுல் ஏழாமிடம் விவாக பத்தினி ஸ்தானமென்றும், நான்காமிடம் போக (சேர்க்கை) பத்தினி ஸ்தானமென்றும் அறியப்படுகின்றன. (7)

## ஆயுள் பாவகம் (எட்டாமிடம்)

புலவுறும் படையால் வாதைசேர் யுத்தம்
பொருப்பின்மேல் ஏறிவீழ்ந் திடுதல்
நிலைபெறும் வியாதி விக்கினம் கிலேசம்
நீள்பல துன்பம் ஓடுஇரணம்
சிலவினுல் நட்டம் ஆம்விழுக் காடு
செறிபகை மரணமித் தனையும்
உலகினில் உயர்ந்தோர் அட்டம பலன்கண்டு
உரைசெய்வார் உண்மைபெற் றிடவே.

(இ-ள்) புலால் நாற்றம் வீசப்பட்ட ஓர் ஆயுதங்களினுல் உண்டாகும் துன்பமும், சண்டை செய்தலும், மலையின்மீது ஏறி தவறி வீழ்தலும், நீங்காது வருத்தும்நோயும், இடையூறும், மனக்கவலையும், நீடித்த பலவகையான உபத்திரவம்; அல்லது வருத்தமும், புணணும், வரவுக்கு மீறிய செலவினுல் உண்டாகும் கெடுதியும், மானக்குறைவும், அதிகமான விரோதம்; அதாவது நீங்காத பகையும், வாழ்நாளின் முடிவுகாலமும் ஆகிய இத்தனை விஷயங்களையும் இந்த நிலவுலகத்தில், கல்வி அறிவு கேள்விகளால மேம்பட்ட சோதிடப்புலவர்கள், எட்டாம் பாவகத்தைக்கொண்டு நிச்சயமாகும்படி கூறுவார்கள் எ-று.

(வி-ரை) ஆறும் வீட்டினுல் இலகுவில் தீரும் வியாதிகளையும், எட்டாம் வீட்டினுல் தீராத கர்ம வியாதிகளையும் அறிந்து கூறுதல் வேண்டும்.

அட்டமம் இரண்டம் ஆயுள்என்று அறையும்
மரணதத் துப்பயம் இலிங்கம்
நட்டமாய் விழுதல் பரிகொடுத் திடுதல்
நவிலந்த நாஞ்சித்தி ரத்தோடு
ஓட்டிய சோரம் பலாயநம் வஞ்சம்
உக்கிரம் அவன்சிறைப் படுதல்
இட்டமாம் நேத்ர ரோகம்நீர் ஏற்றம்
இலகுநாற் காலதால் பயமே. (சாதக சிந்தாமணி)

என்ற செய்யுள் வசனத்தினுல் அஷ்டம ஸ்தானத்திற்கு ஆயுள் என்று சொல்லப்படும் மரணஸ்தானமென்றுபெயர். ஆயுள் என்பதற்கு உடம்போடு உயிர்கூடி வாழ்நாள் என்றும், மரணம் என்பதற்கு உடம்பைவிட்டு உயிர் நீங்கும்நாள் என்றும் பெயர். இலக்கின பாவகத்தினுலும் இந்த வாழ்நாளின் எல்லையை அறிதல்வேண்டும் என்றறிக.

சர்வார்த்த சிந்தாமணியில்,

கர்மேஸ்வரேணுபி விசிந்த்யமாயுः
தீர்கம்ஸ்வஹ்ருத் ஸ்வோச்சயுதேநதே

கேந்த்ரஸ்திதௌகர்ம விலக்நநாதௌ
தைதைவதீர்காயுர் உதாஹரந்தி.

என்றபடி தசமாதிபதி மித்திரம்-ஆட்சி-உச்சஸ்தானங்களிலிருக்க தீர்க்க ஆயுள் உண்டாம். மற்றும் தசமாதிபதி இலக்கினாதிபதி ஆகிய இருவரும் இலக்கினத்திற்குக் கேந்திரங்களில் இருந்தால் தீர்க்காயுள் உண்டாம்.

ப்ரோக்தைர் குணைர்வ்யோம ச்ரைஸ்
த்ரிபிர்வாபாநுனைஜை: சேந்த்ரகதைஸ்ததைவ
ஸ்வக்ஷேத்ர கோணாதிகதைர்
விசேஷாத்வதந்தி தீர்காயுருதாசித்தா:.

மற்றும் முன் சொல்லப்பட்ட குணமுடைய இலக்கின, அஷ்டம, தசம அதிபதிகளான அந்த மூன்று கிரகங்கள் சூரியனுடன் கூடி கேந்திரத்தில் இருந்தால் தீர்க்காயுள் உண்டாம். இந்த இலக்கின, தசம, அஷ்டமாதிபதிகள் மூவரும் நட்பு-ஆட்சி-உச்சமாய் கேந்திர திரிகோணங்களில் இருந்தால் தீர்க்காயுள் உண்டாம். மற்றும்,

ஆயு: ஸ்தாநாதிபா: பாபை: ஸஹைவயதி ஸம்ஸ்தித:
கரோத்யலபாயுஷம்ஜாதம் லக்நேசோஅப்யத்ர ஸம்ஸ்தித:
ஏவம்ஹிசநிநா சிந்தாகார்யா தர்கவிசக்ஷணை:
கர்மாதிபேநசததா சிந்தநம்கார்யம்ஆயுஷ:. (பராசரஹோரை)

அஷ்டமாதிபன், இலக்கினாதிபன், சனி, தசமாதிபன் இவர்களைக்கொண்டு ஆயுள் விசாரம் செய்யவேண்டும் என்பது இதன் கருத்தாகும். இந்த ஹோராசாஸ்திரத்தின் தசம பாவகத்தில் மறுபடி "அத்ர ஆயுஷச் சிந்தநம் ச கார்யம் ஸ்யாத் கர்மணஸ்ததா" எனக் கூறப்பட்டிருப்பதுங் காண்க.

ரமலரகசியம் அஷ்டம அத்தியாயத்தில் "ததா அஷ்டம க்ருஹே ப்ரதமக்ருஹேச பச்யேத், யத்யுபயக்ருஹே சுபகிர்கமோபவேத் ததா ப்ரஷ்டுர்நிகடே தாரித்ரதா நதிஷ்டேத் ததா கிஞ்சிது பத்ரவாதி கம்நோதிஷ்டேத்" என்று கூறப்பட்டிருக்கும் வாக்கியத்தினால் எட்டாமிடம் தரித்திர விசாரத்திற்குரிய ஸ்தானமென்று ஏற்படுதலின் "ஆம் விழுக்காடு" என்பதற்கு (விழுக்காடு=குறைவு ஆதலால், குறைவு=வறுமை) தரித்திரம் என்று பொருள் கூறுதல் அமையும்.

ஆறினில் புகரும் வியத்தில்அம் புலியும்
அருண்மாந்தி பவனன்உற் றிடினும்
பேறுள எழுஎட்டு ஐந்தினில் கதிர்க்கும்
பின்முன்னர் புதன் இருந்தாலும்
மீறிய ஆறு வியத்தினில் பாவர்
மேவிய உதயமும் இரண்டும்
பாறிய பாவ வர்க்கமாய்ப் பாவர்
பார்க்கினும் ஆதுலன் என்பார்.

(சாதக சிந்தாமணி ஆரும்பாவகம்)

மாதுசிதன் வர்க்கோத்தம மாகில் சனியாய்
மதிரவியாய்க் கதிர்மாலாய்த் துலைஉதையம் மருவி
ஈதுமுதற்கு எட்டுஅனல்பார்வைக்கு உடுக்கோள் இருக்கில்
இனன்மால்சுன் பார்வையுடன் யாழ்மீன் ஒன்றுஇலகில்

போதிருவா சன்பார்க்க மெய்மைஉறில் பிறைசேய்
புருவைஉற முடன்பார்க்கில் புரக்கடைமுன் நடுவாய்த்
தாதுமுதல் காலமுநோ சறியுறிலா துலனும்
சலவையுடுத்து இரப்பதிவன் தன்தொழில் சொற்றிடிலே.

(குமாரசுவாமீயம் ஆரும்பாவகம்)

எனவரும் பிரமாணங்களினால் ஆறாமிடம் தரித்திரஸ்தானம் என்று ஏற்படு கின்றது. மற்றும் குமாரசுவாமீயத்தில் எட்டாம்பாவகத்தில் 1-வது செய் யுளில் "அசடரொடும் கேந்திரகோண் அணையில் அவமானம்" எனவும், சர்வார்த்த சிந்தாமணியில் அஷ்டமபாவகத்தில் 1-வது சுலோகத்தில் "அந்ரஸு"க மரணதேசம் பரிபவம் அபிசிந்தயேத் ப்ராக்ஞ:" எனவும் கூறப்பட்டிருத்தலினால் எட்டாமிடம் அவமான ஸ்தானமென்று கொள் ளுவது சிறப்புடைதென்பதில் சிறிதும் ஐயமில்லை. தரித்திரஸ்தானம் எனினும் இழுக்கில்லை என்க.

கர்மேச ரந்த்ர தநுபா பலசாலிநச்சேஜ்
ஜாதசசிராயுர் அரிநந்த நயோக ஹீநாம்
த்வாவப்யதி பலிநௌ யதிமத்ய மாயுர்
ஏகோப லீலகுதராயு ரநாயு நந்யஃ.

(ஜாதக பாரிஜாதம்)

இலக்கின, அஷ்டம, தசமாதிபர்கள் ஆகிய மூவரும் வீரியமுடையவர்களாய் சனி சேர்க்கையின்றி இருந்தால் ஆயுள்தீர்க்கம். இருவர்களிருந்தால் மததிம ஆயுசும், ஒருவர் இருந்தால் அற்பாயுசும் ஆகும்.

ஆயுள் நிர்ணயத்திற்கு இலக்கினமும் அஷ்டமமும் போதியது அல்ல. தசமமும் அத்தியாவசியம் வேண்டப்படுவது ஆகும். இதனை,

லக்நாஷ்டம ஜீவித ஸ்புட கலிகாநாம் ஸமஷ்டி ரிஹகுண்யம்
லக்நாஷ்ட மாயுஷாச்ச ஸ்புட கலிகாநாம் ஸமஸ்டி ரதகுணகம்
ஸங்குண்யா ஷ்டோத்தரஸத பக்தாப்தம் கதமநுஷ்ய ஜந்மாக்யம்
பரிசிஷ்ட மாயுரப்தா இத்யாஹு"ஸ் ஸூக்ஷ்மதர்சநஃ கேசித்.

(யவனதாஜிகம்)

இலக்கினாதிபதி, அஷ்டமாதிபதி, தசமாதிபதி ஸ்புடங்களைக் கூட்டி (ஜீவித சகம்) மண்டலம் களைந்து நின்ற மீதத்தைக் கலை செய்யவந்த குண்யராசி களையும், இலக்கினம் அஷ்டமம் ஜீவித சகமஸ்புடங்களைக்கூட்டி மண்டலங் களைந்து நின்ற குணகராசிகளையும் ஒன்றால் மற்றொன்றைப் பெருக்கி 108-ஆல் வகுத்த ஈவே கதமநுஷ்ய ஜன்மமும், மீதமே இந்த ஜன்மத்தின் சுத்தாயுர்த்தாயமுமா மென்றறிக என்பதாம். ஜீவித சகமம் என்பது ஆயுர் சகமமாகும் இதனை ஜாதகசாகரம் 2-ஆம் தரங்கத்தில் இனிதறிக. இதனால் ஆயுர் நிர்ணயத்திற்கு இலக்கினமும் அஷ்டமமும், சீவிதசகமும் அத்தியா வசியம் என்பது பெறப்பட்டது உணர்க. உதாரணம்:

இலக்கினாதிபதி ஸ்புடம் ராசி 5-4-32-20, அஷ்டமாதிபதி ஸ்புடம் ராசி 3-2-10-12, ஜீவிதசகமாதிபதி ஸ்புடம் ராசி 3-26-59½, ஆக 13-3-42-2, மண்டலம் நீக்கிக் கலைசெய்த குண்யராசி கலை-222, இலக்கினஸ்புடம் ராசி 9-27-52-47, அஷ்டமஸ்புடம் ராசி 4-27-4-43, ஜீவித சகமஸ்புடம் ராசி 5-3-43-7, ஆக 19-28-40-37, மண்டலம்நீக்கிக் கலைசெய்த குணகராசி

கலை 14820. இதை குண்யம் 222-ஆல் பெருக்க 3179040=108=கதமா ருஷ்ய ஜர்மம் 29435. மீதம் 60 இதுவே இச்சன்மத்தின் சுத்தயுர்த்தாயம் என்றறிக.

இ- க்கினக் கோளைப் பத்தின் கோள்எட்டின் கோள்என் போலா
விலக்கிய சனிசேய் பார்க்கின் விடராகு குளிகன் பார்க்கில்
அலற்படும் அற்ப ஆயுள் என்பர்அத் தீயோர் தம்மை
மலர்க்குழல் நல்லோர் கூடின் மத்திம ஆயுள் போகம்.

சொன்னலக் கினக்கோள் பத்தின் கோள்எட்டின் கோளை நற்கோள்
நன்னயம் ஓடு கூடி நண்ணினும் நோக்கி னாலும்
முன்னநூல் முழுதும் ஆய்ந்தோர் மொழிவர் தீர்காயு யோகம்
துன்னிய இருபால் கோளின் வலியினை துணிந்து சொல்லே.

எனவரும் சாதக கணித வசனத்தினால் இலக்கினம் அஷ்டமம் தசமம் இம்மூன்றும் ஆயுள்ஸ்தானம் என்று நன்கறிக. முன் இலக்கின பாவகத்தில் 'கிலேசம்' என்று கூறியது சாதாரணமான கிலேசம். அதாவது: உடனுக்குடன் ஏற்பட்டு நீங்கும் மனக்கிலேசத்தை என்க. இங்கு 'கிலேசம்' என்று கூறியது மாறாது வருத்தும் கிலேசத்தை என்க. ஆயுள் ஸ்தானமென்றால் ஆயுளைக் கொடுக்கும் ஸ்தானமென்றும், மரண ஸ்தானமென்றால் ஆயுளை அழிக்கும் ஸ்தானம் என்று அர்த்தம். ஆகவே ஆயுளைக்கொடுக்கும் ஸ்தானமும் அழிக்கும் ஸ்தானமும் ஒன்றாக இருத்தலின் எங்ஙனம் பொருந்தும் எனின்? 1-3-8-10-ஆம் இடங்களால் ஆயுளின் விருத்தியையும், 8-ஆம் இடத்தால் மரண ஏதுவையும் அறிதல்வேண்டும் என்க.

ஆன முதலில் அதிகம் செலவானால்
மானம் அழிந்து மதிகெட்டு—போயினபின்
எல்லார்க்கும் பொல்லனாய் எழுபிறப்புந் தீயனாய்
நல்லார்க்கும் பொல்லனாய் நாடு.

என்றபடி வரவை அறிந்து செலவு செய்யாமல் அதிகமாக செய்வதினால் உண்டாகும் துன்பத்தை "செலவினால் நட்டம்" என்று கூறினாரென்பதாம்.

ஆயுர் விரோதோ நிதனஞ்ச ராத்யம்
துக்கஞ்ச வஸ்த்ரௌ கவிரூப ணஞ்ச
வைஷம்ய துர்காதி களத்ர சத்ரு
நத்யாதிகோ தாரண நஷ்ட யோகாஃ
சித்ரம் ரணம் ப்ராத்ரு ரிபுச்சத்ருஷ்டம்
விகார ணீயம் நிதநேஸ மஸ்தம். (பைரவ தீபிகை)

ஸ்யாதஷ்டமே மரணசோக பயயோக்ர துக்கம்
அஜ்ஞாந லப்த பரவித்தக தோபஸர்கஃ. (யவனாசாரியர்)
ம்ருத்யௌ சிரம்தநம் த்ரவ்யம் ம்ருதவித்தம் ரணோரிபுஃ
துர்கஸ்தாநம் ம்ருதிர் நஷ்டம் பரிவாரோ மனோவ்யதா. (நீலகண்டர்)
நத்யுத்தரோத்வ வைஷம்யே துர்கேசாத்ர வஸங்கடே
நஷ்டே துஷ்டே ரணேவ்யாதி சித்ரே சித்ரம் நிரீக்ஷயேத்.
(புவந தீபிகை)

எனவரும் அலோக வசன பிரமாணங்களினால் யுத்தபூமி, விஷம விஷய சஞ்சாரம், பரதிரவ்யசகாயம், நஷ்டதனம், பாபம், அஞ்ஞானம், விரோதம், களத்திர விரோதம், பயம் முதலியவைகளை எட்டாம் பாவகத்தில் அறிதல் வேண்டும் என்க.

ஆகவே எட்டாம் பாவகத்தினால்,

| | | |
|---|---|---|
| 1 வாளாயுதகாயம் (அ) | 7 நீங்காத பலதூன்யம் | 13 வீண் அலைச்சல் |
| 2 யுத்தம் | 8 மானக்குறைவு | 14 பாவம் |
| 3 மலைமீதிருந்துவீழ்தல் | 9 செலவினால் நஷ்டம் | 15 அஞ்ஞானம் |
| 4 மீளா வியாதி | 10 ஆயுள் | 16 களத்ர விரோதம் |
| 5 காரிய விச்சினம் | 11 நீங்காத பகை | 17 பயம் |
| 6 நீங்காத விசனம் | 12 யுத்த பூமி (ஆ) | |

ஆகிய இவைகளை அறிதல்வேண்டும். (8)

## பிதிர்பாவகம் (ஒன்பதாமிடம்)

பெற்றிடும் தந்தை மகப்பயிர் தருமம்
பெருமைசேர் பாக்கியம் மடங்கள்
உற்றதோர் பரம புண்ணியம் குளமும்
உயர்திருப் பணிஉப தேசம்
வெற்றிசேர் நீர்க்கா வணம்புகழ் கூபம்
விரும்பிய செல்வம் ஈதுஎல்லாம்
கற்றுஅறிந் தோர்கள் ஒன்பதாம் இடத்தால்
கருணையும் பெறமொழிந் திடுவார்.

(இ-ள்) தன்னைப் பெற்ற தகப்பனும், வம்சாபி விருத்தியும், அறஞ் செய்தலும், மாட்சிமையைத் தரவல்ல பிதுரார்ச்சித செல்வமும், மடாலய ஆதிபத்தியமும், மேலான தருமங்களைச் செய்தலும், குளமுண்டாக்குதலும், மேலான ஆலய திருப்பணிகளைச் செய்தலும், குருவினிடத்தில் தீக்ஷை உபதேசம் பெறுதலும், தண்ணீர்ப்பந்தல் வைத்தலும், தருமத்திற்காக கிணறுவெட்டி வைத்தலும், இச்சைப்பட்ட செல்வத்தைப்பெற்று வாழ்தல் ஆகிய இவைகள் அனைத்தையும், சோதிட சாஸ்திரத்தை அறிந்தவர்கள் ஒன்பதாம் பாவகத்தினால் கிருபை யுண்டாகும்படி கூறுவார்கள் எ-று.

(வி-ரை) 'தருமம்' என்பது அறம்-சீலம்-சுகிர்தம்-தானம்-புண்ணியம் என்ற பல பெயர்களைப் பெறும். தர்மம் என்ற வடசொல், அது தருமம் என்று வழங்கப்படும். தருமமும் தானமும் ஒருபொருளாயினும், தருமத்திற்கும் தானத்திற்கும் சிறிது பேதமுண்டு. தம் இனத்தார்க்குத் தக்க காரணம்பற்றி ஒன்றை ஈதலை தானமென்றும், அங்ஙனமின்றி வறியராய் ஏற்றோர் அனைவர்க்கும் மாற்றாது ஈதலைத் தருமம் என்றும் சொல்லப்படும். தருமம் என்பது பரோபகாரம் எனப்படும் ஆகவே நாம் பிறர்க்குச் செய்யும் உதவி தருமம் எனப்படுகின்றது. அதாவது நம்மிடத்திலுள்ள ஒருபொருளை பிறர்க்குக் கொடுத்து உதவிசெய்வது தருமம் ஆகும். இத்தருமமே அறம் எனப்படுவதாகும். அறு-பகுதி, அம்-செயப்படுபொருள் விகுதி. அறம்-பெரியோர்களால் இவை செய்க, இவை தவிர்க என்று வரையறுக்கப் பட்டது. இனி பாவத்தை அறுப்பது என்னலும் ஒன்று.

அறம் 32-வகைப்படும். அவையாவன:—

| | | |
|---|---|---|
| 1 ஆதுலர்க்குச் சாலை | 12 அறவைப்பிணம்சுடல் | 23 பிறர்துயர் காத்தல் |
| 2 ஓதுவார்க்கு உணவு | 13 அறவைத்தூரியம் | 24 தண்ணீர்ப்பந்தல் |
| 3 அறுசமயத்தார்உண்டி | 14 சுண்ணம் | 25 மடம் |
| 4 பசுவுக்கு வாயுறை | 15 நோய் மருந்து | 26 தடம் |
| 5 சிறைச்சோறு | 16 வண்ணார் | 27 சோலை |
| 6 ஐயம் | 17 நாவிதர் | 28 ஆவுரிஞ்சுதறி |
| 7 தின்பண்டம் நல்கல் | 18 கண்ணாடி | 29 விலங்கிற்குணவு |
| 8 அறவைச்சோறு | 19 காதோலை | 30 ஏறுவிடுத்தல் |
| 9 மகப்பெறுவித்தல் | 20 கண்மருந்து | 31 விலைகொடுத்துஉயிர்காத்தல் |
| 10 மகவு வளர்த்தல் | 21 தலைக்கெண்ணெய் | 32 கன்னிகாதானம் |
| 11 மகப்பால் வார்த்தல் | 22 பெண்போகம் | ஆக 32-ஆகும். |

தானம் பதினாறுவன:—

| | | | |
|---|---|---|---|
| 1 அன்னம் | 5 ரிஷபம் | 9 படுக்கை | 13 தானியம் |
| 2 பூமி | 6 பொன் | 10 வாகனம் | 14 வீடு |
| 3 கன்னிகை | 7 வெள்ளி | 11 தீபம் | 15 வித்தை |
| 4 பசு | 8 ஆடை | 12 எள் | 16 அபயம், ஆக-16. |

"மகப்பயிர்" என்பதற்குப் பிள்ளையும், பயிருமெனப் பொருள் கூறுவாருமுளர். பின் 11-வது செய்யுளில் "பயிர்பரிவேழம்" எனக் கூறியிருத்தலின் இங்கு வம்சாபி விருத்தி என்று பொருள் கூறுதலே சாலச் சிறப்புடைத்தாகும். முதல் 'தருமம்' என்றும், பின்பு 'பரம புண்ணியம்' என்றும் இச்செய்யுளில் கூறியிருத்தலின் முன்னையது உலகத்தினர் விஷயமாகச் செய்யுந் தருமம் எனவும், பின்னையது கடவுளர் விஷயமாகச் செய்யும் தருமமெனவும் கொள்ளப்படும். 'நீர்க்காவணம்' என்பதற்குச் சிலர் சோலை நந்தவனம் என்பர், அது பொருந்தாது. நீர்-தண்ணீர், காவணம்-பந்தல். எனவே தண்ணீர்ப் பந்தல் என்று கூறுதலே சிறப்புடைத்தாம்.

ஸ்வாத்யாய தீக்ஷா ஸுரகேஹ யாத்ரா
சக்ரஸ்ய சேஷ்டா மடகர்ம க்ருத்யம்
குரோஸ்து கார்யாத் யபிஷேச நஞ்ச
ஜலாசயஸ் யாலயதே ராதேः
ப்ராதுர் பகிர்யாச்ச ஸுரஸ்ய சிந்தா
புண்யஞ்ச புண்யே கதிதம் மஹத்பிः (பைரவ தீபிகை)
வித்யாபகம் விதரணம் நிஜதர்ம ஸேவா
விச்வாஸ வைபவ கதாநவமே விலோக்ய. (யவனாசாரியர்)
தர்மேரதிஸ ததாபந்தா தர்மோபாயம் விசிந்தயேத். (நீலகண்டர்)
வாபிகூப தடாகாதி ப்ரபாதேவ க்ருஹாணிச
தீக்ஷாயாத்ரா மடம்தர்மம் தர்மாதிச் சித்யகீர்தியேத். (புவனதீபிகை)

எனவரும் பிரமாண வசனங்களால் ஒன்பதாம் பாவகத்தினால், வேதாதயயனம், ஞான வித்தை, குருகார்ய நிர்வாகம், சேவை, விசுவாசம், தீக்ஷை, யாத்திரை, தெய்வ சிந்தை, மஹநீய தரிசனம், ஜலபிரதேசவாசம், தருமம், வாவி கூவ தடாகங்கள், விதரணம், மடாதிகாரம், பட்டாபிஷேகம், ஐஸ்வர்யம், போகம், சகோதரர் சுக துக்கம் ஆகிய இவைகளை அறிதல் வேண்டும் என ஏற்படுகின்றன.

பாக்ய ப்ரபாவ குருதர்ம தபச்சயாநி
ஸம்சிந்தயேத் தேவ புரோஹிதாப்யாம். (ஜாதக பாரிஜாதம்)

தருமபாக்கியமே வஸ்த்ரம் தவங்குரு பிதிர்புயத்தோடு
இருதுடை போகபோக்யம் இனிதுடன் கூடஉண்டோ
பெருவை ஆதரவும்தர்மம் பிதிர்பயம் விரோதம்அல்லால்
அருமையாம் மகிமைஎன்ன அறைந்தனர் ஒன்பதுக்கே.
(ஜாதக சிந்தாமணி)

*தீட்சையானது:—* சமயதீட்சை, விசேஷதீட்சை, நிர்வாணதீட்சை என மூன்று வகைப்படும். சைவாகமத்தில் விதித்த சட்சுதீட்சை, பரிச தீட்சை, வாசகதீட்சை, பாவனுதீட்சை, சாஸ்திரதீட்சை, யோகதீட்சை என அறுவகை சிவதீட்சைகள் காணப்படுகின்றன.

விசுவாசம் என்பது உண்மை எனக்கொண்ட ஒரு கொள்கையில் உரைப்புற்று நிகழும் உள்ளத்துணர்ச்சி, அறிவுதடித்து உணர்ச்சி பிறக்கும், உணர்வு தடித்து விசுவாசம் பிறக்கும், விசுவாசம் தடித்து பக்தி பிறக்கும். ஆகவே விசுவாசம் மானிடதேகம் எடுத்தார்க்கெல்லாம் இன்றியமையாது வேண்டப்படுவதோர் பெரும் பேறுகும். விசுவாசமின்றி கடவுளிடத்து அன்பு செலுத்தலும், அவ்வன்பு காரணமாக விருத்தியுறுதலும் சிறிதும் அமையாவாம். ஆகவே விசுவாசமே கடவுளைக் காணுதற்குரிய கண்ணுடி போல்வதாகும். அறிவால் காணுதல் கூடாது என்றறிக.

'மஹநீய தரிசனம்' என்பது மஹான்கள் தரிசனமாகும். மகான்கள் என்பவர் மஹாபுருஷர்களாவர். ஆசையையும் பாசத்தையும் அறவே ஒழித்து, அன்பிலும் அருளிலும் வெகுவாய் பழுத்து மனித உருவிலிருந்தும் மனிதத்தன்மைக்கு மிகவாயுயர்ந்து மாண்படைந்தவர்களே மஹான்கள் எனப்படுவோர்கள். உலகத்திலிருந்தே உலகத்தைத் துறந்தவர்கள் மஹான்கள். மனிதராயிருந்தே மனிதரின் மீறியவர்கள் பெரியோர்கள், எவ்வளவு விவேகிகளாயிருந்தும் ஒவ்வொரு விஷயத்தில் ஊறடைந்தவர்கள் மனிதர்கள் என்பதாம்.

குரு - என்ற வடசொல் அஞ்ஞான மனவிருளை ஒழிப்பவன் என்று உறுப்புப் பொருள்படும். கு-இருள், ரு-நீக்கப்பொருள், ஆகவே தமையடுத்த சீடர்களுடைய அஞ்ஞானமாகிய இருள் நீங்க, ஞானமாகிய ஒளியைத் தருபவன் என காரணப்பெயரானமை காண்க. மேலும் (கு) என்பது சுத்த நிர்குண சொரூபமும், (ரு) என்பது கேவல நிராகார சொரூபமும் ஆனதால் சுத்த நிர்க்குண நிராகாரப் பிரம்மத்தை இதுவென்னும்படி சுட்டாமல் சுட்டிக் காட்டுபவனுமாமென்க. இதனை,

கல்லாலின் புடைஅமர்ந்து நான்மறை ஆறுஅங்கமுதல்
கற்றக் கேள்வி
வல்லார்கள் நால்வர்க்கும் வாக்குஇறந்த பூரணம்ஆய்
மறைக்கு அப்பால்ஆய்
எல்லாம்ஆய் அல்லதுவாய் இருந்தததனை இருந்தபடி
இருந்து காட்டி
சொல்லாமல் சொன்னவரை நினையாமல் நினைந்துபவத்
தொடக்கை வெல்வாம்.

எனவரும் திருவிளையாடற்புராண வசனத்தினுல் நன்கறியலாம்.

கர்மத்துக்குப் பயனாக சுவர்க்காதி பலன்களை விரும்பிச் செய்வது தருமம் எனவும், அங்ஙனம் கர்மத்துக்குப் பயனாக சுவர்க்கம் முதலியவைகளை விரும்பாமல் அவசியம் அனுஷ்டிக்கவேண்டியதான அதை எல்லா விதத்தாலும் நமக்கு அன்பனாகிய பரமபுருஷனுக்கு இந்த கர்மம் ஆராதனமாகக்கடவது; இதனால் அடையவேண்டும் பயன் எனக்குச் சிறிதுமில்லை என்று செய்வது பரம புண்ணியம் எனவும் சொல்லப்படும். ஆகவே முதல் 'தருமம்' எனக் கூறிப் பின்பு 'பரமபுண்ணியம்' என்று கூறினார் என்க.

ஆகவே ஒன்பதாம் பாவகத்தினால்,

| | | |
|---|---|---|
| 1 தகப்பன் (அ) | 10 தண்ணீர்ப்பந்தல் | 19 தீர்த்த யாத்திரை |
| 2 குலவிருத்தி | 11 தருமகிணறுவெட்டல் | 20 தெய்வ சிந்தை |
| 3 தருமம் | 12 இஷ்டசெல்வம்பெற | 21 மகரீய தரிசனம் |
| 4 பிதுரார்ச்சிதம் | 13 வேதாத்யயனம் (ஆ) | 22 ஜலபிரதேசவாசம் |
| 5 மடாதிக்கம் | 14 ஞானவித்தை | 23 பட்டாபிஷேகம் |
| 6 மேலான தருமம் | 15 குருகார்ய நிர்வாகம் | 24 சகோதர சுகதுக்கம் |
| 7 குளம்வெட்டல் | 16 சேவை | 25 விதரணம் |
| 8 ஆலய திருப்பணி | 17 விசுவாசம் | ஆகிய இவைகளை |
| 9 குருவுபதேசம் | 18 தீட்சை | அறிதல் வேண்டும். (9) |

## கருமபாவகம் அல்லது ஜீவனபாவகம்

### (பத்தாமிடம்)

**மொழிந்திடும் பலபுண் ணியம்புவி புரத்தல்**
**முயன்றுபட் டணங்கள்தா பித்தல்**
**பொழிந்திடும் கருமம் இரக்கம் மெய்ஞ்ஞான**
**பூசனை மனைபிதாப் பவங்கள்**
**ஒழிந்திடல் இனிய தேவதா பக்தி**
**உயர்சவு ரியம்பிர தாபம்**
**இழிந்திடும் இரவு கற்பவூண் புடவை**
**இவைபத்தாம் இடப்பெயர் என்னே.**

(இ-ள்) தரும சாஸ்திரங்களிலே சொல்லப்பட்டிருக்கும் பல வேறு வகைப்பட்ட தருமங்களைச் செய்தலும், இராச்சிய பாலனஞ் செய்தலும், ஊக்கத்துடன் நூதனமாக நகரங்களை ஏற்படுத்துதலும், புகழுடம்பைப் பெறுதற்காகச் செய்யப்பட்ட காரியம்-(செய்கை) கடமைகளும், இருபையும், உண்மை ஞானத்தைப் பெறுதற்கு ஆராதனை செய்யப்பட்ட வீடும், தகப்பனுடைய பாவங்கள் நீங்குதலும், சிறந்த தெய்வ வழிபாடும், மேன்மையான சதுரங்க பலமும், பெருத்த-(பிரபலமான) கீர்த்தியும், இகழ்ச்சி யுடைய பிச்சை எடுத்தலும், (அதாவது) மானங் கெட பிறரிடத்தில் யாசித்தலும், காயகற்பம் புசித்தலும், உடுக்கப்படும் ஆடையும் ஆகிய இவைகள் பத்தாம் பாவகத்தின் பெயர் என்று கூறுவாயாக எ-று

(வி-ரை) இராச்சிய பாலனம் ஆவது என்னை எனின்? அரசர்களாயின் இராச்சியத்தை ஆளுதலையும், ஏனையோராயின் தத்தம் ஜீவன காரியங்கள் நடத்துதலையும்பற்றிக் கூறுவது என்க. எனவே பத்தாமிடம் ஜீவன (தொழில்) ஸ்தானமென்பது பெறப்படும். புவிபுரத்தல் என்பதனுள்

அரசாளுதல் சம்பந்தமான நியாயம் அநியாயங்களை விசாரித்துத் தீர்மானஞ் செய்ய அரசர்களால்கொடுக்கப்படும் முத்திராதிகாரமும், இராஜவம்சத்தில் பிறந்தும் இராச்சியாதிபத்தியம் இல்லாமல் சில கிராமங்கட்கு அதிகாரியாயிருத்தல்; அல்லது விசேஷ ஐஸ்வரியத்தைப் பெற்றிருத்தலாகிய இராஜயோகமும், இராஜவமிசத்தில் பிறந்து அநேக தேசங்களுக்கு அதிகாரியாய் சுயாதிக்க முடைத்தாயிருக்கும் மஹாராஜ பதவியும், மற்றுமுள்ள சக்கரவர்த்தி பதவியும் அடங்குமென்க.

"தீர்த்த யாத்ராதிசம் ஸர்வம் தர்மஸ் தாநாந் நிரீக்ஷயேத்"

என தீர்த்தயாத்திரையைப்பற்றி ஒன்பதாமிடத்தைகூறப்பட்டிருக்கின்றது. இந்நூலாசிரியர் இந்த பாவகப் பெயர்க்கவிகளில் 10-ஆம் இடத்தில் 'பல புண்ணியம்' எனக் கூறியதற்கு தீர்த்த யாத்திரையும் பல புண்ணியங்களில் ஒன்றென யாம் கூறியதற்கேற்ப பத்தாம்பாவகபலன் கூறியவிடத்தில் 815 - வது கவியில் "அறையும் பத்தில் சுங்கன்கூற தீர்ததம் பலவும் ஆடுவனே" எனக் கூறியிருத்தலின் 10-ஆமிடமே தீர்த்த யாத்திரைக்கு உரிய ஸ்தானம் என்பது திண்ணம்.

லக்நேச தர்ம கர்மேசா: ஏகபாவ ஸ்திதாயதி
யஜ்ஞபாவோ ப்ராஹ்மணஸ்யாத் ராஜா ஸாம்ராஜ்ய லாபவான்
வாணிஜ்யலாபோ வைச்யஸ்ய சூத்ரஸ்து க்ருஷிலாபவான்
ஏவம் ஜாத்யாநு ஸாரேண பலம் வக்தவ்ய மேவஹி.

எனவரும் ஜாதக ராஜீய வசனத்தின்படி மகாராஜயோகத்தை யுடையவன் பிராமணனாயின் யக்ஞாதி கர்ம லாபத்தையும், க்ஷத்திரியனாயின் இராஜ்ய லாபத்தையும், வைசியனாயின் வியாபார லாபத்தையும், சூத்திரனாயின் பயிர் லாபத்தையும் அடைவான் என்று அறிதல் வேண்டும்.

மற்றும், தேசகாலாநு ரூபேண வயோ வர்ணாநுஸாரத:
ஜாதஸ்ய பலம் ப்ரூயாத் கோசரஸ்யாநு ரோதத:.

எனவரும் ஜாதகபலமுக்தாவளி வசனத்தின்படியும் தேசம்-காலம்-ஜாதிகளை அநுசரித்து சாதக பலன்களைச் சாற்றவேண்டும் என விளங்குதல் காண்க. மற்றும் "ந்ருபதி குலஸமுத்தா: பார்திவா வக்ஷ்ய மாணைர் பவதி ந்ருபதி துல்யஸ்தேஷு அபூபால புத்ர:" என ஆசிரியர் வராகமிகிரனார் வசனத்தினாலும் இராஜவம்சத்திற் பிறந்தவன் இராஜனென்றும், அன்னியனாயின் இராஜ சமான வாழ்க்கை யுடையவனென்றும் நன்கு அறியலாம். 'இராஜ' என்னும் மொழி இராஜ்ஜிய யோக்கியத்தையே நிமித்தமாக உடையதாகும். பிறப்பாலாகிய க்ஷத்திரிய தன்மையையே நிமித்தமாக உடையதல்ல. ஆதலால் இராஜ்யயோக்கியத்தை நிமித்தமாக உடையவர்கள் ஜாதகத்தில் தசமாதிபன் பிரபலனாயின் இராச்சியாதிபத்ய முண்டாமென்றும், ஏனையோராயின் வேறு தொழில் செல்வ முதலியவைகளால் இராஜ சமான வாழ்க்கை யுடையவரென்றும் அறிக. தசமாதிபன் அமலனாயின் தாழ்ந்த தொழில் முதலியன உண்டென்றும் நிச்சயித்தல் வேண்டுமென்க.

பல புண்ணியம் என்பது என்னை எனின்? யாகாதி கிருத்தியங்களைச் செய்தல், தீர்த்தயாத்திரைபோதல் முதலியனவாம். புண்ணியமானது பாசபுண்ணியம், பசுபுண்ணியம், பதிபுண்ணியம் என மூன்று வகைப்படும். இம்மூன்றனுள் முன்னையது இரண்டும் பசுபுண்ணியமெனவும், பின்னையது

ஒன்று பதிபுண்ணியமென்றும் நூற்கள் கூறுகிற்கும். பசுபுண்ணியம் சிறு பான்மை செய்யத்தக்கதும், பதிபுண்ணியம் பெரும்பான்மை செய்யத் தக்கதுமாகும். பசுபுண்ணியம் சுமைதாங்கி, திருவாசல், தடாகம், கூபம், தண்ணீர்ப்பந்தல், அன்னசத்திரம், வித்தியாசாலை முதலியனவாம். பதி புண்ணியம் அத்தியயன பாடசாலை, குருபூஜை, பழுதுற்ற தீர்த்தங்களைப் புதுப்பித்தல், சிவாலய திருப்பணி, கும்பாபிஷேகம், ஆலய அபிஷேக நிவேதனம், திருவிளக்கு, மலர்மாலை, கற்பூரக்கட்டளை முதலியனவாம். பசுபுண்ணியம் தவறினும் உய்தல்கூடும். பதிபுண்ணியம் தவறின் உய்தி யில்லதோர் குற்றமாம்.

மற்றும்,
ஆற்றரு நோய்மிகும் அவனிமழை குன்றும்
போற்றரு மன்னரும் போர்வலி குன்றுவர்
கூற்றுதைத் தான்திருக் கோயில்க ளானவை
சாற்றிய பூசைகள் தப்பிடிற் றானே. (திருமந்திரம்)

தருமமும் இங்ஙனம் மூவகைப்படும்:—
பிதிர்கடம் பூசை யாவும் பேசிடில் பாச தன்மம்
புதுப்பொழில் தடாகம் ஆதி புகல்பசு தன்மம் ஆகும்
முதுக்குறை அறிஞர் பூசை முப்புர தகனன் பூசை
துதிக்கஅரும் ஆசான் பூசை சொலில்சிவ தருமம் அன்றே.
(வள்ளலார்)

எனக் கூறியபடி கருமம் என்பது புண்ணிய பாவ கர்மனே என்க. புண்ணிய கருமமாவது: தன்பொருட்டாவது பிறர்பொருட்டாவது செய்யக் கூடியதாயும், தனக்காவது பிறர்க்காவது துன்பத்தை விளைவிக்காததாயும் உள்ள நற்செய்கைகளாகும். பாபகர்மமாவது சுயநலங்கருதி பிறரை உத்தே சித்தே செய்யப்படுவதாயும், பிறருக்குச் சம்மத மில்லாததாயும், அவர் களுக்குத் துன்பம் விளைவிக்கக்கூடியதாயுமுள்ள தீச்செய்கைகளாகும்.

கர்மம் என்பது சலன வடிவ வியாபாரமேயாகும். புடைப்பெயர்ச்சி, அசைதல், செய்தல், கிரியை, தொழில் என்பன ஒருபொருட் சொற்களாம். கர்மம் சூட்சுமமாகிய மனோசங்கல்பத்தினால் வாக்கினிடத்தாவது அல்லது காயத்தினிடத்தாவது ஸ்தூல வடிவ வியாபாரத்தை யடைவதனால் மனம் வாக்கு காயமாகிய முக்கரணங்களை ஆதாரமாகக்கொண்டு வெளிப்படும் கர்த்திருத்துவ, போக்திருத்துவ விருத்திகளோடுகூடி நினைத்தல், செய்தல் வடிவினதாகும். இது இதம் அகிதம், அல்லது நல்வினை தீவினை, அல்லது புண்ணியம் பாவம் என்னும் இருவித பாகுபாட்டை அடைகிறதாகும்.

ஒவ்வொருவரும் பிறக்கும்போதே மூன்று கடனையுடையவர்களாகப் பிறக்கின்றார்கள் என்பது சாஸ்திர சம்மதம். அதாவது பிரமசரிய விரதத் தினால் முனிவர் கடனையும், வேள்வியால் தேவர்கடனையும், மக்களைப் பெறு தலினால் பிதிரர்கடனையும் ஒழித்தல்வேண்டும். ஆகவே தந்தை தனது பிதிர்களின் கடனைக் கழிக்கும்பொருட்டே புதல்வரைப் பெறுவதாகலின் "பிதாப் பலங்கள் ஒழிந்திடல்" என்பதற்கு பிதிர்கடன் கழித்தலாகிய சிரார்த்தகருமம் என்பது பொருளாகும். பிதிர்க்கடனை மிக சிரத்தையுடன் செய்யவேண்டுமாதலால் அக்கருமத்திற்குச் சிரார்த்தமென்ற பெயருண்டா யிற்று. சிரார்த்தமென்பது சிரத்தையின்காரணமாக (இறந்துபோன தாயார்

தந்தையர் நிரய (நரகத்) துன்பமுறாது நற்கதி அடையும்பொருட்டும், அவர்களது ஆசி கிடைத்தற்பொருட்டும் குறித்த காலங்களில் செய்யப்படும் கருமம் ஆகும். இங்ஙனம் செய்யாவிடின் பிதிர்கள் சாபமிட்டுத் திரும்பிப் போவார்கள். ஆகவே அவர்கள் சாபத்தினால் இம்மையில் துன்பமும் மறுமையில் நரக பிராப்தியும் உண்டாகுமாதலால் அங்ஙனம் உண்டாகாத படி செய்து நலம் பெறுதலையும், செய்யாமல் துன்புறுதலையும் பத்தாமிடத் தினால் அறிதல் வேண்டுமாகலின் "பிதாப் பவங்கள் ஒழிந்திடல்" எனக் கூறினார் என்க.

இரக்கம் என்பது ஜீவகாருண்யத்தை என்றறிக. பிறர் சுக துக்கங் களைத் தமதாகப் பாவித்துப் பிறர்க்கு நன்மை யுண்டாகத்தக்க உபாயங் களைத் தேடுதல் ஜீவகாருண்ணியம் 'எனப்படும்.

'மெய்ஞ்ஞான பூசனை மனை' என்பது விக்கிரக ஆராதனை செய்யும் இடத்தை என்க. 'ஞானம்' என்பது அறிவு என்னும் பொருள் தருவதோர் வடசொல் திரிபு. 'அறிவு' என்பது ஒருபொருளை உள்ளவாறு அறிதல் ஆகும். அவை என்னவெனின்: பாசஞானம்-பசுஞானம்-பதிஞானம் என மூத்திறப்படும். இவற்றுள் பதிஞானமாகிய சிவஞானமே சிறந்ததாகும்.

'சிவஞானம்' என்பது திருவருளால் பெற்ற ஞானம். இது திருவடி ஞானம் எனவும், பரஞானமெனவும் வழங்கப்படும். சிவஞானமொன்று அடையாத காலத்து எத்தகைய காரியங்களையும் ஒருவன் செய்யினும் அவற்றால் பிரயோசனமில்லை ஆகலின் 'மெய்ஞ்ஞானம்' என்று கூறினார் என்க.

செய்திடுபல் சுரர்பூசை ஆதிதொழி லானும்
    செப்பரிய தவத்தாலும் செபத்தி னாலும்
எய்தருஞ்சீர் அட்டாங்க யோகத் தாலும்
    எழில்தீர்த்தம் ஆடியதி னாலும் அன்பாய்ப்
பெய்திடுதா னத்தாலும் விரதத் தாலும்
    பெயர்ந்திடும் ஆணவசத்தி போந்ததந்தத் தடைவே
மெய்தருஞ்சீர் ஞானங்கள் தொழில்கள் சத்தி
    விளங்கிஇரும் அவைசொருபம் அலவிகற்பம் என்னே.

(சிவநெறிப் பிரகாசம்)

ஞானத்தின் உண்மை இங்ஙனமாகும். இங்கு கூறிய மெய்ஞ்ஞான பூசனை என்பது விக்கிரக ஆராதனையைப் பற்றியதெனினும், சிவஞானத்தைப் பற்றியதெனினும் ஒக்கும். இவ்விரு இயல்களில் ஒரு ஜாதகனுக்கு எது வுண்டாகும் என்பதைப் பத்தாமிடத்தினால் அறிதல் வேண்டும்.

மூர்த்திதலம் தீர்த்தம் முறையாய்த் தொடங்கினர்க்கு
வார்த்தைசொல்லச் சற்குருவும் வாய்க்கும் பராபரமே.

என்ற தாயுமானார் திருவாக்கின்படி இறைவன் வாக்கு மனங்களுக்கு எட்டாத அகண்ட வியாபியானாலும் உயிர்கள் தம்மை வழிபட்டு உய்யும் நிமித்தம் மூர்த்திதலம் தீர்த்தங்களிலே தம்முடைய திருவருளை விளங்கச் செய்து அவ்விடத்திலேயே தம்மை வழிபடுவோர்க்கு அருள் வழங்குவார் என்பது பெறப்படும். கடவுள் வழிபாட்டிற்கு மூர்த்தி மிகமிக அவசிய

மான்து 'மூர்த்தி' எனின் விக்கிரகம் அல்லது திருமேனி என்று அர்த்தம். கடவுள் நாம் தம்மை வழிபடுநிமித்தம் விக்கிரக முதலிய திருமேனிகளைத் தம்முடையவைகளாகக் கொள்ளுகிறார். நம்முடைய அறிவுகள் இந்திரியத்தைத் துணைகொண்டு அதன்வாயிலாகக் கண்டவற்றையே அறியும். அவை அல்லாதவற்றை அறியமாட்டாது. அதனால் அக்கண் இந்திரியத்துக்கு விஷயமாகத்தக்க ஒரு விக்கிரகத்தில் தம்முடைய திருவருளை நிறுத்தி அவ் விக்கிரகத்தைத் தமக்குத் திருமேனியாக ஏற்கின்றார். நாம் அதை நம்முடைய சத்திக்கேற்ப கண்ணால் தரிசித்துப் பேறு பெறுகின்றோம். இல்லறத்தார்க்கு இதைத் தவிர சிறந்த சாதகம் வேறில்லை. இதனை "யாதொரு தெய்வங் கொண்டீர் அத்தெய்வம் ஆகி ஆங்கே, மாதொரு பாகனார்தாம் வருவர்" என்ற சிவஞான சித்தியாரால் நன்கு அறிக. 'பூசனை' என்றது ஆராதனைச் செய்தலை என்றறிக.

'தேவதா பக்தி' என்பது தெய்வ உபாசனை என்றறிக. அதாவது: விநாயகர், சிவபெருமான், சுப்பிரமண்யர், அம்பிகை, மஹாவிஷ்ணு முதலியோர்களில் ஒருவரை தமது வழிபடு கடவுளாகக்கொண்டு உபாசித்தலாம். பகவத் ஆகார விருத்தி பக்தி எனப்படும். நமது மனமானது கடவுளின் உண்மை வடிவமாக பரிணமித்தல் பக்தி எனப்படுகின்றது. பொருள்களைப் பற்றும் நம் மனம் அவைகளை விட்டு கடவுளைப் பற்றி நிற்பதற்குப் பக்தி எனப்படும். உலகப் பொருள்களிடத்தில் நமக்கு உண்டாகும் விருப்பத்திற்கு ஆசை என்றும், நம்மிலும் தாழ்ந்தவர்களிடத்தில் நமக்குண்டாகும் விருப்பத்திற்குக் காருண்யம் என்றும், நம்மிலும் உயர்ந்த பெரியோர் குரு முதலியவரிடத்து நமக்குண்டாகும் விருப்பத்திற்கு விசுவாச மென்றும், நம்முடைய புத்திரர் மனைவி முதலியவர்களிடத்தில் நமக்குண்டாகும் விருப்பத்திற்கு அன்பு என்றும், கடவுளிடத்தில் நமக்கு ஏற்படும் அன்பிற்குப் பத்தி என்றும் பெயர். "பத்தியால் உள்ளே பரிந்து அரனைத் தான் நோக்கில், முத்திக்கு மூலம் அது" என்றபடி இந்த பக்தியே முத்தி யடைதற்கு முக்கிய சாதனமாகும். ஒரு ஜாதகத்தைக்கொண்டு அந்த ஜாதகன் எந்த கடவுளை வழிபடு கடவுளாக உபாசிப்பான் என்பதையும், அவ்வித வழிபாட்டின் திண்மை யுண்மைகளையும், பக்தி அபக்திகளையும் அறிந்து உரைத்தல் வேண்டும் என்க.

'உயர் சவுரியம்' என்பது சிறந்த வீரமாகிய சதுரங்கபலத்தை என்க. அரசர்களாயின் இரத கஜ துரக பதாதிகள் முதலியன வென்றும், ஏனையோர்களாயின் தத்தம் காரிய சாதகங்கட்கு வேண்டப் படுவதாகிய உபகரணங்களாகிய பக்க பலத்தை என்றும் அறிக.

'இழிந்திடும் இரவு' என்பது மானத்தைவிட்டு பிறரிடத்தில் யாசித்தல் ஆகும். மானம் வடசொல்; மானமாவது: எப்பொழுதும் தம் நிலையினின்று தாழாமையும், ஊழ்வினையால் தாழ்வு வந்தவிடத்து உயிர் வாழாமையுமாம். தாழ்வாவது அபகீர்த்தி அல்லது குறைவு என்பதாம். ஒருபொருட் பன்மொழிகளாக வழங்குகிற பிச்சை ஐயம் என்றவற்றிற்குப் பொருள் வேறுபாடு:— திருப்பாவையில் "ஐயமும் பிச்சையும் ஆந்தனையுங் கைகாட்டி" என்றவிடத்து ஆறாயிரப்படி வியாக்கியானத்தால், ஐயம் உரிய காலங்களில் வறியோர்க்கு ஈதல், பிச்சை உரிய காலங்களில் தக்கார்க்கு அளித்தல் என்றும், அவ்விடத்து மூவாயிரப்படி வியாக்கியானத்தால், ஐயம் தக்க

விடத்தில் மிகுதியாகச் செலவுசெய்வது; பிச்சை-பிரமசாரிகளுக்கும் சந்நியாசிகளுக்கும் இடுவது என்றும் தெரிகிறது. ஏலாதியில் "ஐயமே பிச்சையருந்தவர்க்கூணுடை" என்றவிடத்து உரைக்காரர் ஐயம் - கூன் குருடு முதலியோர்க்குக் கொடுத்தல். பிச்சை-தவசி முதலியோர்க்குக் கொடுத்தல் எனக் கூறியுள்ளதையும் அறிக.

"கருப்பம் ஊண்" என்பதற்குக் கர்ப்பம்-கருதரித்தல் எனவும், ஊண்-போஜனம் எனவும் பொருள் கூறுவர் சிலர். கருதரித்தல் என்பதை முன் ஐந்தாவது கவியில் "தரித்திடும் கருப்பம்" எனக் கூறியிருத்தலாலும், போஜனம் இரண்டாம் இடமாதலாலும் இங்கு கூறிய "கருப்ப ஊண்" என்பதை "கற்பவூண்" என்று அச்சுப்பிழை எனத் திருத்தி காயகற்பம் புசித்தல் என்று பொருள் கூறுதலே சிறப்புடைத்தாகும். இதனை "கர்மண் யுக்தாந் யுக்தரீத்யாதிகாரோ மாதா ராஜ்யம் கீர்த்தி குரௌ ஔஷதாநி" எனவரும் யவனாசார்யர் வசனத்தினால் நன்கறியலாம். 'ஔஷதம்' என்றது காயகற்ப மருந்தை என்றறிக. 'காயகற்பம்' என்பது உடலை மூப்பு இறப்புக்களினின்றும் நீக்குவதோர் அரிய மருந்தாகும்.

கற்பமருந்து பலவகைப்படும். அவை பூரணகற்பம், அமுதரசகற்பம், மேருகற்ப முதலியனவாம். இவற்றின் விரிவை அகஸ்தியர் அமுதகலைக் ஞான முதலிய வைத்திய நூற்களில் கண்டுணர்க.

"அதமான தேகமது வச்ரம் போலாம்
அப்பனே மண்டலத்தில் சட்டை போமே
போமப்பா நரைதிரையும் ஒழிந்து போகும்
பொன்போல தேகமுமாய்ப் புத்தி யுண்டாம்"

எனவரும் அகஸ்தியர் அமுதகலைக்ஞானத்தினால் அறிக.

ஆகாஸ வ்ருத்தாந்த ஜலப்ரபாதஃ
ஸ்தாநம்பிதுஃகார்யவிஸேஷகாதிமாநம்
புண்யம் ந்ருபத்வம்ச ததாவிகாரோ
முத்ராச்வதிஸ்தத் தசமேவிசிந்த்யம் (பைரவதீபிகை)

ராஜ்யமுத்ரா பரம்புண்யா ஸ்தாநம் பித்ருப்ரயோஜநம்
ப்ருவ்ஷ்ட்யாதி வ்யோம வ்ருத்தாந்தம் வ்யோமஸ்தாநாத விநிச்சயஃ
(புவநதீபிகை)

ராஜ்யஞ்சாகாச வ்ருத்திஞ்ச மாநஞ்சைவ பிதுஸ்ததா
ப்ரவாஸஸ்ய ருணஸ்யாபி வ்யோமஸ்தாநாந்நிரீக்ஷணம்
(பராசரஹோரை)

எனவரும் பிரமாண வசனங்களினால் மழை முதலிய ஆகாசவிஷயங்கள், தூரதேச சமாசாரங்கள், இருப்பிடத்தின் விசேஷம், கார்யாகார்யவிவேகம், ஜீவனம், மஹா ஔஷதம், இராஜ முத்திராதிகாரம், மானம், பிதிர்மேதம் (சிராத்தம்) ஆகிய இவைகளைப் பத்தாம் பாவகத்தினால் அறிதல் வேண்டும் என்க.

ஆகவே பத்தாம் பாவகத்தினுல்:—

| | | |
|---|---|---|
| 1-பலபுண்ணியம் (அ) | 7-சிராத்தம் | 13-வஸ்திரம் |
| 2-இராஜாதிக்கம் | 8-தெய்வவழிபாடு | 14-மழை (ஆ) |
| 3-நகாஸ்தாபிதம் | 9-சதுரங்கபலம் | 15-தூரதேசசமாசாரம் |
| 4-காரிய கர்மம் | 10-பிரபல கீர்த்தி | 16-ஜீவனம் |
| 5-கிருபை | 11-மானம் | 17-முத்திராதிகாரம் |
| 6-பூஜைவீடு | 12-காயகற்பம் | |

ஆகிய இவைகளை அறிதல்வேண்டும். அந்தந்த பாவகங்களை இலக்கினமாக வைத்துப் பார்க்கவேண்டிய விஷயத்தில் 9-ஆமிடம் பிதிர்ஸ்தானமாதலின் அதை இலக்கினமாக வைத்துப்பார்க்க அதற்கு 7-ஆமிடமான மூன்றுமிடம் மாதுரு ஸ்தானமாக கூறவேண்டிவரும். ஆனுல் மாதுருஸ்தானம் 4-ஆமிடமென வியக்தமாகக் கூறப்பட்டிருத்தலின் மூன்றுமிடமாகக் கொள்ளப் படாது. 3-ஆமிடம் தகப்பனுடைய மறுவிவாகத்தைக் குறித்த ஸ்தானமெனக் கொள்க. (10)

## இலாப பாவகம் (பதினொன்றுமிடம்)

என்னும்மூத் தவர்சே வித்திடும் பேர்கள்
இளங்கொடி மனைவிபொன் வித்தை
மின்னிய லாபம் பயிர்பரி வேழம்
விளங்குநல் அறிவுதண் டிகையும்
முன்னிய மனத்தின் துக்கமும் தீரும்
உத்தரீ யஞ்செறி வகையும்
பன்னிய பதினோர் ஆம்இடங் கொண்டு
பரிந்தருள் புரிவர்பா வலரே.

(இ - ள்) மூத்த சகோதரமும், தன்னை வழிபடுகின்றவர்களும், இளைய (கனிஷ்ட) மனைவியும், பொன்னுலும் கல்வியாலும் ஊதியம் பெறுதலும், பயிரிடுதலும், குதிரையும், யானையும், தெளிவான அறிவும், பல்லக்கும். மனத்துக்க நிவர்த்தியும், மேலாடையணிதலின் மிகுதியும் ஆகிய இவைகளை பதினொன்றுவது பாவகத்தைப்பார்த்து பக்குவமான கருணையோடுசோதிட விற்பன்னர்கள் கூறுவார்கள் எ-று.

(வி - ரை) 'உத்தரீயம்' என்பது மேலாடை; எனவே சரிகைப்பட்டுகளால் ஆக்கப்பெற்ற விலையுயர்ந்த சால்வை முதலியவற்றை என்றறிக. 'அந்தரீயம்' என்பது அரையில் உடுத்திக்கொள்ளுதல் எனவே வஸ்திரமும். உத்தரீயம் மேல்போர்த்துக்கொள்ளுதல் எனவே சால்வையும் என்றறிக,

பரி-(பாரங்களைப்) பரிப்பது எனக் காரணப்பெயர்; பரித்தல்-சுமத்தல். ஆகவே குதிரைக்குப் பரியென்று காரணப்பெயராயிற்று என்க.

கார்யஸ்ய வித்திః க்ரயவ்ருத்தி லப்திః
கஜாச்வ சஸ்த்ராதிக யாந சய்யா
வித்யார்த்த லாபோப் யதநஷ்டலாபః
கந்யா ஸுவர்ணஸ்யச லாபகார்யம். (பைரவதீபிகை)

லாபேலாபோ மாத்ருமைத்ரிஸ்வவித்திஃ
ஸத்யாஸத்யாசஸ் ததாப்ரீதிருக்தா (யவனுசாரியர்)

ஆயேஸர்வார்த தாங்யர்க கங்யா மித்ரசதுஷ்பதாஃ
ராக்ஞோ வித்தம் பரீவாரோ லாபோபாயச்ச பூதிசஃ (நீலகண்டர்)

கஜாச்சயாந வஸ்த்ராணி ஸஸ்ய காஞ்சந கங்யகா
வித்வான் வித்யார்த்தயோ லாபம் லாபயோர் லாபலக்நதஃ
(புவனதீபிகை)

எனவரும் பிரமாண வசனங்களினுல் சிறந்த வாகனம், சாஸ்திராதிகாரம், கார்யசித்தி-லாபகார்யங்கள், வாணிஜ்யத்திஞலுண்டாகும் லாபநஷ்டங்கள், வித்தையினுல் கிடைக்கும் தனம், நஷ்டதனபிராப்தி, சத்தியம், அசத்தியம், பிரீதி, மாதுரு விசுவாசம், பெண் முதலியவைகளைப் பதினென்ரு மிடத்திஞல் அறிதல் வேண்டும்.

ஆகவே பதினென்ரும் பாவகத்திஞல்:—1-மூத்த சகோதரம் (அ) 2-சேவை செய்வோர்கள், 3-இளையமனைவி, 4-பொன் வித்தைகளால் ஆதாயம் கிடைத்தல், 5-பயிர்ச்செய்கை, 6-குதிரை யானை, 7-தெளிந்த அறிவு, 8-பல்லக்கு, 9-மனத்துக்க நிவர்த்தி, 10-சால்வை, 11-சாஸ்திராதிகாரம்(ஆ) 12-கார்யசித்தி, 13 - லாபகாரியம், 14 - தொழிலின் லாபநஷ்டங்கள், 15-நஷ்டதன பிராப்தி, 16-சத்யா சத்யம், 17-பிரீதி, 18-மாதுருநேயம் ஆகிய இவைகளை அறிதல் வேண்டும்.

இந்த பாவகம் புத்திரர் மனைவி ஸ்தானமும், மாதுரு ஆயுசு ஸ்தானமும், சகோதரர் பாக்யஸ்தானமும், அம்மாஞர்க்குச் சததுருஸ்தானமும், பிதாவுக்குக் கனிஷ்டசகோதரர் ஸ்தானமும் ஆகும். பிற பாவகங்களுக்கும் இங்ஙனமே ஊகித்துரைத்தல் வேண்டும்.

அவரவர்கள் எந்த மார்க்கத்திஞல் லாபத்தை அடைவார்கள் என்பதையும், அவ்வித லாபம் நியாயமார்க்கத்தி லுண்டாகுமா? அல்லது அநியாய மார்க்கத்தில் உண்டாகுமா? என்பதையும், இளைய மனைவியினுடைய தன்மையையும் இந்த 11-ஆம் பாவகத்திஞல் விசாரித்தல் வேண்டும். தாயிடத்தில் ஒரு ஜாதகனுக்கு உண்டாகும் அன்பு அன்பின்மை முதலியவைகளையும் இந்த ஸ்தானத்திஞலேயே அறிதல் முறை. (11)

## வியய பாவகம் (பன்னிரண்டாமிடம்)

பாவம் அந்நியதே சத்தில்உத் யோகம்
பணச்செலவு உடன்உறும் போகம்
மேவிய சயன சவுக்கியம் விவாதம்
விளைந்திடும் தொழில்கதி மறுமை
ஆவதோர் தானம் புண்ணியம் தியாகம்
அருள்மகம் சர்வதோ விருத்தி
சேவலங் கொடியோன் அருளிஞல் பெரியோர்
செப்புவர் துவாதச பலனே.

(இ - ள்) பாவகாரியங்களில் செலவு செய்தலும், அன்னிய ஊர்களில் தொழில் செய்தலும், சக்திக்கு லோபமில்லாமல் பொருட்செலவு செய்து சுகத்தை அனுபவித்தலும், கட்டில் மெத்தை முதலியவைகளில் படுத்து நித்திரைசெய்தலும், வியாச்சியத் தொழில் செய்தலும், மறுமையிற் பெறுங் கதியும், தானம்-புண்ணியம்-கொடை வேள்வி முதலியவற்றில் எப்போதும் மனநாட்டத்துடன் இருததலும் ஆகிய இவைகளைச் சேவற்கொடியை யுடைய சாக்ஷாத் செந்திலாண்டவன் திருவருள் பெருமபேற்றினால் சோதிடத்தில் வல்லவர்கள் துவாதச பாவகப்பலன் என்று கூறுவார்கள் எ-று.

(வி-ரை) செல்வம்-(எவரிடத்தும் நிலைத்திராமல் நீங்கிச்) செல்லுந் தன்மையதென்று பொருள்படுங் காரணக்குறி; செல்-பகுதி, அம்-விகுதி, வ்-பெயரிடைநிலை. கீழ்மக்கள் பெற்ற செல்வத்தைக்காட்டிலும், மேன் மக்கள் பெற்றுள்ள வறுமை மிகவும் நல்லதேயாம். (உலகத்து மிகப் பயன் படும் என்றபடி) அதாவது மேன்மைக் குணமுள்ள பெரியோர் ஏழைமை அடைந்தாலும் ஜனங்களுக்குப் பிரியமானவராய் நடந்து இயன்றமட்டும் உதவி நன்கு மதிப்பை அடைகின்றனர். கீழ்மைக் குணமுள்ள சிறியோர் செல்வராஞலும் பலர்க்கும்உதவுதலும, ஜனங்களுக்குப் பிரியமுள்ளவராய் நடத்தலும, நன்குமதிப்பையடைதலுமில்லை; தீயவற்றையே செய்வரென்க.

பிறக்கும் பொழுது கொடுவந்த தில்லை பிறந்து மண்மேல்
இறக்கும் பொழுது கொடுபோவ தில்லை இடை நடுவில்
குறிக்கும் இசசெல்வம் சிவன்தந்த தென்று கொடுக் கறியாது
இறக்குங் குலாமருக் கென்சொல் லுவேன் கச்சியே கம்பனே.
(பட்டினத்தடிகள்)

என்ற திருவாக்கின்படி நடுவில் கிடைக்கப்பெற்ற இச்செல்வத்தை நல்லோர்கள் தாமும் அநுபவித்து, பிறருக்கும் ஈந்து நன்மார்க்கத்தில் செலவு செய்து இம்மை மறுமைப்பயன்களைப் பெறுவதில் கருத்துடையவர்களாய் இருக்கின்றனர். தீயவர்கள்;

பாடுபட்டுத் தேடிப் பணத்தைப் புதைத்துவைத்த
கேடுகெட்ட மானிடரே கேளுங்கள் — கூடுவிட்டிங்
காவிதான் போயினபின் யாரே அனுபவிப்பார்
பாவிகாள் அந்தப் பணம். (வாக்குண்டாம்)

செல்வம்வந் துற்றகாலை தெய்வமும் சிறிது பேணுர்
சொல்வன அறிந்து சொல்லார் சுற்றமும் துணையும் நோக்கார்
வெல்வதே நினைவ தல்லால் வெம்பகை வலிதென் றெண்ணுர்
வல்வினை விளைவு மோரார் மண்ணின்மேல் வாழும் மாந்தர்.
(வில்லி பாரதம்)

செம்மையில் அறஞ்செய் யாதார் திரவியஞ் சிதற வேண்டி
நம்மையும் கள்ளும் சூதும் நான்முகன் படைத்த வாறே.

என்றபடி தாம் சம்பாதித்த பணத்தைப் பிறருக்குக் கொடாமலும் தாங்களும் உண்ணுமலும், மண்ணில் புதைத்துவைத்து வீணுகச் செய்வார்கள். மற்றும் வழக்கு-சூது-வேசி-குடி முதலிய தீயச் செலவுசெய்து பொருளை வீணுக்குகின்றனர்.

ஆகவே இத்தகைய நல்வழி, தீயவழிகளில் செலவு செய்யும் வகையை ஒருவர். ஜாதகத்தைக்கொண்டு 12-ஆமிடத்தினுல் அறிதல் வேண்டுமென்பதாம் ஒருவன் தருமம் செய்வானுயின் உயிர் சரீரத்தைவிட்டு நீங்குங் காலத்தில் அத்தருமம் அவ்வுயிர்க்கு அழியாத துணையாகச் சென்று நற்கதியையும், செய்யாவிடத்து துர்க்கதியையும் தரும் என்பதனை 12-ஆம் இடத்தினுல் அறிதல்வேண்டும்.

“த்யாகச்ச போகேஷு விவாததார க்ருஷ்யாதி கர்மவ்ய ஸம்க்ஞிகஞ்ச
பித்ருவ்ய ஸம்மாதுல ஸௌக்யசிந்தா யுத்தம் க்ஷிதிர்யுத்த பராஜயச்ச
ஸம்ப்ரேக்ஷணம் தத்ர ஸுதீர சித்தம் குலம்ததை தத்கதி தவ்ய யாக்யே”

(பைரவதீபிகை)

ஹஸ்த்யச் வாதிச்சத்ரு காராக் ருஹாணி
பீடாமுக்திர் பந்தநம் ஸ்யாத் வ்யயேபி. (யவனுசாரியர்)

“வ்யயே வைரிநிரோ தார்திவ்யயாதி பரிசிந்தயேத்” (நீலகண்டர்)

த்யாகபோக விவாஹேஷு தாரேஷ்டக் ருஷிகர்மணி
வ்யயஸ்தாரேஷு ஸர்வேஷு வித்திவித்வன் வ்யயம்வ்யயாத்.

(புவனதீபிகை)

எனவரும் வசன பிரமாணங்களினுல் பிதாவால் உண்டாம் விசனம், குலம், போகம், தியாகம் தரவிரயம், சிரேஷ்டா சிரேஷ்டம், அம்மானுல் உண்டாம் சுகதுக்கஙகள், தீனத்துவம், பீடை, பந்தனம், காராகிருகம், மோக்ஷம் ஆகிய இவைகளை நிர்ணயித்தல் வேண்டும்.

| | |
|---|---|
| 1-பாபச்செலவு (அ) | 9-தியாகம் |
| 2-பரதேசத்தொழில் | 10-யாகம் |
| 3-பணச்செலவால் பெறும் சுகம் | 11-பிதிர்விசனம் (ஆ) |
| 4-சயனசுகம் | 12-குலம் |
| 5-வியாச்சியத்தொழில் | 13-போகம் |
| 6-மறுமைப்பேறு | 14-அம்மானுலுண்டாம்சுகதுக்கங்கள் |
| 7-தானம் | 15-பந்தனம் |
| 8-புண்ணியம் | 16-மோக்ஷம் |

ஆகிய இவைகளை அறிதல் வேண்டும். (18)

பாவகப்படலம் முற்றிற்று.

# கிரகசீலப்படலம்



**சாற்றிய பிதுர்கா ரகன்பகற்கு இரவி சனிபிதுர் காரகன் நிசிக்குப்**
**போற்றிய அன்னை காரகன் பகற்குப் புகர்நிசிக்கு இந்துகா ரகனும்**
**ஏற்றமாந் துணைவர் காரகன் செவ்வாய் எழில்சுத காரகன் அரசன்**
**ஆற்றிய ஆயுள் காரகன் சனிஇல் லாள் தனக்கே புகர் ஆமே.**

(இ - ள்) *பிதுர்காரகன் பகலில் பிறந்தவர்கட்குச் சூரியனும், இரவில் பிறந்தவர்களுக்குச சனியுமாம். மாதுர்காரகன் பகலில் பிறந்தவர்கட்குச் சுக்கிரனும், இரவில் பிறந்தவர்களுக்குச் சந்திரனுமாம். பகல் இரவில் பிறந்தவர்கட்குச் சகோதரகாரகன் அங்காரகனும், புத்திரகாரகன் குருவும், களத்திரகாரகன் சுக்கிரனும், ஆயுள்காரகன் சனியும் ஆவார்கள் எ-று.*

(வி-ரை) *பிதுர்மாதுர்களின் காரகாதிபத்தியம் பகலுக்கு ஒரு கிரகத்திற்கும், இரவுக்கு வேறு ஒரு கிரகத்திற்கும் உரியதென்றுஅறிக. மற்றைய காரகாதிபத்தியங்கள் பகலிரவுக்கு ஒவ்வொரு கிரகங்களுக்கு உரித்தாகும் என்க. சூரியன் பகலில் பிரகாசிக்குங் கிரகமாதலாலும், சந்திரன் இரவில் பிரகாசிக்கும் கிரகமாதலாலும் முறையே பகல் இரவுக்கு பிதுர் மாதுர் காரகாதிபத்தியம் உடையவராயினர்.*

*திவா அர்க்கசுக்ரௌ பித்ருமாத்ரு ஸம்ஜ்ஞிதௌ*
*சனைச்சரேந்து நிசி தத்விபர்யயாத்*
*பித்ருவ்ய மாத்ருஷ்வ ஸ்ருஸம்ஜ்ஞிதௌசதாவதௌஜ*
*யுக்மர்க்ஷகதௌ தயோச்சுபௌ.* (பிருகத்ஜாதகம்)

(கருத்து) *பகலுக்குச் சூரிய சுக்கிரர்கள் பிதுர்மாதுரு காரகர்களாவார்கள். இரவுக்குச் சனி சந்திரர்கள் பிதுர்மாதுர் காரகர்களாவார்கள். இந்த பகலிரவு வியத்யயத்தினால் அந்த இரண்டு கிரகங்களே பிதுர்மாத்ரு காரகர்களாவார்கள் என்க.*

*ஆத்மப்ரபாவ சக்திச்ச பித்ருசிந்தா ரவேஃ பலம்*
*மனோ புத்தி ப்ரஸாதச்ச மாத்ருசிந்தா ம்ருகாங்கதஃ*
*ப்ராத்ரு ஸத்வம் குணம்பூமிம் பௌமோது விசிந்தயேத்*
*வாணிஜ்ய கர்மவ்ருதஞ்ச புதேநது விசிந்தயேத்*
*குருணாதேஹ புஷ்டிஞ்ச புத்திபுத்ரார்த்தஸம்பதஃ*
*ப்ருஹோர் விவாஹகர்மாணி போகஸ்தாநஞ்சவாஹநம்*
*வேச்யாஸ்த்ரீஜநகாத்ராணி சுக்ரேணவநிரீக்ஷயேத்*
*ஆயுஷ்யம் ஜீவநோபாயம் துக்கசோக மகத்பயம்*
*ஸர்வக்ஷயஞ்சமரணம் மந்தேநைவ நிரீக்ஷயேத்*
*ரவிபிதா சசீமாதா ப்ராதாபௌமோ புதஃ ஸஹ்ருத்*
*மாதுலேயஃ ஸ்ம்ருதோ ஜீவோஜ்ஞாநபுண்யேஸ்திரியஃவிதஃ*
*ஏஷாம்ருக்ஷேசதத்காலேமரணம்குருதே சநிஃ* (பிருகத்பராசரஹோரை)

எனவரும் சுலோக வசனத்தினால் சூரியன்-பிதுர், சந்திரன் - மாதுர்' செவ்வாய்-சகோதரம், புதன்-அம்மான், குரு-சந்ததி, சுக்கிரன்-மனைவி

சனி-ஆயன் முதலியவற்றிற்குக் காரகர்கள் என்பது நன்கு பெறப்படும். இந்நூல் ஆசிரியர் இச்செய்யுளில் அம்மான், பிதாமஹன் மாதாமஹன் முதலிய காரகாதிபர்களைக் கூறாதுவிடுத்துளார் ஆதலால் அவை வருமாறு;- "ஸூர்யேணைவ பிதாமஹந்து, சிகிநாமாதாமஹம்சிந்தயேத்" என்ற ஜாதக பாரிஜாதத்தினால் இராகு பிதாமஹன் பிதாமஹிகளுக்கும், கேது மாதாமஹன் மாதாமஹிகளுக்கும் காரகர்களாவார்கள். புதன் மாதுலகாரகன் என்பது மேலேகூறிய சுலோகத்தினால் விளங்காநிற்கும். ஆனால்:—

குருணஅத்ரச விக்ஞேயா: புத்ரஸ்வாமி பிதாமஹா:
ஸ்வபார்யா மாத்ரு பித்ரௌ ததாமாதா மஹித்விஜ
ப்ருகுத்வாரா விஜாநீயாத் ஏஷாம் சுக்ரகாரக:

எனவரும் பிருகத் பராசரஹோரா வசனத்தினால் குரு பிதாமஹிக்கும், சுக்கிரன் மாதாமஹிக்கும் உரியகாரகர்கள் என்று கூறப்பட்டிருக்கின்றது. இதனை ஊன்றி நோக்குமிடத்து இராகுகேதுக்கள் சாயாகிரகங்களாதலால் அவர்களுக்குக் காரக உரிமை கிடையாதென விடுத்தனர்முனிவர்பெருமான் என்று உணர்தல்வேண்டும்.

இராகுகேதுக்கள்:—பூகக்ஷியாகிய கிராந்திமண்டலத்திற்கு 5-பாகை, 9-கலை தூரத்தில் சந்திரகக்ஷியானது தெற்கு வடக்காகச் சாய்ந்துநின்று மேற்படி கிராந்திமண்டலத்தை (இரண்டு சந்தியாகக்) குறுக்கிடுதலாகிய சம்பாதம் இரண்டுமே இராகு கேதுக்களாகையாலும், அவ்விராகுகேதுக்கள் ஏனைய குஜாதி கிரகங்களையும், சூரியனையும்போன்றகோளங்கள் அல்லாமையாலும், அவை "கரந்துறைகோட்கள்" எனச் சாஸ்திரங்களிற் கூறப்பட்டிருத்தலாலும் அவர்கட்கு காரக உரிமை இல்லை என்பது பல்லோர் சம்மதம். ஆனால் சனி செவ்வாய் இவர்களுக்குரிய சுபாவங்களே இவர்களுக்குரிய சுபாவங்களென்பது சாஸ்திரசம்மதம். இதனை;—"குஜஸௌரீ கேதுராஹூர் அஜாநாவளி கும்பயோ:" எனவரும் விருத்த சம்மிதை வசனத்தினால் நன்கு அறியலாம். அதாவது சனி-செவ்வாய் ஆகிய இவர்களின் சுபாவமே ராகு கேதுக்களுக்காகுமென்பதும், அந்த சனி செவ்வாய்களுக்குரிய சத்துரு, மித்துருக்களே இவர்களுக்கும் உரியதென்பதும் நன்கு பெறப்படும். அப்படியாயின் சனிக்கு பிதாமஹ காரகமும், செவ்வாய்க்கு மாதாமஹ காரகமும் கூறியதென்று கூறவேண்டியிருப்ப முறையே குருசுக்கிரர்களுக்கு உரியதென்று கூறியதென்னையெனின்? கூறுதும்,

ஸூர்யோ குரு குஜ: ஸோமோ குருர் பௌம: ஸித: சநி:
குருச்சந்த்ர ஸுதோஜீவோ மந்தச்ச பாவ காரகா.

எனவரும் பிருகத்பராசரஹோரா வசனத்தின்படி 1-வது பாவகமாகிய இலக்கினத்திற்குச் சூரியனும், 2-க்குக் குருவும், 3-க்குச் செவ்வாயும், 4-க்குச் சந்திரனும், 5-க்குக் குருவும், 6-க்குச் செவ்வாயும், 7-க்குச் சுக்கிரனும், 8-க்குச் சனியும், 9-க்குக் குருவும், 10-க்குப் புதனும், 11-க்குக் குருவும், 12-க்குச் சனியும் காரகர்கள் ஆவர் என்று அறியப்படுதலின், பிதுர் ஸ்தானத்திற்கு 9-ஆம் இடமாகிய ஐந்தாமிடம் பிதாவின் பிதாவாகிய பாட்டனுடைய ஸ்தானமாதலாலும், இந்த ஐந்தாமிடத்திற்குக் குரு காரகனானபடியாலும் குருவைக்கொண்டு பிதாமஹன் விஷயத்தையும், இங்ஙனமே

மாதுருஸ்தானமாகிய 4-ஆம் இடத்திற்கு 4-ஆம் இடமாகிய ஏழாமிடம் மாதுருவின் மாதுருவாகிய மாதாமஹி ஸ்தானமாதலாலும், இந்த ஏழாமிடத்திற்குச் சுக்கிரன் காரகனெனபடியாலும், சுக்கிரனைக்கொண்டு மாதாமஹி விஷயத்தையும் அறியும்படி முனிவர்பெருமானும் பராசராருடைய திருவுளக்கருத்துபோலும். இந்த பாவககாரக விஷயமாக ஜாதக பாரிஜாதநூலுடையார் மதபேதப்படுகின்றனர். அதாவது: 1-க்குச் சூரியன், 2-க்குக் குரு, 3-க்குச் செவ்வாய், 4-க்குப் புதன், 5-க்குக் குரு, 6-க்குச் சனி, 7-க்குச் செவ்வாய், 8-க்குச் சுக்கிரன், 9-க்குச் சனி, 10-க்குச் சூரியன், 11-க்குக் குரு, 12-க்குச் சூரியன் காரகர்கள் ஆவர் எனக் கூறியுளார்.

கதிரவன் தந்தை மதியன்னை செவ்வாய்
கனிட்டராம் * புதனுயர் மாமன்
முதிர்குரு மைந்தர் வெள்ளியே மனையாள்
மூந்துவா கனஞ் சனி வாழ்நாள்
சதிருள அடிமை என்றனர் இவர்கள்
சாற்றிய இவ்வகைக்கு எல்லாம்
அதிபர் காரகர்என்று அறைந்தனர் முறையே
அறிந்துசொல் வதுபலம் என்பார்.

எனவரும் சாதக சிந்தாமணி வசனத்தினால் புதன் அம்மான்காரகன் என்பது பெறப்படும். காரகன் என்பது வடமொழி காரகம்-செய்தல், காரகன்-செய்வோன். ஆகவே பிதுர்காரகன் எனின், பிதுருவுக்கு நன்மை தீமைகளைச் செய்பவன் என்பதுபொருள். பிறவும் இங்ஙனமேயாகும்.

இவையில் உரைத்தன அலதுசமன் எனல் எல்இரவி
ஈன்றவனுக்கு அருகன் அனைக்கு அல்விது-இப்பெயர்தான்
சவுரிசிதனகு உளது இவர்கள் தந்தை அகிசிகி ஆய
சாற்று இவர்கள் நாற்கால் லோசனப்பேர் நோக்கற்கே

எனவரும் குமாரசுவாமீய நூலுடையார் வசனத்தின்படி. அதாவது:— எல்-இரவி=பகலுக்குச் சூரியன், ஈன்றவனுக்கு அருகன்=பிதுர்வுக்குரிய காரகனும். அனை-கு=மாதுருவுக்கு, அல்-விது=இரவுக்குச் சந்திரன் காரகனும். இ-பெயர்தான்=இந்த பிதுரு மாதுருகாரகர்கள் (முறையே), சௌரி-சிதன்-கு-உளது=இரவுக்குப் பிதுர்காரகன் சனியும், பகலுக்குப் பிதுர்காரகன் சுக்கிரனுமாவர். இவர்கள்-தந்தை = இந்த பிதுர்மாதுர்களின் தகப்பன். (முறையே) அகி=இராகுவும், சிகி=கேதுவும், ஆய்-சாற்று= ஆகச் சொல்லுக என்று அறிதல்வேண்டும்.

சோதிட சாஸ்திரங்களில் மகரிஷிகள் சூரியன் முதலாகிய கிரகங்களினுடைய குணம்; அல்லது சுபாவத்தன்மைகளைக் கூறியிருக்கும் பாகதிற்குக் கிரகசீலமென்றும், கிரககாரகமென்றும் பெயர் வகுத்திருக்கின்றனர். சீலம் குணம் எனவே கிரகங்களின் குணத்தன்மை அல்லதுசுபாவம் என்பது பொருள். ஆதலால் குணம், சுபாவம், சீலம், காரகம் என்பன ஒரு பொருட் கிளவிகளாகும். இது விஷயமாய் இந்த நூலில் கூறப்படும் இந்த பாகத்திற்குக் கிரகசீலப்படலம் என்று பெயராகும். (13)

* புதன்மதி மாமன் என்பது பாடபேதம்,

ஆனதோர் சரீர காரகன் வெய்யோன்
அங்கனை வாகன வகைக்கும்
தானுமே பிருகு காரகன் கன்மம்
தனக்குளழில் காரகன் அரசன்
கானமும் வித்யா காரகன் புந்தி
கனதன காரகன் வேந்தன்
தேனமர் மொழியாய் இலக்கினு தியைப்போல்
தெரிந்துகா ரகர்பலன் செப்பே.

(இ - ள்) பஞ்சபூதங்களாலாகிய உடம்பிற்குக் காரகன் சூரியனும், பெண்கள் வாகன முதலியவற்றிற்குக் காரகன் சுக்கிரனும், சத்கர்மங்களுக்குக் காரகன் குருவும், சங்கீதம் (இடைப்பாட்டு) கல்வி இவைகட்குக் காரகன் புதனும், சம்பத்துக்குக் காரகன் குருவும் ஆவர். இலக்கின முதலாகவுள்ள பன்னிரண்டு பாவகங்களைக்கொண்டு பலாபலன்களைக் கூறுவதைப்போல, காரககிரகங்களால் ஏற்படும் நன்மை தீமைகளை திட்டமாகப் பார்த்து சொல்லுவாய் எ-று.

(வி-ரை) இலக்கின முதலாகிய பன்னிரண்டு பாவகங்களுக்கு முதற் செய்யுளின் விருத்தியுரையில் கூறப்பட்டுள்ள பாவக காரகத்தின்படி இலக்கமாகிய சரீர (தநு) பாவகத்திற்குக் காரகன் சூரியனுனபடியால் "சரீரகாரகன் வெய்யோன்" என்று கூறினர் ஆசிரியர் என்க. சூரியன் தேககாரகனுவதுமன்றி ஆத்தும காரகனுமாவான். அஃது வருமாறு;—

*ஆத்மாரவிச் சீதகரஸ்து சேதஸ்*
*ஸத்வம தராஜச் சசிஜோத வாணி*
*ஜ்ஞாநம் ஸுகம் தேவகுரூர்*
*மதச்ச சுக்ரச் சநிகால நரஸ்ய துக்கம்.* (சாராவளி)

*ஆத்மார்கச் சந்த்ரமாச்சித்தஃ குஜஸ்ஸத்வம் புதோவகஃ*
*குரூர்க்ஞாநம் ஸுகம் சுக்ரோ துக்கம் காலஸ்ய ஸூர்யஜஃ*
(கேசவதைவக்ஞர்)

*காலாத்மா திநக்ருந் மநஸ்துஹி நகுஸ் ஸத்யங்குஜோ*
*ஜ்ஞோவசோ ஜீவோஜ்ஞாந ஸுகேஸிதச் சமதநோதுக்கம் திநேசாத்மஜஃ*
(பிருகத்ஜாதகம்)

*காலாத்மாச திவாநாதோ மநஃ குமுத பாந்தவஃ*
*ஸத்வங்குஜோ விஜாநீயாத் புதோவாணி ப்ரதாயகஃ*
*தேவேஜ்யோ க்ஞாநஸுகதோ ப்ருகுர் வீர்யப்ரதாயகஃ*
*விசார்யதா மிதம்ஸர்வம் சாயாஸுநுச்ச துக்கதஃ* (பராசரஹோரை)

எனவரும் பிரமாண வசனங்களால் சூரியன் ஆத்துமா, சந்திரன் மனது, செவ்வாய் சரீரபலம், புதன் வாக்கு, குரு ஞானசுகம், சுக்கிரன் காமம், சனி துக்கம் ஆகிய இவற்றிற்கு அதிபதிகளாவர் என்றறிக. சூரியன் ஆத்மாவுக்கும், சந்திரன் மனத்திற்கும் உரியவர்கள் என்பதை கீழ்க்கூறுமாற்றால் அறிக:—

உலந்தஇப் புவனம்எல்லாம் உருப்பெற வகுப்பான் எண்ணி
நலங்கெழு புனல்உண்டாக்கி நண்ணுவீ ரியத்தை விட்டார்

கலங்கலில் பரமாய்மிக்க காஞ்சன வடிவம் ஆகித்
துலங்கும் அண்டமதாய் ஆண்டோர் ஆயிரந் தொலைந்த பின்னர்.

இலங்கு சொன்ன ரூபமாகி இருள்வளர்ந்த கூடமாய்
அலங்கல் இன்றி நின்றஅண்ட அளவைகாண உள்ளுளாய்த்
துலங்கிவிண்டு வாய்வயங்கு சூரியச் சொரூபமாய்
நலங்கொள் ஆதி ஆகையால் ஆதித்தன் என்னும் நாமமாய்.

(மச்சபுராணம்)

எனவரும் பிரமாண்டபேத அத்தியாய வசனத்தினால் பிரமன் முதல்முதல் ஜலத்தைச் சிருஷ்டிசெய்து, அதில் தனது வீரியத்தை விட்டார்; அதாவது தனது சக்தி விசேடத்தை விட்டார்; அந்தச் சக்திவிசேடம் உள்ளினும் வெளியினுங்கூட அதிக இருளான சுவர்ண அண்டமாக ஏற்பட்டது; அதுவே பிராணிகளுடைய திருக்கோசரமான சராசர பிரபஞ்சத்திற்கு ஆதாரமானது; அதனால் பிரமாவிற்கு இரணியகருப்பன் என்ற பெயர் உண்டாயிற்று. அஃது வருமாறு:—

ஸோஹங் காரஜ் ஜகத் ஸ்ருஷ்ட்யை ப்ரம்மாண்டம் ஸ்ருஜத்ப்ரபுஃ
தஸ்மைவேதான் வரான் தத்வா ஸர்வலோக பிதாமஹம்
ப்ரதிஷ்டாப் அண்டமத்யேத ஸ்வயம் ஸர்யேதி பாஸயன்
அதஸ்ருஷ்ட்யே மநச்சக்ரே ப்ரஹ்மா ஹங்கார மூர்த்தித்ருக்
மநஸஸ் சந்த்ரமா ஜஜ்ஞே சூர்யோக்ஷ்ண ஸ்தேஜ ஸாம்நிதிஃ

(சூரியசித்தாந்தம்)

என்ற உபநிஷத்து அத்தியாய வசனத்தின்படி அப்பிரம்மா சிருஷ்டி செய்யத்தொடங்கி முதலில் ஆதிசபளப் பிரம்மத்தைத் தியானித்து, நன்மனத்துடன் அந்த அண்டத்தைப் பார்த்தனர். உடனே அப்பரமாத்மாவாகும் பரமேஸ்வரனே இரணியகருப்பனுடைய * கண்ணிலிருந்து சூரியனாக அபிவியக்தனானார். அம்மகா மாயையாகும் லலிதா பரமேஸ்வரியே இரணியகருப்பனுடைய மனத்திலிருந்து சந்திரனாக அபிவியக்தமானார். ஆதலின் "சந்த்ரமா மநஸோஜாதஃ சக்ஷோஸ் சூர்யோ அஜாயத" என சுருதியுங் கூறுகிற்கும். இவ்வுண்மைபற்றியே சோதிட நூலில் ஆத்தும நேத்திரகாரகன் சூரியன் எனவும், மனத்தின் காரகன் சந்திரன் எனவும் வகுத்துளது என்றறிக.

எண்ண இருநான்கின் ஏற்றசடம் சாணளவில்
மண்ணால் உருவாகி வான்உலவப்—பண்ணுவிதம்
ஏர்வாயும் தேயும் எழில்அப்புந் தான்கூடிச்
சார்வுற்றது என்றேநீ சாற்று.

சாற்ற எலும்புதோல் சார்இறைச்சி காணுமயிர்
போற்ற நரம்பும் புகலமண்—ஏற்ற
உதிரமச்சை சுக்கிலநீர் உற்றதோர் மூளை
மதிக்கவப் பென்றே வழுத்து.

(கண்ணுசாமியம்)

---

* வாதுளாகம முதலிய நூற்களில் மகேசுவர மூர்த்தியின் இரண்டு கண்களினின்று சூரிய சந்திரர்கள் பிறந்ததாகக் கூறப்பட்டிருக்கின்றது.

எனவரும் வசனத்தினுல் அவரவர் கையில் எண்சாண் அல்லது தொண்ணூற்ரூறு அங்குலம் உயரமுடையதென்று நினைக்கக்கூடிய இச்சரீரம் பிருதிவியென்னும் பூதமாகிய மண்ணுல் உருவாகி ஆகாயம் என்ற பூதத்தினிடமாக ஒடுங்கி வாயு, தேயு, அப்பு என்னும் மூன்று பூதங்களால் இயக்கப்பட்டிருக்கின்றது. பஞ்சபூதத்தால் ஆக்கப்பட்ட சரீரத்தில் எலும்பு, தோல், மாம்சம், மயிர், நாடி முதலியவைகள் பிருதிவியென்னும் பூதத்தின் அம்சங்களாம். உதிரம், மச்சம், சுக்கிலம், நீர், மூளை முதலியவைகள் அப்பு என்னும் பூதத்தின் கூறும் என்று அறியப்படுதலின் "ஆனதோர் சரீரம்" என்பதற்குப் பஞ்சபூதங்களால் ஆகிய உடம்பு என்று பொருள் கூறப்பட்டதென்றறிக.

"தேர்கதை காவியம் தாதன் சேண்நடனம் எழுத்தும்" என்ற குமாரசுவாமியவசனத்தின்படி புதன் அந்த நாட்டியத்திற் கதிபன் என்பது பெறப்படுதலின் "கானமும்.........காரகன் புந்தி" என்று கூறினூர் இந்நூலாசிரியர் என்க. 'அந்தரநாட்டியம்' என்பது கழைக்கூத்து; அதாவது கம்பத்தை நட்டு அதன்மீதிருந்து நடித்தலாகும். ஆனுல் "பேரிகை வாத்தியமுதல் சங்கீத நடப்பிரியம்......" என்ற குமாரசுவாமீய வசனத்தின்படி சங்கீதம், நடனம் முதலியவற்றிற்குச் சுக்கிரனே காரகன் என்பது போதரும். ஆதலால் அந்தரநாட்டியத்திற்குக் காரகன் புதனும், சங்கீத நடனத்திற்குக் காரகன் சுக்கிரனு முரியவர் என்றறிக.

சூத்திரத்து உள்பொருள் அன்றியும் ஆண்டைக்கு
இன்றி அமையா யாவையும் விளங்கத்
தன்னுரை யானும் பிறநூ லானும்
ஐயம் அகல ஐங்காண்டிகை உறுப்பொடு
மெய்யினை எஞ்சாது இசைப்பது விருத்தி. (நன்னூல்)

என வரும் பவணந்திமுனிவர் வசனத்தின்படி இவ்விடத்திற்கு மிகமிக அவசியமானவற்றைப் பிறநூல் வசனங்களால் சந்தேகமற விளக்கவேண்டியது விருத்தியுரைக்காரரின் கடமையாதலினுல் பிறநூற்களின் கருத்துக்களை எடுத்துக் கிரககாரகங்களை விரிக்கக் கருதினும் என்ப. சீலமானது இராசிசீலம், கிரகசீலம் என இருவகைப்படும். இந்நூலில் முதல் கிரகசீலத்தையும், பின்பு இராசிசீலத்தையும் பற்றிக் கூறப்பட்டிருக்கின்றன. 'காரகம்' என்பது கூடகிரககாரகம், பாவககாரகம் என இருவகையாக இருக்கின்றன.

க்ரஹராவி ஸ்வபாவேந பும்ஸ்த்ரியோ ராசிமேவச
ஸ்வபாவஞ்ச வதேத்புத்யா தேசகால குலாநுக:

என்ற பராசர ஓரையின்படி மக்கள் எந்த சுபாவகுணமுடையவர்களாயிருக்கின்ரூர்களோ அது கிரகங்களுடையவும், இராசிகளுடையவும் சுபாவகுணத்தை அநுசரித்ததா யிருக்கின்றது. ஆதலால் இதனை மிக சூட்சுமபுத்தியினுல் தேசம், காலம், குலம் ஆகியவற்றிற்கேற்ப விசாரித்தல் வேண்டும் என்று அறியப்படுகின்றன. இதன் உண்மை வருமாறு:—

சூரிய சந்திரர்களுடையவும், ஏனைய கிரகநக்ஷத்திரங்களுடையவும், கிரணபிரஸாரங்களினுலும், காலகதியினுலும், சீதோஷ்ணங்களினுலும் ஜீவகோடிகள், ஓஷதிகள், விருக்ஷாதிகள், பயிர் முதலிய சசியாதிகள்

விருத்திக்ஷயங்களை அடைகின்றன. இதனாலேயே மக்களுக்கு ஒரு சமயம் வியாதியுண்டாதலும், மற்றொருசமயம் வியாதியில்லாதிருத்தலும், ஒரு சமயம் சுகமாய் இருத்தலும், மற்றொருசமயம் கஷ்டமாக இருத்தலும் உண்டாகின்றன. இங்ஙனமே பயிர் முதலியவைகளுங்கூட ஒருசமயம் நன்றாய்ப் பலிதத்தைத் தருதலும், மற்றொருசமயம் பலிதமின்றிப் போதலுமாகின்றன. ஆகவே கிரகங்களுடைய குணத்தைக்கொண்டும், வடிவத்தைக்கொண்டும் மக்களுக்குக் குணவடிவங்கள் உண்டாகின்றது.

சூரியனுடைய கிரணமானது பூமியிலுள்ள நீர்நிலைகளிலிருந்து ஜலத்தை ஆவிரூபமாக கிரகித்து மேகத்தை யுண்டாக்கி பிந்துவடிவமாக மழைபெய்யச் செய்கின்றது. இந்த மழையின் ஆதாரத்தினாலேயே ஓஷதிகள், விருக்ஷங்கள், பயிர்கள் விருத்தியடைய இதன் பலன்களை அன்னாதிகளாக மக்களுண்டு தசை, சக்திகளுண்டாகி ஜீவித்திருக்கின்றார்கள். இதனை:—

ஆதித்தாத் ஜாயதே வ்ருஷ்டி

எனவரும் கீதை வசனத்தினாலும் மற்றும் "ஆதித்யாஜ்ஜாயதே வ்ருஷ்டிர் வ்ருஷ்டேரந்நம் ததஃ ப்ரஜா" எனவரும் மநுஸ்மிருதி வசனத்தினாலும் இனிது அறியலாம். ஆத்மகாரகனான சூரியனுடைய பலாபலத்தைக் கொண்டே ஆத்மா நடைபெறுகின்றது. சூரியனில் ஒருவிதமான அக்கினி இருக்கின்றது. மனிதர்கள் சரீரத்திலும் அந்தராக்கினி யிருக்கின்றது. சூரியனிலுள்ள அக்கினி மனிதர்களின் சரீரத்திலுள்ள அந்தராக்கினிக்கு உதவிசெய்து அதனால் வன்மை முதலானவைகளுண்டாய் பலமாக இருக்கும். சூரியனுடைய தேஜசு சந்திரனிலும் ஏனைய கிரகங்களிலும், பூமியிலும், பூமியிலுள்ள சகல வஸ்துக்களிலும் வியாபித்துப் பிரகாசிக்கச்செய்கின்றது. சூரியனுடைய தேஜசில் குணபேதம் இருக்கின்றது. அதனால் அதிகாலைவெயிலினால் ஜனங்களுக்கு ரோகபீடிதமும், பித்தாதிக்கமும், மத்தியான்னவெயிலினால் தேகோஷ்ணமும், சாயங்கால வெயிலினால் ஆரோக்ய குதூகலமும் ஆயுர்விருத்தியும் உண்டாகின்றன. சூரியனாலேயே ருதுக்களும், சீதோஷ்ண ஸ்திதிகளும் ஏற்படுகின்றது. இந்த ருதுபேதத்தைக்கொண்டே சகல பயிர்ப்பூண்டு செடி கொடி விருக்ஷாதிகள் பலிதத்தைத் தருகின்றது. சீதோஷ்ணஸ்திதியினால் சில பிரதேசங்களிலுள்ள மனிதர்கள் வெண்மை நிறமாகவும், மற்றுஞ் சில தேசங்களிலுள்ள மனிதர்கள் கருமைநிறமாகவும், இன்னுஞ்சில தேசங்களிலுள்ள மனிதர்கள் சாம்பர் நிறமாகவும் இருக்கின்றார்கள். பிரதேச பேதங்களைக்கொண்டே அந்தந்த தேசங்களிலுள்ள காற்றும், நீரும் சிலருக்கு சௌக்யத்தையும், சிலருக்கு அசௌக்யத்தையும் உண்டாக்குகின்றன. சந்திரோதய சந்திராஸ்தமயத்தைக்கொண்டே சமுத்திரத்திற்கு சீதக் கொதிப்பு உண்டாகின்றது. சந்திரன் மனத்திற்குக் காரகன், சந்திரனுடைய பலாபலத்தைக்கொண்டே ஜீவகோடிகளின் மனம் நடைபெறுகின்றது. சந்திரகலையினுடைய பூர்ணக்ஷீணத்வங்களைக்கொண்டே மனிதர்களுக்குச் சனனகாலத்தில் எந்தெந்த கிரகங்கள் பலமாய் இருக்கின்றதோ அந்தந்த கிரகங்களுக்குச் சொல்லப்பட்ட தாதுக்கள்; (அதாவது சூரியன் எலும்பு, சந்திரன் - இரத்தம், செவ்வாய் - எலும்புக்குள் இருக்கும் தாது, புதன் - தோல், குரு-மூளை, சுக்கிரன் - இந்திரியம், சனி - நரம்பு ஆகிய

தாதுக்களுக்கு உரியவர்களாதலின்)பலீஷ்டமாயிருக்கும் இந்தப்படி கிரகங்களுடைய காரகத்துவ பலத்தினால் தேகம், அவயவம் விருத்தியாகி தாது புஷ்டி யுண்டாகி பலீஷ்டமாகவும் சுகமாகவும் இருக்கும். கிரகங்களுடைய பலவீனத்தினால் தாதுக்கள் குறைந்து அவயவங்கள் மெலிந்து தேகபுஷ்டியில்லாதிருக்கும். இத்தியாதி நியாய வசனங்களால் கிரகாகூத்திராதிகள் பூமியிலுள்ள மனிதர்களுக்கு சுபாசுப பலன்களைத் தருகின்றதென்பதில் சந்தேகமேயில்லை. விரிப்பிற்பெருகும்.

மற்றும் பூமியில் உற்பத்தியாகும் சராசரப்பொருள்கள் எல்லாம்சூரிய சந்திரர்களாலேயே விருத்தியாகின்றன. இதனை "உள்ளிரவி மதியாகி நின்றுலகமெலாம் நடத்தும்" என்ற திருவருட்பிரகாசவள்ளலார் திருவாக்கால் அறிக. அதாவது ஒருவித்து பூமியில் விழுந்தால் அதனைச் சந்திரனுடைய குளிர்ந்த கிரணமானது நனைத்துப் பசையாக்கிப் பெருக்கச் செய்து பூமியின் சத்துடன் கலக்கச்செய்யும்; சந்திரகிரணமும் பூமியின் சத்துமாகிய இவ்விரண்டின் சக்திகளினால் அந்த வித்திலிருந்து வேர் தோன்றிப் பூமியைத் துளைத்துக்கொண்டு கீழே செல்லும். சந்திரகிரணம் அந்த வித்துக்குத் தனது குளிர்ந்த அமிர்தகிரணத்தினால் புஷ்டியையுண்டாக்கி விருத்தியடையச்செய்யும். இதனால் அதன் வேர் வளர்ச்சியை அடைந்து பூமியில் ஊன்றிநிலைத்து அதன்மூலமாக நீரைப்பருகி செழித்து ஓங்கி வளரும் இதனால் இது சராசரப் பொருள்களுக்குத் தாயைப் போன்றதாகும்.

சூரியகிரணமானது அந்த வித்துக்குள் சூட்சுமமாக அடங்கியிருக்கும். ஆன்மசக்தியை மேலே இழுக்கும்; அப்போது முளை தோன்றும்; அந்த முளையானது சூரியகிரணத்தினால் இலகுவாகி, கொழுந்துகளாகவும், இலைகளாகவும், கிளை அல்லது கொடிகளாகவும் விருத்தியாகும். இதனால் இது சராசரப் பொருள்களுக்குத் தந்தையைப் போன்றதாகும். இந்நியதி பற்றியே சோதிடசாஸ்திரத்தில் சூரியனைப் பிதுர்காரகன் என்றும், சந்திரனை மாதுர்காரகன் என்றும் வகுத்துரைத்தனர் வல்லோர் என்றறியலாம். இங்ஙனம் சராயுஜம், அண்டஜம், பிண்டஜம், சுவேதஜம் என்னும் நால்வகைத் தோற்றங்களாகிய சராசர பேதங்கள் அனைத்தின் உற்பத்திக்கும் சூரிய சந்திரர்களும் பூமியும் பிரதான கர்தவ்ய முடையதென்பது நன்கு போதரும்.

ஆன்மாக்கள் பகலில் விவகாரஞ்செய்தலும், இரவில் விவகாரமொடுங்குதற்கும் ஆன்மகாரகனாகிய சூரியனுடைய ஒளியும், ஒளியின்மையுமே முக்கிய காரணமாகும. இந்த சூரியனை மக்களின் கண்ணுக்கும், பற்களுக்கும் காரகன் என சோதிடசாஸ்திரங்களில் கூறப்பட்டிருத்தலின் அதன் காரணம் வருமாறு :—

இவர்கள் நால்வரும் நான்குகங்களுக் கிறைவராயினர் மற்றுமிச்
சிவமூறும் புனலாடி முன்தினகரன் இழந்தபல் எய்தினன்
தவளமாமதி முயலகப்பிணி சாடினன் பகன் என்பவன்
துவளுமாறுயர் வீரபத்திரன் தொட்டவாள் விழிப் பெற்றனன்.

(காஞ்சிபுராணம்)

"சூரியர் தொண்டை வாயினிற் பற்களை
வாரி நெரித்தவா றுந்தீபற
மயங்கிற்று வேள்வியென் றுந்தீபற"
"உண்ணப் புகுந்த பகனொளித் தோடமே
கண்ணைப் பறித்தவா றுந்தீபற
கருக்கெட நாமெலா முந்தீபற." (திருவுந்தியார்)

எனவரும் பிரமாணங்களினால் சூரியன் தக்கன் யாகத்தில் இழந்த பல்லைப் பெற்றான் என்பதும், பகன் என்னும் சூரியன் தக்கன் யாகத்திலிழந்த கண்ணைப்பெற்றான் என்பதும் பெறப்படுதலினால் சூரியனால் கண்ணுக்கும் பல்லுக்கும் நன்மை தீமைகளுண்டாமென்று அறியப்படும். இரணிய கருப்பனுடைய நேத்திரத்திலிருந்து சூரியன் தோற்றியபடியால் கண்ணுக் குரிய காரகன் என்பதும், மற்றும் "கதிரவன் உடலில் அஸ்திக்கு நாதன்" எனவரும் மங்களேஸ்வரிய வசனத்தினால் சூரியன் எலும்புக்கதிபன் எனவே அது சம்பந்தமான பல்லுக்குரிய காரகன் என்பதும் போதரும். இவைகள் ஒருவாறு விரிக்கப்பட்ட உள்ளுறையாகும். இதன் உண்மைகளை ஒருங்கே மூற்ற நிதானித்துத் தத்துவங்காட்டல் மகா பண்டிதர்க்கன்றி மற்றையோர்க்கு அசாத்தியமாதலின் எமது சிற்றறிவுக்கு எட்டியவரை ஒருவாறு வரைந்தாம். சோதிடஞான சூட்சும தர்சிகளின் முன்னிலையில் எமது கருத்து எங்ஙனம் பொருந்துமோ அறியகில்லேம். (14)

## கிரக தேவதை

ஆன வெள்ளி குருஅயன் ஆகுமே
வான இந்தும் புதனும்நல் மாயன்ஆம்
பானும் சேயும் சிவன்எனப் பன்னுவர்
மான அந்நிய தேவதை மந்தனே.

(இ-ள்) சூரியன் அங்காரகன் சிவபெருமானும், சந்திரன் புதன் ஸ்ரீமந்நாராயணமூர்த்தியும், குரு சுக்கிரன் பிரம்மதேவனும், சனி அந்நிய தேவதைகளும் ஆவார்கள் எ-று.

(வி-ரை) இந்நூலாசிரியர் ஏழு கிரகங்களை நான்கு வகையாகப் பிரித்து, சிருஷ்டி, திதி, சம்மாரமென்னும் முத்தொழில்களை நடத்தும் முத்தேவர்கள் சூரியாதி ஆறு கிரகங்களெனவும், சனியை அன்னிய தேவதையெனவும் கூறியிருக்கின்றார். ஆகவே குரு சுக்கிரர் மண்டலங் களுக்குச் சிருஷ்டிகர்த்தாவாகிய பிரமதேவனும், சந்திரபுத மண்டலங் களுக்கு ஸ்திதி கர்த்தாவாகிய ஸ்ரீமந் நாராயணமூர்த்தியும், சூரிய அங்காரக மண்டலங்களுக்குள் சாக்ஷாத்பரசிவப்பெருந்தகையும், சனிமண்டலத்திற்கு அன்னிய தேவதைகளும் அதிட்டான தெய்வங்களென்பது நன்கு பெறப்படும்.

சூரியாதி கிரக நட்சத்திர மண்டலங்கள், சிருஷ்டிகாலந்தொட்டு வானவெளியில், அவ்வப்பெயர்களுடன் பிரகாசித்துக்கொண்டிருக்கின்றன. அம்மண்டலங்கள் அவ்வவற்றிற்கென இறைவனால்நியமிக்கப்பெற்ற அதிஷ்டான தேவதைகளின் அதிகாரத்திற் குட்பட்டனவாய் நடைபெறுகின்றன வாகும். எல்லாம் வல்ல இறைவன் மன்பதைகளைத் தத்தம் நல்வினை

தீவினைப்பயன்களுக்கேற்ப சக்கிரவர்த்தி, மஹாராஜன், இராஜன், மந்திரி, சேனாதிபதி என நியமித்து அந்நிலவுலகை எங்ஙனம் நடத்துகின்றாரோ? அங்ஙனமே, அநேகாயிரம் யோசனை தூரத்திற்கப்பால், இப்பூகோளத்தை விட மிகப்பெரியதாய், தேஜோமயமாய், மிக்க தெய்வீகம்பொருந்திய ரம்ய கரமான நதி, நதம், நந்தனவனம், மாளிகை, கிரி, தடாகங்களும் விளங்கா நிற்கும், சூரிய சந்திராதி கிரகமண்டலங்களை, தபசித்தர்களான புண்ணிய ஆன்மாக்களைக்கொண்டு நடத்துகின்றார் என்று நன்கறியலாம்.

நமது தேகத்தில் ஜீவாத்மா, பரமாத்மா என்று இரண்டு ஆத்மாக் கள் அந்தர்க்கதமாய்இருந்து இயக்குவித்தல்போலவே கிரகமண்டலங்களில் கிரகங்கள். கிரகமண்டல அதிட்டான தேவதைகள் என்னும் இரண்டு அதிகாரிகள் அந்தர்க்கதமாய் இருந்து இயக்குகின்றனர் என்பது வேத புராணேதிகாச உண்மையாகும். ஆனால் கசியபிரஜாபதிக்கும் அதிதிக்கும் பிறந்தவன் சூரியன், சந்திரனுக்குந் தாரைக்கும பிறந்தவன் புதன், உத்தானபாதனுக்கும் சுநீதிக்கும் பிறந்தவன் துருவன், தக்ஷபிரஜாபதிக்கும் அசிக்கினிக்கும் பிறந்தவர்கள் நட்சத்திரங்கள் என்று புராணங்கள் கூறு கிற்கும். அங்ஙனமானால்:

கசியப அதிதிசங்கமம், தாராசந்திர சங்கமம், உத்தானபாத சுநீதி சங்கமம், தக்ஷ அசிக்கினி சங்கமங்களுக்குமுன் வானவெளியில் முறையே ரவி, புத, துருவ, நட்சத்திரமண்டலங்கள் இல்லை என எற்படுகின்றதே எனின்? அங்ஙனமல்ல; இவர்கள் சங்கமத்திற்கு முன்னரே வானவெளியில் சூரியன் முதலாகிய கிரகமண்டங்களும் நக்ஷத்திரமண்டலங்களும் அவ்வப் பெயருடையனவாய், படைப்புக் காலமான கல்பாரம்ப முதலாகவே விளங்கி வருகின்றனவாகும். அவைகளுள் அப்பதங்களை ஆட்சிபுரியத்தக்க புண்ணிய ஆன்மாக்கள்மட்டும் ஒவ்வோர்காலத்தில் சென்று,அப்பதங்களின் தலைமை ஸ்தானத்தை வகித்து, அப்பெயருடன் அப்பதங்களின் அதிட்டான தேவதைகளின் ஆக்கினைக்குட்பட்டு ஆட்சிபுரிந்து ஆங்கு இருக்கவேண்டிய புண்ணிய காலவரையறை கழிந்தவுடன், அதற்கு மேலாகவோ அல்லது கீழாகவோ உள்ள பதங்களில் தன் வினைக்கீடாகச் சென்றடையும். அப்போது அபபதங்களைப் பெறுதற்குரிய மற்றொரு புண்ணிய ஆன்மா அங்கு சென்று முன்போல தலைமைஸ்தானத்தை வகித்து அப்பெயருடன் அப்பதங்களின் அதிட்டான தேவதைகளின் ஆக்கினைக்குட்பட்டு ஆட்சி புரியும் என்றறிதல் வேண்டும்.

இதுகாறும் கூறியவற்றால் கசியபிரஜாபதியின் புதல்வனும், சந்திரன் புதல்வனும், உத்தானபாதன்புதல்வனும், தட்சபிரசாபதியின் புதல்விகளும் உதிக்குமுன்னரே வானவெளியில்,முறையே ரவி, புதன்,துருவன், அசுவினி யாதி நட்சத்திரங்களின் மண்டலங்கள் விளங்கியிருந்தனவென்பதும், இப் புதல்வர், புதல்வியர்கள் தவஞ்செய்து அப்பெயரைப்பெற்று, அம்மண்டலங் களைச் சென்றடைந்தனரென்பதும் நன்கு விளங்காநிற்கும். மற்றும்நகுஷன் ஆயிரம் அசுவமேதயாகஞ்செய்து இந்திரபதம் பெற்றான் இப்படி இந்திர பதம் பெற்றோர் பலர். கிரகபதங்களின் ஆதிக்கத்தைப் பெற்றோரும் பலர். செவ்வாய் ஒரு கல்பத்தில் சிவபெருமான் வியர்வையினின்றுந் தோன்றி, புவிமகளால் வளர்க்கப்பெற்று தவஞ்செய்து கிரகபதம் பெற்ற தும், மற்றொரு கல்பத்தில் பரத்துவாஜர் வீரியஸ்கலிதத்தாற்றோன்றி, புவி

மகளால் வளர்க்கப்பெற்று தபஞ்செய்து கிரகபதம் பெற்றதுங்கொண்டும், புராண வசனங்களால் செவ்வாய் பலர் என்பது நன்குபோதரும். சந்திரன் ஒரு கற்பத்தில் அத்திரி முனிவருடைய கண்ணிலும், மஹா விஷ்ணுவி னுடைய இருதயத்திலும், அக்கினி தேவனுடைய முகத்திலும், பிரம்ம சிருஷ்டியிலும், அமிர்த மதனத்திலும் உதித்துத் தபஞ்செய்து கிரகபதம் பெற்றமையால் சந்திரர்கள் பலர் என்பது போதரும்.

கிரக மண்டலங்களில் அதிதேவதை பிரத்யதிதேவதைகள் என இரண்டு தேவதைகள் உண்டு. இது விஷயமாக நவக்கிர மகப்பிரயோகத் தில் கூறப்பட்டிருப்பன வருமாறு:—

## (1-வது சூரியன்)

ஸுூர்ய க்ரஹ அதிதேவதாம் அக்னிம் ஸாங்கம் ஸாயுதம் ஸவாஹநம் சக்தி பத்னி புத்ர பரிவார ஸமேதம் ஸுூர்ய க்ரஹஸ்ய தக்ஷிணத: அக்னிம் ஆவாஹயாமி. ஸுூர்யக்ரஹ ப்ரத்யதிதேவதாம் ருத்ரம் ஸாங்கம் ஸாயுதம் ஸவாஹநம் சக்தி பத்னீ புத்ர பரிவாரஸமேதம் ஸுூர்ய க்ரஹஸ்ய உத்தரத: ருத்ரம் ஆவாஹயாமி.

பிராங்முகிம் பத்மாஸநஸ்தம் த்விபுஜம் ஸப்தாச்வம் ஸத்பராஜ்ஜுூம் களிங்கதேசாதிபதிம் காச்யபகோத்ரம், ப்ரபவ ஸம்வத்ஸர மாகசுத்த ஸப் தம்யாம் விசாகா நக்ஷத்ரேஜாதம் ஸிம்ஹராசயதிபதிம் பானுவார ப்ரயுக்தம் க்ரீடிநம் ஸுகாஸீநம் பத்நீபுத்ர பரிவாரஸமேதம் க்ரஹமண்டலே பிரவிஷ் டம் அஸ்மிந் அதிகரணே மத்யே வர்த்துலாகார மண்டலேகோதும தாங்ய ஸ்யோபரி ஸுூர்யக்ரஹ மாவாஹயாமி.

## (2-வது சந்திரன்)

தசாச் வரதவாஹநம் ப்ரயங்முகம் (அதன்முன்னர்) த்விபுஜம் தண்ட தரம் யாமுநா தேச திபதிம் ஆத்ரேயகோத்ரம் நந்த ஸம்வத்ஸர கார்த்திக சுத்த சதுர்தச்யாம் க்ருத்திகா நக்ஷத்ரேஜாதம் கர்க்கடராச்யதிபதிம் இந்து வாஸர ப்ரயுக்தம் கிரீடிநம் ஸுகாஸீநம் பத்நீபுத்ர பரிவாரஸமேதம் க்ரஹ மண்டலே ப்ரவிஷ்டம் அஸ்மிந் அதிகரணே ஸுூர்யஸ்ய ஆக்நேய திக்பாகே சதுரச்ர மண்டலே தண்டுலதாங்ய ஸ்யோபரி பகவந்தம் சந்த்ரக்ரஹம் ஆவாஹயாமி.

சந்த்ரக்ரஹ அதிதேவதா: ஆப: (அப்பு) (மற்றது சூரியனுக்கு சொன்னபடியே இங்கும் கூட்டிக்கொள்க. பின்வரும் கிரகங்களுக்கு மிப் படியே சேர்த்து வாசிக்கவும்) சந்த்ர க்ரஹஸ்ய தக்ஷிணத: ஆப ஆவாஹ யாமி. சந்த்ரக்ரஹ ப்ரத் அதிதேவதாம் (மற்றது சூரியனுக்குச் சொன்ன படியே) சந்த்ரக்ரஹஸ்ய உத்தரத: கௌரீம் ஆவாஹயாமி.

## (3-வது செவ்வாய்)

மேஷவாஹநம் தக்ஷிணபிமுகம் சதுர்புஜம் கதாசூலசக்திதரம் அவந்தி தேசாதிபதிம் பாரத்வாஜ கோத்ரம் அக்ஷய ஸம்வத்ஸர பாத்ரபத சுக்ல த்விதீயாயாம் பூர்வபல்குனி நக்ஷத்ரஜாதம் மேஷவ்ருச்சிக ராச்யதிபதிம்

பௌமவாஸரப்ரயுக்தம் க்ரீடிகம் ஸுகாஸீநம் பத்நீபுத்ர பரிவாரஸமேதம் க்ரஹமண்டலே ப்ரவிஷ்டம் அஸ்மிந் அதிகரணே, ஸூர்ய க்ரஹஸ்ய தக்ஷிணதிக்பாகே த்ரிகோணாகார மண்டலே ஆடக தாந்யஸ்யோபரி பகவந்தம் அங்காரக க்ரஹம் ஆவாஹயாமி.

அங்காரக க்ரஹ அதிதேவதாம் ப்ருதிவீம்......அங்காரக க்ரஹஸ்ய தக்ஷிணதః ப்ருதிவீம் ஆவாஹயாமி......அங்காரகக்ரஹ ப்ரதியதிதேவதாம் அங்காரக க்ரஹஸ்யோத்தரதః க்ஷேத்ரபாலம் ஆவாஹயாமி.

## 4-வது புதன்

ஸிம்ஹவாஹநம் உதங்முகம் மகததேசாதிபதிம் சதுர்புஜம் கட்கசர்மாம்பரதரம் ஆத்ரேயகோத்ரம் ஸௌம்ய ஸம்வத்ஸர வைசாகசுக்ல ஏகாதஸ்யாம் உத்ரபல்குநீ நட்சத்ரஜாதம் கந்யாமிதுந ராச்யதிபதிம் ஸௌம்யவாஸர ப்ரயுக்தம் க்ரீடிநம் ஸுகாஸீநம் பத்நீபுத்ர பரிவாரஸமேதம் க்ரஹமண்டலே ப்ரவிஷ்டம் அஸ்மிந் அதிகரணே ஸூர்ய க்ரஹஸ்யஃ ஈசாந்யதிக்பாகே பாணாகாரமண்டலே முத்க (பச்சைப்பயறு) தாந்யஸ்யோபரி பகவந்தம் புதக்ரஹம் ஆவாஹயாமி. புதக்ரஹ அதிதேவதாம் விஷ்ணும்...... புதக்ரஹஸ்ய தக்ஷிணதிசி விஷ்ணும் ஆவாஹயாமி......புதக்ரஹஸ்ய ப்ரத்யதிதேவதாம் புதக்ரஹஸ்ய உத்தரதః நாராயணம் ஆவாஹயாமி.

## 5-வது குரு

உத்ராபிமுகம் பத்மாஸநஸ்தம் சதுர்புஜம் தண்டாக்ஷ மாலாதாரிணம் ஸிந்துத்வீப தேசாதிபதிம் ஆங்கீரஸ கோத்ரம் ஸௌம்ய ஸம்வத்ஸர * த்வாதச்யாம் தநிஷ்டாநக்ஷத்ரஜாதம் தநுர்மீந ராச்யதிபதிம் குருவார ப்ரயுக்தம் க்ரீடிநம் ஸுகாஸீநம் பத்நிபுத்ரபரிவார ஸமேதம் க்ரஹமண்டலே ப்ரவிஷ்டம் அஸ்மிந் அதிகரணே ஸூர்ய க்ரஹஸ்யோத்தர திக்பாகே தீர்க்க சதுரச்ரமண்டலே சணகதாந்யஸ்யோபரி (கடலை) ப்ரஹஸ்பதிக்ரஹம் ஆவாஹயாமி ப்ருஹஸ்பதிக்ரஹ அதிதேவதாம் இந்த்ரமருத்வம்......ப்ருஹஸ்பதி க்ரஹஸ்ய தக்ஷிணதః இந்த்ரமருத்வம் ஆவாஹயாமி. ப்ருஹஸ்பதிக்ரஹ ப்ரத்யதிதேவதாம் ப்ரஹ்மாணம் ப்ருஹஸ்பதி க்ரஹஸ்ய உத்தரதః ப்ரஹ்மாணம் ஆவாஹயாமி.

## 6-வது சுக்கிரன்

பூர்வாபிமுகம் பத்மாஸநஸ்தம் சதுர்புஜம் தண்டாக்ஷமாலா ஜடாவல்கலதாரிணம் காம்போஜ தேசாதிபதிம் பார்க்கவகோத்ரம்மந்மதஸம்வத்ஸர † தஸம்யாம் புஷ்யநக்ஷத்ரஜாதம் துலாவ்ருஷப ராச்யதிபதிம் ப்ருகுவார ப்ரயுக்தம் கிரீடிநம் ஸுகாஸீநம் பத்நீபுத்ர பரிவாரஸமேதம் க்ரஹமண்டலே ப்ரவிஷ்ட அஸ்மிந் அதிகரணே ஸூர்யக்ரஹஸ்ய ப்ராக்பாகே பஞ்சகோணாகாரமண்டலே ராஜமாஷ (மொச்சை) தாந்யஸ்யோபரி சுக்ரக்ரஹம் ஆவாஹயாமி. சுக்ரக்ரஹ அதிதேவதாம் இந்த்ராணீம்......சுக்ரக்ரஹஸ்ய தக்ஷிணதః இந்த்ராணீம் ஆவாஹயாமி. சுக்ரக்ரஹ ப்ரத்யதிதேவதாம்...... சுக்ரக்ரஹஸ்ய உத்தரதః இந்த்ரம் ஆவாஹயாமி.

---

* இங்கு மாசமும் பக்ஷமும் தெரியவில்லை. சைத்ரசுத்தமாக இருக்கலாமென்பது எமது கருத்து. † இங்கும் மாசம் பக்ஷம் தெரியவில்லை.

## 7-வது சனி

சாபாஸநஸ்தம் ப்ரத்யங்முகம் க்ருத்ரதரம் சதுர்புஜம் சூலாயுததரம் ஸௌராஷ்ட்ர தேசாதிபதிம் விகாரி ஸம்வத்ஸர நவம்யாம் ரோஹிணீ நக்ஷத்ரஜாதம் மகரகும்ப ராச்யதிபதிம் மந்தவார ப்ரயுக்தம் கிரீடிநம் ஸுகாஸீநம் பத்நீபுத்ர பரிவார ஸமேதம் க்ரஹமண்டலே ப்ரவிஷ்டம் அஸ்மிந் அதிகரணே ஸூர்யக்ரஹஸ்ய பச்சிமதிக்பாகே தநுராகாரமண்டலே தில (எள்) தான்யஸ்யோபரி பகவந்தம் சனைச்சரக்ரஹம் ஆவாஹயாமி. சனைச்சரக்ரஹ அதிதேவதாம் யமம்......சனைச்சர க்ரஹஸ்ய தக்ஷிணதः யமம் ஆவாஹயாமி. சனைச்சரக்ரஹ ப்ரத்யதிதேவதாம் சனைச்சரக்ரஹஸ்ய உத்தரதः ப்ரஜாபதிம் ஆவாஹயாமி.

## 8-வது ராகு

ஸிம்ஹாஸநம் தக்ஷிணாபிமுகம் சூர்பாஸநஸ்தம் சதுர்புஜம் கராளவக்த்ரம் கட்கசர்மவரகரம் பைடீநஸ கோத்ரம் பர்பரதேசாதிபதிம் கிரீடிநம் ஸுகாஸீநம் சக்திபத்நீ புத்ரபரிவார ஸமேதம் க்ரஹமண்டலே ப்ரவிஷ்டம் அஸ்மிந் அதிகரணே ஸூர்யமண்டலஸ்ய நைருதிதிக்பாகே சூர்ப்பாகார மண்டலே மாஷ (உளுந்து) தாந்யஸ்யோபரி பகவந்தம் ராஹுக்ரஹம் ஆவாஹயாமி. ராஹுக்ரஹ அதிதேவதாம் காமாம்......ராஹுக்ரஹஸ்ய தக்ஷிணதः காமாம் ஆவாஹயாமி. ராஹுக்ரஹ ப்ரத்யதிதேவதாம் ராஹு க்ரஹஸ்ய உத்தரதः சர்ப்பம் ஆவாஹயாமி.

## 9-வது கேது

த்வஜாஸநஸ்தம் தக்ஷிணாபிமுகம் சதுர்புஜம் அந்தர்வேதி தேசாதிபதிம் த்விபாஹும் கதாதரம் பைடீநஸகோத்ரம் அபிஜிந் நக்ஷத்ரஜாதம் ஸிம்ஹாஸநாஸீநம் க்ரஹமண்டலே ப்ரவிஷ்டம் அஸ்மிந் அதிகரணே ஸூர்யக்ரஹஸ்ய வாயவ்யதிக்பாகே த்வஜாகாரமண்டலே குளுந்த (கொள்ளு) தாந்யஸ்யோபரி கேதுக்ரஹம் ஆவாஹயாமி. கேதுக்ரஹம் அதிதேவதாம் சித்ரகுப்தம்......கேதுக்ரஹஸ்ய தக்ஷிணதः சித்ரகுப்தம் ஆவாஹயாமி. கேதுக்ரஹ ப்ரத்யதிதேவதாம் கேதுக்ரஹஸ்யோத்தரதः ப்ரஹ்மாணம் ஆவாஹயாமி.

வடதிசையில் தாழ்ந்தவே திகைவகுத்துக் குண்டத்தில் வளருஞ் செந்தீப்
படருறத்தா பித்தமைத்த வேதியின்முப் பாணிரண்டாம் பகருந் தேவர்
திடமுறவா வாகனமே செயவேண்டும் அவர்பெயரைச் செப்பும் ஞான்று
சுடர்முதலாம் நவக்கிரகம் அவர்க்கதிதே வதைகளெனச் சொல்லும் ஈசன்.

உமைமுருகன் மால்மறையோன் உம்பர்கோன் இயமன் அடல் ஓங்கு காலன்
கமைபெறுசித் திரகுத்தன் ஆக இவர் ஒன்பதின்மர் கனல்நீர் பூமி
தமைநிகர்மால் இந்திரனொடு அயிந்திரிசீர் ஓங்குபிர சாபதிப்பேர்
அமையும்உயர் சர்ப்பங்கள் பிரமாவோடு ஒன்பதின்மர் அறையும் இன்னோர்.

பிரத்தியதி தேவதைகள் விநாயகனோர் துர்க்கையொடு பிறங்கும் வாயு
உரைத்திடுமா காயம்அசு வினிகளென உரைப்பர் நவக்கிரக மேவ. (8½)

எனவரும் மச்சபுராணம் 88-வது சாந்தி கிரக யக்ஞவிதி அத்தியாயச் செய்யுளினால் விளங்குவது என்னை எனின்?

| இரகம் | அதிதேவதை | பிரத்யதிதேவதை |
|---|---|---|
| சூரியன் | சிவபெருமான் | அக்கினி |
| சந்திரன் | உமையவள் | அப்பு |
| செவ்வாய் | சுப்ரமண்யர் | பிரிதிவு |
| புதன் | விஷ்ணு | விஷ்ணு |
| குரு | பிரமதேவன் | இந்திரன் |
| சுக்கிரன் | இந்திரன் | இந்திராணி |
| சனி | இயமன் | பிரஜாபதி |
| இராகு | காலன் | சர்ப்பம் |
| கேது | சித்ரகுப்தன் | பிரமன் |

அழலின் றன்மை யாகுமால் அலவாய் முகட்டின் எழுபருதி
வழியும் புனலின் தன்மையாம் வயங்கும் ஒளிகால் வட்டமதி
நிழல்கால் வேலோன் கூறுகும் நிலவு புகழ்ச்சேய் மலர்மடந்தை
கொழுநன் கூறும் புதனென்னக் கோதின் று உணர்ந்தோர் கூறுவார். (2)

வயங்கும் மழுவாள் உருத்திரன்றன் கூறும் மறலி கூறுமாம்
இயங்கு மணித்தேர் உறைவெய்யோன் இனிதின் ஈன்றபு கண்காரி
தயங்குந் தேவ குருவாகிச் சாருந் தகைசேர் வியாழம் மற்றப்
புயங்கொள் வலியால் உறைஅசுரர் குருவாய் வெள்ளி பொருந்துமால்.

எனவரும் இலிங்கபுராணம் 58-வது சூரியன் முதலான கோளும் நாளும் உரைத்த அத்தியாயச் செய்யுள்களால் சூரியனுக்கு-அக்கினியும், சந்திரனுக்கு-அப்புவும், செவ்வாய்க்கு-சுப்பிரமண்யக்கடவுளும், புதனுக்கு-மஹாவிஷ்ணுவும், சனிக்கு-இயமனும், அதிதெய்வங்கள் என்றும், குரு-தேவாசாரியர், சுக்கிரன்-அசுராசாரியர் என்றும் அறியப்படுகின்றன.

தாம்ர வபிதாருண ஹரித கபீத விசித்ரா வீதா
இநாதீநாம் பாவக ஜல குஹ கேசவ சக்ர
சசீ வேதஸஃ பதயஃ (சாராவளி)

(இ-ள்) சூரியாதி கிரகங்கள் கிரமமாக தாம்ராதிவர்ணங்களுக்கு அதிபதிகளாவர். அக்கினி, ஜலம், குமாரசுவாமி, விஷ்ணு, இந்திரன், சசிதேவி, பிரம்மா இவர்கள் கிரமமாக சூரியாதி சப்தகிரகங்களுக்கு அதிபதிகளாவர் எ-று.

வஹ்நி அம்பு அக்நிஜ கேசவ இந்த்ர சசீ
கஃ ஸூர்யாதிநாதாஃ க்ரமாத். (பிருகஜ்ஜாதகம்)

(இ-ள்) சூரியனுக்கு அக்கினியும், சந்திரனுக்கு ஜலமும், செவ்வாய்க்குக் குமாரக்கடவுளும், புதனுக்கு மஹாவிஷ்ணுவும், குருவுக்கு இந்திரனும், சுக்கிரனுக்கு இந்திராணியும், சனிக்கு பிரம்மாவும் அதிபதிகள் ஆவர் எ-று.

இரவிசங்கரன் ஈசுரிதிங்கள் சேய் இனியகந்தன் இசைதிருமால்புதன்
குருஅயன் சுரர்கோன்வெள்ளி சுன்எமன் குலவுராகு குறிப்பத்ரகாளியாம்
மருவுசித்திரா புத்திரன் கேதுவாம் வானவர்முனிவோ ராசிமற்றுநாள்
அரிமுதற் கிரகத்தால் பாசிவம் அண்டபிண்டம் படைத்தனித்தாற்றுமே.
(வீமேசுரம்)

(க-ரை) சூரியனுக்கு உமாபதியும், சந்திரனுக்கு உமாமஹேஸ்வரியும், செவ்வாய்க்குக் குமாரக்கடவுளும், புதனுக்கு மஹாவிஷ்ணுவும், குருவுக்கு பிரமதேவனும், சுக்கிரனுக்கு இந்திரனும், சனிக்கு எமனும், இராகுவுக்கு காளிகாதேவியும், கேதுவுக்குச் சித்திரகுப்தனும் பிரத்யதி தேவதைகள் ஆவர் எ-று.

மச்சபுராணத்தில் அதிதேவதைகள் எனக் கூறப்பட்டவை பிரத்யதி தேவதைகள் எனவும், பிரத்யதிதேவதைகள் எனக் கூறப்பட்டவை அதி தேவதைகள் எனவும் இருத்தல் வேண்டுமென நவக்கிரக மகப்பிரயோகத்தாலும், பிருகத்ஜாதகம், சாராவளி, வீமேசுரம் இவைகளால் நன்கு விளங்கும். இந்நியதியில் மச்சபுராணத்துள் இராகுவுக்குப் பிரத்யதி தேவதை காலன் எனக் கூறப்பட்டிருக்கின்றது.

அஹம் சூர்யோ நிசாநாதஸ் ஸம்மாஹேயோ குஹஃஸ்ம்ருதஃ
நாராயணோ புதச்சைவ பத்மஜோ குருருச்யதே
சுக்ரச்சசீ பதிச்சைவ யமஸ்சூர்யாத்மஜஸ் ததா
ராஹுர்பூத்வா சித்ரகுப்தஃ காலஃகேதுர் நவக்ரஹாஃ

(க-ரை) உமாபதியே சூரியனாகவும், உமாமஹேஸ்வரியே சந்திரனாகவும், குமாரக்கடவுளே செவ்வாயாகவும், மஹாவிஷ்ணுவே புதனாகவும், பிரமதேவனே குருவாகவும், இந்திரனே சுக்கிரனாகவும், சனியே யமனாகவும், இராகுவே சித்திரகுப்தனாகவும், கேதுவே காலனாகவும் விளங்குகின்றனர் எ-று.

இங்கு சந்தானதீபிகை வசனத்தில் இராகுவுக்கு பிரத்யதிதேவதை சித்திரகுப்தன் என்று கூறியிருத்தல் பொருந்தாது. சுலோகத்தில் பாடபேதமிருக்கின்றது. பிரம்மாண்டபுராணம் கேது அஷ்டோத்தரத்தில் 'சித்ரகுப்தாத்மநேநமஃ'' எனக் கூறப்பட்டிருத்தலின் கேதுவுக்குப் பிரத்யதிதேவதை வீமேசுரத்தில் கூறியபடியே சித்திரகுப்தன் என்று நன்கு துணியப்படும். இராகு அஷ்டோத்தரத்தில் "காலத்மநேநமஃ'' என்று கூறப்பட்டிருத்தலின் இராகுவுக்குப் பிரத்யதிதேவதை காலன்என்று நன்கறியப்படுகின்றது. நவக்கிரக மகப்பிரயோகத்தில்காமாம்எனவும், வீமேசுரத்தில் பத்ரகாளி எனவும் கூறப்பட்டிருத்தலின் இராகுவுக்குப் பிரத்யதிதேவதை காளி என அறியப்படுகின்றது.

காலன் என்பவர் ஈசானராகு. இவர் வாயுவை அதிட்டித்து நிற்குஞ் சிவமூர்த்தம் என்னப்படுவர் இவரது சத்தி காளி. ஆகவே மச்சபுராணத்திலும், சந்தானதீபிகையிலும், இராகு அஷ்டோத்தரத்திலும் இராகுவுக்கு பிரத்யதிதேவதை காலர் எனவும், வீமேசுரம் நவக்கிரக மகப்பிரயோகம் இவற்றுள் காலருடைய சக்தியாகிய காளி எனவும் கூறப்பட்டிருக்கின்றன.

## அயன பாவகம்

**அடல்தக்க ணய னத்தில் அசுபர்க்கே பலம தாகும்**
**வடதிக்கில் பலன்நல் லோங்கு வளர்பக்கம் தனக்கும் ஈதே**
**திடம்உறும் அமரபுக்கம் தீயோர்க்கே பலம தாகும்**
**படவர அல்குல் மாதே பலபாகம் விளம்புங் காலே.**

(இ-ள்) தட்சணாயனமான கடகாதி தனுராந்தத்திற்குள் பாபகிரகங்கள் இருப்பின் அயனபலமுடையவராவர். உத்ராயணமான மகராதி மிதுனாந்தத்திற்குள் சுபகிரகங்கள் இருப்பின் அயனபலமுடையவராவர். அமாவாசை முடிந்து பிரதமை ஆரம்பித்ததுமுதல் பௌர்ணமி அந்தம் வரைக்குமுள்ள வளர்பிறை (சுக்கிலபட்சம், பூர்வபட்சம்) காலம் சுபகிரகங்களுக்கும், பௌர்ணமி முடிந்து பிரதமை ஆரம்பித்ததுமுதல் அமாவாசை அந்தம்வரைக்கும் உள்ள தேய்பிறை (கிருஷ்ணபட்சம், அமரபட்சம்) காலம் பாபகிரகங்களுக்கும் பலமுடையதாகும் எ-று.

(வி-ரை) இச்செய்யுள் இடம் (ஸ்தானம்), திசை (திக்கு), காலம், சேஷ்டை, நிசர்க்கம், திருக்கு (பார்வை) என்னும் ஆறுவகைத்தாய சட்பலங்களில் மூன்ருவதான காலபலத்தின் உட்பிரிவு 1-வது பகல் இரவுபலம், 2-வது பட்சபலம், 3-வது பகல் இரவு சட்பாகபலம், 4-வது வருடமாதாதிபர் பலம் 5-வது அயனபலம் ஆகிய இவற்றுள் 2-வது ஆகிய பட்சபலத்தையும், 5-வது ஆகிய அயனபலத்தையும்பற்றிக் கூறப்பட்டதாகும். இப்படலத்தில் இந்த விஷயமான செய்யுள்கள் வரிசைகிரமமாக இல்லாமல்முன்பின்ளுகக் காணப்படுதலின் அதனுல் இழுக்கொன்றுமில்லை. ஆனுல் சுபகிரகங்களுக்கு உத்தராயணமும், பாபகிரகங்களுக்கு தக்ஷிணாயனமும்பலமுடையதென்பது மட்டும் பொருத்தமுடையதாகக் காணப்பவில்லை. யாதுபற்றி எனின்? கூறுவதும்:—

ஸௌம்யா க்ராந்தி ஸ்வமிஹ பரமாபக்ரமே தக்ஷிணாம்
சுக்ரா ஆதித்ய க்ஷிதிஸுத மருத்பூஜிதாநாம் விதேயா
வ்யஸ்தா சீதத்யுதி ரவிஜயோ: ஜ்ஞஸ்யநித்யம் விதேயா.

(ஸ்ரீபதி ஜாதகபத்ததி)

(க-ரை) சாயனகிரகங்களின் புஜஜ்யாவினுல் கிராந்திஜ்யாவையும், அதனுல் கிராந்திகளையும் அறிந்து, சாயனகிரகம் ஆறுராசிகளுக்குள் இருந்தால் உத்தரகிராந்தி என்றும், அதற்கு மேற்பட்டிருந்தால் தக்ஷிண கிராந்தி என்றும் அறியவேண்டியது. சூரியன்-குரு-சுக்கிரன்-செவ்வாய் களுக்கு உத்தரகிராந்தியானபோது அவர்கள் கிராந்திபாகாதிகளை பரமாப கிரமஜ்யாவான 1397-ல் கூட்டியும், தக்ஷிணகிராந்தியானபோது கழித்தும், சந்திரன் சனி இவர்களுக்கு உத்திரகிராந்தியானுல் கழித்தும், தக்ஷிணகிராந்தியானுல் கூட்டியும், புதன் எந்த திக்கிலிருந்தாலும் கூட்டியும் வருவதைக்கொண்டு அயனராசியாதிகளையும், அயனபலத்தையும் அறிதல்வேண்டும் என்க. கிரகங்களின் அயனராசியானதும், அயனபலத்தினதும் நியதி இங்ஙனமிருப்ப, இச்செய்யுளுக்குச் சிலர் மகராதி 6-ராசிக்குள் சுபர் இருக்கின் பலமுடையவரென்றும், கடகாதி 6-ராசிக்கு பாவர் இருக்கின் பலமுடையவரென்றும் உண்மையுணராது மயங்கி பொருள் கூறி இடர்ப்படுவர்.

அயனபல உதாரணம்:—சாயன சூரியஸ்புடம் ராசி-4-4-32, புஜஜ்யா பாகாதி-55-28, இதன் உத்தரகிராந்திகலை-1174, இதன் அயனஸ்புடம் ராசி-5-18-24, அயனபலம் பாகை-0-கலை-56. அர்த்தோத்தர நியாயப்படி சூரியன் அயனபலம் பாகை ஒன்ருகும். நூல் விரிவஞ்சி இங்கு உதாரணத்தைச் சுருக்கிக் கூறப்பட்டது. இதன் விரிவை எம்மால் இயற்றி அச்சிடப்

பட்டிருக்கும் ஜாதக சாகரத்தில் நன்கு அறிக. இந்த நான்காவது செய்யுளை,

உத்தரம் அயநம் ப்ராப்தஃ சுக்ர
குஜரர்க ஸுரமந்த்ரிணோ பலீநஃ
யாம்யம் சசிரவிபுத்ரௌத்வே அபி
சசிஜஃ ஸ்வவர்க ஸம்ஸ்தாச்ச
சூர்யேந்து புநருத்தரே பலிநௌ. (சாராவளி)

எனவரும் சாராவளி வசனத்தினால் பின்வருமாறு திருத்தப்பட்டு இருக்கின்றது.

சுலோகப்பொருள் வருமாறு:—

(இ-ள்) உத்தராயணத்தில் சுக்கிரன் செவ்வாய் சூரியன் குரு பலமுடையவர்கள். தக்ஷிணயனத்தில் சந்திரன் சனி பலமுடையவர்கள். புதன் எந்த அயனத்தில் இருந்தாலும் பலமுடையவன். சூரியன் அயன பலத்தையும், சந்திரன் பட்சபலத்தையும் இரட்டித்துக்கொள்க எ-று.

திருத்தச்செய்யுள் வருமாறு:—

அடல்தக்க ணயனத்தில் அம்புலி யொடுமேற் கோளும்
வடதிகில் கதிர்சேய் பொன்னோன் மழைக்கோளும் பலமதாவர்
திடம்உறும் அபரபக்கந் தீயோர்க்கும் பூர்வ பக்கம்
படிமிசை சுபர்தமக்கும் பலமதாம் விளம்புங் காலே.

(இ-ள்) தட்சணாயனத்தில் சந்திரன்-சனிகளும், உத்தராயணத்தில் சூரியன்-செவ்வாய்-குரு-சுக்கிரரும் பலமுடையவராவர். அபரபக்கம் (தேய்பிறையில்) பாவர்களுக்கும், பூர்வபக்கம் (வளர்பிறையில்) சுபர்களுக்கும் பலமாகும் எ-று.

**உத்தர தக்ஷிணம்:**— சாயனகிரகம் மேடாதி 6-ராசிக்குள்ளிருந்தால் உத்தரகிராந்தியும், துலாதி 6-ராசிக்குள்ளிருந்தால் தக்ஷிண கிராந்தியும் ஆகும். இதுவே இக்கணித முறைக்கேற்ற உத்தராயணம் தக்ஷிணயனம் என்பதன் பொருளாகும். உத்தராயணத்தில் ரவி-செவ்வாய்-குரு-சுக்கிரன் இவர்கள் பலமுடையவர்கள் என்று கூறியது என்னை எனின்? அயனராசியையும், பலத்தையும் அறிய ஏதுவாகிய பரமாபதி ரமஜ்யாவான 1397-ல் மேலே கூறிய கிரகங்களின் கிராந்திபாகைகள் வடதிசையானால் கூட்டலும், தென்திசையானால் கழித்தலும செய்வதென்பதேயாம். தக்ஷிணயனத்தில் சந்திரன் சனி இவர்கள பலமுடையவர்கள் என்று கூறியது என்னை எனின்? பரமாப கிரமஜ்யாவான 1397-ல் இவர்களின் கிராந்தி பாகைகள் வடக்காயின்கழித்தலும், தெற்காகின்கூட்டலும், புதன் கிராந்தி பாகைகள் எந்தத் திக்கிலிருந்தாலும் கூட்டலும் செய்தல் என்பதேயாகும்.

## திக்கு பலம்

**பொன்னும் புதனும் உதயத்தில் பொருந்தில் வலிய ரேயாவர்**
**மன்னு சனியும் கரும்பாம்பும் வலியர் அத்த மனமாகில்**
**மின்னுங் கதிரும் குசன்உச்சம் மேவில் வலியர் விளம்புங்கால்**
**துன்னு மதிசுக் கிரன்நீர்க்கீழ்ச் சூழ்ந்தார் வலியர் ஆவரே.**

(இ-ள்) குருவும் புதனும் இலக்கின கேந்திரத்திலிருந்தால் பூரண பலமுடையவராவர். சனியும் இராகுவும் சப்தம கேந்திரத்திலிருந்தால் பூரண பலமுடையவராவர். சூரியனும் செவ்வாயும் தசமகேந்திரத்திலிருந்தால் பூரண பலமுடையவராவர். சந்திரனும் சுக்கிரனும் சதுர்த்த கேந்திரத்தில் இருந்தால் பலமுடையவராவர் எ-று.

(வி-ரை) லக்நேப்ராக் திசிதேவேஜ்ய புதயோர் பலபூர்ணதா
தக்ஷிணஸ்யாந்து தசமே ரவ்யார பலபூர்ணதா
ப்ரதீச்யாம் ஸப்தமே கேந்த்ரே மந்தஸ்ய பலபூர்ணதா
உதக்திசி சதுர்தேது சுக்ரேந்த்வோர் பலபூர்ணதா
தத்ஸப்தமே பலம் சூந்யம் அந்தரேத் அநுபாததஃ

(ஜாதகார்ணவம்)

(இ-ள்) கிழக்குத்திசையாகிய உதயகேந்திரத்தில் புதன் குருவும், தெற்குத்திசையாகிய தசமகேந்திரத்தில் சூரியன் செவ்வாயும், மேற்குத் திசையாகிய சப்தம கேந்திரத்தில் சனியும், வடக்குத் திக்காகிய சதுர்த்த கேந்திரத்தில் சந்திரன் சுக்கிரனும் பூரண பலமுடையவராவர். இதற்கு ஏழாமிடத்தில் பல சூந்யராவர். இதன்நடுவிலிருந்தால் திரயராசிகமூலமாக பலத்தை அறிக எ-று.

ரவ்யாரயோச் சதுர்தாய ஸப்தமஸ்ய புதேஜ்யயோஃ
சுக்ரேந்த்வோர் தசமஸ்யாபி சநேர்லக்ந ஸயசாந்தரம்

எனவரும் ஷை நூலின் வசனத்தினுல் சூரியன் செவ்வாய் நான்கிலும், புதன் குரு ஏழிலும், சந்திரன் சுக்கிரன் பத்திலும், சனி இலக்கினத்திலும் இருந்தால் திக்பலமில்லாதவர்கள் என்பதாம். இதன் விரிவை ஜாதகசாகரம் 128-ஆம் பக்கம் பார்க்கவும். (17)

## நிசர்க்க பலம்

**செய்யுங் காரி தனக்குஅதிகம் செவ்வாய் வலிது செவ்வாயில்**
**வெய்ய புதனும் வலிவதனை விடவே அரசன் மிகவலியன்**
**துய்ய அரசன் தனில்வெள்ளி வலியன் அவனில் சோமன்மிகும்**
**பைய சசிக்குக் கதிர்வலிது பானுவில் பாம்பே வலிதே.**

(இ-ள்) துன்பத்தைச் செய்யும் சனியைவிட அங்காரகனும், அங்காரகனைவிட வெப்பமிகுந்த புதனும், புதனைவிட குருவும், குருவைவிட சுக்கிரனும், சுக்கிரனைவிட சந்திரனும், சந்திரனைவிட சூரியனும், சூரியனைவிட இராகு கேதுக்களும் பலமுடையவராவர் எ-று.

(வி-ரை) புதன் எப்போதும் சூரியனை அடுத்துச் சஞ்சாரஞ் செய்யும் கிரகமானபடியால் 'வெய்யபுதன்'என்ற அடைமொழியுடன் கூறினுரென்க.

சநேர்நை ஸர்கிகபலம் சதுஸ்த்ரிம்சத் விநாடிகாஃ
அஷ்டௌ கலாவிரூபாக்யா ரூபஸ்தாகேது சூந்யகம்
குஜஸ்யதத் த்விகுணிதம் புதஸ்யத்ரிகுணம் ஸ்ம்ருதம்
சதுர்குணம் குரோச்சாபி ப்ருகோஃ பஞ்சகுணம் ததா
சந்த்ரஸ்ய ஷட்குணம் ப்ரோக்தம் ரவேஸ்ஸப்தகுணம் க்ரமாத்
ரூபபூர்ணம் ரவேரேஷாம் ஸதாநைஸர் கிகம்பலம். (ஜாதகார்ணவம்)

(இ-ள்) நைசர்க்கிகபலம் சனிக்குக் கலை-8 விகலை-84, செவ்வாய்க்கு 17-கலை 8-விகலை, புதனுக்கு 25-கலை 42-விகலை, குருவுக்கு 34-கலை 16-விகலை, சுக்கிரனுக்கு 42-கலை 50-விகலை, சந்திரனுக்கு 51-கலை 24-விகலை, சூரியனுக்கு ஒரு பாகை எ-று.

இந்நியதியால் சனி செவ்வாய் புதன் குரு சுக்கிரன் சந்திரன் சூரியன் இவர்கள் முறையே ஒருவரைவிட ஒருவர் பலமுடையவரென்று ஏற்படுகின்றது. இந்தச் செய்யுளில் புதனைவிட செவ்வாயும், செவ்வாயைவிட சனியும் பலமுடையவர்கள் எனக் கூறப்பட்டிருப்பது அச்சேற்றினரால் நேர்ந்த பாடபேதமென்பது திண்ணம். ஆகையால் திருத்தி அமைக்கப் பட்டது என்றறிக.

"சகுபுகுசுசர குத்யா வ்ருத்திதோ வீத்யவந்தஃ" என்ற பிருகஜ்ஜாதகம் கிரகயோநிபேதாத்தியாயம் 21-வது சுலோகத்தில் ச=சனி, கு=குஜன், பு=புதன், கு=குரு, சு=சுக்கிரன், ச=சந்திரன், ர=ரவி முதலியவர்கள் ஒருவரைவிட ஒருவர் பலமுடையவர்கள் என்று கூறப்பட்டிருக்கின்றது. இப்பிருகஜ்ஜாதகத்தைத தமிழில் மங்களேஸ்வர்யம் என்று மொழிபெயர்த்தவர் எக்காரணம்பற்றியோ முதனூலுக்கு மாறாக புதனுக்குச் செவ்வாயும், செவ்வாய்க்குச் சனியும் வலியுடையவரென கூறியிருக்கின்றார். ஆதலால் பாயிரப்படலத்தில் பிருகஜ்ஜாதகத்தை முதனூற்களில் ஒன்றாக்கொண்டிருப்பதாய் இந்த நூலாசிரியர் கூறியிருத்தலின் இச்செய்யுளை திருத்தியதில் ஆட்சேபம் எட்டுணையுங் கிடையாதென்க. (18)

உச்சம் உச்சாங் கிசைநல்லோர் உடனும் நல்லோர் உடன்வீட்டும்
மெச்சும் உறவோர் உடனும்அவர் வீட்டும் மித்திரர் அங்கிசையில்
அச்சம் அறவே அவர்அவருக்கு ஆட்சி ஆன அங்கிசையில்
இச்சை உடனே உறிற்பலனும் இதனில் பிழைத்தால் இலைப்பலனே.

(இ-ள்) உச்சத்திலும், உச்சாமிடத்திலும், சுபர் சேர்க்கையிலும், சுபர்கள் வீட்டிலும், மித்திரகிரகங்களுடனும், மித்திரகிரகங்கள்வீட்டிலும், மித்திரர் அமிசத்திலும், துன்பமின்றி அவரவர்களுக்குரிய ஆட்சி வீட்டிலும், ஆட்சியான அமிசத்திலும் கிரகங்களிருந்தால் பலமுடையவர்களாவர். இதற்கு மாறாக இருந்தால் பலமில்லாதவர்களாவர் எ-று.

(வி-ரை) இச்செய்யுளில் உச்சராசி உச்சாம்சம், மித்துருராசி மித்துரு அம்சத்தையுங் கூறிபவர், ஆட்சிராசி ஆட்சி அம்சத்தையுங் கூறவேண்டுவது முறையாதல்பற்றி "அனுசமான அங்கிசையில்" என்பதைப் பாடபேதமாகக்கொண்டு "ஆட்சியான அங்கிசத்தும்" என்பதற்கு ஆட்சிராசியும் ஆட்சி அமிசமும் எனப் பொருள் கூறினும் என்க. (19)

## ஸ்தானபலத்தில் 2-வது மூலத்திரிகோணாதி

பலன்களாவன

உச்சம் ஒன்றெனல் ஓங்குயர் கோணமேல்
அச்சம் முக்கால் ஆட்சிக் கரைப்பலம்
மெச்சும் நட்புக்கு மேவும் அரிக்காலாம்
துச்ச நீசர் பலனிலை சொல்லினே.

(இ-ள்) உச்சத்திற்கு முழுபலமும், மூலத்திரிகோணத்திற்கு முக்கால் பலமும், ஆட்சிக்கு அரைப்பலமும், நட்புக்கு அரிக்கால்பலமும், நீச்சத்திற்கு சூர்ங்யபலமும் ஆகும் எ-று.

(வி-ரை) நட்புக்கு அரிக்சால்பலம் எனவே அதிலுயர்ந்த அதிநட்பிற்குக் கால்பலம் எனவும், நட்பிற்கு அரிக்கால்பலமெனவே இதில் தாழ்ந்த அதிக பகைக்கு வீசம்பலம் என்றும் இதிலும் தாழ்ந்த பகைக்குஅரைவீசம் பலம் என்றும் அறிதல்வேண்டும். இந்நூலாசிரியர் பாயிரப்படலத்தில் இந்நூலுக்கு முதல்நூற்களின் பராசரஓரையையும் ஒன்றாகக்கொண்டிருப்பதாகக் கூறியிருத்தலின் அவ்வாதாரத்தைக்கொண்டு இச்செய்யுளைத் திருத்தியமைக்கப்பட்டதென்க.

ஸ்வோச்சே சுபபலம் கனம் த்ரிகோணே பாதவர்ஜிதம்
ஸ்வர்க்ஷேதலம் மித்ரீகஹே பாத மாத்ரம் ப்ரகீர்த்திதம்
பாதார்தம் சமப்ரோக்தம் யர்தம் நீசாஸ் தசத்ருகே.

(பிருகத்பராசரஹோரை)

(இ-ள்) உச்சம் முழுபலம், மூலதிரிகோணம் முக்கால்பலம், ஆட்சி அரைப்பலம், மித்திரகால்பலம், சமம் அரிக்கால்பலம், நீசம் சூந்யபலமாம்.

ஸ்வோச்சே மூலத்ரிகோணேச ஸ்வர்க்ஷேதிஸ~ ஹ்ருதிக்ரமாத்
மித்ரர்க்ஷேச ஸமர்க்ஷேச ஸத்ருபே சாதிஸத்ருபே
நீசேசஷ்டி டிரிஷ்வம்தி: பாக்தி: காகராஸ்திதி:
நாகாவேதா: கரைசூர்யம் ஸ~பமேதத் பலம்விது:
ஷஷ்டிப்யோ வர்ஜிதானசைதே சிஷ்டம் ஸ்யாதசுபம்பலம்
ததர்தந்துபலம் ப்ரோக்தம் அர்யவர்க்கே ஸ~பாஸ~பம்.

(பிருகத்பராசரஹோரை)

(க-ரை) ஸ்தானசுபபலம் உச்சத்திற்கு ஒன்று, மூலத்திரிகோணத்திற்கு முக்கால், ஆட்சிக்கு அரை, அதிமித்துருவுக்குக் கால், மித்துருவுக்கு அரிக்கால், அதிசத்துருவுக்கு வீசம், சத்துருவுக்குஅரைவீசம், நீச்சத்திற்கு சூனியமாகும். உச்சபலந்தவிர்த்த ஏனையவற்றை 60-ல் கழிக்கஸ்தான அசுபபலம் மூலத்திரிகோணத்திற்குக் காலும், ஆட்சிக்கு அரையும், அதிமித்துருவுக்கு முக்காலும், மித்துருவுக்கு முக்காலரிக்காலும், அதிசத்துருவுக்கு முக்காலரிக்காலே மூன்றுவீசமும், சத்துருவுக்கு முக்காலரிக்காலே மூன்று வீச அரைவீசமும், நீச்சத்திற்கு ஒன்றும் ஆகும். (20)

## 3-வது காலபலத்தின் ஐந்து உட்பிரிவுகளில் 1-வது பகல் இரவுகாலப் பகுதி பலம்

ஏந்து செவ்வாய் சனிஇந்து இராப்பலன்
வேந்தன் ஆதவன் வெள்ளி பகற்பலன்
போந்து புந்திக்கு எப்போதும் பலன்களாம்
கூந்தல் வேள்இபக் குங்குமக் கொங்கையாய்.

(இ-ள்) சந்திரன்-செவ்வாய்-சனி இவர்கள் இராத்திரி ஜனித்த ஜாதகத்திற்கும், சூரியன்-குரு-சுக்கிரன் இவர்கள் பகல் ஜனித்த ஜாதகத்திற்கும், புதன் பகல் இரவுகளில் எப்போதேனும் ஜனித்த ஜாதகத்திற்கும் பூரணபலமுடையவர்கள் எ-று.

(வி-ரை) சந்திரன் செவ்வாய் சனி இவர்கள் பகற்காலத்தில் ஜனித்த ஜாதகத்திற்கும், சூரியன்-குரு-சுக்கிரன் இவர்கள் இராத்திரி ஜனித்த ஜாதகத்திற்கும் பல சூகியராவர். இங்கு கூறிய பகல் இரவுகாலங்கள் மத்தியான்னம், அர்த்தராத்திரி காலங்களாகும். இவ்விரு காலங்களின்றி இடையே ஜனித்தவர்கட்கு திரயராசிகத்தினால் இப்பலத்தை அறிதல் வேண்டும். ஜாதகசாகரம் 132-ஆம் பக்கத்தில் நன்கறிக. (21)

## 3-வது காலபலத்தின் ஐந்து உட்பிரிவுகளில் 4-வது வருட மாத வார ஓராதிபர் பலம்

ஆயஓரைக்கு அதிபர்க்கு அதில்பலன்
தூயவாரத்து அதிபர்க்கு அதில்பலன்
ஏயதிங்கட்கு அதிபர்க்கு அதில்பலன்
ஆயும்ஆண்டதி பர்க்கதில் பலமதே.

(இ-ள்) அவரவர்கள் பிறந்த வருடப்பிரவேசகாலமாகிய மேஷ சங்கிரமண வாராதிபதி, பிறந்த மாதப்பிரவேச வாராதிபதி, பிறந்த வாராதிபதி, பிறந்தகாலத்திற்குரிய ஓராதிபதி எந்த கிரகங்களோ அவர்கள் முறையே ஒருவரைவிட ஒருவர் பலமுடையவர்களாவர் எ-று.

(வி-ரை) வர்ஷமாஸ திநேசாநாம் ஸ்திஸ்த்ரிம்சச் சரார்ணவாஃ
காலஹோராதி பஸ்யைவம் பூர்ணம் பலமுதாஹ்ருதம்.

எனவரும் பிருகத்பராசரஹோரையின்படி வர்ஷாதிபதி, மாசாதிபதி, வாராதிபதி, காலஹோராதிபதி இவர்கள் முறையே கால், அரை, முக்கால், ஒன்று ஆகிய பலங்களையுடையவராவர் என்பதாம்.

இஷ்டகாலஸ்து யத்வர்வே ததப்தாதி திநேச்வரஃ
தஸ்மிர்அப்தே பாதபலீவா ஸாரம்பஸ்ய வாரபஃ
பலமர்த்தம் மூபத்யேவ ஸ்மிந்நஹ நிவாரபஃ
பாதோநந்து பலம்யாதி சாலஹோரேச்வரஃ பரம்
பூர்ணம்ரூப பலம்யாதி தத்தத்தாயே பலார்ணவே. (ஜாதகார்ணவம்)

எனவரும் வசனத்தினாலும் முன் கூறிப்போந்தவற்றை நன்கறியலாம். இந்த உண்மையை உள்ளபடி உற்றுணராது ஒருசிலர் மனம் போனப்போக்காய் மாறுபட பொருளுரைக்கின்றனர். இந்த 10-வது செய்யுளின் 4-வது அடியை அச்சுவாகனம் ஏற்றினார் அறவே மாற்றிவிட்டனர். இதனை ஜாதகசாகரத்தில் 136-ஆம் பக்கத்தில் நன்கு விளக்கி இருத்தலின் ஆண்டு உணர்க. (22)

## 3-வது காலபலத்தில் 2-வது பட்சபலத்தில் புதனுக்குச் சிறப்புவிதி

ஆன புந்தி சுபரோடு அடுத்திடில்
தானும் நற்சுபன் ஆகுவன் தாழ்வுறும்
ஊன தீயர் உடன்இருந் தால்விழி
மான னாய்அவன் மன்னுவன் தீயனாய்.

(இ-ள்) புதன் சுபக்கிரகங்களுடன் கூடியிருந்தால் சுபனும், பாபக் கிரகங்களுடன் கூடியிருந்தால் பாபியும் ஆவான் எ-று.

(வி-ரை) இப்படலத்தில் அயனபலத்தையும் பட்சபலத்தையும் கூறிய நான்காவது செய்யுளில் இப்பதினோராவது செய்யுட்கருத்தும் அடங்கி இருத்தல் வேண்டும். இந்நூலாசிரியர் இதனைத் தனியே கூறியிருக்கின்றனர்.

ஜீவேந்து ஸௌம்ய சுக்ராః ஸ்யுః ஸௌம்யாః க்ரூர க்ரஹாபரே
க்ஷீணேந்து க்ரூர யுக்தோக்ஞோ ராகுః க்ரூரா ப்ரகீர்த்திதாః
(வாமனதாஜிகம்)

சுக்லபக்ஷே சுபாநாந்து கடாநாம் பலபூர்ணதா
க்ரூராணும் க்ருஷ்ணபக்ஷேச பலபூர்ண த்வமுச்யதே
க்ஷீணேந்தோః பாபயுக்தாப நக்ரூரத்வம் புதஸ்யச (ஜாதகார்ணவம்)

எனவரும் வசனத்தினால் சுக்லபட்சத்தில் சுபகிரகங்களும்,கிருஷ்ணபட்சத்தில் பாபகிரகங்கட்கும் பலமுடையவர்களாவர். சூரியன்-அங்காரகன்-சனி பாவர்களும், சந்திரன்-புதன்-குரு-சுக்கிரன் சுபர்களுமாவர். ஆனால் புதன் சுபர்களுடன் கூடில் சுபனும் பாவர்களுடன் கூடில் பாபியுமாவான் என்க. இந்த பட்சபல நிர்ணயத்தை ஜாதகசாகரத்தில் நன்கு விளக்கமாகக் கூறியிருத்தலின் ஈண்டு விரிவஞ்சி விளக்கவில்லையாதலால் ஆண்டு அறிக. புதன் அலிகிரகமாகையினாலும், எப்போதும் சூரியனை அடுத்து சஞ்சரிக்கும் சுபாவத்தினால் பிரகாசமின்றி இருப்பதனாலும் தனது சம்பந்தத்திற்கேற்ற பலனைத் தருவனென்பது கருத்தாம். (28)

## கிரக சுபாசுபங்கள்

**நிறைமதியும் தமனியனும் நிறைந்தசுபக் கிரகம்**
**நீள்சுங்க ளுர்முக்கால் சுபக்கிரகம் புதனே**
**குறையும்அரைச் சுபன்தேய்ந்த மதியும்கால் சுபனும்**
**கூறுசனி பாம்புமுழுப் பாவிகளே செவ்வாய்**
**அறையும்முக்கால் பாவிஅரைப் பாவிகதி ரவனும்**
**அணிபாவர் உடன்கூடும் புதன்பிறைகால் பாவி**
**இறைசனிபாம்பு உடன்கூடில் சனிபோலப் பாவி**
**இந்துஅமவா சியில்புதனோடு இருக்கமுக்கால் சுபனே.**

(இ-ள்) பூரணச்சந்திரனும் குருவும் முழுச்சுபக்கிரகங்களாவர். சுக்கிரன் முக்கால் சுபக்கிரகமும், புதன் அரைச் சுபக்கிரகமும், தேய்பிறைச் சந்திரன் கால்சுபக்கிரகமும் ஆவர். சனி இராகு கேதுககள் முழுப் பாபக் கிரகங்களாவர். செவ்வாய் முக்கால் பாபக்கிரகமும், சூரியன் அரைப்பாபக் கிரகமுமாம். பாபிகளுடன் சேர்ந்த புதன்-சந்திரன் இவர்கள் கால்பாபக் கிரகங்களாவர். குரு சனியோடு கூடில் முழுப்பாபியாவன்; சந்திரன் அமாவாசையில் புதனுடன்கூடி இருந்தால் முக்கால் சுபனுவன் எ-று.

(வி-ரை) 'பூரணச்சந்திரன்' என்பதற்கு பௌர்ணமி சந்திரன் என்று சிலர் பொருள் கூறுவர். அது பொருத்தமுடையதல்ல. வளர்பிறைச் சந்திரன் என்பதே அதன் சிறந்த பொருளாகும். 2-வது அடியில் "தேய்ந்த

மதியுங்கால் சுபனும்" என்று கூறியிருத்தலின், முதல் அடியில் வரும் "கிறைந்தமதி" என்பதற்கு வளர்பிறைச் சந்திரன் என்று பொருள் கொள்ளுதலே முறையாகும்.

| | | | |
|---|---|---|---|
| தேய்பிறைச்சந்திரன் | கால்சுபன் | சூரியன் | அரைப்பாபி |
| புதன் ,, | அரைசுபன் | செவ்வாய் | முக்கால்பாபி |
| குரு ,, | முழுச்சுபன் | சனி | முழுப்பாபி |
| சுக்கிரன் ,, | முக்கால்சுபன் | ராகு | முழுப்பாபி |
| வளர்பிறைச்சந்திரன் | முழுச்சுபன் | கேது | முழுப்பாபி |

பாவர்களுடன் கூடிய புதன்—கால்பாபி
பாவர்களுடன் கூடிய சந்திரன்—கால்பாபி
சனி பாம்புகளுடன் கூடிய குரு—முழுப்பாபி
அமாவாசையில் புதனுடனிருந்த சந்திரன்—முக்கால்சுபன்.

குமாரசுவாமீய நூலுடையார் "விது-வென்-முன்-ஈசன் வலக்கண் இப் பாகைக்கு" என்று கூறியிருத்தலின்; அதாவது விது=சந்திரன் (சூரியனுக்கு) வென்=பின்னுகவும், முன்=முன்னுகவும், ஈசன்=ஏகாதச ருத்ரர் பதினொருவர், வலக்கண்=ஒன்று; ஆக பன்னிரண்டு, இ-பாகைக்கு=இந்த பாகைகளுக் குள்ளிருந்தால் அஸ்தமனம் ஆவன் என்றுகூறியிருக்கின்றனர். சந்திரனுக்கு அமாவாசையின் மத்யகாலம் அஸ்தமயகாலமாகும். அஸ்தமயத்திற்குமுன் மூன்றுதினம் பாலத்வமும், அஸ்தமயத்திற்குப்பின் இரண்டுதினம் விருத்தத்வமும் உண்டென்று வசிஷ்ட மஹரிஷி வசனத்திஞல் அறியப்படுகின்றது. பூரணசந்திரன் என்பதற்கு,

ஸம்பூர்ணேந்து பயாஷ்டம்யோ: மத்யேந்து: பூர்ண ஸம்ஜ்ஞக:
விஸஷ்டேர் துபயாஷ்டம் யோர்மத்யே ஸௌக்ஷீண ஸம்ஜ்ஞக:
(முகூர்த்த ரத்நாவளி)

என்ற வசனத்திஞல் சுக்கிலபக்ஷத்து அஷ்டமி திதிமுதல், கிருஷ்ணஷ்டமி வரைக்கும் பூரணச்சந்திரன் என்றும், கிருஷ்ணஷ்டமி முதல் சுக்கில பக்ஷத்து அஷ்டமிவரையில் க்ஷீணசந்திரன் என்றும் வசிஷ்டர் கூறியிருக்கின்றூர் என அறியப்படுகின்றது.

சுக்லப்ரதிபத் தசகே மத்யபல:
கிர்த்யதே யவநவ்ருத்தை:
ச்ரேஷ்டோ த்வியதசகே ஸ்வல்ப்பலச்
சந்த்ரமாஸ் த்ருதீயேச. (சாராவளி)

(இ-ள்) சுக்கிலபக்ஷப் பிரதமைமுதல் தசமிவரையில் சந்திரன் மத்திமபலமுடையவன் என்றும், அதன்பின் பத்துத்தினங்கள் அதாவது அமரபட்சப் பஞ்சமிவரையில் பூர்ணபலமுடையவன் என்றும், அதன்பின் அமாவாசை முடிவுவரைக்கும் அற்பபலமுடையவன் என்றும் அறிதல் வேண்டும்.

(வி-ரை) இங்கு கூறிய நியதிகள் முகூர்த்தாதி நிர்ணய விஷயங்கட்கும், சட்பல நிர்ணயத்திற்கும் உரியதாகும். வளர்பிறை தேய்பிறை என்ற நியதிக்கு அமாந்தமுதல் பௌர்ணமி அந்தம்வரையில் வளர்பிறை என்றும், பௌர்ணமி அந்தமுதல் அமாந்தம்வரையில் தேய்பிறையென்றும் கொண்டு ஜாதகவிஷயங்களில் கிரகசுப சுபத்துவங்களை நிர்ணயித்தல் வேண்டும்.

அமாவாசை. இது பிரதமை முதலாகிய முப்பது திதிகளில் கடைசி திதியாகும். திதி என்னும்பதம் சந்திரனுக்கும் சூரியனுக்கும் உள்ள தூரத்தைக் குறிக்கின்றது. அமாவாசை முடிவில் சூரியனும் சந்திரனும் ஒரே இடத்தில் இருக்கின்றார்கள். பௌர்ணமியில் அவர்கள் ஒருவருக்கொருவர் நேர் எதிராக 180-பாகை; அதாவது ஆறுராசி தூரம்விலகி இருப்பார்கள். இவ்விரண்டு நாட்களுக்கும் இடையே ஒவ்வொருநாளும் அவர்கள் இருக்கும் இடத்தையே பஞ்சாங்கத்தில் திதி என்று குறிக்கப்படுவதாகும். அமாவாசை முடிவில் சூரியனோடு சமமாகநின்ற சந்திரன் சூரியனைவிட்டுப் பிரிந்து கிழக்கு நோக்கி (கிராந்திவிருத்தத்தை அநுசரித்து) பிரதக்ஷிணமாகப் பூமியைச்சுற்றிப் பின்னும் சூரியனைச் சந்திக்கின்றவரையில் 12-பாகை வீதமாக சஞ்சரிக்கும் கால அளவையே பிரதமைமுதல் அமாவாசை அந்தமாக உள்ள 30-திதிகளாகும். இத்திதி என்னும் வடமொழி சப்த பேதிகதி; அல்லது தேதியென மருவி வழங்குகின்றது. திதிகளில் அமாவாசை பௌர்ணமி தவிர மற்றையவைகட்குப் பெயர் கிடையாது. ஒன்றிரண்டு மூன்றென்னும் வரிசையாக வடமொழி எண்ணிக்கையில் பிரதமை, துதிகை, திருதீயை என்ற கிரமப்படி வழங்கப்படுகின்றன, திரயோதசி என்பது திரயம்=மூன்று, தசம்=பத்து, ஆகவே பதின்மூன்றாவது திதி என்று அருத்தம்.

*அமாநாமா ரவே ரஸ்மிஸ் சந்த்ரலோகே ப்ரதிஷ்டிதா*
*தஸ்மாத் ஸோமோ வஸேத்தஸ்யாம் அமாவாஸ்யா ததஸ்ம்ருதே.*
(பிரம்மாண்டபுராணம்)

*ஆச்ரித் ததா மமாவாஸ்யாம் பஸ்யதஸ்ஸு ஸமாகதௌ*
*அந்யோந்யம் சந்த்ரசூர்யௌதௌ யத்தஸ்மாத் தர்சஉச்யதே.*
(வாயுபுராணம்)

எனவரும் பிரமாணங்களினால் அமாவாஸ: என்ற வடமொழி சப்தத்திற்கு அமா=ஸஹ; கூட, வஸ்=நிவாஸே; இருத்தல் எனவே சூரியசந்திரர்கள் ஒன்றாக வசிக்கின்றார்கள் என்பது பொருளாகும். இதனை "அமாவாஸ்யாத் வமாவஸ்யா-தர்சஸ்ஸூர்யேந்துஸங்கம:" என்ற அமரகோசத்தினால் நன்கறிக. த்ருஷிர்=தெரிதல் எனவே சூரிய சந்திரர்கள் ஒன்றாகத் தெரிகின்றார்கள் என்பது தரிசம் என்பதன் பொருளாகும்.

*பௌர்ணமாஸீ யதாராஜன் ஸோமஸ்ய ததாதிதி:*
*பூர்ணிமாஸா பவேத்தஸ்ய பௌர்ணமாஸீ தத: ஸ்ம்ருதா.*
(பவிஷ்யோத்தரபுராணம்)

எனவரும் பிரமாணத்தினால் பௌர்ணமாஸீ என்ற வடமொழி சப்தத்திற்கு பூர்ணி=பூரணம், மா=சந்திரன், எனவே சந்திரன்கலை நிரம்பி பூரணமாகத் தோற்றுகின்றான் என்பது பொருளாகும். (24)

## கிரகமித்திரம்

ஆதவனுக்கு உறவுதிங்கள் செவ்வாயும் பொன்னும்
அம்புலிக்குப் புதனுஞ் செங்கதிர்இருவர் நேசம்
நீதிசெறி சேய்க்குஉறவு குருதிங்கள் வெய்யோன்
நின்றபுதன் தனக்குச்சுக் கிரன்இரவி நேசம்

ஓதியபொன் தனக்கு உறவுஆம் கதிர்திங்கள் செவ்வாய்
உயர்வெள்ளிக்கு உறவுசனி உடன்புந்தி இருவர்
பூதலமேல் சவுரிக்கே புதனும்சுக் கிரனும்
பொருந்தியநல் உறவுஎன்றே போற்றிடுவர் புலவர்.

(இ-ள்) சூரியனுக்கு சந்திரன் - செவ்வாய் - குருவும், சந்திரனுக்கு சூரியன் - புதனும், செவ்வாய்க்கு சூரியன் - சந்திரன் - குருவும், புதனுக்கு சூரியன் - சுக்கிரனும், குருவுக்கு சூரியன் - சந்திரன் - செவ்வாயும், சுக்கிரனுக்கு புதன்-சனியும், சனிக்கு புதனும்-சுக்கிரனும் நட்பு என்று சோதிடவிற்பன்னர்கள் கூறுவார்கள் எ-று. (25)

## கிரகசமம்

போற்றியசெங் கதிர்தனக்குச் சமன்புந்தி ஒருவன்
புனிதமதிக்கு இணைசெவ்வாய் குருசனிசுக் கிரனே
ஏற்றசெவ்வாய்க்கு இணைசனிசுக் கிரன்இருவர் தாமே
இனியபுதற் குச்சமனும் சனிசெவ்வாய் அரசன்
நாற்றிசைஎண் அரசனுக்கே சமன்சவுரி ஒருவன்
நலந்திகழ்சுக் கிரற்குஇணைபொன் நவில்செவ்வாய் இருவர்
தோற்றியிடும் சனிதனக்கே சமனதா கவுமே
துய்யவியா ழந்தனையே சொல்வர்மிகத் தானே.

(இ-ள்) சூரியனுக்கு-புதனும், சந்திரனுக்கு-செவ்வாய்-குரு-சுக்கிரன்-சனியும், செவ்வாய்க்கு - சுக்கிரன் - சனியும், புதனுக்கு - செவ்வாய்-குரு-சனியும், குருவுக்கு-சனியும், சுக்கிரனுக்கு - செவ்வாய் - குருவும், சனிக்கு-குருவும் சமம் என்று சோதிடவிற்பன்னர்கள் கூறுவார்கள் எ-று.

(வி-ரை) "புனிதமதி" என்று கூறியதனால் சிலர் வளர்பிறைச் சந்திரன் ஆனால் மட்டும் செவ்வாய்-குரு-சுக்கிரன்-சனி இவர்கள் சமமானவர்கள் என்றும், தேய்பிறைச்சந்திரன் ஆனால் சமமின்றிச் சந்திரனிலும் இவர்கள் உயர்ந்தவர்கள் என்றும் கூறுவர். அது சிறிதும் பொருந்தாதென்க. (26)

சொல்இரவிக்கு உறுபகைசுக் கிரன்சனியோடு இருவர்
சோமனுக்குப் பகைஇல்லை சொல்லவும்எக் காலே
அல்லல்அறுஞ் செவ்வாய்க்குப் பகைபுந்தி ஒருவன்
ஆனபுந்திக்கு உற்றபகை அம்புலிஒன்று ஆகும்
நல்லவியா ழந்தனக்குப் புதன்வெள்ளி பகையாம்
நாடியசுக் கிரற்குஇரவி நவில்திங்கள் பகையே
வல்லசனி தனக்குஇரவி திங்களுடன் செவ்வாய்
மட்டும்ஏ பகைஎன்று வழுத்துவர்எக் காலும்.

(இ-ள்) சூரியனுக்கு-சுக்கிரன்-சனியும், சந்திரனுக்கு - (பகை இல்லை), செவ்வாய்க்கு-புதனும், புதனுக்கு-சந்திரனும், குருவுக்கு-புதன்-சுக்கிரனும், சுக்கிரனுக்கு-சூரியன்-சந்திரனும், சனிக்கு-சூரியன்-சந்திரன்-செவ்வாயும் பகை என்று சோதிடவிற்பன்னர்கள் கூறுவார்கள் எ-று.

(வி-ரை) கிரகங்களுக்கு மித்துரு சத்துரு சமம் ஆகிய இவைகள் தற்கால மித்துரு சத்துரு சமம் எனவும், நைசர்க்கிக மித்துரு சத்துரு சமம் எனவும் இருவகைப்படும். அவற்றுள் இது நைசர்க்கிகத்தைச் சார்ந்ததாகும். இராகு கேதுக்கள் வீடற்ற சாயாகிரகங்களாதலால் அவர்களை இந்நூலுக்கு முன்னூல்களில் கூறுதுவிட்டதுபற்றி இந்நூலாசிரியரும் கூறுது விடுத்தார் புதனுக்குச் சந்திரன் சத்துருவென்று கூறப்பட்டிருக்கின்றது. இதனுல் சந்திரனுக்கு புதன் சத்துரு ஆதல்வேண்டும். இந்நூலிலும், இதற்குமுதல் நூற்களிலும் சந்திரனும் பகையான கிரகங்களில்லை எனக் கூறப்பட்டிருக்கின்றது. மற்றும் குருவுக்குப் புதன் சத்துரு என்று கூறப்பட்டிருக்கின்றது. இதனுல் புதனுக்கு குரு சத்துரு ஆதல்வேண்டும். சமம் என்று கூறப்பட்டிருக்கின்றது. இதன் உண்மையை உள்ளவாறு உணரமுடியவில்லை. அறிவுடையோர் இதனை ஆய்ந்தறிதல் வேண்டும்.

## நைசர்க்கிக சத்துரு மித்துரு சமம்

| கிரகம் | சத்துரு | மித்துரு | சமம் |
|---|---|---|---|
| ரவி | சனி-சுக்-பாம்பு | குரு-செவ்-சந்தி | புதன் |
| மதி | இராகு-கேது | சூரி-புதன் | குரு-சுக்-சனி-செவ் |
| செவ்வாய் | புதன் | குரு-சூரி-சந்தி | சனி-சுக்-பாம்பு |
| புதன் | சந்திரன் | சூரி-சுக்-பாம்பு | குரு-செவ்-சனி |
| குரு | சுக்-புத-பாம்பு | சூரி-செவ்-சந்தி | சனி |
| சுக்கிரன் | சூரி-சந்திரன் | புதன்-சனி-பாம்பு | குரு-செவ்வாய் |
| சனி | சூரி-செவ்-சந்தி | சுக்-புதன்-பாம்பு | குரு |
| இராகு | சூரி-சந்-செவ் | குரு-சுக்-சனி | புதன் |
| கேது | சூரியன்-சந்திரன் | செவ்-சுக்-சனி | புதன்-குரு |

பாம்பு=இராகு கேதுக்களாம். இராகு கேதுக்களை இந்நூலில் இது விஷயத்தில் கூறுதிருப்பினும் ஜாதகசிந்தாமணியை அநுசரித்து இங்கு விளக்கப்பட்டது. பலதீபிகைத் தமிழ் மொழிபெயர்ப்பில் இராகு கேதுக்களுக்கு சூரியன்-சந்திரன்-குரு பகையும், புதன்-சுக்கிரன்-சனி நட்பும், செவ்வாய் சமமும் எனக் கூறப்பட்டிருக்கின்றது. (27)

## நட்பு-ஆட்சி-உச்சம்-பகை-நீசம்

1-வது மேஷம்

வெள்ளியும் புதனும் நட்பு விளங்கிய செவ்வாய் ஆட்சி
ஒள்ளிய கதிரோன் உச்சம் உயர்சனி நீசம் ஆகும்
தெள்ளிய மதியோன் பொன்னன் சீரிய ராகு கேது
உள்உறும் பகைஆம் என்று ஓதினர் மேடத் தோர்க்கே.

(இ-ள்) மேஷராசி புதன்-சுக்கிரனுக்கு நட்பும், செவ்வாய்க்கு ஆட்சியும், சூரியனுக்கு உச்சமும், சனிக்கு நீசமும், சந்திரன்-குரு-இராகு-கேதுக்களுக்குப் பகையும் ஆம் எ-று. (28)

2-வது ரிஷபம்

சேய்சனி புதன்பொன் நட்புச் சீரிய புகரோன் ஆட்சி
தூய்மைசேர் மதியே உச்சம் துர்தரும் பாம்பு நீசம்

**காய்கதிர் பகையே ஆகும் கண்டனர் இடபம் தன்னில்**
**ஆய்தரு பொருள்கள் எல்லாம் அறிந்து இனிது உரைக்கலாமே.**

(இ-ள்) *இடபராசி செவ்வாய்-புதன்-குரு-சனிக்கு நட்பும், சுக்கிரனுக்கு ஆட்சியும், சந்திரனுக்கு உச்சமும், இராகு கேதுக்களுக்கு நீசமும், சூரியனுக்குப் பகையும் ஆகும். இதனால் ஜாதகங்களைக்கொண்டு ஆராய்ந்து பலா புலன்கள் அனைத்தையும் தெரிந்து விருப்பமாக உரைக்கலாம் எ-று.* (29)

3-வது மிதுனம்

**சந்திரன் சனியே சுங்கன் தருங்குரு செவ்வாய் பாம்பு**
**முந்திய நட்ப தாகும் முனிவுஇலாப் புதனே ஆட்சி**
**உந்திய பரிவே டந்தான் உச்சமாம் வில்லு நீசம்**
**தந்திடுங் கதிரோன் மாற்றன் தாழ்விலா மிதுனத் தோற்கே.**

(இ-ள்) *மிதுனராசி சந்திரன்-குரு-சுக்கிரன்-சனி-செவ்வாய்-இராகு-கேதுக்களுக்கு நட்பும், புதனுக்கு-ஆட்சியும், பரிவேடத்திற்கு-உச்சமும், இந்திரதனு நீசமும், சூரியனுக்குப் பகையும் ஆகும் எ-று:* (30)

4-வது கடகம்

**மேதையே நட்பு திங்கள் விளங்கிய ஆட்சி ஆகும்**
**சீதையே பொன்னோன் உச்சம் சிறந்திடும் செவ்வாய் நீசம்**
**ஓதிய கதிரோன் சுங்கன் ஓங்கிய ராகு மந்தன்**
**போதவே பகையாம் என்று போற்றினர் கடகத் தோற்கே.**

(இ-ள்) *கடகராசி புதனுக்கு நட்பும், சந்திரனுக்கு ஆட்சியும், குருவுக்கு உச்சமும், செவ்வாய்க்கு நீசமும், சூரியன்-சுக்கிரன்-சனி-இராகு-கேதுக்களுக்குப் பகையும் ஆகும் எ-று.* (31)

5-வது சிங்கம்

**அந்தணன் உறவ தாகும் அருங்கதிர் ஆட்சி ஆகும்**
**முந்திய தூமன் உச்சம் முனிவிலா நுட்பம் நீசம்**
**மந்தனே புகரோன் செவ்வாய் வணிகனே அரவே திங்கள்**
**தந்திடும் பகையே சிங்கம் தனக்கெனச் சாற்றி னரே.**

(இ-ள்) *சிங்கராசி குருவுக்கு நட்பும், சூரியனுக்கு ஆட்சியும், அமனுக்கு உச்சமும், அமகேதுவுக்கு நீசமும், சந்திரன்-செவ்வாய்-புதன்-சுக்கிரன்-சனி-இராகு-கேதுக்களுக்கு பகை ஆகும் எ-று.* (32)

6-வது கன்னி

**திங்கள்ஒடு அரவு செவ்வாய் செம்பொன்னே மந்தன் இன்னோர்**
**தங்கிய உறவது ஆகும் சாற்றிய புதனே ஆட்சி**
**பொங்கிய புதனே உச்சம் புகரவன் நீசம் ஆகும்**
**செங்கதிர் பகையே ஆகும் தெரிவையற்கு என்று செப்பே.**

(இ-ள்) *கன்னிராசி சந்திரன்-செவ்வாய் - குரு-சனி - இராகு-கேதுக்களுக்கு நட்பும், புதனுக்கு ஆட்சியும், புதனுக்கு உச்சமும், சுக்கிரனுக்கு நீசமும், சூரியனுக்கு பகையும் ஆகும் எ-று.* (33)

7-வது துலாம்

பண்டிதன் பொன்னன் அங்கி பாம்புடன் இவர்கள் தாமும்
தண்டிடா உறவுஆம் ஆட்சி தரும்புகர் உச்சம் காரி
வண்தமிழ் கதிரோன் நீசம் வாழ்மதி பகைய தென்று
கொண்டதோர் துலாத்தி னேற்குக் கூறலாங் கோதை மாதே.

(இ-ள்) *துலாராசி செவ்வாய்-புதன் - குரு - இராகு - கேதுக்களுக்கு நட்பும், சுக்கிரனுக்கு ஆட்சியும், சனிக்கு உச்சமும், சூரியனுக்கு நீசமும், சந்திரனுக்குப் பகையும் ஆகும் எ-று.* (34)

8-வது விருச்சிகம்

பனிமகன் சுங்கன் நட்பு பார்மகன் ஆட்சி பாம்பு
முனிவிலா உச்சம் ஆகும் முழுமதி நீசம் ஆகும்
இனியனே அருக்கன் பொன்னும் நீலனும் பகைய தென்றே
முனிவிலாத் தேளி னுற்கே முறைமையாய் மொழிவர் மாதே.

(இ-ள்) *விருச்சிகராசி புதன்-சுக்கிரனுக்கு நட்பும், செவ்வாய்க்கு ஆட்சியும், சந்திரனுக்கு நீசமும், சூரியன்-குரு-சனிக்குப் பகையும், இராகு கேதுக்களுக்கு உச்சமும் ஆகும் எ-று.*

(வி-ரை) *சிலர் 'முழுமதி' என்பதற்குப் பூரணச்சந்திரன் என்று பொருள் கூறி மயங்கி இடர்படுவர். மோனை நயங்கருதி மதிக்கு 'முழு' என்ற அடைகொடுத்துக் கூறினர் ஆசிரியர் என்றறிக. இங்ஙனமே மேஷ ராசியில் 'உயர்சனி' என்பதற்கு நீட்சி பொருந்திய சனி என்று பொருள் கூறுவர் சிலர். சனி குறுகிய வடிவுடையவர் ஆதலால் உயர்சனி என்பதற்கு இரக மண்டலங்களுக்கெல்லாம் மேலாகஉயர்ந்துள்ள சனி என்று பொருள் கொள்ளுதல் சிறப்பாகும். அல்லது நீண்டகாலத்தில் இராசிமண்டலத்தைச் சுற்றிவரும் சுபாவமுடைய சனி என்று பொருள்கூறினும் பொருந்தும் என்க.* (35)

9-வது தனுசு

பகலவன் புகரோன் காரி பாம்புநல் புதனே இந்து
இகல்இலா உறவ தாகும் இறைவனே ஆட்சி ஆகும்
சுகமறு சிலையே உச்சம் தோன்றிடும் வட்டம் நீசம்
மகிமகன் பகையே ஆகும் வளைந்திடும் தனுவி னுற்கே.

(இ-ள்) *தனுர்ராசி சூரியன்-சந்திரன் - புதன்-சுக்கிரன்-சனி-இராகு-கேதுக்களுக்கு நட்பும், குருவுக்கு ஆட்சியும், இந்திர தனுவுக்கு உச்சமும், பரிவேடத்திற்கு நீசமும், செவ்வாய்க்குப் பகையும் ஆகும் எ-று.*

(வி-ரை) *இச்செய்யுளில் முன்னிரண்டு அடிகளிலும் எதுகை ஒன்றி இருப்ப, பின்னிரண்டு அடிகளிலும் ஒன்றாதிருப்பது அச்சுவாகனம் ஏற்றி னோரால் நேர்ந்த பிழையேயன்றி வேறில்லை என்பது திண்ணம். ஆதலால் எதுகை நயம் நோக்கித் திருத்தி அமைக்கப்பட்டதென்க. இடபராசியில் 2-வது 4-வது அடிகளையும் இங்ஙனமே திருத்தப்பட்டிருத்தலை அறிவுடையோர் அங்கீகரிப்பார்களாக.* (36)

10-வது மகரம்

பண்டிதன் ஓடு சுங்கன் பாம்புடன் உறவ தாகும்
மண்டிய சனியே ஆட்சி மங்கலன் உச்சம் ஆகும்
கொண்டதோர் குருவே நீசம் சூரிய கதிரோன் திங்கள்
கண்டநல் பகையே ஆகும் காட்டிய மகரத் தோற்கே.

(இ-ள்) மகரராசி புதன் - சுக்கிரன் - இராகு - கேதுக்களுக்கு நட்பும், சனிக்கு ஆட்சியும், செவ்வாய்க்கு உச்சமும், குருவுக்கு நீசமும், சூரியன்-சந்திரனுக்குப் பகையும் ஆகும் எ-று. (37)

11-வது கும்பம்

என்றாழும் புதனும் வெள்ளி இறைவனே உறவ தாகும்
திண்திறல் சனியே ஆட்சி செப்பிய நுட்பம் உச்சம்
கண்டதோர் தூமன் நீசம் கலைமதி புவிசேய் பாம்பு
கொண்டநல் பகையே ஆகும் குறித்திடும் கும்பத் தோற்கே.

(இ-ள்) கும்பராசி சூரியன்-புதன்-குரு-சுக்கிரனுக்குநட்பும், சனிக்கு ஆட்சியும், தூமகேதுவுக்கு உச்சமும், தூமனுக்கு நீசமும் சந்திரன்-செவ்வாய்-இராகு-கேதுக்களுக்குப் பகையும் ஆகும் எ-று. (38)

12-வது மீனம்

அரவொடு சனியே திங்கள் அருக்கனே உறவ தாகும்
பரவிய குருவே ஆட்சி பார்க்கவன் உச்சன் ஆகும்
தரைமகிழ் புதனே நீசன் தரைமகன் பகைய தாகும்
கரவிலாக் கயலி னற்கே கனங்குழை மடந்தை கேண்மோ.

(இ-ள்) மீனராசி சூரியன் - சந்திரன் - சனி - இராகு-கேதுக்களுக்கு நட்பும், குருவுக்கு ஆட்சியும், சுக்கிரனுக்கு உச்சமும், புதனுக்கு நீசமும், செவ்வாய்க்குப் பகையும் ஆகும் எ-று.

## கிரகங்களுக்குரிய இராசி விபாகம்

(வி-ரை) அஹமாதித்ய ரூபோஸ்மி சந்த்ர மாஸ்த்வம் ப்ரசகூடீஸே
ஸம்யோகே வியோகே ஜகத் ஸ்தாவர ஜங்கமம். (பாரிஜாதம்)

“இரவி” சங்கரன்-ஈஸ்வரிதிங்கள்” என்ற வீமேசுரத்தின் வசனப்படி சூரியன்-சிவாம்சமும், சந்திரன்-சத்தி அம்சமும் ஆவர். “சிங்கமே முதலாய் ஆறு ராசியுமே செழும்பகல் கதிரவன் கூறும், தங்கிய கிசியில் குடமுதல் ஆறும் சந்திரன் கூறுஎனச் சாற்று” எனவரும் ஜாதக சிந்தாமணி வசனத்தினால் சிங்கமுதல் ஆறுராசிகள் சிவாம்சமான சூரியனுடைய பாகமும், கடகாதி அபசவ்வியமாக ஆறு ராசிகளும் சத்தி அம்சமான சந்திரனுடைய பாகமும் ஆகும். இந்நியதியினால் பன்னிரண்டு ராசிகளில் ஆறு ஆறு ராசிகள் சூரிய-சந்திரர்களுக்கு உரியதென் று நன்குபெறப்பட்டது. இதனை “பாரெலாம் சசிகதிரோன் இருவர்க்காகும்” என்ற இந்நூல் ஆசிரியர் வசனம் வலியுறுத்தாநிற்கும்.

மற்றும் "காலமாம் புருடன் தனக்குமே அங்கம்கருதிடும் இராசி ஈர் ஆறும்" என்ற மங்களேஸ்வர்யத்தின்படி பிரம்மாண்டம் முற்றும் இரணிய கருப்பனுடைய சரீரமாகும், அவருடைய சக்தியானது பல பதங்களாகப் பிரிந்து பிரம்மாண்டம் முற்றும் வியாபித்திருக்கின்றது. ஆகவே மேஷாதி பன்னிரண்டு இராசிகளும் அவரது திருமேனியேயாகும். "ஸிம்ஹச்ச சைலே ஹ்ருதயப்ரதேச: ப்ரஜாபதேஃ பஞ்சம மாஹுராத்யாஃ" என்ற யவனசார்யர் வசனத்தின்படி சிங்கம் இரணியகருப்பன்; அல்லது கால புருஷனுடைய இருதயம் என்று அறியப்படுகின்றது. மற்றும்:—

வக்ஷஸ்தலம் ஸ்தநௌ குக்ஷிஃ கக்ஷமூலஞ்ச மேஹநம்
ஊரூஜங் கேச பாதௌச மேஷாத்யாஃ பரிகீர்திதாஃ

எனவரும் ஞானப்ரதீபிகை ரோககாண்ட வசனத்தினாலும் காலபுருஷனுடைய கைஎன்பது கடகராசி என்றும், மார்பு சிங்கராசி என்றும் ஏற்படுகின்றது.

உள்ளம் பெருங்கோயில் ஊனவுடம்பு ஆலயமாம்
வள்ளல் பிரானார்க்கு வாய்கோ புரவாசல்
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம்
கள்ளப் புலன்ஐந்துங் காளா மணிவிளக்கே. (திருமந்திரம்)

எனவரும் திருவாக்காலும் மற்றும் "கண்ணேன் அலாமல் இருகைதான் குவிக்க எனின் நாணும், என்உளம் நிற்றி" எனவரும் தாயுமானார் திருவாக்கானும் காலபுருஷனும், இரணியகருப்பனுமாகிய முழுமுதல் பரம்பொருளாம் இறைவன், ஆன்மகோடிகளின் இருதயஸ்தானமாகிய தகராலயம் என்னப்படும் புண்டரீகவீட்டில் எப்போதும் வீற்றிருந்து இன்னருள் புரிதலாலும், அவ்விறைவனே சூரியனாக விளங்குகின்றமையாலும், அவ்விறைவனுடைய இருதயஸ்தான சிங்கவிராசியின் விபாகமாக இருப்பதனாலும், சூரியபகவானுக்குச் சிங்கராசி ஆட்சிவீடாயிற்றென்றறிக. சிவமின்றி சத்தியில்லை; சத்தியின்றி சிவமில்லை என்பதுபோல சிவாம்சமான சூரிய க்ஷேத்திரத்திற்கடுத்த கர்க்கடகராசி, சத்திஅம்சமான சந்திரனுக்கு ஆட்சி வீடாயிற்றென்றறிக. அந்த இரணியகருப்பனுடைய கைஅல்லது தோள் கடகராசியின் விபாகமாதலாலும், சத்திசிவத்தின் திருக்கரத்தை அல்லது தோளைமருவுதல் இடல்பாதலாலும் கடகம் சந்திரனுக்கு ஆட்சி வீடென்பது மறுக்கொணாத வுண்மையாகும்.

சூரிய சந்திரர்கள் குஜாதி பஞ்சகிரகங்களுக்கு தத்தம் பாகத்தில் ஒவ்வொரு இராசிகளைச் சொந்தமாக ஆட்சிபுரியுமாறு அளித்திருக்கின்றனர். இம்முறையில் நோக்கும்போது சந்திரன் கடகத்திற்கடுத்த மிதுன ராசியையும், சூரியன் சிங்கத்திற்கடுத்த கன்னியாராசியையும் புதனுக்குக் கொடுத்தனர். இங்ஙனமே சந்திரன் தனது பாகத்திலுள்ள ரிஷபம் மேடம், மீனம், கும்பம் ஆகிய இவ்விராசிகளை முறையே சுக்கிரன், செவ்வாய், குரு, சனி முதலியவர்களுக்குக் கொடுத்தனர். இங்ஙனமே சூரியன் தனது பாகத்திலுள்ள துலாம், விருச்சிகம், தனுசு, மகரம் ஆகியஇவ்விராசிகளை முறையே சுக்கிரன், செவ்வாய், குரு, சனி முதலியவர்களுக்குக் கொடுத்தனர் என்பதாம். ஆகவே இதுகாறும் கூறிப்போந்த நியாயத்தினால் கிரகங்களின் ஆட்சிபதவியின் உரிமை இத்தகைத்தென்பது நன்கு விளங்காநிற்கும். மற்றும் ககோளத்தையொட்டி யூகிக்குமிடத்து, ககோளவட்ட

கியதியில் பூமத்யம், சூரியமத்தியம் என இருவகைப்படும். சூரியமத்தியத்தை அநுசரித்து நோக்கும்போது சூரியனை பூமியும், பூமியைச் சந்திரனும் சுற்றுகின்றனர். சந்திரமண்டலத்தின்மேல் புதமண்டலமும், அதற்கு மேல் சுக்கிரமண்டலமும்,அதற்குமேல் செவ்வாய்மண்டலமும், அதற்குமேல் குருமண்டலமும், அதற்குமேல் சனிமண்டலமும் இருத்தலின் சந்திரன் வீட்டிற்கு அடுத்து முறையே புதன், சுக்கிரன், செவ்வாய், குரு, சனிகளுடைய ஆட்சிவீடுகள் ஏற்பட்டதென்னலும் பொருத்தமுடைத்தாகும். விரிப்பிற் பெருகும். உச்சம்=உன்னதமான பதவி, மேலானஇடம்; அக்கிராசனம், நீசம்=தாழ்மையானபதவி, கீழான இடம், அந்தியாசனம் என்பதாம். இதன் உண்மைத் தத்துவங்களை உள்ளவாறு எடுத்துக்காட்டுதல் முற்றக்கற்ற மூதறிவாளர்களாம் சோதிட நுண்மதிப்புலவர்கட்கே சாத்தியமாகும் என்ப.

## உபகிரகங்கள்

சூரியாதிகிரகங்களுக்கு புத்திரர்கள் உபகிரகமென்னப்படுவர் இவ்வுபகிரகங்கள் தூமாதிஐவர், குளிகாதிநால்வர் ஆக ஒன்பதின்மராவர்.

| | |
|---|---|
| சூரியனுக்—காலன் | சுக்கிரனுக்கு—இந்திரதனு |
| சந்திரனுக்கு—பரிவேடன் | சனிக்கு—குளிகன் |
| செவ்வாய்க்கு—தூமன் | இராகுவுக்கு—வியதீபாதன் |
| புதனுக்கு—அர்த்தப்பிரகரணன் | கேதுவுக்கு—தூமகேது |
| குருவுககு—எமகண்டன் | இவர்கள் புத்திரர்களாம். |

குளிகாதி நால்வர் என்னும் குளிக, எமகண்ட அர்த்தப்பிரகர,காலாதிகளாம். இவர்கள் சூரியாதிகிரகங்களைப்போல் திருசியமாகாமல், அதிருசிய சஞ்சாரிகளாய் இருக்கின்றனர். இவர்கள் கிரமமாக சனி, குரு, புதன், சூரியன் இவர்களின் அம்சமானவர்கள் எனவும், புத்திராகள் எனவும் கூறப்படுவார்கள். இவர்கள் சண்டாள, கல்மஷ, கார்தப, வராகங்களின் கூபங்களுக்கும், பிரோதவஸ்திரதாரணம், ஜீவஹிம்சை, கத்தியால் நறுக்குதல், மரணதண்டனைகள் என்னும் கார்யஙகளுக்கும், நாயகர்களாய் கும்ப, தனூர், மீனங்களைக் கிரமமாக ஆட்சிவீடுகளாகப்பெற்று, சுபங்களைக் கெடுக்குந்தன்மை யுடையவர்களா யிருக்கின்றனர். ஆனல் இவர்களுள் குளிகன் மாத்திரம் தானிருந்த பாவத்தில் தனது தூர்க்குணத்தை வியாபிக்கச் செய்வன். மற்ற யமகண்டாதிகள் காலத்தை அநுசரித்து சுபங்களைச் செய்வார்கள். இந்நால்வர்கள் அன்றி அங்காரக அம்சனும் குளிகனுடைய குணத்தையொத்து விருச்சிகத்தை ஆட்சிவீடாகப்பெற்ற மிருத்தியு என்னும் பெயருடன் ஐந்தாவது உபக்கிரகமும் ஒன்றிருப்பதாக சௌர மதத்தின் அபிப்பிராயம்.

குளிகன் இலட்சணம் வருமாறு:—

குளிகஃ ப்ரேத வாஸாச்ச சண்டாலோ ஜீவகாதுகஃ
பாசகட்கதரஃ பாபீ வத தண்டாதி காரவான்
யமாத்மஜச்ச சநேஃ புத்ரோ மலகார்தப ஸூகரேட்
ம்ருத்யுஸ்ததா விதச்சைவ மாரகே ம்ருத்யு நாயகௌ. (லகுதாசகம்)

எனவரும் வசனத்தின்படி குளிகன் சண்டாளஜாதி, ஜீவஹிம்ஸை செய்பவன், நறுக்கப்பட்டவன், பாபிஷ்டன், மரணதண்டாதிகாரி, மிருத்தியு

புத்திரன், சனியால் வளர்க்கப்பட்டவன், மலகூபத்திற்கும், கழுதை-பன்றி-நரிகளுக்கும், துர்ப்புத்தி, துராலோசனை, துர்ச்சன சகவாசம், மிருத்யுகாரகத்வம், கும்பராசியாதிபத்யம் இவைகளை உடையவன் என்று அறிதல்வேண்டும். எனவே மிருத்தியுகாரகன் குளிகனும், ஆயுள்காரகன் சனியுமாவார்கள் என்பது போதரும்.

ஸௌரேஸ் ஸூநுச்ச குளிகோ இதபுத்ரோத காலகஃ
ஜீவஜோ யமகண்டச்ச இந்துஜோர்த ப்ரஹாரகஃ

(அஹோபலநாதம்)

(இ-ள்) சனிக்குக் குளிகனும், சூரியனுக்குக் காலனும், குருவுக்கு எமகண்டனும், புதனுக்கு அர்த்தபிரகாரனும் புத்திரராவார்கள் எ-று.

சந்யம்சேகுளிகஃ ப்ரோக்தோ குர்வம்சே யமகண்டகஃ
பௌமாமசே ம்ருத்யுரா த்ருஷ்டோ ரவ்யம்சே காலஸம்ஜ்ஞிகஃ
ஸௌம்யாம்சேர்த ப்ரஹாரச்ச ஸ்பஷ்டகர்ம ப்ரதேசகஃ

(பராசரஹோரை)

(இ-ள்) சனிஅமிசம் குளிகனும், குருஅமிசம் எமகண்டனும், செவ்வாய்அமிசம் மிருத்தியுவும், சூரியஅமிசம் காலனும், புதன்அமிசம் அர்த்த பிரகாரனும் ஆவா எ-று.

ஸநேஸ்ஸுத ஸ்யாத்-குளிகோத மாந்தி
யமாத்மஜஃ ப்ராணஹரோ திபாதி
அர்தப்ரஹாரீ-யமகண்டகஸ் ஸ்யாத்
உத்க்ராந்தி ஸம்ஜ்ஞஃ கலுகாலநாமா.

(சர்வார்த்தசிந்தாமணி)

(இ-ள்) சனிபுத்திரன்-மாந்தி, யமாத்மஜன், ப்ராணஹரன், அதிபாபி இவை குளிகன்பெயர். அர்த்தப்பிரஹாரன், யமகண்டன் இவர்கள் இப் பெயருடையவர், உத்க்ராந்தி காலன்பெயர் எ-று.

ரவிவாராதி சந்யந்தம் குளிகாதி நிரூப்யதே
திவஸா நஷ்டதா க்ருத்வா வாரேசாத் கணயேத் க்ரமாத்
அஷ்டமாம்சோ நிரீசஸ்யாச் சந்யம்ஸோ குளிகஸ்ம்ருதஃ
ராத்ரி மப்யஷ்டதாபக்ரா வாரேசாத் பஞ்சமா திதஃ
கணயேத் அஷ்டமஃ கண்டோ நிஷ்பதிஃ பரிகீர்திதஃ

(விருத்தசம்மிதை)

(இ-ள்) ஞாயிறுமுதல் சனிவகை குளிககிரக நிர்ணயம் வருமாறு: பகற்பொழுதை எட்டுபாகம் செய்து வாராதிபதி முதலாக எண்ணி, எட்டாவது பாகத்தைவிடுக்க, சனியம்சம் குளிககாலமாகும். இரவுக்கும் அந்தந்த வாரமுதல் 5-வது கிரகமுதலாக எண்ணி எட்டாவது பாகத்தை விடுக்க சனியம்சம் குளிககாலமாகும் எ-று.

இங்கே எட்டுபாகம் செய்தது என்பது பகல், இரவு அகசு பிரமா ணத்தை என்றறிக. கிரட்ச ஸ்தலத்திற்குரிய சம அகசை எட்டுபங்கு செய்து இங்கு பகலிரவு குளிகாதியரின் கால ஆரம்பத்தையும் முடிவை யும் காட்டப்பட்டிருக்கின்றன.

## சம அகசுடைய பூமத்திய ரேகையின் குளிகாதியர் சக்கரம் (பகற்காலம்)

| வாரம் | 0-முதல் $3\frac{3}{4}$-வரை | $3\frac{3}{4}$-முதல் $7\frac{1}{2}$-வரை | $7\frac{1}{2}$-முதல் $11\frac{1}{4}$-வரை | $11\frac{1}{4}$-முதல் 15-வரை | 15-முதல் $18\frac{3}{4}$-வரை | $18\frac{3}{4}$-முதல் $22\frac{1}{2}$-வரை | $22\frac{1}{2}$-முதல் $26\frac{1}{4}$-வரை | $26\frac{1}{4}$-முதல் 30-வரை |
|---|---|---|---|---|---|---|---|---|
| ஞாயிறு | சூரி காலன் | சந்திரன் | செவ்வாய் | புதன் அர்த்த | குரு எமகண் | சுக் | சனி குளிகன் | |
| திங்கள் | சந்தி | செவ் | புதன் அர்த்த | குரு எமகண் | சுக் | சனி குளிகன் | சூரி காலன் | |
| செவ்வா | செவ்வாய் | புதன் அர்த்த | குரு எமகண் | சுக் | சனி குளிகன் | சூரி காலன் | சந்திரன் | |
| புதன் | புதன் அர்த்த | குரு எமகண் | சுக்கிரன் | சனி குளிகன் | சூரி காலன் | சந்திரன் | செவ்வாய் | |
| வியாழ | குரு எமகண் | சுக்கிரன் | சனி குளிகன் | சூரி காலன் | சந்திரன் | செவ்வாய் | புதன் அர்த்த | |
| வெள்ளி | சுக்கிரன் | சனி குளிகன் | சூரி காலன் | சந்திரன் | செவ்வாய் | புதன் அர்த்த | குரு எமகண் | |
| சனி | சனி குளிகன் | சூரி காலன் | சந்திரன் | செவ்வாய் | புதன் அர்த்த | குரு எமகண் | சுக்கிரன் | |

## பூமத்திய ரேகையின் குளிகாதியர் சக்கரம் (இரவுகாலம்)

| வாரம் | 0 முதல் $3\frac{3}{4}$-வரை | $3\frac{3}{4}$-முதல் $7\frac{1}{2}$-வரை | $7\frac{1}{2}$-முதல் $11\frac{1}{4}$-வரை | $11\frac{1}{4}$-முதல் 15-வரை | 15-முதல் $18\frac{3}{4}$-வரை | $18\frac{3}{4}$-முதல் $22\frac{1}{2}$-வரை | $22\frac{1}{2}$-முதல் $26\frac{1}{4}$-வரை | $26\frac{1}{4}$-முதல் 30-வரை |
|---|---|---|---|---|---|---|---|---|
| ஞாயிறு | குரு எமகண் | சுக்கிரன் | சனி குளிகன் | சூரி காலன் | சந்திரன் | செவ்வாய் | புத அர்த்த | |
| திங்கள் | சுக்கிரன் | சனி குளிகன் | சூரி காலன் | சந்திரன் | செவ்வாய் | புதன் அர்த்த | குரு எமகண் | |
| செவ்வா | சனி குளிகன் | சூரி காலன் | சந்திரன் | செவ்வாய் | புதன் அர்த்த | குரு எமகண் | சுக்கிரன் | |
| புதன் | சூரி காலன் | சந்திரன் | செவ் வாய் | புதன் அர்த்த | குரு எமகண் | சுக்கிரன் | சனி குளிகன் | |
| வியாழ | சந்திரன் | செவ்வாய் | புதன் அர்த்த | குரு எமகண் | சுக் | சனி குளிகன் | சூரி காலன் | |
| வெள்ளி | செவ்வாய் | புத அர்த்த | குரு எமகண் | சுக்கிரன் | சனி குளிகன் | சூரி காலன் | சந்திரன் | |
| சனி | புத அர்த்த | குரு எமகண் | சுக்கிரன் | சனி குளிகன் | சூரி காலன் | சந்திரன் | செவ்வாய் | |

பகற்கால குளிகாதியர் சக்கரத்தில் அந்தந்த வாராதிபர் முதலான இரக வரிசையும், இராக்கால குளிகாதியர் சக்கரத்தில் அந்தந்த வாராதிபர்க்கு ஐந்தாவது வாராதிபர் முதலான இரக வரிசையும்கொண்டு குளிகாதியரின் நிர்ணயம் கூறப்பட்டது. அதாவது பகற்காலம் ஜனனம் வியாழக்கிழமையாயின் $7\frac{1}{2}$ நாழி முதல் $11\frac{1}{4}$ நாழி வரை குளிககாலமாம். இரவு ஜனனம் வியாழக்கிழமையாயின் $18\frac{3}{4}$ நாழி முதல் $22\frac{1}{2}$ நாழி வரை குளிககாலம் ஆகும். மற்றதுமிப்படியே ஆம்.

தூமாதி ஐவர்:—தூமன் புகை சமூகத்தையொத்து வால்நட்சத்திரமாகக் காணப்படுவான். வியதீபாதன் கொள்ளிக்கட்டைநெருப்பைப்போல் காணப்படுவான். பரிவேடன் சூரிய சந்திரர் பிம்ப அந்தர்க்கதனும் அவர்கள் உதிக்கும்போது அவர்கள் மண்டலத்தைச் சுற்றி பலவித வர்ணங்களுடன் வட்ட வடிவாகக் காணப்படுவான். இந்திரதனுசு பலவித வர்ணங்களுடன் அந்தியில் கிழக்கிலும், அதிகாலையில் மேற்கிலும் வில்லைப்போல் உலகப் பிரசித்தமாகக் காணப்படுவான். தூமகேது ஒரோர்காலத்தில் வால்நட்சத்திரமாகக் காணப்படுவான். இந்த உபக்கிரகங்கள் விகார வடிவமும், சூரியகட்சியில் உண்டாகி உலகத்திற்குத் தீங்கையும், ஜாதகம்-ஆரூடம்-முகூர்த்தங்களில் எந்தப் பாவகத்தில் இருக்கின்றார்களோ அந்தப் பாவகத்திற்குக் கெடுதியைச் செய்பவர்களாவர். இவர்கள் ஸ்புடராசியாதிகளை நீக்கி பாகாதிகளில் சூரியாதி கிரகங்களுடன் சமபாகத்திலாவது, பிருஷ்ட (பின்) பாகையிலாவது இருந்தால் கெட்ட பலன்களையும், முக (மேல்) பாகைகளில் இருந்தால் சுபபலன்களையும் தருவார்கள்.

அப்ரகாசாஸ் ஸஞ்சரந்தீ தூமாத்யாஃ பஞ்சகேசராஃ
க்வசித் கதாசித் த்ருச்யந்தே லோகோபத்ரவ ஹேதவே (27)

தூமஸ்து தூமபடலஃ ப்ருச்சர்கூ மிதிகேசந
உல்காபாதே வ்யதீபாதஃ பரிவேஷஸ்து த்ருச்யதே (28)

லோகே ப்ரஸித்தம் யத் த்ருஷ்டம் ததேவப்த்ர தநுஸ்ம்ருதம்
கேதுச்ச தூமகேதுஸ்யாத் *லோகோபத்ரவ காரகஃ (29)

(பலதீபிகை)

(இ-ள்) தூமாதி பஞ்சகிரகங்கள் பிரகாசமில்லாதவர்களாய் (மேற்கு திக்கு கமனமுடையவர்களாய்) சஞ்சரிப்பார்கள். சிலகாலம் சிறிது தோற்றப்படின் அக்காலம் உலகத்திற்கு மிக துன்பத்தைத் தருங்காலமாகும் (27)

தூமன்புகைக்கூட்டத்தையொத்து வால்நட்சத்திரம்போல் காணப்படுவன். வியதீபாதன் கொள்ளிக்கட்டை நெருப்பைப்போல் காணப்படுவன். பரிவேடன் சூரிய சந்திரர்களைச் சுற்றி காணப்படும் வட்ட வடிவினனுவன் (28)

உலகத்திற்கு பிரத்யட்சமாய் காணப்படுவதே தேவேந்திரன் வில் என்னும் இந்திரதனுசு ஆகும். இது தோன்றின் உலகத்திற்கு உபத்திரவம் உண்டாகும் எ-று.

* இவற்றால் உலகுக்கு உண்டாகும் தீமையை சோதிடகலாநிதி முதல் தொகுதியில் பார்க்கக் காணலாம்.

## தூமாதியர் உச்ச நீச ஆட்சிகள் வருமாறு

| தூமாதியர் | உச்சம் | நீசம் | ஆட்சி | குளிகாதியர் | ஆட்சி |
|---|---|---|---|---|---|
| தூமன் | சிங்கம் | கும்பம் | மகரம் | குளிகன் | கும்பம் |
| வியதீபாதன் | விருச்சிக | ரிஷபம் | மிதுனம் | எமகண்ட | தனுசு |
| பரிவேடன் | மிதுனம் | தனுசு | தனுசு | அர்த்தபிர | மிதுனம் |
| இந்திரதனு | தனுசு | மிதுனம் | கடகம் | காலன் | மகரம் |
| தூமகேது | கும்பம் | சிங்கம் | கடகம் | மிருத்து | விருச்சிக |

பரிவேடம் தனக்குஉச்சம் மிதுனமே ஆகும்
பகர்தூம னுக்குஉச்சம் சிங்கம்எனல் ஆகும்
உரியஇந்த்ர தனுசுஉச்சம் தனுசே ஆகும்
உற்ற * நுட்பம் தனக்குஉச்சம் கும்பம்எனல் ஆகும்.

(சாதகசிந்தாமணி-136½)

இச்செய்யுளில் 2-வது அடியில் "பகர்கலைக்யானுக்குச்சம்" என்றிருப்பது முதல்நூல் நோக்கி "பகர் தூமனுக்கு உச்சம்" எனத் திருத்தப்பட்டது, 2-வது அடியில் 'நுட்பம்' என்றது தூமகேதுவை என்க. வட்டம் எனின் பரிவேடத்திற்குப் பெயர். 'நுட்பம்' என்பது காலநுட்பம் என்றுங் கூறப் படும். 'வில்-சிலை'என்பது இந்திரதனுசுக்கும்பெயராகும். இதுகாறுங்கூறிய வற்றால் உபகிரகங்களின்னதென்பதும், அவற்றாலுண்டாகும் பயன் இன்ன தென்பதும், அவற்றின் தன்மை நியதி இன்னதென்பதும், அவற்றின் உச்சம்-நீசம்-ஆட்சி இராசிகள் இன்னதென்பதும் நன்கு விளங்காநிற்கும். இனி அவற்றின் கணிதமுறையையும், பலாபலன்களையும் கூறப்படும். (39)

## ஜாதக குளிகை காலம்

களிப்பான குளிகன்வகை பார்த்திடுவாய் மின்னே
கதிரவனுக்கு இருப்பதாறு ஆம்இரவில் பத்தாம்
மிளிர்திங்கள் இருபத்தி இரண்டுஇரவில் ஆறும்
மேல்செவ்வாய் பதினெட்டுஆம் நிசியினில் இரண்டாம்
ஒளிர்புதனுக்கு ஈர்ஏழாம்-இரவுஇருபத்து ஆறும்
ஓதுகுரு பத்துஇரவில் உயர்இருபான் இரண்டாம்
குளிர்வெள்ளிக்கு இருமூன்று மாலைபதின் எட்டுஆம்
கூறுசனிக்கு ஒர்இரண்டாம் ஏழ்இரண்டாம் நிசிக்கே.

(இ-ள்) ஜாதகங்களில் குளிகன் இருக்கும் இருப்பைக் கூறுமிடத்து, ஞாயிற்றுக்கிழமை பகலில் நா-26, இரவில் நா-10, திங்கட்கிழமை பகலில்

* இதனை சோதிடகலாநிதி இரண்டாவது தொகுதியில் காண்க.

நா-22 இரவில் நா-16, செவ்வாய்க்கிழமை பகலில் நா-18 இரவில் நா-2 புதன்கிழமை பகலில் நா-14 இரவில்நா-26, வியாழக்கிழமை பகலில் நா-10 இரவில் நா-22, வெள்ளிக்கிழமை பகலில் நா-6 இரவில்நா-8, சனிக்கிழமை பகலில் நா-2 இரவில் நா-14 ஆகும் எ-று.

(வி-ரை) முன்பு பகலிரவு சக்கரங்களில் விளக்கிக் காட்டிய குளிகாதி நால்வர்களின் கால ஆரம்ப முடிவுகள் நிரட்சஸ்தலமாகிய பூமத்ய ஸ்தானத்திற் குரியதாகும். பிற இடங்களுக்கு அந்தந்த இடங்களுக்குரிய பகல் இரவு அகசு பிரமாணங்களை எட்டு பங்கு செய்து பங்கு ஒன்றுக்கு இவ்வளவு நாழிகை என்று சுத்தமாக அறிந்துகொள்ளல் வேண்டும். தற்காலம் வழங்கப்பட்டுவரும் இராகுகாலத்தின் காலநிர்ணயங்கூட பூமத்தியஸ்தானமாகிய நிரட்சஸ்தலத்திற் குரியதேயன்றி வேறிடங்கட்குரியதல்ல. அந்தந்த இடங்களின் அகசுகொண்டே இதனையும் அறிக.

முன்பு காட்டியிருக்கும் பகல் இரவு குளிகாதியர் சக்கிரத்தில் அவரவர்கள் அந்தியகால நாழிகையில் கடைசி ஜாமமாகிய 7-வது ஜாமத்திலிருந்து, ஜாமம் ஒன்றுக்குக் கால், கால் நாழிகையாகக் கழித்துக்கண்டது ஜாதககுளிகாதியர்காலம் ஆகும். அதாவது 7-வது ஜாமத்திற்கு $\frac{1}{4}$-நாழிகை 6-வது ஜாமத்திற்கு $\frac{1}{2}$-நாழிகை, 5-வது ஜாமத்திற்கு $\frac{3}{4}$-நாழிகை, 4-வது ஜாமத்திற்கு 1-நாழிகை, 3-வது ஜாமத்திற்கு $1\frac{1}{4}$-நாழிகை, 2-வது ஜாமத்திற்கு $1\frac{1}{2}$-நாழிகை, 1-வது ஜாமத்திற்கு $1\frac{3}{4}$-நாழிகை ஆகக் கழித்துக் கண்டது ஜாதகத்திற்குரிய குளிகாதியர் காலமாகும். இங்ஙனம் கழிக்காமல் காண்பது முகூர்த்தங்கட்குரிய குளிகாதியர் காலமாகும்.

## (3) நிரட்சஸ்தல ஜாதக குளிகாதியர் காலங்கள்

| வாரம் | பகல் | | | | இரவு | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| | குளிகன் | யமகண்டன் | அர்த்தப்பிரகரன் | காலன் | குளிகன் | எமகண்டன் | அர்த்தப்பிரகரன் | கால |
| ஞாயி | 26 | 18 | 14 | 2 | 10 | 2 | 26 | 14 |
| திங் | 22 | 14 | 10 | 26 | 6 | 26 | 22 | 10 |
| செவ் | 18 | 10 | 6 | 22 | 2 | 22 | 18 | 6 |
| புதன் | 14 | 6 | 2 | 18 | 26 | 18 | 14 | 2 |
| வியா | 10 | 2 | 26 | 14 | 22 | 14 | 10 | 26 |
| வெள் | 6 | 26 | 22 | 10 | 18 | 10 | 6 | 22 |
| சனி | 2 | 22 | 18 | 6 | 14 | 6 | 2 | 18 |

சனி இரவு குளிகோதயம் 4-வது ஜாமம் ஆதலால், ஷை இரவுக்குரிய குளிகாதியர் சக்கரத்தின்படி குளிகாந்தகாலம் நா-15, என்று அறியப்படுகின்றது. இதிலிருந்து 7-வது ஜாமத்திலிருந்து அபசவ்விய முறையாக எண்ணிவர 4-வது ஜாமமாதலால், ஜாமம் ஒன்றுக்குக் கால்நாழிகையாக கூடிய நா-1-ஐக் கழித்துவிட ஜாதககுளிகைகாலம் நா-14 என்று ஏற்பட்டதுணர்க. இங்ஙனமே சனி இரவு எமகண்ட அந்தியகாலம் நா-7½, இது 7-வது ஜாமத்திலிருந்து எண்ண 6-வது ஜாமம் ஆதலால் (அறுகால்-ஒன்றரை) நா-7½-ல் 1½-ஐக் கழிக்க சனிவாரம் இரவு ஜாதக எமகண்டகாலம் நா-6 என்று ஏற்பட்டதுணர்க. பிறவும் இவ்வடைவே பார்த்துக்கொள்க. இங்ஙனம் பார்த்துக் கழித்த நாழிகைகளேயே பெரியோர்கள் ஜாதக குளிகாதியர் காலமெனக் கூறியிருக்கின்றனர். இதனை மேல் 3-வது சக்கரம் நன்கு விளக்கும்.

இனி அந்தந்த இடங்களுக்குரிய அகசு பிரமாணத்தைக்கொண்டு
ஜாதக குளிகாதியர்
நாழிகைகளை அறியும் வழியும் உதாரணமும் வருமாறு:

இஷ்ட ஸ்தலத்தின் பகலிரவு அகசு பிரமாணத்தை வைத்து, கிரட்ச ஸ்தலத்தின் பகலிரவு ஜாதக குளிகாதியர் காலத்தினால் பெருக்கி, 30-ஆல் வகுத்துவரும் ஈவு இஷ்டஸ்தலத்தின் ஜாதக குளிகாதியர் காலம் ஆகும்.

கலியுகஞு 4986-ல் தாரணஞு ஆடிமீ 14உ ஆதிவாரம் பகல் நா-1 விநாடி 55-க்கு இஷ்டஸ்தல ஜாதக குளிகாதியர் காலம் வருமாறு. பகல் அகசு நா. 31-34, 3-வது சக்கரத்தின்படி ஆதிவாரம் பகல் குளிகாதியர் காலம் குளிகன் நா-26, எமகண்டன் நா-18, அர்த்தப்பிரகரன் நா-14, காலன் நா-2 ஆகும்.

குளிக உதாரணம்:— அகசு நா. 31-34 × 26 = 820-44 ÷ 39 = 27, மீதம் 10 × 60 = 600 + 44 = 644 ÷ 30 = 21 ஆகவே இஷ்டஸ்தல ஆதிவாரம் பகல் ஜாதக குளிககாலம் நா. 27-21.

எமகண்டன்:—அகசு நா. 31-34 × 18 = 568-13 ÷ 30 = 18, மீதம் 28 × 60 = 1680 + 12 = 1692 ÷ 30 = 56 ஆகவே இஷ்டஸ்தல ஆதிவாரம் பகல் ஜாதக எமகண்டகாலம் நா. 18-56.

அர்த்தபிரஹரன்:— அகசு நா 31-34 × 14 = 441-56 ÷ 30 = 14, மீதம் 21 × 60 = 1260 + 56 = 1316 ÷ 30 = 44 ஆகவே இஷ்டஸ்தல ஆதிவாரம் பகல் ஜாதக அர்த்தபிரகரகாலம் நா. 14-44.

காலன்:— அகசு நா. 31-34 × 2 = 6327 ÷ 30 = 2, மீதம் 3 × 60 = 180 + 28 = 208 ÷ 30 = 7, ஆகவே இஷ்டஸ்தல ஆதிவாரம் பகல் ஜாதக காலனுடைய நா. 2-7.

இப்படி கணித்துக்கண்ட இஷ்ட ஸ்தலத்திற்குரிய ஆதிவாரத்தின் குளிகாதியர் காலம்:— குளிகன் நா. 27-21, எமகண்டன் நா. 18-56, அர்த்தபிரகரன் நா. 14-44, காலன் நா. 2-7 என்று அறிக.

இஷ்டஸ்தல விஷுவச் சாயாங்குலத்திற்குரிய சரபிண்ட சமஸ்காரஞ் செய்து கண்ட இராசிமானத்தைக்கொண்டு, ஜனன மாதத்திற்குரிய இராசி பிரமாணத்தில், ஜனனம்வரைச சென்றதுபோக நின்ற உதயாற்பரத்தை

வைத்து ஷை ஜாதக குளிகாதியர் காலநாழிகைக்கு எந்த ராசி ஏற்படுமோ அதுவே அவரவர்கள் நிற்கும் இராசிகளாகும். பின்பு அந்தராசியில் செல்லான நாழிகை விநாடிகளை ஒரே இனமாக விநாடியாக்கி 30-ஆல் பெருக்கி, அந்த ராசியின் மொத்த விநாடியால் வகுக்க வருவது பாகையும், மீதத்தை 60-ஆல் பெருக்கி முன்போல் வகுத்துவருவது கலையுமாகும். அதற்குமுன் மேடாதியாக எத்தனை ராசிகள் சென்றனவோ அவை இராசியும் ஆகும். இங்ஙனம் அவரவர்கள் இராசி, பாகை-கலை முதலிய ஸ்புடங்களை அறிதல் வேண்டும்.

ஷை உதாரண ஜாதகம் அக்ஷாம்சம் 12-55-ல் ஜனனம். விஷுவச் சாயை அங்குலம்-2 வியங்குலம்-48 இதன் சரகண்டம் 1-வது 28, 2-வது 22, 3-வது 9-விநாடிகளாம் இதனை ஜாதகசாகரத்தில் நன்கு விளக்கப்பட்டிருத்தலின் இங்கு விரிவஞ்சி விளக்கவில்லை என்க,

## இஷ்டஸ்தல இராசிமானம்

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| மேஷம் | நா. | 4-10 | சிங்கம் | நா. | 5-21 | தனுசு | நா. | 5-32 |
| ரிஷபம் | நா. | 4-37 | கன்னி | நா. | 5- 6 | மகரம் | நா. | 5-14 |
| மிதுனம் | நா. | 5-14 | துலாம் | நா. | 5- 6 | கும்பம் | நா. | 4-37 |
| கடகம் | நா. | 5-32 | விருச்சிக | நா. | 5-21 | மீனம் | நா. | 4-10 |

### காலன்

ஷை உதாரண ஜாதகத்தின் ஜனனகால சூரியஸ்புடம் ராசி 3-12-18, இதற்கு ஜாதகசாகரம் 60-வது பக்கத்தின்படி கடகாந்தம் (உதயாற்பரம்) நா. 3-16. (கடகச்செல்லு நா. 2-16) காலன் நா. 2-7 ஆதலால் கடகச் செல்லு நா. 2-16 + 2-7 = 4-23 = இதன் விநாடி 263 × 30 = 7890 ÷ 332 = பாகை-23, மீதம் 254 × 60 = 15240 ÷ 332 = கலை-46. மேஷாதி சென்ற ராசி-3 ஆகவே காலனுடைய சுத்தஸ்புடம் ராசி-3, பாகை-23, கலை-46 என்றறிக.

### அர்த்தபிரகரன்

கடகாந்தம் நா-3-16, சிங்கம் 5-21, கன்னி 5-6-ஆக கன்னி அந்த நா.13-43. அர்த்தபிரகரன் நா. 14-44, துலாத்தில் செல்லு நா.1-1, இதன் விநாடி 61 × 30 = 1830 ÷ 306 = பாகை-5, மீதம் 300 × 60 = 18000 = 306 = கலை-59, சென்ற ராசி-6. ஆகவே அர்த்தபிரகரன் ஸ்புடம் ராசி-6, பாகை-5, கலை-59 என்றறிக.

### எமகண்டன்

கடகாந்தம் நா. 3-16, துலாந்தம் நா. 18-49, எமகண்டன் நா. 18-56, விருச்சிகத்தில் செல்லு விநாடி 7 × 30 = 210 ÷ 321 வகுக்கப் போதாமையால் 210 × 60 = 12600 ÷ 321 = கலை-39, சென்ற ராசி-7 ஆகவே எமகண்டன் ஸ்புடம் ராசி-7, பாகை-0, கலை-39 என்றறிக.

### குளிகன்

கடகாந்தம் 3-16, விருச்சிகாந்தம் 24-10, குளிகன் நா. 27-21, தனுவில் செல்லு நா. 3-11 இதன் விநாடி 191 × 30 = 5730 ÷ 332 = பாகை-17

மீதம் 86 × 60 = 5160 ÷ 332 = கலை-16, சென்ற ராசி-8. ஆகவே குளிக ஸ்புடம் ராசி ரா-8, பாகை-17, கலை-16 என்றறிக. இங்ஙனமே மற்றைய ஜாதகங்களுக்கும் குளிகாதியர் நால்வருடைய இருப்பையும், இராசியாதி ஸ்புடங்களையும் சுலபமாக அறிந்துகொள்ளலாம்.

| உபகிரகம் | ஸ்புடம் ரா. | பா. | க. | நட்சத்திரம் | பாதம் | இராசி |
|---|---|---|---|---|---|---|
| காலன் | 3 | 23 | 46 | ஆயிலியம் | 3 | கடகம் |
| அர்த்தபிரகரன் | 6 | 5 | 59 | சித்திரை | 4 | துலாம் |
| எமகண்டன் | 7 | 0 | 39 | விசாகம் | 4 | விருச்சிகம் |
| குளிகன் | 8 | 17 | 16 | பூராடம் | 2 | தனுசு |

இப்படி கணித்தறிந்து ஏற்படுத்திய சக்கரம் குளிகாதியர் இராசி சக்கரமாகும். பின்பு பாவகஸ்புடத்தைக்கொண்டு குளிகாதியர் இருக்கும் பாவகசக்கரத்தை ஏற்படுத்திப் பலன் சொல்லுதல்வேண்டும். குளிகாதியர் இராசி சக்கரத்தினால் அவர்கள் இருக்கும் இராசி ஆட்சி முதலியவற்றையும், பாவக சக்கரத்தினால் இருக்கும் பாவக பலாபலன்களையும் அறிதல் வேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | குளிகாதியா இராசி சக்கரம் | | லக் கால |
| | | | |
| குளிகன் | எமகண் | அர்த்தபிரக | |

பாவக சக்கரத்திலும் இப்படியே இருப்பார்கள் என்று எண்ணுதல் கூடாது. இந்த உதாரணஜாதகத்தின் பாவகஸ்புடங்களை ஜாதகசாகரம் 84-ஆம் பக்கத்திற் காண்க. அதன்படி 3-வது பாவக ஆரம்பம் ராசி 5-8-20, அந்தியம் ராசி 6-8-32, அர்த்தபிரகரன் ஸ்புடம் ராசி 6-5-59 ஆதலால் இலக்கின ராசி முதலாக 4-வது துலாராசியிலிருந்த அர்த்தபிரகரன் பாவகஸ்புடத்தின்படி 3-வது பாவகத்திலிருக்கின்றார். மற்றும் 4-வது பாவக ஆரம்பம் ராசி 6-8-32, அந்தியம் ராசி 7-8-32, எமகண்டன் ஸ்புடம் ராசி 7-0-39, ஆதலால் இலக்கினராசிமுதல் 5-வது விருச்சிகராசியில் இருந்த எமகண்டன் பாவகஸ்புடத்தின்படி 4-வது பாவகத்தில் இருக்கின்றார். ஆகவே அர்த்தபிரகரன் 4-ல் இருப்பதாகவும், எமகண்டன் 5-ல் இருப்பதாகவும் பலன் சொல்லக்கூடாது. இருவரும் முறையே மூன்றிலும் நான்கிலும் இருப்பதாக பலன் உரைத்தல் வேண்டும். இதன் உண்மையை இந்நூலாசிரியர் "இயம்பு சன்மமனை நவாங்கிச பங்கு ஜந்து அதனில், இனிது உதிக்கில் நவக்கிரகம் இருந்தபடி சரியே" என்ற 57-வது செய்யுளில் விளக்கியிருக்கின்றார். ஆதலின் சோதிட சாஸ்திரத்தை உள்ளபடி அறிய விரும்பும் நேயர்கள் இப்படி சுத்தமாக குளிகாதியர் பாவகச் சக்கரத்தை நிர்ணயஞ் செய்துகொள்வது மிகமிக அவசியமாகும்.

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | குளிகாதியர் | | லக் காலன் |
| | பாவ சக்கரம் | | |
| குளிகன் | | எமகண்டம் | அர்த்த |

இந்நூலாசிரியர் இப்படலத்து ௸ 27-வது செய்யுளில் குளிகனை மட்டுங்கூறி, ஏனைய காலன்-அர்த்தபிரகரன்-எமகண்டன் முதலியோரைக் கூறாதுவிட்டமையின் பிறநூலில இருந்து அவர்களைக் கணித்தறியும் வழி கூறப்பட்டது. அங்ஙனமே உபக்கிரகங்களில் குளிகாதியரில் ஒரு கிரகத்தைக் கூறி தூமாதிகளைக் கூறாது விடுத்தமையாயின் அதனையும் இங்கு வேறு நூலின் ஆதாரத்தினுல் வருவித்து உரைக்கப்படும்.

பருதிபுடத் துடன்நான்கு இராசியும்பன் மூன்று
  பாகைதனை உடன்கூட்டத் தூமன்இடப் புடம்ஆம்
வருதூமன் புடந்தன்னைப் பனிரண்டில களைந்தே
  வந்ததுபா தன்புடம்ஆம் பாதபுடத்து உடனே
பொரும்ஆறு இராசிஉடன் கூடல்பரி வேடப்
  புடம்அதனை மண்டலத்தில் களையஇந்த்ர தநுஆம்
தரும்இந்த்ர தநுப்புடத்தில் பதினேழு பாகைத்
  தான்கூட்ட உபகேதுத் தனபுடம்அது ஆமே.

(இ-ள்) சூரியஸ்புடத்துடன் 4-ராசி 13-பாகை கூட்ட தூமனுடைய ஸ்புடமாகும். தூமன் ஸ்புடத்தை 12-இராசியில் கழிக்க வியதீபாதன ஸ்புடமாகும். வியதீபாதன் ஸ்புடத்தில் 6-இராசிகூட்ட பரிவேடன ஸ்புடமாகும். பரிவேடன் ஸ்புடத்தை 12-ல் கழிக்க இந்திரதனுசு ஸ்புடமாகும். இந்திர தனுசு ஸ்புடத்தில் 17-பாகை கூட்ட தூமகேது ஸ்புடமாகும் எ-று.

நகாலிப்தாதிகே தூமே க்ருதிலிப் தாதி ஹீநகாঃ
கேமௌள கார்யா குரோர் வாக்யா த்ருஷ்டபாதா வஸாநகாঃ
சத்வாரோ ராசயோபாமௌ யுக்த்தாபாகா ஸ்த்ரயோதசா
தூமோநாம மஹாதோஷঃ ஸாவகர்ம விநாசகঃ
தூமோ மண்டலதঃ சுததோ வயதீபாதேத்ர தோஷதঃ
ஸஷட்பேத்ர வ்யதீபாதே பரிவேஷஸ்து தோஷக்ருத்
பரிவேஷச ச்யுதசசக்ரா இந்த்ரசாபச்ச தோஷதঃ
அத்யஷ்ட்யம்சயுதே சாபே கேதுகேடঃ பரோவிஷம்
ஏகராசியுதே கேமௌள ஸூர் ஸ்யாத் பூர்வவத்ஸமঃ
அப்ரகாச க்ரஹாச்சைதே தோஷாঃ பாபக்ரஹாঃ ஸ்ம்ருதாঃ

(பிருகத் பராசரஹோரை)

இந்த சுலோகக் கருத்தை இக்கு சக்கரவடிவமாக காட்டப்படுதலின் அதனுல் நன்கு அறிந்துகொள்ளலாம். தூமாதி ஐவர்கள் ஸ்புடவிஷயமாய்

ஜாதக சிந்தாமணிக்கும் பாராசர ஓரைக்கும் சொற்ப வித்தியாசம் உண்டு. அதாவது: தூமஸ்புடத்தில் 20-கலையும், தூமகேது ஸ்புடத்தில் 20-கலையுமே யன்றி அதிகமில்லை என்றறிக.

| தூமாதியர் | துருவம் ரா. | பா. | க. |
|---|---|---|---|
| தூமன் | 4 | 13 | 20 |
| வியதீபாதன் | 12 | 0 | 0 |
| பரிவேஷன் | 6 | 0 | 0 |
| இந்திரதனுசு | 12 | 0 | 0 |
| தூமகேது | 0 | 16 | 40 |

தூமகேது துவஜன் என்றும் வழங்கப்படுவன்

உதாரணம்:

குளிகோதாரணத்தில் காட்டிய சூரியஸ்புடம் ராசி 3-12-18 இதில் ராசி 4-13-20-ஐக் கூட்ட தூமன் ஸ்புடம் ராசி 7-25-28, இதை 12-ல் கழிக்க வியதீபாதன் ஸ்புடம் ராசி 4-4-32, இதில் 6-ராசி கூட்ட பரிவேடன் ஸ்புடம் ராசி 10-4-32, இதை 12-ல் கழிக்க இந்திரதனுசு ஸ்புடம் ராசி 1-25-28, இதில் 16-பாகை 40-கலை கூட்ட தூமகேது ஸ்புடம் ராசி 2-12-8 என்று அறிக.

## உதாரண நியாசம்

| தூமாதியர் | ஸ்புடம் ரா. | பா. | க. | நக்ஷத்திரம் | பாதம் | இராசி |
|---|---|---|---|---|---|---|
| தூமன் | 7 | 25 | 28 | கேட்டை | 3 | விருச்சிகம் |
| வியதீபாதன் | 4 | 4 | 32 | மகம் | 2 | சிங்கம் |
| பரிவேஷன் | 10 | 4 | 32 | அவிட்டம் | 4 | கும்பம் |
| இந்திரதனுசு | 1 | 25 | 28 | மிருகசீரிடம் | 1 | ரிஷபம் |
| தூமகேது | 2 | 12 | 8 | திருவாதிரை | 2 | மிதுனம் |

இந்த நியாசத்தில் வியதீபாதன் இலக்கின ராசிக்குள் (கடகத்திலிருந்து) 2-வது ஆகிய சிங்கத்தில் இருப்பதனால் இராசியில் சிங்கத்தில் காணப்பட்டாலும் ஷை உதாரண ஜாதகத்தில் இலக்கினபாவக ஆரம்பம் இராசி 3-8-9, அந்தியம் 4-8-9 ஆதலால் இலக்கினபாவகத்திலிருக்கின்றார். அப்படி பரிவேஷன் 8-ல் கும்பத்தில் இருப்பதாகக் காணப்பட்டாலும், 7-ஆம் பாவக ஆரம்பம் இராசி 9-8-9 அந்தியம் 10-8-9 ஆதலால் 7-ஆம் பாவகத்திலிருக்கின்றார் என அறிதல் வேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| | | இந்திர தனுசு | தூம கேது |
| பரிவேடம் | தூமாதியர் இராசி சக்கரம் | | லக் |
| | | | வியதீ பாதன் |
| | தூமன் | | |

| | | | |
|---|---|---|---|
| | | இந்திர தனுசு | தூம கேது |
| | தூமாதியர் பாவக சக்கரம் | | லக் வியதீ பாதன் |
| பரிவேடம் | | | |
| | தூமன் | | |

பாவக சக்கரத்தில் வியதீபாதன் இலக்கின பாவகத்தி லிருப்பதாய் காணப்பட்டாலும், அவன் இருந்த இராசியாதிபன் யாரெனின்? சூரியன் என்றே அறிதல் வேண்டும்.

சோரஃ க்ரூரோ விநயரஹிதஃ வேதசாஸ்த்ரார்த்த ஹீநஃ
நாகிஸ்தூலோ நயநவிக்ருதே நாதி தீர்நாதி புத்ரஃ
நால்பாஹாரீ நபோகி பஹுவிஷய பரோநாதி ஜீவி
சூரோ ரோவித்வாந் நித்யகோபீ கலஹக்ருதநிசம்
மந்தபுத்ரே விலக்நே. (பலதீபிகை) (8)

(இ-ள்) குளிகன் இலக்கினத்திலிருந்தால் அந்த ஜாதகன் களவு செய்பவனும், குரூர சுபாவமுள்ளவனும், வணக்கமில்லாதவனும், வேதசாஸ்திரார்த்த உணர்ச்சியில்லாதவனும், மெலிந்த தேகமுடையவனும், நேத்திர விகார முடையவனும், மூடனும், அதிக சந்ததியில்லாதவனும், அதிக போஜனம் செய்பவனும், போகம் (செல்வம்) இல்லாதவனும், விஷயங்களை அறிவதில் பிரியமுடையவனும், ஜீவன் உபாயமில்லாதவனும், சூரம்-தனம்-வித்வத்துவம் இல்லாதவனும், சதாகோபமும் கலகமும் உடையவனும் ஆவான் எ-று.

நசாதுவாக்யம் கலஹாயமாநோ நவித்ததாந்யம் பரதேசவாஸீ
நவாங்க ஸூக்ஷ்மார்த்த விவாதவாக்யோ நிசேசபௌத்ரே
தநராசி ஸம்ஸ்தே. (9)

(இ-ள்) குளிகன் இரண்டிலிருந்தால் அச்சாதகன் சாமர்த்தியமாகப் பேச அறியாதவனும், கலகம் செய்பவனும், தனதான்ய சம்பத்தில்லாத வனும், அன்னியதேசத்தில் வசிப்பவனும், சொல்லிலும் வழக்கிலும் சூட்சுமமான அர்த்தத்தை அறியாதவனுமாவான் எ-று.

விரஹபங்ய மதாதி குணைர்யுதஃ
ப்ரசுரகோப தநார்ஜந ஸம்ப்ரமஃ
விகதசோக விநாசித ஸோதரோ
குளிகநாமநி ஸோதர ஸம்ஸ்திதே. (10)

(இ-ள்) குளிகன் மூன்றில் இருந்தால் அச்சாதகன் நான் எனது என்னும் அகங்காரம் மதம் இவைகளுடையவனும், கோபத்தினால் பொருள் சம்பாதிக்கப்பட்டவனும், சமர்த்தனும், சோகமில்லாதவனும், சகோதர நாசமுடையவனும் ஆவான் எ-று.

ஸஹோதரா சகிலஸுதேஸ்யாத் பந்துயா நார்த்தஹீநச்
சலமதி ரவபுத்திர நால்பஜீவீ நபுத்ரே
பஹுரிபு கணஹந்தா பூதவித்யா விநோதீ
ரிபுகத குளிகே ஸச்ச்ரேஷ்ட புத்ரஸ்ஸுரஃ

(இ-ள்) குளிகன் நான்கில் இருந்தால் அச்சாதகன் பந்துக்கள் சேர்க்கை, வாகனம், தனசம்பத்துகளுடையவனுவன். ஐந்தில் இருந்தால் அச்சாதகன் சஞ்சலமான மனமும், புத்தியீனமும், அற்பமான தொழிற் செய்கையுமுடையவனுவன். ஆறில் இருந்தால் சத்துருகூட்டங்களை நாசப் படுத்தல், ஜாலவித்தை செய்தல், சூரத்துவம், சிரேஷ்டமான புத்திரர் களைப் பெறுதல் ஆகிய இவைகளையுடையவன் எ-று.

களத்ரஸம்ஸ்தே குளிகே கலஹீ பஹுபார்யகஃ
லோகத்வேஷி க்ருதக்நச்ச ஸ்வல்பக்ஞஸ் ஸ்வல்பகோபநஃ

(இ-ள்) குளிகன் ஏழில் இருந்தால் அச்சாதகன் கலகம் செய்வதில் பிரியமுடையவனும், அநேகம் பெண்களுக்குப் பதியாகவும், சர்வஜன விரோதியாயும், சொற்பம் செய்நன்றி அறிந்தவனும், சொற்ப முன் கோபியாயும் இருப்பான் எ-று.

விகலநயந வக்த்ரோ ஹ்ரஸ்வதேஹோ அஷ்டமஸ்தே
குருஸுத வியுதோபூ தர்மஸமஸ்தே விஷாக்யே
நசுபபலத கர்மாகர்ம ஸம்ஸ்தே விதாநஸ்ஸுக
ஸுத மதிதேஜாஃ காந்திமாந் லாபஸம்ஸ்தே
விஷயரஹிதோ தீநோ பஹுவ்ய யஸ்யாத்
வ்யயேகுளிக ஸம்ஸ்தே குளிகத் ரிகோணபேவா
ஜந்ம ப்ரயாந் நவாம்சேவா.

(இ-ள்) குளிகன் எட்டில் இருந்தால் அச்சாதகன் விகாரமான நேத் திரமும் முகமுமுடையவன், வடிவிற் குள்ளனுயிருப்பான். ஒன்பதில் இருந் தால் ஆசாரியன் சந்ததி இவைகளில்லாதவனுவன். பத்தில் இருந்தால் சுபத்தைக்கொடுக்கும் புண்ணியகர்மங்களைச் செய்யாதவன் மானத்தின்மீது திருஷ்டியில்லாதவனுவன். பதினென்றில் இருந்தால் சுகமான புத்திர ரையும், பெருத்த கீர்த்தியையும், பிரகாசமான தேககாந்தியையும் உடை யவனுவான். பன்னிரண்டில் இருந்தால் விஷயங்களில் பிரியமில்லாதிருப் பான், தீனனுவன், அதிக செலவு செய்பவன் என்க. குளிகன் இருக்கும் இராசிக்குத் திரிகோண ராசியிலாவது, அவன் இருக்கும் அம்சத்திலாவது மக்கள் ஜனனமாவார்கள் எ-று.

ரவியுக்தே பித்ருஹந்தா மாத்ருக்லேசீ நிசாபஸம்யுக்தே
ப்ராத்ரு வியோகஸ் ஸகுஜேபுதயுக்தே மந்தஜேசஸோந்மாதி
குருயுக்தே பாஷண்டீ சுக்ரயுக்தே நீசகாமிநீஸங்கமஃ
சநியுக்தேச சுபுத்ரோ குஷ்டவ்யாதீ யுதச்சஸோல்பாயுஃ
விஷரோகீ ராஹுயுதே வஹ்நிபீடிதோமாந்தெள.

(இ-ள்) குளிகன் சூரியனுடன் கூடில் தகப்பனுக்கும், சந்திரனுடன் கூடில் தாயாருக்கும், செவ்வாயுடன்கூடில் சகோதரத்திற்கும் நாசமுண்டாம். புதனேடுகூடில் உன்மத்தம் (மயக்கம்) பிடித்தவனுவன். (அம்மானுக்கு நாசமுண்டாம்.) குருவுடன்கூடில் பாஷாண்டியாவன் (சந்ததிக்குத் தோஷமுண்டாம். சுக்கிரனுடன்கூடில் (களத்திரதோஷமுண்டாம்) நீசஸ்த்ரீ சேர்க்கையுண்டு, சனியோடிருப்பின் குஷ்டரோயுண்டு; அல்லது அற்பாயுளுண்டு. இராகுவுடனிருப்பின் விஷரோயுள்ளவன். கேதுவுடன் இருப்பின் அக்கினியில் துன்பப்படுவன் எ-று.

குளிகஸ்யது ஸம்யோகே தோஷாஸர்வத்ர நிர்திசேத்
யமகண்டக ஸம்யோகே ஸர்வத்ரக கதயேச்சுபம்.

(இ-ள்) குளிகன் எந்தக் கிரகசம்பந்தம்பெற்றாலும் அக்கிரக காரகங்கள் யாவற்றிற்கும் தோஷத்தை உண்டாக்குவான். எமகண்டன் அப்படி கூடினுல் நன்மையைத் தருவான் எ-று.

தோஷப்ரதாநே குளிகோபலீயாந்
சுபப்ரதாநே யமண்டகஸ்யாத்
அந்யேகஸர்வே வ்யஸநப்ரதாநே
மாந்த்யுக்த வீர்யாச் சபலார்விதாஸ்யுः

(இ-ள்) தோஷத்தை உண்டாக்கும் விஷயத்தில் குளிகனும், சுபத்தையுண்டாக்கும் விஷயத்தில் எமகண்டனும் பலமுடையவர்கள். விசனத்தைக் கொடுக்கும் விஷயத்தில் அர்த்தபிரகரன் காலன் ஆகிய இவர்கள் குளிகனில் பாதி பலமுடையவர்களாவர் எ-று.

தூமஸஞ்சார மூஷ்ணஸ்யாத் அக்நிபீதிர் மநோவ்யதா
வ்யதீபாதே ம்ருகபயம் சதுஷ்பாந் மரணந்துவா
பரிவேஷே ஜலேபீரு ஜலரோகஞ் சபந்தநம்
இந்த்ரசாபே சிலாகாதः க்ஷதம் சஸ்த்ரைர்விச்யுதிः
கேதௌபதந காதாத்யம் கார்யநாசோ சநேர்பயம்
யேநயா பாவஸஹிதஸ் தத்தசாயாம் பலம்வதேத்.

(இ-ள்) தூமனிருந்த இராசியாதிபன் தசையில் அதிக உஷ்ணம், அக்கினிபயம், மனவியாகூலமுண்டாம். வியதீபாதன் இருந்த இராசியாதிபன் தசையில் மிருகங்களால் பயம், நாற்கால் ஜீவன்களால்மரணமுண்டாம். பரிவேடன் இருந்த இராசியாதிபன் தசையில் ஜலபயம், ஜலசம்பந்தவியாதி, சிறைவாசமுண்டாம். இந்திரதனுசு இருந்த இராசியாதிபன் தசையில் கற்களால் அடியும், ஆயுதகாயமும், சத்துருநாசமும் உண்டாம் தூமகேது இருந்த இராசியாதிபன் தசையில் கீழேதவறிவிழுதலினுல் காயம் படுதல், உறுப்புக்கள் முறியப்படுதல், இடியால் பயமுறுதல் காரியநாசத்தை அடைதல் இவைகளுண்டாம். இராகு கேதுக்களைப்போல இவர்களும் அப்பிரகாசக் கிரகங்களாய், வீடற்றவர்களாய் ஜோதிர்மண்டலத்தைச் சுற்றுதலினுல் இவர்கள் இருந்த ராசியாதிபதியினுடையவும், இவர்களுடன் சம்பந்தப்பட்டவர்களுடையவும் தசாபுக்திகாலங்களில் தத்தம் பலன்களைத் தரக்கூடியவர்களாவர் எ-று.

*அல்பாயுః குமுகீ பராக்ரமகுணீ சோகீச*
*நஷ்டாத்மஜః ப்ரத்யர்த்தி கூடபிதோவிசீர்ண*
*மதனோ தார்மார்க ம்ருத்யுங்கதః*
*தர்மாதி ப்ரதிகூல தாடருசிர் லாபாங்விதோ*
*தோஷவாந் இத்யேவ க்ரசோவிலக்ந பவநாத்*
*கேதோః பலம் கீர்த்தயேத்.*

(இ-ள்) *தூமகேது இலக்கினத்திலிருந்தால் அற்பாயுள், 2-ல் முக விகாரம், 3-ல் வெற்றிபராக்கிரமம், 4-ல் மணக்கவலே, 5-ல் சந்ததிநாசம், 6-ல் சத்துருக்களால் துன்பம், 7-ல் காமவிருப்பம் இல்லாமை, 8-ல் அகால மிருத்தியு, 9-ல் தர்மவிரோதம், 10-ல் அலேச்சல், 11-ல் ஆதாயம், 12-ல் பல விஷநஷ்டம் தோஷமுமுண்டாம் எ-று.*

*குளிகபவநநாதே கேந்த்ரகேவா த்ரிகோணே*
*பகுவித தநதாந்யாந்யர்த்த ஸம்பத் ப்ரஸூதிः*

(இ-ள்) *குளிகன் இருக்கும் இராசிநாதன் கேந்திரதிரிகோணங்களில் இருந்தால் அச்சாதகன் பெருதத சம்பத்தையும், தனதான்ய விருத்தியை யும், சந்தான க்ஷேமத்தையும உடையவனுக வாழ்வான் என்பதாம் எ-று.*

*பாராசரஹோரைக்கும், பலதீபிகைக்கும் உபகிரக பலாபலன்களில் மதபேதமுண்டு. சோதிடவித்வான்கள் சுருதி யுக்தி அநுபவவாயிலாக இம்மதபேதத்தை ஆலோசித்துப் பலன் கூறுதல் வேண்டும்.* (40)

**பார்எலாம் சசிகதிரோன் இருவர்க்கும் ஆகும்**
**பனிவரைகே கயத்தின்நடு பாம்புசனி நாடாம்**
**ஏர்உலவும் கேகயம்தொட்டு எழில்விந்தம் மட்டும்**
**இந்துசுதன் பூமிஎனறே இயம்புவர்நல் லோர்கள்**
**கார்செறியும் விந்தம்முதல கௌதமைமட்டு ஆகக்**
**கனகனுக்குஆம் கிருஷ்ணைவரைக் காப்பியன் நாடுஆமே**
**சீர்உலவு கிருஷ்ணைமுதல் இலங்கைவரை அந்தச்**
**செவ்வரியின் தேயம்என்றே செப்புவர்நல் லோரே.**

(இ-ள்) *இந்நிலவுலகம் முற்றும் சூரியசந்திரர்கள் ஆகிய இருவருடைய தாகும். இமயமலேமுதல கேகய நாடுவரைக்கும் உள்ள மத்தியதேசஙகள் சனி இராகு கேதுக்களுடையதாகும். கேகய நாடுமுதல் விந்தியமலே வரைக்கும் உள்ள மத்தியதேசஙகள் புதனுடையதாகும. விந்தியமலேமுதல் கௌதமி நதிவரைக்கும் உள்ள மத்தியதேசஙகள் குருவுடையதாகும், கௌதமிநதிமுதல கிருஷ்ணுநதிவரைக்கும் உள்ள மத்தியதேசங்கள் சுக்கிர னுடையதாகும. கிருஷ்ணுநதிமுதல் இலங்கைவரைக்கும் உள்ள மத்திய தேசங்கள் செவ்வாயுடையதாகும் எ-று.*

(வி-ரை) *லங்காதி க்ருஷ்ண ஸரிதந்தமாரः*
*வீதஸ்ததோகௌ தமிகாநதயூயः*
*விந்தயாந்த மார்யஸ் ஸுரமிம்ந காந்தம்*
*புதச்சநிஸ்யாத்து ஹிமாசலாந்தः* (ஜாதகபாரிஜாதம்)

(இ-ள்) இமயமலைமுதல் கங்காநதிவரை சனிக்கும், கங்காநதிமுதல் விந்தியமலைவரை புதனுக்கும், விந்தியமலைமுதல் கோதாவரிவரைக்கும் குருவுக்கும், கோதாவரிமுதல் கிருஷ்ணைவரைக்கும் சுக்கிரனுக்கும், கிருஷ்ணைமுதல் இலங்கைவரை செவ்வாய்க்கும் உரியதேசங்களாகும் எ-று.

இமயமலை:—இது அஷ்டகுலபர்வதங்களுள் ஒன்று. இதில் கங்கை முதலிய மஹாநதிகள் உற்பத்தியாகின்றன. தென்கடலில் இருந்து 6-ஆயிரம் யோசனையிலுள்ளது. இதன் விஸ்தீரணம் 2-ஆயிரம்யோசனை தூரம் ஆகும்.

கேகயநாடு:—சிபிசக்கிரவர்த்தியின் புத்திரனாகிய கேகயன் ஆண்டதனால் அந்நாட்டிற்குப் பெயர் கேகயநாடு என்று வழங்கப்பட்டதாகும். இதன் இராஜதானி கிரிவிரசம். மகததேசத்திலும் கிரிவிரசம் என்று ஒரு பட்டணமுண்டு. கேகயநாடு வியாசநதிக்கு வாயுதிக்கில் உள்ளது. இந்த வியாசநதி இமயமலையின் தென்பால் உதித்து சதத்ருநதியில் கலப்பது.

விந்தியமலை:—இது தெற்கையும் வடக்கையும் பிரிக்கும் எல்லையாக உடைய மலை. அகத்தியரால் பாதலத்தில் அழுத்தப்பட்டமலை. தண்டகவனத்திற்கு வடக்கில் உள்ளமலை. தண்டகவனம் விந்தியமுதல் கன்னியாகுமரி பரியந்தமாம்.

கௌதமி:—இதுவே கோதாவரிநதி என வழங்கப்படுவதாகும். இது மேற்குத் தொடர்ச்சிமலை என்னும் அத்தகிரியில் தோன்றிச் சமுத்திர சங்கமம் ஆகின்றது.

இலங்கை:—இது தென்சமுத்திரத்திலே திரிகூடபர்வத சிகரத்திலே விசுவகர்மாவினால் நியமிக்கப்பட்ட பட்டணமும் அதனைச்சேர்ந்த நாடுமாம். இது எழுநூறுகாதம் விஸ்தீரணமுடையது. சூரிய சித்தாந்தத்திலே சொல்லப்பட்ட மேகலா நகரங்கள் நான்கனுள் ஒன்று. சோதிடசாஸ்திரத்திற்கு நாடிஸ்தானமாக இருந்தது. இப்போதுள்ள இலங்கை (க்வேட்டர்)-க்கு வடக்கே வெகுதூரத்திலிருப்பதாலும், ஆதி இலங்காபுரி மேகலாரேகையிலிருந்தமையாலும், கடல்வாய்ப்பட்டு அழிந்த இலங்கையினது ஒரு சிறு கூறே தற்காலத்துள்ளதாகும்.

மேலே கூறப்பட்ட மலை நதிகளின் இருப்பைக்கொண்டு அவைகளின் நடுவிலுள்ள தேசங்கள் இனனின்ன கிரகங்களுக்கு உரியதென்று அறிதல்வேண்டும். இதன் விரிவை பூகோளபடத்தினால் நன்கு நிச்சயித்து அறிதல்வேண்டும். (41)

## மூலத்திரிகோணம்

குலவிய மூலத் திரிகோணம் தானே
கூறிடில் சிங்கமே ரவிக்குஆம்
நிலவினுக்கு இடபம் ஆடுசேய்க்கு என்ப
நிகழ்த்திடுங் கன்னியே புதற்குஆம்
விலகிய வில்லே பொன்னினுக்கு ஆகும்
வெள்ளிக்குக் கோல்என விளம்பும்
நலம்அறு சனிக்கே மகரமது ஆகும்
நறுமணங் கமழ்குழல் மாதே.

(இ-ள்) கிரகங்களுடைய மூலத்திரிகோணத்தை சொல்லுங்கால் சூரியனுக்குச் சிங்கமும், சந்திரனுக்கு ரிஷபமும், செவ்வாய்க்கு மேஷமும், புதனுக்குக் கன்னியும், குருவுக்கு தனுசும், சுக்கிரனுக்குத் துலாமும், சனிக்கு மகரமும் ஆகும் எ-று.

(வி-ரை) விம்சதிரம்சாஃ வஸிம்ஹே கோணம்
அபரே ஸ்வபவநம் அர்கஸ்ய
உச்சம் பாகத்ரிதயம் வ்ருஷம் இந்தோஃ
ஸ்யாத் த்ரிகோணம் அபரே அம்சாஃ
த்வாதச பாகரமேஷே த்ரிகோணம்
அபரே ஸ்வபேது பௌமஸ்ய
உச்சபலம் கர்யாயாம் புதஸ்ய
தித்யம்சகைஃ ஸதா சிந்த்யம்
பாதஸ் த்ரிகோண ஜாதே
பஞ்சபிர் அம்சைஃ ஸ்வராசிஜம் பரதஃ
தசபிர் பாகைர் ஜீவத்ரிகோண
பலம் ஸ்வபம் பரம் சாபே
சுக்ரஸ்யது இதயோ அம்சாஸ்
த்ரிகோணம் அபரே துலேஸ்வராசிச்ச
கும்பே த்ரிகோண நிஜபே ς x ı[j]
ரவிஜஸ்ய ரஹயதா வஸிம்ஹே. (பராசர ஓரை)

(இ-ள்) சூரியனுக்கு சிங்கத்தில் முதல் 20-பாகை மூலத்திரிகோணம், பின் 10-பாகை ஆட்சியும், சந்திரனுக்கு ரிஷபத்தில் முன் 3-பாகை உச்சம், பின் 27-பாகை மூலத்திரிகோணமும், செவ்வாய்க்கு மேஷத்தில் 12-பாகை மூலத்திரிகோணம், பின் 18-பாகை ஆட்சியும், புதனுக்கு கன்னியில் முன் 15-பாகை உச்சம், பின் 5-பாகை மூலத்திரிகோணம், பின் 10-பாகை ஆட்சியும், குருவுக்கு தனுவில் 10-பாகை மூலத்திரிகோணம், பின் 20-பாகை ஆட்சியும், சுக்கிரனுக்குத் துலாத்தில் 15-பாகைமூலத்திரிகோணம், பின் 15-பாகை ஆட்சியும், சனிக்கு கும்பத்தில் 20-பாகை மூலத்திரி கோணம், பின் 10-பாகை ஆட்சியு ாகும். இதுவிஷயம் சாராவளிக்கும் ஒத்துளது. பிருகஜ்ஜாதகத்திற்கு சொற்பம் மாறுபடுகின்றது. அதாவது செவ்வாய்க்கு மேடத்தில் முன் 18-பாகை மூலத்திரிகோணமும், பின் 12-பாகை ஆட்சியும், குருவுக்கு தனுசில் முன் 13-பாகை மூலத்திரிகோண மும், பின் 17-பாகை ஆட்சியும், சுக்கிரனுக்குத் துலாத்தில் முன் 10-பாகை மூலத்திரிகோணமும், பின் 20-பாகை ஆட்சியும் என்பதாகும். (42)

## ஆண் பெண் அறியும் வகை

பாரில் மந்தன் பரிந்துஒற்றை ராசியில்
சேர நிற்கில்ஆண் பிள்ளைசெ னித்திடும்
சீர் உலாவிய செவ்வாய் இரட்டையில்
பேர் அவாஒடு நிற்கில்பெண் பிள்ளையே.

(இ-ள்) இந்தில உலகத்தில் சனி மேஷம் மிதுனம் சிங்கம் துலாம் தனுசு கும்பம் ஆகிய ஒற்றை இராசிகளில் ஒன்றில் இருந்தால் ஆண்

குழந்தை ஜனனமும், செவ்வாய் ரிஷபம் கடகம் கன்னி விருச்சிகம் மகரம் மீனம் ஆகிய இரட்டை இராசிகளில் ஒன்றில் இருந்தால் பெண்குழந்தை ஜனனமும் ஆகும் எ-று. (48)

பிள்ளைமதி வெள்ளிசன்மத்து இருக்கில் அந்தவீடு
  பெண்ஆகும் ராசிஎனில் பெண்ஆகப் பிறக்கும்
தெள்ளும்ஒற்றை ராசிபின்னும் இரட்டைராசி முன்னும்
  திங்கள்ஓரை இனில்பெண்ணே செனித்திடுமே ரெட்டை
உள்ளரா சிகள்ஒற்றை அங்கிசம்பெண் ஆகும்
  உயர்பெண்ஆம் கிரகங்கள் உறுசன்மத்து இருக்க
வெள்ளிமுதல் பெண்கிரகம் பார்க்கில்பெண் பிறக்கும்
  மேல்இரவி குஜன்பொன்னேன் இரட்டைஉறின் மின்னும்.

(இ-ள்) சந்திரன் சுக்கிரன் இலக்கினத்திலிருக்க அது பெண்ராசி யாகில் பெண்குழந்தை பிறக்கும். ஒற்றித்த இராசியின் பிற்கூறும், இரட்டித்த இராசியின முற்கூறும் ஆகிய சந்திரன் ஓரையில் பெண்குழந்தை பிறக்கும். இரட்டித்த இராசிகளில் ஒற்றித்த நவாமிசங்களில் ஜனனமானால் பெண்குழந்தை பிறக்கும் (அதாவது ஆண்ராசிகளில் பெண்ராசி நவாமிசம் ஜனனமானால் ஆண்குழந்தையும் பிறக்கும்) பெண்கிரகங்களாகிய சந்திரன் சுக்கிரன் ராகு இவர்களிலொருவர் இலக்கினத்தில் இருந்தாலும், அல்லது பார்த்தாலும் பெண்குழந்தை பிறக்கும். சூரியன்-செவ்வாய்-குரு ஆகிய புருடகிரகங்கள் இரட்டை ராசிகளாகி ஸ்திரீராசிகளில் இருந்தால் பெண் குழந்தை பிறக்கும் எ-று.

(வி-ரை) புமாம்ஸோர் காரகுரவச் சுக்ரேந்து புஜகாஸ்த்ரியঃ
மந்தக்ஞகேதவঃ க்லீபா க்ரஹபேதா ப்ரகீர்த்திதাঃ (ஞானப்பிரதீபிகை)

(இ-ள்) சூரியன்-செவ்வாய்-குரு ஆகிய மூவர்களும் ஆண் கிரகங்கள், சந்திரன்-சுக்கிரன்-ராகு ஆகிய மூவர்களும் பெண் கிரகங்கள், புதன்-சனி-கேது ஆகிய மூவர்களும் அலிகிரகங்களாம் எ-று.

மெய்த்த வீமேசுரர் விதிஆரல் பொன்
  வீறும்ஆண் அரவு ஒண்மதி வெள்ளி பெண்
தத்து சன்கொடி மாலஅலி தாரமான். (வீமேசுரம்)

(இ-ள்) சூரியன்-செவ்வாய் - குரு ஆண், சந்திரன்-சுக்கிரன்-ராகு பெண், புதன்-சனி-கேது அலி எ-று.

இந்த 81-வது செய்யுளில் 4-வது அடியில் "மேல் இரவி-குஜன்-புந்தி" என்றிருப்பது அசசேற்றினால் நேர்ந்த பிழையாகும். யாதுபற்றி எனின்? கூறுதும். புருஷ கிரகஙகள் ஸ்திரீ ராசிகளில இருந்தால் பெண்குழந்தை பிறக்குமென்பது ஆசிரியர் கருத்தேயன்றி வேறில்லை ஆதலால் என்க. ஆகவே புருஷகிரகஙகளில் இருவரைக்கூறி அங்கு அலிகிரகம் ஒன்றைக் கூறவேண்டிய அவசியமில்லை யாதலால் புதன் என்பதை நீக்கி "பொன் னேன்" என்று கூட்டி பொருள் உரைக்கப்பட்டதென்க. புருஷகிரகங்கள் ஸ்திரீராசியில் இருக்கின் பெண்ஜனனம் எனவே, ஸ்திரீ கிரகங்களாகிய

சந்திரன்-சுக்கிரன்-ராகு இவர்களில் ஒருவர் ஆண் ராசிகளில் இருக்கில் ஆண் ஜனனம் ஆகும் என்று அறிக.

| | |
|---|---|
| புருஷகிரகங்கள் புருஷராசியில் இருக்க | ஆண்ஜனனம் |
| புருஷகிரகங்கள் ஸ்திரீராசியில் இருக்க | பெண்ஜனனம் |
| ஸ்திரீகிரகங்கள் புருஷராசியில் இருக்க | ஆண்ஜனனம் |
| ஸ்திரீகிரகங்கள் ஸ்திரீராசியில் இருக்க | பெண்ஜனனம் அறிக. |

புருஷகிரகங்கள் எனவே எல்லா புருஷகிரகங்களும் இருத்தல் கருத்தல்ல. ஏதேனும் ஒருகிரகம் பலத்துடன் இருத்தல் என்றறிக. பெண் கிரகங்களையும் இவ்விதமே அறிதல் வேண்டும். (44)

மின்னுகலை நிறைந்தமதி மேயில்ஆண் பிறக்கும்
விரவும்ஒற்றை முன்பாதி இரட்டையின் பிற்பாதி
என்னில்ஆண் பிள்ளைஒற்றை ராசிதனில் இரட்டை
ஏற்றநவாங் கிசஞ்சனனம் என்றிடில்ஆம் ஆணே
மன்னவன் சூரியன்ஒற்றை ராசிஉறில் ஆணும்
வரும்புருட ராசிதனில் புருஷக்கோள் மருவ
பின்னும்அது சன்மமதாய்ப் புருஷக்கோள் நோக்கப்
பிறந்திடுவது ஆண்பிள்ளை எனப்பேசல் ஆமே.

(இ-ள்) சந்திரன் முதலிய பெண்கிரகங்கள் ஆண்ராசிகளில் இருக்க ஆண்குழந்தை பிறக்கும். ஒற்றித்த ராசியின் முன்பாதியும், இரட்டித்த ராசியின் பின்பாதியும் ஆகிய சூரிய ஓரையில் ஆண்குழந்தை பிறக்கும். ஒற்றித்த ராசிகளில் இரட்டித்த நவாம்சத்தில் ஜனித்தால் ஆண்குழந்தை பிறக்கும். சூரியன் முதலாகிய ஆண்கிரகங்கள் ஆண்ராசியிலிருக்கில் ஆண் குழந்தை பிறக்கும். புருஷராசியில் புருஷகிரகங்கள் இருந்தாலும் அல்லது புருஷகிரகங்கள் பார்த்தாலும், அது ஜனன லக்கினமானால் ஆண்குழந்தை பிறக்கும் எ-று.

(வி-ரை) 32-வது கவியில் "பிள்ளை மதி" என்பதற்குத் தேய்பிறைச் சந்திரன் எனவும், 33-வது கவியில் "மின்னுகலை நிறைந்தமதி" என்பதற்குப் பூரணச்சந்திரன் என்றும் மயங்கிப் பொருள் கூறுவாருமுளர். அங்ஙனம் கூறுதல் எட்டுணையும் பொருந்தாது, அவை அந்தாதி நயக்கருதி அடைடாகக் கூறியதேயன்றி வேறில்லை என்றறிக. (45)

பேசும்பெண் புருஷக்கோள் இரண்டும் சன்மம்
பெற்றிருக்கத் தானபலன் பிரித்துப் பார்த்து
நேசம்உடன் உறைகிரகப் பலனும் பார்த்து
நிச்சயித்து ஆண்பெண்என்றே நிகழ்த்தல் வேண்டும்
தேசுபெறு புருஷலக் கினத்தால் ஆணே
சேயிழையில் பெண்ஆகும் திங்கள் வெய்யோன்
பாசம்உடன் பெண்வீட்டில் இருக்கில் பெண்ஆம்
பார்த்திபன்ஆம் புருஷமனை பற்றி நிற்கில்.

(இ-ள்) பெண்கிரகம் ஆண்கிரகம் இரண்டும் இலக்கினத்திலிருந்தால் அவ்விருவருள் ஆண்கிரகம் வலிதுபெற்று, இலக்கினம் ஆண் ராசியா

யிருக்கின் ஆண்குழந்தை என்றும், பெண்கிரகம் வலிதுபெற்று இலக்கினம் பெண்ராசியாயிருக்கின் பெண்குழந்தை என்றும் சொல்லுதல் வேண்டும், பெண் கிரகங்களில் முதலாகிய சந்திரனும், ஆண்கிரகங்களில் முதலாகிய சூரியனும், பெண்ராசிகளில் இருக்கில் பெண்குழந்தையும், ஆண்ராசிகளில் இருக்கில் ஆண்குழந்தையும் பிறக்கும் எ-று.

(வி-ரை) இக்கவியின் முதல் மூன்று அடியும் ஒரு தொடர்பாக இருந்து பொருள் தருவதாயிருப்ப, ஒரு சிலர் இரண்டு அடிகளுக்கும் ஒன்றுகப் பொருள் கூறி மூன்றாவது அடிக்குத் தனியே மயங்கிப் பொருள் கூறுவர். அது பொருந்தாதென்பதை விவேகிகள் நன்கு அறிவர்.

ஜர்கேஷ் புருஷாம்சகேஷு பலிபிர் லக்நார்க குர்விந்துபிஃ
பும்ஜந்ம ப்ரவதேத் ஸமாம்சக கதைர்யுக்மேஷு தைர்யோஷிதஃ

(இ-ள்) சந்திரன்-குரு-சூரியன்-இலக்கினம் இவற்றுள் ஒன்று பலமுடையதாய், ஆண் ராசியிலோ அல்லது ஆண்ராசி நவாமிசத்திலோ இருந்தால் ஆண்குழந்தை பிறக்கும், ஸ்திரீராசியிலோ அல்லது ஸ்திரீராசி நவாமிசத்திலோ இருந்தால் பெண்குழந்தை பிறக்கும் எ-று.

இங்ஙனம் கூறியது யாதுபற்றிஎனின்? "புமாந்பாநுர் வதுச்சந்த்ரஃ கசக்ரம் ப்ராணவாந் ரவிஃ, பூசக்ர தேஹச் சந்த்ரஸ்யாத் இதிசாஸ்த்ரஸ்ய நிச்சயஃ" எனவரும் ஞானப்பிரதீபிகை வசனத்தினுல் ஆகாயம்-புருஷன்-பிராணன் ஆகிய இம்மூன்றுக்கும் சூரியனும், பூமி-ஸ்திரீ-சரீரம் ஆகிய இம்மூன்றிற்கும் சந்திரனும் காரகர்களாதலினுல், பிராணகாரகனுகிய சூரியனையும், தேககாரகத்துவமுடைய இலக்கினம் (பூமி) சந்திரன் இவைகளையும், மற்றும் "ஜீவயதி தேவாந் இதி ஜீவஃ" என்ற குருபாலபிரபோதிகையின் வசனத்தினுலும் "ஸர்வஜீவகிலஹஃ ப்ராணே" என்ற வசனத்தினுலும் ஜீவகாரத்துவமுடைய குருவையும்கொண்டு தேகத்தோடுகூடிய ஜீவர்களின் ஜனனம் ஆண்பெண் என்பதை அறிதல் வேண்டுமென்பது பற்றி என்றறிக.

முன் சொல்லப்பட்ட இலக்கின கிரகங்கள் பெண்ராசிகளில் சிலதும், ஆண்ராசிகளில் சிலதும் இருந்தால், அதிகமாக எந்த ராசிகளில் இருக்குமோ அந்த ராசிகளைக்கொண்டு ஆண்பெண் ஜனனநிர்ணயஞ்செய்ய வேண்டியது சமவிஷம் (பெண் ஆண்) இராசிகளில் சமமாய் இருந்தபோது பலாதிக்கத்தைக்கொண்டு ஆண்பெண் ஜனனத்தைச் சொல்லவேண்டியது.

குர்வர்கௌ விஷமேநாம் சசிஸிதௌ வக்ரச்ச
யுக்மே ஸ்த்ரீயம் த்வ்யங்கஸ்தாஃ புதவீக்ஷணச்ச
யமளௌ குர்வந்தி பக்ஷேஸ்வகே.

(இ-ள்) பலவந்தர்களான குரு சூரியர்கள் ஆண்ராசிகளில் (எந்த நவாம்சத்திலேனும்) இருந்தால் ஆண்குழந்தை பிறக்கும். சந்திர சுக்கிரர்கள் செவ்வாய் இவர்கள் பலவந்தர்களாய் பெண்ராசிகளில் (எந்த நவாம்சத்திலேனும்) இருந்தால் பெண்குழந்தை பிறக்கும். இங்கு சொல்லப்பட்ட கிரகங்களே த்விஸ்வபாவ ராசிகளிலிருந்து, புதனுல் பார்க்கப்பட்டால் தன் பட்சத்தில்; அதாவது புருஷ ஸ்திரீ நவாம்சங்களில் எந்த நவாம்சங்களில் அவர்கள் இருக்கின்ருர்களோ அந்த பட்சத்தில் ஆண்

குழந்தையாகச் செய்கின்றார்கள். அதாவது; மிதுன-கன்னி-தனுர்-மீனம் இந்த நான்கும் த்விஸ்வபாவ (உபய) ராசிகள். இவற்றுள் மிதுனம் தனுசு ஆண் ராசிகள் ஆதலால் மிதுன தனுர் நவாம்சங்களில் குரு சூரியர்கள் புத வீட்சணத்துடன் இருந்தால் ஆண் குழந்தைப் பிறக்கும். கன்னி மீனம் பெண்ராசிகள் ஆதலால் இந்த கன்னி மீன நவாம்சங்களில் சுக்கிர சந்திர அங்காரகர்கள் புதனால் பார்க்கப்பட்டிருந்தால் பெண் குழந்தை பிறக்கும். இங்கு உபயராசி என்று கூறி நவாம்சத்தைக் கூறவில்லை.

ஆனால் லகுஜாதகத்தில்,

பலிநௌ விஷமேர்க குருநரம் ஸ்த்ரியம்
ஸமக்ருஹே குஜேந்து விதாஃ,
யமளௌ த்விஸ்வ சரீராம் சேவ்ஷவிந்துஜ
த்ருஷ்டௌஸ் ஸ்வபக்ஷ ஸமம்.

என்றுகூறப்பட்டிருத்தலின் நவாம்சமென்று பொருள் கூறியதென்க. (46)

## இரட்டைக் குழந்தை ஜனனம்

நிற்கின்ற ஐந்து ஏழுக்கு
அதிபர்சுபர் ஆகி
நேர்ந்தசுபர் உடன்கூடி
நெடியசுபர் நோக்க
விற்கொண்ட நுதலாய்கேந்
திரத்திருக்க அவர்கள்
மேவுதிசை தனில்இரட்டைப்
பிள்ளைசெனித் திடுஆய்
சந்திரலக் கினத்ததிபன்
மூன்று இடத்தோன் கூடி
அற்கொண்ட அரவுஉறினும்
நோக்கினுமே யிரட்டை
ஆமிர்கள் ஆண்பெண்என்று
அறிந்துரைப்பர் பெரியோர்.

(இ-ள்) ஐந்து ஏழுக்குடையவர்கள் சுபக்கிரகங்களாய், சுபக்கிரகங்களுடன் சேர்ந்தோ அல்லது பார்க்கப்பட்டோ 1-4-7-10 ஆகிய கேந்திரங்களுள் ஒன்றில் இருக்க, ஜனனகாலம் அவர்களுடையதிசை நிகழுமானால்

இரட்டைக் குழந்தை பிறக்கும். இங்கு கூறிய 5-7-க்கு அதிபர்களில் ஒரு வர் ஆட்சியாயிருந்தால் ஒரே குழந்தைதான் பிறக்கும். சந்திர லக்கினாதி பதியும், மூன்றுக்குடையவனும் அவர்களுடன் இராசி சேர்ந்தாலும், அல்லது பார்த்தாலும் இரட்டைக் குழந்தை பிறக்கும். இவர்களின் ஆண் பெண் கிரகங்களை அறிந்து இரட்டைக் குழந்தைகள் ஆண் பெண் என் பதைச் சொல்லுவர் சோதிட விற்பன்னர்கள் எ-று.

(வி-ரை) யுக்மே சந்த்ர ஸிதௌ ததௌஜ பவநேஸ்யுர்
ஜ்ஞார ஜீவோதயா லக்நேந்துக் நிருஷிரீக்ஷிதௌ ச
யுக்மேஷூவா ப்ராணிந:, குர்யுஸ்தே மிதுநம்
க்ரஹோதய கதான் த்வ்யங் காம்சகான்
பச்யதி ஸ்வாம்சேக்ஞே த்ரிதயம் க்ஞகாம்சக
வசாத் யுக்மம் த்வமிச்ரைஸ் ஸமம். (பிருகுஜ்ஜாதகம்)

(இ-ள்) சந்திர சுக்கிரர்கள் பெண்ராசியிலும், புதன்-செவ்வாய்-குரு-ஆண்ராசியிலும் இருந்தால் ஒரு ஆண் ஒரு பெண் ஆக இரட்டை ஜனன மாகும். இலக்கினம்—சந்திரலக்கினமிவைகள் பெண்ராசியாகிய புருஷ கிரகங்களால் பார்க்கப்பட்டால் ஆண் பெண் ஆக இரட்டை ஜனனமாகும். இந்த புதன்-செவ்வாய்-குரு-இலக்கினங்கள் பெண்ராசியில் பலமாக இருந் தால் ஆண் பெண் ஆக இரட்டை ஜனனமாகும். முன்கூறிய சகல கிரகங் களும் இலக்கினமும் உபயராசி அல்லது உபயராசி நவாமிசங்களாய் இருந்து சுயாம்சத்திலிருந்த புதனால் பார்க்கப்பட்டால் மூன்று குழந்தை கள் பிறக்கும். இவற்றுள் ஆண் ஒன்றும் பெண் இரண்டுமாகும். அதாவது புதனிருந்த நவாம்சம் ஸ்திரீபுருஷ சின்னங்களில் எந்த சின்னமுடையதோ அந்த சின்னமுடைய சிசு இரண்டும், அதற்கு மாறுபட்ட சின்னமுடைய சிசு ஒன்றுமாம். அது எப்படி எனின்? மிதுன நவாம்சத்திலிருந்த புதன் உபயராசி நவாம்சங்களில் இருந்த இலக்கினம், கிரகங்களைப் பார்த்தால் இரண்டு ஆண் குழந்தையும், ஒரு பெண் குழந்தையும் பிறக்கும். (மங்க ளேஸ்வரியம்) என்ற நூலில் புதனை கிரகங்கள் பார்த்தால் என்று மாறுபட எழுதியிருக்கின்றது தவறு) கன்னி நவாம்சத்திலிருந்த புதன் உபயராசி நவாம்சங்களில் இருந்த இலக்கினம், கிரகங்களைப் பார்த்தால் இரண்டு பெண்குழந்தையும், ஒரு ஆண்குழந்தையும் பிறக்கும் என்க. கிரகங்கள், இலக்கினம், புதன் ஆகிய இவைகளில் சிலது ஆண்ராசியிலும், சிலது பெண்ராசியிலும் இருந்தால் மூன்று சிசுக்களும் ஒரே சின்னமாக இருக் கும். அது எப்படி எனின்? மிதுன நவாம்சத்திலிருந்த புதன் மிதுன தனுர் நவாம்சங்களிலிருந்தால் முற்கூறிய கிரகங்களை அல்லது இலக் கினத்தைப் பார்த்தால் மூன்று ஆண்குழந்தைகள் பிறக்கும். கன்னிய

நவாம்சத்திலிருந்த புதன், கன்னி மீன நவாம்சங்களில் இருந்த மூற் கூறிய கிரக இலக்கினங்களை பார்த்தால் மூன்று பெண்குழந்தைகள் பிறக்கும் எ-று. (34)

## ஆண் பெண் ஜனனம் அறியும்வகை

பெரிதுள கிழமை பெண்ஆண் அறிந்து
பரிதி உதயம் பார்க்கும் கடிகையைத்
துரிதமாய் ஐங்கால் தொகையினில் போக்கி
வருகுவது ஆண்பெண் எனவகுத் திடுவாய்.

(இ-ள்) ஞாயிறு முதலாகிய கிழமைகளை, பெண்கிழமை எது? ஆண் கிழமை எது? என்று தெரிந்துகொண்டு, சூரியன் உதித்ததுமுதல் ஜனன காலம் வரைச்சென்ற நாழிகையை, ஆண்பெண்காலம் ஒன்றேகால்நாழிகை வீதமாக கழித்து ஏற்பட்டமீதம் எந்த காலமாக வருகின்றதோ அதைப் பார்த்துப் பிறந்த குழந்தை ஆண் அல்லது பெண் என்று சொல்ல வேண்டும் எ-று. (48)

## ஆண் பெண் வாரங்களாவன

வகுத்திடும் வாரம் மதிபுகர் பெண்ஆம்
தொகுத்தசேய் மந்தன் சூரியன் பொன்னும்
பகுத்திடும் ஆண்ஆம் பகர்புதன் அமிசம்
நிகழ்த்தில்ஒன்று ஆண்பெண் ஆகிடும் இரண் டே.

(இ-ள்) ஞாயிறு முதலாகிய கிழமைகளில் திங்கள் வெள்ளிக்கிழமை கள் பெண்ணும், ஞாயிறு-செவ்வாய்-வியாழம்-சனிக்கிழமைகள் ஆணும், புதன்கிழமையானது புதன் ஆண்ராசியிலிருந்தால் ஆணும், பெண்ராசியில் இருந்தால் பெண்ணும் ஆகும் எ-று.

(வி-ரை) "புதன் அமிசம் நிகழ்த்தில் ஒன்று ஆண் இரண்டு பெண் ஆகிவிடும்" என்று அந்வயஞ் செய்துகொண்டு கூட்ட பொருள்கூறுதல் வேண்டும். ஆகவே ஒன்று என்பது ஒற்றைப்படை ராசிகளும், இரண்டு என்பது இரட்டைப்படை ராசிகளும் ஆகும். இவ்வுண்மை புணராதோர் வேறுவகையாகப் பொருள்கூறி மயங்கவைப்பர் என்க. கிரகங்களில் சனி அலிக்கிரகமாயிருக்க இக்கவியில் ஆண்கிரகமென்று கூறியது என்னை? எனின் கூறுதும். வாரங்களின் ஆண்பெண் விஷயத்தில் சூரியாதி சப்த கிரகங்களில் ஒற்றைப்படைக் கிரகங்கள் ஆண் என்றும், இரட்டைப்படைக் கிரகங்கள் பெண் என்றும் கொள்ளுதல் சோதிட விற்பன்னர்களின் கொள்கையாதலால் என்றறிக.

## ஆண் பெண் ஜனன விவரம்

| நாழிகை | ஞாயிறு | திங்கள் | செவ்வா | புதன் | வியாழ | வெள்ளி | சனி |
|---|---|---|---|---|---|---|---|
| $1\frac{1}{4}$ | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் |
| $2\frac{1}{2}$ | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் |
| $3\frac{3}{4}$ | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் |
| 5 | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் |
| $6\frac{1}{4}$ | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் |
| $7\frac{1}{2}$ | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் |
| $8\frac{3}{4}$ | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் |
| 10 | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் |
| $11\frac{1}{4}$ | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் |
| $12\frac{1}{2}$ | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் |
| $13\frac{3}{4}$ | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் |
| 15 | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் |
| $16\frac{1}{4}$ | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் |
| $17\frac{1}{2}$ | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் |
| $18\frac{3}{4}$ | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் |
| 20 | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் |
| $21\frac{1}{4}$ | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் |
| $22\frac{1}{2}$ | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் |
| $23\frac{3}{4}$ | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் |
| 25 | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் |
| $26\frac{1}{4}$ | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் |
| $27\frac{1}{2}$ | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் |
| $28\frac{3}{4}$ | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் |
| 30 | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் | ஆண் | பெண் |

இங்கு கூறிய ஆண் பெண் கால நியதி எப்போதும் சம அகசுடைய நிரட்சஸ்தலத்திற்காகும். மற்றைய இடங்களில் உள்ளோர் பிறந்த தினத்திற்குரிய பகலிரவு அகசுகளைத் தனித்தனியே 24 - பங்கு செய்து இஷ்டஸ்தலத்திற்குரிய ஆண் பெண் கால நிர்ணயத்தை அறிந்துகொள்ளல் வேண்டும். ஒரு ஓரைக்கு நாழிகை $2\frac{1}{2}$ ஆதலால் இங்கு அதில் பாதியாகிய $1\frac{1}{4}$-நாழிகை என்று கூறியிருத்தலின் இது ஓரார்த்த காலமென்றும் வழங்கப்படும். இந்த ஓரார்த்த காலத்தைப் பாதியாக்கி ஆணில் ஆண்காலமென்றும், ஆணில் பெண்காலமென்றும், பெண்ணில் பெண்காலமென்றும், பெண்ணில் ஆண்காலமென்றும் வகுத்து உணர்தல் வேண்டும். இப்படிப் பார்ப்பதே மிக சூட்சுமமாகும் என்றறிக.

*வைஷம்ய வாஸராः பும்ஸः ஸமாஸ்த்ரீ வாஸராः க்ரமாத்*
*ஸார்த்தத்வி கடிகாஹோரா ஸ்த்ரீபும் பேதான் ப்ரகல்பயேத்.*

(வாஞ்சநாதீயம்)

(இ-ள்) ஒற்றித்த வாரங்களான ஞாயிறு, செவ்வாய், வியாழன், சனிக் கிழமைகள் ஆணும், திங்கள்-புதன்-வெள்ளிக்கிழமைகள் பெண்ணும் ஆகும். இரண்டரை நாழிகை ஒரு ஓரையாக அவரவர்கள் வாரத்தில் அவரவர்கள் ஓரை முதல்முதல் ஆரம்பமாய் ஆண் பெண் விகற்பத்தைக் காட்டும். இக்கருத்துணர்ந்தே இந்நூலாசிரியர் அலிகிரகங்களுள் புதனைப் பெண்கிரகமாகவும், சனியை ஆண்கிரகமாகவும் கூறியிருக்கின்றார் என்பதில் எட்டுணையும் சந்தேகமில்லை எ-று.

முன்பு கூறிய வாஞ்சநாதீய நூலுடையார் கொள்கையின்படி கால ஹோரைகளினாலும், கால அந்தர ஹோரைகளினாலும் ஆண் பெண் ஜனன நிச்சயத்தை இனி கூறப்படும். அந்தந்த வாரங்களில் முதல் இரண்டரை நாழிகைவரை அந்தந்த கிரகங்களுடைய ஓராகாலமாகும். பின்பு அந்தந்த கிரகங்களுக்கு 6-வது கிரகத்தினுடைய ஓரையாகும். பின்னும் இப்படியே ஒரு பகலில் 12-ஓரையும், இரவில் 12-ஓரையும் நிகழும். ஒவ்வொரு ஓரையில அந்தர ஓரைகளின காலம் அரைநாழிகையாகும். ஞாயிற்றுக் கிழமைமுதல் சூரியஹோரையில் காலம் நாழிகை 2½-வரை நிகழும். இதில சூரியனில சூரியன், சூரியனில் சந்திரன், செவ்வாய்-புதன்-குரு ஓரைகளை அரைநாழிகை வீதமாக நிகழும். இதனை இதன்கீழ் சக்கர வடிவமாகக் காட்டப்பெற்றிருத்தலின் தெளிவாக அறிந்துக்கொள்ளலாம்.

*மந்தாததः க்ரமேணஸ்யுச் சதுர்த்தா திவஸாதிபாः*
*ஹோரேராः ஸூர்யதநயாத் அதோஅதः க்ரமதஸ்ததா.*

எனவரும் சூரியசித்தாந்தம் பூகோள அத்தியாயத்தின்படி பூமிக்கு மேல் சந்திரன், புதன், சுக்கிரன், சூரியன், செவ்வாய், குரு, சனி ஆகிய கிரகமண்டலங்கள் ஒன்றன்மீது ஒன்றாக வானவெளியில் இருப்பதனால் எல்லாக் கிரகமணடலங்களுக்கும் மேல்உள்ள சனிமண்டலத்தில் இருந்து, கீழுள்ள கிரகமண்டல வரிசைகளின்படி ஓராகிரமம் ஏற்பட்டதாகும். அதாவது சனிஓரைக்கு அடுத்த ஓரை குருஓரை, இதற்கடுத்தபடி செவ்வாய், சூரியன், சுககிரன், புதன், சந்திரன் ஆகிய இவர்களின் ஹோராகாலங்கள் வரிசையாக நிகழுமென்பது கருத்தாகும்.

இனி சக்கர வடிவமாகக்காட்டப்படும் ஹோராசக்கரமானது பூமத்திய ஸ்தானமாகிய சம அக்ஷசுடைய இடத்திற்காகும். இஷ்டஸ்தலத்திற்குப் பகல் இரவு அக்ஷசுகளை 12-ஆல் வகுத்து ஒவ்வொரு ஹோராகாலத்தையும் இவ்வளவென்று தெரிந்துகொள்ளவேண்டியது அறிவுடையோர் கடமையாகும். இராகுகாலம், குளிகைகாலம், ஆண்பெண்காலம், ஹோராகாலம் ஆகிய இவைகளை சமஅக்ஷசுடைய பூமத்திய ஸ்தானத்திற்கே பூர்வ நூலாசிரியர்கள் கூறியிருக்கின்றனர். ஆதலால் அந்தந்த இடங்களுக்குரிய அக்ஷசு ஏற்றத்தாழ்ச்சிகளுக்கு ஏற்ப அங்கங்கே உள்ளவர்களுக்கு முன் கூறியவைகளின் காலப்பிரயாணங்கள் கூடியும், குறைந்தும்வரும் என்பதாம்.

## கால ஹோரா சக்கரம்

| நா | நா | நா | நா | ஞாயிறு | திங்கள் | செவ்வாய் | புதன் | வியாழன் | வெள்ளி | சனி |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ½<br>1<br>1½<br>2<br>2½ | 18<br>18½<br>19<br>19½<br>20 | 35½<br>36<br>36½<br>37<br>37½ | 53<br>53½<br>54<br>54½<br>55 | சூரிய ஹோரையில்<br>சூரி-ஆண்<br>சந்-பெண்<br>அங்-ஆண்<br>புத-பெண்<br>குரு-ஆண் | சந்திர ஹோரையில்<br>சந்-பெண்<br>அங்-ஆண்<br>புத-பெண்<br>குரு-ஆண்<br>சுக்-பெண் | குஜ ஹோரையில்<br>அங்-ஆண்<br>புத-பெண்<br>குரு-ஆண்<br>சுக்-பெண்<br>சனி-ஆண் | புத ஹோரையில்<br>புத-பெண்<br>குரு-ஆண்<br>சுக்-பெண்<br>சனி-ஆண்<br>சூரி-பெண் | குரு ஹோரையில்<br>குரு-ஆண்<br>சுக்-பெண்<br>சனி-ஆண்<br>சூரி-ஆண்<br>சந்-பெண் | சுக்ர ஹோரையில்<br>சுக்-பெண்<br>சனி-ஆண்<br>சூரி-ஆண்<br>சந்-பெண்<br>அக்-ஆண் | சனி ஹோரையில்<br>சனி-ஆண்<br>சூரி-ஆண்<br>சந்-பெண்<br>அங்-ஆண்<br>புத-பெண் |
| 3<br>3½<br>4<br>4½<br>5 | 20½<br>21<br>21½<br>22<br>22½ | 38<br>38½<br>39<br>39½<br>40 | 55½<br>56<br>56½<br>57<br>57½ | சுக்ர ஹோரையில்<br>சுக்-பெண்<br>சனி-ஆண்<br>சூரி-ஆண்<br>சந்-பெண்<br>அங்-ஆண் | சனி ஹோரையில்<br>சனி-ஆண்<br>சூரி-ஆண்<br>சந்-பெண்<br>அங்-ஆண்<br>புத-பெண் | சூரிய ஹோரையில்<br>சூரி-ஆண்<br>சந்-பெண்<br>அங்-ஆண்<br>புத-பெண்<br>குரு-ஆண் | சந்திர ஹோரையில்<br>சந்-பெண்<br>அங்-ஆண்<br>புத-பெண்<br>குரு-ஆண்<br>சுக்-பெண் | குஜ ஹோரையில்<br>அங்-ஆண்<br>புத-பெண்<br>குரு-பெண்<br>சுக-பெண்<br>சனி-ஆண் | புத ஹோரையில்<br>புத-பெண்<br>குரு-ஆண்<br>சுக்-பெண்<br>சனி-ஆண்<br>சூரி-ஆண் | குரு ஹோரையில்<br>குரு-ஆண்<br>சுக்-பெண்<br>சனி-ஆண்<br>சூரி-ஆண்<br>சந்-பெண் |
| 5½<br>6<br>6½<br>7<br>7½ | 23<br>23½<br>24<br>24½<br>25 | 40½<br>41<br>41½<br>42<br>42½ | 58<br>58½<br>59<br>59½<br>60 | புத ஹோரையில்<br>புத-பெண்<br>குரு-ஆண்<br>சுக்-பெண்<br>சனி-ஆண்<br>சூரி-ஆண் | குரு ஹோரையில்<br>குரு-ஆண்<br>சுக்-பெண்<br>சனி-ஆண்<br>சூரி-ஆண்<br>சந்-பெண் | சுக்ர ஹோரையில்<br>சுக்-பெண்<br>சனி-ஆண்<br>சூரி-ஆண்<br>சந்-பெண்<br>அங்-ஆண் | சனி ஹோரையில்<br>சனி-ஆண்<br>சூரி-ஆண்<br>சந்-பெண்<br>அங்-ஆண்<br>புத-பெண் | சூரிய ஹோரையில்<br>சூரி-ஆண்<br>சந்-பெண்<br>அங்-ஆண்<br>புத-பெண்<br>குரு-ஆண் | சந்திர ஹோரையில்<br>சந்-பெண்<br>அங்-ஆண்<br>புத-பெண்<br>குரு-ஆண்<br>சுக்-பெண் | குஜ ஹோரையில்<br>அங்-ஆண்<br>புத-பெண்<br>குரு-ஆண்<br>சுக்-பெண்<br>சனி-ஆண் |

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 8<br>8½<br>9<br>9½<br>10 | 25½<br>26<br>26½<br>27<br>27½ | 43<br>43½<br>44<br>44½<br>45 | | சந்திர ஓரையில்<br>சந்-பெண்<br>அங்-ஆண்<br>புத-பெண்<br>குரு-ஆண்<br>சுக்-பெண் | குஜ ஓரையில்<br>அங்-ஆண்<br>புத-பெண்<br>குரு-ஆண்<br>சுக்-பெண்<br>சனி-ஆண் | புத ஓரையில்<br>புத-பெண்<br>குரு-ஆண்<br>சுக்-பெண்<br>சனி-ஆண்<br>சூரி-ஆண் | குரு ஓரையில்<br>குரு-ஆண்<br>சுக்-பெண்<br>சனி-ஆண்<br>சூரி-ஆண்<br>சந்-பெண் | சுக்கிர ஓரையில்<br>சுக்-பெண்<br>சனி-ஆண்<br>சூரி-ஆண்<br>சந்-பெண்<br>அங்-ஆண் | சனி ஓரையில்<br>சனி-ஆண்<br>சூரி-ஆண்<br>சந்-பெண்<br>அங்-ஆண்<br>புத-பெண் | சூரிய ஓரையில்<br>சூரி-ஆண்<br>சந்-பெண்<br>அங்-பெண்<br>புத-பெண்<br>குரு-ஆண் |
| 10½<br>11<br>11½<br>12<br>12½ | 28<br>28½<br>29<br>29½<br>30 | 45½<br>46<br>46½<br>47<br>47½ | | சனி ஓரையில்<br>சனி-ஆண்<br>சூரி-ஆண்<br>சந்-பெண்<br>அங்-ஆண்<br>புத-பெண் | சூரிய ஓரையில்<br>சூரி-ஆண்<br>சந்-பெண்<br>அங்-ஆண்<br>புத-பெண்<br>குரு-ஆண் | சந்திர ஓரையில்<br>சந்-பெண்<br>அங்-ஆண்<br>புத-பெண்<br>குரு-ஆண்<br>சுக்-பெண் | குஜ ஓரையில்<br>அங்-ஆண்<br>புத-பெண்<br>குரு-ஆண்<br>சுக்-பெண்<br>சனி-ஆண் | புத ஓரையில்<br>புத-பெண்<br>குரு-ஆண்<br>சுக்-பெண்<br>சனி-ஆண்<br>சூரி-ஆண் | குரு ஓரையில்<br>குரு-ஆண்<br>சுக்-பெண்<br>சனி-ஆண்<br>சூரி-ஆண்<br>சந்-பெண் | சுக்கிர ஓரையில்<br>சுக்-பெண்<br>சனி-ஆண்<br>சூரி-ஆண்<br>சந்-பெண்<br>அங்-பெண் |
| 13<br>13½<br>14<br>14½<br>15 | 30½<br>31<br>31½<br>32<br>32½ | 48<br>48½<br>49<br>49½<br>50 | | குரு ஓரையில்<br>குரு-ஆண்<br>சுக்-பெண்<br>சனி-ஆண்<br>சூரி-ஆண்<br>சந்-பெண் | சுக்கிர ஓரையில்<br>சுக்-பெண்<br>சனி-ஆண்<br>சூரி-ஆண்<br>சந்-பெண்<br>அங்-பெண் | சனி ஓரையில்<br>சனி-ஆண்<br>சூரி-ஆண்<br>சந்-பெண்<br>அங்-ஆண்<br>புத-பெண் | சூரிய ஓரையில்<br>சூரி-ஆண்<br>சந்-பெண்<br>அங்-ஆண்<br>புத-பெண்<br>குரு-ஆண் | சந்திர ஓரையில்<br>சந்-பெண்<br>அங்-ஆண்<br>புத-பெண்<br>குரு-ஆண்<br>சுக்-பெண் | குஜ ஓரையில்<br>அங்-ஆண்<br>புத-பெண்<br>குரு-ஆண்<br>சுக்-பெண்<br>சனி-ஆண் | புத ஓரையில்<br>புத-பெண்<br>குரு-ஆண்<br>சுக்-பெண்<br>சனி-ஆண்<br>சூரி-ஆண் |
| 15½<br>16<br>16½<br>17<br>17½ | 33<br>33½<br>34<br>34½<br>35 | 50½<br>51<br>51½<br>52<br>52½ | | குஜ ஓரையில்<br>அங்-ஆண்<br>புத-பெண்<br>குரு-ஆண்<br>சுக்-பெண்<br>சனி-ஆண் | புத ஓரையில்<br>புத-பெண்<br>குரு-ஆண்<br>சுக்-பெண்<br>சனி-ஆண்<br>சூரி-ஆண் | குரு ஓரையில்<br>குரு-ஆண்<br>சுக்-ஆண்<br>சனி-ஆண்<br>சூரி-ஆண்<br>சந்-பெண் | சுக்கிர ஓரையில்<br>சுக்-பெண்<br>சனி-ஆண்<br>சூரி-ஆண்<br>சந்-பெண்<br>அங்-ஆண் | சனி ஓரையில்<br>சனி-ஆண்<br>சூரி-ஆண்<br>சந்-பெண்<br>அங்-ஆண்<br>புத-பெண் | சூரிய ஓரையில்<br>சூரி-ஆண்<br>சந்-பெண்<br>அங்-ஆண்<br>புத-பெண்<br>குரு-ஆண் | சந்திர ஓரையில்<br>சந்-பெண்<br>அங்-பெண்<br>புத-பெண்<br>குரு-ஆண்<br>சுக்-பெண் |

இந்தச் சக்கரத்தினுல் காலஹோரைகளையும், அவற்றின் உள்ளே அடங்கியுள்ள அந்தரஹோரைகளையும் நன்கு அறியலாம். திங்கட்கிழமை 16-நாழிகைக்குப் பகலில் ஜனனமானுல் ஷை சக்கரத்தைப் பார்க்க புதன் ஹோரை என்றும், மற்றும் புதனில் குருவினுடைய அந்தர ஓரை என்றும், திங்கட்கிழமை 40-நாழிகைக்கு ஜனனமானுல் சனிஹோரை என்றும், மற்றும் சனியில் புதனுடைய அந்தரஹோரை என்றும் அறிதல் வேண்டும். பிறவும் இப்படியேயாகும்.

## இலக்கின நிச்சயம்

உதயாதி கடிகைதனை முந்நான்கில் ஈந்தே
உற்றசே டந்தன்னை ஆடாதி எண்ணிச்
சிதையாமல் பார்க்கலக் கினம்ஆகும் அந்தத்
திரிகோணம் ஆனுலும் ஆகுமே இன்னம்
முதல்காணும் லக்கினத்துக்கு ஏழாகும் தானம்
முதல்கொண்டு திரிகோணம் ஆனுலும் ஆகும்
மதயானை இருமருப்புக் கனகவெற்பும் வாச
வனசமுகை போலுமுலை வஞ்சியரே கேளாய்.

(இ-ள்) சூரியன் உதயமுதலாக ஏற்பட்ட ஜனனநாழிகையைப் பன்னிரண்டில் வகுத்துவரும் ஈவைத் தள்ளிவிட்டு மீதத்தை அறிந்து அதற்கு மேஷம் முதலாக எண்ணிக்கண்ட இராசி எதுவோ அதுவே ஜனன லக்கினமாகும் என்க. அல்லது அதற்குத் திரிகோணராசிகளாகிய 5-9-ம் இராசிகள் ஜனன லக்னம் ஆனுலுமாகும். அல்லது முதல் மேஷாதியாகி எண்ணிக்கண்ட ராசிக்கு ஏழாவது ராசியோ அல்லது அதன் திரிகோணராசிகளாகிய 5-9-வது இராசிகளோ ஜனன இலக்கினமாகும் எ-று.

## இலக்கின நிச்சய சக்கரம்

| நா | நா | நா | நா | நா | முதல் காணும் லக்னம் | இதன் திரிகோண ராசிகள் | முதல்காணும் இலக்கினத்தினேழாமிடம் | இதன் திரிகோண ராசிகள் |
|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 13 | 25 | 37 | 49 | மேடம் | சிங்கம்-தனுசு | துலாம் | கும்பம்-மிதுனம் |
| 2 | 14 | 26 | 38 | 50 | ரிஷபம் | கன்னி-மகரம் | விருச்சிகம் | மீனம்-கடகம் |
| 3 | 15 | 27 | 39 | 51 | மிதுன | துலாம்-கன்னி | தனுசு | மேடம்-சிங்கம் |
| 4 | 16 | 28 | 40 | 5[illegible] | கடகம் | விருசிகம்-மீனம் | மகரம் | ரிஷபம்-கன்னி |
| 5 | 17 | 29 | 41 | 53 | சிங்கம் | தனுசு-மேடம் | கும்பம் | மிதுனம்-துலாம் |
| 6 | 18 | 30 | 42 | 54 | கன்னி | மகரம்-ரிஷபம் | மீனம் | கடகம்-விருசிகம் |
| 7 | 19 | 31 | 43 | 55 | துலாம் | கும்பம்-மிதுனம் | மேடம் | சிங்கம்-தனுசு |
| 8 | 20 | 32 | 44 | 56 | விருச்சி | மீனம்-கடகம் | ரிஷபம் | கன்னி-மகரம் |
| 9 | 21 | 33 | 45 | 57 | தனுசு | மேடம்-சிங்கம் | மிதுனம் | துலாம்-கும்பம் |
| 10 | 22 | 34 | 46 | 58 | மகரம் | ரிஷபம்-கன்னி | கடகம் | விருசிகம்-மீனம் |
| 11 | 23 | 35 | 47 | 59 | கும்பம் | மிதுனம்-துலாம் | சிங்கம் | தனுசு-மேடம் |
| 12 | 24 | 36 | 48 | 60 | மீனம் | கடகம்-விருசிகம் | கன்னி | மகரம்-ரிஷபம் |

இந்த சக்கரத்தினுல் ஷை செய்யுளில் கூறிய முறைப்படி இலக்கின நிச்சயத்தைச் சுலபமாக அனைவரும் தெரிந்துகொள்ளலாம். உதாரணம்: குரோதனஞ ஆடிமீ 1௳ அன்று $42\frac{1}{2}$-நாழிகைக்கு ஜனனம் ஆனுல், இலக்கின நிச்சயம் காண்பது எங்ஙனமெனின்? $42\frac{1}{2} \div 12 = 3$, மீதம்-$6\frac{1}{2}$ ஆகவே மேடமுதல் எண்ண துலாம் ஆகின்றது. ஆகவே ஜனனலக்கினம் துலாம், அல்லது இதன் திரிகோணம் கும்பம் மிதுனம், அல்லது துலாத்தின் ஏழாமிடம் மேடம், அல்லது இதன் திரிகோணம் சிங்கம் - தனுசு ஆகிய இவைகளுள் ஒன்று ஜனனலக்கினமானுல் அப்போது ஜனனகால நாழிகை சுத்தமென்றும், இல்லாவிடின் அப்படி வரும்படி ஜனனநாழிகையில் ஒரு நாழிகை கூட்டியோ அல்லது குறைத்தோ சரிவரும்படி செய்து கொள்ள வேண்டுமென்றும் அறியப்படுகின்றது. ஷை தேதியில் வேலூர் ஜனனஸ்தானம் இதன் சாயனநக்ஷத்திர இராசிமானத்தின்படி கும்பாந்தம் நாழிகை-41 விநாடி-49 ஆகவே ஜனனம் மீனம் ஆக ஏற்படுகின்றது. இது முன் கணிதம் செய்ததில் ஏற்பட்ட ராசிகளில் ஒன்ருக இல்லாமையால் ஜனன நாழிகை சரியல்லவென்று ஏற்படுகின்றது. ஆகவே ஜனனநாழிகையில் $\frac{1}{2}$-நாழிகையைக் கழிக்க 42-ஆகும். இதற்கு ஷை சக்கரத்தில் பார்க்க முதற்காணும் லக்கினத்திற்கு ஏழாவதுராசி மீனமாதலால் ஜனனநாழிகை 42 சுத்தம் என்று ஏற்படுவதுணர்க.

மற்ருேர் உதாரணம்: ஆடிமீ 14௳ காலை 2-நாழிகைக்கு கடகலக்கினத்தில் ஓர் ஜனனம். இதற்கு ஷை சக்கரத்தைப் பார்க்க முதற் காணும் லக்கினத்தின் ஏழாம் ராசியின் திரிகோணத்தில் கடகம் அமைதலால் ஜனனகாலம் சுத்தம் என்று அறிதல்வேண்டும். ஷை மாதம் 4௳ காலை 3-நாழிகைக்குக் கடகலக்கினத்தில் ஓர் ஜனனம். இதற்கு ஷைசக்கரத்தைப் பார்க்க 3-வது நாழிகைக்கு நேர் கடகம் இல்லாமையால் ஜனன நாழிகை தவறு என்று அறிதல்வேண்டும். ஆகவே ஜனன நாழிகையில் அரை அல்லது ஒரு நாழிகையைக் கூட்டிக்கொண்டு பார்த்தால் முதற் காணும் லக்கினம் கடகமாக அமைதலால் ஜனனகால சுத்தம் $3\frac{1}{2}$ அல்லது 4 நாழிகைக்கு என்று ஏற்படுகின்றது. இதில் ஒருநாழிகைவித்தியாசம் கூட்டவோ அல்லது குறைக்கவோ வேண்டியிருத்தலால் ஆண் பெண் காலநிர்ணயத்திற்கு ஒத்துவரும்படி செய்துகொள்வது அறிவுடையோர் கடமையாகும்.

சந்த்ரலக்நா திபோயத்ர தத்ரிகோணம் அதா அபிவா
தத்ஸப்தம த்ரிகோணம்வா பவேத் லக்ந நிச்யம்
யத்ராசௌ சந்த்ரமாதிஷ்டே தல்லக்நம் பவதித்ருவம்.

(ஜாதகார்ணவ நவநீதம்)

என்ற ஷை சுலோகத்தின்படி சந்திரன் இருந்த வீட்டிற்குடையவன் எந்த ராசியிலிருக்கின்ருனே அதிலும், அதன் திரிகோணங்களாகிய 5-9-வது வீடுகளிலும், அல்லது சந்திரன் இருந்த வீட்டிற்குடையவன் இருந்த வீட்டிற்கு 7-மிடமும் அதன் திரிகோணங்களாகிய 5-9வது வீடுகளிலும் ஜனன லக்னமிருந்தால் அப்போது ஜனனநாழிகை சுத்தமென்று ஏற்படுகின்றது. மற்றும் சந்திரன் சர-திர-உபயங்களில் ஏதேனும் ஒன்றில் இருந்தால்

இலக்கினமும் அவ்வித சர-திர-உபயங்களில் ஏதேனும் ஒன்றாய் இருக்கும் என்று ஏற்படுகின்றது.

இவ்விரண்டு முறைகளில் முதல்முறைக்கு மேலே காட்டிய இலக்கின நிச்சய சக்கரம் மிக உதவியாயிருக்கின்றது. உதாரணம்: ஆடிமீ 14உ காலை 2-நாழிகைக்கு ஜனனம், கடகம் ஜனனலக்கினம், கன்னி சந்திர லக்கினம், சந்திர லக்கினாதிபன் புதன் கடகத்தில் இருக்கிறார். ஆகவே சந்திரனிருந்த வீட்டதிபன் கடகத்தில் இருப்பதனால் ஜனனநாழிகை சுத்தம் என்று ஏற்படுகிறது. இங்கே 'திரிகோணம்' என்றது 'மேஷம்-சிங்கம்-தனு' 'ரிஷபம்-கன்னி-மகரம்' என்பதுபோலக் கொள்க. இங்ஙனம் நோக்கும்போது கன்னியில் சந்திரன் இருக்கும் $2\frac{1}{4}$-தினத்தில் கடகத்தின் ஆரம்பம் அல்லது அந்தியத்தில் எப்போது பிறந்தாலும் இலக்கின சுத்தம் உண்டென்று அறியப்படுதலின் இது பெரும்போக்கான முறையென்பதில் சிறிதும் ஐயமில்லை. எங்ஙனம் எனின்? கடகம் நாழிகை 5-32 வரையில் வியாபித்திருக்கின்றது. அப்போது சந்திரன் கன்னியிலிருந்து புதன் கடகத்தில் இருந்தால் ஐந்து நாழிகையின் இடையே எந்த நாழிகையில் பிறந்தாலும் இம்முறைப்படி லக்கின நிச்சயம் சரிவருவதனால் என்று அறிக. மற்றும் இம்முறையில் இரண்டாவதாகக் கூறிய முறையும் மிகப் பெரும் போக்கானதே யன்றி சுத்தமானதல்ல.

இலக்கினத்தையும், ஜனன நாழிகையைச் சுத்தமாக அறியவேண்டின் குந்தன நிக்கின சோதன ஸ்புடத்தினால் செய்வது ஸ்தூலமுறையும், கர்ப்போற்பத்தி சோதனத்தினால்செய்வது சூட்சமமுறையுமாகும். இவ்விரண்டு முறையைப்பற்றி ஜாதகசாகரத்தில் விளக்கப்பட்டிருத்தலின் விரிவஞ்சி இங்கு விளக்கவில்லை ஆதலால் ஆண்டு உய்த்துணர்தல் அறிவுடையோர் கடமையாகும்.

இந்நூலாசிரியர் கூறியுள்ள இலக்கின நிச்சயம் சிறிது ஸ்தூலமுறையாகக் காணப்படினும், ஆழ்ந்து அறிந்தால் சூட்சும முறையாகவே ஏற்படுகின்றது. ஆகவே அன்பர்கள் இந்நூலாசிரியர் கொள்கையை அனுசரித்துச் செய்துக்கொள்ள வேண்டியது ஆவசியமாகும். (50)

வஞ்சியே ஒற்றைலக் கினமுன் பாதி
மார்த்தாண்டன் ஓரையின் பாதிமதி ஓரை
மிஞ்சிநின்ற இரட்டைக்கு முன்திங்கள் ஓரை
மீந்திடும்பின் பாதிக்கோ வெய்யோன் ஓரையதாம்
செஞ்சொல்மதி ஓரையதே காணும் ஆயின்னே
சேயிழையே பிறக்குமெனச் செப்பல் ஆகும்
கஞ்சமலர் நண்புஇரவி ஓரையதே ஆகில்
காளையே பிறக்கும்என வேகருதல் வேண்டும்.

(இ-ள்) ஆண்ராசி முன்பாதி சூரியஹோரையும், பின்பாதி சந்திரஹோரையுமாம். பெண்ராசி முன்பாதி சந்திரஹோரையும், பின்பாதி சூரியஹோரையுமாம். சந்திர ஹோரையில் பெண் குழந்தையும், சூரிய ஓரையில் ஆண் குழந்தையும் பிறக்கும் எ-று.

(வி-ரை) இக்கருத்தையே 31-வது கவி 2-வது அடியிலும், 32-வது கவி 1-வது அடி பிற்பாதியிலும், 32-வது கவி 1-வது அடி பிற்பாதியிலும், 2-வது அடி முற்பாதியிலும் கூறப்பட்டிருக்கின்றது. இந்த ஹோராசம்பந்தமான சக்கரத்தைச் சட்வர்க்கப் படலத்தில் தெளிவாக அறியலாம். (51)

## இராசிகளின் சொரூப முதலியன

செப்பிய ராசி வடிவுகண்டு உரைக்கில்
சிவந்திடும் தகர்உரு மேடம்
தெரிந்திடு தவளப் பெற்றமே இடபம்
செயம்பெறும் மிதுனம்என் பதுவும்
ஒப்பொடு வீணை கைமயில் உடனே
ஓதுதண்டு ஆயுதம் பச்சை
ஒளிர்உரு ஆண்பெண் கடகம்ஞெண்டு உருவம்
உரைத்தபா திரிமலர் நிறம்ஆம்
வெற்புஅடர் சிங்கம் புகைநிறம் மடங்கல்
மின்கனி ஓடமே நடத்தும்
மெல்லியல் அழுக்கு வெள்ளைபொன் நிறத்தாள்
விரிதுலாம் புருடன்ஆம் கரத்தில்
தப்புஇலாத் துலைக்கோல் ஐவ்வண நிறைகற்று
ஆன்பயில் வலக்கையில் பிடிப்போன்
தங்கிய விரிச்சி கங்கருந் தேள்ஆம்
தக்கதே ஞெண்டிவை புழுவே.

(இ-ள்) இராசிகள் பன்னிரண்டினுடைய சொரூபங்களைக் கூறுமிடத்து மேடம் சிவந்த நிறமும் ஆட்டின் உருவமும், இடபம் வெள்ளை நிறமும் எருது உருவமும், மிதுனம் பச்சை நிறமும், ஒருபெண்ணானவள் கையில் மயிலும் வீணையும் வைத்துக்கொண்டும், ஒரு ஆணானவன் கையில் தண்டாயுதத்தை வைத்துக்கொண்டும், ஆண் பெண் ஆகிய இருவருமாக ஒன்றுசேர நிற்கும் உருவமும், கடகம் பாதிரி மலர்போன்ற நிறமும், நண்டின் உருவமும், சிம்மம் புகையைப்போன்ற நிறமும், சிமமத்தின் உருவமும், கன்னி அழுக்கடைந்த வெள்ளை நிறமும், ஓடம் நடத்துகின்ற பொன் நிறமான ஓர் பெண்ணின் உருவமும், துலாம் ஐவணம் போனற (மருதோன்றி மரம்) நிறமும், நிறுத்தல் அளவை கற்றறிந்து தராசுக்கோலை கையில் பிடித்திருக்கும் புருட உருவமும், விருச்சிகம் கறுப்பு நிறமும், கருந்தேள் உருவமும் ஆகும். கடகமும் விருச்சிகமும் புழு உருவமாகிய கீடராசிகளாகும் எ-று. (52)

வேய்த்தனு புருடன் குதிரைபோல் அரைக்கீழ்
மின்இருதாள் நிறம் பொன்ஆம்
ஆயமீன் மகரம் காலுகல் வதனம்
மானும்ஆம் அழுக்குவெண் நிறம்ஆம்

ஏயதோர் கும்பம் புருடன்ஆம் தோளில்
எடுப்பதும் குடம்கரு நிறத்தோன்
பாய்தலைக் கெண்டை இரண்டுமீன் உருவம்
பகர்நிறம் அழுக்குஉறும் சிவப்பே.

(இ-ள்) தனுசு பொன் நிறமும், அரைக்குக் (இடுப்புக்கு) கீழ் குதிரையின் கால் வால்களைப்போலவும், அரைக்குமேல் ஒரு கையில் வில்லும் மற்றொரு கையில் அம்பும் பிடித்த புருட உருவமும், மகரம் அழுக்கடைந்த வெண்மைநிறமும், காலும் உடலும் மகர (சுறா) மீனையும், முகம் கலைமானை யும் ஒத்த உருவமும், கும்பம் கறுப்பு நிறமும், புஜத்தில் குடத்தைத்தரித்த புருட உருவமும், மீனம அழுக்கடைந்த சிவப்பு நிறமும், இரண்டு மீன்கள் ஒன்றின் வாலை யொன்றுபற்றி யிருப்பதுபோன்ற உருவமும் ஆகும் எ-று.

“ க்ரூரஸ-ஸௌம்யஃ புருஷஸ்த்ரீதே-தேசராகத்வீதேஹாஃ ”

என்ற பிருஹத்ஜாதகத்தின்படி மேஷம் குரூரம், ரிஷபம் சௌமியம், அதாவது: ஆண்ராசி குரூர சுபாவமும், பெண்ராசி சௌமிய சுபாவமும் உடையதாகும.

இதன் பிரயோசனம் என்னை எனின்?

(வி-ரை) “ ராசி ஸ்வபாவ துல்யாஜாயந்தே-ப்ரக்ருதயஃ ப்ரஜூதாநாம் ” என்ற சத்தியாசாரியர் வசனத்தின்படி ஆண்ராசியில் பிறந்தவர்கள் குரூர சுவாப முடையவரும், பெண்ராசியில் பிறந்தவர்கள் சௌமிய சுபாவ முடையவரும் ஆவர் என்பதாம்.

இராசிகளின் உருவங்கள் ஓர் கல்பித வடிவமேயன்றி உண்மையான மீன் ஆடு மாடு சிங்கம் தேள் முதலியன ஆகாயவெளியில் கிடையாது. பூமியிலிருந்து பார்க்கும்போது சில நக்ஷத்திரகணங்கள் சேர்ந்து நமது மீன் வடிவமாகவும், ஆடு-மாடு-சிங்கம்-தேள் வடிவங்களாகவும் தோற்றுவதனால் அங்ஙனம் தோற்றும் வானவெளியிலுள்ள அந்தந்த இடங்களுக்கு அவ்வவற்றின் பெயர்களையே இறைவன் ஏற்படுத்தி யிருக்கின்றார். குதிரை தலைபோல் காணப்படும் ஆறு நட்சத்திர கணங்களை அசுவினி என்று வகுத்துரைத்ததுபோலவே அசுவினி பரணி கிருத்திகை முதற்பாதம் வரையில் உற்று நிதானித்து நோக்கும் நமக்கு ஆட்டின் வடிவம்போல் காணப்படுதலின் அதற்கு மேடம் என்ற பெயருண்டாயிற்றென்றறிக. பிறவும் இங்ஙனமே யாகும். மிதுனம் ஆண் பெண் ஆகிய இருவர்கள் ஒருசேர நிற்பதுபோலக் காணப்படுதலின் அதற்கு இரண்டு என்னும் பொருள் தரக் கூடிய வடமொழிப்பெயராகிய ‘மிதுனம்’என்று வழங்கப்பட்டதென்பதாம். மிதுனம் எனின் இரண்டென்னும் பிரயோகம் இருத்தலை பிருகதாரணிய உபநிஷத்து 3-வது வல்லி, 12-வது வசனத்தில் காண்க. கும்பம புஜத்தில் குடத்தைத் தரித்த புருட வடிவம் என்பதை “கடஜலாதாநகரே” என்ற சர்வார்த்த சிந்தாமணி வசனத்தினால் அறியப்படுதலின் 40 - வது கவி 3-வது அடியில் ‘சிரத்தில்’ என்று இருப்பதை பாடபேதமாகக் கொண்டு ‘தோளில்’ என்று திருத்தி அமைக்கப்பட்டது. ஐரோப்பா-கிரீக் முதலிய மேல்நாட்டு வானசாஸ்திரிகளும் இராசிகளை இவ்வித கல்பித வடிவாகவே

சித்தாந்தப்படுத்தி யிருக்கின்றனர். அவர்கட்கு இச்சாஸ்திர ஞானத்தை உதவியது நமது தெய்வீக பாரத நாடேயாகும்.

தேறும் வீமசு ரர்க்கபி டேகமே
  செய்ய கால்குடம் கோல்துலை செவ்வைஆம்
வீறும் ஆண்பெண்ணும் ஆய்த்தடி தண்டுஉறும்
  மிக்கபெண் பாலிகை விளக்கு ஏந்துமே
கூறு வில்மேல் புருடன் குதிரைக்கீழ்
  கூடும் மான்தலை கூர்சுறு மீனமே
மாதி ரண்டராய்க் கவிழ்வது எழுவதாஆம்
  மற்ற ராசிகள் தம்தம் வடிவமே. (வீமேசுரம்)

இந்த வசனத்தினால் கன்னிராசி ஒருகையில் மூளைப்பாலிகையும், ஒரு கையில் விளக்கும் ஏந்தி நிற்கும் பெண் வடிவமென்று ஏற்படுகின்றது. "ந்ருயுக்-ஸ-தர்வீஸ-காரக்னி-ஸஸ்யாநெள" என்ற சர்வார்த்த சிந்தாமணி யின்படி கன்னிராசி சசிய (மூளை) தீயங்களை கையிற்கொண்டு தெப்பத் தின்மீது இருக்கும் பெண்ணைப்போன்ற உருவமுடையதென்று ஏற்படு கின்றது.

கோதிலாக் கன்னி பெண்உருவாகிக்
  கொழுங்கனல் ஏந்தியே நிற்கும்
சாதிவே ளாளன் உளர்இடம் ஆகும்
  சாரும்தென் மேல்திசை இருகால்
தீதிலா உபயம் சீவனும் பகலில்
  திருஷ்டியாம் நிறங்கறுப்பு ஆகும்
ஓதிய புந்திக்கு ஆட்சியுச் சம்ஒடு
  ஒண்புகர் நீசம் பாம்பு ஆட்சி. (ஜாதக சிந்தாமணி)

என்ற வசனத்தினால் கன்னி கனல் ஏந்திய கரமுடைய பெண் வடிவமென் பதும், பாலிகை ஏந்திய கரமுடையதென்பதும் நன்குணரப்படுதலின் இந்நூலாசிரியர் அதனை கூறாது விடுத்தமைக்குக் காரணம் ஒன்றும் தெரிய வில்லை. (53)

## இராசிகளின் காலபலம்

சொல்லும் மேடம் தனுமகரம் துலங்கும் ஞெண்டும் தண்டுஇடபம்
வெல்லும்இவை சந்திரற்கு உறவாய் விழிப்புஆம் கங்குல் விடிஅளவும்
சொல்லும் கும்பம் தேளசிங்கம் துணைமீன் கன்னி மூவிரண்டும்
எல்லிற் பொழுதே விழிதெரியும் இரவிற்கு உறவுஆய் இனிதாக.

(இ-ள்) மேடம்-இடபம்-மிதுனம்-கடகம்-தனுசு-மகரம் இந்த ராசிகள் சந்திரனுக்கு நேசமாகி இரவு முழுதும் விழிப்புடையனவாகும். சிம்மம்-கன்னி-துலாம்-விருச்சிகம-கும்பம்-மீனம் இந்த ராசிகள் சூரியனுக்கு நேச மாகி பகல் முழுதும் விழிப்புடையனவாகும் எ-று.

(வி-ரை) மூன்றும் அடியில் மோனை ஒன்றுமையால் மோனை ஒன்றும் பொருட்டு அதிலுள்ள இராசிகளை முன்பின் நோக்காது திருத்தப்பட்டது. 'விழிப்பு' என்பது பலம் என்னும் பொருளாகும். இதனை,

விளங்கிய மேடம் குண்டை வீணைமான் கடகம் வில்லும்
இளம்பிறை இனமாய் ஆறும் இரவுகண் காணும் என்றும்
தெளிந்திடும் மறிகோல் கன்னி குடங்கயல் தேளும் எல்லாம்
விளங்கதிர் அருக்கன் கூறும் பகல்விழி உடைய மன்றே.

(சூடாமணி உள்ளமுடையான்)

மேஷோ வ்ருஷோ த்வம்த்வ குளீரசாப
குரங்கவக்த்ராச்ச நிசாபலாஃ ஸ்யுஃ
துலாதரோ வ்ருச்சிக கும்பப்ருச்ச கந்யா
அலிமீநா திவஸாத்மிகாஃ ஸ்யுஃ

(சியாமசங்கிரகம்)

எனவரும் வசனத்தினால் அறிக. அதாவது: முன்செய்யுள் உரையில் கூறியுள்ள மேடாதி மகராந்தராசிகள் இரவில் பலமுடையதும், சிங்காதி மீனாந்தராசிகள் பகலில் பலமுடையதுமாகும் என்பதாம். (54)

## இராசி விழிப்பு செவிடு முடம் முதலியன

இனிய சிங்கம் எருதுஆடோடு இரவி உதிக்கில் குருடாகும்
கனியும் தண்டு ஞெண்டுக்கும் கங்குல் பொழுதில் கண்இல்லை
தனுவும் மகரம் இராச்செவிடுஆம் தராசும் தேளும் பகல்செவிடுஆம்
மனிதன் கும்பம் பகல்முடம்ஆம் மருவும் மீனம் இராமுடம்ஆம்.

(இ-ள்) மேடம்-ரிஷபம்-சிம்மம் பகலில் குருடாகும், மிதுனம்-கடகம்-கன்னி இரவில் குருடாகும். தனுசு-மகரம் இரவில் செவிடாகும், துலாம் விருச்சிகம் பகலில் செவிடாகும். கும்பம் பகலில் முடமாகும், மீனம் இரவில் முடமாகும் எ-று. (55)

## கிரகங்களின் சாதி நிறம் கதிர் முதலியன

ஆதவன் பவள நிறம்புரு டக்கோள்
அரசன்ஆம் கிரணம்ஐந்து உடையோன்
அம்புவி தவள நிறம்வைசி யப்பெண்
அணிகிர ணம்எழு மூன்றுஆம்
ஓதிய சேய்ஆண் செந்நிறம் அரசன்
உற்றநல் கிரணம்ஏழ் உளன்ஆம்
ஓங்கிய பச்சை நிறம்புதன் வைசியன்
உயர்வலி ஒன்பது கிரணன்
பீதகன் புருடன் குங்கும நிறத்தோன்
பிராமணன் தசகிர ணத்தோன்
பிருகுபெண் வெண்மை அந்தணன் ஈரெண்
பெற்றநல் கிரணமே உடையோன்
சூதன்ஆம் காரி மைவணன் நபுஞ்சன்
சூத்திரன் சுருதிஆம் கிரணன்
சூழ்கரும் பணிசெம் பாம்புஇரு கோளும்
சொல்வர் ஈனக்குலம் என்றே.

(இ-ள்) சூரியன் பவளம்போன்ற நிறம், ஆண்கிரகம் க்ஷத்திரிய ஜாதி, ஐந்து கிரணமுடையவனும். சந்திரன் வெண்மைநிறம், பெண்கிரகம், வைசியஜாதி, இருபத்தொரு கிரணமுடையவனும். செவ்வாய் சிவப்புநிறம், ஆண்கிரகம், க்ஷத்திரிய ஜாதி, ஏழு கிரணமுடையவனும். புதன் பச்சை நிறம், ஆணுமல்லாத பெண்ணுமல்லாத அலிகிரகம், வைசியஜாதி, ஒன்பது கிரணமுடையவனும். குரு பொன்னைப்போன்ற நிறம், ஆண்கிரகம், பிராமணஜாதி, பத்து கிரண முடையவனும். சுக்கிரன் வெண்மைநிறம், பெண் கிரகம், பிராமணஜாதி, பதினாறு கிரணமுடையவனும். சனி கறுப்புநிறம, அலிகிரகம், சூத்திரஜாதி, நான்கு கிரணமுடையவனும். ராகு கறுப்புநிதம், அலிகிரகம், பஞ்சமஜாதியாம். கேது செம்மைநிறம், அலிகிரகம், பஞ்சம சாதியாம் எ-று.

(வி-ரை) இங்கு கிரணம் என்று கூறப்பட்டவைகள் காலசக்கிர தசா வருஷங்களாகும். இதனை,

கறுதத கண்டர்வீ மேசுநர் கண்முதல்
கடிய காகம் இறுதிநால் கோணமே
நிறத்த வட்டம் துடியும்முக் கோணமே
நெடிய வட்டம்எண் கோணங் குனித்தனே
அறுத்த நீள்கதிர் ஐந்துஇருபத் தொன்றுஏழ்
ஆனஒன்பது பத்துநன் நான்கு நாள்
உறுத்தி ரண்டும் உதயன் முதலதாய்
உரைக்கும் நாசம் இறுதிஆய் ஓங்குமே. (வீமேசுரம்)

(இ-ள்) சூரியன் நாற்கோணம், சந்திரன் வட்டம், செவ்வாய் துடி, புதன் முக்கோணம், குரு நீண்டவட்டம், சுக்கிரன் எண்கோணம், சனி பிறைவடிவம், இராகு நீண்டவட்டவடிவமும் ஆவர். ரவிக்கு-5, மதிக்கு-21, செவ்வாய்க்கு-7, புதனுக்கு-9, குருவுக்கு-10, சுக்கிரனுக்கு-16, சனிக்கு-4 இவை கிரணங்களாம் எ-று.

ஆறு உகந்தணி ஆதிவீமேசர் கண்
ஆரல் மன்னர்பொன் அம்புலி அந்தணர்
தேறும் மால்வணி கன்பணி வெள்ளியும்
செய்ய சூத்திரர் சேய்க்கதி கேதுவும்
கூறும் கீழ், அரிவில் மறி வேந்தர் ஆம். (வீமேசுரம்)

(இ-ள்) சூரியன்-செவ்வாய்-க்ஷத்திரியஜாதி, சந்திரன்-குரு பிராமண ஜாதி, புதன் வைசியஜாதி, இராகுவும்-சுக்கிரனும் சூத்திரஜாதி, சனி-கேது சூத்திரஜாதியும் ஆகும் எ-று.

குருசுக்ரௌ விப்ரவர்ணௌ குஜார்கௌ க்ஷத்ரியௌ த்விஜ
சசிஸௌம்யௌ வைச்யவர்ணௌ சநிசூத்ரோ த்விஜோத்தம.

என வரும் பிருகத் பராசர ஓரையின்படி சூரியன்-அங்காரகன் க்ஷத்திரிய ஜாதி, புதன்-சந்திரன் வைசியஜாதி, குரு-சுக்கிரன் பிராமணஜாதி, சனி சூத்திரஜாதி என்று பெறப்படுதலின் பராசரஹோரை வசனத்தை அனுசரித்தே இந்நூலாசிரியர் கிரகங்களின் ஜாதியைக் கூறியிருக்கின்றார்

என்பது திண்ணம். வேறு நூல்களில் இக்கிரகசாதி கிரகங்கள் பலவிதமாகக் கூறப்பட்டிருப்பது மதபேதம்.

வீமேசுரத்தில் சந்திரனை பிராமணஜாதியாகவும், சுக்கிரனை சூத்திர ஜாதியாகவும், பிருகஜ்ஜாதகத்தில் புதனை சூத்திரஜாதியாகவும், வீமேசுரத்தைப்போலவே ஞானப்பிரதீபிகையிலும், பிருகஜ்ஜாதகத்தைப்போலவே சாராவளியும், பாரிஜாதமும் கூறப்பட்டிருத்தலின் இவையனைத்தும் பாராசரஹோரைக்குப் பிற்பட்ட நூற்களாதலின் இவைகளிற் கூறியுள்ள கிரகஜாதி பேதங்களை பூர்வபக்கப்படுத்தி, பராசர ஓரை வசனத்தையே சித்தாந்தப்படுத்தி இச்செய்யுளில் கூறியிருக்கின்றார் இந்நூல் ஆசிரியர் என்று அறிதல் வேண்டும்.

இந்நூலுள் கூறாது விடுத்த கிரக சொரூபங்களை பிறநூற்களிலிருந்து சங்கிரகித்துக் கூறப்படுகின்றன.

மதுபிங்களத்ருக் சதுரச்ரதநுஃ பித்தப்ரக்ருதிஸ்
ஸவிதால்பகசஃ தநுவ்ருத்ததநுர் பஹுவாதகபஃ
ப்ராக்ஞச்ச சசீம்ருதுவாக் சுபத்ருக். (பிருகஜ்ஜாதகம்)

(இ-ள்) சூரியன் பிங்களமென்னும் தேன்போன்ற நிறமான கண்ணும், நாற்கோண வடிவும், வலுவான புஜமும் சரீரமும், பித்தாதிக தேக சுபாவமும், அற்பத்தலைமயிரும் உடையவன். சந்திரன் யானையைப்போன்ற வலுவான தேகமும், கப வாத சிலேட்டும சம்பந்த தேக சுபாவமும், சற்குணமும், சுபநோக்கமும், மதியூகமும், மிருதுவான வாக்கும் உடையவன்.

க்ரூரத்ருக் தருணமூர்திர் உதாரஃ
பைத்திகஸ் ஸுசபலஃ க்ருசமத்யஃ
ச்லிஷ்டவாக் ஸததஹாஸ்யருசிர் க்ஞஃ
பித்தமாருதகப ப்ரக்ருதிச்ச.

(இ-ள்) குரூரதிருக் என்னும் செவ்வாய் நித்திய எவ்வன தேகமும், சஞ்சலமிகுதியும், மெலிந்த இடையும், ஈகையும், பித்த சம்பந்தமான தேக சுபாவமும் உடையவன். புதன் மதுரமாகப் பேசுதலும், சாதுரியமான வாக்குடைமையும், ஜனங்களிடத்தில் விசுவாசமும், பித்த வாத சிலேட்டும சம்பந்தமான தேகசுபாவமும், சத்குணமும் உடையவன்.

ப்ருஹத்தநுஃ பிங்களமூர்தஜேக்ஷணோ
ப்ருஹஸ்பதி ச்ரேஷ்டமதிஃ கபாத்மகஃ
ப்ருகுஸ் ஸுகீ காந்த வபுஸ் ஸுலோசநஃ
கபாநிலாத்மா ஸிதவக்ர மூர்தஜஃ

(இ-ள்) குரு பெருத்த சரீரமும், சத்குணமும், அழகும், தங்கநிறமான கண்ணும், அதுபோன்ற தலைமயிரும், தேக காந்தியும், தரும சிந்தையும், சிலேஷ்ம சம்பந்தமான தேக சுபாவமும் உடையவன். சுக்கிரன் நித்திய சுகமும், அழகும், வலிவுள்ள தேகமும், நல்ல பார்வையும், கறுத்து மெலிந்து சுருண்ட தலைமயிரும், வாத சிலேட்டும சம்பந்தமான தேக சுபாவ முடையவன்.

*மந்தோலஃ கபிலத்ருக் க்ருசதீர்ககாத்ராஃ ஸ்தூலத்விஜஃ*
*பருஷரோமகசஃ அலஸாத்மா ஸ்நாய்வஸ்த்ய ஸ்ருக்த்வ-*
*கதசுக்ரவஸாஸ்-ஸமஜ்ஜா-மந்தார்க சந்த்ரபுத சுக்ரஸுரேஜ்யபௌமாஃ*

(இ-ள்.) சனி பெருத்த பல்லும், முள்ளுகளைப்போல கடினமாயும் அழகில்லாததுமான தலைமயிரும், பெருத்த தேகமும், செய்காரியங்களில் சோம்பலுடைமையும், வாத சம்பந்தமான தேக சுபாவமும் உடையவன். சூரியனுக்கு எலும்பும், சந்திரனுக்கு இரத்தமும், செவ்வாய்க்கு எலும்புக் குள்ளிருக்கும் மூளையும், புதனுக்குத் தோலும், குருவுக்கு (மாமிசம்) தசையும், சுக்கிரனுக்கு இந்திரிய (சுக்கில) மும், சனிக்கு நரம்பும் ஆகிய தாதுக்களாம்.

இவற்றினால் பிரயோசனம் என்னை எனின்? ஜனனகாலத்தில் எந்த கிரகம் சட்பலத்தில் அதிக பலமாக இருக்கின்றதோ அந்த கிரக தாதுசாரமும், சொரூபமும் ஜாதகனுக்கு உண்டாகுமென்பதாம். (56)

## கிரகங்களுக்குரிய விலங்குகளின் கொம்புகளாவன

சொல்லிய ரவிக்குச் சிரசுமத் தியினில்
துலங்குகூ ரிலாமல்மேல் நோக்கும்
துய்யகொம்பு உளதாம் வெண்பிறை தனக்கே
சொற்றனர் கொம்புஇலை என்றே
வல்லசெவ் வாய்க்குச் சிரநடு மேலாய்
வளர்ந்துஎழு கூரிய கொம்பு ஆம்
மாலவன் தனக்கே சிரத்துஒரு புறத்தின்
மருவிய கொம்புஉளது ஆகும்
நல்லபீ தகற்கே சென்னிமத் தியினில்
நாடிடு கொம்புஎன நவில்வர்
நாடுசுக் கிரற்குச் சென்னியின் பக்கம்
நலம்உடன் செறிந்திடு கொம்புஆம்
அல்லல்சேர் காரி இருவகைப் பாம்பு
ஆகிடும் மூவர்கள் தமக்கு
அறுத்தி மறுப்பட்டு இருந்துகீழ் நோக்கும்
ஆகிய கொம்புஉளது ஆமால்.

(இ-ள்.) சூரியனுக்கு தலையினின் நடுவில் கூர் இல்லாமல் மேல் நோக்கும் கொம்புடையதும், சந்திரனுக்குக் கொம்பு கிடையாததும், செவ்வாய்க்குத் தலை நடுவில் மேல்வளர்ந்து எழுந்த கூர்மையான கொம் புடையதும், புதனுக்கு தலையின் ஒருபக்கத்தில் கொம்புடையதும், குரு வுக்குத் தலைநடுவில் கொம்புடையதும், சுக்கிரனுக்குத் தலையின் பக்கத்தில் கொம்புடையதும், சனி - ராகு - கேதுக்களுக்கு அறுக்கப்பட்டதனால் உண்டாகிய மருவுடன் கூடி கீழ்நோக்கிய கொம்புடையதுமான மிருகங் களாம் எ-று.

(வி-ரை.) புதாதித்யௌ புக்நச் ருங்கௌ சந்த்ரச் ச்ருங்கவிவர்ஜிதஃ
ஹ்ரஸ்வச்ருங்கஃ குஜோதீர்க ச்ருங்கௌ ஜீவ கவீ ததா
சநி ராஹு பக்நச்ருங்கௌ ச்ருங்கபேதா உதாஹ்ருதாஃ
(ஞானப்பிரதீபிகை)

(இ-ள்.) சூரியன் புதனுக்கு வளைந்த கொம்பும், சந்திரனுக்குக் கொம்பில்லாமையும் செவ்வாய்க்குக் குட்டைக் கொம்பும், குரு-சுக்கிரனுக்கு நெட்டைக்கொம்பும், சனி-ராகு-கேதுக்களுக்கு ஒடிந்த கொமபுமாம் எ-று.

ஆசிரியர் கருத்துக்கும் ஞானப்பிரதீபிகை கருத்துக்கும் மதபேதமிருக்கின்றது. வீமேசுரமும் ஞானப்பிரதீபிகையும் ஒரே கருத்துடையதாகும். (57)

## கிரக பஞ்சபூதங்களாவன

கண்டபஞ்ச பூதமாய் நின்ற ஆறு
கருதுவாய் செவ்வாயே தேயு ஆகும்
மிண்டியசுக் கிரன்றன் அப்பு ஆனபூதம்
மேலான ஆகாயம் குருவ தாகும்
கொண்டுஇருந்த பிரிதிவியே புந்தி ஆகும்
குலவியநல் நுதல்மாதே கூறக் கேள்நீ
கொண்டதொரு காற்றுருவம் ஆன பூதம்
கோதுற்ற சனியென்றே குறித்தார் மேலோர்.

(இ-ள்) செவ்வாய் தேயுபூதத்தினதும், புதன் பிருதிவிபூதத்தினதும், குரு ஆகாயபூதத்தினதும், சுக்கிரன் அப்புபூதத்தினதும், சனி வாயுபூதத்தினதும் அம்சமானவர்கள் எ-று.

(வி-ரை.) (சூரியன்-தேயுவும், சந்திரன்-அப்புமாவர்) சூரியசித்தாந்தத்தில் "அக்நிஷோமௌ பாநுசந்த்ரௌ" என்ற வாக்கியத்திற்கு வியாக்யானம் ஸூர்யோ அக்நிஸ் வரூபஸ்தேஜோ சோளகச் சாக்ஷுஷத்வாத், சந்த்ரஸ்து ஸோமஸ்வ ரூபஃ, மத்யஸ்ய ஸோமவாச்யத்வாஜ் ஜலகோள ரூபஃ என்று செய்யப்பட்டிருத்தலின் சூரியன்-தேயு அம்சமும், சந்திரன் அப்பு அம்சமும் ஆவர்.

இந்நூலாசிரியர் செவ்வாய்-பிருதிவினதும், புதன்-வாயுவினதும், குரு-தேயுவினதும், சுக்கிரன்-அப்புவினதும், சனி-ஆகாயத்தினதும் அம்சமாவார்கள் என்று கூறியிருக்கிறார். பின் கூறப்படும் ஏதுக்களினால் இங்ஙனங் கூறிய ஆசாரியர் வசனம் தவறாகக் காணப்படுதலின், இத்தவறுதலை அச்சேற்றினர் பிழையெனக்கோடலே அறிவுடையோர்க்கடுத்த செயலாமாகலின் திருத்தி யமைத்தாமென்க.

'சிகி-பூ-க-பயஃ மருத்கணாநாம் வசிநோ பூமிஸுதாதயஃ க்ரமேண" என்ற வராக மிகிராசாரியர் வசனத்தினால் செவ்வாய்-தேயுவினதும், புதன்-பிருதிவியினதும், குரு-ஆகாசத்தினதும், சுக்கிரன்-அப்புவினதும், சனி-வாயுவினதும் அமிசமாவார்கள் என்று நன்கறியப்படுதலினால் இச்செய்யுளை இவ்வண்ணம் திருத்தியதென்க. மற்றும்,

*அக்நி பூமி நபஸ் தோய வாயவஃ க்ரமதோ த்விஜ*
*பௌமாதீநாம் க்ரஹாணாஞ்ச தத்வாச் சாமீ ப்ரகீர்திதஃ*

எனவரும் பராசரர் வசனத்தினுலும் நன்கு அறிந்துய்க.

*மாயைஒடு விரவும்அந்த சிவத்தின் நின்றும்*
*பழுதைமா சுணமே போல*
*வாயவபஞ் சீகிருத சூக்குமஆ காயமும்*
*மற்று அதின் இருந்து*
*வாயுவும் மற்று அதின் அழலும் அதில்சலமும்*
*அதிலிருந்து வயங்கு மன்னும்*
*ஆயவபஞ் சீகிருத மாகவே*
*யம்மாவுற் பத்தி யான.*

என சூதசம்மிதை எக்கிய வைபவகாண்டம் தைத்திரீய உபநிடத தாத்பரியம் உரைத்த அத்தியாயம் 9-வது செய்யுள் கூறுமாற்றால் அவ்வியக்த சிருஷ்டியினுள் பஞ்சபிரம்மமே, வியக்த சிருஷ்டியினுள் பஞ்சபூத வடிவமாஞர் அது எங்ஙனம் எனின்?

"தஸ்மாத் ஆத்மாந ஆகாஸஸ் சம்பூதஃ, ஆகாசாத்வாயுஃ வாயோர் அக்நிஃ, அக்நேர் ஆபஃ, அத்யப்யஃ ப்ருதிவி, தாநிபஞ்ச தந்மாத்ராணி குணுபவந்தி" என பைங்கள உபநிடதமும்:—

*பாரிடை ஐந்துஆய்ப் பரந்தாய் போற்றி*
*நீரிடை நான்காய் நிறைந்தாய் போற்றி*
*தீயிடை மூன்ருய் திகழ்ந்தாய் போற்றி*
*வளியிடை இரண்டாய் மகிழ்ந்தாய் போற்றி*
*வெளியிடை ஒன்ருய் விளைந்தாய் போற்றி* (திருவாசகம்)

என அருள்நெறி தமிழ்வேதத்திலுங் கூறப்பட்டிருத்தலின் பரமாத்மாவினுடைய இசசாவசத்தினுல் சதாசிவ தத்துவமே சப்தகுணமான ஆகாசமாகவும், ஈசுவரதத்துவமே சப்த பரிச குணமுடைய வாயுவாகவும், ருத்திர தத்துவமே சப்த பரிச ரூப குணமுடைய வன்னியாகவும், விஷ்ணு தத்துவமே சப்த பரிச ரூப ரச குணமுடைய ஜலமாகவும், பிரம்ம தத்துவமே சப்த பரிச ரூப ரச கந்த குணமுடைய பூமியாகவும் மேல்கிரமத்தை அநுசரித்து ஒன்றிலிருந்து மற்றொன்று ஆவிர்பவித்ததென்பதாம்.

*அக்நிஷோ பாநுசந்த்ரௌத தஸ்த்வங்கார காதயஃ*
*தேஜோபூகாம் புவாதேப்யஃ க்ரமஸஃ பஞ்சஜஜ்ஞிரே* (சூரியசித்தாந்தம்)

(இ-ள்.) அக்கினியிலிருந்து அங்காரகனும், பூமியிலிருந்து புதனும், ஆகாசத்திலிருந்து குருவும், ஜலத்திலிருந்து சுக்கிரனும், வாயுவிலிருந்து சனியும் இப்படி பஞ்சபூதியங்களிலிருந்து பஞ்சதாராகிரகங்கள் உற்பவித்ததென்பதாம். (58)

## இராசிமான சங்கியை

**வேண்டியமே டம்நாலே கால்என்று ஓதும்**
**மேன்மைஇலங் கைக்குஅககஆம் இரும்சோழ நாட்டில்**

ஈண்டியதோர் சாயைரெண்டும் கழித்துக் கண்ட
இலக்கம்ஆம் மதுரைஎழில் காஞ்சி காசி
நீண்டுஉதிக்கும் பெங்களூர் தனக்கும் சாயை
நின்றதுபார்த் தால்குறைந்து நிற்கும் மேடம்
ஆண்தகைசேர் விழுச்சாயை கண்டால்: சன்மம்
ஆகும்மனை லக்கினசுத்தி அறிந்து செப்பாய்.

(ப-ரை.) வேண்டிய-இலக்கினங் கணிக்கப்படுவதற்கு வேண்டப்படுவதாகிய மேடாதி இராசிப்பிரமாணங்கள், மேன்மை இலங்கைக்கு=பூமத்ய நாடிஸ்தானமென்று சோதிட சித்தாந்தங்களில் கூறும் பெருமையை பெற்றிருக்கின்ற இலாங்காபுரிக்கு, அகசு ஆம்=தினப்பிரமாணமாம் அறுபது நாழிகையில் அடங்கியிருக்கின்ற மேஷராசி பிரமாணமாகிய 278-விநாடியிலிருந்து, இரும் சோழ நாட்டில்=பெரிய சோழதேசத்தில், ஈண்டியது ஓர்=இவ்வண்ணம் தினப்பிரமாணமாம் அறுபது நாழிகையில் அடங்கியிருக்கிற மேஷராசி பிரமாணத்தை ஆராய்ந்து அறிதற்காக, சாயை இரண்டும்=விஷுவச் சாயாங்குலம் இரண்டும், வியங்குலம்=பதினெட்டுக்கும் உரிய சரபிண்டத்தொகையை, கழித்துக் கண்ட இலக்கம்=கழித்து ஏற்பட்ட எண்ணுனது, ஆம் மேடம் நாலேகால்என்றுஓதும்=மேடம் நாலேகால் நாழிகை என்று சொல்லப்படுவதாகும், மதுரை எழில் காஞ்சி காசி=மதுராபுரி, அழகிய காஞ்சிபுரி, காசிபுரிகளுக்கும், நீண்டு உதிக்கும்=க்ஷிதிஜ ஸ்தானத்தைவிட சற்றுநேரம்பொருத்து சூரியோதயமாகும், பெங்களூர் தனக்கும்=பெங்களூருக்கும், சாயை நின்றது பார்த்தால்=விஷுவச் சாயாங்குலத்தின் இருப்பை அறிந்தால், குறைந்து நிற்கும் மேடம்=இலங்கைக்குரிய மேடராசி பிரமாணத்திலும் இவ்விடங்களுக்குரிய மேடராசிப் பிரமாணம் குறைவாக இருக்கும் ஆதலால், ஆண் தகைசேர் விழுச்சாயை கண்டால=இராசிமானத்தை கணிப்பதற்கு முதன்மைபெற்றவிஷுவச் சாயாங்குலம் வியங்குலங்களைப் பார்த்து, சன்மம் ஆகும்மனை=பிறக்கின்ற இராசியாகிய, இலக்கினம் சுத்தி=இலக்கினத்தினுடைய சுத்தத்தை, அறிந்து செப்பாய்=அறிந்து சொல்லுவாய்.

(வி-ரை) இச்செய்யுள் 4-வது அடியிலுள்ள "ஈண்டியதோர் சாயைரெண்டுங்கூட்டிக்கண்ட இலக்கம் ஆம்" எனவரும் இத்தொடர்மொழிகளில் "கூட்டிக்கண்ட இலக்கம் ஆம்" எனறிருப்பது தவறு. "கழித்துக்கண்டஇலக்கம் ஆம்" என்றிருத்தல் வேண்டும். யாதுபற்றி எனின்? கூறுதும். இந் நூலாசிரியரே இலங்கை ராசிமான சங்கியைப் படலத்தில் 3-வது செய்யுள் 3-வது அடியின் பிற்பாதியிலும், 4-வது அடியிலும "சார்மேடம் விடை மிதுனம் தன்னின் முறையாக, இப்புவியோர் புகர் இலங்கை ராசிதனில் களைய, இயல்தேச ராசி அளவு ஆகும் எனல் ஆமே" எனக் கூறியிருத்தலின் எந்த தேசத்திற்கும் மேடம் இடபம் மிதுனம் இந்த மூன்று ராசிகளுக்குரிய இலங்கோதிய ராசிமான விநாடியிலிருந்து, அநதந்த தேசத்திற்குரிய முதல் இரண்டு மூன்றும் சரபிண்டத் தொகைகளைக் கழிக்கவேண்டுமென்பது நன்கு விளங்காநிற்கும்.

சோழ நாடு=சோணாடு. அது சோழதேசம். சோழகுலத் தரசர்க்குரிய தேசம், கிழக்குந் தெற்குங் கடலும், வடக்கே வெள்ளாறும், மேற்குப்

பாண்டிநாடும் எல்லையாகவுடைய தேசம் இது காவிரிப்பூம்பட்டினம், கருவூர், திருவாரூர் முதலிய சிறந்த ராஜமாநகரங்களைப் பண்டைநாள்முதல் உடைத்தாயிருக்கப்பெற்றது. பின்னர்நாள் அதிப்பிரபல்லியமுடையதாகிய தஞ்சைமாநகரம், திருக்குடந்தைமாநகரங்களைத் தன்னகத்தே யுடையது.

இதன் எல்லை—

கடல்கிழக்குத் தெற்குக் கரைபொரு வெள்ளாறு
குடதிசையில் கோட்டைக் கரையாம்—வடதிசையில்
ஏணாட்டுப் பண்ணை இருபத்து நாற்காதம்
சோணாட்டுக் கெல்லைஎனச் சொல். (தனிப்பாடல்)

எனவரும் வெண்பாவினால் நன்கு விளங்கும்.

தமிழ் நாட்டெல்லை:—

கிழக்கே குணகடல், தெற்கே கன்னியாகுமரி, மேற்கே குடகு, வடக்கே திருவேங்கடகிரி என்னும் இந்த நான்கு எல்லையினையுமுடைய தமிழ் நாட்டின் மத்திய (ஸ்வஸ்திக்) நாடியானது, முன்னொருகாலம் சோழநாட்டரசர்களுக்கு இராஜதானியாயிருந்த கருவூரின்கண்மே அமைகின்றது. அதன் தக்ஷிணோத்தர ரேகை குமரிக்கடலினின்றும் மதுரை கோயில் நேராய் வடக்கு நோக்கியும், பூர்வ பச்சிமரேகை குண கடலினின்றும் திருவேரகம் ஜம்புகேசுவரம் வழியாக இரத்தினகிரிக்கோயில் நேராய்மேற்குநோக்கியும் கருவூரில் சந்தித்துச் செலலுகின்றன. வாக்கிய பஞ்சாங்கத்து நக்ஷத்திர கண்டத்திறுகச சேர்க்கப்படும் 'மாணயாதி" வாக்கியத்தாலும், முற்காலத்துள்ள சோதிட சித்தாந்திகள் பலர் இலங்கோதயத்தினின்றும் கருவூருக்கே தேசாந்திர சமஸ்காரஞ் செய்து பஞ்சாங்கங் கணித்தனரென அறியலாம். ஆகவே இச்செய்யுளில் சோழநாட்டின் இராஜதானியாகிய கருவூருக்குரிய விஷுவச்சாயை அங்குலம்-2 வியங்குலம் 18-க்குரிய மேடராசி பிரமாணம் நாழிகை $4\frac{1}{4}$ என்பதைக் குறிப்பிட்டார் இந்நூல் ஆசிரியர் என்க. இவ்வுண்மையை யுணராத ஒருசிலர் "வேண்டிய மேடம் நாலேகால் என்று ஓதும் மேன்மை இலங்கைக்கு அகசு ஆம்" என்ற தொடர்மொழிப் பதங்களுக்கு மேடம் $4\frac{1}{4}$-நாழிகை என்பது இலங்கைக்கு அகசு என்று மயங்கிப் பொருள்கூறுவர். என்னே அறியாமை உண்மையுணராது பிறரை மயங்கவைத்தல் தமக்கோர் அரிய தவசித்தியெனக் கருதுவர்போலும்.

பொருள் சிறப்புநோக்கி இச்செய்யுளுக்கு இவ்வாறு கொண்டு கூட்டிப் பொருள் கொள்ளப்பட்டது; இனி நேரே யாற்றொழுக்காகப் பொருள் கொள்வது இத்துணை பொருத்தமும் சிறப்பும் ஆகா 2-வது அடியில் "சாயை ரெணடு-உம்" என்ற பதத்திலுள்ள உம்மை எண்ணுப்பொருளது. ஆகவே சாயை 2-அங்குலம் 18-வியங்குலமும் எனக் கூறினும். கருவூரின் விஷுவச்சாயாங்குலம் இதுவேயாம்.

ஜாதக சாகரத்தின்படி கருவூரின் சரகண்டம்:

விஷுவச்சாயை $2\text{-}18 \times 10 = 23$ இது முதல் சரகண்டத்தை 3-ஆல் 5-ஆல் வகுக்க ஈவு 3, மீதம் $3 \times 60 = 180 \div 5 = 36 =$ ஆகவே 3-36ஐ23ல் கழிக்க 19-24 இது 2-வது சரகண்டமாம். முதல் சரகண்டத்தை 3-ஆல் வகுத்த ஈவு-7, மீதம் $2 \times 60 = 120 \div 3 = 40$ மூன்றுவது சரகண்டம்7-40 அர்த்தோத்தசியாயப்படி 1-வது 23, 2-வது 19, 3வது 8 என்பதாம்.

சோழநாட்டின் (கருவூரின்) இராசிமானம்

| | மேடம் | ரிஷபம் | மிதுனம் | கடகம் | சிம்மம் | கன்னி |
|---|---|---|---|---|---|---|
| இலங்கை ராசிமானம் | 278 | 299 | 323 | 323 | 299 | 278 |
| கருவூர் சரகண்டம் | ரி-23 | ரி-19 | ரி-8 | த-8 | த-19 | த-23 |
| கருவூர் இராசி விநாடி | 255 | 280 | 315 | 331 | 318 | 301 |
| | மீனம் | கும்பம் | மகரம் | தனுசு | விருச் | துலாம் |
| கருவூர் இராசி நாழி | 4-15 | 4-40 | 5-15 | 5-31 | 5-18 | 5-1 |

இந்த கருவூர் இராசிமானத்தைக்கொண்டே இக்காலத்தில் சாமான்ய சோதிடர்கள் இலக்கினங் கணிக்கின்றனர். இது கருவூர்க்குரியதேயன்றி வேறு இடங்களுக்கு எட்டுணையும் உரியதாகாது. இந்தக் கருவூர் இராசி மானத்தில் மீனம், மேடம் $4\frac{1}{4}$, மிதுனம்-மகரம் $5\frac{1}{4}$ ஆக கால் அரை என்ற கணக்குடன் இருத்தலின் இவைகளை விட்டு கடகம்-தனுசு $5\frac{1}{2}$-க்குமேல் ஒரு விநாடியும், சிங்க விருச்சிகம் $5\frac{1}{4}$-க்குமேல் 3 விநாடியும், கன்னி-துலாம் 5-க்குமேல் ஒரு விநாடியும் அதிகமாக இருத்தலின் அவைகளைக் கூட்ட 5-விநாடியாதலால் இதனை ரிஷப கும்பம் நாழிகை 4-40-ல் சேர்த்து $4\frac{3}{4}$ என்று வழங்கப்பட்டு வந்ததாக தெரிகிறது. இங்ஙனம் சேர்த்துரைத்தல் கணித சாஸ்திரத்திற்கு முற்றும் விரோதம். நாழிகையுடன் விநாடிகளை பின்னத்துகையாகிய கால் அரை முக்கால் என்று வாய்பாடுபோல வழங்குதலுக்குச் சுலபமாயிருக்க வேண்டுமென்பதுபற்றி இங்ஙனம் அமைத்துக் கொண்டனர்போலும். இதனை,

அரிமகரம் தேள்மிதுனம் ஐஞ்சே காலாம்
ஆடுகயல் நாலேகால் அரிவைதுலை ஐஞ்சாம்
எருதுகுடம் நாலேமுக் கால்வில்லு மலவன்
இருகடிகை ஐஞ்சரையூண் இராசிகள் பன்னிரண்டும்.

(சூடாமணி உள்ளமுடையான்)

எனவரும் செய்யுளால் அறியலாம். இச்செய்யுளில் கூறிய இராசிமானம் எந்த ஸ்தானத்திற் குரியதென்பதை அதன் ஆசிரியர் கூறவில்லை. ஆனால் இது கருவூருக் குரியதென்பது திண்ணம். இதில் எட்டுணையும் சந்தேகமே இல்லை.

இலங்கை = லங்கா என்னும் வடமொழி; முதலில் லகரத்துக்கு முன்னம் இகரம்பெற்று, ஆவீறு ஐயாயிற்று. கடலிடைத்தீவு-தென்கடலிடையே யுள்ளது. எவருங் கடந்து வருவதற்கு அரிய அளவிறந்த பரப்புடைய கடலே அகழியாக இயற்கையில் அமையப்பெற்று, கோட்டைமதில் சேனை முதலிய காப்புக்கள் மிக்க இருந்ததனால் "மேன்மை இலங்கை" என்றுகூறப் பட்டது.

ராக்ஷஸாலய தேவௌகஃ சைலயோர் மத்ய சூத்ரகஃ
ரோஹீதகம் அவந்தீச யதாஸந்நி ஹிதம்ஸரஃ (சூரிய சித்தாந்தம்)

எனவரும் வசனத்தின்படி அதாவது: இராக்ஷஸ ஆலயம் என்னும் இலங்கையிலிருந்து ரோஹீதகம் என்னும் அவந்தி (உஜ்ஜயினி) க்கு நேராய், தேவ

சைலம் என்னும் மகாமேருவரையிலும் செல்லும் ரேகைக்கு பூமத்திய சூத்திரம் என்று பெயர். இது பூமியின் வடக்குத் தெற்கான நடுரேகைஎனனப்படும். இதுவே தேசாந்தர ரேகையாகும். இப்படியே பூமியின் கிழக்குமேற்கான குறுக்கு ரேகையான கிரட்சரேகையும் இலங்கையிலேயே சந்திக்கின்றது. ஆதலால் இலங்கையின் இராசிமானத்திலிருந்து அந்தந்த இடங்களின் இராசிமானத்தை அறியவேண்டியதென்று சோதிட சித்தாந்தங்களில் கூறப்பட்டிருத்தலின் "மேன்மை இலங்கை" என்றார் என்பது மிக்கப் பொருத்தமுடையதாகும்.

தேசாந்தரம் (கருவூரிலிருந்து)

[மதுரை-0, பெங்களூர் மேற்கில் 0-30, காசி கிழக்கில் 1-55
காஞ்சி கிழக்கில் 1-30-ல் இருக்கின்றது என்றறிக.]

கருவூரில் இருந்து தக்ஷிணோத்தர (தேசாந்தர) ரேகையானது மதுரை கோயிலுக்கு நேராய் வடக்கு நோக்கிச் செல்லுதலின் முன்பு சோழநாடு எனவே அதன் தலைமை இராஜதானியாகிய கருவூரையும், பின்பு அதன் ஸ்வஸ்திக் (மத்திய) ரேகையிலேயுள்ள மதுரையையும் கூறியிருக்கின்றார். பின்பு கருவூர் மத்தியரேகைக்குக் கிழக்கில் 1-பாகை 30-கலை (தனதேசாந்தர விநாடி-15)யில் உள்ள காஞ்சிபுரமும், அதன்பின் அம்மத்தியரேகைக்கு கிழக்கில் 1-பாகை 55-கலை (தனதேசாந்தர விநாடி-19) யில் உள்ள காசி க்ஷேத்திரத்தையும் கூறியிருக்கின்றார்.

பின்பு கருவூர் மத்தியரேகைக்கு மேற்கில் பாகை-0, கலை-30-ல் (குண தேசாந்தர விநாடி-5) உள்ள பெங்களூரைக் கூறியிருக்கின்றார். கழிவூரில் சூரிய உதயமானபின் சிறிது நிமிஷம் சென்று பெங்களூரில் சூரியோதயம் ஆவது கணித சாஸ்திர சித்தமும் அநுபவ காட்சியு மாதல்பற்றியும்,எதுகை நயம் நோக்கியும் "நீண்டு உதிக்கும்" பெங்களூர் என்று கூறினர். (59)

## இலக்கினத் தியாஜ்யம்

செப்பிடுமே டம்மிடபம் கன்னியுநல் தனுவும்
திகழவே முற்பாகத்து அரைக்கடிகை தானும்
ஒப்புஅறுசிங் கம்கும்பம் கோல்மிதுனம் நான்கும்
உரைப்பர்இடப் பாகத்தில் அரைக்கடிகை என்றே
தப்புஅறுதேள்மகரம்உடன் கயல்கடகம் தனக்கே
சாற்றுவர்பின் பாகத்தில் அரைக்கடிகை என்றே
மைப்பொருகண் இபமருப்புக் கொங்கைநல்லாய் இதனை
வயங்குவிட காலம்என்பர் மறையுணர்ந்த மேலோர்.

(இ-ள்) மேடம்-ரிஷபம்-கன்னி-தனுசு ஆகிய இந்த ராசிகளின் முதல் பாகத்தில் அரைநாழிகையும், மிதுனம்-சிங்கம்-துலாம்-கும்பம் ஆகிய இந்த ராசிகளின் நடுப்பாகத்தில் அரைநாழிகையும், கடகம்-விருச்சிகம்-மகரம்-மீனம் ஆகிய இந்த ராசிகளின் கடைப்பாகத்தில் அரைநாழிகையும் விஷ காலமாகும் எ-று. (60)

கிரகசீலப்படலம் முற்றிற்று.

---

# ஜனன காலப் படலம்

## பிரசவித்த வீடுமுதலானதை அறிய

சேய்உதிக்கும் மனையிருக்கும் திசைமகரம் சிங்கம்
சென்மலக் கினம்ஆயின் ஆம்தெற்கு வாசல்
ஆய்உதிக்கும் கன்னிதனு சேல்மிதுனம் வடக்குஆம்
அணியிடபம் மேற்குஆகும் ஆடுஅலவன் ஒரு
வேய்உதிக்கும் தோள் அணங்கே கும்பம்விருச் சிகம்கோல்
விளங்குஅமரர் வேந்தனுர் திசைஎனவே விளம்பாய்
தேய்பிறைக்கு நெய்தீபத்து இல்லேவளர் பிறைக்கே
செப்பிடுவாய் நெய்விளக்கில் நிறையும்எனத் தேர்ந்தே.

(இ-ள்) குழந்தை பிறந்த மனையில் உள் அரையானது ஜனன லக்கினம் சிங்கம்-மகரம் ஆனுல் தெற்குப் பக்கத்திலும், மிதுனம்-கன்னி-தனுசு மீனம் ஆனுல் வடக்குப் பக்கத்திலும், ரிஷபம் ஆனுல்மேற்குப்பக்கத்திலும் மேடம்-கடகம்-துலாம் - விருச்சிகம் - கும்பம் ஆனுல் கிழக்குப்பக்கத்திலும் உள்ளதென்று சொல்லுதல்வேண்டும். ஜனனம் பூர்வபட்சமானுல்தீபத்தில் எண்ணெய் நிறைந்திருந்ததென்றும், அமரபட்சமானுல் குறைந்திருந்த தென்றும் சொல்லுதல் வேண்டும் எ-று.

(வி-ரை) எந்த ராசியிலேனும் இந்த ராசி அம்சத்தில் ஜனனமானுல் இங்ஙனமே கூறுதல்வேண்டும். பழையபிரதிகளில் 1-வது அடியில் ஒருசிங்கமும் 2-வது அடியில் ஒரு சிங்கமும் ஆகக் கூறப்பட்டிருப்பதும், மேடம்-கடகங்களை கூருமல் விடப்பட்டிருப்பதும் அச்சேற்றிஞரால் நேர்ந்த பிழையாகும் ஆதலால் இவற்றும் 2-வது அடியின் முன்பாதியிலிருந்த சிங்கத்தைநீக்கியும் இந்த அடியின் பின்பாகத்தில் மேடம் கடகத்தைச்சேர்த்தும் அமைக்கப்பட்டிருக்கின்றன. இதனே,

*மதிகுளிர் துலேதேள் கும்பம் வந்ததேல் வாழ்மனேக்குக்*
*குறிகிழக்கு ஆகும் சென்மம் கோதண்டம் மிதுனம் கன்னி*
*செறிகயல் சேர்மனேக்குச் சென்மமும் வடபால் ஆகும்*
*தறிவிடை மேற்குஆம் சிங்கம் தாவுமான் தெற்க தாமே.*

எனவரும் சாதக சூடாமணி வசனத்தில் இனிது அறியலாம். இதை அறிந்து விளக்கும் ஆற்றல் இல்லாத சில்லோர் தாம் பிடித்த முயலுக்கு மூன்றே கால் என்பதுபோல இரண்டு சிங்கத்தில் ஒன்றை நீக்குதற்கும், மேடம்-கடகத்தைச் சேர்ப்பதற்கும் ஆதாரமில்லே என வீண்வாதம் புரிகின்றனர். என்னே அறியாமை. மற்றும் இதனே,

*மேஷ குளிர துலா அளி கடை:*
*ப்ராகுத் தரதோ குருஸௌம்ய க்ருஹே*
*பச்சிம தச்ச வ்ருஷேண நிவாஸோ*
*தக்ஷிணயாக கரௌ ம்ருக ஸிம்ஹௌ.*

எனவரும் பிருகஜ்ஜாதக வசனத்திஞலும் நன்கு அறிலாம்.

அதாவது, ஜனனலக்னம் மேடம்-கடகம்-துலாம்-விருச்சிகம்-கும்பம் ஆனால் வீட்டில் கிழக்குப்பக்கத்திலுள்ள அறையிலும், மிதுனம்-கன்னி-தனுசு-மீனம் ஆனால் வடக்குப்பக்கத்திலுள்ள அறையிலும், ரிஷபம் ஆனால் மேற்குப் பக்கத்திலுள்ள அறையிலும், மகரம்-சிங்கம் ஆனால் தெற்குப் பக்கத்திலுள்ள அறையிலும் ஜனனம் என்பதாம். வீட்டினுடைய சுற்றளவை; அதாவது தெருத் தாழ்வாரம், தோட்டத்துத் தாழ்வாரம்வரை, மற்றிரு பக்கத்துத் தலைச்சுவர்கள்வரை அளந்து பாதியாக்கித் திசைகளை நிர்ணயித்தல் வேண்டும். உதாரணம்:—கிழக்கு மேற்கு வீதியில் வடக்குப் பார்த்த வாசலுள்ள ஓர் வீட்டில் மேஷத்தில் ஒரு சிசு ஜனனம். அம்மனையின் தெருத்தாழ்வாரமுதல் தோட்டத்துத் தாழ்வாரம்வரை கஜம்-15, தலைச்சுவர்களின் இடைவெளி, அதாவது கிழக்கு மேற்குக் கஜம்-8 ஆகவே இந்த வீட்டின் கிழக்குத் திக்கிலிருந்து 8-கஜம்வரை கிழக்குப் பாகமும், அதிலிருந்து 8-கஜம்வரை மேற்குப் பாகமும் ஆகும். ஆதலால் ஷை சிசு கடகலக்னமாதலால் கிழக்குப் பாகத்திலுள்ள அறையில் ஜனனம் என்று ஏற்படுகின்றது. அனுபவத்திலும் சரியாகவே இருக்கின்றது. பிறவும் இங்ஙனமே அறிக.

"தீபஃ பூர்ணஃ பூர்ணே சசினி க்ஷீணே க்ஷயஸ்து தைலஸ்ய" என்ற சாராவளி வசனத்தைத் தழுவி தீபத்தின் தைலபூர்ண, க்ஷீணத்தை இந்நூலாசிரியர் கூறியிருக்கின்றார். இங்ஙனம் நோக்கும்போது அமர சந்திரனால் தீபமின்றிய இருளில் ஜனனமென்று சொல்லவேண்டி வருதலின் இது யுக்தமாகக் காணப்படவில்லை.

ஆகவே,

ஸ்நேஹச் சசாங்காத் உதயாச்ச வர்த்திர்
தீபோர்க்க யுக்தர்க்ஷ வசாச் சராத்யஃ
த்வாரஞ்ச தத்வாஸ்து நி கேந்த்ர
ஸம்ஸ்தைர் க்ஞேயம் க்ரஹைர் வீர்யஸமர் விதைர்வா.

(பிருகஜ்ஜாதகம்)

(இ-ள்) சிருத தைலாதி (நெய்-எண்ணெய்)களை சந்திரனால் நிர்ணயித்தல் வேண்டும். அது எங்ஙனமெனின், சந்திரன் தான் இருந்த ராசியின் முற்கூறில் இருந்தால், தீபபாத்திரத்தில் (விளக்கில்) தைலம் நிறைந்திருக்கும். இராசிமத்தியி லிருந்தால் தைலம் பாதிபாகமிருக்கும். இராசி அந்தத்திலிருந்தால் தைலமே இல்லை என்றும் சொல்லுக. இலக்கினத்தினால் வர்த்தியை நிர்ணயித்தல்வேண்டும். அது எப்படி எனின் பிரசவ லக்கினாரம்பத்தில் ஜனனமானால் தீபத்தில் அப்போதே வர்த்தி போடப்பட்டதென்றும், மத்தியபாகமானால் போட்டிருந்த பாதி வத்தியில் எரிந்தன போகமீதி பாதிவத்திதான் இருந்ததென்றும், அந்திய பாகமானால் போடப்பட்டிருந்த வத்தி முழுதும் எரிந்துபோய் கொஞ்ச பாகம்தான் இருந்ததென்றும் சொல்லவேண்டுமென்க. "லக்நஸ்யோத்ர வர்ணே - நிர்திஷ்டஸ் தேந-வர்திராதேச்யா" என்ற மணித்தர் வசனத்தினால் இலக்கின ராசிக்குரிய நிறமே வத்தியின் நிறமென்று சொல்லுதல் வேண்டும். இதனை அடுத்த செய்யுளில் கூறியிருக்கின்றார் இந்நூல் ஆசிரியர்.

சுலோகம்

*கதம்ராடி சதுர்குண்ணிய லக்கனத்துருவக மிஸ்திரிதம்*
*உடுசங்கியா அரோர்பாசும் சேஷஞ்சென்ம வினிச்சிதம்*
*ஜனனந் திரிவிதப்ரோக்தம் சிரோநாசாதி பூபதம்*
*சிரசாபூர்ண பலிதா நாசிகா அர்த்தமேவசா*
*பூபதம் பாததசதா பலிதாலக்கின நிச்சயம்.*

(இ-ள்) *லக்கின நிச்சயம் செய்யவேண்டிய விவரம் எப்படியென்றால்: ஜெனன நாழிகையை 6-ல் பெருக்கி ஜனன தேதியையுங் கூட்டி 30-ஆல் வகுத்து வந்ததை சூரிய நின்ற ராசிமுதல் வகுத்த எண்கடந்து மிச்சத்தில் லக்கினம் வருமெனக் கொள்க. அவை மூன்றுவிதமெனப்படும். அவை யாவன:— 1-சிரசு வரையில் தாய் கர்ப்பத்திலிருந்து வெளிவருவதும், 2-சிரசுமுதல் நாசிவரையில் உதிப்பது 3-பிண்டம் பூராவும் பூமியிலுதிப்பதுவு மாகும். ஆனால் இக்கலியுகத்திற்கு பூபதலக்கினமே(பிண்டம்) பூராவும் பூமியில் விழுந்த நேரத்தையே லக்கினமாகக் கொள்ளவேண்டும் எ-று.* (61)

**நிறைதீபத் திரிஉதயம் ஆதிநடு ஆயின்**
**நீண்டிருக்கும் குறைந்திருக்கும் மேல்அந்தம் ஆயின்**
**பிறங்குகதி ரவன்சரம்ஏல் தீபம்அலைந்து இருக்கும்**
**பேசுதிரம் திரம்உபயம் சரவிளக்குஒத்து அசையும்**
**அறைந்தசனி அங்கிசத்தில் மதிஉறினும் காரி**
**அம்புலியைப் பார்த்திடினும் இருள்அகமே ஆகும்**
**சிறந்தகுளிர்த் தேள்உதிக்க சனியிருக்க மதியின்**
**திருக்குஉறின்நீர் கரையருகில் பெற்றிடுவள் தெரிவை.**

(இ-ள்) *ஜனன லக்கினம் முதற்கூறாயின் தீபத்தில் திரி நீண்டிருக்கும், நடுக்கூறாயின் பாதிபாகம் எரிந்துவிட்டு பாதிபாகம் இருக்கும்,கடைக்கூறாயின் முற்றும் எரிந்து சொற்பம் இருக்கும் என்க (சந்திரன் இருப்பை இங்ஙனங் கண்டு தீபத்தில் தைலம் இருக்கும் அளவைக் கூறுக) சூரியன் சராராசியில் இருந்தால் விளக்கு காற்றினால் அலைந்துகொண்டிருக்கும், திர ராசியில் இருந்தால் அசையாமல் இருக்கும், உபயராசியில் இருந்தால் 'சர விளக்குபோல் சிறிது அசைந்தும் அசையாமலும் இருக்கும். நவாம்ச சக்கரத்தில் சனி அமிசமாகிய மகர கும்பத்தில் ஒன்றில் சந்திரன் இருந்தாலும், அல்லது இராசியில் எங்கேனும் இருந்த சந்திரனைச் சனி பார்த்தாலும் பிரசவ அறை இருளாக இருக்கும். கடக விருச்சிகம் இலக்கினமாய் அதில் சனி இருக்கச் சந்திரன் பார்க்க நதி குளம் கிணறு முதலிய நீர்க்கரையில் பிரசவமானது எ-று.*

(வி-ரை) *"அர்க்கயுக்பிர்கூடிவஸாத்தீபः" என்ற வராகமிசராசாரியர் வசனத்தினால் சூரியனுடைய சாஸ்திர உபயஸ்திதியைக்கொண்டு தீபத் தன்மையைக் கூறவேண்டுவது முறையாதல்பற்றி 2-வது அடியில் "நிறைந் தருளும் லக்கினமே' ' என்றிருந்த தொடர்மொழியை நீக்கி "பிறங்குகதி ரவன் சரம் ஏல்" எனத் திருத்தப்பட்டது.*

"மந்தர்க்ஷாம்சே சசி......தமஸி சயநம்" என்ற வராகமிஹிராசாரியர் வசனத்தின்படி, எந்த ராசியிலேனும் மகர கும்ப நவாம்சங்களில் சந்திரன் இருந்தாலும், மற்றும் "மந்தத்ருஷ்டே சசி......தமஸிசயநம்" என்றபடி சந்திரன் சனி திருஷ்டியுடன் இருந்தாலும் பிரசூதியானவள் இருளுள்ள இடத்தில் சயனித்தாள் என்று அறியப்படுதலின் இச்செய்யுளின் 3-வது அடியை இவ்வண்ணம் திருத்தி யமைக்கப்பட்டது. அந்த அடியிலுள்ள விஷயமும் ஏகதேசமாய் இக்கருத்துடன் அச்சேற்றிஞரால் நேர்ந்த பிழை யோடு காணப்படுகின்ற துணர்க.

"அளிகர்கியுதே விலக்நகே ஸௌரே சீதகரே க்ஷிதே வடே" என்ற மேற்படி ஆசிரியர் வசனத்தின் பொருளைக்கொண்டு சற்று அச்சுப்பிழை யோடு இருந்த 4-வது அடியைத் திருத்தப்பட்டதென்க.

இவ்வுண்மைகளை உற்றுணராது முதற்கவியில் இரண்டு இலக்கத்தை அதிகமாகக்கொண்டும், மேடம் கடகத்தை விடுத்தும் அச்சிட்டதுபோலவே இச்செய்யுளிலும் "பெண்ணும் லக்கினம்" எனவும், "பிறந்தருளும் லக்கி னமே சரமாயின்" என்றும் அச்சுப்பிழையாக அச்சேற்றியதன்றி உண்மை வேறில்லை என்பது திண்ணம்.

இச்செய்யுளில் ஆசிரியர் பிரசூதி அறையின் இருளைப்பற்றி ஒரு யோகத்தைமட்டும் கூறியிருக்கின்றனர். ஆதலால் அதன் பிற யோகங்களை யும் தீப விஷயத்தையும் இங்கு விரித்துரைக்கப்படும்.

## தீப விஷயம்

பலவதி சூர்யே த்ருஷ்டே பஹுப்ர தீபாதராகு புத்ரேண
அர்லையர் வ்யயகதவீர்யைஸ் ஸுதௌஜ்யோதிஸ் த்ருணைர்பவதி
(சாராவளி)

அதாவது: பலவானுன சூரியனைச் செவ்வாய் பார்க்க பிரசவ இடத்தில் அநேக தீபம் இருந்தனவென்றும் சூரியனைப் பகை நீசகிரகங்கள் பார்க்கில் வெளிச்சம் இல்லாமல் சொற்ப வெளிச்சமுடைய இடமென்றும் கூறுதல் வேண்டும்.

## தீப ஸ்திதி

சூரியன் எந்தராசியில் இருக்கின்றானே அந்த ராசிக்குரிய திக்கில் தீபம் இருந்ததென்றுகூறுவது சிலர் மதம், மற்றும்சிலர் காலை $3\frac{3}{4}$-நாழிகை வரையில் கிழக்கிலும், பின்பு $7\frac{1}{2}$-நாழிகை வரையில் தென்கிழக்கிலும்பின்பு $11\frac{1}{4}$-நாழிகை வரையில் தெற்கிலும், பின்பு 15-நாழிகை வரையில் தென் மேற்கிலும், பின்பு $18\frac{3}{4}$-நாழிகை வரையில் மேற்கிலும், பின்பு $22\frac{1}{2}$-நாழிகை வரையில் வடமேற்கிலும், பின்பு $26\frac{1}{4}$-நாழிகைவரையில் வடக்கிலும், பின்பு 30-நாழிகை வரையில் வடமேற்கிலும் சூரிய சஞ்சாரமாதலால் ஜனன சம யத்தில் சூரியன் இந்தப்படி எந்த திசையில் சஞ்சரிக்கின்றானே அந்தத் திசையில் தீபம் இருந்ததென்று கூறுவார்கள்.

மற்றும்:—

த்வாதசபாக விபக்தே வாஸக்ருஹே வ்யவஸ்திதே ஸஹஸ்ராம்சௌ
தீபச்சரஸ்திராதீஷு தத்தைவவாச்ய: ப்ரஸவகாலே. (சாராவளி)

எனவரும் வசனத்திஞல் பிரசவ அறையை 12-பங்காக்கி மேஷ முதல் கொண்டு எண்ண சூரியன் இருந்த ராசி எந்ததிக்கோ அதில் தீபம் இருக்கு மென்று அறியப்படுகின்றது.

## பிரசூதி அறையின் இருள்

1-சந்திரன் மகர கும்ப நவாம்சத்தில் இருந்தாலும், 2-சந்திரன் 1-4-ல் இருந்தாலும், 3-சந்திரன் சனியுடன் கூடி இருந்தாலும், சனியிஞல் பார்க் கப்பட்டாலும். 4-கடகம் மீனத்தில் சந்திரன் இருந்தாலும், 5-கடகம்—மீன நவாம்சங்களில் சந்திரன் இருந்தாலும், இருளடைந்த அறையில் பிரசவ மாகும். கர்ப்பாதான காலத்தில் ஸ்திரீ புருஷ சயனமும் இங்ஙனமேயாம்.

முன் சொன்ன இருள் யோகத்துக்குரிய சந்திரனை சூரியன் பார்க்க இருள் கிடையாது என்று அறியவும்.

### ஜனன லக்கினத்தில் முதல் தோற்றுவது:

சீர்ஷோதயே விலக்நே மூர்த்நா ப்ரஸவோஃ
அந்யதோ தயேசரணேஃ, உபயோதயே சஹஸ்தே
சுபத்ருஷ்டே சோபநீ நாந்ய தாகஷ்டஃ (சாராவளி)

எனவரும் வசனத்தின்படி அதாவது ஜனனலக்கினம் சிரோதய ராசி யாஞல் முதல் சிரமம், பிருஷ்டோதய ராசியாஞல் காலும், சிரபிருஷ் டோதய ராசியாஞல் சிரம் கால்களைப் பின்வைத்து உடல் முன்னுமாகப் பிறக்கும் என்பதாம். ஆஞல்:—

லக்நாதி பேம்சக பதௌ லக்நஸ்தே வக்ரிதே க்ரஹே ப்யதவா,
விபரீத கதோ மோக்ஷா வாச்யோ கர்பஸ்ய ஸம்க்லேசஃ
(மணித்தர்)

எனவரும் வசனத்திஞல் இலக்நாதிபதியாவது, இலக்க நவாம்சாதிபதி யாவது, இலக்கினத்திலிருந்த கிரகங்களில் எவரேனும் ஒருவராவது வக்கி ரத்திலிருந்தால் அப்போது முன்சொன்ன முறைக்கு மாறுகத் தோற்றும் என்று அறிக. அதாவது

| | |
|---|---|
| சிரோதயத்திற்கு | பிருஷ்டோதயமும் |
| பிருஷ்டோதயத்திற்கு | சிரோதயமும் |
| சிரபிருஷ்டோதயத்திற்கு | உடலின்றி கைகால் உதயமும் |

முன்னதாகத் தோற்றும் என்றறிக.

சாபோக்ஷகர்கி நக்ராஜா ஸ்தேப்ருஷ்டோ தயராசயஃ
திர்யங்மீநஸ் ததாசேஷா ராசயோ மஸ்தகோதயாஃ
(ஞானபிரதீபிகை)

(இ-ள்.) மேஷம்-விருஷபம்-கடகம்-தனுசு-மகரம் ஆகிய இவ்வைந்தும் கால் முன்னதாகக்கொண்டு உதிப்பவைகள், மீனம் தலையையும் காலையும் பின்வைத்து உடலை முன்னதாகக்கொண்டு உதிப்பது. மிதுனம்-சிங்கம்-கன்னி-துலாம்-விருச்சிகம்-கும்பம் ஆகிய இவ்வாறும் சிரசை முன்னதாகக் கொண்டு உதிப்பவைகளாம்.

*அர்காங்காரகமந்தாஸ்து ஸந்திப்ருஷ்டோதயக்ரஹாஃ*
*ராஹுஜீவ ப்ருகுஜ்ஞாச்ச க்ரஹாஸ்யுர்மஸ்தகோதயஃ*
*உத்யேதேநிர்யகேவேந்து கேதூதத்ப்ரகீர்திதௌ* (ஞானப்ரதீபிகை)

(இ-ள்) சூரியன், செவ்வாய், சனி இவர்கள் கால் முன்னதாகவும், ராகு-குரு-சுக்கிரன் புதன் இவர்கள் சிரம் முன்னதாகவும், சந்திரன்-கேது இவர்கள் காலுந் தலையும் பின்வைத்து உடலை முன்கொண்டும் உதிப்பவர்களாவர்.

உதாரணம்

1-வது ஜாதகம்

| | | | |
|---|---|---|---|
| | லக் | சந் | |
| | மேஷம் ஆண் சிரம் முன்னாக | | சூ-சு ரா அ புத |
| கேது | | | |
| குரு | | சனி | |

குரோதனஹு ஆடிமீ 2உ சுக்ர வாரம் இரவு $12\frac{1}{4}$-மணி

இதில் குருவக்ரம் இலக்னாதிபன் செவ்வாய், இலக்கினநவாம்சாதிபதி சுக்ரன், இவர்கட்கு வக்ரமில்லை. உதயாதி நாழிகை $46\frac{1}{2}$ க்கு ரிஷபாம்சம். இலக்நநவாம்சாதிபன் சுக்கிரனுக்கு வக்கிரம் இல்லை. இலக்கினத்தைப் பார்த்த சனிக்கு வக்ரமில்லை என்று அறிக.

2-வது ஜாதகம்

| | | | |
|---|---|---|---|
| | | சந் | குரு |
| சனி | சிங்கம் ஆண் கால் முன்னாக | | ராகு |
| கேது | | | லக் அங் |
| | சுக் | | சூரி புத |

பராபவஹு புரட்டாசிமீ 21உ சனிவாரம் இரவு நா. $55\frac{1}{4}$-ஜனனம்

நவாம்ச லக்கினம் விருச்சிகம் அவ்வதிபன் செவ்வாய்க்கு வக்ரம் இல்லை. இலக்னாதிபனுக்கு வக்ரம் உண்டாக எதுவில்லை. இலக்கினத்திலிருந்த செவ்வாய்க்கும் வக்ரம் இல்லை. இலக்கினத்தை பார்த்த சனிக்கு வக்ரமில்லை.

முன்பு கூறியபடி பார்க்கும்போது 1-வது ஜாதகம் மேஷ லக்கினமாதலால், அது பிருஷ்டோதயராசி ஆகவே கால் முன்னாகப் பிறத்தல் வேண்டும். நிகழ்ச்சியில் தலை முன்னாகப் பிறந்திருக்கிறது. காரணம் என்னை எனின்? இலக்கினத்தைக் குரு-சனி பார்த்தபடியால இவ்விருவர்களில் குரு நைசர்க்கிரகத்தில் சனியைவிட பலவானாதலால் குரு சிரோதய கிரகமானபடியால் அங்ஙனம் சிரம் முன்னதாகப் பிறந்ததென்று அறிதல் வேண்டும், இதில் குரு வக்கிரமானபடியால் மணித்தர் வசனத்தின்படி கால் முன்னாகப் பிறக்கவேண்டுமே எனின்? இலக்கினத்திலிருந்த கிரகத்திற்குத்தான் அவ்விதியேயன்றி வேற்றிடத்திலிருந்து நோக்குங் கிரகத்திற்கு அங்கீகாரம் அல்ல என்றறிக.

முன்பு கூறியபடி 2-வது ஜாதகம் சிங்கலக்கினமாதலால், அது சிரோதயராசி, ஆகவே சிரம் முன்னாகப் பிறத்தல்வேண்டும், நிகழ்ச்சியில்

கால் முன்னாகப் பிறந்திருக்கிறது. காரணம் என்னை எனின்? இலக்கினத்தில் செவ்வாய் இருப்ப சனி நோக்குதலால் அவ்விருவர்களும் பிருஷ்டோதய கிரகங்களாதலாலும், அவ்விருவரில் சனியைவிட செவ்வாய் நைசர்க்கத்தில் பலமுடையவனானாலும் இருவரும் கால்முன்னாய் பிறக்கும் கிரகங்களாதலாலும் அங்ஙனம் கால் முன்னதாகப் பிறந்ததென்று அறிதல் வேண்டும்.

வேறு உதாரணம்

3-வது ஜாதகம்

| | | | |
|---|---|---|---|
| | சந் | லக் குரு | கேது |
| | ரிடபம் | | அங் சனி |
| | பெண் சிரம் முன்னாக | | சூரி |
| ராகு | | | புத சுக் |

கலி-5019, பிங்களஹு
ஆவணிமீ 21௳ புதவாரம்
44¼-நாழி, ஜனனம்

இலக்கினத்தில் குரு இருக்கின்றார் இதில் குருவுக்கும் வக்கிரம் இல்லை. இலக்ன நவாம்சாதிபன் சந்திரனுக்கும் வக்கிரம் இல்லை. இலக்கினத்தை எந்தக் கிரகமும் பார்க்கவில்லை.

4-வது ஜாதகம்

| | | | |
|---|---|---|---|
| | லக் கேது | | |
| அ-சு சந் | மேடம் | | |
| | பெண் சிரம் முன்னாக | | குரு |
| சூரி புத | | ராகு | சனி |

கலி 5022, ரௌத்திரிஹு
மார்கழிமீ 29௳ புதவாரம்
பகல் 18-நாழி, ஜனனம்

இதில் இலக்கினத்தைப் பார்க்கின்றார். இலக்ந நவாம்சாதிபனும் குருவே. குரு வக்ரகதியிலிருப்பது இக்கு அவசியமில்லை, குரு தவிர வேறு எந்தக்கிரகமும் இலக்கினத்தைப் பார்க்கவில்லை.

இவற்றுள் 3-வது ஜாதகம் இடபமாதலால் அது பிருஷ்டோதய ராசி, ஆகவே கால் முன்னாகப் பிறத்தல்வேண்டும். நிகழ்ச்சியில் தலை முன்னாகப் பிறந்திருக்கின்றது. காரணம் என்னை எனின்? இலக்கினத்தில் குரு இருக்கின்றார். குரு சிரோதய கிரகமானபடியால் சிரம் முன்னதாகப் பிறந்தது என்றறிக.

4-வது ஜாதகம் மேடமாதலால் அது பிருஷ்டோதய ராசி, ஆகவே கால் முன்னாகப் பிறத்தல் வேண்டும். நிகழ்ச்சியில் தலை முன்னாகப் பிறந்திருக்கின்றது. காரணம் என்னை எனின்? இலக்கினத்தைக் குரு பார்க்கின்றார், குரு சிரோதய கிரகமானபடியால் சிரம் முன்னதாகப் பிறந்ததென்றறிக. பிற ஜாதகங்கட்கும் இவ்விதமே இலக்கினத்தையும், இலக்கினத்திலிருந்த கிரகத்தையும், இலக்கினத்தைப் பார்த்த கிரகத்தையும் கொண்டு பலம் அபலத்தை நோக்கி உரைத்தல் சாலக்கற்ற நல்லறிவாளர் கடமையாமென்க.

## பிரசவவீடு யாருடையதென்பது

*பித்ருமாத்ரு க்ருஹேஷு தத்பலாத் தருஸாலாயாதிஷு*
*நீசகைச்சுபைஃ, யதிநைகஷதஸ்து வீக்ஷிதௌ*
*லக்நேந்துவிஜநே ப்ரஸூயதே.* (பிருகஜ்ஜாதகம்)

(இ-ள்) பிதுர் மாதுர்காரக கிரகபலத்தினுல் தாய் தந்தை முதலானவர் களின் வீட்டில் பிரசவமானதைச் சொல்லவேண்டியது. அதாவது: பகலில் பிறந்தவர்களுக்குச் சூரியனும், இரவில் பிறந்தவர்களுக்குச் சனியும் பலீஷ்டர்களாய் இருந்தால் பிதாக்ருஹத்தில் ஜனனமென்றும், பகலில் பிறந்தவர் களுக்குச் சுக்கிரனும், இரவில் பிறந்தவர்களுக்குச் சந்திரனும் பலீஷ்டர்க ளாய் இருந்தால் மாதுர் கிருஹத்தில் ஜனனமென்றும் அறிதல் வேண்டும். இச்சுலோகத்தில் "பித்ருக்ருஹேஷு" என்ற அதிக வசனத்தினுல்இதனை யூகித்துரைத்தல் வேண்டும்.

சூரியன் பலீஷ்டனுய் இருக்க
பகலில் பிறந்தால்—பிதுர் சகோதரர்கள் வீட்டிலும்

சனி பலீஷ்டனுய் இருக்க
இரவில் பிறந்தால்—தந்தை சகோதரர்கள் வீட்டிலும்

சந்திரன் பலீஷ்டனுய் இருக்க
இரவில் பிறந்தால்—தாய் சகோதரன், சகோதரிகள் வீட்டிலும்

சுக்கிரன் பலீஷ்டனுய் இருக்க
பகலில் பிறந்தால்—தாய் சகோதரன், சகோதரிகள் வீட்டிலும்

ஜனனம் என்று கூறுக.

மேலே காட்டப்பெற்ற நான்கு ஜாதகங்களில் 1-வது ஜாதகம் தாய் வீட்டிலும், 2-வது ஜாதகம் தாய் வீட்டிலும், 3-4-வது ஜாதகம் பிதா குடியிருப்பு வீட்டிலும் ஜனனம். ஆதலால் கிரக பலாபலன்களைக்கொண்டு சாஸ்திர வசனத்திற்கும், நிகழ்ச்சிக்கும் சரிபார்த்துக்கொள்ளல்வேண்டும். பலம் எனவே சட்பலாதி கணிதங்களைக் கொண்டு இவைகள் நிர்ணயித்தல் வேண்டும். விரிவஞ்சி விடுத்தாம்.

## பிறந்த இடம் முதலியன (கப்பலில் ஜனனம்)

1. பூரணச் சந்திரன் (வளர்பிறை) சந்திரன் கடகத்திலும், புதன் இலக்கினத்திலும், குரு நான்காமிடத்திலும் இருந்தாலும்.

2. மீனம்-மகரம் பிற்பாதியிலும், கடகத்திலும் இலக்கினமிருக்க, சந்திரன் எழாமிடத்திலிருந்தாலும் மரக்கலத்தில் ஜனனமாகும்.

## ஜலசமீப ஜனனம்

1. நீர் இராசிகளாகிய கடகம் மகரம் இவைகளில் ஒன்று இலக்கினமாய் சந்திரன் அதில் பலீஷ்டனுயிருந்தாலும்,

2. ஜனனலக்கினம் எந்தராசியானாலும் அதில் பூரணச் சந்திரன் இருந்தாலும் அல்லது பார்த்தாலும்.

3. நீர் இராசிகள் ஜனன லக்கினமாகி, அதற்கு 4-மிடத்திலாவது பத்தாமிடத்திலாவது சந்திரன் இருந்தாலும்.

4. கடகம் அல்லது விருச்சிகம் ஜனனலக்கினமாய் அதில் சனி யிருந்து சந்திரனால் பார்க்கப்பட்டாலும் ஜலசமீபத்தில் ஜனனம் ஆகும்.

## சிறைச்சாலை ஜனனம்

1. இலக்கினம் அல்லது சந்திரலக்கினத்திற்கும் 12-ஆமிடத்தில் சனியிருக்க, அந்தச் சனியை பாவர்கள்பார்க்க கர்ப்பிணி சிறைக்கூடத்தில் பிரசவித்தாள் என்றறிக.

## தேவாலயாதிகளில் ஜனனம்

1. நீர் இராசிகளில் ஒன்று ஜனனலக்கினமாகி அதில் சனியிருந்து, புதனால் பார்க்கப்பட்டால் ஜனனம் கிரீடா கிருகம் (ஸ்தரீ புருஷர்கள் சயனிக்கும் வீடு)என்றும், சூரியனால் பார்க்கப்பட்டால் தேவாலயம்அல்லது பூஜையறை என்றும், சந்திரனால் பார்க்கப்பட்டால் ஊஷர (உவர்மண்) பூமியிலும் ஆகும் என்றறிக.

## மசானத்தில் ஜனனம்

2. இருகால் இராசிகளாகிய தனுசு முற்பாதி, மிதுனம்-கன்னி-துலாம்-கும்பங்களில் ஒன்று ஜனன லக்கினமாகி அதில் சனி இருந்து செவ்வாய் பார்வைபெற்றால் மசானத்தில் ஜனனமாகும்.

## மெத்தைவீட்டில் ஜனனம்

3. இவ்விதமிருந்த சனியைச் சந்திரன், அல்லது சுக்கிரன் பார்த்தால் மனோரம்யமான வீட்டில் ஜனனமாகும்.

## அக்கினி கோசாலை ஜனனம்

4. இருகால் இராசிகளாகிய மிதுனம்-கன்னி-துலாம்-கும்பம் இவைகளில் ஒன்று ஜனன லக்கினமாய், சனியிருக்கக் குரு பார்த்தால் அக்கினி சாலையிலும், சூரியன் பார்க்க இராஜமாளிகை, தேவாலயம், கோசாலை (பசுத்தொழுவம்)களிலும் ஜனனமாகும் என்றறிக.

## சித்திரவீட்டில் ஜனனம்

1. இருகால் இராசிகளாகிய மிதுனம்-கன்னி-துலாம்-கும்பம் இவைகளிலொன்று ஜனனலக்கினமாகிச் சனியிருக்க புதன் பார்த்தால் பதுமைகளால் அலங்கரிக்கப்பட்டும், அனேக சிறப்பமைந்ததுமான வீட்டில் ஜனனமாகும்.

2. இலக்கின நவாம்ச ராசிக்குரிய இராசி பிரதேசத்தில் ஜனனமென்றும் சொல்லலாம். (மேடம்-காடு, இடபம்-பசுத்தொழுவம் இப்படி)

ஆனல் இலக்கின ராசியாவது நவாம்ச ராசியாவது சரமானல் வெளி மார்க்கத்திலும், திரராசியானல் வீட்டிலும், உபயராசியானல் அந்த ராசி சஞ்சார பிரதேசத்திலும் ஜனனமாகும்.

3. ஆனல் இலக்கினமும் நவாம்சமும் சரமானல் மார்க்கத்திலும், திரமானல் தன் வீட்டிலும், உபயமானல் வீட்டுத் திண்ணையிலும் ஜனனமாகும். ஆனல் ஜனனலக்கினம் நவாம்ச லக்கினங்களின் பலவசத்தினல் இதனை ஊகித்துரைத்தல் வேண்டும்.

## நீர் இராசிகளாவன

ரிஷபம்-கடகம்-துலாம்-மகரம் கும்பம்-மீனம் இவை நீர் இராசிகளாம். கடகம்-வாய்க்கால், துலாம்-நதிக்கரை, விருச்சிகத்திற்கு-ஆறு, தனுசுக்கு-குளம், மகரத்திற்கு-ஆற்றோடை, கும்பத்திற்கு-கிணறு, மீனத்திற்கு-சமுத்திரமென்பது ஞானப்பிரதீபிகை வசனம். (62)

தெரிவைக்குத் துன்பமில்லை லக்கினத்துஆ திக்கே
திடம்உடனே அந்தம்எனில் தேன்மொழிக்குத் துன்பம்
மருவியலக் கினமுதல்சந் திரன்இருக்கும் மட்டும்
மன்னுதொகை மடவார்கள் மருவிஅருகு இருப்பர்
சருவியநல் சுபர்காணில் தான்தோன்றும் விரைவில்
சனிகுசன்பார்த் திடில்தானே சஞ்சலம்உற் றிடுமே
பெருமையுடன் இந்தக்கோள் நிறங்குழவி தனக்கே
பெறும்என்றே பெரியோர்கள் உரைப்பர்மிகத் தானே.

(இ-ள்) ஜனன லக்கினத்தின் ஆரம்ப சந்தியில் பிறந்தால் பெற்ற தாய்க்குத் துன்பம் கிடையாது. அந்திய சந்தியில் பிறந்தால் துன்பம்உண்டாகும். இலக்கின முதலாகச் சந்திரன் இருக்கும் இராசிவரையிலும் எத்தனைக் கிரகங்கள் இருந்தனவோ அத்தனைப் பெண்கள் பிரசவிக்கும்ஸ்திரீக்குச் சமீபத்தில் இருப்பார்கள். இலக்கினத்தைச் சுபக்கிரகங்கள் பார்க்கப் பிரசவ வேதனையின்றி சீக்கிரத்தில் ஜனனமாகும், பாபக்கிரகங்கள் பார்க்கப் பிரசவ வேதனையினல் துன்பப்பட்டு ஜனனமாகும். இலக்கினத்தில் இருந்த கிரகத்தின் நிறத்தையும், அடையாளத்தையும் கொண்டு அக்குழந்தை பிறக்குமென்று சோதிட விற்பன்னர்கள் கூறுவார்கள் எ-று.

(வி-ரை) சந்த்ர லக்நாந்தர கதைர்க்ரஹைஸ்ஸ்யுர் உபசூதிகா:
பஹிரந்தச்ச சக்ரார்தே த்ருச்யாத்ருச் யேம்யதாபரே.

(பிருகஜ்ஜாதகம்)

(இ-ள்) ஜனன லக்கினத்திற்கும் சந்திரனுக்கும் நடுவில் இருந்த கிரகங்களினல், பிரசவ ஸ்திரீயின் சமீபத்திலிருந்த ஸ்திரீகளை அறியலாம். திருசிய சக்கரார்த்தத்தில் எத்தனை கிரகங்கள் இருந்தனவோ அத்தனை ஸ்திரீகள் பிரசவ அறைக்குள்ளிருப்பார்கள். அதிருசிய சக்கரார்த்தத்தில் எத்தனை கிரகங்கள் இருந்தனவோ அத்தனை ஸ்திரீகள் பிரசவ அறைக்கு வெளியில் இருப்பார்கள் என்பதாம். "அந்ய தாஅபரே" என்பதனல் சிலர் சக்ரபூர்வார்த்த உத்தரார்த்தங்களினல் இதனைக் கூறுவார்கள் என்றறிக. இதனை 7-வது செய்யுளில் அறிக.

லக்நநவாம்சபதுல்யதநுஸ்ஸ்யாத் வீர்யயுதக்ரஹதுல்யதநுர்வா
சந்த்ரஸமேதநவாம்சவர்ணகோதி விலக்நவிபக்தபகாத்ர:

(பிருகஜ்ஜாதகம்)

(இ-ள்) ஜனன லக்கினத்தில் உதயமான நவாம்ச ராசியாதிபதிக்குச் சரியான தேகமுண்டாகும். அல்லது எல்லாக் கிரகங்களிலும் எந்தக்கிரகம் அதிக பலமுடையதாயிருக்குமோ அதற்குச் சரியான தேகமுண்டாகும். அதாவது ஜனனகாலத்தில் ஜன்ம லக்ந நவாம்சாதிபன் பலத்துடன் இருந்தால் அவனுக்குரிய லக்ஷணமான தேகமுண்டாகும். அவன் பலயீனமாயிருந்தால் எல்லாக் கிரகங்களிலும் பலமான கிரகத்திற்குரிய தேகமுண்டாகும். (இந்த கிரக சொரூபத்தை 43-வது செய்யுள் விருத்தியுரையில் காண்க.) ஆனால் தேகவர்ண முதலியதை "பலிநஸ்ஸத்ருசிமூர்த்திர் புத்வாஜாதிகுலதேசான்" என்ற வசனப்படி ஜாதி-குலம்-தேசங்களைக்கண்டு சொல்லவேண்டியது. மற்றும் இதனை "ஏவம்குலாநுஸாரேண காரகாணும் பலம்வதேத்" எனவும் "சூத்ராதய: கருலளராஜ தர்மிஞோ ம்லேச்ச தர்மிண: விப்ரச்சேச் ஸ்ரீதநைர்யுக்த்தா யக்ஞகர்ம க்ரியாரத:" எனவும் வரூஉம் பராசரஹோரையினுல் நன்கு அறிக.

ஜனனகால சந்திர லக்கின நவாம்சாதிபனுக்குரிய குணம் குறி உருவம் மற்ற லட்சணங்களையும் அறிந்து கூறுதல்வேண்டும். இங்ஙனம் விரித்துரைக்காது இச்செய்யுளில் "இருந்தக் கோன்நிறம் குழவி" என ஆசிரியர் சுருக்கிக் கூறியிருக்கின்றனர்.

இருந்தக் கோன்நிறம் என்று கூறியதனுல் அங்க அடையாளங்களையும் இங்கு விளக்குதல் ஆவஸ்யகம். அஃது வருமாறு.

பிருகஜ்ஜாதகத்தின்படி இராசி அங்கம் வருமாறு:—

| | | | |
|---|---|---|---|
| இலக்கினம் | தலை | ஏழாமிடம் | குறி |
| இரண்டாமிடம் | முகம் | எட்டாமிடம் | புட்டம் |
| மூன்றாமிடம் | மார்பு | ஒன்பதாமிடம் | துடை |
| நான்காமிடம் | நெஞ்சு | பத்தாமிடம் | முழங்கால் |
| ஐந்தாமிடம் | வயிறு | பதினோராமிடம் | கணுக்கால் |

இராசி அங்கம் ஞானபிரதீபிகை மதம்:—

| | | | |
|---|---|---|---|
| ஆறாமிடம் | உந்திகீழ் | பனிரண்டாமிடம் | பாதம் |
| இலக்கினம் | தலை | ஏழாமிடம் | வயிறு |
| இரண்டாமிடம் | முகம் | எட்டாமிடம் | குறி |
| மூன்றாமிடம் | தோள் | ஒன்பதாமிடம் | துடை |
| நான்காமிடம் | கை | பத்தாமிடம் | முழங்கால் |
| ஐந்தாமிடம் | மார்பு | பதினோராமிடம் | கணுக்கால் |
| ஆறாமிடம் | ஸ்தனம் | பனிரண்டாமிடம் | பாதம் |

**இலக்கினம் முதல் திரேகாணம் ஆனால்:—**

| | | | |
|---|---|---|---|
| இலக்கினம் | சிரசு | ஏழாமிடம் | வாய் |
| இரண்டாமிடம் | வலக்கண் | எட்டாமிடம் | இடதுபிடரி |
| மூன்றாமிடம் | வலக்காது | ஒன்பதாமிடம் | இடதுகன்னம் முக வாய்க்கட்டை |
| நான்காமிடம் | வலதுநாசி | | |
| ஐந்தாமிடம் | வலதுகன்னம் முக வாய்க்கட்டை | பத்தாமிடம் | இடது நாசி |
| | | பதினோராமிடம் | இடது காது |
| ஆறாமிடம் | வலதுபிடரி | பனிரண்டாமிடம் | இடது கண் |

**இலக்கினம் இரண்டாம் திரேகாணம் ஆனால்:—**

| | | | |
|---|---|---|---|
| இலக்கினம் | கழுத்து | ஏழாமிடம் | உந்தி |
| இரண்டாமிடம் | வலப்புஜம் | எட்டாமிடம் | இடது வயிறு |
| மூன்றாமிடம் | வலக்கை | ஒன்பதாமிடம் | இடது மார்பு |
| நான்காமிடம் | வலதுவிலா | பத்தாமிடம் | இடது விலா |
| ஐந்தாமிடம் | வலது மார்பு | பதினோராமிடம் | இடது கை |
| ஆறாமிடம் | வலது வயிறு | பனிரண்டாமிடம் | இடது புஜம் |

**இலக்கினம் மூன்றும் திரேகாணம் ஆனால்:—**

| | | | |
|---|---|---|---|
| இலக்கினம் | அடிவயிறு | எட்டாமிடம் | இடக் கணுக்கால் |
| இரண்டாமிடம் | வலகிதம்பத்தட்டு | ஒன்பதாமிடம் | இடது முழங்கால் |
| மூன்றாமிடம் | வலதுசிசனம்அண்டம் | பத்தாமிடம் | இடது தொடை |
| நான்காமிடம் | வலது தொடை | பதினோராமிடம் | இடது சிசனம் அண்டம் |
| ஐந்தாமிடம் | வலது முழங்கால் | | |
| ஆறாமிடம் | வலது கண்டைக்கால் | பனிரண்டாமிடம் | இடது கிதம் பத் தட்பம் |
| ஏழாமிடம் | இரண்டு பாதம் | | |

இதன் பிரயோசனம் வருமாறு:—முதல் திரேகாணத்தில் பிறந்தால் சிரசு முதலாகிய அங்கங்களும், இரண்டாம் திரேகாணத்தில் பிறந்தால் கழுத்து முதலாகிய அங்கங்களும், மூன்றாம் திரேகாணத்தில் பிறந்தால் நாபிக்குக் கீழ்ப்பாகங்களும் ஆகப் பிரிக்கப்பட் டிருக்கின்றவைகளில் பாபக் கிரகங்கள் இருந்தால் விரணத்தழும்பு முதலியன உண்டென்று சொல்லுக. பாபக்கிரகமிருந்து சுபக்கிரகத்துடன் கூடியிருந்தாலும், பார்க்கப்பட்டிருந் தாலும் மச்சமுண்டென்று சொல்லுக. இவ்வித விரணமச்சாதிகளை உண் டாக்கக்கூடிய கிரகங்கள் ஆட்சியில், சுயநவாம்சத்தில் இருந்து அப்படி இருந்த ராசி ஸ்திரராசியானால் விரணமச்சாதிகள் பிறந்தபோதே இருந்த தென்றும், அப்படி திரராசியாக இல்லாமல் சரமான ராசியிலோ சர நவாம் சத்திலோ இருந்தால் முன்சொன்ன விரணமச்சாதிகள் அந்தந்த கிரக தசாகாலங்களில் சம்பவிக்குமென்றும் கூறுக.

இந்தப்படி விரணமச்சாதிகளை உண்டாக்குங் கிரகம் சனியானால் கல்லடி அல்லது வாதவியாதியினாலும், செவ்வாய் ஆனால் அக்கினி-விஷ-சஸ்திர (ரணசிகிச்சை) முதலியவைகளினாலும், பாபசம்பந்த புதனால் சருக்கி விழுதல், மண்கட்டி விழுதல், சுவர் இடிந்துவிழுதல் முதலியவைகளினாலும், சூரியனால் விறகுக்கட்டை, மிருகங்களின் கொம்புகளினாலும், க்ஷீண

சந்திரனால் நீர்வாழும் ஜந்துக்கள் அல்லது நாற்கால் ஜீவன்களினாலும், விரண மச்சங்களுண்டாம்.

விருத்திசந்திரன், பாபியுடன் சேராத புதன் குரு சுக்கிரன் இவர்கள் இருந்த அங்கங்களில் விரணம் (தழும்பு) மச்சம் இருக்காது, தேமல் நோய் முதலியன இருக்குமென்பதாம். இங்ஙனம் கூறியவற்றால்,

| | |
|---|---|
| சூரியன் | விறகுக்கட்டை, மிருகங்களின் கொம்பு. |
| க்ஷீணசந்திரன் | நீர்வாழும் ஜந்துக்கள்-நாற்கால் ஜீவன்கள். |
| செவ்வாய் | அக்கினி-விஷம்-சஸ்திர சிகிச்சைகள். |
| பாபசம்பந்த புதன் | சருக்கி விழுதல், மண்கட்டி சுவர்விழுதல். |
| சனி | கல்லடி, வாதநோய் விரணம். |

இவற்றால் விரணமுண்டாகு மென்பதாம்.

விலக்கஅரிய கதிர்நின்ற தானத்தில் பார்த்தால்
மிருநாற்கால் மிருகத்தால் விபத்துவரும் மயிலே.

மதிஇருந்த தானத்தில் ஜலம்மிருகம் தன்னால்
வக்கிரன்நின் றிடும்இடத்தில் கிரந்திவிர ணத்தால்
புதியதோர் அக்கினிசத் திரத்தினால் துன்பம்
புதன்நிற்கில் செங்கல்மண் ணால்குருவுக்கு இடியால்
அதிகக்காற் றால்வெள்ளி நிற்கில்நீச் சென்றால்
அரியசனி நின்றக்கால் காற்றால்கல் எறியால்
கெதியுடைய ராகுநிற்கில் சர்ப்பவாதை தன்னால்
கேதுநிற்கில் விரணத்தால் கிரந்தியினால துயரே.

(ஜாதக சிந்தாமணி 166)

ஆசிரியர் வராகமிகிரனாரவர்கள் சுபக்கிரகங்களுக்கு விரணமில்லை எனவும், அவர்களுக்கு மச்சம் உண்டெனவும் கூறியிருக்கின்றார். ஆசிரியர் தில்லை நாயகனார் சகல கிரகங்களுக்கும் விரணமுண்டெனக் கூறியிருக்கின்றனர்.

1. புதன் சுபர் பாவர் சம்பந்தமாய் இருந்தால் அந்த அங்கத்தில் மச்சமுண்டாம். அது அம்மூவருள் வலிது பெற்ற கிரக தசாபுக்தி காலங்களில் ஏற்படும்.

2. ஆறுமிடத்தில் பாபிகள் இருக்க அந்த அவயவத்தில் மருமச்சம் பிறந்தபின் உண்டு, அப்பாவர் ஆட்சி சுயாம்சத்தில் திராராசியில் இருந்தால் பிறக்கும்போதே மருமச்சம் உண்டாம். சரராசி, சரநவாம்சத்தில் இருந்தால் மருவுமச்சமில்லாமல் பிறந்து பின்பு அக்கிரகதசை புக்திகளிலுண்டாகும்.

3. எட்டாமிடத்தில் பாபிகள் இருக்க அவர்களைச் சுபக்கிரகம் பார்க்க அந்த ராசிக்குரிய அங்கத்தில் வெள்ளை எள்ளைப்போல் கறுப்புமச்சம் பல விதமாக உண்டாகிப் பிறக்கும். எட்டாமிடம் பாவரும் சுபரும் கூடியிருக்க மச்சத்தில் மயிர் முளைத்துப் பிறக்கும் என்பதாம். (68)

தானருகே இருந்தமட வார்பருவங் கூறில்
சனிஇருந்து கண்டக்கால் தலைநரைத்த கறுப்பி
ஈனம்இலாக் குஜன் இருந்து காணின் இளம்வயதே
இசையும்நிறம் சிவப்பு ஆக இருப்பள் அமங்கலைஆம்
ஆனகதிர் குருமதியம் விருத்தை புகர் இளமை
அருணன்நடுப் பருவமுடைச் சுமங்கலைகள் ஆவர்
மானிலமேல் பாம்புஇருந்தால் அஞசார மடந்தை
மகவுநூ லேதரித்து வந்திடுங் கண்டீரே.

(இ-ள்.) ஜனன சந்திரலக்கினங்களுக்கு மத்தியில் சனியிருந்தாலும் பார்த்தாலும் தலை நரைத்த கறுத்த தேககாந்தியுடைய விருத்தஸ்திரீயும், செவ்வாய் இருந்தாலும் பார்த்தாலும் சிவப்பு நிறமான தேககாந்தியை யுடைய இளமை வயதுடைய விதவை ஸ்திரீயும், சூரியன்-சந்திரன்-குரு இவர்களில் ஒருவர் இருந்தாலும் பார்த்தாலும் விருத்தை வயதும் சுக்கிரன் இளமை வயதும், புதன் நடுவயதுமுடைய சுமங்கலை ஸ்திரீகளும், இராகு கேதுக்கள் இருந்தாலும் பார்த்தாலும் ஆசாரமற்று அஞசார மிகுந்த ஸ்திரீயும் பிரசவ ஸ்திரீயுடன் இருப்பார்கள் என்க. இராகு கேதுக்கள் இருந்தால் குழந்தை கொடி அல்லது மாலைசுற்றிப் பிறக்கும் எ-று.

(வி-ரை) இச்செய்யுளில் எல்லாக் கிரகங்களையும் கூறி, சூரியனை மட்டும் கூறாது விடுத்தபடியால் சூரியனுக்கு விருத்த (தளர்ந்த வயதுடைய) ஸ்திரீ என்று கூறுக. சூரியனை பாபிகளில் சேர்த்துக் கூறப்பட்டிருப்பினும் சுமங்கலியான ஸ்திரீ என்று கூறுக. சந்திரன் கலை குறைந்தால் அமங்கலி அல்லது ஈனஸ்திரீயாம்; பாபசம்பந்தமான புதனுக்கு இப்படியே கூறுக. இலக்கினத்திற்கும் சந்திரனுக்கும் மத்தியில் கிரககங்கள் இல்லாவிட்டால் பார்த்த கிரககங்களைக்கொண்டு கூறுக. சிலர் இலக்கினத்தில் இருந்த கிரகங்களால் இதனைக் கூறுவர். அஃது அறியாமையின் பாலதென்றுணர்க.

லக்நசந்த்ராந் தரகதக்ர ஹஸங்யோப குதிகாஃ
சுபைஃ புண்யஸ்த்ரீ யோவாச்யாஃ க்ரூரைச்ச விதராஸ்ததா.

(கிரந்தாந்தரம்)

எனவரும் வசனத்தினுல் இலக்கின சந்திரர்களுக்கு நடுவில் இருந்தோர் பார்த்தோர் சுபர்களாயின் சுமங்கலியும், பாவர்களாயின் அமங்கலியுமென்று கூறுதல் வேண்டும்.

## கொடி சுற்றல்

1. சந்திரன் செவ்வாய் திரேகாணத்திலிருக்க, இலக்கினத்திற்கு 2-11-ஆ மிடங்களில் சுபர்கள் இருந்தால் சர்ப்பம் ஜனனமாகும்.

2. இலக்கினம் செவ்வாய் திரேகாணத்திலிருக்க, அந்த இலக்கினத் திற்கு 2-11-ல் சுபக்கிரகங்கள் இருந்தால் சர்ப்பத்தினுல் சுற்றப்பட்ட சிசு பிறக்கும்.

மேஷம் 1-வது, கடகம் 2-வது, சிங்கம் 3-வது, விருச்சிகம் 1-வது, தனுசு 2-வது, மீனம் 3-வது திரேகாணங்கள் செவ்வாய் திரேகாணங்க ளாகும். கொடி மாலை என்பது நாளவேஷ்டன மென்பதாகும். (64)

கண்டுமொழி மாதாவின் தன்பருவம் காரி
கதிர்குருமா மதிகண்டால் ஆம்விருத்தை ஆகும்
மண்டுவெள்ளி சேய்பார்க்க வயதுஇளமை ஆகும்
மகிழ்புதனே கண்டக்கால் அவள்வாலை ஆவாள்
மிண்டுமுட வன்இருந்தால் வீடுபுராண தனஞ்சேய்
மேவில்வெந்து கட்டினதோர் வீடுஆகும் என்னே
பண்டுசசி வலுக்கில்அகம் புதியதே ஆகும்
பரிதிக்கு மரந்திரண்ட கூறைஎனச்சொல் வாரே.

(இ-ள்.) குழந்தையின் தாயினுடைய வயதைக் கூறுமிடத்து, நான்காமிடத்தில் சூரியன்-சந்திரன்-குரு-சனி இவர்களுள் ஒருவர் இருந்தாலும் பார்த்தாலும் விருத்த (வயதுசென்ற)பருவமும், செவ்வாய் சுக்கிரன் இவர்களில் ஒருவர் இருந்தாலும் பார்த்தாலும் இளமை (வாலை) பருவமும், புதன் இருந்தாலும் பார்த்தாலும் * மத்திம (நடுவயது) பருவமும்உடையவளாவாள். கிரகங்கள் எல்லாவற்றிலும் சனி பலவானாய் இருந்தால் பழமையாகிய புராதன வீட்டைத் திருத்திக் கட்டிய வீட்டிலும், சந்திரன் பலவானாய் இருந்தால் நூதனமாகக் கட்டிய புதிய வீட்டிலும், பூர்வபட்ச மதியானால் அழகிய வீட்டிலும், செவ்வாய் பலவானாய் இருந்தால் தீயில் வெந்து மறுபடியும் கட்டப்பட்ட வீட்டிலும், சூரியன் பலவானானால் பலனில்லாத கூறை வீட்டிலும் ஜனனமாகும் எ-று. (65)

சொல்லுபுதன் வலுத்திருந்தால் சித்திரவீடு ஆகும்
சுக்கிரன் தான் இருந்தக்கால் சுசிவீடது ஆகும்
வில் அரசன் வலுத்துஇருந்தால் கெட்டிஅகம் ஆகும்
மின்அனையார் விரும்புசுவை வெய்யவனுக்கு உறைப்பாம்
நல்லமதிக்கு உப்பாகும் சேய்துவர்ப்பை நாடும்
நாலுவகைச் சுவைபுதனே நல்குவிப்பன் இப்பால்
அல்லல் அறும் குருமதுரம் வெள்ளிபுளிப்பு ஆகும்
அணிகாரி கசப்புக்கோள் உறும்திசைதொட்டு எண்ணே.

(இ-ள்.) புதன் பலவானானால் சித்திரங்களால் அலங்காரமாகக் கட்டியுள்ள வீட்டிலும், சுக்கிரன் பலவானானால் அலங்காரமான புதியவீட்டிலும், குரு பலவானானால் மிகவும் வலுவுள்ளதாய் அதிகநாள் இருக்கக்கூடிய வீட்டிலும் ஜனனமாகும். குழந்தையின் தாய் பிரசவ தினத்தன்று விரும்பிப் புசித்த சுவை (உருசி)யானது (மாதுரு காரகன் அல்லது ஸ்தானம்; ஸ்தானாதிபதி இவர்களுடன் இருந்தவர்களில்) சூரியனுக்குக் காரமும், சந்திரனுக்கு உப்பும், செவ்வாய்க்குத் துவர்ப்பும், புதனுக்கு உவர்ப்பும், குருவுக்கு இனிப்பும், சுக்கிரனுக்குப் புளிப்பும், சனிக்குக் கசப்பும் ஆகும். வலிது பெற்ற கிரகம் இருந்த இடம் முதல் மும்மூன்று இராசிகளை கிழக்கு முதலிய திசைகளாக வைத்து எண்ணிப் பார்த்தும் பிரசவ வீட்டின் நான்கு பக்கங்களிலுமுள்ள வீட்டின் அடையாளங்களைச் சொல்ல வேண்டியது எ-று.

---

* வாலை - பன்னிரண்டு வயதுப் பெண்.

(வி-ரை.) பிரசவ ஸ்திரீயினதும், பிரசவ ஸ்திரீயுடன் இருந்த ஸ்திரீகளினதும் பருவத்தை சூரியாதி கிரகங்களுடைய வயது பிரமாணத்தால் கூறுதல் வேண்டும். சூரியனுக்கு வயது-50, சந்திரனுக்கு-70, அங்காரகனுக்கு-16, புதனுக்கு-20, குருவுக்கு-30, சுக்கிரனுக்கு-7, சனிக்கு (இராகு கேதுவுக்கு) 100-ஆகும். இம்முறையே நோக்கும்போது.

சூரியன்-50, சந்திரன்-70, சனி-100, குரு-30 இந்நால்வர்களும் விருத்தபருவம் தளர்ச்சியான வயதுடையவர்கள். புதன்-20, அங்காரகன்-16, சுக்கிரன்-7 இம்மூவர்களும் இளமைப்பருவம் வளர்ச்சியான வயதுடையவர்கள். இம்முறையே நோக்கும்போது குருவைவிட சூரியனும், சூரியனை விட சந்திரனும், சந்திரனைவிட சனியும் முதிர்ந்த பருவமுடையவர்களாவர். புதன் மத்திம வயதுடையவன். புதனைவிட செவ்வாயும், செவ்வாயைவிட சுக்கிரனும் இளமைப்பருவ முடையவர்களாவர். இம்முறையை நோக்கிக் கூறுதல் சாலக்கற்ற நல்லறிவாளர் கடமையாம். இக்கருத்தைத் தழுவி 4-5-வது செய்யுள்களைத் திருத்தி அமைத்தாமென்க.

சோதிடசாஸ்திரத்தில் கைப்பு, தித்திப்பு, புளிப்பு, உவர்ப்பு, துவர்ப்பு, கார்ப்பு, ஆகிய ஆறுசுவைகளை ஏழுகிரகங்களுக்கு இன்னின்ன சுவைகள் உரியதென கூறப்பட்டிருக்கின்றது. அதாவது "பாஸ்கரம்-கடுக-லவண-திக்த-மிச்ரிதா-மதுரா-ம்லௌச-கஷாயஇத்யபி" என்றவராக மிசிராசாரியர் வசனப்படி சூரியனுக்குக்காரம் (கார்த்தல்), சந்திரனுக்குஉப்பு (உவர்த்தல்) செவ்வாய்க்குத் துவர்த்தல், புதனுக்கு சட்ரசம் (அறுசுவை), குருவுக்கு இனித்தல், சுக்கிரனுக்குப் புளித்தல், சனிக்குக் கசத்தல் முதலியனவாம். (இராகுவுக்குக் கசப்பும், கேதுவுக்குத் துவர்ப்புமாம்).

ஜனன காலத்தில் பிரசவஸ்திரீகள் உடுத்தியிருந்த சேலைகளின் விபரமாவன:—

| | |
|---|---|
| சூரியன் | வலிதாகவும் உரமாகவும் உடையது. |
| சந்திரன் | புதியதும், அழகாகவும் உடையதுமாகும். |
| செவ்வாய் | தீப்பட்டதும் கிழிந்ததும் அழுக்குடையதுமாகும். |
| புதன் | வலையைப்போன்றதும் நீரில் நனைந்ததுமாகும். |
| குரு | புதியதும் பழையதுமின்றி நடுநிலைமையானதாகும். |
| சுக்கிரன் | திடமுள்ளதும் அழகுடையதுமாகும். |
| சனி | பழையதும் கிழிந்ததுமாகும். |

இதனை மாதுருஸ்தானம், ஸ்தானாதிபன், காரகன், மாதுருஸ்தானத்தில் இருந்தோன், பார்த்தோர்களைக் கொண்டு கூறுதல் வேண்டும். இப்படி பார்ப்பவர்கள் அனேகராயின் சட்பலங்களைப்பார்த்து வலிதுபெற்ற கிரகத்திற்குரிய வஸ்திரத்தைக் கூறுக.

ஆறுவது செய்யுளில் "இலக்கினதிசை தொட்டு எண்ணே" என்று மூன் பிரதிகளில் காணப்படுகின்றது. ஆனால் வாராக மிகிராசார்யர்வசனத்தைக்கொண்டு நோக்கும்போது எல்லாக் கிரகங்களிலும்வலிதுபெற்றகிரகத்தைக்கொண்டு பிரசவ வீட்டின் இலட்சணத்தை அறிதல்வேண்டுமாதலால், அங்ஙனம் வலிதுபெற்ற கிரகம் இருந்த ராசிமுதல் மும்மூன்று ராசிகளை கிழக்கு முதலான திசைகளாகப் பிரித்தறிந்து, அந்த திசைகளிலுள்ள ராசியையும் அதிலிருந்த கிரகத்தையும்கொண்டு பிரசவ வீட்டின் சுற்றிலுமுள்ள

வீடுகளின் இலட்சணங்களைக் கூறுதல்வேண்டும் என்று ஏற்படுதலின், "கோள்உறும் திசைதொட்டு எண்ணே" என்று திருத்தியமைத்தாம் என்றறிக. இது விஷயமாய் பவனக்ரஹஸம்யோகை: ப்ரதிவேச்மாநி சிந்தநீயாநி" என்று சாராவளியிலும் கூறப்பட்டிருத்தலறிக. வலிதுபெற்ற கிரகம் இருந்த இராசிமுதல் மூன்று ராசிகள் கிழக்குத்திசை, அதற்குமே லுள்ள மூன்று ராசிகள் தெற்குத்திசை, அதற்குமேலுள்ள மூன்றுராசிகள் மேற்குத்திசை, அதற்குமேலுள்ள மூன்று ராசிகள் வடக்குத்திசையாகும். சிலர் இலக்கின முதலாகவும் பார்த்துரைப்பார்கள்.

1. குரு பரம உச்சத்துக்கு முன்னுக (பரமோச்ச ஸ்தானத்திற்குப் போவதாக) இருந்து ஜனனலக்கினம் மிதுனம் அல்லது மீனமாயிருந்தால் மூன்று அந்தஸ்துள்ள வீட்டில் ஜனனமென்றும், குரு பரமோச்சத்தி லிருந்தால் நான்குவகை அந்தஸ்துள்ளவீட்டில் ஜனனமென்றும், பரமோச் சத்தை விட்டு தாண்டி இருந்தால் இரண்டு அந்தஸ்துள்ள வீட்டில் ஜனனமென்றும் கூறுக.

2. குரு தனுவில் இருந்தால் பிரசவவீடு திரிசாலையை புடையதென் றும், மிதுனம் மீனத்தில் இருக்க துவிசாலை என்றும் சொல்லுக. கடகம் சதுர்சாலை என்றறிக. துவிதசாலை இரண்டுகட்டுவீடு அல்லது இரண்டுகட்டு மேல்மாளிகை யாகும் இம்முறை பெரும்பாலும் நகரவாசிகள் ஜாதகத் திற்கே பயன்தரும்.

12-ஆம் இடம் கட்டிலின் 4-வது கால் ஆகும். இப்படி இலக்கின முதலாக மஞ்சத்திற்குச் சொல்லப்பட்ட பன்னிரண்டு ராசிகளில் உபயராசி யாக வரும் இடத்தில் வளைந்து இருக்கும். அவ்வித உபயராசியில் பாவர் கள் இருந்தால் வளைந்து ஒடிந்து இருக்கும். ஷை உபயராசியில் சுபர் இருந்தாலும் பார்த்தாலும் ஒடியாது செவ்வையாயிருக்கும். உபயராசியில் பாவகிரகங்கள் உச்சம்-ஆட்சி-மூலத்திரிகோணம் நட்பு இவ்வித இடங்களில் இருக்கில் பழுதில்லாது வலுவாகவே இருக்குமென்க.

## பிரசூதி சயன திக்கு

| | | | |
|---|---|---|---|
| மேஷம் ரிஷபம் | கிழக்கு | துலாம் விருச்சிகம் | மேற்கு |
| மிதுனம் | தென்கிழக்கு | தனுசு | வடமேற்கு |
| கடகம் சிங்கம் | தெற்கு | மகர கும்பம் | வடக்கு |
| கன்னி | தென்மேற்கு | மீனம் | வடகிழக்கு |

இந்த ராசிகளில் ஒன்று ஜனனலக்கினமானுல் அந்தராசிக்குரியதிக்கில் சிரம்வைத்துப் பிரசூதி ஸ்திரி சயனித்திருந்தாள் என்று அறிக.

## பிரசூதி ஸ்திரி சயனமஞ்சனத்தின் இலட்சணம்

இலக்கினம் 2-ஆம் இடம் கட்டிலின் 1-4-வது கால்களுக்கு நடுவில் தலைவைத்துச் சயனிக்குந் திசையாகும்.

3-ஆம் இடம் கட்டிலின் தலைப்பக்கத்திலுள்ள 1-வது வலதுகால்.

4-5-ஆம் இடம் கட்டிலின் வலதுபக்கம் 1-வது 2-வது கால்களுக்கு மத்தியிலுள்ள ஸ்தானமாகும்.

6-ஆம் இடம் கட்டிலின் கால்பக்கத்துள்ள 2-வது காலாகும்.

7-8-ஆம் இடம் கட்டிலின் 2-3-வது கால்களுக்கு நடுவில் கால் நீட்டும் திசையாகும்.

9-ஆம் இடம் கட்டிலின் கால்பக்கத்துள்ள 3-வது காலாகும்.

10-11-ஆம் இடம் கட்டிலின் இடதுபக்கம் 3-4-வது கால்களுக்கு மத்தியிலுள்ள ஸ்தானமாகும். (66)

திரம்உபயம் சரத்துஇரவி இருத்தல்விளக் கசைத்தல்
திங்களைப்பா வர்கள்பார்க்கில் தீர்க்கம்உறும் தீபம்
உரைமருவும் இலக்கினத்துக்கு இருபாலும் ஆறுஎன்று
ஓதும்மனை தனில்இருந்தார் உடன்வெளியில் இருப்பார்
இரவியோடு பளிங்குகேந் திரத்துஇருக்கில் கிழக்குஆம்
இரணியன்மால் கேந்திரத்தில் இருந்திடில்உத் தரமே
அரவுசெவ்வாய் கேந்திரத்தில் உற்றக்கால் தெற்குஆம்
அணிமதியம் கரும்காரிக்கு அகம்மேற்கு வாசல்.

(இ-ள்) சூரியன் திரராசியில் இருந்தால் விளக்குத் திரமாக அசையாமல் இருக்கும், சரராசியில் இருந்தால் அசைந்து அலைந்துகொண்டிருக்கும் உபயராசியில் இருந்தால் அசைந்தும் அசையாமலும் இருக்கும் என்க. சந்திரனைப் பாவர்கள் பார்த்தால் தீபம் அணைந்துவிடும் (சுபர்கள் பார்த்தால் பிரகாசமாக எரிந்துகொண்டிருக்கும், சுபரும் பாவரும் கூடிப்பார்த்தால் மங்கிய பிரகாசத்துடன் எரிந்துகொண்டு இருக்கும்) என்க. இலக்கினத்திற்கு இரண்டு பக்கங்களிலுமுள்ள ஆறு ஆறு ராசிகளாகிய திருசியம் அதிருசியம் (அல்லது உதிதம், அநுதிதம்) என்னும் இராசிகளில் (இலக்கினமுதல் அபசவ்வியமாக எண்ணிக்கண்ட ஆறு ராசிகளாகிய) திருசிய ராசியில் எத்தனைக் கிரகங்கள் இருந்ததோ அத்தனை ஸ்திரீகள் பிரசவ அரைக்கு வெளியாகவும், (இலக்கினமுதல் சவ்வியமாக எண்ணிக்கண்ட ஆறு ராசிகளாகிய) அதிருசிய ராசிகளில் எத்தனைக்கிரகங்கள் இருந்ததோ அத்தனை ஸ்திரீகள் பிரசவ அரைக்கு உள்ளாகவும் இருப்பார்கள் என்க. பிறந்த வீட்டின் தெருவாசற்படியானது சூரியன்-சுக்கிரன் கேந்திரத்தில் இருந்தால் கிழக்காகவும் புதன்-குரு-கேந்திரத்தில் இருந்தால் வடக்காகவும் அங்காரகன்-இராகு-கேது கேந்திரத்தில் இருந்தால்தெற்காகவும் சந்திரன்-சனி-கேந்திரத்தில் இருந்தால் மேற்காகவும் இருக்கும் எ-று.

(வி-ரை) 1-வது அடியில் "சுங்கன் இருக்க விளக்கரையும்" என்று சில பிரதிகளில் காணப்படுகின்றது. அது அச்சுப்பிழை. "திரம் உபயம் சரத்திரவி" என்றிருத்தல் வேண்டும். யாதுபற்றி எனின்? விளக்கின் ஆதிக்கம் "தீயோஅர்க்கயுக்த்தச்சவசாத்" என்ற வராகமிகிராசாரியர் வசனத்தினால் சூரியனுக்கேயன்றி சுக்கிரனுக் குரித்தாகலின் என்க. தீபத்திரியின் ஆதிக்கம் சந்திரனுக்கு உரித்தாகலின் சந்திரனைப்பாவர்கள் பார்த்தால் தீபம் தீர்க்கப்படும் என்றுரைத்தது பொருத்தமுடையதாகும்.

2-வது அடியில் "இலக்கினத்துக்கு இருபாலும் நான்கும்" என்றிருப்பது அச்சுப்பிழை. அஃது "இலக்கினத்துக்கு இருபாலும் ஆறு என்று ஓதுமனை" என்றிருத்தல்வேண்டும். யாதுபற்றி எனின்? கூறுதும்.

ஆசிரியர் வராகமிகிரனாரவர்கள் ஜனனகால லக்ஷணாத்தியாயத்தில் 22-வது சுலோகத்தில் "பஹிரந்தச்ச சக்ரார்த்தேத்ருச்யா த்ருச்யேஅந்யதாஅபரே" என்று கூறியிருக்கின்றபடி அதாவது திருசிய சக்கிரார்த்தத்தில்எத்தனைக் கிரகங்கள் இருந்ததோ அக்கனை ஸ்திரீகள் பிரசவ அறைக்கு வெளியாகவும் அதிருசிய சக்கிரார்த்தத்தில் எத்தனைக் கிரகங்கள் இருந்ததோ அத்தனை ஸ்திரீகள் பிரசவ அறைக்கு உள்ளாகவும் இருந்தார்கள் என்று அறியப்படுத வினைல் என்றறிக. சிலர் இதனை வேறுவிதமாகக் கூறுகின்றனர் என்பதை "அந்யதா அபரே" என்ற வசனத்தினைல் குறிப்பிட்டிருக்கின்றார். அதாவது திருசிய சக்ரார்த்தத்தில் உள்ள கிரகம் எத்தனையோ அத்தனை ஸ்திரீகள் பிரசவ அறைக்குள்ளாகவம், அதிருசியத்தில் உள்ள கிரகம் எத்தனையோ அத்தனை ஸ்திரீகள் பிரசவ அறைக்கு வெளியாகவும் இருப்பார்கள் என்பதேயாம்.

இந்த திருசியா திருசிய விஷயத்தை பிருகஜ்ஜாதக உரையாசிரியர் ஒருவர் பாலாரிஷ்டப்படலத்தில் 2-வது சுலோகத்தில் பத்தாமிடமுதல் நான்காமிடம் வரைக்கும் பூர்வார்த்தம் என்றும், நான்காமிடமுதல் பத்தாமிடம் வரைக்கும் உத்தரார்த்தம் என்றும் கூறி அதற்கு வாதராயண வசனத்தையும் ஆதாரமாகக் குறிப்பிட்டிருப்பது எட்டுணையும் பொருந்தாதென்க. ஒருசமயம் இந்நூலாசிரியர் அதனை முக்கியமெனக்கருதி "இலக்கினத்துக்கு இருபாலும் நான்கு ஓதுமனே" எனக் கூறினர்போலும். அதாவது இலக்கினத்துக்கு முன்னே 4-மிடமும் பின்னே நாலாமிடமாகிய 10-மிடமும் சக்கரபூர்வ உத்தரார்த்தங்கள் எனக் கூறினர் என்றும் தோற்றுகின்றது. அங்ஙனமாயினும் திருசியா திருசியவிஷயத்தில் அது பொருந்தாதென்றறிக.

இது இப்படியிருக்க இச்செய்யுளிலுள்ள ஓர் விந்தையான அச்சுப்பிழையைக் கூறுவாம். 3-வது அடியில் ஒரு சனியும், 4-வது அடியில் ஒரு சனியும் இருப்பதை என்னென்று கூறுவது, முன் இப்படலத்து 1-வது செய்யுளில் இரண்டு சிங்கத்தை யுணராதவர்கள் இங்கு இரண்டு சனியை எங்ஙனம் உணர்வார்கள். ஒருக்காலும் உணரமாட்டார்கள் அன்றோ "படித்தவன் பாட்டைக் கெடுத்தான் எழுதினவன் ஏட்டைக் கெடுத்தான்" என்றபடி அவரவர்கள் இஷ்டப்படி ஆதியில் அச்சுவாகனம் ஏற்றிவிட, அதை ஆழ்ந்தறியாமல் ஒருசிலர் விதண்டாவாதமாக இரண்டு சிங்கம்தான், இரண்டு சனிதான் என "கல்லடி தச்சன் போனவழி-காடுமேடெல்லாந் தவிடுபொடி" என்பதை யொப்ப சாதிக்க முற்படுகின்றனர். என்னே ஆற்றல். இதுதானே சாலக்கற்ற நல்லறிவாளர் மாண்பு நுண்மதியாளர்களின் நோக்கம்?

"வாமசூரியன் கிழக்கு மன்னி சுக்கிரற்கு வன்னி" என்று இந்நூலாசிரியர் ஏழாம்பாவகப் படலத்தில் கூறிப்போந்தபடி கிரகதிக்குகள் வருமாறு:-

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சூரியன் | கிழக்கு | கிழக்கு | சனி | மேற்கு | மேற்கு |
| சுக்கிரன் | தென்கிழக்கு | | சந்திரன் | வடமேற்கு | |
| செவ்வாய் | தெற்கு | தெற்கு | புதன் | வடக்கு | வடக்கு |
| பாம்பு | தென்மேற்கு | | குரு | வடகிழக்கு | |

இங்ஙனம் அவ்ஷடதிக்குகளுக்கும் நவக்கிரகங்கள் அதிபராவர் எனக் கூறிய ஆசிரியர், மறுபடி அவர்களை நான்கு திக்குகளுக்கும் அதிபர்களாக வகுத்திருக்கின்றனர். இங்ஙனம் வகுத்தது யாதுபற்றி எனின் நந்தேயத்து வாஸ்து சாஸ்திரங்களில் வடக்குத் தெற்கு, கிழக்கு மேற்காக வீதிகளைஏற் படுத்தி வீடுகளைக் கட்டுதல் மரபாதலால் அங்ஙனம் கட்டிய வீடுகளின் தெருவாயில் கோணங்களின்றிய கிழக்கு, தெற்கு, மேற்கு, வடக்கு ஆக அமைதலால் இங்ஙனம் வகுத்தனர் என்றறிக. மேலே விளக்கிக் காட்டியத ஞல் ஒவ்வொரு கோணங்களை ஒவ்வொரு திசையில் கூட்டி நான்குதிசைக் குமம 9-கிரகங்களை வகுத்துரைத்திருக்கும் உண்மை நன்கு விளங்கும், ஆகவே 3-வது அடியில் 'இரவியொடு பளிங்கு" எனவும், "இரணியன்மால்" எனவும், 4-வது அடியில "அனிமதியம கருமகாரி" எனவும் திருத்தி யமைத்தாம் என்றறிக. 1-வது அடியில் "பங்கு" என்றிருப்பது "பளிங்கு" என்றிருத்தல் வேண்டும். இதை யுணராதோரும் சோதிட சம்பந்தமான செய்யுளுக்குப் பொருள்கூறி தர்க்கமிட முற்போந்து அறுகராயினது விந்தையினும் விந்தையே. (67)

வாசம்உறும் மூன்றுஆறில் பதின்ஒன்றில் பாவர்
வந்துஇருக்கச் சனிபத்தாம் மனைஅதனில் சார
நீசமடந் தையர்இருந்து புரிவர்பரி காரம்
நீண்டசனி சுபர்மனையில் நேரில்நல்லோர் காணில்
ஆசுஉறும் ஈனத்தொழில்செய் நாரிஅருகு இருப்பள்
ஆம்என்றே சுருதிஅறிந்து உரைத்தநல்லோர் ஆய்ந்தே
தேசுஉறுநல் கலைநிறையும் திங்கள்முக மயிலே
செப்பினர்இப் பலபாகம் தெந்துகொளத் தானே.

(இ-ள்) இலக்கினத்திற்கு 3-6-11-ஆமிடங்களில் பாவர் இருக்கச் சனி பத்தாமிடததி லிருந்தால் கீழ்க்குலத்துப் பெண்கள் இருந்துபரிகாரம்செய் வார்கள். சனி சுபர் வீட்டில் சுபருடன் கூடி இருந்தாலும் பார்த்தாலும் மிகவும் தாழ்ந்த ஈனத்தொழில் செய்யும் பெண்கள் அருகில் இருந்து பரி காரம் செய்வார்கள் என்று சோதிட சாஸ்திர விற்பன்னர்கள் ஆராய்ந்து ஜாதகத்தின் பலனைக்கூறும் பிரிவை கூறினார்கள் எ-று. (68)

செப்பியதோர் பலபாகம் பகர வேண்டிச்
செங்கதிரோன் முதல்நவக்கோள் செறிபலங்கள் தெரிந்தே
ஒப்புடனே சனித்தநவக் கிரகபுடங் கண்டே
உயா தூமன முதலஐவர் குளிகாதி நால்வர்
தப்புஅரவே எண்ணிஇலக் கினபுடமும் ஆகச்
சாற்றிடுபத் தொன்பதுஎனத் தகும்புடங்கள் வரைந்தே
இப்புவியில உரைத்தவர்க்கே சித்திக்கும் பலன்கள்
எனச்சுருதி மொழிப்புலவர் இயம்பினர்கள் தாமே.

(இ-ள்) ஜாதகங்களுக்குச் சுபாசுப பலன்களைத் திட்பமாகக் கூற விரும்பினல் சூரியன் முதலாகிய ஒன்பது கிரகங்களின் (ஸ்தானம்-திக்கு-காலம்-சேஷ்டை-கிசர்க்கம்-திருக் என்னும்) சட்பெலங்களைக் கணித்துக்

கண்டு, நவக்கிரகங்களின் புடமும், தூமாதி ஐவர் குளிகாதி நால்வர் ஆகிய உபக்கிரகங்களின் ஸ்புடமும், இலக்கினஸ்புடமும் ஆக பத்தொன்பது ஸ்புடங்களைக் கணித்துப்பார்த்து, இந்நிலவுலகத்தில் சொல்லுவோர்களுக்கே சாத்தியமாகும் என்று சோதிட சாஸ்திரம் உணர்ந்த பெரியோர்கள் அருள்செய்தார்கள் எ-று. (69)

இயம்புசன்ம மனைநவாங் கிசபங்குறைந்து அதனில்
இனிதுஉதிக்கின் நவக்கிரகம இருந்தபடி சரியே
நயம்பெறுமற்று அங்கிசையில் உதித்திடினே அந்த
நவகிரகம இருக்கும்நட்சத் திரபாதம் அறிந்தே
செயம்பெறவே நின்றமனை வீடுஅடுத்த வீட்டில்
செறிந்துஇருக்கும் விபரமெலலாம் தெரிந்துபண்ணிக்கண்டே
பயன்பெறுசொல் பலபாகம் லக்கினமே முதலாய்ப்
பன்னிரண்டு வீட்டுக்கும் பலன்கள்அறிந்து உரைப்பாய்.

(இ-ள்) சொல்லப்பட்ட ஜனன இலக்கினத்துக்குரிய என்பது நவாம்சங்களில, நடு (மத்திய) நவாம்சமாகிய ஐந்தாவது நவாம்சத்தில் பிறந்திருந்தால், அப்போது இராசிசக்கரத்தில கிரகங்கள் இருக்கும் கிரமமானது (பாவகபலன் சொல்லுவதற்குச்) சரியாக இருக்கும். அப்படிக்கின்றி (அதற்கு முன் பின்னான) வேறு நவாம்சங்களில் பிறந்திருந்தால் அப்போது அந்த நவகிரகங்கள் இருக்கும் நட்சத்திர பாதங்களை அறிந்து அதனால இராசிச்சக்கரத்தில் கிரகங்கள் நின்றவீடு; அல்லது முன்பின்னான அடுத்த (பாவகங்கள்) வீடு இவற்றுள் இருக்கும் விவரங்கள் எல்லாவற்றையும் நன்றாகத் தெரிந்து, கணக்கிட்டுப் பார்த்துப் பயனை அடைதற்குரிய பலபாகத்தை, இலக்கினமுதலாகப் பன்னிரண்டு பாவங்களினால் அறிந்து சொல்லவேண்டும் எ-று.

(வி-ரை) சோதிச் சக்கரத்தில் மக்கள் முக்கால நிகழ்ச்சியைக் கூறுவதற்கு பிரதானமான மூன்று முக்கிய ஆதாரங்கள்காணப்படுகின்றன. அவற்றுள் முதலாவது இராசிகள், இரண்டாவது கிரகங்கள், மூன்றாவது இலக்கினாதி பன்னிரண்டு பாவகங்களாகும். இந்த மூன்றினுடைய ஆதாரம ஆதேயங்களினாலேயே சகல சோதிடசாஸ்திரங்களும் ஆக்கப்பட்டிருக்கின்றன.

ஆகவே கிரகநிலையை அறிவிக்கும் சக்கரங்கள் இரண்டினுள் முதலாவது இராசி சக்கரமும், இரண்டாவது பாவசக்கிரமுமாகும். இராசி சக்கரம் பஞ்சாங்கத்திலுள்ள சார நிலைமையினாலும், பாவக சக்கரம் ஜாதகத்திலுள்ள பாவக கணிதஸ்புடமூலத்தினாலும் அமைக்கப்படுவதாகும்.

'இராசிசக்கரம்' என்பது அவரவர்கள் ஜனனகாலத்தில் கிரகங்கள் இருந்த இராசிகளை அறிவிக்குஞ் சக்கரமாகும். இந்தச் சக்கரத்தின் உதவியைகொண்டுதான் ஜனனகாலத்தில் கிரகங்கள் இருந்த இராசி-ஆட்சி-உச்சம், நட்பு, பகை, நீசம் என்பவைகளையும், ஆதிபத்யங்களையும், கேந்திரம், திரிகோணம், பணபரம், ஆபோக்லிபம், துஜை, உக்குமம், சரம், திரம், உபயம் முதலியவைகளையும் அறிதல்வேண்டும். ஆகவே இராசி சக்கரத்தினுடைய பிரயோசனம் மேற்குறித்தவைகளைப் பற்றியதற்கே

யன்றி, பாவகபலன், தசாபலன்களுக் குரித்தானதல்ல. இக்காலத்துள்ள சில சாமான்னிய சோதிடர்கள் இந்த இராசிச் சக்கரத்தைகொண்டே பலாபலன்களைக் கூறிவருகின்றனர். இஃது எட்டுணையும் பொருத்தமானதல்ல. பலபாகங்களைக் கூறுவதற்குப் பாவகசக்கரமே முக்கியமானது, இதுவே சோதிடஞான சூட்சுமதரிசிகளாகிய தொல்லாசிரியார்களின் சம்மதமானது; பூர்வீக பிரபல சோதிடசாஸ்திரிகளுக்குப் பொருத்தமானது; அனுபவ நிகழ்ச்சிக்கும் ஆதாரமானது. இதில் எட்டுணையும் சந்தேகமே இல்லை. ஆதலால் ஜாதககங்களைக்கொண்டு சகல சுபாசுப பலன்களையும் அறிந்துணாவதற்கு முதலாவது இராசிச்சக்கரமும், இரண்டாவது பாவகசசக்கரமும் ஆகும். இராசிசக்கரம் பொதுவெனவும், பாவகசக்கரம் சிறப்பெனவும் அறியததக்கது ஜனனசமயத்திற்குப் பஞ்சாங்கத்தில் சூரியாதி கிரகங்கள் இருந்த நக்ஷத்திரப் பாதங்களை அறிந்து ஏற்படுத்தும் சக்காம் இராசிசக்கரம் எனவும் இராசியில் ஜனனசமயத்திற்கு ஏற்பட்ட பாவகாதியை இலக்கினமாகக கற்பித்துக்கொண்டு அதுமுதல் பன்னிரண்டு இராசிகளில் 12-பாவகங்களை ஏற்படுத்துஞ்சக்கரம் பாவகச்சக்கரம் எனவும் அறிதல்வேண்டும்.

ஆசிரியர் எந்த ராசிகளிலானாலும் மத்திய நவாம்சத்தின் பாகைகள் 13-20-க்குமேல் 16-40-கருள் ஆகலின், அந்த நவாம்சத்தில் ஜனனமானால் இராசி சக்கரத்தில் இருப்பதுபோலவே பாவக சக்கரத்திலும் கிரகங்கள் இருக்குமென்று திண்ணமாகக் கூறியிருக்கின்றார். ஆயினும் அது முறையன்று. அங்ஙனமானால் ஆசிரியர் வாக்குத தவறுதானே? என்று கூறின் தவறல்ல. யாதுபற்றி எனின்? கூறுதும். இங்கு பலபாகத்திற்குப் பாவகசக்கரம அத்தியாவசியம் என்பதைமட்டும் விளக்கவந்தனரேயன்றி, பாவகஸ்புட நியதிகள் முற்றும் விளக்க முயலாமையாலென்றறிக. ஆனால் மத்திய நவாம்சத்தில் பிறந்தால் ஒருசமயம் இராசியில் உள்ளபடியே பாவகங்களிலும் கிரகங்கள் அமைதல் கூடும். இது ஏகதேசம். பிறவற்றிற்குப் பாவகஸ்புடம் செய்து நிர்ணயித்தல் முறையாகும். இதன் விரிவை ஜாதக சாகரத்தில் பாவக கணித அத்தியாயத்தில் தெளிவாக அறிக.

### பாவக சக்கர உதாரணம்

கலியுகவூ 5005-ல் குரோதி வைகாசிமீ 9உ ஆதிவாரம் சுக்லபக்ஷம் அஷ்டமி 52-28, மகம்-45½, இந்நாள் உதயாதி நாழிகை 19½, அளவில் நிரயன இலக்கினம் ராசி-5, பாகை-0, கலை 24-க்கு உத்திரம் 2-ல் கன்யா லக்கினம், மகர நவாம்சம் வேலூரில் ஜனனம்.

### கிரகஸ்புடம்

| | | | |
|---|---|---|---|
| குரு கேது | புத சுக் | அங சூரி | |
| | | | |
| சனி | இராசி | | சந் |
| | | | லக் ராகு |

| | | | |
|---|---|---|---|
| கேது | குரு | அங் பு-சு | சூரி |
| சனி | | | |
| | பாவகம் | | சந் |
| | | | லக் ராகு |

| கிரகம் | இ. | பா. | கலை | கிரகம் | இ. | பா. | கலை |
|---|---|---|---|---|---|---|---|
| ரவி | 9 | 8 | 27 | சுக்கிரன் | 0 | 25 | 42 |
| மதி | 4 | 7 | 12 | சனி | 9 | 28 | 40 |
| குஜன் | 1 | 10 | 37 | இராகு | 5 | 1 | 58 |
| புதன் | 0 | 24 | 4 | கேது | 11 | 1 | 58 |
| குரு | 11 | 26 | 53 | தசமம் | 1 | 28 | 57 |

நிரயண மார்க்கப்படி இராசி சக்கரத்தில் கன்னியா லக்கினத்தில் பிறந்த தாயினும், சாயனத்தின்படி பாவக சக்கரத்தில் சிங்கம் 28-வது பாகையில் லக்கினம் இருப்பதனால் இச்சாதகம் சிங்கலக்கினமேயாகும். இலக்கினாதிபன் சூரியனேயாவன்.

## பாவகஸ்புடம்

| பாவகம் | ஆரம்பம் | | | மத்தியம் | | | அந்தம் | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| | இ. | பா. | கலை | இ. | பா. | கலை | இ. | பா. | கலை |
| இலக்கின | 4 | 13 | 23 | 4 | 28 | 17 | 5 | 13 | 23 |
| தன | 5 | 13 | 23 | 5 | 28 | 30 | 6 | 13 | 36 |
| திருதிய | 6 | 13 | 36 | 6 | 28 | 44 | 7 | 13 | 50 |
| சதுர்த்த | 7 | 13 | 50 | 7 | 29 | 57 | 8 | 14 | 50 |
| பஞ்சம் | 8 | 13 | 50 | 8 | 29 | 44 | 9 | 12 | 36 |
| சஷ்டம் | 9 | 13 | 36 | 9 | 28 | 30 | 10 | 13 | 23 |
| சப்தம் | 10 | 13 | 23 | 10 | 28 | 17 | 11 | 13 | 23 |
| அஷ்டம் | 11 | 13 | 23 | 11 | 28 | 44 | 0 | 13 | 36 |
| நவம | 0 | 13 | 36 | 0 | 29 | 44 | 1 | 13 | 50 |
| தசம | 1 | 13 | 50 | 1 | 28 | 57 | 2 | 13 | 50 |
| ஏகாதச | 2 | 13 | 50 | 2 | 29 | 44 | 3 | 13 | 36 |
| துவாதச | 3 | 13 | 36 | 3 | 28 | 30 | 4 | 13 | 23 |

இரண்டாவது சக்கரத்தில் 6-வது பாவகத்தில் சனி இருக்கின்றார். ஆனால் அது கும்பராசி என்று இராசி கற்பனை செய்யக்கூடாது. 6-வது பாவகமென்று கருதுதல் வேண்டும்.

சர்வதாரிஸூ ஆனிமீ 26உ ஆதிவாரம் கிருஷ்ணபக்ஷம் திருவாதிரை நாழிகை-49, விநாடி-12, சூரிய உதயாதி நாழிகை 1-15, இலக்கினபாவ மத்யஸ்புடம் ராசி-3; பாகை-1, கலை 16-க்கு புனர்தம் 4-ல் கர்க்கடக லக்கினத்தில் ஜனனம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| புனர்தம் | 2-ல் | ரவி | புனர்தம் | 1-ல் | சுக்கிரன் |
| திருவாதிரை | 2-ல் | மதி | பூசம் | 4-ல் | சனி |
| சித்திரை | 3-ல் | குஜன் | பூசம் | 2-ல் | ராகு |
| புனர்வசு | 2-ல் | புதன் | உத்ராடம் | 4-ல் | கேது |
| அனுஷம் | 1-ல் | குரு | | | |

## கிரகஸ்புடம்

| கிரகம் | | இ. பா. கலை | கிரகம் | | இ. பா. கலை |
|---|---|---|---|---|---|
| சூரியன் | ராசி | 2 24 7 | சுக்கிரன் | ராசி | 2 28 5 |
| சந்திரன் | ,, | 2 10 9 | சனி | ,, | 8 14 50 |
| செவ்வாய் | ,, | 5 1 18 | ராகு | ,, | 8 9 7 |
| புதன் | ,, | 2 26 0 | கேது | ,, | 9 9 7 |
| குரு | ,, | 7 8 59 | | | |

## இலக்கினஸ்புடம்

| | | | | | |
|---|---|---|---|---|---|
| சூரியஸ்புடம் | ராசி | 2 24 47 | சாயனலக்னம் | ராசி | 8 28 35 |
| அயனம் | ,, | 0 22 18 | நிராயனலக்னம் | ,, | 8 1 16 |
| சாயனரவி | ,, | 8 16 25 | குந்தனஸ்புடம் | ,, | 6 12 36 |

நாகப்பட்டணம் ஜனனஸ்தானத்தின் சமீப ஸ்தலம் இதன் அக்ஷாம்சம் பா-10-46, பலாம்சம் 2-18, தனம் விநாடி-3½, குணகம்-99, பிரதமசர கண்டம் 23-விநாடி, துவிதீயசரகண்டம் 18-விநாடி, திருதீயசரகண்டம் 8-விநாடி.

## நக்ஷத்திர இராசிமானம்

| மேஷம் | ரிஷபம் | மிதுனம் | கடகம் | சிம்மம் | கன்னி |
|---|---|---|---|---|---|
| 4-15 | 4-41 | 5-15 | 5-31 | 5-17 | 5-1 |
| மீனம் | கும்பம் | மகரம் | தனுசு | விர்ச்சிகம் | துலாம் |

## த ச ம ம்

பூர்வந்த விநாடி-881, அகசு-31-52, தினதளம்-15-56, இலங்கோதய கடக புத்த விநாடி-177, மிதுனம்-ரிஷபம்-624, மேடச்செல்லு விநாடி-82, நிராயன தசம பாவம் ராசி 0-15-16, சாயனதசமம் 1-7-34.

## பாவகஸ்புடம்

| பாவகம் | ஆரம்பம் | மத்திமம் | அந்தம் |
|---|---|---|---|
| | இ. பா. கலை | இ. பா. கலை | இ. பா. கலை |
| லக்னம் | 2 18 36 | 3 1 16 | 3 18 36 |
| தனம் | 3 18 36 | 4 5 56 | 4 23 16 |
| திருதியம் | 4 23 16 | 5 10 36 | 5 28 6 |
| சதுர்த்தம் | 5 28 6 | 6 15 16 | 6 28 6 |
| பஞ்சமம் | 6 28 6 | 7 10 36 | 7 23 16 |
| சஷ்டமம் | 7 23 16 | 8 5 56 | 8 18 36 |
| சப்தமம் | 8 18 36 | 9 1 16 | 9 18 36 |
| அஷ்டமம் | 9 18 36 | 10 5 56 | 10 23 16 |
| நவமம் | 10 23 16 | 11 10 36 | 11 28 6 |
| தசமம் | 11 28 6 | 0 15 16 | 0 28 6 |
| லாபம் | 0 28 6 | 1 10 36 | 1 23 16 |
| விரயம் | 1 23 16 | 2 5 56 | 2 18 36 |

| | | | |
|---|---|---|---|
| | | | சூ-சந் பு-சு |
| | இராசி | | லக் ச-ரா |
| கேது | | | |
| | குரு | அங் | |

| | | | |
|---|---|---|---|
| | | | சந் |
| | பாவகம் | | ல-சூ பு-சு ச-ரா |
| கேது | | | |
| | குரு | அங் | |

*இராசிசக்கரத்தில் 12-ம் ராசியான மிதுனத்தில் இருந்த கிரகங்களில் சூரியன், புதன், சுக்கிரன் இவர்கள் பாவக கணிதப்படி இலக்கினபாவகத்தில் மாறியிருப்பதை அறிக. இச்சாதகம் கடகம் 1-வது நவாம்சம் ஜனனம்.* (70)

**உறைசெறி கிரக நட்புஆட்சி உச்சம்**
**உறும்பகை நீசமும் சமமும்**
**நிரைபெறு மனையும் பார்வையும் தொழிலும்**
**நிகழ்த்துகா ரகமுமா ரகமும்**
**வரவுஉறு மரபும் நிறமும்மெய் வடிவும்**
**வலிசெறி பலங்கள்துர்ப் பலமும்**
**புரைஅறத் தேர்ந்து கண்டிடும் புலவர்**
**புகன்றுஉள பலன்கள்சித் திக்கும்.**

(இ-ள்) *கிரகங்களின் நட்பு-ஆட்சி-உச்சம்-பகை-நீசம்-சமம்-ஆகியவைகளையும், கிரகங்கள் இருந்த இராசி, பார்வை, செய்கை, காரகம், மாரகம், ஜாதி நிறம், உருவம், சட்பலத்தன்மை, துர்ப்பலத்தன்மை முதலியவைகளையும் பிழையின்றி ஆராய்ந்து அறிந்த சோதிடப்புலவர்கள் சொல்லும் நன்மை தீமையாகிய பலாபலன்கள் ஜாதகனுக்கு உண்மையாக சித்திக்கும் எ-று.* (71)

*கிரகசீலப்படலம் முற்றிற்று.*

---

# பாலாரிஷ்ட படலம்

மன்பதைகள் பிறந்தகாலத்தின் கிரகநிலைகளைக் கொண்டு முக்கால் நிகழ்ச்சிகளை மொழிவதற்குமுன் அவர்களுடைய வாழ்நாளின் காலவரையறையை அத்தியாவசியமாகக் கண்டுணர்தல்வேண்டும். அங்ஙனம் ஆயுளின் எல்லையைக் கண்டுணராதமுன்னர் பலாபலன்களைக் கூறத்துணிதல் பயனற்றதென்பது திண்ணம்.

ஆயுர்க்ஞாநாபாவே ஸர்வம்
விபலம் ப்ரகீர்த்திதம் யஸ்மாத்
தஸ்மாத் தத்ஜ்ஞாநார்த்தே
ரிஷ்டாத்யாயம் ப்ரவக்ஷ்யாமி. (சாராவளி)

(இ-ள்) ஆயுர்த்தாயத்தை அறிந்துகொள்ளாமல் ஜாதகபலாபலன்களைக் கூறத்துணிவது பிரயோசனமற்ற காரியமாகும். ஆதலால் அரிஷ்டாத்தியாயத்தை முதல் கூறுகின்றேன் எ-று.

ரிஷ்டாத்யாயாதீநம் ஆயுர்நராணும்
யஸ்மாத் தஸ்மாத் ரிஷ்டமாத்ரம் ப்ரவச்மீ
யஸ்யாபாவே ஸாதிதாயுஃ ப்ரமாணே
ப்ராமாண்யம் ஸ்யாத் ஸம்பவே ஸர்வதைவ. (ஜாதகாபரணம்)

(இ-ள்) மக்களுடைய ஆயுர்த்தாயம் அரிஷ்டயோகத்தினுடைய ஆதீனத்தில் இருக்கின்றது. ஆதலால் முதலில் அரிஷ்டயோகத்தைச்சொல்லுகின்றேன். (அரிஷ்டயோக மில்லாத ஜாதகங்களுக்கே ஆயுர்த்தாயகணிதஞ் செய்யவேண்டியது) அப்படி கணிக்கப்படும் ஆயுளே பிரமாணமான தீர்க்காயுளாகும் எ-று.

'பாலாரிஷ்டம்' என்னும் வடமொழியானது, பாலஃ + அரிஷ்டம் எனப் பிரிக்கப்படும். அரிஷ்டம் என்ற சப்தத்திற்கு கேடு, இம்சை, மரணக்குறி என்பது பொருள் வியாகரணத்தில் "ருஷ், ரிஷ், ஹிம்ஸாயாம்" எனவே, "ரிஷ்" என்ற தாதுவிலிருந்து உண்டாகிய இந்த சப்தமானது அகிட் "த்கரஃ" என்ற பிரத்யயத்தையும், நங் என்ற சமாஸத்தையும் சேர்ந்து ரிஷ்டம் என்று வழங்கப்படும். இதனைச் சோதிட சாஸ்திரங்களில் பெரும்பாலும் அரிஷ்டமென்று வழங்கப்பட்டிருக்கின்றது, 'ரிஷ்' என்னும் தாதுவுக்கு இம்சை என்று பொருளாதலின் அதிலிருந்துண்டாகிய 'ரிஷ்ட' சப்தத்திற்குத் துன்பம் என்று அருத்தமாகும். இதனை இப்படலத்து 4-வது கவியில் "மெய்க்கு அரிஷ்டம் பண்ணும்" எனக் கூறியிருத்தலினுல் தேக துன்பமென்பதே 'ரிஷ்ட' சப்தத்தின் சிறந்த பொருளாகும். மேல் கூறிய இரண்டு சுலோகங்களிலும் 'ரிஷ்டம்' என்று கூறி இருத்தலுணர்க.

அரிஷ்டமானது இருவகைப்படும். அவை பாலாரிஷ்டம் எவ்வனரிஷ்டமுமாகும். இதனை:—

''ஆறு இரண்டு ஐந்நான்கு எண்நான்கு அல்குஇறை சன்வயதில்கு
ஆம் பாலயோகம் இவை அரிஷ்டம் அற்பம் நடு தீர்க்கம்''

(குமாரசுவாமியம்)

எனவரும் வசனத்தினால் பன்னிரண்டு வயதுவரை பாலாரிஷ்டமென்றும், 20-வயதுவரை ஏவ்வனாரிஷ்டமென்றும், 32-வயதுவரையில் அற்பாயுள் என்றும், 50-வயதுவரையில் மத்திமாயுள் என்றும், 80-வயதுவரையில் தீர்க்காயுள் என்றும் அறிதல் வேண்டும். மற்றும்:—

அஷ்டௌ பாலாரிஷ்டம் ஆதௌஸ்ருணும்
யோகாரிஷ்டம் ப்ராஹிரா விம்சதிஸ்ஸ்யாத்
அல்பாச்ச த்வாத்ரிம்சதாங் மத்யமாயுராஃ
ஸப்தத்யா பூர்ணமாயுச் சதாந்தம் (ஜாதக பாரிஜாதம்)

எனவரும் சுலோகத்தினால் ஜாதக பாரிஜாத நூலுடையார் பாலாரிஷ்டத்திற்கு காலவரையறை எட்டுவருடமென்று அறியப்படுகின்றது. ஆனால் ஷை நூலினுள் அரிஷ்டாத்தியாயத்தின் சுலோகங்களில் பாலாரிஷ்ட காலவரையறை பன்னிரண்டு வருடமெனவே பகரப்பட்டிருக்கின்றது. அதனை பின்பு எடுத்துக்காட்டும் சுலோகங்களால் இனிது அறியலாம். அதாவது:—

ஆத்வாதசாப்தாந்தர யோகிஜாமனாம்
ஆயுஃ கலாநிச்சயாதும் நசக்யதே,
மாத்ராச பித்ரா க்ருதபாப கர்மணா
பாலக்ரஹைர் நாசமுபைதி பாலகஃ (ஜாதக பாரிஜாதம்)

(இ-ள்) பிறந்தது முதலாக பன்னிரண்டு வயதுக்குள் மன்பதைகளுடைய ஆயுளை நிச்சயித்தறிவது மிகவும் துர்லபமாகும் யாதுபற்றி எனின் அப்பன்னிரண்டு வயதுக்குள் தாய் தந்தைகளின் பூர்வ கர்ம தோஷங்களாலும், பாலகிரக தோஷங்களாலும் ஆயுள் க்ஷீணமடைகின்றதனால் என்க.

ஆத்யைச் சதுஷ்கே ஜநநீக்ருதாத்யைர்
மத்யேது பித்ரார்ஜித பாபஸங்கே
பாலஸ்ததந்த்யாஸு சதுச்சரஸ்ஸு சதுச்சரஸ்ஸு
ஸ்வகீயதோஷைஃ ஸமுபைதிநாசம். (ஜாதக பாரிஜாதம்)

(இ-ள்) பிறந்ததுமுதல் நான்கு வயதுவரை தாய் செய்த பூர்வ கர்ம தோஷத்தினாலும், 4-க்குமேல் 8-க்குள் தந்தை செய்த பூர்வ கர்ம தோஷத்தினாலும், 8-க்குமேல் 12-க்குள் தன்னுடைய பூர்வ கர்ம தோஷத்தினாலும் ஆயுள் நசிக்கின்றதென்பதாம்.

பாகவதம் 5-வது ஸ்கந்தம் 22-வது அத்தியாயம் 9-வது சுலோகம் "ஸர்வஜீவ நிவஹப்ராணோ ஜீவச்சைகம்'' எனக் கூறுமாற்றால் சந்திரன் ஜீவர்களுக்கெல்லாம் பிராணஸ்வரூபனும், ஜீவஸ்வரூபனுமாவன் என்பதும் மற்றும் "யஏஷ ஷோடசகலஃ-புருஷோ பகவான் மனோமயோ அந்நமயோ அம்ருதமயோ தேவபித்ரு மனுஷ்ய பூத பசு பக்ஷி ஸரீஸ்ருபவீருதாம் ப்ராணாப்யாயந சீலத்வாத் ஸர்வமய இதி வர்ணயந்தி'' என 10-வது சுலோகங் கூறுமாற்றால், பதினாறு கலைகளுடையவரும், பகவானும், மனோமயரும்,

அன்னமயரும், அமிருதமயரும், புருஷரும் ஆகிய இந்தச் சந்திரன் தேவர்களுக்கும், பசுக்களுக்கும், பக்ஷிகளுக்கும், ஸர்ப்பங்களுக்கும், கொடிகளுக்கும் பிராணன்களைத் திருப்தி செய்விக்குஞ் சீலமுடையவராகையால் சர்வமயர் என்பதும் பெறப்படுதலின் ஜீவ பிராணுதி சர்வமயனுகிய சந்திரனைக்கொண்டே ஜீவர்களின் அரிஷ்டத்தை நிர்ணயித்தறிதல் வேண்டும்.

இந்நியதிப்பற்றியே ஆசிரியர் கலியாணவர்மனுரவர்கள் சாராவளியில், பின்வருமாறு விளக்கி இருக்கின்றனர்.

"உடுபதி க்ருதரிஷ்டாநாம் பங்கஸ்தாவந் நிரூப்யதே பூர்வம்,
ஸம்யக் சேஷாணும் அபி யதாமதம் ப்ரஹ்ம பூர்வாணும்"

அதாவது முதல் சந்திராரிஷ்டத்திற்குப் பங்கத்தைக் கூறி, பின்பு ஓராசாஸ்திராநுசாரமாக ஏனைய அரிஷ்டபங்கங்களைக் கூறப்படும் என்பதனுல் பிராண், மாதுரு இவற்றிற்கும் பிரசவத்திற்கும் பிரதானகர்த்தாவாகிய சந்திரன் பலமுடையவனு யிருக்குங்காலத்தில் பிரசவித்தபோது அந்த பிரசவம் சுக பிரசவமாகவும், பிரசவித்த தாயாருக்குச் சௌக்கியமும், பிரசவித்த குழந்தைக்குச் சௌக்யமும் உண்டாகி சகலமும் நன்மையாயிருக்கும். சந்திரன் நிர்ப்பலனு யிருக்குங் காலத்தில் பிரசவித்தபோது அந்தப் பிரசவம் கஷ்ட பிரசவமாகவும், பிரசவித்த தாயாருக்கு அசௌக்யமும், பிரசவித்த குழந்தைக்கு ஆயுள்தோஷமும் உண்டாகி சகலமும் கெடுதியாயிருக்கும் என்பது பெரியார் சம்மதம்.

துர்ப்பலச் சந்திரன் அரிஷ்டச்சந்திரன் எனவும் நற்பலச்சந்திரன் அரிஷ்டபங்கச் சந்திரன் எனவும் சொல்லப்படுவன். துர்ப்பலச்சந்திரனுல் குழந்தைக்கு உண்டாகும் தோஷத்திற்கு பாலாரிஷ்டமென்று பெயர். சந்திரனைத் தவிர்த்து வேறுசில ஏதுக்களாலும் அரிஷ்டங்கள் உண்டெனினும், பிரதானமானது சந்திரன் அரிஷ்டமேயாகும். பிரசவகாலத்தில் சந்திராரிஷ்ட சம்பவமானது மிகவும் குரூரமுடையதா யிருந்தால் சிசுவுக்கும், தாயாருக்கும் தோஷத்தை யுண்டாக்கும். ஆதலால் பிரசவகாலத்தில் சந்திரன் பலமுடையவனுக இருத்தல்வேண்டும். ஸ்ரீ வராஹமிகிராசாரியார், யவனுசாரியர், சத்தியாசாரியார், கலியாணவர்மர் முதலானோர் இக்கருத்துடையவர்களாகவே தத்தங் கிரந்தங்களில் அரிஷ்டாத்தியாயத்தையும், அரிஷ்டபங்காத்தியாயத்தையும் வகுத்திருக்கின்றனர் என்பதுவென்றி நோக்குநர்க்கு நன்கு புலனும். ஆகவே பிரசவகாலத்தில் சந்திரனிருக்கும் ஸ்திதியை அறிவுடையோர் ஆழ்ந்து அறிதல் வேண்டுவது மிகமிக முக்கியமாகும்.

'பாலாரிஷ்டம்' என்பது இரண்டு பிரிவுடையதாகும். அவைசத்தியோ பாலாரிஷ்டமும், சௌம்ய பாலாரிஷ்டமுமாகும். சத்தியோபாலாரிஷ்ட யோகமென்பது பிறந்தவுடனேயாவது, அல்லது 2-3 மாதங்களிலாவது அல்லது ஒருவருடத்திலாவது குழந்தைக்குத் தோஷமுண்டாவதாகும்.

புதபார்க்கவ ஜீவாநாம் ஏக:கேந்த்ர கதோயதி
ஸத்யோ மரணயோகாநாம் புரோக்தாநாம் பங்ககாரணம்

என்றபடி சுபர்களில் ஒருவர் கேந்திரஞ்பெற்ருல் சத்யோபாலாரிஷ்டமும் விலகும். சௌமிய பாலாரிஷ்டமென்பது எந்தத்தசையில் குழந்தை

பிறந்தஹோ அந்தத்தசை முடிவிற்குள் குழந்தைக்குத் தோஷமுண்டாவ தாகும். அதாவது குழந்தை பிறந்தபோது முதல்தசையில் கர்ப்பச்செல்லு போக நின்ற பாக்கிவருடத்திற்குள் சம்பவிக்கும் தோஷமே சௌமிய பாலாரிஷ்டமாகும். அதற்குமேல் சம்பவிக்கும் தோஷத்திற்கு அற்பாயுள் தோஷம் என்றுபெயர்.

ப்ருஹஸ்பதிர் ந்ருணும் ஜீவஸ்தஸ்ய நித்ய ப்ருஹஸ்பதேః, பஞ்சதச ஷட்ஸமேத (21) ச சத்வாரிம்சத் (40) ததைகவிம் சச்ச (21) த்ரிம்சச் (30) சத்வாரிம்சத் (40) ஷஷ்டி (60) த்ரிம்சத் (30) க்ரமாயுஹோராயா.

ப்ரோக்தா ஸஹஜே (3) துர்யே (4) பஞ்சகே (5) சப்தமேச (7) நவ மேச (9) தசமேச (10) ஏகாதசகே (11) க்ருஹேஷு ஜீவஸ்திதௌ வர்ஷாః. (சாராவளி)

(இ-ள்) இலக்கினத்துக்குள் 3-4-5-7-9-10-11 ஆகிய இந்த இடங்களில் குரு இருக்கப்பெறின் முறையே 21-40-21-30-40-60-30 என்னும் வருடங் கள் ஆயுள் உண்டென்பதாம் எ-று.

இச்சுலோகத்தில் "ந்ருணும் ஜீவஸ் தஸ்ய" என்ற பதப்பிரயோக மிருக்கின்றது. அதாவது "ஜீவ ஆங்கீரஸோ வாசஸ்பதிச் சித்ரசிகண்டிஜః" எனவரும் அமரகோசத்தினுல் குருவுக்கு ஜீவன் என்ற பெயர் உண்டென்ப துணர்க. "ஜீவ யதிதேவாநிதி ஜீவః" எனவரும் லிங்கபட்டியத்தினுல் ஜீவ ப்ராணதரணே தேவதைகளைப் பிழைப்பிக்கச் செய்கின்றவர் ஆதலின் "ஜீவ்ய தேம்ருதோ நேசః" மறித்தவர்கள் இவரால் பிழைக்கின்றமை யால் ஜீவன் என்று குருவுக்குப் பெயராகுமென்று அறியப்படுகின்றது.

ஆகவே குருபகவான் ஜீவர்களின் வாழ்நாளுக் கதிபரென்பதும், அவர் மக்கள் ஜனனகாலத்தில் உத்தமஸ்தானங்களில இருப்பின் தீர்க்காயுளைத் தருவரென்பதும், அதமஸ்தானங்களில் இருப்பின் அற்பாயுளைத் தருவ ரென்பதும் நன்கு அறியப்படுகின்றது. இதுபற்றியே:—

லக்நாதியோவா ஜீவோவா சுக்ரோவா யதிகேந்த்ரக
தஸ்யஜாதஸ்ய தீர்க்காயு மதிமாந் ராஜவல்லபః

என்ற சுலோகமும் எழுந்ததாகும். அதாவது இலக்கினுதிபதி அல்லது குரு அல்லது சுக்கிரன் இவர்களில் ஒருவர் கேந்திரத்திலிருந்தால் தீர்க்காயுளும் வித்தை புத்தி விவேகமும், இராஜயோகமும் உண்டென்று கூறினர் பெரியோரென்க. மிருதசஞ்சீவி என்னும் மந்திரமுணர்ந்த தேவகுருவும், சுக்கிரனுகிய அசுரகுருவும், இலக்னுதிபதியும் நல்ல ஸ்தானங்களில் இருப் பின் ஆயுளுண்டென்பது இதனுல் பெறப்பட்டது. ஆகவே எந்த ஜாதகங் களிலும் குருபகவான் கேந்திரகோணங்களில் இருத்தல் மிகமிக சிறப் புடையதென்பது மகரிஷிகளின் சம்மதம்.

ஆத்வாதசாப்தாம் ஜந்துநாம் ஆயுர்க்ஞானம் நசக்யதே
ஜபஹோம சிகிச்சாத்யைர் பாலரக்ஷாஞ்சகாரயேத்
பித்ரோர்தோஷைர்ம்ருதாః கேசித் கேசித் பாலக்ரஹைர் அபி
அபரே அரிஷ்டயோகைச்ச த்ரிவிதாபால ம்ருத்யுதః
(சர்வார்த்த சிந்தாமணி)

(இ-ள்) பன்னிரண்டு வயதுவரையில் மானிடர்களின் ஆயுர்த்தாயத்தை நிர்ணயிப்பது மிகவும் துர்லபம். ஆதலால் அதுவரைக்கும் ஜபம், ஓமம் முதலிய சிகிச்சைகளினால் மக்களைப் பெற்றோர்கள் காப்பாற்றுவார்களாக. இந்தப் பன்னிரண்டு வருடங்களுக்குள் மிருத்யுவை அடையும் பாலகர்கள் தாய் தந்தைகளின் பூர்வ கர்ம தோஷங்களினாலும், சுயபூர்வ கர்மதோஷங்களினாலும் ஆயுள் நசிக்கப் பெறுகின்றார்கள் எ-று.

இக்கருத்துடைய தமிழ் மொழிபெயர்ப்புச் செய்யுள் வருமாறு:—

அன்னையவள் முற்பிறப்பில் ஈட்டியதீ வினைவயத்தால்
ஆண்டு நான்கும்
பின்னுமொரு நான்காண்டும் பிதிர்பவத்தால் சிசுவினையின்
பெருக்காற் பின்பு
மன்னுமொரு நான்காண்டும் அரிட்டமது சம்பவிக்கும்
வருமுர் நான்காய்ச்
சொன்னவய தின்பின்னர் வயதளவை கண்டுரைப்பார்
தூயோ ரன்றே* (குப்புச்சுவாமியம்)

பாலாரிஷ்டத்தை யுண்டாக்குங் கிரகங்களுக்குப் பாலகிரகம் என்று பெயர். பூர்வத்தில் சிவபெருமானால் படைக்கப்பட்ட கந்த, விசாக, மேஷ, சுவான, பிதுர் என்னும் ஐந்து புருஷ கிரகங்களும், சகுனி, பூதனா, சிபூதனா, அதிர்ஷ்டிபூதனா, முகமண்டலிகா, ரேவதி, சுஷ்கரேவதி என்னும் ஏழு பெண் கிரகங்களும் குழந்தையாயிருந்த குமாரக்கடவுளுக்கு ஏவல் செய்திருந்து சிவாக்கினையின்படி அன்னதிபல, இரக்த, கந்த, அக்ஷதை ஆகிய இவைகளை விரும்பிப் பூலோகத்திற்கு வந்து அதிதி பிக்ஷை, பிதிர் விரதம், தேவபூஜை, அக்கினிகாரியம் இவைகளை அநுட்டிக்காதவர்களுடைய மாதர்களுடையவும், அசுசிமாதர், அமங்கலமாதர்களுடையவும் பாலைக்குடிக்கின்ற சிசுக்களின் ஆரோக்கியம், சுகம், வயது முதலியவற்றின் பாதி பாகத்தை அபகரிப்பதற்காகச் சிசுக்கள் அழுங்காலத்தும், மலசலத்தால் அசப்பியமாகக் கிடக்குங்காலத்தும், நித்திரைகாலத்தும், வருட மாத தின சந்திகாலத்தும், காடி-பூனை-ஆந்தை-பக்ஷிமுதலியவைகளைப்போலகுழந்தைகளைப்பற்றி வருத்தும் கிரகங்களாகும். இதன் விரிவுகளை பாலகிரகதோஷ பரிகாரம் என்றநூலினால் இனிது அறிக. மற்றும்கமலாகரபட்டர் இயற்றிய வடமொழி மதனரத்தினம் என்னுங் கிரந்தத்தினாலும் நன்கு அறியலாம்.

“ததநுதநு த்ரிபாக: உத்பாதஜாதம் க்ரஹாணாம் வ்ரஜதி” என்ற சாதகசிரோமணி வசனத்தினால் அரிஷ்டங்கள் மூன்று வகைப்படும். அவை நிரேகாண அரிஷ்டம், கிரகயோகாரிஷ்டம், கிரகோத்பாத அரிஷ்டங்களாகும். மற்றும்:—

த்ரிவிதம் இஹசாஸ்த்ர காராதியமம்
அநியமஞ்ச யோகஜம் ப்ராஹு:
யோக ஸமுத்தம் தாவத்வக்ஷ்யே
பச்சாத் துபரிசேஷௌ. (சாராவலி)

எனவரும் சுலோக வசனத்தினால் நியமம், அநியமம், யோகஜம் என அரிஷ்டங்கள் மூன்று வகைப்படுமென்று நன்கறியப்படுகின்றன.

மேலே எடுத்துக் காட்டப்பெற்ற சர்வார்த்த சிந்தாமணியின்வசனத்தினால் பன்னிரண்டு வருடம்வரை குழந்தைகளுக்கு பிரதிவருடமும் ஆயுஷ் ஓமம், நக்ஷத்திர ஓமம் முதலியன செய்துவருதல் வேண்டும். இவ்விரு ஓமங்களினால் குழந்தைகளுக்கு அரிஷ்டநிவர்த்தியும், ஆயுள் விருத்தியும் உண்டாகுமென்று சாஸ்திரங்களில் மகான்கள் அருள்செய்திருக்கின்றனர்.

அஃது வருமாறு:—

அப்தபூர்த்திம் ப்ரவக்ஷ்யாமி சிசோராயுஷ்ய வர்த்தநம்
ஸர்வைः ஸ்வஜந்மதிவஸே ஸ்நாதைர் மங்களவாரிபிः
குருதேவாக்னி விப்ராணாம் பூஜநீயாः ப்ரயத்நதः
ஸ்வநக்ஷத்ரஞ்ச பிதரம் மாதரம் பாந்தவாநபி
ப்ரதி ஸம்வத்ஸரம் யாவத் கர்த்தவ்யச்ச மஹோத்ஸவः
ஆயுஷ்ய ஹோமங் க்ருத்வைவ க்ருஹாநபித தாயஜேத்.

(ஜோதிஷார்ணவம்)

ஜந்மாஹே ப்ரதிஜந்மர்க்ஷே ப்ரத்யப்தாந்தே திநேஅபிவா
விதிம்வக்ஷ்யே மநுஷ்யாணாம் தநாயுः ஸ்ரீச்சவர்த்ததே
க்ராமம் ப்ரதக்ஷிணீக்ருத்ய ஆசீர்வாதஞ் சமாசரேத.

(ஸ்ரீ காந்தபுராணம்)

அவரவர்கள் பிறந்த திதி ஜன்மதிதி என்றும், பிறந்த நக்ஷத்திரம் ஜன்ம நக்ஷத்திரமென்றும் சொல்லப்படும். பிரதிவருடங்களிலும்ஜனன மாசத்தில் ஜனன திதியும், ஜனன நக்ஷத்திரமும் ஒன்றாக வருவது அரிது. பெரும்பான்மை இவைகள் வெவ்வேறாகவும், சிறுபான்மை ஒன்றாகவும் வரும் இயல்புடையனவாகும். இதனை ஸ்ரீகிருஷ்ணாஷ்டமி, ஸ்ரீகிருஷ்ணஜயந்தி என்பதனால் அறிக. அவரவர்கள் பிறந்த திதி-நக்ஷத்திரம்-யோகம் இலக்கினம் ஒன்றுகூடி வருவதற்கு ஜயந்தி என்று பெயர். ஆகவே அப்த பூர்த்தி சாந்தியை ஜனன திதியிலும், நக்ஷத்திர ஓமத்தை ஜனன ஜயந்தியிலும் செய்தல்வேண்டும். இதன் விரிவை சோதிட கலாநிதி 2-வது தொகுதியில் தெளிவாக அறிந்துகொள்க.

ஆசிரியர் வராகமிகிரர் முதலியோர்கள் தமது சோதிடகிரந்தங்களில் முதல்முதல் இராசிசீலம், கிரகசீலம், பிரகுதிலட்சணம் இவைகளைக் கூறியவுடனே அரிஷ்டாத்தியாயத்தைக் கூறப்பட்டு இருப்பதுபோலவே இந்நூலாசிரியரும் கூறியிருக்கின்றார். இங்ஙனம் கூறியிருத்தலின் காரணம் என்னை? எனின், பாலாரிஷ்டம் இல்லாத ஜாதகத்திற்கே ஆயுள்நிர்ணயஞ் செய்து பலாபலன்களைக் கூறவேண்டுமென்னும் பூர்வாசார்யர்களின் கொள்கையைப்பற்றியே என்றறிக.

லக்கினத்திற் காறெட்டில் பாவர் தானே
நண்ணில்உடனேமரணம், லக்கினத்தில்
திக்கெனச்செவ் வாய்நிற்கச் சேய்எட்டு ஆறில்
சேர்ந்துசனி கூடிலோ மரணமாம், சன்மத்

தக்குஆறு எட்டில் சனிதான்இருந்து சுபர்நோக்கத்
துலங்கிய எட்டு ஆண்டென்றே சொல்லிடுவர் நல்லோர்
மிக்கசெவ்வாய் எழில்எட்டில் மார்த்தாண்டன் மேவ
விளம்புவர் அற்பாயுள்என மீன்புரைகண் மாதே.

(இ-ள்) ஜனனலக்கினத்திலும், அதற்கு மூன்று ஆறுமிடங்களிலும் பாவகிரகங்களாகிய சூரியன்-செவ்வாய்-சனி-ராம்புகள் இருந்தால் பிறந்த குழந்தையானது சீக்கிரத்தில் இறந்துபோகும். ஜனன இலக்கினத்தில் செவ்வாய் இருந்தாலும், அல்லது ஜனன இலக்கினத்திற்கு ஆறு-எட்டில் செவ்வாய் சனியுடன் கூடியிருந்தாலும் பிறந்த குழந்தை இறந்துபோகும். ஜனன இலக்கினத்திற்கு ஆறு-எட்டில் சந்திரன் இருந்து சுபக்கிரகங்களாகிய புதன்-குரு-சுக்கிரர்களில் ஒருவரால் பார்க்கப்பட்டால் பிறந்தகுழந்தை எட்டுவருடம் வரையில் ஜீவித்திருக்கும் என்று சோதிடசாஸ்திரமுணர்ந்த உத்தமர்கள் சொல்லுவார்கள். அங்காரகன் ஏழாமிடத்திலும், சூரியன் எட்டாமிடத்திலும் இருந்தால் அற்பாயுள் என்று சாஸ்திரமுணர்ந்தவர்கள் சொல்லுவார்கள் எ-று.

"இலக்கினத்தேள்" என முன்பிரதிகளில் காணப்படுகிறது பாடபேதம். இலக்கினம் விருச்சிகமாகி அதிலும் அதற்கு 8-6-லும் பாவர்கள் இருந்தால்தான் அரிஷ்டமென்ற நியதி முதல்நூற்களில் யாண்டுங்காணப் படவில்லை. எந்த லக்கினமாயிருந்தாலும் இலக்கினத்திற்கு 6-8 இந்தஇடங் களில் பாவர்கள் இருந்தால் அரிஷ்டமுண்டென்பதே பல்லோர்சம்மதமாக வின் பாடபேதமெனக் கொள்ளுதலே சிறப்புடையதாகும்.

தாரந்தகைர்வா அரிம்ருதிஸ்திதைர்வா
தர்மாஷ்டமஸ்தைர் வ்யயசத்ருகைர்வா
க்ரூரக்ரஹேயோ ஜநகம்ப்ரபந்நஃ
ஷஷ்டேஷ்டமேமாஸி ம்ருதிம்ப்ரயாதி. (ஜாதகாபரணம்)

(இ-ள்.) ஜனனகாலத்தில பாபகிரகங்கள் 2-12-ல் இருந்தாலும்' அல்லது 6-8-ல் இருந்தாலும், அல்லது 8-9-ல் இருந்தாலும், அல்லது 6-12-ல் இருந்தாலும் அந்தக் குழந்தை 6 அல்லது 8 மாதத்தில் மரணமடையும் என்பதாம். இந்த நான்குவகை அரிஷ்டயோகத்துள் ஏதேனும் ஒன்றை இந்நூலாசிரியர் இச்செய்யுளில் கூறியிருப்பதாகக் கொள்ளுதலே சாஸ்திர சம்மதமாமென்க.

இது விஷயமாய்,

லக்நாத் த்வாதச தநகைபாபைர்
ம்ரியதேச ரந்த்ர ரிபுஸம்ஸைஃ
சுபஷம்ஸர் சமயாதைர்மாஷே
ஷஷ்டாஷ்டமே வாபி (தேவலர்)

எனவரும் தேவலர் வசனத்தினால் இலக்கினத்திற்கு 2-12-ல், அல்லது 6-8-ல் பாவர்கள் சுபசம்பந்தமாய் இருந்தபோதும் பிறந்த சிசு 6 அல்லது 8 மாதத்தில் நஷ்டமடையுமென்று அறியக் கிடக்கின்றது.

## ஜாதகாபரணத்தின்படி உதாரண சக்கரம்

| | | | |
|---|---|---|---|
| சூரி அங் | லக் | சனி ராகு | |
| | 1 | | |
| | | | |
| | | | |

| | | | |
|---|---|---|---|
| | | | |
| சனி அங் | 2 | | லக் |
| | | | |
| சூரி ராகு | | | |

| | | | |
|---|---|---|---|
| | | சூரி சனி | ராகு அங் |
| | 3 | | |
| | | | |
| | | லக் | |

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | 4 | | சூரி ராகு |
| சனி அங் | | | லக் |
| | | | |

இங்கு உதாரணமாகக் காட்டப்பட்டபடியே இரண்டிரண்டு கிரகங்களாக இருத்தல்வேண்டும் என்னும் நியதி கிடையாது. பாவர்கள் நால்வரும் 1-வது சக்கரத்தின்படி 2-அல்லது 12-ல் இருந்தால் என்பதே கருத்தாகும். அதாவது 2-ல் பாவரும் 12-ல் ஒரு பாபியும் இருந்தாலும், அல்லது 12-ல் 3-பாவரும் 2-ல் ஒரு பாபியும் இருந்தாலும் என்று ஊகித்து அறிக. பிற மூன்றிற்கும் இவ்வடையே காண்க.

“ஜன்மத்துக் காறெட்டில் சசிதான் இருந்து” எனக் கூறியிருத்தலின் விரிவுரை வருமாறு.

ஸூதிகாலே பவேச்சந்த்ரஃ ஷஷ்டோவா அஷ்டமஸம்ஸ்திதஃ
பாலஸ்ய குருதே ஸத்யோ ம்ருத்யும் பாப விலோகிதஃ

சுபாசுபாலோகந துஸ்யதாயாம்
வர்ஷச்சதுர்பிர் நிதநம்ததாநீம்
ந்யூநாதிகத்தே ஸூதியாவிதேய
ஸ்த்ரைராசிகேநைவ விநிச்சயோயம். (ஜாதகாபரணம்)

(இ-ள்) சஷ்டாஷ்டமத்தில் இருந்த சந்திரனை சுபக்கிரகங்களும், பாபக்கிரகங்களும் பார்க்குமாறுல் அந்த சிசு நான்கு வருடத்தில் மரணமடையும். பாவர்களன்றி சுபர்களே பார்த்தாலும், அல்லது சுபர்களன்றி பாவர்களே பார்த்தாலும் அப்போது அரிஷ்டகாலத்தைத் திரய ராசிகள் மூலமாக அறிதல்வேண்டும் என்பதாம்.

சசிர்யரி விநாசிகே நிதநமாசு பாபேக்ஷிதே
சுபைரத ஸமாஷ்டகம் தளமதச்ச மிச்ரக்ஷிதே
அஸத்பி ரவலோகிதே பலிபிரத்ரமாஸே. (ஜாதகபாரிஜாதம்)

ஆறு எட்டாமிடங்களிலிருந்த சந்திரனை பாபகிரகங்களில் ஏதாவதொன்று கூடினும் நோக்கினும், சுபகிரக நோக்கமில்லாவிட்டால் அந்த சிசு சீக்கிரத்தில் மரணமாகும். ஷை சந்திரனை பாவர்களும் சுபர்களுமாகப் பார்த்தால் நான்குவருடம் வரையிலும் அந்த சிசு ஜீவித்திருக்கும். பாவர்களன்றி சுபர்களே பார்த்தால் எட்டுவருடம்வரையிலும் ஜீவித்திருக்கும் என்பதாம்.

மற்றும் இதனை,

ஷஷ்டாஷ்டமேபி சந்த்ரஃ ஸத்யோ மரணாய பாப ஸம்த்ருஷ்டம்
அஷ்டபிச் சுபத்ருஷ்டோ வர்ஷைர் மிச்ரஸ்த்தர்தோ.

(ஜாதகாநுபவ தருப்பணம்)

எனவரும் சுலோக வசனத்தினால் 6-8 இந்த ஸ்தானங்களில் இருந்த சந்திரனை பாவர்கள் நோக்கினால் உடனே அரிஷ்டமென்றும், சுபர்கள் நோக்கினால் 8-வயதிலும்; பாபர் சுபர்கள் நோக்கினால் நான்கு வயதிலும் மரணமுண்டாகுமென்று கூறப்பட்டிருத்தலின், "துலங்கிய நான்காண்டென்றே" என்பதே "துலங்கிய வெட்டாண்டென்றே" எனத் திருத்தப்பட்டதென்க.

மற்றும்:—

சசிர்யரிவிநாசகே நிதநமாசுபாபேக்ஷிதே
சுபைரதஸமாஷ்டகம் தளமதச்ச மிச்ரவாஸ்ஸ்திதிஃ
அஸத்பிரவலோகிதே பலிபிரத்ரமாஸே. (பிருகஜ்ஜாதகம்)

என்ற இச்சுலோகத்திற்கு சஷ்டாஷ்டமங்களி லொன்றிலிருந்த சந்திரன் பாபக்கிரகங்களினால் பார்க்கப்பட்டு, சுபக்கிரகங்களினால் பார்க்கப்படாமலிருந்தால், பிறந்த சிசுவுக்கு ஒரு மாதத்திற்குள்ளாகவே மரணமுண்டாகும் என்று வியாக்கியானம் செய்யப்பட்டுளது. தற்போது அச்சிட்டுள்ள சாராவளியில் இந்தச் சுலோகம் காணப்படவில்லை ஏட்டுப்பிரதியில் இருக்கும்போலும்.

இதுவிஷயமாகச் சாராவளியில்:—

வர்ஷேண ஷஷ்டாஷ்டமகச்சசாங்கோ
நிஹந்திமாஸா தசுபைச்சத்ருஷ்டஃ
அப்தாஷ்டகாத்கேவல ஸௌம்யத்ருஷ்டோ
மிச்ரோக்ஷிதோவர்ஷ சதுஷ்டயேந.

என்ற சுலோகத்தில் இலக்கினத்திற்கு சஷ்டாஷ்டமங்களில் இருந்த சந்திரன் சுபக்கிரகங்களால் பார்க்கப்பட்டு, பாபக்கிரகங்களால் பார்க்கப்படாமலிருந்தால் அந்த சிசு எட்டுவருடம் ஜீவித்திருக்கும் பாப சுபக்கிரகங்களால் பார்க்கப்பட்டிருந்தால் அந்த சிசு நான்குவருடம் ஜீவித்திருக்கும். மற்றும் சஷ்டாஷ்டமங்களில் பாபர் வீட்டிலிருந்த சந்திரன் பாபக்கிரகங்களால் பார்க்கப்பட்டால் பிறந்தவுடனே மரணமுண்டாகும்.

சஷ்டாஷ்டமங்களிலிருந்த சந்திரன் சுபர்வீட்டிலிருந்தாலும், பாபகிரக க்ஷேத்திரங்களில் சுபக்கிரக சம்பந்தமாயிருந்தாலும் மரணமில்லையென்றும் அறியப்படுகின்றன. இதுவிஷயமாய் யவனாசாரியரவர்கள்:—

லக்நாச்சசீ நைதநகோ சுபர்க்ஷை
ஷஷ்டே: அதவா பாபார ரிரீக்ஷிதச்ச
ஸர்வாயு ராஹந்தி சுபைரத்ருஷ்டஸ்
ததீக்ஷிதோப் தாஷ்டக பர்யயேண.

என்று கூறியுள இச்சுலோகத்திற்கு பட்டோத்பலர் வியாக்யானத்தில் சஷ்டாஷ்டமத்திலிருந்த சந்திரன் எந்த கிரகங்களாலும் பார்க்கப்படாமல் இருந்தால் அரிஷ்டயோகமில்லை என்று கூறப்பட்டிருக்கின்றது.

மற்றும் தேவகீர்த்தி என்பவர்:—

"வர்ஷாந் ம்ரியதே சந்த்ரே ஷஷ்டாஷ்டம்
ஸம்ஸ்திதே விலக்நார்க்ஷாத்
ஸத்ய: க்ரூரைத்ருஷ்ட:
ஸௌம்யைரப் தாஷ்டகாச்சைவ"

எனக் கூறியிருத்தலின் இந்த வசனத்தினால் சஷ்டாஷ்டமத்திலிருந்த சந்திரன் எந்த கிரகங்களினாலும் பார்க்கப்படாமலிருந்தால் ஒருவருடத்திற்கும், பாபக்கிரகங்களினால் பார்க்கப்பட்டிருந்தால் ஒரு மாதத்திற்கும் அரிஷ்டம் சம்பவிக்குமென்று பிருகஜ்ஜாதக தெலுங்கு வியாக்கியானகர்த்தர் ஒருவர் அபிப்பிராயப்படுகின்றார்.

மற்றும் மாண்டவ்யர் என்பவர்:—

பக்ஷேவிதேபவதி ஜந்மயதி க்ஷபாயாம்
க்ருஷ்ணேதவாஹநி சுபாசுபத்ருச்யமாந:
தச்சந்த்ரமாரிபுவிநாச கதோபியத்ரா
தாபத்ஸ்ரக்ஷதி பிதேவசிசும்நஹந்தி.

எனக் கூறியிருத்தலினால் சுக்கிலபக்ஷ இராத்திரியிலும், கிருஷ்ணபக்ஷபகலிலும் பிறந்த சிசுவுக்குச் சந்திரன் சஷ்டாஷ்டமத்திலிருந்தாலும் சுபர்களாலும் பாவர்களாலும் பார்க்கப்பட்டால் ஆபத்துகளில் தந்தையைப்போல் இரட்சிக்கும் என்று அறியப்படுதலின் இந்த அரிஷ்டம் சுக்கிலபக்ஷபகலிலும்,கிருஷ்ணபக்ஷ இராத்திரியிலும் பிறந்தவர்களுக்கே சம்பவிக்குமென்று சித்தாந்தமாகின்றது. மற்றும்:

சசிவத் ஸௌம்யா: பாபைர்வக்ரி பிரலோகிதாந சுபத்ருஷ்டௌ
மாஸேந மரணதாஸ்ஸ்யு: பாபஜிதோலக்நபச்சாஸதே. (லகுஜாதகம்)

ஸௌம்யாஷஷ்டாஷ்டமகா: க்ரூரைர்வக்ரேவபஸங்கதைர்த்ருஷ்டா:
மாஸேநம்ருத்யுதாஷ்தேயதி நசுபைஸ்தத்ர ஸந்த்ருஷ்டா:
(தேவகீர்த்தி)

ஷஷ்டாஷ்டமஸ்தா சுபகேசரேந்த்ரா
விலோமகை: பாப ககைப்த்ருஷ்டா
சுபைரத்ருஷ்டா யதிதேபவந்தி
மாஸேந நாசம் நிதநம் ததாநீம். (ஜாதகாபரணம்)

எனவரும் பிரமாண சுலோகங்களில் சஷ்டாஷ்டமங்களில் சந்திரனைப் போலவே சுபக்கிரகங்களிலிருந்து, பலவர்தர்களான பாபக்கிரகங்களினால் பார்க்கப்பட்டபோது பிறந்த சிசு ஒருமாதம் ஜீவித்திருக்கும் என்று

சொல்லப்படுவதனுல் சஷ்டாஷ்டமங்களி லொன்றிலிருந்த சுபகிரகங்கள் மற்ெருரு சுபகிரகத்தினுல் பார்க்கப்பட்டால் அரிஷ்டம் இல்லை என்று அறியப்படுகின்றது காண்க.

இப்படலத்து முதற்செய்யுள் நான்காம் அடியில் கூறிய கருத்தை யொட்டிய ஓர் சுலோகவசனம் வருமாறு:—

த்யூ நாஷ்டமகை: பாபை: க்ரூரக்ரஹ வீக்ஷிதைஸ்ஸஹ ஜநக்யா,
ம்ரியதே சுப ஸம்த்ருஷ்டேஸ் ஸத்யமதா த்வதேத்வ் யாதிம்.
(சத்தியாசார்யர்)

அதாவது பாபகிரகங்கள் 7-8-ல் இருந்து பாபகிரகங்களால் பார்க்கப்பட்டால் தாயும் சிசுவும் மரணமாவார்கள். சுபர்களால் பார்க்கப்பட்டால் மரணத்திற்குச் சமானமான கஷ்டம் (வியாதி) வந்து தீருமென்பதாம்.

ஸ்மராஷ்டமஸ்தா யதிபாபகேடா:
பாபேக்ஷிதா:ஸாது கைர்நத்ருஷ்டா:
கரோதிரிஷ்டம் த்வரயார்பகஸ்ய
ஸாகம்ஜநந்யாபி மதம்பகூநாம். (ஜாதகாபரணம்) (74)

தேயுமதி லக்கினகேந் திரத்தில்எட்டில் பொல்லாச்
சேய்முதல்பா பிகளிருக்க மரிக்குஞ்சன் மத்தில்
ஏயசசிக்கு இருபாலும் பாவர்நிற்கில் எட்டுஏழ்
நான்குஇடத்தும் இவ்வண்ணம் நிற்கில்உற்ற சேயும்
தாயும்சாம் எனஉரைப்பார் சுபக்கோள்பார்த் திடினே
தாயுடன்சீ விக்கும்என வேசாற்றல்ஆகும்
மாயகதிர் பாக்கியத்தில் சுபர்நோக்குஇல் லாமல்
மருவசசி சுபர்உடனே மன்னில்அரிட்ட மதாம்.

(இ-ள்) தேய்பிறைச் சந்திரன் இலக்கினத்திலிருக்க, கேந்திரங்களிலாவது, எட்டாமிடத்திலாவது பாபகிரகங்களிருந்தால் பிறந்த குழந்தை மரணமாகும். இலக்கினம், நான்கு, ஏழு, எட்டில் சந்திரன் பாபகிரகங்களின் நடுவிலிருந்தால் பிறந்த குழந்தையும் தாயும் மரணமாவர். இச் சந்திரனைச் சுபர்கள் பார்த்தால் தாயுடன் குழந்தை சீவித்திருக்கும் என்று சொல்லப்படும். சூரியன் ஒன்பதில் சுபர்களுடைய பார்வையில்லாதிருக்க சந்திரன் சுபர்களுடன் கூடியிருந்தால் குழந்தைக்குத் தீங்குண்டாம் எ-று.

பிருகஜ்ஜாதகம், சாராவளி முதலிய பூர்வ சோதிடகிரந்தங்களில் இலக்கினத்தில் தேய்பிறைச் சந்திரனிருக்க, 4-7-8-10-ஆம் இடங்களில் பாவர்கள் இருந்தால் சிசுவுக்கு ஆயுள் க்ஷீணமெனக் கூறப்பட்டிருத்தலின் இப்படலத்து 2-வது செய்யுள் 1-வது அடியில் "தேயுமதி லக்கினகேந் திரத்தி லெட்டின்மேவிச், சேய்முதல் பாவரைக் கூடின்" என்றிருந்ததைப் பாடபேதமாகக்கொண்டு "தேயுமதி லக்கினங் கேந்திரட்டிலெட்டில் பொல்லாச், சேய்முதல் பாவிகளிருக்க" எனத் திருத்தப்பட்டதாகும்.

லக்னேக்ஷீணே சசி நிதநம் ரந்த்ர
கேந்த்ரேஷு பாபை: பாபாம் தஸ்ஸ்தே

*நிதந ஹிபுகத் யூநயுக்தேச சந்த்ரே*
*ஏவம் லக்நேபவதி மதநச்சித்ர ஸம்ஸ்தைச்*
*சபாபைர் மாத்ரா ஸார்தம் யதிச*
*நசுபைர் வீக்ஷிதச் சக்தி மத்பிஃ* (பிருகஜ்ஜாதகம்)

(இ-ள்) தேய்பிறைச் சந்திரன் ஜந்மலக்கினத்திலிருக்க, அஷ்டமத்திலும், கேந்திரங்களிலும் பாபக்கிரகங்களிருந்தால் சிசுவுக்கு மரணமுண்டாகும். அஷ்டம-சதுர்த்த-சப்தமங்களில் ஒன்றில் சந்திரன் பாபமத்யத்திலிருக்கப் பிறந்த சிசுவுக்கு மரணமுண்டாகும். இப்படியே இலக்கினத்தில் சந்திரன் பாபமத்தியிலிருக்க பலீஷ்டமான சுபகிரகங்களினால் பார்க்கப்படாமலிருந்தால், சப்தம அஷ்டமங்களிலிருந்த பாபகிரகங்களினால் தாயாருடன் சிசுவுக்கும் மரணமுண்டாகும். அதாவது சந்திரன் பலயுக்த சுபகிரகங்களினால் பார்க்கப்படாமல் பாபமத்தியத்தில் ஜன்மலக்கினத்திலிருக்க பாபகிரகங்கள் 7-8-ல் இருந்தபோது பிறந்த சிசு தாயாருடன் மரணமாகுமென்பது கருத்து. இப்படி சொல்லுவதனால் இந்த யோககர்த்தனை சந்திரன் சுபகிரகங்களினால் பார்க்கப்பட்டால் சிசுவுக்குமட்டும் மரணமே தவிர தாயாருக்கு மரணமில்லை என்று தெரியத்தக்கது. சிலர் பலயுக்தமான சுபகிரகங்களினால் இந்த யோகத்தலைவனை சந்திரன் பார்க்கப்பட்டபோது சிசுவுக்கும் தாயாருக்கும் மரணமுண்டென்று சொல்லுகின்றார்கள்.

1. தேய்பிறைச் சந்திரன் இலக்கினத்திலிருக்க 4-7-8-10-ல் பாபகிரகங்களிருப்பதனால் ஒரு யோகமும், (2) சந்திரன் இலக்கினத்தில் பாபமத்தியத்திலிருப்பதனால ஒரு யோகமும், (3) நான்கில் பாபமத்தியிலிருப்பதனால் ஒரு யோகமும், (4) ஏழில் பாபமத்தியிலிருப்பதனால் ஒரு யோகமும், (5) எட்டில் பாபமத்தியத்திலிருப்பதனால் ஒரு யோகமும் ஆக ஐந்து அரிஷ்டயோகங்களுண்டாகும். இவற்றுள் பின்நான்கு அரிஷ்டயோகங்களும் தாய்க்கும் சிசுவுக்கும அரிஷ்டத்தைக் கொடுப்பதும், முன் ஒரு யோகம் சிசுவுக்குமட்டும அரிஷ்டத்தைக் கொடுப்பதுமாகும்.

### 1-வது யோகத்திற்கு மேற்கோள்

*க்ஷீணே சசி விலக்நே பாபைஃ கேந்த்ரேஷு ம்ருத்யுஸம்ஸ்தைர்வா*
*பவதி விபத் திரவஸ்யம் யவநாதி பதேர்மதம் சைதத்.*

(சாராவளி)

(இ-ள்) தேய்பிறைச்சந்திரன் இலக்கினத்திலிருக்க, பாவக்கிரகங்கள் 1-4-7-8-10-ல் இருந்தால் சிசுவுக்கு மரணமுண்டாம்.

### (2-3-4-5-வது) யோகங்கட்கு மேற்கோள்

*பாபத்வய மத்யகதே ஹோரா சப்தாஷ்டமஸ்திதேசந்த்ரே*
*ஸௌம்யைரபலைர் த்ருஷ்டேஜாதோம்ரியதேத்ருவம்ஹ்யத்ர.*

(சாராவளி)

(இ-ள்) சந்திரன் பாபமத்தியனாய் 1-7-8-ல் இருந்து பலவீனமான சுபர்களால் பார்க்கப்பட்டால் சிசுவுக்கு சீக்கிரம் மரணமுண்டாம். மற்றும்:

த்யூனசதுரச்ரஸம்ஸ்தே பாபத்வயமத்யகேசசிஜாதஃ
விலயம்ப்ரயாதி நியதம் தேவைரபி ரக்ஷிதோபாலஃ (சாராவளி)

(இ-ள்) சந்திரன் பாபக்கிரக மத்யகதனும் 4-7-8 இந்த ஸ்தானங்களி லிருந்தால் சிசுவுக்கு மரணமுண்டாம்.

இந்த மேற்கோள்களில் 1-வது யோகம் க்ஷீணசந்திரனுலும், மற்றவை விருத்தி க்ஷீணபேதமின்றிய சந்திரனுலும் ஏற்படுவதாகும் என விளங்கா நிற்கும். சாராவளியில் பாப மதய சந்திரன் 1-4-7-8-ல் இருந்தால் சிசுவுக்கு மட்டுமே மரணமுணடென்று கூறப்பட்டிருக்கின்ற தன்றி தாய்க்குத் தோஷமுண்டென்று கூறப்படவில்லை. ஆகவே ஆசிரியர் வராகமிகிரனு ரவர்கள் மதத்தையே பெரும்பாலும் இந்நூலாசிரியராம் கீரனூர் நடராஜனு ரவர்கள் தழுவிக் கூறியிருப்பதாக நன்கு துணியப்படும்.

### 1-வது யோகத்திற்கு மேற்கோள்

ரந்த்ராலயேவாத சதுஷ்டயேஷு
கலக்ரஹாணும் மிலநம்யதிஸ்யாத்
கலாநிதௌ க்ஷீண கலாகலாபே
லக்நஸ்திதேநஸ் யதியஃ ப்ரஸூதஃ (ஜாதகாபரணம்)

(இ-ள்) சனனகாலத்தில் அஷ்டமத்திலாவது, கேந்திரங்களிலாவது பாபகிரகங்களிருக்க, க்ஷீணசந்திரன் இலக்கினத்திலிருந்தால் அந்தக் குழந்தை சீக்கிரத்தில் நஷ்டமாகும் என்பதாம். (78)

ஆயசித் திரையில் திங்கள் அணிகுசன் உத்தி ராடம்
ஞாயிறு பரணி கேட்டை நற்குரு வாரம் ஆகும்
ஏயறு புதன் அவிட்டம் இரேவதி சனியே ஆகும்
தூயபூ ராடம் வெள்ளி இதில்சன்மம் துயரம் செய்யும்.

(இ-ள்) ஞாயிற்றுகிழமையில் பரணிநட்சத்திரத்திலும், திங்கட்கிழ மையில் சித்திரை நட்சத்திரத்திலும், செவ்வாய்க்கிழமையில் உத்திராட நட்சத்திரத்திலும், புதன்கிழமையில் அவிட்டநட்சத்திரத்திலும், வியாழக் கிழமையில் கேட்டை நட்சத்திரத்திலும், வெள்ளிக்கிழமை பூராடநட்சத் திரத்திலும், சனிக்கிழமை ரேவதி நட்சத்திரத்திலும் குழந்தைபிறந்தால் அதிக துக்கத்தை யுண்டாக்கும் எ-று. 8

வந்திக்குங் கதிர்க்குக் கங்குல் மதிக்குச்சித் திரைசேய் தாடி
புந்திக்கு விட்டம் ஈகும் பொன்னுக்குக் கேட்டை ஆகும்
சந்திக்கும் புகர்பூ ராடம் சனிதோனிப் பிறந்த நாளாம்
சிந்திக்குங் கருமம் எல்லாம் தீமையாய் விளையும் மாதே.
(சூடாமணி உள்ளமுடையான்)

எனவரும் வசனத்தினுல் இச்செய்யுளில் கூறிய விஷயம் கிழமைகள் பிறந்த நட்சத்திரங்கள் என்று அறியப்படுகின்றது. குழந்தை பிறந்தால் ஆகாது என்பதுமட்டுமல்ல. இந்தக் கிழமைகள் இந்த நட்சத்திரங்களுடன் கூடி வந்தால் அத்தினம் சுபகருமங்கள் செய்யக்கூடாதென்பதுமாம்.

இது கிழமை பிறந்த நட்சத்திர மென்பதனை:—

“ஆயுங் கதிரசெய் சுடப்பருதி தனக்காங்கு அறையும் இரேவதியில்
பாயும் புரவித் தேர்க்கரியோன் உதித்தான் பகரும் அவிட்டத்தில்
தூயகதிர்செய் மதிலனுக்குத்துலங்கும் அறிவன் தோன்றினனுல்”

எனவரும் இலிங்கபுராணம் சூரியன் முதலான கோளும் நாளும் உரைத்த 58-வது அதகியாயத்து 5-வது செய்யுளினுல் நன்கு அறியலாம். இப்புராணத்தில் புதன்-சனி ஆகிய இரண்டு வாரந்தவிர ஏனைய வாரங்களுக்கு நட்சத்திரங்கள் வித்யாசப்படுதலின் அவற்றை இங்கு விளக்கவில்லை. அங்ஙனம் வித்யாசப்படுவது கல்பபேதம்போலும். (74)

**செய்யும்அட் டமத்தில்பாவர் சேர்ந்திடில் நடேர ரேழாம்**
**ஐயமாம் பிழைத்திருந்தால் அவனுக்காங் கண்ணுக்கு ஊனம்**
**மெய்யலக் கினத்தில் செவ்வாய் நிற்கினும் வியம்ஆறு எட்டில்**
**பையவே காரி செவ்வாய் பற்றின்மெய்க்கு அரிட்டம் பண்ணும்.**

(இ-ள்) இலக்கினத்திற்கு எட்டாம்வீட்டில் பாபகிரகங்கள் இருந்தால் பிறந்த சிசு ஏழுநாள்வரை பிழைத்திருக்கும். அதற்குமேல் பிழைத்திருந்தால் அக்குழந்தையின் நேத்திரத்திற்குத் தோஷமுண்டாகும். இலக்கினத்தில் அங்காரகன் இருந்தாலும், அல்லது (6) ஆறு (8) எட்டு (12) பன்னிரண்டாம் வீடுகளில் சனி, அங்காரகனிவர்கள் இருந்தாலும் குழந்தையின் சரீரத்திற்குத் துன்பமுண்டாகும் எ-று. (75)

**பண்ணும் சன்மம் உடன்ஏழில் பாவர் இருக்கப் பாவர்கள் தாம்**
**அண்ணின் மதியம் உடன்கூட அணிய தாகவரும் அரிட்டம்**
**எண்ணுந் தேய்ந்த பிறைவியத்தில் இருக்கஒன்றெட்டு அதிலகிதர்**
**நண்ணில் அரிட்டம் கேந்திரத்தில் நல்லோர் இருக்கத்தீர்ந்திடுமே.**

(இ-ள்) இலக்கினம், ஏழாமிடம், சந்திரலக்கினம் இவைகளில் பாவர்கள் சுபர்கள் நோக்கமில்லாதிருந்தால் குழந்தைக்கு அரிஷ்டமுண்டாகும், தேய்பிறைச்சந்திரன் 12-ல் இருக்க 1-8—ஆமிடங்களில் பாவர்கள் இருந்தால் குழந்தைக்கு அரிஷ்ட முண்டாகும் சுபர்கள் இலக்கினத்திற்கு 1-3-7-10 ஆகிய கேந்திரங்களில் இருந்தால் அரிஷ்டம் நீங்கி சுகமாக இருக்கும் எ-று.

(வி-ரை) பாபாவுத யாஸ்தகதௌ க்ரூரேணயுதச் ச சசீ
த்ருஷ்டச்ச சுபைர் நயதா ம்ருத்யுச்ச பவேத சிராத்
க்ஷீணே ஹி மகௌ வ்யயகே பாபைர் உதயப்ரிஷ்டமகை:
கேந்த்ரேஷு சுபாச்ச நசேத் க்ஷிப்ரம் நிதநம் ப்ரவதேத்.

(பிருகஜ்ஜாதகம்)

(இ-ள்) இலக்கினத்தில் ஒரு பாபியும், ஏழாமிடத்தில் ஒரு பாபியும் இருக்க, சந்திரன் எந்த ராசியிலேனும் பாபக்கிரகங்களுடன் கூடி சுபகிரக நோக்கமின்றி இருந்தால் பிறந்த சிசுவுக்கு சீக்கிரமாக மிருத்யுவும் உண்டாகும். க்ஷீணசந்திரன் 12-ஆமிடத்திலிருக்க, பாபகிரகங்கள் இலக்கினம்

எட்டாமிடங்களில் இருந்து இலக்கினத்திற்கு 1-4-7-16 ஆகிய கேந்திரங்கள் இல்லாவிட்டால் பிறந்த சிசுவுக்கு சீக்கிரத்தில் மிருத்யுவுண்டாகும் என்பதாம். (76)

**உய்யும் இரவி சனிசெவ்வாய் உறுப்புக் குறைந்த மதியோடு**
**மெய்யாம் வியம்பாக் கியம்எட்டில் ஒன்றேழ் ஐந்தில் மேவிடவே**
**பையஇந்தப் பதிகள்தமைப் பண்பாய் சுபர்கள் பாராரேல்**
**ஐயஅரிட்டம் சுபர்நோக்கம் ஆனால் இருப்பன் அணிமயிலே.**

(இ-ள்) தேய்பிறைச்சந்திரன் இலக்கினம், ஐந்து, ஏழு, எட்டு, ஒன்பது, பன்னிரண்டு ஆகிய இவ்விடங்களில் ஒன்றில் சூரியன், செவ்வாய் சனி முதலிய பாவர்களில் ஒருவருடன் கூடி, புதன் குரு சுக்கிரர்களில் ஒருவருடைய பார்வை யில்லாதிருந்தால் பிறந்த குழந்தைக்கு அரிஷ்டமுண்டாகும். சுபர்கள் பார்வையுடன் இருந்தால் அரிஷ்டம் நீங்கிச் சுகமாக வாழ்ந்திருக்கும் எ-று. (77)

**அவனி மீதுஎட்டு ஐந்துஒன்றில் ஆனவியம்ஏழ் பாக்கியத்தில்**
**தபனன் செவ்வாய் சனிமதியம் தாமும்கூடி நின்றாலும்**
**கவனம் உடனே தனித்தனியே கருதும் இவற்றில் நின்றாலும்**
**எவனும் பிறக்கில் இப்பாரின் மேவும் அரிட்டம் எய்துவனே.**

(இ-ள்) இந்நிலவுலகத்தில் பிறந்தவர்களுக்கு ஒன்று-1, ஐந்து-5, ஏழு-7, எட்டு-8, ஒன்பது-9, பன்னிரண்டு-12, ஆகிய இடங்களில் எங்கேனும், சூரியன்-அங்காரகன்-சனி இவர்களில் ஒருவருடன் அல்லது பலருடன் க்ஷீண சந்திரன் கூடி இருக்கப் பிறந்த குழந்தைக்கு அரிஷ்டதோஷமுண்டாகும் என்பதாம்.

சிலர் ஐந்தாவது செய்யுளில் 4-வது அடியில் "கேந்திரத்தில்" எனக் கூறியிருப்பதற்குள் சந்திரனுக்குக் கேந்திரங்களில் சுபர்கள் இருக்க அரிஷ்டம் தீருமென்று கூறுகின்றனர், அங்ஙனம் முதல் நூற்களில் காணப்படவில்லை. ஆகவே இலக்கினத்திற்குக் கேந்திரத்தில் சுபர்கள் இருந்தாலும் பார்த்தாலும் ஆயுள்விருத்தியும், இல்லாவிடின் ஆயுள் க்ஷீணமும் உண்டாமென்று அறிதல்வேண்டும். 5-வது செய்யுளில் இக்கருத்தைக் கூறியவர் 6-வது செய்யுளை ஏன் கூறுதல்வேண்டும்? என்று சங்கை யுண்டாகின்றது. அஃது வருமாறு: 5-வது கவியில் பாவர்கள் எனப் பொதுவாகக் கூறியதனால் 6-வது கவியில் அப்பாவர்கள் இன்னின்னார் என்பதை விளக்குவதற்காக கூறினார் என்க. மறுபடியும் 7-வதுசெய்யுளில் அதேகருத்தைக் கூறியதென்னை எனின்? 6-வது செய்யுளில் 1-5-7-8-12 ஆகிய இடங்களில் சந்திரன் எல்லாப் பாவர்களுடன் இருந்தால் எனப் பொதுவாகக் கூறியபடியால் 7-வது கவியில் இவ்விடங்களில் எதிலேனும் ஒன்றில் சந்திரன் ஏதேனும் ஒரு பாவர்களுடன் கூடியிருந்தால் தோஷமென்பதையும், அதனால் ஆறுவித அரிஷ்டயோகங்கள் உண்டென்பதையும் விளக்குதற்பொருட்டு கூறினரென்க. முதல்நூற்களின் கருத்தைத் தழுவி 3-வது கவியில் "ஒன்றில் அவர்கள் மேவிடவே" என்றிருந்ததை, "ஒன்றே ழைந்தில் மேவிடவே" எனவும், 7-வது கவியில் "ஆன வியத்தில் பாக்கியத்தில்"

என்றிருந்ததை "ஆன வியமேழ் பாக்கியத்தில்" எனவும் பாடபேதமாகக் கொண்டு திருத்தியமைத்ததென்ப.

ஸௌம்ய மதந நவ அந்த்ய லக்ந ரந்த்ரேஷ்வ
சுபயுதோ மரணாய சீதரச்மி:
ப்ருகுஸௌம்ய சசிபுத்ர தேவபூஜ்யைர்
யதிபலிபிர்நயுதோவலோகிதோவா. (பிருகஜ்ஜாதகம்)

லக்ந த்ரிகோண: அந்திம ஸப்த ரந்த்ரே
சந்த்ரே ஸபாபே அபசயம் ப்ராயாதே
சுபைர்ந யுக்த்தே யதிநப்ரத்ருஷ்டே
ரிஷ்டம்பவேதத்ர கிமத்ர சித்ரம். (ஜாதகாபரணம்)

(இ-ள்) பாபக்கிரகங்களுடன் சேர்ந்த க்ஷீணசந்திரன் 5-ஐந்து, 7-எழு 8-எட்டு, 9-ஒன்பது, 12-பன்னிரண்டு, 1-இலக்கினம் ஆகிய இவ்விடங்களில் ஒன்றிலிருந்து பலீஷ்டர்களான சுக்கிரன்-புதன்-குரு முதலியவர்களில் ஒருவருடைய சம்பந்தம். பார்வை இல்லாதவனாயின் பிறந்தசிசு மரணமடையும் என்பதாம். இங்கு சொல்லப்பட்ட விசேஷத்துடன்கூடின சந்திரன் இலக்கினத்திலிருப்பது-1, ஐந்தில் இருப்பது-2, ஏழிலிருப்பது-3, ஒன்பதிலிருப்பது-4, பன்னிரண்டிலிருப்பது-5, எட்டிலிருப்பது-6, இப்படியாக ஆறு வகையான் அரிஷ்டயோகத்தை யுண்டாக்குவானென்க. இப்படிசொல்லப்படுவதனால் இந்த யோககர்த்தாவான க்ஷீணசந்திரனுக்கு சுக்ர-புத-குரு, முதலியவர்களில் பலீஷ்டமான ஒரு கிரகத்தினுடைய சம்பந்தம் பார்வை யுண்டாயிருந்தால் பாலாரிஷ்டமில்லை என்று அறிதல்வேண்டும்.

இது விஷயமாய்:—

நிதநாஸ்த வ்யய லக்ந த்ரிகோணகா:
க்ஷீணசந்த்ர ஸம்யுக்தா:,
பாபாபலீநச் சுபதைரத்ருச்யமாநா
சதாயுஷம் குர்யாத். (சாராவளி)

எனவரும் சுலோக வசனத்தையும் இங்கு ஒப்பு நோக்கத்தக்கதாகும். இப்படலத்து இந்த 5-வது செய்யுள் முதல் அடியில் 1-ஒன்று, 7-ஏழாம் இடங்களையும், 3-வது அடியில் 1-ஒன்று 7-ஏழு 12-பன்னிரண்டு ஆகிய மூன்று இடங்களையுங்கூறி 5-ஐந்து, 8-எட்டு, 9-ஒன்பது, ஆகிய மூன்று இடங்களைக் கூறாது விடப்பட்டிருந்தமையால் பாடபேதமெனக்கொண்டு 3-வது அடியில் "வியத்தில் ஏழில் ஒன்றில் பாவர்களும்" என்றிருந்ததை "வியத்தில் எட்டை தொன்பான் பாவர்களும்" எனத் திருத்தி யமைத்ததென்றறிக. இந்நூலாசிரியர் இங்கு எடுத்துக்காட்டிய பிருகஜ்ஜாதகம், சாராவளி, ஜாதகாபரணங்களின் சுலோகக் கருத்தையே மறுபடியும் 6-வது 7-வது செய்யுள்களில் கூறியிருக்கின்றார்.

சூரியன்-அங்காரகன்-சனி-ராகு-கேது ஆகிய இவர்கள் பாவர்களாதலால் இங்கு ஆசிரியர் இராகு கேதுக்களை நீக்கியதென்னை எனின்? அவர்கள் வீடற்ற சாயாகிரகங்களாவதன்றி தாம்இருந்தவீட்டதிபன், தம்முடன் சேர்ந்தவர்கள் தம்மைப் பார்த்தவர்கள் ஆகிய இவர்களுக்கொத்த பலனைத் தரும் தன்மையுடையவர்களாதலால் இவர்களை நீக்கி யுரைத்தனரென்க.

*"ஸுர்யாரமந்தாச்ச யதிந்துயுக்தாஃ, ப்ரஸூதிகாலே மிலிதாயதிஸ்யுர் நாசஃ, சிசோர் அப்தகபஞ்சகேந" என்ற ஜாதகாபரணத்தின்படி எந்த யிடத்திலாவது சூரியன்-செவ்வாய்-சனி இவர்கள் மூவருக்குள் ஒருவரைச் சந்திரனுடன் கூடியிருந்தால் அந்தக் குழந்தை ஐந்துவருடம்வரை ஜீவித் திருக்குமென்று அறியப்படுகின்றன.* (78)

**எண்ணிய லக்கி னத்தோன் பிரமலக் கினத்தில் ஏறில்**
**ஒண்ணியே பாவர் தானும் உற்றிடில் உரோகி யாவன்**
**திண்ணமாய் இவர்கள் தாமும் திரிகோண கேந்தி ரத்தில்**
**நண்ணிடின் மூர்க்கன் ஆவன் நறைமலர்க் குழலின் மானே.**

(இ-ள்) *இலக்கினாதிபதி சூரியலக்கினத்தில் இருக்க, அவனுடன் பாவர்கள் சேர்ந்திருந்தால் பிறந்த ஜாதகன் நோயுடையவனாயிருப்பான். மற்றும் பாவக்கிரகங்கள் இலக்கினத்திற்குத் திரிகோணங்களாகிய 5-ஐந்து, 9-ஒன்பதாமிடங்களிலும், கேந்திரங்களாகிய 1-ஒன்று, 4-நான்கு, 7-எழு, 10-பத்தாமிடங்களிலும் இருந்தால் அந்த ஜாதகன் மூர்க்கமுடையவனாய் இருப்பான் எ-று.*

(வி-ரை) *பிரமம் என்றபதத்திற்குச் சூரியன்-சந்திரன் என்றுபொருள் இருத்தலின் இலக்னாதிபன் சூரியனுடன்கூடினால் அஸ்தங்கததோஷத்தை அடைந்து துர்ப்பலமாவதுபற்றியும், சந்திரனுடன் கூடினால் அங்ஙனம் துர்ப்பல மாகாமைப்பற்றியும் பிரமலக்கினம் என்பதற்கு சூரியலக்கினம் என்று பொருள் கூறப்பட்டதென்க. சிலர் சோடசாம்சத்தில் வரும் பிரம் மாம்சமென்று பொருள் கூறுவர். அது பொருத்தமுடைத்தன்று. சோட சாம்சத்தில் வருவது பிரமாம்சமேயன்றி பிரம இலக்கினமாகாதென்க.* (79)

**மானேகேள் குதிரை மூலம் மகம்முதல் காலும் பின்னும்**
**ஈனரே வதியுங் கேட்டை ஆயில்யம் இவைபின் காலும்**
**ஆனநாழிகையோர் நான்குள் அன்னைமுன் பிதாரெண்டுக்காம்**
**ஆனநல் குழவி மூன்றில் நான்கில் சோதரர்க்கு அரிட்டம்,**

(இ-ள்) *அசுவினி-மகம்-மூலம் ஆகிய இந்த நட்சத்திரங்களின் முதல் பாதத்தின் ஆரம்பத்தில் இரண்டு நாழிகையும், ஆயிலியம்-கேட்டை-ரேவதி ஆகிய இந்த நட்சத்திரங்களின் நான்காம்பாதத்தின் அந்தியத்தில் இரண்டு நாழிகையும் ஆகிய நான்கு நாழிகைகாலம் கண்டாந்த சக்கர சந்திகாலம் எனப்படும். இந்த நாழிகை நான்கில் முதல் ஒருநாழிகையில் பிறந்தால் தாயாருக்கும், 2-வது நாழிகையில் பிறந்தால் தந்தைக்கும், 3-வது நாழிகை யில் பிறந்தால் குழந்தைக்கும், 4-வது நாழிகையில் பிறந்தால் சகோதரருக் கும் அரிஷ்டம் உண்டாகும் எ-று.*

(வி-ரை) *வ்யதீபாத த்ரயங் கோரம் கண்டாந்த த்ரி[redacted] ததா*
*ஏத்பசந்தி த்ரிதயம் ஸர்வகர்ம சுவர்ஜயேத்.*

*எனவரும் சூரிய சித்தாந்தம் பாதாத்தியாயம் பகரும்வண்ணம் வியதீபா தம், வைதிருதிபாதம் என்னும் வியதீபாதத்திரயமும், ஆயில்யம்-கேட்டை-ரேவதிகளின் நான்காம்பாதாந்தியம் என்னும் சக்காசந்திதிரயமும், அசு*

வினி-மகம்-மூலங்களின் முதற்பாத ஆரம்பம் என்னும் கண்டாந்தத்திரயமும் மிகவும் கெட்ட காலங்கள் எனப்படும்.

இதனை,

ஆனரே வதியின் நாற்கால் அசுவினி தனில் முதற்கால்
மோனம்ஆம் கேட்டை நாற்கால் மூலத்தின் முதற்கால் தன்னில்
ஈனம்ஆம் இராசிச் சந்தில் எந்தலே தோன்றும் எனும்
தான்அவை திரிகோ ணத்தில் தந்தைக்கே அரிட்டம் ஆமே.

(இ-ள்) ரேவதி 4-வது பாதம் அசுவினி முதல்பாதமும், கேட்டை 4-வதுபாதம் மூலம் முதற்பாதமும், இதன் திரிகோணமாகிய ஆயில்யம் 4-வதுபாதம், மகம் முதல்பாதமும் குற்றமுடைய இராசிசந்தியாகும். இவை களில் ஆண்குழந்தை ஜனனமானல் தகப்பனுக்கு ஆகாது. பெண்குழந்தை பிறந்தால் தாயாருக்கு ஆகாது எ-று.

கண்டாந்தவ்ய ப்ரமாணந்து கடிகாயாச் சதுஷ்டயம்
ஆத்யநாட்யாந்து ஜாதஸ்ய மாதுர்மரணம் மாப்நுயாத்
த்விதீயாயாம் பிதுச்சைவ த்ருதீயாயாம் அதஸ்வயம்
சதுர்த்யாம் ஜாயமாநஸ்து ஹந்திப்ராத்ரூந் நஸம்சயஃ

(இ-ள்) கண்டாந்த தோஷகால பிரமாண நாழிகை நான்காகும். முதல் நாழிகையில் மாதுருவுக்கும், இரண்டாவது நாழிகையில் பிதுருவுக்கும், மூன்றாவது நாழிகையில் குழந்தைக்கும், நான்காவது நாழிகையில் உடன் பிறந்தோருக்கும் தோஷம் உண்டாகும் எ-று.

இந்நூலாசிரியர் இப்படலத்து 9-வது செய்யுளில் கண்டாந்த தோஷ காலத்தின் தோஷசம்பவம் இன்னின்னர்க்கு உண்டென்பதை மாறாகக் கூறியிருப்பதாக சர்வார்த்த சிந்தாமணி வசனத்தால் அறியப்படுதலின், இந்நூலேயும் முதல்நூலாகக் கொண்டதாய் பாயிரப்படலத்தில் கூறப்படுதலின் இதனை அநுசரித்து 9-வது செய்யுளைத் திருத்தப்பட்டதென்றறிக.

ஸார்பேந்த்ர பௌஷ்ண்ய திஷ்ண்யாநாம்
அந்த்யாஃ பாதா பஸந்தயஃ
ததக்ரபேஷ் வாத்யபாதோ
கண்டாந்தம் நாமகீர்த்யதே (சூர்ய சித்தாந்தம்)

எனவரும் சுலோக பிரமாணத்தினுல் நன்கு அறியலாம். வியதீபாதம், வைதிருதி என்பவைகளில் தத்கால பஞ்சாங்கத்தினுல் அறிக.

குமார ஜந்மகாலேது வ்யதீபாதச்ச வைத்ருதிஃ
சங்க்ரமச்ச பவேத்யத்ர ஜாதோ தாரித்ரயகாரகஃ
தரித்ராணும் மஹாதுக்கம் வ்யாதிபீடா மஹத்பயம்
சஞ்சயம் [illegible]த்யு மாப்நோதி நாத்ரகார்யா விசாரணை
ஸ்தரீணுஞ்ச சோக துக்கஞ்ச ஸர்வந் நாசகரோபவேத்
சாந்திர்வா புஷ்கலாகார்யா தத்ரதோஷோ நகச்சதி
சோமுகப்ரஸவம் குர்யாத் சாந்திகுர்யாத் ப்ரயத்நதஃ
(கார்க்கிய சம்மிதை)

என்ற வசனத்தினால் வியதீபாதம், வைதிருதி, சூரிய சங்கிரமாண காலங்களில் குழந்தை பிறந்தால் அவசியம் சாந்தி செய்துக்கொள்ளவேண்டும். இதன் விரிவை சோதிடகலாநிதி 2-வது தொகுதி முதற்பகுதியில் பரக்கக் காண்க.

ஸார்பேக பௌஷ்ண பேஷ்வந்த்ய ஷோடசாம்சா பஸந்தயஃ
ததக்ரபேஷ் வாத்யபாதா பாகாம் கண்டாந்த ஸம்க்ஞகாஃ (நாரதர்)

(இ-ள்) ஆயில்யம்-கேட்டை-ரேவதி அந்தியபாதத்தின் அந்தியமும், அசுவினி-மகம்-மூலம் ஆதிபாதத்தின் ஆதியும் முறையே சக்கரசந்தி கண்டாந்தம் எனப்படும்.

பௌஷ்ணச்விந்யோஃ ஸார்பபித்ரர்க்ஷயோச்ச
யச்சஜ்ஜேஷ்டாமூலயோ ரந்தராளம்,
ஸ்யாத் கண்டாந்தம ஸ்யாச் சதுர்நாடி கம்ஹி
யாத்ராஜந்மோத்வாஹ காலேஷ்வநிஷ்டம் (ரத்தினமாலை)

(இ-ள்) ரேவதி-அசுவினி-ஆயில்யம்-மகம்-கேட்டை-மூலம்இந்த நக்ஷத்திர சந்திகாலத்தில் நான்குநாழிகை கண்டாந்தம் என்று சொல்லப்படும். இக்காலத்தில் யாத்திரை-ஜனனம்-விவாகம் நிகழுமானால் துக்கமுண்டாகும். கண்டாந்தகாலத்தில் குழந்தை பிறந்தால் அவசியம் சாந்திசெய்துக் கொள்ளவேண்டும். இல்லாவிட்டால் மிக்க துன்பத்தைச் செய்யும் என்று அறிக.

அச்விநி மகமூலநாம் பூர்வார்தே பித்ருபீடநம்
பூஷாஹி சக்ரபச்சார்தே ஜநநீ பாததேசிசும்
பித்ருக்நஸ்து திவாஜாதோ ராத்ரிஜாதஸ்து மாத்ருஹா
ஆத்மக்நஸ் ஸந்த்தியயோர்ஜாதோ நாதிகண்டோ நிராமயஃ
ஸர்வேஷாம் கண்டஜாதாநாம் பரித்யகோ விதீயதே.

(இ-ள்) அசுவினி-மகம்-மூலம் ஆதிபாதத்தில் ஆதிகண்டாந்தகாலம் ஜனனமானால் பிதாவுக்கும், ஆயில்யம் கேட்டை-ரேவதி அந்தியபாதத்தில் அந்தியகண்டாந்தகாலம் ஜனனமானால் மாதாவுக்கும்தோஷம் உண்டாகும். கண்டாந்தகாலத்தில் பகலில் ஜனனமானால் பிதாவுக்கும், இரவில் ஜனனமானால் மாதாவுக்கும், சந்தியாகாலத்தில் ஜனனமானால் சிசுவுக்கும் தோஷமுண்டாகும்.

ஆச்லேஷாந்தே மகாதௌச ஜ்யேஷ்டாந்தே மூலமாதிமெ
ரேவத்யந்தே ச்விநீபாதௌ த்வேத்வே கடிகேக்ரமாத்
பண்டிதைர் தோஷகடிகே ப்ரோக்தே தத்ஸம்பவஸ்யஹி
க்ரஹசாந்திச்சிசோஃ கார்யே இத்யாஹ-ர்ஜ்யோதிரவிதேபுதஃ

(இ-ள்) ஆயில்யாந்தம் மகாரம்பம் கேட்டையந்தம் மூலாரம்பம், ரேவதி அந்தம் அசுவினியாரம்பம் இரண்டு நாழிகை கண்டாந்தகாலம் ஆதலால் அவசியம் கிரகசாந்தி செய்துக்கொள்ளல் வேண்டும் எ-று.

## ஆயிலியத்தின் பலன்

*மூர்தஸ்ய நேத்ர கலகாம்ஸ புகஞ்ச*
*பாஹு ஹ்ருஜ்ஜானு குஹ்யபத மித்யாஹி தேஹபாகஃ*
*பாணுத்ரி நேதர ஹஸ்தபுக் க்ருதி நாக ருத்ர*
*ஷண்ணர்தபஞ்ச சிரஸஃ க்ரமசஸ்துநாட்யஃ* (நிர்ணய சிந்து)

(இ-ள்) ஆயில்ய நட்சத்திர நாழிகை 60-ல் சிரத்தில்-5, முகத்தில்-7, நேத்திரத்தில்-2, கழுத்தில்-2, இரண்டு கையில்-4, புஜங்களில்-8, இருதயத தில்-11, தொடையில்-6, இலிங்கத்தில்-9, பாதத்தில்-5 ஆக பங்கிட்டு வைத் துப் பலன் அறிதல்வேண்டும் எ-று.

ஆனல் நட்சததிர ஆதியந்தம் எப்போதும் 60-நாழிகையாக இருக்கா மல் 60-ல கூடியும் குறைந்தும் இருக்கும். அப்போது அறுபதுநாழிகையில் கூடியோ அல்லது குறைந்தோ உள்ள நாழிகைகளை 60-ல் வகுத்து நாழி 1-க்கு எத்தனை விநாடி என்றுகண்டு அந்தந்த அங்கஸ்தானத்தின் நாழிகை களில் பெருக்க வரும் நாழிகை விநாடிகளை ஆதியந்தம் 60-நாழிகையில் கூடியிருப்பின் அங்கஸ்தானங்களிலுள்ள நாழிகைகளில் கூட்டியும் குறைந் திருப்பின் குறைந்தும் ஒவ்வொரு அங்கததின் நாழிகையை சுத்தமாக அறிதல் வேண்டும்.

**உதாரணம்:**

ஒரு ஜாதகத்தில் ஆயில்யம் ஆதியந்தம் நா-65 ஆக வைத்துக்கொள் வோம. அப்போது அந்தவிபாகநாழிகை எவ்வளவு என்று அறியவேண்டின் நா. $5 \times 60 = 300 \div 60 = 5$ ஆகவே நாழிகை 1-க்கு 5-விநாடி அதிகப்படு தலின் ஆதியந்தம் 60-க்குமேல் கூடியிருத்தலின் இதனை ஆயில்யத்தின் முதல் அங்கம் நாழிகை 5-ஆல் பெருக்க 25-விநாடி ஆகவே சிரஸ்தான நாழிகை-5 விநாடி-25 ஆகுமென்றறிக. இங்ஙனமே பிற ஸ்தானங்கட்கும் பிற நட்சத்திரங்கட்கும் அறிக.

| | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| சிரம் 5 | முகம் 7 | ஷ்டி 2 | கழுத்து 3 | கரம் 4 | புஜம் 8 | இருதய 11 | தொடை 6 | லிங்கம் 9 | 5 |
| ராஜ்யலாபம் | பிதுர்நாசம் | மாதுர்நாசம் | சிற்றின்பம் | பிதுர்பக்தி | பலம் | தேக ஆனி | தாத்ருத்வம் | செல்வம் | தனலாபம் |

*ராஜ்யம் பித்ருஷயோ மாத்ரு நாசஃ காமக்ரியாரதிஃ*
*பித்ருபக்த்தோ பலீஸ்வக்நஸ் த்யாகி போகீ தநீக்ரமாத்.*
(நிர்ணய சிந்து)

1 ராஜ்யலாபம் 4 சிற்றின்பபிரீதி 7 சிசுஹானி
2 பிதுர்ஆனி 5 பிதுர்பக்தி 8 தியாகத்வம் 10 செல்வம்
3 மாதுர்ஆனி 6 தேகபலம் 9 செல்வம் உண்டாம்.

### கேட்டையின் பலன்

ஜ்யேஷ்டாதௌ ஜநநீமாதா த்விதீயே ஜநநீபிதா
த்ருதீயே ஜநநீப்ராதா ஸ்வயம்மாதா சதுர்த்தகே
ஆத்மாநம் பஞ்சமேஹந்தி ஷஷ்டேகோத்ரக்ஷயோபவேத்
ஸப்தமேசோப யுகுலம் ஜ்யேஷ்டப்ராதரம் அஷ்டமே
நவமேஸ்வ சுரம்ஹந்தி ஸர்வஹந்தி தசாம்சக. (பிரம்மயாமளம்)

(இ-ள்) கேட்டை ஆதியந்த நாழிகையை 10-பங்காக்க முதற்பங்கில் பிறந்தால் மாதுருவின் மாதுருவுக்கும், இரண்டில் மாதாவின்பிதுருவுக்கும் மூன்றில் மாதுருவின் சகோதாருக்கும், நான்கில் சிசுவின் மாதுருவுக்கும், ஐந்தில் சிசுவுக்கும், ஆறில் கோத்திரத்திற்கும், எழில் மாதுரு பிதுரு குலத்துக்கும், எட்டில் பெரிய சகோதரங்கட்கும், ஒன்பதில் சிசுவுக்கும், பத்தில் அனைத்திற்கும் நாசமுண்டாகும் எ-று.

### மூலத்தின் பலன்

அபுக்தமூலஸம்பவம் பரித்யஜேத்துபாலகம்
ஸமாஷ்டகம் பிதாதவா நதந்முகம் விலோகயேத்.

(இ-ள்) அபுக்தமூலத்தில் பிறந்தால் பிறந்த குழந்தையை விட்டுவிடுதல் நல்லது. அல்லது எட்டுவருடம்வரை தகப்பன் அந்த சிசுவின் முகத்தைப் பார்க்கக்கூடாது எ-று.

ஜ்யேஷ்டாந்த்ய கடிகைகாச மூலஸ்யாத்ய கடீத்வயம்
அபுக்த்தமூலம் இத்யுக்த்தம் தத்ரோத்பந்ந சிசோர்முகம்
அஷ்டவர் ஷாணி நாலோக்யம் தாதே நசுபம் இச்சதா
தத்தோஷ பரிகாரார்தம் சாந்திகம் ப்ரோச்யதே அதுநா.

(ஜாதகாபரணம்)

ஜ்யேஷ்டாந்தே கடிகாலைகா மூலாதௌகடிகாத்வயம்
அபுக்த்தமூலம் இத்யாஹுஸ் தத்ரஜாதம் சிசும்த்யஜேத்.

(வசிஷ்டசம்மிதை)

(இ-ள்) கேட்டை அந்தியத்தில் ஒரு நாழிகையும், மூலம் ஆரம்பத்தில் இரண்டு நாழிகையும் அபுக்த்தமூலம் எனப்படும், இக்காலத்தில் பிறந்த குழந்தையின் முகத்தை எட்டுவருடம் பிதாபார்க்கக்கூடாது இந்ததோஷம் பரிகாரமாகும்பொருட்டு அவசியம் சாந்தி செய்துக்கொள்ளல் வேண்டும்.

### புருஷாகிருதி மூலபலம்

மூர்த்நி பஞ்சமுகேபஞ்ச ஸ்கந்தயோர் கடிகாஷ்டகம்
கஜாச்ச புஜயோர்யுக்மம் ஹஸ்தயோர் ஹ்ருதயேஷ்டகம்
யுக்மம் நாபௌ திசோ குஹ்யே ஷட்ஜாந்வோ: ஷட்சபாதயோ:
வீர்யஸ்ய புருஷாகாரே மூலஸ்ய பலமாதிசேத். (ஜாதகாபரணம்)

(இ-ள்) மனுஷ்யாகார மூலமாவது: தலையில் நா-5, முகம்-5, கந்தம் (கழுத்து)-8, புஜம்-8, கை-2, இடுப்பு-10, தொடை-6, கால்-6 என்க.

*சத்ரலாபஃ ஸிரோதேசே வதநே பித்ருகாதகம்*
*ஸ்கந்தயோர் ப்ராத்ருஹத்வஞ்ச பாஹுயுக்மே த்வகர்மக்ருத்*
*ஹத்யாகரஃ கரத்வந்த்வே ராஜ்யாப்திர் ஹ்ருதயே பவேத்*
*அல்பாயுர் நாபிதேசேச குஹ்யேச முகமத்புதம்*
*ஜங்காயாம் ப்ரமணப்ரீதிஃ பாதயோர் ஜீவிதால்பதா*
*கடபலம் இலப்ரோக்தம் மூலஸ்ய முநிர்புங்கவை.*

(ஜாதகாபரணம்)

(இ-ள்) சிரசில் 5-நாழிகை சத்திர (குடை) லாபம், முகம் 5-நாழிகை பிதுருநாசம், இரண்டுகெந்தம் 8-நாழிகை இடபேதம், புஜம் நாழிகை-8 பலம் கை நாழிகை-2 மாதுர்நாசம், இருதயம் நாழிகை-8 இராஜ்யப்ராப்தி, நாபி நாழிகை-2 அல்பாயுசு, இடுப்பு நாழிகை-10 அத்யந்தசுகம், தொடை நாழிகை-6 அலைச்சல், பாதம் நாழிகை-6 அல்பாயுள் என்பதாம்.

## ஜாதகாபரணத்தின்படி மூலமுகூர்த்தம்

*ராக்ஷஸோ யாதுதாநச்ச ஸோமசுக்ர பணீச்வராஃ*
*பிதா மாதா யமஃ காலோ விஸ்வதேவா மஹேஸ்வரஃ*
*கார்வாக்யச்ச குபேரச்ச சுக்ரோ மேகோ திவாகரஃ*
*கந்தர்வோ யமதேவச்ச ப்ரஹ்ம விஷ்ணுர் யமஸ்ததா*
*ஈஸ்வரோ விஷ்ணுருத்ரச்ச பவரோ முநயஸ்ததா*
*ஷண்முகோ ப்ருகஸ்ரீடச கௌரீ நாம்நி ஸரஸ்வதீ*
*ப்ரஜாபதிச்ச மூலஸ்ய த்ரிம்ஸத்வை க்ஷணநாமகாஃ*
*விபரீதா புநர்க்ஞேயா ஆர்லேஷா ஜாதபாலகே.*

## மூல முகூர்த்த சக்கரம்

பகல் இரவு

| நாழிகை | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 | 14 | 15 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| முகூர்த்தம் | ராக்ஷஸ | யாதுதாந | சோமன். | சுக்கிரன். | பணீச்வர | பிதா. | மாதா. | யமன். | காலன். | விச்வதேவர். | மகேச்வரன். | ஸர்வ | குபேரன். | சுக்கிரன். | மேகம். |
| நாழிகை | 16 | 17 | 18 | 19 | 20 | 21 | 22 | 23 | 24 | 25 | 26 | 27 | 28 | 29 | 80 |
| முகூர்த்தம் | திவாகரன். | கந்தர்வன். | யமன். | பிரம்மா | விஷ்ணு | யமன். | ஈச்வரன். | விஷ்ணு | ருத்திரன். | பவர் | கந்தன். | பிருகஸ்பதி | கௌரீ | சரஸ்வதி | பிரஜாபதி |

## ஆயில்ய முகூர்த்தம்

பகல் இரவு

| நாழிகை | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 | 14 | 15 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| முகூர்த்தம் | பிரஜாபதி | சரஸ்வதி | சௌரி | பித்ரு | சந்திரன் | பேரி | வாயு | இந்திரன் | அஸ்வாரன் | யமன் | விஷ்ணு | பிரம்மன் | யமன் | கந்தர்வன் | திவாகரன் |
| நாழிகை | 16 | 17 | 18 | 19 | 20 | 21 | 22 | 23 | 24 | 25 | 26 | 27 | 28 | 29 | 80 |
| முகூர்த்தம் | சேஷன் | அத்திரன் | அகோரன் | சர்வ | மகேசுவரன் | விசுவேசுவன் | காலன் | யமன் | மாதுர் | பிதுர் | பணீஸ்வரன் | அக்கிரன் | சோமன் | யாதுதாந | ராக்ஷஸ |

இந்தச் சக்கரம் பகல் இரவு சம அகசு 30-ஆக உடைய கிரட்சஸ்தலத்திற்காகும். இஷ்ட ஸ்தலத்திற்குப் பகல் இரவு அகசு பிரமாணங்களை முப்பது பங்காகப்பிரித்து ஒவ்வொரு முகூர்த்தத்திற்குரிய நாழிகை அளவை அறிதல் வேண்டும்.

உதாரணம்:

பகல் அகசு 28 ஆனால் 28÷30=28×60=1680÷56=ஆகவே முகூர்த்தம் ஒன்றுக்கு நாழி-0 விநாடி-56 என்று அறிதல் வேண்டும்.

ப்ரதமே த்விதீயே ஷஷ்டே சாஷ்டமேஷ்டாத சேத்தா
த்ரயோ விம்சேச நவமே பரிவார பயங்கர: (ஜாதகாபரணம்)

(இ-ள்) மூலம் ஆயில்ய நக்ஷத்திரங்களின் 1-வது 2-வது 6-வது 8-வது 9-வது 18-வது 23-வது இந்த முகூர்த்தங்களில் ஜனனமானால் அனைத்திற்கும் நாசமுண்டென்பதாம்.

### மூல விருக்ஷம்

வேதா ஸப்த கஜா: காஷ்டா கேடா பாணச்ச ஷட்சிவா:
மூலஸ்தம்பத்வசா சாகா பத்ரம் புஷ்பம் பலம்சிகா.
(ஜாதகாபரணம்)

(இ-ள்) மூலவிருக்ஷத்தின் ஜடத்தில் நாழி-4, ஸ்தம்பத்தில் நாழி-7, மரம் நாழி-8, கிளை நாழி-10, இலை நாழி-9, புஷ்பம் நாழி-5, பழத்தில் நாழி-6, சிகையில் நாழி-11, ஆக நாழிகை 60-ஐ ஸ்தாபிக்கவும். இந்த மூலநக்ஷத்திர அங்க விபாக நாழிகையை முன்னேகூறிய ஆயில்யநக்ஷத்திர அங்கவிபாக உதாரணத்தின்படி ஆதியந்த நாழிகைக்கு ஏற்ப செய்துக் கொள்க.

மூலவ்ருக்ஷ விபாகேஷு மங்கலம்ஹி பலேதலே
அமங்கலம் பலம்வித்யாச சேஷபாகேஷு நிச்சிதம்
பாதே முகூர்த்தே வேளாயாம் வ்ருக்ஷேச புருஷாக்ருதௌ
அதிஷ்டம் அசுபாதிக்யே சுபாதிக்யே சுபம்பலம்.

(ஜாதகாபரணம்)

(இ-ள்) மூலவிருக்ஷத்தின் புஷ்பாங்க விபாக காலத்தில் பிறந்தால் சுபகரம், அன்னிய அங்ககாலத்தில் பிறந்தால் அசுபகரம், அபுக்தமூலம், மூலமுகூர்த்தம், மூலபாதம், விசேஷமூலம், மூலவிருக்ஷம், மூலாங்கம் இவற்றுள் சுபம் அதிகமானல் சுபகரம், பாபம் அதிகமானல் பாபபலம் உண்டாகும்.

## விசேஷமூலம்

க்ருஷ்ணே த்ருதீயா தசமீ வலக்ஷே பூதோ மஹீஜார் இபுதைஃ ஸமேதஃ
சேஜ்ஜந்மகாலே இலயஸ்ய மூலஜர்மூலகம் தத்குருதே குலஸ்ய,
திவாஸாயம் திசிப்ராதஸ் தாதஸ்ய மாதுலஸ்யச
பசூநாம் மித்ரவர்கஸ்ய க்ரமார்மூல மநிஷ்டதம்

(ஜாதகாபரணம்)

(இ-ள்) ஜனனம் தேய்பிறை திருதியைகூடிய செவ்வாய்க்கிழமையிலும், தசமிகூடிய சனிக்கிழமையிலும், வளர்பிறை சதுர்த்தசிகூடிய புதன்கிழமையிலும், மூலாக்ஷத்திரம் வந்தால் குலநாசத்தைச் செய்யும் பகல் சந்தியாகாலம். இராத்திரி அதிகாலையில் பிறந்தால் பிது, மாதுர் பசு, மித்ரவர்க்கங்களின் மூலம் (வம்சம்) நாசமாகும் எ-று.

## மூலபாதபலன்

மூலாத்யபாதஜோஹந்தி பிதாரந்துத்விதீயஜஃ
மாதரம் ஸ்வம த்ருதீயோர்தாந் ஸுஹ்ருதம்தத்துரீயஜஃ
பலம்ததேவஸார்பர்க்ஷே ப்ரதீபந்த்வர்யபாததஃ

(கசியப சம்மிதை)

(இ-ள்) மூலம் முதற்பாதத்தில் பிறந்தால் தகப்பனுக்கும், 2-வது பாதத்தில் பிறந்தால் தாயாருக்கும் நாசமுண்டாம். 3-வது பாதத்தில் பிறந்தால் தனநாசம், 4-வது பாதத்தில் பிறந்தால் நன்மையும் உண்டென்பதாம் ஆயில்யத்தில் பிறந்தால் இதற்கு விபரீதமான பலனும் அதாவது ஆயில்யம் 1-வது பாதத்தில் சுபமும், 2-வதுபாதத்தில் தனநாசமும் 3-வதுபாதத்தில் மாதுருவுக்கும், 4-வது பாதத்தில் பிதுருவுக்கும் நாசம் உண்டாகும் எ-று.

ஸர்பர்க்ஷே ப்ரதமேபாதே ஜந்மசேச் சுபக்ருத்பவேத்
த்விதீயே சிசுதோஷஸ்யாத் த்ருதீயே மாத்ருதோஷக்ருத்
சதுர்தே புத்ருதோஷஸ்யாந் திவ்ருததிர்ஸ்த வந்நதாநதஃ

(ஜோதிஷார்ணவம்)

எனவரும் வசனத்தினுல் ஆயில்யம் 2-வது பாதமும் மூலம் 3-வதுபாதமும் சிசுவுக்குத் தோஷமென்று காணப்படுகின்றது.

### மூல விருக்ஷ பலன்

மூலஸ்தம்பத்வசாகா பத்ரபுஷ்பம் பலசிகா
வேதாச்ச முநயச்சைவ திசச்சவஸவஸ்ததா
நந்தாபரணாரமாருத்ரா மூலபேதஃ ப்ரகீர்த்திதஃ
மூலேமூல விநாசாய ஸ்தம்பேஹாநிர்தநக்ஷயஃ
த்வசிப்ரநத்ரு விநாசாய சாகாமாத்ரு விநாசக்ருத்
பத்ரேஸ்பரிவாரஸ்யாத் புஷ்பேர்ருப வல்லபஃ
பலேஷுலபதேராஜ்யம் சிகாயாம் அல்பஜீவநம்

(ஜயார்ணவம் நிர்ணயசிந்து)

(இ-ள்) மூலாவிருக்ஷத்தின் வேரில் நாழிகை-4, ஸ்தம்பத்தில்-7, விருக்ஷத்தில்-10, கிளையில்-8, இலையில்-9, புஷ்பத்தில்-5, பழத்தில்-8, சிரத்தில் 11 ஆகும். விருக்ஷமூலத்தில் வம்சநாசம், ஸ்தம்பத்தில் தனநாசம், மரத்தில் சகோதரநாசம், கிளையில் மாதுர்நாசம், இலையில் குடும்பநாசம், புஷ்பத்தில் இராஜப்ரீதி, பழத்தில் ராஜ்யப்ராப்தி, சிகையில் அல்பாயுள் உண்டாகும்.

### வேறு மதசம்பிரதாயம்

மூலேஷ்டகடிஷு மூலஹாநம் தம்பேஷ்டஸுஸ்வக்ஷயம்
த்வதிக்பந்துவிநாசநம் சவிடபே ருத்ரைர் ஹதோமாதுலஃ
பத்ரேர்கைஃ ஸுக்ருதீது பாணகுஸுமோமந்த்ரீ பலேஸாகரேராஜா
வஹ்நிசிகால்பம்ஆயுர் இதிஸந்மூலாங்க்ரிபேஸ்யாத்பலம்.

(இ-ள்) மூலவிருக்ஷத்தில் வேரில் நாழிகை-7 வம்சநாசம், ஸ்தம்பத்தில் நா-8 சிசுநாசம், விருக்ஷத்தில் நா-10 பந்துநாசம், கிளையில் நா-11 மாதுலநாசம், இலையில் நா-12 புண்யாத்மா, புஷ்பத்தில் நா-5 மந்திரி, பழத்தில் நா-7 ராஜபிரீதி, சிகையில் நா-3 அற்பாயுள் என்று அறியப்படுகின்றன.

### மூலத்ரிலோகம்

வருஷாலிஸிம்மேஷு கடேசமூலம் திவிஸ்திதம்
யுக்ம துலாங்கநார்த்யே, பாதாளகம்மேஷதநுஃ
குளீரநக்ரேஷு மர்த்யேஷ்வதி ஸம்ஸ்மரந்தி.

ஸ்வர்கேமூலேபவேத்ராஜ்யம் பாதாளேசேத்தநாகமம்
மர்த்யலோகேயதாமூலம் ததாசூந்யம்ஸமாதிசேத்.

(பூபாலவல்லபம்-நிர்ணயசிந்து)

(இ-ள்) ரிஷபம்-விருச்சிகம்-சிங்கம்-கும்பம் இந்த லக்கினங்களில் பிறந்தால் மூலம் சுவர்க்கலோகத்திலும், மிதுனம்-துலாம்-கன்னி-மீனலக்கினங்களில் பிறந்தால் மூலம் பாதாளலோகத்திலும், மேஷம்-தனுசு-கடகம்-மகர லக்கினங்களில் பிறந்தால் பூலோகத்திலும் இருக்கும் என்க. சுவர்க்க மூலத்தில் பிறந்தால் ராஜ்யலாபமும், பாதாளமூலத்தில் தனநாசமும், பூலோகமூலத்தில் சர்வ நாசமும் உண்டு என்பதாம்.

இதனால் ரிஷபம்-விருச்சிகம்-சிங்கம்-கும்பங்களில் பிறந்தவர்களுக்கு மூலநக்ஷத்திரதோஷம் இடையாதென்பது நன்கு பெறப்படுகின்றதுணர்க.

அடருங் கண்டாந்த தோடம் அசுவினி பதினு ரூண்டாம்
சுடரத்தம் கேட்டை ஒன்றும் சொல்லிய மகம்எட் டாண்டாம்
திடம்இல்ஆ யிலியம் ரெண்டாம் சித்திரை மூலம் நான்காம்
வடிவுள சேய்க்கு அரிட்டம் மாதுரு கண்டம் ஆமே.

(சாதகசிந்தாமணி)

நவமாஸம் ததாச்லேஷா மூலேசாஷ்டக வர்ஷகம்
ஜ்யேஷ்டா பஞ்சதஸேமாஷி புத்ரதர்ஸநவர்ஜிதா.



(கிர்ணயசிந்து)

இதில் ஆயில்யத்திற்கு 9-மாதமும், மூலத்திற்கு 8-வருடமும், கேட்டைக்கு 10-மாதமும் தோஷமெனக் கூறப்பட்டிருப்பது மதபேதம். ஆனால் சாதகசிந்தாமணி நூலுடையார் கூறியது சிசுவின் அரிஷ்டகாலமும், இந்த சுலோகத்தில் கூறியது சிசுவைத் தந்தை பார்க்கக்கூடாத காலமும் என்று அறிக.

இதுகாறும் கூறிப்போந்தவற்றால் கண்டாந்த நக்ஷத்திர தோஷங்கள் நன்கு விளங்காநிற்கும் இவற்றின் தோஷ கால அளவை இப்படலத்து ஈற்றுச் செய்யுளின் விருத்தியுரையில் நன்சறிக. (80)

உறும்சன்ம லக்கி னாதி உடன்சோமன் உறைவீட் டாதி
பெறும்பகை என்னில் ஆண்டு பிறக்கும்சேய் பிழைத்தி டாது
குறும்சன்ம லக்கி னாதி குளிகனும் சனியும் கூடில்
அறைந்திடாய் கள்ளர் ஆலே அடிப்பட்டே இறப்பான் அன்றே.

(இ-ள்) ஜனன இலக்கினாதிபதியும் சந்திரலக்கினாதிபதியும் ஒருவர்க்கொருவர் பகைவராயிருந்தால் பிறந்த குழந்தை இறந்துபோம். ஜனன லக்கினாதிபனும் குளிகனும் கூடியிருந்தால் திருடர்களால் அடிபட்டு குழந்தை இறந்துபோம் எ-று. (81)

அன்றவன் உதித்த நட்சத் திரம்திதி ராசி அந்தம்
ஒன்றிடில் உடனே துஞ்சும் உற்றபொன் னேக்கெட் டேநாள்
வென்றிக்கொள் வெள்ளி நோக்க வரவுநாள் மூன்று பொன்னை
நன்றிலாப் பாவர் நோக்கின் வந்தநாள் நலிந்து போமே.

(இ-ள்) திதி கண்டாந்தம், நட்சத்திர கண்டாந்தம், இராசி கண்டாந்தம் ஆகிய திதி நட்சத்திர ராசி சந்திகளில் குழந்தை பிறந்தால் உடனே இறந்துபோம். குரு இலக்கினத்தைப் பார்த்தால் எட்டுநாள் ஜீவித்திருக்கும் சுக்கிரன் பார்த்தால் மூன்றுநாள் ஜீவித்திருக்கும். குரு (சுக்கிரர்களைப்) பாபக்கிரகங்கள் பார்த்தால் பிறந்த அன்றே இறந்துபோகும் எ-று.

(வி-ரை) சிலர் எல்லா திதி நட்சத்திரராசி சந்திகளில் பிறந்தாலும் தோஷம் உண்டு எனப் பொருள்கூறுவர். அது எட்டுணையும் பொருந்தாது.

தித்யர்க்ஷகண்டே பித்ருமாத்ருநாசோ
லக்நே துஸர்தெள தநயஸ்யநாச?

ஸர்வேஷு நோஜீவதி ஹந்திபந்தூந்ஜீவந்
புநः ஸ்யாத்பகுவாரணாச்வः (ரத்தினசங்கிரகம்)

(இ-ள்) திதி நக்ஷத்திரசந்தியில் பிறந்தால் பிதுர் மாதுருவுக்கும் லக்ன சந்தியில் பிறந்தால் சிசுவுக்கும், திதி நக்ஷத்திர லக்கினசந்தியில்பிறந்தால் சிசு பந்துக்களுக்கும் மிருத்யுவுண்டாகும். அரிட்டம் நீங்கி சிசு பிழைத்து இருந்தால் யானை குதிரை முதலியவற்றுடன் அச்சிசு அரசைப்பெறும் என்றறிக.

கண்டாந்தம், சந்தியாகாலங்களில் பிறந்த சிசு ஜீவித்திருப்பது துர்லபம். ஒருசமயம் ஜீவித்திருந்தால் அரசபோகத்துடன் வாழ்ந்திருக்கும் என்பதனை:—

ஜாதோ நஜீவதி நரோ மாத்ருவத்யோ பவேத்
ஸ்வகுல ஹந்தா, யதிஜீவதி கண்டாந்தே பஹு
கஜதுரககோ பவேத்பூபः (சாராவளி)

(இ-ள்) கண்டாந்தத்தில் பிறந்த சிசு ஜீவித்திருக்காது, மாதுருநாசம், குலநாசத்தை யுண்டாக்கும். ஒருசமயம் ஜீவித்திருந்தால் சதுரங்கபலமுடைய அரசவாழ்க்கையைப் பெற்று விளங்கும் எ-று.

பூர்ணா நந்தாக் யோஸ்தித்யோः ஸந்திர்நாடி த்வயம்ததா
கண்டாந்தம் ம்ருத்யுதம்ஜந்ம யாத்ரோத்வாஹவ்ரதாதிஷு
குளீரஸிம்ஹயோः கீட சாபயோர் மீநமேஷயோः
கண்டாந்தம் அந்தராளம் ஸ்யாத் கடிகார்தம் ம்ருதிப்ரதம்
(கர்க்கசம்மிதை)

(இ-ள்) பிரதமை (நந்தா), பஞ்சமி (பூர்ணா), சஷ்டி (நந்தா), தசமி (பூர்ணா), ஏகாதசி (நந்தா), பூரணை-அமாவாசை (பூர்ணா) ஆகிய திதிகளில் முடிவில் இரண்டு நாழிகைகாலம் திதி கண்டாந்தம் எனப்படும். கடகம்-சிங்கம், விருச்சிகம்-தனுசு, மீனம்-மேஷம் இவற்றின் சந்தியில் அரை நாழிகை ராசி கண்டாந்தம் எனப்படும்.

## திதி கண்டாந்தம்

பக்கம் ஐந்தினில் பத்துமூ வைந்தினில்
தொக்க ஈற்றினில் சொல்லிய நாழிகை
ஒக்க இவ்விரண்டு ஓதுகெண் டாந்தமாம்
தக்க தந்தைதாய் தான்அழிவு ஆகுமே. (சரசோதிமாலை)

## இராசி கண்டாந்தம்

சிலைஅரி தகர்முன் கூறு தேள்குளிர் கயல்பின் கூறும்
இலகும்அங் கிசங்கள் தாமே இராசிகண் டாந்தம் என்பர்.
(சரசோதிமாலை)

(இ-ள்) மீனம் மேடம், கடக சிங்கம், விருச்சிகம் தனுசு, இவைகளில் முறையே அந்தத்தில் அரைநாழிகையும், ஆதியில் அரைநாழிகையும் இராசி கண்டாந்தகாலம் என்பதாம்.

## கண்டதோஷதாநம்

திதிகண்டேத் வ்ருஷதாநம் நக்ஷத்ரே தேநுருச்யதே
காஞ்சநம் லக்நகண்டாந்து கண்டதோஷோ விநஸ்யதி
(உத்திரகார்க்கீயம்)

(இ-ள்) திதிகண்டாந்த தோஷபரிகாரத்திற்கு எருது தானமும், நக்ஷத்திரகண்டாந்த தோஷ பரிகாரத்திற்கு பசுதானமும், இராசிகண்டாந்த தோஷ பரிகாரத்திற்கு சுவர்ணதானமும் செய்யவேண்டும் எ-று.

வ்யதீபாதே அங்கஹாநிஸ்யாத் பரிகேம் ருத்யுமாதிசேத்
வைத்ருதௌ பித்ருஹாநிஃ ஸ்யாத் நஷ்டேந்தாவந்ததாம்வ்ரஜேத்
மூலேஸமூலநாசஃ ஸ்யாத் குலநாசோ த்ருதௌபவேத்
விக்ருதாங்கச்ச ஹீநச்ச ஸந்த்யயோர் உபயோரபி
பர்வண்யபி ப்ரசூதௌச ஸர்வாரிஷ்ட பயப்ரதஃ
தத்வத்ஸதந்தஜாதச்ச பாதஜாதகுல்தைவச
விபரீதப்ரசூதௌது நாபிநாளேநவேஷ்டிதஃ
ராஷ்ட்ரஸ்யந்ருபதேச்சைவ ஸ்வஸ்யாபிசவிநாசகஃ
தஸ்மாத்ஸர்வப்ரயத்நேந சாந்திம்குர்யாத்விதாததஃ
(வசிஷ்டசம்மிதை)

(இ-ள்) வியதீபாதயோகத்தில் சிசு ஜனனமானால் அங்கஹீனமும், பரிகயோகத்தில் மிருத்தியுவும், வைதிருதியோகத்தில் பிதுருஹானியும், நஷ்டசந்திரனில் அந்தகத்வமும், மூலத்தில் வம்சநாசமும், திருதியோகத்தில் குலநாசமும், இரண்டு சந்திகாலங்களில் அங்கவிகாரமும், அல்லது அங்கஹீனமும், பருவங்களில் ஜனனமானால் சகல ஹானியும் பயமும் உண்டாம். இந்தப்படி பல்லுடன் பிறந்தாலும், கால் முன்னாகப் பிறந்தாலும், அசுபத்தை யுண்டாக்கும், மற்றும் விபரீத ஜனனமானாலும், (குறைந்த அங்கம், அதிக அங்கம், விகாரஜனனம்) கொடிசுற்றிப் பிறந்தாலும் இராச்சியத்திற்கும் இராஜனுக்கும் குடும்பத்திற்கும் ஆகாது ஆதலால் அவசியம் சாந்தி செய்துகொள்க.

பிதுர்ஜந்மநி யேஜாதாஃ ஜநகம் நாசயந்திதே
மாத்ருஜந்மநி யேஜாதாஃ மாத்ருணும் காதுகாஸ்திரியஃ
(சர்வார்த்தசிந்தாமணி)

(இ-ள்) தகப்பன் பிறந்த நக்ஷத்திரத்தில் ஆண்குழந்தைப் பிறந்தால் தகப்பனுக்கும், தாய் பிறந்த நட்சத்திரத்தில் பெண்குழந்தைப் பிறந்தால் தாயாருக்கும் ஆகாது என்க.

கேதோர் உதயம் பூர்வம் பச்சாத் உல்காதி பவநநிர்கரதாஃ
ரௌத்ரே ஸார்ப்ப முகூர்த்தே ப்ராணைஸ் ஸம்த்யஜ்யதே ஜந்துஃ
(சாராவளி)

(இ-ள்) தூமகேது (வால்வெள்ளி) தோற்றம், நக்ஷத்திரம் வீழ்தல் இடி விழுதல், பிரசண்டமாருதம் வீசுதல் முதலிய உண்டானபோது, ரௌத்திர சர்ப்பமுகூர்த்தகாலங்களில் ஜனனமானால் சிசுவுக்குசீக்கிரத்தில் மிருத்யுவுண்டாம்,

### காலசந்தி

சந்திகாலம் என்பது பகல் இரவுகளின் சந்திப்பு காலங்களிலும் இவற்றின் மத்திய காலங்களாகிய நடுப்பகல் நடு இரவு காலங்களிலும் பிறந்த சிசு பிழைக்காது. பிழைத்திருந்தால் அக்குழந்தை அரசனாகவோ, பெரிய மத ஸ்தாபகனாகவோ, பெருத்த சம்பத்துடையவனாகவோ வாழ்ந்திருக்கும் என்றறிக. ஸ்ரீராமபிரான் மத்தியானத்திலும், அரிச்சந்திரன் மத்தியானத்திலும், இராவணன் சூரிய அஸ்தமயகாலத்திலும், கிருஷ்ணமூர்த்தி அர்த்தராத்திரியிலும் பிறந்திருக்கின்றனர். இவர்கள் ஜாதகங்களை சோதிட கலாநிதி 2-வது தொகுதியிற் காண்க.

அந்தாஸ் தமாயாத் ஸந்தீயா வ்யக்திபூதா நதாரகாயாவத்
தேஜஃ பரிபாதிமுகாத் பாநோர் அர்தோதயோ யாவத்.

(சம்மிதை வசனம்)

என்பதனால் சாயங்காலம் சூரியமண்டலத்தினுடைய பாதி மறையும் சமய முதல் நக்ஷத்திர பிரகாச பரியந்தம் சாயந்திர சந்திகாலமாகும் பிராத காலத்தில் ஒருவர்முகம் ஒருவருக்கு காணப்படும் சமயமுதல் சூரியமண்டலம் பாதி உதயபர்யந்தம் காலை சந்திகாலமாகும்.

உதயாத் ப்ராக்த நீஸந்த்யா கடிகாத்வ்ய முச்யதே
ஸாயம் ஸந்த்யாத் விகடிகாஹ அஸ்தாது பரியாஸ்வதஃ

(பாரத்வாஜ சம்மிதை)

என்பதனால் காலை மாலை சந்திகாலம் இரண்டுநாழிகை அளவு என அறியப்படுகின்றது.

ராச்யந்தகதைஃ பாபைஸ் ஸந்த்யாயாம்து ஹிமரச்மி ஹோராயாம்
ம்ருத்யுஃ ப்ரத்யேகஸ்தைஃ கேந்த்ரேஷு சசாங்கபாபைச்ச.

(சாராவளி)

(இ-ள்) சந்தியகாலங்களில் சந்திரஹோரையில் (காலஹோரையல்ல-ஓரா சக்கரத்தின்படி) பிறக்க, பாபக்கிரகங்கள் எந்த இராசியிலேனும் அந்திய நவாம்சத்திலிருக்க சிசுவுக்கு அரிஷ்டமுண்டாம். சந்திரன் பாப கிரகங்களுடன் கூடின் கேந்திரஸ்தானங்கள் ஆயின்; அதாவது 1-4-7-10 என்னும் இந்த கேந்திர ஸ்தானங்களில் எதிலேனும் மூன்று கேந்திரங்களில் பாவரும், ஒரு கேந்திரத்தில் சந்திரனும் இருந்தால் சிசுவுக்கு அரிஷ்ட மூண்டாம் எ-று. (௪2)

நலிவுசெய் அட்ட மாதி லக்கினத் தாதி கூடில்
வலியகேந் திரத்தில் நிற்க மன்னும் எட்டினில் ஆரேனும்
பொலிவுஉற ஒருவர் நிற்கப் பூமியில் பிறந்த பாலன்
ஒலிகடல் உலகில் எட்டாண்டு உள்ளுயிர்க் கரிஷ்டம் சொல்வாய்.

(இ-ள்) துன்பத்தைக் கொடுக்கும் சுபாவத்தையுடைய எட்டாம் வீட்டிற்கு அதிபனும், இலக்கினாதிபனும் கூடி கேந்திரஸ்தானங்களாகி 1-4-7-10-ஆமிடங்களில் எங்கேனும் இருக்க, எட்டாம் வீட்டில் வேறு யாதேனும்

ஒரு கிரகமிருந்தால் பிறந்த குழந்தைக்கு எட்டுவருடத்திற்குள் அரிஷ்டம் உண்டென்று சொல்லுவாயாக எ-று. (83)

உள்ளலக் கினக்கோன் எட்டென்று ஓதுலக் கினத்துள் நிற்க
மெள்ளவே இந்தும் எட்டில் மேவிடப் பாவர் தானும்
தெள்ளும் அட்டமம் சன்மங்கள் இரண்டையும் செறிந்து நோக்கப்
பிள்ளைமெய்க்கு அரிட்டம் என்றே பேசினர் பெருமை யோரே.

(இ-ள்) இலக்கினாதிபன் எட்டாமிடமாகிய ஆயுள்பாவக இலக்கினத்தில் இருக்க, சந்திரனும் அந்த எட்டாமிடத்திலிருந்து அவ்விருவரையும் இலக்கினத்தையும் சனி பார்த்தால் பிறந்த குழந்தைக்குத் தோஷம் உண்டாம் எ-று.

இச்செய்யுளில் "உள்ள லக்கினமே ஆதி இருவர் லக்கினத்துள் நிற்ப" என்று பழைய பிரதிகளில் காணப்படுகின்றது. இதற்குச் சிலர் லக்கினாதிபதியும் இரண்டுக்குடையவனும் இலக்கினத்திலிருக்கவும் என்று பொருள் கூறுவர். அங்ஙனம் கூற அத்தொடர்மொழியில் பொருள் சிறப்பின்மையாலும், 1-2-க்குடையவர் இலக்கினத்தில் இருந்தால் அவரைச் சனிபார்த்தால் அரிஷ்டம் சம்பவிக்க ஏது இன்மையாலும் பின்வரும் ஜாதகாபரண வசனத்தை ஆதாரமாகக் கொண்டு "உள்ள லக்கினக்கோன் எட்டென்றோது லக்கினத்துள் நிற்க" எனத் திருத்தி அமைக்கப்பட்டதாகும்.

(வி-ரை) நிசாபதிர் லக்நபதே ஸகாசாச்சேத் அஷ்டமஸ்தஃ
க்ருசதாம் ப்ரயாதஃ க்ரூரைச்ச த்ருஷ்டச்ச சுபைர்
த்ருஷ்டோ வர்ஷத்வயாந்தே ஸ க்ரோதி ரிஷ்டம்.

(இ-ள்) ஜனன காலத்தில் சந்திரன் இலக்கினாதிபதியுடன் எட்டாமிடத்தில் இருந்து, க்ஷீணகலையுடன் பாவக்கிரகங்களின் பார்வையைப் பெற்றால் 2-வருடத்தில் அச்சிசுவுக்கு அரிஷ்டம் உண்டாகும் எ-று. (84)

பெருமை செறிதேள் சென்மமதாய்
பெரும்பா வர்கள்முன் ஆறில்உற
இருமை செறிபின் ஆறில்நல்லோர்
இருக்கின் அரிட்டம் இரவிஒன்றில்
உரிமை உடன்ஒன் பதில்இருக்க
ஒருவர் இவரைப் பாரார்ஏல்
அருமை உடனே உதித்திடும்சேய்க்கு
அரிட்டம் என்றே அறைவாயே.

(இ-ள்) விருச்சிகம் ஜனனலக்கினமாகி பாவர்கள் (அதிருசிய பாகமாகிய) முன் ஆறு ராசிகளிலும், சுபர்கள் (திருசிய பாகமாகிய) பின் ஆறு ராசிகளிலும் இருந்தால் சிசுவுக்கு அரிஷ்டமுண்டாகும். சூரியன் இலக்கினம் அல்லது ஒன்பதில் இருந்து சுபக்கிரக நோக்கமின்றி இருந்தால் சிசுவுக்கு அரிஷ்டமுண்டாகும் எ-று.

(வி-ரை) அத்ருச்யபாகே யதிபாபகேடா த்ருச்யேவிபாகே
சுபதாபவந்தி, ஸ்வர்யாநுநாமா தநுபாவகாமீ
ஜீவேத் ப்ரசூதோ அப்தக சப்தகம்ஹி. (ஜாதகாபரணம்)

(இ-ள்) அதிருசிய பாகமான இலக்கினஸ்புட பாகைமுதல் சப்தம ஸ்புட பாகைக்குள் பாவர்களும், திருசியபாகமான சப்தமஸ்புட பாகை முதல் இலக்கினஸ்புட பாகைக்குள் சுபர்களும் இருக்க, இராகு இருந்தால் சிசுவுக்கு அரிஷ்டமுண்டாம் எ-று.

சக்ரஸ்ய பூர்வா பரபாககேஷு க்ரூரேஷு ஸௌம்யேஷு
சகீடலக்நே, க்ஷிப்ரம்வி நாசம் முபைதி ஜாதக:

(பிருகஜ்ஜாதகம்)

(இ-ள்) சக்கர பூர்வ பாகமான அதிருசியத்தில் பாவர்களும், அபர பாகமான திருசியத்தில் சுபர்களும் இருக்க, கடக விருச்சிக லக்கினங்களில் பிறந்த சிசு உடனே அரிட்டத்தை அடையும் எ-று.

இங்கு 'கீட' சப்தத்திற்கு கடக விருச்சிகமென்று பொருள்கொள்ளப் பட்டிருக்கின்றது. சாராவளியில் விருச்சிக லக்நமென்றே கூறப்பட்டிருக் கிறது. ஜாதகாபரணத்தின் ஆசிரியர் எந்த இலக்கினத்தில் பிறந்தாலும் தோஷம் உண்டென்கிறார். சாராவளி நூலுடையார் கருத்தையே இந்நூல் ஆசிரியர் பெரும்பாலும் தழுவி கூறியிருக்கின்றார். இம்முறையில் ஜாதகா பரண நூலுடையார் இலக்கினத்தில் ராகு இருப்பின் தோஷமென்கின்றார்.

சக்ரஸ்ய பூர்வபாகே பாபாஸ் ஸௌம்யாஸ்ததேதரேசைவ
வ்ருச்சிக லக்நஜாதா கதாயுஷோ வஜ்ரமுஷ்டி யோகோஸ்மின்.

(சாராவளி)

(இ-ள்) இலக்கினம் விருச்சிகமாய் சங்கரபூர்வார்த்தமான அதிருசிய பாகத்தில் பாவர்களும், திருசியபாகத்தில் சுபர்களும் இருந்தால் குழந் தைக்கு அரிஷ்டமுண்டாகும் எ-று. (85)

அறையும் தகர்தேள் சன்மமதாய்
அட்ட மத்தில் கரியசனி
நிறையும் சுபர்கள் பார்வையின்றி
நிற்கில் அரிட்டம் சென்மத்தில்
இறைஆம் காரி சேய்இருக்க
ஏழில் சோமன் குறைந்திருக்க
நறைஆர் சுபர்கள் பாராரேல்
நவில்ஏழ் ஆண்டில் நலிந்துஇறுமே.

(இ-ள்) மேடம் விருச்சிகம் ஜனனலக்கினமாகி எட்டில் சனி சுபர்கள் நோக்கமில்லாதிருக்கில் குழந்தைக்கு அரிஷ்டமுண்டாகும். இலக்கினத்தில் சனி செவ்வாய் இருக்க, ஏழில் க்ஷீணசந்திரன் இருக்க, சந்திரன் இலக் கினத்தைப் பார்க்காமல் இருந்தால் சிசுவுக்கு அரிட்டம் உண்டாகும் எ-று.

(வி-ரை) க்ருசஃ சசாங்கஃ ஸ்மரகோ விலக்நே
மந்தார சுக்ரா குருத்ருஷ்டி ஹீநாஃ
விநாசநந்தே அப்தக ஸப்தகேந
குர்வந்திஜாதஸ்ய விசிச்சயேந. (ஜாதகாபரணம்)

(இ-ள்) க்ஷீணசந்திரன் ஏழில் சப்தமத்தில் இருக்க, இலக்கினத்தில் சனி-செவ்வாய் இருந்து சுக்கிரன் குருபார்வை யில்லாவிடின் ஏழுவருஷத்திற்குள் அக்குழந்தைக்கு அரிஷ்டமுண்டாம் எ-று.

இச்செய்யுள் பன்னிரண்டு அடிகளில் 7-ல் சந்திரன், லக்கினத்தில் சனி என்றிருந்த பிரயோகம் இந்தச் சுலோகத்திற்கு ஏகதேசமாக ஒத்து இருந்தபடியால் இச்சுலோகக் கருத்தைத்தழுவியே இச்செய்யுளை திருத்தப் பட்டது என்றறிக. (86)

## சந்திர கிரகண கால் ஜனனபீடை

இறுமாந்து உறும்வெண் மதிக்கு ஒருபால்
இயாவர் ஏனும் உறஒரு பால்
கறைவாள் அரவம் எதிர்த்து மதிக்
கலைமேல் நடக்கும் தடமாக
நிறைவாம் சசிவாள் அரவிரண்டு
நில்லார் அன்றி அந்நேரம்
அறைஆ லையினில் கரும்பு என்ன
அவிர்க்கத் திரியால் அறுஞ்சிறுவன்.

(ப-ரை) இறுமாந்து உறும் வெண்மதிக்கு ஒருபால்-மிகமகிழ்ச்சியுடன் இருக்கின்ற வெண்மையான பிரகாசத்தையுடைய சந்திரனுக்கு ஒரு பக்கத்தில், இயாவர் எனும்உற-ஏதாவது ஒரு கிரகம் இருக்க, ஒருபால்-மற்றொரு பக்கத்தில், கறை வாள் அரவம் எதிர்த்து - விடந்தங்கிய கூரிய பல்லையுடைய இராகு கேதுக்களில் ஒருவர் இருந்து சந்தித்து, மதிக் கலைமேல் நடக்கும் தடமாக - சந்திரனுடைய கிரணப் பிரகாசத்தை மறைத்துச் செல்லும் மார்க்கத்தில், நிறைவு ஆம் சசி-கலைமுற்றிய பூரண சந்திரனும், வாள் அரவு இரண்டும்-இராகு கேதுக்களில் ஒருவரும் ஆகிய இருவர்களும், நில்லார்-நிலைபேறாக இருக்காமல் அதிசீக்கிரத்தில் விலகிப்போவார்கள். (ஆதலால்) அன்றி அந்நேரம்-அந்தச் சந்திர கிரகண சமயமாகிய சொற்ப காலத்திற்குள் பிறந்தகுழந்தையானது, அறை ஆலையினில் கரும்பு என்ன-சொல்லப்பட்ட ஆலைவாயில் இட்ட கரும்பைப்போல கிரகணதோஷ சம்பவத்தினால், அவிர்க் கத்திரியால் அறும் சிறுவன்-கத்திரி என்னும் ஆயுதத்தினால் அறுப்புண்டு மரணமாகும் எ-று.

(வி-ரை) தருவும் மணியும் இருநிதியும் தண்ணங் கமல மலர்த்தவிசின்
திருவும் உயிர்த்த பாற்கடலின் தெள்ஆர் அமுதத்து உடன்பிறந்தாய்
பெருவெண் மதியே நீஉறைதல் பெம்மான் மௌலி கதிர்அமிழ்தின்
உருவம் அனங்கன் உறவுஒன்றும் விடுத்தியேல் மற்றுஉனை நிகர்ஆர்.
(நைடதம்)

எனவரும் பிரமாணத்தினுல் ஐந்தருவு, சிந்தாமணி, இருநிதி, திருமகள் இவைகள் தோன்றிய பாற்கடலில் அமிர்தத்துடன் பிறந்து, பரமசிவனுடைய சடை முடியை இருப்பிடமாகக்கொண்டு, அமிர்தகிரண சொரூபனாய் விளங்குதலின் சந்திரனை "இறுமாந்து உறும் வெண்மதியம்" எனக் கூறினார் என்றறிக 'இறுமாந்துறும் வெண்மதியம்' என்பதற்கு கலை நிரம்பிய சந்திரன் எனினும் ஒக்கும். இதுவன்றி "ஒருபுறம் கறைவாள் அறவும்" எனக் கூறியிருத்தலின் சந்திரக்கிரகணகாலமென்பது நன்கு போதரும். ஆகவே சந்திரக்கிரகணம் பௌர்ணமி காலத்திலேயே உண்டாகுவது இயல்பாதலாலும், இச்செய்யுள் 3-வது அடியில் "நிறைவாம் சசி" என்றுரைத்திருத்தலாலும் பூரணச்சந்திரன் என்பதில் எட்டுணையும் சந்தேகமே இல்லை.

மற்றும் இதற்கு,

> ஆதிபகவன் தனது ஊடல் தணிப்பான் பணியும் அவ்விறைவன்
> பாதம் இறைஞ்சும் அதற்கும்நெற்றி பகையும் அல்குல் பகையாம்
> சீதமதியும் அறவும் விழும் செயற்கும் உவகை கொளாமல்அலை
> மாதுபணியும் அதற்கே மனம் மகிழும் உமையை வணங்குவாம்.
>
> (பிரபுலிங்கலீலை)

எனவரும் சிவப்பிரகாசசுவாமிகள் திருவாக்கினுல் சந்திரன் உமாதேவியாருடைய நெற்றியிலுள்ள புருவமானது தனது பிறைபோல வளைந்திலலை என இகழ்ந்து இறுமாந்திருக்கின்றுனென்றும் பொருள் கூறலமையும்.

சசி = சசத்தையுடையது சசம்-முயற்களங்கம், அதனை யுடையவன் சந்திரன் என்பதாம். இதனை "முயலிருக்கும் பிறையோடும் புயலிருக்கும் சடைமுடியும் மூன்று கண்ணும்" எனவரும் வேலூர் ஸ்ரீ அமிர்தலிங்க சுவாமிகள் நான்மணிமாலை சிறப்புப்பாயிரத்தினுல் அறியலாம்.

> பூமேஸ் சாயாம் ப்ரவிஷ்டஃ ஸ்தகதி யதி
> சசிநம் சுக்லபக்ஷாவஸாநே
> ராஹுர் ப்ரஹ்ம ப்ரஸாதாத் மதிகதவரஸ்
> தத் தமோவ்யாஸ துல்யஃ
>
> (ஸ்ரீபதியாசார்யர்)

என்ற சுலோக வசனத்தினுல் அமிர்தமதனத்தின்கண் உண்டானபகையை முன்னிட்டு, பிரமனை நோக்கித் தவங்கிடந்து வரம்பெற்று கிரகணகாலங்களில் பூமிச்சாயையில் பிரவேசித்துச் சூரிய சந்திரர்களை தமோகிரகங்களாகிய இராகு கேதுக்கள் சிறிதுநேரம் மறைத்துச் செல்லுகின்றார்களாதலின் "மதிக்கலைமேல் நடக்கும் தடமாக" என்றும், மறைத்து உடனே விலகிவிடுகின்றமையால் "சசிவாள் அரவு இரண்டும் கில்லார்" எனவும் கூறினார் என்க. இச்செய்யுளின் உண்மைப்பொருள் இவ்வாறிருப்ப இதனை உற்றுணராது 2-வது அடியில் "கறைவாள் அரவு" என்றிருக்கவேண்டியதை "கறைவாழ் அரவு" எனவும் 3-வது அடியில் "சசிவாள் அரவு" என்றிருக்கவேண்டியதை "சசிவாழாவு" என்றும் கொண்டு மயங்கி பொருள் கூறி இடர்படுவர் சில்லோர் என்க.

அமாவாசையில் சந்திரன் பூமிக்கும் சூரியனுக்கும் மத்தியில் இருப்பதனுல் சந்திரனுல் சூரியபிம்பம் மறைக்கப்படும் இதனுல் இது சூரியகிரகணம்

எனப்படும். பௌர்ணமியில் பூமியானது சூரியனுக்கும் சந்திரனுக்கும் மத்தியில்வர பூமியின் எதிர்ப்புறத்தில் சூரியனுடைய பிரகாசத்தால் உண்டாகின்ற நிழலால் சந்திரபிம்பம் மறைப்படும். இதனால் இது சந்திரகிரகணம் எனப்படும். சந்திரகிரகணம் சிலசமயம் இராகுவினாலும், சிலசமயம் கேதுவினாலும் சம்பவிக்கும் இராகுவால் சம்பவிக்கின் இராகு கிரஸ்தமென்றும், கேதுவால் சம்பவிக்கின் கேதுகிரஸ்தமென்றும் சொல்லப்படும். இது பற்றியே இச்செய்யுளில் இராகு கேது என்று கூறாமல் பொதுவாக அரவு என்று கூறினர் ஆசிரியர் என்க. சந்திரகிரகணகாலத்தில் சந்திரனுக்கு ஒருபுறம் அரவுகளில் ஒருவர் இருக்க, மற்றொருபுறம் எவரேனும் இல்லாதிருந்தால் அப்போதுபிறந்தால் இவ்விததோஷம் கிடையாது என்றறிக.

சிறுவன் உதித்த இலக்கினத்தில்
தேய்ந்த பிறையும் பாவிகளும்
அறிவாம் நான்குஏழ் பத்தெட்டில்
அடைந்து பாவர் தானிருக்க
உறுகேந் திரத்தைச் சுபர்பாராது
ஒழியில் குழவிக்கு உறும்அரிட்டம்
பேறுகர்க் கடகந் தேள்உதயம்
ஏழில் பாவர் பெறில்பிணியாம்.

(இ-ள்) இலக்கினத்தில் தேய்பிறைச் சந்திரன் பாவருடன் இருக்க, 4-7-8-10 ஆகிய இடங்களில் பாவர்கள் இருந்து சுபர்கள் இலக்கினத்திற்குக் கேந்திரத்தில் இல்லாதிருந்தால் குழந்தைக்கு அரிஷ்டமுண்டாகும் கடகம் விருச்சிகம் இலக்கினமாய் (இலக்கினமுதல்) ஏழாமிடம் வரை பாவர்கள் இருக்க (பாவர்கள் ஏழாமிடமுதல் 12-மிடம் வரை இருந்தால்)குழந்தைக்கு அரிஷ்டமுண்டாகும் எ-று.

(வி-ரை) லக்நே குளீரே அப்யதவா அலிஸம்க்ஞே
கலக்ரஹாஃ பூர்வதலே யதிஸ்யுஃ
ஸௌம்யஃ பாரர்தே கலுவஜ்ரமுஷ்டிர்
யோகோய யுக்தஃ ப்ரகரோதி ரிஷ்டம் (ஜாதகாபரணம்)

(இ-ள்) கடகம் விருச்சிகம் இலக்கினமாகி பாவர்கள் அதிருசியத்திலும், சுபர்கள் திருசியத்திலும் இருந்தால் வஜ்ஜிரமுஷ்டியோகம் எனப்படும். இதில் குழந்தை பிறந்தால் ஜீவித்திருக்காது எ-று. இந்தக்கருத்தை ஈற்று அடியில் விளக்கினர் ஆசிரியர் என்பது நன்கறியப்படுதலின் "பெறுமீன்" என்பதை நீக்கி "பெறுங்கர்க்கடகம்"எனத் திருத்தப்பட்டது முன் 14-வது கவியில் விருச்சிகத்தைக் கூறி கடகத்தைக் கூறாது விடுத்தமையால் இச் செய்யுளின் ஈற்றடியில் குறிப்பாக விளக்கினர் ஆசிரியர் என்றறிக.

லக்நே க்ஷீணே சசிநி நிதநம் ரந்த்ர
கேந்த்ரேஷு பாபைஃ

என்ற வராகமிகிராசார்யர் வசனத்தினால் அதாவது: இலக்கினத்தில் க்ஷீணசந்திரன் இருக்க, அஷ்டமம், 1-4-7-10 ஆகிய கேந்திரங்களில் (சுபர் இன்றி) பாவர்கள் இருந்தால் குழந்தைக்கு அரிஷ்ட முண்டென்று அறியப்

படுதலாலும், இந்த 17-வது செய்யுளில் சிறுபான்மையன்றி பெரும்பாலும் இக்கருத்தே காணப்படுதலாலும் இச் சுலோகக்கருத்தைத் தழுவி இச் செய்யுளின் முதன் மூன்று அடிகளிலுள்ள கருத்தைத் திருத்தப்பட்டதென்றறிக. (88)

பிணிஆறு ஏழில்*பாவரும்ஆய் பெரும்சென் மத்தில் இரவிஉறத்
துணிஆம் எட்டுஆம் இடத்தின்கேந் திரத்தில் பாவர் சூழ்ந்துஇருக்க
அணிஆர் குழவி உடன்தாய்க்கும் அரிட்டம் செவ்வாய் சனிகோணம்
பணிஆர் மதியைப் பொன்பாராது இருக்க அரிட்டம் பாலனுக்கே.

(இ-ள்) இலக்கினத்திற்கு ஆறு ஏழாமிடங்களில் பாவர்களும், இலக்கினத்தில சூரியனும், எட்டாமிடத்தின் கேந்திர ஸ்தானங்களாகிய 2-5-8-11-ல் பாவர்களும இருந்தால் குழந்தையுடன் தாயாருக்கும் அரிஷ்டமுண்டாம். சனி செவ்வாய் 5-9-ல் சந்திரன் இராகு கேதுக்களுடன்கூடி சுபர் திருஷ்டியில்லாமலும் இருந்தால் குழந்தைக்குமாத்திரம் அரிஷ்டம் உண்டாகும் எ-று. (89)

பால வெள்ளை மதியம்ஒடு பயின்சன் மத்தும் பாவர்உற
ஆலும் குழவிக்கு அரிட்டமதாம் இரவி ஆறில் அதற்குஏழில்
சாலச் செவ்வாய் சனிநிற்கத் தகப்பன் சிறுவன் உடன்இறுவர்
நாலும் தேய்ந்த மதிபாவர் நடுஆ யில்தாய்ச் சீவனும் போம்.

(இ-ள்) சந்திர இலக்கினம் ஜனனலக்கினத்தில் பாவக்கிரகங்கள் இருக்கக் குழந்தைக்கு அரிஷ்டமுண்டாம். சூரியன் ஆறிலும், செவ்வாய் சனி அதற்கு ஏழாமிடமாகிய பன்னிரண்டாமிடத்திலும் இருக்கத் தந்தையும் குழந்தையும் இறப்பார்கள். இந்த யோகத்துடன் தேய்பிறைச் சந்திரன் பாவர்மத்தியில் இருந்தால் தாயும் மரணமாவாள் எ-று.

(வி-ரை) "பாலவெள்ளை மதியம்" என்பதற்குச் சிலர் தேய்பிறைச் சந்திரன் என்பர். அது பொருத்தமாகாது. (90)

போமே ஆறுஆம் இடப்பிறைக்கு ஏழ்
பொருந்திச் செவ்வாய் சனிநிறக
ஆமே தாய்பிள்ளைக்கு அரிட்டம்
அடர்சென் மத்தில் பாம்புசனி
தாம்ஆர் நான்கில் சேய்ஏழில்
தபனன் உறில்சாற் றும்மரணம்
கோமார் சனிசெவ் வாய்ஏழில்
குழவிக்கு அரிட்டம் சொல்வாரே.

(இ-ள்) ஆறுமிடத்திலிருந்த சந்திரனுக்கு, ஏழாமிடமாகிய 12-ல் செவ்வாய் சனி இருந்தால் தாயாருக்கும் குழந்தைக்கும் அரிஷ்டமுண்டாம் இலக்கினத்தில் இராகு-கேது-சனி இவர்கள் இருக்க, நான்கில் செவ்வாயும் ஏழில் சூரியனும் இருந்தால் (முன்போல) தாயாருக்கும் குழந்தைக்கும் மரணமுண்டாகும். ஏழில் செவ்வாய் சனி இருந்தால் குழந்தைக்குமட்டும் அரிஷ்டம் உண்டாம். (91)

வார்ஆர் முலைஆய் சன்மம்எட்டாம்
மனைக்குஆறு ஏழ்எட்டுஒடு வியத்தில்
கூர்ஆர் பாவர் தேய்பிறையைக்
கூட அதற்கு நான்குஎட்டில்
ஒர்ஆர் பாவர்உறில் குழவிக்கு
அரிட்டம் பன்னொன்று ஒன்பதினில்
கார்ஆர் சனிசெவ் வாய்பாம்பு
கலந்துற் றுலும் கடிதுஅரிட்டம்.

(இ-ள்) இலக்கினம் எட்டாமிடங்களுக்கு 6-ஆறு 7-ஏழு 8-எட்டு 12-வியம ஆகிய இந்த ஸ்தானங்களில், பாவர்கள் தேய்பிறைச் சந்திரனுடன் கூடியிருக்க, அதற்கு 4-நான்கு, 8-எட்டில் பாவர்கள் இருந்தால் குழந்தைக்கு அரிட்டமுண்டாகும், 11-பதினொன்று 9-ஒன்பதில் செவ்வாய்-சனி-இராகு கேதுக்கள் இருந்தாலும், குழந்தைக்குச் சீக்கிரத்தில் அரிஷ்டம் உண்டாகும் எ-று. (92)

கடிய சன்மம் தனில்பிறையும் கவின்சுக் கிரனும் கலந்துநிற்க
நெடிய ஏழில் சனிநிற்க இஃதல் லாமல் நீள்சனியும்
கொடிய சசியும் ஒருகாலில் கூடி இருக்கச் சன்மத்தில்
படியும் பிறையைச் சுபர்நோக்காது இருக்கில் பாலன் தாயுடன்சாம்.

(இ-ள்) ஜனனலக்கினத்தில் சந்திரனும் சுக்கிரனும் கூடியிருக்க, ஏழாமிடத்தில் சனி நின்றாலும், இதுவன்றி கிரகமண்டலத்திற்கெல்லாம்மேலேயுள்ள சனியும், பாபசசந்திரனும் ஒரு நக்ஷத்திரபாதத்தில், இலக்கினத்தில் இருக்க இந்தச் சந்திரனைச சுபர்கள் பார்க்காதிருந்தாலும் தாயாருக்கும் குழநதைககும் அரிஷ்டம் உண்டாகும் எ-று.

(வி-ரை) இச்செய்யுளில் இரண்டுவகை அரிஷ்டயோகம் கூறப்பட்டிருப்ப, சிலர் ஒரே அரிஷ்டயோகமெனப் பொருள் கூறுவர். அங்ஙனம் கூறுதல் எட்டுணையும் பொருந்தாதென்க. (93)

காணும் கேதும் கரும்பாம்பு கருதும் நான்கில் உற்றிடவே
மாணும் குழவிக்கு உறுமரணம் ஆகும் ஒன்ப தாம்இடத்தில்
பானும் வியத்தில் கோளஉறினும் பன்அங் காரி கதிர்உடனே
பூணும வியத்தில் உற்றிடினும் புதல்வன் தாதைஉடன்மரணம்.

(இ-ள்) இராகு கேதுக்கள் நான்காமிடத்தில் இருந்தால் குழந்தைக்கு அரிஷ்ட முணடாம் ஒன்பதாமிடத்தில் சூரியனும் பன்னிரணடாமிடத்தில் வேறுகிரகங்களும் இருந்தாலும், சனி சூரியனுடன் கூடி பன்னிரண்டாமிடத்தில் இருந்தாலும் தகபபனுக்கும் குழந்தைக்கும் அரிஷ்டமுண்டாகும்.

(வி-ரை) சதுஷ்டய கதோ ராஹுஃ பாபையதி க்ஷீதே
ஜாதஸ்ய மரணம் ததயாத் தசாப்தே ஷோடசேதவா.

(ஜாதகானுபவ தருப்பணம்)

*ராஹுஸ்ர்பவேஜ் ஜந்மனி கேந்த்ரவர்த்தி*
*க்ரூரக்ரஹைஹச்சாபி நிரீக்ஷிதச்சேத்*
*கரோதிவர்ஷைர் தசபிர்விநாசம்*
*வதந்திவா ஷோடசபிச்ச கேசித்.*

இவ்விரு வசனத்தில் முதல்வசனம் 4-ல் ராகுயிருக்க எனவும், 2-வது வசனம் கேந்திரத்தில் ராகு இருக்க எனவும் கூறப்பட்டிருக்கின்றது. ஆகவே நான்காமிடமென்று கொள்ளாமல் கேந்திரம் என்று கொள்ளுதலே சிறப்பாகும். (94)

**மரணம் ஐந்தில் கதிர்மதியும் மந்தன் செவ்வாய் உடன்கூடி**
**கிரணம் உற்றே இருந்தக்கால் கேளாய் குழவி பிதாமரணம்**
**முரண்ஆம் அசுர குருஎட்டில் மூன்றில் பாவர் உடன்இருக்கத்**
**திரம்ஆம் பாவர் நோக்கும்உற சேய்க்கும் அரிட்டம் செய்திடுமே.**

(இ-ள்) ஐந்தாமிடத்தில் சூரியன்-சந்திரன்-செவ்வாய்-சனி இவர்கள் கூடி பிரகாசத்தோடு இருக்கின் குழந்தையும் தகப்பனும் மரணமாவர். சுக்கிரன் மூன்று அல்லது எட்டாமிடத்தில் பாவர்களுடன் இருந்தாலும், பாவர்களால் பார்க்கப்பட்டாலும் குழந்தைக்கு அரிஷ்டமுண்டாகும் எ-று.

(வி-ரை) சூரியனுடன் கிரகங்கள் கூடின் அஸ்தமனத்தைப் பெறுவர். ஆகவே அஸ்தமனதோஷத்தை அடையாத சந்திரன்-செவ்வாய்-சனி-இவர்கள் சூரியனுடன் ஏகராசியில் இருந்தால் என்பதைக் குறிப்பிடும் பொருட்டு "கிரணம் உற்றே இருந்தக்கால்" என்றார் ஆசிரியர் என்றறிக. இவர் இதைதகுப் பலமாக இருந்தால் எனப் பொருள்கூறுவர். அது எட்டுணையும் பொருந்தாது.

*சொல்லிய குசாதிபஞ்சக் கிரகங்கள் தானே*
*சூரியனை அடுக்கமுன்பின் நின்றால்கன மூடம்*
*புல்லியசேய் பதின்எழு புந்திபதின் மூன்று*
*பொருந்துகுரு பதின்ஒன்று வெள்ளிஒன்பது ஆகும்*
*நல்இயல்யாம் காரிக்குப் பதினைந்து பாகை*
*நயந்து இதற்குள் நிறைக்கால் அத்தமனம்ஆகும்*
*மெல்லியசெம் பஞ்சினையும் வனசமலர் இனையும்*
*மிகுத்திடுபேர்ஆச்சரிய மெல்லடி அஞ்சுகமே.* (ஜாதகசிந்தாமணி)

எனவரும் செய்யுள் வசனத்தினால் சூரியனுச்கு முன்பு அல்லது பின்பு 17-பாகைக்குள் செவ்வாயும், பதினைந்து பாகைக்குள் சனியும், 12-பாகைக்குள் சந்திரனும் இருந்தால் அத்தமனமாவர். ஆகவே இந்தவண்ணம் அத்தமனம் இல்லாதிருத்தல் வேண்டுமென்பதை 'கிரணம் உற்றே' என்று விளக்கினர் என்க. (95)

**செய்யும் பரிதிக்கு எட்டுஅதனில் செவ்வாய் மந்தன் உடன்கூடி**
**உய்யும் சுபர்கள் நோக்கம்இலாது உற்றால் பிதாவுக்கு உறுமரணம்**
**பைய மதிக்குஏழ் எட்டில்நவம் பண்புஆம் இடத்தில் பாவர்களும்**
**ஐயம் அறவே இருந்தக்கால் ஆகும் குழவி பிதாஇறுமே.**

(இ-ள்) சூரியனுக்கு எட்டாமிடத்தில் செவ்வாய் சனி கூடி, சுபக்கிர கங்கள் நோக்கம் இல்லாமல் இருந்தால் பிதாவுக்கும், சந்திரனுக்கு 7-எழு, 8-எட்டு, 9-ஒன்பதாமிடங்களில் பாவர்கள் பலிஷ்டர்களாக இருந்தால் குழந்தைக்கும் பிதாவுக்கும் அரிஷ்டம் உண்டாகும் எ-று. (96)

**இறுமே பாவர் உடன்உதயத்து இருந்த மதியின் கிராணம்எனின்**
**உறுமே சென்மம் எட்டிற்சேய் உற்ருல் குழவி தாய்மரணம்**
**பெறுமே பரிதி கிராணம்இதில் பேசும் பாவர் உடன்உதயத்து**
**உறவே எட்டாம் இடம்செவ்வாய் உற்ருல் குழவி தாய்மடிவர்.**

(இ-ள்) இலக்கினத்தில் பாபக்கிரகங்களுடன்கூடி இருந்த சந்திரனைக் கிரகணம் பிடித்திருக்கும் சமயத்தில் பிறக்க, எட்டாமிடத்தில் செவ்வாய் இருந்தால் தாயும் குழந்தையும் மரணமாவர். இப்படியே இலக்கினத்தில் பாபக்கிரகங்களுடன் கூடியிருந்த சூரியனைக் கிரகணம் பிடித்திருக்குஞ் சமயத்தில் பிறக்க, எட்டாமிடத்தில் செவ்வாய் இருந்தால் தாயும் குழந்தையும் மரணமாவர் எ-று.

(வி-ரை) ஸோபப்லவே சசாங்கேஸக் க்ரூரே லக்நகே குஜாஷ்டமகே
ம்ருத்யுঃ மாத்ராஸார்தம் சந்த்ரவத் அர்க்கேஸச்ச்ரேண.
(ஜாதகானுபவ தருப்பணம்)

(இ-ள்) கிரகணத்துடன்கூடின சந்திரன் இலக்கினத்தில் பாவருடன் இருக்க, குஜன் எட்டாமிடத்தில் இருந்தால் தாயுடன் சிசு மரணமாகும். சந்திரனைப்போலவே கிரகணத்துடன் கூடின சூரியன் இலக்கினத்தில் பாவருடன் இருக்க, குஜன் எட்டாமிடத்திலிருந்தால் தாயுடன் குழந்தை மரணமாகும் எ-று.

கிஜோபராகேத் வசுபாங்விதேந்துர்
லக்நஸ்திதேபூமி ஸுதோஷ்டமஸ்தঃ
ததோஜநந்யா ஸஹபாலகஸ்ய
ம்ருத்யுஸ்ததார்கே ஸதிசஸ்த்ரகாதঃ (ஜாதகாபரணம்)

அசுபஸஹிதே க்ரஸ்தே சந்த்ரே குஜேகித நாச்ரிதே
ஜநநீஸுதயோர் ம்ருத்யுர் லக்நே ரவௌதுஸசஸ்த்ராஜঃ
(பிருகஜ் ஜாதகம்)

இரண்டு சுலோகங்களும் முதல் சுலோகத்தின் கருத்துடையனவே யாகும்.

க்ரஹணே பகதே சந்த்ரே ஸ்க்ரூரே லக்நகே குஜேஷ்டமகே
மாத்ராஸார்தம் ம்ரியதே சந்த்ரவத் அர்கேச சஸ்த்ரேண.
(சாராவளி)

க்ரஹணே சந்த்ரா சூர்யஸ்ய ப்ரசூதிர் யதிஜாயதே
வ்யாதிபீடா ததாஸ்த்ரீணாம் ஆதௌது ருதுதர்சநாத்.
(சௌனக சம்மிதை)

(இ-ள்) சூரிய சந்திர கிரணத்தில் குழந்தைப் பிறந்தாலும், முதல் ருதுவானாலும் வியாதி பீடை முதலிய துன்பத்தைத் தரும் என்பதாம்.

இத்தியாதி பிரமாணங்களைக் கொண்டு இச்செய்யுள் திருத்தப்பட்டு இருப்பதை சோதிட ஞான சூட்சுமதரிசிகள் நன்குணர்ந்து அங்கீகரிப்பர். ஏனையோர் இரண்டு சிங்கம், இரண்டு சனி என்று கூறியதுபோலவே இதனையுங் கூற முற்படுவர். (97)

பூராடம் முக்காலும் பூசத்து இடைஇரண்டும்
சீராகச் சித்திரையில் செல்அரையும்—ஓர்குலமூன்று
உத்திரத்துக் காலும் உயிர்இழப்பர் தந்தைதாய்
புத்திரனைப் பெற்றுஎடுத்த போது.

(இ-ள்) பூராடம் ரேவதிகளின் மூன்றும்பாதத்திலும், பூசம் சித்திரைகளின் இரண்டாம்பாதத்திலும், உத்திரம் முதற்பாதத்திலும் குழந்தை பிறந்தால் தாய் தந்தையர்க்கு அரிஷ்டம் உண்டென்பதாம் எ-று

(வி-ரை) சித்ராத்யர்தே புஷ்யமத்யே த்விபாதே
பூர்வா ஷாடாதி ஷ்ண்யபாதே த்ருதீயே
ஜாதஃ புத்ரச் சோத்தாரத்யே விதத்தே
மாதா பித்ரோர் ப்ராதரம் பாலநாசநம்.

த்விமாஸம் சோத்தராதோஷஃ புஷ்யே சைவத்ரிமாஸகஃ
பூர்வாஷாடா ஷ்டமேமாஸி சித்ராஷாண் மாஸிகம்பலம்.

(நிர்ணயசிந்து-வசிஷ்டர்)

(இ-ள்) சித்திரை - பூசங்களின் இரண்டாம் பாதத்திலும், பூராடம்-ரேவதிகளின் மூன்றும்பாதத்திலும், உத்திரத்தின் முதற்பாதத்திலும் குழந்தைப் பிறந்தால் மாதுரு-பிதுரு-சகோதரர் சந்ததிகளுக்குத் தோஷம் உண்டாம். உத்திரத்துக்கு 2-மாதமும், பூசத்திற்கு 3-மாதமும், பூராடம்-ரேவதிகளுக்கு 8-மாதமும், சித்திரைக்கு 6-மாதமும் தோஷம். அதுவரை தந்தை குழந்தை முகம் பார்க்கக்கூடாது. பின்பு சாந்திசெய்து பார்த்தல் வேண்டும்.

உத்தராபுஷ்யசித்ராஸு பூர்வாஷாடோத்பவஸ்யச
குர்யாச்சாந்திம் ப்ரயத்நேந நக்ஷத்ராகாரஜம்புதஃ
உத்தரே திலபாத்ரம் ஸ்யாத் புஷ்யகே கோதாந முச்யதே
அஜப்ரதாநம் த்வாஷ்ட்ரேஸ்யாத் பூர்வாஷாடேச காஞ்சநம்.

(இ-ள்) உத்திரம்-பூசம்-சித்திரை-பூராடம் இந்த நக்ஷத்திரத்தில் பிறந்தால் நக்ஷத்திர வடிவமாக சாந்தி செய்க. உத்திரத்திற்கு எள்ளுடன்கூடிய பாத்திரமும், பூசத்துக்குக் கோதானமும், சித்திரைக்கு ஆடு தானமும், பூராடம்-ரேவதிக்கு சுவர்ணதானமும் முக்கியமாகும் எ-று. (98)

பாலாரிஷ்டப்படலம் சம்பூர்ணம்.

---

# நட்சத்திர பொதுப் படலம்



## அசுவினி

செய்கருமம் வழுவாமல் செய்வன்மட வார்நேயன்
　　தியாகி தீரன்
பொய்சொல்லான் ஆபரணப் பிரியன்அற்ப கோபிபெறும்
　　புகழே உள்ளான்
துய்யவிழி சிவந்திருப்பன் மார்புஅகலம் உளன்சமர்த்தன்
　　தூயன் ஆகும்
ஐயம்இலா நெறிஉயர்ந் தேயிருப்பன் சாந்தன்அசு
　　பதியி னனே.

(இ-ள்) *அசுவினி நட்சத்திரத்தில் பிறந்தவன் செய்யப்பட்ட காரியங்களைத் தவறின்றிசெய்பவனும், ஸ்திரீகள்மேல் ஆசையுள்ளவனும், கொடை* (ஈகை) *யாளனும், மனத்தைரியமுடையவனும், பொய்சொல்லாதவனும், ஆபரணங்களை அணிவதில் ஆசையுள்ளவனும், சிறிது கோபமுள்ளவனும், சிறந்த கீர்த்தியை யுள்ளவனும், சிவந்த கண்களை யுடையவனும், பரந்த மார்பை யுடையவனும், சாமர்த்திய முள்ளவனும், சுத்த முடையவனும், நீண்ட நெற்றியை யுடையவனும், சாந்தனும் ஆவான் எ-று.*

(வி-ரை) *அர்த்தவாம்ச்சாபி சூரச்ச ஸுபகோ தாவல்லபஃ*
*தக்ஷஃ க்ரூரோ மஹாகாயச் சாச்விந்யாம் ஜாயதே நரஃ*
(யவன ஜாதகம்)

(இ-ள்) *அசுவினியில் பிறந்தவன் தனவான், வல்லமை யுடையவன், நேத்திரரோகி, தனுதிபதி, சாமர்த்தியமுள்ளவள், நல்ல சரீரமுடையவன் என்பதாம். "ப்ரிய பூஷணஸ் ஸுரூபஸ் ஸுபகோ தக்ஷாச்விந்யாம் மதிமாம்ச்ச" என்ற பிருகஜ்ஜாதகப்படி அசுவினியில் பிறந்தவன் பிரியமாய்ப் பேசுவோனும், அலங்காரப்பிரியனும், நல்ல அழகுடையவனும், சர்வஜனங்களுக்கும் பிரியமுடையவனும், சமர்த்தனும், புத்திமானும் ஆவன் என்று அறியப்படுகின்றது.* (99)

## பரணி

அன்னைபிதா வுக்குஇனியன் ஞானிஅற்ப நித்திரையன்
　　அற்ப கோபி
தன்மவான் ஐச்சுவரியன் மானபுகழ்க் கோனும்தாம்
　　பூல நேயன்
மன்னும்உரைத் திடன்உடம்பின் இடப்புறத்தின் மறுவன்
　　அரும் சமர்த்தன் ஆகும்
பன்னிஉரை யில்பிரியன் மோவாய்க்கட் டைச்சிறியன்
　　பரணி யானே.

(இ-ள்) பரணி நட்சத்திரத்தில் பிறந்தவன் தாய் தந்தையர்க்கு அன்புடையவனும், ஞானியும், சிறிது தூரம் தூங்குதலும், சிறிது கோபியும், தருமம்செய்பவனும், செல்வமுடையவனும், மானியும், புகழில்சிறந்தவனும், தாம்பூலப் பிரியனும், சொற்சாதுரியனும், சரீரத்தின்கண் வலதுபக்கத்தில் மறுவுடையவனும், வல்லமைசாலியும், மனைவிசொல்லில் பிரியமுடையவனும், சிறிய மோவாய்க்கட்டையுடையவனும் ஆவான் எ-று.

"பன்னி உரையில் பிரியன்' என்பதற்குச் சில "பெண்கள் சொற்களில் பிரியமுடையவன்" என்று பொருள் கூறுவர். அஃது பொருந்தாது. "தாருவனத் தெய்வ முனிவர் பன்னியர்தம், நிறைவன் றளந்து காட்டுகென செடியோன் மகனைப் பொடியாக்கும்" எனவரும் திருவிளையாடற் புராணத்தினால் இதனை நன்கறிக.

(வி-ரை) பரண்யாஞ்ச ப்ரவக்தாச ஹ்யரோகீ ஸுஸ்திரோபவேத்
ஸுப்ராஜ்ஞோ மதிமாம்ச்சைவ ஸத்யவாக்யோ த்ருடவ்ரதஃ
(யவன ஜாதகம்)

(இ-ள்) பரணியில் பிறந்தவன் சாஸ்திரங்களைச் சொல்லுவோனும், நோயில்லாதவனும், மனோ தைரியமுடையவனும், அனேக விஷயங்களை அறிந்தவனும், புத்திசாலியும், உண்மை விஷயங்களைப் பேசுவோனும், திடமான விரதமுடையவனுமாவான் எ-று.

மற்றும், "ச்ருதநிச்சய ஸத்யாருக்தக்ஷாஸ் ஸுகிதச்சபரணிஷு"

எனவரும் பிருகத்ஜாதகப்படி ஆரம்பித்த காரியங்கள் நிறைவேறும் வரையினும் திடநிச்சயமுடையவனும், யதார்த்தவாதியும், நோயில்லாதவனும், சதுரனும், துக்கமில்லாதவனும் ஆவான் என்று அறியப்படுகின்றது. (100)

### கார்த்திகை

கொள்ளும்ரச வர்க்கத்தில் பிரியன்அற்ப
நித்திரையன் கூறுஞ்செஞ் சொல்
தெள்ளியசா துரியன்பொய் சொல்லியுமே
பொருள்சேர்க்குந் திறத்தோன் புத்தி
உள்ளவன்மன் னர்க்கினியன் சன்மானன்
தேகபலம் உடைய கோமான்
கள்ளமனன் உரத்தின்மறு வழக்குரைக்குந்
துணிவான் கார்த் திகையினானே.

(இ-ள்) கிருத்திகை நட்சத்திரத்தில் பிறந்தவன் இனிப்பான வஸ்துக்களில் பிரியமுடையவனும், சிறிதுநேரம் தூங்குகின்றவனும், வெளிப்படையாகச் சொற்களை தெளிவாகப் பேசவல்லவனும், பொய்ப்பேசி பொருளைத் தேடவல்லவனும், புத்திமானும், அரசர்களுக்குப் பிரியனும், பிறரால் உபசாரம் பெறுவோனும், தேகவன்மையின் பெருமையிற் சிறந்தவனும், வஞ்சகமனத்தனும், மார்பில் மறுவுடையவனும், துணிவாக வழக்குகளைச் சொல்லுவோனும் ஆவான் எ-று.

(வி-ரை) தேஜஸ்வீ நீதிமாம்ச்சைவ பஹுபுக் ஜாவல்லபஃ
கம்பீரஃ குசலோமாநீ வஹ்நிநக்ஷத்ர ஜச்சுசிஃ

(யவன ஜாதகம்)

(இ-ள்) கிருத்திகையிற் பிறந்தவன் தேஜசுடையவனும், நியாய சாஸ்திரமுணர்ந்தவனும், போஜனப்பிரியனும், ஜனத்தலைவனும், காம்பீர்யமுடையவனும், சமர்த்தனும், அபிமான முடையவனும், பரிசுத்தனும் ஆவான் எ-று.

மற்றும், "பஹுபுக் பரதாரரதஸ் தேஜஸ்வீ க்ருதிகாஸு விக்யாதஃ" என்ற பிருகஜ்ஜாதகப்படி அதிக ஆகாரம் உட்கொள்ளுவோனும், அன்னிய ஸ்திரீகளிடத்தில் பிரியனும், தேககாந்தியுடையவனும், பிரசித்தனும் ஆவன் என்பதாம். (101)

## உரோகணி

நீரதிக தாகமுளன் சொன்னதுகேட் பான்புலவன்
நிருபன் ஆகும்
பாரின்அன்னம் இடுஞ்சீமான் இரும்புவியா பாரிநெய்பால்
பட்சம் உள்ளான்
நேரும்இரு விழிபருத்துப் புருவமும்சற் றேநெருங்கும்
நேயன் என்றும்
ஓரம்உரை யான்உள்ளங் கால்உரத்தோன் திடநடைரோ
கணியி னனே.

(இ-ள்) உரோகணி நட்சத்திரத்தில் பிறந்தவன் தண்ணீரை அதிகமாகப் பருகுவோனும், அன்னியர் சொல்லைக் கேட்பவனும், வித்துவானும் அரசனும், பசித்தோர்க்கு அன்னமிடும் செல்வமுடையவனும், இரும்பு வியாபாரம் செய்பவனும், நெய்-பால்-தயிர் முதலியவைகளை உண்பதில் பிரியமுடையவனும், விசாலமான கண் சிறிது நெருங்கிய புருவமுடையவனும், ஓரம் சொல்லாமல் நியாயத்தையே பேசுவோனும், வலுத்த உள்ளங்கால் உடையவனும், திடமாக நடக்க வல்லவனும் ஆவான் எ-று.

(வி-ரை) ஸுரூபஸ் திரதீர்மாநீ போகபாக் ஸுரதப்ரியஃ
ப்ரியவாக் சதுரோ ரக்ஷஸ் தேஜஸ்வீ தாத்ருதிஷ்ண்யஜஃ

(யவன ஜாதகம்)

(இ-ள்) ரோகணியில் பிறந்தவன் நல்ல வடிவமுடையவனும், ஸ்திரபுத்தியுடையவனும், அபிமானியும், சௌக்கியங்களை அனுபவிப்பவனும், இரதி (சிற்றின்பத்தில்) பிரியமிக்கவனும், பிரியமாகப்பேசுவோனும், சதுரனும், தீரமுடையவனும், தேஜசுடையவனும் ஆவான் எ-று.

மற்றும், "ரோஹிண்யாம் ஸத்யசுசி ப்ரியம்வதச் சிரமதிஸ் ஸுரூபச்ச" என்ற பிருகஜ்ஜாதகப்படி யதார்த்தவாதியும் அன்னியருடைய பொருள் அன்னியருடைய மனைவி இவைகளில் ஆசையில்லாதவனும், சாஸ்திர சம்மதமான ஆசாரங்களை அநுஷ்டிப்பவனும், மதுரமாகப் பேசுவோனும், நிச்சயமான புத்தியுடையவனும், நல்ல அழகுடையவனும் ஆவான் என்பதாம். (102)

## மிருகசீரிடம்

காலைமுழுக் குப்பிரியன் விசாலவிழி மயிர்அழகன்
கல்வி உள்ளான்
கோலியதின் தேகன்மன வன்மம்வெளி விடான்இனிய
கூத்தில் பாட்டில்
சாலவுஞ்சஞ் சாரன்ஆம் தாம்பூல நேயன்நினைத்
ததுமு டிப்பான்
வேலாருங் கரன்நெற்றி உயர்ந்திருக்கும் ஞானிகலை
சிரத்தி ஞனே.

(இ-ள்) *மிருகசீரிடநட்சத்திரத்தில் பிறந்தவன் காலையில் நீராடும் விருப்பமுள்ளவனும், பருத்தகண்களுடையவனும், மயிர் அழகுடையவனும் கல்வியுடையவனும், தேகபலமுடையவனும், மனத்திற்கொண்ட மர்ம (ரகசிய) ங்களை வெளியிடாதவனும், இனிமையான நாடகம், இசைத் தமிழ் களில் மிகவும் ஆசையுள்ளவனும் சஞ்சாரம் செய்வோனும், தாம்பூலப்பிரிய னும், நினைத்த காரியங்களை முடிக்கவல்லவனும், கையில் அம்புரேகையுள்ள வனும், உயர்ந்த நெற்றியுள்ளவனும் அறிவுளளவனும் ஆவான் எ-று.*

(வி-ரை) *உத்ஸாஹீ சபலோபீருர் தநீமாநீ ப்ரியச்சுசிঃ
ஆகமக்ஞঃ ப்ரபுர்தக்ஷச் சந்த்ரநக்ஷத்ர ஜோநரঃ*

(யவன ஜாதகம் )

(இ-ள்) *மிருகசீர்ஷத்தில் பிறந்தவன் உச்சாகமுடையவனும், சஞ்சல முடையவனும், பயமுடையவனும், தனவானும், அபிமானியும, எல்லோருக் கும் சிஷ்டனும், சாஸ்திரம் அறிந்தவனும், இராஜனும், சமர்த்தனும் ஆவான்.*

*மற்றும் "சபலச் சதுரோபீருঃ படுருத்ஸாஹீ தநீம்ருகேயோகீ"*

*என்ற பிருகஜ்ஜாதகப்படி சபலசித்தனும், பயசீலனும், பேசுதலில் சமர்த்த னும், உத்சாஹியும், தனவானும், போகவானும், ஆவான் என்பதாம்.* (108)

## திருவாதிரை

பொய்யுரைசொல் பவன்கீர்த்தி மான்தரித் திரன்நெடியன்
பொருத்து நோயன்
வெய்யசிலு கன்சுத்த வான்குஞ்சி அழகன்இரு
விழிசி வப்பன்
துய்யபல வான்கோபி உறவுடையன் உயர்ந்திருக்குந்
துண்ட முள்ளான்
ஐயம்அற உலகுதொழ ஒருமணியாய் விளங்கியஆ
திரையின் ஆனே.

(இ-ள்) *திருவாதிரை நட்சத்திரத்தில் பிறந்தவன் பொய்யுரைசொல் வோனும், கீர்த்தியுடையவனும், தரித்திரனும், நீண்டவடிவமுடையவ . ம், சனுக்களில் வியாதியுடையவனும், கொடிய சண்டைசெய்பவனும், சுத்த*

முடையவனும், தலைமயிர் அழகுடையவனும், இருகண்களும் சிவந்திருக்கப் பெற்றவனும், தேகபலமுடையவனும், கோபியும், பந்துக்களுடையவனும், உயர்ந்த மூக்குள்ளவனுமாவான் எ-று.

(வி-ரை) ஐயம் அற உலகு தொழ-சந்தேகமின்றி உலகத்துள்ளோர் வணங்குவதற்கு, ஒருமணிஆய்-ஒருமணியைப்போல, விளங்கு திருவாதிரை-பிரகாசிக்கப்பெற்ற திருவாதிரைநக்ஷத்திரம் என்பது பொருள் சாக்ஷாத் சிவபெருந்தகையார் திருவாதிரை நக்ஷத்திரத்தில் அவதரித்தமையால் "ஐயம் அற உலகு தொழ" என்று கூறினர் ஆசிரியர் என்க. "ஆதிரை ஒருமணி ஆயிழை ஒன்றரை" என்ற வசனப்படி திருவாதிரை நக்ஷத்திரம் ஒருமணியைப்போல் தனியே பிரகாசித்து வானவெளியில் விளங்கும் நக்ஷத்திரமாதல்பற்றி 'ஒருமணி' எனக் கூறினரென்றறிக.

அவிசார பரச்சூரோ நிபுணஃ க்ரயவிக்ரயே
கவிஹிம்ஸ்ரஃ க்ரூரதநுஃ க்ருதக்நச் சிவதிஷ்ண்யஜஃ

(யவன ஜாதகம்)

(இ-ள்) திருவாதிரை நக்ஷத்திரத்தில் பிறந்தவன் சிந்தையில்லாதவனும், சௌக்கிய முடையவனும், கிரய விக்கிரயங்களில் சமர்த்தனும், கோஹிம்சை செய்பவனும், குரூரமான சரீரமுடையவனும், செய்ந்நன்றி மறப்பவனும் ஆவான் எ-று.

மற்றும், "சடகர்விதௌ க்ருதக்நோஹிம்ஸ்ரஃ பாபச்சரௌத்ரர்க்ஷே" என்ற பிருகஜ்ஜாதகப்படி சடனும், அகங்காரமுடையவனும், ஒருவர்செய்த உபகாரத்தை மறப்பவனும், பிராணி இம்சை செய்பவனும், பாபகர்மனும் ஆவான் என்பதாம்.

சடசப்த லக்ஷணம் வருமாறு:—

மநஸாவசஸாயச்ச த்ருச்யதே கார்யதத்பரஃ
கர்மணாவிபரீதச்ச சடஸ்ஸத்பிரீர்யதே.

எனவரும் வசனத்தினால் சுயகாரியத்தை முன்னிட்டு மனதில் ஒன்றை நினைத்து மற்றொருவிதமாக வார்த்தையாடி அதற்கு மாறாக காரியத்தை முடிப்பதுடன் சடன் எனப்படுவான் என்க. (104)

## புனர்ப்பூசம்

திருந்தியசொல் சாதுரியன் அகங்காரி விசாலபுயன்
சிக்க னத்தன்
வருந்திநெடு வழிநடப்பன் கடினமொழி யான்கள்ளன்
மலர்போல் கையன்
பரிந்தகுண புத்திமான் பொய்சொல்லான் பித்தமுளன்
பலர்க்கு நேயன்
பொருந்தியஐந் தாம்வயதில் கான்முடமா வன்புனர்பூ
சத்தி னனே.

(இ-ள்) புனர்ப்பூச நட்சத்திரத்தில் பிறந்தவன் திருத்தமாகப் பேச வல்ல சாமர்த்தியனும், அகங்காரியும், பருத்த தோள்களையுடையவனும், அழுத்தமுடையவனும், கஷ்டப்பட்டு அதிகதூரம் நடப்பவனும், கடினமாகப் பேசுவோனும், திருடனும், மிருதுவான கையை யுடையவனும், அன்பான குணமுடைய புத்திமானும், பொய்சொல்லுவோனும், பித்தாதிக தேகமுடையவனும், பலருடன் சிநேகம் செய்பவனும், ஐந்தாம் வயதில் கால் முடமாவோனும் ஆவான் எ-று.

பித்தமுடன் என்றிருப்பதை பித்தமுளன் என திருத்தப்பட்டது. இரண்டாம் அடியில் 'கள்ளன்' எனக்கூறி, மூன்றும் அடியில் 'பொய்சொல்லான்' என்று கூறப்பட்டிருப்பது பொருத்தமுடையதாகக் காணப்படவில்லை. அஃது 'பொய் சொல்வான்' என்றிருப்பதே சாலப் பொருத்தமாகும் என்பதை அறிவுடைப் பெரியோர் அறிவார்கள் என்ப.

(வி-ரை) துர்மேதா வாக்தர்சகீயஃ பரஸ்த்ரீ கார்ய நைபுணஃ
ஸஹிஷ்ணுரல்ப ஸந்துஷ்டச் சீக்ரகோ திதிஷ்ண்யஜஃ

(இ-ள்) புனர்வசு நட்சத்திரத்தில் பிறந்தவன் கெட்டபுத்தி யுடையவனும், பார்ப்பதற்கு நல்ல சரீரமுடையவனும், அன்னியஸ்திரீகளுடைய கார்யங்களை நன்ருய் பார்ப்பதில் நிபுணனும், சிரமங் கொடுப்பவனும், சொல்பத்தில் சந்தோஷிப்பவனும், வேகமாக நடப்பவனுமாவான் எ-று. மற்றும் "தாந்தஸ்ஸுகீ ஸுகீலா துர்மேதா, ரோகபாக் பிபாஸுச்ச, அல்பேநச ஸந்துஷ்டஃ புநர்வஸௌ ஜாயதே மநுஜஃ" என்ற பிருகத் ஜாதகப்படி தபத்தினுல் உண்டாகும் சிரமத்தைப் பொறுத்துக்கொள்பவனும், சுகமுடையவனும, சத்துவகுண முடையவனும், சரீரத்தைப் பாதுகாப்பவனும், நோயுடையவனும், மிகவும் தப்பு செய்பவனும், சொல்பலாபத்தினுல் சந்தோஷிப்பவனும் ஆவான் எ-று. (105)

## பூசம்

வாசியுடை யவன்வழக்கை உரைத்திடுகள் வன்குத்ர
வசனம் உள்ளன்
நேசமுடன் மாதாவைத் தந்தையைரட் சித்திடுவன்
நெடிய ருபன்
தேசுஒழுக்கம் தனவான்கண் மூக்கழகன் பசிபொருன்
திகழும் சாந்தம்
பூசிமுடிக் கப்பிரியன் குணவான்பாக் கியமுளன்பூ
சத்தி ளுனே.

(இ-ள்) பூசநட்சத்திரத்தில் பிறந்தவன் அசுவவாகனமுடையவனும் வழக்கைச் சொல்லும் கள்ளனும், வஞ்சகச்சொல்லுடையவனும், தாய் தந்தையர்களை அன்பாய்க் காப்பாற்றுவோனும், நீண்ட உருவமுள்ளவனும், அழகு ஆசாரமுள்ளவனும், தனவானும், அழகிய கண் நாசிகளை யுடையவனும், பசி பொறுக்காதவனும், சுகந்த வஸ்துக்களை தரிப்பதில் பிரியமுடையவனும், நற்குணமுடையவனும், செல்வமுடையவனுமாவான் எ-று.

(வி-ரை) அதிகாமி ஸுபுஷ்டச்ச சஞ்சலஸ்ஸ்திர தீச்சுசிஃ
புஷ்ய நக்ஷத்ரஸம்ஜாதஸ் ஸர்வசாஸ்த்ர விசாரதஃ

(யவனஜாதகம்)

(இ-ள்) பூசாநக்ஷத்திரத்தில் பிறந்தவன் அதிககாமியும், அதிக பலமுடையவனும், தைரியமில்லாதவனும், ஸ்திரபுத்தியுடையவனும், பரிசுத்தனும், சகல சாஸ்திர சமர்த்தனுமாவான் எ-று மற்றும் "சாந்தாத்மா ஸுபகஃ பண்டிதோ தநீ தர்மஸம்ச்ரிதஃ புஷ்யே" என்ற பிருகஜ்ஜாதகப்படி சம தம பராஜி தேந்திரியனும், சர்வஜனப் பிரியனும், சாஸ்த்திரார்தக்ஞனும், தனவானும், தர்மரதனும் ஆவான் என்றறிக. (106)

## ஆயில்யம்

செஞ்சொற்சா துரியன்சத் துருநேயன் மனதுக்கன்
திரிவான் காட்டில்
பஞ்சைபோல் சிறுதின்றி தின்பன்அன்னை பிதாக்கினியன்
பத்தி உள்ளான்
வஞ்சகமில் லாதுஎவர்க்கும் எளிதஞ்சொல் வன்சுகவான்
வலிமையோ ருக்கு
அஞ்சிடான் விழிபுருவம் உயர்ந்துஒதுங்கி இருக்கும்ஆ
யிலியத் தானே.

(இ-ள்) ஆயில்யநட்சத்திரத்தில் பிறந்தவன் செழுமையாகப் பேசும் சாமர்த்தியமுடையவனும், விரோதிகளையும் சினேகமாக்குவோனும், மனத்தில் துக்கமுடையவனும், காட்டில் திரிவோனும், தரித்திரனைப்போல சிற்றுண்டி அதிகமாகப் புசிப்பதில் பிரியமுடையவனும், தாய்தந்தையர்கட்கு அன்புடையவனும், தெய்வபக்தியுடையவனும், வஞ்சகமின்றிப் பலரையும் எளனம் (இகழ்ச்சி) செய்வோனும், சுகமுடையவனும், தன்னிலும் அதிகப்பட்ட வலிவுள்ளவர்க்கும் பயப்படாதவனும், கண்ணும் நெற்றியும் உயர்ந்து ஒடுங்கி இருப்பவனுமாவான் எ-று.

(வி-ரை) ஸுரூபஸ் ஸுபகஃ க்ரூர ப்ரஸ்த்ரீ தத்பரச் சடஃ
அவஸ்தா வ்யஸநாக் ராந்தஸ் ஸார்ப்ப நக்ஷத்ரஜோநரஃ

(யவன ஜாதகம்)

(இ-ள்) ஆயில்யநக்ஷத்திரத்தில் பிறந்தவன் நல்ல வடிவமுடையவன், நல்ல சௌபாக்யமுடையவன், அன்னிய ஸ்திரீகள்மீது விருப்பமுடையவன், இரகசியமாக பாபங்களைச் செய்பவன், நன்றாகப் பேச அறியாதவனும், விசனத்தினால் பீடிக்கப்பட்டவனாவான் என்றறிக. மற்றும் "சடஸர்வபக்ஷ பாபாக்ருதக்ன தூர்தௌச பௌஜங்கே" என்ற பிருகஜ்ஜாதகப்படி குற்சிதனும், பிறரை மோசம்செய்து பொருளை சம்பாதிப்பவனும், பாபகாரியங்களைச் செய்பவனும், ஒருவர் செய்த உபகாரத்தை மறப்பவனும், பிறரை வஞ்சிப்பதில் சமர்த்தனும் ஆவான் என்றறிக. (107)

### மகம்

இலவுமுருக்கு அலர்விழியும் தொண்டைதூ துனேபோல்செவ்
இதழ்ஆர் மாதே
பலதிசையில் சஞ்சாரப் பிரியமுளன் சௌந்தரியன்
பாண்மி குந்த
புலவன்முழுக் குப்பிரியன் சுகந்தபரி மளப்பிரியன்
பொன்னும் உள்ளான்
வலதுபுறம் மறுஉடையன் நியாயன்அற்ப நித்திரையன்
மகத்தி ஞனே,

(இ-ள்) மகாநட்சத்திரத்தில் பிறந்தவன் பலதிக்குகளிலும் சஞ்சாரம் செய்வதில் பிரியமுள்ளவனும், அழகில் சிறந்தவனும், இசைத்தமிழில் வல்ல வித்துவானும், நீரில்மூழ்கிக் குளிப்பதில் விருப்பமுள்ளவனும், நல்ல வாசனை வஸ்துக்களில் பிரியமுடையவனும், செல்வமுள்ளவனும், வலதுபக்கத்தில் மச்சமுடையவனும், சொற்ப நித்திரை செய்வோனும் ஆவான் எ-று.

(வி-ரை) க்ரூரஸ் தூல ஹநுஃகோபி வக்தாசார்யஸஹஃப்ரபுஃ
ஸுரகுர்வர் சநரதஸ் தேஜஸ்வீ பித்ருதிஷ்ண்யஜஃ
(யவன ஜாதகம்)

(இ-ள்) மகாநக்ஷத்திரத்தில் பிறந்தவன் குரூர சுபாவமுடையவனும், ஸ்தூலமான தேகம் உடையவனும், கோபமுடையவனும் மேலும்மேலும் பேசக்கூடியவனும், ஆசாரியனுடன் விவாதம் செய்யக் கோருபவனும், சமர்த்தனும், தெய்வ குருபக்தியுடையவனு மாவான் எ-று. மற்றும் "பஹுப்ருத்ய தநோ போகீ, ஸுரபித்ரு பக்தோ மஹோத்யமஃ பித்யரே" என்ற பிருகஜ்ஜாதகப்படி அனேக பரிவாரமும் அதிக தனமுடையவனும், போகவந்தவனும், தெய்வம் பிதுர்தெய்வம் இவைகளின் பக்தியுள்ளவனும், அதிக உற்சாகனும் ஆவான் என்றறிக. (108)

### பூரம்

இதமான வசனம் உளான் கல்விமான் சிவந்திருக்கும்
இருகண் ஆளன்
நிதியதனே வருத்தமதாய்த் தேடிடுவன் வருக்கருமம்
நினைவில் காண்பன்
விதமான வியாபாரி கடினமொழிப் பலநினைவை
விரும்பு நெஞ்சன்
பொதுமாதர் தனேவெல்வன் நகைதந்த அழகன்பூ
ரத்தி ஞனே.

(இ-ள்) பிரியமாகப் பேசுவோனும், கல்வியுடையவனும், சிவந்த இரண்டு கண்களுடையவனும், கஷ்டப்பட்டு சம்பாதிப்பவனும், பின்வரும் காரியங்களை மனத்தில் அறிபவனும், பலவிதமான வியாபாரம் செய்பவனும், கடினமாகப் பேசுவோனும், பல நினைவுடையவனும் தாசிகளை

மதனலீலையால் வெற்றிபெறுவோனும், சிரிப்புடைய பல் அழகனும் ஆவான் எ-று.

(வி-ரை) த்யுதிமாம்ச்ச தநீ தாதா ந்ருத்ய சாஸ்த்ர விசாரதஃ
கார்யாகார்ய விசாரக்ஞோ பாக்ய நக்ஷத்ர ஜோகஃ
(யவன ஜாதகம்)

(இ-ள்) பூரநட்சத்திரத்தில் பிறந்தவன் காந்திபுடையவனும், தனவானும், தானஞ் செய்யப்பட்டவனும், நடனசாஸ்திர முணர்ந்தவனும்,காரியா காரிய விசாரம் செய்பவனுமாவான் எ-று. மற்றும் "ப்ரியவாக்தாதாத்யுதி மாநடநோந்ருப சேவகோபாக்யே" என்ற பிருகஜ்ஜாதகப்படி பிரியவசனனும், தானசீலனும், காந்தியுடையவனும், சஞ்சரணசீலனும், இராஜசேவை செய்வோனும் ஆவான் என்றறிக. (109)

## உத்திரம்

கையாத உரையன்முன் கைவலியன் வித்தைஉளன்
அழகரங்கண் வாயு (முள்ளான்)
மையார்கண் ணார்நேயன் முன்கோபி மறுமுகமார்பு
அதனில் உள்ளோன்
பொய்யாத சூரன்நீர் ஆடுவான் சிறுபசியன்
பொறுந்தும் பத்தி
ஒய்யார நடைத்தருமன் ஞானவான் ஆகும்உத்தி
ரத்தின் ஆனே.

(இ-ள்) உத்திரநட்சத்திரத்தில் பிறந்தவன் இதமாகப் பேசுவோனும் முன்கை பலமுடையவனும், கல்வியுள்ளவனும், அழகுவாய்ந்த கண் வாய் இவைகளை யுடையவனும், பெண்களுக்குச் சிநேகிதனும், முன்கோபியும், முகம் மார்பு ஆகிய இந்த இடங்களின் மறு (மச்சம்) உடையவனும், உண்மையான வீரனும், நீர்விளையாடுதலில் பிரியமுடையவனும், அடிக்கடி பசியுடையவனும், தெய்வபக்தி யுடையவனும், அழகாக நடப்பவனும், தருமஞ் செய்பவனும், ஞானவானும் ஆவான் எ-று.

(வி-ரை) கையாத உரை-அகிதமில்லாதசொல். முன்கை-கெண்டைக் கை முதலடியின் ஈற்றில் 'வாயும் உள்ளான்" என்பதின் 'உள்ளான்' என்பதை நீக்குதல் வேண்டும். "அழகாங் கண் வாய்" என்று வாசித்தல் வேண்டும். முன்கை என்பதற்கு வில்லெடுக்கும் இடதுகை எனக் கூறுவாறுமுளர்.

ஜிதசத்ருஸ் ஸுகீபோகீ கித்யசஃ ப்ரமுதாப்ரியஃ
களாபிக்ஞஸ் ஸத்யரதஃ ஸுவித்வாநர்யமர்க்ஷஜஃ
(யவன ஜாதகம்)

(இ-ள்) உத்திரநட்சத்திரத்தில் பிறந்தவன் சத்துருக்களை வெல்பவனும், சுகமுடையவனும், ஐசுவரியத்தை அனுபவிப்பவனும், எந்தகாலத்திலும் ஸ்திரீகள் விஷயத்தில் இச்சையுள்ளவனும், சாஸ்திரங்களை அறிந்தவனும், யதார்த்தத்தில் பிரியமுடையவனும், நல்ல பண்டிதனுமாவான் எ-று.

மற்றும் "ஸுபகோ வித்யாப்த தநோபோகீ ஸுகபாக் த்விதீய பல்குர்யாம்" என்றபடி சர்வஜனப்பிரியனும், வித்தையினுல் இடைக்கப்பெற்றதன முடையவனும் போகவானும், துக்கமில்லாதவனுமாவான் என்றறிக. (110)

## அஸ்தம்

வன்புறுத்தா மதன்கல்வி மான்அற்ப பசியன்மனு
வணங்க வாழ்வோன்
இன்பமுறுங் குறிப்புடையன் சூரன்அழ கியன்கடினன்
இனிய புத்தி
பின்வயதில் தனமுடையன் சிலுகன்மார்பு அகலன்பின்
புறங்கால் நல்லோன்
அன்புடன்நீர் ஆடல்குரு பத்தியுளன் தருமன்அத்
தத்தி னனே.

(இ-ள்) அஸ்தநக்ஷத்திரத்தில் பிறந்தவன் கடினமான தாமசகுணத் தன்மை யுடையவனும், கல்வியுடையவனும், அடிக்கடி பசியுடையவனும், மக்கள் வணங்கும்படியாக வாழ்க்கைச்செய்பவனும், அகமகிழ்ச்சியான குறிப்புள்ளவனும், வீரமுடையவனும், அழகுடையவனும், கடின சுபாவமுள்ளவனும், நல்லபுத்தியுடையவனும், பின்வயதில் செல்வமுடையவனும், சண்டைசெய்வோனும் விசாலமான மார்பையுடையவனும், பின்பக்கமும் புறங்காலும் அழகாயிருக்கப்பெற்றவனும், பிரியத்துடன் நீர்விளையாடுபவனும், குருபத்தியுள்ளவனும், தருமமுடையவனும் ஆவான் எ-று.

(வி-ரை) க்ருதவித்யச்ச ஸுபோகோ தநாட்யஸ் ஸாஹஸீபவேத்
பரோபகாரீ ஸர்வக்ஞோ ஹஸ்தே ஜாதோ நரோபவேத்.

(யவன ஜாதகம்)

(இ-ள்) அஸ்தநட்சத்திரத்தில் பிறந்தவன் வித்தைகளை அறிந்தவனும், நல்ல போகங்களை அனுபவிப்பவனும், தனவானும், சாகசம் (புலாத்காரம்) உடையவனும், பிறருக்கு உபகரிப்பவனும், சகலமும் அறிந்தவனுமாவான் எ-று. மற்றும் "உத்ஸாஹீத்ருஷ்டஃ பாநபோக்ருணீ, தஸ்கரோ ஹஸ்தே" என்ற பிருகஜ்ஜாதகத்தின்படி உற்சாகமுடையவனும், துஷ்டதனமுடையவனும், மத்யபாந பிரியமுடையவனும், தயையில்லாதவனும், திருட்டுத்தன முடையவனுமாவான் என்றறிக, (111)

## சித்திரை

பலமான சரீரவான் மார்புஅகலன் நடைகடியன்
பரிந்து சொல்வான்
குலவியநற் குணன்நடைநற் பிரியன்தா மதபுத்திக்
குரிசில் நண்பன்
நிலமைபெறுந் திடவசனன் முகத்துறுநன் மறுஉன்னித்
திரையும் அற்பன்
செலவுசெயான் சவுரியவான் துக்கம்உளான் கோபசித்
திரையி னனே.

(இ-ள்) சித்திரை நட்சத்திரத்தில் பிறந்தவன் சரீரபலமுடையவனும், விசாலமான மார்பையுடையவனும், வேகமாக நடப்பவனும், பரிவாகப்பேசுவோனும், நற்குணமுடையவனும், நன்னடக்கையில் பிரியனும், தாமசகுணமுடையவனும், இராஜபூஜிதனும், திடமாகப் பேசுந்தன்மையனும், முகத்தில் மறுவுடையவனும், கொஞ்சநேரம் தூங்குவோனும், சிக்கனமுடையவனும் (செலவு செய்யாதவனும்), வீரமுடையவனும், துக்கமுடையவனும், கோபியும் ஆவான் எ-று.

(வி-ரை) சித்ரமால்யாம்பரதர: காமசாஸ்த்ரவிசாரத:
த்யுதிமாந் தநவாந்போகீ பண்டிதஸ் தவாஷ்ட்ர திஷ்ண்யஜ:
(யவன ஜாதகம்)

(இ-ள்) சித்திரை நட்சத்திரத்திற் பிறந்தவன் சித்திரமான புஷ்பமாலை சுகந்தவஸ்து வஸ்திரங்களை அணிபவனும், இரதிசாஸ்திரத்தில் மிகசமர்த்தனும், தேஜசுடையவனும், தனவானும், போகமுடையவனும், பண்டிதனுமாவான் எ-று. மற்றும் வராஹமிஹிரரும் இக்கருத்துடையவராகி "சித்ராம்பர மால்யதரஸ் ஸுலோசநாங் கச்சபவதி சித்ராயாம்" என்று கூறியிருக்கின்றார். (112)

## சுவாதி

பல்லவர்க்கும் வசியன்போ சனப்பிரியன் மறுதுடையில்
பற்ற வாழ்வோன்
நல்லியல்சேர் தேவதா பத்தியுந்தன் இச்சையுளான்
ராச சேவைக்
கல்வியுளான் தாய்தந்தைக் கினியன்விசு வாசமுளன்
கடின தேகன்
சொல்லுநெறி உளன்கரத்தா யுதம்பிடிப்பன் தியாகவான்
சோதி யானே.

(இ-ள்) சுவாதி நட்சத்திரத்தில் பிறந்தவன் சகலஜனவசியமுடையவனும், உண்பதில் பிரியமுடையவனும், தொடையில் மறுவுடையவனும், நன்மைதரும் ஒழுங்குடைய கடவுள் வழிபாடுடையவனும், தனது விருப்பத்தின்படி நடக்குந் தன்மையுடையவனும், அரசரிடத்தில் ஊழியம் அல்லது வழிபாடு செய்வோனும், வித்தை யுடையவனும், அன்னை தந்தையர்கள் மகிழச் செய்பவனும், அனைவரிடத்திலும் நம்பிக்கையுள்ளவனும், வலுத்த சரீரமுடையவனும், நீதியாகப் பேசுவோனும், கையில் உபகரணமாகிய ஆயுதமுடையவனும், கொடையாளனுமாவான் எ-று.

சிலர் "ராசசேவைக் கல்வியுளான்" எனக்கொண்டு அரசர்களிடத்தில் உத்தியோகஞ் செய்தற்குரிய வித்தையை யுடையவன் என்றும் பொருள் உரைப்பர்.

(வி-ரை) தார்மிகஸ் ஸத்யவாக்சூர: க்ரயவிக்ரய நைபுண:
காமீபஹு க்ரதர்தாரீ வித்யாவாந்மாருதர்க்ஷஜ:
(யவன ஜாதகம்)

(இ-ள்) தர்மசுபாவமுடையவனும், சத்தியமாகப் பேசுவோனும், சூர னும், கிரய விக்கிரயங்களில் சமர்த்தனும், காமியும், அதிக யாகங்கள் செய் வோனும், தானஞ் செய்பவனும், வித்தையுடையவனுமாவான் என்பதாம். "தாந்தோவணிக் க்ருபாலுঃ ப்ரியவாக்தர்மாச்ரிதঃ ஸ்வாதௌ" என்ற பிரு கஜ்ஜாதகப்படி விநயம், வியாபாரம், தயை, பிரியமொழி, தர்மம் இவைகளை யுடையவனாயிருப்பான் என்று அறியப்படுகின்றது. (113)

## விசாகம்

சொல்முகத்தின் மறுநெடியன் நீதிதுயில் பிரியன்
சுற்றமர சர்க்கினியன் சொல்லடக்குங் குணத்தன்
நல்வசனன் பொறையுடையன் அனநடையார் நேயன்
நாடியதோர் தலைமார்பின் அரையின்மறு வுளனும்
செல்வமுளன் சதுர்வேதன் குணவான்முன் கோபி
சேவையுளான் விசாரமிலான் தெய்வபத்தி யுள்ளான்
வில்வாளும் ஏந்துகரன் ஆம்கயமும் மாவும்
மிகநடத்துந் தியாகியாம் விசாகத்தி னனே.

(இ-ள்) முகத்தினிடத்தில் மறுவுடையவனும், உயரமானவனும், நீதி யுடையவனும், சயனத்தில் விருப்பமுடையவனும் பந்துகளுக்கும் அரசர் களுக்கும் விருப்பமுள்ளவனும், அடங்கிப் பேசுங் குணமுடையவனும், நன் மொழிகளைப் பேசுவோனும், அடக்கமுடையவனும், பெண்கள் நட்பு உடையவனும், சிரசு, மார்பு, இடுப்புகளில் மறுவுடையவனும், செல்வ முள்ளவனும், நான்கு வேதங்களை அறிந்தவனும், நற்குணவானும், முன் கோபமுள்ளவனும், சனங்களால் வணங்கப்படுமேவானும், கவலையில்லாத வனும், கடவுள் வழிபாடுடையவனும், வில் வாள் இவைகளைப் பிடித்த கையையுடையவனும், யானை குதிரைகளின்மீது ஏறி நடத்தும் வன்மை யுடையவனும், பிறாக்கு ஈயும் கொடையாளனுமாவான் எ-று.

(வி-ரை) அப்யஸூயா பரஸ்ஸூக்ஷ்மঃக்ருபாளு ரதி நிந்திதঃ
ஜிதேந்த்ரியோ தவாகலுப்தோ விசாகாஜிஷ்ண்ய ஸம்பவঃ
(யவன ஜாதகம்)

(இ-ள்) அதிக பொறாமை யுடையவனும், சூக்குமபுத்தி யுடையவனும், தயை யுடையவனும் சிறறின்ப வெறுப்புடையவனும், இந்திரியங்களை ஜயித்தவனும், தனவானும், உலோபியும் ஆவான் என்பதாம். "ஈர்ஷ்யு லுப்தோ த்யுதிமாந வசநபடுঃ கலஹ க்ருத் விசாகாஸு" என்ற பிருகஜ் ஜாதகப்படி பொறாமை, உலோபகுணம், சரீரகாந்தி, சொற்றிறம், கலக முடையவனா யிருப்பான என்று அறியப்படுகின்றது. (114)

## அநுடம்

ஈனமில்லா நற்குணவான் தாம்பூலப் பிரியன்
எவரெவரும் புகழ்சதுரன் இனியபத்தி உளனும்
நானிலமெ லாந்துதிக்கும் நீதிமான் தூயன்
நயனங்கள் சிவந்திருக்கும் நராதிபர்சன் மானி

மானனையார்க்கு இனியன் மயிர்அழகன் மார்புஅகலன்
மாதாவை தந்தைதனை மகிழ்ந்து இரட்சித்திடுவன்
ஆனைபோல் வேகமுளன் நற்சொல்லன் நல்லன்
ஐச்சுவரிய வான்கோபி ஆம்அநுடத் தானே.

(இ-ள்) அநுட நட்சத்திரத்தில் பிறந்தவன் இழிவில்லாத நல்ல குண முடையவனும், தாம்பூலம் தரித்துக்கொள்வதில் விருப்பமுடையவனும், அனைவரும் தனது கீர்த்தியைக் கூறப்படும் அறிஞனும், மேன்மையான கடவுள் வழிபாடுடையவனும், நால்வகை நிலங்களில் வசிக்கப்பட்டவர்கள் அனைவராலும் வணங்கப்படும் நியாயவானும், பரிசுத்தமானவனும், சிவந்த கண்களுடையவனும், அரசர்களால் உபசரிக்கப்படுவோனும்,மானையொத்த பெண்களுக்கு மகிழ்ச்சியைத் தருவோனும், கூந்தல் அழகுடையவனும், விசாலமான மார்புடையவனும், தாய்தந்தைகளை மகிழ்ச்சியுடன் காப்பாற்று வோனும், யானையைப்போன்ற மந்த நடையுடையவனும், இனிய சொற் கூறும் நல்லவனும், செல்வமுடையவனும், ஈகையில்லாதவனுமாவான்.

(வி-ரை) ந்ருப கார்ய ரதச்சூரோ விதேசஸ் தோங்கராப்ரியஃ
ஸுரூபச் சிக்க பாபச்ச பவேர்மைத்ராக்ய திஷ்ண்யஜஃ

(யவன ஜாதகம்)

(இ-ள்) இராஜகாரியத்தில் ஆசக்தியுடையவனும், பரதேசத்தில் வசிப் பவனும், பெண்களிடத்தில் இஷ்டமுள்ளவனும், நல்ல வடிவமுள்ளவனும், பாபங்களை நசிக்கச் செய்யக்கூடிய வேலைகளை செய்யக்கூடியவனுமாவான் என்பதாம். மற்றும் "ஆடயோ விதேச வாஸீ க்ஷுதாலு ரடநோ அநுரா தாஸு" என்ற பிருகஜ்ஜாதகப்படி பணக்காரன், பரதேசவாசி, பசி பொறுமை, அலைச்சலுடையவன் என்றறியப்படுகின்றது. (115)

## கேட்டை

தாட்டிகன் துட்டர்இணக் கன்பொய்யன் உபாயன்
தகுபத்தி யுளன்இரவான் குரூர கோபி
நாட்டியஉள் மூச்சுளன்நீ ராடிடவும் பிரியன்
நற்புத்தி உளன்நெடியன் தமையனை ரட்சிப்பான்
வாட்டமிலாச் சிற்றுண்டி தின்பன்மன்னர்க்கு இனியன்
மயிர்க்கடையும் விழிசிவப்பும் வலப்பாக மறுவன்
கேட்டமொழி திறங்கொள்ளான் பொய்யைமெய்யாக் கிடுவன்
கேள்வியுளன் கடினச்சொலான் கேட்டை யானே.

(இ-ள்) கேட்டை நட்சத்திரத்தில் பிறந்தவன் பலமுடையவனும், கெட்டவர்கள் நேசமுள்ளவனும், சத்தியந் தவறியவனும், தந்திரமுள்ள வனும், தக்க கடவுள் வழிபாடுடையவனும், எற்பதிகழ்ச்சி என்பதை யுணர்ந்தவனும், கொடுமை யுடையவனும், கோபமுடையவனும், உட்சுவா சத்தை அடக்கிவிடக் கூடியவனும், தண்ணீர் முழுக்குப் பிரியனும், நல்ல அறிவுடையவனும், நீண்டவனும், தனக்கு முன்பிறந்தவனை காப்பாற்று வோனும், பலகாரவகை உண்பதில் பிரியமுடையவனும், அரசர்களுக்குப்

பிரியனும், தலைமயிரின் நுனியும் கண்ணும் சிவப்பாயிருக்கப்பெற்றவனும், வலதுபக்கத்தில் மறுவுடையவனும், கேட்ட சொல்லை நம்பாதவனும், பொய்யை மெய்போலக் காட்டுவோனும், கேள்வியில் விருப்பமுள்ளவனும், கண்டிப்பாகப் பேசுவோனும் ஆவான் எ-று.

கேட்ட மொழி திறங் கொள்ளான் = காதில் கேட்ட சொல்லை நம்ப மாட்டான். "கண்ணால் கண்டது பொய், காதால் கேட்டது பொய், தீர விசாரிப்பது மெய்" என்ற மொழியின்படி உணருந்தன்மை யுடையவன் ஆவான். பொய்யை மெய்போல ஆக்கிடுவன் என்னும் விஷயம் "தலத்துக் கியையாது ஐவரையுந் தழுவித் தழுவித் தனித்தனியே, நலத்துப் பொய்யே மெய்போல நடிக்குஞ் செல்வி நலனுடையாய்" எனவரும் பாரதம் சூது பொரு சருக்கச் செய்யுளில் இருத்தலுணர்க.

(வி-ரை) பருவ்ய க்ரகர: க்லேஸ ஸஹ: காமீ துராஸ த:
க்ரூர சேஷ்டோம் ருஷ்டாபீதோ தாவாசிந்த்ர திஷ்ண்யஜ:
(யவன ஜாதகம்)

(இ-ள்) கேட்டையில் பிறந்தவன் அதிக ஜாக்கிரதையுடன் வேலை செய்வோனும், சிரமமுடையவனும், காமியும் துராசையுடையவனும், குரூர சேஷ்டை யுடையவனும், அசத்தியத்துக்குப் பயப்படுகிறவனும், தனவந்த னும் ஆவான். மற்றும், "ஜ்யேஷ்டாஸு நபகுமித்ர: சந்துஷ்டோ தர்மக் ருத் ப்ரசுர கோப:" என்ற பிருகஜ்ஜாதகப்படி அதிக சிநேகிதரின்மை, கிடைத்தமட்டும் திருப்தியடைதல், தர்மம் செய்தல், அதிகோபம் இவைக ளுடையவன் என்று அறியப்படுகின்றது. (116)

## மூலம்

மண்டியகித் திரைப்பிரியன் புறந்தாளுன் னதனும்
வழுவாமல் செய்கருமம் செய்பத்தி மானும்
மிண்டிறல்ஆ யுதந்தன்னால் சீவனஞ்செய் திடுவன்
திகழ்தந்தை தாய்க்குஇனியன் சிறந்ததவ சீலன்
கண்டசிறு தின்றிதின்னப் பிரியவான் லோபி
கண்சிறுகிச் சிவந்திருக்குங் கல்விமா னாகும்
மிண்டுகளே செய்திடுவன் உறவினரைச் சேரான்
முன்கோபி கொடியனு மும்மூலத் தானே.

(இ-ள்) மூல நட்சத்திரத்தில் பிறந்தவன் தூக்கத்தில் அதிக விருப்ப முடையவனும், புறவடி உயர்ந்திருக்கப்பட்டவனும், (உன்னதம்-உயர்ச்சி) செய்யவேண்டிய கடமைகளைத் தவறுதலின்றிச் செய்யக்கூடிய ஒழுக்க முடையவனும், மிக்க வலிதுற்ற ஆயுதத்தால் தொழில் செய்பவனும், தாய் தந்தைகட்கு அன்புடையவனும், மேன்மையான தவமுடைய நற்குண சாலியும், கண்ணால் கண்ட பலகார வகைகளை யுண்பதில் விருப்பமுடையவ னும், ஈகையிலலாதவனும், சிவந்த சிறுகண்ணுடையவனும், வித்தையுடை யவனும், தீமைகளைச் செய்பவனும், தன் சுயஜனங்களைக் கூடி வாழாதவ னும், முன்கோபியும், கொடியவனுமாவான் எ-று.

(வி-ரை) மாநீதநீசுகீ போகீ தர்மக்ஞோ பந்து போஷகஃ
ரக்தவர்ணச் சௌர்யபரோ மூலாநக்ஷத்ரஜோ நரஃ
(யவன ஜாதகம்)

(இ-ள்) அபிமானமுடையவனும், தனவந்தனும், சுகமுடையவனும், போகத்தை அநுபவிப்பவனும், தர்மங்களை அறிந்தவனும், பந்துக்களை காப்பாற்றுவோனும், சிவந்த தேகமுடையவனும், சௌர்யத்தில் விருப்ப முள்ளவனுமாவான். மற்றும், கர்வம், அதிகதனம், சுகம், பிறர்க்கு இம்சை செய்யாமை, திரபுத்தி விஷயங்களை அனுபவித்தல் இவைகளை யுடையவன் என்று அறியப்படுகின்றது. (117)

## பூராடம்

மெய்ந்நெடியன் சிறுநெற்றி யான்வாசப் பிரியன்
விசாரமுளன் அரசர்நண்பன் மேல்கருமம் பார்ப்பான்
செய்யசிற்றுண் டிப்பிரியன் மாதாவுக்கு இனியன்
சேர்ந்தவரை ரட்சிப்பன் சிவந்தசிறு விழியன்
கைகாலும் நீட்சியுளன் சவுந்தரியன் விசாலன்
கள்வனும் வீரியவான் கரங்கள்புயம் வலியன்
பொய்சொல்லான் சஞ்சாரப் பிரியன்மின் னார்க்கினியன்
பொழிதான வானும் பூராடத் தானே.

(இ-ள்) பூராட நட்சத்திரத்தில் பிறந்தவன் நீண்[illegible]ரமுடையவன், குறுகிய நெற்றியுடையவன், சுகந்த விருப்பமுள்ளவன், ஆலோசனையுடையவன், அரசர்களிடத்தில் சிநேகமுள்ளவன், சிறந்த தொழில்செய்பவனும், நல்ல பலகார வகைகளில் விருப்பமுள்ளவனும், தாய்க்கு விருப்பமுள்ளவனும், அடுத்தவர்களைக் காப்பாற்றுவோனும், சிவந்த சிறிய கண்களையுடையவனும், நீண்ட கை கால்களை யுடையவனும், அழகுடையவனும், அகன்ற மார்பு முகம் புயங்களை யுடையவனும், கறுத்தவனும், வீரமுடையவனும், (வீரம்-பலம்) பலமான கை தோள்களையுடையவனும், பொய் சொல்லாதவனும், ஊர்ப்பிரயாணஞ் செய்வதில் விருப்பமுடையவனும், பெண்களுக்குப் பிரியமுடையவனும், தானஞ்செய்பவனுமாவான் எ-று.

மாதாவுக்கு இனியன்-தாயாருக்கு விருப்பமானவன் என்ப. இதற்கு தாயிடத்தில் பிரியமுள்ளவன் எனப் பொருள் கூறுவாருமுளர். கள்வன்-கரியவன், திருடன். இவ்விரண்டினுள் முன்னையது பொருத்தமானது. சிலர் பின்னையது பொருத்தமென்பர்.

(வி-ரை) ஸுமுகீ ஸுவிநீதச்ச த்யாகீஸ்யாத் கோஷ வத்ஸலஃ
க்லேசபாகீயுவாமாநீ ஜலநக்ஷத்ரஸம்பவஃ. (யவன ஜாதகம்)

(இ-ள்) பிரசன்ன முகமுடையவனும், மிகுந்த விநயமுடையவனும், தானம் செய்பவனும், பசுக்களைக் காப்பாற்றுபவனும், துக்கத்தை அநுபவிப்பவனும், காருண்ணியமுடையவனும், அபிமானமுடையவனுமாவான். மற்றும் "இஷ்டானந்த களத்ரோ மாநீ த்ருடஸௌஹ்ருதச்ச ஜலதைவே" என்ற பிருகஜ்ஜாதகப்படி இஷ்ட ஆனந்தத்தைத் தரும் மனைவி, கர்வம், நிலத்தசிநேகம் இவைகளையுடையவன் என்று அறியப்படுகின்றது. (118)

### உத்திராடம்

தத்தைமார்க்கு இனியன் முகத்துறு மறுவன்
சரீரமுங் கெட்டியான் பலவான்
புத்திமான் உயர்ந்த நாசிநல் வசனன்
போசனப் பிரியன் நீர்க்கு அஞ்சான்
பத்திமான் உறவுக்கு இனியன்வன் வர்ம்மி
பார்பொருள் வேண்டிடாத் தூயன்
உத்தமர்க்கு இனியன் நிறைந்தசொல் தியாகி
உன்னுமுத் திராடத்தி னனே.

(இ-ள்) உத்திராட நட்சத்திரத்திற் பிறந்தவன் தனக்கு முன் பிறந்த பெண்களுக்குப் பிரியமுடையவனும், முகத்தில் மறுவுள்ளவனும், சரீர வன்மையுடையவனும், பலவானும், அறிவுடையவனும், நீண்ட மூக்குடைய வனும், இனிமையாகப் பேசுவோனும், உண்பதில் விருப்பமுள்ளவனும், நீர் விளையாட்டிற்குப் பயப்படாதவனும், (கடவுள்) வழிபாடுடையவனும், சினேகிதர் அல்லது சுற்றத்தார்க்குப் பிரியமுள்ளவனும், அதிகவைராக்கிய முடையவனும், அன்னியருடைய பொருளை இச்சிக்காத பரிசுத்தனும், நல்லவர்களுக்கு விருப்பமானவனும், மாட்சிமையான சொல்லுடையவனும், கொடையாளனும் ஆவான் எ-று.

தத்தை-கிளி, முன்பிறந்தாள் எனவே சிலர் பெண்களுக்கு விருப்ப முடையவன் எனப் பொருள் கூறுவர். தத்தை என்பதற்கு முன்பிறந்தாள் என்னும் பொருளிருத்தலின் தமக்கைகளுக்குப் பிரியன் என்பதே சிறந்த பொருளாகும்.

(வி-ரை) க்ருதக்ஞோ தார்மிகச் சூரோ பகுபுத்ரோ விநீதவான்
சுகளத்ரஸ் ஸுரூபச்ச வைச்வ நக்ஷத்ர ஸம்பவ:
(யவன ஜாதகம்)

(இ-ள்) செய்ந்நன்றி மறவாதவனும், தருமவானும், சூரனும், அதிக புத்திரர்களையுடையவனும், விநயமுடையவனும், நல்ல மனைவியை யுடையவனும், நல்ல வடிவமுடையவனுமாவான். மற்றும் "வைச்வைசவ விநீத தார்மிக பகுமித்ர க்ருதக்ஞ ஸுபகச்ச" என்ற பிருகஜ்ஜாதகப்படி வணக்கம், தருமம், அதிகநேசம், செய்ந்நன்றி மறவாமை, அனைவருக்கும் பிரியம் (119)
இவைகளை யுடையவன் என்று அறியப்படுகிறது.

### திருவோணம்

தக்கதோர் கல்வி மான்ஒரு போக்கன்
சற்றினில் கோபம் ஆறிடுவன்
பக்கமும் முன்பின் பார்த்துமே நடப்பன்
பதிஉளங் காலுயர்ந் திருக்கும்
மைக்கணார்க்கு இனியன் பரிமளப் பிரியன்
மயிர்முடி அழகன்உற் சாகன்

சிக்கன வாளும் ஏற்பவர்க்கு ஈய்வான்
திகழ்திரு வோணநக ளானே.

(இ-ள்) திருவோண நட்சத்திரத்தில் பிறந்தவன் தகுதியான வித்தை யுள்ளவனும், ஒருவகையான கொள்கையுடையவனும், முன் கோபித்துப் பின் சாந்தமாகப் பேசுவோனும், வலம் இடம் முன் பின் என்னும் நான்கு பக்கங்களையும் பார்த்து நடக்கும் இயல்புடையவனும், உயர்ந்த உள்ளங்கா லுடையவனும், பெண்களுக்கு விருப்பமானவனும், சுகந்த வஸ்துக்களிடத் தில் விருப்பமுள்ளவனும், அழகிய கூந்தல் முடியை யுடையவனும், முயற்சி யுடையவனும், பிசுனத்தனமுடையவனும், (பிசுனம்-உலோபம்) பிறர்க்கு உதவி செய்பவனும் ஆவான் எ-று.

ஈய்வான்-கொடுப்பான், ஈகையாவது ஏழைகளாய் இரந்தவர்க்கு இல்லை என்னுமல் கொடுத்தல். ஈ-பகுதி, கை-தொழிற்பெயர் விகுதி.

(வி-ரை) உதாரச் ச்ருதவாந்தீரோ வித்வாந் வக்தா தவாந்விதஃ
களாவாந் ஸகலாபிக்ஞோ தார்மிகச் ச்ரவணர்க்ஷஜஃ

(இ-ள்) ஔதாரிய (உதாரம்-மிகுகொடை) முடையவனும், சாஸ்திர முணர்ந்த பண்டிதனும், தைரியமுடையவனும், வித்துவானும், வாதம் செய்பவனும், தனமுடையவனும், அறுபத்துநான்கு கலைகளையும் அப்பியா சிப்பவனும், சகல விஷயங்களையும் அறிந்தவனும், தர்மங்களை அறிந்து செய்பவனுமாவான் எ-று.

மற்றும் "ஸ்ரீமாந் ச்ரவணே ச்ருதவாந் உதாரோதாரோ தநாந்விதஃ க்யாதஃ" என்ற பிருகஜ்ஜாதகப்படி ஐசுவர்யம், நல்ல கல்வி கேள்வி, சிறந்த மனைவி, தனநிறைவு, நற்கீர்த்தி இவைகளை யுடையவன் என்று அறியப் படுகின்றது.

யவன ஜாதகம் 'உதாரஃ' உதாரமுடையவன், எனவே பிறர்க்கு ஈயுந் தன்மை யுடையவனென்று கூறுகின்றது. இந்நூலாசிரியர் பிறர்க்கு ஈயுந் தன்மை யில்லாதவனெனக் கூறியுளார் எனச் சில பிரதிகளில் காணப்படு கின்றது. அஃது அச்சுப்பிழையேயன்றி ஆசிரியர் பிழையாகாது என்ப. ()

## அவிட்டம்

நெறிபெருங் கருமந் தன்சொல்மேல் ஆனேன்
நின்றவர்க்கு அஞ்சிடான் தியாகி
உறுபுற அடிநா சியும்உயர்ந் திருப்பன்
ஒருவர்சொல் பொறுன்நலூண் பிரியன்
பெறுமவர்க்கு இனியன் மடந்தையர்க்கு அன்பன்
பெரும்பொருள் தேடுவன் அழகன்
அறிவுடன் அடங்கிப் பிறர்பொருள் வவ்வான்
அவிட்டநட் சத்திரத் தானே.

(இ-ள்) அவிட்ட நட்சத்திரத்திற் பிறந்தவன் ஒழுங்கான தொழில் செய்பவனும், தன் சொல்லையே மேன்மையாகக் கூறுவோனும், எதிர்த்து

நிற்பவர்களுக்குச் சிறிதும் பயப்படாதவனும், கொடையாளனும், புறங்காணும் மூக்கும் உயர்ச்சியா யிருக்கப்பெற்றவனும், பிறர்கூறும் இழிவுரைப் பொறாதவனும், நல்ல உணவுகளில் பிரியமுள்ளவனும், தாய்தந்தைகளுக்கு விருப்பமுள்ளவனும், பெண்களுக்கு நேயனும், பெருத்தபொருள் சம்பாத்திய முடையவனும், அழகுடையவனும், அறிவு அடக்கமு முடையவனும், அன்னியர்பொருளில் இச்சையில்லாதவனுமாவான் எ-று.

(வி-ரை) தர்மிஷ்டோ வ்யஸநீ க்ரூரஃ க்ஷயரோக யுதச்சூரஃ,
பாதார ரதச்சூரோ தநிஷ்டா ஸம்பவோ நரஃ

(யவன ஜாதகம்)

(இ-ள்) தருமவானும், விசனமுடையவனும், குரூரனும், க்ஷயரோக முடையவனும், கூடமாக அபராதம் செய்பவனும் அன்னியஸ்திரீ மோக முடையவனும் சூரனுமாவான். மற்றும் "தாதா சாட்யச்சூரோ கீத ப்ரியோ தநிஷ்டாஸு தநலுப்தஃ" என்ற பிருகஜ்ஜாதகப்படி தனம், பராக்கிரமம், சமயத்தில் உதவிசெய்தல், சங்கீத விருப்பம், பிறர்க்கு கொடுக்க மனமில்லாதவன் ஆகிய இவைகளையுடையவன் என்று அறியப்படுகின்றது. தியாகி - வேண்டுவார்க்கு வேண்டியவற்றை வரையாது கொடுப்பவன் என்று பொருள்படும். (121)

## சதயம்

பத்தியில் லாமல் வெகுண்டசொல் பொறுதான்
பழுதிலா ரோகவான் இனியன்
புத்திமான் கைகால் வலியன்வாய் அழகன்
பொய்பொருன் மன்னவர்க்கு இனியன்
வித்துவான் சூரன் மாதருக்கு அன்பன்
மிகுந்தநீர் ஆடவும் பிரியன்
சத்துரு சயன்பொன் உளன்வழக்கு உரைப்பன்
சதயநட் சத்திரத் தானே.

(இ-ள்) சதயநட்சத்திரத்தில் பிறந்தவன் ஒழுக்கமற்ற கோபமுடையவர்களின் வார்த்தையைச் சகிக்காதவனும், கர்மரோகங்களின்றி (குற்றமில்லாத) சாமானிய நோயுடையவனும், அனைவர்க்கும் பிரியமானவனும், அறிவுடையவனும், வலிமைபொருந்திய கைகால்களை யுடையவனும், வாய் அழகுள்ளவனும், பொய் புகலாதவனும், அரசர்கட்குப் பிரியமானவனும், பண்டிதனும், வீரமுடையவனும், பெண்களுக்குப் பிரியமானவனும், தண்ணீரில் விளையாடுதற்கு மிக்க விருப்பமுடையவனும், பகைவரை வெற்றிபெறுவோனும்,. தனமுடையவனும், வழக்குச் சொல்பவனும் ஆவான் எ-று.

சதம்-நூறு; நூறு நட்சத்திர கூட்டங்களை யுடையதனுல் சதயம் எனப் பெயர்பெற்றது. பொய்பொருன் என்றும் பாடம்.

(வி-ரை) குருபுத்திஸ் ஸுகீ ஸ்ரீமான் ப்ரதாதா ஸத்ய வாசக:
கோப்ராம்மண ஹிதோ நித்யம் ஆத்யாங் க்ரௌசுதே தாரகே.

(யவன ஜாதகம்)

(இ-ள்) நல்ல புத்தியுடையவனும், சுகவந்தனும், சீமந்தனும், தருமம் செய்பவனும், சத்தியவாசகனும், நித்தியமும் கோபிராமணர்களின்மீது பிரியமுடையவனுமாவான். மற்றும் "ஸ்புடவாக் வ்யஸநீ ரிபுஹா ஸாஹஸீகச் சதபிஷஜி துர்க்ராஹ்ய" என்ற பிருகஜ்ஜாதகப்படி தெளிந்த வார்த்தை, ஸ்திரீகள், பானம், சூதாட்ட விருப்பம், சத்துருநாசம், பின் ஆலோசனையின்மை, எதற்கும் கட்டுபடாமை ஆகிய இவைகளையுடையவன் என்று அறியப்படுகின்றது. (122)

## பூரட்டாதி

பூரட்டாதி பொருள்பிறர் பொத்துச் சொல்
நேரிட்டார்வழக் காண்பால் நெய்க்கு அன்பினன்
வாரிட் டார்முலை மாதருக்கு ஈவிலான்
ஓரிட்டார் கல்வி மானநாசி உன்னதன்.

(இ-ள்) பூரட்டாதி நட்சத்திரத்தில் பிறந்தவன் பிறர்கூறும் குற்ற மொழிகளைச் சகிக்காதவனும், வழக்குகளைத் தீர்க்கவல்லவனும், பால் நெய் இவைகளை யுண்பதிற் பிரியமுடையவனும், பெண்கள் மூலமாக பொருட் செலவு செய்யாதவனும், ஒப்பற்ற நுண்மையான கல்வியுடையவனும், மூக்குயர்ந்தவனும் ஆவான் எ-று.

பூர்வ பாத்ர பதம்-பசுவின் முன்கால்களையொத்துக் காணப்படுதலின் பூர்வா பாத்ரபதமெனப் பெயர்பெற்றது. இது பூரட்டாதி என வழங்குவதாயிற்று

(வி-ரை) உத்விக்நஸ் ஸ்திரீ ஜிதச் சார்ட்ய: ப்ரகிந்தாஸ்ஸு நைபுண:
அதர்ம தத்பரச் சூரச் சாஜப்ர்தேச ஸம்பவ:

(யவனஜாதகம்)

(இ-ள்) மிக்க விசனமுடையவனும், பெண்கள் சுவாதீனமானவனும் கூடமான அபகாரம் செய்பவனும், பிறர் தூஷணம் செய்வோனும், அதர்மம் செய்வதில் ஆசக்தியுடையவனும், சௌரியமுடையவனுமாவான். மற்றும் "பாத்ரபதாசு த்விக்ந: ஸ்த்ரீஜித தநீ படுரதாதா" என்ற பிருகஜ்ஜாதகப்படி, எதிலும் கவலை, பயம், ஸ்திரீகளால் அடக்கப்படுதல், தனம், நன்றாகப் பேசுதல்; அல்லது பொருள்தேடுவதில் சாதுர்யம், பிறர்க்கு ஈயாமை ஆகிய இவைகளையுடையவன் என்று அறியப்படுகின்றது. இந்நூலாசிரியர் நீதியுடையவன் என்றும், ஆசிரியர் வராகமிகிரனார் பிறர்க்கு ஈயாதவன் என்றும் யவனசாரியர் அதர்மமுடையவனென்றும் மதபேதப்படுகின்றனர். (123)

## உத்திரட்டாதி

நித்தம்நீ ராடி தமருளன் கோளன்
நீதிபொன் பிறர்க்கு உபகாரி
வித்தைதாம் பூலப் பிரியன்சஞ் சாரன்
விரிவுள காதுமார்பு உடையன்
புத்திமான் மாதர்க்கு இனியன்சா துரியன்
பொய்யன்மற் றவர்தொழில் புரிவான்
உத்தமர்க்கு இனியன் வழக்கினில் பலவான்
உத்திரட் டாதிநா ளானே.

(இ-ள்) உத்திரட்டாதி நட்சத்திரத்தில் பிறந்தவன் எப்பொழுதும் தண்ணீரில் விளையாடப் பிரியமுடையவனும், பந்துஜனங்களை யுடையவனும், பழிமொழிக் கூறுவோனும், நடுநிலைமையுடையவனும் தனவந்தனும், அன்னியருக்கு உபகாரம் செய்வோனும், கல்வியுடையவனும், தாம்பூலந் தரித்துகொள்வதில் விருப்பமுள்ளவனும், அன்னிய ஊர்களில் சஞ்சரிக்கப் பிரியமுடையவனும், அகன்ற மார்பு காதுகளை யுடையவனும், அறிவுடையவனும், பெண்களுக்கு அன்பானவனும், சாமர்த்தியவானும், பொய் சொல்வோனும், பிறருடைய தொழிலை செய்பவனும், நல்லவர்கட்கு விருப்பமுடையவனும், வழக்குசெய்தலில் வன்மையுடையவனும் ஆவான் எ-று.

உத்ர பாத்ர பதம்-பசுவின் பின் கால்களைப்போல் காணப்படுதலின் உத்ரா பாத்ர பதம் என்று பெயர்பெறும். இது உத்ரட்டாதி என வழங்கப் படும் (உத்தரம்-பின், பாத்ரம்-பசு, பதம்-கால்) என்ப.

(வி-ரை) ப்ரஜாவாந் தார்மிகோ வக்தா ஜிதசத்ருஸ் ஸுகப்ரதஃ
த்ருடவ்ரதஸ் ஸதாகாமீ சாஹிர்புத்ர்ய ஸமுத்பவஃ
(யவன ஜாதகம்)

(இ-ள்) சந்தானமுடையவனும், தர்மத்தில் இஷ்டமுடையவனும், நன்றாகப் பேசுவோனும், சத்துருக்களை வெற்றிபெறுவோனும், சௌக்கியத்தைத் தருவோனும், திடமான நியமமுடையவனும், எப்போதும் காமமுடையவனுமாவான் எ-று.

மற்றும் "வக்த்தா ஸுகீ ப்ரஜாவான் ஜிதசத்ருர் தார்மிகோ த்விதீயாஸு" என்ற பிருகஜ்ஜாதகப்படி பேசுந்திறம், சுகம், சந்ததி, சத்ருஜயம் தர்மம் இவைகளை யுடையவன் என்று அறியப்படுகின்றது. (125)

## ரேவதி

மெல்லியர் இடத்தில் சாலவே பிரியன்
மிகுசெல்வம் பாதிநாள் விளங்கும்
நல்லவன் பிறர்சொல் கேட்பன்நல் குணவான்
நயனசிங் காரசீ மானும்

சொல்லுரை யில்சா துரியன்அந் தணரைத்
தொழும்பத்தி யுள்ளபுத் தியினன்
இல்லையென்று உரையான் பழிக்குஇடங் கொடாத
இயல்பினன் இரேவதி யானே.

(இ-ள்) இரேவதி நட்சத்திரத்தில் பிறந்தவன் பெண்களிடத்தில் அதிக விருப்பமுடையவனும், தன் ஆயுள் எல்லையில் பாதிகாலம் சிறந்த ஐசுவரியமுடையவனும், நல்ல சுபாவமுடையவனும், அன்னியர் சொல்லைக் கேட்பவனும், நற்குணமுடையவனும், அழகிய கண்களையுடைய அலங்காரனும், செல்வமுள்ளவனும், பேசும் மொழியில் திறமையுடையவனும், பிராமணர்களை வணங்குவதில் அன்புடையவனும், அறிவுள்ளவனும், ஏற்பவர்க்கு இல்லையென்னாது உதவிபுரிவோனும், பொல்லாங்கிற்கு இடங்கொடாத சுபாவமுடையவனுமாவான் எ-று.

(வி-ரை) ரூபவாந் தநவாந் போகீ பண்டிதச் சஞ்சலார் தபாக்
காமீ துர்க ஜிதச்சூரஃ பௌஷ்ணஜஃ பரதேசகஃ
(யவன ஜாதகம்)

(இ-ள்) தனவந்தனும், ரூபவந்தனும், போகவந்தனும், பண்டிதனும், திரமான திரவியமுடையவனும், காமமுடையவனும், மலைமேலுள்ள கோட்டைகளை வெற்றிபெறுவோனும், சௌரியவானும், பரதேசவாசியுமாவான். மற்றும் "ஸம்பூர்ணங்கஸ் ஸுபகஃ சூரச் சுசிரர்தவாந் பௌஷ்ணே" என்ற பிருகஜ்ஜாதகப்படி குறைவில்லாத அங்கம், சகல ஜனபிரியம், சௌர்யம், பிறர்பொருள் ஆசையின்மை, தனம் இவைகளை யுடையவனவான் என்று அறியப்படுகின்றது.

இதுகாறும் கூறிப்போந்த அசுவினியாதி இருபத்தேழு நட்சத்திர பலன்களை ஜாதி தேசம் குலம் இவற்றிற்குத் தக்கபடி சோதிட கலாவல்லவர்கள் கூறுவார்களாக. (126)

நட்சத்திர பொதுப்பல படலம் முற்றிற்று.

---

குறிப்பு:—"மாஸோத்பவம் மாஸபதேஸ் ததேந்தோர் கஜ்ஜே உடுபஸ்ய ப்ரபவஞ்ச யத்ஸ்யாத்" எனவரும் ஜாதகாபரணத்தின்படி நக்ஷத்திரங்களுக்குச் சொல்லியுள்ள சுபாசுப பலன்கள் சந்திரனது தசை புத்திகளில் உண்டாகுமென்று அறியத்தக்கது.

# நட்சத்திர பாதபலப் படலம்



*இதுகாறும் ஒவ்வொரு நட்சத்திர பலன்கள் இதுவாமெனக் கூறி முடித்த ஆசிரியர் இனி ஒவ்வொரு பாதபலன்களைக் கூறுகின்றார். "இனன்முதல் வாரப் பலத்துக்கு அவரவர்க்கு அமைத்த இயல்பு உளதாம். உடுக்காலுக்கு இசைப்பதும் அப்பலமாம்" எனவரும் குமாரசுவாமியத் தின்படி சூரியன்முதல் சனி ஈருகவுள்ள ஏழு வாரங்களில் சுபர்வாரத்துக் குச் சுபபலனும், பாவர் வாரத்துக்குப் பாபபலனும் கூறுதல்போலவே அந்தந்த நட்சத்திர பாதத்திற்குரிய அமிசை ராசி நாதர்கள் சுபராயின் சுபபலனும், பாவராயின் பாபபலனுமாகத் தொகுத்துக் கூறியிருக்கின்றார், அஃது அசுவினி 1-ம் பாதத்துக்கு மேடாமிசம், 2-ம் பாதத்துக்கு இடபா மிசம் ஆகவே இவற்றிற்கு முறையே குஜன்-சுக்கிரன் அதிபர்களாதலி னுலும் குஜன் பாபியும், சுக்கிரன் சுபனுமாதலால் அசுவினி முதற்பாதத்துக் குப் பாபபலனும், 2-ம் பாதத்துக்குச் சுபபலனும் உண்டாயிற்றென்றறிக.*

## அசுவினி

சீர்பெறு கோளன் சஞ்சலன் பாவி
செறிந்திடும் ரூபமே இல்லான்
செப்பிய பிலுக்கன் அந்நியர்க்கு அன்பு
செய்குவன் அசுபதி முற்கால்
தார்செறி பிறரின் குணத்தினை அறிவான்
சவுந்தர வான்நலம் புரிவான்
சாத்திரம் உரைக்கும் ஞானத்தில் பார்வை
தரும்இரு தாலினில் செனித்தோன்
ஏர்பெறு கணித வித்தையில் பிரியன்
இனிதுள புத்தியே புகல்வன்
இசைந்திடும் மூல ரோகிநற் கருமம்
எண்ணுவன் மூன்றதாங் காலான்
போர்செறி உடம்பு வளைவதாம் அதிக
புத்திமான் சோதிடம் அறிவான்
புரந்தரன் காமி சத்திய வானும்
புழுகம்நாற் காலினில் உதித்தோன்.

*(இ-ள்) அசுவினி நட்சத்திரத்தின் முதல் பாதத்தில் பிறந்தவன் புறங் கூறுவோனும், மனக்கவலை யுள்ளவனும், கொடியவனும், சிறந்த வடிவ மில்லாதவனும், ஆடம்பரம் (வீம்பு) உடையவனும், பிறர்க்கு தயை புரிவோனும் ஆவான் என்ப. இரண்டாம் பாதத்தில் பிறந்தவன் அன்னிய ருடைய மனத்தின் இயல்பை அறிபவனும், அழகுள்ளவனும், நன்மையைச செய்வோனும் கல்வி நூற்கள் கூறும் அறிவில் நோக்கமுடையவனும் ஆவான் என்ப. மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் கணிதக் கலையில் விருப்ப*

முடையவனும், மேன்மையான அறிவை போதிப்பவனும், மூலரோக முள்ளவனும், நல்ல கருமங்களை மனதில் கருதுவோனுமாவான் என்ப. நாலாம் பாதத்தில் பிறந்தவன் வளர்ந்த சரீரமுடையவனும், சிறந்த அறிவு உள்ளவனும், சோதிடசாஸ்திரம் உணர்ந்தவனும், இந்திரபோகமுள்ளவனும், சிற்றின்பத்தில் பிரியனும், உண்மைநெறியுடையவனுமாவான் எ-று. 'புரந்தரன்' என்பதற்கு அரசன் என்று பொருள் கூறுவாருமுளர். அசுவினி-1-2-3-4-வது பாதங்கட்கு முறையே அம்சாதிபர்கள் செவ்வாய், சுக்கிரன், புதன், சந்திரனுவர். இவர்களின் சுபாவத்திற்கேற்ப பலனுரைத் திருப்பது பிரத்தியட்சம். 3-வது பாதத்தில் பிறந்தவன் மூலரோகி என்று ஏற்படுகின்றது. ஆனால் இந்த மூன்றும்பாதத்தில் பிறந்தோர் அனைவரும் மூலரோக முடையவரென்று எண்ணுதல் இழுக்காம். சந்திரன் நவாம்சையில் இருந்த ஸ்திதி, சம்பந்தம், நோக்கம் இவைகட்கேற்ப நன்மை தீமைகளை அறிதல்வேண்டும். (126)

## பரணி

**காலமாம் சிவப்பன் மிகுபராக் கிரமன்**
**கனபல நீதியும் உள்ளான்**
**கருதலர் சிங்கம் செந்நிற மயிரான்**
**காணுமே பரணியின் முதற்கால்**
**கோலமாம் மானி நிபுணன்ஆ லசியன்**
**குணமுனன் புத்திமான் காமி**
**கூறியதருமன் சாத்திரம் உரைப்பன்**
**குலவிய பரணிகால் இரண்டான்**
**சாலவுங் கோபி உருட்சிஆம் கண்ணன்**
**தன்னியன் மானிசந் தோஷி**
**சற்குணன் நெடியோன் ஆகும்மூன் றுங்கால்**
**சாற்றிய பரணிஆம் அதன்மேல்**
**தூலதே கத்தன் கோபியாம் அரசர்**
**துன்னுசே வகத்துவம் உள்ளான்**
**துர்சனன் கருவி ஆகுமே பரணி**
**தோன்றுநாற் காலினுல் சொல்லே.**

(இ-ள்) பரணி நட்சத்திரம் முதற்பாதத்தில் பிறந்தவன் சிவந்த சரீரமுடையவனும், அதிக பலமுடையவனும், சிறந்த வெவ்வேறு நியாயங்களையுடையவனும், பகைவர்களாம் யானைக்குச் சிங்கத்தையொத்தவனும், சிவந்த கூந்தலையுடையவனும் ஆவான் என்ப. இரண்டாம் பாதத்தில் பிறந்தவன் சிறந்த மானமுடையவனும், கல்வியிற் சிறந்தவனும், சோம்பலுடையவனும், நற்குணமுள்ளவனும், அறிவுடையோனும், சிற்றின்பப் பிரியனும், தருமஞ்செய்பவனும், சாஸ்திரமுணர்ந்து கூறுவோனும் ஆவான் என்ப. மூன்றும் பாதத்தில் பிறந்தவன் மிக்க கோபமுடையவனும் திரட்சியான கண்களுடையவனும், தனமுள்ளவனும், மானமுடையவனும், மனமகிழ்ச்சி யுடையவனும், நற்குணமுள்ளவனும், உயர்ச்சியான

வனுமாவான் என்ப. நாலாம் பாதத்தில் பிறந்தவன் பருத்த தேகமுள்ள வனும், கோபமுள்ளவனும், அரசர்களிடத்தில் தொழில் செய்பவனும், கொடியவனும், யான் எனதென்னு அகங்காரமுடைவனும் ஆவான் என்றவாறு. 'தன்னியன்' என்பதற்கு தடித்த நெஞ்சமுள்ளவன் என்று பொருள் கூறுவாருமுளர். இவர்கள் கருத்தின் விர்லைதயை என்னென்று இயம்புவது. (127)

## கார்த்திகை

சொல்லும்ஆ சாரன் வித்துவான் பிரபு
தோன்றிய இலாபம் உள்ளவனும்
சூரனும் நேசன் புத்திமான் ரோகி
தோன்றிடும் ஆரலின் முதற்கால்
வெல்லும்ஆ சார ஈனன்மா னிடர்கள்
வெறுத்திடு கோபம்உள் ளவனும்
வெற்றிசேர் பிறரைச் சேர்ப்பன்நூல் தன்னை
விரும்பிடான் கார்த்திகை இருகால்
புல்லுவான் துட்ட மடந்தையர் தன்னைப்
புத்தியி லான்மிகு சூரன்
பொருந்திடாக் கோபி கருவிபொல் லாங்கைப்
புரிகுவன் ஆமொரு மூன்றில்
அல்லுறும் மிடியன் கலைபல அறியான்
ஆம்மனத் தாபமே உள்ளான்
அடைந்திலான் பொறுமை துக்கவான் ரோகி
ஆகும்நாற் காலதன் பொருளே.

(இ-ள்) கிருத்திகைநட்சத்திரத்து முதற்பாதத்தில்பிறந்தவன் ஒழுக்க முள்ளவனும் பண்டிதனும், பெருமையிற சிறந்தவனும், ஆதாயமுடையவ னும், வீரமுள்ளவனும், இஷ்டஜன விசுவாசனும், அறிவுடையவனும், நோயுள்ளவனும் ஆவான் என்ப. இரண்டாம்பாதத்தில் பிறந்தவன் ஒழுக்க மில்லாதவனும், மன்பதைகள் வேண்டப்படாதகோபமுள்ளவனும், வெற்றி யுள்ள அன்னியரைச் சேர்ந்தவனும், கல்வி நூலில் விருப்பமில்லாதவனு மாவான் என்ப. மூன்றாம்பாதத்தில் பிறந்தவன் கெட்ட பெண்களைச் சேர் வோனும், அறிவில்லாதவனும், அதிக வீரமுள்ளவனும், பொருத்தமில்லாத கோபமுள்ளவனும் அகங்காரியும், தீமைச் செய்வோனும் ஆவான் என்ப. நாலாம்பாதத்தில் பிறந்தவன் துன்பமுடைய வறுமையுள்ளவனும், பல நூற்களை யுணராதவனும், மனவருத்தமுள்ளவனும், சாந்தமில்லாதவ னும், துக்கமுடையவனும், நோயுள்ளவனும் ஆவான் எ-று. (128)

## உரோகிணி

பொருள் அழகு உள்ளன் அலைச்சலான் காமி
புறத்தியர்க்கு இயற்றுவன் துன்பம்

பொறையிலான் வர்ம்மி ரோஷவான் ரோகி
பொருந்துரோ கிணிமுதற் காலான்
அருள்உயர் சாந்த குணமுளான் ரோகி
ஆசாரன் சத்திய வாக்கி
அமர்ந்ததோர் பெண்ணை மணப்பன்வாய்ச் சாலன்
அன்புளன் ஆம்இரு காலான்
குருஅருள் கணித வித்தைதரும் கீதன்
கூறிய மந்திரன் சுகவான்
குலவிய பஞ்ச காவியம் அறியாக்
கொள்கையான் ஆகும்மூன் றுங்கால்
இருள்இலாத் தத்துவன் அந்நியர் உடமைக்கு
இச்சைசெய் புத்தியான் இனியன்
ஏந்திழை லோலன் ரோகணி நாற்கால்
இனில்வரு வோன்பல முரைக்கில்.

(இ-ள்) உரோகிணிநட்சத்திரத்தின் முதற்பாதத்தில் பிறந்தவன் தனமுள்ளவனும், அழகுடையவனும், நிலையின்றித் திரிபவனும், சிற்றின்பத்தில் விருப்பமுள்ளவனும், அன்னியர்களுக்குத் தீங்குசெய்வோனும், சாந்தமில்லாதவனும், வைராக்கியமுள்ளவனும், மானமுள்ளவனும், நோயுடையவனுமாவான் என்ப. இரண்டாம்பாதத்தில் பிறந்தவன் கிருபைமிக்க அமைதியான குணமுள்ளவனும், நோயுடையவனும், ஒழுக்கமுள்ளவனும், உண்மையுரைப்பவனும் இத்தகை இயல்புடைய ஒரு கன்னிகையை விவாகம் செய்துகொள்ளுவோனும், பேசுதலில்சிறந்தவனும், பெரியோரியல்பில் ஒன்றுகிய தயையுள்ளவனும் ஆவான் என்ப. மூன்றும்பாதத்தில் பிறந்தவன் குருவின் கிருபையுடையவனும், எண்ணூல் அறிந்தவனும், அதாவது சோதிடநூலுணர்ந்தவனும், வாச்சியத்துடன் பாடுவோனும், நுட்பமான மந்திரங்களை யுணர்ந்தவனும், இன்பமுள்ளவனும், பஞ்சகாம்மியங்களை கற்றறியாத கோட்பாடுடையவனும் ஆவான் என்ப. நான்காம்பாதத்தில் பிறந்தவன் மயக்கமற்ற உண்மையுள்ளவனும், பிறருடைய பொருளுக்கு ஆசைப்படும் மனமுடையவனும், மேன்மையுள்ளவனும், பெண்கள் மோகத்தில் விருப்பமுடையவனும் ஆவான் எ-று.

காவியம் அறியாக்கொள்கையன் என்பதற்கு அறம் பொருள் இன்பம் வீடு என்னும் இவற்றின் இயல்புணராதவன் என்பது கருத்து. காவியம்-காப்பியம். இஃது மேற்கண்ட நான்கனுள் ஒன்றும் பலவும் குறைந்து ஏனைய உறுப்புக்கண் மேற்கூறியவாறு இயல்வது; விளங்கக் கற்றோரால் இயற்றப்படுவது. (129)

நட்சத்திர பாதபலப் படலம் முற்றிற்று.

---

*நட்சத்திர பாதபலப் புடலத் தொடர்ச்சி:—*

## மிருகசிரம்

உரைத்திடு தனவான் சத்துரு சங்காரன்
உறு தூல தேகனுங் கோபி
உண்மை யாசார வீனன்ரா க்ஷதனும்
ஓங்குமான் றலேமுதற் காலான்
தரைக்குநல் வழக்கே யுரைப்ப னுத்தேசி
சாது மனோகரம் பெற்றோன்
சத்திய வாக்கி யரிவையர் லோலன்
சாற்றிடு மிரண்டதாங் காலான்
உரைக்குநல் லுதார குணமுள னல்லன்
உத்தமன் சாது சந்தோஷி
உசித வாசாரன் புத்திமான் சீமான்
உற்றமூன் றும்பதத் துதித்தோன்
விரைத்துறு புத்தி சத்தியன் சாது
மேவிய தருமனற் காமி
வீரியன் கோபி வஞ்சக னென்றே
விளம்பு நாற்பாத மினியே.

(இ-ள்) *மான்றலேயைப் போன்று காணப்படும் மகிமை பொருந்திய மிருகசிரநக்ஷத்திரத்தில் முதல்பாதத்தில் பிறந்தவன் உலகிலுள்ள யாவர்களும் தனவான் என்று சொல்லும்புகழ்ச்சியும், தன்னை எதிர்த்த சத்துருக்களை ஜெயிக்கும் தீரமும், ஸ்தூல சரீரவானும், கோபமுள்ளவனும், உண்மையையே பேசுபவனும், ஆசாரமற்றவனுயும், உலகோர் சிறிதளவு (ராக்ஷஸன்) என்று சொல்லவும் உள்ளவன். இரண்டாம்பாதத்தில் பிறந்தவன் இப்பூமியில் உள்ள மனிதர்களுக்கு நியாயமாக வழக்கு முதலியவைகளைத் தீர்மானிப்பவனும், நீண்ட ஆலோசனை உள்ளவனும், சன்யாசியைப்போன்றும் சாந்தகுணமுள்ளவனைப்போன்றும் சிறப்புவாய்ந்தவனும், எவ்விதத்திலும் தவருத சத்திய வாக்குள்ளவனென்றும், பெண்களின் கலவியில் மிகுந்த ஆசையுள்ளவனும் ஆவான். மூன்றும்பாதத்தில் பிறந்தவன் யார் என்ன கேட்கிலும் தணிக்கையோடு பதிலளிக்கும் குணமுள், நல்லவனும், உத்தமனும், கோபமில்லாதவனும், எந்நாளும் சந்தோஷத்தோடு இருப்பவனும், மேலான ஆசார கிருத்தியங்களுள்ளவனும், உயர்ந்த அறிவாளனும், தனவந்தனும் ஆவான். நான்காம்பாதத்திற் பிறந்தவன் எவ்வித ஆலோசனை கேட்கினும் அதிசீக்கிரம் பதில் உரைக்கும் சாதுரியமும், சத்தியம் தவருதவனும், சன்மார்க்கனும், அளவற்ற தர்மங்களைச் செய்பவனும், மோஹ சுகத்தில் மிஞ்சியவனும், பலசாலியும், கோபம் உள்ளவனும், வஞ்சகுணம் உள்ளவனென்றும் சொல்லுக எ-று.*

(வி-ரை) *நான்காம் பாதத்தோனை சன்மார்க்கன் என்று மேலேகுறிப்பிட்டு கீழ்கோபமுள்ளவன், வஞ்சகுணமுள்ளவன் என்றுகுறிப்பிட்டதால் கோபம், சாந்தம், இவ்விரண்டும் நிறைந்தவனென்றும், தன்னை வஞ்சித்தவரை வஞ்சிப்பனென்றும் கொள்ளல் நலம் என்பதாம்.* (130)

## திருவாதிரை

இனியநல் வசன குணமுளான் மகாத்துமா
யௌவன நாரியர்க் கினியன்
இயலுறு நல்ல வாதிரை முதற்கா
லினில்தருங் குணத்திற னென்ப
தனியுரை வாய்ச்சா லகனுநிட் டூரன்
றருக்கியன் கருவிதீ க்ஷையிலான்
தகுதியாய் மடவா ருடன்புணர்ந் திடுவன்
சாற்றிய பாதமோ ரிரண்டில்
குனியுநல் வாத ரோகமு முள்ளோன்
கோபிதன் கிருபையு மில்லான்
கோளனு மஞ்சு நாரியர் தமக்கே
குணமிலான் காலொரு மூன்றில்
துணியுநல் விவேகி யுறவினர் பகையான்
றூன்றிய வீனமா யனத்தன்
துர்ப்புத்தி யூத்தை யுடம்புளான் பொல்லாத்
துர்ச்சன னுகுநான் கென்றே.

(இ-ள்) மேலான வல்லமை பொருந்திய திருவாதிரைநக்ஷத்திரம் முதல்பாதத்தில் பிறந்தவன் யாவரும் சந்தோஷிக்கத்தக்க இதமான வார்த்தையும், நல்லகுணமுள்ளவனும், துரந்தரியும், வாலிபஸ்திரீகளுக்குப் பிரியமுள்ளவனென்றும் சொல்லுக. இரண்டாம்பாதத்தில் பிறந்தவன் தனியாய்பேசுபவனும், படபடவென்று வார்த்தையாடுபவனும், யாவருங் கண்டு நிஷ்டூர வார்த்தை சொல்லும் ஆதிபத்யம் உள்ளவனும், ஆபத்தில் உதவக்கூடிய ஞான உபதேசக் கருவியில்லாதவனும் ஸ்திரீசேர்க்கையில் சந்தோஷத்தோடு அளவாய் சேருபவனும் என்க. மூன்றாம்பாதத்தில் பிறந்தவன் கூன்முதுகுள்ளவனும், வாதம் முதலிய வியாதியுள்ளவனும், கோபவானும், கடவுள் அனுக்கிரக மில்லாதவனும் கோள் முதலிய கலகவார்த்தைகளை சொல்பவனும் பெண்களைப் பார்த்து அச்சப்படுவோனும், துன்மார்க்கன் என்றுஞ் சொல்லுக. நான்காம்பாதத்தில் பிறந்தவன், துணிகரமான செய்கையும், நல்ல விவேகமும், யோக்கியதையுள்ளவனும், தன் பந்துக்களிடம் பகையுள்ளவனும், அடிக்கடி மறந்துபோகும் மனமுள்ளவனும், துர்ச்செய்கையும், துர்ப்புத்தியுள்ளவனும் சரீரத்தை சுத்தஞ்செய்யாது அழுக்கு துர்நாற்றம் உள்ளவனும், கொடிய துர்ச்செய்கை துர்ச்சேஷ்டை யுள்ளவனென்றுஞ் சொல்லுக எ-று.

(வி-ரை) தேரு மூதிரை நான்கிற் பிறந்தோன்
நாறு மாமுய வேர்வைகள் சிந்திட
வீறு மாதலத் தன்னில் உலாவியே
கூறுவான் கொடிய குணவானு மாவனே.

திருவாதிரை நாலாங்காலில் பிறந்தவன் உடல்நாற்றமும், வேர்வை பூமியில்சிந்த இப்பூதலத்தில் சுற்றிக்கொண்டு துர்வார்த்தைகளைக் கூறுவான் என்றுஞ் சொல்வர் என்பதாம். (131)

## புனர்பூசம்

என்றுமெய் தூலப் பிலுக்கனற் போகி
யிசைந்திடு செவிடனுங் காமி
ஏன மயிரன் இனிபுநர் பூசம்
ஆமுதற் காலினி லிசைந்தோன்
துன்றிய பித்தன் உட்டின தேகி
சோம்பல் ஆசாரமு மில்லான்
துக்கமே நித்தம் பொருந்துவ னிருகால்
தோன்றிய நாட்பலன் மிகவே
அன்றிதீக் குட்ட ரோகியாஞ் சாதாம்
அலைச்சலான் காவிய மறியான்
மந்துறு தந்த ரோகவான் தீர்க்க
வயதுளான் பாதமூன் றதனில்
நன்றினிற் பிரிய முள்ளவன் குள்ளன்
வல்லவன் அழகுளா னென்றே
நாடிய பார்வை லக்ஷண மறிவன்
நாற்பத மறிந்துரை தனக்கே.

(இ-ள்) இனிமையாகிய புனர்பூசம் முதல்பாதத்தில்பிறந்தவன் தடித்த சரீரவானும், அர்பகுணமுள்ளவனும், போகசுகத்தில் மிகுந்தவனும், செவிடனும், வெட்கம் அறறவனும், நல்ல தடித்த மயிருள்ளவனும் என்று சொல்லுக இரண்டாம்பாதத்தில்பிறந்தவன் பிததசரீரவானும் சமரசமான திரேகமுள்ளவனும், சோம்பல் உள்ளவனும், ஆசாரம் சுததம் இல்லாதவனும், எந்நாளும் துக்கத்தையே அனுபவிப்பவனும் ஆவான் என்று சொல்லுக. மூன்றும்பாதத்தில பிறந்தவன் குஷ்டரோகியும், வியாதியுள்ளவனும், எக்காலததிலும் அலைச்சல உள்ளவனும், சாஸ்திர கிருத்தியாகிருத்தியஙகளைத் தெரிநதவனும், பல்நோயுள்ளவனும், தீர்க்க யயதுள்ளவன என்றுஞ் சொல்லுக. நான்காம்பாதத்திற பிறநதவன் நற்காரியஙகளில் பிரவேசிக்க பிரியமுள்ளவனும், குள்ளசரீரனும், அழகுள்ளவனும், ஓர் பொருளைக் கண்ணால்பார்த்தே அதன் குணாகுணங்களைக் கூறுபவனும் ஆவான் எ-று. (182)

## பூசம்

தனக்கொடி மாதே சூலைகிட் டூரன்
தருமவான் கோபி புத்தியுளான்
தாழ்வறுந் தீர்க்க வாயுளான் றியன்
றகுபுனர் பூசநாண் முதற்கால்
தினத்தினிற் பிரபு சர்வவியா பகனுஞ்
செனங்களைத் தாபரித் திடுவான்
செப்பிய நிதானி அந்நியர் சிநேகி
சேர்ந்திடு மிரண்டதாம் பதத்தில்

இனத்தினற் கினியன் புத்திமான் ஞானி
யினியசந் தோஷியா நேசன்
இனத்தினு னல்ல காரிய முடிப்ப
னெழில்பெறு மூன்றதாங் காலான்
மனக்குறு சண்டை யுடையவன் கோபி
வாஞ்சையா னுரியர் தனக்கே
மகிழ்ந்திடு கமனன் பூசநன் னுற்கால்
வரும்பல னறிந்துணர் மின்னே.

(இ-ள்) பூசம் முதற்பாதத்தில் பிறந்தவன் தருமஞ்செய்பவனும் கோபம உள்ளவனும், மேலான அறிவாளியும், தாழ்வில்லாத பூரண ஆயுள் உள்ளவனும், துன்மார்க்க குணமுள்ளவனும், கெட்டவனென்றுஞ் சொல்லுக. இரண்டாம் பாதத்தில் பிறந்தவன் எக்காலும் நீங்காத பிரபுச் செல்வம நிறைந்த மேதாவியும், எக்காரியங்களில் பிரவேசிக்கினும் அபஜெய முள்ளவனும், மனிதர்களை ஏமாற்றிப் பரிக்கும் வஞ்சனையுள்ளவனும, நிதானமும், அன்னியஜன சிநேகனும், நற்கீர்த்தியும் வாய்க்குமென்று சொல்லுக. மூன்றும் பாதத்தில் பிறந்தவன் தன் சுயபந்துக்களின்மேல் பிரியமுள்ளவனும், எக்காலமும் நீங்காத சந்தோஷத்தோடு இருப்பவனும், அறிவாளனும், தாரந்தரியும், ஓர் காரித்தை முடிக்கவேணுமெனில் அநேகர் விசுவாசத்தைக்கொண்டு முடித்துக்கொள்ளும் தந்திரமுள்ளவனும் , ஆவானென்றுஞ் சொல்லுக. நான்காம் பாதத்திற் பிறந்தவன் மனதில் விசார முள்ளவனும், அடிக்கடி கோபத்தோடு சண்டை செய்பவனும், கோப முள்ளவனும், ஸ்திரீசுகப் பிரியனும், விசனமில்லாதவனும் ஆவானென்று தருமக்கொடி நாட்டும் ஆரணங்காய் சொல்வாயாக எ-று. (138)

## ஆயில்யம்

மின்னிய தனமும் பெண்வடி வுள்ளான்
மேன்புத்தி யுடையவன் சந்தோஷி
மிகுநல நாணு தொழில்புரிந் திடுவன்
வேண்டுமா யிலியத்தின் முதற்கால்
அன்னியர் ஏவற் றெழில்புரிந் திடுவன்
அழகுளன் ஏக்கமு முள்ளான்
ஆசாரன் றீய நடையன் துர்ப்புத்தி
யுடையனுங் காலிரண் டதற்கே
நன்னிசற் கோபி நாரியை வதைப்பன்
ஞானியா லசியனு னிபுணன்
நலமிலா வார்த்தை பற்றவே யுரைப்பன்
நயமிகு பாதமூன் றதற்கே
பொன்கொலை நாசம் புரிபவன் சுபன்போல்
லாங்கு செய்பவர்க் கினியன்
புலைச்சியர் சங்கம் பண்ணுவ னேயைப்
புணர்ந்திடு நான்கதாங் காலே.

(இ-ள்) ஆயில்யம் நக்ஷத்திரம் முதற்பாதத்தில் பிறந்தவன், பெண் வடிவுள்ளவனும், பிரகாசிக்கத்தக்க பொன் நாணயங்களைச் சம்பாதிப்பவனும் முகத்தில் மீசையில்லாதவனும், மேன்மையான புத்தி, யுக்தியுடையவனும், நீங்காத சந்தோஷ சித்தனும், யாவரும் புகழும்படி நானாவிதமான தொழில்செய்து மேன்மை அடைபவனும் ஆவானென்று சொல்லுக. இரண்டாம் பாதத்தில் பிறந்தவன் அன்னியரால் ஆஞ்ஞாபிக்கப்பட்ட அடிமைத்தொழில்களைச் செய்பவனும், அழகுள்ளவனும, தான் உத்தேசித்த காரியத்தின்மேல் நோக்கமுள்ளவனும், ஆசாரபிருத்தியனும், தீய மார்க்கங்களில் பிரவேசிப்பவனும், வஞ்சக லோபகுணமுள்ளவனும், பொறாமையுடைய கொடிய குணமுள்ளவனும் ஆவானெனறுஞ் சொல்லுக. மூன்றாம்பாதத்தில் பிறந்தவன் அந்நிய ஜனங்களின்மேல் கோபமுள்ளவனும், நற்காரியத்தில் பிரவேசிக்காதவனும், கோபமுள்ளவனும், பெண்களை இம்சிப்பவனும், சந்நியாசியும், ஆலஸ்யமான புத்தியுள்ளவனும், நிபுணனும் ஆவானென்றுஞ் சொல்லுக. நான்காம்பாதத்தில் பிறநதவன் உபயோகமற்ற வார்த்தைகளைப் பொருந்தும்படி உரைப்பவனும், பொருட்செலவு செய்பவனும் கொலை, நாசம், முதலிய பாவத்தொழில்களைச் செய்பவனும், தீய காரியங்கள் செய்பவாக்குச சிநேகிதனும், தணிக்கையாளனும், ஈனஸ்திரீகளைச் சேர்பவனும், அவர்கள் மூலமான நோய் உள்ளவனென்றுஞ் சொல்லுக எ-று. (184)

மகம்

காலனைப் போலப் பயமுள சிவந்த
கண்ணன்பே ராசையான் யூகி
கருதிடு சிவந்த மெய்யினன் செவந்த
குஞ்சியான் மகமுதற் காலான்
போலியான் புத்தி யனல்வடு வுடையோன்
பொருட் செலவான் சந்தோஷி
பொன்னிறக் கண்ணன் காதுநோ யுடையோன்
பொருநதிய காலிரண் டதற்கே
சாலவும் பலவான் மிக்கநோ யுள்ளான்
சாது பொல்லாதவன் கடினன்
தாமிக வாசை யுடையவன் தூயன்
தகுதிகாண் மூன்றினி லுதித்தோன்
சீலவன் நாரி பேச்சினைக் கேட்பன்
சிரங்குட ஞேயுமுற் றிடுவன்
சிந்தைநோ யுடையோன் மதுரவா சகனும்
தெளிந்துரை நாற்பத மாமே.

(இ-ள்) மகம் நக்ஷத்திரம் முதற்பாதத்தில் பிறந்தவன், எமனைப் போன்ற சிவந்த கண்களும், யாவரும் பார்த்து பயந்தோடத்தக்க சரீரமுள்ளவனும், பேராசையுள்ளவனும், யுக்திசாலியும், சிவந்த சரீரவானும், அடர்ச்சிபொருந்திய உரோமம் பொருந்தியவனென்றும் சொல்லுக இரண்டாம் பாதத்தில் பிறந்தவன் யாவரும் இகழ்ச்சி செய்யவும், பெருமையில்

லாதவனும், பொருட்செலவு செய்வதில் சந்தோஷமுள்ளவனும், மஞ்சள் நிறம்போன்ற கண்களுடையவனும், காதுநோயுடையவனும் ஆவானென்றுஞ் சொல்லுக. மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் மிகுந்த பலவானும் அதிக நோயுள்ளவனும், தூர்க்குணம், சன்மார்க்கம் இவ்விரண்டும் வாய்ந்தவனும், கட்டுப்பட்ட பேச்சும், வைராக்ய சீலனும், பேராசையுள்ளவனும், நல்லவனும், பொல்லாப்பு வாய்ந்தவனும் ஆவானென்றுஞ்சொல்லுக. நான்காம் பாதத்திற் பிறந்தவன் பரிசுத்த மனத்தனும், ஸ்திரீவார்த்தைகளைக் கேட்பவனும், சிரங்கு முதலிய உஷ்ணவியாதிகளுடையவனும் மனவிசாரமுள்ளவனும், நன்மார்க்க விஷயங்களில் பிரவேசிப்பவனும் ஆவானென்றுஞ் சொல்லுக எ-று. (135)

### பூரம்

ஆமெனும் தீரன் இன்சொலன் கோபி
ஆசாரன் சவுரியன் சிறுவீடு
ஆக்கமில் லாதான் வியாபாரஞ் செய்வான்
ஆனபூ ரம்முதற் காலான்
தாமெனும் உழவுத் தொழில்புரி குடிலுன்
தாகமுங் கிலேசமு முள்ளோன்
தானுறு சகாயம் பிரபல னில்லா
தவனென்பர் இரண்டதாங் காற்கே
நாமெனுங் குணவான் ஆகுமேம் பாட்டான்
நலமுறும் கீர்த்திமா னாகும்
நாடிய மூன்றும் பதமெனும் பொருளை
நாட்டினி லுரைப்பர் நல்லோரே
தோமுறுந் துக்கக் குருவடு வுள்ளான்
சொற்றிடு நிந்தையே புரிவன்
சோர்வறு மறையோர் தேவதூ ஷணத்தைச்
சொல்வன் நான்கெனக் கருதே.

(இ-ள்) பூரம் நக்ஷத்திரம் முதற்பாதத்தில் பிறந்தவன் எவ்விதமான ஆபத்துக்கும் தான் முன்னே சென்று தலையாடும் தீரமுள்ளவனும் சந்தோஷத்துடன் இனிய வார்த்தைகளைப் பேசும் சற்குணனும், கோபியும் பரிசுத்தனும், தாழ்ந்தவனும், வியாபாரஞ்செய்து ஜீவிப்பவனும் ஆவானென்றுஞ் சொல்லுக. இரண்டாம் பாதத்தில் பிறந்தவன் கிருஷி என்னும் பயிர்த்தொழில் செய்பவனும், குடும்பவாசியும், அடிக்கடி தாகமுள்ளவனும், மன சந்தேகமுடையவனும், பிறருக்குச் சகாயஞ்செய்ய சந்தோஷப்படுபவனும், வல்லமைசாலியும், பிரபல மில்லாதவனுமென்று சொல்லுக. மூன்றாம்பாதத்தில் பிறந்தவன் பெருமையும் பிரக்கியாதியுள்ளவனும், ஜீவாத்மாக்களிடத்தில் அன்புள்ளவனும், மன்னுயிர்களைக் காப்பவனும், மேம்பாடான கீர்த்திவாய்ந்தவனும் ஆவானென்றும் சொல்லுக. நான்காம் பாதத்திற் பிறந்தவன் எக்காலத்திலும நீங்காத விசனமுள்ளவனும், தேகத்தில் மச்சமுடையவனும், பிறருக்கு நிந்தையும், துன்பத்தைச் செய்பவனும், குற்றமில்லாத மறையவர்மீது தூஷணமான வார்த்தைசொல்பவனும் ஆவானென்று சோதிடவல்லோர் கூறுவர் எ-று. (136)

## உத்திரம்

கண்டென மிருது வசனனுங் கீர்த்தி
கண்ணியன் தீரன் இங்கிதனும்
கருதிய கிளைஞர் மேன்விருப் புடையான்
காணுமுத் திரமுதற் காலோன்
கொண்டிடுங் காமி தரித்திர னூணன்
கோதுறு சஞ்சல சித்தன்
கூறிய நித்த யாசக னுகுங்
குலவிய விருபதத் துதித்தோன்
அண்டிடும் பிலுக்கன் பழுதிலா வுரையான்
ஆக்களை மேய்த்திடு மவனும்
ஆனவா சாரம் ஆனதா மூன்றில்
ஆகிய பிறப்பை யுடையவனே
வண்டனு நன்றி மறந்திடான் பிறரை
மதித்திடான் தூஷண மறைவன்
வாலிபந் தன்னில் தாய்மரித் திடுவள்
வழங்குவர் நான்கெனப் பெரியோர்.

(இ-ள்) உத்திர நக்ஷத்திரம் முதற் பாதத்தில் பிறந்தவன், தான் கண்டவரிடத்து இனிமையான நல்வசனம் பேசுபவனும், மேன்மையுள்ளவனும், குற்றமில்லாதவனும், பரிசுத்த நெஞ்சுடையவனும், தன் சகோதர சகோதரிகளின்மேல் பிரியமுள்ளவன் ஆவான் என்றுஞ் சொல்லுக. இரண்டாம் பாதத்தில் பிறந்தவன் அறிவில்லாதவனும், தரித்திரனும், சரீரத்தில் ஊனமுடையவனும், எக்காலத்தும் நீங்காத சஞ்சலமுள்ளவனும் பிச்சையெடுத்து ஜீவிப்பவனும் என்று சொல்லுக. மூன்றாம்பாதத்தில் பிறந்தவன் தன்கைப்பொருளை பிறருக்குக்கொடாதவனும், தான்சொன்ன சொற்களை மறுபடியும் மாற்றிப் பேசுபவனும், பசுமாடுகளை மேய்ப்பவனும், ஆசாரம் சுத்தம் வாய்ந்தவனும் ஆவானென்று சொல்லுக. நான்காம் பாதத்திற் பிறந்தவன் அசுத்தமுள்ளவனும், பிறர் செய்நன்றி மறக்காதவனும், மறு உபகாரஞ்செய்பவனும், அன்னிய ஜனங்களை மதிக்காதவனும், தூஷண வார்த்தைகளை விடுபவனும், வாலிபவயதில் தாய் மரிப்பளென்றும் சொல்லுக எ-று.

(வி-ரை) தாய் மரிப்பளென்றது இந்நக்ஷத்திரத்துக்குப் பொதுவாய்ச் சொன்னதாம். ஆகையால் இந்த நக்ஷத்திரத்தில் பிறந்தவர்களுக்கு பின் வரும் நான்காம் பாவகத்திற் சொல்லியபடி மாத்ருகாரகனும், மாத்ரு ஸ்தானாதிபதியும் இருக்கும் சுபாசுபம் தெரிந்தே சொல்லவேண்டும்.

ஆகுமாத்ருவின் க்ஷேத்திராதிப
னன்னியாங் குறவம்புலியுற
போகும் சேய்தாய் மதிநா ளாதியும்
பூணுமூடம் பகை நீசட்க்ஷீணரா
யேகுமாறு மெட்டீராறு மக்கோட்க
ளியங்கலிருந்துபத் தெண்ணிரண்டாமிதை

மோகம் பத்தொன்ப துச்சனி யின்றின
முடியுமாதரு மூக்கண்ணர் சாற்றுமே.

மாதரு ஸ்தானாதிபதி அன்னிய வீடேறி அவனோடு சந்திரன் கூடி யிருந்தால் இந்த ஜாதகன் வாலிபகாலத்தில் தாய் மரணமடைவாள். சந்திரனும் மாதரு ஸ்தானாதிபதியும் அஸ்தமனமாகவும் பகை க்ஷீணம் பெற்றும், 6-8-12 இவ்விராசிகளில் நிற்கினும், மேற்சொல்லிய ராசி யதிபர்கள் பார்க்கினும், மாதரு ராசியாகிய நான்காமிடத்தி லிருக்கினும், சந்திரன் நின்ற ராசிக்கு 10-4 இவ்விராசிகளில் நின்ற கிரகங்களுக்கு திசைப்படி எத்தனை வருஷம் வருகிறதோ அத்தனை வருடத்தில் இறந்து போவாள். இவ்வாறே ஒவ்வொரு கிரகங்களுக்குப் பிரித்துச் சொல்ல வேண்டுமென்று வீமேசுரஉள்ளமுடையானில் கூறியிருப்பதால் இவ்வாறே ஒவ்வொரு நக்ஷத்திரங்களுக்கும், லக்கினங்களுக்கும் பிரித்துச் சொல்வது நலம். (137)

## அஸ்தம்

பெரியதோர் கலகம் பண்ணுவித் திடுவன்
பேசிய பொய்யனும் கர்வி
பிலுக்கனு சாரன் பசுக்கடம் மிடத்திற்
பிரியனும் அத்தத்தின் முதற்கால்
அரியதோர் குணவான் செய்தொழி லறிவான்
ஆனதோர் வாலிபந் தன்னில்
அன்னைபோம் பாட்டோடு ஆடலிற் பிரியன்
அதியுரை யுடையனு மிரண்டில்
தரியலர் போலு மனத்தினன் தந்தை
தானறுஞ் சிறுவய ததனில்
தந்திர வாதி ரோகி வியாபாரி
சாற்றிடு மூன்றதாங் காலான்
உரியநன் னடையான் ஈகையான் நெடியோன்
ஓதுசந் தோஷவா னுகும்
உசிதனும் அன்னைக் கினியன்மெய்க் கீர்த்தி
யுடையனூற் காற்பல மறியே.

(இ-ள்) அஸ்தம் முதற்பாதத்தில் பிறந்தவன், பிரமாத கலகம் செய்வதில் சமர்த்தனும், பொய்பேசுபவனும், தருமம் உள்ளவனும், பசுவாகனங்களிடத்தில் பிரியமுள்ளவனும் ஆவானென்று சொல்லுக. இரண்டாம்பாதத்தில் பிறந்தவன் அருமையான உத்தம குணமுள்ளவனும், பின்வரும் காரியங்களை முன்னறிந்து சொல்பவனும், தனக்கு வாலிபவயது வரும்போது தாயார்க்கு மரணமும், ஆடல் பாடல் முதலிய சங்கீதங்களில் பிரியனும், கூர்மையான புத்திசாலியும், எக்காரியங்களையும் ஆலோசிப்பவனும் ஆவானென்று சொல்லுக. மூன்றாம் பாதத்தில் பிறந்தவன் உத்தமகுணமுள்ளவனும், சிறுவயதிலேயே தகப்பனுக்கு மரணமும், எக்காரியத்தையும் தந்திரத்தோடு செய்துகொள்ளுபவனும், வியாதியுள்ளவனும், வியாபாரம் செய்யும் தந்திரமறிந்தவனும் ஆவானென்று சொல்லுக. நாலாம் பாதத்திற்

பிறந்தவன் நல்ல உத்தமர்களோடு சிநேகிப்பவனும் நெறி பிசகாத நன்னடக்கை யுடையவனும், ஈவுஇரக்கம் உள்ளவனும், எக்காலமும் சந்தோஷமும், முன்கோபத்தோடு பேசுபவனும், உயர்ந்த பதவியை அடைபவனும், தாயாருக்கு இனிமையானவனும், கீர்த்தி வாய்ந்தவனுமாவான் என்று சொல்லுக.

(வி-ரை) இந்நக்ஷத்திரத்துக்கு இரண்டாம் பாதத்திற்கு மாதாமரணம் என்று சொன்னதை முன் சொல்லிய செய்யுளுக்கு வீமேசுர உள்ளமுடையானில் சொல்லியபடி பிரித்துச் சொல்லவேண்டுமென்று சொல்லியுள்ளேம். அஸ்தம் இரண்டாம் பாதத்தில் ஜெனனமாகில் கன்னியா விராசியில் சந்திரன் பிரவேசிப்பான். ஆகையால் எந்த லக்கினத்தில் பிறந்தாலும்,

நாலுட னுவில்நல்ல நல்முள்ளோ ரில்லாதாகி
ஏலுள நாலேழோனு மிருந்திட நீசமாகிச்
சேலுள மதியுமீன மாயினன் மாதே கேளாய்
பீலுள்ள வன்னை பின்பு பிழைப்பது மில்லைகண்டாய்.

இலக்கினத்துக்கு நான்காம் வீட்டிலும் அதற்கு நான்காம் வீட்டிலும் சுபக்கிரகங்களின்றி, 4, 7-க்குடையோன் நீசம்பெற்றும், சந்திரன் சத்துரு முதலிய பகைஸ்தானங்கள் பெற்று மிருந்தால் தாயார் பிழைக்கமாட்டாள். மாதாவுக்கு ஆயுள் சொல்லவேண்டுமெனில் பின்வரும் நாலாம் பாவகத்தால் மாதாவுக்கும், 3-ஆம் பாவகத்தில் தந்தைக்கு மரணம் என்பதை 9-ஆம் பாவகத்திலும் ஆராய்ந்து ஆயுள் சொல்லுக. (138)

## சித்திரை

அறிந்திடாய் பொல்லாக் காரியம் பண்ண
வறிகுவ னேத்திர ரோகி
ஆக்குவான் வியாக்கி யானம்சஞ் சாரி
யாகிடுஞ் சித்திரை முதற்கால்
பெறுந்தனி வசனன் தேகபோ ஷணையான்
பெருமிடி யானெடி யோனும்
பேணிய தபசி சஞ்சல னென்றே
பேசுவர் மாசிலா ரிரண்டால்
செறிந்திடு கீர்த்தி மான்பராக் கிரமன்
திடமுறும் வித்துவான் ஞானி
செப்புநன் னடையோன் அறிவுடை யாளன்
றிரிபத மதிலுத்தித் தோனும்
எறிந்திடும் பகைவர் தமைவணங் கிடுத
னியல்புத்தி யான்சுய முள்ளான்
ஏதமற் றிடுநாற் காலினுக் கென்றே
யியம்புவர் மேன்மைபெற் றரே.

(இ-ள்) பெருமைபெற்ற சித்திரை நக்ஷத்ரம் முதல்பாதத்தில் பிறந்தவன் தீயகாரியங்களைச் செய்பவனும், நேத்ர வியாதியுள்ளவனும், சங்கீத முதலிய கீதங்களை இசைப்பவனும், தேசங்களில் சஞ்சாரம் செய்யப் பிரியமுள்ளவனும் ஆவானென்றும் கூறுக. இரண்டாம்பாதத்தில் பிறந்தவன் ஒருவருக்கும் தெரியப்படமாட்டாத குற்றமற்ற நட்ப வசனங்களை தானே யூகிக்கும் அறிவாளியும் தன் திரேகத்தை ஜாக்கிரதையோடு ஆரோக்கிய விஷயமாய் போஷிப்பவனும், அநேக நற்பலன்களை யனுபவிப்பவனும், முகவிலாசமில்லாத அரூபியும் மனத்தில் உண்மைவாய்ந்த சன்யாசியும் சஞ்சலமுள்ளவனும், ஆவானென்று சொல்வர். மூன்றாம்பாதத்தில் பிறந்தவன் யாவரும் புகழத்தக்க கீர்த்திவாய்ந்தவனும் அஞ்சாத பராக்கிரமம் உடையவனும், வித்தைகள் பலவும் கற்றுத் தெளிந்தவனும், ஞானமார்க்கங்களை தெரிபவனும், காண்போர் யாவரும் இவன் நன்னடக்கையுள்ளவன் என்று கொண்டாடத்தக்க வியாதியுள்ளவனும், நல்லறிவு வாய்ந்தவனும், ஆவானென்று சொல்லுக. நான்காம்பாதத்தில் பிறந்தவன் தன்னை எதிர்க்கும் பகைவர்களைப் பார்த்து அவர்களை தன்னைக்கண்டு கீழ்ப்படியச் செய்யும் தந்திரமுள்ளவனும், தானே தன் அறிவை விருத்திசெய்துக் கொள்ளக்கூடியவனும், ஆவானென்று சூதறியாத நான்காம்பாதத்தோனை குறித்துச் சொல்வாய் என்று சாஸ்திரங்களை யறிந்த மேதாவிகள் கூறுவர் எ-று. (139)

## சுவாதி

**பெற்றிடு தீரன் சொற்பனன் ஞானி**
**பிரபுவை யடைந்தினி திருப்பன்**
**பெருமைசேர் வித்தைப் பிரசங்கி சாது**
**பேசிய சோதியின் முதற்கால்**
**உற்றநற் றிடவா ளுகும்வாய்ச் சாலன்**
**புத்திவான் காரிய வாதி**
**உண்மை யனந்த ரங்கவான் காமி**
**யோதுகா லிரண்டதாம் பலனே**
**வெற்றிவிற் றொழிலன் குரூரனுங் குடிலன்**
**மேவுநன் னடையிலான் கலகம்**
**இயற்றுவான் சோதி விளம்புமூன் றுகும்**
**எனும்பதத் துதித்திடு வோனே**
**சொற்றிறன் கோபி கலகமேற் பிரியன்**
**துர்ச்சனன் சீல்வான் காமி**
**சோரனும் நான்காம் பதத்தினி லுதித்தோன்**
**தோற்றிய வடிவமைத் தோளாய்.**

(இ-ள்) சுவாதி நக்ஷத்திரத்தின் முதற்பாதத்தில் பிறந்தோனென்று சொல்பவனின் பலனை சொல்லுமிடத்து தைரியம் உள்ளவனும், கனவு அதிகம் காண்போனும், சன்யாசி தான் சிநேகிப்பவர் நல்ல மேதாவிகளாகவும் இருப்பர். பெருமையைத்தரும் தபிரியமுடைய கல்வியைக்கொண்டு உபன்யாசம் முதலியவைகளைச் செய்வோனும் கோபமில்லாதவனும் ஆவா

னென்று கூறுவர். இரண்டாம்பாதத்தில் பிறந்தவனைக்குறித்துச் சொல்ல வேண்டிய பலன்களென்னவெனில் மனோதயிரியம் உள்ளவனும், படபட வென்று பேசுபவனும், அறிவுவாய்ந்தவனும், எக்காரியங்களிலும் ஜாக்கிரதையுடன் நடந்துகொள்பவனும், பொய்யுரையாதவனும், உள்நெஞ்சம் உள்ளவனும், அல்லது எவ்விஷயங்களையும் வெளிபபடையாய் பேசாதவனும், ஸ்திரீசுகங்களுக்கு அதிகமாய் இச்சைபடுவோனும், ஆவானென்று கூறுவர். மூன்றாம்பாதத்தில் ஜனித்தவன் அம்பு ஆயுதம் கணை சரமென்னும் ஆயுதங்களால் வெற்றியை அடையும் தொழிலையுடையவனும், துற் செய்கைகளையுடையவனும், குடும்பியும் நன்னடக்கை இல்லாதவனும், கோள்சொல்லுபவனும், கெட்டகாரியங்களில் பிரவேசிப்பவனும் ஆவான் என்று கூறுக நான்காம்பாதத்தில் ஜனித்தவன் சொன்னசொல்தவறாதவனும், அமோகமான சோபத்தையுடையவனும், கோள்சொல்ல விருப்பமுடையவனும், தீயர் சோரா துர்மார்க்கர் என்னும் கொடிய சிநேகிதர்களையுடையவனும், பரிசுத்தமுடையவனும், ஸ்திரீலோலனும், திருடனும் ஆவானென்று கூறுக எ-று. (140)

### விசாகம்

அமைத்திடு வஞ்சன் கல்விமா னுகும்
அறிவன்சோ திடசௌக் கியவான்
அறிவுறு புலவன் வாணிபம் புரிவான்
ஆகுமே விசாகத்தின் முதற்கால்
தமைப்புகழ்ந் திடுவன் மந்திரன் காமி
சத்தியன் நீதிமான் ரோகி
சரசவா னுஞ்சந் தோஷியிங் கிதவான்
சாற்றிரு கால்பல னென்பாய்
இமைத்திடு பலவான் சோரனுங் குள்ளன்
இனியகா ரியமறிந் திடுவன்
எழில்பெறும் பரஸ்திரீ கமனன்வாய்ச் சாலன்
ஏதறு மூன்றதாங் காலான்
அமைப்பரும் புத்தி யுடையனும் யோகி
அருநதன முடையவன் ஞானி
அழகுறுந் தாரம் ஒன்றுளன் நெடியோன்
ஆகும்வாய்ச் சாலனுற் பதமே.

(இ-ள்) விசாகநாளின் முதற்காலில் ஜெனித்தவன் மோசஞ்செய்பவனும், வித்தை நிறைந்தவனும, கணிதசாஸ்திரமாகிய ஜோதிடத்தை தெரிந்தவனும், இன்பமுதலிய ஆரோக்கியமுடையவனும, கவித்துவம் செய்யும் பாவலனும், வாங்கல் விற்குதல் முதலியவைகளையுடையவனும் ஆவான் என்று சொல்லுக. இரண்டாங்காலில் ஜனித்தவன் பிறரிடமும் தன் மனத்திலும் தானே மேன்மையானவனென்று எண்ணுபவனும், மாந்திரீகம் தெரிபவனும், ஸ்திரீசேர்க்கை அதிகம் உள்ளவனும், தர்மார்த்த மார்க்கமுடையவனும், சத்தியமொழிகளை யுடையவனும், வியாதியுடையவனும், மோகத்தில் மூழ்கியவனும், நன்மார்க்கமுடையவனும், சந்தோஷமுடைய

வனும் ஆவானென்று கூறுவர். மூன்றாங்காலில் ஜனித்தவன் எக்காலமும் நீங்காத பலமுடையவனும், திருட்டுத்தனமுடையவனும், குட்டையான சரீரம் உடையவனும், பற்பல நன்மையைத்தரும் விஷயங்களை அறிபவனும் அழகுவாய்ந்த பரஸ்திரீகளின் ஆசையுடையவனும், படபடவென பேசுபவனும் உடையனென்று கூறுவர். நாலாங்காலில் ஜனித்தவன் நறகுணம் உடைய புத்திசாலியும், ஞானமார்க்கங்கள் அறிந்த தபசியும், பொருள் சேர்க்கையுடையவனும், சன்யாசியும், அழகுடைய ஏகதாரத்தையுடையவனும், முன்கோபியும், ஜாலவார்த்தையாடுபவனுய ஆவான் என்று கூறுக எ-று. (141)

## அனுஷம்

பதமுள னீதி யிங்கித மறிவான்
பண்புறு சத்திய வானும்
பகருமா சாரன் மந்திர சீலன்
பற்றிய வனுஷத்தின் முதற்கால்
இதமுள புள்ளாங் குழலினிற் பிரியன்
இசைந்தவாய்ச் சாலனும் புத்தி
எய்திய சிறப்பன் மானிகா மியனும்
இருபதப் பொருளென வுரைப்பர்
விதமுள புத்தி மான்சவுந் தரியன்
மென்குர லோசையா னெழுதும்
வித்தைசா துரியன் எடுபபுளா னென்றே
விளம்புமூன் றும்பத மதற்கே
அதஞ்செயும் விஷவாக் கன்பர துரோகி
நண்ணிய தமையர்க ளுள்ளான்
அன்புறு மோசை நாணமு முடையன்
நவிர்சிரங் குடையனுந் தெரியே.

(இ-ள்) அனுஷம் முதற்காலில் ஜனித்தவன் முன்பின்வருங் கருமங்களை அறிபவனும், தராதரம அறிந்தவனும், செம்மையான தவறாத சத்திய வாக்குடையவனும், சுத்தம் முதலிய ஆசாரமுடையவனும் யாகம் ஓமம் ஜெபம் முதலிய பரிசுத்த மந்த்ரசீலனும், மந்திரம் உரைப்பவனும் ஆவான் என்று கூறுக. இரண்டாங்காலில் ஜனித்தவன் இனிய தொனியையுடைய புள்ளாங்குழல் முதலிய இன்னிசை கருவிகளை வாசிக்க பிரியமுள்ளவனும், இன்சொல்லுடையவனும, படபடவெனப் பேசுவோனும், அதன் மூலமான கௌரவமுடையோனும், கவுரவப் பழுதுடைய காரியங்களில் பிரவேசியாதவனும், ஸ்திரீசேர்க்கையில் மகிழ்ந்தவனும் ஆவானென்று கூறுக. மூன்றாங்காலில் ஜனித்தவன் பற்பல ஆலோசனை செய்யும் யுகதிசாலியும், ரூபலாவண்ய தேஜஸ் உடையவனும், தான் பேசும்போது மெதுவான சப்தத்தோடு பேசுபவனும், கல்வியில் வல்லவனுமாய் இருப்பதோடு எடுத்தறிந்து பேசுபவனுமாய் இருப்பானென்றுங் கூறுவர். நான்காங்காலில் ஜனித்தவன் விருப்பமில்லாத விஷவாக்கு உரைப்போனும், தன் சிநேகிதர் முதலியோரை மோசம்செய்பவனும், தனக்கு மூத்த சகோதரர்களையுடையவனும்

அன்னியர்களையும் மற்றமுள்ளவர்களை வஞ்சிக்கும் தன்மையை யுடையவனும், இனிய தொனியை யுடையவனும், வெட்கமுடையவனும், திரேகத்தில் சிரங்குடையவனும் ஆவானென்று கூறுவாய் எ-று. (147)

## கேட்டை

தெரிந்துதா னெழுத வல்லவன் கர்வி
செயும்பரி காசியாங் காந்தி
செறிவினை யாட்டு நகைச்சந் தோஷி
சீர்மிகுங் கேட்டையின் முதற்கால்
பொருந்துசங் கீதப் பிரியன்வாய்ச் சாலி
புகழுநல் வீகையான் சுகவான்
போகிகன் மனத்தன் ரோகியா மென்றே
புகலுவ ரிரண்டதாங் காலே
திருந்துகண் ரோகி பசுவுளன் கலகன்
செப்பிய வீனபுத் தியினன்
செய்குவன் பிறர்கா ரியந்தன தென்றே
சீர்பெறுஞ் சாதுமூன் றுங்கால்
அரிந்திடுங் கலகப் பிரியன்முன் கோபி
வஞ்சகன் குரூரமே புரிவன்
வந்திடுங் குலத்தின் மேன்மை கூறிடுவன்
மன்னிய வீரிரு தாளே.

(இ-ள்) சிறப்புபொருந்திய கேட்டை நக்ஷத்திரத்தின் முதற்காலில் பிறந்தவன் எவ்விஷயங்களையும் தானே தெரிந்து வரைய வல்லவனும், அகங்காரியும், ஏளன வசனங்களை விள்ளுபவனும், பிரகாசம் நிறைந்த சரீரம் உடையவனும், மகிழ்ச்சியோடாடும் செய்கையுடையவனும், சந்தோஷத்தோடு இருப்பவனும் ஆவானென்று கூறுக இரண்டாங்காலில் ஜனித்தவன் யாவரும் மகிழத்தக்க சங்கீத சாகித்யங்களில் சந்தோஷமுடையவனும், படபடப்போடு பேசுபவனும், தருமகுணம் உள்ளவனும், சவுக்கியத்தையுடையவனும் மோகத்திலாழ்ந்தவனும், தாளெண்ணமுடையவனும், வியாதியையுடையவனும் என்று கூறுக. மூன்றுங்காலில் ஜனித்தவன் விழிகளுக்கு ரோகம் உடையவனும், அநேக ஆவு என்னும் பசுவாகனத்தை யுடையவனும், கோள் சொல்லுபவனும், தாக்குணங்களை யுடையவனும், பிறர் செய்யும் காரியங்கள் யாவும் தன்னுடையதென்றே முன் உவந்து வருவோனும், சந்நியாசியும ஆவானென்று கூறுக. நான்காங்காலில் ஜனித்தவன் மகிழ்ச்சியுடன் கோள்சொல்லுபவனும், முற்கோபியும் மோசக்கருத்துடையவனும், எவருக்கும் துன்பங்களையே விளைவிப்பவனும், தன் அம்சவகையராக்களை மேலாய் பேசுபவனும் ஆவானெனக் கூறுக எ-று. (148)

## மூலம்

தானுனு முணவிற் கிழங்கின்மேற் பிரியன்
சாற்றிய பாபமே புரிவன்

தாழ்விலா ரோகி யுன்மத்த னென்றே
சாற்றுவர் மூலத்தின் முதற்கால்
வானுயர் புலவன் வயிற்றுணே யுடையோன்
சத்திய வான்புத்தி யுளனும்
வளமுடை மானி பக்ஷமுள் ளவனு
மருவுகா லிரண்டினில் வந்தோன்
ஈனமாம் பில்லி சூனிய மறிவான்
எழிலுளன் சோம்பலான் காமி
இனியநற் கனிமேற் பிரியனு மூன்றில்
எண்ணிய பலமிஃ தென்ப
கோனெனும் பலவான் நிபுணனுஞ் சாது
கோபமே நீக்குவன் ஞானி
கூறுசத் துருவை யடக்குவன் கழுத்திற்
கொண்டநோ யுளதன தன்றே.

*(இ-ள்) தான் உணணும் உணவில் விசேஷமாய் வேர்வகைகளான கிழங்கு பதார்த்தங்களில் ஆசையுள்ளவனும், பாபகிருத்தியங்களையே அதிகமாக விளைவிப்பவனும், எந்நாளும் நீங்காத வியாதியை யுடையவனும், பைத்தியகுண முடையவனென்றும் கூறுவர். இரண்டாங்காலில் ஜனித்தவன் ஆகாயத்தை யளாவி தனக்கு யாரும் நிகரில்லை எனப் புகழத்தக்க புலவனும், உந்தியில் பாதையுடையவனும், சத்தியமொழி யுடையவனும், நல்லறிவுவாய்ந்தவனும், எந்நாளிலும் இழிவில்லாத கௌரவத்தையே உடையவனும், எவரிடத்திலும் அன்பு நிறைந்தவனும் ஆவானென்று கூறுவர். மூன்றாங்காலில் ஜனித்தவன் தீய தொழிலாகிய பில்லி சூனியம் ஏவலென்னும் மந்திர தந்திரங்களை தெரிந்துகொள்வோனும், தேஜஸ் உடைய சரீரம் உடையவனும், சோம்பேரியும் ஸ்திரீலோலனும், அருமையான கனிகளைப் புசிக்கப் பிரியமுடையவனும் ஆவானென்றும் கூறுக. நாலாங்காலில் ஜனித்தவன் யுத்தவீரனென்றும் வீரம் வாய்ந்தவனும், எவ்விதங்களிலும் வல்லவனும், கோடமில்லாதவனும், சந்நியாசியும் தன்னை எதிர்த்தவர்களிடம் வெற்றிபெறுவோனும், தன் கழுத்தில் கண்டமாலை என்னும் ரோகம் உள்ளவனுமாவானென்று கூறுவர் எ-று.* (144)

## பூராடம்

ஈறிலா வணக்க முடையவன் சேயே
யிலாதவன் விகாதமே புரிவன்
இயம்பிடு சூரன் மத்திம வயதாம்
என்பர்பூ ராடத்தின் முதற்கே
பேதுறும் யோகி சவுந்தரி யோனும்
பெட்புறுஞ் சிநேகித மில்லான்
பேதையாம் வேசை கமனனென் றுரைப்பர்
பெரியவ ரிரண்டதாங் காற்கே

மாறிலாச் சுகவான் பாக்கியவான் மாதா
வாலிபந் தன்னிலே மரிப்பள்
வளர்பெரு நோயன் குணமுளன் தெளிவன்
மன்னிய மூன்றதாங் காலே
வீறிலான் முதுகில் நோயுளன் திருடன்
விளம்பிய வாதவான் பலவான்
மேவிய துரோகி சிறுவய திற்காம்
விளம்பிய தந்தைநாற் காற்கே.

(இ-ள்) பூராடம் முதற்காலில் சனித்தவன் யாவரையும் மெத்த உண்மையுடன் பணிபவனும், மக்கட்பிறவியற்றவனும், கலகம்மூட்டுவிப்பவனும், இவனே நல்ல பராக்கிரமனென்னும் பெயரெடுப்பவனும், அரைபாக வயதுடையவனென்றும் கூறுவர் எ-று.

(வி-ரை) புத்திரப்பேறில்லாதவனென்றது நக்ஷத்திரப் பொதுவாய் உரைத்ததேயாம். இத்துடன் கிரகங்களிருக்கும் தன்மையறிந்து புத்திர காரகன் புத்திரஸ்தானாதிபதி இவர்களிருக்கும் சுபாசுபங்களை அறிந்துச் சொல்லவேண்டும் என்பதாம்.

இதனால் புத்திரஸ்தானத்தில் இராகுவும் புத்திரஸ்தானாதிபதி சனி புதன் வீட்டில் தனித்தும் நட்புபெற்றும், புத்திரகாரகர் லக்கினத்திற்கு இரண்டிலும், புத்திரஸ்தானத்திற்கு கருமஸ்தானமும்பெற்று தன் வீட்டிற்கு 9-12 ஸ்தானத்தில் இருப்பதால் நம் நூலாசிரியர் 5-ஆம் பாவகத்தில் கூறியதாவது: "புத்திர ஸ்தானத் தாதி ஏகனாய் புதன் வீடேறில்-புத்திரர் அர்ப்பம்" என்றதை பின்வரும் 592-ஆம் செய்யுளால் காணலாம்.

மூடவனுரைந்தில்சிற்க முதற்பிறையுடனேபாபி
இடமதாயைந்தோன்நட்பாய் இனிக்குருவுடனேபாபி
திடமதாயுதயந்தன்னில் சுகனுமேவின்றானகில்
நடவதேபுத்ரருண்டாய் நசித்துடன்போமேசொல்வாய்.

என்றபடி புத்திரஸ்தானமாகிய 5-ஆம் ராசியில் சனியிற்கவும், சந்திரன் பாவகோட்களுடன் சேரவும், புத்திரஸ்தானாதிபதி எந்த க்ஷேத்திரத்திலேனும், நட்புபெறவும், புத்திரகாரகராகிய குரு பாவக்கிரகங்களுடன்கூடவும், புத்திரன் பிறந்து இறந்துபோவாரென கேரளத்தில் சொல்லியபடி நக்ஷத்திரப் பலனுடன் கிரகசாரங்களை ஒட்டியே பலன் சொல்லவேண்டுவது அவசியமாகும். இப்பால் பூராடம் இரண்டாம்காலில் உதித்தவனைக்குறித்து கீர்த்திவாய்ந்த சன்யாசியும, அழகிய தேஜசுள்ளவனும், தன் ஆபத்துக் காலங்களில் உதவிசெய்யக்கூடிய நட்புடையோரில்லாதவனும், பேதமையுடையவனும், தாசிகளின் மோகவானென்றும் கூறுவர். மூன்றாங்காலில் ஜெனித்தவன் மாறுபடாத சவுக்கியத்தை யுடையவனும், தனசம்பத்து படைத்தவனும், மத்திய வயதிலேயே தன் மாதாவை இழந்துபோகுபவனும், நீங்காத ரோகமுள்ளவனும், உத்தம சிந்தையுள்ளவனும், யாவுமறிந்தவனுமாவான். நாலாங்காலிலுதித்தவன் அச்சமில்லாதவனும், முதுகில் பாதையுடையவனும், சோரனும், அநியாய கொடுமைகளை யுரைப்பவனும்,

வஞ்சகம் புரிபவனும், இளையவயதிலேயே தன் பிதாவை இழப்பவனும் ஆவான் என்று கூறுக. மேல் பிதாவை இழப்பன் என்பதையும் 9-ஆம் பாவகத்தால் ஆராய்ந்து சொல்லுக. (145)

## உத்திராடம்

ஏர்பெறு நல்ல புத்திமா னீகை
யான்றகு நூல்பல னறிவன்
ஏதிலா தாசான் றனையுப சரிப்பன்
எனப்புக லுத்திரா டத்தின்
ஓரதாங் காலிலுயர்பெரு வாக்கி
யுலோபியாம் பிலுக்கணற் றிடவான்
உச்சிதமாய்க் கருமம் ராச்சியத் தியற்றும்
உடனிரண் டாகிய காற்கே
கூரிய கர்வி பெருமொழி யாளன்
குரூரனுங் கலங்கின மனதான்
கோபியாங் தூல வடிவுள னென்றே
கூறுமூன் றென்றதோர் காற்கே
வீரிய னல்ல தன்மமே முடிப்பன்
விசேஷகா ரியமுளான் லோக
வியாபார முடையன் பந்துபக்ஷ முள்ளன்
வேண்டிய நாற்பதம் வந்தோன்.

(இ-ள்) உத்ராடம் முதற்காலில் உதித்தவன் எந்நாளினும் குன்றாத அறிவுள்ளவனும், தருமங்களைச் செய்ய முயற்சிப்பவனும், தருமசாஸ்திரங்களான நன்மையைத்தரும் பற்பல நூல்களையும் தெரிந்துகொள்பவனும், குற்றமில்லாத தன் ஆசானை பணிபவனும், (அ) உபசரிப்பவனும், ஆவான் என்று கூறுவர். இரண்டாங்காலில் ஜனித்தவன் பெருவாக்குடையவனும், (அ) படபடப்போடு பேசுபவனும், தருமம் செய்யாதவனும் அற்பகுணமும், பலமுடையவனும், தன் சொந்த ராஜ்யத்திலே நல்ல மேலானசெய்கைகளை யுடையவனும் ஆவானென்று கூறுக. மூன்றாங்காலில் உதித்தவன் அகங்காரமுடையவனும், பேசும்போது சாமர்த்தியமாய் பேசுபவன் அல்ல. பேசுவதில் ஆசையுடையவனென்றும், துர்மனத்தனும் பலவிதமான சிந்தையுடையவனும், கோபமுள்ளவனும், தடித்த திரேகம் உடையவனு மாவானென்று கூறுவர். நாலாங்காலிலுதித்தவன் தைரியம் பலம் இவைகளை யுடையவனும், அருமையான அறமென்னும் தியாகம்கொடுப்போனும், பற்பல விஷயங்களை யறிந்தவனும், பற்பல தேசங்களில் கொள்ளுதல் விற்குதல் உடையவனும், அதாவது வியாபாரியும், தன் உறவின்முறையாருக்கு அன்புடையவனாகவும் இருப்பானெனக் கூறுக எ-று. (146)

## திருவோணம்

வந்திடும் புத்தி மான்றூல தேகி
மைந்தரி லான்போக வானும்

மன்னுமுற் சாகி கலகவான் கர்வி
யாந்திரு வோணத்தின் முதற்கால்
சந்ததம் பிரம ஞானியாங் காமி
தடவிலான் லோபியாஞ் சிநேகம்
தானிலா னென்றே சாற்றுவ ரிரண்ட
தாகிய காலதாம் பலனே
தந்திடுங் காமி ரோகிநற் போகி
தனமுளன் மெத்தவே யுதாரன்
தயவிலா னென்றே யுரைத்திடு வார்கள்
அரும்பத மூன்றினும் பயனே
சிந்துர நுதல்வே சையர்விருப் புடையான்
சீலவான் தருமவான் றியாகி
சிறப்புளன் தனவான் பயிரிடு வானுஞ்
செப்புநாற் காற்பல வகையே.

(இ-ள்) திருவோணம் முதற்காலில் உதித்தவனைக் குறித்து ஜோதிட வல்லவர்கள் கூறுவதாவது அறிவாளியும் யாவரும் புகழத்தக்க திட சரீரம் உடையவனும் மக்கட்பேறில்லாதவனும், ஸ்திரீசுக மிகுதியுள்ளவனும், எக்காலமும் நீங்காத சந்தோஷத்தையுடையவனும், கோள் சொல்லு பவனும், அகங்காரத்தை யுடையவனுமாம். இரண்டாங்காலில் உதித்த வனைக் குறித்து எக்காலங்களிலும், பரமாத்ம சொரூபமெனத் தொழும் சந்நியாசியும், இறந்தகாலம் நிகழ்காலம் எதிர்காலம் இவைகளை அறிந்த வனும், போகத்தை இச்சிப்பவனும், ஈவுஇரக்கம் முதலிய இரக்க நெஞ்சு இல்லாதவனும், தரும முதலிய நற்குணமும், இன்பமான மொழி, அன்பு முதலியவைகள் இல்லாதவனென்று கூறுவர். மூன்றாங்காலிலுதித்தவன் மோகத்திலாழ்ந்தவனும், வியாதியையுடையவனும், ஸ்திரீசுகங்களை அதிக மனுபவிப்பவனும், பூரண தனத்தையுடையவனும், யார் என்ன கேட்கினும் தடையின்றி பதிலளிப்பவனும், இரக்கமென்பது கொஞ்சமேனுமில்லாதவ னும் ஆவானென்று கூறுவர். நாலாங்காலிலுதித்தவன் பலனைச் சொல்லு மிடத்து தன் மத்தகத்தின்மீது சிந்தூரமென்னும் பொட்டிட்டிருக்கும்தாசி களிடம் ஆசையோடிருப்பவனும், சுத்தத்துடனிருப்பவனும், ஈகையாள னும், தியாகமென்பதைக் கைக்கொண்ட உபகாரியும், யாவரும் புகழத்தக்க வனும், செல்வமுடையவனும், உழவுசெய்து ஜீவிப்பவனும் ஆவான் எ-று

## அவிட்டம்

வகையிலான் காமி பசிபொறுன் மனதில்
வசையுறு கிலேசநிட் டூரன்
வளம்பெறு தூல சரீரவான் கரியன்
மருவிய அவிட்டத்தின் முதற்கால்
தகையிலான் மனதினிற் பேதக முடையான்
சத்தியன் புத்திமான் முடியன்
சாத்திர வாதி யூக்கமுள் ளோனும்
தருமவா னிருபத மென்ப

திகைசெறி குணவான் குறுகிய மெய்யன்
சேர்ந்திடு திடமுளன் மானி
செப்புநன் னடையான் செந்நிற வானுந்
தெரிந்திடு மூன்றதாங் காலில்
தொகைமிகு தனவான் குரூரனுந் தூல
தேகவான் கர்விபே தகனும்
துலங்கிய வுரோம வழகுடை யோனுஞ்
சோர்வறு நாற்பாதந் தொட்டோன்.

(இ-ள்) யாவரும் புகழத்தக்க அவிட்டமுதற்காலிலுதித்தவன் எந்த விஷயங்களையும் ஆராய்ந்துபார்க்கும் சக்தியில்லாதவனும், ஸ்திரீலோலனும் பசிவந்தபோது அதை பொறுக்காதவனும், சந்தேக நெஞ்சமுடையவனும், யாவரும் கண்டு கொடிய வசனம்சொல்ல இடம்கொடுத்தவனும், வளமை பொருந்திய திடதேகமும், கறுத்த சரீரம் உடையவனுமாக இருப்பான் எனக் கூறுக. இரண்டாங்காலிலுதித்தவன் இரக்கநெஞ்சில்லாதவனும் பிரிவினை எண்ணமும் பேதகம் நினைப்பவனும். தானுரைத்தமொழி தவறாதவனும், அறிவாளியும், அநேக இடி முதலிய துன்பங்களை அனுபவிப்பவனும், பற்பல நூற்களையறிபவனும், ஊக்கமுடையவனும், ஈகையாளனுமாக இருப்பானெனக் கூறுக. மூன்றாங்காலிலுதித்தவனைக்குறித்து எந்த காரியங்களிலும் சந்தேககுணமுடையவனும், நற்குணமும் மெலிந்த குள்ள திரேகமுடையவனும், தைரிய நெஞ்சுடையவனும், நற்செய்கைகளையுடையவனும், சிவந்த நேத்ரமுடையவனுமென்று கூறுவர். நாலாங்காலிலுதித்தவன கணக்கிடமுடியாத செல்வத்தைப் படைத்தவனும், துர்ச்செய்கையையுடையவனும், தடித்த சரீரம் உள்ளவனும், அகங்காரமுடையவனும், குற்றம் நினைப்பவனும், (அ) ஓரஞ்சொல்பவனும், அழகுடைய உரோமமுடையவனுமாவானென்று கூறுவர் எ-று. (148)

## சதயம்

தொட்ட நற்குணவான் அழகுளா னுதாரன்
சுசியனும் விப்பிரர் மேலும்
துலங்கிய பசுக்கண் மேலுநற் பிரியன்
நிதியுளான் சதயமொன் றுங்கால்
பொட்டெனக் கோப முடையவன் கிலேசி
பொருந்துநற் பேதகம் புரிவான்
புனிதம தில்லான் இழிகுலந் தன்னிற்
பொருந்துபி னிரண்டதாங் காலே
பட்டுநற் கருமப் பொருத்துடன் முடிப்பன்
பசியுடன் வயிற்றுநோ யுள்ளான்
பண்புடன் பித்தன் சேவகா விருத்தி
பண்ணுவன் மூன்றதாம் பதமே
நட்டணை யுணர்வா னுத்தேசி மானி
நாடிய காரிய முடிப்பான்

நல்லவன் சுகவா னுற்பத மென்றே
யுரைப்பர் நான்மறை யோரே.

(இ-ள்) சதய முதற்காலிலுதித்தவன் உத்தம சிந்தையுடையவனும், தேஜசுடையவனும், யாரென்ன கேட்கினும் உடன்பதிலளிப்பவனும், விப்பிராகளிடத்தும் பசுக்களிடத்திலும் நிறைந்த ஆசையுடையவனுமாக இருப்பான். இரண்டாங்காலிலுதித்தவன் திடீரென சினம்வரும் குணமுடையவனும், சந்தேக நெஞ்சுடையவனும், பேதகம் சூதுசெய்யும குணசாலியும் அசுசியானவனும் கீழ்ஜாதியில் பிறந்தவனுமாக இருப்பானெனக்கூறுவர். மூன்றாங்காலிலுதித்தவன் தனக்கு பலன்தரும் நற்காரியங்களை ஆராய்ந்து ஆலோசித்து உடனே முடிப்பவனும், அடிக்கடி பசியுள்ளவனும், உந்தியில் பாதையுடையவனும், தேகத்தில் பித்தம் நிறைந்தவனும், அடிமைத் தொழில் புரிபவனும், அறிவு நிறைந்தவனுமாக இருப்பானெனக் கூறுவர். நாலாங்காலிலுதித்தவன் நல்ல அருமையான விஷயங்களை தெரிந்துக் கொள்பவனும், நீண்ட ஆலோசனையும், தனக்கு இழிவுவராமல் பாதுகாப்பவனும், தான் உத்தேசித்த விஷயத்தைக் கட்டாயம் முடிக்கும திறமும் உத்தமனாகவும் சவுகயமுடையவனுமாவானென்று கணிதவல்லோர்கூறுவர்.

## பூரட்டாதி

மறையவன் பரந்த முகமுளன் பலவான்
மனைவிமேற் பிரியன்போர் புரிவன்
மனவுணர் வுடைய னுத்தேசி சுகவான்
மன்னுபூ ரட்டாதி முதற்கால்
இறையவன் சிரேஷ்ட மந்திர மறிவன்
இளைத்திடான் மனதுமே யொல்கி
எவர்க்குமே வணங்கிக் காரிய முடிப்போன்
இருபதஞ் சந்தோஷ வானும்
பொறையுளா னல்ல நடையுடைப் புலவன்
பிறர்மனைப் போசனப் பிரியன்
போதஞ்செய் பித்த ரோகிய னாகும்
புத்திமான் பேசிடு மூன்றில
தரைபுகழ் குணவான் சத்திய னழகன்
ருழ்வறு சிநேகிதப் பிரியன்
நற்றெழில் புரியுஞ் சுகமுள சீமான்
சாற்றுநாற் பதமுறு நாளே.

(இ-ள்) வேதங்களைக் கற்றுணர்பவனும் விசாலமான பரந்த முகத்தை யுடையவனும், வலிவுடையவனும் தன் களத்திரத்தினிடம் ஆசையுடையவனும், போர்செய்யும் திறமுள்ளவனும், மன ஆராய்ச்சியும் சவுக்கிய தேகத்தையுடையவனென்றும் பெருமைபெற்ற பூரட்டாதியின் முதற்காலிலுதித்தவனைக் குறித்துக் கூறுவர். இனி இரண்டாங்காலிலுதித்தவனைக்குறித்து பரமார்த்த தரிசனத்திற்கு ஏதுவாயுள்ள பிரணவமந்திரங்களை அறிந்து கொள்வோனும், எக்காரியங்களிலும் சலிப்படையாத மனமுடையவனும்,

அனைவருக்கும் கீழ்ப்படிந்து ஓர்விஷயத்தைமுடித்துக்கொள்பவனுமாவன். மூன்றுங்காலிலுதித்தவன் எந்நாளிலும் துன்பமென்பதைசற்றேனும் அனுபவிக்காதவனும், நன்மார்க்கங்களே செய்பவனும், நன்னடையாளனும், கௌரவத்தையே அநுபவிப்பான். மேலும் வேதங்களை யுணர்ந்த சாஸ்திர சித்தனும் வெளியார் இல்லங்களி லுண்ண ஆசையுள்ளவனும் பித்தவியாதியையுடையவனும நன்மையே செய்யும் அறிவாளியும் ஆவானென்று கூறுவர். நாலாங்காலிலுதித்தவன் இப்பூமியிலுள்ள அனைவரும் புகழ்ந்து பேசும் நற்குணமுடையவனும், தானுரைத்த மொழி பிசகாதவனும், பூரண தேஜசுடையவனும், எந்நாளும் தாழ்வடைய நட்புடையவனும், சன்மார்க்க காரியங்களையே செய்யும் குணமும், சவுக்கியத்தை யடையும் தனவந்தனும் ஆவானெனப் பேசுவர் வல்லோர் எ-று. (150)

## உத்திரட்டாதி

நாடொறுங் கோபி சஞ்சலன் ருதா
நாடிய வுடம்பினின் மயிரன்
நலம்பெறு சிரேட்டன் பிரதான மென்றே
நவில்வருத் திரட்டாதி முதற்கால்
நீடுறும் ரோசக் காரனும் சாது
நிறைந்திடு மிடியநற் குணவான்
நிலைத்தநன் னடையான் அறிவுளா னென்றே
நிகழ்த்துவ ரிரண்டதாங் காற்கே
கோடுறு புத்தி யிலான்பத்தி மான்முன்
கோபிசந் தோஷிசெம் மயிரான்
கோளனு மூன்றுங் காற்பல மென்றே
கூறுவர் மறையுணர் புலவர்
பீடறுஞ் சொற்கேட் டான்மிக வாடும்
பேதிய னுதாரனற் பயிரை
பேணுவான் கோபி கிலேசவா னாகும்
பெட்புநாற் காற்பலன் ருனே.

(இ-ள்) உத்திரட்டாதியின் முதற்காலில் உதித்தவன் உலகிலுள்ள யாவர்களின்மீதும் மிகுந்த சினமுடையவனும், வருத்தமடைபவனும், ஐஸ்வர்யமுடையவனும், உடலில் உரோமம் நிறைந்தவனும், 9-வகை ரத்தினங்களும் அடையும் மேலானவனு மாவானென்று சொல்லுவர். இரண்டாங்காலில் பிறந்தவன் எந்நாளும் மிகுந்த வைராக்கியத்துடனிருப்பவனும், சன்மார்க்கமுடைய சாதியாசியும், நிறைந்த துன்பத்தை அனுபவிப்பவனும், நற்சிந்தை யுடையவனும், பொறுமையுடன் நடப்பவனுமாவானென்றும் அறிவுடையவனென்றுங் கூறுவர். மூன்றுங்காலில் பிறந்தவனைக்குறித்து துன்மார்க்கங்களை விளைவிக்கும் அறிவில்லாதவனும், கடவுள்பக்தி நிறைந்தவனும், திடமெனவரும் சினத்தையுடையவனும், எந்தக் காலங்களிலும் இன்பத்தோடிருப்பவனும, சிறந்த உரோமங்களை யுடையவனும் கலகமூட்டுவிப்பவனும் ஆவானெனக. நான்காம்காலிலுதித்தவனைக் குறித்து தான்செய்யும் வினைகள் யாவும் நீங்கும்பொருட் டுரைக்கும்மொழி

கேளாதவனும், பின்பு விசனம் துக்கம் இவைகளை அனுபவிப்பவனும் பிறர் கேட்பவைகளுக்கு உடனே பதிலளிப்பவனும், பயிர்த்தொழில்புரிபவனும், சினமுடையவனும் சஞ்சல முதலிய பலவித எண்ணங்களை யுடையவனுமாவான் என சாஸ்திரங்களை யுணர்ந்த மேதாவிகள் கூறுவர் எ-று. ()

## ரேவதி

தேன்மொழி கலகப் பிரியனும் நிபுணன்
செறிகுண வித்துவான் யாண்டும்
செப்பிய கிலேசி சந்தோஷ முள்ளான்
றீடம்பெறு ரேவதி முதற்கால்
தானெனுஞ் சோரன் றீரமா மனத்தன்
சவுக்கியன் கோபிநற் காமி
சஞ்சலன் மிருது வாஞ்சசீ ரத்தன்
ருனிரு கால்பல னென்றே
யான்மொழி புத்தி யிலாதவன் பாவி
படிறனே தனமிலா னுகும்
பரிந்திடு முதாரன் குணமிலா னென்றே
பகருமூன் றும்பத மதற்கே
நானெனுந் தீரன் சத்திய வாக்கி
நவின்றிடுங் குலத்தினிற் கேடன்
நாடிய சுகவான் சத்துரு சங்காரி
நலம்பெறு சூரனுற் பதமே.

(இ-ள்) பெருமைதங்கிய ரேவதியின் முதற்காலில் உதித்தவன் தேனைப்போன்ற இனிய வார்த்தைகளைப் பேசி சண்டைமூட்டுவிப்பவனும் அதனால் மகிழ்ச்சியடைபவனும். உத்தமசிந்தையும், வித்வ சாமார்த்திய முடையவனும், எந்நாளும் நீங்காத மகிழ்ச்சியை யுடையவனும் ஆவனெனக் கூறுவர். இரண்டாங்காலில் உதித்தவன் திருடனெனப் பெயரெடுப்போனும், சவுக்கிய சரீரத்தை யுடையவனும், தைரியமானநெஞ்சைப் படைத்தவனும், சினமுள்ளவனும், ஸ்திரீசுகத்தில் அதிகப்பட்டவனும், பற்பல சஞ்சலங்களை யனுபவிப்பவனும், மெல்லிய உடலை யுடையவனுமாவான் எனக் கூறுவர் மூன்றாங்காலில் உதித்தவன் இனிப்புடைய வார்த்தைகளை பேசுபவனும், அறிவில்லாதவனும், சம்பத்து இல்லாதவனும் எக்காரியங்களுக்கும் முன்வரும் தைரியம் உடையவனும், உத்தம சிந்தை இல்லாதவனென்றும் கூறுவர். நாலாங்காலில் உதித்தவன் எவ்விஷயங்களுக்கும் நான்தானென வரும் தைரியமுடையவனும், தவறுத மொழியுடையவனும், கீழ்க்குலத்தில் பிறந்தவனெனப் பேச உடலெடுத்தவனும், சௌக்யத்தையே அடைவோனும், தன் பகைவர்களை ஜெயிக்கும் திறம் வாய்ந்தவனென்றும், நன்மையையே அடையும் சூரனும் ஆவானெனக் கூறுவர் எ-று. (152)

நட்சத்திர பாதபலப் படலத் தொடர்ச்சி முற்றிறறு.

# இராசிகளில் சந்திரன் நின்ற பலன்



[ஜெனனகாலங்களில் ஏதேனும் ஒரு ராசியில் சந்திரனிருப்பது நிச்சயமே இதனை உயிர் இலக்கினமெனக் கூறுவர். ஒவ்வொருவரும் எந்த நக்ஷத்திரம் எந்த ராசியில் உதித்தார்களோ அதைக்கொண்டு நக்ஷத்திர தரிக்கால்படி ஒவ்வொரு கிரகங்களுக்குரிய இராசியை அறியவேண்டும். அப்படி காண்போமானல்,]

## மதி மேடத்தில் நின்ற பலன்

பன்னிரு ராசிகடோறுஞ் சந்திரன்ரு னின்றபலன்
பகர்வர் மேடத்தின் மதிநிற்கப் பிறந்தோன்
மின்னுவிழி யிருண்டு சற்றேசிவந் திருக்குங்காமி
மிகுதூர நடந்திடுவன் சீக்கிர சந்தோஷி
பொன்னைமிகத் தேடியுடனே செலவுபுரிவான்
புயவலன் வீர்யன்மடவார் கலவிக்கு வலியன்
சென்னிதனின் மறுவடுவொன் றுளன்சபல ஞகும்
சலகண்டஞ்சுவன் முழந்தாட் செறிபிணி யுள்ளவனும்.

(இ-ள்) பன்னிரண்டு வீடுகளிலும் சந்திரன் நிற்கும் ஒவ்வொரு வீட்டின் பலத்தையும் பலனையும் சொல்லுகிறேன் கேட்பாயாக. கடகத்தில் ஆக்ஷிநாதனை சந்திரன் தன் வீட்டிற்கு ராஜ்யஸ்தானமான மேடராசியிலிருப்பானேயாகில் பிரகாசிக்கத்தக்க கண்கள் சிவந்து உருண்டிருப்பதோடு போகசுகத்தை அதிகம் இச்சிப்பவனும், அதிகதூரம் நடந்துசெல்பவனும், கொஞ்சத்தில் சந்தோஷம் கொள்ளுபவனும், பொருள்களை சம்பாதித்து அதை உடனே செலவுசெய்பவனும், பலமுடைய சரீரமுடையவனும், பராக்கிரமம் உடையவனும், பெண்களிடம் கலவிசெய்ய சலியாதவனும், மருவென்னும் அடையாளம் சிரசிலுள்ளவனும், மௌனமென்னும் குணத்தனும், கவன குறைவுள்ளவனும், நீரைப்பார்த்து அச்சங்கொள்ளுவோனும், எந்நாளும் முழங்காலில் வலியுள்ளவனும் ஆவான் எ-று.

(வி-ரை) கடகராசிக்கு ஆக்ஷிநாதனை சந்திரன் குஜன் வீடாகிய மேஷராசியிலிருந்து அவையே லக்கினமாகவே இருந்தாலும்,

ஆமரி யுதயத் திங்கள் அமைந்துர வமைச்சன் பார்க்கின்
மாமகிழ்பதி சன்மானன் மரியிர்பா னுதயமாகில்
பூமரும் சுபரே பார்க்கில் புவியன்னஞ் மேடத்தில்
காமரு சனியுதிப்பக் கண்டிட ஜலகண் டம்மே.

(இ-ள்) மேடலக்கினமாகவே இருந்து அதில் சந்திரனிருக்கவும், குரு பார்க்கவும், ஜெனிப்பானுகில் ராஜாக்களால் அநேக சன்மானங்களைப் பெறுவான. ஷை மேடராசியில் சூரியனிருந்து புதன் முதலிய சுபகிரகங்கள் நோக்கில் அரசனுவான். சனி பிரவேசித்திருந்தால் ஜலகண்டம் உண்டென சாதகசிந்தாமணியில் கூறியபடி கிரக பார்வை சேர்க்கை முதலியவைகளையும்கொண்டு பலன் சொல்லுக. (158)

## மதி இடபத்தில் நின்ற பலன்

உள்ளமகிழ்ந் தருளுமதி யிடபத்தி லிருக்க
வுற்பவித்தோன் குணங்கிருபை யுடனல்ல ரூபன்
தெள்ளியநா சியின்முகத்திற் பக்கத்தில் மறுவான்
தியாகவான் ஞெருடைவதனம் பருத்திரும லுனனும்
பிள்ளைகண் முந்தியுள்ளான் பெண்பெறுவன் பொறுமை
பெரும்பசிய னிருசொல்லன் பின்புசந் தோஷிப்பன்
கள்ளவிழி யார்க்கினிய னண்பருக்கு நண்பன்
கண்டிடுமத் திமவயதோன் சவுக்கியபாக் கியவான்.

(இ-ள்) *சந்தோஷத்தை தராநின்ற சந்திரன் ரிஷபராசியிலிருக்க உற்பவித்தவன் கடவுள் அனுக்கிரகம்உள்ளவனும், நல்மனத்தனும், அழகிய ரூபமுடையவனும், அருமைவாய்ந்த மூக்கிலும் முகத்திலும் பக்கத்திலும் மருவு என்னும் அடையாளக்குறி யுடையவனும், தருமம் இடுபவனும், தொடையும் முகமும் பருத்தவனும், இருமல் என்னும் வியாதியை யுடையவனும், முன்னால் பிள்ளைகளையும் பின்னால் பெண்களையே பெறுவோனும், அதிக பசியை யுடையவனும், பிற்காலங்களில் சந்தோஷ மடைபவனும், கூர்மை பொருந்திய திருட்டு விழிகளையுடைய பெண்களுக்கு நேசனும், குறைந்த வயதுள்ளவனும், பாக்கிய முதலிய சவுக்கியங்களை பெறுபவனும், ஆவானென தேனைப்போன்று இனிய மொழிகளையுடைய பெண்ணே! கூறுவாய் எ-று.*

(வி-ரை) *'கள்ள விழியார்க் கினியன்' என்பதை திருடர்களுக்கு சிநேகனென்றும் சிலர் உரைகூறுவர். அற்ப ஆயுள் என்பது பொதுவாகக் கூறியதாகையால் இதை வேறுவிதமாகவும் ஆராய்ந்து கூறுதல் நலம்.*

*எப்படி யெனில்?*

*மதிக்கெட்டின் மைந்தன் நிற்க மன்னவன் பூமர்க் கெட்டாய்*
*விதிக்கெட்டில் வெள்ளி நிற்க விடையுமோ இரவிக் கெட்டாய்*
*உதிக்கெட்டில் புந்திக் கேழி லொருவனாய் சோம னின்றால்*
*கதித்தெட்டு வருஷம் தன்னில் கண்டிடு மாதே சாவே.*

*என்ற கேரள சுலோகப்படி சந்திரன் நின்ற ராசிக்கு 8-ல் சனியும், ஆயுளுக்கு 8-ல் சுக்கிரனும், ஜெனனலக்கினத்திற்கு 8-ல் புதனும் சந்திரனும் தனித்தும் இருப்பானாகில் பிறந்த 8-ஆம் வருடத்தில் இறந்துபோவான் என்று சொன்னதோடு இன்னும் இந்நூலில் 8-ஆம் பாவகத்தையும் ஆராய்ந்து ஆயுள் கூறுக.* (154)

## மதி மிதுனத்தில் நின்ற பலன்

வான்மிதுன சசிபலன்மின் னார்மகிழுஞ் சுரதன்
மகிழ்தூதன் சிவந்தக்கண் ணன்மயிர் சுருண்டேயிருப்பன்
தான்மிகச்கு துகள்பெறுவ னழகன்சத் தியவான்
சாப்பாட்டி னிற்பிரியன் தகும்புத்தி மானும்

பான்மைசெறி பட்டுடுக்கப் பிரியவான் முகத்திற்
பரிக்குமறு வுளன்பிரிய வாக்குமிகு ரசவான்
தேனனைய மொழிமடவார் கொண்டாடிப் புகழ்வர்
திடமாயுன் னதமாகச் செறிந்திருக்கு நாசி.

(இ-ள்) தண்டே என்றும் சொல்லும் மிதுன ராசியில் யாவரும் புகழத்தக்க சந்திரனிருக்கப் பிறந்தவன் மேன்மைபொருந்திய பெண்கள் கொண்டாடிப் புகழ்பவனும், இனிய சுரசாஹித்யம் பாடுபவனும், யாவரும் புகழத்தக்க தூதுவனும், சிவந்த விழிகளை யுடையவனும், சுருண்ட உரோமம் உடையவனும், சூதுவாது அதிகம் நிறைந்தவனும், சுந்தரமானவனும், சத்தியவாக்கு உடையவனும், சாப்பாட்டின்மீது பிரியம் உள்ளவனும், போதுமான அறிவுடையவனும், புகழைத் தரத்தக்க உயர்ந்த பட்டாடைகளை உடுக்கப் பிரியம் உடையவனும், முகத்தில் மருவென்னும் அடையாளம் உடையவனும் மிகுந்த இன்பம் தரத்தக்க இனிய மொழிகளையுடையவனும் அழகுவாய்ந்திராநின்ற ஸ்திரீகள் கண்டு கொண்டாடிப் புகழ்ந்து பேசும் கீர்த்திவாய்ந்தவனும், பருத்தும் தாழ்ந்தும் இருக்கும் மூக்குடையவனென்றும் கூறுவர் எ-று. (155)

## மதி சுர்க்கடகத்தில் நின்ற பலன்

நாசமிலாக் கடகத்தின் மதியுலவச் சனித்தோன்
நண்ணுபலன் மடவாரை நடைபுரிந்து சபிப்பன்
வீசிவளைந் தோடுவனன் புடையநண்ப ருடையோன்
வீடதிக மாய்க்கட்டி மேவுவன்மெய் குறளன்
நேசமுறு மனக்கள்ள னுத்தேச முள்ளான்
நிலையில்லாத் தனம்படைத்து நீணிலத்தி லிருப்பன்
பாசமுட னனைவருக்கும் பருத்தகழுத் துளனும்
பரவுசம வுபாயனென வேபகர வேண்டும்.

(இ-ள்) நண்டுபோன்ற வடிவத்தையுடைய கடகராசியில் இன்பத்தையே தரும் சந்திரனிருக்கப் பிறந்தவன் அடையவேண்டிய பலனை சொல்லுமிடத்து புன்னகை புரிந்தே ஜெயங்கொள்ளுவோனும், வேகத்துடன் வளைந்து ஓடும் சக்திவாய்ந்தவனும், அன்புடைய நட்புடையோனும் அநேக வீடுகளைக்கட்டி சுகத்துடன் வாழ்ந்திருப்போனும், இனிய சாரீரம் உடையவனும், சூது செய்யும் மனத்த ; ம், பற்பல ஆலோசனைகளையுடையவனும், தனத்தை சம்பாதிப்பவனுயினும் அதனிடம் பற்றில்லா திருப்பவனு , (அ) தனக்கென்ற ரொக்கஸ்திதி இல்லாதவனும் எல்லா ஜனங்களிடத்தும் அன்புடையவனும், தடித்த கழுத்துடையவனும், பொருந்திய உபாயத்தன்மையும் உடையவன் எனக் கூறுக எ-று.

(வி-ரை) இதனை பற்பல நூலாசிரியர் பற்பல விதமாகக் கூறியுள்ளார், எவ்விதமெனின்?

*அலவன் றனிலே ஜெனனமதாய் அமுதக் கிரகணன் ரு திக்க*
*பலரும் புகழ்வார் சாந்தமுளான் பக்ஷித்திடுவன் காய்கனியை*

உலவும் பெண்கள் லோலனுமாய் உறவோ டிருப்பான் நன்மையுளான்
தலமுந் தேடி வாழ்ந்திடுவான் தருமம் செய்வா னென்றோதே.

(இ-ள்) ஜெனன லக்கினம் கடகமாகவே இருந்து அதில் சந்திரன் இருக்க ஜெனித்தவன் யாவரும் கண்டு புகழ்ச்சிசெய்பவும், காய் கனிகளை பக்ஷத்தோடு புசிப்பவனும், ஸ்திரீலோலனும், யாவரையும் சிநேகம் செய்துக்கொள்பவனும், நன்மையை யுடையவனும், தன் சொந்தமாய் இல்லம் சம்பாதித்து அதில் வாழ்பவனும், தருமவானென்றும்சொல்வர். இவ்வாறே ஒவ்வோர் ராசியும் ஆராயும் அளவில் ஜெனனலக்கினம் சிம்மமாகில் தான் தேடும் தனம் நன்மார்க்க விஷயமாய் செலவிடுவோனும், கன்னியாகில் ஸ்திரீகள் மூலமான பொருளும் சன்மார்க்க விஷயங்களில் பொருள் சம்பாதிப்பவனென்றும், துலாமாகில் மாதுருசுகம் உள்ளவனும் கஷ்டமில்லாத உத்தியோகமுடையவனும், விருச்சிகமாகில் சவுக்கியத்தையே அனுபவிப்பவனென்றும், தனுசாகில் ஜலத்தினால் பயங்கரம் அல்லது கெண்டம் உடையவனெனவும், மகரமாகில் சொந்த உறவினரால் களத்திரம் கொள்வோனும், கும்பமாகில் சீதளவியாதியுடையவனும், கடன் உள்ளவனென்றும் மீனமாகில் அம்மான்வகை விருத்தியும், பிதுரார்ஜித பூஸ்திதியுடையவனும் மேஷமாகில் சவுக்கியசரீரமும், மாதுருசுகம் உடையவனென்றும், ரிஷபமாகில் இவனுக்கு இளைய சகோதரம் பெண் பிறக்குமெனவும், மிதுனமாகில் கும்பத்தில் லக்ஷ்மி கடாக்ஷம் பொருந்தி இருக்குமெனவும் கூறியபடியும், இன்னம் பற்பலவிதமாகவும் ஆராய்ந்து பலன் சொல்லுக. ()

## மதி சிம்மத்தில் நின்ற பலன்

வேண்டிடுஞ்சிங் கத்தினின்ற சந்திரனிருக் கும்பலன்கள்
மிகுகொடியன் நெடுங்கதுப்பன் மின்னார்க்குப் பகைவன்
நீண்டமலை யிற்காட்டிற் சஞ்சரிக்கப் பிரியன்
நேயமிலான் பசிதாக முடையனூண் பிரியன்
தீண்டிடு தாம்பூல நேயன்மனோ துக்கன்
தியாகியெழில் பராக்கிரமன் றிரபுத்தி யுளனும்
ஆண்டகர் விதநடையான் விசாலமுள வதனன்
அற்பகா ரியக்கோபி யாவனெனச் சொல்லே.

(இ-ள்) யாவரும் கோரப்பட்ட சந்திரன் சிங்கராசியில் நிற்கப் பிறந்தவன் மிகுந்த பொல்லாதவனும், அற்பகுணனும், பெண்களிடம் விரோதமுடையவனும் அடர்த்தியுள்ள பயங்கரமான காடுகளிலும் மலைகளிலும் சஞ்சரிக்கப் பிரியமுடையவனும், சிநேகிதத்தன்மையுடையவனும், மெத்த பசி தாகம் உடையவனும், சாப்பாட்டில் பிரியமுடையவனும், தாம்பூலம் தரிக்க மிகுந்த ஆசையுடையவனும், துக்கசாகரம் உடையவனும், தருமசாலியும், மிகுந்தவீரபராக்கிரமமும், கூர்மையானபுத்தியும், நடக்கும்போது மிகுந்த செருக்குடையவனும், விசாலமான அகன்ற மார்புடையவனும், அற்ப விஷயங்களுக்கெல்லாம் கோபம் கொள்வோனும் ஆவான் எனக் கூறுக எ-று. (157)

## மதி கன்னியில் நின்ற பலன்

சொல்லுங்கன் னியிற்சோமன் சூழ்பலன்கள் பகரில்
சுகவான்சத் தியவாக்கி சுரதத்திற் பிரியன்
கல்வியிற்சாத் திரவகையில் வல்லவன்மெய் யிளைத்தோன்
காயமுமுன் னதன்லச்சை யுடன்படுநற் கருமன்
வெல்லுமேம் பாடுடையான் தர்மசிந்தை யாளன்
சுதேசத்திற் சஞ்சாரி மிருதிவாக்கு முளனும்
நல்லவர்கள் பலராலே பூசிதம்பெற் றிடுவன்
நாரியரே பிள்ளைகொஞ்ச மாநவிலுங் காலே.

(இ-ள்) *பெண்ராசி யென்று சொல்லும் கன்னியாராசியில் சந்திரன் நிற்கப் பிறந்தவன் பலன்களை சொல்லுமிடத்து சௌக்கியமுடையவனும், தவறாத மொழியுடையவனும் சங்கீத சாகித்தியங்களில் பிரியமுடையவனும், வித்தை முதலிய புராண சாஸ்திரங்களின்மீது ஆசையுடையவனும், சாமர்த்தியமுடையவனும், சிறிய திரேகமுடையவனும், தனக்கு சுகத்தை தரத்தக்க காரியங்கள் அதிக கஷ்டத்துடன் கைகூடுதலும், எவ்விஷயங் களையும் ஜெயிக்கும் மேன்மையான அந்தஸ்துடையவனும், தருமம் செய்ய வேண்டுமென்ற உள்ளன்புடையவனும், அன்னிய தூரதேசங்களில் சஞ் சரிக்கப் பிரியமுடையவனும், அருமையான சந்தோஷ வார்த்தைகளைப் பேசுவோனும், அநேக உத்தமர்களால் போற்றப்படுவோனும், பெண்களை அதிகமாய்ப் பெறுவோனும், பிள்ளைகள் கொஞ்சம் உடையவனும் ஆவான் என்று சொல்லுவாய் எ-று.* (158)

## மதி துலாத்தில் நின்ற பலன்

காலேகோ லிடத்தினிற் சந்திரனிருக்கும் பலன்கள்
கன்னியரைச் சயித்திடுவன் கல்வியிற்பண் டிதனும்
மேலேகிஞ் சிதரோகி சுகனிதிய முடையோன்
விப்பிரர் தேவர்களிடத்திற் பிரியன்வெகு சாந்தன்
கோலேபோ லிளைத்தசையாப் பிரகிருதி யிலையான்
கொள்ளவும் விற்கவும்வல்லன் குலமாத ருடையன்
மாலேகே டமர்பகைவ னுமங்க வீனன்
மனதிற்சந் தோஷமிலான் வன்மனுங் கண்டீர்.

(இ-ள்) *தராசைப்போன்ற உருவத்தையுடைய துலாராசியில் சந்திரன் நிற்கப்பிறந்தவன் பெண்கள் சுகம் அதிகம் இச்சிப்பவனும், வித்தையில் மகாவல்லவனும், கொஞ்சம் வியாதியுள்ளவனும், சவுக்கியத்தைத்தரும் செல்வத்தையுடையவனும், அந்தணரிடத்தும் தேவர்களிடத்தும் அன்பு வாய்ந்த பக்திவிசுவாசமுடையவனும், அதிக சன்மார்க்ககுணமுள்ளவனும், மெலிந்த சரீரமுள்ளவனும், அசைவில்லாத குருவுபதேசமில்லாதவனும், நாற்கால் ஜீவன்களென்கிற வாகன வியாபாரம் செய்பவனும், தன் குலத் தைச்சார்ந்த சொந்தவகையில் களத்திரம் கொள்பவனும், பகைவருடையவ னும், அவயவ ஈனமுடையவனும், எந்நாளும் விசனமுடையவனுமாவான் என்று மேகத்தைப்போன்ற கறுத்த கூந்தலையுடைய பெண்ணே கூறுவாய்.*

## மதி விருச்சிகத்தில் நின்ற பலன்

கண்டீர்சந் திரபகவான் விருச்கிகத்தின் பலன்கள்
　　கருதுங்காற் றிரண்டமுழங் காலுடையவ னுவன்
கொண்டாடும் வாலிபத்திற் பிதாவையிழந் திடுவன்
　　கொடியசேஷ் டையனச்சங் கொள்வானே யாளன்
செண்டாடுஞ் செங்கைமன்னர் பூசித்தனு யிடுவன்
　　செனங்களறி யாதொளித்துச் செய்குவன் பாபத்தை
மிண்டாகும் பக்ஷிமிரு கம்பிடிக்குங் கையன்
　　விழிமார்பும் பருத்திருக்கு மெனப்பலன்கள் கூறே.

(இ-ள்) பிரகாசம் தங்கிய சந்திரன் தேள் என்னும் விருச்சிகராசியில் இருக்கப் பிறந்தவன் அடையவேண்டிய பலனை சோதிக்குமிடத்து பருத்த முழங்காலுடையவனும், யாவரும்பார்த்து புகழ்ந்து பேசவேண்டிய வாலிப வயதில் தன் பிதாவை இழந்துபோகுபவனும், துஷ்டசெய்கைகளும் மனதில் பயங்கரம் கொள்ளுபவனும், நோயாளியும், ஆரகேயூரம் முத்தாரம் முதலிய ஆபரணங்களை அணிந்து தருமத்தை கொடிநாட்டி அரசுசெய்யும் மன்னரால் போற்றப்படுவோனும், பாவசெயல்களை ஒருவரும் அறியாது ஒளித்துச்செய்பவனும், வனங்களில் உலாவியுள்ள பறவை முதலிய மிருகங்களைப் பிடிக்கும் வல்லவனும், பெருத்த கண்களும், திரண்ட மார்புமுடைய னுமாக இருப்பானென கூரமையான கண்களையுடையவளே கூறுவாய்.

(வி-ரை) பிதாவை இழப்பனெனக் கூறியது பொதுவாகையால் அதனை பாவபலனுல ஆராய்ந்து கூறுவது நலம்.

*அருந்துபாக் கியத்துள்ளோனு மருக்கனும சராசிக்கு*
*ளிருந்துதான் சராங்கிஷத்தி லேறிடிற் பிதுர்தேசாந்தரம்*
*திருந்துபாக் கியன்பாலுக்கு ஜென்மஞ் ஜென்மத்தினிற்கும்*
*வருந்தறற் தானகிற்கின் மகிழ்பிதா தேசாந்தரந்தான்.*

(இ-ள்) ஜெனன லக்கினத்திற்கு 9-ஆம் வீட்டோனும் சூரியனும் சர ராசியிலிருந்தாலும், (அ) அஙகிஷமபெறறிருந்தாலும் அவன் பிதா தேசாந்திரங்களில உலாவுவான். ஷை இடஙகளில 9-ஆம் வீட்டோன் சூரியனே டாவது 5-6-8-12-வது இருக்கின் அவன் பிதா தேசாந்திரம் செல்வான எனவும்,

*ஞாயிறு திங்கள் செவ்வாய் நற்குரு வெள்ளி கூடிற்*
*காயுரு பிதுர் துவேஷி காரிரா குவுமொன் பானில்*
*வாயுறக் கூடி நிற்கி லருள்பிதா தோஷ மென்பர்*
*லோயுரா தாவி நீல னுரிற்பிதுர் வஞ்ச னுமே.*

(இ-ள்) சூரியன் சந்திரன் செவ்வாய் இம்மூவரும் கூடி ஓர் இராசியில் இருந்தாலும் ஜாதகன் தன் பிதாவை துவேஷம் செய்வான். சனியும் ராகுவும் 9-ஆம் ராசியிலிருந்தால் பிதாவுக்கே அரிட்டம். சனிமாத்திரம் தனித்திருந்தால் பிதாவை வஞ்சகம் செய்வான் என்று சாதகசிந்தாமணியில் 8-ஆம் பாவகத்தில் சொல்லியபடி ஆராய்ந்து கூறுக. (160)

## மதி தனுசில் நின்ற பலன்

கூறுதனு ராசியிற்சந் திரனின்ற பலன்கள்
கூன்முதுகுள்ள பலவான் குலவிய கம்பீரன்
வீறுநிதிக் கினியவனுற் சாகிசிற்ப மறிவன்
மிகுமாசை யுளன்வெல்லுஞ் சொல்லன் வீரியவான்
தேறுபிதா நிதியதனைச் செலவுசெயுந் தியாகி
செய்யபுயந் திரண்டிருக்கும் திண்கவிதை யறிவான்
மாறுசெய்தே தமரைத்தூ ஷிப்பன்வசி கரனும்
மணிகளணிந் திடுகழுத்தும் வதனமுநீண் டிருப்பன்.

*(இ-ள்) காண்டீவமென்று சொல்லும் தனுசுராசியில் சந்திரன் நிற்கப் பிறந்தவன் பலன்களை சொல்லுமிடத்து முதுகில் கூன் உள்ளவனும், வலி யுடைய பலத்தையும் அழகுள்ள கெம்பீரனும், படாடோபமுள்ளவனும், திரண்ட செல்வங்கள்மீது பிரியம் உள்ளவனும், எக்காலமும் சந்தோஷத் துடனிருப்பவனும், மனைசாஸ்திர முதலியவைகளை அறிந்துகொள்பவனும், பேராசையும் வாயினாலேயே பேசி வெல்லத்தகுந்தவனும், பராக்கிரமம் உடையவனும், தன் தந்தை சம்பாதித்து வைத்தபொருளை தரும விஷய மாய் செலவு செய்பவனும், பருத்து அழகிய புஜங்களை யுடையவனும், தெள் ளிய வித்தை யறிபவனும், தன் சுயபந்துக்களை அன்னியர்களாக எண்ணி வஞ்சிப்பவனும் தூஷிக்கத்தக்கவனும், முகவிலாசம் உள்ளவனும், யாவரை யும் தன்வசமாக்கும சக்திவாய்ந்தவனும், அநேக மணி முதலிய மாலைகளை அணியும் கழுத்துடையவனும், நீண்ட மார்பும் கழுத்தும் உள்ளவன் ஆவானெனச் சொல்வாய் எ-று.* (161)

## மதி மகரத்தில் நின்ற பலன்

நீண்டமக ரச்சசிக்குப் பலந்தனமு மில்லான்
நிறைந்தகா வியந்தெளிவா னிதியுதவா வுலுத்தன்
பூண்டசவு பாக்கியவான் கேடான சொல்லே
புகலுங்கா மியகமனன் புயபலவா னுவான்
வேண்டியவிச் சைகளுடையன் சோம்பனிங் கிதனும்
மின்னனையார் புகழழகன் மெய்க்கிருபை யில்லான்
ஆண்டகையை மனைவியைத்தன் மைந்தரைக்கொண் டாடி
அவனிமிசை யிருப்பனென வறிந்துரைகள் செய்வாய்.

*(இ-ள்) சுறு என்று சொல்லும் மகராராசியில் சந்திரன் நிற்க ஜெனித் தவன் பலனகளை சோதிக்குமிடத்து பலமில்லாதவனும், பொருளில்லாத வனும், புராண காவியங்களை கற்றுத் தெளிந்துகொள்ளுபவனும், பிறருக்கு பணவுதவிசெய்யாத உலோபியும், பூரண சுக சவுக்கியமுடையவனும், கலக வார்த்தையை புகல்பவனும், மோகம் அதிகமுடையவனும், கெர்வ நெஞ்ச முடையவனும், தீர வீர பராக்கிரமம் உள்ளவனும், அளவிறந்த ஆசையும் சோம்பேரியும் குற்றமுடையவனும், பெண்கள் கண்டு புகழ்ந்து பேசும் அழகு உடையவனும், உள்ளத்து அன்பில்லாதவனும், கடந்துபோன*

பெருமைகளையும், பெண்சாதி பிள்ளைகளையும் புகழ்ந்து பேசி இப்பூமியின் கண் திரிவானென அழகுபொருந்தியபெண்ணே கூறுவாயாக எ-று. (162)

## மதி கும்பத்தில் நின்ற பலன்

செய்யகும்பச் சசிபலன்க ளிடுப்பின்மறு வுளனுஞ்
சிலகரும மழிக்கவுமாக் கவும்வலியன் சில்லோர்
தையலுக்கு மகட்குமிச்சை யுறும்பாவி கொடியன்
சரீரமது நீண்டிருப்பன் காறுடையும் பெரியன்
துய்யகழுத் தும்நெடியன் பெருமுதுகன் வழிகள்
துலைவாக நடக்கவல்லன் சாந்தமலர்ப் பிரியன்
மெய்யினரம் புயர்ந்துசிக் கென்றமயி ருள்ளான்
விரவுபெருங் குறியனென வேவிளம்ப வேண்டும்.

(இ-ள்) குடமென்று சொல்லும் கும்பராசியில் சந்திரன் நிற்கப் பிறந்தவன் மருமுதலிய அடையாளங்கள் இடுப்பிலுள்ளவனும், பல காரியங்களை முடிக்கவும அழிக்கவும் சக்திவாய்ந்தவனும், சிற்சில மாதர்களைக் கண்டு மோகிப்பவனும், சண்டாளனும், கெட்டவனும், உயர்ந்த சரீரத்தையுடையவனும், (மேகக்கூட்டங்களும் களைந்துபோகத்தக்க உயர்ந்தவனும்) அழகு பொருந்திய கழுத்து நீண்டவனும், பருத்த முதுகும் அதிகதூரம் நடந்து செல்ல தீரமுடையவனும், புஷ்பங்களின்மீது ஆசையுள்ளவனும், உடலிலுள்ள நரம்புகள் உயர்ந்தவனும், புனைந்த உரோமமுடையவனும், தன் மார்க்கன் (அ) அவசரக்குறியுடையவனும் ஆவானென்றுஞ் சொல்லுக. ()

## மதி மீனததில் நின்ற பலன்

விளம்பியமீ னச்சசிக்குப் பலனீரிற் பிறக்கும்
மீன்முதற்செந் துக்களின்மேன் மிகப்பிரிய னுவன்
வளம்பெரிய போகபாக் கியவஸ்துக் களினும்
மருவுகிர கங்களினு மனமுடைய னுவன்
உளமதனிற் பரதார விருப்புடைய னழகன்
உற்றகுல மகளிடத்து முறவுடையான் சமவான்
இளம்பிறைநேர் நுதலதனிற் சிந்தூர திலதம்
எழுதியிளை யோர்மனதை யிழுக்குமட மானே.

(இ-ள்) மூன்றும்பிறையை யொத்த புருவத்தையுடைய நெற்றியின் மீது வாசனைநிறைந்த செந்தூரத் திலதமிட்டு இளகிய மனமுடையவர்களை மயக்கும் (அல்லது) உன்வசமாக்கும் சக்தியையுடைய பெண்ணே! மீன் என்று சொல்லத்தக்க மீனராசியில் சந்திரன் நிற்கப் பிறந்தவன் பலனைச் சொல்லுமிடத்து ஜலத்தில் பிறந்து வாழும் மச்ச முதலியவைகளின்மீது பிரியமுடையவனும், போகசுகங்களை அதிகமாய் அனுபவிப்பவனும், வேசி வீடு செல்ல பிரியமுடையவனும், தன் மனதில் பிறர் மனைவிகளைச் சேர ஆசையுடையவனும், அழகு வாய்ந்த நற்குலமாதரிடம் நேசமுடையவனும், எல்லோரையும் ஒன்றாய் மதிப்பவனும் ஆவனெனக்கூறுவாய் எ-று. (164)

இராசிகளிற் சந்திரனின்ற பலன் முற்றிற்று.

# இராசிகளில் சனி நின்ற பலன்



## சனி மேடம் விருச்சிகத்தில் நின்ற பலன்

மேடத்திற்காரிநிற்கின் மிகுமாயரூபிமூர்க்கன்
தேடிடானுறவுசற்றும் பிரமிக்கச்சிறிதுசொல்வன்
ஒடுதேள்காரிக்கேகட் டுண்டுமெய்க்கீறதாவன்
நீடியதனமுமில்லான் கொலைசெய்தேநிற்பன்றனே.

(இ-ள்) மேடத்தில் சனிநிற்கப் பிறந்தவன் மருத்துவம் பொருந்திய மாயாவிநோதனும், முன்கோபியும், தன் இனபந்துக்களை கொஞ்சமாவது தேடாதவனும், யாவரும் கண்டு பிரமிக்கத்தக்க பேச்சு வார்த்தைகளை யுடையவனும் ஆவானென்று கூறுவர். தேள் என்று சொல்லும் விருச்சிகத்தில் சனிநிற்கப் பிறந்தவன் எவ்விடத்திலாவது கட்டுபட்டு அதனால் தன் திரேகத்தில் அடையாளமுடையவனும், நீண்டசெல்வமில்லாதவனும், கொலைசெய்து திரிபவனுமாவானெனக் கூறுவர் எ-று. (165)

## சனி இடபம் துலாத்தில் நின்ற பலன்

நிற்குமோரிடபந்தன்னில் நிற்கில்பெண்கட்குலோலன்
நற்குணன்மறதியில்லா னரியர்பலரைச்சேர்வன்
முற்கோலிற்சவுரிநிற்கின் முற்றியதனவானவன்
சற்குணன்கியாதியுள்ளான் றருவனூர்மணியமாவன்.

(இ-ள்) பசுவாகனத்தைப்போன்ற உருவத்தையுடைய ரிஷபராசியில் சனிநிற்கப் பிறந்தவன் ஸ்திரீசுகலோலனும், நல்லகுணம் அமைந்தவனும், கவனப்பிழை இல்லாதவனும், பற்பல தாசி வேசிகளைச் சேர்பவனு மாவா னெனக் கூறுவர். கோல் என்று சொலலும் துலாராசியில் சனிநிற்கப் பிறந்தவன் திரண்ட செல்வவானும், சன்மார்க்க குணமுடையவனும், பிரக்யாதி வாய்ந்தவனும், நல்ல பெருமைபெற்ற கிராமத்திற்கு மணியம் செய்பவனுமாவானென்று கூறுவர் எ-று.

(வி-ரை) துலாராசிக்கு சனி உச்சமாகையால் மணியம் செய்வான் என்று உரைத்ததோடு

ஆனகுரு வெள்ளிசனி யாக்ஷியுச்ச கேந்திரம்
தானமுற நின்றிடினும் சாற்றிய செவ்வாயும்
மானமுற கேந்திரமுற மன்னிய நட்பாஞ்சனி
யூனமுற நிற்கின்வரு மோங்குபுகழ் தானே.

(இ-ள்) சுபனுகிய குரு சுக்கிரனுவது சனியாவது ஆக்ஷி அல்லது உச்சனுக நின்றால் அவர்களோடு குஜன் நட்பு ஆட்சிபெற்று சுபக்ஷேத்ரம் பெற்றால் அவன் மேலான புகழ்களெல்லாம் அனுபவிப்பானென சாதக சிந்தாமணியின்படி சனிமுதலியோர் உச்சங்களை ஆராய்ந்து கூறுதல் நலம்.

## சனி மிதுனம் கடகம் கன்னியில் நின்ற பலன்

ஆனதோர்மிதுனங்கன்னி தனிற்சனியமர்ந்தகாலை
தானமாம்புதல்வரற்பந் தகைமையில்லார்க்குமாண்பன்

**வாலுறுநண்டிற்காரி மருவிற்றும்மகன்பொன்னில்லான்**
**ஈனவான்ஞாதுருவீனன் மக்கினபல்லன்மூர்க்கன்.**

(இ-ள்) *சுபக்ஷேத்திரமான மிதுனம் கன்னி இவைகளில் சனி நிற்கப் பிறந்தவன் பலனை சொல்லுமிடத்து புத்திர அற்பமுடையவனும், யுக்தி புத்தி இல்லாதவரிடம் சிநேகம் செய்பவனும், ஆகாயத்தை அளாவிய கடக ராசியில் சனி நிற்கப் பிறந்தவன் தாயகுலத்தில் உதித்தவனும், மாதுரு வம்ச தனமில்லாதவனும் தரித்திரமுடையவனும், ஞானமில்லாதவனும், மங்கின நிறமுடைய பல்லுடையவனும், முரட்டுத்தனம் உள்ளவனுவான்.*

(வி-ரை) *மேலெழுதிய புத்திர அற்பமுடையவன் என்பதை முன் சொல்லிய நக்ஷத்திர பலனில் சொல்லியபடி ஆராய்வதோடு,*

*சாந்தமாம் மிதுனங் கன்னி தனுசு மீனுதய மாக*
*வீந்தநல் லோரைக் காணி லிந்துடன் கதிரோன் செவ்வாய்*
*புந்திபு மொன்றாய் கூடி பொற்புற நிற்பா ராயின்*
*மூந்துமாண் பெண்ணி றட்டை முசிப்பின்றி பிறக்கு மாதே.*

(இ-ள்) *தனுசு மீனம் மிதுனம் கன்னி இவையே லக்கினமாகவும், அதில் சூரியன் சந்திரன் புதன் இவர்கள் ஒன்றுகூடி நிற்க இலக்கினத்தை சுபகிரகங்கள் பார்க்க அந்த ஜாதகனுக்கு இரட்டைப்பிறவி என்றும், ஆணும் பெண்ணுமாகவே பிறக்குமென சாதகசிந்தாமணியில் கூறியபடி,*

*மூடவ்ஞ ரைந்தி னிற்க முதற்பிறை யுடனே பாபி*
*இடமதா யைந்தோ நட்பாய் இனிக்குரு வுடனே பாபி*
*திடமதா யுதையம் தன்னில் சுதனுமே நின்று னுகில்*
*நடவதே புத்ர ருண்டாய் நசித்துடன் போமே சொல்வாய்.*

(இ-ள்) *இலக்கினத்திற்கு 5-ல் சனியும் சந்திரனோடு பாவக்கிரகங்களும், 5-ஆம் வீட்டோன் நட்பாயும், குருவுடன் பாவக்கிரகங்களும், லக்கினத்தில் சந்திரனும், அவனுடன் பாபகோட்களும் இருந்தால் அவனுக்கு புத்திரர் பிறந்து இறந்துபோவாரென்று கேரளத்தில் கூறியபடியும் இன்னும் பின்வரும் 5-ஆம் பாவகத்திலும் ஆராய்ந்து பலன் கூறுக.* (167)

## சனி சிம்மத்தில் நின்ற பலன்

**மூலமாஞ்சிங்கவீட்டின் முனிவுறுஞ்சனிதானிற்கில்**
**சாலவாசாரமில்லான் சுகமிலான்றாட்சியுள்ளான்**
**சீலமாங்குலம்விளங்கப் பெற்றிடுஞ்சேயுமில்லான்**
**வேலைவாரிதியைவண்டை முனிந்திடுவிழியினுளே.**

(இ-ள்) *துஷ்டர்களை சம்மாரம் செய்யும்பொருட்டு தன் அஸ்தத்தில் பிடித்திரானின்ற வேலின் ஜோதியையும், வண்டுகளின் குரலோசையையும் பழிக்கச்செய்யும் ஓசையும் தேஜசுமுடைய பெண்ணே! அரி-மா-புலி-யாளி தெரியிற் சீயம் என்று சொல்லத்தக்க சிம்மராசியில் சனிநிற்கப் பிறந்தவன் மேன்மையைத் தரத்தக்க ஆசாரம் இல்லாதவனும், சௌக்கியமில்லாதவனும், கீழ்மை யுடையவனும், தன் மரபுக்கு யாதொரு குற்றமின்றி விருத்தியடையத்தக்க புத்ரப்பேறில்லாதவனும ஆவானென்றுகூறுவாயாக.*

(வி-ரை) *சனிக்கு சிம்மராசியானது தன் சுயக்ஷேத்திரத்திற்கு 7-8-ஆமிடமாகும். ஆயினும் அவனை செவ்வாய் சூரியன் முதலானவர்கள் பார்த்*

கவும் சேரவும் அவை புத்திரஸ்தானமுமாக யிருந்தால் புத்திரதோஷம் உண்டென்று சோதிடவல்லோர் கூறுவர். (168)

## சனி தனுசு மீனத்தில் நின்ற பலன்

விழிமீனதனுவிற்காரி மேவின்மன்னவருக்கன்பன்
மொழிசுகமுடையன்மைந்தர் திரவியமுள்ளனுவன்
வழிவசமானபெண்டி ருள்ளவன்மலர்க்கணேயான்
கழியபெண்டிர்மேற்பக்ஷங் காட்டிடுஞ்சிந்தையானே.

(இ-ள்) கண்களுக் கிணையான மீனம் தனுசு என்று சொல்லும் மீன ராசியிலும், தனுசுராசியிலும் சனிநிற்கப் பிறந்தவன் இராஜாக்களுக்கு சிநேகிதனும், உன்னதமும் பிழையில்லாத பேச்சுடையவனும், சுகத்தை யனுபவிப்பவனும், தன் பிள்ளைகள் சம்பாதிக்கும் திரவியமுடையவனும், நன்மார்க்கமும், தனக்கு ஐக்கியமாகிய மனைவியைக் கொள்பவனும், விதவை அல்லது வேசிகளின்மேல் பக்ஷங்கொள்வோனும், உத்தமசிந்தை யுடையவனும் ஆவானெனக் கூறுக எ-று.

(வி-ரை) சனிபகவானுக்கு தனுசும் மீனமும் நட்புவீடாகையாலும் தன் சுயவீடான கும்பத்திற்கு மீனம் 2-ஆமிடமும் மகரராசிக்கு விரயஸ்தானமும் ஆகையாலும், சனி ஆயுள் காரகனாகையாலும் இந்த ஜாதகன் இராஜ சேவைசெய்து விசேஷ தனத்தை சம்பாதித்து புத்திரர்மூலமான சுகத்தையும் அனுபவிப்பானென்று கொள்க. (169)

## சனி மகரம் கும்பத்தில் நின்ற பலன்

சிந்துவாழ்மகரகும்பஞ் செறிந்துதுன்காரிநிற்கில்
உந்தியநகரம்பட்டண முடையவனுறுகநோயன்
சந்ததந்தனங்கள்சேர்ப்பன் செலவுளன்சரீரசுட்கன்
சுந்தரப்பரத்தைநண்பன் பலமுளன்சோரனுவான்.

(இ-ள்) இமயமலைமுதல் சேதுகரைவரையில் அரசனாக விளங்கும் சனி கலை சுறா என்னும் மகரராசியிலும், கும்பராசியிலும்நிற்கப் பிறந்தபேர் பெருமை அழகு முதலிய லக்ஷணங்கள் வாய்ந்த நகரம் பட்டணம் உள்ளவனும், உருவங்களில் மிகச் சிறந்த கண்களுக்கு நோய் உடையவனும், எக்காலமும் இடைவிடாது தனங்களை சேகரிப்பவனும், செலவுசெய்பவனும் சமரசமான உயரம் உள்ளவனும், உண்மையாளனுன பரமாத்மாவினிடம் பக்தி பிரியமும் பலமுடையவனும் திருடனுமாவான் எ-று.

(வி-ரை) சனிக்கு மகரமும் கும்பமும் ஆக்ஷிவீடாகையால் நகரம் பட்டணம் ஆள்பவனென்றும் கூறினர். இதோடு கிரகங்களின் சுபாசுபம் தெரிந்து ஆக்ஷிபெற்ற சனி ஜெனனராசிக்கு 4-10 இவ்விராசிக்குடையோனாகவிருந்து அல்லது ஜெனன லக்கினதிபதியாக இருந்து 10-4-க்கு உடையோரும் சூரியனும் பார்த்தால் அரசுபுரிவானென்றும், 6-8-12 இந்த இராசிகளுக்குடையோர் பார்த்தால் சீக்கிரம் பகையாளிகளுக்கு தன் பூஸ்திதி யாவும் இழப்பானென்றும், 10-ஆம் வீட்டோன் சுபனாகவும் ஆக்ஷி உச்சம்பெற்று பார்க்கின் நீடித்திருக்குமென்றும் இன்னும் பற்பலவிதமாகவும் ஆராய்ந்து கூறுதல் நலம். (170)

இராசிகளில் சனி நின்ற பலன் முற்றிற்று.

---

# சந்திர திருஷ்டி பலப் படலம்

### மேஷச் சந்திரனை கிரகங்கள் பார்த்த பலன்

ஆட்டில்வேள் குடையைப் புந்தி யார்காணில் அதிக வித்தை
பூட்டிய பொன்சேய் காணில் புரவலன் ஆகி வாழ்வன்
கூட்டிய பிருகு காணில் குணவானுங் காரி கள்ளன்
நீட்டிய பதங்கன் காணில் இரணியம் இல்லை என்னே.

(இ-ள்) மேஷவிராசியிலிருந்த சந்திரனை புதன் பார்த்தால் பிரபல கல்வியுடையவனும், செவ்வாய் பார்த்தால் செங்கோல் நடாத்தும் அரசனும், சுக்கிரன் பார்த்தால் நற்குணமுடையவனும், சனி பார்த்தால் திருட்டுத்தன முள்ளவனும், சூரியன் பார்த்தால் பொன் இல்லாதவனும் ஆவான் எ-று.

(வி-ரை) வேள்குடை-சந்திரன், பதங்கன்-சூரியன், இரணியம்-பொன் இங்கு சொல்லப்படும் பலன்கள் அந்தந்த ராசிகளின் நவாமிசத்தில் சந்திரனிருந்தாலும் அதற்கும் உரியதாகும். நவாமிச பலனாக இதனைக் கொள்ளுமிடத்து சந்திரன் வர்க்கோத்தமாம்சத்தி லிருந்தால் கிரகதிருஷ்டி பலத்தாலுண்டாகும் பலன்கள் மிகவும் விசேஷமாகவும், சுயநவாம்சத்தி லிருந்தால் மத்தியமாகவும், இதர நவாமிசத்திலிருந்தால் சுவல்பமாகவும் உண்டாகுமென்பதாம்.

சந்திரன் மன்மதன் குடை என்பதை இதனால் அறியலாம்:-

ஆலைக் கரும்புசிலை ஐங்கணைபூ நாண்சுரும்பு
மாலைக் கிளிபுரவி மாருதந்தேர்—வேலை
கடிமுரசங் கங்குல் களிறுகுயில் காளம்
கொடிமகரந் திங்கள் குடை.

இந்தப் பார்வை விஷயத்தில் இங்கு கூறப்படும் அம்சத்தை அவசியம் கவனித்தல்வேண்டும். இதர இடங்களிலும் பார்வை விஷயத்தில் இதை அவசியம் கவனித்தல் நலம்.

த்ருஷ்டிர்திக் த்ரிதயே க்ருஹோஸ்வ சரேவே தாஷ்டகே,
க்ரமபே பச்யந்த்யர் கவிதுக்ஞ தேவ குரவஃ
பாதாபி வ்ருத் த்யாக்ரமாத் மந்தேஜ்ய க்ஷோணி பூநாம்
சரணத்வி சரணவஹ்நி பாதம் ததைவபூர்ணஃ
பச்யந்தி பாவம் முனிவர பணிதிஃ ஸர்வ தந்த்ரேஷு தீரா.

(ஜாதகாபரணம்)

(இ-ள்) சூரியன் சந்திரன் புதன் சுக்கிரன் முறையே 3-10 கால்பார்வையும், 5-9 அரைபார்வையும், 4-8 முக்கால்பார்வையும், 7-முழுபார்வையுமாகப் பார்ப்பார்கள் சனி செவ்வாய் குரு முறையே 3-10 முழுபார்வையும், 5-9 கால்பார்வையும், 4-9 அரைபார்வையும், 7-முக்கால் பார்வையுமாகப்

பார்ப்பார்கள். குரு 5-9 முழுபார்வையும், 4-8 கால்பார்வையும், 5-9 முக்கால் பார்வையுமாகப் பார்ப்பார்கள் எ-று.

| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| சூரி-சந்-புத-சுக் | | | ¼ | ¾ | ½ | | 1 | ¾ | ½ | ¼ | | |
| சனி ... | | | 1 | ½ | ¼ | | ¾ | ½ | ¼ | 1 | | |
| குரு ... | | | ¾ | ¼ | 1 | | ½ | ¼ | 1 | ¾ | | |
| செவ்வாய் ... | | | ½ | 1 | ¾ | | ¼ | 1 | ¾ | ½ | | |
| ராகு-கேது ... | | ¾ | ½ | ½ | 1 | ½ | 1 | ½ | 1 | ¾ | | 1 |

இதனால் சூரியன் முதலாகிய எழு கிரகங்களுக்கும் 1-2-6-11-12 இந்த இடங்களில் பார்வை கிடையாதென்ப. இதனை பின்வரும் காளிதாசப் புரோக்த சாதக சந்திரிகையினால் அறியலாம்:—

ஸ்வஸ்தானஞ்ச த்விதியஞ்ச ஷஷ்டமேகா தசம்ததா
த்வாதசஞ்சாந பச்யந்தி சேஷாந்பச்யந்தி தேக்ரஹாஃ

இராகு கேதுக்களின் திருஷ்டிக்கு மேற்கோள் வருமாறு:—

ஸ்தமதாந வார்த்யே பூர்ணத்ருஷ்டிஃ ஸைஹிகேயர்
புகல தசமாசௌ த்ருஷ்டி மாத்ரத்ரயார்ஹஃ
ஸஹஜரிபு சதுர்தேஷ்வஷ்டமே சார்த்தத்ருஷ்டிஃ
ஸ்திதிபவந முபார்த்யம் நைவத்ருச்யம் ஹிராஹோஃ

(சத்கிருத்ய முக்தாவளி)

ஸ்ரீபதி, கேசவீ முதலிய பத்ததி கிரந்தபிரகாரம் கிரகதிருஷ்டி எல்லாராசிகளிலும் கிரயராசிக விதிப்படி அமைதலுண்டு. தற்காலம் தமிழ் நாட்டில் வழங்கும் கிரகதிருஷ்டிமுறையில் சனிக்கு 3-7-10 ஆமிடங்கள் தவிர ஏனையராசிகளில் பார்வை கிடையாது என்று ஏற்படுகின்றது. இந் நூலாசிரியர் கொள்கையும் அதுவேயாகும் இந்த ஜாதகாபரண முறைப்படி நோக்குங்கால் சனிக்கு 4-5-8-9-ஆமிடங்களிலும் திருஷ்டி உண்டென்று ஏற்படுவதை அறிஞர்கள் உணர்ந்து திருஷ்டி பல விசாரஞ்செய்தல் மிக்க அவசியமாகும்.

சூரியன் பார்த்தால்

உக்ரஸ்வபாவோபி ம்ருதுர்நதாராம்
தீரோ தராதீச்வர கௌரவாட்யம்,
நரோபவேத்ஸங்கர பீருரேவ
மேஷே சசாங்கே நவிநேச த்ருஷ்டே. (ஜாதகாபரணம்)

(இ-ள்) மேஷச்சந்திரனை சூரியன்பார்த்தால் அதிக உக்கிரமான சுபாவமுடையவனும், தீரனும், அரசர்களால் கௌரவமுடையவனும், யுத்தத்தில் வல்லவனும் ஆவான்.

குஜன் பார்த்தால்

விஷாக்நி வாதாஸ்த்ரபயம் கதாசித்
ஸ்யாந்மூத்ரக்ருச்ர மஹதாச்ரயச்ச
தந்தாக்ஷிபீடாதி பீடாஜுடாம்சௌ
மேஷஸ்திதேபூமி ஸுதேநத்ருஷ்டே.

(இ-ள்) மேஷச்சந்திரனைச் செவ்வாய்பார்த்தால் விஷம் அக்கினி வாதம் அல்லது அஸ்திரபயமுடையவனும், சிற்சில சமயங்களில் மூத்திரக் கிரிச்சரநோயினால் அதிக துன்பமுடையவனும், தந்தநோய் நேத்திரநோய் உடையவனுமாவான் எ-று

புதன் பார்த்தால்

விலஸதமலகீர்த்திः ஸர்வவித்யாப்ரவீணோ
த்ரவிணகுணகணாட்யः ஸம்மதः ஸஜ்ஜநாநாம்,
பவதிநுமநுஷ்யோ மேஷராசௌசசாங்கே
சசதரஸுத த்ருஷ்டே ச்ரேஷ்டஸம்பத்ப்ரதிஷ்டः.

(இ-ள்) மேஷச்சந்திரனை புதன்பார்த்தால் பிரகாசமுடையவனும், சுத்தமான கீர்த்தியுடையவனும் சர்வ சாஸ்திரங்களிலும் பிரவீணனும், தனம் நற்குணம் இவைகளையுடையவனும், சத்சன சம்மதத்துடன் சிரேஷ்ட சம்பத்துகளை யுடையவனுமாவான் எ-று.

குரு பார்த்தால்

ந்ருபப்ரதாநः ப்ருதநாபதிர்வா
குலாநுபாவாத் பஹுஸம்பதாட்யः
பவேந்நரः கைரவிணேவசேமேச
மேஸ்திதேகீஷ் பதிநாப்ரத்ருஷ்டே.

(இ-ள்) மேஷச்சந்திரனைக் குருபார்த்தால் அரசர்களுக்கு மந்திரி அல்லது சேனைகளுக்கு அதிபதியாயிருப்பவனும், தனது குலாநுசாரமாக அதிக ஐஸ்வரியங்களுடன் வாழ்வோனும் ஆவான் எ-று.

சுக்கிரன் பார்த்தால்

யோஷா விபூஷா தந ஸுஹ்ருத சௌக்யோ
போக்த்தா ஸுவக்த்தா பரிமுக்த்த ரோஷः
ஸ்யாத பூருஷோ மேஷகதே அம்ருதாம் சௌ
நிரீக்ஷ்ய மாணே ப்ருகுஜே குணக்ஞः

(இ-ள்) மேஷச்சந்திரனைச் சுக்கிரன் பார்த்தால் ஸ்திரி, ஆபரணம் சந்தான இவைகளை யுடையவனும், சுகத்தை அநுபவிப்பவனும், குரோத மின்றி சிரேஷ்டமாகப் பேசுவோனும், குணவானும் ஆவான் எ-று.

சனி பார்த்தால்

கதயுதம் ஹதசித்த ஸ்மூக்கதிம்
விகதவித்த மஸத்ய மஸத் ஸுதம்,

க்ரியகதோ அர்க்கஸுதேந நிரீக்ஷிதே
ஹிமகரோஹி நரம் குருதே கலம்.

(இ-ள்) மேஷச்சந்திரனைச் சனி பார்த்தால் மனைவியாகூலமுடைய வனும், தனநஷ்டமுடையவனும், பொய்பேசுகின்றவனும் துஷ்ட புத்திரர் களை யுடையவனும் ஆவான் எ-று. (171)

## இடபச் சந்திரனைக் கிரகங்கள் பார்த்த பலன்

என்அரன் விடையில் ஏறும் இராமனைச் செவ்வாய் காணில்
பொன்இலான் புந்தி கள்ளன் பொன்காணிற் புகழு ளோனும்
பன்னிய பளிங்கு வேந்தன் பங்குபா தன்பொன் னுள்ளான்
துன்னிய கதிரோன் காணில் ஏவிய தொழில்செய் வானும்.

(இ-ள்) சிவபெருமான் ஊர்தியாகிய இடபவிராசியிலுள்ள சந்திர னைச் செவ்வாய் பார்த்தால் தனமில்லாதவனும், புதன் பார்த்தால் திருட னும், குரு பார்க்கில் புகழ்ச்சியுடையவனும், சுக்கிரன் பார்த்தால் அரச னும், சனி பார்த்தால் தனமுடையவனும், சூரியன் பார்த்தால் ஏவற் றொழில் செய்வோனுமாவான் எ-று.

(வி-ரை) அரன் விடை-இடபராசி, இரா + மன் =இராத்திரிக்குத் தலைவனுன சந்திரன், பங்குபாதன்-சனி. பொன் இலான் என்பதற்குச் சிலர் தரித்திரன் எனப் பொருள்கூறுவர், அது பொருந்தாது, கையிருப் பாக தனமில்லாதவன் என்பதே அதன் சிறந்தபொருள். சிலர் சகஸ்திரம் சகஸ்திரமாகச் சம்பாதித்து, அப்பொருளை செலவழித்து கையிருப்பில் தனமில்லா திருக்கின்றனர். அவர்கட்கு எப்போதும் தனவருத்துமட்டும் இருந்தும் மீதிஇன்றி செலவிடுவதனுல் அவர்களைத் தரித்திரரெனக் கூறுதல் யாங்ஙனம்?

சூரியன் பாத்தால்

க்ருஷிக்ரியாயாம் நரதோ விதிக்ஞ: ஸ்யான்
மாந்த்ரிகோ வாஹந தான்யயுக்த:
நரோஹிதாந்தம் சதுர: ஸ்வகார்யேத்ருஷ்டே
திநேசேநவ்ரு ஷேசசாங்கே.

(இ-ள்) இடபச்சந்திரனைச் சூரியன் பார்த்தால் பயிரிடும் தொழிலில் சாதுர்யமுடையவனும், பயிரிடும் முறை நன்கு தெரிந்தவனும், மந்திரியும் வாகனம் தானியமுடையவனுமாவான் எ-று.

செவ்வாய் பார்த்தால்

காமாதுரச்சித்தஹரோ அங்கநாநாம்ஸ்யாத்
ஸாதுமித்ர: ஸுதராம் பவித்ர:
ப்ரஸந்நமூர்திச்ச நரோ வ்ருஷஸ்தே
சீதத்யுதௌ பூமிஸுதேந த்ருஷ்டே.

(இ-ள்) இடபச்சந்திரனைச் செவ்வாய் பார்த்தால் காமமுண்டைய ஸ்திரீ களை வெல்லுவோனும், சத்சனமித்திரனும், எப்போதும் பரிசுத்தமான மூர்த்திகரமுடையவனும் ஆவான் எ-று.

புதன் பார்த்தால்

ப்ராக்ஞம்விதிக்ஞம் க்ருபயாஸமேதம்
ஹர்ஷாந்விதம் பூதஹிதோதஞ்ச
குணபிராமம் மநுஜம் ப்ரகுர்யாத்
வ்ருஷேசசாங்கே சசிஜேநத்ருஷ்டே.

(இ-ள்) இடபச்சந்திரனைப் புதன்பார்த்தால் சதுரனும், விதிமுறை யுணர்ந்தவனும், கிருபையுடன் துன்பமுற்ற ஜீவன்களுக்கு இதத்தைச் செய்பவனும், சற்குணமுடையவனும் ஆவான் எ-று.

குரு பார்த்தால்

ஜயாத்மஜாநந்தயுதம் ஸுகீர்த்திம்
தர்மக்ரியாயாம் நிரதஞ்ச பித்ரோஃ
பக்தௌ ப்ரஸக்தம் மநுஜம் ப்ரகுர்யாத்
வ்ருஷஸ்திதேந்து குருணாப்ரத்ருஷ்டஃ

(இ-ள்) இடபச்சந்திரனை குருபார்த்தால் ஸ்திரீ புத்திரர்களுடன் ஆனந்தமாய் வாழ்வோனும், சிரேஷ்ட கீர்த்தியுடையவனும், தர்மகாரியத்தில் தத்பரனும், மாதா பிதா பக்தியில் ஆசக்தியுடையவனுமாவான் எ-று.

சுக்கிரன் பார்த்தால்

பூஷணம்பர க்ருஹாஸந சய்யா
கந்தமால்ய சதுரம் க்ரிஸுகாதி
ஆதநோதி ஸததம் மநுஜாநாம்
சந்த்ரமா வ்ருஷகதோ ப்ருக்ருஷ்டஃ

(இ-ள்) இடபச் சந்திரனைச் சுக்கிரன் பார்த்தால் வஸ்திராபரணம் உடையவனும், வீடு கட்டில் மெத்தை யுடையவனும், போஜன சுகியும், சுகந்த வஸ்துக்களின்மீது பிரியமுடையவனுமாவான் எ-று.

சனி பார்த்தால்

கலாநிதிஃ பூர்வதலே வ்ருஷஸ்ய
சநீக்ஷி தச்சேந் நிதநம் ஜநந்யாஃ
கரோதி ஸத்யம் முநிபிர்ய துக்தம்
ததா பரார்தே கலு தாத காதம்,

(இ-ள்) இடபராசியின் பூர்வார்த்தத்திலுள்ள சந்திரனைச் சனி பார்த்தால் மாதருவுக்கும், அபரார்த்தத்திலுள்ள சந்திரனைச் சனி பார்த்தால் பிதுருவுக்கும் மிருத்யு வுண்டென நிச்சயமாக மகரிஷிகள் கூறியிருக்கின் றார்கள் எ-று. (172)

## மிதுனச் சந்திரனைக் கிரகங்கள் பார்த்த பலன்

வான்தண்டு ஆலோனை ஆரல் காணவல் லிரும்பு விற்பன்
கான்முனைப் புந்தி காணின் மன்னனாங் கனகன் காணின்
மேன்மைப் பண்டிதனுஞ் சுங்கன் காணின்அல் அச்சமில்லான்
மான்சனி தனிநூல் விற்பன் மார்த்தாண்டன் மிடியே தங்கும்.

(இ-ள்) மிதுனச் சந்திரனைச் செவ்வாய் பார்த்தால் கடினமாகிய இரும்பை விற்பவனும், புதன் பார்த்தால் அரசனும், குரு பார்த்தால் மேன்மைபொருந்திய வித்துவானும், சுக்கிரன் பார்த்தால் இருளாகிய பயமில்லாதவனும், சனி பார்த்தால் நூல்விக்கிரயஞ்செய்வோனும், சூரியன் பார்த்தால் துன்பமுடையவனுமாவான் எ-று.

(வி-ரை) தண்டு-மிதுனராசி, ஆலோன்-சந்திரன், கான்முளை + புந்தி = சந்திரன் புத்திரனாகிய புதன், மான்சனி-மகரத்துக்குரிய சனி, மார்த்தாண்டன்-சூரியன். புதனுக்குக் கால்முடமென நூற்களுள் யாண்டும் கூறப்பட்டில, ஆதலின் அதனைக் கான்முளை புதன் எனத் திருத்தி யமைத்தது என்க.

சூரியன் பார்த்தால்

ப்ராக்ஞம் ஸுசீலம் த்ரவிணோந ஹீநம்
க்லேசாபிபூதம் ஸததம் கரோதி
நரஞ்சஸர்வோத் ஸவதம்ப்ரஸூதௌ
த்வந்த்வேஸ்திதோ பாநுமதாசத்ருஷ்டஃ

(இ-ள்) மிதுனச்சந்திரனைச் சூரியன்பார்த்தால் சதுரனும், சிரேஷ்ட சீலமுடையவனும், தனமில்லாதவனும், எப்போதும் கிலேசமுடையவனும், எல்லா காரியங்களிலும் கிலேசமுண்டாயிருப்பவனும் ஆவான் எ-று.

செவ்வாய் பார்த்தால்

உதாரதாரம் சதுரஞ்சசூரம்
ப்ராக்ஞஞ்சஸுக்ஞம் தநவாஹநாத்யைஃ
யுக்தம் ப்ரகுர்யாத் மிதுநஸ்திதேந்தூர்
நிரீக்ஷிதோஜந்மநி பூஸுதேந.

(இ-ள்) மிதுனச்சந்திரனை செவ்வாய் பார்த்தால் உதாரசித்தமுடையவனும், சதுரனும், சூரவீரனும், புத்திமானும், சுகவாகனாதிகளை யுடையவனுமாவான் எ-று.

புதன் பார்த்தால்

தீரம் ஸதாசார முதாரஸாரம் நரம் நரேந்த்ராப்த தநம்கரோதி
நிசாதிநாதோ மிதுநாதிஸம்ஸ்தோ நிரீக்ஷிதோ ஸுதேநத்ருஷ்டஃ

(இ-ள்) மிதுனச் சந்திரனைப் புதன் பார்த்தால் தைரியமுடையவனும், எப்போதும் ஆசாரமுடையவனும், உதாரமுள்ளவனும், அரசர்களால் தன பிராப்தி யுடையவனுமாவான் எ-று.

குரு பார்த்தால்

வித்யாவிவேகாந் விதமர்தவந்தம்
விநீதம்ஸுதாராம் ஸுபுண்யம்
கரோதிமர்த்யம் மிதுநாதிஸம்ஸ்தோ
நிசிதிநேசோ குருணாப்ரத்ருஷ்டஃ.

(இ-ள்) மிதுனச்சந்திரனைக் குருபார்த்தால் வித்தையுடையவனும், விவேகமுள்ளவனும், தனவானும், விரசித்தமான புண்ணியவானுமாவான் எ-று. (179)

## கடகம்

தங்கியநண்டிலிந்து தன்னைவக்கிரன்றான்காணில்
பொங்கியகுசலைசெய்து பொரும்படைபுதனில்வித்தை
துங்கமன்பார்க்குஞானி சுங்கன்பார்வைக்குமன்னன்
செங்கதிர்நோக்கக்கண்ணோய் திறல்சனியிருமலுய்ப்பான்.

(இ-ள்) *பெருமைபெற்ற கடகராசியில் இரவிற்கரசனாகிய சந்திரன் நின்று அவனை குஜன் காண ஜெனித்தவன் சகோதர விருத்தியுடையவனும் நீண்ட உறவினரும் உடையவன். புதன் பார்ப்பானாகில் விசேஷ கல்வியுள்ளவனும், குரு பார்த்தால் பிரபல வேதாந்த சந்நியாசியும், சூரியன் பார்க்கின் கண்ணோயுடையவனும், சுக்ரன்பார்க்கின் ராஜரீகம்புரிவோனும், சனி பார்ப்பானாகில் இருமலென்னும் வியாதியையுடையவனும் ஆவான்.* ()

## சிம்மம்

உய்யரியிந்தைப்புந்தி பார்க்கச்சோதிடநூலோனும்
செய்யபொன்றனவான்வெள்ளி திருஷ்டிமன்னவனுங்காரி
மெய்யுறநோக்கினாநா விதத்தொழில்விளைப்பன்வெய்யோன்
பையவேகாணின்மன்னும் பயில்குசன்பாராள்விப்பன்.

(இ-ள்) *சிங்கத்தில்நின்று பகை பெற்ற சந்திரனை புதன் பார்த்தால் ஜோதிடம் கற்பவனும், கணிதசாஸ்திர தேர்ச்சியுடையவனும், குரு பார்த்தால் திரண்ட செல்வத்தையுடையவனும், சுக்கிரன் பார்த்தால் உலகத்தை அரசாள்பவனும், சனி பார்த்தால் நானாவிதமான தொழில்செய்து ஜீவித்து சந்தோஷிப்பவனும், சூரியன்பார்த்தால் ராஜசேவை செய்பவனும், குஜன் பார்த்தால் தேசங்களை அரசாட்சிபுரிவோனும் ஆவான் எ-று.* (175)

## கன்னி

விற்பனமடந்தை வேண்டியேகணக்கன்காணில்
நற்புவிபுரப்பன்பொன்னேக் கதிற்சேனுபதியேநாட்டும்
முற்பகர்சுங்கன்சால நிபுணன்சேய்முடவன்வெய்யோன்
பொற்புறக்காணிற்கன்னி யாற்பிழைப்புண்டாவானே.

(இ-ள்) *பரத்தைய ராசியான கன்னியில் நின்ற சந்திரனை புதன் பார்த்தால் அழகிய புவியாள்பவனும், குரு பார்க்கில் சேவகசேனாதிபதியும் சுக்கிரன் பார்க்கில் விமர்ச்சியான சாமர்த்தியமும் ஆலோசனையுடையவனும், கொடியோர்களாகிய குஜன் சனி சூரியன் முதலியவர்கள் பார்க்கில் பெண்களால் தன் ஜீவனத்தை நடத்திக்கொள்வோனும் ஆவானென்றும் கூறுக எ-று.* (176)

## துலாம்

ஆவன்கோலிடத்தலோனை மால்காணினரசனவன்
மேவியபொன்னிபார்வை மிகுசொர்னவேலைசெய்வன்
தாவியபிருகுகாணில் வியாபாரிசனிசெவ்வாய்வெய்யோன்
மூவர்கண்டிடில்வஞ்சிப்பன் பலரையுமுறைமைபோல.

(இ-ள்) கோல் என்றுசொல்லும் துலாராசியில் நின்ற சந்திரனை புதன் பார்க்கினும் ராஜரீகமே புரிவான். குரு பார்க்கில் பொன் தங்கம் வைரம் சொர்னம் முதலிய நகைகளைச் செய்பவனும், சுக்கிரன் பார்க்கில் பற்பல சரக்குகளை வாங்குதல் விற்குதல் முதலிய வாணிபம் செய்பவனும், சனி அங்காரகன் சூரியன் முதலிய தீயகோட்கள் பார்த்தால் ஞாயமாய்ப் பேசுபவனைப்போல் பேசி பலரைச் சூதுசெய்பவனும் ஆவான் எ-று. (177)

## விருச்சிகம்

போலுந்தேளிந்தைக்கண்ட புதனுக்குத்தந்தைரெண்டாம்
மேலுமேகுருதிஷ்டிக்குப் பிராமணசீலன்வெள்ளி
சாலவேகாணவண்ணான் பனிசநிவெய்யோன்செவ்வாய்
கோலமாமங்கவீனன் தரித்திரன்குணவேந்தாமே.

(இ-ள்) விருச்சிகராசியில் சந்திரனிருக்க அவனை புதன்காணில் உலகோர் அவனைக் கண்டு இவனுக்கு தகப்பன் இருவர் என்பர். குரு பார்த்தால் விப்பிரசீலம் உடையவனும், சுக்கிரன் பார்த்தால் அழுக்கு துணிகளை வெண்மையாக்கும் வண்ணானும், சனி சூரியன் அங்காரகன் இராகு கேது இவர்கள் பார்த்தால் அவயவ பின்னம் உள்ளவனும், சன்மார்க்க குணம் உள்ளவனும், தரித்திரமுடையவனும் ஆவானென்று கூறுக எ-று.

(வி-ரை) தகப்பன் இருவர் என்பதை ஜெனனகாலங்களில் பிதுர் ஸ்தானாதிபதி நீச்சம்பெற்று 6, 8, 12-ஆம் இடங்களிலும், சூரியன் சந்திரன் இவர்களை பார்க்க உபயஸ்தானம் பெற்றிருப்பாராகில், இரண்டு தகப்பன் என்றும் கூறுவது நலம். இவ்வாறு கிரகங்களின் அடவியைக் கண்டு கூறவேண்டுமென ஜோதிடத்தோர் கூறுவர். (178)

## தனுசு

ஆந்தநுவிராமன்றன்னைப் புதன்காணவறிஞன்ஞானி
போந்தபொன்காணமன்னும் பொருந்துசுக்கிரன்திஷ்டிக்குச்
சேர்ந்துநின்றுசரிப்ப பலர்கூடிச்செவ்வாய்வெய்யோன்
ஏந்தியசநியுங்காண விருமலாயிருப்பன்கண்டீர்.

(இ-ள்) கொடுமரம் சாபம் சிலை என்னும் தனுசுராசியில் மித்ருவாகி நின்ற சந்திரனைப் புதன் பார்க்கில் யுத்திசாலியும் சங்கியாசியும் ஆவான். குரு பார்க்கில் நகரபரிபாலனம் செய்வோனுவான். சுக்கிரன் பார்க்கில் பலர் பார்த்து சந்தோஷப்படுவோன் ஆகுவன். செவ்வாய் சூரியன் சனி இவர்கள் பார்த்தால் இருமல் வியாதி யுள்ளவனும் ஆவானெனக் கூறுவர் எ-று. (179)

## மகரம்

கண்டிடுமகரத்தந்தைக் கணக்கனுமரசன் காணப்
பண்டிதன்சுக்கிரற்குப் பயில்குருநரேந்திரனுவான்
மொண்டிக்குத்தனவான் முனிரவிதரித்திரந்தான்
மண்டிடகுசனும்பார்க்கிற் பூபதியாகிவாழ்வன்.

(இ-ள்) மகரராசியில் நின்ற சந்திரனை புதனும் குருவும் சேர்ந்து அல்லது தனித்து பார்ப்பார்களாகில் தமிழ்வித்துவானுவான். சுக்கிரன் பார்க்கில் மானிடர்களுக்கு உபதேசம் செய்வோனுவான். சனி பார்க்கில் பூரண செல்வமுடையோனுவான். கோபத்தையுடைய சூரியன் சனி காணில் தரித்திரமுடையோனுவான். குஜன் பார்க்கில் ஏகசக்ராதிபதியாய் வாழ்குவான் எ-று.

(வி-ரை) இதனை ஜெனனகாலங்களில் சூரியனுக்கு முன்னே கிரகங்க ளிருக்க அனபாயோகமென்றும், குருநிற்கில் கல்வியுள்ளவனும், பெண்கள் பிரியம்போல் நடப்பவனும், நெஞ்சில் தைரியமுள்ளவனும், மானபிமான முடையவனும், நற்குணசாலியும், மேற்சொன்ன கிரகங்கள் சந்திரனுக்கு பின்னைல் நிற்கில் சுனபாயோகமெனவும், அதன் பலன் ராஜாவுக்குசமமான வனும், அபிமானியும், தைரியனும், பூரண கல்வியுள்ளவனும், பேசுவதில் வல்லமைபொருந்தியவனும், பூரண செல்வத்தை யுடையவனும், தருமவானும், சந்தேகியும், நற்கீர்த்தியுள்ளவனும், போகசுகம் உள்ளவனும், ஆவானென்றும் இன்னும் பின்வரும் யோகபடலத்தையும் ஆராய்ந்து கூறுதல் நலம். (180)

## கும்பம்

வாழ்கும்பச்சசியைப்புந்தி காணப்பூபதியுமாவன்
நீள்குருநோக்கிற்பூமி நிருபர்போனீடிவாழ்வன்
சூழ்குசனிரவிகாரி சுக்கிரனுல்வர்காணில்
தாழ்விலாபரதாரத்திற் ருற்பரியங்களுள்ளான்.

(இ-ள்) கும்பத்தில் நின்ற சந்திரனை புதன் பார்ப்பானுகில் சக்ராதிபதி என்னும் பூபதியும், சுபக்கோளான குருகாணில் அநேக பூமிகளைச் சம்பாதித்து அரசர்போன்று சுகத்தோடிருப்பவனும், குஜன், சூரியன், சனி, சுக்கிரன் இந்நால்வரும் பார்த்தால் உத்தமர்களாய் இருக்கும் அன்னிய தாரங்களின்மீது ஆசைகொள்வோனும் ஆவானென்று கூறுவர் எ-று. ()

## மீனம்

உள்ளமீனத்திலிந்தை யுறும்புந்திகண்டகாலை
மெள்ளவேபிரியவாக்கி வேந்தற்குவேந்தேயாகும்
தெள்ளியவெள்ளிகாணப் பண்டிதன்செவ்வாய்வெய்யோன்
கள்ளமாங்காரிமூவர் காணவேபாவியாவன்.

(இ-ள்) மீனராசியில் நின்ற சந்திரனை பெருமைதங்கிய புதன்காணில் சந்தோஷ வார்த்தைகளாடுபவனும், அரசர்களுக்கெல்லாம் மேம்பட்ட அரசனுகவும் இருப்பான். பரிசுத்தமாகிய சுக்கிரன் பார்ப்பானுகில் வித்வசாமார்த்தியனும், சூரியன் அங்காரகன் சனி இம்மூவர் காணில் சண்டாளனுமாவான் எ-று. (182)

சந்திர திருஷ்டி பலப் படலம் முற்றிற்று.

---

## அங்கிசபலன்



அங்கிசையறியுந்தன்மை யசுபதிமுதல்மும்மூன்ருப்
பங்குமொன்பதுவோர்பங்கிற் பாதமுந்நான்குதன்னில்
தங்கியமேடராசி தான்முதன்மீனமட்டும்
பொங்கியபதியுள்ளோரைப் பொருளெனக்கண்டுகூறே.

(இ-ள்) *அசுவனிமுதல் ரேவதிவரையிலுமுள்ள 27-நட்சத்திரங்களையும் சூரியன் சந்திரன் குஜன் புதன் குரு சுக்கிரன் சனி இராகு கேது ஆகிய 9-பேருக்கும் பாகிக்க ஒவ்வொருவருக்கும் நட்சத்திரம் 3-ஆகும். அம்மூன்றிற்கும் நட்சத்திரம் 1-க்கு 4-பாதமாக 12-பாதமென வரைந்து அப்பன்னிரண்டு பாதங்களையும் மேடம்முதல் மீனம்வரையிலுமான 12-ராசி எனவரைந்து ஒருவனுதித்தநட்சத்திரபாகப்படி உதித்தபாகத்தையே ராசியெனவும், அவ்விராசிக்கு உடையவனையே அங்கிஷவான் என்றும் கொள்வதாகும். இதையே அங்கிசம் என்றும் கூறுவர் எ-று.*

(உதாரணம்) *விசாகம் நாலாம்பாதத்தில் ஜெனனமானதாக வைத்துக் கொள்வோம். இதற்கு அங்கிஷம் தெரிந்துகொள்ளும் விபரம் பின் வருமாறு*

| இரகங்களின்பெயர் | சூரி | சந் | குஜ | புத | குரு | சுக் | சனி | ராகு | கேது |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| நட்சத்திரங்களின் பெயர் | அசு<br>பர<br>கார் | ரோ<br>மிரு<br>திரு | புன<br>பூச<br>ஆயி | மகம்<br>பூரம்<br>உத்ர | ஹஸ்<br>சித்<br>சுவா | விசா<br>அனு<br>கேட் | மூல<br>பூரா<br>உத் | திரு<br>அவி<br>சதய | பூரட்<br>உத்<br>ரேவ |

*இதனால் விசாக நட்சத்திரம் சுக்கிரன் பாதத்தில் வந்தன. விசாகம் நான்காம்பாதமானகையால் கடகமென்றும், அவ்வீட்டோன் சந்திரனென வும் கூறுக.*
(183)

### சூரியன் அங்கிசம்

கூறியதோ ரிரவியங் கிசன்றனக்குக் கோபி
  கோலவிழி மெய்சிவப்பன் குலவுசுசியாளன்
வீறுடனே சுருண்டுநீண் டிருக்குமயி ருடனும்
  மிகவயிறு பருத்திருக்குஞ் சத்தியமொழி யுடையான்
ஆறில்யாத் திரைப்பிரியன் மோவாய்நீண் டிருப்பன்
  அழகன்மிகு சிநேகிதவா னவிர்புத்தி யுளனும்
தேறுதலை யுணர்ஞானி தியாகியாஞ் சாந்தன்
  சீமானுகும் பித்த தேகமுளன் ருனே.

(இ-ள்) *அருக்கனுகிய சூரியன் அங்கிசத்தில் ஜெனித்தவன் பலனை சொல்லுமிடத்து சினமுள்ளவனும், அழகுடைய கண்களும், சிவந்த சரீரம்*

உடையவனும், ருசிகரமான பதார்த்தங்களின்மேல் பிரியமும் அடர்ந்து நீண்டு சுருண்ட உரோமம் உடையவனும், பருத்த வயிறும், பொய்யுரையாது சத்யவாக்குடையவனும், தேச சஞ்சாரங்களில் ஆசையுடையவனும், நீண்ட மோவாய்க்கட்டை யுடையவனும், தேஜஸ் உள்ளவனும், அநேக சிநேகிதர்களை யுடையவனும், கூர்மையான புத்தியையுடையவனும், பல நூல்களை ஆராய்ந்தறியும் இடசித்த ஞானியும், தர்மவானும், சாந்தகுணம் உடையோனும், பித்ததிரேகமுடையோனெனவும் கூறுக எ-று.

(வி-ரை) சூரியன் அங்கிசத்தில் ஜெனித்தோனைக் குறித்து,

சூரிய னவாங்கிசத்தில் சூழ்ந்துற பித்ததேகி
வீரிய புத்திசாலி விளங்குகண் ணழகன்கோபி
யாரிடா சத்யவாக்கன் மயிர்தேகம் சிவப்பேயுள்ளான்
பாரிய பெரும்வயிறன், பகருநல் சிநேகன்சாந்தன்.

(இ-ள்) பித்த திரேகமுடையோனும், அறிவுள்ளவனும் அழகிய கண்களும், கோபவானும், தவறாத சத்தியவாக்குள்ளவனும், சிவந்த திரேகமும் உரோமமும் பெருவயிறும நல்ல சிநேகிதர்களை யுடையவனும் ஆவானென ஜோதிடப்பிரகாசம என்னும் நூலிலும் கூறியபடி ஆராய்ந்து கூறுக. ()

## சந்திரன் அங்கிசம்

**உள்ளமதி வித்தைசெல்வ ஞுமுகத்தின் மறுவான்**
**உறுந்தீர்க்கா யுளன்சிறிய விழியனென வுரையே**
**தெள்ளியநற் குணனழக ஞுஞ்சூரன் றியாகி**
**சிநேகிதன் மந்தன்னறிவு குன்றுதான் றீரன்**
**கள்ளமிலான் வாதசேத் துமரோக தேகன்**
**கருத்துள்ள பின்னிரக்க முளனீராடப் பிரியன்**
**கள்ளமிலான் மோவாய்நீண் டேயிருப்ப னழகன்**
**இனியசிர ரோமனீண் டிருந்திடுவன் கண்டாய்.**

(இ-ள்) இரவுக்கு அரசனாகிய பிரகாசம்பொருந்திய சந்திரன் அங்கிசத்தில் பிறந்தவன் கல்விமான் தனவந்தன் முகத்தில் மறுவென்னும் அடையாளத்தை யுடையவன், நீண்ட ஆயுளைப் படைத்தவன், சிறிய கண்களை யுடையவன், உத்தமகுணவான், தைரியமுடையோன், வீரபராக்கிரமமுடையவன், தருமம் செய்யும் மனமுடையோன், சிநேகித இயல்பையுள்ளவன், சபலசித்த முடையோன், எவ்விததிலும் தன் சுய அறிவை இழக்காதவன், தைரியம் உள்ளவன், மோசம் திருடு முதலிய கள்ளர் குணமில்லாதான், சீதளம் வாதம் ரோகம் முதலியவைகளை யுள்ளோன், எந்த வேலைகளிலும் கருத்துடையோன், இரக்கம் தயவு தாக்ஷண்யமுடையோன் ஜலஸ்நானம் செய்ய பிரியமுடையோன், உண்மையாளன், மோவாய் நீண்டவன், அழகுள்ளவன், அழகிய நீண்ட மயிருள்ளவனென்றுங் கூறுக எ-று.

## செவ்வாய் அங்கிசம்

**கண்டசெவ்வாய் கடுஞ்சொல்லன் பேடியாம் ரூபன்**
**கழறுவாய் திக்குடைய மெய்சிவப்பன் கோபி**

சண்டைவிருப் புடையனற்ப நிதிபித்த ரோகி
தரணிதிரிந் திடுவன்சிற் றுண்டிவிருப் பினனும்
மிண்டியவஞ் சகன்லோபி முதுகின்மறு வினனும்
வீரதத்து வன்கிலேசி தீரன் பிரகாசி
கண்டுமொழி மானேகே டுக்கமுளா னிழிசொல்
கழிறிற பொருன்பொய்யன் கனவான் கீர்த்தியினன்.

(இ-ள்) *நிலமகனென்று சொல்லும் குஜன் அங்கிசத்தில பிறந்தவன்' கொடிய வார்த்தைகளுடையவன், பேடி என்னும் ஸ்திரீவடிவனும், பேசும் வாய்குழலுடையவனும, சிவந்த திரேகமுடையவனும், சினமுடையோன் சமர்செய்ய ஆசையுடையவன், குறைந்த செல்வமுடையவன், பித்ததேகம் உடையவன், தேசசஞ்சாரி, தின்பண்டங்களில் விருப்பமுடையவன், முழு வஞ்சகன், தருமமில்லாதவன், முதுகில் மறுவென்னும் அடையாளமுடைய வன, வீரபராக்கிரமன், பலவித எண்ணங்களை யுடையவன், பிரக்கியாதி வாய்ந்த தீரன், அபமிருத்து இடுக்கம் இழிவான வசனங்களில் துவேஷம் உடையவனும், பொய்யன் தனவான் கீர்த்தியையும் உடையவனென வில் போன்ற வளைந்த புருவங்களையுடைய பெண்ணே சொல்லுவாய் எ-று.*

(வி-ரை) *நிலமக னங்கிசம் தன்னில் பிறந்தோன்*
*புலவனும பொய்யனும் பேடியு மாமே.*

(இ-ள்) *வித்துவானும் பொய் சொல்பவனும் பேடிரூபம் உடையவனும் ஆவானென குஜனங்கிசத்தில் பிறந்தோனைக் குறித்துக் கூறுக. மேல்சொன்ன 'கேடிடுக்கமுளான்' என்றதை கேடும் இடுக்கமுமுள்ளான் என்றும், கேள் இடுக்கம் உள்ளவனென்றும் சொல்லலாம்.* (186)

## புதன் அங்கிசம்

ஆனபுந்தி யங்கிசத்த னுந்தரும சீலன்
ஐச்சுவரியன் வித்தையுள னரிவையருக் கன்பன்
ஞானியிசைத் தமிழோன்பொய் யாதமொழி யாளன்
நன்றிமற வான்கயம்போ னடையுடைய னழகன்
கானவித்தை யுளன்சூரன் பசியநரம் புடையன்
காரியஞ்சற் றும்வழுவான் கதித்தகுண முள்ளான்
மானமுளன் றேவர்களைச் சந்ததமும் பணிவன்
வன்மனத்த னச்சமிலான் மகிழ்ச்சியுள னாகும்.

(இ-ள்) *அறத்தை இயற்றுவோனும், சுத்தமுடையோனும், திரண்ட தனததை யுடையவனும், கல்விமானும், பெண்களுக்கு பிரியனும், ஞானத் தையுடையோனும், தமிழ் சங்கீதமுடையோனும், பொய்யுரையாதவனும்,, பிறர்செய்த நன்றியை மறவாதவனும், யானையைப்போன்ற நடையை யுடையவனும், யாவரும் மெச்சக்கூடிய அழகான கல்வியை யுடையோனும், சூரனும், பச்சை நரம்புகளுடையோனும, தான் தொடுத்த காரியத்தை எவ்விதமும் சோர்வின்றிமுடிக்கும் திறமும், உத்தமகுணமும் மானுபிமானங் களில் கட்டுபட்டவனும், உண்மையான மனத்துடன் தேவதாதொண்டு புரிவோனும், தைரிய திடசித்த முடையோனும், அச்சமில்லாதவனும்*

சந்தேக மனமுடையோனும் ஆவானென்று புதன் அங்கிசத்தில் ஜெனித்தோனுக்கு கூறுக எ-று. (187)

## குரு அங்கிசம்

ஆகியநல் வித்தையுளன் பொன்போலு மெய்யன்
ஆண்பெறுவன் செவ்விழிய னமைச்சனு மாகுவனும்
வாகுசெறி ரோமமுளன் மேனேக்கன் செல்வன்
மகிழ்வுடையன் சுசியுடையன் றவன்தூல தேகி
மோசமுட னீராடுவன் மோவாய் நீண்டோன்
மொழிமதுரன் விசிட்டமுள னுயர்ஞானி யழகன்
போகமிகு சுகவானல் லறிவுடையன் விசயன்
புகழுடையன் புத்தியுடன் பொன்னங்கி சத்தோன்.

(இ-ள்) குருவின் அங்கிசத்தில் ஜெனித்தவன் தெள்ளியகுற்றமில்லாத வித்தையை யுடையவனும், பொன்னிறமான சரீரமுடையவனும், ஆண் சந்ததியை யுடையவனும், சிவந்த கண்களும், மந்திரித்தொழில் புரிவோனும், திரவியம் நிறைந்தவனும், எந்தகாலத்தும் நீங்காத சந்தோஷமுடையவனும், இனிய உருசிகரமான பொருள்மீது இச்சையுடையவனும், நிஷ்டை சாதிப்பவனும், பருத்த திரேகமும், ஜலஸ்நானம் செய்ய பிரியமுடையோனும், நீண்ட மோவாயும், மதுரமான வார்த்தை பேசுவோனும், கட்டு திட்டமுடைய வார்த்தையுடையோனும், உயர்ந்த சந்நியாசியும், ரூபலாவண்யனும், சிற்றின்பம நிறைந்தவனும், நல்ல புத்தியுடையோனும், விஜயனைப் போன்ற புகழும் பிரக்யாதியும் உடையவனும், கூர்மையான புத்தியும் உள்ளவனுமாவானென்றும் கூறுக எ-று.

(வி-ரை) இதனை பற்பல நூலோர் பற்பல விதமாகக் கூறியுள்ளார்.

*அந்தணன்தன் அங்கிசத்தில் ஆனசுத னேஜெனிக்க*
*பிந்திவரும் காரியத்தை முன்னறிவான்—தொந்தி*
*பருத்திருப்பன் சிவந்திருப்பான் பாவலருக் கன்புடையான்*
*உருக்கமுளா னென்றவனை யோது.*

(இ-ள்) ஷை அங்கிசத்தோன் பின்வரும் காரியங்களை முன்னறிந்து சொல்வோனும், பருத்த வயிறும், சிவந்த திரேகமும், பாவலர்களுக்குபிரியமுள்ளவனும், கருத்துடையவனும் ஆவானெனக் கூறுவர் எ-று. (188)

## சுக்கிரன் அங்கிசம்

பிரபலனு கியசுங்க னங்கிசத்திற் பிறந்தோன்
பெருந்தூல சரீரனெழிற் பெருஞ்செல்வ முடையோன்
திரமாகச் செய்ந்நன்றி யுணர்ந்திடுவன் றருமன்
செப்பியவுத் தமன்சூரன் கல்வியுளன் சுகவான்
கருமயிர்தான் சுருண்டிருப்பன் காந்தியுளன் சிநேகன்
கதிர்வடிவன் கால்வளமை யுடையன்கிளைக் குறவன்
அரன்பெருமை யோதவிருப் புளனுமன் புடையன்
ஆகுமென்றே யுரைத்திடுவ ரறிந்திடு நல்லோரே.

(இ-ள்) மேன்மைபொருந்திய சுக்கிரனங்கிசத்தில் பிறந்தவன் பருத்த ஸ்தூல சரீரமும், அநேக செல்வங்களை யுடையவனும், பிறர் செய்த நன்றியை மறவாதவனும், தருமவானும், உத்தமனென்று சொல்லத்தக்க கீர்த்திவாய்ந்தவனும், பராக்கிரமனும், வித்தையாளனும், துன்பமில்லாதவனும், கறுத்த நிறமுடைய சுருண்ட மயிருள்ளவனும், பரந்த சரீரவானும் சினமுள்ளவனும், சூரியனைப்போன்ற பிரகாசம் உடையோனும், நீண்ட கால்களை யுடையவனும், குறவர் தங்கை வள்ளியின் நேசனாகிய சுப்பிரமண்யரின் பெருமையை பேசுபவனும், பக்தியுடையவனும், அன்பு நிறைந்தவனெனவும் பெருமைபெற்ற சோதிடவல்லோர் கூறுவர் எ-று.

(வி-ரை) "சுக்ராங்ஸே தனவந்தஹா" என்றபடி சுக்கிரனங்கிசத்தோன் தனவந்தனாகவும் இருப்பான் என்றும் கூறுவர் எ-று (189)

## சனி அங்கிசம்

நல்லசநி யங்கிசத்தோன் கீர்த்தியிலா னாகும்
நவிலன்பொய் தள்ளாடி நடப்பன்கை வீசிச்
சொல்லிய மெய்க்குறளன் ராக்ஷதரூப னாவன்
தொடைபுறந்தாள் பருத்திருக்குந் தூயகரு நிறத்தோன்
அல்லலுறுந் தரித்திரவா னிரக்கமிலா னாகும்
அன்னமெத்த வும்புசிப்ப னரும்பொருளன் லோபி
வல்லபெருந் தன்னீல தேகனஞ்சா மனத்தன்
மன்னுதய வினைச்சற்று மனத்தினில்லை யானே.

(இ-ள்) சனியங்கிசத்தில் ஜெனித்தவன் பலனைச் சொல்லுமிடத்து புகழ்ச்சி இல்லாதவனும், பொய் சொல்லுபவனும், கைகளை வீசித் தள்ளாடி நடப்பவனும், குள்ள சரீரனும், அரக்கர் ரூபமுடையோனும், தொடையும் புறந்தாளும் தடித்தவனும், நல்ல கறுத்த சரீரம் உடையோனும், துன்பங்களை யனுபவிப்பவனும், தரித்திரமுடையோனும், தயவு தாக்ஷண்யமில்லாதவனும், மிகுந்த அன்ன ஆகாரம புசிப்பவனும், சுல்ப செல்வமுடையோனும், ஈவு இதக்கம் இல்லாதவனும், பருத்த வலிவுடைய நீள சரீரனும், அஞ்சாத நெஞ்சனும், கொஞ்சமாவது இரக்கமில்லாதவனெனவும் சோதிடவல்லோர் கூறுவர் எ-று.

(வி-ரை) சனியங் கிசந்தனிலே தான்பிறந்த பாலகனும்
முனிவுகொள்வான் அன்னியாதம் பொருள்தனக்கு-இனிமையுடன்
ஆசைகொள்வான் தாசசனனும் மோசமதி லேசிறந்தோன்
வனிதையர்தம் மோகவானென் றோது.

(இ-ள்) கோயங்கொள்வோனும், அன்னியர்பொருளை அபகரிக்கப் பிரியமுடையோனும், மோசம் செய்வதில் சிறந்தவனும், பெண்களின்மேல் இச்சையுள்ளவனும் ஆவனெனக் கூறுக எ-று.

இதுவரையில் சொல்லிவந்த அங்கிசபலன் யாவும் பொதுவாய் உரைத்தாமாகையால் இத்துடன் பின்வரும பாவ பலன்களையும் ஆராய்ந்து பலன் கூறுக. (ராகு கேதுக்களுக்கு பலனில்லை.) (190)

அங்கிசபலன் முற்றிற்று.

# இலக்கின பலன்



[இலக்கினத்தைக்கொண்டு சரீரம் நிறம் செல்வம் உதிரம் சிரசு லக்ஷணம் கீர்த்தி சுபம் ஆயுள் இவைகளைப்பற்றிப் பேசலாமென முன்கூறிய பொதுப்பாவகத்தின் முதல் செய்யுளில் காணலாம்.]

### இலக்கினத்தைப்பற்றி கவனிக்க வேண்டிய முறை

1. இலக்கினம் ஆண்ராசியா, அல்லது பெண்ராசியா?

2. இலக்கினம் அல்லது இலக்கினாதிபதி சுபனா, அல்லது அசுபனா?

3. இலக்கினாதிபதி யார் வீடேறி இருக்கிறான். அவனிருக்கும் வீட்டிற்குடையோனுக்கும் இலக்னாதிபதிக்கும் உறவா, அல்லது சத்துருவா?

4. இலக்கினாதிபதி நின்ற ராசி ஜெனன லக்கினத்திற்கு கேந்திரம் திரிகோணம் மறைவிடம் பணபரம் ஆபோகலீபம் இவற்றின் விபரம்.

5. இலக்கினாதிபதி எந்த இராசியிலிருந்தாலும் ஜெனனராசியைப் பார்க்கிறானா, இல்லையா? வேறு ஏதாவது கிரகங்கள் பார்க்கிறதா, அப்படி பார்ப்பதாகில் அவனுக்குரிய வலு எவ்வளவு?

6. இலக்கினாதிபதி யாருடன் சேர்ந்திருக்கிறான், சேர்ந்த கிரகத்திற்கும் இலக்கினாதிபதிக்கும் உறவு சத்துரு விபரம்.

7. இலக்கினாதிபதி நின்ற வீடு ஆக்ஷி உச்சம் நீசம் பகை உயர்வு முதலிய விபரம்.

8. இலக்கினாதிபதி என்ன சாரம், என்ன பருவம், யார் மண் ... ர் எந்த சமயம என ஆராய்ந்துகூறுதல் நலம்.

இங்கு லக்கினத்திற்கு உரிய
பொதுப் பலனையும் அர்தஸ்ஸதையும் கூறுவார்.

### மேடம்

நாடிய மேட லக்கின பலன்றான்
ராசபூச் சியன் றிரபுத்தி
நகைசெய் வனடி மையுள னுயர்ந்த
நலிந்தமெய் தனமுளன் சமர்த்தன்
நீடிய தரும சாஸ்திரங் கேட்ப
னீள்கழுத் தோனெறி வசனன்
நிறைந்திடு கோபி யிளைத்திடு முழந்தா
ணேர்படு மிருகத்தை வதைப்பன்
பாடிய வைந்திற் றீப்பய மேழிற்
பத்தினிற் சுரமிரு பதிலோ

மேவுபா லவன்பாய் காதிஞே யிரண்டு
வீறுபத் திரண்டினிற் பாம்பால்
தேடிய ஐயைந் தினிற்சல கண்டஞ்
செழித்தநா லேழினிற் பிளவை
சென்மலக் கினந்தான் சுபக்கிர கங்க
டெரிசனை வயதுநூ ருண்டே.

(இ-ள்) ஆடுபோன்ற உருவத்தையுடைய மேஷராசியில் ஜெனித்தவன் பலனை சொல்லுமிடத்து இராஜசேவை செய்வோனும், எவ்விதத்திலும் நீங்காத திடபுத்திமானும், நகைப்பதில் பிரியமுடையவனும், உயர்ந்த அடிமைத்தொழில் புரிவோனும், திரண்ட செல்வத்தையுடையவனும், வீர பராக்கிரமனும், இளைத்த திரேகமுடையவனும், பெருமையையுடைய சத்தியமார்க்கத் தருமசாஸ்திரங்களைக் கேழ்க்கப் பிரியமுடையவனும் உயர்ந்த கழுத்தும் உண்மை வார்த்தைகளைப் பேசுவோனும், சினமுடையோனும், சிறுத்த முழங்காலுடையவனும், தன் எதிரில்வந்த மிருகங்களை வதைக்கும் குணமும், தானுதித்த 5-ஆம் ஆண்டில் நெருப்பினுல் பயமும், 7-வது ஆண்டிலும் 10-வது ஆண்டிலும் ஜுரத்தாலும், 20-வது ஆண்டில் வாய் காது நோயும், 22-வது ஆண்டில் விஷங்களாலும், 25-வது ஆண்டில் நீராலும், 28-வது ஆண்டில் கட்டிப்பிளவையும், இந்த லக்கினத்தை சுபக்கோள் காணில் 100-வயது வரையில் ஜீவித்திருப்பானென்றும் கூறுக.

(வி-லை) 'சுபகோட்கள்' என்பது தினசரி சுபக்கிரகங்கள் சந்திரன் புதன் குரு சுக்கிரனும், இந்த லக்கினத்திற்கு சுபக்கிரகம் குரு சூரியன் ஆனதால் இப்படிப்பட்ட கிரகங்கள் பார்த்தால் தீர்க்க வயதென்றுங் கூறலாம். அசுபகிரகங்கள் சேர்ந்தாலும் பார்த்தாலும் அந்தந்த கிரகங்களுக்கு ஏற்றவாறு வயது கூறுக. (191)

## ஷை நிரியாண கால விபரம்

மார்கழி பூரணை மன்னிய வியாழம்
ஏர்பெறு ரோகணி யிரவொரு பத்தாம்
சீர்பெறு கடிகையிற் சேர்தலை நோயால்
நேர்பெறப் புகல்வர் நிரியாண மென்றே.

(இ-ள்) மேற்சொன்ன மேஷலக்கினத்தோன் மார்கழி மாதத்தில் பூரணை திதி, ரோகணி நட்சத்திரம் இரவு 10-நாழிகைக்குமேல் மரணமடைவானென்று பெரியோர் கூறுவர்.

பூணுநற் கோள் பொலிவுறக் கேந்திரம்
போது செய்யும் வியாழ மடங்கல்பொன்
காணு மன்னன் நட்பாக்ஷி லாகுகொள்
கதிர்க ளுச்சிக் கலந்திடவேந் தாகும்.

(இ-ள்) என்ற வாக்கியப்படி சுபகிரகங்களாகிய சந்திரன் குரு சுக்கிரன் இவர்கள் 4-7-10 என்னும் கேந்திரங்களேறி, நட்பு ஆட்சி உச்ச ஸ்தானங்களிலிருந்தால் அநேகநாள் ஆயுளுள்ளவனுகி ராஜ்யபாரம் செய்குவன் என்று கேரளத்தில் கூறியபடி லக்கின சுபாசுபமறிந்து ஆயுள் முதலிய பலனைக் கூறுக எ-று. (192)

### இடபம்

ஆண்டிடு மிடப லக்கினம் பரமர்க்
கன்புறு பூசைசத் தியவான்
அற்பபோ சனவான் தூலதே கத்தி
னடிமையா ளன்புளிப் பிரியன்
வேண்டிய கணிதன் வஸ்திரா பரணன்
மெல்லிய செவியினன் புத்தி
விரும்பிய குழவி போல்விளை யாடி
வெறியாய்ப் பிறர்பொருள் கொள்வன்
தூண்டிடு மிரும னுளன்பெரு மைந்தர்
சொல்விருப் பன்வய தைந்தில்
சுசிபயங் கழுத்திற் பிணிவதி னறிற்
றுலங்குபத் தொன்பதி லிருமல்
தாண்டிய விருப துடனிரு பத்தேழ்
தன்னிலே சுரஞ்சுபக் கிரகம்
தானுமே பார்க்க வயதெழு பத்தேழ்
தரையினில் வாழ்ந்திருப் பானே.

(இ-ள்) *ரிஷபலக்கினத்தில் ஜெனித்தவன் பலனை சோதிக்குமிடத்து தபசிகளுக்கு பூசைபுரிபவனும், சத்தியம் தவறாதவனும், அற்பபோஜனம் செய்பவனும், ஸ்தூலசரீரமுடையவனும், தடித்ததேகமுடையவனும், ஒருவருக் கயிக்கப்பட்ட வேலைசெய்பவனும், புளிப்பு பதார்த்தங்களில் பிரியமுடையவனும், ஜோதிடம் கற்க பிரியமுடையோனும், ஆடையாபரணங்களைச் சேர்ப்பவனும், சிறிய காதுகளும் நுட்பமான அறிவுடையவனும், ஆசையுள்ள குழவிகளைப்போல் விளையாடி பிறர் தனத்தை கைக்கொள்பவனும், இருமலென்னும் வியாதியை யுடையவனும், அநேக புத்திரர்களும், பிறர் சொல் கேட்டு சந்தோஷப்படுவோனும், 5-ஆம் ஆண்டில் அக்கினியாலும், 16-ஆம் ஆண்டில் கழுத்தில் நோயுடையவனும், 20-27-வது ஆண்டில் ஜுரபயமும் இந்த ராசியை சுபகோட்கள் நோக்கின் இவனுக்கு வயது 77-வரையில் இப்பூமியில் சுகத்தோடிருப்பான் எ-று* (193)

### ஷை இலக்கினத்தோன் உயிர்விடும் காலம்

ஆவணி முற்பக் கத்திர யோதசி
மேவுநல் லுத்தி ராடமுந் திங்கள்
தாவறு சாயங் காலவே ளையினில்
ஒவறு சுரத்தால் நிரியாண முறுமே.

(இ-ள்) *சிம்மமாதமான ஆவணியில் வளர் பிறையில் 13-வது திதியாகிய திரயோதசியில் உத்திராடநக்ஷத்திரம் சோமவாரம் கூடியநாளில் மாலை வேளையில் சுரத்தினால் இறந்துபோவானென்றும் கூறுக.*

(வி-ரை) *இந்த லக்கினத்தை சுபக்கிரகங்கள் காணில் வயது 77-என்றனராதலால் அசுபகிரகங்கள் காணில் வயது அற்பமென்பது தாத்பரியமாயிற்று. ஆகவே எல்லா லக்கினங்களுக்கும் பொதுவாய்,*

மைந்தனு ளிருந்த வீட்டான் மறப்பிலா சுபரே யாகில்
தொந்தமா யெட்டோ னட்பில் சுபருட னிருந்தா ராகில்
அந்தமா யாதிக் காரி யவனுக்கு முன்பின் னேரும்
வந்துளா ளுறவே யாகில் வயதுமே நூற தாகும்.

(இ-ள்) சனி நின்ற வீட்டோன் சுபனாகவும், அஷ்டமாதிபதி நட்பு ஸ்தானமும், சூரியனும் சனியும் நின்ற வீட்டிற்கு 2-12-ஆம் ராசியில் சுப கோட்களும் நின்றால் நூறு வயதென்றும் கூறுவாயென கேரளத்தில் கூறியபடி ஆராய்ந்து கூறுவது நலம். (194)

## மிதுனம்

இனியதோர் மிதுன பலன்புக ழுடையோ
னிலச்சையு முளன்ஃகு கபடி
இயலுமா சார பரனிரு சொல்ல
னியற்றுவன் விரதநல் வசனன்
புனிதமாய்த் தனது காரியம் பார்ப்பன்
போந்திடு பித்தரோ கியுமாம்
பொருந்திய சாமள வண்ணமெய் யாளன்
புகலு மூன்றினி லபமிருத்தாம்
நனியுமோ ரைந்தி லக்கினி பயமா
காவிரண் டாயுத பீடை
நண்ணிய பத்திற் சத்துரு பயமா
நாடுமீ ரொன்பதில் வாதம்
தனிமையா மிருபத் தெட்டினிற் கண்ணோய்
தருஞ்சுப கிரகமே பார்க்கில்
தக்கதோர் வருஷமறுபது மைந் துந்
தரையினி லிருப்பனென் றுரைப்பார்.

(இ-ள்) தித்திப்பு பொருந்திய மிதுனலக்கினத்தில் ஜெனித்தவன் பலரும் கண்டு புகழ்ந்து பேசத்தக்கவனும், சங்கடங்களையுடையவனும், மௌனமுடையோனும், சுத்தத்தோடு இருப்பவனும், இரண்டுவிதமான வார்த்தைகளை பேசக்கூடியவனும், ஓர் வைராக்ய நோன்புடையவனும், தனது சுபகாரியங்களை வெகு ஜாக்கிரதையோடு கவனிக்கும் வண்மையும், பித்தவியாதியையுடைய தேகமுடையவனும், நீலவர்ணமானவனும், உண்மையையே பேசுபவனும், 5-ஆம் ஆண்டில் அக்கினியாலும், 8-ஆம் ஆண்டில் பல ஆயுதக் கருவிகளாலும், 10-ஆம் ஆண்டில் தன்சத்துருவாலும் 18-வது ஆண்டில் வாதரோயும், 28-வது ஆண்டில் விழிகளுக்கு ரோகமும், இந்த ராசியை சுபக்கோள் நோக்கினால் வயது 65-வரையில் இப்பூமியில் வாழ்ந்திருப்பான் எ-று.

(வி-ரை) இந்த லக்கினத்தை சுபக்கிரகங்கள் பார்த்தால் வயது-65 என்று கூறியதால் அதன் விபரம்,

ஆடவைதன்னி லுதித்தோரை அசுரமந்திரி பார்த்தாலும்
வாடாதசனி லிருந்தாலும் வையம்புகழ வாழ்ந்திடுவன்

பாடப்படிக்கக் கற்றிடுவன் பற்பலதியாக மீந்திடுவன்
வாடித்திரியான் இவனுக்கே வயதுதீர்க்க மென்றேதே.

(இ-ள்) மிதுனலக்கினத்தில் ஜெனித்தவன் அந்த லக்கினத்தை சுக்கிரன் பார்த்தாலும், லக்கினத்திலேயே இருந்தாலும், பூலோகமுழுதும் புகழும்படி வாழ்வன். பாடல் முதலிய கல்விகளை கற்று கஷ்டமின்றி தீர்க்கவயதாக இருப்பான் எ-று. (195)

## ஷை இலக்கினத்தோள் மரணமடையும் காலம்

சிங்க மதிமுற் பக்கச் சதுர்த்தசி
பொங்கு வெள்ளி புணருமோ ணத்தில்
மங்குல்பன் னுன்கின் மார்புநோ யாலே
தங்கு நிரியா ணம்மெனச் சாற்றே.

(இ-ள்) சிங்கமாதமென்னும் ஆவணியில் வளர்பிறை சதுர்த்தி என்னும் 14-ஆம் திதியில் திருவோண நட்சத்திரம் கூடிய சுக்கிரவாரத்தில் இரவில் 14-நாழிகைக்குமேல் மார்புநோய் மூலமாக இறந்துபோவான் எ-று.

## கடகம்

உரைசெறி கடக லக்கின பலன்க
ளுடன்மிகச் சிகப்புளன் சமர்த்தன்
உரமொடு நடப்பன் வேசையர் கமன
னுயர்நவ தானியன் தனவான்
குருவிசு வாசன் பிதாவினுக் கிசையான்
குறிமறு கண்டிடா விடத்தில்
கூறுவர் சிலநா டரித்திரன் வயதுங்
குலவிய வைந்திலீ ரெட்டில்
இருபதி லிருபத் தைந்திலிந் நாளி
லெய்திடு மவமிருத் துவமே
இனியகோள் சன்ம லக்கினம் பார்க்கில்
இருந்துதொண் ணூறுமட் டுலகில்
பரவிய மாசி சுக்கில பக்ஷம்
பஞ்சமி புந்திவா ரத்தில்
பண்பொடு மிருக சிரநடு வதனிற்
பரமபத மடைந்திடு வானே.

(இ-ள்) மேன்மைபொருந்திய கடகராசியில் ஜெனித்தவன் மிக்க சிவந்த சரீரம் உடையவனும், வல்லமை புடையவனும், ஊன்றி நடப்பவனும், தாசிகளாசையுடையவனும், நவதான்னிய மூலமான தனவந்தனும் ஆசாரியரிடம் பக்தியுடையவனும், தன் பிதா சொல்லைத் தள்ளி நடப்பவனும், தனக்கு தெரியாத இடங்களில் மருவுமச்சம் உடையவனும், சிலநாள் வறுமையுடையவனும், தான் ஜெனித்த 5-ஆம் ஆண்டிலும், 16, 20, 25-ம் ஆண்டுகளிலும், அகஸ்மாத்தாய் உண்டாகும் ஆபத்தும் இந்த ராசியை சுப கோட்கள் காண்பாராகில் வயது 90-ல் கும்பமாதமென்னும் மாசியில்

வளர்பிறையை யுடைய 5-ஆம் திதியில் புதவாரம் 5-ஆம் நட்சத்திரமான மிருகசிரத்தின் மத்தியில் உயர்பதவி அடைவானென்றும் கூறுவர் எ-று.

(வி-ரை) சுபக்கிரகங்கள் என்பது இந்த லக்கினத்திற்கு அங்காரகன் குரு சுக்கிரன் இவர்கள் இந்த ராசியை நோக்கினலும் கடகராசியிலேயே இருந்தாலும் பூரணவயதென்றும், தீயகோட்களால் பீடிக்கப்பட்டும் பார்த்தும் இருந்தால் அற்ப ஆயுளென்றும் கூறுவர். (197)

## சிம்மம்

அடைவொடு சிங்க லக்கின பலன்க
ளமுதுசா லவும்புசித் திடுவன்
அருச்சனை புரிவன் தருமசிந் தையினன்
அனுதினம் பெரும்பசி யாளன்
திடமுறும் புத்தி மான்பிணி வந்து
தீர்ந்திடு முடன்ஞெழில் பிரியன்
செப்புமோ ரைந்து பத்திரு பத்தேழ்
செறிவய திற்சுரம் வந்து
உடறனின் மருவி முப்பது நாளும்
போனபின் நீரும்லக் கினத்தை
உத்தமர் காணில் எண்பது வயதும்
பூமியி லிருந்துபங் குனியில்
வடவறு மமர பக்கபாட் டிமையின்
மன்னுமத் தத்திற்சுன் பகலில்
மதிநதி முடித்த சடையன்பொற் பதத்தில்
வாழ்வனென் றுரைப்பர் மாதவரே.

(இ-ள்) யாளி என்னும் சிங்கராசியில் ஜெனித்தவன் பலனைச் சொல்லுமிடத்து சாப்பாடு அதிகமுண்போனும், ஆலயங்களுக்கு அபிஷேகிக்க ஊக்கமுடையோனும், பரோபகார நெஞ்சுடையவனும், அதிக பசியுள்ளவனும், தைரியமும் எந்நாளும் நீங்காத அறிவாளியும் எவ்வித நோயும் உண்டாகி உடனே நிவர்த்தியாதலும், உடனே எக்காரியத்தையாவது செய்ய உத்தேசிப்பவனும், தான் ஜெனித்த 5, 10, 27 இவ்வாண்டுகளில் ஜுரத்தினல் பல கஷ்டங்கள் 1-மாதம்வரையில் இருந்து உடனேநிவர்த்தியாதலும், இந்த ராசியை சுபகோட்கள் காணில் (அதாவது) சந்திரன்புதன் குரு முதலிய சுபகிரகங்கள் காணில் வயது 80-ல் கும்பமாதத்தில் தேய்பிறை பாட்டிமை திதியில் அஸ்தநட்சத்திரமான 13-வது நட்சத்திரத்தில் சுக்கிரவாரம் கூடிய நாளில் பரமபதமடைவான் என்றும் கூறுக எ-று. ()

## கன்னி

மாதென்னுங் கன்னி லக்கின பலன்கள்
மகிழ்தரு மன்றரித் திரவான்
மாசிலா சார முளன்பல தரும
வகையறிந் திடுவன்பின் வயதில்

மீதெனுந் தனங்கள் தேடுவ னேந்தில்
மேவிய வக்கினி பயமாம்
விளங்கிய பத்திற் சுரம்பதி னெட்டின்
மேவிடு மம்மைநோ யென்ப
மேதரு நல்லோர் காணினல் வயதோன்
இயைந்திடு மேழுபத் தேழாம்
மேன்மைவை காசிக் குறைபக்கப் பன்னான்
கெனுந்திதி யிசைந்தசித் திரையில்
கோதுறு குன்ம வியாதிவா தையினாற்
குறிநிரி யாணமே யாகும்
குலவுசக் கரைகனி கண்டுதேன் பால்போற்
கூறுசொற் கொவ்வைவாய்க் கொடியே.

(இ-ள்) பெண்ராசி என்று சொல்லும் கன்னியா ராசியி லுதித்தவன் அடையவேண்டிய பலனைச் சொல்லுமிடத்து யாவரும் கண்டு மகிழத்தக்க தருமமியற்றுவோனும், வறுமையுடையவனும், எந்நாளும் நீங்கப்படமாட்டாத ஆசாரகிருத்தியத்தோடு இருப்பவனும், பற்பல நூதன செய்கைகளை கண்டுபிடிப்பவனும் தன் அந்தியகாலங்களில் பொருள்சேர்க்க எண்ணமுடையவனும், தானுதித்த 5-ஆம் ஆண்டில் நெருப்பினாலும் 10-ஆம் ஆண்டில் ஜுரமும் 18-ஆம் ஆண்டில் வைசூரியாலும் நோய் முதலிய பிணியுண்டென்றும், இந்தராசியை சுபர்கள் பார்க்கின் (அதாவது) சந்திரன் புதன் குரு சுக்கிரன் இவர்கள் காணில் வயது 77-வரையிலிருந்து ரிஷபமாதத்தில் தேய்பிறையான கிருஷ்ணபக்ஷம் 14-வது திதியான சதுர்த்தசியும் சித்திரை நட்சத்திரமும் கூடியநாளில் குன்மவியாதியால் இறந்துபோவானென கோவைப்பழங்களையொத்த இதழும், இன்பந்தரத்தக்க சர்க்கரை போன்ற இனிய மொழிகளையும் உடைய பெண்ணே கூறுவாய் எ-று.(199)

## துலாம்

கொடியனுங் களிக் குச்சமாந் துலாத்தோன்
குறித்திடு மனைவிய ரிருவர்
குடும்பனும் திரண்ட குலமபி மானி
கூறுசம் பத்துளன் றனவான்
படியில்வாழ் மன்னக் கினியநற் சுகவான்
பரிமள கந்தபூப் பிரியன்
பற்றுள தமரோன் தருமசிந் தையினன்
பரவுமே ழாண்டினோய் தீயால்
கடியவீ ராறுண் டதனில் வைசூரி
காணுபத் தொன்பதிற் பகையால்
கண்டதோ ரிருபத் தெட்டில்வேல் புனலாற்
கண்டநாற் பத்திரண் டினியர்
நெடியபார் வையின லெண்பதோ டைந்து
நின்றுதேள் குறைந்திதி யாறில்

நிறைகதிர் வாரம் விருத்தியோ கத்தி
னீளுத யத்தினீங் குவனே.

(இ-ள்) கொடிய பாவியான சனிக்கு உச்சக்ஷேத்திரமாகிய துலா ராகியில் ஜெனித்தவன் பவனைக் கூறுமிடத்து இருகளத்திரம் உடையோனும் திரண்ட புத்திரருடைவனும், தன் குலாசார கிருத்தியங்களை தவருதவனும், திரண்ட பொருள்களையுடையவனும், சிறந்த மெத்தை மேடைகளின்மீது வாழத்தக்க அரசர்களுக்கு பிரியமானவனும், வாசனை நிறைந்த வஸ்துக்களின் மீது ஆசையுடையவனும், தன் சுயஜெனங்களின் மீது பற்றுடையவனும் பரோபகார சிந்தையுடையவனும், தானுதித்த 7-வது நெருப்பினாலும், 12-ஆம் ஆண்டில் அம்மையாலும், 19-ஆம் ஆண்டில் தன் சத்ருக்களாலும் 28-ஆம் ஆண்டில் வேல் என்னும் ஆயுதக் கருவிகளாலும், 42-ல் சூனியத்தாலும் கெண்டம் உண்டாகும். 85-ஆம் ஆண்டில் விருச்சிகமாதத்தில் கிருஷ்ணபக்ஷம் 6-வது திதியில் ஆதிவாரம் கூடிய சுபகாலத்தில் சித்தயோகத்தில் சூர்யோதய வேளையில் மறிப்பன் எ-று.

(வி-ரை) துலாராசிக்கு குரு சந்திரன் புதன் முதலிய சுபக்கிரகங்கள் காணில் பூரண ஆயுள் எனவும், அசுபகிரகங்கள் காணினும் சேரினும் அற்ப ஆயுளாயினும், துலாராசியில் பிறந்த எல்லோருக்கும் இருதாரமென்பது தவறு. அதற்கீடாக மற்றைய கிரகங்களும் இருக்கவேண்டும்.

களத்திரகாரகனும், துலாராசிக்குடையோனும், 8-ஆம் வீட்டதிபதியுமான சுக்கிரன் ஆக்ஷி உச்சமாயும், களத்திர ஸ்தானாதிபதி குஜனுடன் சம்பந்தப்பட்டு 10 ஆம் இடமாவது 7-9-ஆம் இடங்களிலாவது சேரில் இருதாரம் என்றுரைக்கலாம். ஷை சுக்கிரன் பாவகோட்களாகிய சூரியன் சனி இராகு கேது இவர்களுடன் கூடி பகை நீச்சம் பெற்றாலும் தனித்திருந்தாலும் ஏகதாரமென்றே கூறவேண்டும்.

சுக்கிரன்தான் கேந்திரத்தி லிருந்தாலப்பா
சொல்லுகிறேன் ஜாதகற்கு களத்ரம்ரெண்டு
பக்குவமாய் சொல்லுகிறேன் முப்பத்தைந் துக்குள்ளே
பண்பாக நடக்குமப்பா சாரிபாக
தனக்கெனவே முன்களத்ரம் ஒத்திப்போகும்
தகுதியாய் பின்களத்ரம் வலுத்திருக்கும்
மிக்கெனவே சாரசாமாய் குடும்பமேறும்
மேதினியில் புஜண்டர்முனி சொன்னவாக்கே.

(இ-ள்) சுக்கிரன் ஜெனனராசிக்கு 1-4-7-10 என்னும் கேந்திரங்களிலிருந்தால் அந்த ஜாதகனுக்கு களத்திரம் இரண்டெனவும், அந்த இரண்டு தாரங்களுள் முன்தாரம் பிரிந்துபோகும் எனவும், பின்தாரமே வலுத்திருக்குமென்றும், இவை தானுதித்த 35-க்குள் நடக்குமென்றும், புஜண்டமுனி கூறியவாறு பேற்சொன்ன கிரகவரிசைப்படி களத்திரபாவம் அறிந்து கூறுவதே நலம். லக்கினத்திற்கு பொதுவாய் கூறிய விஷயங்களை நிலைத்து சொல்லாமல் அதை முதலாகவும் மற்றும் கிரகபாவங்களை யறிந்தே மற்றும் பலன்களையும் கூறுவது நலமாகும். (200)

## விர்ச்சிகம்

நீங்கருந் தேளாம் லக்கின பலன்க
ணேசனுந் தந்தைதா யிடத்தில்
நிந்தமாய் மனைவி யிடத்தினிற் பிரிய
னிரந்தர மினியசொற் பகர்வன்
பாங்குடன் றெடுத்த காரிய முடிப்பன்
பரவுநா லாண்டினிற் கழுத்தில்
பயிலுநோ யைந்திற் களங்களீ ரைந்தில்
பன்னிரண் டிற்பதி னெட்டில்
ஓங்குமக் கினியாற் பயமதா நாற்பா
னுறுசன்னி வாதமுஞ் சுரமும்
உத்தமர் சென்ம லக்கினங் காணி
ன்றொருபது குறைநூ ருண்டாம்
தீங்கறு மானி சுக்கில பக்ஷத்
துவாதசி யுஞ்சனிக் கிழமை
திகழ்விசா கத்தில் அந்திவே ளையினிற்
றிண்ணமாய் வருநிரி யாணம்.

*(இ-ள்) கருமைபொருந்திய தேள் என்று சொல்லும் விருச்சிகராசியி லுதித்தவன் தன் மாதா பிதாவிடத்தில் மிகுந்த பிரியமுடையவனும், தன் பாரியாளிடம் எந்நாளும் நீங்காத அன்புடையவனும், நூதனமானசந்தோஷ வார்த்தைகளை பேசுபவனும், தான் ஆரம்பித்த காரியத்தை குற்றமில்லாமல் முடிப்பவனு , தானுதித்த நான்காம் ஆண்டில் கழுத்துநோயும், 5-ஆம் ஆண்டில் வியாதியும் 10-ஆம் வயதில் ஜுரமும், 12-18-ஆம் வயதில் பெருநெருப்பினாலும் பயமுண்டு. 40-ஆம் ஆண்டில் ஜுரத்துடன் கூடிய வாதஜன்னி ஜுரமும், இந்த லக்கினத்தை சுபர்களாகிய சந்திரன் புதன் குரு சுக்கிரன் இவர்கள் பார்க்கின் 90-வயதுவரையில் இருந்து ஆனிமாதம் சுக்லபக்ஷம் துவாதசிதிதி சனிவாரமும் பொருந்திய மாலைவேளையில் நிச்சய மாய் இறந்துபோவான் எ-று.*

*(வி-ரை) சுபக்கிரகம் என்பது சந்திரன் புதன் குரு சுக்கிரன் இவர்க ளாயினும், அஷ்டமாதிபதி புதன் சனியுடன் கூடினாலும், லக்னாதிபதியும் சந்திரன் நின்ற ராசிக்குடையவனும் கூடி எந்த ராசியில் நின்றாலும் சந்தி ரன் புதன் சுக்கிரன் இவர்கள் ஒன்றுகூடி சப்தமமேறி லக்கினத்தைப் பார்த்தாலும் அந்த ஜாதகனுக்கு வயது தீர்க்கமாகும். லக்னாதிபதியும் அஷ்டமாதிபதியும் ஈனம்பெற்று பெண்ராசி சேர 6-12 இவ்விடங்களில் சனி நிற்க 6-3-12-ஆம் வீட்டோர் பலமற்றிருக்க அற்ப ஆயுள் என்றும் கிரக ஆராய்ச்சியை அறிந்து கூறுக.* (201)

## தனுசு

ஆனியெனுந் தநுசுலக் கினபலன் மூத்தானுக்
கண்ணுமினை யோர்க்கஞ்சு வான்வண்மை புகழோன்

பேணியநற் போகவான் சத்துருவை யறிவன்
பெரியவித்தை யிளவயதிற் பெற்றிடுவ னிதியம்
நாணியச் சப்படுவ னடுவயதி லேதான்
நான்மூன்றிற் பதினைந்தில் நாலெட்டி னூற்பான்
காணுநேத் திரரோகஞ் சுபரெழுபத் தேழாம்
கருதிநிரி யாணந்தேட் கானபடி கண்டாய்.

(இ-ள்) *காண்டீபமென்று சொல்லும் தனுசுராசியில் ஜெனித்தவன் தன் உடன்பிறந்தார்களைக் கண்டு, அதாவது: தனது சகோதரர்களான ஜேஷ்டன் கனிஷ்டன் இவர்களைக் கண்டு அஞ்சுபவனும், சிறப்பும் பெருமையும் உள்ளவனும், ஸ்திரீசுகத்தில் மிஞ்சியவனும், தன்னை எதிர்க்கும் விரோதிகளை ஜெயிப்பவனும், நிறைந்த கல்வியாளனும், இளைய வயதிலேயே மிக்க செல்வத்தை யுடையவனும், மத்தியவயதில் சுலபகஷ்டமும் துர்ப்பலனையும் அனுபவிப்பான். 12-ம் ஆண்டிலும், 15-32-40-வது ஆண்டுகளிலும் நேத்திரரோகம் உள்ளவனும, இந்த ராசியை சுபக்கிரகங்கள் நோக்கில், அதாவது சந்திரன் புதன் சுக்கிரன் இவர்கள்நோக்கில் இவன் ஜெனித்த 77-வது ஆண்டில் முன்சொன்ன விருச்சிகலக்கினப்படி மிதுன மாதம் வளர்பிறையாகிய சுக்கிலபக்ஷத்து 12-ஆம திதியாகிய துவாதசியில் விசாகநக்ஷத்திரம் கூடியவேளையில் மாலையில் உயிரிழப்பான் எ-று.*

(வி-ரை) *வயது சொல்வது எப்படியெனில்,*

*உதயத்தில் சுபரேயாகில் ஒருபகை யோரும் பாரார்*
*மதியத்தில் நல்லோரன்றி மத்தய ரிருக்க லாகா*
*அதையத்தில் சுபரேகூடி யம்புலி பெருமையாகில்*
*விதியற்று போகாதாகி மேதினி இருப்பன் நூறாய்.*

(இ-ள்) *ஜெனனராசியில் சுபக்கிரகங்களும், ஷை ராசியை அவ்விராசிக்கு பகை கிரகங்கள் பார்வையின்றி 8-ஆம் ராசியில் பாவகோட்களில்லாமலும், அதையராசியில் சந்திரன் நட்பு ஆட்சி உச்சம் பெற்றிருப்பானாகில் அந்த ஜாதகன் பூரண வயதுடையவனாவனென்று* கேரளத்தில் *சொல்லிய படியும், இன்னும் பின்வரும் 8-ஆம் பாவகத்தையும் ஆராய்ந்துணருதல் நலம்.* (202)

### மகரம்

கண்டசுரு லக்கினங்கா ணுவிடத்தின் மறுவாம்
கண்கணீண் டுருண்டிருக்குங் கமழ்புஷ்பப் பிரியன்
மண்டுதிர புத்தியபி மானிசுக சரீரன்
வருஞ்சிவந்த மெய்யுடையன் மனையாளுக் கினியன்
மிண்டுபக்ஷி கொன்றிடுவன் மேவுமொரு பத்தில்
விளம்புசுர நாலெட்டில் விதேசமுப்பத் தேழில்
ஈண்டிசர்ப்ப பயஞ்சுபக்கோ ளேக்கவறு பத்தேழ்
உயர்பாரில் வந்திடுவ னெனவுரைசெய் வாரே.

(இ-ள்) கணிதசாஸ்திரமாகிய சோதிட வல்லவர்கள் கலை சுறு என்று சொல்லும் மகரராசியில் பிறந்தவனைக் குறித்து தனக்குத் தெரியாத இடங்களில் மறு என்னும் அடையாளமுடையவனும், உருண்டு திரண்ட பருத்த கண்களும், வாசனை நிறைந்த புஷ்பங்களின்மேல் ஆசைப்படுபவனும், எக்காலத்திலும் தாழ்வடையப்படமாட்டாத யுக்தி புத்தியும் பேச்சுநிலையுள்ளவனும், நோயில்லாத சவுக்கிய தேகனும், தன் பெண்சாதியால் சந்தோஷமடையும் அன்பனும், பறவைகளை கோபத்தோடு கொல்பவனும், 10-ஆண்டில் ஜுரமும், 32-ஆம் ஆண்டில் அன்னியதேச சஞ்சாரம் செய்பவனும், 37-ஆம் ஆண்டில் விஷத்தையுடைய பாம்புகளால் பயங்கரமும் இந்த லக்கினத்தை சுபகோள் என்னும் நல்லவர்கள் பார்க்க 67-ஆம் ஆண்டுவரையில் பெருமையைப் படைத்த இப்பூமியில் வாழ்ந்திருப்பான் என்று சொல்வாய் எ-று. (203)

### ஷை நிரியாண கால விபரம்

பூச மாதங் குறைபக்கப் பஞ்சமி
ஆதி லுத்திரட் டாதி யருக்கனுள்
வீசு காலையின் மென்கொன்றை சூடிய
தேசி கன்னடி சேர்வது திண்ணமே.

(இ-ள்) 4-ஆம் மாசமான கடகமாதத்தில் கிருஷ்ணபக்ஷம் 5-ஆம் திதியான பஞ்சமியில் முழுநக்ஷத்திரமாகிய உத்திரட்டாதியில் ஆதிவாரம்கூடிய உதயகாலத்தில் கொன்றைமாலையை ஆபரணமாக அணிந்திருக்கும் பரமன் பாதம் போய்ச் சேர்வான் எ-று. (204)

### கும்பம்

பரிந்தகும்ப லக்கினத்தான் றன்னையே புகழ்வன்
பழிப்பன்மற் றோர்தம்மைக் குள்ளன்அற்ப வித்தை
தெரிந்தபித்த சரீரவான் செய்ந்நன்றி மறப்பன்
செங்கண்ணன் சுகமுள்ளான் ஸ்திரீகளுக்கு நண்பன்
பொருந்துபதி னோராண்டிற் சுரமாம்பத் தொன்பான்
புரிந்தசன்னி வாதசுரம் புண்ணியர் பார்த்திடினே
திருந்துவய தெண்பதுசித் திரையைந்தாந் திதியில்
திகழ்செங்கை பொன்வாரத் தந்தியிலந் தியமே.

(இ-ள்) மேஷம்முதல் 11-ஆம் ராசியான குடத்தைப்போன்ற கும்ப ராசியில் ஜெனனமானவன் தன்னைத்தானே புகழ்ச்சியாய்ப் பேசி மற்றவர்களை இழிவும் ஏளனமும் செய்பவனும், பழிவசனங்களை விள்ளுபவனும், குள்ளமானவனும், கொஞ்சம் வாசிப்பு உடையவனும், யாவுமறிந்தவனும், சதா தன் தேகத்தில் பித்தமுடையவனும், பிறர்செய்த நன்றியையுடனே மறந்துபோகுபவனும், சிவந்த கண்களையுடையவனும், சுகத்தையே அனுபவிப்பவனும், பெண்கள் சிநேகிதனும், 11-ஆம் ஆண்டில் ஜுரமுடையவ

னும், 19-ஆம் ஆண்டில் ஜன்னி முதலிய சீதள வாதஜுரம் உடையவனும், இவ்விராசியை சுபக்கிரகங்களாகிய சந்திரன் புதன் குரு சுக்கிரன் இவர்கள் நோக்கில் 80-ஆம் ஆண்டில் மேஷமாதம் 5-ஆம் திதியான பஞ்சமியும் யாவரும் புகழும் திருவாதிரை நக்ஷத்திரமும் கூடிய குருவாரத்தன்று இறந்து போவான் எ-று.

(வி-ரை) இவ்விராசிக்கு சுபனாகிய சுக்கிரனும், இனசனி சுபக்கிரகமான குரு சந்திரனும் பலம்பெற்று சொக்ஷேத்திரம் அடைந்து தீயகோட்களின் பார்வையற்று சுபவர்க்கமடையின் பூர்ண ஆயுளென்றும், இலக்கினதிபதி பகை க்ஷேத்திரமும் பகை கிரகத்துடனும் கூடி 6-8-12 இவ்விடங்களில் இருந்தால் அற்ப ஆயுளென்றுங் கூறுவர். (205)

## மீனம்

அந்தமுறு மீனலக் கினந்தனவான் சூரன்
அழகியமெய் யன்ஞானி யகோரியிரு தாரன்
கந்தமலர்ப் பிரியன்றண் கண்கிருபை யாளன்
காதுநோய் பிறருடைமைக் காசிப்பன் கண்டே
முந்துசம யத்தன்பல் லூணருந்து மூர்க்கன்
முந்நான்கி லிருப்பதினின் முளுமிகச் சுரமே
நொந்திரும லெழுநான்கிற் சுபக்கோ ளேறக்கிடினே
நூறுண்டு நிரியாண நுவல்கும்பத் தடையே.

(இ-ள்) அழகுபொருந்திய மீனலக்கினத்தில் பிறந்தவன் பொருள் அதிகம் உள்ளவனும், சூரனும், அழகான சரீரங்களை யுடையவனும், சன்னியாசியும், இரண்டு மனைவிகளையுடையவனும், சுகந்த வாசனையையுடைய புஷ்பங்களின்மேல் பிரியம்வைப்பவனும், காதுநோயுள்ளவனும் அன்னியர் பொருளுக்கு ஆசைபடுபவனும், சுயபந்துக்களின்மேல் பாசமுடையவனும், எக்காரியத்திலும் முந்திக்கொள்ள அவாவுடையவனும், போஜனப்பிரியனும் மூர்க்கனும், 12-20 இவ்வயதில் ஜுரமுடையவனும், 28-ஆம்ஆண்டில் இருமலும், இவ்விராசியை சுபக்கிரகங்கள் பார்த்தால் 100-வயது வரையில் ஜீவித்திருந்து முன்சொன்ன கும்பலக்கினத்தோனைப்போலவே மேஷமாதம் பஞ்சமிதிதி திருவாதிரை கூடிய குருவாரம் மாலையில் இறந்து போவான் எ-று.

(வி-ரை) இதுவரையில் சொல்லிய லக்கினபாவபலன் பொதுப்படலமாய் சொன்னதேயாம். இலக்கினத்தைக்கொண்டு சரீரம் நிறம் காந்தி செல்வம் நெற்றி ஆயுள் உத்தேசம் கீர்த்தி மூர்த்திகரம் கல்யாணம் இவைகளைப் பற்றிச் சொல்லலாமென முன்கூறிய பொதுபாவகத்தில் கூறியபடி பின் சொல்லும் வண்ணம் ஆராய்ந்து கூறுக.

(உதாரணம்.)

| | | | |
|---|---|---|---|
| ல | சனி | ராகு | |
| | இராசி | | சூரி அங் |
| | | | புத சுக் |
| | கேது | சந் | குரு |

மீனலக்கினத்தோனைச் செல்வம் உடையோனென்று குறிக்கப் பட்டன. இங்கு தனாதிபதி சப்தம கேந்திரமும், புதன் வீடாகவும் நின்று இலக்கினத்தைப் பார்ப்பதால் நீண்ட செல்வமுடையோனாயினும் விரயாதியான சனி தனஸ்தானத்தில் இருப்பதால் உடனே விரயமாகும், 'சூரன்' என்றதால் இலக்கினாதிபதி குருவாயும், தன் சுயவீட்டைப் பார்ப்பதாலும், சூரனும் இராஜவடிவையுடையவனுமாவான். 'சன்னியாசி'என்றது வாக்குஸ்தானமும் குடும்பஸ்தானமுமான இரண்டில் சனிவந்ததால் தன் சுயவீட்டிலிருந்து வாழமாட்டான் என்றும் இவ்வாறு பற்பலவிதமாய் கிரக ஆராய்ச்சியால் பலன் சொல்லவேண்டுவது அவசியம். 5-வது வீடுவரையில் இடைவிடாது கிரகமிருப்பதால் இதன்பலனை யோகபடலத்தால் காணலாம். (206)

இலக்கின பலன் முற்றிற்று.

# இலக்கினத்தில்
# கிரகங்கள் நின்ற பலன்



## ரவி மதி லக்கினத்தில் நின்ற பலன்

லக்கினத் திரவிநிற்கில் நாடிய சிவப்பனுவன்
தொக்கவே நீண்டமெய்ய னுடன்பித்த ரோகவானும்
மிக்கவே சசிக்கிளைத்த மெய்யன்மூச் சசிகன்றாயன்
தக்கனல் வசனன்புத்தி தகுவன்பாக் கியவானுவன்.

(இ-ள்) *ஜெனனராசியில் சூரியன் நிற்கப் பிறந்தவன் சிவந்த சரீரம் உடையோனும், நீண்டவனும், பித்தரோகம் உடையோனென்றும் சொல்லுக. சந்திரன் நிற்கின் சிறுத்து மெலிந்த சரீரமும், பெருமூச்சு விடுபவனும், நல்லவனும், நன்மார்க்க விஷயங்களையும், இனிய வசனங்களைப் பேசுபவனும், புத்திசாலியும், திரண்ட அயிஸ்வரியம் உள்ளவனுமாக இருப்பன் எ-று.*

(வி-ரை) *இலக்கினத்தில் மேற்சொன்ன கிரகப்படி இப்பலன் விளையினும், சந்திரனுடன் 10-ஆம் வீட்டோன் சம்மந்தமாய் உச்சம்பெற 25-க்கு மேல் 5-வருஷம் வரையில் யோகமுடையோனென்றும் சொல்லுக.* (207)

## குஜன் லக்கினத்தில் நின்ற பலன்

குசனுறிற் பித்ததேகன் கூறுமுன் கோபிநல்ல
வசனமுஞ் சிட்டனுவன் வாயீச்சற் கொட்டலொத்த
வசனநல் லுதரந்தூல மாகுமெய் யிளைத்திருப்பன்
இசையுமெவ ரையுநகைப்ப னிதயசஞ் சலனுவானே.

(இ-ள்) *இலக்கினத்தில் குஜன் நிற்கப் பிறந்தவன் திடீரென சினமுண்டாகும் தன்மையுடையவனும், பித்தசரீரம் உடையவனும், மிருதுவான இனிய வசனமும், விசித்திரமானவனும், பேசும்போது வாயிலிருந்து ஜலம் வருதலும் பருத்த தேகமும், அதிக இரத்தம் உள்ளவனும், இளைத்த சரீரமும், எல்லோரையும் நகைத்து ஏளனம் செய்பவனும், வருத்தமுள்ளவனென்றும் சொல்லுக எ-று.*

(வி-ரை) *சோதிட வல்லவர்கள் லக்கினத்தில் குஜன் நின்றாலும், இலக்கினத்திலேயே ஆக்ஷியாய் இருந்தாலும், அந்த ஜாதகன் யோகமுடையோனாகவும், அவிரூபம உடையோனாகவும், இருப்பான். அந்த ராசிக்கு பாக்யாதிபதியும் சுகாதிபதியாயுமுள்ள குருவும், மற்றுமுள்ள சுபகிரகங்களும், லக்கினத்தைப் பார்த்தால் நல்ல ரூபனும் ராஜரீகம் புரிவோனாகவு மிருப்பானெனவும் கூறுவர். இவ்வண்ணமே ஷை லக்கினத்தில் நின்ற குஜனை பார்க்கும் கிரகசுபாவ முதலியவைகளை யறிந்து மற்றும் பலன் கூறுவது நலம்.* (208)

## புதன் குரு லக்கினத்தில் நின்ற பலன்

பண்புடன் புந்திநிற்கப் பரியாச வசனஞ்சொல்வன்
நண்புடன் பிரியவாக்கி நாடிய ரோகமெய்யன்
விண்குரு தூலதேகி மெய்யிற்சேத் துமரோகத்தன்
கண்டலே மயிர்மேனோக்குங் காட்சியன் சிவப்புமெய்யன்.

*(இ-ள்) லக்கினத்தில் புதன் நிற்கப் பிறந்தவன் ஏளனமான வசனங்களைப் பேசுபவனும், எல்லாருடனும் நட்புகொண்டு பேசும் குணமும், வியாதியையுடைய சரீரமுடையவனெனவும் கூறுவர். இலக்கினத்திலேயே நற்கோட்களில் ஒருவரான குருநிற்க ஜெனித்தவன் பருத்த சரீரமுடையவனும், ரோகசரீரமுடையவனும், தடித்து முறப்புடைய உரோமமுடையவனும் ஆவான் எ-று.*

*(வி-ரை) இலக்கினத்தில் புதன் குரு இவ்விருவரும்சேர்ந்து வேறுவிதமான கிரகங்களின் தோஷம் யாவுமின்றி இருக்க அவன் வயது முதலிய யோகங்களுக்கு அளவில்லை. இதுவன்றியும் சேத்துமரோகத்தன் என்பதை சேத்துமவியாதி யுடையோனெனவும் கொள்வது நலம்.* (209)

## புகர் சனி லக்கினத்தில் நின்ற பலன்

சுக்கிர னிற்கிற்காந்தி சரீரவான் சுகவான்பித்தம்
ஒக்கவே வாதரோகி யுறுமயிர்க் கருஞ்சுருட்டை
மிக்கதோர் சனிக்குநீண்டு மெலிந்திடு மெய்யன்கையைத்
தக்கவீச் சிடுவனீலக் கண்ணன்தள் ளாடியாமே.

*(இ-ள்) ஜெனன லக்கினத்தில் வெள்ளிநிற்கப் பிறந்தவன் அழகும் காந்தியுமுடைய சரீரமுடையவனும், சௌக்கியமுடையவனும், பித்த வாதங்களையுமுடைய சரீரமும் கறுத்து சுருண்டிருக்கும் உரோமமுடையவனும் ஆவன். சனி லக்கினத்தில் நிற்க உதித்தவன் உயரமும், இளைத்த திரேகமுடையவனும், தன் கைகளை ஆட்டி நீட்டி வீசிச்செல்லுபவனும், நீலவர்ணமுடைய விழிகளையுடையவனும், தள்ளாடி நடப்பவனும் ஆவான் எ-று.* (210)

## சந்திரன் லக்கினத்தில் நின்ற பலன்

சந்திரலக் கினபலன்க டானுணருங் காலே
சந்திரன்மெய்ப் பலனறியுந் தகைமைதனைக் கேளீர்
எந்தநாளினுஞ் சசிபெண் கலைநிறைந்தா லாணும்
எழினிறைந்த மதிபார்க்க விருப்பவர்தம் மிடத்தில்
வந்தகுற்றம் தீருமவை யெப்படியோ வென்னில்
மநுநீதி யரசனுந்தன் மாநிலத்துற் றவரைச்
சிந்தைமகிழ்ந் த்ருள்புரியும் வாறுபோல் வந்த
தீதகலுங் கொற்றமதிப் பார்வைசிறந் தார்க்கே.

*(இ-ள்) ஜெனனலக்கினத்தில் இரவிக்கு அரசனாகிய சந்திரன் நின்ற பலனைப்பற்றி யோசிக்குமிடத்து சந்திரன் நற்பலனை எவ்விதம் தருவான்*

என்பதை சொல்லுகிறேன் கேட்பாயாக. எந்த நட்சத்திரம் எந்த ராசியாக இருந்தாலும், அவன் நின்றராசி பெண்ராசியாகவும், அதுவே ஜெனன லக்கினமாகவும், இருக்கப் பிறந்தாலும், ஆண் என்றே சொல்லவேண்டும். பூரணசந்திர காலங்களிலே பிறந்தவர்களுக்கு வேறு எவ்விதமான கிரக குற்றமிருந்தாலும் நீங்கும். குற்றமில்லாமலும், வேதநீதியோடு சத்தியம் தவறாது அரசு செய்யாநின்ற அரசன் தன் தேசத்திலுள்ள குடிகள்மீது எவ்விதமாக பூரணகடாக்ஷம் வைத்து ரக்ஷிக்கின்றாரோ அதுபோல் ஷை சந்திரனுடைய பார்வை யிருந்தாலும், ஜெனனராசியி லிருந்தாலும், எல்லா தோஷங்களும் பரிகாரமாகி சுகத்தோடிருப்பான் எ-று.

(வி-ரை) சந்திரனை ஈஸ்வரி என்று குறிக்கப்பட்டதால் சந்திரனுடைய பார்வையோ அல்லது லக்கினத்திலிருப்பதோ அப்படி பிறந்தவனுக்கு தான் பூர்வ கர்மமும் ஒழிந்து பரிசுத்தனுகி வாழ்வன். இவ்வாறு ஜெனிப்பதே பூர்வ நற்பயனுகும். (211)

உள்ளபடி கலைகுறைந்த மதியே யானாலும்
ஒன்னார்வீட் டினும்விரய மெட்டுடனு றுமிடத்தும்
மெள்ளெனநின் றிடிற்பொன்கேந் திரத்தினி லுற்றால்
வெண்மதி குற்றந்தீரும் மஃதெவ்வா றென்னில்
கள்ளவிழும் பசுங்கொன்றைப் பான்றன் னன்பர்க்குக்
கனபாவந் தவித்தின்பங் காட்டுதல்போ லாகும்
தெள்ளியநல் லோர்பார்வை பெற்றசசி குற்றந்
தினகரனைக் கண்டபனி போற்றீரு மென்னே.

(இ-ள்) க்ஷீணசந்திரனுக இருந்து தீயகிரகங்களாகிய சனி, குஜன், சூரியன் இவர்கள் வீட்டிலாவது 6, 8, 12 என்னும் ரோகம் அட்டமம் விரயமென்றும், க்ஷேத்திரங்களிலாவது நின்றால் முன்சொன்ன தீயகிரகங்கள் க்ஷேத்திரமும் 6, 8, 12-ல் நின்று தரவேண்டி தீமையாவுமகற்றி நற்பலனை தருபவனே யாவான். அது எவ்விதமெனில் இடபவாகன ரூடராய் பார்வதியை தன் இடபாகத் தமர்த்தி இராநின்ற பரன் தன்னை தோத்தரித்த அன்பர்களின் பாவங்களை தீர்த்து நற்கதிக்காளாக்கிஇன்பமளிப்பது போலாம். ஷை தீயக்ஷேத்திரங்களிலும், 6, 8, 12-லும் நின்ற சந்திரனை சுபகோட்களாகிய புதன் குரு சுக்கிரன் இவர்கள் பார்வை பெற்றால் தீய க்ஷேத்திரத்தில் நின்ற சந்திரனுக்குரிய தோஷம் அருக்கனைக்கண்ட பனி போலவே நீங்கும் எ-று.

(வி-ரை) ஒவ்வொருவருக்கும் கிரகங்களால் ஏற்படும் தோஷங்கள் நிவர்த்தியாகும். அல்லது நிவர்த்தியாகாதெனக் கூற வேறு ஓர்விதமான வழியும் உண்டு.

அதனை வீமகவிநூலுடையார்,

காணு லக்கினம் நாலேழு பத்தினில்
கோணில் சுக்கிரன் பொன்புந்தி நின்றிடில்
தோணுமே பாவ கிரகங்கள் தோஷங்கள்
பானுவைக் கண்ட பனியைப்போல் நீங்குமே.

(இ-ள்) 1-4-7-10 இவ்விடங்களில் சுக்கிரன், குரு, புதன் இவர்களி லொருவர் நின்று மற்றும் அந்த ஜாதகனுக்கு எவ்விதமான கிரகதோஷ மிருக்கினும், முன் செய்யுளால் தேய்பிறைச் சந்திரனுக்கு கூறியபடி அருக்கனைக்கண்ட பனிபோல் நீங்கும் எ-று. (212)

தீர்ந்துகுற்ற மில்லாத மதியுள தாய்ப் பிறந்தோன்
சீவனுடன் வாழ்ந்திருக்கச் செய்குவனென் னெனில்
சேர்ந்தவிடை மாதின்பக் கொழுநன்மேல் வாஞ்சை
நிறைதல்போற் குழவிமே னேசமதிக் குண்டே
கூர்ந்துகலை நிறைந்தமதி மேடத்தி னிற்கில்
குற்றமிலா ரம்மதியைக் கூசாமற் பார்க்கின்
ஆர்ந்தசிறு வன்றனக்கே யாறெட்டாண் டென்றே
அன்றவர்சோ திடத்துண்மை யறிந்தபெரி யோரே.

(இ-ள்) முன்சொல்லிய தோஷங்க ளில்லாமலும், சுக்லபக்ஷ சந்திரனாக வும், நல்ல சுபகோட்களில் க்ஷேத்திரத்திலும் சிறக்கப் பிறந்தவனும், ஜனன ராசியிலேயே சந்திரனிருக்கப்பிறந்தவனும், ஆயுள்விருத்தி யுடையோனாக வும், வாழ்க்கை சவுக்யமுடையவனாகவும் இருப்பான். எப்படி என்றால் இடதுபக்கம் அமர்ந்திருக்கும் ஈஸ்வரிக்கு தன் பர்த்தாவின்மீது எவ்வளவு பட்சம் உண்டோ அவ்வளவு பட்சம் முன்சொன்ன சந்திரனுக்கு உண்டு. ஜெனனராசி மேஷமாகவும், அவ்விராசியிலே பூரண சந்திரனிருந்து நன்மையைத்தரும் சுபக்கிரகங்களால் பார்க்கப்பட்டால் அந்த ஜாதகனுக்கு வயது-48 என்று சோதிடநூலறிந்த மேதாவிகள் கூறுவர் எ-று. (213)

## சந்திரலக்கினம் பார்க்கும் வகை

சந்திர னிருந்தவீடு சந்திரலக் கினமென்பர்
அந்தமான் சில்லோர்சென்ற கன்னலை யிராசியொன்றிற்
குந்தியே யைந்தைந்தாகக் கொடுத்துவந் திட்டபேற்றை
முந்தியே மேடமாதி யெண்ணியே மொழிவர்சில்லோர்.

(இ-ள்) ஜெனனகாலங்களில் சந்திரன் எந்தராசியில் நின்றானோ அவ் விராசியையே சிலர் சந்திரலக்கினமெனவும் இன்னும் சிலர் ஜெனனலக்கி னத்தில் சென்ற கடிகையை 5-ஆக பாகித்து கின்ற எண்ணுக்கு எந்த ராசி வருகிறதோ அதை மேடமுதலாக எண்ணிக் கண்டதையே சந்திர லக்கினமென்றும் கூறுவர் எ-று. (214)

இலக்கினத்தில் கிரகங்கள் நின்ற பலன் முற்றிற்று.

---

# கரண பலன்

### பவம்

அஞ்சிடான் சுகவான் மெத்த வரசரா லாக்க முள்ளான்
துஞ்சிடாநவகோள்பார்க்குந் துரையினிற்பிரியனுவன்
எஞ்சிடாமிடியன்புத்தி யாளனுமெழிலுளோனும்
பஞ்சுபோன்மயிருமுள்ளான் பவகரணத்தினுனே.

(இ-ள்) *கரணமென்பது 10-வகைப்படும். அவற்றுள் முதற்கரணமாகிய பவகரணத்தில் ஜெனித்தவன் எக்காரியங்களிலும் பின் வாங்கப்படாத தைரியனும், சௌக்கியமுடையவனும், ராஜாக்களால் ரக்ஷிக்கப்படுபவனும், தெள்ளிய சோதிட ஆராய்ச்சிசெய்ய மனமுடையவனும், நீங்கப்படாத கஷ்டமும் புத்திவானும் நன்னடக்கையுமுள்ளவனும், மெல்லியதலைமயிருடையவனும் ஆவானெனக் கூறுவர் எ-று.* (215)

### பாலவம்

இந்திரபோகமுள்ள னிருந்தனமுடையனுவன்
சுந்தரமுடையனுவன் றெுழின்மிகுமற்பமுள்ளான்
சந்ததந்தியாகிமோகி தாழ்விலாக்குணவானுகும்
பந்துமேற்பிரியனுவான் பாலவகரணத்தானே.

(இ-ள்) *பாலவகரணத்திலுதித்தவனைக் குறித்துச் சொல்லவேண்டிய பலன் என்னவெனில், போகசுகத்தில் இந்திரனைப்போன்றவனும், எந்நாளும் நீங்காத ரொக்கஸ்திதியுடையவனும், அழகு முதலிய லக்ஷணங்கள் வாய்ந்தவனும், அற்பமான தொழில்முறையையுடையவனும், தவருத தருமம்செய்பவனும், மோகமுடையவனும், இகழ்ச்சி யடையப்படாத நற்குணமுடையவனும், தன் சுயஜனங்களிடம் ஆசாபாசமுடையவனும் ஆவான் எ-று.* (216)

### கௌலவம்

அரசராற்பிரியனுவ னுசாரமுடையனுவன்
விரைசெறியன்னைதந்தை மேல்விருப்புடையனுவன்
தரைமிகத்தேடவல்லன் சாலதாஷ்டீகனுகும்
கரிபரியுடையனுவன் கவுலவகரணத்தானே.

(இ-ள்) *கௌலவாகரணத்தில் ஜெனித்தவன் ராஜாக்களுக்கு அடிமை செய்ய ஆசைப்படுவோனும், ஆசாரகிருத்தியத்தோடிருப்பவனும், தன்னை ஈன்ற தாய் தந்தையர்மீது விருப்பமுடையோனும், அநேக பூமிகளைச் சம்பாதிப்பவனும், மிக்க தைரியம் பொருந்தியவனும், யானை குதிரை முதலியவைகளை சம்பாதித்து வாழ்பவனும் ஆவானென்றுங் கூறுக எ-று.* (217)

## தைதுலை

திடமிகுமிராசசேவை யுள்ளவன்செல்வமுள்ளான்
திடமிகுவேசைமீதில் வெகுசிந்தையுடையனுவன்
அடன்மிகுவிழியினுளே வறமிலான்கடியனுவன்
தடமெனுஞ்சுகவானுகுந் தைதுலாகரணத்தானே.

(இ-ள்) கூர்மையான பாணங்களையும் பழிக்கச்செய்யும் அழகு பொருந்திய கண்களையுடைய பெண்ணே! தைதுலை கரணத்தில் ஜெனித்தவன் பெருமைதங்கிய அரசர்களிடம் சேவைசெய்பவனும், தனமாகிய திரவியம் அதிகமுடையவனும், அழகுபொருந்திய வேசிகளின்மீது பிரியமுடையவனும், தருமம் செய்யாதவனும், கடினகுணமுள்ளவனும், பூர்ண சௌக்கியத்தை யுடையவனும் ஆவான் எ-று. (218)

## கசம்

தீர்க்கமாம்வேசைமீதிற் சிந்தைதானுடையனுவன்
பார்த்திபராலேமெத்தப் பாக்கியமுடையனுவன்
கார்க்குழலாயொன்னுரைக் கலக்கிடும்வீரமுள்ளான்
கார்த்தருமீகையாளன் கசகரணத்தினுனே.

(இ-ள்) மேகத்தைப் பழிக்கும் கூந்தலுடைய பெண்ணே! கச கரணத்தில் பிறந்தவன் விலைமாதர்களின்மீது ஆசையுள்ளவனும், ராஜாக்களால் மிகுந்த தனத்தை யுடையவனும், தன்னை எதிர்க்கும் சத்துருக்களை ஜெயிக்கும் வீர பராக்கிரமம் பொருந்தியவனும், யாவரையும் காத்து இரக்ஷிக்கும் தர்மிஷ்டியும் ஆவான் என்று சொல்வாய் எ-று. (219)

## வணிசை

உக்கிரகுணத்தானுகு முற்றவர்க்கொன்றுமீயான்
இக்கெனவார்த்தைசொல்வ னேந்திழையார்கண்மீதில்
மிக்கநன்மோகவானும் விளம்புவன்கட்டுவார்த்தை
வக்கிரன்பங்கமுள்ளான் வணிகரணத்தினுனே.

(இ-ள்) வணிசவாகரணத்தில் ஜெனித்தவன் தன்னைப் பெற்றோருக்கு யாதொரு பொருளும் கொடாதவனும், கோபகுணம் உடையோனும், ஸ்திரீகளின்மீது மோகமுடையோனும், யாதொன்றையும் தான் சுயமாய் ஜோடித்துப் பேசுபவனும், எக்காரியத்திலும் ஒற்றுமைப்பட்டு வாராதவனும், ஈயாத லோபியும் ஆவானென்று சொல்லுவாய் எ-று. (220)

## பத்திரை

திரமிகுபாவிபொல்லான் சீர்கேடன்றீயசெய்வன்
தரமறுபுருஷவீனன் சலிப்புளான்றிறமையில்லான்
உரமிகுமழகன்வார்த்தை யுசிதமாயுரைப்பனல்ல
விரைசெறிகுழலினுளே மிகுபத்திரகரணத்தானே.

(இ-ள்) வண்டுகளைப் பழிக்கும் குரலோசையும் மேகத்தைப் பழிக்கும் கூந்தலையுமுடைய அழகு வாய்ந்த பெண்ணே! பத்திரவாகரணத்தில் ஜெனித்தவன் மிகுந்த லோபியும், சிறப்பில்லாதவனும் தன் மனதில் எந்த காரியத்திலும் சலிப்புடையவனும், புருஷத்துவம் இல்லாத ஈனனும் திறமை இல்லாதவனும், நயநயப்பான வார்த்தைகளைப் பேசுவோனும் ஆவான் எ-று. (221)

## சகுனி

கனமிகவுடையவனுவன் கருதியவடிவமுள்ளான்
தனமிகவுடையவனுவன் ருனியமுடையவனுவன்
அனநடைமாதேகேளா யறிவுளன்கல்விமானும்
சனமிகவுடையனுவன் சகுனியாங்கரணத்தானே.

(இ-ள்) அன்னத்தைப் பழிக்கும் நடையுடைய பெண்ணே! சகுனி கரணத்தில் பிறந்தவன் தடித்த சரீரம் உள்ளவனும், அழகுள்ளவனும், விசேஷ தனசம்பத்தும் தான்யசம்பத்தும் உடையவனும், அறிவு வித்தை தைரியம் வாய்ந்தவனும், அநேக பந்துக்களை யுடையவனும் ஆவானென்று சொல்வாய் எ-று. (222)

## சதுஷ்பாதம்

வார்த்தையோநிலைமையில்லான் வறுமையுள்ளவனேயாவன்
தீர்க்கமாய்வேசைமீது சிந்தையுள்ளவனேயாவன்
தூர்த்தனுங்கோபவானுந் துர்ச்சனுவான்றத்துவ
சாத்திரப்பிரியனுவன் சதுஷ்பாதகரணத்தானே.

(இ-ள்) சதுஷ்பாதகரணத்தில் ஜெனித்தவன் தான் பேசும்வார்த்தை நிலை யில்லாதவனும், தனச்சேர்க்கை இல்லாது தரித்திரத்தை யுடையவனும், பரத்தையர்களின்மீது பூரண சிந்தையுடையவனும், கெட்ட துன்மார்க்க குணமும், அடிக்கடி சினம் கொள்ளுவோனும், துன்மார்க்க நேசம் உள்ளவனும், தத்துவ சாஸ்திரங்களின்மீது ஆசையுள்ளவனும் ஆவான் எ-று. (223)

### நாகவம்

அல்லல்சேரங்கமுள்ளா னற்பவான்கோபமுள்ளான்
நல்லமானியுமேயுள்ளா ஞரிமேற்பிரியனுவன்
மல்லல்சேர்குழலினுளே மருளுற்றகுணமேயுள்ளான்
நல்லதோர்புசிப்புமுள்ளா ஞகவகரணத்தானே.

(இ-ள்) நாகவாகரணத்தில் ஜெனித்தவன் பலனை சொல்லுமிடத்து துன்பத்தையே அனுபவிக்க சரீரமெடுத்தவனும், அற்பபுத்தியை யுடையவனும், கோபமுடையவனும், உத்தமகுணமும், திறமையுடையவனும், பெண்களின்மேல் ஆசையுள்ளவனும், எக்காரியங்களிலும் சந்தேககுணமும் சுசிகரமான அன்ன பதார்த்தங்களைப் புசிப்பவனும் ஆவானென்று குயிலைப் போன்ற இனிய மொழிகளையுடைய பெண்ணே! நாகவாகரணத்தி லுதித்தவனைக் குறித்துக் கூறுவாய் எ-று. (224)

### கிம்ஸ்துக்கினம்

கலகவான்கடியமோகி கருதுதாய்தந்தைமூத்தோர்
இலகியவேசைமீது மின்பமுற்றிடுவனென்ப
உலகியலறிவான்யோகி யுயர்வுளானுகுநல்ல
சிலைநுதன்மாதேகீட கரணத்தானென்றுசெப்பே.

(இ-ள்) மானைப்போன்ற அழகுள்ள நுதலைப்படைத்த பெண்ணே! கிம்ஸ்துக்கின கரணத்தில் ஜெனித்தவன் கோள்சொல்பவனும், விசேஷ மோகம்உடையவனும், தன்னை ஈன்றோர்மீதும் சோதரர்மீதும்அழகுடைய தாசி இவர்கள்மீதும் ஆசையுள்ளவனும், உலக நோக்கா நோக்க இயல்பு ஆசார கிருத்தியங்களை தெரிந்துகொள்பவனும், உயர்ந்த அந்தஸ்தை யுடையவனும் சன்னியாசியும் ஆவானென்று சொல்லுக எ-று. (225)

*கரணப்பலன் யாவும் இதைப் பொதுவாக வைத்து*
*மற்றும் பாவகப்பலனுல் விபரம் கூறவும்*

*கரணபலன் முற்றிற்று.*

---

# முக்குண வேளை



| நாழிகை விபரம் | மணி மு. | வ. | ஞாயிறு | திங்கள் | செவ்வாய் | புதன் | வியாழன் | வெள்ளி | சனி | அளவு |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 3¾ | 6 | 7½ | தாம | சாத் | ராக்ஷ | தாம | சாத் | ராக்ஷ | தாம | 4 |
| 7½ | 7½ | 9 | சாத் | ராக்ஷ | தாம | சாத் | ராக்ஷ | தாம | சாத் | 8 |
| 11¼ | 9 | 10½ | ராக்ஷ | தாம | சாத் | ராக்ஷ | தாம | சாத் | ராக்ஷ | 12 |
| 15 | 10½ | 12 | தாம | சாத் | ராக்ஷ | தாம | சாத் | ராக்ஷ | தாம | 16 |
| 18¾ | 12 | 1½ | சாத் | ராக்ஷ | தாம | சாத் | ராக்ஷ | தாம | சாத் | 20 |
| 22½ | 1½ | 3 | ராக்ஷ | தாம | சாத் | ராக்ஷ | தாம | சாத் | ராக்ஷ | 24 |
| 26¼ | 3 | 4½ | தாம | சாத் | ராக்ஷ | தாம | சாத் | ராக்ஷ | தாம | 28 |
| 30 | 4½ | 6 | சாத் | ராக்ஷ | தாம | சாத் | ராக்ஷ | தாம | சாத் | 32 |
| 32¾ | 6 | 7½ | ராக்ஷ | தாம | சாத் | ராக்ஷ | தாம | சாத் | ராக்ஷ | 36 |
| 37½ | 7½ | 9 | தாம | சாத் | ராக்ஷ | தாம | சாத் | ராக்ஷ | தாம | 40 |
| 41¼ | 9 | 10½ | சாத் | ராக்ஷ | தாம | சாத் | ராக்ஷ | தாம | சாத் | 44 |
| 45 | 10½ | 12 | ராக்ஷ | தாம | சாத் | ராக்ஷ | தாம | சாத் | ராக்ஷ | 48 |
| 48¾ | 12 | 1½ | தாம | சாத் | ராக்ஷ | தாம | சாத் | ராக்ஷ | தாம | 52 |
| 52½ | 1½ | 8 | சாத் | ராக்ஷ | தாம | சாத் | ராக்ஷ | தாம | சாத் | 56 |
| 56¼ | 8 | 4½ | ராக்ஷ | தாம | சாத் | ராக்ஷ | தாம | சாத் | ராக்ஷ | 60 |
| 60 | 4½ | 6 | தாம | சாத் | ராக்ஷ | தாம | சாத் | ராக்ஷ | தாம | |

## முக்குண வேளை அறிதல்



வேளைகளறியத்திங்கள் வியாழஞ்சாத்வீகமாகும்
நீளுஞ்சுக்கிரன்செவ்வாய்க்கு நீண்டிராசதமேயாகும்
வாளைநேர்கண்ணாய்புந்தி மந்தன்செங்கதிர்வாரத்தின்
நாளுந்தாமதமாங்காலை நாழிகைநான்கதாமே.

(இ-ள்) *வேளைகளென்பது சாத்வீகம், ராஜஸம், தாமதம்என மூவகைப் படும். அவற்றுள் சாத்வீகவேளைக்கு திங்கள் வியாழம் இவ்விரண்டு நாட்களுமாம். ராஜஸவேளைக்கு வெள்ளி செவ்வாய் இவ்விரண்டு நாட்க ளாகும். தாமதவேளைக்கு ஞாயிறு புதன் சனி இம்மூன்று நாட்களுமாகும். இவ்வாறே ஒவ்வொருநாளும் காலை சூரியோதயமுதல் 3¾-நாழிகையாக ஒவ்வொருவேளையும் கணக்கிட்டுச் சொல்லுக. எப்படியெனில் இதன் விபரம் ஆரம்பத்தில் காட்டியவாறும் எ-று.* (226)

### சாத்வீக வேளையின் பலன் விபரம்

பரவுசாத்விகவேளைக்குப் பளிங்கொளிநிறமுமுள்ளான்
விரவுநல்லறிவுபத்தி விதாணஞானமுள்ளான்
குரவர்மேற்புத்தியுள்ளான் கொடுமைசேர்துன்பமில்லான்
வரவுறுமின்பமெல்லாம் வருமவன்றனக்குமாதே.

(இ-ள்) *உலகில் சிறப்புற்றோங்கிய பெயர் விளங்கும் பெண்ணே! சாத்வீகவேளையின் பலனைக் கூறுமிடத்து பிரகாசம்பொருந்திய மேன்மை யான அறிவும், பக்தி முதலிய ஞானமார்க்கங்களை யறிந்தவனும், சண்முகக் கடவுள்மீது பக்தியுள்ளவனும், தீங்கு முதலிய கஷ்டங்களை யடையாத வனும், இலாபகரமும் சந்தோஷ முதலிய இன்பங்களையும் சந்தோஷ முடையவனும் ஆவானென்று கூறுவாயாக.*

*இதனை மேற்காட்டியபடி வேளைகள் அறிந்து கூறுவதாயினும், இத் துடன் பாவபலனையும் ஆலோசிக்கவேண்டும்.* (227)

### இராஜஸ வேளையின் பலன்

அன்பிராசதவேளைக்கே சனித்தவனறிவுமுள்ளான்
இன்பத்திலாசைபற்று மியலுநல்லுரைகற்பானன்
பொன்புவிகலைகளிந்தப் புவிக்குபகாரமுள்ளான்
துன்பமற்றரசாய்நீதி செலுத்துவான்சுகமுமுள்ளான்.

(இ-ள்) அன்பு நிறைந்த ராஜஸவேளையில் ஜெனித்தவன் புத்திசாலி யும், சுகம் சந்தோஷங்களுக்கு ஆசைப்படுபவனும், உத்தம மார்க்கங்களைக் கற்றுக்கொள்பவனும், பொன்படைத்த இப்பூமியில் அனைவருக்கும்உபகாரி யாயும், துன்பமின்றி நீதிமார்க்கமோடு அரசுசெய்யும் சவுக்கியமுள்ளவன் என்றும் கூறுவாயாக எ-று. (228)

## தாமத வேளையின் பலன்

வலியதாமதவேளைக்குள் வந்துசன்மித்தோன்செய்கை
பொலியநித்திரையெப்போதும் புரிந்துளான்பொய்யேசொல்வன்
நலியவேமயக்கஞ்சோம்பு நண்ணிடுமந்தனுவான்
பலகலையறிவுமில்லான் பாவசிந்தையனேயாவான்.

(இ-ள்) கொடியதாகிய தாமதவேளையில் ஜெனித்தவன் செய்கை யாவன; எக்காலத்திலும் நீங்காத நித்திரையை யுடையவனும், பொய் சொல்லுபவனும், நலிந்த சரீரமும் ஆயாசம் சோம்பல் உடையவனும் பற்பல நூல்களை ஆராய்ந்து பார்க்காதவனும், அறிவில்லாதவனும், பாவம் செய்யும் குணமுள்ளவனும் ஆவான் எ-று. (229)

226-ஆம் செய்யுளின்படி

ஜெனித்தநாள் சாத்வீக தினமாயும் ஜெனனமாகும் காலத்தில்

## சாத்வீகமும் ராஸதமுமாய் இருக்க அவன் பலன்

இருந்துசாத்வீகந்தன்னிற் சாத்வீகந்துறவுசாந்தி
வருந்திடாவகையுற்சாகி மற்றதில்ராசதந்தான்
திருந்தியதானசிந்தை சிறந்திடுஞ்சாந்தமுள்ளான்
பொருந்தியதாமதத்தான் போதவேமந்தனுவான்.

(இ-ள்) சாத்வீக தினத்தில் சாத்வீகவேளையில் ஜெனித்தவன் சன்னி யாசிகளால் மெச்சப்படுபவனும், கஷ்டமில்லாது சந்தோஷத்தோடு இருப்ப வனும் ஆவான். மேல் எழுதிய சாத்வீக தினத்தில் ராஜஸவேளையில் ஜெனித்தவன் உண்மையான மனத்தோடு தானம் செய்பவனும், மேன்மை யும் சாந்த குணமுடையவனும் ஆவான். ஷை சாத்வீகதினத்தில் தாமத வேளையில் பிறந்தவன் அதிக சபலபுத்தியையுடையவனுவான் எ-று. (230)

தக்கராசதத்தில்ராச தம்பெறிற்றருமனாகும்
ஒக்கவேயதனிற்ரும தம்பெறிலிகழ்ச்சியுள்ளான்
திக்கெனப்பாவஞ்செய்யுஞ் சிந்தையனுவன்கண்டீர்
மிக்கசாத்வீகமாயின் மெய்ஞ்ஞானியிரக்கவானும்.

(இ-ள்) இராஜஸநாளில் ராஜஸவேளையில் ஜெனித்தவனுக்கு தான தருமம் முதலிய பரோபகாரங்களைப் புரிகுவன். ஷ தினத்தன்று தாமத வேளையில் பிறந்தவன் தாழ்ச்சியுள்ளவனும், திடமெனப் பாவச் செயல்களைச் செய்ய எண்ணமுடையவனுவான். ஷ தினத்தில் சாத்வீக வேளையாயின் சன்னியாசியும் தயை தாட்சண்ய நெஞ்சுள்ளவனும் ஆவான் எ-று. (231)

## தாமத தினத்தன்று

ஈறுதாமதத்திற்கும தம்பயமிகழ்ச்சிபாவம்
கூறுநித்திரைமயக்கங் குறித்ததிலாசையுள்ளான்
வேறுராசதங்களிப்பு வெகுளியுண்ணுததுண்டல்
சீறிலாசாத்துவீகஞ் செவ்விபோய்வருத்தஞ்செய்யும்.

(இ-ள்) தாமததினத்தன்று தாமதகாலத்தில் ஜெனித்தவன் பயங்கரம் தாழ்மை பாவம் இவைகளை யுடையவனும், அதிக தூக்கமும் சோம்பலும் தான் குறித்த பொருள்மீது நீண்ட பிரியமுள்ளவனும் ஆவான். ராஜஸ காலமாயின் உற்சாகமும், தான் எந்தகாலத்தும் அருந்தப்படாத பொருள்களை இன்பத்தோடு அருந்தலுமாம். சிறப்பில்லாத சாத்வீகமாயின் தன் வாயைக்கொண்டே துன்ப முதலிய விசனமும் உண்டாகும் எனக் கூறுவர் எ-று. (232)

முக்குணவேளை யறிதல் முற்றிற்று.

---

## கால வோரையின்

அருக்கன் புகர்புந்தி யிந்துதுண்
இருக்குங் கடிகை யிரண்டரையா
மரிக்கு மணஞ்செயு மக்களைப்
சிரிக்குஞ் சிறைப்படுஞ் செல்வமும்

(இ-ள்) மரணம், விவாகம், மக்களைப் பெற்று வாழ்ந்திருத்தல் கொடுக்கும் காலங்களான சூரியன் சுக்கிரன் புதன் சந்திரன் சனி குரு கும் 'இரண்டரை நாழியாக அதாவது ஒருமணி நேரமாக கணக்கிட்டுச்

உதாரணம்:—சனிவாரம் மாலை 4-மணிக்கு ஓர் குழந்தை ஜெனித்த யால் அன்றைய சூரியோதயமுதல் 2½-நாழிகை வரையில் சனிஓரை என் 4-அருக்கன், 5-புகர், 6-புந்தி, 7-இந்து, 8-மைந்தன், 9-அந்தணன், 1 0-சேய்

### பகல்

| நாழி | மணி மு. | வ. | ஞாயிறு | திங்கள் | செவ்வா | புதன் | வியாழ | வெள்ளி | சனி |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 2½ | 6 | 7 | சூரிய | சந்தி | அங்கா | புதன் | குரு | சுக்கிர | சனி |
| 5 | 7 | 8 | சுக்கிர | சனி | சூரிய | சந்தி | அங்கா | புதன் | குரு |
| 7½ | 8 | 9 | புதன் | குரு | சுக்கிர | சனி | சூரிய | சந்தி | அங்கா |
| 10 | 9 | 10 | சந்தி | அங்கா | புதன் | குரு | சுக்கிர | சனி | சூரிய |
| 12½ | 10 | 11 | சனி | சூரிய | சந்தி | அங்கா | புதன் | குரு | சுக்கிர |
| 15 | 11 | 12 | குரு | சுக்கிர | சனி | சூரிய | சந்தி | அங்கா | புதன் |
| 17½ | 12 | 1 | அங்கா | புதன் | குரு | சுக்கிர | சனி | சூரிய | சந்தி |
| 20 | 1 | 2 | சூரிய | சந்தி | அங்கா | புதன் | குரு | சுக்கிர | சனி |
| 22½ | 2 | 3 | சுக்கிர | சனி | சூரிய | சந்தி | அங்கா | புதன் | குரு |
| 25 | 3 | 4 | புதன் | குரு | சுக்கிர | சனி | சூரிய | சந்தி | அங்கா |
| 27½ | 4 | 5 | சந்தி | அங்கா | புதன் | குரு | சுக்கிர | சனி | சூரிய |
| 30 | 5 | 6 | சனி | சூரிய | சந்தி | அங்கா | புதன் | குரு | சுக்கிர |

## விபரமும் பலனும்

மந்தனெ டந்தனன் சேய்
மிந்த வோரை களில்
பெற்று மகிழ்ந் திருக்கும்
போமனத் தேர்ந்து கொள்ளே.

*சந்தோஷமடைதல் சிறையிருத்தல், தனம் இவைகளைச் செய்யும் அல்லது அங்காரகன் இவர்களுக்கு ஒருநாளாகிய 60-நாழிகையை ஒவ்வொருவருக் சொல்லுக.*

*தானல் அப்போது உதயாதி நாழிகை-25 ஆகும். அன்று சனிவாரமாகை றும், அதற்குமேல் மற்றும் உள்ள 9-பாகத்தையும், 2-அந்தணன், 3-சேய், என்னும் அங்காரக ஓரை என்றும் தெரிந்துக்கொள்ளுக.*

### இரவு

| நாழி | மணி மு. | வ. | ஞாயிறு | திங்கள் | செவ்வா | புதன் | வியாழ | வெள்ளி | சனி |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| 32½ | 6 | 7 | குரு | சுக்கிர | சனி | சூரிய | சந்தி | அங்கா | புதன் |
| 35 | 7 | 8 | அங்கா | புதன் | குரு | சுக்கிர | சனி | சூரிய | சந்தி |
| 37½ | 8 | 9 | சூரிய | சந்தி | அங்கா | புதன் | குரு | சுக்கிர | சனி |
| 40 | 9 | 10 | சுக்கிர | சனி | சூரிய | சந்தி | அங்கா | புதன் | குரு |
| 42½ | 10 | 11 | புதன் | குரு | சுக்கிர | சனி | சூரிய | சந்தி | அங்கா |
| 45 | 11 | 12 | சந்தி | அங்கா | புதன் | குரு | சுக்கிர | சனி | சூரிய |
| 47½ | 12 | 1 | சனி | சூரிய | சந்தி | அங்கா | புதன் | குரு | சுக்கிர |
| 50 | 1 | 2 | குரு | சுக்கிர | சனி | சூரிய | சந்தி | அங்கா | புதன் |
| 52½ | 2 | 3 | அங்கா | புதன் | குரு | சுக்கிர | சனி | சூரிய | சந்தி |
| 55 | 3 | 4 | சூரிய | சந்தி | அங்கா | புதன் | குரு | சுக்கிர | சனி |
| 57½ | 4 | 5 | சுக்கிர | சனி | சூரிய | சந்தி | அங்கா | புதன் | குரு |
| 60 | 5 | 6 | புதன் | குரு | சுக்கிர | சனி | சூரிய | சந்தி | அங்கா |

## திதித் தியாச்சிய விபரம்



வேறு

செப்புதிதித் தியாச்சியத்தின் வகையுரைக்கக் கேணீ
திகழுகின்ற பிரதமைக்கே நாலாற தாகும்
ஒப்பரிய துதியைக்கீ ராறுதிரி திகைக்கே
உயரைம்ப துடனைந்தா மோதிடு பஞ்சமிக்கும்
தப்பறீ சட்டிக்கு மைம்பானெடு நான்காம்
தக்கசதுர்த் திக்குநவ மிக்குதகு மைந்தாம்
முப்பானே டொன்றென்றே மொழிந்திடு சத்தமிக்கே
உன்னுமன வட்டமிக்கே நாலைந்தா யுரைப்பர்.

(இ-ள்) *திதிகள்* 15-*னுள் அவைகளுக்கு தியாஜ்யநேரநாழிகையாவன: பெருமை பெற்ற பிரதமை திதிக்கு* 24-*நாழிகையும், சொல்லுதற்கரிய துதிகை திதிக்கு* 12-*நாழிகையும், மூன்றாந்திதியான திருதிகை திதிக்கு* 55-*நாழிகையும்,* 5-*ஆம் திதி என்று சொல்லும் பஞ்சமிக்கும், சிவப்பாகிய சஷ்டி திதி இவ்விரண்டிற்கும்* 54-*நாழிகையும், மேன்மையைப் படைத்த நான்காம் திதியான சவுத்திக்கும்,* 9-*ஆம் திதியான நவமிக்கும்* 5-*நாழிகையும்,* 7-*ஆம் திதியான சப்தமிக்கு* 31-*நாழிகையும், பிரகாசம் தங்கும் அஷ்டமிதிதிக்கு* 20-*நாழிகைக்கு மேலும் என்றுரைப்பர் எ-று.* (234)

உரைத்திடுவர் தசமிக்கு முப்பதுடன் மூன்றும்
ஒன்றுமே காதசிக்கே யோதுதுவா தசிக்கே
விரைக்குழலா யொருபதோ டைந்தாகு மேழாம்
மேவுசதுர்த் தசிக்காகும் விளம்பிருபத் தாறும்
திருத்ததிர யோதசிக்கே யிருபானே டொன்பான்
திகழ்கின்ற பூரணைக்காஞ் செப்பிடுமோ ராறே
புரைத்தவிரு ளுற்றிடுமோ ரமாவாசைக் கென்றே
புகலுவர்நாற் கடிகைவிட மெனப்புலவர் புகழ்ந்தே.

(இ-ள்) 10-*ஆம் திதியாகிய தசமிக்கு* 33-*நாழிகையும்,* 11-*ஆம் திதியான ஏகாதசிக்கு துவாதசியான இவ்விரண்டிற்கும்* 22-*நாழிகையும், மேன்மையைப்பெற்ற சதுர்த்தசிதிதிக்கு* 26-*நாழிகையும், பூரணைக்கு அமாவாசைக்கும்* 6-*நாழிகைக்குமேல் நான்கு நாழிகைவரை விஷம் என்று ஜோதிடவல்லோர் கூறுவார் எ-று.* (235)

---

## நட்சத்திரத் தியாச்சிய விபரம்



புகலுவர்பூ ராடமுடன் பரணியுத் திரட்டாதி
பொருந்திருபா னுடனுன்காம் புநகர்த மகந்தோணி
இகலுமங்கி னதனக்கா றைந்தாஞ்சோதி விசாகம்
இயம்புமக சிரங்கேட்டை யிவைக்கீரே ழாகும்
தகைபெண்ணே யோணமவிட் டம்மொழிய தாகும்
சாற்றுகுரு நாள்பூரஞ் சித்திரையுத்தி ராடம்
நகைதருநா லைந்தாகு நாலெட்டா யிலியம்
நாலைந்தோ ரிரண்டென்றே நாட்டிடுநவ் விக்கே.

(இ-ள்) *பரணி பூராடம் உத்திரட்டாதி இந்தமூன்று நக்ஷத்திரங்களுக்கும்* 24-*நாழிகையும், புனர்பூசம் மகம் கார்த்திகை ரேவதி இந்த நான்கு நக்ஷத்திரங்களுக்கும்* 30-*நாழிகையும். மிருகசிரம் சுவாதி விசாகம்கேட்டை இந்த நான்கு நக்ஷத்திரங்களுககும்* 14-*நாழிகையும், அவிட்டம் அனுஷம் திருவோணம் இந்த மூன்று நக்ஷத்திரங்களுக்கும்* 10-*நாழிகைக்குமேலும், குருநாளாகிய பூசத்திற்கும், பூரம் சித்திரை உத்திராடம் இந்த நான்கு நக்ஷத்திரங்களுக்கும்*20-*நாழிகையும், ஆயிலியநக்ஷத்திரத்திற்கு* 32-*நாழிகையும், அஸ்தத்திற்கு* 22-*நாழிகைக்குமேல் நான்கு நாழிகைவரையில் விஷம் எனக் கூறுவர் எ-று.* (236)

நல்விழி யாய்சதய முத்திரமீ ரொன்பான்
நல்லபரி நாடனக்கே நவிலுவ தைம்பானே
திவ்வியமாம் ரோகணிக்கே நாற்பானு மென்ப
திருந்தியநல் லாதிரைக்கே செப்புபதி னொன்றும்
கவ்வுமிரு பத்தொன்று மாமென்ப மூலம்
கருதுமிரு பானுடனைம் பத்தாறும் பத்தோ
டொவ்வியவா றும்பூரட் டாதியிவற் றின்மேல்
உறுகடிகை நான்குவிட மெனவுரைப்ப ருயர்ந்தோர்.

(இ-ள்) *சதயத்திற்கும் உத்திரத்திற்கும்* 18-*நாழிகையும் முதல் நக்ஷத்திரமாகிய அஸ்வனிக்கு* 50-*நாழிகைக்குமேலும், ரோகணிநக்ஷத்திரத்திற்கு* 40-*நாழிகையும், திருவாதிரை நக்ஷத்திரத்திற்கு* 11-*நாழிகையும்,* 21-*நாழிகைக்குமேல் என்றும், பெருமையையுடைய மூலநக்ஷத்திரத்திற்கு* 20 *நாழிகையும்,* 56-*நாழிகைக்குமேலும்,* 25-*வது நக்ஷத்திரமாகிய பூரட்டாதிக்கு* 18-*நாழிகைக்குமேல்* 4-*நாழிகை வரையில் விஷம் என்றும் அழகுபொருந்திய கண்களையுடைய பெண்ணே! கூறுவாயாக எ-று.* (287)

## வாரத் தியாச்சிய விபரம்



வேறு

வெய்யவ னுலெட்டாகும் வெண்மதிக் காறேழாகும்
செய்யநற் புதனுமொப்பாஞ் சேயவன் முப்பத்தொன்றும்
துய்யபொன் னவனுமொப்பாஞ் சூழ்புகர் மூவேழாகும்
மையுறு சனியுமீரேழ் வாரத்தியாச் சியமேனுன்கே.

(இ-ள்) ஞாயிற்றுக்கிழமையில் 32-கடிகைக்குமேல் நான்கு கடிகை விஷம் என்றும் வெண்மை பிரகாசத்தையுடைய சந்திரன் நாளான திங்களுக்கு 42-கடிகைக்குமேல் 4-கடிகை விஷம் எனவும், புதன்கிழமைக்கும் மேற்சொன்னபடியே 42-நாழிகைக்குமேல் நான்கு கடிகை விஷம் என்றும், குஜன்வாரமான செவ்வாய்க்கிழமைக்கு 31-நாழிகைக்குமேல் 4-நாழிகை விஷமென்றும், வியாழக்கிழமைக்கும் முன்சொன்னபடியே 31-நாழிகைக்கு மேல் நான்கு கடிகையென்றும், புகர்நாளாகிய வெள்ளிக்கிழமைக்கு 21-நாழிகைக்குமேல் நான்குநாழிகை எனவும், சனிக்கிழமையில் 14-நாழிகைக்குமேல் விஷமெனவும் கூறுவர் எ-று. (238)

### நாட் கண்டம்

இரவிசே யிருந்தநாளுக் கேழுபத் தியன்மூவைந்தும்
பரவிய மதிமாற்கெட்டும் பதினெட்டு மிருபானுன்கும்
விரவிய புகர்பொன்னுக்கு மேவுமொன் பானுமேழும்
கரியவன் றனக்கோரைந்தும் பன்னொன்று மிருபத்தாறே.

(இ-ள்) குஜனும் ரவியும் இருந்த நாளுக்கு 7-10-15 கண்டமெனவும், பெருமையையுடைய புதனுக்கும் சந்திரனுக்கும் 18-24 கண்டமெனவும், பராக்கிரமத்தையுடைய குருவுக்கு 9-7 கண்டமெனவும், கொடிதாகிய சனிக்கு 5-11-26 இவையே ஒவ்வோர்நாளும் கிரகங்கள் சஞ்சாரநாள் கண்டமென்று கூறுவர் எ-று. (239)

ஆறதா மரவுக்கேழு மாகுமே கண்டமென்ப
வீறதாஞ் செவ்வாயோரை மேவிடிற் சனிகண்டத்தில்
பேறதாம் பிள்ளைதானும் பெருஞ்சிறைப் படுவனென்றே
சீறிய வரவேரல்குற் றேமொழி மாதேசெப்பாய்.

(இ-ள்) இராகு கேதுக்களாகிய பாம்புகளுக்கு ஏழு என்றுரைப்பர். வீரம்பொருந்திய செவ்வாயோரையில் சனிகண்டம் வருமாயின் அக்குழவி அளவிடமுடியாத சிறைவாசமிருப்பானென அழகுபொருந்திய பெண்ணே! கூறுவாயாக எ-று. (240)

# சட்வர்க்கப் படலம்



வர்க்கம்என்றால் வகுப்பு அல்லதுஜாதி என்று அருத்தம். வர்க்கங்கள் பராசராதிகளால் அறுவகை என்று சொல்லப்பட்டிருக்கின்றன. அவை:— இராசி-1, ஓரை-2, திரைகாணம்-3, நவாம்சம்-4, துவாதசாம்சம்-5, திரிமி சாமிசம்-6 என்பவைகளாம். இவ்விடத்தில் அமிசம் என்பதற்கும் பாகை என்பது பொருள். யவன சோதிடசாஸ்திரத்தில் ஆறு வர்க்கங்கள் தவிற பாத-4, பஞ்ச-5, சஷ்ட-6, சப்தம-7, அஷ்டம-8, தசம-7, ஏகாதச-11, வர்க்கங்களுஞ் சேர்த்து 12-வர்க்கங்களாக வகுக்கப்பட்டிருக்கின்றன வராஹமிகிராசாரியர்கள் முதலாயினோர் சட்வர்க்கங்களை மாத்திரம் எடுத்து உரைத்திருக்கின்றார்கள். தமிழிலேயுள்ள ஜாதகசிந்தாமணி, குமாரசுவாமி யம் முதலிய நூற்களில் இராசி ஓரை, திரைகாணம், சப்தாமிசம், நவாமி சம், தசாமிசம், துவாதசாமிசம், சோடசாமிசம், திரிமிசாமிசம், சஷ்டி அமி சங்களென தசவர்க்கங்களைக் கூறப்பட்டிருக்கின்றன. பராசரமுனிவரா் தமது பிருகத் பராசரஓரையுள் மேற்கூறிய தசவர்க்கங்களுடன் இதிற் கண்ட ஆறுவர்க்கங்களைச் சேர்த்து சோடசவர்க்கங்களைக் கூறியிருக்கின் றார். இவற்றுள் இந்நூலாசிரியர் எடுத்துக்கொண்டது சட்வர்க்கமேயாகும்.

சட்வர்க்கப் பெயர்கள் வருமாறு:—

க்ஷேத்ரம் ஹோரா த்ரேக்காணோ நவாம்சோ த்வாதசாம்சகா:
த்ரிம்சாம்சகச்சவர்க்கோயம் த்ரயாத்யையர்யஸ்யதஸ்யஸ:

(ஜோதிஷ தத்துவ சுதார்ணவம்)

க்ஷேத்ரஞ்ச ஹோரா த்ரேக்காண நவாம்ச த்வாதசாம்சகா:
த்ரிம்சதம்சச்சஷடபி ராசினாம்வர்க்கசம்ஞிகா:

(தைவக்ஞ விலாசம்)

வர்க்காஸ் த்ரயோதசா: ப்ரோக்தா: பூர்வாசார்யைர்மஹர்ஷிபி
த்ரிம்சத் பாகாத்மகம்லக்நம் ஹோராதஸ்யார்த்தமுச்யதே
ராசித்ரிபாகோ த்ரேக்காண: நவாம்சோ நவமபாகக:
த்வாதசாம்சோத்வாதசாம்சஸ் த்ரிம்சாம்சஸ் த்ரிம்சதம்சக:
ஷட்வர்க்கலக்ஷணம் ப்ரோக்தம் ஸர்வலக்ஷேஷ்வயம்க்ரம:

(பிராசீனர்)

த்ரேக்காண ஹோரா நவபாக ஸம்ஞாஸ்
த்ரிம்சாம்சகத்வா த்வாதச ஸம்க்ஞிதாச்ச க்ஷேத்ரஞ்ச

(வராஹமிஹிரர்)

## சட்வர்க்க பிரயோசனம்

லக்நே நூநம் சிந்தயேத் தேஹபாவம்
ஹோராயாம் வைஸம்பதாத்யம் சுகஞ்ச
த்ரேக்காணேஸ்யாத் ப்ராத்ருஜம் ப்ராத்ருபாவம்
ஸப்தாம்சேவை ஸந்ததீ புத்ரபௌத்ரீ. (பைரவதீபிகை)

(இ-ள்) 1-இலக்கின (இராசியினுல்) த்தினுல்தேகசுபாவமும், 2-ஓரையினுல் சம்பத்து சுகங்களேயும், 3-திரேக்காணத்தினுல் சகோதரபாவத்தையும், சப்தமாம்சத்தினுல் சந்ததிகளேயும் அறிதல்வேண்டும் எ-று.

[இந்தச் சுலோகத்தில் சட்வர்க்கங்களில் மூன்றைமட்டும் கூறி, ஏனைய மூன்றையுங் கூருதுவிடுத்தமையால் அதனைக்கூறுவாம்]

1. லக்நந் தேஹஸ்ய-விக்ஞாநம்
2. ஹோராயாம் ஸம்பதாதிகம்
3. த்ரேஷ்காணே ப்ராத்ருஜம் சௌக்யம்
   தூர்யாம் சேபாக்ய சிந்தநம்
   புத்ர பௌத்ராதிகாநாம்வை
   சிந்தநம் ஸப்தமாம்சகே
4. நவமாம்சே களத்ராணும் தசமாம்ஸே மஹத்பலம்
5. த்வாதசாம்சே ததாபித்ரோர் சிந்தநம் ஷோடசாம்சகே
6. த்ரிம்சாம்சகே ரிஷ்டபலம் கவேதாம்ஸே சுபாசுபம்

(பராசர ஓரை)

இதனுல்:- 1 இராசியினுல் தேக சுபாவத்தையும்,
2 ஓரையினுல் சம்பத்தையும்,
3 திரேக்காணத்தினுல் சகோதர சௌக்கியத்தையும்,
4 நவாம்சத்தினுல் களத்திரத்தின் சுபாவத்தையும்,
5 துவாதசாம்சத்தினுல் பிதாவின் சிந்தனையையும்,
6 திரிம்சாம்சத்தினுல் அரிஷ்ட விஷயங்களேயும்,
அறிதல் வேண்டும் என்று அறியவும்.

இவற்றுள் ஜனனகாலத்திய இராசி சக்கரமே முதல் வர்க்கமாகும். 2-வது வர்க்கம் ஓரையாகும். இதைப்பற்றி இந்நூலாசிரியர் பொதுப்படலத்தில் "வஞ்சியே யொற்றை லக்கின முற்பாதி" என்றவிடத்தில் தனியாகக் கூறியிருக்கின்ருர். மற்றும் கிரகசீலப்படலத்தில் 31-வதுகவியில் "தெள்ளு மொற்றை ராசிபின்னும் ரெட்டைராசி முன்னும் திங்களோரை" என்று சுருங்கச்சொல்லி விளங்கவைத்திருக்கின்ருர். இதன்கருத்தென்னே எனின்? ஒரு இராசியை 2-பங்கு செய்ய பங்கு ஒன்றுக்கு 15-பாகையாகும். ஆகவே,

ஆண் ராசி: முதல் 15-பாகைவரை சூரிய ஓரை
பின்பு 30-பாகைவரை சந்திர ஓரை.
பெண் ராசி: முதல் 15-பாகைவரை சந்திர ஓரை
பின்பு 15-பாகைவரை சூரிய ஓரை.

## ஓரா சக்கரம்

| பா-கை | மேட | ரிஷ | மிது | கட | சிம் | கன் | துலா | விர்ச் | தனு | மகர | கும்ப | மீன |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 15 | மேட | இட | மிது | கட | சிம் | கன் | துலா | விர்ச் | தனு | மகர | கும்ப | மீன |
| 30 | விர்ச் | துலா | கன் | சிம்ம | கட | மிது | இட | மேட | மீன | கும்ப | மகர | தனு |

### உதாரணம்:

கன்னியில் 9-பாகை 49-கலையில் உள்ள கிரகம் ஓராசக்கரத்தில் கன்னியில் இருக்கும் என்றும், இடபத்தில் 27-பாகை 54-கலையில் உள்ள கிரகம் துலாத்தில் இருக்கும் என்றும் அறிதல் வேண்டும். ஏனைய கிரகங்களின் இருப்பையும் இப்படியே அறிதல் முறை. சிலர் எல்லா கிரகங்களையும் கடக சிங்கத்திலேயே அமைப்பார்கள். அது பொருத்த முடையதன்று.

### உதாரண ஜாதகத்தின் கிரகஸ்புடம் வருமாறு:

| | ராசி | பாகை | கலை | | ராசி | பாகை | கலை |
|---|---|---|---|---|---|---|---|
| ரவி | 3 | 12 | 18 | சுக்கிரன் | 2 | 20 | 50 |
| மதி | 5 | 9 | 49 | சனி | 1 | 27 | 54 |
| குஜன் | 5 | 7 | 24 | இராகு | 5 | 25 | 32 |
| புதன் | 3 | 26 | 41 | கேது | 11 | 25 | 32 |
| குரு | 3 | 20 | 57 | இலக்கினம் | 3 | 23 | 3 |

**இதன்படி**

| | | | |
|---|---|---|---|
| | | | ராகு |
| | 1 ஓரா சக்கரம் | | சூரி |
| | | | குரு பு-லக் |
| கேது | | சனி | சந்-அ சுக் |

**வேறு சிலர் மதத்தின்படி**

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | 2 ஓரா சக்கரம் | | கு சந் அ-சு |
| | | | ல-கு பு-ரா ச-கே |
| | | | |

## திரி கோணம்

இத்தொடர் மொழியானது திரி + கோணம் என்று பிரிக்கப்படும். திரி-மூன்று, கோணம்-மூலை; எனவே மூன்று மூலைகள் என்பது இதன் சிறந்த பொருளாகும். இராசி மண்டலத்தின் பாகைகள் 360-ஐ 3-ஆல் வகுக்க வரும் அம்சமாகிய 120-பாகை அந்தராம்சத்திலுள்ள இராசிகள் ஒன்றற்கொன்று திரிகோண விராசிகளாகும். இங்ஙனமே இலக்கின பாவ கத்திலிருந்தெண்ண 120-வது பாகை தூரத்திலுள்ளதும், அதிலிருந்து 120-வது பாகை தூரத்திலுள்ளதும், ஒன்றற்கொன்று திரிகோண பாவங்களாகும். இவை முறையே 5-9-1-வது பாவங்களாம். திரிகோண சப்தத்துக்கு மூன்று கோணங்கள் என்று பொருளிருப்பினும் நூலுரைவழக்கில் 5-9-ஆமிடங்களையே திரிகோணமென்று கொள்ளப்பட்டிருக்கின்றது. ஆனால் "விலக்நம் பஞ்சமஞ் சைவநவமஞ்ச த்ரிகோணம்" என வரும் உடுதசாபிரதீபிகை வசனமானது இலக்கினம் ஐந்து ஒன்பதாமிடங்கள் திரிகோணமென்று வியக்தமாகக் கூறியிருத்தலுணர்க. திரிகோண சப்தத்துக்கு மூன்று கோணங்கள் என்று பொருட்படுதலை "த்ரிகோணே க்ஷீணே யக நயூநம் ததநுல்பம் த்ரிக்ஷு சோதயோத்" எனவரும் பலதீபிகை வசனமும், பராசர ஹோரையும் ஓர் திரிகோணத்தில் பிந்து குறைவாயிருப்பின் அதற்குச் சமமாக மற்றிரண்டு கோணங்களின் பிந்துக்களையுஞ் சோதித்தல் வேண்டுமென்று கூறுதலினால் நன்கறியலாம். மற்றும் இதனை, "கூடிய திரிகோணந் தனிலொன்று குறைந்திடின் மற்றிரண்டையுந்தான், சாடியே குறைதற்கொப்ப செயமூன்றுஞ் சரியுறுன் முழுவதுங் களையே" எனவரும் சாதகசிந்தாமணி வசனத்தினால் தெளிவாக அறிந்துணர்க.

முன்னே கூறிய உடுதசாபிரதீபிகை வசனத்தினால் இலக்கினம் பஞ்சமம் நவமம் ஆகிய இவைகள் முறையே 1-5-9-வது திரிகோணஸ்தானங்கள் என்பது நன்கு விளங்கும். ஆனால் இந்த 1-5-9-வது திரிகோண ஸ்தானங்களைப் பாவகஸ்புடமூலமாக அறிந்துகொள்ளல்முறையாம். இராசி சக்கரத்தின் மூலமாக அறிவது இழுக்காம். ஆகவேஇலக்கினபாவகஸ்புட மத்யமே பிரதம திரிகோணமும், பஞ்சமபாவக மத்யஸ்புடமே துவிதீய திரிகோணமும், நவம பாவக மத்தியஸ்புடமே திருதிய திரிகோணமுமாகும்.

இங்கு கூறிய ஸ்புடபாகைகளே சரியான திரிகோண ஸ்தானங்கள் ஆகும். இந்த ஸ்புடபாகைகளுக்கு அந்நியமான ஸ்புடபாகைகளிலுள்ள கிரகங்களை பூரண திரிகோண ஸ்தானத்தில் இருந்ததாக எண்ணுதல்கூடாது. அவைகளை பாவக பல திரய ராசிகத்துக்குரிய விதியைப்போல் கணக்கிட்டு அறிந்துகொள்ளல் வேண்டும். பஞ்சம பாவக மத்தியஸ்புடம் பூர்ண திரிகோணஸ்தானம். ஆனால் பஞ்சம பாவக ஆரம்பத்திலுள்ள கிரகமானது பஞ்சம திரிகோண ஆரம்ப ஸ்தானத்திலும் அந்தியத்திலுமுள்ள கிரகமானது பஞ்சம திரிகோண ஸ்தானாந்தத்திலும் இருப்பதென்பது வெளிப்படை. ஆனால் திரிகோணாரம்பத்திலிருந்து திரிகோண மத்தியஸ்தானம் வரையில் 1-முதல் 60-கலைவரை திரிகோணபலம்விருத்தியடையுமென்றும் திரிகோண மத்தியஸ்தானத்திலிருந்து திரிகோணாந்தம்வரையில் 60-கலையிலிருந்து 1-கலைவரை திரிகோணபலம் குறையுமென்றும் அறிதல்வேண்டும். திரிகோண ராசியின் ஆரம்ப மத்தியாந்தராளமும், மத்தியாந்தியத்தின்

அந்தராளமும் 15-பாகை என்று வைத்துக்கொள்வோம். பஞ்சம திரிகோண பாவகத்தில் குரு 10-பாகையில் இருக்கின்றார் என்று பாவித்துக் கொள்வோம். இப்போது குரு பூர்ண திரிகோண ஸ்தானத்தில் இருக்கின்றார் என்று கூறுதல் இழுக்காம். குருபாகை 10-ஐ திரிகோண மத்திய ஸ்தானபலம் பாகை 1-க்குரிய கலை 60-ஆல் பெருக்கி அந்தராளபாகை 15-ஆல் வகுத்து குருவின் திரிகோண ஸ்தான அளவை யுரைத்தல் வேண்டும். $10 \times 60 = 600 \div 15 = 40$. இது அரையே அரிக்காலே அரை வீசம் ஆகும். ஆதலால் குரு பஞ்சம திரிகோண பூர்ண ஸ்தானத்திலின்றி முன்கூறிய அளவான ஸ்தானத்தி லிருக்கின்றாரென்று ஏற்படுதலின் பலனும் அவ்வள வுண்டாமென்று உணர்தல் வேண்டும். ஆகவே கிரகங்களின் திரிகோண ஸ்தான ஸ்திதியை இங்ஙனம் அறிந்துணராமல் இராசிமாத்திரத்தினால் கண்டுரைப்பது சாமானிய மார்க்கமாகும். ஒரு ஜாதகனுக்கு 5-ல் குரு இருந்தால் அச்சாதகன் புத்தி ஞானம் விவேகம் இவைகளில் சிறந்தவனாக இருப்பான் என்று சோதிட நூற்கள் கூறுகிற்கும். குரு 5-ஆம் பாவகத்தில் 28-பாகையிலிருப்பின் இவ்வித பலன்களை பூரணமாகக் கொடுக்கமாட்டார். 5-ஆம் பாவக மத்தியஸ்புடத்துக்குச் சரியாக இருந்தால்தான்இவ்வித பலன்களைப் பூரணமாகத் தருவார்.

ஆகவே முன்கூறியபடி பாவாரம்ப பாவ மத்ய பாவாந்திய ஸ்தானங்களின் அந்தராளம் 15-பாகை என வைத்துப்பார்க்கில் $13 \times 60 = 780 \div 15 = 50$. இதை 60-ல் கழிய மீதம் 8-ஆகவே அரைக்கால் அளவையுடைய திரிகோண ஸ்தானத்தி லிருப்பதனால் முன்கூறிய புத்தி ஞானாதி பலன்களும் அரைக்கால் பங்குதான் அச்சாதனுக்கு உண்டாகும். ஏனைய முக்காலரிக்கால்பங்கு அச்சாதகனுக்கு உண்டாகாது. இந்த நுட்பமுறையையன்றி நோக்காது 5-ல் குரு இருப்பதனால் இன்னின்ன விசேஷ பலன்களுண்டாமென்று சோதிட நூற்களில் கூறியிருப்ப அனுபவகாட்சியில் அங்ஙனம் நிகழாமலிருப்பதென்னே என்று சங்கை கொள்ளுதல் அறிஞர் கடமை யாகாதென்க. இங்ஙனமே ஏனைய திரிகோணங்களினதும், கேந்திரங்களினதும் பலன்களை நுட்பமாக அறிதல்வேண்டும். சோதிட சாஸ்திரங்களில் சில முக்கியமான பிராசீன நூற்களுக்கு உரை எழுதிய உரையாசிரியர்கள் திரிகோண சப்தத்துக்கு 5-9-ஆமிடங்களென்றே பொருளுரைத்திருக்கின்றனர். இலக்கினத்தை எக்காரணம்பற்றி விடுத்தனர்களோ அதனுண்மையை உள்ளபடி அறியக்கூடவில்லை. ஆனால் இலக்கினமானது கேந்திரம் திரிகோணம் என்னும் இரண்டுக்கும் உரிய பொதுஸ்தானமாதலாலும், திரிகோணம் கேந்திர பலபுஷ்டியினும் தாழ்ந்த பலபுஷ்டியுடையதாதலாலும் இலக்கினத்தைத் திரிகோண ஸ்தானமெனக் கூறாது சிறப்பு நோக்கிக் கேந்திரஸ்தானமென உரையாசிரியர்கள் கொண்டனர்போலும். மற்றும் "அதத்ரிகோணம் நவபஞ்சமர்க்ஷம் ஸ்யாத்த்ரி த்ரிகோணம்நவமஞ்சதத்வத்" எனவரும் ஜோதிஷ சியாமசங்கிரக வசனமானது ஒன்பது ஐந்து ஆகிய ஸ்தானங்கள் திரிகோணமெனச் சொல்லப்படும் என்றும், மற்றும் ஒன்பதுக்கு மூன்றாகிய பதினோராமிடமும், 11-க்கு மூன்றாகிய இலக்கினமும், இலக்கினத்துக்கு மூன்றாகிய மூன்றாமிடமும், 3-க்கு மூன்றாகிய ஐந்தாமிடமும் திரிகோணங்கள் எனப்படுமென்றும் விளங்குதலுணர்க.

*யேமந்தாத்யாஸ் த்ரிகேடாꣳ கலியுகபலிநா*
*விக்ரமாரி த்ரிகோணம் ஸூர்யஸ்ய க்ஷோணி ஸூநோர்*
*தசமபவக்ருஹம் கோண ஸம்க்ஞம்பவித்ரம்*
*அந்யேஷாம் கேசராணும் நவம-9, சிவ-11, முகம்-1*
*தத்த்ரிகோணம் ப்ரசித்தம் ஸாவக்ரந்தேஷு*
*தீராமுநிஜந ஸஹிதா பாண்டுபுத்ரா வதந்தி.*

(இ-ள்) *சனியாதி மூன்று கிரகங்கள், அதாவது சனி ராகுகேதுக்கள் கலியுகத்தில் பலமுடையவர்கள். ஆதலின் அவர்கள் 3-6-ல் இருந்தால் திரிகோணத்திலிருந்தவர்களாவர். சூரியன் செவ்வாய் ஆகிய இருவர்கள் 10-11-லும், ஏனைய சந்திரன் புதன் குரு சுக்கிரர்கள் 9-11-1-லும் இருந்தால் திரிகோணத்தில் இருந்தவர்களாவர் என சகல கிரந்தங்களிலும் தேர்ச்சியடைந்த முநீஸ்வரர்களால் சொல்லப்பட்டிருக்கின்றதென பாண்டுமன்னவன் புத்திரனுகிய சகாதேவன் கூறியிருக்கின்றான் எ-று.*

(வி-ரை) *'நவம்' ஒன்பது, 'சிவம்' என்பது ஏகாதச ருத்திராதலின் பதினொன்று. 'முகம்' என்பது இலக்கினம். இங்கு எடுத்துக்காட்டிய* சியாமசங்கிரக வசனத்தில், *"த்ரித்ரிகோணம் நவமஞ்சதத்வத்" என்பதும் "அந்யேஷாம் கேசராணும் நவம, சிவ, முகம் தத்த்ரிகோணம் ப்ரசித்தம்" என்பதும் இலக்கினம் திரிகோண ஸ்தானமாமென்று வலியுறுத்தலை நடுநிலையுடைய விவேக விற்பன்னர்கள் உற்றுணர்ந்து உளங்களிப்பார்களாக, மற்றும் பாவார்த்தசந்திரிகை, ஜாதகசந்திரிகைகளின் வடமொழி உரையாசிரியர்கள் 1-5-9-ஆமிடத்தைத் திரிகோணமென பொருளுரைத்திருத்தலையும் அறிவுடைப் பெரியோர் ஆழ்ந்தறிவார்களாக.*

[1-இராசி, 2-ஓரைகளின் நியதி இங்ஙனமாகும். இனி
3-திரேக்காணத்தின் நியதியை அறிதல் வேண்டும்.]

---

# திரேக்காணம்



வேறு

**பரவுதிரேக் காணமது லக்கினத்தை மூன்றாய்ப்**
**பகுத்திடுநன் மேடமுதற் கோவதுவே யாகும்**
**விரவிரண்டிற் கைந்தாகும் மூன்றினுக்கொன் பானும்**
**மிளிர்இடபம் முதற்கொன்பான் இரண்டிற்கவ் வீட்டோன்**
**பொருமூன்றிற் கைந்தாகும் மிதுனமுதற் கைந்தாம்**
**புகலிரண்டிற் கொன்பானும் மூன்றினுக்கவ் வீட்டோன்**
**வரும்ராசி மும்மூன்றிற்கு இவ்வாறே ஆகும்**
**வகையுடனே உணர்ந்துநன்றாய் வசனிப்பாய் நனிநீ.**

(இ-ள்) *திரேக்காணம் என்பது ஜனன இலக்கினத்தை மூன்றுபாகமாகப் பங்கிட்டுத் தெரியப்படுவதாகும். அங்ஙனம் பங்கிட்டால் பங்கு ஒன்*

றுக்குப் பத்து பாகையாகும். அதில் மேடம் (முதற்பத்துபாகைக்கு) முதற் பங்குக்கு மேடமும், இரண்டாம் (பத்துபாகைக்கு) பங்குக்கு 5-வது ராசி யான சிங்கமும், மூன்ளும் (பத்துபாகைக்கு) பங்குக்கு 9-வது ராசியான தனுசும் திரேக்காண லக்கினங்களாகும். இடபம் முதற்பங்குக்கு 9-வது ராசியான மகரமும், இரண்டாவது பங்குக்கு 1-வது ராசியான இடபமும், மூன்ளும் பங்குக்கு 5-வது ராசியான கன்னியும் திரேக்காண லக்கினங்க ளாகும். மிதுனம் முதற்பங்குக்கு 5-வது ராசியான துலாமும், இரண்டாவது பங்குக்கு 9-வது ராசியான கும்பமும், மூன்றுவது பங்குக்கு 1-வது ராசி யான மிதுனமும் திரேக்காணலக்கினங்களாகும். ஏனையராசிகளில் கடக முதலாகிய மும்மூன்றிராசிகளுக்கும் இந்தமுறைப்படியே திரேக்காணலக்கி னங்களை நன்ருக அறிந்து சொல்லுவாய் எ-று.

(வி-ரை) இச்செய்யுளில் மேடம் இடபம் மிதுனத்தைக் கூறி ஏனைய ராசிகளுக்கு மும்மூன்று ராசிக்கு இவ்வடைவே காணும்படி விளக்கி யிருத்தலில் சரராசிகளுக்கு 1-5-9-வது இராசிகளும், ஸ்திரராசிகளுக்கு 9-1-5-வது ராசிகளும், உபயராசிகளுக்கு 5-9-1-வது ராசிகளும் திரேக் காண லக்கினங்களாகுமென்று அறிந்துகொள்ளல் வேண்டும். இம்முறை பராசரமுனிவரருக்குச சம்மதமன்று. யவனர்களோ இத்திரேக்காணவிஷ யத்தில் இருவேறு அபிப்பிராயமுடையவர்களாக இருக்கின்றனர். ஆதலின் இது விஷயமாய் சிறிது விளக்குவோமாக.

> சரேஸ்வ புத்ர நவபாத்ஸ ஸ்திரேதர்மஸ் ஸ்வ புத்ரபாஃ
> புத்ர தர்ம ஸ்வபா த்விஸ்ஸ்வே த்ரேகாணஸ்ய ப்ரகீர்த்திதாஃ
> (பிராசினர்)

பிராசினர் என்பவர் ஒருவர் இந்நூலாசிரியர் கூறியபடி சர ஸ்திர உபயராசிகளை அநுசரித்து திரேக்காண விஷயத்தைவிளக்கியிருக்கின்ருர். பராசரமகரிஷி தமது பிருகத் பராசர ஓரையில் "நாரதாகஸ்தி தூர்வாஸா த்ரேஷ்காணே சாச்சராதயஃ" என்ற சுலோகவசனத்தில் நாரதர் அகஸ்தி தியர் தூர்வாசர் முதலாயினேரால் இந்த சர ஸ்திர உபயராசிகளை அநு சரித்து திரேக்காண நியதியைக் கூறியிருக்கின்ருர்கள் எனவும், அது தமக்குச் சம்மதமில்லை என்றும் சாற்றியுளார்,

மற்றும் சர்வார்த்த சிந்தாமணியில்,

> சரேஸ்வபுத்ர நவபாஃ ஸ்திரேதர்ம ஸ்வ புத்ரபாஃ
> த்விதேஹே புத்ரதர்மாத்மநாதா த்ரேஷ்காணபாஃ க்வசித்"

சராதிநியதிப்படி திரேக்காணம் பார்ப்பது சிலர் கொள்கை என்றும், தமக்கு அது சம்மதமில்லை என்றும் கூறியிருக்கின்ருர். இது இப்படியிருக்க யவனதேசத்து திரேக்காண விதியைப்பற்றிச் சிறிது கூறுவோமாக.

ஆசிரியர் வராகமிகிரஞரவர்கள்,

> 'த்ரேஷ்காண ஸம்க்ஞாமபி வர்ணயந்தி
> ஸ்வ த்வாதச ஏகாதச ராசிபாநாம்"

என்ற தமது பிருகஜ்ஜாதக சுலோகவசனத்தில் எந்தராசியிலும் 1-2-3-வது திரேக்காணங்களுக்கு முறையே 1-12-11-வது இராசிகளுக்கு அதிபர்கள்

திரேக்காணாதிபர்களாவார்கள் என்பது யவனமதமென்றும், அது தமக்குச் சம்மதமல்லவென்றும் கூறியுளார்.

"த்ரேஷ்காணச்ச ஸ்வாம் த்யலாபாதிபாநாம் ப்ரச்நே" என்று சர்வார்த்தசிந்தாமணி கூறியபடி இது ஆரூடத்துக்குரியதெனக் கூறுகிற்கும். இது யவனமதத்துள் ஒன்றாகும். மற்றொன்று வருமாறு:—"ஆத்யா குஜாத்யா ரவிதோபி மத்யமா: ஸிதாத்த்ருதீயா: க்ரியதே த்ருகாணபா:" என்ற சுலோகவசனத்தில் யவனதாஜிக நூலுடைய மதத்தை அநுசரித்து ஆசிரியர் நீலகண்ட தைவக்ஞரவர்கள் மேஷராசிமுதல் திரேக்காணத்துக்குக் குஜனும், 2-க்கு (செவ்வாய்க்கு) 6-வது கிரகமான சூரியனும், 3-க்கு (சூரியனுக்கு) 6.வது கிரகமான சுக்கிரனும், இடபத்துக்கு மேடத்தின் கடைசி திரேக்காணாதிபனான சுக்கிரனுக்கு 6-வது கிரகமான புதனும், 2-க்குள் சந்திரனும், 3-க்குள் சனியும் இப்படியே 36-திரேகாணாதிபர்களைக் கூறியிருக்கின்றார். இதனை அவர்கள் திரைராசிக் அதிபர்கள் என வழங்கியிருக்கின்றனர். வாமன ரோமகாதி தாஜிக நூற்களில் இங்ஙனமே கூறப்பட்டிருக்கின்றன.

ராசேஸ்ஸ்த்ரிர் த்ரேஷ்காண: தத்பஞ்சம நவமபவநபதயஸ்து
தேஷாமதிபதயஸ் ஸ்யு: ஸ்வத்ரேஷ்காணே க்ரஹாபலிந:
(சத்தியாசாரியர்)

"ஸ்வர்க்ஷ ஸுத பஞ்சம நவமேசா த்ரேஷ்காணநாம் க்ரமாச்ச"
(கலியாணவர்மர்)

த்ரேஷ்காண: ஸ்வபவந ஸுத த்ரித்ரிகோணாதி பாநாம்"
(வராகமிகிராசாரியர்)

"ராசித்ரிபாகா த்ரேஷ்காணஸ் தேசஷட் த்ரிம்ச தீரிதாம்
பரிவ்ருத்தித்ரயம்தேஷாம் மேஷாதே: க்ரமசோபவேத்
ஸ்வபஞ்சநவமாநாஞ்ச விஷமேஷு ஸமேஷுச" (பராசரர்)

"ஸ்யுச்சாதி மத்யாந்த்யபாகா:" (சர்வார்த்த சிந்தாமணி)

எனவரும் ஆசாரியமுனிவரவசனங்கள் திரேக்காணவிஷயத்தில் சர, ஸ்திர, உபயராசிகள் என்னும் நியதியின்றியே எந்த ராசியிலும் 1-2-3-வது திரைகாணங்கட்கு முறையே 1-5-9-வது ராசியாதிபதிகள் திரேக்காணத்ததிபர்களெனக் கூறியிருக்கின்றபடியால் இதுவே சர்வ சம்மதமானதென்று அறிதல்வேண்டும். திரி-மூன்று, காணம்-ஓரளவு, திரேக்காணமென்பதற்கு ஒரு ராசியை மூன்றுபங்கு செய்ய வரும் ஓர்பங்கு என்று அறியவும்.

## திரேக்காண சக்கரம்

| பாகு | மேட | ரிஷ | மிது | கட | சிம் | கன் | துலா | விர்ச் | தனு | மகர | கும்ப | மீன |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 10 | மேட | ரிஷ | மிது | கட | சிம் | கன் | துலா | விர்ச் | தனு | மகர | கும்ப | மீன |
| 20 | சிம்ம | கன் | துலா | விர்ச் | தனு | மகர | கும்ப | மீன | மேட | ரிஷ | மிது | கட |
| 30 | தனு | மகர | கும் | மீன | மேட | ரிஷ | மிது | கட | சிம் | கன் | துலா | விர் |

## உதாரண ஜாதகத்தின் திரேக்காண சக்கரம்

| | | | |
|---|---|---|---|
| யு-கு லக் | | ராகு | |
| சுக் | 3 திரேக் காணம் | | |
| சனி | | | |
| | சூரி கேது | | சந் அங் |

## சந்திரனால் திரேக்காண பலன் அறிதல்

*கல்யாணரூப குணமாத்ம ஸுஹ்ருத் த்ருகாணே*
*சந்த்ரோ அந்யகஸ் ததிநாதகுணங் கரோதி*
*வ்யாளோத்யதாயுத சதுச்சரணாண்டஜேஷு*
*தீஷ்ணோ அதிஹிம்ஸ்ர குருதல்பரதோ அடநச்ச.* (பிருகஜ்ஜாதகம்)

(இ-ள்) சந்திரன் தனது சுய திரேக்காணத்திலாவது, தனது மித்திர திரேஷ்காணத்திலாவது இருந்தால் முறையே சிறந்தவடிவம், சிறந்தகுணம் இவற்றை யுண்டாக்குவான். இவ்விரண்டு திரேக்காணத்திலின்றி வேறு திரேக்காணத்திலிருந்தால் சந்திரனிருக்கும் திரேக்காணத்துக்கு அதிபதியான கிரகம் சந்திரனுக்குத் தற்கால சமனாகவிருந்தால் அப்பொழுது பிறந்தவனுக்கு வடிவம் குணம் இரண்டும் சமமாக இருக்கும். தற்கால சத்துருவானால் அப்பொழுது பிறந்தவனுக்கு வடிவம் குணம் இரண்டும் கெட்டதாக இருக்கும். சந்திரன் தனது சுயமித்திர திரேக்காணத்திலிருந்து சர்ப்பாதி திரேக்காணங்களிலும் இருந்தால் அப்பலனையுங் கூறுதல் வேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| மீனம்<br>3-சர்ப்பம் | மேடம்<br>1-ஆயுதம்<br>2-சதுஷ்பாதம்<br>3-ஆயுதம் | இடபம்<br>2-சதுஷ்பாதம் | மிதுனம்<br>2-ஆயுதம்<br>பக்ஷி<br>3-ஆயுதம் |
| கும்பம்<br>1-பக்ஷி | சர்ப்பாதி<br>திரேக்காண<br>சக்கரம் | | கடகம்<br>1-சதுஷ்பாதம்<br>2-சர்ப்பம்<br>3-சர்ப்பம் |
| மகரம்<br>1-சதுஷ்பாதம்<br>3-ஆயுதம் | | | சிங்கம்<br>1-சதுஷ்-பக்ஷி<br>2-டை ஆயுதம்<br>3-டை ஆயுதம் |
| தனுசு<br>1-ஆயுதம்<br>சதுஷ்பாதம்<br>2-ஆயுதம் | விருச்சிகம்<br>1-சர்ப்பம்<br>2-சர்ப்பம்<br>3-சதுஷ்பாதம் | துலாம்<br>2-பக்ஷி<br>3-சதுஷ்பாதம் | கன்னி<br>2-ஆயுதம்<br>3-ஆயுதம் |

## சந்திரன்

சர்ப்ப திரேக்காணத்திலிருந்தால் — கொடூர சுபாவமுள்ளவன்
ஆயுத திரேக்காணத்திலிருந்தால் — அதிக பிராணி இம்சைசெய்வான்
சதுஷ்பாத திரேக்காணத்திலிருந்தால் — குருபத்தினியைப்புணர்வான்
பக்ஷி திரேக்காணத்திலிருந்தால் — அங்குமிங்கும் அலைந்துதிரிவான்
இருவித திரேக்காணத்திலிருந்தால் — அவ்விருதிரேக்காணங்களுக்குச் சொல்லிய பலனாகவே இருக்கும். உதாரணம்: மிதுனம் 2-ம் பாதம் ஆயுதம் பக்ஷி என்னும் இருவித திரேக்காணமென்பதுபோலாகும். (241)

நனிதிரய முதற்கரணம் வாய்மட்டே யாகும்
நாபியள வாமிரண்டு மூன்றப்பால் நாட்டும்
வினவியதோர் இவ்விடத்தில் பாவர்களே நின்றால்
விரணமுண்டாஞ் சுபக்கிரக மேவின்மறு வாகும்
புனிதமுறு சுபர்பார்வை உறினுமறு வாகும்
பொருந்துநிறந் தெரிந்ததனைப் புகன்றிட வேண்டிடினே
இனிமையுடன் இருந்தகிர கத்தின்வணந் தானே
இருந்தபடி யேயிருக்கும் எனஇயம்பு வீரே.

(இ-ள்) முன்னே சொன்ன திரேக்காணங்கள் மூன்றினுள் முதல் திரேக்காணத்துக்குச் சிரசுமுதல் வாய்வரைக்கும் உள்ள அங்கங்களாகும். இரண்டாந் திரேக்காணத்துக்கு கழுத்துமுதல் உந்திவரைக்கும் உள்ள அங்கங்களாகும். மூன்றாந் திரேக்காணத்துக்கு அடிவயிறு முதல்பாதம் வரைக்கும் உள்ள அங்கங்களாகும். இங்கு கூறப்பட்ட அங்கங்களுக்குரிய இராசிகளில் பாவக்கிரகங்கள் இருந்தால் விரணநோயுண்டாம். சுபக்கிரகங்கள் இருந்தால் மறுவு இருக்கும். சுபர்கள் பார்வை பெற்றாலும் மறுவே யுண்டு. இந்த மறுவினுடைய நிறமுதலியவற்றை தெரியவேண்டின் அந்த ஸ்தானங்களில் இருந்த பார்த்த கிரகங்களினுடைய சுபாவத்துக்கு ஒத்து இருக்குமென்று சோதிடப் புலவர்காள்! நீவிர் கூறுவீராக எ-று.

(வி-ரை) "புனிதமுறும் சுபர்பார்வை உறினுமறு வாகும்" என்றதனால் சுபர் பார்வைக்கு மறுவுண்டாம் எனவே பாவர் பார்வைக்கு விரணத்தழும்பு உண்டாமென்பது போதரும் என்பதாம். திரேக்காண அங்கங்களையும், அங்க விராசிகளையும் இந்நூலாசிரியர் கூறாது விடுத்தமையின் அதனை வேறு முதல்நூலைத் தழுவி இங்கு விளக்குவோமாக. ஆசிரியர் வராஹமிஹிரனாரவர்கள் தமது பிருகஜ்ஜாதகத்தில் 5-வது ஜன்மகால லக்ஷணத்தியாயத்தில் 24-வது சுலோகத்தில் இந்த இராசி அங்க விபாகங்களைப்பற்றி விரிவாய்க் கூறியிருக்கின்றார். அஃது வருமாறு: அங்கவிபாகம் 2-என்பது அவர் கொள்கை.

முதல் திரேக்காணத்துக்கு 1-வது தலை, 2-வது கண், 3-வது காது' 4-வது மூக்கு, 5-வது சன்னம், 6-வது பிடரி, 7-வது மோவாய்க்கட்டை

ஆகிய இந்த ஏழு அங்கங்களாகும். இவைகளுக்கு இலக்கினமுதல் 7-ஆமிடம் வரையுள்ள இராசிகள் அங்கஸ்தானங்களாகும். இவற்றுள் சிரசு மோவாய்க்கட்டை தவிர ஏனைய ஐந்து அங்கங்களில் ஒவ்வொன்றிலும் இரண்டிரண்டு அங்கங்களிருக்கின்றன. ஆதலின் இரண்டாமிடமுதல் ஆறு மிடம்வரையில் இந்த அங்கங்களில் சரீரத்தில் வலது பாகத்திலுள்ள அங்கங்களுக்கும், பன்னிரண்டாமிடமுதல் 8-ஆமிடம்வரையில் இந்த அங் கங்களில் சரீரத்தில் இடது பாகத்திலுள்ள அங்கங்களுக்கும், இராசி ஸ்தானங்கள் என்று அறிதல் வேண்டும். மற்றைத் திரேக்காணங்கட்கும் இம்முறையே யாகும்.

2-வது திரேக்காணத்திற்கு 1-வது கழுத்து, 2-வது புஜம், 3-வது விலா, 4-வது மார்பு, 5-வது இருதயம், 6-வது வயிறு, 7-வது உந்தியாகும். இவற்றிற்கு இலக்கினமுதல் ஏழாமிடம்வரை யுள்ளவை ஸ்தானங்களாகு மென்பதாம்.

3-வது திரேக்காணத்திற்கு 1-வது அடிவயிறு, 2-வது நிதம்பத்தட்டு, 3-வது பீஜம் (அல்லது அண்டம்), 4-வது தொடை, 5-வது முழங்கால், 6-வது கண்டைக்கால், 7-வது பாதமாகும். இவற்றிற்கு இலக்கினமுதல் ஏழாமிடம் வரையுள்ளவை ஸ்தானங்களாகும்.

## திரேக்காண
## அங்க விபாகம் வருமாறு

| (1-ம் திரேக்காணம்) | (2-ம் திரேக்காணம்) | (3-ம் திரேக்காணம்) |
|---|---|---|
| 1 மிடம் சிரசு | 1 மிடம் கழுத்து | 1 மிடம் அடிவயிறு |
| 2 வலது கண் | 2 வலது புஜம் | 2 வலது நிதம்பத்தட்டு |
| 3 வலது செவி | 3 வலது விலா | 3 வலதுபீஜம் (அண்ட) |
| 4 வலது மூக்கு | 4 வலது மார்பு | 4 வலது தொடை |
| 5 வலது கன்னம் | 5 வலது இருதயம் | 5 வலது முழங்கால் |
| 6 வலது பிடரி | 6 வலது வயிறு | 6 வலது கண்டைக்கால் |
| 7 மோவாய்க்கட்டை | 7 உந்தி | 7 பாதம் |
| 8 இடது பிடரி | 8 இடது வயிறு | 8 இடது கண்டைக்கால் |
| 9 இடது கன்னம் | 9 இடது இருதயம் | 9 இடது முழங்கால் |
| 10 இடது மூக்கு | 10 இடது மார்பு | 10 இடது தொடை |
| 11 இடது செவி | 11 இடது விலா | 11 இடது பீஜம் (அண்ட) |
| 12 இடது கண் | 12 இடது புஜம் | 12 இடது நிதம்பத்தட்டு |

21-அங்கவிபாகங்களை இப்படி வலது இடது பாகங்களாகப் பகுத்து 36-அங்கவிபாகங்களாக ஆசிரியர் வராகமிஹிரனாரவர்கள் தமது பிருகஜ்ஜாதகத்தில் நன்கு விளக்கியிருக்கின்றார். இவற்றிற்குச் சக்கரம் வருமாறு.

## கடக லக்கின ஜாதகம்

| | | | |
|---|---|---|---|
| 9 இடது கன்னம் | 10 இடது மூக்கு | 11 இடது காது | 12 இடது கண் |
| 8 இடது பிடரி | 1-வது திரேக்காணம் | | 1 சிரசு |
| 7 மோவா கட்டை | | | 2 வலது கண் |
| 6 வலது பிடரி | 5 வலது கன்னம் | 4 வலது மூக்கு | 3 வலது காது |

| | | | |
|---|---|---|---|
| 9 இடது இருதய | 10 இடது மார்பு | 11 இடது விலா | 12 இடது புயம் |
| 8 இடது வயிறு | 2-வது திரேக்காணம் | | 1 கழுத்து |
| 7 உந்தி | | | 2 வலது புயம் |
| 6 வலது வயிறு | 5 வலது இருதய | 4 வலது மார்பு | 3 வலது விலா |

## உதாரண ஜாதகம்

3-வது திரேக்காணத்தில் ஜனனம்

| | | | |
|---|---|---|---|
| 9 இடது முழங்கால் கேது | 10 இடது தொடை | 11 இடது பீஜம் சனி | 12 இடது நிதம்பத் தட்டு சுக் |
| 8 இடது கண்டைக் கால் | 3-வது திரேக்காணம் | | ல-1 அடி வயிறு சூரி- புதன் குரு |
| 7 பாதம் | | | 2 வலது நிதம்பத் தட்டு |
| 6 வலது கண்டைக் கால் | 5 வலது முழங்கால் | 4 வலது தொடை | 3 வலது பீஜம் சந் அங்-ராகு |

திரேக்காணம் திரயகாணம் திரைகாணம் என்பது ஒருபொருட்கிளவி. இந்த உதாரண ஜாதகத்தில் வலதுபீஜம், இடது முழங்கால், இடது பீஜம் இந்த ஸ்தானங்களில் பாவர் இருப்பதனால் ஷை அங்கங்களில் ஷை ஜாதகனுக்கு விரணமுண்டாகுமென்றும், இடது நிதம்பத்தட்டு, அடிவயிறு இந்த ஸ்தானங்களில் சுபர் இருப்பதனால் அந்த அங்கங்களில் மறுவுண்டாகும் என்றும் அறிதல் வேண்டும்.

வீரமுறுங் கதிரிருந்தால் விலங்கினத்தி ஞலும்
விளங்குசசி யிருந்தக்கால் மெய்விரணங் கொம்பால்
பார்மகனுற் றீடிலங்கி யாற்படையி ஞலும்
பாகனுறில் பூமிநிமித் தம்விரணம் மற்றும்
ஆரியனுங் குருசுங்கர் உறில்விரண மில்லை
ஆங்காரி உறில்கல்லால் வாதசேத்து மத்தால்
கூறியதோர் இரணமுண்டாம் நல்லோர்கள் கண்டால்
கூறுமிர ணந்தீர்ந்தே குலவும்வடு வாமே.

(இ-ள்) முன்சொன்ன ஸ்தானங்களில் சூரியன் இருந்தால் நாற்கால் மிருகங்களினுலும், சந்திரனிருந்தால் மிருகங்களின் கொம்பினுலும், செவ்வாயிருந்தால் நெருப்பினுலும், ஆயுதங்களினுலும், புதனிருந்தால் மண் கட்டியாலும் விரணமுண்டாகும். குரு சுக்கிரர்களிருந்தால் விரணம் இருக்காது. சனியிருந்தால் கற்களினுலும், வாத சிலேட்டும நோயினுலும் விரணங்கள் ஏற்படும். சுபக்கிரகங்கள் நோக்குவார்களாஞல் விரணந் தீர்ந்து வடுவாக மாறியிருக்கும் எ-று.

(வி-ரை) இரண்டாம் அடியில் "சசியிருந்தக்கால் மெய்விரணங் கொம்பால்" என்றதில், 'கொம்பு' என்பதற்கு மரக்கொம்பு எனப் பொருள் கூறலாகாதோ எனின்? அற்றன்று. ஆசிரியர் வராகமிகிரனுரவர்கள் தமது பிருகஜ்ஜாதகத்தில் "ஹிமகௌச்ருங்க்யப்ஜஜோர்ங்யை" என்று கூறியிருப்பதனுல் மிருகங்களின் கொம்பு என்றே கொள்ளுதல் வேண்டும்.

மந்தேச்மாகிலஜோ அக்நிசஸ்த்ரவிஷஜோ பௌமே புதே பூபவ:
ஸூர்யேகாஷ்டசதுஷ்பதோ ஹிமகௌச்ருங்க்யப்ஜஜோர்ங்யை"
(பிருகஜ்ஜாதகம்)

(இ-ள்) சனிக்கு வாயுவாலும் கற்களினுலும், செவ்வாய்க்கு நெருப்பு ஆயுதம் விஷத்தினுலும், புதனுக்கு பூமியினுலும். அதாவது பூமியினின்றும் கீழ்விழுவதினுலும், (உயர்ந்த இடத்திலிருந்து கீழ்விழுந்தோ, மண்கட்டிகளால் அடியுண்டோ) சூரியனுக்குக் கட்டைக்குத்துவதனுலும், நாற்கால் பிராணிகளினுலும், சந்திரனுக்கு ஜலஜந்து, அல்லது கொம்புள்ள மிருகங்களினுலும் விரணமுண்டாகும் எ-று.

இந்த 3-வது செய்யுளில் பொதுவாக சந்திரன் என்று கூறியிருக்கின்றது. அதற்கு வளர்பிறைச்சந்திரனுனல் மறுவுண்டென்றும், தேய்பிறைச் சந்திரனுனல் மிருகக்கொம்பினுல் விரணமுண்டென்றும் அறிதல்வேண்டும். புதன் சுபர்களுடன் கூடியிருப்பின் மறுவுண்டென்றும், பாவர்களுடன் கூடியிருப்பின் விரணமுண்டென்றும் அறிதல்வேண்டும். இங்ஙனமன்றி பொதுவாக அறிதல் இத்துணைச் சிறப்பின்மையென்பது துணிபு.

எந்த அங்கத்தின் இராசியில் சுபக்கிரகங்கள் இருக்கின்றதோ அந்த அங்கத்தில் மறுவிருக்கும் என்றும், எந்த அங்கத்தின் இராசியில் பாவக்கிரகங்கள் இருக்கின்றதோ அந்த அங்கத்தில் வடுவிருக்கும் என்று அறிதல் வேண்டும். இங்ஙனம் சுபக்கிரகங்களினுல் மறுவுண்டென்றும், பாபக்கிரகங்களினுல் வடுவுண்டென்றும் அறியவும்.

இவ்வித மறுவிரணங்களுக்கு உரிய சுபர் பாவர்கள் ஸ்திரராசி, ஸ்திர நவாம்சத்திலிருந்தாலும், தனது வீடு, தனது நவாம்சத்திலிருந்தாலும்மறு

வடு பிறக்கும்பொழுதே உண்டாயிருக்குமென்றும், இங்ஙனமின்றி வேறு வீடு, வேறு நவாம்சங்களிலோ, அல்லது சர உபயராசிகளிலோ யிருந்தால் மறு வடு பிறந்தபின்னர் உண்டாகுமென்றும் உணர்தல்வேண்டும்.

## கிரகங்களின் மறு வடுக்கள் வருமாறு

1. சூரியனுக்கு:—நாற்கால் மிருகங்கள் காலினுலுதைத்தல், கொம்புள்ள மிருகங்கள் கொம்பினுல் குத்துதலினுல் உண்டாகும் வடு (விரண) வாகும். கட்டைப்படுதலு முண்டாகும்.
2. சந்திரனுக்கு:—நீர்வாழும் பிராணிகள், நாற்கால் மிருகக்கொம்பு இவற்ருல் உண்டாகும் வடுவாகும்.
3. செவ்வாய்க்கு:—நெருப்பு ஆயுதம் விஷப்பிராணிகளால் உண்டாகும் வடுவாகும். கேதுவுக்கும் இதுவேயாகும்.
4. புதனுக்கு:—மேட்டிலிருந்து பள்ளத்தில் விழுதல், பூமியில் இடறிவீழ்தல், மண்கட்டியால் அடிபடுதல் இவற்ருல் உண்டாகும் வடுவாகும்.
5. குரு சுக்கிரர்கட்கு:—பாபசம்பந்தமில்லா புதன், வளர்பிறைச் சந்திரனுக்கும்:—மச்சம் தேமல் இவை யுண்டாகும்.
6. சனிக்கு:—கல்விழுதல், வாதவியாதி இவற்ருலுண்டாகும் வடுவாகும். இராகுவுக்கும் இதுவேயாகும்.

குறிப்பு:—புதனுடன் மூன்று கிரகங்கள் கூடி நான்கு கிரகங்களாக எந்த அங்கஸ்தானத்தி லிருக்கின்றுர்களோ அந்த அங்கத்தில் நிச்சயமாக வடுவுண்டாகும். ஜன்மலக்கினத்திலிருந்து 6-வது இராசியின் அங்கஸ்தானத்தில் பாபகிரகமிருந்தால் வடுவுண்டாம். 6-லிருக்கும் பாபக்கிரகம் சுபக்கிரகங்களால் பார்க்கப்பட்டால் மச்சத்தையுண்டாக்கும் எனமறுவடுக்களின் இலட்சணங்களை ஊகித்துணர்ந்து கொள்ளுதல் அறிஞர் கடமையாகும். ()

வடிவிலார் சிரத்திரவி முகத்தின்மதி யாகும்
மார்பிற்சேய் உறின்மருவு மின்னுமிர ணந்தான்
முடியரசன் உதரத்தில் புந்தியிடை தனிலே
மூரிநெடுங் காரியிரு துடைதனிலே யாகும்
கடுவுறையுங் கருநாகங் கரந்தனிலே யாகும்
காலிரண்டிற் செம்பாம்பு தான்கலந்து நிற்கும்
நடுமுதுகிற் சுக்கிரனும் ஆம்விரணம் பாவர்
நண்ணுமிடந் தன்னிலென்றே நாட்டுவர் நல்லோரே.

(இ-ள்) சூரியனுக்குத் தலையிலும், சந்திரனுக்கு முகத்திலும், செவ்வாய்க்கு மார்பிலும், புதனுக்கு இடுப்பிலும், குருவுக்கு வயிற்றிலும், சுக்கிரனுக்கு முதுகிலும், சனிக்கு இரண்டு துடைகளிலும், இராகுவுக்கு கைகளிலும், கேதுவுக்கு இரண்டு கால்களிலும் விரணம் உண்டென்று சோதிடப் புலவர்கள் கூறுவார்கள் எ-று.

(வி-ரை) முன்னே கூறிய திரேக்காணத்தை அனுசரித்து இராசிகளுக்குரிய அங்கஸ்தானங்களாகும். இது கிரகங்களுக்குரிய அங்கஸ்தானங்கள் ஆகுமென்று அறிதல்வேண்டும். பாவர்கட்கு விரணம், சுபர்கட்கு மறுவென்று இவ்விடத்திலும் அறிதல்வேண்டும். (244)

# நவாமிசம்

உதித்திடுநற் சன்மலக் கினங்கடமைக் கண்டே
ஒன்பதுபங் காக்கியிவன் உதித்திடும்பங் கினுக்கே
விதித்தநவாங் கிசம்மேடந் தனுக்குமே மேடம்
மேவிடப ராசிக்கு மகரமுத லாகக்
கதித்தமிது னந்தனக்குத் துலாமுதலாக் கொண்டு
கணக்கிடுவா யிவ்வாறே கடகமுதற் றெட்டுப்
பதித்தமற்ற ராசிக்கு முன்புசொன்ன முறையே
பார்த்துரைப்பாய் பான்மொழியே பன்னுநவாங் கிசமே.

(இ-ள்) *பிறந்த இலக்கினத்தைப் பார்த்தறிந்து, அதனை ஒன்பது பங்கு செய்து, அந்த ஒன்பதுபாகத்தில் ஜாதகன் பிறந்தது எந்தப்பாகத்தில் என் றுணர்ந்து, அந்தப் பாகத்தை மேடம் சிங்கம் தனுசு இம்மூன்றிராசிகளுக் கும் மேடமுதலாகவும், இடபம் கன்னி மகரம் இந்த மூன்றிராசிகளுக்கும் மகரமுதலாகவும், மிதுனம் துலாம் கும்பம் இம்மூன்றிராசிகளுக்கும் துலா முதலாகவும், கடகம் விர்ச்சிகம் மீனம் இம்மூன்றிராசிகளுக்கும் கடகமுத லாகவும் கணக்கிட்டு பார்த்துக் கூறுதலே பால்போலும் இனியசொற்களைப் பேசுகின்ற ஓஹ பெண்ணே! நவாங்கிசம் என்னப்படுவதாகும் எ-று.*

*(வி-ரை) 'பான்மொழி' என்றது மகடூஉ முன்னிலை. ஏகாரம்-ஈற்றசை.*

நவாமிசம்

*மேஷகேஸரி சாபாநாம் மேஷாத்யா: ஸ்யுர்நவாம்சகா:*
*கர்க்கி வ்ருச்சிக மீநாநாம் கர்க்கடாத்யா: ப்ரகீர்த்திதா:*
*துலாகும்ப ந்ருயுக்மாநாம் துலாத்யா: கதிதாஇமே*
*மகரஸ்த்ரீ வருஷாணாஞ்ச மகராத்யா: ப்ரகீர்த்திதா:*

(ஜோதிஷ தத்துவ சுதார்ணவம்)

## வர்க்கோத்தமம்

*சராணாம் ப்ரதமோ அம்ச: ஸ்திராணாம் பஞ்சமஸ்ததா*
*திவ்யாத்மகாநாம் ததா சந்த்ய: ஸவர்கோத்தம ஸம்க்ஞக:*

(ஜோதிஷ தத்வ சுதார்ணவம்)

*முன்பு கூறிய நவபாகமான நவாம்சகத்தில் சரராசிகளில் முதலாவதும் ஸ்திரராசிகளில் ஐந்தாவதும், உபயராசிகளில் ஒன்பதாவதும் வர்க்கோத்த மாம்சங்களாகும்.*

| | | | |
|---|---|---|---|
| ரேவ 4 | அசுவ 1 | ரோக 2 | புனர் 3 |
| சதயம் 3 | வர்க்கோத்தம நட்சத்திர பாதங்களை | | புனர் 4 |
| உத்ரா 2 | காட்டும் சக்கரம் | | பூரம் 1 |
| உத்ரா 1 | அனு 4 | சித்ரை 3 | சித்ரை 2 |

உதாரணம்:—மேலே காட்டப்பெற்ற வர்க்கோத்தம சக்கரத்தில் அசுவணி முதற்பாதத்தில் இருந்த கிரகம் வர்க்கோத்தமத்தில் இருப்பதாக அறிதல்வேண்டும். இதுவன்றி எந்த இராசியில் எந்த கிரகமிருக்கின்றதோ, அந்த ராசியில் அந்தக்கிரகம் அமிசாசக்கரத்திலும் இருக்குமானால் அது வர்க்கோத்தமத்தில் இருப்பதாக அறிதல்வேண்டும். இதன் பலன் என்ன வெனின்? கூறுதும் "ஸூமெளெ குலமுக்யகரா" என்ற சாராவளியின்படி வர்க்கோத்தமததில் இலகனமோ அல்லது கிரகங்களோ இருக்கப்பிறந்த ஜாதகன் குலசிரேஷ்டனுவான் என்று அறிதல்வேண்டும்.

லக்நம் கஞேத்தமோநம் நகேசரைர் த்ருச்யதே ததாபங்கஃ
பவதிஹிந்ருப யோகாநாம் தாரித்ரய ப்ரஜாதஸ்ய (சாராவளி)

என்ற சுலோக வசனமானது இலக்கினம் வர்க்கோத்தமாம்சத்திலிருந்து எந்த கிரகத்திஞலும் பார்க்கப்படாமலிருந்தால் இராஜயோகமும் பங்கமாகி தரித்திர யோகத்தை யுண்டாக்கும் எனறு விளம்புகின்றது.

சத்ருக்ஷேத்ரகதைஃ ஸர்வைவர்க்கோத்தம யுதைர்அபி
ராஜயோக விநஸ்யந்தி பகுபிர்நீச கைர்அபி

என்ற ஜாதகாபரணத்தில் எல்லா கிரகங்களும் வர்க்கோத்தமாம்சத்திலிருந்தாலும், பகை நீசத்திலிருந்தாலும் இராஜயோகபங்க முண்டாமென்று கூறப்பட்டிருக்கின்றது.

இதனல் இலக்கினம் வர்க்கோத்தமாம்சமாகி ஏதேனும் ஒரு கிரகத்திஞல் பார்க்கப்படுமானல் இராஜயோக முண்டாமென்று ஏற்படுகின்றது. இது விஷயமாய் ஆசிரியர் வராஹமிகிரஞரவர்கள் தமது பிருகஜ்ஜாதகத்தில் 11-வது இராஜயோக அத்தியாயதநல், "வர்க்கோத்தம கதேலக்நே சந்த்ரேவா சந்த்ர வாஜிதைஃ சதுராத்யை க்ரஹைர்த்ருஷ்டே ந்ருபாத்வா விம்சதிஃ ஸ்ம்ருதாஃ" என்றுகூறியிருக்கின்றனர் இதன்பொருள் வருமாறு: ஜனனலக்கினம அல்லது சந்திரலககினம் வர்கோத்தமாம்சத்திலிருந்து சந்திரன் நீங்கலாகவுள்ள ஏனைய கிரகஙகளில் நான்கு முதலிய கிரகங்களால் பார்க்கப்பட்டால் இருபத்திரண்டுஇராஜயோகங்கள் உண்டாகுமென்பதாம்.

வர்க்கோத்தமாம்சம் பெற்ற இலக்கினம் அல்லது
சந்திர லக்கினத்தை

| | | | | | |
|---|---|---|---|---|---|
| 1 | சூரி | செவ் | புத | குரு | |
| 2 | சூரி | செவ் | புத | சுக் | |
| 3 | சூரி | செவ் | புத | சனி | |
| 4 | சூரி | செவ் | குரு | சுக் | |
| 5 | சூரி | செவ் | குரு | சனி | |
| 6 | சூரி | செவ் | சுக் | சனி | |
| 7 | சூரி | புத | குரு | சுக் | |
| 8 | சூரி | புத | குரு | சனி | |
| 9 | சூரி | புத | சுக் | சனி | |
| 10 | சூரி | குரு | சுக் | சனி | |
| 11 | செவ் | புத | குரு | சுக் | |
| 12 | செவ் | புத | குரு | சனி | |
| 13 | செவ் | குரு | சுக் | சனி | |
| 14 | செவ் | புத | சுக் | சனி | |
| 15 | புத | குரு | சுக் | சனி | |
| 16 | சூரி | செவ் | புத | குரு | சனி |
| 17 | சூரி | செவ் | புத | குரு | சுக் |
| 18 | சூரி | செவ் | புத | சுக் | சனி |
| 19 | சூரி | செவ் | குரு | சுக் | சனி |
| 20 | சூரி | புத | குரு | சுக் | சனி |
| 21 | செவ் | புத | குரு | சுக் | சனி |
| 22 | சூரி | செவ் | புத | குரு | சனி |

இவ்விதமாக இருபத்திரண்டு யோகங்கள் உண்டாகுமென்று ஏற்படுகின்றது. கேசவலகுதாசகத்தில் "வர்க்கோத்த மாம்ஸகே சந்த்ரே ஸர்வ தாரா க்ரஹேக்ஷிதே விலக்நேப்ய தவாஜாதோ மண்டலாதிபதிர் பவேத்" என்று இதுவிஷயமாய் கூறப்பட்டிருப்பதுணர்க.

பாவகுதூகலத்தில்,

> பவதி வீக்ஷணவர்ஜித மங்கிநாம் ஜனனலக்நமிஹாம் பரகாமிநாம்
> ஜனனபம்ச ந்ருபாலபவோநரோ ஜகதியதிரா மதிரங்கதாம்"

என்ற சுலோகத்தில் வர்க்கோத்தமாம்சம் பெற்ற இலக்கினத்தை ஏதேனும் கிரகங்கள் பார்க்காவிடின் இராஜயோகபங்கம் உண்டென்று கூறப்பட்டுளது.

முன்பு காட்டிய உதாரண ஜாதகத்தில் குரு ஆயிலியம் 2-ல் இருக்கின்றார். இது கடகத்தில் 7-வது பாகமாகும். ஆகவே கடகாதி 7-வது இராசியான மகரத்தில் குரு என்று அறிதல்வேண்டும்.

| | | | |
|---|---|---|---|
| பு-ச அங் | சுக் | | |
| கேது | 4-வது நவாமிசம் | | |
| லக குரு | | | ராகு |
| | | சூரி | சனி |

## 5-வது துவாதசாமிசம்

கருது பன்னிரண் டங்கிசங் காணவே
மருவு லக்கினத் தைவகுத் தப்படி
வருவ தாகிய பங்கையம் மனைமுதல்
ஒருவி லாததோ ரோரை கணித்திடே.

(இ-ள்) எண்ணும் பனிரண்டாவது அமிசமாகிய துவாதசாமிசத்தை அறியும் முறையாவது, இலக்கினத்தைப் பன்னிரண்டு பங்காக்கி எந்தப் பாகத்தில் இலக்கின மிருக்குமென்றுணர்ந்து, இலக்கினமுதலாக எண்ண வரும் அந்த இராசியே துவாதசாமிச இலக்கினமாகும் என்று கணித்தல் வேண்டும் எ-று.

(வி-ரை) இலக்கினம் எனவே கிரகங்கட்கும் இதுவே முறையாகும் 3-வது அடி 4-ம் சீர் 'வருடைதொட்டு' என்றுளது தவறு. துவாதசாமிசத்தின் நியதியைப்பற்றி பராசரமுனிவரர் தமது பிருகத்பராசரஹோரையில்:—

த்வாதசாம்சஸ்ய கணநா தத்தத் க்ஷேத்ராத் விநிர்திசேத்
தேஷாமதீசா: க்ரமசோ கணேசாச்விய மாஹய:

என்ற சுலோகத்தில் அந்தந்த இராசியிலிருந்தே எண்ணி அமைக்கும்படி அருள்செய்திருக்கின்றதனால் 'வருடைதொட்டு' என்றிருப்பதை, 'அம்மனை முதல்' என திருத்தியமைத்திருக்கின்றோம். இதனை விவேகிகள் உற்று உணர்ந்து அமைதியோடு நோக்குவார்களாயின் இதன் உண்மை நன்கு புலனாகும். எனையோர் ஆழ்ந்துணராது தொன்றுதொட்டு பல்லோர்களால் அங்கீகரித்துவந்த இச்செய்யுளை திருத்தியமைத்தல் பொருந்தாதென விதண்டையாகப் பேசுவார் என்பதாம்.

ஒரு இராசிக்கு உரிய 30-பாகையை 12-ஆல் பிரிக்க பாகம் ஒன்றுக்கு 2½-பாகையாகும். இதன் தெளிவை இந்தச் சக்கரத்தினால் நன்கு அறிக.

### துவாதசாமிச சக்கரம்

| பாகம் | பாகை | மேட | ரிஷ | மிது | கட | சிம்ம | கன் | துலா | விர் | தனு | மகர | கும் | மீன |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 1 | 2½ | மேட | ரிஷ | மிது | கட | சிம்ம | கன் | துலா | விர் | தனு | மகர | கும் | மீன |
| 2 | 5 | ரிஷ | மிது | கட | சிம்ம | கன் | துலா | விர் | தனு | மகர | கும் | மீன | மேட |
| 3 | 7½ | மிது | கட | சிம் | கன் | துலா | விர் | தனு | மகர | கும் | மீன | மேட | ரிஷ |
| 4 | 10 | கட | சிம் | கன் | துலா | விர் | தனு | மகர | கும் | மீன | மேட | ரிஷ | மிது |
| 5 | 12½ | சிம் | கன் | துலா | விர் | தனு | மகர | கும் | மீன | மேட | ரிஷ | மிது | கடக |
| 6 | 15 | கன் | துலா | விர்ச் | தனு | மகர | கும் | மீன | மேட | ரிஷ | மிது | கடக | சிம் |
| 7 | 17½ | துலா | விர்ச் | தனு | மகர | கும் | மீன | மேட | ரிஷ | மிது | கடக | சிம்ம | கன் |
| 8 | 20 | விர்ச் | தனு | மகர | கும்ப | மீன | மேட | ரிஷ | மிது | கடக | சிம்ம | கன் | துலா |
| 9 | 22½ | தனு | மகர | கும் | மீன | மேட | ரிஷ | மிது | கடக | சிம்ம | கன் | துலா | விர் |
| 10 | 25 | மகர | கும்ப | மீன | மேட | ரிஷ | மிது | கடக | சிம்ம | கன் | துலா | விர் | தனு |
| 11 | 27½ | கும்ப | மீன | மேட | ரிஷ | மிது | கடக | சிம்ம | கன் | துலா | விர் | தனு | மகர |
| 12 | 30 | மீன | மேட | ரிஷ | மிது | கடக | சிம்ம | கன் | துலா | விர் | தனு | மகர | கும் |

உதாரண ஜாதகத்தில் குரு கடகத்தில் 27-பாகை 59-கலையில் இருக்கின்றார். இந்தச் சக்கரத்தில் பார்க்க 9-வது பாகத்திலிருப்பதாக ஏற்பட்டது. கடகராசிக்கு நேர்கீழே 9-வது பாகத்திற்குச் சரியாகப் பார்க்க குரு மீனத் துவாதசாமிசத்தில் இருப்பதாக ஏற்பட்டது. ஆகவே மற்றைக் கிரகங்களையும் இம்முறையாகவே வெகு சுலபமாக அறிதல் முறையாகும்.

உதாரண ஜாதகத்தின் துவாதசாம்ச சக்கரம் வருமாறு:—

| | | | |
|---|---|---|---|
| குரு | வ சனி | புத | |
| சுக் | 5-வது துவாதசாமிசம் | | ராகு |
| கேது | | | |
| சந் | சூரி அங் | | |

இந்தப்படி ஒவ்வொரு ஜாதகங்கட்கும் துவாதசாம்ச சக்கர அமைப்பை அறிந்துணர்தல் வேண்டுமென்க. (246)

## திரிமிசாமிசம்

செய்யலக் கினந்தன்னை முப்பதாய்ப் பிரித்துச்
 செவ்வாய்க்கோ ரைந்துபங்காஞ் சனிக்குப்பங் கைந்தாம்
துய்யகுரு வுக்கெட்டு புதனுக்கே ழாகும்
 சுக்கிரனுக் கைந்துபங்காய்ச் சொல்லொற்றை தனக்கே
பையஅந்த இரட்டைலக் கினந்தனக்குப் பங்கு
 பகர்சுக்கி ரன்றனக்கே யைந்துபுதற் கேழாம்
தையலேகேள் அரசர்க்கெட்டுச் சனிக்கைந் தாகும்
 சாற்றுகுசற் கைந்துபங்காந் தான்சாற்றுங் காலே.

(இ-ள்) பிறந்த லக்கினத்தை முப்பதுபங்கு ஆக்கி புருடராசியினுல் முதல் 6-பாகைவரை செவ்வாய்க்கும், 10-பாகைவரை சனிக்கும்,18-பாகைவரை குருவுக்கும், 25-பாகைவரை புதனுக்கும், 30-பாகைவரை சுக்கிரனுக்கும் திரிமிசாமிசப் பங்காகும். ஸ்திரீராசியில் முதல் 5-பாகைவரை சுக்கிரனுக்கும், 12-பாகைவரை புதனுக்கும், 20-பாகைவரை குருவுக்கும், 25-பாகைவரை சனிக்கும், 30-பாகைவரை செவ்வாய்க்கும் திரிமிசாமிசப் பங்காகும் எ-று.

## இதற்குச் சக்கரம் வருமாறு

ஆண் ராசி

| எண் | பாகை | திரிமிசாமிசம் | இராசி |
|---|---|---|---|
| 1 | 5 | செவ்வாய் | மேஷம் |
| 2 | 10 | சனி | கும்பம் |
| 3 | 18 | குரு | தனுசு |
| 4 | 25 | புதன் | மிதுனம் |
| 5 | 30 | சுக்கிரன் | துலாம் |

பெண் ராசி

| எண் | பாகை | திரிமிசாமிசம் | இராசி |
|---|---|---|---|
| 1 | 5 | சுக்கிரன் | ரிஷபம் |
| 2 | 12 | புதன் | கன்னி |
| 3 | 20 | குரு | மீனம் |
| 4 | 25 | சனி | மகரம் |
| 5 | 30 | செவ்வாய் | விர்ச்சிகம் |

உதாரணம்:- ஜாதகத்தில் மிதுனவிராசியில் 20-50-கலையில் சுக்கிரனிருக்கின்றார். அது ஆண்ராசியாதலால் மேற்காட்டிய சக்கரத்தைப்பார்க்க 18-பாகைக்குமேல் 25-பாகைக்குள் ஆண்ராசியிலுள்ள கிரகம் திரிமிசாமிச சக்கரத்தில் மிதுனத்திலிருக்கும் என்று ஏற்படுவதுணர்க.

திரிமிசாமிச சக்கரத்தில்

இராகு கேதுக்கள் ஒரே இராசியில் அமைவர்

| | | | |
|---|---|---|---|
| சூரி | | | சுக் |
| | 6-வது திரிமிசாமிசம் | | |
| லக் குரு | | | |
| | ச-ரா பு-கே | | சந் அங் |

திரிமிசாமிச சக்கரத்தில் கடக சிங்கங்களில் இருக்காது.

யாதுபற்றி எனின்?

சூரிய சந்திரர்கட்கு திரிமிசாமிச விபாகமின்மையாலென்க.

இனி ஷட்வர்க்கங்களில் ஏற்படும் தேவாமிசத்தைப்பற்றிச் சிறிது விளக்குவாம். இதுவிஷயம் இந்நூலாசிரியர் கூறாது விட்டிருப்பினும் அவசியம் கருதி அதுவிஷயம் இங்கு எழுதப்படுகின்றன.

இராசி ஓரை திரேக்காணம் நவாமிசம் துவாதசாமிசம் திரிம்சாமிசம் என்னும் இந்த ஆறு சக்கரங்களில் சூரியாதி கிரகங்களும், இலக்கினமும் எத்தனை சுபவர்க்கங்கள் ஏறி யிருக்கின்றார்கள் என்று அறிந்து அத்தனை சுபவர்க்கப்பலனை கீழ்க்கண்டபடி தெரிதல் வேண்டும்.

க்ஷேத்ரம் ஹோரா த்ருகாணஞ்ச
நகாம்சம் நவமாம்சகம்
அர்க்காம்சம் த்ரிம்சதம்சஞ்ச
க்ரமசோத்ர பலம்வதேத்
வர்க்கோத்தமம் பாரிஜாதம்
உத்தமம் கோபுரம் ததா
ஸிம்ஹாஸநம் பஞ்சமம் ஸ்யாத்ஷண்ணம்
பாராவ தாக்யகம்.

(கேரளாசாரியர்)

இதன் விபரம்

1-வது வர்க்கோத்தமாமிசம்
2-வது பாரிஜாதாமிசம்
3-வது உத்தமாமிசம்
4-வது கோபுராமிசம்
5-வது சிம்மாசனாமிசம்
6-வது பாராவதாமிசம்.

மேலே கூறிய ஆறுவர்க்கங்களிலும் கிரகங்கள் சுபக்கிரக இராசியி லிருப்பின் சுபவர்க்கம் இத்தனை என்றும், பாபகிரக இராசியிலிருப்பின் பாபவர்க்கம் இத்தனை என்றும் அறிதல் வேண்டும்.

சட்வர்க்கங்களில் உச்ச மூலத்திரிகோண ஆட்சி இராசிகளில் இருப்பின் அத்தனை தேவாமிசம் என்று அறிதல்வேண்டும்.

---

| | | | |
|---|---|---|---|
| கேது | | சனி | சுக் |
| | 1-வது | | ல-கு பு-கு |
| | இராசி | | |
| | | | சந் அ ராகு |

| | | | |
|---|---|---|---|
| \ | | | ராகு |
| | 2-வது | | சூரி |
| | ஓரை | | ல-பு குரு |
| கேது | | சனி | சந் அ சுக் |

| | | | |
|---|---|---|---|
| லக் பு-கு | | ராகு | |
| சுக் | 3-வது | | |
| சனி | திரேக்கா ணம் | | |
| | சூரி கேது | | சந் அங் |

| | | | |
|---|---|---|---|
| அங் | பு-சந் சுக் | | |
| கேது | 4-வது | | |
| லக் குரு | நவாமிசம் | | ராகு |
| | | சூரி | சனி |

| | | | |
|---|---|---|---|
| குரு | ல சனி | புத | |
| சுக் | 5-வது | | ராகு |
| கேது | துவாதசா மிசம் | | |
| சந் | சூரி அங் | | |

| | | | |
|---|---|---|---|
| சூரி | | | சுக் |
| | 6-வது | | |
| லக் குரு | திரிமிசா மிசம் | | |
| | சு-ரா பு-கே | | சந் அங் |

உதாரண ஜாதகத்தில் ஏற்பட்ட
**சுப பாபவர்க்கங்களும் தேவாமிசங்களும் வருமாறு**

| | தேவ. | சுப. | பாப. | | தேவ. | சுப. | பாப. |
|---|---|---|---|---|---|---|---|
| சூரியன் | 0 | 3 | 3 | சுக்கிரன் | 0 | 3 | 3 |
| சந்திரன் | 0 | 6 | 0 | சனி | 1 | 3 | 2 |
| செவ்வாய் | 1 | 5 | 0 | இராகு | 0 | 4 | 2 |
| புதன் | 0 | 4 | 2 | கேது | 0 | 2 | 4 |
| குரு | 3 | 0 | 3 | இலக்கினம் | 0 | 2 | 4 |

இந்த உதாரண ஜாதகத்தில் செவ்வாய் சனி இவர்கள் 1-வது வர்க் கோத்தமாம்சத்திலும், குரு 3-வது உத்தமாம்சத்திலும் இருக்கின்றார்கள். சந்திரன் செவ்வாய் புதன் இராகு இவர்கள் அதிக சுபவர்க்கத்திலும், ஏனை யோர் அங்ஙனமின்றியும் இருக்கின்றார்கள். சிலர் சுபவர்க்க எண்ணையே தேவாம்ச எண்ணுகைக் கருதி தேவாமசத்தை கூறுகிறபர். சில சோதிட ஆசிரியர்கள் தசவர்க்கில் தேவாமிசபலத்தை சுபபாபவர்க்க அடைவாகவே நிர்ணயித்து எழுதியிருக்கின்றனர். ஆட்சி உச்ச மூலத்திரிகோண அடை வாகவே தேவாமிசபலத்தை நிர்ணயித்தல் மிக அத்தியாவஸ்யமானது. ()

# உச்சபலப் படலம்



### உச்ச ராசிகள்

உச்சமென நவக்கிரக மிருக்கும்வண் மையதாம்
  உணர்ந்தறியும் படிமேடத் துறையும்வெய் யோனும்
மெச்சுமிட பத்திற்சந் திரன்மகரச் செவ்வாய்
  விரவியதோர் கன்னிதனின் மேவியநற் புதனும்
அச்சமறக் கடகத்தில் அரசனும்வந் திருக்க
  அணிமீன ராசிதனில் அமர்ந்திடுஞ்சுக் கிரனும்
வச்சிரமாந் துலாமதனில் காரியெனுங் கோளும்
  வந்திருந்தால் உச்சமென வேவழுத்த லாமே.

(இ-ள்) சூரியன் முதலாகவுள்ள நவக்கிரகங்கள் உச்சம் பெற்றிருக்கும் குணத்தன்மையைத் தெளிவாக அறியும்வகையாவன: மேடத்தில் சூரியனுக்கும், இடபத்தில் சந்திரனுக்கும், மகரத்தில் செவ்வாய்க்கும், கன்னியில் புதனுக்கும், கர்க்கடகத்தில் குருவுக்கும், மீனத்தில் சுக்கிரனுக்கும், துலாத்தில் சனிக்கும் உச்சம் என்று சொல்லப்படும் எ-று.

(வி-ரை) இச்செய்யுளில் ஆசிரியர் கீரனூர் நடராஜனாரவர்கள் "உச்சமென நவக்கிரகம்" என்ற பிரயோகத்தில் ஒன்பது கிரகங்களின் உச்சத்தைக் கூறுவதாக ஆரம்பஞ்செய்தவர், சூரியன்முதல் சனி ஈறாகவுள்ள ஏழு கிரகங்களின் உச்சநியதியைமட்டும் கூறிமுடித்து, ஏனை இருகிரகங்களாகிய இராகு கேதுக்களின் உச்சநிலையைக் கூறாது விடுத்தனர். ஆதலின் பிரயோசனங்கருதி வேறு நூற்களிலிருந்து அதனை இங்கு எடுத்தெழுதி விளக்குதல் மிகமிக அவசியமாகும் என்க.

*ராஹூஸ்தமஸ் ஸ்நோகச்ச ஸ்வர்யாநுச்ச விதுந்துதः*
*பாதுச்சஸைம்ஹிகேயசச புஜகாக்ய இதி ஸ்ம்ருதः*
*கேதுச்சிகித்வஜோதூம்ர உத்பாதோ பகுரூபக்ருத்*
*சிரோவிஹீநோ கோரரூபச் சித்ரவாணஸ் ஸ்கேதவः* (பிராசீனர்)

எனவரும் சுலோகவசனப்படி சோதிட சாஸ்திரங்களில் இராகு கேதுக்கள் என்றும், விதுந்துத அம்ரர்கள் என்றும், பாதோத்பாதர்கள் என்றும், அகிசிகிகள் என்றும், ஸ்வர்பாநுத்வஜர்கள் என்றும், சிம்மிகேய சித்திர வர்ணர்கள் என்றும் சொல்லப்படும். இந்தக் கிரகங்கள் அந்தகாரத்தையே சொரூபமாக உடையவர்களாய், அதிருசியர் (காணப்படாதவர்) களாய், வக்கிராதி சாரங்களில்லாமல் சமகதியுடன் சோதிச்சக்கரத்தில் அபசவ்விய (இட) பாகமாக சஞ்சரிக்கின்றவர்களாய் இருக்கின்றனர். இவர்கள் தாம் இருக்கும் இராசியாதிபதி தம்முடன் சேர்ந்தோர் பார்த்தோர் ஆகிய கிரகங்களுடைய சுபாவத்தை யொத்த பலாபலன்களைத் தருபவர்களாவர்.

இதனை, *யத்பாவக தௌவாபி யத்யத்பாவேஸ ஸஸம்யுதௌ*
*தத்தத்பலாநி ப்ரபலௌ ப்ரதிசேதாம் தமோக்ரஹௌ.*

எனவரும் ஜாதக சந்திரிகை சுலோகவசனத்தினால் நன்கறியலாம். இவர்கள் கிரகணகாலந் தவிர்த்த ஏனைய காலங்களில் உலகினர்க்கு தோற்றப்படாதவர்களாய் சஞ்சரிக்கும் சாயாக்கிரகங்களாவர். இவர்களைக் கிரகண காலத்தில்தான் அறியக்கூடும். பஞ்சாங்கங்களில் எழுதப்படும் கிரகண கிரஸ்தங்கள் இராகு கிரஸ்தமானால் இராகுவும், கேது கிரஸ்தமானால் கேதுவுமென அறிந்துக்கொள்ளுதல் வேண்டும். இவர்களுடைய ஆட்சி உச்ச நீசங்களைப் பற்றி நூலாசிரியர்கள் பலரும் பலவேறு அபிப்பிராய முடையவர்களாக இருக்கின்றனர். அஃது வருமாறு: கோபால ரத்னாகரம் என்ற சோதிட நூலில் "உச்சந்து யுக்மம் ஹரிபம் த்ரிகோணம் கன்யாக்ருஹம்" என்ற சுலோக வசனமானது இராகுவுக்கு மிதுனம் உச்சமெனவும், கும்பம் மூலத்திரிகோணம் எனவும், கன்னி ஆட்சிவீடெனவும் கூறப்பட்டிருக்கிறது.

மற்றும், ராஹு ஸ்வரூபம் சநிவந் நிஷாதஜாதிர்
புஜங்கோஸதிப நைருதீசஃ
கேதுசிகீதத்வதநேகரூபஃ
ககஸ்வரூபாத் பலமூஹ்யமித்தம். (நீலகண்டர்)

எனவரும் சுலோகவசனம் இராகுவின் வடிவம் செய்கை முதலியன சனியைப்போல வாகுமென்று கூறப்பட்டிருப்பதனால், கேதுவின் வடிவம் செய்கை முதலிய செவ்வாயைப்போல ஆகுமென்பது போதரும். ஆனால் இச்சுலோக வசனத்தில் அங்ஙனம் கூறப்படவில்லையே எனின்? கூறுவாம். "யாத்ருக்பலம் சௌனப்ரோக்தம் ராஹோஹ தாத்ருக்பலம் பவேத்" எனவரும் ஜாதகசங்கிரக சுலோகவசனம் சனியைப்போல இராகுபலம் என்பது அறிக.

உலூக ஸம்ஸ்தஃ கர்த்தவ்ய கேதுர் மூர்த்தா விவர்ஜிதஃ
த்விபுஜோ தக்ஷிணஃ சூக்யஃ கரோவாமஃ ஸபுஸ்தகஃ
அஷ்டாச்வோவா ரதேதிவ்யே ஸம்ஸ்திதே பௌமவத்ததா
(24-ம் அத்தியாயம் விருத்தகர்மவியாகம்)

எனவரும் சுலோகவசனத்தினால் 'பௌமவத்தா' எனக் கூறப்பட்டிருத்தலினால் கேதுவினுடைய குணத்தன்மை செவ்வாயைப்போன்றது என அறியக்கிடக்கின்றதுணர்க. இந்நியதியின்படி சனியின் வீடு இரண்டினுள் இராகுவுக்குக் கும்பமும், செவ்வாயின் வீடு இரண்டினுள் கேதுவுக்கு விருச்சிகமும் ஆட்சிவீடுகளாகுமென ஊகிக்கப்படுகின்றது.

கும்பஸ் த்ரிகோணம் பணிநாயகஸ்ய
துங்கம் ம்ருயுக்மம் ரமணீக்ருஹம் ஸ்யாத்

எனவரும் ஜாதக பாரிஜாத வசனமானது இராகுவுக்குக் கும்பம் மூலத்திரிகோணவீடும், மிதுனம் உச்சவீடும், கன்னி ஆட்சிவீடுமாமென்பது பெறப்படும். மற்றும், 'குஜ ஸௌரீ கேது ராஹ்வோர் அஜாநாம் அலி கும்பயோஃ" என்ற விருத்தசம்மிதையின்படி குஜன்வீடுகளில் விருச்சிகம் கேதுவுக்கும், சனிவீடுகளில் கும்பம் இராகுவுக்கும் ஆட்சிவீடுகளாமென நன்கு அறியப்படுகின்றது.

*ராஹோர் வ்ருஷச்ச கேதோஸ்து வ்ருச்சிகம் துங்கஸம்க்ஞிகம்*
*மூலத்ரிகோணம் கர்க்கீச க்ரியாமித்ரபம் உச்யதே*
*தத்ஸப்தமராசிஸ்து கேதோர் மூலத்ரிகோணபம்*

என்ற சர்வார்த்த சிந்தாமணி சுலோக வசனமானது இராகுவுக்கு இடப ராசியும், கேதுவுக்கு விர்ச்சிகராசியும் உச்சராசிகளாகும் என்றும், ராகுவுக்குக் கர்க்கடகவிராசி மூலத்திரிகோணமும் மேடவிராசி நட்புமாகும் என்றும், கேதுவுக்கு கர்க்கடகத்திற்கு 7-ஆமிடமான மகரவிராசி மூலத்திரிகோணவிராசியென்றும் கூறுகிற்கும்.

இந்நூலாசிரியர் காரககிரகபடலத்தில்,

*செய்சனி புதன்பொன் நட்புச் சீரிய புகரோன் ஆட்சி*
*தாய்மதி யுச்ச மாகும் துயர்தரும் பாம்பு நீசம்*
*காய்கதிர் பகையா மென்று கணிதநூற் புலவர் தானே*
*வேய்ங்கர் தோள ணங்கே விளம்பினர் இடபத் தோர்க்கே.*

*பனிமகன் அங்கன் நட்பு பார்மகன் ஆட்சி பாம்பு*
*முனிவிலா வுச்ச மாகும் முழுமதி நீசம் ஆகும்*
*இனியநல் லரசன் நீலன் எழுபரி பகைய தென்று*
*முனிவுறுந் தேளி னோர்க்கே முறைமையாய் மொழிவர் மாதே.*

எனவரும் இச்செய்யுட்களில் இராகுகேதுக்களுக்கு இடபம் உச்சமெனவும் விர்ச்சிகம் நீசமெனவும் கூறியிருக்கின்றார். சர்வார்த்தசிந்தாமணி வசனத்திற்கு இது மாறாகக் காணப்படுகின்றது.

*வாடும் வீமேசு ரர்பணி பட்புவில்*
*மகரம் யாழ்கோல் மகண்மீனம் ஆச்சிசால்*
*நீடுங் தேளுச்சம் சேநீச்சம் ஆடுஅளி*
*நெடிய கால்மாப் பகையினில் மன்னுமே.*

(வீமேசுர உள்ளமுடையான்)

(இ-ள்) இராகு கேதுக்களுக்கு தனுசு மகரம் மிதுனம் துலாம் கன்னி நட்புவீடுகள், கும்பம் ஆட்சிவீடு, விர்ச்சிகம் உச்சவீடு, இடபம் நீசவீடு, மற்றுள்ள வீடுகள் பகையாகும் எ-று.

இந்த செய்யுள் வசனம் ஜாதகாலங்காரம், சர்வார்த்த சிந்தாமணிக்கு மாறாக கூறுகின்றதை விவேகிகள் ஆழ்ந்தறிதல்வேண்டும். மற்றும் ஜாதக சிந்தாமணி நூலுடையார் பின்வருமாறு கூறியிருக்கின்றார்.

அஃது வருமாறு:—

*கரியபாம் புக்குவெள்ளி குருசனிநட் பாகும்*
*கதிரவன்சந் திரன்செவ்வாய் பகைமற்றோர் சமனும்*
*உரியகன்னித் தண்டுசிலை ஆட்சிவீ டாகும்*
*உயர்மீனங் கோல்மகரம் அதிநட்பு வீடாம்*
*விரிவிணைய கும்பமே மூலத்திரி கோணம்*
*விருச்சிகந்தா னுச்சமாம் விடைநீச மாகும்*
*மரியசிங்கங் கர்க்கடகம் மேடமொன்னார் வீடாம்*
*மையரிக்கண் களபமுலை அழகின்இள மயிலே.*

*செய்யகே துவுக்குஉறவு சனிசெவ்வாய் வெள்ளி*
*தீயபகை இரவிமதி என்பர்மற்றோர் சமனும்*

துய்யதொரு மீன் ஆட்சி குடம்மகரம் இடபம்
துலையென்பர் மிதுனமுச்சம் தனுநீசம் ஆகும்
வெய்யவிருச் சிகம்மூலத் திரிகோணம் ஆகும்
வீறுசிங்கம் கர்க்கடகம் பகைமேடம் சமனும்
பையரவின் மணிமுடியை அரசிலையைத் தேரைப்
பழித்துஇளைஞர் ஆசையைப்போல் பாந்தஅல்குல் திருவே.

எனவரும் இந்தச் செய்யுட்களில் தில்லைநாயகனுரைவர்கள் இராகுவுக்குக் கன்னி மிதுனம் தனுசு ஆட்சிவீடுகள் என்றும், கும்பம் மூலத்திரிகோண வீடு என்றும், விருச்சிகம் உச்சவீடு என்றும், கேதுவுக்கு மீனம் ஆட்சிவீடு என்றும், மிதுனம் உச்சம் தனுசுவீடு என்றும், விர்ச்சிகம் மூலத்திரிகோண வீடு என்றும் கூறியிருக்கின்றார். இவ்விதம் எடுத்துக்காட்டிய சாதகசிந்தாமணி இரண்டாம் செய்யுளின் 3-4-வது அடிகளைப் பின்வருமாறு திருத்துதல்வேண்டும்.

"துய்யதொரு மீன்ஆட்சி குடம் மகரம் இடபம்
துலைநட்பு மிதுனம் உச்சம் தனுநீசம் என்பர்."

மற்றும் பாவார்த்த ரத்னுகரம் என்ற சோதிடநூலில் இது விஷயமாய் கூறியிருப்பது வருமாறு:—

வ்ருஷவிம்ஹௌ அச்சராசி ராஹோஃ ப்ரோக்தேது சூரிபிஃ
மிதுனங்சர்க்கடகஞ்சைவ மூலத்ரிகோண மிதிஸ்ம்ருதம்
மேஷயம் மித்ரபவாம் கந்யாஸ்வபவநம் பவேத்
கேதோஸ்வபவநம்மீநம் துலாம்மித்ராஸ்யமந்திரம்
கும்பகீடௌ துங்கராசி மூலகோணே தநுர்ம்ருகௌ.

என்னும் இசுலோகவசனம் இராகுவுக்கு இடபம் சிங்கம் உச்சராசி எனவும், மிதுனம் கர்க்கடகம் மூலத்திரிகோணராசி எனவும், மேஷம்நட்புராசி எனவும், கன்னி ஆட்சிவீடெனவும், கேதுவுக்கு மீனம் ஆட்சிவீடெனவும், துலாம் நட்புவீடெனவும், கும்பம் விர்ச்சிகம் உச்சவீடெனவும் மிதுனம்கர்க்கடகம் உச்சவீடெனவும், தனுசு மூலத்திரிகோணராசி என்றுகூறுகிற்கும். மற்றும், "காமோச்சஃ காமிநீசஃ ப்ரணதசாரதாஃ விம்ஹிகா கர்ப்பபூதோ" எனவும், "சாபோச்சஃ காமநீசோ தாரஸசரபஃ..............காரகேகேது" எனவும், வரும் ஜோதிஷ சியாமசங்கிரகம் எனது இராகுவுக்கு மிதுனம் உச்சம், கன்னி ஆட்சி, தனுசு நீசமென்றும், கேதுவுக்கு தனுசு நீசம் மிதுனம் நீசம் மீனம் ஆட்சியென்றும் கூறுகிற்கும்.

இந்த சியாமசங்கிரகத்தில்:—

சூந்யேஷூபூய உச்சம்ஸ்யாத் கோணக்ஷேத்ரம் தமஃசிகி
யுக்மம்குலீரகந்யாச்வ விம்ஹமீநாஃ ஸ்ம்ருதாபுதைஃ

எனவரும் இச்சுலோகவசனம் மிதுனராசியில் (0) அம்சத்தில் இராகுவுக்கு பரமோச்சம் எனவும், கடகராசியில் 5-வது அம்சத்தில் பரமோச்சம் எனவும் கன்னியாராசியில் 24-வது அம்சத்தில் சுவக்ஷேத்திரம்எனவும்,கேதுவுக்கு தனுவில் (0) பாகையில் (அம்சத்தில்) பரமோச்சம் எனவும், சிங்காராசியில் 5-வது பாகையில் மூலத்திரிகோணம் எனவும், மீனராசியில் 24-வது பாகையில் சுவக்ஷேத்ரமெனவும் கூறுகிற்கும்,

## சாயாகிரகங்களின் ஆட்சி உச்ச சக்கரம்

| நூற்களின் பெயர் | இராகு | | | கேது | | |
|---|---|---|---|---|---|---|
| | ஆட்சி | உச்சம் | நீசம் | ஆட்சி | உச்சம் | நீசம் |
| ஜோதிஷாமிர்தம் | கும்பம் | — | — | விர்ச்சிக | — | — |
| விருத்தசம்மிதை | கும்பம் | — | — | விர்ச்சிக | — | — |
| ஜாதகாலங்காரம் | — | விர்ச்சிக | இடபம் | — | விர்ச்சிக | இடபம் |
| வீமேசுரம் | கும்பம் | விர்ச்சிக | இடபம் | — | விர்ச்சிக | இடபம் |
| சாதகசிந்தாமணி | கும்பம் | விர்ச்சிக | இடபம் | மீனம் | மிதுன | தனுசு |
| ஜாதகபாரிஜாதம் | மூலகே கும்பம் | மிதுன | தனுசு | — | — | — |
| சர்வார்த்தசிந்தாமணி | மூலகே கடகம் | இடபம் | விர்சிகம் | மகரம் | விர்ச்சிக | இடபம் |
| சியாமசங்கிரகம் | மூலகே கன்னி | மிதுன | தனுசு | மூலகே மீனம் | தனுசு | மிதுன |

இங்ஙனம் இராகு கேதுக்களின் ஆட்சி உச்சம் மூலத்திரிகோணம் நீசம் இவைகளைப்பற்றி ஆசிரியர்கள் பல வேறு கொள்கையுடையவர்களாய் இருத்தலின் இவற்றுள் எதுதான் சரியென்னும் உண்மையை உள்ளவாறு விளக்கிக் காட்டுதற்கு ஏற்ற போதிய பிரபல ஆதாரங்கள் யாண்டும் கிடைத்தில. இதுமட்டுமன்று; ஏனை எழுகிரகங்களுடைய உச்சம் ஏற்பட்ட காரணமும் இன்னதென்று உண்மை யுணர்ந்துய்ய ஆதாரங்களும் கிடைக்கப்பட்டில. ஆனல் எமதுசிற்றறிவுக்குப் புலனுகியவரையில் கிரகோத்துங்க தத்துவார்த்தம் என்ற வியாசம் ஒன்றை இங்கு எழுதப்படுகின்றதை விவேகிகள் ஆழ்ந்து ஆராய்தல் வேண்டும்.

இராகு கேதுக்களுக்கு ஒரேராசியில் உச்சமும், அதற்கு ஏழாமிடத்தில் ஒரேராசியில் நீசமும் உண்டாமென்று இந்நூலாசிரியரும் உள்ளமுடையான் நூலாசிரியரும் கூறியது அத்துணை சிறப்பன்று. இராகு கேதுக்கள் எழுக்கு ஏழாமிராசியில் சஞ்சரிக்கும் சுபாவமுடையவர்களாதலின் ஒருவர் உச்சஸ்தானத்திலிருப்பின் மற்றொருவர் நீசஸ்தானத்தி லிருப்பதுதான் பொருத்தமுடையதாகும். ஆகவே இராகுவுக்கு விர்ச்சிகம் உச்சம், இடபம் நீசமும், கேதுவுக்கு இடபம் உச்சம், விர்ச்சிகம் நீசமுமாமென நிச்சயிக்கப் பட்டதுணர்க.

## கிரகோத்துங்க தத்துவார்த்தம்

"கிரகோத்துங்கம்" என்று வழங்கப்படும் இத்தொடர்மொழிக்குக் கிரகங்களினுடைய உச்சத்தைப்பற்றிய உண்மைக்கருத்து என்பதுபொருள். உச்சத்தின் எதிர்மொழி நீசம் எனப்படும். உச்சமென்பது-மேல்நிலை; நீசமென்பது-கீழ்நிலை. ஆகவே உச்சஸ்தானத்துக்கு நேர் கீழேயுள்ள இடம் நீசஸ்தானம் என்னப்படும். அதாவது ஒருகிரகம் உச்சம்பெற்ற இராசிக்கு நேர்கீழாகவுள்ள ஏழாம் இராசியே நீசராசியாகுமென்பதாம். "ப்ரகாசகௌ சிதகர ப்ரபாகரௌ" எனவரும் ஜாதக பாரிஜாத வசனத்தினால் சூரிய சந்திரர்களே கிரகநாயகர் அல்லது இராஜ கிரகங்களெனக் கூறுவது சோதிடவிற்பன்னர்களின் கொள்கை. இவ்விரு கிரகங்களாலேயே பஞ்ச அங்கமும் கணிக்கப்படுகின்றதுணர்க. இந்தச் சூரியசந்திரர்கள் முறையே சிவம் சத்திகளின் அமிசமானவர்கள் எனச் சோதிடத்திலும், சுருதி புராணங்களும் கூறுகிற்றலின் சிவம் சத்தியையும், சத்திசிவத்தையும் பிரிவின்றி இணைத்து இருத்தலை அவ்வுண்மைச் சுருதிகளே நன்கு விளங்கும். இவ்வுண்மைப் பற்றியே இராசிமண்டலத்தில் முதலாயுள்ள மேஷராசியில் கிரகவரிசையில் முதலாயுள்ள சூரியபகவானுக்கும், இரண்டாவது ராசியாகவுள்ள இடபராசியில் இரண்டாவது கிரகமாயுள்ள சந்திரபகவானுக்கும் உச்சமென்று சோதிட சாஸ்திரத்தில் மகரிஷிகள் வகுத்து உரைத்திருக்கின்றனர்.

இராசிமண்டலத்தில் (வடக்குத் தெற்கு) மத்தியரேகை மேஷ துலா ஆரம்பத்திலிருக்கின்றது. இந்தரேகையின் ஆரம்பஸ்தானம்உச்சமென்றும் அந்தியஸ்தானம் நீசமென்றும் சொல்லப்படும். ஆகவே இராசிமண்டலத்தின் உச்சரேகையின் ஆரம்பம் மேஷத்திலும், முடிவு துலாத்திலும் இருக்கின்றது என நன்கு விளங்கும். இந்நியதியினாலேயே பஞ்சாங்ககணிதத்தில் ரேவதி சம்பந்தம் ரைவதபக்ஷம் எனவும், சித்திரை சம்பந்தம் சைத்ரபக்ஷம் எனவும் இருவகை பக்ஷங்கள் உபயோகத்திலிருந்து வருகின்றது.

சிருஷ்டி ஆரம்பகாலத்தில் பூமத்திய வடக்குத் தெற்கு ரேகை மேஷ துலாத்திற்கும், கிழக்கு மேற்குரேகை கடகமகரத்திற்கும் நேரேஇருந்தது. வானமத்திய ரேகையாகிய இராசி மண்டலத்தின் வடக்குத் தெற்கு ரேகையும், கிழக்கு மேற்கு ரேகையும் முன் கூறியபடி முறையே மேஷ துலாம், கடக மகரங்களில் இருந்தது. உச்சரேகைக்கு அடுத்தரேகைகளோ எனின் முறையே இடப மீனா, கன்னி விர்ச்சிகங்களின் ஆரம்பத்தில் இருந்தது. ஆகவே சூரியாதி எட்டு கிரகங்கட்கும் மேற்கூறிய எட்டுராசிக்ளில் ஒவ்வொன்று உச்சராசிகளாக வகுத்திருக்கின்றனர் மகரிஷிகள் என்று நன்கு அறியப்படுகின்றது. முதற்கிரகம் சூரியன் ஆதலின் முதல் இராசி மேஷம் அவனுக்குச்சமென்றும், இரண்டாவது கிரகம் சந்திரன் ஆதலின் இரண்டாவதுராசி அவனுக்குச்சமென்றும், ஏழாவதுகிரகம் சனியும், எட்டாவது கிரகம் இராகுவுமாதலினால் இவர்கட்கு முறையே ஏழு எட்டாவது இராசிகளாகிய துலா விர்ச்சிகங்கள் உச்சமென்றும் நன்கு பெறப்பட்டது.

சூரியன் சந்திரன் சனி இராகுக்களின் உச்சராசியின் தத்துவார்த்தம் இம்முறையாக வகுக்கப்பெற்றிருக்கின்றது. ஆனால் ஏனைய குஜன் புதன் குரு சுக்கிரர்களின் உச்சராசியின் தத்துவார்த்தம் இங்ஙனம் வகுக்கப்படவில்லை. மற்றும் எங்ஙனமெனின்? கூறுதும்,

சூரியனது மத்தியஸ்புடமே செவ்வாய் குரு சனி இவர்களின் சீக்கிர கேந்திரஸ்புடங்களாமென்பது சூரிய சித்தாந்த முதலிய கணித நூற்களின் கொள்கை. ஆகவே இவர்களின் உச்சம் ஒன்றுக்கொன்று சமரேகையில் சம்பந்தப்பட்ட இராசிகளில் இருக்கவேண்டும் என்று அறியப்படுகின்றது. இங்ஙனமே சூரியனது மத்தியஸ்புடமே புத சுக்கிரர்களின் மத்தியஸ்புடமா மென்பது ஷை கணித நூற்களின்கொள்கை. ஆதலின் அவர்களதுஉச்சமும் ஒன்றுக்கொன்று சமரேகையில் சம்பந்தப்பட்ட இராசிகளில் இருக்கவேண் டும் என்று அறியப்படுகின்றது. இங்கு ஒன்றற்கொன்று சமரேகையில் சம்பந்தப்பட்ட இராசிகள் என்று கூறியது எந்தெந்த ராசிகள் எனின்? கூறுதும். பூமியின் தக்ஷிணமேருவிலிருந்து உத்தரமேருவரைக்கும் நேரே இழுக்கப்பட்ட ரேகையே பூமத்திய அதியுச்ச ரேகையாகும். பூமத்திய நிரட்சஸ்தலத்தில் கிழக்கு மேற்காக நேரே இழுக்கப்பட்ட ரேகையே அக்ஷ ரேகை எனப்படும் சிருஷ்டி ஆரம்பகாலத்தில் வான மத்திய அதியுச்ச ரேகையும் அக்ஷரேகையும், இந்தப் பூமத்திய அதியுச்சரேகையும் நிரட்ச ரேகையும் ஒன்றற்கொன்று சரியாய் நேராக இருந்தன. இந்த ரேகைகளில் இருந்த இராசிகள் மேட துலாம், கடக மகரங்களாம். இவற்றுள் வான பூமத்திய தீர்க்க ரேகைகள் ஒன்றாய் சம்பந்தப்பட்டதுபோல் சிருஷ்டி காலத்தில் காணப்பட்ட இடம் மேட துலாம் என்று முன்னரே கூறப்பட் டிருத்தலின் அந்த ரேகைக்கு உபய பாரிசங்களிலுமுள்ள இடப விர்ச்சிகம் கன்னி மீனங்கள் ஆகிய எட்டுராசிகளும் ஒன்றற்கொன்று சமரேகையிற் சம்பந்தப்பட்ட இராசிகள் என்று அறிதல்வேண்டும். பூமியிலாவது வானத் திலாவது இப்படி ரேகைகளின் கோடுகள் இழுக்கப்பட்டிருக்கவில்லை. வானசோதிகளின் போக்கு வரவைக் கணக்கிட்டறியும்பொருட்டு கணித விற்பன்னர்களால் இந்த ரேகைகள் இருப்பதாக கற்பித்து கணித சௌகரி யத்தை நாடி இவைகளை அருட்செய்திருக்கின்றனர் பெரியாரென்ப.

சூரியனுடைய மத்தியஸ்புடமே புத சுக்கிரர்களுக்குரிய மத்தியஸ்புட மும், செவ்வாய் குரு சனிகளுக்குரிய சீக்கிர கேந்திரஸ்புடமுமாமென்பது கணித நூற் றுணிபென முன்னரே கூறியிருக்கின்றோம். ஆகவே புத சுக்கி ரர்களின் சீக்கிர கேந்திரஸ்புடத்தில் அவர்களின் மத்திய கிரகமான சூரிய மத்தியஸ்புடத்தைக் கழிக்கவருவது அவர்களது பிரதம சீக்கிர கேந்திர ஸ்புடம் எனப்படும். செவ்வாய் குரு சனி ஆகிய இவர்களுக்குரிய சீக்கி ரோச்சம் சூரிய மத்தியஸ்புடம் ஆதலால் சூரிய மத்தியஸ்புடத்தில் முறையே செவ்வாய் குரு சனி இவர்களின் மத்தியஸ்புடத்தைக் கழிக்கப் படுவது இவர்களது பிரதம சீக்கிர கேந்திரம் எனப்படும்.

பூமத்திய சித்தாந்தப்படி நோக்குங்கால் புத சுக்கிரர்களின் மண்டலங் களில் சூரியனுக்கு அடுத்தபடியுள்ளது சுக்கிரமண்டலமும், அதற்கடுத்தபடி யுள்ளது புதமண்டலமுமாகும். இதுபற்றியே இவ்விருவர்களுக்கும் சூரிய மத்தியஸ்புடஞ் சொந்தமானது. இருவர்களுக்கும் மத்தியஸ்புடங்கள் ஒரே விதமாக இருப்பதை ஊன்றி நோக்குங்கால் இருவரது உச்சமும் ஓர் நேர் இரேகையில் சம்பந்தமாக இருத்தல்வேண்டு மென்பது பெறப்பட்டது. பூசூரிய மத்திய ரேகைகள் மேஷாரம்பத்தில் ஒன்றாக சந்தித்து இருக்கும் போது அதற்கடுத்துள்ள ரேகை மீனாரம்பத்தில் இருந்து கன்னியாரம்பம் வரை செல்லுகின்றது. ஆகவே பூமத்திய சித்தாந்தப்படி சூரியமண்டலத்

துக்கு 2-வது படியிலுள்ள சுக்கிரனுக்குரிய உச்சராசி மீனமும், அதற்கு ஏழாவது ராசி சுக்கிரமண்டலத்துக்கு அடுத்தபடியிலுள்ள புதனுக்கு உச்ச விராசிகள் ஆயிற்றென்பதாம்.

செவ்வாய் குரு சனி இவர்களின் மண்டலங்கள் பூமத்தியம் அல்லது சூரிய மத்தியப்படிநோக்குங்கால் முறையே ஒன்றற்கொன்று மேற்படிகளில் அடுத்தடுத்துக் காணப்படும். இவற்றுள் சனிக்குரிய உச்சராசியின் தத்துவார்த்தத்தைமட்டும் ஆராய்ந்து அறிதல்வேண்டும். ஆகவே மீதமுள்ள செவ்வாய்க்குங் குருவுக்குஞ் சூரிய மத்தியஸ்புடமே சீக்கிரோச்சஸ்புடமாதலின் இவ்விருவர்களின் உச்சமும் ஓர் நேர்ரேகையில் இருத்தல்வேண்டும் என்பது பெறப்பட்டது. சூரிய மத்திமத்தில் செவ்வாய் குரு இவர்களின் மத்திமத்தைக் கழிக்கவருவது இவர்களின் பிரதம சீக்கிர கேந்திரமென்று முன்னரே கூறியிருத்தலின் இதிலுள்ள கேந்திரசப்தம் 1-4-7-10-ஐக்குறித்தலின் இவர்களது உச்சம் சூரியனுக்குக் கேந்திரராசிகளில் ஓர் நேர்ரேகையில் இருத்தல்வேண்டுமென்பது பெறப்பட்டது. இந்தக் கேந்திரங்களில் 7-ஆமிடம் சனிக்கு உச்சமென்று முன்பு கூறியிருத்தலின் நன்குவிளங்கும். இம்முறையானும் அது பொருத்தமாகக் காணப்படுகின்றது.

1-வது கேந்திரத்தில் சூரியன் இருப்பது 4-10 ஆகிய இரண்டு கேந்திரமாகும். இவற்றுள் சூரியனுக்கு அடுத்தபடி வலப்புறம் இடப்புறங்களில் காணப்படும் கேந்திரஸ்தானங்கள் மகரம் கர்க்கடகம் இவற்றுள் வலப்புறத்துள்ள மகரம் செவ்வாய்க்கும், இடப்புறத்துள்ள கர்க்கடகம் குருவுக்கும் உச்சராசிகளாகும் என்று அறிதல்வேண்டும். இங்கு எடுத்துக்காட்டிய உண்மைகளினால் சூரியாதி கிரகங்களுக்கு முறையே மேடம் இடபம் மகரம் கன்னி கடகம் மீனம் துலாம் விர்ச்சிகங்கள் உச்சராசியென்பதன் உண்மை நன்கு விளக்கும். இராகுவின் உச்சத்தைப்பற்றி சோதிடநூலாசிரியர்கள் ஒருவர்க்கொருவர் மதபேதப்படுகின்றனர். ஜாதகாலங்காரம், வீமேசுவரம், ஜாதகசிந்தாமணி ஆகிய இத்தமிழ்ச் சோதிடநூற்களில் இராகுவுக்குவிர்ச்சிகம் உச்சராசி என்று கூறப்பட்டிருக்கிறது. ஜாதகபாரிஜாதம், சர்வார்த்த சிந்தாமணி ஆகிய இவ்விரு வடமொழிநூற்களில் முறையே இராகுவுக்கு மிதுனம் இடபம் உச்சராசிகளாமென்று கூறப்பட்டிருக்கின்றது. இப்படி இருவேறு பிரிவாயுள்ளவைகளில் முதற்கண் தமிழ்ச் சோதிடநூற்களில் கூறியிருப்பதுவே யுக்திக்குப் பொருத்தமாகவிருத்தலின் அதுவேஉண்மையென்று உணர்தல்வேண்டும். கிரகோத்துங்க ராசிகளின் சத்துவார்த்தம் இதுவாம். ஆனால் அவ்விராசிகளில் இன்னின்ன பாகைகளில்தான் பரமோச்சமென்று வகுத்துரைத்திருப்பதின் தத்துவார்த்தம் யாது எனின்? அதனை மற்றொரு சமயங்களில் கூறப்படுமென்க. இதுபோது விரிவஞ்சி ஈண்டு கூறப்படவில்லை. கிரகோத்துங்கத்தின் தத்துவார்த்தத்தைச் சிலர் வேறுவகையாகவுங்கூறுவர். இத்தியாதி நியாயங்களினால் கிரகங்களுடைய உச்சராசி நியதி ஒருவாறு நன்கு விளங்காநிற்கும். (248)

இனி ஆசிரியர் கிரகோச்சபலன்களைப்பற்றிக் கூறியிருப்பதற்கு மேற்கோள் வருமாறு:-

வழுத்தியசெங் கதிருச்சம் பெறவுதித்தோன் றனும்
மன்னவனும் பிரதாப சாலிமகா பலவான்

பழித்திடுபுன் னோயில்லான் தனதான்ய முள்ளான்
பலவிதவா கனன்உடலில் பழுதுஒன்று மில்லான்
செழித்திடுசந் திரனுச்சஞ் சகலசனப் பிரியன்
செல்வகுணம் புத்திநவ தானியமுஞ் சேரும்
விழித்துமயல் அளித்துமனம் உருக்கும்மட மாதே
வெகுபேரைப் புணர்கின்ற மிகுபோகி யாவன்.

(இ-ள்) *கண்ணைக்காட்டி, காம இச்சையைப் பெருக்கி, ஆண்மக்களின் உள்ளத்தை இளகச்செய்யும் தன்மையை யுடைய மடம் பொருந்திய பெண்ணே! சூரியன் உச்சமாய் இருக்கப்பிறந்தவன் இராஜனும், மகிமை யுடையவனும், அதிக பலமுள்ளவனும், துன்பமாகிய நோயில்லாதவனும், பொன்னும் தானியங்களுமுடையவனும், பலவகைப்பட்ட வாகனங்களையுடை யவனும், சரீரததில் யாதொரு பழுதுகள் இல்லாதவனுமாவான். சந்திரன் உச்சமாய் இருக்கப் பிறந்தவன் எல்லா சனங்களிடத்திலும் அன்புடையவ னும், ஐஸ்வரியம் நற்குணம் சிறந்த புத்திசாதுரியமுடையவனும், ஒன்பது வகைப்பட்ட தானியங்களை யுடையவனும், அநேகம் பெண்களைப் புணரு கின்ற அதிக போகவன்மை யுடையவனும் ஆவான் எ-று.*

(வி-ரை) *அத்யுக்ரம் அதித்ரவ்யம் மஹாந்தமபி பாஸ்கரஸ்வ துங்கஸ்தః*
*ம்ருஷ்டாசநாம்பராட்யம் ஸுபூஷணம் சீதகுః குருதே.*

(சாராவளி)

(இ-ள்) *சூரியன் உச்சமாயிருந்தால் அதி உக்கிர சுபாவம். அதிக திரவிய முதலியன வுண்டாம். சந்திரன் உச்சமாயிருந்தால் இஷ்டான்ன போஜனம், நூதன வஸ்திராபரண முதலியன வுண்டாம்.* (249)

ஆகுஞ்செவ் வாயுச்சங் கீர்த்திபிறர்க் கினியான்
அவனிதனில் நெடுங்காலம் ஆயுளுடை யவனும்
வாகுடையன் பித்தன்பிதிர்த் திரவியங்க ளுள்ளான்
மருவுமிகு புத்திமான் மன்னவனு யிருப்பன்
மோகமுறும் புதனுச்சஞ் சகலகலை வல்லன்
முறைமையுறு சங்கீதப் பிரியன்வெகு குணவான்
சேகரமாம் புத்திமான் கணிதவகை தெரிவோன்
திண்புவிக்கோ ரரசனா ருண்டிருக்குஞ் சீமான்.

(இ-ள்) *செவ்வாய் உச்சனாகி இருப்பானாகில் பிரபலமும், அன்னியர் களுக்குப் பிரியமானவனும், இப்பூமியின்கண் நெடுங்காலம் ஆயுள்படைத்து வாழ்பவனும் ஆவான். மேலும் கீர்த்திவாய்ந்தவனும், பித்ததேகமுள்ளவ னும், தன் பிதா சம்பாதித்துவைத்த தனங்களை யுடையவனும், யாவரும் பார்த்து சந்தோஷமடையத்தக்க புத்திவானும், இராஜரீகம் செய்பவனும், லீலாவிநோதனும், சிருஷ்டி திதி சங்காரமாகிய முத்தொழிலை யுடைய மகாவிஷ்ணுவென்று சொல்லும் புதபகவான் உச்சனாய் இருப்பானாகில் எல்லா சாஸ்திரங்களையும் ஆராய்ந்தறிபவனும், இனிமையும் சுர சாகித்தியங் களும் சங்கீதமுதலியவைகளைப்பாட விருப்பமுடையவனும், பூரண உத்தம குணமுடையவனும், தன் அறிவை விருத்திசெய்பவனும், கணிதசாஸ்திர*

மாகிய ஜோதிடம் தெரிந்துகொள்ளுபவனும், இப்பெருமைதங்கிய பூமியில் புத்திவானும் அரசனுமாய் இருப்பதுடன் நீண்ட செல்வத்துடன் நூறு வயதாய் இருப்பான் எ-று.

(வி-ரை) மேற்கூறியதை ஒவ்வொரு பாவமாய் ஆராய்ந்து சொல்ல வேண்டும். எப்படியெனில்: ஜெனனராசியிலேயே குரு உச்சனாக இருப்பானாகில் லக்கினாதிபதியும் குஜனாகவே இருந்தால் அவன் மிகுந்த சிறப்பும் செல்வமும் வாய்ந்திருப்பதுடன் சகோதர ஒற்றுமையும் உள்ளவனாவான்.

இரண்டில் உச்சனாக இருப்பானாகில் தன் குடும்பத்தில் லக்ஷ்மிவிலாசமும், தன் சுயகிராமத்திலேயே பூரண சுகத்துடனிருப்பான். 3-ல் உச்சனாக இருந்தால் பலபேர் உதவியுள்ளவனும், ஆளடிமையுள்ளவனும், சகோதரவிருத்தியும், சகோதரரால் நன்மையை அடைபவனும் ஆவான். நாலில் உச்சனாய் இருந்தால் சுகசவுக்கியம் வாய்ந்தவனும், மாதுருசுகமும் இவனுக்கேற்படும் யோகத்தை தன் மாதா அனுபவித்து மரிப்பாள். 5-ல் உச்சனாக இருந்தால் புத்திரசந்தோஷமும் நல்லயோகமும், பெண்கள் அதிக விருத்தியும், அம்மான் வகையரா விருத்தியும் உடையவனாவான். 6-ல் உச்சனாக இருந்தால் வியாதியும் கடன் உள்ளவனும், தைரியசாலியும், ஸ்திரீநோய் உடையவனும் ஆவான். 7-ல் உச்சனாக இருந்தால் நீண்ட செல்வத்தையுடைய களத்திரமுடையவனும், தன மாமிவீட்டிலேயே வாழ்பவனும், சயன சுகபோக முள்ளவனும் ஆவான். 8-ல் உச்சனாக இருந்தால் ஆயுள் விருத்தியும், தன்னை எதிர்த்தவர்களைஜெயிக்கும் தயிரியமுள்ளவனுமாவான். 9-ல் உச்சனாக இருந்தால் பிதுர்பாக்கியமுள்ளவனும், பிதாவைப் பிரியாது வாழ்பவனுமாவான். 10-ல் உச்சனாக இருந்தால மேன்மையான தொழில் உள்ளவனும், சேவகாவிருத்திமூலமாய் அநேக பொருள்களை சம்பாதிப்பவனுமாவான். 11-ல உச்சனாக இருந்தால் தன் தொழிலுக்குமிஞ்சிய லாபமும், ஜேஷ்ட சகோதர விருத்தியுள்ளவனும் ஆவான். 12-ல் உச்சனாக இருந்தால் சிலவாளியும், களத்திர சுகவிருத்தி குறைவுள்ளவனும், இவ்வாறு ஒவ்வொரு பாவங்களுக்கும் சுபர் அசுபரறிந்து பலன் கூறுக.

ஏதேனுமொரு லக்கினத்திற்கு புதன் கன்னியாராசியில் உச்சம்பெற்றிருப்பானாகில் புத்திரயோகமென்றும், மனோதயிரியமுடையவனும், ஞான மார்க்கங்களைக்கற்றுத் தெளிபவனும், தன் பந்துக்களிடம்பிரியமானவனும் எக்காரியத்திற்குச் சென்றாலும் ஜெயமும், போகவான், மெதுவான நடையையுடையவனும், மிருதுவான ரோமமுள்ளவனும், சர்வஜன உபகாரியாயும் இருப்பானென சாதகசிந்தாமணியின் 10:2-ஆம் செய்யுளில் கூறியபடியும் ஆராய்ந்து கூறுக. இத்துடன் உச்சக்கிரகங்களின் பலத்தையும் அறிந்துரைத்தல் வேண்டும்.

(250)

**ஆமரச னுச்சத்தில் வெகுசம்பத் துள்ளான்**
**அரசன்மிகு போகவான் அணிகலமு முனனும்**
**காமரச வனிதைவா கனம்வித்தை புதல்வர்**
**கனகமா மருவுமுப காரனு யிருப்பன்**
**பூமலிசுக் கிரனுச்சந் தனம்வித்தை புதல்வர்**
**போகமிக வுளன்காரி யுச்சமதிற் பலவான்**

எம்மாரோக் கியந்தீர்க் காயுணன்மை யுடனே
இரணியங் கிராமஞ்சேனை யிவைகளுள னுமே.

(இ-ள்) குருபகவான் உச்சக்ஷேத்திரம் பெற்றிருப்பானுகில் அதிகசெல்வத்தை யுடையவனும் இராஜரீகம செய்பவனும், போகசுக முள்ளவனும், பொன் பூஷண முதலிய நகைகளை யுடையவனும், காமசுகத்தில் மிஞ்சிய ஸ்திரீகளோடு வாழ்பவனும், பசுவாகனமுடையவனும், வித்தியாப்பியாசம் உள்ளவனும், செல்வாக்குடைய புத்திரர்களும், பிரக்யாதியுடன் உலக உபகாரியாவதுடன் மேன்மை படைத்த அந்தஸ்துடையவனுமாய் இருப்பான். பூவுலகில் சிறப்பு பொருந்திய சுக்கிரன் உச்சனுக இருக்கப் பிறந்தவன் விசேஷ செல்வத்தைப் படைத்தவனும், வித்தியாசாரியும், கல்வியுடைய புத்திரர்களை யுள்ளவனும், ஸ்திரீகள் சுகமுடையவனுமாவான். சனி உச்சனுக விற்கப்பிறந்தவன் திடசாலியும், ஆரோக்கியமுள்ளவனும், தீர்க்க வயதுள்ளவனும், உண்மையுள்ளவனும், அநேக கிராமங்களை யுடையவனும், சேனைசனியங்களை யுடையவனும் ஆவான் எ-று.

(வி-ரை) சனி உச்சனுக இருக்கின் சசயோகம் என்றுங் கூறுவர்.

செய்யுள்

சனியன்கேந் திரமுச்ச மூலத்திரிகோணம்
சாற்றுதயந் தனிலிருக்கச் சசயோகமென்பர்
இனியமன்னவனு மாவன்நல்ல தாமந்திரியாகும்
ஏற்றமலைச் சஞ்சாரம் குரூரபுத்திவஞ்சன்
அனையதே சாதிபதி சேனுதிபதியாம்
அரியதாத் ருத்துவனும் விதரணிகன் ஞானி
வினையுமா துருபக்தி மிகுதேககாந்தி
வேசையர்மோ கன்றால தேகனெனலாமே.

(இ-ள்) கேந்திரத்திலாவது மூலத்திரிகோணத்திலாவது சனிபகவான் உச்சனுகயிருந்தால் துன்பமற்ற அரசனுவான்; அல்லது மந்திரியாகவாவது இருப்பான். மலை வனம் வனாந்தரங்களில் சஞ்சரிக்கப் பிரியனும், கெட்ட குணமும் புத்திசாலியும் சன்யாசியும் தாய்மீது பக்ஷமும் பக்தியு முள்ளவனும், தேககாந்தியுள்ளவனும், தாசிமோகனும், ஸ்தூலசரீரவான் என்றும் சொல்வாயென சாதக சிந்தாமணியில் கூறியபடியும் சனியைப்பற்றிக் கூறுக. (251)

உள்ளதொரு கிரகமுச்ச மேவிற்கிரா மணியாம்
உபயமுச் சம்பெற்றிற் பலவூர்க்கிரா மணியுமாவான்
தெள்ளியதோ ரொருமூன்று கிரகமுச்ச மானுற்
செங்கோன் மன்னவனுகிச் சிறிதவனி புரப்பன்
நள்ளியதோ ரீரண்டு கிரகமுச்ச மானுற்
நவிலொருமண் டலந்தனக்கு நாயகனே யாவன்
புள்ளிசெறி யோரைந்து கிரகமுச்ச மானுல்
பூலோக நாயகனு மெனப்பலன்கள் புகல்வர்.

(இ-ள்) எந்த ராசியிலேனும் ஒரு கிரகம் உச்சம்பெற்றிருந்தால் கிராம அதிகாரியாவான். இரண்டு கிரகம் உச்சம்பெற்றிருக்கப்பெற்ற ஜாதகன் அநேக ஊர்களுக்கு அதிபதியாகவும், தெளிந்தெடுக்கப்பட்ட 3-சுக கிரகங்கள் உச்சனாகி யிருந்தால் செம்மைபொருந்திய நீதிகோல்பிடிக்கும் அரசனாகித் தன்னால் ஓர் சிறிய பட்டணம் உண்டுபண்ணுபவனும், 4-கிரகங்கள் உச்சனாகி யிருந்தால் ஒரு தேசத்திற்கே அதிபதியாயும், வரிசைப்பெற்ற 5-கிரகங்கள் உச்சம்பெற்றிருந்தால் ஜகத்குரு என்றும் சொல்லலாம் எ-று.

5-கிரகங்கள் உச்சனாகில்
பூவுலகுக்கெல்லாம் குரு என்றபடி விபரம்

| | | | |
|---|---|---|---|
| சுக் | சூரி | கேது | |
| | ஜகத்குரு | | சந் குரு |
| | | | |
| | ராகு அங் | சனி | புத |

| | | | |
|---|---|---|---|
| சுக் | ராகு | | |
| | பல ஊர் கிராம அதிபதி | | குரு சுக் |
| சனி | | | சூரி அங் |
| | | கே | புத சந் |

புகல்சனன காலையினிற் சுபக்கிரக மெல்லாம்
பொருந்துநீசஞ் சத்துரு ராசிதனிற் சேர்ந்தே
இகலறநின் றிடுபலன்க ளுரைத்திடவுங் கேளாய்
இருந்ததலந் தனைவிட்டே யேகுவிக்குந் தூரம்
விகலுற்ற நாசமிக வுற்பவிக்கு மென்றே
மெய்யதனிற் குரூரமாம் வியாதிகளுண் டாகும்
அகன்மரண துக்கசோ கங்களிவை செறியும்
அனங்கண்டு சரநடைசொல் லானவிழி யாளே.

(இ-ள்) வில்போன்ற வளைந்தபுருவமும், சேல்கண்டைகளைப்பழிக்கும் கண்களையுடைய பெண்ணே! ஜெனனகாலங்களில் சுபக்கிரகங்களான சந்திரன் புதன் குரு சுக்கிரன் இவர்கள் நீசவீடுகளிலும், தன் சத்துருகோட்களுடனும் சத்துருவீட்டிலும் இருப்பாரேயாமாகில் அவர்களுடைய பலனை கேட்பாயாக. தன் சுயக்ஷேத்திரத்தை தவிட்டு அன்னியவிடங்களுக்கும் தூரதேசங்களுக்கும் போகும்படிச்செய்யும் விகல்பமாகிய கொடிய நாசபலனைச் செய்யும் சரீரத்தில் கொடிய நோய்களை யுண்டாக்கும் துர்மரணங்களும் சோகங்களும் கொடுக்கும் என்று கிரகசுபாசுபமறிந்தும் கூறுவாயாக எ-று.

(வி-ரை) செய்யுள்

வாழுகின்ற குடும்பாதி ஈராரெட்டில்
வந்தநின்றால் அவன்மனை பாழாகு மப்பா
சூழுகின்ற வீடுமுதல் பலித்தி டாது
சத்துருகட்டாய் இருந்தாலும் சுட்டு வேகும்.

என்ற வாக்கியப்படி, குடும்பாதிபதி 6-8-12 இவ்விடங்களிலிருந்தால் அவன் பிறந்த மனை பாழாய்போகுமென்றும், அக்குடும்பம் விருத்தியாகாதென்றும் சுற்றுக்கட்டுடைய பெரிய கட்டடமாயினும் தீப்பற்றி வேகும் என்றுரைத்திருக்கிறபடியால் முன்சொல்லிய செய்யுளின்படி நீசம் பகையாயினும் ஒவ்வொரு பாவமும் ஆராய்ந்து அவர்களுக்கு பலனைச் சொல்லுவாயாக. (253)

ஆரேனு மூவருச்ச மாகிலமைத் தோணி
அனுகுமர சன்கூட மூவருச்ச மாயின்
வாரேறு முலைமடவாய் மந்திரியு மாவன்
மற்றுமொரு மூவர்நீ சத்தான மருவில்
பாரேறுந் தனிலொருவர்க் கேயடிமை யாவன்
பகர்மூவ ரத்தமனம் பாலனுயிர்க் கரிட்டம்
சீரான சசிக்கிருபால் பாவர்கடாம் வந்து
சேரிற்கத் திரியோகஞ் சேயுடனே மரிக்கும்.

(இ-ள்) எந்த கிரகமாகயிருந்தாலும் 3-கிரகங்கள் உச்சனாக ஜெனிக்கில் ஓடம் தோணி தெப்பம் இவைகளை யடைவான்; அரசாக்ஷி புரிபவனாகவும் இருப்பான். மற்றும் 3-கோட்கள் உச்சம்பெறின் அமைச்சனாகி வாழ்வான். 3-கிரகங்கள் நீசம்பெறின் பூமியின்கணுள்ள ஓர் மேதாவிக்கு அடிமையாக இருப்பான். ஜெனனகாலங்களில் 3-கிரகங்கள் அஸ்தமன மடைந்திருந்தால் அந்த ஜாதகனுக்குச் சில கெண்டாதி தோஷங்களுண்டு. சிறப்புபெற்ற சந்திரனுக்கு இருபக்கங்களில் தீயகோட்கள் இருக்கப் பிறந்தவன் கத்திரி யோகமென்றும், அந்த ஜாதகனனவன் உடனே இறந்து போவானென்றும் கிரியைப்போன்ற ஸ்தனபாரங்களை யுடையவளே! இவ்வாறறிந்து பலன் சொல்வாயாக எ-று.

(வி-ரை) ஜெனனலக்கினத்தில் சுபக்கிரகங்கள் நின்று குருவுடன் தீய கிரகங்களும், சுக்கிரன் ராகுவும் இலக்கினாதிபதி சனிக்கு 7-ம் ராசி பெறினும், சந்திரன் அஸ்தமயமடைந்து மேலெழுதியபடி இருந்தாலும் 25-வயதில் மரணமடைவானென்றும், இன்னும் ஆயுள்ஸ்தானமான 8-ஆம் பாவகத்தினால் ஆராய்ந்து சொல்லுக. இவை கேரளத்திலுள்ளபடியாம். (254)

மரியாதி ரிடனிரண்டு கிரகமுச்ச மாகி
மன்னியோ காங்கிசையில் வந்திருக்கின் மன்னும்
பிரியாத விவரிருவர் மித்துருவே யானல்
பெருமைசெறி முழுராஜ யோகமெனப் பேசு
பரிவேயில் லாதபகை யானலற் பமதாம்
பாக்கியவா னுமுச்ச மேபடைத்த சுபக்கோள்
தரியாத நீசாங்கி சத்திலற்ப யோகம்
தாழ்வான நீசருச்சந் தானேறிப் பலனே.

(இ-ள்) மேஷராசியில் குஜன் உச்சனாகிநிற்கில், சூரியனுடன் 2-கிரகங்கள் உச்சனாகிநிற்கப் பிறந்தாலும், அவன் அங்கிஷம் பெற்றிருந்தாலும் அரசனாவான். மேலேசொன்ன சூரியனுடன் சேர்ந்த இரண்டு கிரகங்களும் மித்துருவாக இருப்பார்களேயானால் பெருமைபெற்ற இராஜயோகத்தில்

வாழ்ந்திருப்பானெனச் சொல்வர். நற்பலனைத் தரமாட்டாத பகை க்ஷேத்திரம் பெற்றிருப்பானாகில் குறைந்த யோகமும், உச்சமேறிய சுபக்கிரகங்கள் நீசகிரகத்தோடு சம்பந்தப்படில் பலவானுமாவான் எ-று.

(வி-ரை) உச்சம்பெற்ற கிரகமாயினும்

**வேறு கிரகங்கள் பார்க்கப் பலன்**

லக்கினம்தனி லுச்சரிருந்திடச் செவ்வாய் பார்க்க
உலப்பில்பாக் கியத்தோன்மூன் றி லுரைந்திட ஜடாயோகந்தான்
பலப்படு காலம்கூறிற் பனிரெண்டு வருடத்தின்மேல்
கலக்கமில் வருடம்மூன் றும் கனயோக மனுபவிப்பான்.

(இ-ள்) லக்கினத்திலே உச்சக்கிரகமிருந்து அவனைச் செவ்வாய்பார்க்க பாக்கியாதிபதி 3-ல் இருக்க ஜடாயோகமென்றும் சொல்வர். அதன்பலன்:- அந்த யோகத்தை 12-வருடத்திற்குமேல் 3-வருஷம்வரையில் அனுபவிப்பான் என சாதகசிந்தாமணியில் கூறியபடியால் உச்சகிரகமிருக்கினும் அவனைப்பார்க்கும் கிரகத்தைக்கொண்டும் பாவத்தைக்கொண்டும் பலன் சொல்லுக. (255)

**கிரக மாலிகா யோக பலன்**

வேறு

எண்ணிய லக்கினங்கண் முதலேழு வீட்டில்
இடைவிடா மற்கிரக மாலையென்ன
நண்ணிடில் வல்லகியோகம் பலன்கள்கூறின்
நலமுளனுற் சாகிபர னீதியாளன்
புண்ணியசம் பன்னனறி வுடைய கோமான்
புகழ்செறியும் பிரசங்கி வித்துவானும்
திண்ணியநற் குலமுடைய நிபுணன் சீலன்
நிரன்யோக வானென்றே செப்புவாரே.

(இ-ள்) ஜெனனராசிமுதல் 7-ராசிவரையில் இடைவிடாது கிரகமிருக்கப்பிறந்தபேர்களுக்கு கிரகமாலிகா யோகமென்றும் சொல்வர். அதன் பலனைச் சொல்லுமிடத்து நல்ல சுகத்தையே அனுபவிப்பவனும், சந்தோஷத்தோடிருப்பவனும், புண்ணியசெயல்களையுடையவனும், நல்லறிவுடைய சீமானும், புகழ்ச்சியைப்படைத்த பிரசங்கம்செய்யும் சீமானும் வித்வானும் சாமர்த்தியமுடையவனும் உத்தமகுலத்திலுதிப்பவனும், எந்தகாரியங்களிலும் சாமர்த்தியமுள்ளவனும், சைவமதிகனும், அளவிறந்த யோகத்தையுடையவனும் ஆவான் எ-று.

(வி-ரை) முன்சொல்லியபடி 7-வீடுகளில் கிரகமிருந்தால் வஜ்ரயோகமென்றும் சிலர் கூறுவதால் அதன் விபரம்:—

மன்னு வஜ்ர யோக முதயமேழ்
மருவாற் கோணமை மூப்பினல்லவன்
முன்னவன்;முன்னமேழ் கோடீரமுற
முசல யோகந்தான் சுற்றமிலச்சைமா

னென்னும் தாது நடையபி மானியா
மினங்கடி தல்பர தேச வாழ்க்கையா
முன்னு மேஙள யோக முபயமே
யூனவான் குரைதன வானி நிபுணனே.

(இ-ள்) ஜெனன லக்கினமுதல் 7-வீடுவரையில் கிரகமிருந்தால் 7-ராசி வரையில் கிரகமிருந்தால் நல்லவனும் தனவந்தனும் ஆவான் எனவும், இளமையிலும் மூப்பிலும் செல்வமுடையவனும், நடுவயதில் தரித்திரத்தை அடைபவனும், சூரியன்முதல் 7-கிரகங்கள் ஸ்திரராசிகளில் நிற்க முசல கர்மயோகமெனவும், அகன்பலன் தர்மி சுத்தமனமுள்ளவன் லச்சையுள்ளவன், உபயராசிகளில் 7-கிரகங்களிருக்க நளயோகமென்றும், தேகத்தில் ஊனமுள்ளவனும், செல்வவான் தனவான் நிபுணனுவான். சரராசிகளில் 7-கிரகங்கள் நிற்கின் சசியோகமென்றும், தூரம் நடக்க வல்லவனும், அபிமானி இனங்களை துவேஷிப்பவனென்றும், அன்னியதேசங்களில் வாழ்பவனென்றும் வீமேசுர உள்ளமுடையானில் யோகபடலத்தில் கூறியபடி ஆராய்ந்து கூறுக. (256)

வேறு

வாருலவு முலையாய்கேள் லக்கினங்கண் முதலா
மாறும லேயாறு வீட்டிற்கே ணிற்கப்
பாருலவு சக்கிரதர யோகங்க ளென்னப்
பகருபலன் றனைத்தெரிந்து பார்த்திடு மப்போது
சீருலவு மன்னவனுஞ் சுகதேகன் சீமான்
சினமிலான் கிருபையுளன் சேர்ந்தபிர தாபன்
ஏருலவாக் கிபன் ஞானவான்புத்தி மானும்
இனிய தாதாவென்றே யியம்பிடுவர் கண்டீர்.

(இ-ள்) ஜெனன லக்கினமுதல் 6-ராசிவரையில் கிரகங்கள் இடைவிடாது வரிசைப்பெற்றிருந்தால் உலகத்தில் பெருமைதங்கிய சக்ரதார யோகமென்றும் கூறுவர், அதன்பலனை அறிந்து சொல்லுமிடத்துசிறப்புற்றோங்கிய அரசனும் சுகசரீரமுள்ளவனும், திரண்ட செல்வத்தைப் படைத்தவனும், கோபமில்லாதவனும், கடவுளால் மிருபகூடித்துடன் காப்பாற்றப் படுபவனும் கீர்த்திசவுகரிய பராக்கிரமமுள்ளவனும், வாய்ச்சாதுரியமுள்ளவனும், உண்மை மொழியம் ஞானமார்க்கமுடைய சன்யாசியும், மேலான பதவியை வாய்ந்த மேதாவியும் ஆவானென்று அழகுவாய்ந்த பெண்ணே! கூறுவாயாக எ-று. (257)

கண்டிடி லக்கினங்கண் முதலைந்து வீட்டிற்
கருணையுட னேகிரகஞ் சேர்ந்து நிற்கில்
ஒண்டொடி நற்பாச யோகங்க ளென்றதனை
யுரைப்பர்பலன் மேதாவி யுற்சாகி யாகும்
தண்டமிழின் பலகலையுந் தெரிந்துரைகள் பகர்வன்
சகலசனங் களும்புகழத் தான்மிகவே வாழ்வன்
எண்டிசைகள் புரந்திடுமன் னவராற் பூச்சியவான்
இனியதன வான்வீட்டிற் கருமமெல்லாம் பார்ப்பன்.

(இ-ள்) ஜெனன ராசிமுதல் 5-ராசிவரையில் இடைவிடாது கிரகமிருக்குமாகில் பாசகயோகமென்றும் சொல்வார். அதன்பலன் என்னவெனில்? திரண்ட செல்வத்தைப் படைத்தவனும், மேதாவியும், எக்காலமும் நீங்காத சந்தோஷத்தையுடையவனும், பிரகாசம்பொருந்திய தமிழிலுள்ள பற்பல நூற்களை ஆராய்ந்து பிரசங்கிப்பவனும், எல்லாஜனங்களும் பார்த்து சந்தோஷப்படக்கூடிய வாழ்க்கையுடையவனும், தேசங்களை அரசாக்ஷிசெய்யும் இராஜாக்களால் போற்றப்படுவோனும், உத்தம மார்க்கத்தோடு தன் வீட்டிலேயே இருந்து வாழ்வோனும், குடும்ப கவனமுடையவனும் ஆவானென்று அழகுவாய்ந்த பெண்ணே! கூறுவாயாக எ-று. (258)

வேறு

பார்க்கிலக்கினந்தன்னோடு பயினன்குமனைக்குள்ளாக
ஏற்கவேகரகநின்ற லிதுவேகேதாரயோகம்
தீர்க்கமாய்கிருஷிபண்ணித் தனந்தேடுந்திடவான்சுற்றத்
தார்க்கன்பன்சுகவான்ராச பூச்சியன்றகைமையுள்ளான்.

(இ-ள்) ஜெனன ராசிமுதல் நான்குராசிகள் வரையில் இடைவிடாது கிரகம் நின்றிருக்குமானல் கேதாரயோகமென்றும் கூறுவர். அவற்றின் பலன்களாவன: பூமிமூலமான பயிர்த்தொழில்புரிந்து வாழ்பவனும், அதன்மூலமான பொருள் சம்பாதிக்கும் சாமார்த்தியனும், தன் பந்துக்களுக்கு இனிமையுள்ளவனும், ஸௌக்கியத்தையே அனுபவிப்பவனும், இராஜாக்களிடம் சேவைசெய்பவனும், நல்ல பூர்ண யுக்தி புத்திசாலியும் ஆவான் எ-று.

(வி-ரை) மேற்காட்டிய நான்குவீடுவரையில் கிரகமிருந்தால் கேதாரயோகமென்றும் சொல்லுவதுடன் அப்படிப்பட்ட ஜாதகங்களுக்கு சந்திரனுக்கு 9-ல் குருவிருந்தாலும் கேதாரயோகமென்றே கூறுவர். அந்தயோகம் மூன்று வருஷம் அனுபவிப்பான். (259)

உள்ளதோர்மூன்றுவீட்டி லுற்றிடிற்சூலயோகம்
மெள்ளவேபலனநேக வித்தையுள்ளவனுற்சாகி
தெள்ளியபோகவானுந் திரவியந்தேடுஞ்செல்வன்
கொள்ளவும்விலைகள்கூறி விற்கவுங்குறிப்புளாளன்.

(இ-ள்) ஜெனனராசிமுதல் 3-ஆம்ராசிவரையில் கிரகமிருந்தால் சூலயோகமென்றும் சொல்வர். அதன்பலன்கள் என்னவெனில்? நாளுக்குநாள் அதிக செல்வத்தையுடையவனும், பலவிதமான கல்விகளையுடையவனும், எக்காலமும் நீங்காத சந்தோஷசுகத்தையுடையவனும், குற்றமில்லாதபோக சுகத்தை யுடையவனும், செல்வத்தை சம்பாதிக்கக் கருத்துடையவனும், வாங்கவும் விற்கவும யுக்திடை படைத்தவனும், வியாபாரியும் ஆவான் எ-று. இத்துடன் 10-ஆம் பாவகத்தையும் ஆராய்ந்து பார்க்கவும். (260)

ஆள்சன்மமிரண்டிலேழு கிரகமுமமர்ந்துநிற்கில்
நீள்யோகமென்பரிதன் பலனிதிமானமிக்கோர்
தாள்தொழுதிறைஞ்சிநிற்குஞ் சரசவான்தீர்க்கசீவி
கேள்சுபகாமன்சென்மத் தேழுநிற்களவுயோகம்.

(இ-ள்) ஜெனனலக்கினத்தில் தனஸ்தானமாகிய இரண்டாம்ராசியில் 7-இரகங்கள் ஒன்று சேர்ந்திருந்தால் நீளகயோகமென்றும் சொல்வர். அதன்பலன்களாவன: செல்வத்தைப்படைத்தவனும், மேம்பட்டவர்களெல்லாம் தண்டம் சமர்ப்பித்து கைகூப்பிநிற்கும் மேலானபதவி வாய்ந்தவனும், சரசமொழிகளை விள்ளுபவனும், பூரண ஆயுளைப்படைத்தவனும், குற்றமில்லாத உத்தம செய்கைகளையே செய்பவனும் ஆவான். மேலேசொன்ன 7-கிரகங்களும் ஜெனனலக்கினத்திற்கு 7-ஆம் ராசியில் அமர்ந்திருந்தால் கவுளயோகமென்றும் சொல்லுவார் எ-று. (261)

**யோகமாங்கவுளயோக முறுதனஞ்சற்றுமில்லான்**
**பாகமாயிளைத்திருப்பன் செலவுளான்பகரிற்சோம்பன்**
**தோகைகேள்பொல்லான்சிற்ப காரியத்தொழிற்குவல்லன்**
**வாகுடன்புவிசஞ்சார வல்லன்மயுள்ளனுமே.**

(இ-ள்) மேற்சொன்ன கவுளயோகத்தின் பலன் என்னவெனில், தனக்கென்று வேண்டிய பொருள் கொஞ்சமேனும் இல்லாதவனும், திரேகம் மெலிந்தவனும், விரயம் அதிகமுள்ளவனும், பகல்காலங்களில் மயக்கம் முதலிய சோம்பல் உள்ளவனும், துற்குணமுடையவனும், சிற்பவேலையில் வல்லமை பொருந்தியவனும், பல தேசங்களில் சஞ்சாரம்செய்ய சாமர்த்தியமுள்ளவனும் ஆவானென்று அழகுவாய்ந்த பெண்ணே! கூறுவாயாக எ-று. (262)

உச்சபலப்படலம் முற்றிற்று.

---

## சகட யோக பலன்



வேறு

**அகடின் மன்னனுக் காறெட் டொடுவியத்**
**திகடி லாமதி யெய்தி யிருந்திடின்**
**சகட யோக மிதிற்பிறந் தார்க்கெலாம்**
**விகட துன்பம் விளையு மரிட்டமே.**

(இ-ள்) நற்கீர்த்திவாய்ந்த குருநின்ற ராசிக்கு ஆறாமிடமான ரோகஸ்தானத்திலேனும், 8-ஆமிடமான ஆயுள்ஸ்தானத்திலேனும், 12-ஆமிடமான விரயஸ்தானத்திலேனும், கலைகளையுடைய சந்திரனிருக்க ஜெனித்தவர்களுக்கு சகடை என்றும், இச்சகடயோகத்தில் பிறந்தவன் அளவில்லாத கஷ்டங்களை அனுபவிப்பதும் கெண்டமும் நேரும் எ-று.

(வி-ரை) ஷை சகடையிலுதித்த ஜாதகங்களை இலக்கினாதிபதி ரோகாதிபதி அஷ்டமாதிபதி கார்யாதிபதி விரயாதிபதி இவர்களிருக்கும் சுபாசுபம்தெரிந்து துன்பம் விளையுமென்றும், கெண்டம் சம்பவியுமென்றும் ஆராய்ந்து கூறுக. (263)



# யோக பலப் படலம்

இந்நிலவுலகில் வடமொழிச் சோதிடநூல் வல்லுநரும், யவனதேசத்துச் சோதிடவல்லுநரும் யோகங்களை மூன்று முக்கியமான பெரும்பாகங்களாக வகுத்துத் தொகுத்திருக்கின்றனர்.

அவற்றுள்:—

1-வது இராஜயோகமும்,
2-வது நாபசயோகமும்,
3-வது சந்திரயோகமும் ஆகும்.

இவற்றுள்

1-வது இராஜயோகத்தில் 100-முக்கிய பிரிவுகள் உண்டு.
2-வது நாபசயோகத்தில் நான்கு முக்கிய பிரிவுகள் உண்டு.

அதாவது:

1-வது ஆகிருதியோகமும்,
2-வது சங்கியாயோகமும்,
3-வது ஆசிரயயோகமும்,
4-வது தளயோகமும் ஆகும்.

இவற்றுள்

| | |
|---|---|
| 1-வது ஆகிருதியோகத்தில் | 20 பிரிவுகளும் |
| 2-வது சங்கியாயோகத்தில் | 7 பிரிவுகளும் |
| 3-வது ஆசிரயயோகத்தில் | 3 பிரிவுகளும் |
| 4-வது தளயோகத்தில் | 2 பிரிவுகளும் |
| | ஆக 32 பிரிவுகளுண்டு. |

(உபபிரிவுகள் 12.........12 ஆக 44)

யவனதேசத்து சோதிட வல்லவர்கள்,

| | |
|---|---|
| 1-வது ஆகிருதியோகத்தில் | 23 பிரிவுகளும் |
| 2-வது சங்கியாயோகத்தில் | 127 பிரிவுகளும் |
| | ஆக பிரிவுகள் 150 என்பர். |

இவை இராசி 12-லும் சம்பவிக்குமாதலால் $150 \times 12 = 1800$ யோகங்களாமென்பர். இப்பிரிவுகள் 1800-ம் முற்கூறிய 32-யோகங்களிலேயே அடங்கியிருக்கும் சூக்குமத்தை அன்னோர் அறிந்திலர்போலும்.

## 1. இராஜயோக விளக்கப் பதகம்

| சூரிய | சந்திர | செவ்வா | குரு | சனி | இலக்கின | யோக எண் |
|---|---|---|---|---|---|---|
| மேடம் | — | மகரம் | கடகம் | துலாம் | மேடம் | 1 |
| மேடம் | — | மகரம் | கடகம் | துலாம் | கடகம் | 2 |
| மேடம் | — | மகரம் | கடகம் | துலாம் | துலாம் | 3 |
| மேடம் | — | மகரம் | கடகம் | துலாம் | மகரம் | 4 |
| மேடம் | — | — | கடகம் | துலாம் | மேடம் | 5 |
| மேடம் | — | — | கடகம் | துலாம் | கடகம் | 6 |
| மேடம் | — | — | கடகம் | துலாம் | துலாம் | 7 |
| மேடம் | — | மகரம் | கடகம் | — | மேடம் | 8 |
| மேடம் | — | மகரம் | கடகம் | — | கடகம் | 9 |
| மேடம் | — | மகரம் | கடகம் | — | மகரம் | 10 |
| மேடம் | — | மகரம் | — | துலாம் | மேடம் | 11 |
| மேடம் | — | மகரம் | — | துலாம் | துலாம் | 12 |
| மேடம் | — | மகரம் | — | துலாம் | மகரம் | 13 |
| — | — | மகரம் | கடகம் | துலாம் | கடகம் | 14 |
| — | — | மகரம் | கடகம் | துலாம் | துலாம் | 15 |
| — | — | மகரம் | கடகம் | துலாம் | மகரம் | 16 |
| மேடம் | கடகம் | — | கடகம் | — | மேடம் | 17 |
| மேடம் | கடகம் | — | கடகம் | — | கடகம் | 18 |
| மேடம் | கடகம் | — | — | துலாம் | மேடம் | 19 |
| மேடம் | கடகம் | — | — | துலாம் | துலாம் | 20 |
| மேடம் | கடகம் | மகரம் | — | — | மேடம் | 21 |
| மேடம் | கடகம் | மகரம் | — | — | மகரம் | 22 |
| — | கடகம் | — | கடகம் | துலாம் | கடகம் | 23 |
| — | கடகம் | — | கடகம் | துலாம் | துலாம் | 24 |
| — | கடகம் | மகரம் | கடகம் | — | கடகம் | 25 |
| — | கடகம் | மகரம் | கடகம் | — | மகரம் | 26 |
| — | கடகம் | மகரம் | — | துலாம் | துலாம் | 27 |
| — | கடகம் | மகரம் | — | துலாம் | மகரம் | 28 |
| மேடம் | கடகம் | — | — | — | மேடம் | 29 |
| — | கடகம் | — | கடகம் | — | கடகம் | 30 |
| — | கடகம் | — | — | துலாம் | துலாம் | 31 |
| — | கடகம் | மகரம் | — | — | மகரம் | 32 |

வர்க்கோத்தமாம்சம் பெற்ற சந்திரன் அல்லது இலக்கினத்தைச் சூரியாதி கிரகங்கள் பார்ப்பதனால் ஏற்படும் இராஜயோகம். இதன் விரிவை இந்நூலில் சட்வர்க்கப்படலவிருத்தியில் நன்கு அறியலாம்.

இலக்கினத்திற்கு-22, சந்திரலக்கினத்திற்கு-22, ஆக-44.

சந்திரன் இலக்கினம் இவைகள் ஒவ்வொரு இராசியிலும் வர்க்கோத்தமாம்சத்திலிருப்பதாகக் கணக்கிட்டால் சந்திரன்மூலம் 264-யோகங்களும், லக்கினத்தின்மூலம் 264-யோகங்களும் ஆக 582-இராஜயோகங்கள் ஏற்படும்.

## 2. இதுவும் இராஜயோக விளக்கப் பதகம்

| சூரிய | சந்தி | செவ்வா | புதன் | குரு | சுக்கிர | சனி | லக்னம் | யோ-க |
|---|---|---|---|---|---|---|---|---|
| மேடம் | இடபம் | விர்ச்சிக | மிதுன | சிம்மம் | — | கும்பம் | கும்பம் | 1 |
| மேடம் | இடபம் | விர்ச்சிக | மிதுன | சிம்மம் | — | கும்பம் | மேடம் | 2 |
| மேடம் | இடபம் | விர்சசிக | மிதுன | சிம்மம் | — | கும்பம் | இடபம் | 3 |
| கன்னி | இடபம் | மேடம் | கன்னி | கடகம் | துலாம் | துலாம் | துலாம் | 4 |
| கன்னி | இடபம் | மேடம் | கன்னி | கடகம் | துலாம் | துலாம் | இடபம் | 5 |
| தனுசு | தனுசு | மகரம் | — | — | — | மகரம் | மகரம் | 6 |
| தனுசு | மகரம் | மகரம் | — | — | — | மகரம் | மகரம் | 7 |
| மேடம் | துலாம் | — | — | தனுசு | — | துலாம் | மேடம் | 8 |
| சிம்மம் | இடபம் | — | — | விர்ச்சிக | — | கும்பம் | இடபம் | 9 |
| விர்ச்சி | மீனம் | மிதுன | கன்னி | தனுசு | துலாம் | மகரம் | மகரம் | 10 |
| — | தனுசு | மகரம் | — | தனுசு | மீனம் | — | மீனம் | 11 |
| — | தனுசு | மகரம் | கன்னி | தனுசு | — | — | சன்னி | 12 |
| — | தனுசு | மகரம் | கன்னி | தனுசு | தனுசு | மகரம் | கன்னி | 13 |
| சிம்மம் | மீனம் | மகரம் | — | — | — | கும்பம் | மீனம் | 14 |
| — | — | மேடம் | — | கடகம் | — | — | மேடம் | 15 |
| — | — | மேடம் | — | கடகம் | — | — | கடகம் | 16 |
| மேடம் | இடபம் | — | இடபம் | கடகம் | இடபம் | — | கடகம் | 17 |
| சிம்மம் | கடகம் | மேடம் | மிதுன | — | துலாம் | மகரம் | மகரம் | 18 |
| — | மீனம் | மகரம் | கன்னி | மீனம் | மிதுன | மகரம் | கன்னி | 19 |
| — | மேடம் | மகரம் | — | தனுசு | — | கும்பம் | மேடம் | 20 |
| மேடம் | துலாம் | கும்பம் | மேடம் | தனுசு | இடபம் | தனுசு | கும்பம் | 21 |
| கன்னி | மீனம் | கடகம் | கன்னி | இடபம் | துலாம் | இடபம் | கடகம் | 22 |
| மீனம் | இடபம் | மீனம் | மீனம் | மிதுன | மீனம் | துலாம் | இடபம் | 23 |
| கும்பம் | இடபம் | மீனம் | மீனம் | சிம்மம் | மீனம் | இடபம் | இடபம் | 24 |

### விசேஷ தனயோகம்

### இலக்கினத்திற்கு

| சூ. | சந். | அங். | புத. | குரு. | சுக். | சனி. | |
|---|---|---|---|---|---|---|---|
| 4 | 10 | 2 | 2 | 1 | 4 | 11 | இப்படி இருக்கின் |
| 10 | 4 | 1 | 11 | 7 | 9 | 1 | விசேஷ தனயோகமாம். |

| | |
|---|---|
| 1-வது பதகப்படி இராஜயோகங்கள் | 32 |
| 2-வது பதகப்படி இரர்ஜயோகங்கள் | 24 |
| 8-வது வர்க்கோத்தம இராஜயோகங்கள் | 44 |

ஆக 100 என்க.

## 3. ஆகிருதியோக விளக்கப் பதகம்

| யோக எண் | இலக்கினத்திற்குச் சர்வ கிரகங்களும் | ஆகிருதி யோகப் பெயர் | மொத்த எண் |
|---|---|---|---|
| 1 | 1-4-ல் இருப்பின் | 1-வது கதாயோகம் | 1 |
| | 4-7-ல் ” | 2-வது கதாயோகம் | 2 |
| | 7-10-ல் ” | 3-வது கதாயோகம் | 3 |
| | 10-1-ல் ” | 4-வது கதாயோகம் | 4 |
| 2 | 1-7-ல் ” | சகடயோகம் | 5 |
| 3 | 5-9-ல் ” | சிருங்காடயோகம் | 6 |
| 4 | 4-10-ல் ” | விகக்(அண்டஜ)யோகம் | 7 |
| 5 | 2-6-10-ல் ” | 1-வது அலயோகம் | 8 |
| | 3-7-11-ல் ” | 2-வது அலயோகம் | 9 |
| | 4-8-12-ல் ” | 3-வது அலயோகம் | 10 |
| 6 | 1-7ல்சுபர்கள் 4-10ல்பாவர்கள் | வச்சிரயோகம் | 11 |
| 7 | 1-7ல்பாவர்கள் 4-10ல்சுபர்கள் | யவயோகம் | 12 |
| 8 | 1-4-7-10-ல் சுபரும் பாவரும் | கமலயோகம் | 13 |
| 9 | 2-3-5-6-8-9-11-12-ல் ” | வாபீயோகம் | 14 |
| 10 | 1-2 3-4-ல் ” | யூபயோகம் | 15 |
| 11 | 4-5-6-7-ல் ” | இஷுயோகம் | 16 |
| 12 | 7-8-9-10-ல் ” | சக்தியோகம் | 17 |
| 13 | 10-11-12-1-ல் ” | தண்டயோகம் | 18 |
| 14 | 1-2-3-4-5-6-7-ல் ” | நௌ(ஓடம்)யோகம் | 19 |
| 15 | 4-5-6-7-8-9-10-ல் ” | கூடயோகம் | 20 |
| 16 | 7-8-9-10-11-12-1-ல் ” | சத்திரயோகம் | 21 |
| 17 | 10-11-12-1-2-3-4-ல் ” | சாபயோகம் | 22 |
| 18 | 2-3-4-5-6-7-8-ல் ” | 1-வது அர்த்தசந்ரயோக | 23 |
| | 3-4-5-6-7-8-9-ல் ” | 2-வது ” | 24 |
| | 5-6-7-8-9-10-11-ல் ” | 3-வது ” | 25 |
| | 6-7-8-9-10-11-12-ல் ” | 4-வது ” | 26 |
| | 8-9-10-11-12-1-2-ல் ” | 5-வது ” | 27 |
| | 9-10-11-12-1- -3-ல் ” | 6-வது ” | 28 |
| | 11-12-1-2-3-4-5-ல் ” | 7-வது ” | 29 |
| | 12-1-2-3-4-5-6-ல் ” | 8-வது ” | 30 |
| 19 | 2-4-6-8-10-12-ல் ” | சமுத்திரயோகம் | 31 |
| 20 | 1-3-5-7-9-11-ல் ” | சக்கிரயோகம் | 32 |

## 4. சங்கியா ஆசிரய தலயோக விளக்க பதகம்

| | சர்வ கிரகங்களும் | சங்கியா ஆசிரய தல யோகப் பெயர் | ஆக யோக எண் |
|---|---|---|---|
| | எங்கேனும் | | |
| 1 | இடைவிடாது 7 ராசியிலிருப்பின் | வல்லகியோகம் | 33 |
| 2 | ,, 6 ,, | தாமணியோகம் | 34 |
| 3 | ,, 5 ,, | பாசயோகம் | 35 |
| 4 | ,, 4 ,, | கேதாரயோகம் | 36 |
| 5 | ,, 3 ,, | சூலயோகம் | 37 |
| 6 | ,, 2 ,, | யுகயோகம் | 38 |
| 7 | ,, 1 ,, | கோளயோகம் | 39 |
| 1 | சரத்தில் இருந்து திர உபயத்தில் இல்லாதிருத்தல் | இரச்சுயோகம் | 40 |
| 2 | திரத்தில் இருந்து சரம் உபயத்தில் இல்லாதிருத்தல் | முசலயோகம் | 41 |
| 3 | உபயத்தில் இருந்து சரம் திரத்தில் இல்லாதிருத்தல் | நளயோகம் | 42 |
| 1 | கேந்திரங்களில் புதன்-குரு-சுக்கிரன்இருந்துஎந்தக்கேந்திரத்திலும்பாவர்கள் இல்லாதிருத்தல் | மாலாயோகம் | 43 |
| 2 | யாதானும் 3கேந்திரங்களில்சூரிய செவ்-சனிஇருந்து எந்தகேந்திரத்திலும்சுபர்களில்லாதிருத்தல் | சர்ப்பயோகம் | 44 |

## இராஜ யோகம்

இராஜயோகம் என்னும் இந்த வடமொழி தொடர்புக்கு இராச்சியத் தன்மையை அடைதல் என்பது பொருள். யோகமெனின் சேர்தல் என்று பொருள்படும். "இராஜ" என்னும் மொழி இராச்சிய யோக்கியத்தையே நிமித்தமாக வுடையதாகும். பிறப்பாலாகிய க்ஷத்திரியத்தன்மையே நிமித்தமாக வுடையதல்லவென்பது மறுக்கொணு உண்மையாகும். "இராஜ" என்னும் பதத்தை நீக்க நிற்கும். "யோகம்" என்னும் மொழிக்கு நல்லது என்பது பொருள். அதாவது: தனத்தையேனும் பூமி வீடுகளையேனும் அதிகாரத்தையேனும் அடைதல் (பெறுதல்) என்பது பொருளாகும். ஆகவே இராஜயோகமென்பதற்கு இராச்சிய யோக்கியதையைப் பெறுதலென்றும், யோகமென்பதற்கு சிறந்த ஐசுவரியத்தைப் பெறுதலென்றும் அருத்தமாகும். ஐசுவரியங்கள் எண்வகைப்படும். அவை இராஜாங்கம் மக்கள் சுற்றம் பொன் மணி நெல் (தானியம்) வாகனம் அடிமை முதலியனவாம். இராஜயோகமானது யோகம் முத்திரிகாயோகம் இராஜயோகம் மகாராஜ யோகம் சக்கரவர்த்தியோகம் சிங்காதனயோகமென ஆறுவகையாகப் பகுக்கப்படும்,

இவற்றுள் ஐசுவரியத்தைப் பெற்று வாழ்வதற்கு யோகமென்றும், நியாயம் அநியாயங்களை விசாரித்துத் தீர்மானஞ்செய்ய அரசர்களால் கொடுக்கப்படும் அரசாங்க அதிகாரச் சின்னத்தை பெறுதற்கு முத்திரிகா யோகமென்றும், இராஜவம்சத்தில் பிறந்தும், இராச்சியாதிபத்தியமில்லாமல் சொற்ப கிராமங்கட்கு அதிகாரியாயிருத்தல், அல்லது விசேஷ ஐஸ்வரியத்தை யுடைத்தாயிருத்தற்கு இராஜயோகமென்றும், இராஜவமிசத்திற் பிறந்து அநேக தேசங்களுக்கு அதிகாரியாய்ச் சுயாதிக்கமுடைத்தாயிருப்பதற்கு மஹாராஜயோகமென்றும், இராஜவம்சத்திற்பிறந்து அநேக தேசங்களுக்கு அதிபதியாய் அநேக இராஜாதி இராஜாக்களால் கப்பஞ்செலுத்தப் பெற்று ஏகசக்ராதிபதியா யிருத்தற்கு சக்கரவர்த்தியோகமென்றும், நியாயாதிபதிகள் ராஜசெல்வமுடையவர்கள் இராஜாக்கள் மகாராஜாக்கள் சக்கரவர்த்திகள் முதலாயினோர் புடைசூழச் சிங்காதனத்தில் அமர்ந்து செங்கோல்செலுத்தி ராஜ்யபாரந் தாங்கியிருப்பதற்கு சிங்காசனயோகமென்றும் பெயராகும்.

இவைகள் ஒன்றைவிட ஒன்று பிரபலமுடையதாகும். "லக்ஷ்மீ ஸ்தாநந் த்ரிகோணம் ஸ்யாத் விஷ்ணு தானஞ்ச கேந்த்ரகம் தயோ ஸம்பந்த மாத்ரேண ராஜயோகாதி கம்பவேத்" என்ற பிருகத் பராசரஹோரா வசனத்தின்படி 5-9-ஆமிடங்களாகிய திரிகோண ஸ்தானங்கள் இலக்குமி ஸ்தானமென்றும், 1-4-7-10-ஆமிடங்களாகிய கேந்திரஸ்தானங்கள் விஷ்ணு ஸ்தானமென்றும், இலக்குமி விஷ்ணுக்களின் சேர்க்கையால் அல்லது யோகத்தால்; அல்லது சம்பந்தத்தினால் (திரிகோணாதிபதிகள் கேந்திராதிபதிகள் சம்பந்தமுண்டானபோது) யோகமுண்டாமென்றும் அறிதல்வேண்டும். இலக்குமியின் சக்தியானது எண்வகையாகப் பிரிந்திருக்கின்றது. இதையே அஷ்ட இலக்குமிகள் என்று புராணங்கள் கூறுகிற்கும். அவை தனலக்குமி, தானியலக்குமி, பூலக்குமி, சந்தானலக்குமி, வித்தியாலக்குமி, வீர்யலக்குமி, விஜயலக்குமி, தைரியலக்குமி என்பவைகளாகும். சிறந்த ஐசுவரிய முடையவர்களை இலக்குமிபுத்திரர்களென்றும், அரசர்களைத் திருமாலென்றும் கூறுவது புராணேதிகாசங்களின் பொன்னுரையாகும். இதனை "திருவுடை மன்னரைக் காணிற் றிருமாலைக் கண்டேனே" என்ற திருவாக்கால் அறியலாம்.

இராஜயோகத்திற்குக் காரணமாக கிரகநிலைகளை ஆசிரியர் வராஹமிஹிரர், கலியாணவர்மர் முதலிய இவர்கள் முறையே பிருகஜ்ஜாதகம், சாராவளி, ஜாதகாபரண முதலிய வடமொழிச் சோதிடநூற்களில் வகுத்துரைத்திருக்கின்றனர். அவைகளை இங்கு விரிவஞ்சிக் கூறாமல் விடுத்து அவற்றின் திட்ப நுட்பங்களைமட்டும் விளக்கக் கருதினோம். மேலும் ஏகதேசமாக ஆயிரஞ் சாதகங்களில் பத்து ஜாதகங்களுக்கு முத்திரிகாயோகமும், இலட்சம் ஜாதகங்களில் ஐந்து ஜாதகங்களுக்கு இராஜயோகமும், கோடி ஜாதகங்களில் மூன்று ஜாதகங்களுக்கு மஹாராஜயோகமும், நூறுகோடி ஜாதகங்களில் இரண்டு ஜாதகங்களுக்குச் சக்கரவர்த்தியோகமும் சிங்காசன யோகமும் அமைந்திருக்குமேயன்றி அதிக மிருக்காதென்பது திண்ணம். சர்வ சாதாரணமான முத்திரிகாயோகமும், சாதாரணமான இராஜயோகமென்னும் இராஜ சமான சம்பத்தைப் பெற்று வாழும் ஐசுவரிய யோகமுமே பெரும்பாலும் பல ஜாதகங்களிலும் அமைந்

திருக்கக்கூடும். ஆதலால் இவைகளைப்பற்றியே ஆராய்ச்சியே நம்ம ஞேர்க்கு அத்தியாவசியமென்பது கருத்தாம். இராஜயோகாதி பலத் தன்மைகள் ஜாதியானுசாரமாக உண்டாகுமென்று பூர்வாசிரியர்கள் புகன்றிருக்கின்றனர். அதாவது: "ந்ருபதிகுலஸமுத்தாஃ பார்திவா வக்ஷ்யமாணை பவதி ந்ருபதி துலயஸ்தேஷு அபூபாலபுத்ரஃ" என்ற வராகமிகிரர் வசனத்தின்படி இராஜவமிசத்தில் பிறந்தவன் இராஜனென்றும், அன்னியனுயின் இராஜசமான வாழ்க்கை புடையவனென்றும் நன்கு அறியலாம்.

லக்நேசதர்ம கர்மேசாஃ ஏகபாவஸ்திதாயதி
யக்ஞபாவோப்ராஹ்மணஸ்யாத் ராஜாஸாம்ராஜ்யலாபவான்
வாணிஜ்யலாபோவைச்யஸ்ய சூத்ரஸ்துக்ருஷிலாபவான்
ஏவம்ஜாத்யா நுஸ்ரரேணபலம் வக்தவ்யமேவஹி.

என்ற ஜாதகராஜீயத்தின்படி மகாராஜயோக பலன்களையுடைய ஜாதகன் பிராமணனுயின் யக்ஜாதி கர்மலாபத்தையும், க்ஷத்திரியனுயின் இராஜ்ய லாபத்தையும், வைசியனுயின் வியாபாரலாபத்தையும், சூத்திரனுயின் பயிர் லாபத்தையும் அடைவானென்பதுணர்க.

மற்றும் ஜாதகபலமுக்தாவளியில்,

தேசகாலாநு ரூபேணவயோ வர்ணநுசாரதஃ
ஜாதகஸ்யபலம் ப்ரூயாத்கோசரஸ்யாநுரோததஃ

என்று கூறியிருப்பதனுல் தேசம் காலம் ஜாதிகளை அனுசரித்து ஜாதக பலன்களைச் சாற்றவேண்டுமென்பது அகங்கை நெல்லிக்கனியென அறியக் கிடத்தலின் சோதிடர்கள் அதனை நன்கு ஞாபகத்தில் வைத்தல் வேண்டும். ஆனுல் இறைவன் படைப்பில் ஆண் பெண் என்ற இரண்டு ஜாதியே யுண்டென்பது உண்மையென்றும், இப்போதுள்ள பிரம்ம க்ஷத்திரிய வைசிய சூத்திர சங்கிரம பஞ்சம மிலேச்சாதி ஜாதிபேதங்கள் பூர்வத்தில் கிடையாதென்றும் புராண வசனங்கள் பொய்யென்றும் உற்றுணர்ந்த மூதறிவோர்கள் கொள்கை இதுவேயென்றும், உண்மையிப்படியிருக்க, சோதிட சாஸ்திரத்திற்கூட ஜாதிவித்தியாசம் சமைக்கப்பட்டுளதா என்றும் சிலர் வாதிக்கின்றனர். அவர்கள் கருத்து எப்படி ஆயினும் ஆகுக. அதைப்பற்றிய விசாரம் நமக்கு அவசியமில்லை. பூர்வாசார்யர்களின் பொன்னுரையே நமக்கு உண்மையான உற்ற சாதனமென்று சித்தத்துணர்தல் சிறப்புடையதாகும். இது இப்படியிருக்க தேசபேதம் சோதிடபலசாஸ்திரத்திற்கு எதறகாக என்ற ஆசங்கை நேயர்களுளத்தில் நிகழக்கூடும். சீதோஷ்ண ஸ்திதியினுல் சில பிரதேசங்களிலுள்ள மனிதர்கள் வெண்மையாகவும், சில பிரதேசங்களிலுள்ளவர்கள் கருமையாகவும், சில பிரதேசங்களிலுள்ளவர்கள் சாம்பர் நிறமாகவும் காணப்படுகின்றனர். பிரதேச பேதத்தைக் கொண்டே அந்தந்த பிரதேசங்களிலுள்ள வாயுவும், ஜலமும் மக்களுக்குச் சுகாசுகங்களைத் தருவதாயிருக்கின்றது. இதுவன்றி ஒரு ஜாதகனுடைய தேககாந்தியை இலக்கின, சந்திரலக்கினங்களின் நவாம்சாதிபர்களில் பலமான கிரகத்தினுடைய நிறத்தைப்போ லிருக்குமென்று சாஸ்திரங்கள் கூறுநிற்கும். அப்படியாயின் ஊணர்களில் எல்லோரும் வெண்மை நிறம் உடையவர்கள். அவர்களில் ஒருவர்ஜாதகத்தைக்கொண்டுமுன்சொன்னபடி பார்க்க சனி பலவானுக வந்தால் கருமை நிறமுடையவரென்று கூறினுல் பொருந்துமா? பொருந்தாது. ஆகவே அவர்கள் வசிக்கும் பிரதேசத்தின்

இயற்கை வெண்மைநிறத்தில் கொஞ்சம் குறைந்திருக்குமென்று அறிதல் வேண்டும். விஷயம் விரிவாதலால் அன்பர்கள் நுண்மதிகொண்டு நோக்கி புண்மையை யுணர்தல் சிறப்பாகும். (263)

வேறு

விளையும் புதனும் சூரியனும் விரும்பி எட்டில் நான்குஒன்றில்
வளையக் கூடின் மன்னவன்ஆம் மதியுங் கதிரும் உடன்கூடி
இளையா தன்ம கன்மத்தில் இரண்டில் இருக்கக் கீர்த்திஉளன்
கிளையா ரவிபொன் பன்னொன்றில் கேடுஇல் சன்மத்து உறிலரசே.

(இ-ள்) சூரியனும் புதனுங் கூடி இலக்கினம் நான்கு எட்டு இவற்றில் இருக்கப்பிறந்தவன் அரசனாவான், சூரியனும் சந்திரனுங் கூடி இரண்டு ஒன்பது பத்தில் இருக்கப்பிறந்தவன் கீர்த்தியுடையவனாவான், சூர்யனும் குருவும்கூடி ஒன்று பதினொன்றில் இருக்கப்பிறந்தவன் அரசனாவான் எ-று.

(வி-ரை) சூரியன் - புதன்

ப்ராக்ஞோ பகுப்ரலாபி கடீனாங்கச் சூரவல்லபோ மதிமான்
லக்நேபுத திவஸகரயோர் தீர்க்காயுஸ் ஸம்பவேத்புருஷ:
(சாராவளி)

(இ-ள்) இலக்கினத்தில் சூரியனும் புதனும் இருந்தால் அசசாதகன் அறிவுடையவனும, அதிகமாய் ஊனறிப்பேசுவோனும், கடினமான தேக முடையவனும், சூரனும், வல்லமையுடையவனும், புத்திமானும், தீர்க்காயுளுடையவனும் ஆவான் எ-று.

ந்ருபதிஸமோ விக்யாதோ க்ருஹீதகாவ்ய: குபேரசமவிபவ:
ரவிச்சிதநயௌ ஹிபுகே ஸ்தூலதநுர் வக்ரநாஸச.   (சாராவளி)

(இ-ள்) இலக்கினத்திற்கு நான்காமிடத்தில் சூரியனும் புதனும் இருந்தால் அச்சாதகன் இராஜசமானனும், கீர்த்தியுடையவனும், காவியங்களை அறிந்தவனும், குபேரனுக்கு நிகரான ஐஸ்வரியமுடையவனும், ஸதூல தேகியும், வக்கிரம் (பொய்) இல்லாதவனுமாயிருப்பான் எ-று.

சூரியன் - சந்திரன்

சுஸரீரம் பலநாதம் ராஜஸிகம் நிர்தயம விஷமசீலம்
சூர்ய இந்து ககனஸ்தே குருத: க்ஷிபிதாரிபக்ஷஞ்ச.
(சாராவளி)

(இ-ள்) சூரியனும் சந்திரனும் பத்தில் இருக்கப்பிறந்தவன் யோக்கியமான சரீரம், இராசதகுணம், தயையின்மை, விஷமசுபாவம், சத்துருஜயம் இவைகளை யுடையவனாவான் எ-று.

சூரியன் - குரு

ஜீவார்க்கயோர் குணயுதோ மந்த்ரீ பலநாயகோ அதவா ஸாது:
லக்நஸ்தயோ: ப்ரசூதௌ வித்யாத போகவான் க்யாத:
(சாராவளி)

(இ-ள்) சூரியனும் குருவும் இலக்கினத்திலிருக்கப் பிறந்தவன் குணவானும், அரசர்களுக்கு மந்திரியும், பலத்திற்கு அதிபதியும், வித்தை, தனம், சுகபோகம், கீர்த்திகளையுடையவனும் ஆவான் எ-று. (264)

அரசே எட்டுஒன் பதுபத்தில் அணிசன் மத்தில் இரவிபுகர்
சிரசாய் இருக்கப் பூபதிஆம் சேரும் சனியும் சூரியனும்
நிரைசேர் ஒன்றுய் நவம்ஆறில் நிற்கில் கீர்த்தி மான்ஆவன்
உரைசேர்மற்ருேர் இடத்துஇவர்கள் உரையில்கூத்தாடியும் ஆவான்.

(இ-ள்) இலக்கினத்திற்கு ஒன்று, எட்டு, ஒன்பது, பத்தில் சூரியனும் சுக்கிரனும் இருக்கப் பிறந்தவன் அரசனுவான், சூரியனும் சனியும் ஆறு ஒன்பதில் இருக்கப் பிறந்தவன் கீர்த்திமானுவான், இவ்விருவரும் மற்ற இடங்களில் இருந்தால் கூத்தாடி ஆவான் எ-று.

1-ல் சூரியன் சுக்கிரன்

(வி-ரை) ப்ரியகலஹ ஸ்த்வவினீதோ மலினாசாரஸ் ஸுதுக்கிதோ நீசஃ
லக்நேரவிப்ரு ஸுதயோர் அத்யர்த்த களத்ரஸம் பரித்யக்தஃ
(சாராவளி)

(இ-ள்) சூரியனும் சுக்கிரனும் இலக்கினத்திலிருக்கப் பிறந்தவன் சிநேகிதர்களுடன் விரோதிப்பவனும், நீதியில்லாதவனும், ஆசாரமுதலியன இல்லாதவனும், துக்கியும், நீசனும், மனைவியைப் பிரிந்திருப்பவனும் ஆவான் எ-று.

10-ல் சூரியன் - சுக்கிரன்

கர்மணி திநகர ஸிதயார் வ்யவஹாரரதோ நரேந்த்ர ஸசிவஸ்ஸ்யாத்
சாஸ்த்திரகலா நிபுணமதிர் தநவாஹந ஸௌக்ய ஸம்பந்நஃ
(சாராவளி)

(இ-ள்) சூரியனும் சுக்கிரனும் பத்தாமிடத்தில் இருக்கப்பிறந்தவன் வியவகாரத்தில் ஆசக்தியுடையவனும், பிரபுவும் மந்திரியும், சாஸ்திரம் அறிந்தவனும், தனம் வாகனம் சுகசௌக்கியம் இவைகளை யுடையவனும் ஆவான் எ-று. (265)

ஆமாம்வெள்ளி இரவிசெவ்வாய் அணுகிப்பத்தில் பதினென்றில்
தாமேஐந்து ஒன்பதுரெண்டில் தரிக்கில் அரசதிபனுவன்
தேமார்செவ்வாய் இரவிபுந்தி எங்கேஏனும் தொடர்ந்துநிற்கில்
ஓமேசெல்வம் படைத்துஇருப்பன் உதவான் தமருக்கு ஒருகாசும்.

(இ-ள்) சூரியன் செவ்வாய் சுக்கிரன் இவர்கள் இலக்கினத்திற்கு இரண்டு ஐந்து ஒன்பதில் இருக்கப் பிறந்தவன் அரசாதிக்கமுடையவனுவான். சூரியன் செவ்வாய் புதன்இவர்கள் எவ்விடத்திலேனும்கூடியிருக்கப் பிறந்தவன் செல்வம்படைத்து வாழ்வான், ஆனுல் சுற்றத்தாருக்கு ஒரு காசும் கொடுக்காத உலோபியாயிருப்பான் எ-று.

(வி-ரை) இம்மூன்று செய்யுட்களையும் ஊன்றி நோக்குமிடத்து இவை கள் சூரியாதி கிரகங்களில் இரண்டு மூன்று கிரகங்கள் ஒன்ருகக் கூடி

யிருப்பதனாலுண்டாகும் கிரகசேகரப்பலனைக் கூற எழுந்ததென்னக்கூடும் அறியலாம். ஆனால் முதல்நூற்களில் கிரகசேகரபலனை இன்ன ஸ்தானத்திருப்பின் இன்னபலன் உண்டாமென வரையறுத்துக்கூறாது பொதுவாகக் கூறப்பட்டிருத்தலின் அதனை இங்கு எடுத்து விளக்கப்படும்.

### சூரியன் - சந்திரன்

பாஷாணயந்தர க்ரயவிக்ரயேஷு
கூடக்ரியாயாம்ஹி விசக்ஷண: ஸ்யாத்
காமீப்ரகாமீ புருஷ: ஸகர்வ:
ஸர்வஜூஷதீசேந ரவௌஸமேதே. (ஜாதகாபரணம்)

(இ-ள்) சூரியன் சந்திரன் கூடியிருக்கப் பிறந்தவன்பாஷாணம் இயந்திரம் முதலியவற்றின் கிரயவிக்கிரயங்களில் சமர்த்தனும், மாயா (வஞ்சனை) காரியத்தில் மிகத் தேர்ந்தவனும், காமியும், சாகசத்தில் அபிமானியும் ஆவான் எ-று.

யுவதீநாம் வசகஸ்யாத் அவிநீத: கூடவித்ப்ருதுலவித்த:
ஆஸவவிக்ரயகுசலோ ரப்யுடுபத்யோ: க்ரியாநிபுண:
(சாராவளி)

(இ-ள்) சூரியனும் சந்திரனும் கூடிநிற்கப்பிறந்தவன் மனைவிசொற்படி நடப்பவனும். நீதியில்லாதவனும், கபடியும், தனவானும், காரியநிபுணனும், ஆசவ(கள்) கிரயவிக்கிரயத்தில் நிபுணனும ஆவான். ஆஸவத்துக்குப் பொருள் வேறுவகையாகவும் கூறலாம்.

### சூரியன் - செவ்வாய்

பவேன்மஹௌஜா பலவாந்விமூடோ
காடோத் ததோஅதோ அஸத்ய வசாமநுஷ்ய:
ஸாஹஸ: சூரதரோ ஹிம்ஸ்ரோ
திவாமணௌ க்ஷோணி ஸுதாப்யு பேதே.
(ஜாதகாபரணம்)

(இ-ள்) சூரியனும் செவ்வாயும் கூடியிருக்கப் பிறந்தவன், அதிக கீர்த்தியுள்ளவனும், பலவானும், மூட அதியத்தில் வல்லவனும், அசத்திய வாதியும், சாஹஸமுடையவனும், சூரனும், வீரமுடையவனும், இம்சை செய்வோனுமாவான் எ-று.

ஓஜஸ்வீ ஸாஹஸிகோ மூர்க்கோ பலஸ்த்வ ஸம்யுதோ அந்ருதவாக்
பாபமதிர் வதநிரதோ ரவிகுஜயோஸ் ஸ்யாத் ப்ரசண்டச்ச (சாராவளி)

(இ-ள்) சூரியனும் செவ்வாயும் கூடியிருக்கப் பிறந்தவன், சாகசம், மூர்க்கம், பலம், சத்வம், பொய், பாபபுத்தி, கோபம் இவைகளை யுடையவன் ஆவான் எ-று.

### சூரியன் - புதன்

ப்ரியவசா: ஸசிவோ பஹுஸேவ யார்ஜித தநச்ச கலாகுசலோ பவேத்
சருதபுர்ஹி நரோ நலிநீபதென குமுதி நீபதிஸூநு ஸமந்விதே.
(ஜாதகாபரணம்)

(இ-ள்) சூரியனும் புதனும் கூடியிருக்கப் பிறந்தவன் பிரியவசனம் மந்திரித்வம், அதிக சேவையினால் கிடைத்த தனார்ச்சிதம், சாஸ்திரப் பிரியம், சாஸ்திரசாமர்த்தியம் இவைகளை யுடையவனாவான் எ-று.

ஸேவாக்ருத ஸ்திரதனோ ரவிக்ஞயோ: ப்ரியவசா யசோத்தஸ்ஸ்யாத்
ஆர்ய: க்ஷிதிப திதயிதஸ் ஸதாஞ்ச பலரூப வித்த வித்யாவான்.

(சாராவளி)

(இ-ள்) சூரியனும் புதனும் கூடியிருக்கப் பிறந்தவன் சேவையினால் ஸ்திரமான தனம்படைத்தவனும், பிரியமாகப் பேசுவோனும், கீர்த்தி தன முடையவனும், பூசிதனும், இராஜபிரியனும். சற்குணமுடையவர்களிற் சிறந்தவனும், பலம், சொரூபம், திரவியம், வித்தையுடையவனுமாய் வாழ்ந்திருப்பான் எ-று.

## சூரியன் - குரு

புரோஹிதத்வே நிபுணோ ந்ருபாணும்
மந்த்ரீச மித்ராப்ததந: ஸம்ருத்த:
பரோபகாரீ சதுரோ திநேசே
வாசாமதீசேந யுதே நர: ஸ்யாத். (ஜாதகாபரணம்)

(இ-ள்) சூரியனும் குருவும் கூடியிருக்கப்பிறந்தவன், அரசர்களுக்கு வருங் காரியஞ்சொலவதிலும், கிருத்தியம் செய்விப்பதிலும் நிபுணனும், இராஜ மந்திரியும், மித்திரர்களால் விசேஷ தனமுடையவனும், பிறருக்கு உபகாரஞ் செய்வதில் சதுரனுமாவான் எ-று.

பகுதர்மோ ந்ருபஸசிவ ஸ்ஸுபுத்திமாந் மித்ர ஸம்ச்ரயார்த்தாப்த:
சூர்யேப்ருஹஸ்பதியுதே பவேதுபாத்ராய ஸம்க்ஞச்ச.

(சாராவளி)

(இ-ள்) சூரியனும் குருவும் கூடியிருக்கப்பிறந்தவன் தர்மவானும், இராசமந்திரியும், புத்தியுடையவனும், மித்திரர்கள் கிடைக்கப்பெற்ற தன முடையவனும், உபாத்தியாயனும் ஆவான் எ-று.

## சூரியன் - சுக்கிரன்

ஸங்கீத வாத்யாயுதசாரு
புத்திர் பவேந்நரோ நேத்ரபலேநஹீந:
காந்தாதி யுக்த்தாப்த ஸுக்ருத்ஸமாஜ:
ஸிதாந்விதே ஜந்மநி பத்மிநீசே. (ஜாதகாபரணம்)

(இ-ள்) சூரியனும் சுக்கிரனும் கூடியிருக்கப்பிறந்தவன் கீத வாத்திய சாஸ்திரவித்தையில் சுந்தரபுத்தியுடையவனும், நேத்திரபலமில்லாதவனும் ஸ்திரீ சிநேகிதர்கள் இவைகளை யுடையவனுமாவான் எ-று.

சாஸ்த்ரப்ரஹரண வித்யாஸக்தியுதோ நேத்ர துர்பலச்சரமே
ரங்கஜ்ஞோ ரவிஸிதயோ ஸ்த்ரீஸங்கால் லப்தபத்து நச:
(சாராவளி)

(இ-ள்) சூரியனும் சுக்கிரனும் கூடியிருக்கப் பிறந்தவன் சாஸ்திர வித்தை முதலானவைகளில் நிபுணனும், வார்த்திக பருவத்தில் நேத்திரபலமில்லாதவனும், நாட்டிய கிரியைகளை அறிந்தவனும், விவாகத்தின்பின் தனம் பந்துஜனசேர்க்கை இவைகளையுடையவனுமாவான் எ-று.

### சூரியன் - சனி

தாது க்ரியா பண்ய மதிர் குணக்ஞோ
தர்மப்ரியஃ புத்ர களத்ர ஸௌக்யஃ
ஸதா ஸம்ருத்தோ அதிதராம்நரஃ ஸ்யாத்
ப்ரத்யோ தநே பாநுஸுதேந யுக்த்தே. (ஜாதகாபரணம்)

(இ-ள்) சூரியனும் சனியும் கூடியிருக்கப் பிறந்தவன், தாது கிரியா முதலியவற்றிலும் வியவகாரத்திலும் புத்தியுடையவனும், குணவானும், தருமத்தில் விருப்பமுடையவனும், மனைவி மைந்தர்களின் சௌக்யமுடையவனும், எப்போதும் அத்யந்த சம்ருத்தியுடன் கூடியவனுமாவான் எ-று.

தாதுக்ஞோ தர்மமயஸ் ஸ்வதர்மநிரதஃ ப்ராணஷ்ட ஸததாரஃ
நிஜவம்ச குணைச்சுத்தச் சநிரவ்யோர் அல்ப சீலச்ச. (சாராவளி)

(இ-ள்) சூரியனும் சனியும் கூடியிருக்கப் பிறந்தவன் தாதுகிரியையை அறிந்தவனும், தர்மமுடையவனும், மனைவி மைந்தர்களால் சுகமுடையவனும், தனது குலத்திற்கேற்ற குணவானும், அற்ப ஒழுக்கமுடையவனும் ஆவான் எ-று.

### சந்திரன் - செவ்வாய்

ஆசார ஹீநஃ குடிலப்ரதாபி
பண்யாநுஜீவீ கலஹ ப்ரியச்ச
ஸ்யாந் மாத்ரு சத்ருர் மநுஜோரு ஜார்தஃ
நேத் யுதௌ பூஸுத ஸம்யுதேவை. (ஜாதகாபரணம்)

(இ-ள்) சூரியனும் சந்திரனும் கூடியிருக்கப் பிறந்தவன் ஆசாரயீனனும், வஞ்சனும், வியாபாரத்தினால் சீவிக்கப்படாதவனும், கலகப்பிரியனும், மாதுருவிரோதியும், நோயுடையவனும், துக்கியுமாவான் எ-று.

சூரோ ரணப்ரதாபீ மல்லோ அஸ்ருக் வேதநார்த்த தேஹச்ச
ம்ருச்சர்ம தாது சில்பி கூடக்ஞச் சந்த்ர குஜ யோகே. (சாராவளி)

(இ-ள்) சூரியனும் சந்திரனும் கூடியிருக்கப் பிறந்தவன் சூரனும், யுத்தத்தில் பிரதாபமுடையவனும், நன்றாக யுத்தம் செய்வோனும், இரத்த வேதையினால் நோயுடையவனும், மந்தனும், தர்மமுதலியவைகளை சின்னப்படுத்துவோனும், கபடனும், சர்மம் தாது சிற்பத்தினால் ஜீவிப்பவனும் ஆவான் எ-று.

### சனி - புதன்

ஸத்வாக் விலாஸ தநவாந் ஸுரூபஃ
க்ரு பார்த்ரசே புருஷோ விநீதஃ
காந்தா பரப்ரீவ வக்த்தா
சந்த்ரே ஸசாநாள பகுதர்ம க்ருத்ஸ்யாத். (ஜாதகாபரணம்)

(இ-ள்) சந்திரனும் புதனும் கூடியிருக்கப் பிறந்தவன் சிரேஷ்டமான வசனனும், தனமுடையவனும், சிறந்த சொரூபமுள்ளவனும், தயையுடைய சித்தமுடையவனும், மரியாதையுடையவனும், (மனைவி) ஸ்திரீயினிடத்தில் அதிக பிரியமுடையவனும், அதிக பெரிய முகமுடையவனுமாவான் எ-று.

காவ்யகதா ஸ்வதிணஸ் ஸதநஸ்த்ரீ ஸம்மதஸ் ஸுதஸ் ஸுரூபச்சஃ
மிதவதாச் சசிபுதயோர் தர்மருசிஸ் ஸ்யாத் ஷட்குணஃ (சாராவளி)

(இ-ள்) சூரியனும் புதனும் கூடியிருக்கப் பிறந்தவன், காவியம் கதை முதலியவைகளில் நிபுணனும், தனமுடையவனும், ஸ்திரீகளை ஜெயிப்பவனும், நல்ல ரூபமுடையவனும், கூடின முகமுடையவனும், தர்மத்தில் விருப்பமுடையவனும், குணமுடையவனுமாவான் எ-று. (266)

காசம் பொதிந்த யிரவிகுரு கலைவெண் மதியங் காரிகுசன்
நேச முடனே யொருவீட்டி னிற்கி லசாசு ரனுமாகி
தேசந்தன்னி லிருந்த மன்னர் தேடும்பொருளிற் சிந்தை வைத்துப்
பூசல் புரிந்தே கைக்கொண்டு பூமிக் கரசா யிருந்திடுவன்.

(இ-ள்) பிரகாசம் பொருந்தியிராநின்ற சூரியனும் குருவும் கலைகளையுடைய சந்திரனும். சனி குஜன் இவர்கள் ஒன்றுசேர்ந்து ஒரே ராசியிலிருக்க அந்த ஜாதகன் ஒருவராலும் ஜெயிக்க மடியாத அசாசுரனாகி தேசாதிபதிகளான மன்னர்களால் சம்பாதிக்கும் பொருளின்மேல் பிரீதியுள்ளவனாகி லகுவாகக் கள்ளத்தனத்தோடு கைக்கொண்டு இப்பூமியில் மேம்பட்டவனாகவும் ராஜரீகம் புரிபவனாகவும் இருப்பான் எ-று. (267)

இருந்த கதிர்சந் திரனுச்ச மெய்தக் குருநண் டினிலிருக்கத்
திருந்து குடத்திற் சநியிருக்கச் செவ்வாய் மேதை யேழிலுறப்
பொருந்தில் ராச யோகமதாம் பொன்னும் பிருகு முச்சமதாய்
இருந்தாற் பூவிற் கரசாகி யிருப்பார் புரப்ப னெனச்சொல்லும்.

(இ-ள்) மதி சூரியன் இவ்விருவர்களும் உச்ச க்ஷேத்ரம்பெறவும், குரு கடகராசியில் உச்சம் பெறவும், கும்பத்தில் சனி ஆக்ஷிபெறவும், செவ்வாயும் புதனும் ஜெனனலக்கினத்திற்கு 7-ஆம் ராசியென்னும் கேந்திரங்களில் ஒன்றிலிருக்க அவன் நல்ல மேலான ராஜயோகத்தையே அனுபவிப்பான். குருவும் சுக்கிரனும் உச்ச க்ஷேத்ரம் பெற்றிருப்பார்களாகில் இப்பூலோகத்திற்கு மன்னனாகி அரசாண்டிருப்பான் எ-று.

(வி-ரை) மேல் எழுதிய ராஜயோகமென்பதற்கு நவக்கிரக அடவியை யோசிப்பதுடன் அஷ்டவர்க்கம் முதலியவைகளையும் ஆராய்ந்து கூறுதல் வேண்டும். (268)

சொல்லு மூன்று கிரகங்கள் சுகமா யுச்ச மானாலும்
வில்லி லரசன் மேஷத்தில் வெய்யோ னுச்ச மாயிடினும்
நல்ல பிருகு பொன்மதியு நயந்தே கூடி யேழிலுற
அல்ல லறவே புவிபுரக்கு மரச னாகுங் கண்டீரே.

(இ-ள்) எந்த ராசியிலேனும் 3-கிரகங்கள் உச்சம்பெற்றிருந்தாலும், அல்லது தனுசுராசியில் குரு ஆக்ஷியாக இருந்தாலும், உத்தமகிரகங்களான சந்திரன் புதன் குரு சுக்ரன் இவர்கள் ஒன்றுகூடி சப்தமத்திலிருந்தாலும், அந்த ஜாதகன் யாதொரு துன்பமும் இல்லாது தேசங்களை யாளப்பட்ட அரசனுவான் என்றும் சொல்வாய் எ-று. (269)

கண்ட பாக்கியா திபனுங் கருது வெள்ளியிரு வோரும்
மிண்டுசன் மத்திருந் திடினும் வேந்தன் பாக்கியாதி பத்தில்
அண்டியுறி னும்பிறர் தேசத் தரசாய்த் தனவா னுகியுமே
பெண்டதொன் றைமணம் புரிந்து பிரதா பங்கள் பெருங்குணவான்.

(இ-ள்) உடலென்று சொல்லப்பட்ட ஜெனனலக்கினத்திற்கு 9-ஆம் வீட்டிற்கு உடையவனும், குற்றமில்லாத சுக்கிரன் இவர்களிருவரும்லக்னத்திலேயே இருந்தாலும் குருவும் பாக்யாதிபதியும் 10-ல் இருந்தாலும், அன்னியருடைய தேசத்திற்கு சக்கிரவர்த்தியாவதுடன் திரண்ட செல்வத்தைப் படைத்தவனுகி ஏககளத்ர விரதனுய் கீர்த்தி சவுரியங்கள் உள்ளவனுகி உத்தமகுணம் பொருந்தியவனுகவும் இருப்பான் எ-று. (270)

குணமார்தன்மகன்மாதி கூறுஞ்சுபக்கோளுடன்கூடி
மணமார்தன்மகன்மத்தின் மருவியிருக்கின்மன்னவனும்
உணர்வாயிவர்களிருவருட ஞேரைந்தாதியுடன்கூடிப்
புணர்வாரெங்கேயிருந்தாலும் பூமிபுரக்கும்புரவலனும்.

(இ-ள்) சாந்தகுணம் நிறைந்த பெண்ணே! ஜெனன லக்கினத்திற்கு 10-ஆம் ராசியான கார்யாதிபதியும் சுகத்தை தரும் சுபகிரகம் ஒன்றுகூடி மேலே சொன்ன 10-ஆம் ராசியிலேயே இருந்தால் ராஜனுவான் என்றும் மேற்சொன்ன 10-ஆம் இராசிநாதன் சுபகிரகங்களென்னும் குரு சந்திரன் சுக்கிரன் புதன் ஆகிய இந்நால்வரில் ஒருவனுடன்கூடி பஞ்சமாதிசகிதம் பெற்று எந்த ராசியிலிருந்தாலும், இப்பூமியை அரசாளும் ராஜனுவதோடு பிரபலமுடையோனுகவும் இருப்பானென்று சொல்வாய் எ-று. (271)

புரக்கும்வாயுயோகத்தைப் புகலும்புகர்க்குங்காரிக்கு
நிரைக்குந்திரிகோணங்கடனி னிருபனிருக்கவவர்க்கைந்தில்
பரக்குமதியந்தானிருக்கப் பரிதிமதிகேந்திரத்திருக்க
விரைக்குங்குமார்முலையாளே வினவாயிதற்குப்பலன்சொல்லே.

(இ-ள்) சொல்வதற்கரிய வாசனை நிறைந்த திரவியங்களைப் பூசி முகாரவிந்தத்தை அழகுபெறச் செய்திருக்கும் பெண்ணே! சுக்கிரன் சனி இவர்கள் நின்ற ராசிக்கு திரிகோண ஸ்தானங்களில் குரு சம்பந்தப்படவும், அதற்கு 5-வது வீட்டில் பிரகாசத்தைத் தராநின்ற சந்திரனிருந்தாலும், அல்லது சூரியனும் சந்திரனும் ஜெனனலக்கினத்திற்கு 1-4-7-10-ஆம் ராசியான கேந்திரங்களிலொன்றில் இருந்தாலும் மேன்மையான யோகமென்றும் சொல்வர். அதன் பலனைச் சொல்கிறோம் கேட்பாயாக எ-று. (272)

சொல்லும்விசாலநேத்திரமுந் துலங்குன்னதமார்சொரூபனுமாய்க்
கல்வியுளனுய்த்தனவானுல் கதித்தகீர்த்திபிரபலனும்

**நல்லகுணமுந்தருமனுமாய் ஈாடுங்கிரயவிக்ரய**
**வல்லவனுமாய்ப்பரதாரம் வஞ்சித்திருக்கும்வஞ்சனுமாம்.**

(இ-ள்) *அழகுபொருந்திய பரந்த விழிகளையுடையவனும், பிரகாசம் நைந்த மேன்மையும் தேஜஸ் உள்ளவனும், அநேக வித்தைகளையுடைய வனும் பூரண செல்வத்தைப் படைத்தவனும் மேன்மையான கீர்த்தி பிரதாபங்களை யுடையவனும், நல்ல உத்தமகுணமுள்ளவனும், தருமார்த்த காரியங்களை யுடையவனும், வாங்குதல் விற்குதல் முதலிய வியாபாரம் செய்வதில் சாமார்த்தியம் உள்ளவனும், அன்னியர் களத்திர சிநேகம் உள்ள தூர்க்குணனும் ஆவான் எ-று.* (273)

*வேறு*

**வஞ்சமற்றபுதயோகஞ் சன்மத்திலிறையும்**
**மன்னவன்கேந்திரத்தின்மதி மதிக்கிரண்டிற்குசனும்**
**விஞ்சுகுசற்கொருமூன்றிற் சனியிருக்கும்பலன்கள்**
**மிகுபலசாத்திரமறிவன் விரவுபராக்கிரமன்**
**செஞ்சொல்பெறுபுத்திசா துரியன்மிகுசமர்த்தன்**
**செய்யநகரம்புரக்குஞ் சீமானுமாவன்**
**கஞ்சமுகைதமனியவெற்பும் மிபக்கோடென்னக்**
**கதித்துவிம்மும்புளகமுலைக் கன்னியரேகேளாய்.**

(இ-ள்) *மேன்மையைப்படைத்த அரம்பை ஊர்வசி மேனகை திலோத்தமையோவென்று யாவரும் அதிசயித்து மோகவலையில் ஆழ்ந்து சொக்கும்படியுள்ள முகவிலாசங்களும் அநேக வாசனைதிரவியங்களையும் அணிந்துள்ள பெண்ணே! குற்றமில்லாத புதன் யோகத்தைச் சொல்லுகிறேன் கேட்பாயாக. ஜெனனலக்கினத்தில் குருவும், குருபகவான் நின்ற க்ஷேத்ரத்திற்கு* 1-4-7-10 *என்னும் கேந்திரங்களில் சந்திரனும், சந்திரனுக்கு இரண்டாம் ராசியில் குஜனும், குஜன்நின்ற ராசிக்கு மூன்றில் சனியும் நின்றிருப்பார்களேயானால் அந்த ஜாதகன் அநேகவிதமான சாஸ்திரங்களை ஆராய்ந்து அறிபவனும், யாவரும் மெச்சத்தக்க வீரம்உள்ளவனும், அன்பும் உண்மையுமுடைய வார்த்தைகளைப் பேசுபவனும், மேன்மையான சாமார்த்தியத்தைப் படைத்தவனும், ஓர் நகரத்தைப் பரிபாலனம் செய்யும் சீமானும் ஆவான் என்றும் இதுவே புதயோகமென்றும் கூறுவாயாக எ-று.* (274)

சந்திரன்செவ்வாய்கூடிச் சத்தமத்திலிருக்கச்
சந்திரமங்களயோகந் தரணியரசாள்வன்
இந்திருக்கும்லக்கினகேந் திரத்திற்பொன்னிருக்க
இருங்கசகேசரியோக மெழில்நிறைந்தமதிக்குச்
சுந்தரஞ்சேர்லக்கினத்தா றேழெட்டாமிடத்தில்
சுபக்கிரகம்பார்க்கினிற் சொலுராஜயோகம்
பந்தமுறுலக்கினத்திற் சசிசெவ்வாயிருக்கப்
பானுகுருபத்தொன்ப துறில்ராஜயோகம்.

(இ-ள்) *இரவிற்கரசனாய் விளங்காநின்ற சந்திரனும், கந்தனென்னும் குஜனும் 7-ஆமிடமான சப்தமஸ்தானம் பெற்றிருப்பாரேயானால் சந்திர*

மங்களயோகமென்று கூறுவர். அதன்பலன் ராஜரீகம் செய்பவனுவான் உயிர்லக்கினமென்னும் சந்திரன் நின்ற ராசிக்கு 1-4-7-10-ஆம் இடமான கேந்திரங்களில் குஜனிருக்க கேசரியோகமென்றும், சுக்லபக்ஷ சந்திரனுக இருந்து அழகுபொருந்திய ஜெனனராசிக்கு 6-7-8-ஆம் இடங்களை நோக்கினுலும் அல்லது மேற்சொன்ன ராசியிலேயே இருந்தாலும் ஷை சந்திரனுடன் குரு சுக்கிரன் இவர்கள் கூடி நோக்கினும் ராஜயோகமென்றே கூறுவர். மேற்சொன்ன ஜெனனராசியில் சந்திரனும் அவனுடன்செவ்வாயும் சேர்ந்து நிற்க சூரியனும் குருவும் 9 அல்லது 10-ஆம் ராசியிலிருக்க ராஜயோகமென்றே கூறுவார் எ-று. (275)

வேறு

சோமனுர்தனக்கிரண்டிற் சனியுறிற்சுனபாயோகம்
தாமிதமாமுன்றந்தை யார்ச்சிதத்தனங்களில்லைக்
காமுறுசிறுவன்ருனுங் காசினிக்கரசனுகித்
தாமிகுதனங்கடேடித் தகுதிபெற்றிடுவன்ருனே.

(இ-ள்) சந்திரனிருந்த ராசிக்கு தனஸ்தானத்தில் சனி இருப்பாராகில் சுனபாயோகமென்றும் சொல்வர். அதன் பலன்களாவன தன் பூர்வோத்தரமான பூஸ்திதி இல்லாதவனும், இந்த ஜாதகன்மேன்மையோடு இவ்வுலகிற்கரசாக்ஷி செய்பவனுகி தன் சுய அறிவால் அநேக செல்வத்தைச் சம்பாதித்து மேன்மை பெற்றிருப்பான் எ-று. (276)

வருசசிகேந்திரன் மன்னவனிற்கவந்த
அரசன்றன்கேந்திரத்தி லம்புலிதானுநிற்கில்
விரவுமற்றிடத்தின்மற்ரோர் மேவியதோஷம்யானை
ஒருசிங்கங்கண்டவாரு மோதுகேசரியாம்யோகம்.

(இ-ள்) சந்திரன் நின்ற ராசிக்கு கேந்திரஸ்தானங்களான 1-4-7-10 என்னுமிவ்விடங்களில் சுபகோட்களில் ஒன்ருன குருவிருந்தாலும் அல்லது குருநின்ற ராசிக்கு 1-4-7-10 என்னும் கேந்திரஸ்தானங்களில் சந்திரனிருந்தாலும், கேசரியோகமென்று கூறுவர். அதன் விபரமாவது ஓர் யானையை மிருகத்தரசனுகிய சிங்கம் காணுமாயின் அந்த யானைக்கு எவ்வளவு பயமுண்டாகுமோ அதுபோன்று திடீரென தோஷம் உண்டாகும் எ-று.

இதன் விபரம் பின்வருமாறு

| | | | |
|---|---|---|---|
| அ-கு புத | குரு | சனி | ராகு |
| சுக் | கேசரி யோகம் | | |
| | | | |
| கேது | | | குரு |

| | | | |
|---|---|---|---|
| அ-பு சூரி | சுக் | சனி | ராகு |
| | கேசரி யோகம் | | சந் |
| | | | |
| கேது சந் | | | |

வேறு

இரவிக்குப்பன்னிரண்டிற் சுக்கிரன்ருன்கூடி
இருந்தக்காலதுவேசி யோகமெனவிசைப்பர்
புரவலராற்பூச்சியமு நால்வகையோசனைக்கும்
புத்திநல்லோரெல்லாம் புகழ்ந்திடுநற்புகழும்
பரவியபூமிவெகுபரப்புகளைப் புரப்பன்
பயிலுஞ்சுக்கிரன்லாபப் பதியுறினுநன்மை
விரவுதிரிகோணங்களாமைந் தொன்பானில்
வெள்ளிபுதன்குருவிருக்கில் வெகுபலனுண்டாமே.

*(இ-ள்) சூரியனிருந்த ராசிக்கு 12-ஆம் ராசியான மோக்ஷ ஸ்தானத்தில் சுக்கிரன் இருப்பாளுகில் வேசியோகமென்றும் சொல்வர், அதன் பலன் என்னவெனில் ராஜாக்களால் ஆதரிக்கப்படுவோனும், உத்தமர்கள் எல்லாம் புகழ்ச்சிசெய்து கொண்டாடத்தக்க நானுவிதமான ஆலோசனைச் செய்வதில் நிபுணனும், பெருமையோடு அளவிறந்த பூமிகளை சம்பாதிப்பவனுமாம். ஷை சுக்கிரன் 11-ஆம் இடமான லாபஸ்தானத்தில் அமர்ந்திருப்பாளுகில் மேன்மையும் நன்மையே அடைபவனுகுவன் திரிகோண ஸ்தானங்களென்னும் 5-9-ஆம் ராசிகளிலும் சுக்கிரன் புதன் இவர்களிருப்பாரேயாகில் அநேக பலன்களை யடைவான் எ-று.* (278)

வடிவுடன்கர்க்கடகத்திற் பொன்னவன்ருனிருந்து
வண்மையுடன்லக்கினத்தின் வான்சசியைப்பார்க்கப்
படிமிசையோர்காண்பார்க ளங்கிசயோகமென்றே
பலனிதற்குவெகுபலனும் பாக்கியமுமுரித்தாய்த்
துடியிடைமாதர்கள்பலரைத் துய்யகமணம்புரிந்தே
தொண்ணூற்ருரும்வயது தொடங்கவருமளவும்
கடிகமழுமலரணைமே லனுராகம்புரிந்தே
காசினியிலிருப்பனெனக் கருதிடுமிந்நூலே.

*(இ-ள்) நெண்டு என்னும் பெயரினையுடைய கடகராசியில் குரு உச்சம்பெற்று அவ்விராசிக்குச் சொந்தக்காரனை சந்திரனைப் பார்க்க ஜெனித்துள்ளவர்கள் அங்கிச யோகம் உடையோரென்றும் கூறுவர். அதன் பலன்களாவன அநேகவிதமான நற்பலனை யடைவோனும் செல்வங்களையுடையவனும், அழகுடைய பெண்களை குற்றமில்லாது மணஞ்செய்து வாழ்பவனும் 96-வயது வரையில் அழகும் வாசனையும் நிறைந்த கட்டிலின் மீது இனிமையான சங்கீதங்களைப் பாடிக்கொண்டு இப்பூமியிலிருப்பான் என இந்நூலால் அறிந்து சொல்வாயாக எ-று.* (279)

## தாராலக்கினம் அல்லது நட்சத்திரலக்கினம்

உறுசன்ம தாரகையில் சென்றநா ழிகையை
ஓரைந்தில் கழித்தபலன் உதயமுத லாகப்
பெறுஞ்சசியின் இலக்கினமாம் ஓராலக் கினமும்
பிறந்தசன்ம லக்கினமும் பிறையிருந்த வீடும்

மறுவிலா இந்நான்கு மனை உச்ச வீடாய்
வயங்கஇறை யோகம்என வேவழுத்தல் வேண்டும்
கறையகலக் கலைநிறைந்த நன்மதியம் போலும்
கமலமலர் போலுமுகக் கன்னியரே கேளாய்.

(இ-ள்) முழுமதியையும், தாமரைமலரையும் ஒத்த வதனத்தையுடைய மங்கையே கேட்பாயாக பிறந்த நட்சத்திரத்தில் சென்றநாழிகையை ஐந்து நாழிகைக்கு ஒரு இலக்கினமாக பிறந்த இலக்கினமுதல் எண்ணிக்கண்டது சந்திரன் இலக்கினமாகும். இந்தச் சந்திரன் இலக்கினமும், ஓராலக்கினமும், பிறந்த இலக்கினமும், சந்திரனிருந்த இராசியும் ஆகிய இந்த நான்கு இராசிகளிலும் உச்சம்பெற்ற கிரகங்கள் இருந்தால் இராஜயோகம் என்று கூறுதல் வேண்டும் எ-று.

(வி-ரை) கழித்தபலன்-ஐந்தால் வகுத்த ஈவு; இச்செய்யுளில் ஆசிரியர் "சன்மதாரகையில் சென்ற நாழிகையை" என்று கூறியிருப்பதனால் இது சந்திரலக்கினமல்ல, தாராலக்கின மென்பதே நிச்சயம். இதனை "சீரான நட்சத்திர லக்கினததை உரைக்கில், சென்மநட் சத்திரத்திற் சென்ற நாழிகையை, சேராம் ஐந்தைந்து நாழிகையாய்த் தள்ளி, நிலே அறிந்த தொகை அதனை அந்நாள் கனக்கே" எனவரும் சாதகசிந்தாமணி வசனத்தினால் தெளிவாக அறிந்துகொள்ளலாம். மற்றும்:—

ருக்ஷ்தீதா காரிகாவா விபக்தா: யாவந்தித்யாஸ்பு:
லக்நதேஹாரிதாவா ராசிபூயான் சந்த்ரலக்நம்
ததாதௌவா ரேசாத்யுர்வியோ: சக்ரமேதத். (ஜாதகதீபம்)

(இ-ள்) பிறந்த நட்சத்திரத்தில் சென்ற நாழிகையை ஐந்து நாழிகைக்கு ஒரு இலக்கினமாக இலக்கினமுதலாக எண்ணிக்காண்பது சந்திரலக்கினம் எனப்படும். தாரேசன் (நட்சத்திராதிபதி) முதலாக கிரகங்களை வரிசையாக எழுதிக்கொள்ளவேண்டியது எ-று.

தாராலக்கினமெனினும் சந்திரலக்கினமெனினும் நட்சத்திரலக்கினமெனினும் பொருள் ஒன்றேயாகும் சந்திரலக்கினமென்பதை சிலர் ஜனனகாலத்தில் சந்திரனிருந்த இராசியெனக் கூறுவர். மற்றும் இந்து லக்கினமென்றுங் கூறுவர். அது முறையன்று. இந்தச்செய்யுளில் ஆசிரியர் கூறிய சந்திரலக்கினம் நட்சத்திர (தாரா) லக்கினமேயன்றி உண்மை வேறில்லை.

ஓராருந் திசைநாதன் கேதுவே ஆகில்
இலக்கினந்தொட்டு அபசவ்விய மெண்ணிக்காண்பாய்
ஊராரும் இரவிமுதல் ஏழுவர் இராகுக்கும்
உதயமுதல் பார்ப்பதென வுரைத்தனர் சூத்திரமே.
(ஜாதக சிந்தாமணி)

(இ-ள்) பிறந்த நட்சத்திர தசைநாதன் கேதுவாக இருந்தால் இலக்கினமுதல் (பன்னிரண்டாமிடம் வழியாக) கிரகங்களை (கேது-சுக்கிரன்-சூரியன்-சந்திர-செவ்வாய்-ராகு-குரு-சனி-புதன் என்று வரிசையாய் ஒன்பதுவீட்டிலும்) அடைத்தல்வேண்டும். இது அசுவனி மகம் மூலத்தில்பிறந்தவர்கட்குமட்டும் உரியது. ஏனைய நட்சத்திரங்களில் பிறந்தவர்கட்கு தாரா

லக்கினத்தில் நட்சத்திர தசாநாதனைவைத்து ஷை இலக்கினத்திலிருந்து இரண்டாமிடம் வழியாக மற்றைய கிரகங்களை தசாநாதர்களின் வரிசைக் கிரமமாக அமைத்துப்பார்ப்பது நட்சத்திரசக்கரம் என்று சொல்லுவதாகும்.

உதாரணம்:—தாரண௵ ஆடி௴ 14௳ ஆதிவாரம் உதயாதி நாழிகை 1-55-ல் ஜனனம் உத்திரநட்சத்திரம் 4-ம் பாதம் ஜனனநாழிகை 5-ல் வகுக்கப்போதாமையால் இலக்கினம் கடகமாதலால் நட்சத்திரலக்கினம் கடகமேயாகும்.

## இதற்குக் கிரகநிலை வருமாறு

| | | | |
|---|---|---|---|
| சுக் | | | |
| கேது | நட்சத்திர | | லக் சூரி |
| புத | குண்டலி | | சந் |
| சனி | குரு | ராகு | செ |

## அபசவ்வியத்திற்கு உதாரணம்

| | | | |
|---|---|---|---|
| சூரி | சுக் | லக் கேது | |
| சந் | நட்சத்திர | | |
| செ | குண்டலி | | |
| ராகு | குரு | சனி | புத |

மகம் அல்லது அசுவனி மூலத்தில் பிறந்தவர்கட்கு இடபம் நட்சத்திர லக்கினமானால் அதற்குச் சக்கரம் இதுவாகும்.

இச்செய்யுளில் ஆசிரியர் "ஓரைந்தில் கழித்த பலன்" எனவும், ஜாதக சிந்தாமணி நூலுடையார் "நேராக ஐந்து ஐந்து நாழிகையாய்த்தள்ளி" எனவும், ஜாதகதீப நூலுடையார் 'காரிகாவாவியக்தா:" எனவும் பொதுவாகக் கூறியதிலிருந்து இந்த நட்சத்திரலக்கினம் ஒன்றுக்கு ஐந்து நாழிகை பிரமாணமென அறியப்படுகின்றது. ஆகவே நட்சத்திர ஆதியந்தம் இதனால் அறுபது நாழிகையென்று கொள்ளவேண்டி யிருக்கின்றது. நட்சத்திர ஆதியந்தமோ அறுபதில் கூடியும் குறைந்துமிருப்பது பிரத்தியட்சமாதலினால், நட்சத்திர ஆதியந்த நாழிகையை 12-ஆல் வகுத்த ஈவே நட்சத்திர இலக்கின பிரமாணமாகக் கொள்வதே சரியான முறையாகும்.

உதாரணம்:—அசுவனி நட்சத்திரம் ஆதியந்தம் நாழிகை 66-42, இதில் சென்ற நாழிகை 11-0, ஜனன லக்கினம் கர்க்கடகம். ஆகவே இந்

நூலாசிரியரும் ஏனையோரும்கூறியபடி ஜர்தநாழிகைக்கு ஒருலக்கினமாகக் கொள்ள 3-இராசியாயிற்று. ஜனனம் கடகமாதலால் அதிலிருந்து பார்க்க கன்னி நட்சத்திரலக்கினமாக ஏற்படுகின்றது. இரண்டாவதாக யாம் கூறிய முறைப்படி பார்க்க ஷை ஆதியந்தத்தின்படி நட்சத்திர லக்கின பிரமாண நாழிகை-5, விநாடி-33½ ஆகும். ஆகவே 2 - இராசியாகின்றபடியால் கடக முதல் பார்க்க சிங்கம் நட்சத்திர லக்கினமாகும். முதல்கூறியதுபொதுவிதி யாகும். சிறப்புவிதியின்படியே எல்லா ஜாதகங்கட்கும் அவரவர்கள் பிறந்த நட்சத்திர ஆதியந்தங்கொண்டு நட்சத்திரலக்கினம் காணுதல் முறையாகும்.

### உதார ஜாதகத்தின் நட்சத்திர சக்கரம் வருமாறு

| | | | |
|---|---|---|---|
| ராகு | செ | சந் | சூரி |
| குரு | நட்சத்திர சக்கரம் | | சுக் |
| சனி | | | லக் கேது |
| புத | | | |

ஜனன நட்சத்திராதிபதி இருந்த இராசி உச்சமானாலும்; பிரதம தசாநாதன் உச்சம்பெற்றிருந்தாலும், நீச்சம்பெற்றிருந்தாலும் மிக்க ஐஸ்வர்யமுண்டாகும். நட்பு-ஆட்சி-பெற்றிருந்தால் மத்திம ராஜயோகமுண்டாகும். அல்லது பிரதம தசாநாதனிருந்த இராசியில் உச்சம்பெற்ற கிரகங்கள் (இராசிசக்கரப்படி) இருந்தாலும், சுபகிரகங்களிருந்தாலும் அதிகஐஸ்வர்யம் உண்டாகும். சந்திர சம்பந்தமுண்டானால் அதிக ஐஸ்வரிய யோகமுண்டாகும், இதற்கு வித்தியாசமாக இருந்தால் தரித்திரமுண்டாகுமென்று அறிய வேண்டியது. மற்றும்:—

சுக்ரசந்த்ரஃ கவிச்சந்த்ரம் பச்யத்யபி த்ருதீயகே
சந்த்ராச்சுக்ரே ததச்சந்த்ரே தகவாஹநவான் பவேத். (காரிகை)

(இ-ள்) சுக்கிரனைச் சந்திரன் பார்த்தாலும், சந்திரனைச் சுக்கிரன் பார்த்தாலும், சந்திரனுக்கு மூன்றில் சுக்கிரனிருந்தாலும் மிக்க ஐஸ்வரியவானும் வாகனமுடையவனுமாவான். இந்த யோகவிஷயத்தில் சுக்கிரன் சந்திரன் ஆகிய இவ்விருவர்களுக்கு நடுவில் மிக்க பலமுடைய கிரகங்கள் இருத்தல் கூடாவாம் எ-று. இதற்கு "சுக்ர சந்த்ரயோர் மிதோ த்ருஷ்டயோஸ் விம்ஹஸ் தயோ" என்பது ஜயமுனிவர் சூத்திரவசனம் இருத்தலிற் காண்க.

### தாராலக்கின விஷயமாக காரிகை வசனம்

சந்த்ரநக்ஷத்ர பதயஸ் துங்கராசிம் உபாச்ரிதாஃ
உச்சராசி கதாவாபி ப்ரதிசந்தி ஸ்ரீயம் ந்ருணாம்
லக்நாந்நேயாத் பஞ்சபஞ்ச கடிகாஸ் தாரகா கதாஃ
நக்ஷத்ராதிபதெள கேதெள கல்பயேல்லக்முத் க்ரமாத்.

இச்சுலோகத்தின் பொருளே ஜாதகசிந்தாமணியிற் கூறியுள்ள தாரா லக்கினத்தைப்பற்றிய செய்யுள் இரண்டினது பொருளாதலின் இங்கு மொழிப்புரை எழுதவில்லை.

### ஷை இலக்கினபலன்

*ஏற்றநாள் திசைநாதன் உச்சநீசத்தில்*
*இருந்திடினும் பாக்கியவான் குருவெள்ளியுடனே*
*தோற்றமறக் கூடிடினும் வெகுசெல்வன் ஆவன்*
*சொல்லரிய நட்சத்திர லக்கினத்திலேதான்*
*மாற்றரிய பூரணசந்திரன்இருக்கும் எனும்*
*மருவும்உச்சர் இருந்தாலும் நீசர்இருந் தாலும்*
*நாற்றிசையும் புகழாக ராசயோக முமே*
*நண்ணும்என வேஉரைத்தார் ஏனமலர்த் திருவே.*

(ஜாதகசிந்தாமணி)

(இ-ள்) தாமரைமலரில் வீற்றிருக்கின்ற இலக்குமியைப்போன்றவளே! தசைநாதன் நட்சத்திர குண்டலியில் உச்சத்திலிருந்தாலும், அல்லது நீசத்திலிருந்தாலும் அச்சாதகன் பாக்கியமுடையவனாய் வாழ்வான். குரு சுக்கிரர்களுடன் சேர்ந்திருந்தாலும் அதிக ஐஸ்வரியமுடையவனாய் வாழ்வான். நட்சத்திரலக்கினத்தில் முழுச்சந்திரன் இருந்தாலும், அல்லது உச்சம் நீசம்பெற்ற கிரகங்கள் இருந்தாலும் நான்கு திக்குகளிலும் புகழ் பரவிய இராஜயோகம் உண்டென்று சோதிடப்புலவர்கள் சொன்னார்கள்.

### வேறு நூற்களில் கூறியபலன்

(1) நட்சத்திர லக்கினம் சுபக்ஷேத்திரமாய் அங்கு குரு, சுக்கிரன், புதன், பூரணசந்திரன் இவர்களில் எவரேனும் பாபசம்பந்தமின்றி யிருந்தால் அச்சாதகன் முதகிரிகாயோகம்; அல்லது அதற்குச் சமான யோகத்தை அநுபவிப்பான். புதன் சுபசம்பந்தனாக இருத்தல்வேண்டும், (இராசிசக்கிரப்படி) என்க.

(2) நட்சத்திர லக்கினத்தில் சுபர்கள் இருந்து அவர்கள் மகாதசை வந்தபோது சிறந்த தனயோகமுண்டாகும். (இராசிசக்ரப்படி) என்க.

குறிப்பு:-ஷை ஜாதகசிந்தாமணிச் செய்யுளில் பூரணச்சந்திரன் என்பது பூர்ணச்சந்திரன் என்பர் சிலர்; அது பொருந்தாது. பூரணச்சந்திரன் என்பதற்கு வளர்பிறைச் சந்திரன் என்று பொருள்கொள்ளுதலே சிறப்புடைத்தாகும். இனி இந்துலக்கினம் என்பதைப்பற்றியும், அதன் பல பிரயோசனத்தைப்பற்றியும் வேறு நூலிலிருந்து விளக்கமாக இங்கு உதாரணத்துடன் நன்கு கூறுவாம்.

### இந்துலக்கினம் கிரககளாபரிமாணம்

*ராத்ரீசஸ்யபவந்தி ஷோடசகலா ஸ்த்ரிம்சத்களாபால்வத*
*ஸ்லெளம்யஸ்யாஷ்ட களாபவந்தி ஸததஞ்சை காகளாபால்கவேரி*
*தாத்ரீஜஸ்யதுஷட்களா தசகளாஃ ப்ரோக்தாச்சவாசஸ்பதேர்*
*தைத்யாசார்ய வரஸ்யஸந்ததம்அபி ப்ரோக்தாஃ களாத்வாதச.*

(ஜாதக சிரோமணி)

(இ-ள்) சந்திரனுக்கு-16, சூரியனுக்கு-30, புதனுக்கு-8, சனிக்கு-1, செவ்வாய்க்கு-6, குருவுக்கு-10, சுக்கிரனுக்கு-12, இந்தப்படி கிரக களாபரிமாணம் ஏற்பட்டிருக்கின்றது எ-று.

லக்ராத்ஸம் ப்ரப்ருதிஸ்ம பாக்யப களாச் சந்த்ரஸ்ய ஜாதஸ்யச
ஸம்யோஜ்யாருண சங்க்யாகில ஹரோத்ஸங்க்யாதுதாம் ஸர்வதா
தச்சேஷம் கணிதஞ்சசேத் தமராசிஸ் ஸ்யாச்ச லக்ராத்விதோ:
லக்நஞ்சந்த்ரமஸத்ததேவ ததபாவே விந்ததாத் த்வாதச.

(ஜாதக சிரோமணி)

(இ-ள்) முன்சொன்ன களாசங்கியைகளை வைத்து ஜன்மலக்கினம், ஜனனலக்கினம் இவற்றின் நவமாதிகளுடைய களாசங்கியைகளைக் கூட்டி 12-ஆல் வகுத்தல் வேண்டும். அப்படி வகுக்கவந்த சேஷத்தை வைத்துச் சந்திரலக்கின முதலாக எண்ணவரும் இராசியே இந்துலக்கினம் என்னப் படும் எ-று.

இந்துலக்கின விஷயமாக இங்ஙனம் அடிக்கடி கணக்கிடும் பிரயாசத்தை நீக்குதற்பொருட்டு இங்கு ஓர் பதகம் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றது. அதைக்கொண்டு சுலபமாக இந்துலக்கினத்தை அறிந்துகொள்ளலாம். இந்துலக்கினமென்பதை சில்லோர் சந்திரனிருந்த இராசியே யாமெனக் கூறுவர். 'இந்து' என்ற பெயர் சந்திரனுக்கு உரித்தானபடியால் இங்ஙனம் கூறுகிற்பர் அன்னோர் என்க. இது முறையெனினும் "இந்து லக்கினம்" என்ற பிரயோகத்தினால் சந்திர லக்கினம் வேறு, இந்து லக்கினம் வேறு, எனக் கொள்ளுதல் சிறப்புடைத்தாம். தாரா லக்கினத்தை இந்நூலாசிரியர் சசிலக்கினமென்று கூறினாராயினும் அதுவேறு, சந்திரலக்கினம் வேறு எனக் கருதுதல்வேண்டும். மற்றும் இந்நூலில் இத்தகைய பிரயோகம் வரும் இடங்களில்மட்டும் சந்திர லக்கினமென்றே பொருள் கோடல் சிறப்புடைத்தாம்.

ஜாதகங்களைக்கொண்டு இராஜயோகபலன்களை அறிந்துகொள்வதற்கு ஒவ்வொரு பல சாஸ்திரங்களிலும் தனியே இராஜயோக அத்தியாயம் என்று கூறப்பட்டிருக்கின்றது. எல்லா ஜாதகங்களிலும் இராஜயோகம் அமைவது துர்லபம். ஆதலின் அவ்வழி பிரயாசமெனக்கருதி அவரவர்கள் ஜாதகத்தில் எந்தக் கிரகதசை பிரபல யோகத்தைக் கொடுக்கு மென்பதை மட்டும் மக்கள் அறிந்துணரும்படி மகான்கள் சோதிட சாஸ்திரத்தில் 'இந்து லக்கினம்' என்ற ஓர் விதியை அருட்செய்திருக்கின்றனர். இது விஷயம் நந்தாய்மொழியில் தற்காலத்துள்ள எந்தச் சோதிட நூற்களிலும் காணப்படவில்லை. வடமொழியிலுள்ள ஜாதகசிரோமணி என்னும் நூலிலும் பிற நூல்களிலுங் காணப்படுகின்றன. இந்துலக்கினத்தை அறிந்துகொள்வதற்கு முக்கியமானது கிரகங்களினுடைய களா(கிரண) நிர்மாணமொன்றே யாகும். கலை + கிரணம் + களா + ஒளி என்பது பிரகாசம் என்னும் ஒரே அருத்தத்தைக் கொடுக்கும் பதங்களாகும்.

அவ்வித பிரகாச பிரமாணங்கள் வருமாறு:—

சூரியன்-30, சந்திரன்-16, செவ்வாய்-6, புதன்-8, குரு-10, சுக்கிரன்-12, சனி-1 என்பவைகளாகும். இவ்வித கிரண பிரகாசத்தைக் கொண்டு

அவரவர்கள் ஜனன சந்திர லக்கினங்களுக்கு ஒன்பதாமாதிபர் யாரென்பதை அறிந்து அவ்விருவர் கிரணபிரகாசங்களைக்கூட்டி 12-ஆல் வகுத்த மீதத்திற்கு சந்திர லக்கினமுதலாக எண்ணிகண்ட ராசி எதுவோ அதுவே இந்துலக்கினம் எனப்படும். இப்படி அடிக்கடி கணக்கிடுவதில் பிழையும், பிரயாசமும் ஏற்படுமென்பது கருதி பதகமுறையாக சுத்தமாய்க் காட்டப்பட்டிருப்பதை விவேகிகள் நன்குணர்ந்து பலம்பெறுவார்களாக.

| ஜனன லக்கினம் | சந்திர லக்கினம் | | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| | மே | ரிஷ | மிது | கட | சிம் | கன் | துல | விர் | தனு | மக | கும் | மீன |
| மேஷ-கடகம் | விர் | மீன | மே | கும் | விர் | மிது | மீன | தனு | மீன | மிது | விர் | மிது |
| ரிஷப-மிதுனம் | கும் | மிது | கட | ரிஷ | கும் | கன் | மிது | மீன | மிது | கன் | கும் | கன் |
| சிம்-தனு-மீன | கட | விர் | தனு | துல | கட | கும் | விர் | சிம் | விர் | கும் | கட | கும் |
| கன்னி-கும்ப | மக | ரிஷ | மிது | மே | மக | சிம் | ரிஷ | கும் | ரிஷ | சிம் | மக | சிம் |
| துலா-மகரம் | கன் | மக | கும் | தனு | கன் | மே | மக | துல | மக | மே | கன் | மே |
| விர்ச்சிகம் | ரிஷ | கன் | துல | சிம் | ரிஷ | தனு | கன் | மிது | கன் | தனு | ரிஷ | தனு |

உதாரணம்:—கடகம் ஜனனலக்கினமும், கன்னி சந்திரலக்கினமுமானால் இந்து லக்கினம் என்னவெனின்? முறையே 9-க்குடையவர்கள் குருவும் சுக்கிரனும் ஆவர். இவர்கள் கிரணம் 10 + 12 = 22 ÷ 12 மீதம் 10 ஆகவே கன்னிமுதல் 10-வது மிதுனம் இந்துலக்கினம் என்பது நிச்சயம்.

இவ்வித பிரயாசமின்றி மேலே காட்டப்பெற்ற சக்கரத்தில் கடகம் கன்னிக்கு நேராகப் பார்த்தால் மிதுனம் என்று நன்கு அறியலாம். ஜாதக சாகரத்தில் ஒவ்வொரு விஷயங்களும் இம்மாதிரியே வெகு சுலபமாக அறியும்படி எல்லாம் பதக முறையாகவே காட்டப்பட்டிருக்கின்றன.

இந்து லக்கினத்தின் பிரயோசனம் என்னவெனின்?

அவரவர்கள் இந்துலக்கினத்தில் எந்த கிரக மிருக்குமோ அந்த கிரக தசை வரும்போது இராஜயோகமுண்டாகும். ஆனால் இவ்வித கிரகங்கள் சுபகிரகமானால் பிரபல இராஜயோகம். பாபகிரகமானால் சாமான்ய இராஜயோகமும் உண்டாகும். அப்படி பார்க்கும்போது இந்துலக்கினத்தில் ஏதேனும் கிரகமில்லாவிட்டால் அதைப் பார்த்த கிரகதசையிற் சாமான்ய யோகத்தைத் தருமென்றறிக.

## இந்து லக்கின பலன்

1. இந்து லக்கினத்தில் சுபக்கிரக மிருந்தால் அச்சாதகனுக்குத் திடீரென தனப்பிராப்தி யுண்டாகும்.

2. இந்து லக்கினத்தில் குரு சுக்கிரன் பூரணசந்திரன் இவர்களில் யாரேனும் ஒருவர் இருந்தால் அச்சாதகன் முத்திரிகாயோகம் அல்லது அதற்குச் சமமான யோகத்தை அனுபவிப்பான்.

3. இந்நலக்கினத்தில் உச்சம்பெற்ற சுபகிரகங்களிருந்தால் அச்சாதகன் மகா தனவந்தனுயிருப்பான்.

4. இந்நலக்கினத்தில் ஒரு சுபகிரகமிருந்து அவன் மகாதசை வரும்போதும், இந்நலக்கினத்தில் இராகுவைத் தவிர்த்த ஏனைய பாவக்கிரகங்களிருந்து அவர்கள் மகாதசை வரும்போதும் தனயோகமுண்டாகும்.

5. இந்நலக்கினம் சுபக்ஷேத்திரமாய் அங்கு குரு சுக்கிரர்களாவது, பூர்ணசந்திர சுக்கிரர்களாவது, சுக்கிர புதர்களாவது, குரு பூர்ணசந்திரனுவது, குரு-புதனுவது இருந்து பாபசம்பந்தமும், பாச புஜங்க திரேகாண தோஷங்களும் இல்லாதிருந்தால் அச்சாதகன் கோடீஸ்வரனுக வாழ்ந்திருப்பான் என்பதாம்.

6. இந்நலக்கினத்தில் சுபக்கிரகங்களிருந்தால் அச்சாதகன்வெள்ளி பாத்திரத்தில் போஜனம் செய்வான் என்ப.

உச்சக்ரஹை லக்ஷதநாதிகாரி ராஜாசுபே பாபககே திவஷ்ட:
கைர்விஹீநே லதிசேத் தரித்ரச் சுபைர் அகர்தை: ப்ரபுர் இந்துலக்நே.
(கிரந்தாந்தரம்)

(இ-ள்) இந்நலக்கினத்தில் உச்சகிரகங்களிருந்தால் இலட்சாதிகாரியும், சுபக்கிரகமிருந்தால் இராஜனும், பாபக்கிரகமிருந்தால் குரூரனும், இரகங்களே யில்லாவிட்டால் தரித்திரனும், அதிக சுபக்கிரகங்களிருந்தால் பிரபுவும் ஆவான் எ-று. (280)

ஓரா லக்கினங் கடிகா லக்கினம் உதித்த சன்மம்
நேராயிம் மூன்று வீடும் உச்சமாய் நின்றோர் காணப்
பாராளும் ராஜ யோகம் இருமனை பராக்கின் மன்னும்
பேராய்ஓர் மனையைக் காணில் தனவானும் பேசுங் காலே.

(இ-ள்) ஓரைலக்கினம் கடிகைலக்கினம் ஜனனலக்கினம் ஆகிய இந்த மூன்று இலக்கினங்களையும் உச்சம்பெற்ற கிரகங்கள் பார்த்தால் உலகத்தை அரசாளும் இராஜயோகமுண்டாம். அம்மூன்றனுள் இரண்டு இலக்கினங்களைப் பார்த்தால் சாதாரண இராஜயோகமுண்டாம.ஒருலக்கினத்தை மட்டும் பார்த்தால சாதாரணமான தனயோகமுண்டாம் எ-று.

(வி-ரை) இது விஷயமாய் ஜயமுனிவர் "ஜந்மகால கடிகாஸ் வேகத்ருஷ்டாஸ-ராஜாக:' என்ற தமது சூத்திர வசனத்தில் இச்செய்யுட் கருத்தை திட்பநுட்பமாக சுருங்கச்சொல்லி விளக்கவைத்திருக்கின்றார்.

மற்றும்;—உரைத்தலக் கினத்தோ டோரைலக் கினத்தை
உயர்பெறு கடிகைலக் கினத்தை
நிரைத்தொரு கோளே பார்க்கின்மன் னவனும்
நிகர்இரு ராசியைப் பார்க்கில்
துரைத்தன கர்த்தன் ஓர்இரா சியினைத்
துடர்சுப திருட்டியாய்ப் பார்க்கில்
தரைக்குள்வாழ் வுடைய திருகத்தன் எனவே
சாற்றினர் அரிவையர்க்கு அரசே. (ஜாதக சிந்தாமணி)

(இ-ள்) பெண்களுக்குத் தலைமைவாய்ந்த பெண்ணே! முன்பு சொன்ன ஜனனலக்கினம் ஹோரலக்கினம் கடிகைலக்கினம் ஆகிய இவை மூன்றையும் ஒரு கிரகம் பார்க்குமானால் இராஜயோகமுண்டாம்; இரண்டு இலக்கினங்களைப் பார்க்குமானால் அரசாங்க தனகர்த்த(சேனாதிபதி) யோகமுண்டாம்; ஒரு இராசியைப் பார்த்தால் இந்த உலகத்தில் சிறந்த வாழ்க்கையுடைய கிருகஸ்தன் என்னும் யோகமுண்டாம் என்று சோதிட விற்பன்னர்கள் கூறினார்கள் எ-று.

இந்நூலாசிரியரதும், சாதகசிந்தாமணி நூலாசிரியரதும், அபிப்பிராயம் சிறிது மாறுபடக் காணப்படுகின்றது. இந்நூலாசிரியர் உச்சம்பெற்ற கிரக பார்வை சிரேஷ்டமெனக் கூறியிருக்கின்றார் என்க.

விலக்நங் கடிகா லக்நம் ஹோராலக்நாநி பச்யதி
உச்சக்ரஹோ ராஜயோகீ லக்நத்வம் அதா அபிவா.

(ஜாதக தீபம்)

(இ-ள்) இலக்கினம் ஹோராலக்கினம் கடிகாலக்கினம் ஆகிய இந்த மூன்று லக்கினங்களையும் உச்சம்பெற்ற கிரகங்கள் பார்த்தால் இராஜயோகம் அவசியமுண்டாம். இரண்டு லக்கினங்களைப்பார்த்தால் இராஜயோகமுண்டாம்.

ஜந்மகால கடீ லக்நேப் ஏகேநைவ வீக்ஷிதாது
துஷ்டக்ரஹார்களாபாவே ராஜயோகோ நஸம்சய: (காரிகை)

(இ-ள்) ஜனனலக்கினம் கடிகாலக்கினம் ஹோராலக்கினம் இவைகள் மூன்றையேனும் இரண்டையேனும் ஒருகிரகம் துஷ்டகிரக அர்க்களயோகமின்றிப் பார்க்குமானால் இராஜயோகமுண்டாகும் எ-று.

அர்க்களயோகவிஷயத்தை நமது சோதிட குப்புசுவாமியத்தில் நன்கு அறியலாம். அல்லது சோதிடகலாநிதி 2-3-வது தொகுதிகளில் காணலாம்.

இந்த யோகத்தில் பார்க்கும் கிரகம் உச்சத்திலிருந்தாலும், அல்லது சுபனானாலும், சிறந்த உத்தம இராஜயோகமுண்டாகும். நீசமானாலும் அல்லது பாபனானாலும் மத்திம இராஜயோகமுண்டாகும் என்று அறியவும். இந்நூலாசிரியர் கடிகாலக்கினங் காணும் வழியைக் கூறாது விடுத்தமையால் வேறு நூற்களிலிருந்து அதனை இங்கு எடுத்து விளக்குவாம்.

கடிகாலக்கினம்:—

கடீலக்நம் ப்ரவக்ஷ்யாமி ச்ருணுத்வம் த்விஜஸத்தம
சூர்யோதயாத் ஸமாரப்ய ஜந்மகாலா வதிக்ரமாத
யாவந்த்யோ கடிகாஜாதாஸ் தந்மத்யே சார்க்கபாஜிதா
ஏகைக கடிகாவிப்ர ஏகைகம்லக்நஸம்க்ஞிக:
யாதஸ் திஷ்டேச் சிஷ்டகடீர் கணயேஜ் ஜந்மலக்நத:
யோராசிரந்திமோ லப்தஸ் ஸராசி கடிகா தநு:

(பிருகத் பராசர ஹோரை)

(இ-ள்) விப்பிர உத்தமனே! கடிகாலக்கினத்தைக் கூறுகின்றேன் கேட்பாயாக: சூரியோதயமுதல் ஜனனகாலம்வரையில் சென்ற கடிகை (நாழிகை) களை 12-ஆல் வகுத்த மீதம் ஒரு நாழிகைக்கு ஒரு லக்கினமாக

ஜனனலக்கினமுதலாக எண்ணவரும் இராசி எதுவோ அதுவே கடிகாலக்கி னம் என்று அறியவேண்டியது எ-று.

*லக்நாதேச கடீமாத்ரம் யாதிலக்நம் திநே நிசே*
*பரந்து கடிகாலக்நம் கீர்த்திசேத் காலவித்தம* (காரிகை)

ஸ்பஷ்டார்த்தம்:—

*உன்னிய கடிகா லக்கினம் உரைக்கில் உதயாதி நாழிகை தன்னை*
*மன்னிய வுதய மோசைய தாகில் வந்தலக் கினமுத லெண்ணல்*
*சொன்னலக் கினமே யுக்கும மாகில் தொடர்ச்சியாய சவ்விய மாகப்*
*பன்னியே பார்த்தல் சயமுனி புரைத்த பழுதிலாச் சூத்திர முறையே.*

என ஜாதக சிந்தாமணி நூலுடையார் ஓசை யுக்குமமெனக் கூறியதில் இரண்டுக்கும் இலக்கினமுதல் சவ்வியமாகப் பார்த்தல் வேண்டுமென்பதே பொருளாகும். ஓசைக்கு கிரமமாகவும், உக்குமத்திற்கு அபசவ்வியமாகவும் கொள்ளவேண்டியதென சிலர் பொருள்கூறுவர்; அதுபொருந்தாது. (281)

## சந்திர அதியோகம்

சோமனுக்கு ஆறேழ் எட்டில் சுபக்கிர கங்கள் நின்றால்
பூமலி அதிக யோகம் இதன்பலன் புகலுங் காலை
நேமியோன் சவுரி யங்கள நிறைசீவன் பலமும் உள்ளான்
தீமையாம் பகையை வெல்லுஞ் சேனாதி பதியும் ஆவான்.

(இ-ள்) சந்திரனுக்கு 6-7-8-ஆவது வீடுகளில் சுபக்கோட்கள் நின்றால் அச்சாதகன் அதற்குச் சந்திர அதியோகம் என்று பெயர். இதன்பலனாவது அரசனும், வீரமுடையவனும், தீர்க்காயுளுடையவனும், பலமுடையவனும், கொடிய பகைவர்களை அடக்கி வெற்றிபெறும் சேனைத்தலைவனும் ஆவான்.

(வி-ரை) நேமி-பூமி, சௌரியம்-வீரம், நிறைசீவன்-தீர்க்காயுள்.

*ஸௌம்யைஸ் ஸ்மராரி நிதநேஷ்வதியோக*
*இந்தோஸ்தஸ்மிம் ச்சமூபஸசிவ க்ஷிதிபாலஜந்ம*
*ஸம்பத்தி ஸௌக்யவிபவா ஹதசத்ரவச்ச*
*தீர்க்காயுஷோ விகதரோக பயாசசஜாதா:* (ஜாதக பாரிஜாதம்)

(இ-ள்) சந்திரலக்கினத்திற்கு 6-7-8 இந்த இடங்களில் சுபக்கிரகங்கள் இருந்தால் அதற்குச் சந்திர அதியோகம் என்று பெயர். அதன்பலன் அரசன் அல்லது மந்திரியும், நல்ல சௌக்கியங்களை யுடையவனும், பகைவர்களை வெல்லுவோனும், தீர்க்காயுளையுடையவனும், ரோகமில்லாதவனும் ஆவான் எ-று.

*ஸௌம்யைஸ் ஸ்மராரி நிதநேஷ்வதி யோகஇந்தோ:*
*தஸ்மிச்சமூப ஸசிவ க்ஷிதிபாலஜந்ம*
*ஸம்பக்ஸௌகயவிபவா ஹதசத்ரவச்ச*
*தீர்க்காயுஷோ விகதரோகபயாச்ச ஜாதா:* (பிருகஜ்ஜாதகம்)

(இ-ள்) சந்திரனுக்கு 6-7-8-வது இடங்களில் சுபக்கிரகங்களிருந்தால் சந்திராதியோகமாகும். இந்த யோகத்தில் அரசன் மந்திரி சேனாதிபதி

இவர்களின் ஜனனம் ஏற்படுகின்றது. மேலும் இந்த அதியோகத்தில் பிறந்தவர்கள் அதிக சௌக்கியம் பொருள் சத்துருஜயம் நிர்க்காயுள் ரோகமின்மை இவைகளை யுடையவர்களாய் வாழ்வார்கள் எ-று.

சுப பாப மிசிர அதியோகம்:

ஷட்ஸப்தமாஷ்டஸ் தைச்சந்த்ராத
ஸௌம்யைச் சுபோ அதியோகஸ் ஸ்யாத்
பாபை: பாபைரேவம் மிச்ரைர்
மிச்ரச்சஸ்தகைர்லோக்தா: (சுருதகீர்த்தி)

(இ-ள்) சந்திரனுக்கு 6-7-8-ல் சுபக்கிரகங்களிருந்தால் சுபஅதியோகமென்றும், பாவக்கிரகங்களிருந்தால் பாவஅதியோகமென்றும், சுபபாவக்கிரகங்கள் கலந்து இருந்தால் மிசிரஅதியோகமென்றும் சொல்லப்படும்.

ஷிதகம் த்யூனம்ஷஷ்டம் சந்த்ரஸ்தானாத்ய தாசுபைர்யுக்தம்
அதியோகஸ் ஸப்ரோக்தோ வ்யாஸக்ருதேன ஸப்ததாபூர்வை:
(சுருதகீர்த்தி)

(இ-ள்) சந்திரனுக்கு 6-7-8-ல் சுபக்கிரகங்களிருந்தால் அதியோகம் எனப்படும். இது எழுவகைப்படும்.

அஃது எப்படி எனின்?

| | | |
|---|---|---|
| சந்திரனுக்கு | 6-ல் எல்லாச் சுபர்களும் இருப்பது | 1 |
| ,, | 7-ல் எல்லாச் சுபர்களும் (புதன் குரு சுக்கிரன்) இருப்பது | 2 |
| ,, | 8-ல் எல்லாச் சுபர்களும் இருப்பது | 3 |
| ,, | 6-7-ல் எல்லாச் சுபர்களும் இருப்பது | 4 |
| ,, | 6-8-ல் எல்லாச் சுபர்களும இருப்பது | 5 |
| ,, | 7-8-ல் எல்லாச் சுபர்களும் இருப்பது | 6 |
| ,, | 6-7-8-ல் தனித்தனி ஒவ்வொரு சுபக்கிரகங்கள் இருப்பது | 7 |

இப்படி எழுவகைப்படும் எ-று.

புதன்-குரு-சுக்கிரர்களாகிய சுபர்கள் முற்கூறிய ஸ்தானங்களில் பூரண பலமாயிருக்கப் பிறந்தவன் அரசனும், மத்திம பலமாயிருக்கப்பிறந்தவன் மந்திரியும், அதமபலமாயிருக்கப்பிறந்தவன் சேனாபதியும் ஆவான் என்பதாம்.

சசிந: ஸௌம்யா: ஷஷ்டே த்யூனே வா ஷிதா ஸம்ஸ்திதாவாஸ்யு:
ஸ்யாததியோகோஜாத: ஸௌம்யை: ஸபலைர் தராதீச:
மத்யபலைர் மந்த்ரீஸ்யாத் அதமபலை: ஸைன்யநாயக: ஸஸ்யாத்.
(பிருகத் பராசர ஹோரை)

(முன் கூறிய பொருள் இதில் விளக்குதல் காண்க.)

ஷஷ்டம் த்யூனம் அதா அஷ்டமம் இமிரகோ:
ப்ராப்தாஸ் ஸமஸ்தாச் சுபா:

க்ரூராணும் யதிகோசரே சுபதிதா
பார்வாலயாத் அரதீ,
பூபாலீ பாபவேத் யஸ்யஜலநேர் வேலா
வகார்நோத் பலைவஸ்
லோகாமத்த கீர்த்ராதார ஸலிலம்
ப்ருஸ்வைகர் முஹூ: பீயதே. (சாராவளி)

(இதற்கும் முதற்சுலோகத்தின் பொருளேயாகும்)

ப்ராப்னோதி ஜராமாசு கோபஜத்ய ரிநேரபயம்
ஜாதஸ்ஸ்யாத் அதியோகே அஸ்மிர்
த்ருதிஸௌ பாக்ய ஸௌக்யபாக். (சாராவளி)

(இ-ள்) இந்த சந்திர அதியோகத்தில் பிறந்தவன் சேக்ரத்தில் கிழத் தன்மையை அடைவான். சத்ருபயமுடையவனுக இருப்பான். தைரியம் சௌபாக்கியம் சௌக்கியமுடையவனுக இருப்பான் எ-று

## இலக்கின அதியோகம்

லக்நாத் அரி த்யூந க்ருஹாஷ்டமஸ்தைச்
சுபைர்ந பாபக்ரஹயோக த்ருஷ்டை:
லக்நாதி யோகோபவதி ப்ரஸித்த:
பாபைஸ ஸுகஸ்தாந விவர்ஜிதைச்ச. (ஜாதக பாரிஜாதம்)

(இ-ள்) இலக்கினத்திற்கு 6-7-8-ல் சுபக்கிரகங்கள் பாவகிரகங்களுடைய நோக்கம், சம்பந்தமில்லாமலிருக்க, 4-ஆமிடமும் அப்படியே இருக்கின் இதற்கு இலக்கின அதியோகம் என்று பெயர் எ-று.

லக்நாதியோகே பஹுசாஸ்த்ரகர்த்தா
வித்யாவிநீதச்ச பலாதிகாரி
முக்யஸ்து ஸ்ஞ்காபடி கோமகாத்மா
லோகேய சோஷித்த குணைர்விதஸ்ஸ்யாத். (ஜாதக பாரிஜாதம்)

(இ-ள்) இலக்கினுதியோகத்தில் பிறந்தவர்கள் அநேக சாஸ்திரங்களுக்கு அதிகாரியும், வித்யாவினயமுடையவரும், பலாதிகாரியும், முக்கியரும், கபடமில்லாதவரும், ஜனங்களுக்குள் கீர்த்திசம்பத்துடையவரும்; மகாத்மாவுமாக இருப்பார்கள் எ-று.

லக்நாத் ஷஷ்ட மத அஷ்டமேயதி சுபா: பாபைர்நயுக்தேக்ஷிதா:
மந்த்ரீ தண்டபதி: க்ஷிதேர் அதிபதி ஸ்திரீணும் பஹுநாம்பதி:
தீர்க்காயுர் கதவர்ஜிதோ கதபயோ லக்நாதியோகோபவேத்
சச்சீலோ யவநாதிராஜகதிதோ ஜாத: புமான் ஸௌக்யபாக்.
(சாராவளி)

(இ-ள்) இலக்கினத்திற்கு 6-7-8-ல் சுபகிரகங்கள் பாபகிரகங்களுடைய பார்வை சம்பந்தமில்லாமலிருந்தால் இலக்கின அதியோகம் எனப்படும். இதிற்பிறந்தவர்கள் அரசன் மந்திரி சேனாதிபதி, அநேக ஸ்திரீகளுக்கு ஆதிபத்யம், தீர்க்காயு சௌக்கியம் சுசீலம் பயமின்மை இவைகளை யுடையவர்களாய் வாழ்வார்கள் எ-று.

லக்னாச்ச தாராஷ்டமகேஹ ஸமஸ்தை:
சுபைர்ந பாபக்ரஹ யோகத்ருஷ்டை:
லக்னாதியோகே பஹுசாஸ்த்ர கர்த்தா
வித்யாவினீதச்ச பலாதிகாரீ
முக்யஸ்து ஷஷ்டாபடிகோ மகாத்மாலோகே
யதோவித்த குணாதிக: ஸ்யாத்.

(பிருகத் பராசர ஓரை)

(முன் சுலோகப்படியே பொருளாகும்.) (288)

## அனபாயோகம்

இந்துவுக்கு இரண்டாம் வீட்டில் இனியகோள் இருந்த காலை
முந்திய சுனபா யோகம் இதன்பலன் மொழியுங் காலை
சந்ததந் தனவான் ராஜ சன்மானன் புத்தி யுள்ளான்
சுந்தரப் புவிகள் எங்கும் துதித்திடும் கீர்த்தி மானும்.

(இ-ள்) சந்திரனுக்கு 2 வது வீட்டில் சுபக்கிரகங்கள் இருந்தபோது அதற்குச் சுனபாயோகம் என்று பெயர். இதன்பலனைச் சொல்லுமிடத்து அச்சாதகன் எப்போதும் தனமுடையவனும், அரசர்களால் சன்மானம் பெறப்பட்டவனும், சிறந்த புத்தியுடையவனும், உலகோர் புகழத்தக்க கீர்த்தியுடையவனுமாய் வாழ்வான் எ-று.

ஹித்வாஅர்க சுநபா அநபா துருதராஸ் ஸ்வாந்த்யோ
உபயஸ்தை க்ரஹை: சீதாம்சோ: கதிதா அர்யதா
து பஹுபி: கேமத்ருமோ அர்யைஸ்த்வவெள. (பிருகஜ்ஜாதகம்)

(இ-ள்) சந்திரனுக்கு இரண்டு அல்லது பன்னிரண்டாம் வீட்டில் சூரியனைத் தவிர்த்த ஏனைய குஜாதிகிரகங்களிருந்தால் சுனபாயோகமென்றும், அனபாயோகமென்றும், 2-12-ல் குஜாதி கிரகங்களிருந்தால் துருதுரா யோகமென்றும், 2-12-ல் கிரகங்கள் இல்லாவிட்டால் கேமத்துருமயோகம் என்றும் சொல்லப்படும் எ-று.

(வி-ரை) சந்திரனுக்கு 2-ல் அல்லது 12-ல் அல்லது 2-12-ல் குஜாதி கிரகங்களில் ஒவ்வொருவர் இருந்தால்தான் இந்த சுனபா அனபா துருதுரா யோகங்கள் என்று எண்ணுதல் கூடாவாம். ஒருவர் இருப்பினும், பலரிருப்பினும் இந்த யோகங்கள் உண்டென்று அறிதல்வேண்டும். பட்டோத்பலர் சுனபாயோகத்தில் 31-பிரிவுகளும், அனபாயோகத்தில் 31-பிரிவுகளும், துருதுராயோகத்தில் 180-பிரிவுகளும் இருக்கின்றதென்பதை விளக்கிக் காட்டினரேயன்றி அவ்வித யோகப்பிரிவுகளுக்குத் தனித்தனி பலத்தன்மையை எழுதினாரில்லை. ஆதலின் அவைகளை விரிவஞ்சியும், அவற்றிற்குத் தனித்தனி பயன் எழுதாமைநோக்கியும் இங்கு எழுதவில்லை என்க. இந்த 242-வகை தனித்தனி யோகங்களின் பிரிவை சுருக்கமாக பதகமூலமாக விளக்கி இங்கு எழுதப்படும். அதனை நோக்கி வித்தியார்த்திகள் தெளிவாக அறிந்துகொள்ளலாம்.

## சுனபாதி யோகச் சக்கரம்

(சந்திரனுக்கு)

| எண் | 2-ல் குஜாதி களில் சுனபா யோகம் | 12-ல் குஜாதிக ளில் அனபா யோகம் | துருதுராயோகம் 2-12-ல் குஜாதிகளில் | துருதுராயோகம் 12-2-ல் குஜாதிகளில் |
|---|---|---|---|---|
| | 1 | 2 | 3 | 4 |
| 1 | 2-ல்ஒருவர் | 12-ஒருவர் | 2-ல்ஒருவர், 12-ல்ஒருவர் | 12-ல்ஒருவர், 2-ல்ஒருவர் |
| 2 | 2ல் இருவர் | 12- இருவர் | 2-ஒருவர், 12-இருவர் | 12-ஒருவர், 2-இருவர் |
| 3 | 2-ல் மூவர் | 12-ல்மூவர் | 2-ஒருவர்‘ 12-மூவர் | 12-ஒருவர், 2-மூவர் |
| 4 | 2ல் நால்வர் | 12-நால்வர் | 2-ஒருவர், 12-நால்வர் | 12-ஒருவர், 2-நால்வர் |
| 5 | 2-ல் ஐவர் | 12-ல்ஐவர் | 2-இருவர், 12-ஒருவர் | 12-இருவர், 2-ஒருவர் |
| 6 | | | 2-இருவர், 12-இருவர் | 12-இருவர், 2-இருவர் |
| 7 | | | 2-இருவர், 12-மூவர் | 12-இருவர், 2-மூவர் |
| 8 | | | 2-மூவர், 12-ஒருவர் | 12-மூவர், 2-ஒருவர் |
| 9 | | | 2-மூவர், 12-இருவர் | 12-மூவர், 2-இருவர் |
| 10 | | | 2-நால்வர் 12-ஒருவர் | 12-நால்வர், 2-ஒருவர் |

உதாரணம்:—

இந்த சுனபாதியோகப் பதகத்தில் 1-வது பத்தியில் 4-வது எண்ணுக்கு நேர் சந்திரனுக்கு 2-ல் குஜாதிபஞ்சகிரகங்களில் நால்வர் இருந்தால் என்பதற்கு யாரேனும் நால்வர் இருந்தால் என்பது பொருளாகும்.

அவை வருமாறு:—

செவ்வாய் - புதன் - குரு - சுக்கிரன்
செவ்வாய் - புதன் - குரு - சனி
செவ்வாய் - புதன் - சுக்கிரன் - சனி
செவ்வாய் - குரு - சுக்கிரன் - சனி
புதன் - குரு - சுக்கிரன் - சனி

இப்படியாக இருப்பதென்று அறிக.

உதாரண யோகம் எந்தெந்த கிரகங்களால் ஏற்படுகின்றனவோ, அந்தந்தப் பெயர்களைப் பெறும்.

அவை வருமாறு:—

செவ்வாய் புதன் குரு சுக்கிரர்களால் ஏற்பட்ட யோகமானால் "குஜ புத குரு சுக்கிர சுனபாயோகம்" என்றும், வேறு கிரகங்களினால் ஏற்படின் அக்கிரக பெயர்களுடன் கூடிய சுனபாயோகமென்றும் அறிதல்வேண்டும். இந்த யோகத்திற்குத் தனியே பலன் பூர்வ நூலாசிரியர்களால் எழுதப்படவில்லை. ஆதலால் இந்த குஜாதி கிரகங்களுக்கு உரிய தனித்தனி சுனபாதி யோக பலன்களைக் கூட்டிப் பலன் சொல்லவேண்டியது அறிவுடைப் பெரியோர்தம் கடமையாகும்.

(இந்த யோகங்களின் பிரிவுகளாவன)

| | | |
|---|---|---|
| 1. 2-ல் ஒருவர் 12-ல் ஒருவர் இருப்பதனுல் | 20 | வகை |
| 2. 2-ல் ஒருவர் 12-ல் இருவர் இருப்பதனுல் | 80 | ,, |
| 12-ல் ஒருவர் 2-ல் இருவர் இருப்பதனுல் | 80 | ,, |
| 3. 2-ல் ஒருவர் 12-ல் மூவர் ,, | 20 | ,, |
| 12-ல் ஒருவர் 2-ல் மூவர் ,, | 20 | ,, |
| 4. 2-ல் ஒருவர் 12-ல் நால்வர் ,, | 5 | ,, |
| 12-ல் ஒருவர் 2-ல் நால்வர் ,, | 5 | ,, |
| 5. 2-ல் இருவர் 12-ல் இருவர் ,, | 15 | ,, |
| 12-ல் இருவர் 2-ல் இருவர் ,, | 15 | ,, |
| 6. 2-ல் இருவர் 12-ல் மூவர் ,, | 10 | ,, |
| 12-ல் இருவர் 2-ல் மூவர் ,, | 10 | ,, |
| ஆக யோகவகைப் பிரிவுகள் | 180 | ஆகும். |

*ரவிவர்ஜம் த்வாதசகைர் அநபா சந்த்ராத் த்விதியகைஸ் ஸுநபா*
*உபயஸ்திதைர் துருதரா கேமத்ரும ஸம்க்ஞோ அந்ய:*

(லகுஜாதகம்)

*ஸுநபாத் வநபாயோகோ தெளருதரச் சந்த்ரஸம் ஸ்திதேஷ்தராத்*
*ப்ராக் ப்ருஷ்டதோ க்ரஹைர்த்ரை ருபயகதை ஸ்தேஷு ரவிவர்ஜம்.*

(சந்திராசாரியர்)

இவ்விரு சுலோகங்கட்கும் முன்னே பிருகஜ்ஜாதகத்தில் எழுதெழுதிய சுலோகத்தின் பொருளே யாகுமென்று அறியவும்.

சுருதகீர்த்தி, ஸ்ரீவசர்மா என்பவர்கள் இந்த யோகவிஷயமாய்ச் சிறிது மதபேதப்படுகின்றனர்.

*சந்த்ராச்ச தூர்த்தகைஸ் ஸுநபா தசமஸ்திதை: கீர்த்திதோ*
*அநபாவிஹகை:, உபயஸ்திதைர் துருதரா கேமத்ரும*
*ஸம்ஞ்ரிதோ அந்யதா யோக:*

(சுருதகீர்த்தி)

(இ-ள்) சந்திரனுக்கு 4-ல் குஜாதிகிரகங்களிருந்தால் சுனபாயோகமும், 10-ல் இருந்தால் அனபாயோகமும், 4-10-ல் இருந்தால் துருதரா யோகமும், இவற்றில் இல்லாதிருந்தால் கேமத்ருமயோகமும் உண்டாம் எ-று.

*யத்ராசி ஸம்க்ஞோ சீதாம்ஸுர் நவாம்சோ ஜந்மநி ஸ்தித:*
*தத்த்விதீய ஸ்திதைர்யோக: சுனபாக்ய: ப்ரகீர்த்தித:*

(இ-ள்) சந்திரன் நவாம்சையில் எந்த ராசியிலிருக்கின்றனே அதற்கு 2-ல் குஜாதி கிரகங்களிருந்தால் சுனபாயோகம் எ-று.

இந்த இருவர் மதமும் பெரியோர்களுக்குச் சம்மதமில்லை. ஆதலின் இது நமக்கு திருப்தியில்லை என்று அறியவும்.

### சுனபா அனபா யோக பலன்

ஸ்வயமதிகதவித்தஃ பார்த்திவஸ் தத்ஸமோவா
பவதிஹி சுநபாயாம் தீ தந க்யாதிமாம்ச்ச
ப்ரபுரகத சரீரச்சீலவாந் க்யாதகீர்த்திர்
விஷயசுகசுவேஷோ நிர்வ்ருதச்சா அநபாயாம்.

(பிருகத் ஜாதகம்)

(இ-ள்) சுனபாயோகத்தில் பிறந்தவன் தனது முயற்சியால் பொருளை சம்பாதிக்கப்பட்டவனும், அரசனும், அல்லது அரசனுக்கொப்பானவனும், புத்தி தனம் சிறந்த கீர்த்தி இவைகளையுடையவனும் ஆவான். அனபா யோகத்தில் பிறந்தவன் தடையற்ற ஆக்ஞையையுடையவனும், நோயில்லாத சரீரத்தை யுடையவனும், இந்திரியநிக்கிரகம் வினயம் சிறந்தகுணம் இவைகளை யுடையவனும், விசேஷ கீர்த்தியையுடையவனும், விஷயசுக முள்ளவனும், உயர்ந்த வஸ்திரம், அலங்காரம், சுகந்த பரிமளங்களை யுடையவனும், மனத்துக்கமில்லாதவனுமாவான் எ-று.

### துருதரா யோக பலன்

உத்பந்நபோக சுகபுக்த தநவாஹ நாட்ய
ஸ்த்யா கார்விதோ துருதரா பவஸ்சுப்ருத்யஃ
கேமத்ருமே மலிந துக்கித நீசநிஸ் ஸ்வாஃ
ப்ரேஷ்யாஃ கலாச்ச ந்ருபதேர் அபிவம்ச ஜாதாஃ

(பிருகத்ஜாதகம்)

(இ-ள்) துருதராயோகத்தில் பிறந்தவன் கிடைத்த விஷய அனுபவத்தால் ஏற்பட்ட சுகத்தை அனுபவிக்கின்றவனும், பிறருக்கு கொடுத்து உதவிசெய்பவனும், நல்ல ஆட்களை யுடையவனுமாக இருப்பான். கேமதுருமயோகத்தில் பிறந்தவன் இராஜகுலத்தில் பிறந்தவனாயிருந்தாலும் மலினமடைந்ததேகம், ஆடைஇவைகளை யுடையவனும், இருவிதமான துக்கமுடையவனும், குலாசாரங் கடந்த தொழிலைச் செய்பவனும், தரித்திரனும், சேவகத்தொழில் செய்பவனும் ஆவான் எ-று.

இதுகாறும் கூறியது சுனபா, அனபா, துருதராயோகங்களின் பொதுப்பலன்களாகும். இனி அவற்றின் சிறப்புப்பலன்களைத் தனிதனி கூறப்படும்.

உத்ஸாஹ ஸௌர்ய தநஸா ஹஸவாந் மஹீஜஃ
ஸௌம்யஃ படுஸ் ஸுவசநோ நிபுணஃ கலாஸு,
ஜீவோ அர்த்த தர்மசுகபாக் ந்ருப பூஜி தச்ச
காமீ ப்ருகுர் பஹுதநோ விஷயோப போக்ததா.

(இ-ள்) சுனபாதியோகங்கள் செவ்வாயினால் ஏற்பட்டால் காரியங்களைச் செய்வதில் முயற்சி, புத்தஞ்செய்வதில் பிரியம், தனம், முன்பின் யோசிக்காமல காரியங்களைச் செய்தல் உண்டாம. புதனால் ஏற்பட்டால் காரிய சாதுர்யம், சாதுர்யமாகப் பேசுதல், சங்கீதம் வாத்தியம் சிற்பம் எழுதுதல் இவைகளில் திறமையுண்டாம. குருவால ஏற்பட்டால் பொருள், தர்மம், சுகம், அரசவெகுமானம் இவையுண்டாம், சுக்கிரனால் ஏற்பட்டால்

சிற்றின்பத்தில் மிக்க விருப்பம், விசேஷ தனவிருத்தி, விஷய சுகானுபவம் இவையுண்டாம் எ-று. "பரவிபவ பரிச்சேதாப போக்தா ஈவிதஸோ" என்பதில் இந்த யோகம் சனியினுல் ஏற்பட்டால் அன்னியருடைய வீடு, தனம், ஆடை, வாகனம் இவைகளை யநுபவித்தல், பலவகைக் காரியங்களைச் செய்தல், பொதுஜனக் கூட்டத் தலைமைவகித்தல் இவைகளுண்டாம் எ-று.

## சுனபாதி யோக பலன்கள்

(பாராசரஹோரை)

பூமீ பதேச்ச ஸசிவ: ஸாக்ருதீ க்ருதீச
தாரம் பவேச்ச புஜார்ஜித வித்த யுக்த:
க்யாத: ஸதாகில ஜநேஷு விசால கீர்த்யா
புத்யாதி கச்ச மநுஜ: ஸுநபாபி தாஸே.

ப்ரபுர் வினீத: சுபவாக் விலாஸ:
ஸச்சீல சாலீ குணபூர்த்தி யுக்த:
உதார கீர்த்தி: ஸ்மர துஷ்ட சித்தோ
நித்யம் நர: ஸ்யாத நபாபி தாஸே.

ஸத்வித்த ஸத்வாரண வாஹந தாத்ரீ
ஸௌக்யாபி யுக்த: ஸததம் ஹதாரி:
காந்தாஸு கேந்த்ராஞ்ச லாலஸ:
ஸ்யாத் யோகே ஸதா தௌரதரே மநுஷ்ய:

## கேமத்துரும யோக பலன்

ஸத்வித் தஸுகேந அவநிதாத் மஜனார் விஹீந:
ப்ரேஷ்யோ பவேத் து மநுஜோ ஹி விதேசவாஸீ
நித்யம் வ்ருத்த நிஷணோ மலிந: குவேஷ:
கேமத் ருமேச மநுஜாதி பதே: ஸுதோபி.

(இவற்றிற்கு முன் கூறிய பிருகஜ்ஜாதக சுலோகத்தின் பொருளே யாகுமென்று அறிதல் வேண்டும்.)

## சுனபாதி யோக சிறப்புப்பலன்

(சுனபாயோகம்)

1. ஜாதச்ச பூபதிச் சண்டோ தீம்ஸ்ரோ டிம்பஸ் ஸுதீர:
தந விக்ரயவாந் கோபி சந்த்ராத் தநகதே குஜே.
2. வேத சாஸ்த்ர கலாகேய குஸலஸ் ஸு சீரவாந்
மகஸ் விநிதவாக் தர்மீ சந்த்ராத் வித்த கதேபுதே.
3. ஸர்வ வித்யாதிக: ஸ்ரீமாந் குடும்பீ ந்ருப வல்லப:
ராஜ துல்ய சஸ்வீவா சந்த்ராத் வித்தகதே குரௌ.
4. விக்ரம ஸ்திரீ தகேஷுத்ர கர்மவாந் க்ருஹ பஞ்சக:
சதுஷ்பதா ட்யோ ராஜஸ்ரீ விதே சந்த்ராத் குடும்பகே.
5. புரக்ரா மஸ்திதா சேவைஷ: பூஜிதோ தநவாந் ஸுதி:
நிபுணஸ் ஸர்வ கார்யேஷு சந்த்ராத் வித்தக தேசநௌ.

(ஜாதக பாரிஜாதம்)

(இ-ள்) சந்திரனுக்கு 2-ல் செவ்வாயிருந்தால் பிரசண்ட பிரபுவும், இம்சை செய்கின்றவனும், சிறந்த புத்திமானும், தனம் பராக்கிரமமுடையவனுமாவான். புதன் இருந்தால் வேத சாஸ்திர சங்கீத வித்தைகளில் மிகவும் பிரசித்தியுடையவனும், நல்ல தேகம் மேன்மையான புத்தி சாதுர்யமுடையவனும், இனிமையாகப் பேசுவோனும், தருமம் செய்வோனும் ஆவான். குரு இருந்தால் சகல வித்தைகளையும் உணர்ந்தவனும், சீமானும், நல்ல குடும்பியும், அரசர்களுக்கு சமமானவனும், கீர்த்தியுடையவனும் ஆவான். சுக்கிரன் இருந்தால் பராக்கிரமமுடையவனும், சத்சுபாவமுள்ள மனைவியை யுடையவனும், பொருள் பூமி சத்கர்மங்களை யுடையவனும், நாற்கால் ஜீவராசிகளை யுடையவனும், இராஜ ஐஸ்வரியம் உள்ளவனும் ஆவான். சனியிருந்தால் நகரம், கிராமங்களிலுள்ள ஜனங்களால் புகழப்பட்டவனும், தனவானும், சர்வ உத்தமமான புத்தி சாதுர்யமுடையவனும், சகல காரியங்களிலும் நிபுணனும் ஆவான் எ-று.

## அனபாயோகம்

1 மாநீ ரஜேஜத் ஸாஹஃ க்ரோதி த்ருஷ்டச் சோராஜந ப்ரபுஃ
நீரஸ் ஸ்வதநுலோபி ஸ்யாச சந்த்ரா தந்த்ய கதேகுஜே.

2 காந்தர்வ லேக்ய படுவாக் கவிர் வக்த்தா ஸுதேஹவாந்
யஸஸ் வீராஜ பூஜ்யஸ் ஸ்யாத் சந்த்ராத்வ்ய யகதே புதே.

8 ராஜ பூஜ்யோ மேதாவீ காம்பீர்ய குணஸத்வ வான்
சுசிஸ்தாந தநாட்யஸ் ஸ்யாத் சந்த்ராத் த்வாதஸ கேகுரௌ.

4 புவதிஜந கந்தர்பஃ பச்வாதி தநவாந் ஸுதீஃ
தநதாந்யாதி கச் சந்த்ரா தந்த்யஸ் தாநகதே ப்ருகௌ.

5 விஸ்தீர்ண பாஹு குணவாந் கோதாபச்வாதி வித்தவாந்
க்ருஹீத வாக்யோ துஸ்த்ரீகச் சந்த்ரா தந்த்யஸ் கதேசனௌ.

(ஜாதக பாரிஜாதம்)

(இ-ள்) சந்திரனுக்கு 12-ல் செவ்வாயிருந்தால் மௌனம், புத்தப்பிரியம், கோபம், திருஷ்டம், சோரர்களுக்குத் தலைமை, பிரபுத்வம், தீரம், உலோபகுணமுண்டாகும். புதன் இருந்தால் காந்தர்வவித்தையில் சாதுர்யமுடையவாக்கு கல்வி யுக்தி நுட்பமாகப் பேசுதல், நல்லதேகம், கீர்த்தி, இராஜபூஜித முண்டாகும் குரு இருந்தால் இராஜபூஜிதம், சிறந்தபுத்தி, காம்பீர்யகுணம், சத்துவகுணம், பரிசுத்தமான ஸ்தானதனம் இவையுண்டாகும். சுக்கிரன் இருந்தால் யௌவன ஸ்திரீகளுக்கு மன்மதனைப்போல் இருத்தல், பசுதனம், வித்வத்வம், அதிக தனதானியங்கள் உண்டாகும். சனி இருந்தால் விசாலமான தோள், நற்குணம், பசு முதலிய தனம், சொத்தை கிரகிக்கும் சக்தி, கெட்ட ஸ்திரீயை யுடையவனாதல் இவைகள் உண்டாகும் எ-று.

## துருதரா யோகம்

1 அஸத்யவாதி குணவாந் நிபுணோதி சடோ குணீ
லுப்தோ வ்ருத்தோ ஸுநீலக்தச சந்த்ரே ஸௌம்யார மத்யகே.

2 ஸ்வகர்ம விபவோத் ருஷ்டோ யசஸ்வீரிபு பீடித:
ஸ்வகேஹ சிலக்ருச சந்த்ரே மத்யகே குஜ ஜீவயோ:

3 வ்யாயாமி ஸாஹஸ க்ரூரோ ஸ்ருஷ்டஸ் ஸத்காம வித்தவாந்
பயாத சிலச் சிதாம் சௌ மத்யகே குஜ சுக்ரயோ:

4 குத்ஸி தஸ்த்ரீ ரத: க்ரோதி தவாக் பிசுனோசி மாக்
அலர்தப் தோஷீசா நாதே மத்யகே குஜ மந்தயோ:

5 தர்மாத்மா சாஸ்திர வித்வாக்மீ ஸத்கவிஸ் ஸாஜநார்ஜித:
யசஸ்வீச சிசு நாதே மத்யகே புத ஜீவயோ: (283)

வேறு

விஞ்சுபுந்திகுரு வுச்சமெய்திடச்
செஞ்சொற்சுக்கிரன் கோலிடைச்சேர்ந்திட
இன்சொன்மேஷங் குசனுறவெய்தினேன்
அஞ்சிடானவ னம்புவியாள்வனே.

(இ-ள்) கிரகங்களில் மிக்க மகுத்துவம்பொருந்திய குரு கடகராசியில் உச்சம்பெறவும், சுபகோட்களில் ஒன்றான சுக்கிரன் துலாராசியில் ஆக்ஷி பெறவும், குஜன் தனக்கு ஆக்ஷியிடான மேஷத்திலிருக்கவும், ஜெனித்துள்ளவர் யாவரும் பயமில்லாத நெஞ்சுடையவனுகி பரிபாலனம் செய்யும் மேன்மை யுடையோனுவான் எ-று. (284)

ஆளும்லக்கினத் தொன்பதிலானநற்
கோளுறிற்சிங்க டாடவியோகமாம்
தூளிகாற்றெனக் கோபன்சுகமுளான்
நீளுமற்ப நிதியுளன்பாவனே.

(இ-ள்) தானுதித்த ராசியிலேனும், பிதுர் ஸ்தானமான 9-ஆம் ராசியிலும், சுபகோட்களாகிய சந்திரன் புதன் குரு இவர்கள்நிற்கில் சிங்கடாடவி யோகமெனவும் கூறுவர். அதன் விபரம் எப்படியெனில் சிறிய விஷயங்களுக்கெல்லாம் சினங்கொள்ளுவோனும், அற்பமான கொஞ்சம் திரவியத்தை புள்ளவனும், பாவச்செயல்களை புள்ளவனுமாவான் எ-று. (285)

பாவமற்றிடு லக்கினபார்த்திபற்
கேவும்ரெண்டிற் சுபர்மூன்றிலெய்திடில்
தாவுநான்கெனுந் தானநற்கோளுறில்
கோவுமாகிக் குலாவியிருப்பனே.

(இ-ள்) குற்றமில்லாத தானுதித்த ராசி யதிபதி எந்த கிரகமோ அக்கிரகம் தன ஸ்தானமாகிய இரண்டாம ராசியிலிருந்து சுபகிரகங்கள் என்னும் சந்திரன் புதன் சுக்ரன் இவர்கள் 3-ஆம் ராசியிலிருக்கவும், நான்காம் இராசியிலும் சுபகிரகங்கள் இருக்குமானல் அந்த ஜாதகன் கோபம் இல்லாமல் இராஜரீகம் புரிபவனும், யாவரிடத்திலும் பக்ஷத்தோடு இருப்பான் எ-று. (286)

வேறு

குலவுமிரண்டாம்ராசி யுச்சமானாலும்
குளிர்மதிபொன்புகரிவரி லெவர்நின்றாலும்
இலவிதழா யிரண்டதாமிடஞ் சரமேயாயின்
இராஜயோகத்திற்கா லாந்திரமதாயின்
உலவுமரையுபயம் பூரணராஜயோகம்
உரைசெய்யுமிவர்லாபத் துறினுமினிதாகும்
புலவகலநெய்குளித்த வடிவேலேந்திகராய்
புவியிலினையோர்மயங்கப் புரிகயற்கண்ணனே.

(இ-ள்) திரேகத்திலுள்ள துர்நாற்றம் நீங்க நெய்ஸ்நானம் செய்து சண்முகக்கடவுள் கையிலிருக்கின்ற வடிவேலைப் பழிக்கும் பிரகாசத்தை யடைந்து உலகிலுள்ளோர்களை மயக்குவிக்கும் சேல்கணைகளை யொத்த விழியும், இலவம்பஞ்சுக்கு ஈடான இதழ்களை யுடையவனே ஜெனன லக்கினத்திற்கு இரண்டாம் இராசியானது எந்த கிரகங்களுக்கேனும் உச்ச வீடாகி அவ்விராசியில் குளிர்ச்சியைத் தரத்தக்க சந்திரனாவது, குரு சுக்கிரன் இவர்களில் ஒருவர் சேர்ந்து அந்த ராசியானது மேஷம், கடகம், துலாம், மகரம் எனனும் சரராசியாயும், அந்த ஜாதகன் ராஜனுக்கு ஏற்படும் யோகத்தில் நாலில் ஒருபாகத்தை அநுபவித்து காலம் கழிப்பான். ஸ்திரராசியாகில் அரையோகமும், உபயராசியாக இருந்தால் நிறைந்த ராஜயோகமென்றும் சாஸ்திரங்கள் கூறும். மேற்சொன்ன கிரகங்கள் 11-ஆம் இடமென்னும் லாபஸ்தானத்தில் இருந்தால் ஒத்த பலனுண்டு எனக் கூறுவர் எ-று.

ஆமூன்றிற்பத்தாறிற் பன்னொன்றிற்பாவர்
அமரிலோவுபசயமா மானதிரிகோணத்
தாமூன்றுகேந்திரத்தி லுச்சங்கடன்னில்
தன்மனையிற்சுபர்நிற்கத் தகுராஜயோகம்
தேமூன்றுமமுதசசி யிருந்தராசிக்குள்
செறியுமதிபதிதனையுஞ் சென்மராசிக்குள்
பாமூன்றினதிபதிய மற்றோர்பாராமல்
பகைத்தசனிபார்க்கிற் சன்னியாசியெனப்பகரே.

(இ-ள்) ஜெனன லக்கினத்திற்கு 3-ஆம் ராசியிலாவது 10-ஆம் இடம் என்னும் ஜீவனஸ்தானத்திலாவது, தைரிய ஸ்தானமாகிய 6-ஆம் இராசியிலாவது, 11-ஆம் இடமான லாபஸ்தானத்திலாவது பாவகிரகங்களான சூரியன் அங்காரகன் சனி இராகு கேது இவர்களிருந்தால் உபசயயோகமென்றும் சொல்வர். திரிகோணமென்று சொல்லும் 3-5-9-ஆம் இடங்களிலும், கேந்திரங்களான 1-4-7-10-என்னும் இடங்களிலும், நற்கோட்கள் வாசஞ்செய்திருந்தாலும் அல்லது அவ்வீட்டிற்குச சொந்த ஆகூதிநாதர்களிருந்தாலும், அவர்கள் சுபர்களாக இருந்தால் ராஜயோகமென்றும் கூறுவர். மேற்சொன்ன மூன்று ராசிகளில் ஒன்றில் சந்திரனிருந்து லக்கினத்திற்கு மூன்றும் அதிபதியும், மற்ற கிரகங்களும் பாராது, பகைபெற்ற சனிமாத்திரம் பார்க்கில் சன்யாசியாவானென்று சொல்வாய் எ-று. (238)

பகருமந்தனுக்கிரண்டா மிடத்திலிருந்து
பண்புடன்மூன்றுமிடத்தி லரசன்றானும்
சகமதியவேயிருந்தால் ராஜயோகம்
சன்மலக்கினங்கள்விரிச் சிகமேயாதி
நிகரிலந்தமனையைச்சேய் நின்றுபார்க்கில்
நிலமெலாம்புரந்தருளும் ராஜயோகம்
நகர்கடகலக்கினத்திற் சசிக்கேழ்செவ்வாய்
நண்ணிடில்ராஜயோக மென்பார்நல்லோர்.

(இ-ள்) சனி நின்ற ராசிக்கு இரண்டாம் இராசியென்னும் தனஸ்தானத்தில் சந்திரனிருந்து திருதியை ஸ்தானத்தில் குருவும் சிரமத்துடன் இருப்பார்களானால் ராஜயோகமென்று சொல்வர். குஜனுக்கு ஆட்சிவீடான விருச்சிகமே ஜெனனராசியாகவும், எந்தராசி ஜெனனமாயினும் குஜன் விருச்சிகத்தில் ஆட்சிபெற்றிருந்தாலும், நோக்கினாலும், அந்த ஜாதகன் அநேக பூமிகளைச் சம்பாதித்து ராஜயோகத்தோடிருப்பான், கடகராசி ஜெனனராசியாயும் அதில் சந்திரனும் அவனுக்குச் சப்தமராசியில் குஜன் நிற்கில் மேன்மையான ராஜயோகத்தையே அனுபவிப்பானென்று சாஸ்திரங்களை புணர்ந்தோர் கூறுவர் எ-று. (289)

வேறு

நல்லதோர்கன்னிசென்ம லக்கினமாகச்சுக்கன்
மெல்லவேயுச்சமாக வில்லிடைவேந்தன்மேவச்
சொல்லியபாவர்கூடிச் சூழ்ந்திடாதிருக்கின்மன்னும்
வல்லதன்புவியுமற்ற மன்னர்களுடுமாள்வன்.

(இ-ள்) நன்மையைத்தரும் இராசிகளிலொன்றான கன்னி என்னும் இராசியிலுதித்தவனுக்கு சுக்கிரன் உச்சம்பெற்று, தனுசுராசியில் குரு சேரவும் பாவர்களென்று சொல்லப்பட்ட சூரியன் அங்காரகன் ராகு கேது இவர்கள் சேராமலும் பாராமலுமிருந்தால் அரசனாவதோடு பெருமையும் பிரக்யாதியையுமுடைய தேசங்களை யுடையவனும், மற்றுமுள்ள அரசர்களுடைய தேசங்களையும் பரிபாலிப்பான் எ-று. (290)

ஆணுங்கர்க்கடகஞ்சென்ம மாகவேயிரவிபொன்னும்
கோனுமேயுச்சமாகக் குளிர்புதன்வெள்ளிதாமும்
நீளுந்தன்வீட்டினிற்க நீண்டபாக்கியாதிதாமும்
மீனுங்கேந்திரத்தினிற்க வேணராச்சியம்புரப்பன்.

(இ-ள்) இரக்ஷிக்கும் தன்மைவாய்ந்த கடகராசியில் ஜெனனமாகி சூரியன்மேஷத்தில் உச்சம்பெற்றும், கடகத்தில் குரு உச்சம்பெற்றுமிருக்க உத்தம கோட்களான நற்பலனைத்தரும் புதனும் சுக்கிரனும் தன் சுயவீடுகளிலேயே ஆட்சிபெற்றுநிற்க, பாக்கியஸ்தானாதிபதி குருவாகவும், அந்த குரு 1-4-7-10 என்னும் கேந்திரஸ்தானங்களிலிருக்கவும் அந்த ஜாதகன் அளவிறந்த தேசங்களை பரிபாலிப்பான் எ-று. (291)

வேறு

புரக்கும்புதனுந்தானுச்சம் பொருந்துமிரண்டாமிடம்வெள்ளி
இருக்கவளரும்பிறையாச னிருவர்கூடிப்பலவானுய்
தருக்கியிருக்கவெகுபூமி தனக்குமன்னன்ருனுகிப்
பெருக்கும்வித்தைபிரபலமே பிரசங்கிக்குந்துரையாவான்.

(இ-ள்) *யாவரையும் இரக்ஷிக்கத் தகுந்த புதன் உச்சக்ஷேத்திரமும், தனஸ்தானமாகிய இரண்டாமிராசியில் சுக்கிரனிருந்து வளர்பிறைச்சந்திரனும் குருவும் சேர்ந்து ஆக்ஷி உச்சங்களால் வலிபெற்று குற்றமின்றி இருப்பாரேயாமானுல் அந்த ஜாதகன் அநேக தேசங்களுக்குக் கர்த்தனுகி பிரபலமான அநேக கல்வி பிரசங்கங்கள் செய்யும் வித்வானுமாவான் எ-று.* (292)

துரையாஞ்சனிக்குஞ்சுக்கிரர்க்கு நடுவேசோமன்ருனிருந்தால்
உரையாயனபாயோகமிதிற் பலன்கணிதியுளன்போகி
தரையாண்மன்னர்கைப்பொருளைத் தான்கைக்கொள்வன்குலசிரேட்டன்
புரையாசாரபாவன்ரு னியவான்புறக்கிராமமணியாமே.

(இ-ள்) *மேன்மையைப் பெற்ற சனிக்கும் சுக்கிரனுக்கும் மத்தியில் சந்திரன் நிற்பானுகில் அனபாயோகமென்றும் சொல்வர். அவன் தரும் பலன்கள் என்னவெனில், முறைவழுவாதவனும், ஸ்திரிசுக மிகுதியுள்ளவனும், தேசங்களை அரசாளும் மன்னுதிமன்னர்களுடைய பொருளைக் கைக்கொள்ளுபவனும், உத்தம நற்குலத்தில் ஜெனித்தவனும், குற்றமில்லாத ஆசார ஒழுக்கங்களையுடையவனும், தான்ய சம்பத்துடையவனும், ஓர் கிராமத்தை இரக்ஷிக்கும் மணியக்காரனுமாவான் எ-று.* (293)

வேறு

உதித்தருளுஞ் சென்மாதி பதிலாபாதி
ஒருமித்தைந் தாமிடத்தி லுகந்துநிற்க
விதித்தருள் வாகனத்தாதி மூன்றும்வீட்டில்
மேவிடவவ் வீட்டுக்குப் பத்தாமாதி
துதித்தசன் மாதிபனுடனே யைந்தின்மேவத்
தோன்றியிம சேதளவுஞ் சூழ்புவிக்குள்
கதித்ததுரை யாய்ச்செங்கோல் செலுத்தியிந்தக்
காசினியெல் லாம்புரப்பன் காணுங்கண்டாய்.

(இ-ள்) *உடல் இலக்கினுதிபதியும் லாபஸ்தானுதிபதி யென்னும்* 11-ல் *வீட்டதிபனும் ஒன்று சேர்ந்து இலக்கினத்திற்கு பஞ்சமராசியில் உறவாக இருந்தார்களானுல் வாகனஸ்தானுதிபதி என்னும்* 4-ஆம் *வீட்டோன் என்னும் சுகஸ்தானுதிபதி மூன்றுமிராசியிலிருக்கவும், அவ்வீட்டிற்கு காரியஸ்தானத்துக்குடையோர் ஜெனன லக்கினுதிபதியுடன் சேர்ந்து* 5-ம் *ராசியில் சேரப்பிறந்த ஜாதகன் நீர் சூழ்ந்திராநின்ற இப்பூமியில் நீதிக்கோல் செலுத்தி இப்பூமி யாவும் அரசாக்ஷி செய்வானென்று சொல்வாய் எ-று.*

(*இதன்விபரம் பின்வரும் சக்கரத்தால் அறிக.*)

இதன் விபரம்

| | | | |
|---|---|---|---|
| ல சந் | | புத | |
| | அநேக இராஜ்யங்களுக்கு அதிகாரி | | குரு சனி |
| | | | சூரி ராகு |
| செ | | சுக் | |

கண்டருளு நீசபங்க ராசயோகம்
காணும்வகை நீசத்தா னத்துவேந்தும்
திண்டிறல்சேர் திடும்மம்மனை யுச்சவேந்தும்
திங்கள்கேந் திரந்தன்னிற் சேர்ந்தாளுகில்
மண்டியிடு நீசபல னொழிந்துகீர்த்தி
மகாராஜ ராஜனென வாழ்ந்திடுவன்பூவில்
கொண்டபலர் நீசத்தி லிருந்தாலுமொருகோள்
குறிநீசங் கெடிலெல்லாக் கோளுநன்றாமே.

(இ-ள்) ஏதேனுமொரு கிரகம் நீசமடைந்திருந்தால் நீசம்பெற்ற இராசிக்கு ஆக்ஷிகிரகங்கள் உச்சம்பெறவும், உச்சம்பெற்ற ராசிக்கு ஆக்ஷிகிரகங்கள் 1-4-7-10 என்னும் கேந்திரங்களில் சந்திரனின்ற ராசிக்கிருப்பார்களேயானால் கெடுதியை விளைக்கும் நீசபலன் யாவுமொழிந்து இப்பூமியில் மேன்மைபொருந்திய சக்கரவர்த்தி என்று வாழ்ந்திருப்பான். பல கிரகங்கள் நீசம்பெற்று ஒருகிரகம் நீசமின்றி இருந்தாலும் உத்தமமென்றே கூறுவர், இதையே நீசபங்கராஜயோகமென்று சொல்வர் எ-று. (295)

வேறு

கோலலக்கினமாயந்தக் கோலிற்சுக்கிரனுமேவ
மாலைவெண்மதியமாறு மிடத்தினின்மருவியிற்கச்
சாலவேகுருவுச்சத்திற் றங்கியேமதியைப்பார்க்கில்
சீலமெய்ஞ்ஞானியாகச் செகமெலாம்புரப்பன்றானே.

(இ-ள்) உடல் லக்கினம் துலாராசியாகவிருந்து அந்த லக்கினத்தாசனான சுக்ரன் ஆக்ஷிபெற, இரவிற்காசனான சந்திரன் ஆறாமிடமான மைதரிய ஸ்தானத்திலிருக்க குரு கடகராசியில் உச்சம்பெற்று சந்திரனை நோக்க, அந்த ஜாதகன் பரிசுத்தமான சன்னியாசியாகி ஜெகத்திற்கெல்லாம் ரக்ஷகனாக இருப்பான் எ-று. (296)

வேறு

தானமெனுமாதுரு தானத்தானந்தத்
தானத்திலேயிருக்குந் தகைமைகேளீர்

வானசெவ்வாய்ருசியோகம் புதன்பத்திரயோகம்
மகிழ்குருவங்கிசயோகஞ் சுக்கிரனேயாகில்
மானமுளமாளுவயோ கஞ்சனிதனக்கே
வருஞ்சகரயோகமென வேவழுத்தலாகும்
ஈனமறவிவர்தம்மி லேயொருவர்நிற்கில்
இதுராசயோகமென வேவியம்பலாமே.

(இ-ள்) ஜெனனராசிக்கு நான்காமிராசிக்குடையோனை சுகாதிபதி என்னும் மாதுருஸ்தானாதிபதி ஆக்ஷியாக இருக்கும் பலனைக் கேட்பாயாக. மேற்சொன்னபடி மாதுருஸ்தானாதிபதி செவ்வாயாகில் ராசியோகமென்றும், புதனாகில் பத்ரயோகமென்றும், குருவாகில் அங்கிஷயோகமென்றும், சுக்கிரனாகில் மானாபிமானமுடைய மாளுவயோகமென்றும், சனியாகில் சகரயோகமென்றும், இவர்களில் ஒருவர் நின்றாலும் இராஜயோகமென்றே சொல்லலாம் எ-று. (297)

## இராகுயோகம் தரும்வகை

ஆமேடம்எருதுசுரு நண்டுகன்னி
ஐந்திடத்தில்கருநாகம் அமர்ந்துநிற்கில்
பூமேடைதனில்துயிலும் இராஜயோகம்
போற்றிடுவர்வேறுஇன்னம் புகலக்கேளாய்
ஏமாருதேநானகு கேந்திரத்தும்
இடைவிடாமற்கிரகம் இருந்ததாகில்
தேமேவுபர்வதமாம் யோகமாகும்
சீமான் ஆகுவன்ராஜ யோகஞ்செப்பே.

(இ-ள்) மேடம் இடபம் கடகம் கன்னி மகரம் ஆகிய இந்த ஐந்து ராசிகளில் ராகுவிருந்தால் மலர்ப்பஞ்சணையின்மேல் துயிலக்கூடிய இராஜயோகமுண்டாகும். (உலகத்தோர்) புகழ்வார்கள் மற்றும் கூறுவேன்கேட்பாயாக. இலக்கின நான்கு ஏழு பத்து என்னும் இந்த நான்கு கேந்திரஸ்தானங்களிலும் இடைவிடாமல் கிரகங்கள் இருக்குமானால் அதற்குக் கிருபைதங்கிய பருவதயோகமென்று பெயர். இதன்பலன் செல்வமுடைய அரசயோகம் என்று சொல்வாயாக எ-று.

(வி-ரை) "கலியுகபலதஃ காலருத்ராவதர்தி" என்ற சியாமசங்கிரகத்தின் படி இந்தக் கலியுகத்தில் மன்பதைகளுக்கு இந்நிலவுலகத்தில் இராகு நல்ல அதிர்ஷ்டத்தைத் தரக்கூடிய யோககாரகனென்பது துணிபு. மற்றும், "இராகுவைப்போல் கொடுப்பார் இல்லை, கேதுவைப்போல் கெடுப்பார் இல்லை" என்பது பழமொழி. இராகு யோகத்தைக் கொடுக்கக்கூடிய கிரகமானாலும் அது மேடம் இடபம் கடகம் கன்னி மகரம் என்னும் இந்தஐந்து இராசிகளில் இருந்தால்தான் சுயமாக யோகத்தைக்கொடுக்கும் ஆதிக்கமுடையதாகும். ஏனை இராசிகளில் இருந்தால் சுயமாக யோகத்தைக் கொடுக்காது. மற்றும் எவ்வணம் கொடுக்கும் எனின்:—

க்ரஹை ரன்யைச்ச ராஹுஸ்து ஸம்பர்தோ யதிவித்யதே
யேக்ரஹாஃ ப்ரபலாஸ் தேஷாம் தத்பலஞ்ச ததாதிஸஃ
(ஜாதகானுபவதர்ப்பணம்)

(இ-ள்) இராகு இதர கிரகங்களுடன் சம்பந்தப்பட்டிருந்தால், அப்படி சம்பந்தப்பட்ட கிரகங்களில் பலவானான கிரகத்தினுடைய சுபாவத்திற் கேற்ற பலனைத் தருவான் எ-று.

யத்யத்பாவகதேனவாபி யத்யத்பாவேச ஸம்யுதேன
தத்தத்பலானி ப்ரபலேன ப்ரதிசேதாம் தமோக்ரஹௌ.

(ஜாதக சந்திரிகை)

(இ-ள்) இராகு கேதுக்கள் தாமிருந்த இராசியாதிபதியினுடையவும், தன்னுடன் சேர்ந்த கிரகத்தினுடையவும், சுபாவத்திற்கேற்ற பலனைத் தருவார்கள் எ-று.

ராஹோஸ்து வ்ருஷபம் கேதோர் வ்ருச்சிகம் துங்க ஸம்ஜ்ஞிகம்
மூலத்ரிகோணம் கர்கஞ்ச யுக்மசாபம் ததைவச
கர்யாசஸ்வக்ருஹம்ப்ரோக்தம் மீநஞ்சஸ்வக்ருஹம்ஸ்ம்ருதம்
ததாயேபகுவௌக்யஞ்ச தகதார்யாநிலம்பதாம்.

(பிருகத் பாராசரஹோரை)

(இ-ள்) மகரிஷி பாராசரர் கொள்கையின்படி இராகுவுக்கு இடபம் உச்சமும், கடகம் மூலத்திரிகோணமும், கன்னி சுயவீடும், ஆதலின் இந்த இராசிகளிலிருந்த இராகு இராஜயோகத்தைச் செய்வான் என்று அறியப் படுகின்றது எ-று.

ராஹுர்வா க்ரிய கோ குளீர ஹரி கீட க்ராஹராசிஸ்தித:
ஸர்வாரிஷ்ட நிவாரணம ப்ரக்ருதே ஜாதச்சிராயுர்பவேத்.

(கிரந்தாந்தரம்)

(இ-ள்) இராகு, மேஷ இடப கடக சிங்க விருச்சிக மகரங்களில் இருந் தால் சர்வ அரிஷ்டநிவர்த்தியும், தீர்க்காயுள்பிராப்தியும் உண்டாகும் எ-று.

இங்கு கன்னியைக் கூறவில்லை. மற்ற இராசிகளை பிருகத் பாராசர ஹோரையின் வசனத்தைப்போலவே கூறப்பட்டிருக்கின்றது. இவற்றுள் சிங்க விருச்சிக தனுர் மீனங்களை இராகுவுக்கு சிறந்த ஸ்தானங்களெனக் கூறப் பட்டிருக்கின்றது. ஆயினும் பின்வரும் வியதியினால் மேடம் இடபம் கடகம் கன்னி மகரம் ஆகிய இந்த ராசிகளே இராகுவுக்குச் சிறந்ததாமென நன்கு அறியலாம். அதாவது:—

1. மேஷக்கதஸ்யாஸ்ய தமஸ்யபாகே
மஹோத்ஸவ மங்கள தூர்யகோஷம்
பூம்யாதிபத்யம் ப்ருதிவீபூஜ்யம்
ஸ்த்ரீபுத்ரமித்ரா திஷு ஸௌக்யமேதி.

2. வ்ருஷஸ்திதஸ்யாபி தமஸ்யதாயே
க்ஷேத்ராதிபத்யம் ப்ருதிவீசபூஜ்யம்
வித்யாவிலாசம் வரவஸ்துலாபம்
கோபூமிவிதார்யாம் பரஹேமஸௌக்யம்.

(இ-ள்) மேஷராசியிலிருந்த இராகுதசையில் மகோத்சவம், மங்கள வாத்தியகோஷம், பூமிக்கு ஆதிபத்தியம் வகித்தல், அரசர்களால் புகழப்

பெறுதல், ஸ்திரீ புத்திர சிநேகிதராதிய சௌக்கியமுண்டாகும். இடபராசியி லிருந்த ராகுதசையில் பூமியாதிபத்தியம், இராஜபூஜிதம், வித்யாவிருத்தி, நூதன பொருள்சேர்க்கை, பசு பூமி தானியம் வஸ்திராபரணம் சௌக்கிய முண்டாகும் எ-று.

3. யுக்மகதாராஹு தாயே சத்ருக்ரோதம்
ந்ருபாலபீதிஞ்ச ஸ்வஸ்த்ரீபாதாம் கஷ்டம்
பந்துவிரோதம் ஸ்தாநநாசஞ்ச.

(இ-ள்) மிதுனராசியிலிருந்த ராகுதசையில்பகைவர்களால் துன்பம், அரசபயம், சுயஸ்திரீக்குத் துன்பம் கஷ்டம் பந்துஜனவிரோதம், ஸ்தான நாசமுண்டாகும் எ-று.

4. கர்கிஸ்தஸ்ய தருஸ்யசாபி ஸூதசா
ராஜ்யாதிபத்யப்ரதா தாரபுத்ரஸுகப்ரதா
பஹுதநப்ராப்தி ப்ரதா ஸௌக்யதா
பூக்ஷேத்ராதிபஹுப்ரதா விஜயதா
வித்யாப்ரதா ஸ்ரீப்ரதா நாநாதான்யஸம்ருத்தி
ததாவிஜயதே ந்ருணாம் ஸூவித்திப்தா.

(இ-ள்) கடகராசியிலிருந்த இராகுதசையில் இராச்சியாதிபத்தியம், மனைவிமக்கட்சுகம், அதிக தனலாபம், சௌக்கியம், பூமி வீடு முதலியன சேர்தல், இலக்குமிகடாக்ஷம், பலவித தானியவிருத்தி, விஜயம் இவைகள் உண்டாகும் எ-று.

5. ஸிம்ஹஸ்திதஸ்ய ராஹோச்சபாகே பூபாலவிக்ரஹ:
தநதாந்யவிநாசச்ச க்ஷேத்ர தார்யாதிநாசநம்.

(இ-ள்) சிங்கராசியிலிருந்த ராகுதசையில் அரசர்கள் விரோதம் தனம் தானியம் இவைகள் கஷ்டம், பூமிநாசம், பயிர் பலிதக்குறைவு இவைகள் உண்டாகும எ-று.

6. கந்யாயாம் ஸ்திதராஹு தாயகாலே க்ஷேத்ராப்திம் பூமிலாபஞ்ச
பூபதிமித்ரம் புதவரபூஜ்யஸ்த்ரீ ஸௌக்யம் தாந்யலாபஞ்ச.

(இ-ள்) கன்னியாராசியில் இருந்த இராகுதசையில் பூமிலாபம், மனை சேர்க்கை, இராஜசிநேகம், ஜனப்புகழ்ச்சி, ஸ்திரீசுகம், தானியலாபமுண் டாகும் எ-று.

7. துலாஸ்திதஸ்யாபி தமஸ்யதாயே க்ஷேத்ரார்தநாசம் க்ருஷிவிக்ஷபலஞ்ச
ந்ருபாத்பயம் ஸ்தாநவிநாசஞ்ச ஸமாநகஷ்டம் பித்ருபந்துநாசம்.

(இ-ள்) துலாராசியிலிருந்த இராகுதசையில் பூமி பொருள் கஷ்டம், தொழில் அல்லது பூமி விவசாயத்தில் பலனின்மை, அரசர்களால் பயம், ஸ்தானபிரஷ்டம், கஷ்டம், பிதுர் பந்துஜனங்கட்குப்பீடை இவைகள் உண்டாகும் எ-று.

8. அலிகதராஹு தசாயாம் க்ஷிதிபதிபூஜ்யம் பந்துமித்ரத்வம்
கோபூபகுதனலாபம் சமரேசத்ரு விநாசகம் குருதே.

(இ-ள்) விருச்சிகராசியிலிருந்த இராகுதசையில் இராஜபூஜிதம் பந்து ஜனவிசுவாசம், பசு பூமிசேர்க்கை, அதிக தனலாபம், யுத்தத்தில் சத்துருக்களை வெற்றிபெறுதல் இவைகள் உண்டாகும் எ-று.

9. தநுஸ்திதஸ்யாபி தமஸ்யதாயே
பச்வாதிநாசம் ஸ்வஜநாநுரோதம்
மஹத்பயம் சத்ருவிவ்ருத்திதஞ்ச
ஸமாநகஷ்டம் பித்ருபந்துநாசம்.

(இ-ள்) தனுசுராசியிலிருந்த இராகுவின்தசையில் பசுநாசம், சுயஜன விரோதம், அதிகபயங்கரம், பகைவர் அதிகப்படுதல், சமகஷ்டம், பிதுரு பந்து முதலியவர்கட்குப் பீடை உண்டாகும் எ-று.

10. நக்ரஸ்திதஸ்யாபி தமஸ்யதாயே
க்ராமாதிபத்யம் க்ஷிதிபாலபூஜ்யம்
ஸ்வதாரபுத்ராதி ஸமஸ்தஸௌக்யம்
க்ஷேத்ரார்த்தகோபூமி விசேஷவ்ருத்தி:

(இ-ள்) மகரராசியிலிருந்த ராகுவின்தசையில் கிராமாதிபத்தியம் ராஜ பூஜிதம், சொந்த மனைவி மக்கள் முதலிய சகல சௌக்கியம், வீடு தனம் பசு பூமி அதிக விருத்தியுண்டாகும் எ-று.

11. கடஸ்தஸ்யராஹோர் தசாயாஞ்ச கஷ்டம்
ரிபுணாம்ப்ரவ்ருத்திம் சுதேதாரநாசம்
ஸ்திரீபுத்ரபீடாஞ்ச கோபூமிநாசம்
தேஹேமபிகஷ்டம் பலம்நஷ்டமேதி.

(இ-ள்) கும்பராசியிலிருந்த ராகுதசையில் கஷ்டம், பகைவர விருத்தி மனைவிமக்கள் நாசம், பீடை, பசு பூமிநஷ்டம், தேகத்தில் துன்பம், நஷ்டமான பலனுண்டாகும் எ-று.

12. மீநகேதராகுதாயே ந்ருபாத்பயம் சோரபீதிஞ்ச
கலஹம்ஸ்வஜநவிரோதம் ஸமாநஜநஹாநிஞ்ச.

(இ-ள்) மீனராசியில் இருந்த இராகுவின்தசையில் அரசபயம், சோர பயம், கலகம், சுயஜனவிரோதம், ஆத்ம சமான ஜன ஆனியுண்டாகும்.

மேற்கூறியுள்ள கிருஷ்ணமிசிரர் சுலோகவசனங்கள் 12-ம் மேஷாதி பன்னிரண்டு இராசியில் ராகு இருப்பதனால் உண்டாகும் பலன்களை நன்கு விளக்குதலுணர்க. இவற்றை உற்றுணர்ந்து நோக்குங்கால் மேஷம்இடபம் கர்க்கடகம் கன்னி மகரம் ஆகிய இந்த ஐந்து ராசிகளிலிருக்கும்இராகுவின் தசை வரும்போது நற்பலனும், ஏனைய மிதுன சிங்க துலா விருச்சிக தனுர் கும்ப மீனம் ஆகிய இந்த ஏழு இராசிகளிலிருக்கும் இராகுவின்தசை வரும் போது தூர்ப்பலனும் உண்டாகுமென்பது நன்கு போதரும்.

யோகமதில் உற்பவித்து யோகமிக ஆகுமென்று
தாகமிக உற்றிருப்பர் தாரணிக்குள் —வாகான
காசமீர தண்டக் கழுதைகள்ளன் செய்புமவர்
தேசதனைச் சேர விடின். (தாண்டவமாலை)

என்றபடி இராகு முன்கூறிய மேடாதி ஐந்து இருந்தமாத்திரத்திலேயே ஒருசாதகத்தில் இராஜயோக முண்டாகுமென்று எண்ணுதல்பொருந்தாது. அவர்தசை வந்தால்தான் ராஜயோகமுண்டாகுமென்று அறிதல்வேண்டும். மற்றும்:—

குளீர கோ மேஷபுதஸ்ய ராஹோர் தசாவிபாகே தநதார்யலாபம்
வித்யாவிநோதம் ந்ருபமாநஞ்ச சைத்ரப்ருத்யாதி சுகம்வதந்தி.

பாதோநமீநாச்ச புதஸ்ய ராஹோர் தசாவிபாகே
சுததாரலாபம் தேசாதிபத்யம் ஈசவாஹநஞ்ச. (ஜாதக பாரிஜாதம்)

(இ-ள்) மேஷ இடப கடக ராசிகளிலிருந்த இராகுதசையில் தனதான்ளியலாபம், வித்தியாவிநோதம், இராஜசமானம், மனைவி சேவகர் முதலியவர்களால் சுகம் இவைகளுண்டாகும். மற்றும், தனுர் மீனராசியிலிருந்த இராகுவின் தசையில் மனைவி மைந்தர் பிராப்தி, தேசாதிக்கம், ஈவாகன பிராப்தி யுண்டாகும் எ-று.

ம்ருகபதி வ்ருஷகன்யா கர்க்கடஸ்தஸ்ய ராஹோர்
பவதிச பரிபாகே ராஜதுல்யோ ந்ருபோ அபிவா
கஜதுரக சமூபஸ் ஸர்வ ஜீவோபகாரோ
பஹுதநகசிலை புத்ரதாராதுரக்த்த: (ஜாதக பாரிஜாதம்)

(இ-ள்) சிங்க இடப கன்னி கடகங்களில் இருந்த இராகு தசையில் இராசசமானனாவது அல்லது இராஜனாவது ஆதல், குதிரை யானை இவற்றிற்கு அதிபனாதல், சகல சீவர்கட்கு உபகாரியாகுதல், பலவித தனசுக முண்டாதல் இவைகள் உண்டாம் எ-று.

பாரிஜாதநூலுடையார் இராகுவுக்கு மகரம் சிரேஷ்டமான யோகத்தைக் கொடுக்கும் இடமெனக் கூறாது விடுத்தனர். பெரும்பாலும் பராசரரையை அநுசரித்தே கூறியிருக்கின்றனர். கிருஷ்ணமிசிரர் வசனமும், ஜாதகாலங்காரவசனமும் சேர் ஒத்திருக்கின்றது.

இராகு யோகத்தைத்தரும் ஆதிக்கமுடையவன் என்றதை:—

கங்கையிற் சுழிக்கும் சுழிபும்சோ ராதக்
கன்னிதன் உந்தியங் கமலம்
அங்கஜன் கிதியம் ஒளித்தால் இடமோ
ஆடக இரதமோ அரசர்
பங்கிழுக்கு எல்லாம் ஒன்பதாம் இடஞ்சேர்
பாந்தளோ தெரியொணு கிதம்பம்
துங்கால் அரம்பைத் தண்டினுஞ் சிறந்த
தொடையிரண்டு உடையபூங் கொடிக்கே.

எனவரும் மகா பாரதம் திரௌபதையை மாலையிட்ட சருக்கச்செய்யுளினால் இராகு அரசயோகத்துக்குரியவன் என்பதுவிளங்காநிற்கும். சோதிட சாஸ்திரத்தில் ஒன்பதாமிடத்தில் இராகுவிருப்பின் கெட்டபலனைத் தருமெனக் கூறப்பட்டிருக்கின்றது. இதிகாசமும் இவ்வணம் இயம்புகின்றது.

இராகு இலக்கினத்திற்கு 9-ல் இருப்பதனால் உண்டாகும் பலன்:—

தர்மஸ்திதே சந்த்ரரிபௌ மநுஷ்யச்சண்டாலகர்ம
பிசுநః குசேலః ஜ்ஞாதிப்ரமோதி கியதః ப்ரவீணః
சத்ரோః குலாத் பீதிம் உபைதிநித்யம். (கிரந்தாந்தரம்)

(இ-ள்) இலக்கினத்திற்கு 9-ல் இராகுவிருந்தால் அச்சாதகன் துஷ்ட காரியங்களைச் செய்வோனும், உலுப்தனும், அழுக்கடைந்த ஆடைகளைத் தரிப்பவனும், ஞாதிகளைச் சந்தோஷப்படுத்துவோனும், பகைவர்களால் எப்போதும் பயமுடையவனும் ஆவான் எ-று.

யதிகேந்த்ரே த்ரிகோணேவா நிவஸேதாம் தமோக்ரஹௌ
நாதேநாந்ய தரஸ்யைவ ஸம்பந்தாத்யோக காரகௌ.

(பூர்வபாராசரி)

(இ-ள்) இராகு கேதுக்கள் கேந்திர திரிகோணங்களிலிருந்து கேந்திரத்திலிருந்தால் திரிகோணாதிபதியினுடையவும், திரிகோணத்திலிருந்தால் கேந்திராதிபதியினுடையவும், சம்பந்தம், நோக்கம்பெற்றிருந்தால் யோக காரகர்களாவார்கள் எ-று.

இந்த வசனத்தினால் மேற் இதிகாசச்செய்யுளுக்கு 9-மிடத்தில் இராகு கேந்திராதிபதி சம்பந்தமாயிருந்தால் அரசயோகமுண்டென்று பொருள் கூறுதல்வேண்டும். தனித்திருப்பின் அவயோகமுண்டென்று கூறுதல் வேண்டும்.

தர்மகர்மஸுதேலாபே சந்த்ராச்சபதிதஸ்தமః
ஜன்மகாலே க்ருபச்சைவ வ்ருத்தகாலே மஹாதநீ.

(கர்க்கசம்ஹிதை)

(இ-ள) சந்திரனுக்கு 5-9-10-11-ல் இராகுவிருந்தால் ஜனனமுதல் இராசசமான வாழ்க்கையும், விருத்தவயதில் மகாதனயோகமும் உண்டாகும் எ-று.

இதனால் முன்கூறிய இதிகாசசெய்யுளுக்குச் சந்திரலக்கினத்துக்கு 9-ல் இராகு இருப்பது இராஜயோகத்துக்கு ஏதுவென்று பொருள் கூறினும் பொருந்தும். இராகு யோகத்தைக் கொடுப்பதுமட்டிலும் அல்ல; அரிஷ்டநிவர்த்தியைச் செய்வதிலும் சிறந்தவனென அறிதல்வேண்டும்.

லாபேரிபௌ ப்ராதரி விம்ஹிகேயః
சபேக்ஷிதஸ்யாத் யதிசந்த்ரலக்நாத்
அல்பாயுரப்யதய பவேச்சிராயுః
ஸபத்விஹீநோஅபி குபேரதுல்யః

(கிரந்தாந்தரம்)

(இ-ள்) சந்திரன் (அல்லது லக்கினம்) இவற்றிற்கு 8-6-11-ல் இராகு விருந்தால் அற்பாயுர்த்தாயமுடையவனாயினும், தீர்க்காயுளுடையவனவன், அற்ப தனவந்தனும், குபேரனைப்போல் ஐசுவரியத்தை யுடையவனும் ஆவான் எ-று,

வேறு

செப்பியதிரிகோணத்திற் றிரிகோணத்தானத்ாதி
தப்பறவுச்சமாய்த் தலத்துநில்ராஜயோகம்
ஒப்புடனிரவிபக்க மிரண்டினுமுயர்கோளுற்றால்
அப்படியுபயவெண்சா மரையுடையரசனாமே.

(இ-ன்) திரிகோணராசி என்று சொல்லும் 3-5-9-ஆம் ராசியதிபதிகள் எவ்விதங்களிலும் பீடிக்கப்படாது உச்சஸ்தானம் பெறுவார்களேயானால் ராஜயோகமென்று சொல்லுவர். மேன்மையையுடைய சூரியனுக்கு வலம் இடமான இருபுறமும் நற்பலனைத் தரும் சுபகிரகங்களான சந்திரன் புதன் இவர்களிருந்தால் வெண்சாமரை வீசும் யோகத்தையுடைய ராஜனாகுவன் என்றும் கூறுக எ-று. (299)

அரசனாரேழிற்செவ்வாய் யாறிற்பன்னொன்றிற்காரி
இரவியுமூன்றுநான்கி லிராகுவுமிவராரேனும்
பரவியேயிற்பராகிற் பாஸ்கரயோகமென்பாம்
இரவிமுன்பனிபோற்குரூர மிராதெனவியம்புமானே.

(இ-ன்) ஜெனனலக்கினத்திற்கு 7-ஆம் ராசியென்னும் சப்தமத்தில் குருவும் அங்காரகன் ரோகஸ்தானத்திலும், 11-ஆம் ராசியான லாபஸ்தானத்தில் சனியும், சூரியன் இராகு கேது இவர்கள் 3-அல்லது நான்காம் இராசியிலும், வரிசைபெற்று நிற்பாரேயாகில் பாஸ்கர யோகமென்றும் கூறுவாயாக அதன் விபரம் எவ்விதமான தோஷம் வந்தபோதும் சூரியன்முன் தோன்றிய பனிபோல் நீங்குமென்று அழகும் மேன்மையும் பொருந்திய பெண்ணே! சொல்வாயாக எ-று. (300)

ஏயலக்கினமீனத்தோற் கெழிற்றண்டினண்டெருத்தில்
ஈயமாய்க்கருங்கோளென்று நின்றிடில்ராஜயோகம்
ஆயலக்கினமேகும்ப மதனிற்பொன்னனுகப்புந்தி
தூயநல்லுச்சமாகத் துரைநல்வாக்கரசாய்ச்சொல்லாய்.

(இ-ன்) மீனலக்கினத்தில் உதித்தவனுக்குச் சொல்லும் பலன்கள் என்னவெனில், இடபம் மிதுனம் கடகம் இவ்விராசிகளில் ராகு கேதுக்களில் ஒருவர் நின்றாரானால் ராஜயோகமென்றே சொல்லுவார். உடல் லக்கினம் கும்பமாகவும் ஜெனனராசியில் குருவும் புதனும் இருந்தாலும், புதன் கன்னி என்னும் இராசியில் உச்சம்பெற்றிருந்தாலும், அந்தஜாதகன் மேன்மையைப் படைத்த உத்தமவாக்குடைய மன்னனாவான் என்று சொல்லுவாய் எ-று. (301)

சொல்லியசென்மந்தன்னிற் சோமனுங்குருவுங்கூடி
நல்லதோர்பத்துநாலிற் சுக்கிரனயந்துநிற்க
அல்லலற்றிவரையுச்ச மானதோர்சனியுங்காண
வல்லமையரசர்க்கொப்பாய் வாழ்வன்மானிலத்தின்மாதே.

(இ-ள்) இப்பூமியில் மாய்கை என்னும் வலையைவீசி அனைவரையும் உன்வசமாக்கும் சக்திவாய்ந்த பெண்ணே! ஜெனனராசியில் சந்திரனும் குருவும் சேர்ந்து நற்பலனைத்தரும் கேந்திரமான நாலு அல்லது பத்தாம் இடமான சுகம் உத்யோகமென்னு மிராசிகளில் சுக்கிரனிருக்கவும், நிலை யகற்றும் சக்திவாய்ந்த உச்சம்பெற்ற சனி துலாராசியிலிருந்து பார்க்க அந்த ஜாதகன் தைரியமும் புகழும் படைத்த மன்னவர்களுக்கு நடாக வாழ்குவானென்று சொல்வாய் எ-று. (302)

மாதேகேடன்மயோக வகைகன்மமன்னனோடு
தாதையுங்கூடியெந்தத் தலத்தினிலிருந்தபோதும்
ஓதியவொருவர்வீட்டி லொருவர்மாறியிருந்த
போதுமாறுதசெல்வம் பொருந்திடும்ராஜயோகம்.

(இ-ள்) உலகில் சிறப்புபொருந்திய பெண்ணே! கர்மயோகத்தின் விபரத்தைச் சொல்லவேண்டுமாயின் ஜெனனராசிக்கு பத்தாம்வீட்டில் அதிபதியும், தந்தை லக்னாதிபதியான 9-ஆம் இராசிக்குடையவனும், தன் ஆக்ஷிவீடன்றி வேறு எந்த ராசியிலிருந்தாலும், 9-10 என்னும் வீட்டிற்கு உடையவர்களை கூடி இருந்தாலும் அந்த சாதகன் எந்தகாலத்தும் அறிவும் இகழ்ச்சியும் அடையப்படமாட்டாத தனத்தைப் படைத்து ராஜயோகத் தோடு இருப்பான் எ-று. (808)

யோகமாமிலக்கினாதி யிருந்தவீடுடையோனுச்சம்
ஆகக்கேந்திரத்துற்றாலும் பர்வதயோகமாமே
ஏகமாமனையோன்றானு மிருந்தவங்சிசத்தோன்றானும்
வாகுகேந்திரகோணத்தில் வரின்மன்னர்மன்னனாமே.

(இ-ள்) ஜெனனராசிக்கு அதிபதி எந்த ராசியில் சேர்ந்தாலோ அந்த ராசிக்குடையவன் உச்சம் பெற்றாலும், லக்னத்திற்கு 1-4-7-10-ஆம் இடங்களான கேந்திரங்களி லிருந்தாலும் பர்வதயோகமென்பர். நாவீட்டிற் காரர்களாகிய சூரியன் சந்திரன் இவர்கள் எந்த அம்சமும் பெறாராகவோ அந்த அம்சத்ததாதி கேந்திரத்திலேனும், 5-9 என்னும் திரிகோணங்களி லேனும் இருந்தால் அரசர்களுக்கெல்லாம் அரசனாக இருப்பான் எ-று. ()

மன்னியசன்மமுன்பின் மனைக்கிறையிருவர்கூடி
பன்னுகேந்திரத்திருக்கிற் பர்வதயோகமென்ப
மின்னனையார்க்குநேயன் வெகுசவுக்கியவான்வேந்தன்
துன்னியகீர்த்தியுள்ளான் துரகாதிபதியுமாவான்.

(இ-ள்) ஜெனனராசிக்கு இரண்டாம் வீட்டோனை தனாதிபதியும் 12-ஆம் வீட்டோனை விரயாதிபதியும் கூடி கேந்திரமென்னும் 1-4-7-10 என்னுமிவ்விடங்களில் இருந்தால் பர்வதயோகமென்பர். அதன்பலன் பெண்களுக்கு நேயனும் சுகம் உள்ளவனும் உத்தமகுணம் உடைய மன்னனும், பிரகாசம் நிறைந்தவனும் கீர்த்தி பிரக்யாதியுள்ளவனும், குதிரைப்படை புள்ளவனுமாவான் எ-று. (805)

ஆனதோர்பணபரத்தி லடுத்தலக்கினத்திற்சோமன்
தானுறக்கேந்திரத்திற் றமனியன்ருனுமேவ
வானவர்க்கரசயோக மதிமகனுச்சமாகக்
கூனவில்லங்கிசத்திற் ருேன்றிடிற்செங்கோல்வேந்தாம்.

(இ-ள்) *பணபரஸ்தானங்களுக்கு அடுத்தராசியில் சந்திரனிருக்கவும் 1-4-7-10-ஆம் இடமென்னும் கேந்திரஸ்தானங்களில் ஒன்றில் சனியும் வாசம் செய்ய தேவேந்திரயோகமென்று சொல்லுவார். புதன் உச்ச க்ஷேத்திரம் பெற்று, தனுசுராசிக்கு அதிபனுகிய குருவினம்ஸகும் பெற்றிருப்பானுகில் செம்மைபொருந்திய நீதிக்கோலைத் தாங்கும் மன்னன் ஆவான் எ-று.* (806)

வேறு

ஆகிய மகத்தில் முதல்பதத்து இரவி
அசுபதி முதலினில் செவ்வாய்
அத்தமூன் ருங்கால் இடத்தினில் புந்தி
அவிட்டமாந் திரயபா தத்தில்
வாருசேர் சோதி உபயதாள் இடத்து
மருவியே மந்தனுர் இருக்க
வண்மைசேர் மூலம் முதல் அடிக்கு அரசன்
மருவுரோ கணிஇரு காலும்
பாருசேர் மொழியாய் சித்திரை மூன்ரும்
பதத்தினுஞ் சுக்கிரன் உறையும்
பலந்திர யக்கா ணங்கவாங் கிசையும்
பரவிய துவா தசாங் கிசையும்
மோகமாம் திரிமி சாங்கிசை ராசி
முதலிந்த வகைக்குஎலாங் காணும்
முறையினில் உதித்தோன் அரசனும் என்றே
மொழிவர்முன் னூலுணர்ந் தவரே.

(இ-ள்) *மகாநட்சத்திரத்து முதற்பாதத்தில் சூரியனும் அசுவனி 2-வது பாதத்தில் செவ்வாயும், அஸ்தம் 3-வது பாதத்தில் புதனும், அவிட்டம் 3-வதுபாததநில் அல்லது சுவாதி 2-வது பாதத்தில் சனியும், மூலம் 1-வது பாதநில் குருவும், ரோகணி 2-வது பாதத்தில் அல்லது சித்திரை 3-வது பாதநில் சுக்கிரனும் இருக்கும் பலனுவது (இராசி, ஹோரை) திரேக்காணம் நவாம்சம், துவாதசாம்சம், திரிம்சாம்சம் ஆகிய (சட்) வர்க்கங்களிலும் ஆட்சி மித்திர ராசி வர்க்கங்களில் காணப்படும் ஒழுங்கினுல் பிறந்த ஜாதகன் அரசனுவான் என்று முதல்நூலை நன்கு அறிந்த சோதிடப்புலவர் கள் கூறுவார்கள் எ-று.*

### இச்செய்யுளில் கூறியபடி கிரகநிலைகளை அறியும் இராசிச் சக்கரங்கள்

| | | | |
|---|---|---|---|
| | அங் | சுக் | |
| சனி | 1 | | |
| | இராசி | | சூரி |
| குரு | | | புத |

| | | | |
|---|---|---|---|
| | அங் | | |
| | 2 | | |
| | இராசி | | சூரி |
| குரு | | சுக சனி | புத |

இந்தச் செய்யுளில் இலக்கினம் இன்னதெனக் கூறப்படவில்லை.

(வி-ரை) மகம் முதற்பாதத்தில் சூரியனிருக்கில் ரோகணி 2-வது பாதத்தில் சுக்கிரனிருப்பின் முறையே சிங்கம் இடபத்தில் காணப்படுதலின் சூரியனுக்குப் பத்தாமிடத்தில் சுக்கிரனிருப்பது இயலாதகாரியமென்று கணித சாஸ்திரங்கூறுகிறது. இவ்விரண்டையுங்குறித்து ஊன்றிநோக்குமிடத்து இக்கிரகநிலைகளுக்கு இலக்கினம் மிக அவசியமாகும். இந்தப்படி இச்செய்யுளில் கூறப்பட்ட கிரகங்களில் ஒன்றேனும் பலவேனும் குறித்த நட்சத்திர பாதத்திலிருந்து அந்த இராசிகளில் ஒன்று இலக்கினமாயிருந்தால் அரசயோகத்தைக் கொடுப்பதற்குக் காரணமாமென்று அறியவும். சகல (ஆறு) கிரகங்களும் ஷை செய்யுளில் கூறிய நட்சத்திரபாதங்களில் இருத்தல் அவசியமென்றும், அப்படி இருந்தால்தான் இராஜயோகத்திற்குக் காரணமென சிலர் கூறுவர்; அஃது பொருத்தமாகக் காணப்படவில்லை. யாம் ஆராய்ந்த வரையில் இதன் முதல்நூற்களில் ஆதாரம் யாண்டுங் காணக்கிடைத்திலது.

சர திர உபய ராசிகள் என்னும் வித்தியாசமின்றி எந்த ராசிகளிலேனும் முதல் 10-பாகைக்குள் அந்தராசியிலும், நடுப்பத்துக்கு 5-வது ராசியிலும், கடைப்பத்துக்கு 9 வது ராசியிலும், கிரகங்களைத் திரேக்காணச்சக்கரத்தில் அமைத்தல் பலர் சம்மதம். இந்நூலாசிரியர் சரம் 1-5-9 திரம் 9-1-5 உபயம் 5 9-1 எனக் கூறுகிற்பர்.

ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொண்ட இச்செய்யுளில் சட்வர்க்கமென்பதை வெளிப்படையாகக் கூறப்படாமையாலும், ஹோரை என்ற பிரயோகமே இன்மையாலும், திரேக்காண நவாம்ச துவாதசாம்ச திரிம்சாம்சமென்னும் நான்கு வர்க்கங்களே பிரஸ்தாபிக்கப்பட்டிருப்பதனாலும், சட்வர்க்கங்களிலும் உத்தமவர்க்கத்தில் இருந்தால் அரசயோகமுண்டாம் எனப் பொருள்கொள்ளுதல் ஒரு சிலா இழுக்கெனக் கூறுகிற்பா அஃது முறையன்று. இச் சாதகாலங்காரம் 241-வது செய்யுள் முதலாக 247-வது செய்யுள்வரையில் திரேக்காணதி திரிம்சாம்சாந்தமான நானகு வர்க்கங்களைப்பற்றியே கூறப்பட்டுளது. இராசி ஏற்கெனவே ஒருவர்க்கமென்பது வெளிப்படை. ஓரையைப்பற்றி இங்கு கூறாது விட்டிருப்பினும் சட் சப்த தசசோடசவர்க்கங்கட்கு ஓரை மிகமிக அவசியமென்பது சொல்லாமலேயே அமையும் எல்லா ஆசிரியர்களும் தத்தம் மதப்படி கூறியுள வர்க்கங்களில் இராசியையும் ஓரையையும் கூட்டியே வர்க்கங்களை விளக்கியிருக்கின்றார்கள் என்பதை அறிஞர்கள் நன்கு உணர்வார்களாக.

*த்ரிசதுஃ பஞ்ச கேடேஷு துங்கேஷு பவேஜ்ஜனிஃ*
*தத்ரைக ஸ்மின் லக்னகதே ராஜாஜோ வாக ஸம்ஸயஃ*

(ஹோராநுபவதருப்பணம்)

(இ-ள்) மூன்று நான்கு ஐந்து கிரகங்கள் உச்சமாயிருக்க, அவர்கள் இருந்த இராசியிலொன்று இலக்கினமாகப் பிறந்தவர்களுக்கு இராஜயோக முண்டாகும் எ-று.

இந்நியதியின்படி இச்செய்யுளில் கூறிய ஆறு கிரகங்களில் ஏதேனும் ஒன்றோ பலவோ வர்க்கபலம் பெற்றிருக்க, அப்படி பலம்பெற்றிருந்த கிரகங்கள் இருந்த இராசிகளில் ஒன்று இலக்கினமாகப் பிறந்தவர்களுக்கு இராஜயோகமுண்டாகும் என்று அறியவும். முன்பு காட்டப்பெற்ற உதாரண சக்கரங்களில் முதல்சக்கரப்படி கிரகநிலை அமைவது முடியாத காரியம். 2-வது சக்கரப்படி ஒருகாலத்தில் அமையக்கூடும். அப்போது மேட சிங்க கன்னி துலா தனுசு இவற்றுள் ஒன்று இலக்கினமாகப் பிறந்தவர்களுக்கு அரசயோகமுண்டென்று திண்ணமாக அறிதல் வேண்டும். இந்நியதியை புணராத ஒருசிலர் எல்லாகிரகங்களும் செய்யுளில் கூறிய படியே அமைந்து லக்கினாதி சட்வர்க்க லக்கினங்களில் ஒன்று இலக்கின மாகப் பிறந்தவர்கட்கு இராசயோக முண்டெனக் கூறுகிற்பர். இவர்கள் கருத்தை விவேகிகளே அறிந்து அளவிடுதல் வேண்டும்.

ஏற்புடைக்கோடல் என்னும் யுக்தியினால் மகம் 1 ல் சூரியனிருக்க சிங்கலக்கினத்திலும், அசுவினி 1 ல் செவ்வாய் இருப்ப மேடலக்கினத்திலும் அஸ்தம் 3-ல் புதன் இருக்க கன்னியாலக்கினத்திலும், மூலம் 1 ல் குரு விருக்க தனூர்லக்கினத்திலும், ரோகணி அல்லது சித்திரை 3-ல் சுக்கிரன் இருப்ப ரிஷபம் அல்லது துலாலக்கினததிலும், சுவாதி 2-ல் அல்லது அவிட்டம் 3-ல் சனி இருக்க துலாம் அல்லது கும்பலக்கினத்திலும் பிறந்தால் முறையே ஆறுவகையான இராஜயோகமுண்டென்பதை இச்செய்யுளிலே கூறப்பட்டிருக்கின்றது. இச்செய்யுளில இங்ஙனம சில நக்ஷத்திரங்களை மட்டும் கூறியிருத்தல் யாதுபற்றி எனின் கூறுவாம். மகம 1-வது பாதத்தில் சூரியன் இருந்தால் அப்போது சிங்கராசியில் 3 பாகை 20கலைக்குள் இருத்தல்வேண்டுமென்று நன்கு அறியப்படுகின்றது. ஆனால் சுய துவாதசாம்சத்தில் சூரியன் அமைவதற்கு சூரியஸ்புடம் ராசி 0-2 30 ஆக இருத்தல் வேண்டும். அப்படியானால் சூரியன் முறையே சிங்க, சிங்க, சிங்க, மேட, சிங்க, மேடம் என்னும் இராசி, ஹோரை, திரேக்காணம், நவாம்சம், துவாதசாம்சம், திரிம்சாம்சம் ஆகிய இவ்வாறு வர்க்கங்களில் காணப்படுவன். இவை சூரியனது ஆட்சி, உச்சக்ஷேத்திரங்களாதல்பற்றி சூரியன் சட்வர்க்கத்தில் மிக வீரியமுடையவனாய் இருக்கின்றான். இச் சமயத்தில் மேடலக்கினத்தில் பிறந்த ஜாதகன் அரசனாவான் என்று அறிதல்வேண்டும். சூரியாதி சப்தகிரகங்களில் சந்திரன் நீங்கிய ஏனைய ஆறு கிரகங்களை நக்ஷத்திர மண்டலத்தில் இன்னின்ன நக்ஷத்திரபாதத்திலிருந்தால், சட்வர்க்கத்தில் வீரியமுடையவர்களாவார்கள் என்பதை இச் செய்யுள் நன்கு விளக்க எழுந்ததாகும். இதில் காட்டிய நிரைகாண நிர்ணயம் இந்நூலாசிரியர் முறையை அநுசரித்ததல்ல. வேறு விதியை அநுசரித்தது. ஜாதகாலங்காரம் கூறிய அஸ்தம் 3-வது பாதத்தைவிட மிருக

சிரஷம் 8-ல் புதன் இருக்க மிதுனலக்னத்தில் பிறந்தால் இராஜயோக மூண்டென்று கூறலாம். அப்போது புதஸ்புடம் ராசி 2-2-30 ஆகும். முறையே புதன், மிதுன, மிதுன, மிதுன, துலா, மிதுன மேடம் என்னும் இராசியாதி திரிம்சாம்சாந்தமாயுள்ள சட்வர்க்கங்களில் பலமுடையவனும் அமைதற்காண்க. இதனைவிட்டு அஸ்தம் 3-வது பாதத்தைக்கொண்டது யாதுபற்றி எனின்? கன்னி புதனுக்கு மூலத்திரிகோண ராசியாதலானும், அஸ்தம் 3-வது பாதத்துக்கு 20-பாகையாதலானும் மிருகசிரஷத்தைவிட அஸ்தம் சிறப்புடையதென்பது சித்தாந்தமாகும். இச்செய்யுளின் மூகிய கருத்து கிரகங்களின் சட்வர்க்கங்கொண்டு இராஜயோகத்தை கூறப்பட்டிருக்கின்ற பலத்தைப் பின்வரும் எடுத்துக்காட்டுதலால் இனிதுணரலாம்.

ப்ராலேந்து காலே ஸ்புரதம் சுஜாலஃ
ஷட்வர்க்க சுத்தோ அதிதி வேள்வவேலா,
துங்கே த்ரிகோணே ஸசபசச ஸேத்ரோ
நரம் ப்ருர்யாத் சுஜஸார்வ பௌமம்,

(ஜாதகாபரணம் இராஜயோகாத்தியாயம்)

(இ-ள்) ஜனனகாலத்தில் சந்திரன் சட்வர்க்கத்தில் சுத்தமாய் (பலமாய்) புனர்வசு நக்ஷத்திரத்தில், கடகராசியில் இருந்தாலும், அல்லது உச்சம் பெற்று (5) ஐந்து (9) ஒன்பதாகிய திரிகோணராசியில் இருந்தாலும் அந்த ஜாதகன் நிச்சயமாக சமுத்திரபரியந்தம் உள்ள பூமிக்கு அரசன் ஆவான் எ-று.

புனர்வசு 4-ல் சந்திரன் இருத்தல்வேண்டுமென்பது சொல்லாமலே விளங்கும். அங்ஙனமாகுல் சந்திரன் கடகமாகிய இராசியாதி துவாதசாம்சம் வரையில் கூடிய ஐ துவர்க்கங்களில் ஆட்சிவீட்டிலும், திரிம்சாம்சத்தில் ரிஷபமாகில் உச்சவீட்டிலும் அமைதற்காண்க. உச்சத்தில் 5-9-ல் இருந்தால் எனவே இங்ஙனம் கன்னி மகரலக்னங்கட்குத்தான் அமையும். ஏனைய இலக்னங்கட்கு அமையாதென்றறிக.

ஷட்வர்க்கசுத்தௌ சுசரத்வயம்சேத்
யதோக்தரீத்யா ஜநநேர்ருபஸ்ய
தஸ்யாதிபத்யம் சுஜுகிரலேஷு
த்வீபாந்தரேசாந்த்ர நிம்தராயாம்.

(இ-ள்) ஜனனகாலத்தில் இரண்டு கிரகங்கள் முன்போல சட்வர்க்க சுத்தமாய் இருந்தால் அந்த ஜாதகன் அரசனுவான். இவன் மன்னர்களுக்கு அரசனாய் த்வீபாந்தரத்திலுள்ள பூமியை ஆளுவான் எ-று.

குறிப்பு:—அப்படி சட்வர்க்க சுத்தம்பெற்ற இரண்டு கிரகங்களிருந்த இராசியில் ஒன்று இலக்னமாகப் பிறத்தல் வேண்டுமென்றறிக.

துங்கத்ரிகோணுத் யதிகாரதுரீணஃ
ஷட்வர்க்கசுத்தைஸ் த்ரிபிரேவமந்த்ரீ
ராஜாசதுர்பிஃ சுஜஸார்வபௌம:
பஞ்சாதிபிர்வாக் யதிகைவேக.

(இ-ள்) ஜனனகாலத்தில் மூன்று கிரகங்கள் உச்சம், மூலத்திரிகோணாதி அதிகார ஜனமுள்ளதாய் இருந்து சட்வர்க்கத்தில் சுத்தமாயிருந்தால் அந்த ஜாதகன் மந்திரியாவான். இந்தப்படி நான்கு கிரகமிருந்தால் அரசனுவான். 5 அல்லது 6 கிரகங்களிருந்தால் ஷட்வர்க்கத்தில் சுத்தமாய் (பலத்துடன்) இருந்தால் சார்வபௌமனுவான். மற்றும் குரு சட்பலம் சுத்தமாய் இருந்தால் அரசனுவான் எ-று.

இந்த மூன்று எடுத்துக்காட்டு சுலோக வசனங்களினுல் நாம் அறியக்கிடைப்பது யாதெனின் சப்த கிரகங்களில் சட்வர்க்கத்தில் பலமுடையவர்களாய் ஒருவர் அல்லது, இருவர் அல்லது, மூன்று நான்கு ஐந்து அறுவர் இருப்பின் முறையே ஒன்றைவிட ஒன்று பலமுடையதான இராஜயோகமென்பதேயாம். சட்வர்க்கத்தில் இராசியில் சுத்தமின்றி ஹோராதிகளில் சுத்தமாக 3-கிரகமிருப்பின் மந்திரி எனவும், ஒன்றுமுதல் ஆறு கிரகங்கள் வரை சட்வர்க்கசுத்தமாய் அவர்களிருந்த ராசிகளில் ஒன்று இலக்கினமாகப் பிறந்தால் இராஜயோக முண்டென்பது விளக்குதலுணர்க. இதனையே ஷை ஜாதகாலங்காரவசனமும் கூறியிருக்கின்றதன்றி வேறில்லை என்பதாம்.

க்ருத்திகா ரேவதி ஸ்வாதி புஷ்யஸ்தாயி ப்ருகோஃ ஸுதஃ
கரோதி பூபுஜாம் நாதம் அச்விர்யாபிஸ்ம்ஸ்திதஃ
(சாராவளி)

(இ-ள்) அசுவனி கிருத்திகை பூசம் சுவாதி ரேவதியில் சுக்கிரனிருக்க (அவற்றுள் ஒன்று இலக்கினமாகப்) பிறந்தவன் அரசனுவான் எ-று.

இவற்றுள் அசுவனி 2-ல், கிருத்திகை 4-ல், பூசம் 3-ல், சுவாதி 4-ல், சுக்கிரன் இருப்பது சிறப்பாம். ஏனைய பாதங்கள் அத்துணைச் சிறப்பின்மையாம். யாதுபற்றி எனின்? முறையே ஆட்சி உச்சம், ஆட்சி உச்ச அம்சங்களில் இருத்தலினுல் என்றறிக.

பௌஷ்ணே பால்குர்யாம் வா மூலே புஷ்யேசபாஸ்கரஃ
குருதே லக்நகதே நாதம் போஜக சதமாத்ரகே தேசே.
(சாராவளி)

(இ-ள்) பூசம் பூரம் உத்தரம் மூலம் ரேவதி இந்த நக்ஷத்திரங்களில் ஒன்றில் சூரியனிருக்க, அதுவே இலக்கினமானுல் சதயோசனை பூமியை பரிபாலிக்கும் இராஜயோகமுண்டாகும் எ-று.

இவற்றுள் பூசம்-1, பூரம்-1, உத்ரம்-1-4, மூலம்-1, ரேவதி-1-4-ல் சூரியன இருப்பது சிறப்பாம், யாதுபற்றி எனின்? முறையே ஆட்சி, ஆட்சி, நட்பு, உசசம், நட்பு அம்சங்களில் இருத்தலினுல் என்றறிக. (307)

மொழிந்திடு சிங்கத்து அரசனுர் இருக்க
முறையினில் காரிகும் பத்தில்
முயன் றுமால் மிதுனம் சசிஉச்சத்து இருக்க
மொழிகுசன் தேனுறக் கதிரோன்
ஒழிந்துரு துச்சம் எய்திட இராச
யோகமாங் கடகரா சியினில்

ஒண்மதி அரசன் கூடினும் அரசன்
ஒருவனும் ஏழினில் இருக்க
கழிந்தவல் அகத்துள் ஒருவர்அன் னவனைக்
காணினும் இராசயோ கமதாம்
கருதிடும் ஒருகோள் உச்சமாய் மற்றோர்
காணும்நட் பாட்சியைப் பெறினும்
வழிந்திடுங் கருணை வெள்ளிநா பத்தில்
மன்னவன் காரிவில் மதிகோல்
மதிமகன் கதிரோன் தகர்குசன் குடமாய்
வரினுநன் மன்னனா குவனே.

(இ-ள்) சொல்லப்பட்ட சிங்கத்தில் குருவும் கும்பத்தில் சனியும், மிதுனத்தில் புதனும், இடபத்தில் சந்திரனும், விருச்சிகத்தில் செவ்வாயும், மேடத்தில் சூரியனும் இருக்க (கும்பம் மேடம் இடபம் இவற்றுளொன்று இலக்கினமாகப்)பிறந்தவர்களுக்கு இராசயோகமுண்டாம். கடகத்தில் குருவும் சந்திரனும் கூடியிருக்கக் கடகலக்கினத்தில் பிறந்தவர்களுக்கும். குரு ஏழாமிடத்திலிருக்க, அவனை ஏழாமிடம் நீங்கிய ஏனைய வலிதுபெற்ற (இலக்கினத்திற்குக் கேந்திரகோணங்களாகவோ, அல்லது ஆட்சியுச்சங்களாகவோவுள்ள) இராசிகள் ஏதேனும் ஒன்றனுள் (இருந்தவர்) ஒருவர் பார்க்கப் பிறந்தவர்களுக்கும் இராசயோகமுண்டாம் யாதேனும் ஒருகிரகம் உச்சத்திலிருக்க ஏனைய கிரகங்கள் நட்பாட்சிகளில் இருக்கப்பிறந்தவர்களுக்கும், கருணைமிக்க சுக்கிரன் இடபத்திலும், குரு சனி தனுசிலும், சந்திரன் இடபத்திலும், புதன் சூரியன் மேடத்திலும் செவ்வாய் கும்பத்திலும் இருக்க கும்பலக்கினத்தில் பிறந்தவர்களுக்கும் இராசயோகம் உண்டாகும் எ-று.

கழிந்த - ஏழாமிடம் நீங்கலாயுள்ள ஏனைய இராசிகள், வல் + அகம் + அகத்து உள் — வலிவுபெற்ற இராசிகள், அவை கேந்திரகோணம்; அல்லது ஆட்சியுச்ச ராசிகளில் இருந்தவர் என்பது பொருளாகும் ஒழிந்து உருது உச்சம்-தனது அதியுச்சபாகையில் இருப்ப என்பதுபொருளாகும். இச்செய்யுளில் 1-வது யோகத்தில் சுக்கிரனுக்கு 8-ல் புதனும் 5-வது யோகத்தில் சுக்கிரனுக்கு 7-ல் புதனும் இருத்தல் வேறுமொழிமைக் கூறப்பட்டுளது. சூரியனுக்கு முன்பின் புதசுக்கிரர்கள் 6-இராசிக்கு அப்புறம் இருக்க இயலாது. அப்படியாக கும்பத்தில் சுக்கிரன் எனவே ரவியின் இருப்பு மேடம் ஆக வைத்து நோக்கின் புதன் 0 ல் இருக்க இயலாது, தனுசில் வைத்து நோக்கின் புதன் சூரியனுக்கு 10-ல் இருக்க இயலாது, விருச்சிகமாக வைத்து நோக்கின் சுக்கிரன் 4-லிருக்க இயலாது 5-வது யோகத்திற்கும் இதுவே முறை ஆகவே சுக்கிரன் புதன் இவர்கள் ஒருவர்க்கொருவர் 6-இராசி தூரத்திற்கு அப்புறம் ஒருபோதும் இருக்க இயலாதென்று உணர்தல் வேண்டும்

இச்செய்யுளின் முதலடி முதற்சீர்முதல் மூன்றும் அடியின் ஐந்தாம் அடிவரைக்கும் ஒருவகை இராஜயோகம் கூறப்பட்டுளது.

அதில்:-மொழிந்திடுஞ் சிங்கத்து அரசனும் இருக்க
முறையினில் வெள்ளி கும்பத்தில்
மூயன்றுமால் இந்தும் உச்சமாய் இருக்க
முதல்இவர் நால்வரும் அடைவே
ஒழிந்தரு துச்சம் எய்திட ராஜ யோகமாம்.

என்றிருப்பது பக்திக்கும் முதல்நூலுக்கும் பொருத்தமாகக் காணப்படவில்லை. சுக்கிரன் கும்பத்திலிருந்தால் புதன் கன்னியில் உச்சம்பெறுவது யாங்ஙனம்? கணிதசாஸ்திரங் கற்றறியாத சில்லோர் இதனை உற்றுணராது இருந்தது இருந்தபடியே பொருள் கூறுவர். இவர்களின் அறிவையும், நுண்மதியையும் என்னென்றியம்புவது? மற்றும் இரண்டாம் அடியின் ஆறாவது அசை முதல் ஈற்றடிவரையில் ஒருயோகம் கூறப்பட்டுளது. அதில் குரு சுக்கிரன் புதன் சந்திரன் என்னும் நால்வரும் உச்சம்பெற்றால் ஒரு இராஜயோகமென்று கூறப்பட்டுளது. இதிலும் சுக்கிரன் உச்சம் எனவே அவன் இருப்பு மீனம் என்பதும், புதன் உச்சம் எனவே அவன் இருப்பு கன்னி என்பதும் வெளிப்படை. சுக்கிரன் புதன் இவர்கள் ஒருவர்க்கொருவர் 5-இராசிக்கு அப்புறம் இராசிமண்டலத்தில் இருத்தற்கியலாது. இதனை உணராது அந்நால்வரும் உச்சம்பெறின் இராஜயோகமெனச் சிலர் பொருளுரைக்கின்றனர். என்னே ஆச்சரியம்! என்னே நுண்மதி! ஆதலின் யாம் பிருகஜ்ஜாதகத்தில் கூறப்பட்டுள 24-வகை இராஜயோகங்களில் 1-2-3-வது இராஜயோகங்களே இதுவாமெனத் துணிந்து அதனை ஒட்டி மூலத்தை முதல் முதல் அச்சேற்றினோர் பிழையாமெனத் திருத்தியமைத்தாமென்க.

யமேகும்பே அர்க்கே அஜே கவிசசி னிதைரேவ தநுகைர்
ந்ருயுக்ஸிம் ஹாலிஸ்தை: சசிஜ குருவக்ரைர் ந்ருபதய:

(இ-ள்) சனி கும்பத்திலும், சூரியன் மேடத்திலும், சந்திரன் இடபத்திலும் இருந்து (இவர்களுள் யாரேனும் ஒருவர் இலக்கினமாக) புதன் குரு செவ்வாய் இவர்கள் முறையே மிதுனம் சிங்கம் விருச்சிகம் இவற்றிலிருந்தால் அப்பொழுது பிறந்தவர்கள் இராஜயோகம் உடையவர்களாவார்கள்.

"வக்ரார்க்க ஜார்க குருபி: ...... தைகதமே விலக்னே
ஸ்வக்ஷேத்ரகே சசி ......... பூமி பாஸ்ய:"

எனவரும் பிருகஜ்ஜாதகம் இராஜயோகாத்தியாயம் 2-வது சுலோக வசனத்தினால் குரு சந்திரன் கர்க்கடகத்திலிருக்க அதுவே இலக்கினமானால் இராஜயோகமெனக் கூறப்பட்டிருத்தலைக் காண்க. இது பிருகஜ்ஜாதகத்தில் கூறியுள 32-இராசயோகங்களில் 30-வது இராஜயோகமாகும். இச்செய்யுளின் மூன்றாம்அடி 6-வது சீர்முதல் நான்காம்அடி 3-வது சீர்வரைக்கும் கூறப்பட்ட 2-வது இராசயோகமென்று அறியவும். ஏழாவது அடி 3-4-வது சீர்களில் "வெள்ளி மீனத்தில்" எனவும், எட்டாவது அடி 1-முதல் 4-சீர்கள் வரையில் "மதிநுதல் கன்னி யிடத்தின்மால் இருக்க" எனவும் கூறியிருப்பதில் புத சுக்கிரர்கள் இருப்பு ஏழுக்கு ஏழாமிடமாதலின் இவர்கள் ஒருவர்க்கொருவர் இருப்பு ஐந்து இராசிக்குமேல் இருக்க இயலாத காரியம். 7-வது அடியின் 5-முதல் 7-சீர்கள்வரை சனி குரு தனுவில் இருக்க என்று கூறப்பட்டதிலிருந்து இந்த யோகம் பிருகஜ்ஜாதகத்தில் கூறப்பட்ட 24-வகை ராஜயோகங்களில் ஒன்றென்று மதித்தல்வேண்டும்.

அஃது வருமாறு:—

ஸ்வர்க்ஷே சுக்ரே பாதாலஸ்தே தர்மஸ் தாரம்
ப்ராப்தே சந்த்ரே, துச்சிக் யாங்க ப்ராப்தி ப்ராப்
தைஃ சேவைஷர் ஜாதஃ ஸ்வாமீ பூமேஃ,

(இ-ள்) சொந்தவீடான இடப துலாத்தில் சுக்கிரன் இருக்க, அது இலக்கினத்திற்கு 4-ஆமிடமாக, சந்திரன் 9-ஆமிடத்திலிருக்க, மற்ற சூரியன் செவ்வாய் புதன் குரு சனி இவர்கள் 1-3 11 ல் (1-ல் செவ்வாய், 3-ல் சூரியன்-புதன், 11-ல்குரு-சனி) இருக்கப்பிறந்தவன் பூமிக்கு அரசனாவான்.

இந்த யோகம் இடபதுலாம் 4-ஆகி சுக்கிரன் இருந்தால் எனவே கும்பம் கடகம் ஆகி இவ்விரு இலக்கினங்கட்கே யுண்டாகும். ஆகவே கும்பத்திற்கு 11-ல் குரு சனி இருப்பின் அது தனுர் இராசியாகும். இதனால் இந்தச் செய்யுளில் 5-வது இராஜயோகத்தில் குரு சனியின் இருப்பு தனுசு என்ற பிரயோக மிருத்தற்பற்றி அதன்படி திருத்தி யமைத்திருப்பதை விவேகிகள் ஆழ்ந்தறிவார்களாக.

மூலசுலோகத்தில் குரு சனிகளின் இருப்பு தனுசு என்று வியக்தமாகக் கூறவில்லையே, அங்ஙனமிருப்ப எப்படி தனுசு எனக் கூறமுடியும் எனின் ஷை பிருகஜ்ஜாதக வியாகியான கர்த்தர் ஸ்ரீயுத பட்டோத்பலர் அங்ஙனம் கூறியுளார். விரிவஞ்சி இங்கு அதனைக் கூறவில்லை என்க.

இச்செய்யுளில் கூறப்பட்ட 5-இராஜயோகங்களில்

1-வது யோகத்திற்கு மூன்று, 2-வது யோகத்திற்கு ஒன்று
5-வது யோகத்திற்கு இரண்டு

**ஆக ஆறு சக்கரங்களின் விபரம் வருமாறு:**

| | | | |
|---|---|---|---|
| | சூ | சந் | புத |
| ல சனி | 1-வது 1-ல் | | |
| | இராஜ யோகம் | | குரு |
| | செ | | |

| | | | |
|---|---|---|---|
| | லக் சூரி | சந் | புத |
| சனி | 2-வது 1-ல் | | |
| | இராஜ யோகம் | | குரு |
| | செ | | |

| | | | |
|---|---|---|---|
| | சூரி | ல சந் | புத |
| சனி | 3-வது 1-ல் | | |
| | இராஜ யோகம் | | குரு |
| | செ | | |

| | | | |
|---|---|---|---|
| | | | |
| | 2-வது | | லக் கு-சந் |
| | இராஜ யோகம் | | |
| | | | |

| | | | |
|---|---|---|---|
| | சூரி புத | சுக் | |
| லக் செ | 1-வது 5-ல் இராஜ யோகம் | | |
| | | | |
| குரு சனி | | சங் | |

| | | | |
|---|---|---|---|
| சங் | | குரு சனி | |
| | 2-வது 5-ல் இராஜ யோகம் | | லக் செ |
| | | | |
| | | சுக் | சூரி புத |

இந்நூலாசிரியர் இராஜயோக இலட்சணங்களைப்பற்றிக் கூறியுள்ள இடங்களில் பெரும்பாலும் இலக்கினம் இன்னதெனக் கூறவில்லை. பாயிரத்தின் பிருகஜ்ஜாதகத்தையும் பிறநூற்களையும் பார்த்து இந்நூலை இயற்றியிருப்பதாகக் கூறியிருத்தலின் இராஜயோகங்கள் சிலவற்றைப் பிருகஜ்ஜாதகப்படி திருத்தி அமைத்திருக்கின்றோம் இவ்வனம் திருத்தியமைத்தது பிரபல ஏதுக்களைக் கொண்டேயன்றி வாளா யமைத்ததல்ல.

கர்க்கஸ்திதோ தேவகுருஃ ஸசந்த்ரஃ காச்மீர
தேசாதிபதிம் கரோதி. (ஜாதகாபரணம்)

2-வது யோகத்தில் பிறந்தவன் காச்மீர தேசத்துக்கு அரசனுவான் என்று அறியவும். (308)

ஆகுவா கனத்தோன் அருளினல் கடகத்து
அரசனும் இரவிமே டத்தில்
அம்புலி புந்தி புகர்எருது ஏற
அரசர்கள் யோகம்என்று உரைப்பார்
வாகுசேர் கும்ப இலக்கினம் ஆக
மாமதி உச்சம்ஆய் இருக்க
மன்னவன் தேளில் கதிர்தனது அகத்தில்
மருவநல் அரசயோ கமதாம்
ஏகம்ஆம் மதிக்கு ஆறுஏழுடன் எட்டில்
எழில்புதன் பிருகுபொன் இருக்க
இராசயோ கமதாம் பாம்பலாது அறுவர்
இனியதன் அகத்துஉறில் முன்போல்
மோகமார் வெள்ளி உச்சமாய்த் தனுசில்
முனிவிலா சசிகுரு இருக்க
முந்துதேள் இடத்தோன் மகரத்தில் இருக்க
முறைமுறை யோகம்என்று உரைப்பார்.

(இ-ள்) விநாயகக்கடவுளுடைய கிருபையினல் கடகராசியில் குருவும், மேடத்தில் சூரியனும், சந்திரன் புதன் சுக்கிரன் இவர்கள் இடபத்தில் இருக்கப் பிறந்தவர்களுக்கு அரசயோகம் உண்டாகும் என்று சோதிடப் புலவர்கள் சொல்லுவார்கள். ஓர் மனிதன் தோளிடத்தில் தாங்கிநிற்கும் வடிவமைந்த கும்பம் இலக்கினமாக, பெருமைபொருந்திய சந்திரன் உச்சம்

பெற்றிருக்க, குரு விருச்சிகத்திலும், சூரியன் சிம்மத்திலும் இருக்கப் பிறந்தவர்களுக்கு அரசயோகமுண்டாம், ஒப்பற்ற சந்திரனுக்கு 6-7-8. இந்த இடங்களில் அழகுதங்கிய புதன் சுக்கிரன் குரு இவர்கள் இருந்தால் (சந்திர அதியோகமாகிய) அரசயோகமுண்டாம். இராகுகேதுக்கள் நீங்கிய ஏனைய சூரியன் சந்திரன் செவ்வாய் புதன் குரு சுக்கிரன் சனி இவர்கள் தத்தமது சொந்த வீடுகளில் இருக்கப் பிறந்தவர்களுக்கு முன் கூறியபடி அரசயோகமுண்டாம். சிற்றின்பத்துக்கு அதிபனாகிய சுக்கிரன் உச்சத்திலும், கோபமற்ற குரு சந்திரர்கள் இருவரும் தனுவிலும், தனுவுக்கு மூன்றியுள்ள விருச்சிகராசிக்கு அதிபனாகிய அங்காரகன் மகரத்திலும் இருக்கப் பிறந்தவர்களுக்கு அரசயோகமுண்டாம் எ-று.

(வி-ரை) ஆகுவாகனன் = விநாயகக்கடவுள். வாகு சேர் கும்பம் = ஓர் மனிதன் தோளில் குடத்தைத் தாங்கிநிற்கும் வடிவுடைய கும்பராசி. மாமதி = பெருமைபொருந்திய சந்திரன் என்பதாம். சந்திரனுக்குபெருமையாவது அநேக இராசசூயயாகம் செய்தமையாம். ஏகம் ஆம் மதி = ஒப்பற்ற சந்திரன்; ஓஷதி பயிர்களுக்குத் தலைவனாயிருத்தலும், இறைவன் அஷ்டமூர்த்தங்களில் ஒன்றாயிருத்தலும், இறைவன் இடதுகண்ணாக விளங்குதலும், இறைவன் முடியணியாகத் தரிக்கப்பெற்றதுபற்றி ஒப்பற்ற சந்திரன் எனக் கூறினார் என்க. மற்றும்:—

மண்டலம் பயில் உரகர்பேர் உயிர்ப்பினால் மயங்கி
மண்டலம் பொற வருந்திய பெருந்துயர் மாற
மண்டலந்தனை நிழலெனும் மரபினால் தனது
மண்டலம் பொழி அமிழ்தின்மெயக் குளிரவே வைத்தோன்.

எனவரும் பாரதச் செய்யுளினால் பூமியையும், அதிலுள்ள சீவகோடிகளையும், தனது அமுத கிரணத்தினால் மெய்குளிர்ச்சிபெறச் செய்வித்தலும் ஒப்பற்ற தன்மைக்கு உரியதாகும்.

மோகம் ஆர்மதி வெள்ளி = சிற்றின்பத்துக்கு அதிபனாகிய, அதாவது காமகாரகனாகிய சுக்கிரன். மூந்து தேன் = தனுசுக்கு மூந்தியுள்ள விருசிகம் என்றறிக.

(309)

உரைசெறி குருவும் புலிததி ருச்சம்
உயர்குசன் புந்தியே ழிடத்தில்
உறைந்திடச் சனியுஞ் சுருவுற ராஜ
யோகமுச் சங்கதிர் பெறவும்
அரசனுந் தனுசி லுறினுமே ஷத்தில்
அம்புலி பொன்புக ரிருக்க
அரசயோ கமதா மேறிலக் கினமாய்
அம்புலி நிறையுநண் டேறப்
பரவிய வாறு கோளுமம் மதியைப்
பார்க்கவந் தியத்தின்மன் னவனும்
பாக்கிய தனலா பாதிசந் திரனும்
பண்பொடுங் கேந்திரத் திருக்கப்

பிருகுலா பத்தில் ஆட்சியா யிருக்கப்
பிரபல ராஜயோ கமதாம்
பெருகுமால் வெள்ளி சனியுமே கூடிற்
பெறுமுக சவுந்தா முளனும்.

(இ-ள்) *செப்புதற்கரிய குருவும் சந்திரனும் உச்சக்ஷேத்திரம் பெறவும் மேன்மையைப்படைத்த அங்காரகனும் புதனும் லக்கினத்திற்கு சப்தம ஸ்தானத்திலுமிருக்க சனி மகரராசியில் ஆக்ஷிபெற ராஜயோகம்உண்டாகு மென்று சொல்லுவர். சூரியன் மேஷராசியில் உச்சம்பெற குரு தனுசு ராசியிலும், மேஷராசியில் சந்திரன் குரு சுக்கிரன் இம்மூவர்களும் சேர்ந் திருந்தாலும் ராஜயோகமென்று சொல்லுவர். மேஷம்உடல் லக்கினமாயும் சந்திரன் தன் சுயவீடான கடகராசியிலிருக்க மற்றும் ஆறுகோட்களும் சந்திரனைப்பார்க்க தன் அந்தியவயதில் மன்னவனுவான் 2-9-11-ஆம் ராசிக்குடையவர்களும் சந்திரனும் லக்கினத்திற்கு 1-4-7-10-ஆம் ராசியில் இருந்தாலும், சுக்கிரன் 11-ஆம் இராசியில் சொக்ஷேத்திரம் பெற்றாலும், தாழ்வடையாத மேம்பாடான ராஜயோகத்தை அனுபவிப்பான். மேன்மை யைப் படைத்த புதன் சுக்கிரன் சனி இம்மூவர்களும் சேர்ந்து ஓர் வீட்டி லிருக்க பிரகாசமும் தேஜஸ் நிறைந்த முகாரவிந்த முடையவனுகவும் இருப்பான் எ-று.* (310)

உள்ளதோர் கடக லக்கின மாக
வுயர்குசன் குருவிரு வருமாய்
உற்றதோர் மேஷ நண்டுத் தேனு
முறைந்திடப் பாவரை யொழித்துத்
தெள்ளிரை யாக வுறைந்திடிற் றீர்க்க
சீவியாந் துரகாதி பதியாம்
செய்யலக் கினமாறு ஏழுட னெட்டிற்
செப்புமித் தலங்கணு்ன் கினிலும்
கள்ளமாய்ப் பாவ ரன்றிநல் லோர்கள்
காதலித் திடைவிடா திருக்கில்
கருதிய நாபி யோகமா மிதற்குக்
கனபலன் மந்திரி யாகி
வள்ளலாய்ச் சேனைத் தலைவராய்க் கலவி
மாதர்கள் பலர்க்குநா யகனுய்
வாலிப முதலாய் வெகுதனம் படைத்து
வாழ்வனென் றுரைப்பர் மாதவரே.

(இ-ள்) *ஜெனனலக்கினம் கடகராசியாகவிருந்து மேன்மையைப் படைத்த குஜனும் குருவும் ஒன்றுசேர்ந்து மேஷம் கடகம் என்னும் இராசி களிலிருந்து தீயகிரகங்களைச் சேராமலும், தீயகிரக நோக்கில்லாமலும் சுத்தமாய் இருப்பார்களேயானால் அந்த ஜாதகன்பூர்ணவயதும் சிரஞ்சீவி யாகவும், துரகாதிபதியாயு மிருப்பான். இலக்கினமும் ஆறும்ராசியும் ஏழா மிராசியும் எட்டாம்ராசியும் இந்நான்கு ராசிகளிலும் தீமையை விளைக்கும்*

பாவக்கிரகங்கள் சேராமல் சுபக்கிரகங்கள் சேர்ந்து இடைவிடாதிருக்கு மானால் நாபியோகமெனவும் சொல்வர். இதன் மேன்மையான பலன் எவ் விதமெனில் அமைச்சனாகவும் மேன்மைதங்கிய (படை) என்னும் ராணு வக் கர்த்தனாகவுமிருந்து அநேக விலைமாதர்களுக்கும் சித்தினிகளுக்கும் புருஷனாகயிருந்து வாலிபவயதிலேயே அநேக தனங்களைச் சம்பாதித்து சுகத்தோ டிருப்பானென்று சாஸ்திரங்களை கற்றுணர்ந்த மேதாவிகள் சொல்லுவர் எ-று. (311)

மாதுகேண் மாலா யோகமம் புலிக்கு
மன்னிய பத்தினிற் குருவும்
வந்துதா னிருக்கிற் றனபதி யாகிய
மருவு சேனைக்கு அதிபனுமாம்.
ஓதிய விரண்டி லிருவரு மைந்தில்
உபயருங் கூடியே யிருக்கில்
உரைப்பர் கத்தரி யோகபலன் தரும
மொன்றையு மாகவொட் டாது
தீதற வொன்றி னான்குபத் தேழிற்
சேரவொன் பதின்மரு மிருக்கில்
செப்பிடு மாச கேந்திர யோகந்
தெரிபலன் மகம்புரிந் திடுவன்
நீதியாய் தனங்கள் தேடிவாழ்ந் திருப்ப
னேமியிற் றமர்முதற் பலரும்
நேயமாய்த் துதிக்கத் தனிமனு ஷனுமாய்
நிருபர்கொண் டாடவே யிருப்பான்.

(இ-ள்) உலகில் சிறந்த அழகுபொருந்திய பெண்ணே! மாலாயோக மென்பதைச் சொல்லுகிறேன் கேட்பாயாக. சந்திரனின்ற ராசிக்கு 10-ல் குரு சேர்ந்தால் செல்வவானாகுவதுடன் திரண்ட ராணுவப்படைக்குத் தலைவனாகவுமிருப்பான். ஜெனன லக்கினத்திற்கு தனஸ்தானத்தில் சந்திர னும் குருவும இருக்க உபயராசித்தலைவனா புதன் குரு இவர்கள் 5-ஆம் ராசியிலிருந்தால் அதன்பலன் என்னவெனில்? எக்காரியங்களிலும் அப ஜெயமுண்டாம், நன்மையை விளைவிக்காது என்பனவாம். 1-4-7-10 என் னும் கேந்திரங்களிலேயே நவக்கிரகங்களாகிய ஒன்பதுபேரும் அடைந் திருப்பார்களேயானால் அந்த ஜாதகனுக்கு ராஜகேந்திர யோகமென்றும் சொல்லுவர். அதன்பலன் என்னவெனில்? மேன்மையையுடைய தேவர் களால் மெச்சத்தகுந்த யாகம்எக்கியம் முதலியவைகளால் சிறப்படைதலும் ஞாயமானவழியில் செல்லுதலும், அவ்வித ஞாயமார்க்கங்களிலேயே அநேக பொருள்களைச் சம்பாதித்து இப்பூமியிலுள்ள உறவினர்கள் யாவர்களும் வந்து வணங்கவும், தான் தனிமையாய் மன்னவர்களெல்லாம் கொண்டாட வாழ்ந்திருப்பான் எ-று. (312)

இருமைசேர் பத்தி னான்கினிற் கிரக
மிருந்திடில் விக்கயோ கமதாம்

திரன்பலன் றூது நடந்ததுதான் றிரிந்தே
யின்னலாற் கலகமிட் டிடுவன்
ஒருமைசேர் சன்மந் தனிலே பாவ
ரோரேழி லுத்தம ரிருக்க
ஓதிடு மவையோ கங்கள்பொய் யுரைப்ப
னுறுசிறை வெகுதின மிருப்பன்
பருமைசே ருச்சகேந்திரந் தன்னிற்
பாவர்கண் மேவியே யிருக்கில்
பாவியாங் குரூர மன்னவ னாகிப்
பார்தனக் கரசனா யிருப்பன்
அருமைசே சொன்றைந் தொன்பதிற் கிரக
மணுகிற்சிங் கடாட்வி யோகம்
அதன்பலன் றீர்க்க வாயுளுண் டாகி
யம்புவி தன்னினுற் றீடுவன்.

(இ-ள்) சவுக்கியம் மேன்மை முதலியவை யுடைத்தாகிய ஜெனனலக்கினத்திற்கு 4-10-ஆகிய சுகம் உத்தியோகமென்னும் ஸ்தானங்களில் நல்லோரான சந்திரன் புதன் சுக்கிரன் இவர்கள் இருப்பாரேயானால் விக்கயோகமென்றும் சொல்லுவர். அதன்பலன் என்னவெனில்? எவ்விதமான சங்கதிகளையும் தூதுமார்க்கமாய்ச் சென்று அச்சங்கதிகளை யறிந்துவந்து கோபத்தோடு கோள்மூட்டுபவனும் ஆவான். மேற்சொன்ன புகழ்ச்சியைப் படைத்த ஜெனனராசியில் தீயகிரகங்களாகிய சூரியன் ராகு கேது சனி இவர்களும் சப்தமராசியில் மற்றசுபக்கிரகங்களும்சேர அவயோகமென்றும் சொல்லுவர். அதன்பலனுவன: உண்மையுரையாத பொய்யாளனும் அநேக நாள் கடினகாவலுடைய சிறைவாசம்செய்வோனும் ஆவானென்றுரைப்பர். 1-4-7-10 என்னும் கேந்திரங்களில் மேலேசொன்ன பாவகிரகங்களான சூரியன் அங்காரகன் சனி இராகு கேது இவர்கள் நிறைந்திருப்பார்களே யானால் அந்த ஜாதகன் சண்டாளனென்கிறபெயரெடுத்து துர்நடத்தையும் கெட்ட எண்ணங்களும் உடைய அரசனாகி இப்பூமிக்கு மேம்பட்டவனாக இருப்பான் அருமையான உடல் ராசியிலும் 5-ஆம் ராசியிலும் தவறாது கிரகமிருக்குமாகில் சிங்கடாடவியோகமென்றும் சொல்லுவர். அதன்பலன் இக்கடல்சூழ்ந்த உலகில் நீண்ட ஆயுளுடையவனாகி வாழ்வான் எ-று. (313)

உற்றமெய் லாப மதிற்கிர கங்க
ளுறிலிலெ யோகமா முழவன்
ஒருமைநல் லோரொன் றேழினி லிருக்க
வுண்மைசேர் வச்சிர யோக
மற்றநற் பலன்றீர்க் காயுளுங் கீர்த்தி
மன்னிய கிருபையுள் ளவனும்
மன்னவன் சனிசெவ் வாய்கதிர் நால்வர்
மருவிய மூன்றுமிடத் திருக்கப்
பெற்றிடி லுச்சாங் கிசஞ்சுயாங் கிசங்கள்
பெறின்மக ராஜயோ கந்தான்

பெருமையிந் நால்வர் சென்மமீ திருக்கப்
பிறைதன தகத்துறிற் புவியில்
குற்றமில் லாமகா ராஜன் மெய்யிற்
குறைவற மறைந் திருக்க
கோவொரு நால்வர் மதிதனைக் காணக்
கொற்றவ ளுமெனக் கூறுய்.

(இ-ள்) ஜெனனலக்கினத்திற்கு 11-ஆம் ஸ்தானமான லாபம் என்னும் க்ஷேத்திரத்தில் கிரகமிருந்தால் அந்த ஜாதகனுக்கு இலையோகமென்று உரைப்பர். இலயோகபலனை சொல்லுமிடத்து அந்த ஜாதகன் உழவுத் தொழில் செய்வானென்றும் கூறுவர். நற்பலனைத்தரும் சுபக்கிரகங்கள் ஜெனனராசிக்கு ஏழாம் ராசியிலும், குஜன் ஜெனனலக்கினத்திலுமிருக்க அந்த ஜாதகன் நன்மையுடைய வஜ்ரயோகத்தை அனுபவிப்பான், அதன் பலன்களாவன: யாதொரு குறையுமின்றி நற்பலனை விளைப்பதுடன் பூர்ண ஆயுளும் பிரக்யாதி வாய்ந்தும், உத்தமமான கிருபையுள்ளவனுமாக விருப்பான். குரு சனி அங்காரகன் சூரி ன் இவர்கள் லக்கினத்திற்கு 3-ஆம் ராசியிலிருந்து உச்சம்பெற்ற கோட்களின் அங்கிஷமாவது தன் சுய அங்கிஷமாவது பெற்றிருப்பாரேயாகுல் இராஜயோகத்தையே அனுபவிப்பான். மேற்சொன்ன நான்கு கிரகங்களும் ஜெனனலக்கினத்திலிருந்து சந்திரன் தன் சுயவீடான கடகராசியில் ஆக்ஷிபெற்று மிருக்க ஜெனித்தவன்இப்பூமியில் யாதொருகுறைவின்றி உண்மையும்சாந்தமும் நிறைந்தவனுய் அரசனுக இருப்பான். ஜென்மலக்கினத்தில் பூர்ணசந்திரனிருந்து முன்சொன்ன குரு சனி குஜன் சூரியன் ஆகிய நான்கு கிரகங்களும் சந்திரனைப்பார்த்தால் அரசாக்ஷி செய்வானென்றும் சொல்வாயாக எ-று. (314)

கூறறி மதிசே யுச்சமாய்ச் சன்மங்
குலவுவின் மிதுனமேற் பாரில்
கொற்றவன் சென்மத் திங்தொடு சனியுங்
குசனுமே கூடவில் லதனில்
ஏறிடக் கதிர்மே ஷத்துற மன்ன
மியைந்தமுன் புராதன பூமி
இழந்துபோய் விடுவ னிடபலக் கினமா
யிதிற்பிறை சனிகுரு வெய்யோன்
பேருட னிருக்கில் ராஜயோ கமதாம்
பின்னுமே கன்னிலக் கினமாய்ப்
பிறைமக னுச்ச மாகநா லிடத்திற்
பிருகுசந் திரன்குரு விருக்க
வீறுட னைந்தா மிடத்தினிற் சனிசேய்
மேவியே யிருவரு மிருக்க
வெற்றிநற் குணங்க ளுள்ளமன் னவனு
மேதினி நீதியாய்ப் புரப்பன்.

(இ-ள்) சொல்லுதற்கரிய சந்திரனும் அங்காரகனும் உச்சம்பெற்று ஜெனனலக்கினம் காண்டீபமென்னும் தனுசு வீணை என்னும் மிதுனம்

என்னும் இவ்விராசிகளைப் பார்த்தாலும், உடல்லக்னாதிபதி சந்திரனாகவே இருந்து குரு சனி குஜன் இவர்களோடு மேலெழுதிய தனுசுராசியில் இருந்து சூரியன் மேஷராசியில் உச்சம்பெற்றிருக்கப் பிறந்த ஜாதகன் தன் புராதனமான பிதுரார்ஜித பூமிகளை இழந்துவிடுவான். இடபலக்கினமாக விருந்து அதில் சந்திரன் சனி குரு சூரியன் இந்நால்வரும் பெருமைபெற்றிருக்கில் ராஜயோகமே அனுபவிப்பான். பெண்ராசி என்னும் கன்னியா ராசியாகயிருந்து கன்னி என்னுமிராசியில் புதன் உச்சம்பெற்று நான்காம் இராசியில் சுக்கிரன் சந்திரன் குரு இவர்களிருக்க திரிகோணங்களில்முக்ய க்ஷேத்ரமான 5 ஆம் இடத்தில் சனி அங்காரகன் இவ்விருவரும் இருக்கப் பிறந்தவன் ஜெயமும் நன்மார்க்க உத்தம குணமும் பொருந்திய அரசனாக இருந்து இப்பூமியை நீதியோடு அரசாக்ஷி புரிவான் எ-று. (315)

புரக்குமே கன்னி லக்கின மனதிற்
புந்தியும் பத்தினிற் புகரும்
பொன்பிறை மூவர் கூடியே யிருக்கப்
பூபதி யாகியு மிருப்பன்
பரக்குமெய் சிங்க மாயதிற் செவ்வாய்
பரிந்துல வேழிடந் தன்னில்
பணிமதி யரச னிருக்கவே தனுசிற்
பானுவின் வித்திரன் மேவ
இரக்கமாய் மைந்தர் தானு மில்லாம
லிப்புவி புரக்குமன் னவனும்
எண்ணிய பத்திற் சதிபதி னொன்றி
லெழிற்சனி லக்கினத் தரசன்
வருக்கமா யிரண்டிற் புதன்குச னிருக்க
வாகனந் திரவிய மருவ
மாநிலம் புரக்கு நரேந்திர னவன்
வாளயில் போல்விழி யாளே.

(இ-ள்) தெளிந்த கடல்நீரில் வாசஞ்செய்யும் மச்சங்களின் கண்களையும் பரிகசிக்கச்செய்யும் விழிகளை யுடையவளே! ஜெனனலக்கினம் கன்னியாகவிருந்து லக்னாதியான புதன் தன் சுயக்ஷேத்திரத்தில் ஆக்ஷிபெற்று ஜீவன ஸ்தானமாகிய 10-ஆம் இடத்தில் சுக்கிரன் குரு சந்திரன் இம் மூவருங்கூடி இருக்க அந்த ஜாதகன் தேசாதிபதியாகி வாழ்ந்திருப்பான். சிங்க உருவத்தையுடைய சிங்கராசியில் ஜெனனமாகி அவ்விராசியில் குஜனிருக்க 7-ஆம் இடத்தில் சந்திரனும் குருவுமிருக்க தனுசுராசியில் சனி இருக்கப் பிறந்தவன் புத்திரவிருத்தி இன்றி இப்பூமியையாளும் அரசனுகுவன். ஜீவனஸ்தானமாகிய 10-ஆமிடத்தில் சந்திரனும், 11-ல் மேன்மையைப்படைத்த சனியும் ஜெனனராசியில் குருவும் இரண்டில் அங்காரகன் புதன் இவர்களிருக்க அந்த ஜாதகன் அநேக வாகனங்களும் பொன் பொருள்களையும் படைத்து இப்பூமியுள்ளோர் அதிசயிக்க இப்பூமியை யாளப்பட்ட நரேந்திரனுவான் எ-று. (316)

வேறு

நாடிய கேந்திரத் தானத் ததிபனும்
தேடிய மூலத் திரிகோணத் ததிபனும்
கூடிய கேந்திர மீங்கொள நின்றிடில்
ஊடிய துரகத் தரசனென் றோதே.

(இ-ள்) தானுதித்த ராசிக்கு 1-4-7-10 என்னும் கேந்திரத்தோரும் 3-5-9 என்னும் மூலத்திரிகோணத் தர்சர்களும் கூடி மேலெழுதிய கேந்திரத்திலேயே இருக்கப் பிறந்த ஜாதகன் பெருமையைப்படைத்த குதிரைகளை அநேகமுடைய அரசனுகவும் இருப்பான் எ-று.

(வி-ரை) குதிரைக்கு அரசனுவன் என்பதை அநேக குதிரைகளைப் படைத்து வாழ்வனென்று உரை கூறுக. (317)

உரைத்திடி லாப மொன்பது பத்தும்
விரித்திடு மந்த வீட்டினிற் கதிபனைப்
பொருந்திய துகைப்படி பொருந்துமவ் வீட்டோன்
வருத்தமில் கேந்திரம் வந்துறின் மன்னனும்.

(இ-ள்) ராஜ்யஸ்தானம் பாக்கியஸ்தானம் லாபஸ்தானமென்று சொல்லப்பட்ட 9-10-11-ஆம் ராசிக்குடையவர்கள் அவரவர்கள் சுய க்ஷேத்திரமின்றி ஜெனனலக்கினத்திற்கு (மேற் செய்யுளில் எழுதியுள்ள) 1-4-7-10 என்னும் கேந்திரம் பெற்றிருப்பார்களேயாமாகுல் அவன் ராஜரீகம் செய்பவனுகுவன் எ-று. (318)

மன்னிய லக்கினம் வருதேள் சிங்கம்
பன்னிய லாப மாமைந் தொன்பதில்
அன்னிய மூவரி லாரேனு மிருந்து
மின்னிய கேந்திர மேவிடி லரசே.

(இ-ள்) புகழ்ச்சியும் பெருமையுமுடைய ஜெனனலக்கினமானது சிங்கம் விருச்சிகமாகவிருந்து 5-9-11 என்னும் இராசிநாதர்களில்யாரேனும் ஒருவர் ஆக்ஷிபெற்று மற்ற இருவரும் கேந்திரம் பெற்றிருப்பாரேயாமாகுல் அரசாக்ஷி புரிபவனுகுவன் எ-று. (319)

மேவுமே ழொன்பதாம் வீட்டினல் லதிபன்
ஏவுமே ழொன்பான் வீட்டினி லிருக்கத்
தாவிய சுங்கன் றுனுறு நன்மனை
ஆவலாய் நாலே ழாண்டினி லரசே.

(இ-ள்) ஜெனனலக்கினத்திற்கு 7-9-ஆம் வீட்டிற்குடைய கிரகங்கள் தன் சுயக்ஷேத்திரம்பெற்று இருப்பாரேயாமாகுல் அவனுதித்த 28-ஆம் ஆண்டில் அரசனுவான் எ-று. (320)

ஆண்டினிற் கேந்திர வானதி னல்லோன்
ஊண்டிடும் பாவர்க ளொன்றுவிட் டொன்றுறில்
தாண்டிய சக்கர யோகத் தனபதி
நீண்டிய லபர வயதினிச் சயமே.

(இ-ள்) எந்த லக்கினத்திற்கேனும் கேந்திரம்பெற்ற கிரகங்கள் சுடர்களாகிய சந்திரன் புதன் குரு சுக்கிரன் இவர்களாயும், பாவகிரகங்களான குஜன் சனி ராகு கேது இவர்கள் ஒருராசிவிட்டு ஒருராசியிலும் இருப்பார்களேயானால் அந்த ஜாதகனுக்கு ஒட்டகத்தையுடைய சக்ரயோகமென்றும் சொல்வர். அதன்பலன் நீண்ட ஆயுளுடையவனுவான் எ-று. (321)

வேறு

நிச்சயக்கிரகநான்மனையுற்று நின்றிடிற்கேதாரயோகம்
இச்சயன்பைங்கூழ்வழிநடைக் கஞ்சானெழிலுபகாரமேசெய்வன்
மெச்சுமோரைந்துவீட்டினிற் கோள்கண்மேவிடிற்பாசகயோகம்
விச்சைசேர்சவுக்கியன்றனபதியழகன் வெகுஜனமுள்ளவனுமே.

(இ-ள்) நான்கு ராசிவரையில் கிரகங்கள் வரிசைப்பெற்றிருக்குமானுல் கேதாரயோகமென்றும் பெயர். அதன் பலனைச் சொல்லுமிடத்து ஸ்திரீகளிடம் இச்சையுள்ளவனும் வழிநடைக்கு அஞ்சாதவனும் பெருமையைப் படைத்த அளவிறந்த உபகாரங்களைச் செய்பவனும் ஆவான். ஜெனன வீடுமுதல் 5-வீடுவரையில் கிரகமிருக்குமானுல் பாசகயோகமென்றும் பெயர். அதன் பலன் சவுகயப் பிரியனும் தனங்களைச் சேகரித்து வாழ்பவனும் தேஜஸ் உடையவனும் அநேக உறவினர்களையுடையவனும் ஆவான் எ-று. (822)

வேறு

ஆமேகிரகமேழுமனையமர்ந்தால் வீணையோகமினித்
தாமேநிபுணனெழிலுடையன் சப்தகீதப்பிரியமுளன்
தோமிஞலேழொன்றிலுறச் சொல்லுமதிகயோகபலன்
மாமேவரசன்பிரதாபி வந்தேயாண்டுநூறிருப்பான்.

(இ-ள்) 7-ஆ ராசிவரையில் வரிசைப்பெற கிரகங்களிருக்கப் பிறந்த ஜாதகனுக்கு வீணையோகமென்றும் சொல்வர். அதன் பலன்என்னவெனில் தனக்கு ஒருவரை இணையிடப்படமாட்டாத சாமார்த்தியனும் நன்னடக்கையுள்ளவனும் சுரசாஹித்யமாகிய கீதங்களைப் பாட ஆசையுள்ளவனும் ஆகுவன். 4-7-1 என்னும் லக்கினம் சுகம் சப்தமம் என்னுமிடங்களில் கிரகமிருந்தால் விசேஷ யோகபலனை உண்டாக்கும். அதாவது குதிரை சயின்யங்களையுடைய அரசனும் பிரக்யாதி வாய்ந்தவனும் நூறுவயதுவரையில் சுகத்தோடிருப்பவனும் ஆவான் எ-று.

(வி-ரை) முன் எழுதிய 1 ராசிமுதல் 7-ராசிவரையில் வரிசைப்பெற இடையிடாது கிரகமிருந்தால் அங்கியோகமென்றும் அதன் பலன் தனம் படைத்தவனும் சவுக்கியமுள்ளவனும் கீர்த்தியுள்ளவனும் ஸ்திரீசுகம்உள்ளவனும் தர்மமிடுவோனும் ஆயுள் அதிகமுடையவனும் சிவந்த கண்களும் தன குலத்திற்கு மேலானவனும் கல்வியுள்ளவனும் ஆவானென்றும் குருவோடு 7-கிரகங்களிருந்தால் கொள்கையோகமென்றும் அதன்பலன் சிற்ப சாஸ்திரம் தெரிபவனும் ஆவானென வீமேஸ்வர உள்ளமுடையான் 315-ஆம் செய்யுளில் சொல்லியபடியாம். (828)

இருபத்திருன்கிற்கோளிருக்கப் பக்ஷியோகபலன்
பொருந்துந்தேசசஞ்சாரம் புகலுஞ்ஞானிகலகமுளன்
வருந்துசசியிலிருபுறமும் வரவேநல்லோர்துரியோகம்
திருந்துயோகனயிச்சுவரியன் தேசஜனத்துக்கதிபதியே.

(இ-ள்) ஜெனனலக்கினத்திற்கு கேந்தி மென்றுசொல்லும் பத்து நான்கு என்னுமிவ்விடங்களில் மாத்திரம் கிரகமிருந்தால் பரவையோக மென்றும் அதன் பலன் பல தேசங்களைச சுற்றுபவனும் ஞானமார்க்கம் அறிந்த சந்நியாசி என்று சொல்லும் பெயரும் கோள்செய்யப் பிரியனும் ஆவான்; நிலவு நின்ற ராசிக்கு இருபுறமும் சுபகிரகங்களாகிய குரு புதன் சுக்கிரன் இவர்கள் நிற்பாராயின துரியோகமென்றும் அதன்பலன் மேன் மையைப்படைத்த யோகசாலியும் பொக்கிஷ விருத்தியையுடையவனும் தேசங்களிலுள்ள ஜனங்களுக்கு மேம்பட்டவனுகவும் துராஜனுகவும் இருப்பான் எ-று. (324)

என்ருலொன்றேழ்சுபரிருக்க வினிநால்பத்திற்பாவர்களும்
அன்றேயுறில்வச்சிரயோக மாதியந்தத்தயிச்சுவரியம்
நின்றேசூரதத்துவமு நிகழும்வயதிற்றனபதியாம்
நன்றேமாரிக்கோள்வரினு நாடுமினியவவயோகம்.

(இ-ள்) ஜெனனராசியிலும் சப்தமமென்னும் ஏழாம்வீட்டிலும் சுபக் கிரகங்களாகிய சந்திரன் புதன் குரு சுக்கிரன் இவர்களிருக்கவும் சுகஸ்தான மெனனும் 4-ஆம் வீட்டிலும் ஜீவனஸ்தானமென்னும் 10-ஆம் வீட்டிலும் தீயகிரகங்களாகிய சூரியன் அங்காரகன் இராகு கேது இவர்களும் நிற்க அந்த ஜாதகனுக்கு வஜ்ஜிரயோகமெனறும பெயர். அதன் பலன என்ன வெனில தானுதித்த முதலிலும் விருத்தாப்பிய காலங்களிலும் எல்லாவித மான சௌக்கிய பொக்கிஷங்களும் நிறைந்திருக்கும் தைரிய வீர பராக்கிர மும் உண்டாவதோடு தனககு உத்தவயது வரும்போது நீண்ட செல்வம் உள்ளவனும் ஆவான். மேற்சொன்னபடி இன்றி வேறுவிதமாக கிரகமிருந் தால் கொடியபலனுகிய கெட்ட யோகங்களையே அனுபவிப்பான் எ-று. ()

யோகஞ்சுகமாம்லக்கினத்துக்கொன்றேநல்லோர்முன்னிருக்கப்
போகன்றனவான்வாழரசன் பொருந்தும்பின்னேகிரகமுறில
ஆகுமஸவயோகமதா மணிசன்மத்தினிருபுறமும்
தாகமுடனேசுபரிருக்கிற் ருனுமரசனெனவருமே.

(இ-ள்) இலக்கினத்திற்கு முன்வரிசையில் சுபக்கிரகங்களிருந்தால் மேன்மையைப்படைத்த நல்ல யோகத்தையே அனுபவிப்பவனும் ஸ்திரீ சுகத்தில் மிஞ்சியவனும் மேன்மையுடன் வாழும் அரசனுமாவான். ஜென்ம லக்கினத்திற்குப் பின்வரிசையில் சுபக்கிரகங்களிருந்தால் குதிரையோகம் என்றும் பெயர். ஜென்மலக்கினத்திற்கு முன்னும் பின்னும்கிரகமிருந்தால் அரசனென்ற பெருமையும் புகழும் உண்டாகும் எ-று. (326)

வருமேசென்மலக்கினுதி வந்துமிந்திரன்றன்வீடும்
பொருமேயுச்சமனையிரண்டிற் புகருங்கூடிற்றனவானும்
தருமேசென்மஞ்சிங்கமறு தன்னிற்பரிதிதானிருக்க
அரிவைமனையிற்புதனிருந்தா ஞனீசவரசனுமாம்.

(இ-ள்) ஜெனனலக்கினாதிபதி எவரானாலும் அந்தக் கிரகம் மித்திர க்ஷேத்திரங்கள் இருக்கவும் உச்ச வீட்டிற்கு இரண்டாம்ராசியில் சுக்கிரன் நிற்கப் பிறந்த ஜாதகன் அதிக செல்வமுடையோனாகவே இருப்பான். ஜெனனலக்கினம் சிங்கமாயிருந்து லக்னாதிபதியான சூரியன் ஆட்சிபெற கன்னி என்னுமிராசியில் புதன் உச்சம்பெற அந்த ஜாதகன் நானாவிதமான நீச்சத்தொழில் செய்யும் அரசனாகவும் இருப்பான் எ-று. (327)

அரசேமூன்றிலீரைந்தி லாறிலிருக்கச்சென்மாதி
சிரசாய்நல்லோர்தனைப்பார்க்கச் செகத்துக்கதிபனாகுமிவன்
சரமாந்துலாத்திற்புகர்மேஷந் தன்னிற்செவ்வாய்கடககுரு
பொரவேநிற்கத்தனபதியாய்ப் பொருந்துமரசன்கண்டீரே.

(இ-ள்) ஜெனனலக்னாதிபதி 3-6-10 என்னும் இராசிகளிலிருந்து அவனைச் சுபக்கிரகங்களாகிய சந்திரன் குரு சுக்கிரன் இவர்கள் பார்க்கில் அவன் இந்த பூவுலகிற்கே அதிபதியாக விளங்குவான். சர ராசியான துலா ராசியில் சுக்கிரனிருக்க ஆடுபோன்ற உருவத்தையுடைய மேடராசியில் செவ்வாயும் கடகராசியில் உச்சகுருவும நிற்கப்பிறந்த ஜாதகன் மேன்மையைப்படைத்த தனங்களையுடையவனாகி புகழும் பெருமையும் கீர்த்தியும் உள்ள அரசனாவானென்று சொல்வாய் எ-று. (328)

கண்டரிஷபஞ்சென்மமதாய்க் காணுமதியாந்தானிருக்கக்
கொண்டுபரிதிசிங்கத்திற் கூறுந்தேளிற்குருவிருக்க
மண்டுகும்பச்சனிவரினும் வந்தால்ராஜயோகபலன்
பண்டேயுள்ளபூபதியாய்ப் பாருக்கரசாயிருந்திடுவான்.

(இ-ள்) ரிஷப லக்கினமாகவிருந்து அவ்விராசியில் சந்திரனும் கதிரோன் சிங்கத்திலும் தேள்போன்ற உருவத்தையுடைய விருச்சிகராசியில் குருவும் கும்பத்தில் சனி ஆட்சிபெறப் பிறந்த ஜாதகன் ராஜயோகத்தையே அனுபவித்து அநேக பொக்கிஷ திரவியம உள்ளவனாகவும் இப்பூமியிலுள்ள யாவருக்கும் மேன்மையைப்படைத்த அரசனாகவும் இருப்பான் எ-று. ()

திடமாஞ்சென்மமகரமதாய்ச் செப்புங்காரிதானிருக்க
அடைவேசெவ்வாய்மதிகூடி யானகடகந்தானுறவே
தொடர்சேர்பரிதிசிங்கத்திற் சொல்லுமிதுனம்புந்தியுற
வடிவார்தோலிற்புகரிருக்க வாழுந்துரகத்தரசனிவன்.

(இ-ள்) மகரலக்கினத்தில் ஜெனனம்... அதில் சனி ஆட்சிபெற்றும் வரிசைப் பெறும்படியான அங்காரகனும் சந்திரனும் சேர்ந்து கடகராசியிலிருக்க தொடர்ச்சிபொருந்திய சூரியன் சிங்கராசியிலிருக்க,மிதுனராசியில் புதனிருக்க அழகைப்படைத்த சுக்கிரன் துலாராசியில் ஆட்சிபெற்றும் நின்றால் குதிரையைப் படைத்த மன்னவனாவானென்று சொல்வாய் எ-று

இவனேசன்மநான்கொன்ப தெல்லாக்கிரகமிருந்திடவே
அவனேசாங்கியாயோக னதற்கூப்பலன்கள்சவுரியவான்
தவமெய்ஞ்ஞானிபாக்கியவான் றன்னிற்குணவானாமென்றே
நவமாயுரைத்தார்சோதிடத்தோர் நறைமென்கமலமுகத்திருவே.

(இ-ள்) ஜென்மலக்கினத்திலும் நாலிலும் ஒன்பதில் மாத்திரம் நவக்கிரகங்கள் யாவும் அடையப் பிறந்த ஜாதகனுக்கு சாங்கியாயோகமென்றும் சொல்வார். அதன் பலன்களாவன: எக்காரியத்திலும் பின்வாங்காத வீர பராக்கிரமங்கள் உள்ளவனும் தவத்தைக் கைக்கொள்ளும் சந்நியாசியும் இப் பூமியில் நல்ல மேன்மையைத் தரத்தக்கதான தனத்தையுடையவனும் நற்குணமுடையவனும் ஆவானென்றும், தடாகங்களில் அழகோடிருக்கும் தாமரைக் கமலங்களின் அழகைப் பார்க்கிலும் மேன்மையான அழகுடையவளே! சோதிட நூல் வல்லோர் மேற்சொல்லிய விஷயங்களை நவரசங்கள் நிறைந்த இடம் எவ்வாறிருக்குமோ அதுபோன்று உரைப்பார் எ-று. (331)

திருவேயிரண்டாம்வீடுமுதற் செறியுமனைக்கொன்றொன்றொழிந்து
வரவேகிரகந்தானிருக்க வாழுஞ்சமுத்திரயோகபலன்
பொரவேசேனைக்கதிபதியாய்ப் பொருந்தும்பாரியனேகருளன்
தருபொன்கீர்த்திக்கதிகாரி தனவானரசன்வெகுபிள்ளை.

(இ-ள்) ஜெனனலக்கினத்திற்கு தனஸ்தானமாகிய இரண்டாம் ராசி முதல் ஒன்றைவிட்டு ஒருராசியில் நவகோட்களிருக்கப் பிறந்தவனுக்கு சாமுத்திரியோகமென்றும் பெயர். அதன் பலன்களாவன: பெருமையைப் படைத்த தனத்திற்கு அதிபதியாயும் உத்தம பாரியாள்கள் பலருள்ளவனும் பொன் முதலிய பூஷணங்களுக்குக் கீர்த்திவாய்ந்தவனும் செல்வமுடையோனும் அநேக புத்திரர்களை யுள்ளவனும் மன்னனும் ஆவானென்று உலகிற் சிறந்த பெண்ணே! பெருமையோடு சொல்வாய் எ-று. (332)

பிள்ளையனுஷமசுபதியின் பின்பாமவிட்டந்தனிற்சேயும்
துள்ளுஞ்சென்மமொருபத்திற் சூழ்ந்தேபரிதியுறவதனைத்
தெள்ளுமதியங்குருநோக்கிற் செறிமூன்றைந்திற்கிரகமிளா
தள்ளியிருக்கிற்குபேரனைப் போற்றனத்துக்கதிபனெனச்சொல்வாய்.

(இ-ள்) அவிட்டம் அனுஷம் அஸ்வனி இந்த நக்ஷத்திரங்களின் நாலாங்காலில் நிலமகனென்று சொல்லும் குஜன் நின்றும் முயற்சியை யுடைய ஜெனனலக்கினத்திலும் காரியஸ்தானத்திலும் பிரகாசந்தங்கிய அருகனிருக்க அவனைக் குளிர்ந்த பிரகாசத்தையுடைய சந்திரனும் சுபனுகிய குருவும் நோக்க 3-ஆம இடத்திலும் ஐந்தாமிடத்திலும் கோட்களில்லாது பரிசுத்தமாயிருக்க அளகாபுரிக்கு அரசனைப்போன்ற தனத்தைப் படைத்ததும் அன்றி எந்நாளும் செல்வம் நிறைந்தவனாகவும் இருப்பான்.

(வி-ரை) சிறப்புடைய உதயத்தோன் சுபனுகி தனத்திற்
சென்றிருக்க குருபார்க்க வக்கிரன் கேந்திரிக்க
நிரைத்தன்ம மிகுதனத்தோன் வைசேடிக் ககாங்க
நின்றக்கால் நிக்ஷேப நேராய் வந்தெய்தும்
குரைத்தலிலா தனுமீனிர் சனிசெவ் வாய்நிற்க
கும்பமகரம் தனிலே மற்றளோர் நிற்கின்
மரைப்பதன்னி கணக்கிலா வெகுகோடி செம்பொன்
வையகமேற் பெற்றிருப்பான் மழலைஇளங் குயிலே.

(இ-ள்) மழலைச்சொற்கள்போன்ற இனிய மொழிகளும்குயில்போன்ற இனிய மொழிகளையுமுடைய பெண்ணே! ஜென்மலக்னாதிபதி சுபனாக

விருந்து தனஸ்தானத்தில் சேர அவனைக் குருபார்க்க புதன் கேந்திரத்தி லிருக்க அந்த ஜாதகன் நிரையிடப்படாத தனங்களைப் படைத்தவனும் தானாகவே தனம் கிடைப்பதும் குறைவு அடையப்படமாட்டாத தனுசு மீனம் இவ்விராசிகளில் சனி செவ்வாய் இவர்களிருக்க கும்பம் மகரம் என்னுமிராசியில் மற்ற கிரகங்களுமிருக்குமானால் அளவிடப்படாத அநேக கோடி செம்மைபொருந்திய பொன் நாணயங்களை அடைவானென்ன சாதக சிந்தாமணியிலுள்ளபடி பாவகங்களை ஆராய்ந்து கூறுவது நலம். (333)

சொல்லுஞ்சென்மமைந்ததனிற் றொடர்ந்தேபரிதிதானிருக்க
வெல்லுநான்கேழ்ப்பத்ததனில் விரும்பிச்செவ்வாய்மேவிடினும்
ஒல்லும்லாபம்பன்னிரண்டி லுடனேபலனுய்ப்புகர்மேவ
நல்லவிந்திரயோகமென நவில்வர் தமிழுக்கினியோர்கள்.

(இ-ள்) ஜெனனராசியிலும் ஐந்தாமிராசியிலும் சூரியனிருக்கவும் இணையிடப்படமாட்டாத 4-7-10-என்னும் கேந்திர இடங்களில் குஜன் இருக்க, சந்தோஷத்தைத் தரப்பட்ட 11-12 என்னுமிடங்களில் சுக்கிரன் இருக்க, இந்திரயோகம் உண்டாகுமென்று தமிழில் சிறப்பும் பலம்பெற்று இருக்க, இன்பமும் வாய்ந்த பெரியோர் கூறுவர் எ-று. (334)

இனியமகரஞ்சென்மமதா யிருக்கச்செவ்வாயதனிலுச்சம்
தனிலேநவத்தின்பன்னிரண்டிற் றணிந்தேபுகருந்தானிருக்க
இனமாமிந்துகதிர்கூடி யேழினிற்கப்பிரபலமாய்த்
தனமேதிரளாயார்ச்சித்துச் சம்மானடத்துமானபரன்.

(இ-ள்) நன்மையே விளையும் மகரலக்கினம் ஜெனனமாக விருந்து குஜன் அந்த ராசியில் உச்சம்பெற 9-அல்லது 12-ஆம் ராசியில் சுக்கிரன் தனித்திருக்க சூரியனும் சேர்ந்து பலம்பெற்று 7-ஆமிடமேற அளவிடப்பட மாட்டாத தனத்தைச் சம்பாதித்து கப்பல் வியாபாரமும் கப்பலோட்டியாக வும் வாழ்வான் எ-று. (335)

ஆனபரிதிசோமனிவ ரமர்ந்துசுபரங்கிசமேறித்
தானபலவானுகியிவர் தக்கவியத்திலடையாமல்
ஆனவுச்சவாங்கிசையி லமர்ந்தேசனியையமிகநோக்கில்
ஈனமறவேதிக்குபல வியைந்தின்புறுவன்சந்நியாசி.

(இ-ள்) சூரியன் சந்திரன் இவர்களிருவருங்கூடி சுபர்களுடைய அங்கி சம்பெற்று அவர்கள் நின்ற ராசியில் பலம்பெற்று 12-ல் மோக்ஷமடையாமல் உச்ச அங்கிசையிலிருந்து சனியை நோக்குவார்களேயானால் அந்தஜாதகன் வெட்கமற்று பலதிசைகளிலும் திரிந்து சந்தோஷப்படுவதுடன்ஞானியாயு மிருப்பான் எ-று. (336)

சீலலக்கினதிபதி செறியுஞ்சுக்கிரன்றனுகி
நாலிற்காரிநின்றமனே நாடிச்சுக்கிரன்றனேக்க
வாலசன்னியாசியென மகிழ்ந்தேவிதேச சஞ்சாரம்
கோலுங்கொண்டேதிரிவனெனக் கூறுங்கணிதவல்லோரே.

(இ-ள்) பரிசுத்தமுடைய லக்கினத்தாதிபதி சுக்கிரனாகவும்(அதாவது) இடபம் துலாம் ஜெனனலக்கினமாக நாலாமிடமான சுகஸ்தானத்தில் சனி நிற்க அவனைச் சுக்கிரன் நோக்க வாலிபத்திலேயே ஞானியாவதுடன் சந்தோஷத்தோடு அன்னியதேச சஞ்சாரனாக கையில் கோல்தாங்கி திரிவானென்று கணிதசாஸ்திர நிபுணர் கூறுவர் எ-று. (337)

வல்லோர்சென்மச்செம்பாம்பு வரவேயதற்கேழ்சோமனுற
செல்லுஞ்சோமற்கெட்டதனில் வெய்யோன்சுமத்திரயோகபலன்
சொல்லுங்கிராமபுரந்தரனுந் துரையாம்வந்துரக்ஷகனும்
நல்லவருஷமிருபதின்மே னடக்கும்யோகமிருமூன்றே.

(இ-ள்) வல்லமை நிறைந்த ஜெனனலக்கினத்தில் கேதுவிருக்க அதற்கு சப்தமராசியில் சந்திரனிருக்க இனைசொல்லப்படாத சந்திரனுக்கு 8-ல் சூரியன் நிற்கில் சுமத்ராயோகமென்றும் சொல்லுவர். அதன் பலன்களாவன: கிராம மணியம் செய்வோனாகவும் கிராமத்தில் உள்ளவர்களுக்கு துரைபோன்று ரக்ஷிக்கப்பட்டவனாகவும் ஜெனனமுதல் 20-வருஷத்திற்கு மேல் மேலானயோகம், 6-வருஷம் வரையில் நடக்கும் எ-று. (338)

நடத்தும்பத்துக்கதிபதியு நான்கிலிருக்கநான்காதி
மிடத்தபத்திலுடனிற்க லக்கினதியுச்சமுறில்
அடுத்தசாபயோகபல னனேகஞ்சேனைக்கதிபதியாம்
கொடுத்தநாலாறதன்மீதிற் கூறும்யோகமேழாண்டே.

(இ-ள்) ஜீவனஸ்தானமென்று சொல்லும் 10-ஆம் வீட்டதிபதி சுகஸ்தானத்திலிருக்க நான்காமிடமென்னும் சுகாதிபதி 10-ஆமிடமேற லக்னத்தோன் உச்சவீடேற சாபயோகமென்றும் பெயர். அதன் பலன் அநேகமான படைகளுக்குத் தலைவனாகவும் ஜெனனமுதல் 24-வயதுக்குமேல் 7-வருஷம் வரையில் இருக்கும் எ-று. (339)

ஆண்டுமூவேழதன்மீதி லானசக்கரயோகபலன்
நீண்டசீவனுள்ளளவு நிறைந்தேபத்திற்கருநாகம்
பூண்டபத்தாமிடத்ததிபன் பொருந்துசன்மந்தனிலிருக்க
வேண்டுஞ்சென்மன்பாக்கியத்தில் விளங்கிற்றேசாதிபதியாவன்.

(இ-ள்) உடல்லக்கினமென்னும் ஜெனனலக்கினத்திற்கு 10-ஆம் ராசியில் கரும்பாம்பும் 10-ம்ராசிக்கு அதிபதி ஜென்மத்திலும் ஜெனனலக்கினாதிபதி பாக்கியமென்னும் ஒன்பதாம் ராசியிலும் இருக்க அந்தஜாதகன் அநேக தேசத்திற்கு அதிபதியாயும், 21- வயதுக்குமேல் தன் அந்திய வயதுவரையில் சக்ரதாரயோகங்களை யனுபவிப்பான் எ-று. (340)

ஆவன்பத்தாதிபனிருந்த வங்கிசாதிசென்மத்தோன்
மேவும்பத்தையிருவோரும் விரும்பநாகயோகபலன்
கோவாம்வித்தைதனவானுங் கூறின்வயதுபதினறின்
பூவுக்கரசாய்மூவாண்டு பொருந்திநடக்குந்தானிதுவே.

(இ-ள்) பத்தாம் ராசிக்கு உடையவன் பெற்ற அங்கிசத்தோனும் ஜெனனலக்கினத்தாசனும் ஆக இருவரும் ஜெனனலக்கினத்தைப் பார்த்

தாலும் சேர்ந்தாலும் நாகயோகமென்று சொல்லுவர். அதன் பலன்க ளாவன தருமசிலனும் கல்வியுடையவனும், செல்வப் பொருளுள்ளவனும் ஜெனனுதி வயது 16-க்குமேல் இப்பூமியில் மேன்மையுள்ளவனுக மூன்று வருஷம் வரையில் அரசயோக பலனுகவே நடக்கும் எ-று.

(வி-ரை) ஜெனனலக்கினம் உடல் என்றும் 10-ஆம் இடம் உத்யோகம் என்றும் கொள்ளவேண்டியதால் லக்குதிபதி லக்கினத்திலும் பத்தாம் அதிபதி சுபரங்கிசமேறி லக்கினத்தைப் பார்த்தால் தன்வரையில் ஜிவிக்கக் கூடிய ராஜயோகம் சித்திக்கும் என்றும் கொள்ளலாம். (341)

இதுவேகுருவுமொன்பதினி லிருக்கவொன்பதிளுதிபதி
துதிசேரேழிலிருந்திடவே சோமன்சுபரோடெங்குறினும்
கதிர்சேர்நாகயோகபலன் கண்டவயதுபதிளுறின்
புதிதாய்மூன்ருண்டளவுமிகப் பொன்னைஞ்னூறுதேடுவனே.

(இ-ள்) ஜெனனலக்கினத்திற்கு 9-ல் குருவிருக்க 10-ஆம் இடத்து அதிபதி 7-ஆமிடம் பெற்று சந்திரன் சுபகோட்களோடு உற்று எந்தராசியி லிருக்கினும் நன்மையே வினையும் நாகயோகமென்றும் சொல்வர். அதன் பலனுவன 16-வருடங்களுக்குமேல் 500-பொன்னை மூன்று ஆண்டுகளுக் குள் சம்பாதித்து வாழ்வன் எ-று.

(வி-ரை) அரசனும் பிரகஸ்பதியுமான குரு பாக்கியஸ்தானம் பெறு வது விசேஷம், பாக்யஸ்தானுதிபதி சப்தமகேந்திரம் பெறுவது அதைவிட விசேஷம். சந்திரன் உலகமாதாவாகையால் தீய கிரகங்களுடன் சேராமல் சந்திரன் புதன் இவர்களோடு கூடினுல் குடும்பத்தில் எந்நாளும் லக்ஷ்மி வாசமாகவே இருக்கும் என்பதாம். (342)

தேடும்லாபன்றனபாவத் திறல்சேரதிபனுச்சனெனின்
நாடுமைந்தாம்வீட்டாதி நண்ணுந்தனத்தைப்பார்த்திடவே
கூடும்பேரியோகபலன் குதிரையானைநரர்தேரும்
ஊடுமாருததன்மேலே யோங்கும்வருஷநாலளவே.

(இ-ள்) தேடுதற்கரிய 11-ஆம் வீட்டோனும் இரண்டாம் வீட்டோனும் உச்சம்பெற்று லக்கினத்திற்கு பஞ்சமராசிக்குடையவன் இரண்டாம் வீட்டை நோக்கில் பேரியோகமென்று சொல்வர். அதன்பலன் குதிரை யானைகளால் தேர் இவைகள், வயது 36-க்குமேல் 4-வருஷம் வரையில் அனுபவிப்பான் எ-று.

(வி-ரை) பேரி என்பது ஓர் சப்தக்கருவி, இந்த சப்தக்கருவியானது மேற்சொன்ன குதிரை யானை காலாள் தேர் இவைகளுள்ள இடத்தில் முக்கியமாய் இருக்கவேண்டியதாகையால் இவ்வாறு யோகம் சொல்லப் பட்டது. 5-ஆம் இடம் பூர்வபுண்யஸ்தான மாகையாலும், 5-ஆம் வீட்டோன் தனஸ்தானத்தைப் பார்த்தால் அந்த ஜாதகனுக்கு பிதுரார்ஜித பூஸ்திதி யுண்டென்றும் சொல்லலாம். (343)

அளவேயொன்பான்றனிற்புகரு மமர்ந்தேயொன்பாளுதிபதி
வளமாமதிக்கேயொன்பதினில் வந்தாற்பதுமயோகபலன்
தளமோடரசர்புடைசூழத் தானும்பாராண்டகத்திலிருந்
துளவாந்தானமைம்பதின்மே லோங்கும்வருஷமைந்தளவே.

(இ-ள்) ஜெனனலக்கினத்திற்கு பாக்கியஸ்தானத்தில் சுக்கிரனும் 9-ஆம் ராசிக்கதிபதி வளர்பிறைச் சந்திரனுக்கு 9-ஆம் ராசியிலிருக்க பதும யோகமென்றும் சொல்வர். அதன் பலன்களாவன ராணுவங்களைப்படைத்த அரசர்களெல்லாம் தன்னைச் சூழ்ந்திருக்க தான் ராஜரீகம்செய்துக்கொண்டு ஜெனனுதி வயது 50-க்குமேல் 5-வருஷம் வரையில் முயற்சியான யோகத்தை அனுபவிப்பான் எ-று. (344)

ஓங்கும்லக்கினதிபதி யுற்றவீட்டிற்கதிபதிதான்
பாங்காய்க்கேந்திரந்திரிகோணம் பற்றிமூலத்திரிகோணம்
தாங்குமுச்சனுனலுந் தக்கபுரத்துக்கதிகாரம்
வீங்கும்பர்வமேமைந்தின் மேலொன்பானுமாண்டுளதே.

(இ-ள்) பெருமையைப்படைத்த லக்கினத்ததிபதி எந்த ராசியில் நின்றானே அந்த ராசிக்கதிபதி புகழ்ச்சியையுடைய கேந்திரங்களிலாவது திரிகோணங்களிலாவது மூலத்திரிகோணங்களில் இருந்தாலும் உச்சம்பெற்றிருந்தாலும் மேன்மையையுடைய பட்டணத்திற்கு அரசனுருவன். இவன் ஜெனனுதி வயது 35-க்குமேல் 9-வருஷம் வரையில் யோகமுண்டென்றும் சொல்லுக எ-று (345)

உளதேலக்கினதிபதி யுற்றவீட்டுக்குடையோனும்
அளவாமதிவீட்டதிபதிப னுச்சனுகிச்சோமனுலேழிற்
களவேகேந்திரமேறிவரக் காகளயோகந்திரவியவான்
வளவனுகுநாலேழ்மேல் வயதுள்ளளவும்ரசவாதி.

(இ-ள்) ஜெனனராசியதிபதி நின்ற ராசிக்குடையவனும் சந்திரன் அமர்ந்த ராசிக்குடையவனும் உச்சம்பெற சந்திரன் 4-7-ஆமிடமான கேந்திரம்பெற்று உச்சனுகவிருக்க காளயோகமென்னும் தனவந்தனுகவும் 28-வயதுக்குமேல் தன்வயதுள்ளளவும் ரசவாதத்தொழில் புரிவன் எ-று.

(வி-ரை) லக்கினுதிபதியும் பாக்யாதிபதியும் உச்சனுகவாவது மூலத்திரிகோணங்களிலாவது பலம்பெற்றிருந்தால் காளயோகமென்றும் சொல்வார். ஆறுமதிபதி சொக்ஷேத்திரம்பெற்று உச்சம்பெற்றாலும் சப்தமகேந்திரம்பெற்று உச்சனுகவிருந்தாலும் காளயோகமென்றே சொல்வா. இதன் பலன் யோகவானுகவும் சாது சந்நியாசியாயும் யுக்தி முதலிய விதரணசாலியாயும் நிகரில்லாத சேனைகளைப் படைத்து வாழ்ந்திருப்பன் என்றும் சோதிடத்தோர் கூறுவர். (346)

வாதிரண்டாமைந்தாதி வருமேபாக்கியாதிபனும்
ஓதுஞ்சென்மந்தனிலுற்றே யோங்குமரசனபார்வையுறில்
ஈதுதாந்திரியோகபல னிவனேவெகுதேசாதிபதி
நீதிநடத்தும்பன்னிருமே னேரும்வயதோராறளவே.

(இ-ள்) இரண்டாம் வீட்டிற்கு உடையவன் ஐந்தாம் வீட்டிற்குடையவன் 9 ஆம் வீட்டிற்குடையவன் இம்மூவரும் ஜென்மலக்கினமேற குரு அவர்களைப் பார்க்க தாந்திரியோகமென்றும் இதன் பலன் அநேக தேசங்களுக்கு அதிபதியாயும், நீதியோடு அரசுசெய்பவனும், 12-வயதுக்குமேல் 6-வருஷம்வரையில் யோகத்தை யடைவான் எ-று. (347)

**வயதாரெட்டுமேன்மூன்று வருஷமிருதங்கயோகபலன்**
**சுயலாபாதியத்துச்சன் சுங்கன்கூடியிருந்தமனை**
**நயவீட்டுடையோன்பத்தேழி ஞன்கிலொன்பானமர்ந்திடவே**
**செயமாயரசர்க்கதிபதியாஞ் செப்புஞானிதனவானே.**

(இ-ள்) *லாபஸ்தானாதியான* 11-*ஆம் வீட்டதிபன் சுக்கிரனோடுசேர்ந்து உச்சம்பெற அவ்விராசிக்குடையவன்* 4-7-10-9 *இவ்விடங்களிலிருக்க எல்லோரையும் ஜெயிக்கும் திறமும், அரசர்களுக்கு மேம்பட்டவனும், சொல்வதற்கரிய ஞானியும் தனவந்தனும், ஜென்னாதி வயது* 48-*க்குமேல் மிருதங்கமென்னும் யோகத்தை அனுபவிப்பான் எ-று.*

(வி-ரை) *மிருதங்கமானது முதலிலும் கடைசியிலும் சிறுத்தும், மத்தியில் பருத்துமிருக்கும். ஆகையால் மத்திய வயதிலேயே பூரணயோகம் உண்டென்று சொல்லுக.* (348)

**செப்பும்லக்கினவர்க்கேற்ற செறிந்தேயிருக்கச்சென்மாதி**
**ஒப்புஞ்சுபர்களுடன்கூடி யுறுஞ்சன்மாதிசன்மத்தைத்**
**தப்பாமுழுநோக்காகவிது சக்கிரயோகஞ்சவுக்கியவான்**
**அப்பாவைம்பானைந்தின்மே லானவருஷநான்கினிதே.**

(இ-ள்) *ஜெனனலக்கினாதிபதி லக்கினவர்க்கம்பெற்றும் சுபகோட்களோடு கூடியும், தான்நின்ற இலக்கினதிலிருந்து ஜெனனலக்கினத்தை முழுநோக்காகப் பார்க்க சக்கரயோகமென்றும், அதன்பலன் சுகமுள்ளவனும, ஜெனனமுதல்* 55-*வருஷத்திற்குமேல் நான்குவருஷம் வரையில் யோகத்தோடிருப்பான் எ-று.* (349)

**இனிதாங்கன்னிசென்மமதா மிரண்டோடொன்பானாதிபதி**
**தனியேசுங்கனிருந்தங்கி சத்தோனுமரசனுடன்கூடி**
**மனுவாங்தனபாவத்திருக்க வயதுபதினறதன்மேலே**
**நனியார்சீவனுள்ளளவு நடக்குஞ்சாம்ராச்யயோகம்.**

(இ-ள்) *இனிமைபொருந்திய கன்னியாராசியில் ஜெனனமாகி இரண்டாம் வீட்டோனை தனாதிபதியும், 9-ஆம் ராசி அதிபதியும் தனித்திருக்க, சுக்கிரன் இருந்த அங்கிசாதிபதி சுபரிலொருவரான குருவுடன் சேர்ந்து தனஸ்தானத்திலிருக்க சாம்ராஜ்ய யோகமென்றும், அவை தானுதித்த* 16 *க்கு மேல் தன் உயிருள்ளவரைக்கும் எ-று.*

(வி-ரை) *சாம்ராஜ்ய யோகமென்பது ராஜயோகமாயினும் கஷ்டநஷ்டமில்லாத சமரசயோகமாகவே நடக்கும் என்பதாம்.* (350)

**யோகமாதியந்தமெனு முயராதிருந்தங்கிசாதிபதி**
**பாகசென்மந்திரிகோணம் பத்திலிருக்கச்சேயுச்சம்**
**ஒ ாகுபெறவேபத்தாதி வந்தேழிருக்கத்துர்க்காதி**
**போகமுடனேவனங்களுக்குந் தனியேயரசாய்ப்பொருந்திடுவன்.**

(இ-ள்) *ஒவ்வொரு லக்கினத்திற்கும் யோககாரக கிரகமெதுவோ அந்தக் கிரகம் ஜெனனலக்கினம் திரிகோணம்* 10-*ஆமிடம் என்னும் இராசி*

களில் சேர அங்காரகன் உச்சவீடேற 10-ஆம் ராசிக்கதிபதி சப்தகேந்திரமென்னும் ராசியிலிருக்க அந்த ஜாதகன் குதிரைச் சேனைகளும் போகசுகம் உள்ளவனும் இனிய வாசனை வீசாகின்ற பூங்காவிகளில் பிரியவானும் தனியே இருந்து அரசுசெய்பவனும் ஆவான் எ-று. (351)

**பொருந்திவெய்யோன்பாக்கியத்திற் புகத்துடனுன்காதிபதி**
**திருந்தியிருக்கப்பத்தாதி சேர்ந்தோரிரண்டேழிலுற**
**வருத்தாந்துர்க்காதித்ததிபதியால் வையமுழுதுமரசாளத்**
**தெரிந்தேயோகபலனென்று செப்புங்கணிதமாதவனே.**

(இ-ள்) பெருமைதங்கிய சூரியன் 9-ல் இருக்க அவனோடு நான்காம் ஸ்தானாதியான சுகாதிபதி இருக்க 10-ஆமிடமென்னும் ராஜ்யஸ்தானாதிபதி தனம சப்தமென்னு மிராசியிலிருக்கப் பிறந்தவன் எந்நாளும் வருத்தப்படமாட்டாத குதிரைகளைப் படைத்து உலகமுழுதும் ராஜரீகம் புரிவான் என்று யோக பாவங்களைத் தெரிந்த கணிதசாஸ்திர வல்லவர்கள் உரைப்பார் எ-று. (352)

**மாதேநான்காமாதிபதி வந்தேயிரண்டாமாதியுடன்**
**மீதேகூடிப்பாக்யத்தில் விரைந்தேயிருக்கப்பத்தாதி**
**போதுமிரண்டிற்பலவானுய் பொருந்தியிருக்கலாபாதி**
**ஓதும்லக்கினுதிபதி யுச்சங்கோடிலயிஸ்வரியன்.**

(இ-ள்) அழகுவாய்ந்த பெண்ணே! சுகாதிபதி என்னும் நான்காம் அதிபதி இரண்டாமதிபதியாகிய தனாதிபதியுடன் கூடி பாக்யமென்னும் 9-ஆமிடத்திலிருந்து பததாம்ராசிக்கதிபதி இரண்டில் பலம்பெற 11-ஆம் வீட்டதிபதியாவது ஜெனனராசி அதிபதியாவது உச்சக்ஷேத்திரம் பெற அந்த ஜாதகன் கோடி ஐஸ்வரியம் உடையவனாகுவான் எ-று. (353)

**சுரவேசென்மந்திரமாகச் சுங்கனிருக்கச்சென்மாதி**
**வரவேதிரிகோணத்துற்ருன் மன்னனுகுஞ்சிலபூமிக்**
**குரவோன்சேனைக்கதிபதியா மொருமைஞானிதுரகாதி**
**இரப்போர்தமக்கும்வேதியர்க்கு மீவான்சீவபரியந்தம்.**

(இ-ள்) ஜெனனலக்கினம் ஸ்திரலக்கினமாகவிருந்து அதில் சுக்கிரன் இருக்க ஜெனனலக்கினாதிபதி திரிகோண ஸ்தானம்பெற அரசனாகிச் சில பூமிகளை யுடையவனாய சேனைசெனியங்களைப் படைத்து ஒரே மனதையுடைய ஞானியும குதிரைகளை யுடையவனும் ஏழையாளருக்கும் அந்தணர்களுக்கும் ஜீவபரியநதம் உபகாரம் செய்வான் எ-று. (354)

**அந்தநான்காமிடந்தனக்கு மதிபனுச்சனவ்வீட்டோன்**
**வந்துமைந்தாமதிபனுடன் மகிழ்வாய்க்கூடப்பாக்யாதி**
**முந்துஞ்சமரயோகமென மொழியும்பலன்கள்சேனுதி**
**சொந்தவருஷமைம்பதின்மேற் றுலங்குவரசனுவானே.**

(இ-ள்) நாலாமிடமென்னும் சுகாதிபதி உச்சம்பெற்று நிற்க அந்த வீட்டிற்கு உடையவன் பாக்யாதியோடும் 5-ஆமாதியோடும் சேர சமர

யோகமுண்டாகும். அதன் பலன்களாவன சேனாதிபதியாயும் ஜெனனாதி வயது 50-க்குமேல் மேன்மையைப்படைத்த ராஜனாகுவன் எ-று. (355)

**ஆவாரைந்தாமதிபதியு மன்பாம்லாபத்தாதிபனும்**
**போவாரொன்பான்றனிலிருக்கப் பொருந்தும்பத்தாமதிபனைந்தில்**
**கோவேயாகுஞ்சிவயோகங் குதிரையானைநரர்தேரும்**
**மேவும்வெகுதேசாதிபதி விளங்குபரமாயுள்ளவனும்.**

(இ-ள்) ஜெனனராசிக்கு 5-ஆம் ராசிக்குடையவனும் அன்புடைய லாபஸ்தானாதிபதி என்னும் 11-ஆம் இடத்ததிபதியும் சேர்ந்து 9-ஆமிடம் என்னும் பாக்கியஸ்தானம்பெற 10-ஆம் ராசிக்குடையோன் பஞ்சமஸ்தான மென்னும் 5-ல் இருக்கப் பிறந்தவன் சிவயோகத்தை அனுபவிப்பான். அதன் பலன்களாவன அரசனும் குதிரை யானை காலாள் தேர் இவைகளை யுடைய மேன்மையைப்படைத்த தேசாதிபதியும் தீர்க்கவயதுள்ளவனுமாக இருப்பான் எ-று.

(வி-ரை) தீர்க்கவயது என்பதை 8-ஆம் பாவகத்தையும் ஆராய்ந்து சொல்லுவது நலம். (356)

**உள்ளபத்தாமதிபதியு மொன்பானங்கிசந்தானேறி**
**மெள்ளயிரண்டாமிடத்திலுற விரும்பியொன்பான்றனஞ்சேரில்**
**கள்ளவிஷ்ணுயோகபலன் கதித்தவரசரடிதொழவே**
**கொள்ளும்லக்ஷம்பொன்றேடிக் குலாவியிருப்பனீரேழ்மேல்,**

(இ-ள்) ஜெனனலக்கினத்திற்கு 10-ஆம் இராசிக்குடையவன் 9-ஆம் ராசியதிபன் அங்கிசம்பெற்று லக்கினத்திற்கு தனஸ்தானத்திலிருந்தாலும் 9 ஆமிடத்திலேயே இருந்தாலும் திருட்டுத்தனமுடைய விஷ்ணுயோக மென மேன்மையாய்ச் சொல்வர். அதன்பலன்: அரசர்களிடம் சேவகா விருத்தித் தொழில்புரிந்து லக்ஷம் பொன்வரையில்சம்பாதித்து ஜெனனாதி வயது 14-க்குமேல் யோகத்தோடிருப்பான் எ-று. (357)

**மேலாம்பாக்கியகேந்திரத்தின் மேவிக்குருவும்லாபத்திற்**
**கேலுங்கேந்திரச்சுக்கிரனுங் கிட்டியிருவர்மனைமாறிச்**
**சாலவிருக்கவயன்யோகந் தனவான்கீர்த்திப்பிரதாபன்**
**மாலாய்வளரொன்பதின் மேலும்வயதுள்ளமன்னவனும்.**

(இ-ள்) மேன்மையையுடைய பாக்கியகேந்திரமென்னும் 9-ஆம் வீட்டில் குருவும், லாபகேந்திரமென்னும் 11-ல் சுக்கிரனுமிருந்து தன் சுயவீடு அன்றி அன்னியவீட்டிலிருப்பாராகில் மகத்துவமுள்ள நல்ல யோகத்தையே அனுபவிப்பான். அதை பிரம்மயோகமென்றும் சொல்வர். அதன் பலன் பொருளுடையோனும் அழகிய நற்பேரும் யாவரும் புகழ்ந்து பேசத் தக்க சவுரியமுள்ளவனும், ஜெனனாதிவயது 9 க்குமேல் அந்தியகாலம்வரையில் இராஜரீகம் புரிபவனாக இருப்பான் எ-று. (358)

**மன்னுபத்தாதிபனிருந்த வங்கிசாதிபதிபத்தில்**
**மின்னுமுச்சமாயிருக்க விலக்கினாதியுடன்கூடச்**

**சொன்னகவுரியோகபலன் றுரையாங்கீர்த்தியுதாரகுணன்**
**பொன்னுமணியுமாருறிற் பொருந்துமாண்டுபன்னிரண்டே.**

(இ-ள்) *ஜெனனலக்கினத்திற்கு 10-ஆம் வீட்டதிபதி எந்த அங்கிஸம் பெற்றுனே அந்த அங்கிசாதிபதி லக்கினாதியுடன் கூடி இராஜ்யஸ்தானத்தில் உச்சம்பெற கௌரியோகமென்றும் சொல்வா. அவற்றின் பலனைச் சொல்லுமிடத்து மேன்மையுடையவனாகவும், கீர்த்திப்பிரதாபம் வாய்ந்தவனும், யாதொன்றுக்கும் அஞ்சாது பதிலளிப்பவனும், பூஷணங்களையணியானின்ற 12-வயதுக்குமேல் 12-வருஷம்வரையில் யோகத்தையே அனுபவித்திருப்பான் எ-று.* (359)

**ஏயபாக்கியாதிபதி யிருந்தவங்கிசையோனென்ப**
**தூயவிச்சனைந்தாதி தொடர்ந்தேகூடுபுறநோக்கக்**
**காயலக்ஷிமியோகபலன் கனத்ததுரையாய்த்தனவானுய்ப்**
**பாயும்பரியும்நாற்பதின்மேற் படைப்பன்பத்தாண்டிவன்பாரில்.**

(இ-ள்) *பாக்யாதியான 9-ஆம் வீட்டதிபதி எந்த அங்கிசம் பெற்றுனே அந்த அங்கிசாதிபதி உச்சம்பெற்று 9 ல் இருக்க அவனுடன் 5 ஆம் வீட்டதிபதி சேரினும்பார்க்கினும் லக்ஷிமியோகமென்றும்சொல்வர். அவற்றின் பலனைச் சொல்லுமிடத்து மேன்மையுள்ள அரசனாகவும் அநேக தனத்தை யுடையவனாகவும் ஜெனனாதி வயது 40-க்குமேல் 10-வருஷம் வரையில் யானைப்படை குதிரைப்படை முதலிய சேனைகளைப் படைப்பதுடன் யோகசாலியாகவும் இருப்பான் எ-று.* (360)

**பாரிலாபாதிபனிருந்த வங்கிசாதிலாபத்தில்**
**ஊருங்கோளுமுச்சமதாய்ப் பாக்கியாதியுடன்கூடப்**
**பேரும்பாரதியோகபலன் பெரியகண்ணன்சிற்றாணன்**
**நாரிவெகுவாமறுநான்மே னுடும்வயதெட்டினில்யோகம்.**

(இ-ள்) *இலாப ஸ்தானாதிபதி என்னும் 11-ஆம் வீட்டோனிருந்த அங்கிசாதிபதி மேற்சொன்ன லாபஸ்தானமான 11 ல் இருக்க அதனைப் பார்க்கும் கிரகங்கள் உச்சம்பெற்றிருக்க அவனும் பாக்யாதியுடன் கூடி இருந்தால் பிரக்யாதிபெற்ற பாரதியோகமென விசைப்பர். அதன் பலனைச் சொல்லுமிடத்து பெரிய விழிகளை யுடையவனும் சிற்றண்டியான தின்பண்டங்களில் அவாவுடையோனும் பெண்கள் சேர்க்கை அதிகமுள்ளவனும் 24-வயதுக்குமேல் 8-வருஷம்வரையில் நல்ல யோகசாலியாய் இருப்பான்.*

**யோகமூன்றுலாபாதி யொருமித்தேழுறவேழாதி**
**வாகுபன்னிரண்டினிற்க வரசன்பன்னிரண்டாதியிவர்**
**ஏகபாக்கியந்தன்னிலுற விதுவேகலாநிதியோகபலன்**
**போகியரசன்மதிமந்திரி பொருந்தும்பதினறெட்டுளதே.**

(இ-ள்) *யோகத்தைத் தரும் 3-ஆம் வீட்டதிபனும் 11-ஆம் வீட்டதிபனும் கூடி சப்தமராசியிலிருக்க 7-ஆம் ராசிநாதன் மோக்ஷஸ்தானம்பெற குருவோடு மேற்சொன்ன விரயாதிபனுங்கூடி பாக்யஸ்தானம் என்னும் 9-ஆம் ராசியிலிருக்கப் பிறந்த ஜாதகனுக்கு கலாநிதி யோகமென்றும்*

பெயர். அதன் பலன் யோகவானும் நீண்ட யுக்தியும் தந்திரமுதலியவை உள்ளவனும் அமைச்சனும் 16-க்குமேல் 2-வருஷம் யோகத்தை அனுபவிப் பவனும் ஆவான் எ-று. (362)

உள்ளசன்மாதிலாபத்தி லுறவேயந்தலாபாதி
தள்ளுஞ்சன்மந்தனிலிருக்கத் தனத்தானத்தான்பத்திலுறக்
கொள்ளும்பத்தோனிரண்டுறவே கொண்டுசென்மந்திரமாக
வள்ளலிந்திரயோகமென வழுத்தும்பலன்களினிதுரைப்பாம்.

(இ-ள்) ஜெனன லக்னாதிபதி 11-ஆம் இடமென்னும் லாபஸ்தானத்தி லிருக்க 11-ஆம் வீட்டதிபன் ஜெனனராசியிலும், தனாதிபதியான இரண் டாம் வீட்டுக்குடையவன் 10-ஆமிடமென்னும் ராஜ்யஸ்தானமபெற 10-ஆம் வீட்டிற்கதிபதி தனஸ்தானத்தில்நிற்கவும், ஜெனனலக்கினம் ஸ்திரலக்கின மாகவுமிருக்கப் பிறந்த ஜாதகன் இந்திரயோகத்தை யனுபவிப்பான் அதன் பலன்களைச் சொல்லுமிடத்து நல்ல சுபயோகபலனாகவே இருக்குமெனச் சொல்வர் எ-று. (363)

உரைப்பாமதுரநல்வசன முயர்ந்ததுர்க்கத்ததிபதியாய்ப்
பரப்புநிறைந்தவெகுபூமி பதியிற்கரசாய்ப்பேரிகையும்
இரைக்குமல்லரிவாத்தியமு மினியதனவான்ஸ்திரீலோலன்
நரைக்குமுன்னேயாறுறி னல்கும்வருஷமெட்டாமே

(இ-ள்) கேட்பதற்கரிய மிருதுவான வார்த்தைபேசுபவனும் மேன்மை யான சதுரங்க சேனைகளென்னும் குதிரை காலாள் யானை ரதம் முதலிய அதிகாரஸ்தனும் விஸ்தாரமான பூமிகளை யுடையவனும், பூரண நிறைந்த சப்தத்தைத் தரானின்ற மல்லரி வாத்தியத்தை யுடையவனும், மேன்மை யைப்படைத்த தனவந்தனும், பெண்களுக்கு நேசனும், வாலிபவயதான 36-க்குமேல் 8-வருஷம்வரை பூர்ண யோகத்தை அநுபவிப்பவனுமாவான்.

(வி-ரை) காரியாதிபதி இரண்டிலும் இரண்டாம்வீட்டோன் 10-லும் இருந்தால் பரிவிர்த்தனை யோகமாம். அதாவது ராஜ்யஸ்தானாதிபதி தன் வீட்டிற்கு ஐந்தாமிடமும், தனாதிபதி தன்னிடத்திற்கு பாக்கியமும் பெறுவ தால் இராஜயோகமுண்டு எ-று. (364)

ஆமேதேளுமிலக்கினமா யரசன்சுங்கனிருவருறத்
தாமேலாபப்புதனுச்சந் தரிக்கும்மதனயோகபலன்
காமர்வனிதையிச்சிக்குங் கருணையுள்ளசவுந்தரியன்
தோமின்மனோகரமந்திரியாய்த் துலங்குமிருபான்மேலெட்டே.

(இ-ள்) தேள் என்றுசொல்லும் விர்ச்சிகலக்கினமாகவிருந்துலக்கினத் தில் குருவும் சுக்கிரனும் கூடியிருக்க லாபஸ்தானமென்னும் 11-ல் புதன் உச்சனாகவிருக்கப் பிறந்த ஜாதகனுக்கு மதனயோகமென்றும் பெயர். அவற் றின் பலனைச் சொல்லுமிடத்து காமாந்தகரமான ஸ்திரீகள் இச்சிக்கத்தக்க தயாளகுணமுள்ளவனும் சவுந்தரியனும் புகழ்சசி விலாசம் உடையவனும், மனோதைரியம் திடம் கூர்மையுள்ள அமைச்சனும், 20-வயதுக்குமேல் 20-வருஷம்வரையில் யோகசாலியாக இருப்பான் எ-று.

(வி-ரை) விருச்சிகலக்கினமாக இருந்தால் குரு தனபஞ்சமாதியும் சுக்கிரன் சப்தம விரையாதியுமாவான். இவ்விருவரும் லக்னகேந்திரம் பெறுவதோடு வணிகனும் லக்ன அஷ்டம லாபாதி உச்சம்பெற்றால் நீண்ட ஆயுளும் களத்திரமூலமான சந்தோஷம் உள்ளவன் என்றும் கொள்க. (365)

**எட்டுவரும்பதினைந்தினிதன் மேல்யோகம்கலாநிதியாம்**
**மட்டேசென்மஞ்சராங்கிசத்தில் வரவேயொன்பான்சென்மமுறத்**
**தொட்டநான்கோணரசனுடன் துலங்கவைந்திற்பத்தாதி**
**ஒட்டியிருக்கலாபத்தி லோங்குமரசன்வெகுதேசம்.**

(இ-ள்) ஜெனனலக்கினம் சரராசி என்னும் மேஷம் கடகம் துலாம் மகரம் இவைகளாயும் லக்கினத்திற்கு 9-ஆம் ராசியதிபனான பாக்கிய ஸ்தானாதிபதி ஜென்மமேற லக்கினத்திற்கு நான்காம் வீட்டோனான சுகாதிபதி குருவுடன்கூடி பஞ்சமத்திலிருக்க காரியஸ்தானாதிபதி லக்கினத்திற்கு 11-ல் இருக்கப் பிறந்த ஜாதகன் அநேக தேசங்களைப் பரிபாலிப்பவனும் 8-வருஷத்திற்குமேல் 15-வருஷம்வரையில் நல்ல கலாநிதி என்னும் யோகத்தோடு இருப்பான் எ-று. (366)

**தேசக்குருவுக்கொருமூன்றிற் செறிந்தேசுங்கன்றானிருக்க**
**வாசஞ்சுங்கற்கொன்பதினின் மதிதானுறவேபத்தாதி**
**நேசநான்கிலுறத்தனவா னிருபனாகிமூவொன்பான்**
**போசனெனமேன்மூவாண்டு பொருந்துநகரநாட்டரசே.**

(இ-ள்) மேன்மையைப்படைத்த குருநின்ற ராசிக்கு 3-ஆம் ராசியில் சுக்கிரனிருக்க, சுக்கிரன் நின்ற ராசிக்கு பாக்கியத்தில் சந்திரனிருக்க லக்கினத்திற்கு 10-ஆம் ராசிக்குடைய கிரகம் 4-ஆம் இடத்தில் சேர பிறந்த ஜாதகன் தனவானாகவும் 27-வயதுக்குமேல் 3-வருஷம்வரையில் நல்ல யோகத்தோடு மகாராஜாவென்னும் பெயருடன் அரசு செய்யத்தக்க நிபுணனுமாவான் எ-று.

(வி-ரை) சுக்கிரன் பொன் முதலிய பூஷணங்களுக்கு அதிகாரம் செய்பவனாதலால் அவருக்கு 9-ஆம் ராசியில் சந்திரனிருந்தால் நல்லயோக சாலியாகவும இருப்பானென்றும் கொள்க. (367)

**அரசேலாபமிரண்டொன்பா னாதியரவர்தம்மனையிற்**
**சிரசாயிருக்கமால்யோகஞ் சேனைக்கதிபன்பூபாலன்**
**பொரவேகீர்த்திக்கதிபதியும் பூமிக்கரசனமைச்சனுமாய்த்**
**தரைசேர்முப்பத்தாறின்மே லெட்டுவருஷந்தனஞ்சயனே.**

(இ-ள்) ஜெனனலக்கினத்திற்கு இரண்டாம் வீட்டோனான தனாதிபதியும் லாபஸ்தானாதி என்னும் 11-ஆம் வீட்டோனும் 9-ம் வீட்டோனான பாக்யாதிபதியும் தன் சுயவீட்டின் ஆக்ஷிபெற்றிருந்தால் விஷ்ணுயோகம் என்றும் பெயர். அதன் பலன்களாவன படைக்கூட்டங்களுள்ளவனும் இப் பூமியை பரிபாலனம் செய்பவனும் பிரக்யாதிபெற்ற கௌரவம் பிரதாபம் இவைகளை யுடையவனும், பரிபாலனம் செய்யும் யோசனைத் தலைவனும்

86-வயதுக்குமேல் 8-வருஷம்வரையில் தனத்துக்ாதி-தியாயும் விஜயனைப் போன்ற வீரம் சௌரியமுள்ளவனுமாக இருப்பான் எ-று. (368)

செயமேமேஷஞ்சென்மமதாய்ச் செங்கதிருறவேசனிபத்தில்
தயவாயிருக்கவொன்பதினிற் குருவுமதியுந்தானுறவே
நயமேவிசுவாவசுயோக நடக்குந்தனவான்றேசாதி
கயமுநடத்தும்பதினுன்மேற் கண்டவருடம்பதினைஞ்சே.

(இ-ள்) ஜெயத்தைப் பெறப்படாநின்ற மேஷலக்கினம் ஜெனனமாகி அதில் சூரியன் உச்சனும் ராஜ்யஸ்தானாதி என்னும் சனி 10-ஆக்ஷி பெற்றும் 9-ஆமிடமென்னும் பாக்கியஸ்தானத்தில் குரு ஆக்ஷிபெற்றும் சந்திரன் சகிதம் பெறப் பிறந்தவனுக்கு விசுவாவசுயோகமென்றும் பெயர். அதன் பலனைச் சொல்லுமிடத்து செல்வமுடையோனும் பலதேசங்களை அரசாக்ஷி புரிவோனும் இளமைப்பருவமான 14-ஆண்டுகளுக்குமேல் 15-ஆண்டுகள் வரை நல்ல யோகசாலியாக இருப்பான் எ-று. (369)

அஞ்சேபாக்கியாதிபதி யிருந்தவங்கிசாதிபதி
துஞ்சாதுச்சமவனுடனே சொல்லும்லக்கினதியுற
விஞ்சாநாளயோகபல னெல்லார்க்கரசன்ஸ்திரீலோலன்
வஞ்சமறவேகுருபத்தி வழுத்துமாலேழ்பதினெண்ணே.

(இ-ள்) ஒன்பதாமாதி என்னும் பாக்கியஸ்தானாதிபதியார் அங்கிசம் பெற்றானே அந்த அங்கிசக்கிரகம் உச்சம்பெற்று அவனோடு லக்கினாதிபதி சம்பந்தப்பட்டு இருந்தால் நாளயோகமென்றும், அதன்பலனவன: பூமியி லுள்ளோர்க்கு பரிபாலனத்தலைவனாகவும், பெண்களிடம் இன்பத்திற்கு மேன்மையானவனும், பொறாமையில்லாத ஆசாரிய விஸ்வாசமும், 42-ஆம் வருஷமுதல் 8-ஆண்டுகள்வரையில் யோகசாலியாய் வாழ்வன் எ-று. (370

எண்ணும்லக்கினங்கிசையில் பத்தாமிடத்தாதிபனிருக்க
ஒண்ணும்பத்தாமங்கிசையி லுறச்சன்மாதியரசனுடன்
நண்ணுமிவரையவர்பார்க்க நாடுங்கார்முகயோகபலன்
பண்ணுஞ்ஞானிமுவொன்பான் பாரிலெட்டுவித்தையுளன்.

(இ-ள்) இராஜ்யஸ்தானாதிபதி என்னும் 10-ஆம்ராசிக்கதிபதி ஜெனன ராசியதிபன் அங்கிசம்பெற 10-ஆம் ராசியில் லக்கினாதிபதி குருவுடன் இருந்தாலும் அல்லது குரு லக்கினத்தைப் பார்க்கவும், குருவை லக்கினாதிபதி பார்க்கவும் கார்முகயோகமென்றும்சொல்வர். அதன்பலனைச் சொல்லுமிடத்து சுத்தச் செயல்களையுடைய சந்நியாசியும் 27-வயதுக்குமேல் அஷ்டவித பாஷைகளையும் எட்டு ஆண்டினுள் வாசிப்பானென்றும் சொல்லுவர்.

(வி-ரை) வித்தை என்பதை இரண்டாம்பாவகத்தினால் இரண்டாம் பாவகத்தை ஆராய்ந்து இன்னவித்தை என்று சொல்லுவது நலம். (371)

வித்தைலாபத்ததிபனைந்தின் மேவவைந்தாமாதிபதி
புத்திலாபத்திருந்திடவே புகருநான்கோண்மதியுடனே
பத்தியிருக்கமகபதிபோற் பாரைமுழுதுமரசாள்வான்
உத்தயோகியேழாறில் யோகநடக்கும்பதினறே.

(இ-ள்) வித்தியா ஸ்தானாதியான இரண்டாம் வீட்டிற்கு 11-ஆம் வீட்டதிபனாகிய லாபாதிபன் 5-ஆம் ராசியிலும் ஐந்தாம் ராசிக்கதிபதி 11-ஆம் ராசியிலும் சுக்கிரன் நான்காம் வீட்டோனுடன் சம்பந்தப்பட்டு சுகிரனோடிருக்கப் பிறந்த ஜாதகன் மேன்மையைப்படைத்த மேதாவியாகி இப்பூமி முழுதும் ராஜரீகம் புரிபவனாகி 42-வயதுக்குமேல் 16-வருஷம் வரையில் தேவேந்திர யோகத்தையுடையவனாகி வாழ்வன் எ-று. (372)

பதியாமரசன்மதிபுகரும் புரிந்துமூவர்தனத்துறவே
விதியாம்பாக்கியாதிபதி விரும்புநோக்கமுற்றிடவே
கதிர்சேர்யோகங்கேதாரி காணும்பதாதியானைபரி
துதிசேரைம்பானிரண்டாண்டு தொடங்கியேழும்பிரபலமே.

(இ-ள்) தாழ்வடையப்படமாட்டாத சந்திரன் சுக்கிரன் குரு இம் மூன்று கோட்களும் கூடி இரண்டாமிடமென்னும் தனஸ்தானத்திலிருக்க 9-ஆம் வீட்டதிபதிநோக்குறப்பிறந்த ஜாதகனுக்கு கேதாரியோகமென்றும் பெயர். அதன் பலனைச் சொல்லுமிடத்து யானை குதிரை காலாள் இரதம் இவைகளையுடைய அரசனும் ஜெனனாதிவயது 52-க்குமேல் 7-வருஷம் வரையில் பிரபலயோக முடையவனாக இருப்பான் எ-று. (373)

பலமாம்பத்திற்கருநாகம் பத்தாமாதிசனியிருவர்
பலமாய்மூன்றிலுற்றிடவே பகருஞ்சண்டமாருதமாம்
தலமேதோறுந்தன்மங்க டானஞ்செய்யுஞ்சாத்திரவான்
உலவியுண்பான்பராக்கிரமன் யோகம்பதினைந்ததன்மேலே.

(இ-ள்) ஜெனனலக்கினத்திற்கு 10-ஆம் ராசியான ராஜ்யஸ்தானத்தில் இராகு பலம்பெற்றிருக்க 10-ஆம் வீட்டிற்கதிபதியும் சனி இவ்விருவரும் லக்கினத்திற்கு திருதிகைஸ்தானத்திலிருக்கப் பிறந்தவனுக்கு எமனை எதிரிட்டு போர்செய்யத்தக்க யோகம் சித்திக்கும். அதன்பலனைச் சொல்லுமிடத்து ஒவ்வொரு தேவாலயங்கள்தோறும் சென்று தரும முதலியவைகளைச் செய்து மேன்மையை அடையும் புராணசம்பன்னனும் திரிந்து சாப்பிடுபவனும் தைரியம் உள்ளவனும் ஜெனனாதி வயது 15-க்குமேல் நல்ல யோகசாலியாக இருப்பான் எ-று. (374)

மேலேபாக்கியாதிபதி மேவுமங்கிசநாதன்றான்
ஏலவெந்தாங்கிசையேறி யிருந்தவங்கிசத்தோனேனும்
தூலமந்தவங்கிசையிற் றுலங்குமுச்சனானாலும்
சாலலக்கினாதிகேந்திரத்திற் சுங்கனுடனேதானுறவே.

(இ-ள்) மேன்மையையுடைய பாக்கியஸ்தானாதிபதி எந்த அங்கிசையிலிருந்தானோ அந்த அங்கிசாதிபதி தன் சுயக்ஷேத்திர அங்கிசையிலேயே இருந்தாலும்அல்லது உச்சகோட்களின் அங்கிசையிலிருந்தாலும்சீலமுடைய லக்னாதிபதி கேந்திரம்பெற்று சுக்கிரனுடன் மித்ருவாகஇருந்தாலும எ-று.

வேறு

தானுறும்பலன்கள்பாரி சாதமாந்தனவான்யோகம்
மானனையார்க்குநேயன் மன்னவர்கப்பங்கட்டும்

**தேனுதென்கொடையான்காத்திரி சேயுளனல்லூண்கீர்த்தி**
**ஆனதோரிருபதின்மே லாயுளின்பரியந்தந்தான்.**

(இ-ள்) *பாரிசாதயோகமென்றும்பெயர் அதன் பலன்களாவன: செல்வ முடையவனும் நல்ல யோகசாலியும் பெண்களுக்கு அன்புள்ளவனும் அரசர்களெல்லாம் பகுதி கட்டக்கூடிய வெண்சாமரைக் குடைகளுள்ளவனும் நன்மையையுடைய மேன்மையான புத்திரப்பேறு உள்ளவனும் இனிய ஆகாரம் அருந்துபவனும் கீர்த்திப்பிரதாபமுள்ளவனும் ஜனனுதி வயது 20-க்குமேல் தன் அந்தியபரியந்தம் யோகசாலியாகவே இருப்பான் எ-று.* ()

*வேறு*

**அந்தலாபனுற்றமனைக் கொன்பானதிபன்சோமனுடன்**
**வந்தலாபந்தனிலிருக்க வஞ்சன்மாதிநோக்கமுற**
**விந்தகேதாரயோகபலன் மேவும்பேரிமல்லாரி**
**சொந்தகரிமாவிருபதுமுன் றுடன்மேல்வருடமிருபதுமே.**

(இ-ள்) *லாபஸ்தானுதிபதி எந்த ஸ்தானத்திலிருந்தானோ அந்த ஸ்தானத்திற்கு பாக்கியாதிபதி சந்திரன் சகிதம்பெற்று 11-ஆம் ராசியிலிருந்து லக்கினத்தோன் நோக்குற்று நிற்கப் பிறந்தவனுக்கு கேதாரயோகம் என்றும் பெயர். அதன் பலன்களாவன: மேன்மையுடைய சப்தத்தைத் தரா நின்ற மல்லாரிவாத்தியம் உள்ளவனும் யானை குதிரை இவைகளைச் சொந்தமாக உள்ளவனும் வயது 23-க்குமேல் 20-வருஷம் வரையில் யோகமாக விருப்பான் எ-று.* (377)

**துலங்கும்பாக்கியாதிபதி சூழ்ந்தங்கிசாதிபதியுச்சம்**
**இலங்கியிரண்டிலுற்றிடவே யிரண்டாமாதிபாக்கியத்தில்**
**பலங்கள்கொடுக்குஞ்சுபயோகம் படிப்பனீதியாசாள்வன்**
**குலங்கள்போற்றுமையொன்பான் கூறுமிருபத்தோராண்டே.**

(இ-ள்) *பிரகாசத்தையுடைய பாக்கியஸ்தானுதிபதி எந்த அங்கிசையிலிருந்தானோ அந்த அங்கிசாதிபதி உச்சனுகி இரண்டிலிருக்க இரண்டாம் வீட்டதிபதி பாக்கியஸ்தானம்பெற நல்ல யோகபலனை விளைவிக்கும் அதன் பலன்களாவன: நல்ல கல்வியாளனும் அரசாள்பவனும் தன் குலத்தோரெல்லாம் போற்றும்படி கீர்த்திவாய்ந்தவனும் ஜனனுதி வயது 4 -க்குமேல் 21-வருஷம் வரையில் யோகசாலியாக இருப்பான் எ-று.*

(வி-ரை) *சந்திரன் குரு சுக்கிரன் இம்மூவரும் சேர்ந்து 9-ல் இருக்க பிரகாசந்தங்கிய பொன் நாணயங்களை சம்பாதிப்பவனும் அரசாளுபவன் என்றும் பிரித்துச் சொல்லுக.* (378)

**ஒன்றேயேழாமாதிபதி யொன்பானிருக்கவொன்பஃதோன்**
**நன்றேயேழிற்றுரகையின் ராசிக்கதிபனிவர்களுடன்**
**ஒன்றியிருக்கச்சரிதாம யோகமரசாஞ்சேனையுளன்**
**என்றேந்திமுப்பதின்மே லியங்கும்வயதோவையாறே.**

(இ-ள்) ஜெனனலக்னாதிபதியும் ஏழாம்வீட்டதிபதியும் சேர்ந்து ஒன்பதிலிருக்க ஒன்பதாம்வீட்டதிபதி ஆறும்ராசிக்கு அதிபதியோடு சேர்ந்து 7-ஆம் ராசியிலிருக்கத் தாமயோகமென்றும் பெயர். அதன் பலனைச் சொல்லுமிடத்து அரசனும் அநேக படைகளை யுடையவனும் நீதியோடு அரசாக்ஷி செய்பவனும் ஜெனனாதி வயது 30-க்குமேல் 30-வருஷம்வரையில் யோகசாலியாக இருப்பான் எ-று.

(வி-ரை) ஆறும்ராசியை தைரியஸ்தானமென்றும் சத்ருஸ்தானமென்றும் சொல்வதால் அந்த ஆறுமாதிபதி 7-ல் 9-ஆம் வீட்டோனுடன்கூடி இருந்தால் தனக்கு எதிரியின்றி அரசுசெய்பவனும் நெஞ்சு திடமுள்ளவனுமாவான். (379)

ஐயாவிரண்டிற்குருவிருக்க வமர்ந்தேநான்கிற்சுங்கனுறப்
பொய்யாதேழிற்சேய்மதியும் பொருசனிமாதிசுபருடனே
நையாதிருக்கவிதன்பலன்க ளுடுங்காம்யயோகமதாம்
வையம்புகுந்தீர்பத்திரண்டு வருஷமாறுஞ்சவுக்கியமே.

(இ-ள்) ஜெனனலக்கினத்திற்கு தனஸ்தானத்தில் குருவிருக்க சுகஸ்தானமான 4-ல் சுக்கிரனிருக்க பொய்சொல்லாத குஜனும் சந்திரனும் 7-ல் இருக்க லக்னாதிபதி நற்கோளுடன் சேர்ந்திருக்கப் பிறந்த ஜாதகன் காம்ய யோகத்தை யனுபவிப்பான். அதன் பலன்களாவன: 20-வருஷத்திற்குமேல் 6-வருஷமவரையில் பூரண யோகசாலியாக இருப்பான் எ-று.

(வி-ரை) 7-ஆம் ராசியில் சந்திரனும் குஜனுமிருந்து 7-ஆம் ராசியதிபதி பலம்பெற்று இவர்களை பார்ப்பானாகில களத்ரமூலமான தனமும் உண்டென்று கொள்வர். (380)

மேயவைந்தாமதிபனென்பான் வீட்டிலிருக்கலாபத்தோன்
தூயமதியுமிரண்டிலுறச் சோடசதானம்பண்ணுவனே
ஆயவரசர்சன்மான மதிகம்பெறுவனளயோகம்
காயபலன்களையொன்பா னதன்மேன்மூன்றுண்டாங்காணே.

(இ-ள்) ஜெனனலக்கினத்திற்கு 5-ஆம் ராசிக்கதிபதி 11-ம் ஸ்தானம் பெற்று 11-ஆமிடத்தோனை லாபஸ்தானாதிபதியும் சந்திரனும் இரண்டாமிடத்திலிருக்கப் பிறந்த ஜாதகன் அதிதிகளுக்கு சோடசதானம்செய்வன். பெருமையைப்பெற்ற அரசர்களிடத்து சன்மானம் பெறுபவனும் நளயோகமென்னும் யோகத்தை யனுபவிப்பான். ஜெனனாதிவயது 9-வருஷத்திற்குமேல் 3-வருஷம் வரையில் நல்ல யோகத்தை அனுபவிப்பான் எ-று.

காணும்லாபாதியத்துச்சன் கண்டசுங்கனுடன்கூடி
வேணுஞ்சென்மாதிகேந்திரன் மேவியிவர்களிருந்திடவே
நாணும்பிரபையோகபல னடத்துந்தியாகிவெகுபோகி
தானுவரசன்சேனதி தனிமூவைந்தினெட்டாண்டே.

(இ-ள்) புகழ்ந்து பேசத்தக்க 11-வீட்டதிபனான லாபாதிபதி உச்சம் பெற்றுசுக்கிரனோடுகூடி ஜெனனலக்கினத்ததிபதியோடுசேர்ந்து 1-4-7-10 இவ்விடங்களிலிருக்கப் பிறந்த ஜாதகனுக்கு பிரபையோகமென்றும் பெயர்.

அதன்பலன்களாவன: மேம்பாடுடைய தீர்க்கச் செயல்களை செய்பவனும் தர்மம் செய்வோனும், போகசுகமுள்ளவனும், விலாசமுள்ள அரசனும், சேனைசைனியங்களுள்ளவனும் 15-வயதுக்குமேல் 8-வருஷம்வரையில் நல்ல யோகசாலியாக விருப்பான் எ-று. (382)

**ஆண்டமதியுங்குருவிருவ ரமர்ந்தேயொன்றிலுற்றிடவே**
**பூண்டவிரண்டோன்லாபத்திற் பொருந்தியிருக்கச்சென்மாதி**
**நீண்டசுபர்களுடன்கூடி நிற்கச்சுகபாயோகபலன்**
**வேண்டும்வருஷநாற்பான்மேல் விளம்புமூன்றுந்தேசாதி.**

(இ-ள்) நவக்கிரகங்களுள் மிக்க புகழாய்ப் பேசும் சந்திரனுங்குருவும் சேர்ந்து ஜெனனலக்கினத்திலிருக்க, ஜெனனலக்கினத்திற்கு இரண்டாம் அதிபதி என்னும் தனாதிபதி 11-ம் வீட்டிலிருக்க இலக்கினாதிபதி சுபக் கிரகங்களுடன் சேரப்பிறந்த ஜாதகன் சுபயோகமென்பதை அனுபவிப் பான். அதன் பலன்களாவன: ஜெனனமான 40-வயதுக்குமேல் 3 வருஷம் நல்ல யோகமுண்டு எ-று.

(வி-ரை) தனாதிபதி லாபமேறுவதால் எந்நாளும் ஆதாயமுள்ளவனாய் இருப்பான் என்றும் கூறுவர். (383)

**சாதிலக்கினாதிபதி யிருந்தங்கிசையோனுடன்சசியும்**
**ஓதுமிவரைப்பத்திடத்தோ னேங்கும்பார்வைநோக்குறவே**
**வாதயூபயோகபலன் மந்திரிமண்டலாதிபதி**
**நீதிநடத்தும்பதினொன்றின் னேரும்வருஷமூன்றினுமே.**

(இ-ள்) ஜெனனலக்னாதிபதி எந்த அங்கிசத்திலிருந்தானோ அந்த அங்கிசாதிபதி சந்திரனுடன்கூடி 10-ஆம் ராசிக்கதிபதி இவர்களைநோக்க யூபயோகமென்றம் பெயர். அதன் பலன்களாவன: அமைச்சனும் மண்ட லாதிபதியும் ஜெனனமான 11-வயதுக்குமேல் 3-வருஷம்வரையில் பூரண யோகத்தை யடைவான் எ-று.

(வி ரை) ஜென்மாதிபதியையாவது ஜென்மாதிபதி இருந்த அங்கிசத் தோனையாவது 10-ஆம் ராசிக்கதிபதி பார்த்தால் எந்நாளும் கஷ்டப்பட்டு தனம் தேடுபவனாவான். (384)

**இனிதாம்லக்கினத்ததிப னிருந்தங்கிசாதிதிரிகோணம்**
**மனிவாயுற்றேகுருசுங்கன் வரவேயிருவர் கடாமிருக்க**
**நனியாற்பத்தினிற்சனியுச்ச மாகிற்றூமயோகபலன்**
**தனியேபத்தொன்பான்மேலே தரணியாள்வனுண்டொன்பான்.**

(இ-ள்) ஜெனனராசி யதிபதி எந்த அங்கிசையிலிருந்தானோ அந்த அங்கிசாதிபதி 5-9 என்னும் திரிகோண ஸ்தானத்திலிருந்து அக்கிரகங்க ளோடு சுபர்களாகிய குருவும் சந்திரனும் சேர்ந்து இருக்க மூயற்சியை யுடைய ராஜ்யஸ்தானத்தில் சனி உச்சனாக இருக்க தூமயோகமென்றும் கூறுவர். அதன் பலன்களாவன: ஜெனனமான 19 ஆண்டுகளுக்குமேல் 9-ஆண்டுகள் வரையில் அரசாளும் தன்மை யுடையவனாவான் எ-று.

(வி-ரை) 10-ல் பாவகிரகம் இருப்பது விசேஷம் என்பார். அதிலும் 10-ல் சனி உச்சம்பெற்றால் எந்நாளும் ராஜசேவை செய்பவனாகவே இருப்பான் என்றும் கூறுவர். (385)

ஆளுமைந்தாமதிபதிதா னைந்தேழொன்பானமர்ந்திடவே
தாளுமரசன்சன்மாதி தானுங்கூடியங்குறிலும்
நீளுஞ்சோமனென்பதனி னிற்கக்கதிரோனுச்சமெனக்
கேளுங்காந்தர்வயோகமெனக் கிடைக்கும்பலன்களுரைத்திடுமே.

(இ-ள்) ஜெனனலக்கினத்திற்கு 5-ஆம் வீட்டதிபதி 5-ல்ஆகுதியாகவும் அல்லது 7-9 என்னுமிடங்களிலாவது இருக்க பொறுமைநிறைந்த குருவும் லக்னாதிபதியுங்கூடி எந்தராசியில் நின்றாலும் அல்லது சந்திரன் பாக்கியம் பெற சூரியன் மேஷராசியில் உச்சம்பெற்று நிற்க காந்தர்வயோகமென்றும் பெயர். அதன் பலன்கள் பின்வருமாறு எ-று. (386)

உரைக்கும்பலவான்பிரசித்த னோக்கும்புத்தியுள்ளவனும்
தரைக்குமரசனுபரணந் தானும்வெகுவாய்ப்பூண்டிடுவன்
துரைக்கும்புத்திசொல்லிடுவன் சுகந்தகீதப்பிரியனென
விரைக்குமறுபத்தாறதன்மேல் விளங்குவருடமெட்டுளதே.

(இ-ள்) யாவரும் கண்டு புகழவும் பிரசித்திபெற்ற பெருமையோடு பலவான் என்று பேசவும் புத்திசாதுரியம் உடையவனும் இப்பூமியில்அரசு புரிபவனும் பூஷணங்களை அநேகம் சம்பாதித்து அணிபவனும்ராஜாக்களுக்கெல்லாம் புத்திசொல்லும் மேம்பாடுடையவனும் இனிமையான சங்கீதங்களின்மேல் பிரியமுள்ளவனும் 66-வயதுக்குமேல் 8-வருஷம் நீண்ட யோகத்தை அனுபவிப்பவனும் ஆவான் எ-று.

(வி-ரை) சந்திரனும் குருவும் ஒன்றுசேர்ந்தால் குருசந்திரயோகமென்றும் அதன்பலன் பிரபலம் கீர்த்தி தனம் அரசனுவானெனக்கொள்க.

உளதேபத்தாமதிபதிதா னுற்றவங்கிசத்தோன்பத்தில்
அளவேசுங்கனுடன்கூட வானராசிக்கதிபதிதான்
கலவாயிருந்தங்கிசநாதன் காணுமுச்சம்பிரத்திமமாம்
இளகாவரசன்பூபால னீரெட்டதன்மேலேழன்ப.

(இ-ள்) பத்தாம் அதிபதி எந்த அங்கிசத்திலிருந்தானோ அந்த அங்கிசாதிபதி தன் சுயக்ஷேத்ரம்பெற்று சுக்கிரனோடு வானகத்தரசனான சந்திரனும் இவர்கள் எந்தராசியில் நின்றார்களோ அந்த ராசிநாதன் உச்சம்பெறப் பிறந்த ஜாதகனுக்கு பிரத்திமயோகமென்றும் எந்நாளும் இகழ்ச்சிவருத்தம் இவைகளை அடையமாட்டாதவனும் 16-வயதுக்குமேல் 7-வருஷம்வரையில் யோகமென்றுஞ் சொல்லுக எ-று.

(வி-ரை) சந்திரன் நின்ற ராசிநாதன் உச்சம்பெற்றால் ஓர் தேசத்து அதிபதியாக இருப்பானென்றுங்கொள்க. (388)

பதிசேர்பாக்கியாதிபதி யிருந்தங்கிசாதிபதிநான்கில்
துதிசேர்நிற்கநான்காதி துலங்குகேந்திரமுச்சத்தில்

**விதியாநிற்கின்முதியோகம் விளங்குமரசர்சன்மானன்**
**கதிசேர்சுகவான்பாக்கியவான் காணுமிருபான்கொற்றவன்மேல்.**

(இ-ள்) உத்தமமான 9-ஆம் வீட்டதிபதி என்னும் பாக்யாதிபதி இருந்த அங்கிசத்தோன் நான்காமிடமும் யாவரும் போற்றப்பட்டநான்காம் வீட்டதிபதி 1-4-7-10 என்னும் கேந்திர ஸ்தானங்களிலும் அல்லது உச்சம் பெற்றுமிருக்கப் பிறந்தவனுக்கு முதியோகமென்றும் பெயர். அதன் பலன்களாவன: பிரகாசியானின்ற அரசர்களால்சன்மானிக்கப்படுவோனும் பூரண செல்வத்தையுடைய சுகவானும் பாக்கியமுடையவனும் 20-ஆண்டு களுக்குமேல் ராஜரீகம் புரிபவனும் ஆவானென்று கூறுவர் எ-று. (389)

**தவமாஞ்சன்மத்துச்சனுறத் தரணிசுதனுமுமுநோக்க**
**நவமாமிடத்தோன்காரியுட னண்ணப்புலவனிதன்பெயரோ**
**கவனசண்டயோகபலன் கருணையரசர்மதிமந்திரி**
**இவனன்வயதுபன்னிரண்டா மிதன்மேன்மூன்றுந்தனபதியே.**

(இ-ள்) ஜெனனலக்கினத்தில் உச்சக்கிரகமிருக்க புதன் அவனை நோக்க 9-ஆம் இடத்ததிபதி சனியுடன் சேர்ந்திருக்கப் பிறந்த ஜாதகன் புலவன் என்னும் வித்துவானாக விருப்பான். இதன்பெயர் சண்டயோகம் என்றும் இதன் பலனைச் சொல்லுமிடத்து அழகுள்ளரூபலாவண்யங்களும் தயாளமுள்ள அரசனும் யூகசாலியும் ஜென்மாதி வயது 12-க்குமேல் 3-வருஷம் யோகமாக இருப்பான் எ-று.

(வி-ரை) முன் சொன்னபடியே ஜெனனலக்கினத்தில் சுக்ரன்உச்சம் பெற்று குரு அங்காரகனுடன் சேர்ந்து பகைபெற்று நின்று சுபக்கிரக மெல்லாம் பகைபெற்று நின்றால் சுபக்கிரகமெல்லாம் பலம்பெற அவனுக்கு சமயோகமென்றும் சொல்வர். (390)

**பதிசேரொன்பானுதிபதி பண்பாய்மூன்றிலிருந்திடவே**
**துதிசேரரசன்முழுநோக்கச் சொல்லுங்கானயோகபலன்**
**அதிசேரூபன்முத்தழக னுடைபணிதியுள்ளவனும்**
**கதிசேர்வயதுபதினாறிற் காணுமூன்றின்முகவசியம்.**

(இ-ள்) பாக்யஸ்தானாதிபதியான 9-ஆம் வீட்டதிபதி 3-ஆம் ராசியில் இருக்க யாவரும் போற்றப்பட்ட குருபகவான் முழுவலிவோடு நோக்க கானயோகமென்றும் சொல்வர். அதன் பலனாவன: தேஜஸ் உள்ளவனும் முகவிலாசமுள்ளவனும் வஸ்திர பூஷண சேர்க்கையுள்ளவனும் ஜெனனாதி வயது 16-ஆண்டுகளுக்குப் பிறகு யாவரும் புகழ்ந்து பேசத்தக்கமுகவிலாச முண்டு எ-று.

(வி-ரை) பாக்யாதிபதி தன் இடத்திற்கு தைரியஸ்தானம் பெற்று குரு பார்த்தால் நீங்கப்படாத செல்வம் உண்டென்றும் கொள்க. (391)

**வசயமைந்திற்குருவிருக்க வைந்தாமாதிசுபரிருவர்**
**நசையாய்க்கூடித்தானிருக்க நாடும்பத்தினிற்சனியுறவே**
**பொசியுமகிடயோகபலன் புடவிவனத்துக்கதிபதியாம்**
**முசியும்வருஷமுப்பதின்மேல் முன்னுமெட்டுமேயரசாம்.**

(இ-ள்) ஜெனனலக்கினத்திற்கு 5-ஆம் இடமென்னும் பஞ்சமஸ்தானத்தில் குருவிருக்க மேற்சொன்ன பஞ்சமஸ்தானாதிபதியோடு சுபகிரகம் சேர்ந்திருக்க உத்யோகஸ்தானமென்னும் 10-ல் சனி இருக்க போற்றத்தக்க மகுடயோகமென்றும்சொல்வர். அதன் பலன்களாவன: அடர்ந்துசெழித்த நந்தவனத்து அதிபதியாயும் ஜெனனமான 30-வயதுக்குமேல் 8-வருஷம் வரையில் ராஜயோகத்தை அனுபவிப்பான் எ-று.

(வி-ரை) 5-ஆம் ராசியில் குருவிருந்தால் புத்திரவிருத்தியும் அம்மான் குடும்ப விருத்தியும் உண்டென்றும் கொள்க. (392)

வேறு

பனிரெண்டுராசியென்னும் பதிலக்கினமாகக்கொண்டு
இனியதாய்தந்தைபுத்திர ரிசைமனையுடன்வந்தோர்கள்
தனியுமாமத்தாயங்க டனலாபவாகனங்கள்
முனியும்பாக்கியகர்மங்கண் முதற்பலன்மொழிந்திடீரே.

(இ-ள்) 12-இராசிகளையும் நவகோட்களின் சொந்த வீடெனக்கருதி லக்கினம் சரீரம் இரண்டாமிடம் குடும்பம் 3-ஆம் இடம் சகோதரம் நான்காமிடம் அன்னை 5 ஆமிடம் அம்மான் ஆதலன், 6-ஆமிடம் சத்ரு, 7-ஆமிடம் களத்திரம் 8 ஆமிடம் ஆயுள், 9 மிடம் தந்தை, 10-ஆமிடம் கர்மம் 11-ஆம் இடம் லாபம், 12 ஆமிடம் விரயம் என்னும் அந்தந்த ராசிக்குடையவர்களே ஸ்தானாதிபதி என்றும் ஆராய்ந்து சொல்லுக எ-று. (393)

பாக்கியத்திறையுங்காமத் தாதியும்லக்கினத்தோனும்
தாக்கியேகூடினுனுந் தயவுடனொன்றிற்கொன்று
நோக்கியகண்ணுற்ருலு நுண்ணியவறிவுகேள்வி
வாக்குகள்செலுத்துங்கோவாய் மண்ணினில்வாழ்வன்கண்டீர்.

(இ-ள்) பாக்கிய ஸ்தானாதிபதியும் கர்மஸ்தானாதிபதி லக்கினாதிபதி இம்மூவரும் ஒன்றுகூடி இருந்தாலும் அல்லது ஒருவர்க்கொருவர் நோக்கிலும் அந்த ஜாதகன் நிறைந்த அறிவும நுட்பமான புத்தியோடு கேள்வி செலுத்தும் மன்னனாகி வாழ்வானென்று சொல்வாய் எ-று.

(வி-ரை) பத்தாம்வீட்டோனை லக்கினாதிபதி பார்த்தால் திரண்ட யோகவானும் ராஜசேவையுள்ளவனுமாக இருப்பன். (394)

ஒன்பதற்கொள்பதேனு மொருபத்திற்குப்பத்தேனும்
தன்பதியைந்துமேழுந் தானந்தவீட்டோன்தன்னே
டன்புடன்லக்கினாதி யணுகிடவலதுநோக்கத்
துன்பமற்றன்றிச்செல்வஞ் சூழ்மன்னனுவன்சொல்லே.

(இ-ள்) ஒன்பதாம் ராசிக்கு 9-ஆம் அதிபதி ஸ்தானமாவது பத்தாம் ஸ்தானமாவது லக்கினம் 5-7 இந்த ஸ்தானங்களுக்கு உடையவராவது லக்கினாதியை கூடினாலும் பார்த்தாலும் துன்பம அடையப்படமாட்டாத செல்வமுள்ளவனும் யாவரும் தன்னைவந்து சூழ்ந்திருக்கத்தக்க அரசன் ஆகுவனென்று சொல்வாய் எ-று. (395)

**ஆறுடனேழாமாதி யவருடன்லக்கினுதி**
**பேறுடன்கூடினுனும் பெருமையாய்க்கண்ணுற்றுனும்**
**வீறுடன்மிக்கசெல்வ மேன்மையாம்பாக்கியங்கள்**
**சேறுசெய்திருந்துவாழ்வன் செகத்துக்குமன்னனுவன்.**

*(இ-ள்) ஜெனனலக்கினத்திற்கு 6-ஆம் வீட்டதிபதியும் 7-ஆம் வீட்டதிபதியும் அவர்களோடு லக்கினுதிபதியுங் கூடி இருந்தாலும் அல்லது பெருமையோடு நோக்கினுலும், அந்த ஜாதகன் மேன்மையான தனங்கள் உள்ளவனும் பாக்கியசாலியும், பூமியை உழுது பண்படுத்தி வாழ்பவனும், இப்பூமிக்கு ஓர் மன்னனுகவும் இருப்பானென்று சொல்வாய் எ-று,* (396)

**கேந்திரத்தானத்தாதி திரிகோணத்தோனுங்கூடிச்**
**சேர்ந்திடவலதொன்றுக்கொன் றிகழவேநோக்கினுலும்**
**பார்த்தவர்திசைகடன்னிற் பூணுமந்திரியோகங்கள்**
**சார்ந்திடுஞ்சுத்தமாகச் சகலபாக்கியமென்றேதே.**

*(இ-ள்) ஜெனன லக்கினத்திற்கு 1-4-7-10 இவ்வீட்டிற்குடையவர்களும், திரிகோணுதிபர்களான 3-5-9 இவ்வீட்டிற்கு உடையவர்களோடு சேர்ந்தாலும் பார்த்தாலும் அவரவர்களுடைய திசை புக்தி வரும்போது சகல யூக மந்திரி யோகமென்றும் எல்லா பாக்கியங்களும் நன்மையும் தானுகவே யுண்டாகும் எ-று.* (397)

**வாகனுதியுங்கோணத்தி னுதியுங்கூடமற்றும்**
**தாகமாமொன்றுக்கொன்று சார்ந்துடன்பார்ப்பாராயின்**
**ஏகமாய்ப்பதுமத்துற்ற விலக்குமியோகமென்பர்**
**போகவான்சகலபாக்கியம் பூணும்பூபாலன்கண்டீர்.**

*(இ-ள்) நான்காமிடத்தோனுன வாகன ஸ்தானுதிபதியும் திரிகோண ஸ்தானுதிபதியும் இருவரும் ஒன்றுசேர்ந்தாலும் அல்லது ஒருவர்க்கொருவர் நோக்கினுலும், எல்லா வல்லமையும் சவுக்கியங்களும் தரத்தக்க லக்ஷிமி யோகமென்றும் கூறுவர். அதன் பலன்களாவன: ஸ்திரீசுகத்தை அதிகம் இச்சிப்பவனும்' எல்லாவித சவுக்ய சம்பத்துமுடைய மன்னனுகுவன் எ-று.*

*(வி-ரை) கேந்திராதிபதியோடு திரிகோண ஸ்தானுதிபதி சேர்ந்தாலும் பார்த்தாலும் பூரண ஐஸ்வரியவானுக இருப்பான்.* (398)

**தனபதிபாக்கியத்தோன் லாபத்தோன்சந்திரகேந்திரம்**
**தனின்மிகவிவர்களாறே சார்ந்திடப்பன்னென்றைந்தும்**
**வினவியகுருவினுட்டி வீடெனிற்செல்வமுள்ளன்**
**புனையிழையாளேலட்சுமி யோகமாய்ப்புகலுவாயே.**

*(இ-ள்) ஜெனன லக்கினத்துக்கு இரண்டாமிடமான தனுதிபதியும் பாக்கியாதிபதியும் லாபாதிபதி ஆகிய இவர்கள் சந்திர கேந்திரம் பெற்று இருந்தாலும் மேற்சொன்ன ராசிக்குடையவர்கள் 11-5 இவ்விடங்களில் குரு வீடாக இருந்து அதில் சேர்வார்களேயானுல் செல்வமுள்ளவனும், நீண்ட பதக்க முதலிய பொன் ஆபரணங்களை பூண்டிருக்கும் பெண்ணே! லக்ஷிமி யோகத்தைப் போலவே கூறுவாய் எ-று.* (399)

ரண்டினிற்கதிபன்பாக்கியந் தன்னிலும்லாபந்தன்னில்
தண்டிடாப்பாக்கியாதி தானுமிலாபத்தாதி
ஒண்டொடியுடனின்ருலு முயராஜயோகமூன்று
கொண்டநற்கிரகஞ்சொந்தக் கிரகமுற்றிருக்கின்மன்னும்.

(இ-ள்) ஜெனன லக்கினத்திற்கு தனுதிபதி 9-ஆம் ராசியிலும் பாக்கிய ஸ்தானுதிபதி 11-ஆம் ராசியிலும் லாபஸ்தானுதிபதி தனித்து மிருக்கப் பிறந்த ஜாதகன் மேன்மையான அரச யோக பலனை அனுபவிப்பான். இதோடு சுபக்கிரகமான சந்திரன் புதன் குரு சுக்கிரன் இவர்கள் சுய க்ஷேத்திரம் பெற்றிருந்தால் மன்னனுகி வாழ்வன் எ-று. (400)

யோகபலன் முற்றிற்று.

---

# தரித்திரயோகம்



வேறு

கண்டசன்மலக்கினங்கள் காரியமனையாயதிற்சோமன்
மண்டிருக்கவவன்றனக்கு வளர்பன்னென்றிலரசனுறக்
கொண்டதரித்திரங்கடகம் குருலக்கினமாயதிற்காரி
மிண்டியிருக்கப்பன்னென்றில் வேந்தனிருக்கத்தரித்திரமே.

(இ-ள்) ஜெனனலக்கினம் மகரம் அல்லது கும்பமாக இருந்து அதில் சந்திரனிருக்கவும் சந்திரனுக்கு 11-ல் குருவிருக்கப் பிறந்தவன் தரித்திர யோகமுடையவனுக இருப்பன். குருலக்கினமாகிய கடகத்தில் ஜெனன மாகில் அதில் சனிசேர சனிக்கு 11-ல் குருவிருக்கப்பிறந்தவனும் தரித்திர முள்ளவனுகவே இருப்பான் எ-று. (401)

மேவுங்குடும்பந்தனிற்பாவர் வெகுவாய்ப்பலன்களன்றியுறப்
பாவக்கிரகந்தான்பார்க்கப் பரவுஞ்சன்மங்குடும்பத்தின்
கோவும்பலன்களற்றிருக்கக் குறைவேபடைத்துத்தானுண்ணத்
தூவுமன்னங்கிடையாமற் சோம்பித்தரிப்பன்சுகமில்லான்.

(இ-ள்) ஜெனனலக்கினத்திற்கு இரண்டில் பாவக்கிரகங்கள் பலம் குறைந்திருக்க குடும்பத்தைப் பாவக்கிரகங்கள் நோக்குறவும் ஜெனன லக்கினுதிபதியும், குடும்பாதி என்று சொல்லும் இரண்டாம் வீட்டோனும் பலமற்றிருக்கப் பிறந்தவன் அவமானமுள்ளவனும் சாப்பிடவும் பதார்த்தம் இன்றி சோம்பேரியாகத் திரிவான் எ-று.

(வி-ரை) குடும்பாதி நீச்சம்பெற்றுவது மேற்சொல்லியபடி பலங் குறைந்தும் இருந்தால் அவன் குடும்பம் க்ஷீணித்துப் போகும் என்றும் கொள்க. (402)

**தரிக்குஞ்சன்மலக்கினத்துஞ் சசிதானருந்தலக்கினத்தும்**
**பரிக்குமுபயபாரிசத்தும் பாவரிருக்கத்தரித்திரமாம்**
**விரிக்குமுன்னோர்பாரிசத்தின் மேவிலுடனேதரித்திரமாம்**
**தெரிக்கும்பின்னேயுறில்பாலி யத்திற்றரித்திரஞ்சேரும்.**

*(இ-ள்) ஜென்மலக்கினத்திலும் சந்திரலக்கினத்திலும் உபயலக்கினங்கள் என்னும் மிதுனம் கன்னி தனுசு மீனம் இவைகளில்பாவர்களிருந்தால் தரித்திரமுண்டாகும். ஜெனனலக்கினத்திற்கு முன்பக்கத்தில் பாவக்கிரகங்களிருந்தால் ஜெனனமானபோதே தரித்திரமுண்டு. பின் பக்கங்களில் பாதகோட்கள் இருந்தால் வாலிப காலங்களில் தரித்திரம் உண்டென்றும் சொல்லுக எ-று.* (403)

**சேருஞ்சன்மகேந்திரத்தில் திரிகோணத்திற்குடும்பத்தில்**
**மேருவியத்திற்பாவர்நிற்கின் மிகவுந்தரித்திரயோகம்**
**வாருஞ்சன்மலக்கினத்தின் மதியுஞ்சனியுமருவுகினும்**
**நேருஞ்சன்மந்தனிற்பாவர் நிற்கிற்றரித்திரநிறையும்.**

*(இ-ள்) லக்கினகேந்திரத்திலும் திரிகோண ஸ்தானங்களிலும் குடும்ப ஸ்தானத்திலும் மேன்மையுடைய வியமோக்ஷ விரயஸ்தானத்திலும் பாவ கோட்கள் நிற்க அந்த ஜாதகனுக்கு அதிகமான தரித்திரயோகம் உண்டு. ஜெனனராசியில் சந்திரனும் சனி ஆகிய இருவரிருந்தாலும் தரித்திரம் வந்தணுகுமென்று சொல்லுவார் எ-று.*

*(வி-ரை) ஜெனனலக்கினத்தில் பாவக்கிரகங்கள் இருந்து 6-8-க்கு உடையோனும் தீயனும்ப் பார்த்தால் அந்த ஜாதகன் தீயச் செயல்களையே செய்வான் என்றும் கொள்க.* (404)

**நிறையுமிரண்டாமிடத்திற்கோ ணீங்கமூன்றதாமிடத்தில்**
**உறையுங்கிரகமுண்டாயி னேதுங்கேமுத்திரயோகம்**
**குறையும்பலனேவையங்கைக் கொண்டேயுண்ணுங்குறைவுடையோன்**
**நறைசேர்குழலாயிரண்டிற்கோ ணண்ணிலில்லைநல்குரவே.**

*(இ-ள்) ஜெனனலக்கினத்திற்கு இரண்டாம் ராசியில் கிரகமின்றி 3-ஆம் ராசியில் மாத்திரம் கிரக மிருக்குமானால் கேமுத்ர யோகமென்றும் சொல்வர். அதன் பலன்களாவன: இப்பூமியிலுள்ள யாவரையும் பிச்சை கேட்டு சாப்பிடத்தக்க இழிவுடையவனுவான். லக்கினத்திற்கு இரண்டாம் ராசியில் கிரகமிருக்குமானுல் இவ்விதமில்லை என்றும் சொல்லுக எ-று.*

*(வி-ரை) மாலுஞ் சனியு மறவுடனே*
*மதித்த மேடந் தனிலுதித்தோன்*
*சோலுங் குடுவை கைப்பிடித்து*
*குறிப்பாய் ஊரி லிருப்பனவன்*
*காலும் மெத்தக் கோணலுமாய்*
*கண்ணுங் கொஞ்சம் தெரிந்தவனும்*
*நூலும் மெத்த நினைந்தவனாய்*
*நுண்ணுங் கந்தை போர்த்தவனே.*

(இ-ள்) மேஷ லக்கினமாகவிருந்து புதனும் சனியும் 3-ஆமிடத்திருக்கப் பிறந்தவன் கால் கோணலுள்ளவனும் கந்தை பொந்தைகளை யணிபவனும் தான் குறித்த இடத்தில் வாசஞ்செய்பவனும் ஆவானெனக் கூறுவர்.

குரவார்மதிக்குமுன்பின்னுங் குணமநல்லோர்குறுகாரேல்
வரவான்மதியின்கேந்திரத்தின் மருவினுலுமிருபுறமும்
உரவோர்தாமில்லாதிருந்தா லுண்டாங்கேமுத்திரயோகம்
திரவேற்கண்ணாய்வெகுபாவஞ் செய்தார்க்கிந்தசெயலாமே.

(இ-ள்) வளர்பிறைச் சந்திரனாகவிருந்து அவனுக்கு வலம் இடங்களில் சுபக்கிரகமில்லாதிருந்து சந்திரன் நின்ற ராசிக்கு கேந்திரஸ்தானங்கள் என்னும் 1-4-7-10-ஆம் இடங்களிலும் இருபுறமும் உறவுகிரகம் இல்லாதிருந்தாலும் அந்த ஜாதகனுக்கு முன்சொன்ன கேமுத்ரயோகமே சம்பவிக்கும். கூர்மையான கண்களை யுடையவளே! வெகுபாவம் செய்தவர்களுக்கே இந்த யோகம் உண்டென்று சொல்வாய் எ-று.

(வி ரை) நஞ்சும் ஜென்மாதி பதியை நோய்மதியைத் தான்பார்க்க
கொஞ்சு ரிடபம் தனிலுதித்தோன் கூறும் செல்வம் பறந்திடுமே
பஞ்சு பொதியைத் தானெடுப்பன் பகலும் இரவும் திரிந்திடுவன்
வஞ்சமெத்த செய்திடுவன் வகையாய் பெண்ணே உரைசெய்யே.

(இ-ள்) இடபலக்கினமாக இருந்து க்ஷீணசந்திரன் லக்கினத்தைப் பார்க்கப் பிறந்தவனுக்கு தன் பூர்வோத்ர செல்வம்யாவும் அழிந்துபோகும். தான் பஞ்சு மூட்டையாக கந்தல்களைச் சுமந்துகொண்டு பகல் இ வென்று பாராது திரிபவனும் வஞ்சம் மோசம் செய்பவனென்றும் அழகுவாய்ந்த பெண்ணே! சொல்வாய் எ-று. (இதன்படி இலக்கினத்திற்கு ஏற்றவாறு கூறுவது நலம்.) (406)

செயலாருடலைச்சனிநோக்கத் திகழ்மேஷத்திற்சேய்மதியும்
இயலாயிருக்கப்பிறந்தவனு மிரந்தேயுண்பனெந்நாளும்
பயிலார்சென்மமெட்டிடத்தைப் பங்குபாதன்பார்த்திடினும்
கயலரர்விழியாய்சீர்கேடன் காணுமெனவேகருதிடுமே.

(இ-ள்) ஜெனன லக்கினத்தைச் சனிபார்க்க மேஷத்தில் குஜனும் சந்திரனும் சேர்ந்திருக்க ஜெனித்த ஜாதகன் எந்நாளும் பிச்சை எடுத்தே புண்ணும் தன்மை யுடையவனாவான். ஜெனனலக்கினத்தையும் அஷ்டமஸ்தானத்தையும் சனிநோக்கப் பிறந்த ஜாதகன் கயற்கெண்டைகளையொத்தவளே! அவன் எவ்வித சுகமுமில்லாதவனும் துன்பமுடையவனும் ஆவானெனக் கூறுவாய் எ-று. (407)

மேலாங்கிரகமெட்டுமொரு வீட்டிலொன்றியிருந்திடவே
சாலுங்கோள்கன்யோகமிது சாற்றுஞானிதரித்திரனும்
மாலாயிரண்டுவீட்டிலுற வண்மைதான்கையோகங்கள்
நீலாய்மந்தனிட்டுரே னில்லானவனேலச்சையிலான்.

(இ-ள்) ஜெனனராசி யதிபனைத் தவிர மற்றைய 8-கிரகங்களும் ஏக ராசியில் சேர்ந்திருக்குமாகில் கோள்யோகமென்றும் பெயர். அதன்பலன்

திடமான சந்நியாசியும் வறுமையுடையோனுகவும் இருப்பான். 8-கிரகங்களும் இரண்டே வீட்டில் அமர்ந்திருந்தால் தன் கஷ்டத்தைக்கொண்டே யோகம் வருமென்றும் அந்த ஜாதகன் எவ்விதத்திலும் தொந்தரவுமுதலிய கஷ்டங்கள் இல்லாதவன் என்றும் வியாகூலம் இல்லாதவனென்றும் சொல்லுக எ று. (408)

ஆறுன்மூன்றிராசிதனி லணுகிக்கிரகமிருந்திடவே
தானேசூலயோகமதாஞ் சரீரம்தன்னிற்காயவடு
மானேசூலத்திற்பாதகந்தான் வருமேயிவன்றன்கரமதனுல்
ஊனப்படுத்துந்தரித்திரவா னுதவான்றருமருக்கின்வசனம்.

(இ ள்) ஜெனனலக்கினமுதல் 3-வீடுகள் வரையில் கிரகமிருந்தால் சூலயோகமென்றும் அதன் பலனைக் சொல்லுமிடத்து தன் சரீரத்தில் ஆயுதங்களால் உண்டாகும் அடையாளம் உள்ளவனும் தன் குலாசார விருத்தியைக்கெடுக்கும் பாதகனும் அந்தப் பாவச்செய்கை அவன் கையினுலேயே செய்குதலும் ஊன காரியங்களைத் திடமாய் செய்பவனும் தரித்திரமுடையவனும பெரியோர் முதலிய ஞானிகளிடத்து இன்சொல் கூறுபவனும் ஆவான் எ-று.

(வி-ரை) மேற்சொன்னபடியே லக்கினமுதல் மூன்றுவீடு வரையில் சுபக்கிரகங்கள் நின்று அவர்களை கேந்திரத்தோர் பார்வைபெற மேற்சொன்ன தோஷம் கிடையாது. (409)

வாசமேழெட்டொன்பதுபத்தின் மருவியிருக்கிற்றிரியோகம்
நிசமாயீனத்தொழில்புரிவன் சோம்பநீசநடையுடையன்
தசமேலாபமொன்றுவியந் தன்னிற்கிரகந்தாமுறவே
வசையாயீனத்தொழில்புரிந்து மன்னுசெலவுகொஞ்சமதாம்.

(இ-ள்) ஜெனனலக்கினத்திற்கு 7 8 9-10 இவ்விடங்களில் மாத்திரம் கிரகமிருந்தால் திரியோகமென றும் உண்மையான அவமானகாரியங்களைச் செய்பவனும் சோம்பலுள்ளவனும் நீச்சத்தொழில் என்னும் தொழிலும் கேவல நடக்கையுடையவனும் 10-11-1-12 இவ்விடங்களில் மாத்திரம் கோட்களிருந்தால் கேவலமான தொழில்களைப் புரிந்து குடும்பமுதலாகிய செலவுகளைச செய்து செலவு கொஞ்சம் உடையவனுமாவான். (410)

தாமேசன்மஞ்சதியுறவே தானுங்கேந்திரங்காரியுறில்
ஆமேவியத்திற்குருவிருக்கி லையமெடுப்பனெனப்புகல்வர்
தோமேவியமாலெட்டதனிற் ளுடர்சன்மா திானிருக்கத்
தீமைபுரியுங்கோள்கூடத் தேசமெலாநடந்திடுவன்.

(இ-ள்) ஜெனனலக்கினத்தில் சந்திரனிருக்க சனி 1-4-7-10என்னும் இடங்களிலிருக்க விரயஸ்தானத்தில் குருவிருக்கப் பிறந்த ஜாதகன் யாசகமெடுத்துச் சாப்பிடுவானென்று சொல்லுக. ஜெனனலக்கினுதிபதி 6-8-12 இவ்விடங்களில் இருந்தால் அவனைப் பாவக்கோட்கள் நோக்கமுற்று மிருந்தால் அந்த ஜாதகன் இத்தேச முழுமையும் சுற்றுபவனுகுவன் எ-று. (411)

நடக்குந்தனபாக்கியமெட்டைந் தேனுநால்வீட்டிற்பாவருறக்
கொடுக்கும்வெகுவாய்த்தரித்திரங்கள் கூறுமூன்றுமனையாயின்

**கொடுக்குமுக்காலிரண்டிலரை குலவுமொன்றிற்காலாகும்
விடுக்குமிதனிலுறப்பாவர் விரவியிருக்கிற்றரித்திரமே.**

(இ-ள்) தனம் என்னும் இரண்டாமிடத்திலும் பாக்யமென்னும் 9ஆம் வீட்டிலும் 8-ஆமிடமான ஆயுள் ஸ்தானத்திலும் 5-ஆமிடமென்னும்புதிர ஸ்தானத்திலும்பாவக்கிரகங்கள் சம்பவித்திருக்க அந்த ஜாதகன்தரித்திரத்தையே அனுபவிப்பான். 3-ஆம் வீட்டோனும் அசற்கு அவ்வீராசிக்கு மூன்ரும் வீட்டோனும் ஒருவனுகில் நான்கில் 3-பாகம் தரித்திரத்தை அனுபவிப்பான். தனஸ்தானத்தில் இருந்தால் நான்கில் இரண்டுபாகம் தரித்திரமும் இலக்கினத்தில் இருந்தால் நான்கிலொருபாகம் தரித்திரத்தையும் அடைவான் எ-று. (412)

**மேவுமொன்பானதிபதியை விடவெட்டாதிபலவாறுய்த்
தாவியிருக்கத்தரித்திரமே தபனனீசாங்கிசந்தன்னில்
மேவியிருக்கலாபாதி விரவத்தரித்திரயோகம்
ஏவும்விழியாய்சோதிடத்தோ ரியம்பும்பலன்களிவையாமே.**

(இ-ள்) ஒன்பதாம் வீட்டதிபதியோடு அஷ்டமாதி பலம்பெற்று அவனோடு சேர்ந்திருந்தால் தரித்திரமேயுண்டாகும். சூரியன் நீச்சம்பெற்று அவன் 11-ஆம் வீட்டோனுடன் கூடியிருக்க தரித்திரமே யுண்டாகுமென சோதிடவல்லவர்கள் கூறுவார் எ-று. (413)

*தரித்திரயோகம் முற்றிற்று.*

---

## அங்கவீனம் அறிதல்



*வேறு*

**கண்டபன்னிரண்டாம்வீட்டோன் கனத்திரிகோணமேறிக்
கொண்டகேந்திரத்தினிற்க வவனோடுகூடிராகு
அண்டியேநிற்கப்பாவ ரவர்களைப்பார்த்திருக்க
எண்டிசையுலகிலங்க வீனனுயிருப்பனென்னே.**

(இ-ள்) ஜெனனலக்கினத்திற்கு 12-ஆம் வீட்டதிபதி மேன்மைபெற்ற திரிகோண ஸ்தானங்கள்பெற்று நின்ருலும், கேந்திரங்களில் நின்ருலும், அவனோடு ராகு சகிதம்பெற, அல்லது மற்றுமுள்ள தீயகிரகங்கள் நோக்கினும் சேர்ந்தாலும் அந்த ஜாதகன் இவ்வுலகத்தில் சரீரப் பழுதுடையவனாக இருப்பானென்று கூறுவாய் எ-று.

(வி-ரை) கடகலக்கினமாக இருந்து கலைகளுள்ள சந்திரனை குரு பார்த்தால் கூனுடையவனும், சனி மீனராசியைப்பார்த்தாலும் கூனுள்ளவனும் என்றபடி. மேலேசொன்ன சரீரப்பழுது என்பதை எங்கெந்த கிரகங்கள் மேலே சொன்னபடி இருந்ததோ அதற்கேற்றவாறுமேஷமாகில் தலை, ரிஷபமாகில் முகம், மிதுனமாகில் கழுத்து கடகமாகில் தோள் சிங்கமாகில் மார்பு, கன்னியாகில் பக்கம், துலாமாகில் முதுகு, விர்ச்சிகமாகில் பீஜம், தனுசாகில் தொடை, மகரமாகில் முழங்கால், கும்பமாகில் கணுக்கால்

மீனமாகில் பாதமென்றும், மேற்சொன்ன ஒவ்வொரு ராசிநாதர்களுமிருக்க சுபாசுபம் தெரிந்து சொல்வதுடன் நக்ஷத்திர வரிசையும் ஆராய்ந்துசொல்லுதல் வேண்டும். (414)

**சோமனுறிற்பன்னிரண்டில் றுடர்ந்தேநிற்கவோரிரண்டில்**
**ஆமேசெவ்வாய்தானுறவே யவரைப்பாவர்மிகநோக்கப்**
**போமாமங்கவீனமெனப் புகல்சேர்நல்லோர்பார்வையுறில்**
**தீமையில்லைத்தீர்க்காங்கஞ் செப்பாய்பலனீசிந்தித்தே.**

(இ-ள்) ஜெனனலக்கினத்திற்கு ஆறிலாவது பன்னிரண்டிலாவது சந்திரனிருக்கவும், தனமென்னும் இரண்டாம் ராசியில் குஜன்நிற்கவும், அவனைத் தீய கிரகங்கள் பார்க்கவும் பிறந்த ஜாதகன் சரீரப்பழுதுள்ளவனுகவே இருப்பான். மேல் எழுதியபடியே கிரகமிருந்தாலும் சுபகோட்கள் பார்வைபெறில் துன்பமில்லையென்றும் குறைந்த அங்கமுள்ளவனென்றும் சொல்லுவாய் எ-று.

(வி-ரை) மீனம் கடகம் விர்ச்சிகம் ஜெனனலக்கினமாக சந்திரனோடு தீயகிரகங்கள் நிற்கப்பிறந்தவன் செவிடனுவான். மகரலக்கினமாக சூரியன் சந்திரன் சனி இவர்கள் லக்கினத்தைப் பார்த்தால் குள்ளனென்றும் சொல்லுக. மேலே சுலோகத்தில்சொன்னபடி 6-ல் சந்திரனிருந்து இரண்டில் குஜனிருக்கவும் தீயகிரகமும் பார்க்கின் அங்கவீனன் என்றபடி.

ஆறுகும் வீட்டினிலே அம்புலிதான் நிற்க
நீறுகும் கரும்பாம்புச் சேரப் பார்க்க
மாறுவன் வையகத்தில் வைசூரி யாலே
வேறுகும் அவயவம் தான்விரித்துச் சொல்லே.

(இ-ள்) 6-ல் சந்திரனிருந்து ராகு பார்ப்பானுகில் வைசூரி மூலமாய் அவயவபின்னம் என்று சொல்வதுடன் இவ்வாறே ஒவ்வொரு கிரகதிற்கு ஏற்றவாறும் கூறுக. (415)

**சிந்தைகாரிகுருபரிதி செவ்வாய்ராகுகேந்திரத்தில்**
**அந்தமுடனேதிரிகோணத் தனுகாதிருக்கப்பலனில்லார்**
**வந்தாலங்கவீனமுறு மருவும்தேசசஞ்சாரம்**
**நொந்தேபுதல்வர்நாசமுறு நொய்யன்மிடியன்கண்டீரே.**

(இ-ள்) பலவித சிந்தையையுடைய சனி குரு சூரியன் அங்காரகன் ராகு இவர்கள் திரிகோண ஸ்தானங்களன்றி 1-4-7 10 என்னும் கேந்திரங்களே பெற்றிருந்தால் அப்பலன் உள்ளவர்களும் அங்கப்பழுது உடையவர் ஆவார். அன்றியும் அந்நிய தேசபிரயாணம் செய்பவரும் புத்திரநாசம் உடையவரும் அநேகவிதமான கஷ்டம் இடி துன்பம் இவைகளை யுடையவரும் ஆவார் எ-று.

(வி-ரை) மேற்கூறிய கிரகங்கள் யாவரும் முக்கிய அங்கங்களுக்கு உடையவராதலால் ஒவ்வொரு லக்கினத்திற்கும் 8 ஆம் பாவகத்தில் 474-ம் செய்யுள்முதல் 754-ஆம் செய்யுள்வரை சொல்லியபடி சுபன் அசுபன் மாரகன் சமனென்று பிரிக்கப்பட்டிருப்பதால்,

"கொடியோர்கள் கேந்திரத் தோராயின்
கொடார்கள் கொடிய பலன்"

என்றபடி அசுபர்கள் கேந்திரம்பெற்றால் அசுபபலனும் கொடியவர் கேந்திரம் பெற்றால் நற்பலனும் தருவாரென்றும் ஒவ்வொரு லக்கினத்திற்கும் அசுபர்களாகி கேந்திரம்பெற்றால் அசுபபலனைத் தருவாரென்றும் தரித்திரம் உண்டாகுமென்றும் அசுபனாகி கேந்திரம்பெற்றால் யோகபடலத்தில் சொல்லியபடியே யோகம் அனுபவிப்பானென்றும் கூறுவது நலம். (416)

வேறு

இந்துவோடசுபர்கூடி ஈரெண்டெய்திற்கள்ளன்
முந்திரண்டிற்சேய்மாந்தி முழுப்பாவருநிற்றீநோயன்
அந்தமறப்பொய்யன்பெண்டிர் வியபிசாரியாண்மையில்லான்
சிந்தனைவியபிசாரத்த னிசமிலான்றீயவூணன்.

(இ-ள்) சந்திரனோடு அசுப கிரகங்கள் சேர்ந்து சுகஸ்தானமாகிய நான்காமிராசியில் இருப்பாரானால் அந்த ஜாதகன் திருடனாக இருப்பான். வாக்குஸ்தானமாகிய இரண்டாம் க்ஷேத்திரத்தில் அசுபகிரகங்களிருந்தால் அந்த ஜாதகன் துர்வியாதிகளை உடையவனும் நிஜமில்லாது பொய்பேசுபவனும் பெண்களுக்குப் பணிவிடை செய்பவனும் ஆண்மைத்தன மில்லாத பேடியும், பற்பலவிதமான எண்ணங்களை யுடையவனும் கொஞ்சம் கெட்ட உணவுகளைப் புசிப்பவனுமாகுவன் எ-று.

(வி-ரை) சந்திரனோடு அசுபர் சேர்ந்தாரென்பதை சனி ராகு கேது இவர்கள் சேர்ந்து சுகம் என்னும் நான்காம்ராசியிலிருந்தால் சந்திரன் மனக்கர்த்தா. சனி ராகு கேது இவர்கள் நீச்சகிரகமாகையால் திருடனென்று சொல்லப்பட்டது. மேலே சொன்னபடியே கிரகமிருந்து ஆக்ஷி உச்சமாயுள்ள குருபார்த்தால் மேற்கண்டதோஷம் நிவர்த்திடாம். குடும்பத்தில் அலியும் பேடியுமான குஜனும் குளிகனும் நின்றால் பேடி என்பதற்கு இணங்க போகஸ்தானாதிபதியும் நீச்சமோ அல்லது மறைவிடமோபெற்றால் பேடி என்று ஆராய்ந்து சொல்லுக. (417)

வேறு

விடுமிலக்கின மீதிற்குசனுற
உடனிரண்டிடத் தோனுமாறுதிபன்
திடமுடனிவர் சேர்ந்திடிற்காதறும்
கொடியபாம்பிவ ரோடுறிற்கொய்படும்.

(இ-ள்) ஜெனனலக்கினத்தில் செவ்வாய்நிற்க தனஸ்தானாதிபதியும் சத்ருரோகவீட்டதிபனும் ஒன்றுசேரப்பட்டிருந்தாலும், அந்த ஜாதகனுக்கு காது அறுபட்டுப்போம். அல்லது அவன் சரீரம் இருபிளவாகும் எ-று.

(வி-ரை) குடும்பாதிபதியும் ஆறும்வீட்டதிபதியும் ஒன்றுசேர்ந்தால் காதறபடும் என்பது பாட்டின் கருத்து. அதிலும் ஆறும்வீட்டதிபதி அசுபனாகவிருந்து ஆறிலேயே ஆக்ஷிபெற்று இரண்டில்நின்ற அங்காரகனை முழு நோக்குடன் நோக்கினாலும், இரண்டாம்வீட்டை லக்கினாதிபதிபார்த்தாலும் மேற்சொன்ன தோஷம் கிடையாது. (418)

அங்கவீனம் முற்றிற்று.

# நித்திய பலன்



*வேறு*

செங்கதி ருறுநட் சத்திர முதலாய்த்
திங்கள்நட் சத்திர மட்டும்
சேரவே யெண்ணி யிரண்டினிற் பெருக்கித்
தெரிந்தவன் சன்மநாண் முதலாய்ப்
பொங்கமா யற்றைநட் சத்திர மளவும்
பொருந்திய தொகையுடன் வாரம்
போதமு வகையுங் கூட்டியொன் பதினிற்
பொற்புடன் கழித்த சேடங்கள்
இங்கிதஞ் செறியு மிரவிசந் திரன்சே
யிராகுபொன் சனிபுதன் கேது
இனியசுக் கிரனு மகாதிசைப் படியே
யிசைதொகை பாதிநா ழிகையாம்
அங்கது நித்திய பலனென்ப சொல்வ
ரவைதனில் வரும்பல பாவம்
அருண்மகா திசையின் பலனது போல
வறிந்துநித் தியபல னுரைமின்.

(இ-ள்) *ஜோதிஷ சாஸ்திரத்தின்படி கதிரவன் பன்னிரண்டு வீடுகளிலும் முப்பதுநாள் உறைகின்றவன். அக்கதிரவன் தங்கிய ராசியின் நக்ஷத்திரத்திலிருந்து சந்திரன் தங்கியிருக்கும் நக்ஷத்திரம்வரையில் கணக்கிட்டு அந்தத் தொகைகள் இரண்டையும் கூட்டி, அப்படி வந்த முழு எண்ணை இரண்டால் பெருக்கவேண்டும். அவ்வண்ணம் பெருக்கிக்கண்ட தொகையுடனே ஒருவன் தான் பிறந்த ஜனனகாலத்திய நக்ஷத்திரத்தை முதலாக வைத்து, நடைபெறும் வாரத்தை இது என்று எண்ணி, அந்தத்தொகையை ஒன்பதுபேருக்குக் கொடுத்தால் அதில் மிகுந்த தொகையையே ஒவ்வொரு கிரகங்களுக்கும் பாதியாகக் கொள்ளவேண்டும். பின்னர் கிரகங்களின் திசைப் பலனைக் கணக்கிடுவதுபோலவே நித்திய பலனையும் கணக்கிட்டு சொல்ல வேண்டும் எ-று.*

(வி-ரை) *ரவி, மாதங்கள்தோறும் ஒவ்வொரு வீடாகப் பன்னிரு மாதங்களிலும் மேஷம் முதலாகச் சஞ்சரிக்கின்றான். நித்திய பலனைக் கணக்கிட்டுச் சொல்லுவோர் அச்சூரியன் இருக்கும் இராசிக்கு உரிய*

58

நக்ஷத்திரங்களை அறிந்து கணக்கிடுக. சந்திரன் ராசிகளில் சஞ்சரிக்கின்ற காலம் இரண்டேகால் நாளே ஆகும். முன் சூரியனுக்குச் சொன்னது போலவே அவன் நிற்கும் நக்ஷத்திரத்தை அறிந்து கணக்கிடுக. தினபலன் அறியவே ஜனன நக்ஷத்திரத்தை முதலாக வைத்து எண்ணவேண்டும் என்றார். நித்திய பலனைக் கணக்கிடுவதற்கு கிரகங்களுக்கு உரிய திசைகளின் வருஷத் தொகையை நாழிகையாக்கி, அதில் பாதியைக் கணக்கிடுவதும் உண்டு. கிரகோதய பரிபாகம் என்ற சோதிட நூலினுல் தினபலன் நித்தியபலன் இரண்டும் ஒன்றெனக் கூறி, கணக்கிடும் வகையை வடமொழியில் கூறியது அறிக. (419)

வேறு

இரவிராகு புகரொருமூன்றதாம்
குருமதிநவமாங் கிசன்பன்னிரண்
டொருபுதனைந்துறுஞ் சனிகேதுமெட்
டுறுதிசைக்குறி நாழிகையோதிடே.

(இ-ள்) நாள் தோற்றத்துக்குக் காரணமான கதிரவன், நன்மை தீமை விளைவிற்குக் காரணமான ராகு, சுபங்களுக்கும் இன்பங்களுக்குங் காரணமான சுக்கிரன் ஆகிய மூவருக்கும் மூன்று மூன்று நாழிகையாக ஒரு தினத்தில் நாழிகை ஒன்பதைக்கொடுக்க, எஞ்சிய நாழிகையை குரு சந்திராகிய சுபர்களுக்கு ஒன்பது ஒன்பதாகக் கழிக்க, நின்ற நாழிகையை அங்காரகனுக்குப் பன்னிரண்டு கொடுத்து, எஞ்சிய நாழிகையைப் புதனுக்கு ஐந்து, சனி கேது இவைகளுக்கு எட்டு எட்டாக நாழிகையை ஏற்றிப் பிரித்து, நவக்கிரகத்தின் திசைகளுக்குத் தினசரி நாழிகை சொல்லுக எ-று.

(வி-ரை) கால விதானத்தின்படி ஒருநாளுக்குரிய நாழிகை அறுபது. அவ்வறுபான் நாழிகையையே கிரகங்களுக்குப் பிரித்துள்ளார். ஹோரா காலத்தைக் கணக்கிட்டும் பிரிக்கலாம். (420)

நித்தியபலன் முற்றிற்று.

---

# துவாதச பாவக பலன்

## முதற் பாவகப் படலம்

[இந்த முதற் பாவகத்தைக்கொண்டு "மெய்நிறம் சொரூபம்-பெரு நிதி-உதரம் - மத்தகமும்...........கீர்த்தி மூர்த்திகளும்" கூற வேண்டுமென இந்நூலாசிரியர் பாவக விவரப் படலத்தில் கூறி யிருக்கின்றார். அப்படி கூறியிருந்து இங்கு அது சம்பந்தமான பிரஸ்தாபம் ஒன்றுமே காணப்படவில்லை. இவ்வண்ணம் காணப் படாததைக் கொண்டு இந்நூலாசிரியர் இதுவிஷயம் கூறவில்லை என்று எண்ண இடமில்லை, கூறியே இருப்பார் இத்தகைய விஷ யங்கள் இந்நூல் தாலப்பத்திரத்தில் இருந்தபோது சிதறுண்டு இருக்குமென்பதே துணிபாகும். ஆதலின் இதுவிஷயமாய் சிறிது இங்கு விளக்குவோமாக.]

**சுலோகம்**

*லக்நஸ்ய நந்தாம்சபதோர்ஹி மூர்த்திঃ ஸமாநா பலசாலிநோவா*
*ஸ்யாதிந்து நந்தாம்சபதேஸ்துவர்ணঃ பரம்விதார்யாঃ குலஜாதிதேசாঃ*

சரீர வடிவங்களை அறிதற்கு விதி கூறப்படுகின்றது, இலக்கின நவாம்சத் திற்கொப்பாக மனிதர்களுடைய சரீரசொரூபத்தைச்சொல்லவேண்டியது. அல்லது இலக்கினாதிபன் பலவானாக இருந்தால் அவனுக்கொப்பான சரீர சொரூபத்தைச் சொல்லவேண்டியது. மற்றும் சந்திரனிருக்க நவாம்சாதி பதிக் கொப்பான நிறத்தைச் சொல்லவேண்டியது. மற்றும் குலம் ஜாதி தேசம் இவற்றை விசாரித்துக் கூறுதல்வேண்டும்.

மூர்த்தி=தேகம், தநு=தேகம், "லக்ந நவாம்ச துல்ய தநுஸ்யாத் வீர்ய யுதக்ரஹ துல்யதநூர்வர்" என்றபடி இலக்க நவாம்சத்திற் கொப்பான தேக முண்டாகும், அல்லது சகல கிரகங்களிலும் பலமுடைய கிரகத்திற் கொப்பான தேக முண்டென்று கூறுக.

"பலிநঃ ஸத்ருசீ மூர்த்தி புத்வா வா ஜாதி குல தேசாந்" என்ற லகு ஜாதகப்படி பலமுடைய கிரகத்தின் சுபாவத்திற்கேற்ற தேகம் அச்சாதக னுக்குண்டாகும். ஆனால் ஜாதி குல தேசத்திற்கேற்ப அதனைக் கூறுதல் வேண்டும். நிஷாதஜாதி கிருஷ்ண நிறமுடையவர், காஸ்மிர தேசவாசிகள் கௌரவ (வெண்மை) நிறமுடையவர், கர்னாடக தேசத்தார் ஒருவகை நிறத் தினர், ஹூணர்கள் வெண்ணிறமுடையவர்கள், தக்ஷிணதேசத்தார் கருமை நிறமுடையவராதலின் தேசம் ஜாதி முதலியவைகளை அனுசரித்துகூறுதல் வேண்டும் "ஸத்ரம் ரஜஸ்தமோ வாத்ரிம்சாம்சேயஸ்ய பாஸ்கரஸ்தாத்ருக்" எனவரும் லகுஜாதகத்தின்படி சூரியனிருக்கும் திரிம்சாம்சத்தை அறிந்து ஜாதகனுடைய குணத்தன்மையைக் கூறுதல்வேண்டும்.

குருசசிரவய: ஸத்வம்ராஜாவிதக்ஞௌ-தமோ அர்க்கஸுதபௌமௌ
ஏதே அந்தராத்மந: ஸ்வாம்ப்ரக்ருதிமஜந்தோ: ப்ரயச்சந்தி

(லகு ஜாதகம்)

(இ-ள்) குரு சந்திரன் சூரியன் சத்துவகுணத்திற்கும், சுக்கிரன் புதன் இராஜஸகுணத்திற்கும், சனி செவ்வாய் தமோகுணத்திற்கும் அதிபர்கள்.

சூரியன் சத்துவகுண கிரக திரிம்சாம்சத்திலிருந்தால் அச்சாதகன் சத்துவகுணமுடையவனும், இராஜஸகுண கிரக திரிம்சாம்சத்திலிருந்தால் இராஜஸ குணமுடையவனும், தமோகுண கிரக திரிம்சாம்சத்திலிருந்தால் தமோகுண முடையவனுமாவான் என்று அறிக.

லக்ந அம்ரேஜ்ய சசிநாம் சுதபேபாபையர்யுதே
க்ஷிதேஷ்வ அத சுபைர்யு தேக்ஷிதேஷு
.........துஸ்தாநகதேஷு நபவந்தி சுதா: அதஞ்சித். (பலதீபிகை)

(இ-ள்) இலக்கினம், சந்திரலக்கினம், புத்திரகாரகனுகிய குரு இருந்த இராசி இவைகட்கு 5-ம் இராசியில் பாவர்கள் இருந்தாலும் பார்த்தாலும், சுபர்கள் பார்வை சம்பந்தம் இல்லாவிடினும்,.........எத்தகைய பிரயாசை (ஜப-தப-விரதங்கள்) எடுத்துக்கொண்டாலும் புத்திரோற்பத்தி உண்டாகாது எ-று.

புத்திரபாவக விசாரத்துக்கு லக்கினத்திற்கு 5 ஆமிடமும், சந்திரனுக்கு 5-ஆமிடமும், புத்திரகாரகனுகிய குருவுக்கு 5-ஆமிடமும், எப்படி முக்கியமென்று இச்சுலோகத்தில் கூறப்பட்டிருக்கின்றதோ, அப்படியே மற்றைய பாவகங்களுக்கும் பாவக பல விசாரம் செய்துணர்தல் வேண்டும்.

## பாவக காரகர்கள்

த்யுர்மணிர் அமரமந்த்ரீ பூஸுத: ஸோம ஸௌம்யௌ
குருர் இநதநய ஆரௌ பார்க்கவோ பாநுபுத்ர:
தினகர ரவிஜேஜ்யா ஜீவ பாநுக்ஞ மந்தா:
ஸுரகுருர் இநக்ஞ: காரகா: ஸ்யுர்விலக்நாத். (பலதீபிகை)

(இ-ள்) இலக்கின பாவகத்துக்குச் சூரியனும், இரண்டாம் பாவகத்துக்குக் குருவும், மூன்றும் பாவகத்துக்குச் செவ்வாயும், நான்காம் பாவகத்துக்குச் சந்திரனும் புதனும், ஐந்தாம் பாவகத்திற்குக் குருவும், ஆறும் பாவகத்துக்குச் (சனி)செவ்வாயும் ஏழாம் பாவகத்துககுச் சுக்கிரனும் எட்டாம் பாவகத்துக்குச் சனியும் ஒன்பதாம் பாவகத்துக்குச சூரியனும் பத்தாம்பாவகத்துக்குச் சனி குருவும், பதினொன்றும் பாவகத்துக் குருவும், பன்னிரண்டாம் பாவகத்துக்குச் சூரியன் புதன் சனியும் காரகர்களாவர் எ-று.

## பிருகத் பாராசரியம்

| 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
|---|---|---|---|---|---|
| சூர்யோ: | குரு: | குஜ: | ஸோமோ | குருர் | பௌம: |

| 7 | 8 | 9 | 10 | 11 | 12 |
|---|---|---|---|---|---|
| வித: | சனி | குருச் | சந்த்ரசுதோ | ஜீவோ | மந்தச்ச பாவகாரகா |

(இ-ள்) இலக்கினபாவகத்துக்குச் சூரியனும், 2-க்குக் குருவும், 3-க்குச் செவ்வாயும், 4-க்குச் சந்திரனும், 5-க்குக் குருவும், 6-க்குச் (சத்ரு) செவ்வாயும், 7-க்குச் சுக்கிரனும், 8-க்குச் சனியும், 9-க்குக் குருவும், 10 க்குப் புதனும், 11-க்குக் குருவும், 12-க்குச் சனியும் பாவக காரர்கள் ஆவர் எ-று.

9-க்குச் சூரியன் காரகன் என்பது மந்திரேசர் மதம். குருவென்பது பராசரர் மதம். இருவகையும் கொள்வது முறையன்று. சூரியனை பிதுர் வகையிலும், குருவை பாக்கிய விசாரவகையிலும் கொள்ளுதல் முறை. 6-க்குச் சனியை நோய்வகைக்கும், செவ்வாயை கடன் சத்துரு வகைக்குங் கொள்ளுதல் வேண்டும் 6 க்குப் புதனை அம்மான் வகைக்குக் காரகனாகக் கொள்க. 4-க்கு வித்தியா வகையில் புதனையும், கிருஹ வாகன வகையில் சுக்கிரனையும், பூமி வகையில் செவ்வாயையும் காரர்களாகக் கொள்க. இப்படியே கிரககாரகங்களையும், பாவகங்களையும் அறிஞர்கள் நோக்கிக் காரகநிர்ணயஞ்செய்துகொள்க. இங்குசிறப்புப்பாவகங்களின்காரகர்களைக்கூறுவாம்.

சூரியனை 9-ம் பாவகத்தில் பிதுர்வுக்குக் காரகன் எனப் பொதுவாகக் கூறப்பட்டிருப்பினும் பகலுக்குச் சூரியனையும், இரவுக்குச் சனியையுங் கொள்க. சந்திரனை 4-ம்பாவகததில் மாதுருவுக்குக் காரகன் எனப் பொதுவாகக் கூறப்பட்டிருப்பினும் பகலுக்குச் சுக்கிரனையும், இரவுக்குச் சந்திரனையுங் கொள்க.

இதற்குப் பதகம்

| பாவகம் | பாவக உப பாவகங்கள் | இலக்கினத்திற்கு | காரகர் | காரகனுக்கு | சந்திரனுக்கு |
|---|---|---|---|---|---|
| 1 | இலக்கினம் | 1 | ரவி | 1 | 1 |
| 2 | தனம் | 2 | குரு | 2 | 2 |
| ,, | நேத்திரம் | 2 | ரவி | 2 | 2 |
| ,, | குடும்பம் | 2 | புதன் | 2 | 2 |
| 3 | சகோதரம் | 3 | குஜன் | 3 | 3 |
| 4 | மாதுரு | 4 | சந்திரன் | 4 | 4 |
| ,, | வித்தை | 4 | புதன் | 4 | 4 |
| ,, | வீடு | 4 | சுக்கிரன் | 4 | 4 |
| ,, | பூமி | 4 | குஜன் | 4 | 4 |
| 5 | சந்ததி | 5 | குரு | 5 | 5 |
| 6 | சத்துரு | 6 | செவ்வாய் | 6 | 6 |
| ,, | நோய் | 6 | சனி | 6 | 6 |
| ,, | கடன் | 6 | செவ்வாய் | 6 | 6 |
| 7 | மனைவி | 7 | சுக்கிரன் | 7 | 7 |
| 8 | ஆயுள் | 8 | சனி | 8 | 8 |
| 9 | பிதிர் | 9 | சூரியன் | 9 | 9 |
| 10 | ஜீவனம் | 10 | புதன் | 10 | 10 |
| 11 | ஆதாயம் | 11 | குரு | 11 | 11 |
| 12 | செலவு | 12 | சனி | 12 | 12 |

உதாரணம்:—இந்தப் பதகம், அல்லது சக்கரத்தில் தனத்தைப்பற்றி ஆராயுங்கால் இலக்கினத்துக்கு 2-ஆமிடம், குருவுக்கு 2-ஆமிடம், சந்திரனுக்கு 2-ஆமிடம் ஆகிய இம்மூன்றையும் நோக்கிக் கூறுதல் வேண்டும். ஆயுளைப்பற்றி ஆராயுங்கால் இலக்கினத்துக்கு 8-ஆமிடம், சந்திரனுக்கு 8-ஆமிடம், சனிக்கு 8-ஆமிடம் ஆகிய இம்மூன்றையும் நோக்கிக் கூறுதல் வேண்டும். பிறவும இங்ஙனமேயாகும். இப்பதகத்தில் உதாரணமாக சில பாவக உபபாவகங்களைக் கூட்டி இருக்கின்றது. ஏனைய பாவக உபபாவகங்கட்கு அறிஞர்கள் யுக்திபூர்வமாக ஏற்படுத்திக்கொள்ளுதல் வேண்டும்.

இப்படி பாவகபலன்களை ஆராயுமிடத்து ஒவ்வொரு பாவகத்திற்கும் மும்மூன்று இராசிகளைக்கொண்டு பலன் கூறவேண்டிவரும். அப்போது பாவகம், காரகன், சந்திரவசாற்பாவகம் இம்மூன்றில் எது பலமுடையதோ அதைக்கொண்டு பலன் கூறுதல்வேண்டும். ஒருவர்க்கு புத்ரபாவக ஆராய்ச்சியில் 5-ஆமிடம் பலயீனமானல், சந்திரனுக்கு 5-ஆமிடத்தைக் கொண்டு பார்த்தல் வேண்டும். அதுவும் பலவீனமானல் குருவுக்கு 5-ஆமிடத்தைக் கொண்டு பார்த்தல் வேண்டுமென்ப. பிறபாவகங்கட்கும் இக்குகூறியமுறை ஆழ்ந்துணர்ந்து சுருதி யுக்தி அநுபவங்கொண்டு பலனுரைத்தல் நலம்.

## ஜீவனும் சரீரமும்

ஈஸ்வரன் சகல சராசரங்களுக்கும் இறைவனுவன் சொன்ேனும். சராசரங்களெல்லாம் பிரகிருதிபுருஷவடிவமாக இருக்கின்றன. அஃதாவது கடவுளால் சிருஷ்டிக்கப்பட்ட இப்பிரபஞ்சத்திற் காணும் பிராணிகளெல்லாம் இரண்டு அமிசங்கள் வாய்ந்திருக்கின்றன. அவ்வமிசங்களாவன: 1-ஜீவன், 2-சரீரம், பிராணிகள் செய்யும் சகல விவகாரங்களும் ஜீவனுலேயே நடத்தப்படுகின்றன. அந்த விவகாரங்களுக்குச் சரீரம் சாதனமாய் இருக்கின்றது.

உலகத்தில் தோன்றிய ஜீவராசிகளில் மானிடவர்க்கமே உயர்ந்தது என்பது வேதத்தின் துணிபு. இம்மானிட வர்க்கத்தினருக்கு அவரவர்களின் இருவினைக்கொப்ப வயதும், கண்டங்களும் இன்ப துன்பங்களும், கர்ப்போற்பத்திலேயே சிருஷ்டிக்கப்படுகின்றதேயன்றி வேறு எந்த காலத்திலும் சிருஷ்டிக்கப்படுவதில்லை. ஆதலால் அந்த கர்ப்போற்பத்தி கால நிர்ணயத்தின் ஆதார ஆதேயங்களாக விளங்கும் சந்திரன், இலக்கினம் இவைகளின் மாகாத்மியத்தைப்பற்றி மகரிஷிகள் கூறியிருப்பதை இங்கு சிறிது விளக்கப்படும்.

லக்நந்தேவः ப்ரபுஸ்வாமீ லக்நம் ஜ்யோதிः பரமம்மதம்
லக்நந்தீயோ மஹாந்லோகே லக்நந் தத்வம் திசந்குருः

(திரிலோகப் பிரகாசம்)

(இ-ள்) இலக்கினமானது தேவர், அதிகாரி, கடவுள், ஜோதி, தீபம் முதலியவற்றின் அமிசமென்பதாம்.

லக்நம் ஜீவோம் நக்சந்த்ரः சரீரம் திதிபாதிகா
ஜீவபுஷ்டே பலம்புஷ்டம் நஷ்டேநஷ்டம் விதுர்புதாः

(ஜோதிः சாகரம்)

(இ-ள்) இலக்கினம் ஜீவனும், சந்திரன் மனதும், திதிமுதலியவைகள் சரீரமும் ஆகும். ஆதலால் ஜீவன் புஷ்டியாயிருப்பின் தேகபுஷ்டியுண்டு, ஜீவன் நஷ்டமாயின் தேக நஷ்டமுண்டு எ-று.

இந்துஸர்வத்ர பீஜாம்போ லக்நஞ்சகு சுமப்ரபம்
பலேநஸத்ரு சோம்சச்ச பாவர்ஸ்வாது பலம்ஸ்ம்ருதம். (புவனதீபிகை)

(இ-ள்) சந்திரன் சர்வத்துக்கும் மூலமாவான் இலக்கினம் புஷ்பத்தை யொத்தது. இவ்விரண்டும் பலமாயிருப்பின் சர்வ பலமும் உத்தமமாகும்.

லக்நம்ஹஸ்தீ ந்ருபச்சந்த்ரஃ ஸௌம்யபாபாச்ச ப்ருத்யகாஃ
ந்ருபேந்ஷ்டேகதம் யுக்தம்கதம் ஹிபலமாதிசேக். (ஜோதிஃ பிரகாசம்)

(இ-ள்) இலக்கினம் யானையும், சந்திரன் அரசனும், ஏனைய சுப பாப கிரகங்கள் சேனைவீரர்களுமாவர். அரசன் நஷ்டப்படின் யுத்தமும், அவ்வாறே அரசன் பலமுடையவனா யிருப்பின் யுத்தத்தில் வெற்றியுண்டாவது போல பலனும் அவ்வாறேயாம்.

ஆதாரம்இந்தோர்பலமுக்த்தம் ஆத்யைர்ஆதேயம்அந்யாஹந்ஞ்சவீர்யம்
ஆதாரசக்தௌ பரிதிஷ்டிதாநாம் ஆதேயவஸ்து நிஹிவீர்யவந்தி.
(ஸ்ரீபதி ஆசார்யர்)

(இ-ள்) சகல விஷயங்களிலும் ஆதாரம் சந்திரனும், ஆதேயம் ஏனைய கிரகங்களுமாகும். ஆதார வஸ்துவின் பலானுசாரமாக ஆதேயவஸ்துவின் பலனும் உண்டாம்.

ஆதௌஹி சந்த்ரஸ்பலம் ப்ரதாநம் லக்நஸ்ய
பச்சாத தஸப்த வர்கஃ (சம்மிதா பிரதீபம்)

(இ-ள்) முதல் சந்திரபலம் முக்கியம், அதன்பின் இலக்கினபலமும், அதன்பின் சப்தவர்க்க பலமும் முக்கியமாம்.

யதாஜன்ம லக்நாச்சுபம்வா அசுபம்வாபலம்
க்ஞாயதே தத்வத்ஏவம் ப்ரகல்ப்யம்
ஸதாஸர்வகார்யே புதைர் லக்நவீர்யம்
விசிந்த்யம் விதாநேநகார்யம் நகிஞ்சித்.

(இ-ள்) இலக்கினத்தைக்கொண்டு சுபாசுப பலன்கள் அறியப்படுதலின் சர்வகாரியங்களிலும் இலக்கினபலததை விசாரித்து அறிதல்வேண்டும் இதை விசாரித்தறியாமல் எந்த காரியங்களையுஞ் செய்யக்கூடாது.

எனவரும் இத்தியாதி சுலோக வசனங்களினால் இலக்கினத்தினதும், சந்திரனதும் பெற்றிகள் இத்தகைத்தென்பது நன்கு விளங்காநிற்கும். ஆனால் இந்தச் சுலோக வசனங்கள் முகூர்த்த விஷயத்தில் இலக்கினம், சந்திரன் இவற்றின் சிறப்பை விளக்கவந்ததாயினும், ஏற்புடைக்கோடல் என்னும் யுத்தியினால் இந்தச் சாதக பலாபல விஷயங்களின் ஆதார ஆதேயங்களான சந்திரனதும், இலக்கினத்தினதும் பெற்றியும்இதுவாமென்பது பெறப்பட்டதுணர்க. ஆதாரம் சந்திரனும், ஆதேயம் இலக்கினமுமாகும். இவ்விரண்டினது ஆதார ஆதேயங்களினாலேயே சோதிட சாஸ்திரத்தின் பலத்தன்மைகள் யாவும் அமைக்கப்பட்டிருக்கின்றன.

லக்நந்தேஹ ஷட்வர்க்கே அங்க காந்திம்
ப்ராணச் சந்த்ரோ தாதவஃ கேசரேந்த்ராஃ
ப்ராண நஷ்டேதே ஹதாத்வங் காசஃ
தஸ்மா திந்தோர் வீர்மார்யைஃ ப்ரதானம். (சாரங்கதரசம்மிதை)

எனவரும் சுலோக வசனம் இலக்கினம் தேகமெனவும், இராசி, ஓரை, திரேகாணம், சப்தாம்சம், நவாம்சம், துவாதசாம்சம் ஆகியசட்வர்க்கங்கள் பாதமுதலிய ஆறு அங்கங்களெனவும் சந்திரன் பிராணன் எனவும்மற்றைய கிரகாதிகள் தாதுக்கள் எனவும், இது காரணத்தால் பிராண நஷ்டமானுல் சரீரமும் சரீராங்கங்களும் நாசமடையும். ஆதலால் பிராணுதார பூதனை சந்திரனுடைய பலம் சகல விஷயங்களிலும் பிரதானம் என்று அறியப்படு கின்றது. மற்றும் இதனை "ஜந்மலக்நம் சரீரம்ஸ்யாச் சந்த்ரலக்நந்து ஜீவிதம்" எனவரும் காலவிதான வசனத்திலும் அறியலாம். இலக்கினம் தேகம் என்பது சகல சோதிட நூற்களின் சம்மதம். சந்திரன் ஜீவன் என்பதை சர்வஜீவ மிலஹப்ராணே எனவரும் பாகவத வசனமும் நன்கு விளங்கும்.

ககநம்பாஸ்கரஃ ப்ரோக்தச் சந்த்ரோபூமிர் உதாஹ்ருதம்
புமாந்பாநுர் வதூச்சந்த்ரக சக்ரம்ப் ராண வான்ரவிஃ
பூசக்ரதே ஹசசந்த்ரஸ்யாத் இதிசாஸ்த்ரஸ்ய நிச்சயஃ

எனவரும் ஞானப்பிரதீபிகை வசனத்தினுல் ஆகாயம், புருஷன், பிராணன் ஆகிய இம்மூன்றிற்குச் சூரியனும், பூமி-ஸ்திரீ தேகம் ஆகியஇம்மூன்றிற்குச் சந்திரனும் அதிபர்கள் என்றும், இங்ஙியதி பிதுர்மாதுர் காரகாதி பத்தியத்தைச் சார்ந்ததென்றும் நன்கு அறியப்படுகின்றது.

## கர்ப்போற்பத்தி சோதனம்

| | | | |
|---|---|---|---|
| சிவம் | சத்தி | தந்தை | தாய் |
| சூரியன் | சந்திரன் | சுக்கிலம் | சுரோணிதம் |
| ஆண் | பெண் | பிராணன் | தேகம் |

ஆகாயம் (மேல்) (சையோக சம்பந்தம்) பூமி (கீழ்)

இம்முறையால் ஜீவசிருஷ்டி நிகழ்கின்றதென்பது வெளிப்படையாக விளங்குதலுணர்க. ஆனுல் இம்முறையில் சந்திரனை தேகமெனக் கூறப் பட்டது சிவசத்தி முறைப்பற்றியதாகும். சந்திராம்சம் பூமியாதலாலும், "இராசிநாம் உதயோ லக்நம்" என்றபடி பூமியே இலக்கினமாதலாலும், சிலர் சந்திரனை ஜீவன் எனவும், இலக்கினத்தைத் தேகமெனவும், ஒருசிலர் சந்திரனை தேகமெனவும், இலக்கினத்தை ஜீவன் எனவும் கூறுவாராயினர். இங்ஙனம் கூறியிருப்பினும் சந்திரன் பிராணன் இலக்கினம் தேகம் என்பதே சர்வ சம்மதமாகும். ஆதலால் பிராணுதாரமாகிய சந்திரனையும், தேகாதாரமாகிய இலக்கினத்தையுங்கொண்டே மகரிஷிகளால் வேதத்தின் நேத்திராங்கமாகிய சோதிட சாஸ்திரத்தில் சர்வ சுபாசுப பலன்களேயும் ஏற்படுத்தப்பட்டிருக்கின்றதென்று அறிதல் வேண்டும். மற்றும்,

விநாதேஹே நகஸ்யாபி புருஷார்த்தோ நவித்யதே
தஸ்மாத்தேஹம் தநம்ரக்ஷேத் புண்யகர்மாணி ஸாதயேத்.

தர்மஸ்யாய தாம்யத்தச் சரீரம் பரிபாலயேத்
நசதேஹம் விநாருத்ரஃ புருஷைர் வேத்யதேபரஃ (நீதி சாஸ்திரம்)

(இ-ள்) சரீரம் இல்லாவிட்டால் எவரும் தர்ம, அர்த்த, காமமோக்ஷங்கள் என்னும் சதுர்விதபுருஷார்த்தங்களை அடையமாட்டார். ஆதலால் சரீரமும் திரவியமும் காப்பாற்றப்படல் வேண்டும். புண்ணிய கிருத்தியங்களைச் செய்யவேண்டியது. நமது தேகம் சர்வ புண்ணிய கார்யங்களுக்கு ஸ்தான பூதமானது. ஆதவால் அதை நாம் நன்றாக பாதுகாத்தல்வேண்டும். சரீரமில்லாவிடில் மக்களால் சத்கர்ம உத்கிருஷ்டமான பிரம்மத்தை அறிய சாத்தியப்படாது.

மக்கட்பிறப்பிற்கு முக்கிய சாதனமாக இருப்பது தேகமாதல்சோதிட சாஸ்திரத்தில் பலமாக சாதனத்திற்கு முக்கியமானது தேகபாவகமாகிய இலக்கினபாவகமேயாகும் என்று அறியவும் மற்றும்''தேஹம்தாம்ரக்ஷேத்'' என்று கூறியதனுல் தேகத்திற்கு அடுத்தபடியாயுள்ளது தனமாதலால் தேஹஸ்தானத்திற்கு அடுத்தபடியாயுள்ளது இரண்டாமிடமான தனபாவகமாகும் என்று அறியவும். இது கருதியே மகரிஷிகள் ஒன்றுமிடம் தேகஸ்தானமெனவும்இரண்டாமிடம் தனஸ்தானமெனவும்வகுத்திருக்கின்றன.

ஆக்ருதிஃ ப்ரக்ருதிர்தோஷா குணகுண வயோரஸாஃ
பும்ஸ்த்ரீ சேஷ்டாஸ்வபாவச்ச க்ராமாதி ஸ்திதி கர்மச,
லக்நாத வசாத்வாபி லக்நஸம்ஸ்த க்ரஹாதபி
வக்த்தவ்யம் தைவவிதுஷா ப்ராசீக முனிஸம்மதாத்.
(ஜம்புஹோரா பிரகாசிகை)

(இ-ள்) சரீர ஆகிருதி, சுபாவம், தோஷம், குணம், அகுணம்,அஸ்தை, இரசம், ஆண், பெண், சேஷ்டை, அப்பியாசம், கிராம முதலான ஸ்திதி இவைகள் யாவும் இலக்கினுதிபதியினுடைய ஆகிருதி, பிரகிருதி குணுதிகளின் அநுசாரமாக அல்லது இலக்கினத்திலிருந்த கிரக அநுசாரமாக உண்டாகுமென்று பிராசீன முனிபுங்கவர்கள் அருட்செய்திருக்கின்றூர்.

க்ரஹாதீநம் ஜகத்ஸர்வம் க்ரஹாதீநா நராவராஃ
காலக்ஞாநம் க்ரஹாதீநம் க்ரஹாகர்ம பலப்ரதாஃ
ஸ்ருஷ்டிரக்ஷண ஸம்ஹாராஃ சர்வேசாபி க்ரஹாநுகாஃ
கர்மணஃ பலதாதார சூசகாச்ச க்ரஹாஸதா
துஷ்கரம் பவஸம்யோக காலேது ஸ்தானமாயயுஃ
தத்பலா நக்வயாதேவம் ததாபூஜ்ய தமாக்ரஹாஃ (பிருகஸ்பதி)

(இ-ள்) இதனுல் உலகமனைத்தும் கிரகங்களின் ஆதீனத்தில் இருக்கின்றதென்பதும், சிருஷ்டி-ஸ்திதி-சம்மாரமென்னும் முத்தொழிலும்கிரக ஆதீனத்தாலேயே நடைபெறுகின்றதென்பதும் நன்கு விளங்காநிற்கும்.

ஆனுல் பாவகபலன் கூறும்போது அவசியம் நாம் கவனிக்கவேண்டிய முக்கிய விஷயம் சிலவுண்டு. இதைப் பெரும்பாலோர் கவனிப்பதே இல்லை. இங்ஙனம் கவனியாமையினுல்தான் ஜாதக பலபாகங்கள் நிகழ்ச்சிக்குச் சரியொத்தின்றி பிழையாகப் போகின்றதன்றி மற்றப்படி சோதிடசாஸ்திரம் பொய்யல்ல. இதனை ''போற்றுகின்ற சோதிடநூல் பொய்யாதொருநாளும், சாற்றில் அறியாதவர்க்கு அது பொய்'' என்றருளினுர் பெரியாரென்ப.

இந்த ஆராய்ச்சிக்கு மிகமிக அவசியமானது பாவக ஆரம்ப மத்திய அந்திய ஸ்புடங்கள் கிரகஸ்புடங்களாகும். இவைகளை அறியாமல் பாவகபலன்களைக கூற முற்படுவது வானத்தை வில்லாய் வளைப்பேன், மணலைக் கயிறாகத் திரிப்பேன், ஆகாயத்தில் கோட்டை கட்டுவேன் என்பதை யொக்குமே யன்றி உண்மை வேறொன்றும் இல்லை என்பது திண்ணம். சுவர் இன்றி சித்திரம் எழுதுதல் எங்ஙனம் அமையும்? இவ்வுண்மைகளை ஒரு சிறிதும் உணர்ந்துய்யாமல் பெயர் மாத்திரத்தால் சோதிடப் புலவர்களென முற் போந்த போலிச் சோதிடர்களிடம் பாவகப் பலன்களைக் கேட்டுணர்தல், "கல்லாதான் சொற் காமுறுதல் முலையிரண்டும் இல்லாதாள் பெண்காமுற் றற்று" என்பதை யொக்கும். ஒரு ஜாதகத்தின் இராசி சக்கரத்தில் இலக்கி னத்துக்கு ஏழாமிடத்தில் குரு இருப்பதாக காணப்படின் அச்சாதகனுக்கு மனைவி சுந்தரமானவடிவும் அதிர்ஷ்டமும், ஆயுளுமுடையவளெனக் கூறு வது இயற்கை. ஆனால் கணிதமூலமாக பாவககிரகஸ்புடஞ் செய்துப்பார்க்க குரு இராசி சக்கரத்தில் சப்தமராசியில் காணப்படினும் கணிதமூலமாக பாவக சக்கரத்தில் ஆறும்பாவக எல்லைக்குள்ளேனும், அல்லது எட்டாம் பாவகத்தின் ஆரம்பத்திலேனும் சில சமயங்களில் அமைந்திருக்கமுடியும். அப்போது முன்சொன்ன பலன்கள் தவறிப்போகுமன்றோ? ஆகவேபாவக சக்கரத்தைக்கொண்டே பலன்களைக் கூறுதல் முறையாகும். இங்ஙனம் பாவகசக்கரத்தில் கிரகங்கள் மாறுபடுதல் உண்டோ எனின்? பாவக சக்கர மும் அஷ்டவர்க்கமும் என்ற வியாசத்தில் உதகரித்த இரண்டு ஜாதகஙகளி னால் உண்டென்று அறியலாம். இஞ்ஞான்று அநேக சோதிடர்கள் பாவகச் சக்கரத்தை அறவே விட்டு இராசிசக்கரம் ஒன்றையே பிரதானமாகக் கொண்டு பலன் கூறிவிடுகின்றனர்.

இத்தகையோரிடம் ஜாதகங் கணித்தல், பலபாகங்கேட்டல் முதலியன பிரயோசனமற்ற காரியமாகும். வடமொழி தேர்ச்சி, மந்திர சாஸ்திரப் பயிற்சியுடைய புரோகிதர்களோ மிகச் சிலர். அவர்கள்பால் இவற்றைக் கூறின் அவர்கள் இதைஅங்கீகரிப்பதேயில்லை. இவ்விரண்டினும் தேர்ச்சிப் பெறாத புரோகிதர்களோ மிகப்பலர். இவர்களிடம் இவற்றைக் கூறின் பய னில்லையன்றோ, புரோகிதர்களிடம் சமஸ்காரஞ் செய்துகொள்ளும்மககள் அவர்களிடம் பெரும் மதிப்புகொண்டிருப்பது சகஜம், புரோகிதர்கட்கு இவ்வித ஆராய்ச்சி உண்டா? இல்லையா? என்பதை அவர்கள் அறியவிரும்ப மாட்டார்கள்.

## பாவக தத்துவார்த்தம்

அருந்தமிழ் உலகினீர்! பாவக தத்துவார்த்தம் என்னும் இத்தொடர் மொழிக்கு இலக்கின முதலாகவுள்ள பன்னிரண்டு பாவகங்களின் உண் மைப்பொருள் என்பது அருத்தமாகும். அதாவது சோதிடசாஸ்திரங்களில் மகான்கள் நான்காமிடத்தை மாதுருஸ்தானமெனவும், ஒன்பதாமிடத்தைப் பிதுர்ஸ்தானமெனவும் எக்காரணம்பற்றி வகுத்தனர் என்னும் இன்னனைய உண்மைகளை அறிந்துணர வேண்டுமென்னும் விருப்பம் சோதிட சாஸ்திர வித்தியா விநோதர்களுக்குண்டாவது சகஜமன்றோ! இதுவன்றி.

"ஜ்யோதிஷாமய நம்ஸாக்ஷாத் யத்தத்க்ஞாந மதீந்த்ரியம்
ப்ரணீதம் பவதாயே நபுமான்வேத பராபரம்"

எனவரும் பாகவதம் 10-வது கந்தம் 8-வது அத்தியாயத்து 5-வது சுலோகத்தில் எந்த ஜோதிஷ சாஸ்திரத்தினால் புருஷன் சுபாசுபங்களை அறிவானோ எது அதீந்த்ரிய ஞானத்தை உண்டுபண்ணுகிறதோ அப்படிப்பட்ட ஜோதிஷ சாஸ்திரம் உங்களால் செய்யப்பட்டதென ஸ்ரீயுத நந்தகோபன் அவர்கள் ஸ்ரீ சுகப்பிரம்ம மகரிஷியை நோக்கிக் கூறிய வசனத்தினால் ஜோதிஷ சாஸ்திரம் அதீந்திரிய ஞானத்தை உண்டுபண்ணு மியல்புடையதென நன்கு விளங்குதலினால் அதீந்திரிய ஞானத்தை யளிக்கவல்ல இச்சாஸ்திரத்தின் உண்மைப் பொருளை அறியவேண்டியது பகுத்தறிவைப் பெற்ற நம்மனோர்களின் முக்கியக் கடமையாகும். இந்த ஆராய்ச்சியைப் பற்றி அவசியம் நேர்ந்தது யாதுபற்றி எனின்? ஜாதி சீலத்தைப்பற்றிக் கூறும் ஸ்தானம் நான்காமிடமென ஸ்ரீயுத கேசவ தைவக்ஞரும் இலக்கினமென ஸ்ரீயுத நீலகண்ட தைவக்ஞரும் கூறியிருப்பதனாலும், இன்னும் சில பாவகங்களைப்பற்றி பூர்வாசிரியர்கள் பலர் பலவேறு அபிப்பிராயமுடையவர்களாக யிருப்பதனாலும், இவற்றின் உண்மைகள் யாதெனக் கண்டுணர வேண்டுமென்பது பற்றியேயாம். ஆனால் இவ்வித அரிய ஆராய்சசியானது முற்றுணர்ந்த மூதறிவாளர்க்கு உரியதேயன்றி எம்போல்பவர்க் குரியதல்லவென்பது நன்கு உணர்ந்தும் "ஆசை வெட்கம் அறியாது" என்ற பழமொழிக்கிணங்க இது விஷயமாய் எமக்குச் சின்னாளாக ஏற்பட்டுள்ள பேராவலானது பிடர்பிடித்து உந்திவருதலினால் துணிந்து முற்போந்தனமேயன்றி, கற்றுணர்ந்த கல்விமான என்பதைக் காட்டி காலங்கழித்தற் கருதியன்றென்பதை விவேகிகள் அங்கீகரிப்பார்களாக. இவ்வாராய்ச்சியானது பிரபல ஏதுக்களைக்கொண்டு துணியப்பட்டனவே யன்றி வாளா கொள்ளப்பட்டனவல்ல.

"அர்தக்ஞ இத்ஸகலம் பத்ரமிச்நு தேஸநாகமே திக்ஞாவி நூதபாம்மா" என்ற வசனத்தினால் அர்த்தம் தெரித்தவன் சகலவிதமான இம்மைமறுமை க்ஷேமங்களை நிச்சயமாக அடைகின்றான்; அவன் ஞானத்தால் விலகின பாபமுள்ளவனாய் "நாகம்" என்ற மேலான பதவியை அடைகின்றான் எனவும், "யதேவ வித்யயாகரோதி.........ததேவவீர்ய வத்ரம்பவதி என்ற வசனத்தினால் எந்த கர்மத்தை மந்திரங்களின் அர்த்தம் அறிந்து செய்கின்றானோ அதுவே அதிக பலனைத் தரத்தக்க சக்தியுள்ளதாய் ஆகும் என்றும், அர்த்தம் உணராமல் மந்திரங்களை உபசரிப்பது விவேகத்தில் சிறந்த மானிடப் பிறவிக்குப் பொருத்தமில்லை என்றும் சுருதிகள் கூறுகிற்கும். மற்றும் மூலிகையின் (ஔஷதிகளின்) குணதோஷங்களை அறியாது அவிழ்தஞ்செய்யும் வைத்தியனையொப்ப மந்திரார்த்தங்களை சரியாக அறியாது மந்திரத்தை உச்சரிப்பவனும் அதனால் பெறுதற்குரிய பயனைப் பெறுவது ஒருகாலும் முடியாதகாரியமாகும் இங்ஙனமே சோதிடனானவன் துவாதசபாவக நிர்ணயத்தின் உண்மைத் தத்துவங்களை உள்ளபடியுணராது துவாதசபாவக பலன்களைக்கூற முற்படுவதும் பயனிலாகாரியமே யாகும் என்பதில் எட்டுணையும் ஐயமின்று. இலக்கினாதி துவாதசபாவகங்களின் தத்துவார்த்தங்களை அறிவதில் அறிஞர்கள் முக்கியமாகக் கவனிக்கவேண்டியது ஒன்றுண்டு. அஃது என்னை எனின் தேகம், தனம், கனிஷ்ட சகோதரம், மாதுரு, புத்திரர், களத்திரம் ஆயுள், பிதிர், சீவனம், லாபம், விரயம் என னும் இந்தப் பன்னிரண்டு பாவகங்கள் முறையே இலக்கினத்திலிருந்து பன்னிரண்டாமிடம் வரைக்குமென எக்காரணங்கொண்டு மகான்

கள் நிர்ணயித்தனர் என்பதை ஆராய முற்படுவதில் இவற்றுள் முதல் முதல் பாவகமானது தேகபாவகமாதலாலும், தேகோற்பத்திக்கும் அதினின்று இயக்குதலைச் செய்யும் ஜீவோற்பத்திக்கும் ஆதார ஆதேய காரண பூதர்கள் தாய் தந்தையர்களாதலாலும் முதல் முதல் இவ்விருவர்களின் பாவகத்தை நிர்ணயித்துக்கொண்டு அதினின்று மற்றைய பாவகங்களை நிர்ணயித்தல் வேண்டும் என்பதேயாம். இவ்வித பாவக தத்துவார்த்தத்தை எமது சிற்றறிவுக் கெட்டியவரை ஒருவாறு எடுத்துக் காட்டப்படுவதில் உண்மையுளதேல் அறிஞர்கள் அங்கீகரிக்கவும், இலதேல் உண்மை இன்னதென எடுத்துக்காட்டவும் முக்காலும் வேண்டப்படுகின்றார்கள். இவற்றின் உண்மை அருத்தங்கள் முற்றும் உள்ளவாறு எடுத்துக்கூறி தத்துவங் காட்டல் முற்றக்கற்ற மூதறிவாளர்கட்கு இயலுமேயன்றிஎம்போல்வார்க்கு இயலாத காரியமேயாகும். ஆயினும் கடவுள் கருணையோடும் நமக்கு அளித்துள்ள சொற்ப அறிவைக்கொண்டு அவ்வறிவான் அறிந்தவற்றைஉலகோபகாரங் கருதி வெளியிட முற்பட்டதேயன்றி உண்மை வேறில்லை என்பதை விவேகிகள் அங்கீகரிப்பார்கள் என்று நம்புகின்றோம் மகான்கள் சோதிட சாஸ்திரத்தில் அருளிச்செய்துள்ள துவாதசபாவங்களைக்கொண்டு ஜாதகங்கட்குப் பலபாகத்தைக் கூறுவதில் முற்படாது இதுவென்ன? அது என்ன? என்று வீண்காரியத்தில் காலங்கழிக்க முற்பட்டது தகுமோ எனின்? கூறுதும் இவ்வித ஆராய்ச்சி செய்ய முற்பட்டது வீண்காரிய மாகாதென்பதை விவேகிகள் நன்கறிவர். யாதுபற்றி எனின்? மாதுருஸ்தானம் நான்காமிடமென்பது யாவரும் நன்கு அறிந்த விஷயம். இந்த பிரசித்தமான உண்மை விஷயத்தை நன்கு அறிந்த ஒருவர் மாதுருஸ்தானம் மூன்றுமிடம் என வீண் விதண்டாவாதத்துக்காகவோ, அல்லதுசோதிடப்பயிற்சி செய்துவரும் ஒரு வித்தியார்த்தியைப் பரிட்சிப்பதற்காகவோகூறுவ:ராயின் அப்போது இவ்வித ஆராய்ச்சி அவசியந்தானென்பதை யாவரே மறுக்க வல்லுணர். இதுமட்டுமன்று. நந்தமிழ்நாட்டில் மிக பிரசித்தமாய் பண்டிதர் முதல் பாமரர் ஈறாகவுள்ளவர்களில் சோதிடமுணர்ந்த அனைவரது கைத்தலத்தும் மிளிர்ந்திலங்கும் உத்தமோத்தம சோதிடநூலாகும் ஜாதகாலங்காரத்தினுள் துவாதசபாவகப்படலத்தில் இரண்டொரு பாவகங்களைமுதல் நூலுக்கு மாறாக அச்சேற்றினரால் பிழையாகப் பதிப்பிக்கப்பட்டிருப்பதன் உண்மையை நான் இதுவரை எவரும் ஆராய்ந்து அறியாமல் அலக்கணுற்றிருப்பதை முன்பு பாவகபடலத்தில் எடுத்து விளக்கி இருக்கின்றோம்.

ஆகவே இதன் உண்மைத் திண்மைகளை அறிஞர்கள் ஆண்டு அறிந்து அகமகிழ்வார்களாக. அருந்தமிழ் உணர்ந்த ஆஸ்திகசெல்வர்காள்! சோதிடசாஸ்திரத்தில் முதல்நூல் கருத்துக்கள் மறைந்துபட தமிழில் பல சோதிடநூற்கள் புற்றீசல்போலக் கிளம்பியிருக்கின்றன அவையனைத்தும் சோதிட ஞானமில்லார் கைவசப்பட்டு தலைவிரித்தாடுகின்றன, இக்காலத்தில் உண்மைச் சோதிட நூற்களைத்தேடி கற்பார் மிக அருகிவிட்டனர். ஆராய்வாரோ மிகமிக அருகினர் அறிந்தவர்களோ "ஸாஸ்வதீ க்ஞாகலோயதாசதி" எனவரும் பாகவதம் 10-வது கந்தம் 2-வது அத்தியாயம் 19-வது சுலோகத்தின்படி; அதாவது ஞானவஞ்சகனிடத்தில் (தனக்குத் தெரிந்தவைகளை மற்றவர்களுக்குச் சொல்லிக்கொடுக்கக் கூடாதென்ற எண்ணமுடையவனிடம்) இருக்கும் வித்தையைப்போலும் என்பதற்கு இலக்காகிக் கூற மனமிசையாது மர்மம் சாதிக்கின்றனர். சோதிட சாஸ்

திரிகள் என்று பெயர்சூட்டி வெளிவருமன்னோர் அதைச் சார்ந்த உண்மை நூற்களையும் அதன் உள்ளுறை யுண்மைப் பொருள்களையும், அதன் தத்துவார்த்தங்களைக் கற்பிக்கும் முதல் நூற்களையும் ஐயந்திரிபறதெளிவாக பயிலவேண்டுவது தமது உற்ற கடமை என்பதை கனவிலும் கருதாது "புலந்தரு நூலிலில்லாப் பொருளினை புகல்கிற்பாலும்" என்றதிருவாக்கைத் இலக்காய் வீண்வாதம் புரிவதில் வெகு சாதுர்யமுடையவர்களாய் இருக்கின்றனர். உண்மையை ஆராய முற்படுவோரைப்பற்றி இவர்கள் உதாசினம் பேசுகின்றனர். ஆதலால் நந்தமிழ் நாட்டுச் சோதிடமணிகாள்! நீவிர் இனியேனும் கற்கக் கசடற என்னும் பொன்மொழியைப்போற்றுமின்! நீவிர் சோதிட சாஸ்திரத்தின் உண்மையை யுணர்த்தும் ஆரிய நெறி நூற்கள் எம்மொழியில் இருப்பினும் அதன் உண்மையைக்கண்டு தெளிய விழைமின்! ஆதாரமின்றி வெளியிடப்பட்ட சின்னூற்களை விடுமின்! யாண்டும் உண்மை காண விழைமின்! முதல் நூற்களுக்கு மாறுபாடில்லாத உண்மைச் சோதிட நூற்களின் உரை கண்டு அதன் உண்மையைத் தெளிமின்! மெய்யுறு உத்தம சோதிடநூற்களை அறிய விழைமின்! பொருமைக் காரர்களின் பொய்யுரையை புறக்கணித்துத் தள்ளுமின! நடுநிலைதவறாது உண்மையை யுணர்ந்துய்மின்! என்னும் இன்னனைய நல்லுரைகளை நன்கு சிந்திக்க வேண்டுகின்றோம். துவாதச பாவக தத்துவார்த்தத்தை மட்டும் எடுத்துரைத்தல் போதாது. சோதிட சம்பந்தமான ஒவ்வொரு விஷயத்தையும் அதாவது சூரியமகாதசை ௵ 6 எனபதற்கும், காலசக்கரதசை ௵ ம் என்பதற்கும் ஆதுபோன்றபிறவற்றிற்கும் தத்துவார்த்தங் காட்டுதல் வேண்டுமென்று விவேகிகள் எண்ண முற்படுவாாகள். ஆனால் இவைகளையும் இவைபோன்றபிறவற்றையும் சமயம் நோந்துழி நன்கு விளக்கப்படும் என்பதை அன்பர்கள் அறிய விழைகின்றோம் துவாதச பாவக நிர்ணய தத்துவார்த்தம் மிக அவசியந்தான் என்பதற்கு மற்றோர் நியாயம் வருமாறு:—அறிஞாகள் இதனை நன்கு ஆலோசிப்பார்களாக. முருகப் பெருமான் சூரசமமாரஞ்செய்து அவனுடலை இரண்டாகக் கிழித்தபோது ஒன்று மயிலும், மற்றொன்று சேவலுமாயிற்றெனவும், அவற்றுள் மயிலை தமக்கு வாகனமாகவும், சேவலை கொடியாகவும் கொண்டாரென கந்தபுராணங் கழறுகின்றது. இவற்றுள் மயிலைக் கீழும், சேவலை மேலும் யாதோ ஒரு உண்மையைப்பற்றியே ஸ்ரீ முருகப்பெருமான் கொண்டிருப்பார் என்று எண்ணவேண்டி இருக்கின்றது. அங்ஙனமில்லை எனின் சேவலைக் கீழும் மயிலை மேலுமாக ஏன் கொள்ளக்கூடாது என்ற வினா எழும் அன்றோ ஆகவே இதன் உண்மைத் தத்துவார்த்தத்தை அவசியம் ஆராயவேண்டியிருக்கின்றது இதன் உணமைத தத்துவார்த்தத்தை நமது நண்பரொருவர் பினவருமாறு கூறியிருக்கின்றார். மயில் காரமேகத்தைக் கண்டு களிக்குந் தன்மையது, கார்மேகமோ இருள் நிறைந்தது, இருள் அஞ்ஞானத்தைக் குறிததலின் அஞ்ஞானம் கீழிருத்தல் வேண்டும் சேவல் பகலை விரும்பி இரவில் ஜாமந்தோறும் உறக்கத்தினின்று நீங்கி விழித்தெழுந்து கூவுந் தன்மையது. பகலோ ஒளி நிறைந்தது, ஒளி ஞானத்தைக் குறித்தலின் ஞானம் மேலிருததல்வேண்டும் என்று இவ்வாறுகூறினர். இதன் உண்மை எப்படி இருப்பினும் நம் நண்பர் கூறியது ஏகதேசப் பொருத்தமாகவே இருக்கின்றது. இதுபோலவே ஒருவர் நான்காமிடம் மாதுருஸ்தானம், ஐந்தாமிடம் புத்திரஸ்தானமென்பதை ஐந்தாமிடம் மாதுருஸ்தானமென

வும், நான்காமிடம் புத்திரஸ்தானமெனவுங் கூற முற்படின் அப்போது பாவக தத்துவார்த்தம் அவசியமாதலை அறிதல் வேண்டும்.

"எந்தத்தா னத்தின் பலனதுஞ் சொலுங்கால்
இயம்புதல் உதயமாய் வைத்தே
பந்தித்த இராசிப் பன்னிரண்டை யுந்தான்
பாந்தமாய் அடைவிலே பார்த்து
சிந்தித்த முறையாய்ப் பலன்களைத் தெரிந்து
செப்புவர் குருகடாட் சத்தால்" (ஜாதக சிந்தாமணி)

என்றபடி நோக்குங்கால் இலக்கினத்துக்கு நாலாமிடம் மாதுருஸ்தானம் ஆதலால் அதை மாதிரு லக்கினமாக வைசதுப்பார்க்க அதற்கு 7-ஆமிடமான 10-ஆம் இடம் மாதுருவின் புருஷனுகிய ஜாதகன் தந்தையினது இடமெனவும், மூன்றுமிடம் பதினோராமிடம் கனிஷ்ட ஜேஷ்டசகோதரர் களின் ஸ்தானங்கள் ஆதலினால் அவைகட்கு 9-ஆமிடங்கள் முறையே ஜாதகன் லக்கினமுதல் 11-ம் 7 ம் கனிஷ்ட ஜேஷ்ட சகோதரர்களின் தகப்பனுடைய ஸ்தானம் எனவு கொள்ளலாகாதோ? எனவும் வினவுவாராயின் அப்போது பாவக நிர்ணயத்தின் உண்மைத் தத்துவார்த்தங்களைச் சரியாக, அறியாத எம்போல்வார் என்செய்வர்? எங்கும் சோதிட நூற்களில் வியக்தமாக (விளக்கமாக) இதன் தத்துவார்த்தங்கள் கூறப்படாமையினுலும், நாமும் இதைப்பற்றி இதுகாறும் ஆராய்ந்திலாமையாலும் சரியான பதிலுரைக்க இயலாதன்றோ? ஆகவே இந்த வினவின்படி நோக்குங்கால் ஒரு ஜாதகனுக்கு தகப்பனுடைய ஸ்தானம் 9-ஆமிடம் என்ற விதிக்கு முரணுக 10-11-7-ஆமிடங்களுங்கூட தகப்பனுடைய ஸ்தானங்களாகின்றதென்னும் சங்கை உண்டாகின்றதன்றோ? ஆனுல் சங்கையை பின்பு கூறப்போகும் நியாயத்தால் தீர்த்துக்கொள்ளுதற்கு முன்பு இங்கு அவசியமாக சிறிது கூறப்படும்.

மூலம் ஆகிய மூர்த்தி வீமேசர்கள்
முதிய தந்தை மதிஉற தாயரே
கோல அஞ்செழுத்து ஆம்குரு வெள்ளிசேய்
கோதில் தூதுவன் வான்சனி கொண்டதே
கால கற்பம் முடிவுபேர் அண்டமும்
காணு மேபுல் உயிர்பிண்ட காரணம்
சீல நூல்மறை ஆகமம் தத்துவம்
தேவர் கோன்அக் கரத்தால் செருக்குமே.

உலகத்துக்கெல்லாம் ஆதிமூர்த்தியாகிய சாக்ஷாத் வீமநாதருடைய வலக் கண்ணுகிய சூரியன் உயிராகிய தந்தையாகவும், இடக்கண்ணுகிய சந்திரன் உடலாகிய தாயாகவும், தனது திரிநேத்திரமான ஐம்பத்தோர் அட்சரத்துக்கு ஆதாரமான பஞ்சாக்ஷரமே பஞ்சபூதங்களுக்கும் ஆதேயமான நகாரமான பிருதிவு குருவாகவும், மகாரமான அப்பு சுக்கிரனுகவும் சிகாரமான தேயு குஜனுகவும், வகாரமான வாயு புதனுகவும், யகாரமான ஆகாயம் சனியாகவும, இவற்றின்சப்தம் சனியினிடமாகச்செல்லவும், இரசம் சுக்கிரனிடமாகச் செல்லவும், ரூபம் குஜனிடமாகசெல்லவும், கந்தம்குருவினிடமாகச் செல்லவும், இப்படி தத்துவங்களை அமைத்து உலகங்களும், ஊழிகளும், காலங்களுமாக நடக்க அகார, உகார, மகார, விந்து, நாதமே ஆதாரமாக

இடைகலை பிங்கலை சுழிமுனை என்கிற சூத்திரக்கயிற்றினால் இந்த நவக்கிரகங்களைச் சரியாய் நிறுத்தித் திருவிளையாடல் கொண்டருளும் வீமநாதர் அருளினாலே நல்வினை யிடமாகச் சுவர்க்காதி லோகங்களும், மோட்சமும் சுபக்கிரகங்களால் வரும் தீவினையிடமாக நரகமும், வறுமை வாதைகளும் பாபக்கிரகங்களால் வரும். இந்தப்படி அண்டபிண்டத்துக்கும் ஆகும் என்று கண்டு சொல்வது.

முன்னே எடுத்துக்கூறிய வசனத்தினால் சூரியன் உயிர், சந்திரன் உடல் என்பதும், ஜீவாம்சமான சூரியன் தந்தை, சரீராம்சமாகிய சந்திரன் தாய் என்பதும் நன்கு போதரும். ஆதலால் சூரிய சந்திரர்கள் உயிர் உடலுக்குக் காரணபூதர்கள் ஆவர். இஃது யாதுபற்றி எனின்? பிறக்கும் சிசுவானது சூரியாம்சமான தந்தையிடத்திலிருந்து ஜீவனையும், சந்திராம்சமான தாயினிடத்திலிருந்து மற்றைய் அந்தக்கரணாதிகளையும், தோல்-மாமிசம் உதிரம் முதலியவற்றையும் அடைந்து பிறக்கின்றதென்னும் சுருதி வசனத்தின் உண்மையினால் என்றறியலாம். இதுவன்றி சூரிய சந்திரர்கள் முறையே பிதர் மாதரு காரர்களாயின உண்மையை காரகப்படலத்தில் நன்கு விளக்கப்பட்டிருத்தலின் ஆண்டு அறிதல்வேண்டும். சர்வ ஜீவகோடிகளினுடைய உயிர்க்கதிபனாகிய சூரியனுடைய மண்டலத்திற்கு நேராகக் கீழ்பாகத்தில், கிழக்கு க்ஷிதிஜ ஸ்தானத்தில் "இராசீநாம் உதயோ லக்நம்" என்றபடி உதயஸ்தானத்தில் காணப்படும் இராசியே இலக்கினமாதலாலும் பூமத்தியம் சூரியமத்தியம் என்னும் இரு வேறுவகைத்தான கோட்பாடு (சித்தாந்தங்) களில் பூமத்திய சித்தாந்தத்தின்படி நோக்குங்கால் சூரிய மண்டலத்திலிருந்து 4-வது மண்டலம் சந்திரமண்டலமாதலாலும், சூரிய மண்டலத்துக்கு நேர்க் கீழேயுள்ள இலக்கினத்திலிருந்து எண்ணவரும் நான்காவது ஸ்தானம் மாதருஸ்தானம் என்று வகுத்தனர் மகரிஷிகள் என்பது திண்ணம். இதில் எட்டுணையும் ஐயமில்லையென்பது அறிஞர்கள் சம்மதம். ஐயமுளதேல் உண்மை இன்னதென்பதை அறிவித்தல் அறிஞர்களின் கடமையாகும். இனி பிதிர் பாவகத்தைப்பற்றி ஆராய்வோமாக. சூரியமண்டலமும் அதைச் சுற்றி இயங்குகின்ற ஏனைய கோளங்களும் சேர்ந்து சூரிய சம்பிரதாயம், அல்லது ஒரு சூரிய அண்டம் என்று சொல்லப்படும். சூரியனைச் சுற்றி இயங்குங் கோலங்கள் சூரியனிடத்திலிருந்தே ஒளி-உஷ்ணம்-பிராணன் முதலான சக்திகளைப் பெற்று விளங்குகின்றன. இது சாதாரணமாக யாவரும் ஒப்புக்கொண்ட விஷயம். சூரியனைச் சுற்றி வானவெளியில் இயங்குங் கோளங்கள் ஏழு. இந்த ஏழு கோளங்களும் ஒருங்கே சேர்ந்து பிராணசக்தி விளங்கும்வண்ணம் அமைந்து இறைவனுக்கு ஒரு சரீரம்போன்றனவாகும். இந்த ஏழு கோளங்களும் இறைவன் சரீரத்தின் பல அங்கங்கள் அவயவங்களாக விளங்குகின்றன. ஒவ்வொரு கோளங்களும் பிராணகலையான இறைவன் சக்தியினால் இயங்குகின்றது. இவைகள்தான் பூமி-சந்திரன்-புதன்-சுக்கிரன்-செவ்வாய்-குரு-சனி என்னும் கிரக கோளங்களாகும். வானவெளியில் நமக்குப் பிரத்தியட்சமாய் தெரியுங் கோளங்கள் ஏழாயினும், கிரகணகாலம் தவிர்த்த ஏனைய காலங்களில் நமக்குத் தென்படாது. அப்பிரத்தியட்சமாய் சாயை வடிவமாகவுள்ள தமோகிரகங்கள் என்னும் இராகு கேதுக்களின் மண்டலங்கள் இரண்டையுங்கூட்டி கிரகங்கள் ஒன்பதெனக் கூறும் உண்மையை வேதாகம புராண இதிகாசங்களும் சோதிட சாஸ்திரமுங் கூறுகிற்கும்,

ஆகவே கிரகங்கள் ஒன்பது என்பது யாவரும் நன்குணர்ந்த விஷயமாகும். சூரியாண்டத்தைப்பற்றிக் கூறிய ஏழு கோளங்களில் நாம் வசிக்கும் இப்பூமியும் ஒன்றாகும். கிரகவரிசை கிரமங்கள் வானவெளியில் வேறு வகையாக இருப்பினும் வேதாகம புராணேதிகாசங்களில் சூரியன் - சந்திரன்-செவ்வாய்-புதன்-குரு-சுக்கிரன்-சனி இராகு-கேது என்று எண்ணப்படுகின்றது. அண்டாண்டத்தில் தலைமைபெற்று விளங்குவது சூரியமண்டலமாகும். தேவர்களை அர்ச்சிக்குங்கால் பாதாதிகேசாந்தமாக அர்ச்சித்தல் மரபாதலினால் கேதுவிலிருந்து எண்ண ஒன்பதாவது கிரகம் சூரியனாகின்றான், பூமி கேதுவும், பூச்சாயை இராகுவுமென்பது சோதிட சித்தாந்த சம்மதம். ஆகவே இலக்கினமே பூமி என்பதுங்கூட சோதிட சாஸ்திர சம்மதம். ஆகவே அண்டத்திலுள்ள தர்மம் பிண்டத்துக்குமாமென்ற விதிப்படி நோக்க பிண்டாண்டமாகிய இலக்கினத்திலிருந்து எண்ணவரும் ஒன்பதாவது ஸ்தானம் பிதிர்ஸ்தானமெனவகுத்தனர்மகரிஷிகள்போலும். அண்டாண்டத்தில் நவக்கிரகங்களிருப்பதொப்ப, பிண்டாண்டத்தில் நவத்துவாரங்களிருப்பதனாலும், இந்த நவத்துவாரங்களில்சிறந்தது நேத்திரமாதலினாலும், வலது நேத்திரம் சூரியாம்சமாதலாலும், அண்டாண்டத்தில் சிறந்து விளங்கும் சூரியன் பிதிர்காரகனாதலாலும், பிண்டாண்ட ஸ்தானமான இலக்கினத்தினின்றும் (கிரக வரிசையில் பாதாதி கேதுமுதல்) கேசாந்தம் (சூரியன்) வரை எண்ணவருவது ஒன்பதென்னும் இலக்கமாதலாலும்ஒன்பதாவது ஸ்தானம் பிதிர்ஸ்தானம் என்பதுமொன்றாம்.

"காலாத்மாதி நக்ருத்ம நஸ்துஉறி நகுஸ்ஸத்வம்
குஜோக்ஞோ வசோஜீவோ க்ஞாந ஸுகேவிதச்ச
மகநோதுஃ கந்திநே சாத்மஜஃ"

எனவரும் ஆசிரியர் வராஹமிகிரனார் வசனத்தின்படி காலபுருஷனுக்குச் சூரியன் ஆத்மாவாகவும் சந்திரன் மனதாகவும, செவ்வாய் பலபுஷ்டி (தேக வன்மை) யாகவும், புதன் வாக்காகவும், குரு ஞானசுகமாகவும், சுக்கிரன் மன்மதனாகவும், சனி துக்கமாகவும்இருக்கிறார்கள் என்பது நன்கு விளங்கும்.

இந் நியதியினால் எங்ஙனம் அண்டாண்ட சொரூபனாகிய காலபுருஷனுக்குச் சூரியாதி கிரகங்கள் ஆத்மா முதலானவைகளாக இருக்கின்றார்களோ, அங்ஙனமே பிண்டாண்ட புருஷனாகிய ஒரு ஜாதகனுக்குஞ் சூரியாதி கிரகங்கள் ஆத்மாமுதலானவைகளாக இருக்கின்றனர் என்றுசோதிட நூற்கள் கூறுகிற்கும். ஆதலின் காலபுருஷனுடைய சரீர பிரதான்னிய சக்தியாகிய ஜீவன் சூரியனெனபடியினாலும், ஜாதகபுருஷனின் சரீரத்துக்கும் பிரதான்னிய சக்தியாகிய ஜீவன் சூரியனாகின்றான் என்பது நன்கு பெறப்பட்டது. ஆகவே அண்டாண்டத்திலுள்ள கிரகங்கள் சூரியன்முதல் கேதுவரை ஒன்பதாகையினாலும், கேதுவிலிருந்தெண்ண ஒன்பதாவது கிரகம் சூரியனாதலாலும், பூமியே இலக்கினமாகையாலும், அது கேதுவின் அம்சமாதலாலும், பிண்டாண்டமாகிய இலக்கினத்திலிருந்து எண்ணவரும் ஒன்பதாவது இடமே பிண்டாண்டமாகிய சரீரத்துக்கு ஜீவனைத்தந்த சூரியாம்சகனாகிய தந்தையின் இடமென்பது மறுக்கொணாத ஓர் சிறந்த உண்மையாகும்.

இதுகாறுங் கூறிப்போந்தவற்றால் மாதுரு பிதிர்ஸ்தான நிர்ணயங்களின் உண்மைப்பொருள் ஒருவாறு விளங்காநிற்கும். இவை ஒருவாறு நமது

சிற்றறிவுக்குப் புலனாகியவற்றைக் கொண்டு கூறப்பட்டனவாகும். பிழையுளதேல் பொறுத்து ஈதென்பதை அறிஞர்கள் விளக்கி எழுதுவார்களாயின் நன்றியறிதலை என்றும் மறவேம் என்ப. மாதுரு பிதுர் என்ற சப்தங்களின் பொருள் இன்னதென்பதைச் சிறிது விளக்குவோமாக. பாதீதி பிதா; பா = ரக்ஷணம், ஆகவே சிசுவை இரட்சிக்கிறவனாதலால் பிதா என்று பெயர். அகாராந்தமான பிதாவென்னும் இச்சப்தத்தைப் பித்ரு எனச் சிலர் ருகாராந்தமாகவும் வழங்குவர். பித்ரு என்பது பிதிர் என்று தமிழில் வழங்குவதாயிற்று. மாதிவர்த்தேகர் போத்ரேதி மாதா மாங்மா நேவர்த நேச கர்ப்பம் இவளிடத்தில் இருக்கிறபடியால் மாதா என்று பெயர். அகாராந்தமான இச்சப்தத்தைச் சிலர் மாத்ரு என ருகாராந்தமாகவும் வழங்குவர். மாத்ரு என்பது மாதுரு எனத் தமிழில் வழங்குவதாயிற்று. துவாதசபாவங்களுள் முதன்மைபெற்றது தேகஸ்தானமாகிய இலக்கினபாவகமும், பின்பு இத்தேகோற்பத்திக்குக் காரணபூதர்களான மாதுருபிதிர்ஸ்தானங்களாகிய நான்காம் பாவகம், ஒன்பதாம் பாவகமும் மேலே எடுத்துரைத்த நியாய முகத்தால் நமக்குச் சித்திக்கப்பெற்றது. இந்நியதியின்படி நமக்கு இலக்கின பாவகத்திலிருந்து நோக்குங்கால் முதல்முதல் சித்தித்தது நான்காம் பாவகமும், அதன்பின்னர் சித்தித்தது ஒன்பதாம் பாவகமுமாகும். "தாயார் பூர்வரூபம், பிதா உத்தரரூபம், சந்தானம் சந்தி, பிரஜைகளை உற்பத்தி செய்தல் சேர்க்குங் கருவி" என்னும் தைத்திரியோபநிஷத்து, சீக்ஷாவல்லி, முதல் அத்தியாயத்து முதல் அனுவாகத்தின் பிரஜா உபாசனையின் வசனத்தின்படி இலக்கின முதலாகவுள்ள பன்னிரண்டு பாவங்களின் சக்கரத்தில் முதல்முதல் சித்தித்தது பூர்வரூபமாகிய மாதுருஸ்தானமும், பின்னர் சித்தித்தது உத்தரரூபமாகிய பிதிர்ஸ்தானமுமாமென்பது நன்கு விளங்குதலுணர்க. மற்றும் "அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்" என்னும் நமது மூதாட்டியாராகிய ஔவைப்பிராட்டியாரின் திவ்விய திருவாக்கும் இதனை வலியுறுத்துதலுணர்க. சந்தானம் சந்தி எனவே பிதா ஸ்தானத்திலிருந்து மாதா ஸ்தானம்வரைக்கும் (9-ஆமிடத்திலிருந்து 4-ஆமிடம்வரைக்கும்) உள்ள பாவகங்கள் எட்டு; இவற்றின் பாகைகள், பாவகம் ஒன்றுக்குச் சராசரி 30-பாகைவீதம் 240-ஆகும். இதன் பாதி 120-பாகைகளாகும். ஆதலால் பிதிர் மாதுர்ஸ்தானங்களின் சந்திஸ்தானமாகிய ஜாதகோற்பத்திஸ்தானம் பிதுர்ஸ்தானத்திலிருந்து 120-பாகைக்குமேலுள்ள இடமென்பது நன்கு போதரும். ஆதலால் அதுவே இலக்கின பாவகமென நன்கு விளங்குதலுணர்க. தாயைவிட தந்தை மிக்கவன் என்பதை மாதுரு பாவக எண்ணிக்கையான நான்கும், பிதுர் பாவக எண்ணிக்கையான ஒன்பதும் நன்கு விளக்கும். எங்ஙனமெனின்? நான்கைவிட ஒன்பது பெரிதாகலின் என்க. பிறக்கும் சிசு முதலில் தாயை அறிகின்றது. அவள் பிறகு அச்சிசுவுக்கு "இவர் தந்தை" என்று கற்பிக்கின்றாள். ஆதலால் உலக அனுபவத்திலும், சுருதி வசனத்திலும் நாம் முன்னறிந்த தெய்வம் தாயாரும், பின் அறிந்த தெய்வம் தந்தையுமானாலும் தாயைவிட தந்தை பெரியவர் என்பது நன்கு பெறப்பட்டதுணர்க. இதுவரை கூறிப்போந்தவற்றால் ஒரு ஜாதகனுடையவும், அவனது தாய் தந்தையர்களுடையவும் பாவகங்கள் இன்னதென்பது நன்கறியலாம். இனி ஏனைய பாவகங்களுள் மிக முக்கியமான சகோதர புத்திர மாதுல களத்திர ஸ்தானங்களை நிர்ணயிப்போமாக.

---

# இலக்கின பலன்

## இரட்டைப் பிறவி

ஆடுஅரி ஏறுமான்வில் அலரிஉற்று ஏனையோர்கள்
நாடியே உபயலக்கி னத்தினிற் பலமாய்நண்ணில்
கூடிய குழவிரண்டாங் குசன்ஏழிற் கதிரோனெட்டில்
நீடிடிற் சரத்தின்மற்றோர் நின்றிடிற் பலன்களில்லை.

(இ-ள்) மேடம் இடபம் சிம்மம் தனுசு இவற்றிலொன்றில் சூரியன் இருக்க, மற்றைய கிரகங்கள் உபயராசிகளில் பலம்பெற்று இருந்தால் கர்ப்பத்திலிருந்து இரண்டு குழந்தைகள் பிறக்கும். அங்காரகன் ஏழாமிடத்தில் இருக்க, சூரியன் எட்டாமிடத்திலிருக்க, மற்றைய கிரகங்கள் சராராசிகளில் இருந்தால் (கர்ப்பத்திலிருந்து) இரண்டு குழந்தைகள் பிறக்கும். ஆனால் இது பிரயோசனமற்றது ஆகும் எ-று.

(வி-ரை) இச்செய்யுளில் இருவித இரட்டை ஜனன யோகத்தைப் பற்றிக் கூறப்பட்டுள்ளது. முதல்யோகம் பிருகஜ்ஜாதகம் 4 வது கிஷேக அத்தியாயத்து 4-வது சுலோகத்திற் கூறிய யோகமாகும். இரண்டாவது யோகத்துக்கு முதல்வழி நூற்களில் யாண்டும் மேற்கோள் காணக்கிடைத்தில.

*சதுஷ்பாதகதேபானௌ சேஷைவீர்யஸமந்விதைः*
*த்விதநுஸ்தைச்சயமளௌ பவதः கோசவேஷ்டிதௌ.*

(இ-ள்) சூரியன் நாற்கால் இராசிகளில் இருக்க, மற்றக் கிரகங்கள் பலமுள்ளவர்களாய் உபயராசிகளிலிருந்தால் கர்ப்பப்பையினால் சுற்றப்பட்ட இரட்டைக் குழந்தை யுண்டாகும் எ-று.

இச்சுலோகக் கருத்தைக் கொண்டதே இம்முதற்செய்யுளின் இரண்டரை அடிகளின் பொருளாகும் என்பதில் எட்டுணையும் ஐயமில்லை அங்ஙனமிருக்க, நாற்கால் இராசிகளான மேஷம்-இடபம்-சிங்கம் தனுசு பிற்பாகம், மகரம் முற்பாகம். ஆக இந்த ஐந்து ராசிகளை மேசெய்யுளில் கூறியிருத்தல் வேண்டும். மூற்பிரதிகளில் இவற்றுள் மூன்று ராசிகள் மட்டும் காணப்படுகின்றது. ஆதலின் அதனைத் திருத்தி யமைத்தாமென்றறிக.

*சூர்யச் சதுஷ்பதஸ்தச்சேஷாः த்விசரீரஸம்ஸ்திதாபலிநः*
*கோசாவேஷ்டிததேஹௌ யமளௌ கலுஸம்ப்ரஜாயேதே.* (சாராவளி)

*ரவௌசதுஷ்பதஸ்திதைபரைः பலாந்விதைஸ்ததா*
*யமௌஸ்த ஏவகோச வேஷ்டிதௌ.* (ஜம்பு ஓரை)

இவைகளும் முற்கூறிய பொருளுடையதே யாதலின் உரை எழுதவில்லை. (421)

## சர்ப்ப ஜனனம்

சந்திரன் இருந்தராசி தனிற்குசன் திரயக்காணம்
உந்திட சசிக்கிரண்டில் உறுபதிஞென்றில் நல்லோர்
வந்துதான் இருக்கில்பெற்ற மகவுடன் பிறக்கும்பாம்பு
செந்திருமர்தே பாம்பாய்ச் செனிக்கினும் செனிக்குந்தானே.

(இ-ள்) இலக்குமியைப்போன்ற பெண்ணே! சந்திரன் இருந்தராசியில் செவ்வாய் திரேக்காணம் உதயமாக, அந்தச் சந்திரனுக்கு இரண்டு பதினொன்றில் சுபக்கிரகங்கள் இருந்தால் பிறந்த குழந்தையுடன் சர்ப்பம் பிறக்கும்; அல்லது பாம்பாகவே உதித்தாலும் உதிக்கும் எ-று.

சசாங்கேபாபலக்நேவா வ்ருச்சிகேசத்ரிபாககே
சுபை꞉ ஸ்வாயஸ்திதைர்ஜாத꞉ ஸர்பஸ்தத்வேஷ்டிதோஅபிவா.

(பிருகஜ் ஜாதகம்)

(இ-ள்) சந்திரன் செவ்வாயின் திரேக்காணத்திருக்க, அவனுக்கு 2-11-ல் சுபர்களிருந்தால் பாம்பு பிறக்கும், அல்லது இலக்கினம் பாபக்கிரக ராசியாகி (இலக்கினம்) செவ்வாயின் திரேக்காணமானால் இலக்கினத்திற்கு சுபர்கள் 2-12-ல் சுபர்கள் இருந்தால் பிறந்த குழந்தை பாம்பினால் சுற்றப் பட்டதாக இருக்கும் எ-று.

பௌமத்ரேஷ்காணகேசந்த்ரே ஸௌம்யைர் ஆயதநஸ்திதை꞉
ஸர்ப்பஸ்தத்வேஷ்டிதஸ்தத்வத் பாபலக்நேவிசிதிசேத். (கர்க்கர்)

பௌமத்ருகாணகதேசந்த்ரௌ லக்நேவாஸம்ஸ்திதேவதேஜ்ஜாதம்
த்வ்யேகாதசகைஸ்ஸௌம்யைர் அஹிவேஷ்டிதகோபுஜங்கோவா.

(சாராவளி)

இவ்விரு சுலோக வசனங்களும் பிருக்ஜ்ஜாதக சுலோக வசனத்தின் பொருளுடைத்தாதலின் உரை வரையவில்லை என்க.

முற்பிரதிகளில் ''சந்திரன் பாவராசி'' என்று இருந்ததை ''சந்திரன் இருந்தராசி'' எனவும், ''உறுபன்னிரண்டில்'' என்றிருந்தை ''உறுபதி னொன்றில்'' எனவும் திருத்தியமைக்கப்பட்டதை சோதிட விற்பன்னர்கள் நன்கு உணர்வார்களாக. இதன் உண்மைப்பொருளை உள்ளவாறு உணராத ஒருசில்லோர் ''சந்திரன் பாவராசியில் இருந்தால்'' என்று மயங்கி பொருள் கூறுகிற்பர். அது பொருந்தாதென்க. இலக்கினம் பாவராசியாய் இருந்தால் இந்த சம்பவம் உண்டாமென்றறிக. (422)

## பிதா பரதேசம்

**நாலிடத் ததிபன் பாக்கி யாதிபன் இலக்கி னத்தில்**
**சாலவே நல்லோர் பார்க்கத் தான்உறில் ராச பூச்சியன்**
**கோலிய சனிஒன்று அல்லால் குசன்ஏழில் உறினும் சுங்கன்**
**மாலிவர் நடுவில் இந்து மருவினும் பிதாவேற் றூரே.**

(இ-ள்) நான்காமாதிபதி, பாக்கியாதி (ஒன்பதாம் பாவக)பதி இவர்கள் இலக்கினததிலிருக்க, அவர்களை சுபக்கிரகங்கள் பார்க்கப் பிறந்தவன் இராசபூசிதனுவான். இலக்கினத்தில் சனி இருந்தாலும் அல்லது ஏழில் செவ்வாய் இருந்தாலும், சுக்கிரன் புதன் இவர்களின் நடுவில் சந்திரன் இருந்தாலும் தகப்பன் அயலூரில் இருப்பான் எ-று.

(வி-ரை) தர்மவாஹந ராசிசௌ லக்நஸம்பந்தி நௌயதி
ஜீவத் ருஷ்டிபு தௌதஸ்ய ராஜ்வஸ்யாதி பூஷணம்.

(ஜாதக பாரிஜாதம்)

(இ-ள்) சுகபாக்யாதிபர் இலக்கினத்திலிருந்து குருவினால் பார்க்கப் பெற்றால் ராஜவசியம், ஆபரணம் முதலியன உண்டாகும் எ-று.

"க்ஞ சுக்ரயோர் மத்தியகதே அதவா அப்ஜேயமோ
தயேவாகு ஸூதேஅஸ்த ஸம்ஸ்தே பிதுஃ பரோ
க்ஷஸ்ய ததாஹி ஜந்ம" (ஜம்பு ஓரை)

(இ-ள்) புதன் சுக்கிரன் மத்தியில் சந்திரன் இருந்தாலும், அல்லது சனி இலக்கினத்தில் செவ்வாய் ஏழில் இருந்தாலும் பிறக்கும்போது தகப்பன் அன்னியவூரில் இருந்தான் எ-று.

உத்யாஸ்தே அபிவாமந்தே குஜேவாஸ்தம் ஸமாகதே
ஸ்திதே வாந்தஃ க்ஷபாநாதே சசாங்கஸூத சுக்ரயோஃ
(பிருகஜ் ஜாதகம்)

(இ-ள்) இலக்கினத்தில் சனி இருந்தாலும், அல்லது ஏழில் செவ்வாய் இருந்தாலும், சந்திரன் புத சுக்கிரர்களின் நடுவிலிருந்தாலும், தகப்பன் சமீபத்திலில்லாமல் வேற்றூரில் இருக்கும்போது பிறந்தவன் என்றறிதல் வேண்டும் எ-று.

இந்த முதல்வழி நூற்களைக்கொண்டு இச்செய்யுளை திருத்தியமைக்கப் பட்டிருக்கின்றது. இதுவே சரியானமுறை. இதில் எட்டுணையும் ஐயமில்லை என்பதை அறிஞர்கள் ஆழ்ந்துநோக்கி புண்மை உணர்வார்களாக. (423)

**பண்ணும்லக் கினத்தை இந்து பாராமல் இருக்க இந்து**
**நண்ணிய விராசி யங்கம் நவிற்சர ராசி யாக**
**ஒண்ணிய அவற்றின் சந்தி உற்றிட உதித்தான் ஆகில்**
**திண்ணமாய்த் தகப்பன் தேசாந் திரத்தினில் திரிவன் தானே.**

(இ-ள்) நன்மையைச்செய்யும் இலக்கினத்தைச் சந்திரன் பார்க்காமல் சரராசிகளில் அல்லது சராம்சங்களின் சந்தியில் இருக்கப்பிறந்தவனுடைய தகப்பன் கட்டாயம் அப்போது தேசாந்திரத்தில் சஞ்சாரம் செய்வான் எ-று. ஒண்ணிய=பொருந்திய, திண்ணம்=நிச்சயம்

(வி-ரை) "தநும்ந வீக்ஷதேவிதௌ சரர்க்ஷகாம் சஸந்திகே
பரோக்ஷஸம் ஸ்திதஸ்யவா பிதுர்ஜநுஸ்ததா பவேத்"
(ஜம்பு ஓரை)

(இ-ள்) சந்திரன் இலக்கினத்தைப் பார்க்காமல் சரராசி அல்லது சர அம்சங்களின் சந்தியிலிருக்கப் பிறந்தவன் தகப்பன் பிறக்குங் காலத்தில் தேசாந்தரத்தில் திரிந்துகொண்டு இருப்பான் எ-று. (424)

**பரிதி பத்துஇடம் அகன்று பற்றிய சரவி ராசி**
**மருவிடில் தந்தை தேசாந் திரத்துஉறும் மற்றும் பாவர்**
**உரிமையாம் பாவ ராசி உறில்அது கதிர்க்கு ஐந்தேழ்**
**பெருமொன்பான் இடமேல் தந்தை சிறையுளான் பரதே யத்தில்.**

(இ-ள்) சூரியன் பத்தாமிடத்தைவிட்டு (பதினொன்று பனிரண்டா மிடங்களிலிருக்க அவை) சரராசியாயிருந்தால் பிறந்தவன் தந்தை அந்நிய

தேசத்திலிருப்பான். மற்றும் பாபர்கள் பாபகிரக ராசிகளான மேடம் சிங்கம் விருச்சிகம் மகர கும்பங்களிலிருக்க அவைகள் சூரியனுக்கு 5-7 9-ஆக இடங்களாக இருக்குமானால் பிறந்தவன் தந்தை அந்நியதேசத்தில் சிறையிலிருப்பான் எ-று.

(வி-ரை) தந்தை பரதேசம் என்று விளக்கவந்த இந்த செய்யுட்கள் யாவற்றிலும் "பண்ணும் இலக்கினத்தை இந்து பாராமல் இருக்க" என்ற பிரயோகத்தை உபயோகப்படுத்திக் கொள்ளல் வேண்டும். அதாவது சந்திரன் இலக்கினத்தைப் பாராதிருக்க இலக்கினத்தில் சனியிருந்தாலும், அல்லது செவ்வாய் ஏழில் இருந்தாலும், புதன் சுக்கிரன் மத்தியில் சந்திரனிருந்தாலும் பிதா பரதேசம் என்று கூறுதல் வேண்டும்.

இந்த 5-வது கவியின் முதல் இரண்டு அடிக்கும்கூட அதை உபயோகப்படுத்திக் கொள்ளல் அவசியமாகும்.

சூரியன் இலக்கினத்துக்கு 11-12-ல் சரராசியில் இருந்தால் தகப்பன் வேறு தேசத்திலிருக்கும்பொழுது பிறந்தவன் என்று கண்டுகொள்ளவும். ஆனால் சந்திரன் இலக்கினத்தைப் பார்க்காமல் இருந்தால்தான் மேற்சொன்னது ஏற்படும். இவ்விதம் கூறியதனால் சந்திரன் ஜனன லக்கினத்தைப்பார்க்காதிருக்க, சூரியன் 11-12-ல் சரத்திலிருந்தால் தகப்பன் அந்நிய ஊரில் இருந்தான் என்றும், திரத்திலிருந்தால் ஜனித்தவூரில் இருந்தான் என்றும், உபயத்தில் இருந்தால் தந்தை தனதுதேசத்திலும், வேறு தேசத்திலுமின்றி நடுவழியில் இருந்தான் என்றும் அறிதல்வேண்டும் என்க.

பிதுர்ஜாதஃ பரோக்ஷஸ்ய லக்நமிந்தாவ பச்யதி
விதேசஸ்தஸ்ய சரபே மத்யாத் ப்ரஷ்டே திவாகரே.

(பிருகஜ் ஜாதகம்)

(இ-ள்) இலக்கினத்தைச் சந்திரன் பாராதிருக்க, சூரியன் 11-12-ல் சரராசியில் இருந்தால் தகப்பன் அந்நிய தேசத்தில் இருப்பான் எ-று.

ஓராம நீக்ஷமாணே பிதரி நகேஹஸ்திதே சசிநி ஜாதஃ
மேஷூ ரணேச் ச்யுதேவா சரபேபாஶௌ விதேசகதே. (சாராவளி)

(இ-ள்) (இதுவும் முன்பொருளை புடையதாகும்) இனி பின் இரண்டு அடிகளில் கூறிய விஷயத்திற்கு மேற்கோள் வருமாறு:—

க்ரூரர்க்ஷகா க்ரூரகா யதிஸ்யுர்திவாமணேர் தர்மசுதா அஸ்தஸம்ஸ்தா
ஸ்திராதிபே அர்க்கே ஜநகோ அந்யதேசே பத்தஃ (ஜம்பு ஓரை)

(இ-ள்) சூரியனுக்கு 5-7-9-ஆமிடங்கள் பாவராசியாகி அவற்றுள் பாபகிரகங்களிருக்க, சூரியன் சரராசியில் இருந்தால் பிதா அன்னியதேசத்தில் சிறையிருப்பான், ஸ்திரராசியிலிருந்தால் சுயதேசத்தில் சிறையிருப்பான், உபயராசியிலிருந்தால் சுய அன்னிய தேசங்களிலன்றி வழிமார்க்கத்தில் சிறையிருப்பான் எ-று.

சூர்யாச்ச பஞ்சமேத்யூநே நவமேக்ரூரகேசராஃ
க்ரூரைர்த்ருஷ்டாஃ ஸ்திரோராசௌ ஸ்வதேசே பந்தம்பிதுஃ
சரேந்யதேசேமார்கேச த்விஸ்வஃ பாவேசபந்தநம். (சியாம சங்கிரகம்)

(இ-ள்) சூரியனுக்கு 5-7-9 ல் பாபராசியாய் பாபகிரகங்கள் இருக்க, சூரியன் சர திர உபயங்களிலிருப்பின் முறையே அன்னியதேசம், சுய தேசம், வழியிலுள்ள தேசம் இவைகளில் பிதா சிறையிலிருப்பான் எ-று.

க்ரூரர்க்ஷகதாவசோபெளள சூர்யாத்யூ நவவாத் மஜஸ்திதெள
புத்தஸ்து பிதாவிதேசக: ஸ்வேவா ராசிவசாததோவா பதி.

(பிருகஜ் ஜாதகம்)

(இ-ள்) சூரியன் சரராசிகளிலிருக்க அவனுக்கு 5-7-9 ஆமிடங்கள் பாபராசிகளாய் அவற்றள் பாபகிரகங்களிருந்தால் முறையே தந்தை அன்னிய, சுய, சுயஅன்னியமல்லாத மத்தியதேசத்தில் சிறையிலிருப்பான்.

மேஷம் சிங்கம்-விருச்சிகம்-மகர-கும்பம் இவை பாவராசிகள், மற்றும் க்ஷீணசந்திரனுல் கடகமும், பாவருடன் இருந்த புதனுல் மிதுன-கன்னியும் பாப இராசிகளாகும். செவ்வாய்-சனி பாவர்கள், க்ஷீணசந்திரன், பாபபுதன் இவர்களும் பாவர்களாவர். (425)

**சேய்க்குப்பன்ஞன்றிலிருந்து சேர்கிலோகுழவிக்கீனம்**
**ஆக்கியநல்லோர்காணி லவனைமற்றோர்வளர்ப்பர்**
**வீக்கியபாவர்காணில் வியமதாங்குழவியேகும்**
**பாக்கியரிந்தைக்காணிற் றகப்பன்வாழ்பதியிற்செனனம்.**

(இ-ள்) குஜனிருந்த ராசிக்கு லாபத்தில் சந்திரனிருக்கில் அந்தஜாதகனுக்கு க்ஷீனமுண்டு. மேற்சொன்ன அங்காரகனை சுபக்கிரகங்கள் காணில் அந்த ஜாதகனை மற்றவர் போஷிப்பர். தீய கிரகங்கள் காணில் அந்த ஜாதகன் இறந்துபோவான். பாக்கியஸ்தானுதிபதி என்னும் 9-ஆம்வீட்டையுடையவன் சந்திரனைப் பார்க்கில் அந்த ஜாதகன் தன் தகப்பன் வீட்டிலேயே பிறப்பான் என்று சொல்லுக எ-று.

(வி-ரை) உயிர்க்கதிபனென்னும் சந்திரனை தந்தை ஸ்தானுதிபதி பார்த்தால் தகப்பன் சொந்த வீட்டில் பிறப்பன் என்றபடி. பிதிர்காரகன் பார்த்தாலும், 5-ஆம் வீட்டதிபதி சேர்ந்தாலும் பார்த்தாலுங்கூட பிதுரார்ஜித மனையில் பிறப்பான் என்று , ஐந்தாம் வீட்டதிபனுன அம்மான் ஸ்தானுதிபதியாவது புதனுவது பார்த்தாலும் சேர்ந்தாலும் அம்மான் வீட்டில் பிறப்பான் என்றும், மற்றும் நீச்சக்கோட்கள் பார்க்கில் அல்லது அன்னிய கிரகங்கள் பார்த்தாலும், அன்னியர் வீட்டிலேயே பிறப்பானென்றும், கோட்களுக்கு ஏற்றவாறு சொல்லுக. குஜனுக்கு 11-ல் சந்திரனின்றுல் ஜாதகனுக்கு இடையூறென்பதை 8-ஆம் பாவகத்தால் ஆராய்ந்து கூறுவது நலம் (426)

**நீசத்தானத்தினல்லோர் நின்றுசந்திரனைக்காணில்**
**பேசுவர்மரத்தின்கீழே பிறந்திடும்பிள்ளையென்றே**
**பூசல்செய்பாபர்நீசம் பொருந்தியசசியைக்காணில்**
**ஏசுறுநீசர்வீட்டிற் பிறந்தசேயெனச்சொல்வாரே.**

(இ-ள்) சுபக்கிரகங்கள் நீச்ச க்ஷேத்திரம்பெற்று நிலவைக் காணில் அந்த ஜாதகன் மரத்தடியில் ஜெனித்த பிள்ளையென்றும் பேசுவர். நீச்சம்

பெற்ற நீய கிரகங்கள் சந்திரனைக் காணப் பிறந்தவர்கள் ஈனர்களுடைய இல்லத்தில் ஜெனிப்பான் என்றும் கூறுவர்.

(வி-ரை) பொன்னவ னீச மாகிப் பொருந்து சந்திரனைக் காணில்
அன்னவன் தரும சத்ரம் தன்னிலே பிறப்ப னென்பர்.

என்றபடி குரு நீச்சம்பெற்று சந்திரனைக் காணில் அந்த ஜாதகன் தரும சத்திரத்தில் பிறப்பான் என்றும், புதன் நீச்சம்பெற்றுப் பார்க்கில் மைதானங்களில் பிறப்பானென்றும், சனி ராகு கேது இவர்கள் நீச்சம் பெற்றுப் பார்க்கில் நீச்சஜாதியார் வீட்டில் பிறப்பானென்றும் சொல்லுக. சுக்கிரன் நீச்சம்பெற்று சந்திரனைப் பார்க்கில் ஜலக்கரையில் பிறப்பான் என்றும் கூறுவர். (427)

இந்துவு நல்லோ ரேக ராசியி லிருக்கிற் காண்கில்
பந்தமா மனித ரில்லாப் பதியிலுற் பவிக்கப் பண்ணும்
சந்திரற் கேழிற் காரி தபனனுக் கேழிற் சேயும்
வந்திடத் தந்தை தாய்க்கு வருத்தமு மரிட்ட மாமே.

(இ-ள்) சுபகிரகங்களும் சந்திரனும் ஏகராசியி லிருந்தாலும் அல்லது சந்திரனைப்பார்க்கவும் உதித்த ஜாதகன் உதவிசெய்ய மனிதரில்லாத தனியிடத்தில் ஜெனனமாகுவன். சந்திரனுக்குச் சப்தமத்தில் அதாவது 7-ஆம் ராசியில் குஜனிருக்கப் பிறந்த ஜாதகன் மாதா பிதாக்களுக்கு கஷ்டங்களும், கெண்டாதி தோஷமும் சம்பவிக்கும் எ-று.

(வி-ரை) கதிரவன் றனக்கி ரண்டிற் காறிசேர் தந்தைக் காகா
மதிதனக் கீரா றெட்டில் மைந்தன்சேர் மாதுக் காகா.

என்றபடி சூரியனுக்கு இரண்டில் சனிசேரில் பிதாவுக்கு தோஷமும், சந்திரனுக்கு 8-12-ல் சனி நிற்கில் மாதாவுக்கு தோஷமும் உண்டாகும் என்றும்,

மதியவர் பெருமை யாகி மற்றதீக் கோட்கள் பாரா
சதிரதி லாச னிற்க சத்துரு பார்வை இல்லா
திவர்கேந்திர நான்காய் நின்றால் ஏந்திஸமு மாதே கேளாய்
விதியதி லுயர்ந்த மாதா மேதினியி லிருப்ப ளாராய்.

சந்திரன் சுபக்ஷேத்திரங்களில் பெருமை பெற்றும், தீய கிரகங்கள் பார்வையின்றி மாதுருஸ்தானத்தில் குரு நின்று அதற்கு சத்துரு கிரகங்கள் பாராமல் 1-4-7-10 என்னும் இடங்களிலிருந்தால் மாதாவுக்கு தீர்க்க வயதுண்டு என்றும் சொல்வர். சூரியன் உச்சம்பெற்று திரிகோண ஸ்தானாதிபதிகள் ஆக்ஷியாயும், சந்திரன் குரு இவர்கள் திரிகோண ஸ்தானங்களிலும், இராகு கேது அங்காரகன்-சனி-புதன் இவர்கள் 6-8 12 இவ்விடங்களில் சேரில் பிதாவுக்கு நல்ல செல்வமும், தீர்க்க வயதும் உண்டென்று கேரளத்தில் சொல்லியபடி பாவகங்களின் சுபாசுபம் தெரிந்து சொல்லுக. (428)

சவுரிக்கே ழிடத்திற் செவ்வாய் தானுறிற் குழவிக் கீனம்
பவுரிகொ ளிலக்கி னுதி பாவரோ டிசைந்தா றெட்டில்
உவமிகு பன்னி ரண்டி லுற்றிடில் ரோக வானும்
நுவல்சென்ம லக்கி னுதி பலமிலா திருக்கி னேயாம்.

(இ-ள்) சனி நின்ற ராசிக்கு சப்தமத்தில் குஜன் சேர்ந்திருக்கில் அந்த ஜாதகனுக்கு கெடுதியாம். இலக்கினதிபதி நீய கிரகத்தோடேற்று 6-8-12 என்னும் கொடிய இடங்களிலிருந்தால் அந்த ஜாதகன் வியாதியுள்ளவனாக இருப்பான் எ-று.

(வி-ரை) மேலேகாட்டியுள்ள வியாதியஸ்தன் என்பதை 6-8 இவ்விடங்களில் சனி இருந்தால் விஷக்கடியும் குஷ்டமும், மேலே சொல்லிய இடங்களில் சுக்கிரன் தவிர மற்ற கிரகங்களிலிருந்தால் மேகத்தில் சம்பந்தப்பட்ட வியாதி யுள்ளவனென்றும், சித்திரைநக்ஷத்திரத்தில் குஜனிருந்தால் குஷ்டமுண்டென்றும், அனுஷநக்ஷத்திரத்தில் இராகு-கேது-சனி இவர்களில் அற்ப வியாதியுள்ளவனும், 8-ல் இராகு இருக்கில் கட்டிப்பிளவையும் 9-ல் பாவகிரகங்களிருந்தால் ரோகம் உண்டென்றும் 9-ஆம் பாவகத்தால் ஆராய்ந்து சொல்லுதல் வேண்டும். (429)

ஆறுட னிரண்டி டத்தி னதிபனுங் குசனு மூன்றில்
வீறுட னிலக்கி னத்தின் மேவிற்கா தறும ரூதேல்
சீறிய செவியில் ரோகஞ் சேருநற் கணக்கன் வீட்டில்
பேறுடன் காரி நிற்கில் நபுஞ்சனுய்ப் பிறப்பன் காணே.

(இ-ள்) ஆறும் வீட்டதிபனும் இரண்டாம் வீட்டதிபனும் குஜனுடன் சேர்ந்து 8-ஆம் இராசியிலிருந்தாலும் இலக்கினத்தில் சேர்ந்தாலும் செவியறுந்துபோம். செவியறுபடவில்லையேல் ரோகம் காட்டும், சனி-புதன் வீட்டிலிருக்கப் பிறந்தவன் ஆண்மைத்தனமில்லாதவனாக ஜெனிபபான்.

(வி-ரை) மேலே சொல்லியுள்ள ரோகாதி கும்பாதி குஜன் இம்மூவரும் மறைவிடம்பெறில் காதறுபடும், அல்லது காதுரோகம் காட்டும் என்றதால் மேலேசொன்ன மூவரிலொருவர் ஆக்ஷி அல்லது உச்சம்பெற்ற சந்திரன் குரு இவர்கள் பார்த்தால் மேற்சொன்ன தோஷம் பரிகாரமாகும். சனிபார்த்தாலும் சேர்ந்தாலும் இன்னம் அதிகமாகுமென்றும் கொள்க. ()

புந்தி வீட்டினிற் பிறக்கப் புதனுரு மிடத்தி னிற்க
அந்த வாரு மிடத்தி னதிபன் லக்கினத்தி னிற்க
நிந்தையா மலியு மாவ னிலவுசன் மாதி யோடும்
மந்தனும் புதனுங் கூடில் வடிவினிற் குள்ள னுவன்.

(இ-ள்) மிதுனம் கன்னி ஜெனன இலக்கினமாக புதன் ஆறும்வீட்டில் இருக்க, ஆறும்வீட்டதிபதி இலக்கினத்தில் சேரப் பிறந்தவன் யாவரும் நிந்தை செய்யத்தக்க அலியும் பெண்ரூபவானுகுவன், ஜெனன இலக்கினதிபுடன் சந்திரனும் அல்லது சனியும் புதனும் ஒன்றுகூடிநிற்கில் அந்த ஜாதகன் வடிவு குள்ளனாக இருப்பான் எ-று.

(வி-ரை) புதனுக்கு ரோகஸ்தானம்வருவது தீதாகும். அதிலும் 6-ஆம் வீட்டதிபதி ஜென்மமேறில் களத்திரசுகம் குறைவுள்ளவனுவான் என்றும் கூறுவர். (431)

வடிவுள தகரிற் றேளின் மங்கல னிருக்க வேதான்
முடவன்லக் கினத்தி னிற்க மூன்றினிற் பிருகு மேவு

உடல்சிறு குள்ள ளுவ னுயர்குச ஞோரை யாதில்
அடல்சனி திரயக் காண மாகிடிற் சிறையி லொன்றும்.

(இ-ள்) அழகுபொருந்திய மேஷம் விருச்சிகம் இவ்விடங்களில் குஜன் ஆட்சிபெற ஜெனன லக்கினத்தில் சனிசேர 3-ஆம் ராசியில் சுக்கிரன்சேர ஜெனித்தவன் குள்ள சரீரமுள்ளவனுக இருப்பான். ஜெனனகாலப்போது குஜன் ஓரையாகவும், ஜெனன இலக்கினத்திலாவது 5-9 என்னும் இடங்களிலாவது சனி இருந்தால் அந்த ஜாதகன் ராஜாக்களால் கடுங்காவலில் இருப்பவனுவான் என்றும் சொல்லுக எ-று.

(வி-ரை) குஜன் ஓரையாகி இலக்கினத்தை சனி பார்த்தால் கடுங்காவல் இருப்பானென்றது. சூரியன்-சனி-அங்காரகன்-சுக்கிரன் இவர்கள் 10-ல்நின்றாலும், சந்திரன்-குஜன்-புதன் இவர்கள் ஒன்றுகூடி இருந்தாலும் துர்க்கருமம் செய்யப்படுவோனுவான். மீன லக்கினமாயும் குரு 3-லும் குரு நின்ற ராசிக்கு முன்னும் பின்னும் அசுப கிரகங்களிருந்தால் கடுங்காவலில் இருப்பான் என்றும் கூறுவர். (432)

வேறு

ஒன்றே ழெட்டொடு வியத்திற்சசி பாவருடனே
உத்தமர் கேந்திரத்தின்றி உயர்விழி நோக்காரேல்
நன்றிய லின்றிப் பிறக்குஞ் சேய்க்கு அரிட்டம்தானே
நவில்விய மெட்டாறுதி பாவர்களே யரயின்
வென்றியொ டாங்கிருக்கிலவன் துர்ப்பலனேஆவன்
மேவியசன் மாதிபதிதான் பாவனுகிக்
கொன்றைமுடி யோனருளா லேவிய மாறெட்டில்
கூடில் நன்மையென்றே கூறுவர் பாவலரே.

(இ-ள்) சந்திரன் பாபக்கிரகங்களுடன் கூடி இலக்கினம் ஏழாமிடம், எட்டாமிடம், பன்னிரண்டாமிடங்களில் ஒன்றில் இருந்து சுபர்கள் கேந்திரத்தில் இல்லாதிருக்க, அக்கேந்திரத்தைத் தவிர்த்து வேறு இடங்களில் இருக்கிற சுபக்கிரகங்களால் பார்க்கப்படாவிட்டால் பிறந்த குழந்தைக்கு நன்மையின்றி துன்மையே (மரணமே) யுண்டாகும். சொல்லப்பட்ட ஆறு-எட்டு பன்னிரண்டாமிடங்களுக்கு உடையவர்கள் ஆதிபத்தியத்தினுல் பாவர்களே ஆவார்கள். அவர்கள் ஆட்சி யுச்ச முதலிய பலத்துடன் அந்த இடங்களில் (அதாவது 6-8-12-வது இடங்களில்) இருந்தால் அந்தச் சாதகன் சரீரபலமில்லாதவனுய் இருப்பான். உதித்த இலக்கினுதிபதியானவன் பாபகிரகமாய் ஆறு-எட்டு-பன்னிரண்டாமிடங்களில் ஒன்றில் வீற்றிருந்தால் கொன்றைமாலையைத் தரித்த முடியையுடைய பரசிவப் பெருந்தகைப் பெருமானுடைய கிருபையினுல் அச்சாதகன் சரீர பலமுடையவனுய் இருப்பான் என்று சோதிட விற்பன்னர்கள் சொல்லுவார்கள் எ-று.

(வி-ரை) இச்செய்யுளில் சிறிது திருத்தவேண்டி யிருந்தமையின் முதல்நூலை நோக்கித் திருத்தியுளேம்:—

க்ரூரேண ஸம்யுதச்சசீ ஸ்மராந்த்ய ம்ருத்யுதঃ
கண்டகாத்ப ஹிச்சுபைர் அவீக்ஷிதச்ச ம்ருத்யுதঃ (பிருகஜ் ஜாதகம்)

(இ-ள்) சந்திரன் பாவர்களுடன் கூடி 1-7-8-12-ல் இருக்க கேந்திரத்தைத்தவிர்த்த மற்ற இடங்களிலிருக்கும் சுபக்கிரகங்கள் அவனைப் பார்க்கப் படாமலிருக்க பிறந்தவனுக்கு மாணமுண்டாகும்.

இப்படி சொன்னதினால் சுபக்கிரகங்கள் கேந்திரத்தில் இருந்தால் அரிஷ்டமில்லையென்று ஊகித்தறியவும்.

வ்யயாஷ்ட ஸப்தோ தயகே சசாங்கே
பாபைஸ் ஸமேதே சுபத்ருஷ்டி ஹீநே
கேந்த்ரேஷு ஸௌம்ய க்ரஹவர்ஜி தேஷு
* ஜாதஸ்ய ஸத்யஃ குருதே ப்ராணசம். (சாராவளி)

(இ-ள்) சந்திரன் பாபருடன்கூடி சுபக்கிரகங்களால் பார்க்கப்பட்டால் 1-7-8-12-ல் இருக்க (அச்சந்திரனுக்கு) கேந்திரங்களின் சுபர்கள் இல்லாவிடின் பிறந்தவன் சீக்கிரத்தில் மரணமாவான்.

நன்று இயல் இன்றி=நல்ல பலன் இல்லாமல், வென்றி=வெற்றி; அஃது பலமுடைத்தா யிருத்தல், துர்ப்பலன் = தேக பலக்குறைவு, மேவிய=பிறந்த, கொன்றைமுடியோன் =பரமசிவன், அருள்=கிருபை.

தநுபதிஃ ஸபலோ அஷ்ட ஷடஅர்த்ய
அங்கஸ்தநு ஸுகம்ந ஷடந்த்யம்ரு தீட்ஸ்வபே
தநுஸுகம்ந யதாவிபலே அங்கபேவபுஷி
பாபககேசரு ஜாதிககஃ (ஜாதக சங்கிரகம்)

(இ-ள்) இலக்கினதிபதி பலமுடையவனாய் 6-8 12-ல் இருந்தால் சரீர சுகம் கிடையாது 6 8-12-க்குடையவர்கள் பாவர்களாய் மேற்சொன்ன இடங்களில் இருந்தால் சரீரசுகம் கிடையாது. இலக்கினதிபதி பலமில்லாதவனாய் இருந்தாலும், இலக்கினத்தில் பாபகிரகங்கள் இருந்தாலும் நோய் உடைய சாதகனாவான்.

" ஷடந்தியம் ருதீட்ஸ்வ பேதநுஸுகம்ந " எனவரும் சாதக சங்கிரக வசனப்படி 6-8-12-க்குடையவர்கள் சுபரானாலும் பாவரானாலும் சரி அவர்கள் 6-8-12-ஆமிடங்களில் இருந்தால் அச்சாதகனுக்குத் தேகசுகம் இன்றித் துன்பமுண்டாகுமென்று கூறுகின்றது. இந்நூலாசிரியர் "நவில் வியம் எட்டு ஆறுதி பாவர்களே ஆயின் வென்றி ஒடு ஆங்கு இருக்கில் அவன் துர்ப்பலனே ஆவன்" எனக் கூறியதிலிருந்து பின்வருமாறு பொருள் கொள்ளுதல் பொருத்தமாகக் காணப்படுகின்றது. அதாவது: 6 8-12-க்கு உடையவர்கள் ஆதிபத்தியத்தை முன்னிட்டு பாவர்களே ஆவார்கள். ஆதலால் அவர்கள் அந்த 6 8-12-ல் ஆட்சிபெற்று) இருப்பார்களானால் சாதகனுக்குத் தேகசுகத்தைக் கொடார்கள் என்பதேயாகும். பாவலர்களே என்பதின் ஈற்றிலுள்ள ஏகாரம் தேற்றப்பொருளது.

முன்னே எடுத்துக்காட்டிய சாதக சங்கிரகத்தில் "தநுபதிஃ ஸபலோ அஷ்ட அந்த்யகஸ் தநுஸுகம்ந" என்னும் இந்த வசனம் "இலக்கினதிபதி

---

+ "ஷஷடோ!" என்றும், * "ப்ராணைர் வியோகம்வ்ர ஜதிப்யாதஃ" என்றும் பாடம். இவை சரியன்று.

(பாபகிரகமாய் இருந்தாலும் சரி, சுபக்கிரகமாய் இருந்தாலும் சரி) பலம் உடையவனாய் 6-8-12 ஆகிய இடங்களில் ஒன்றில் இருந்தால் சரீர சுகம் கிடையாது என்று கூறுகிற்கும். மற்றும் "அதிபஷஷ்ட அஷ்டரிப்ரேஷு நசுகத:" என்ற கேரள சூத்திர வசனம் "இலக்கினாதிபன் இலக்கினம் அல்லது சந்திர லக்கினம்; அல்லது தேக காரகனாகிய சூரியன் இவைக ளுக்கு 6-8-12-ல் பலத்துடன் இருந்தால் ஜாதகனுக்குத் திரேக சௌக்யம் கிடையாது" எனக் கூறுகிற்கும். இவ்விரு வசனங்கள் ஒத்துளதை அறிஞர்கள் நோக்குதல் வேண்டும். ஆனால் கேரள சூத்திர பாஷியமானது சந்திர லக்கினத்திற்கும், சூரிய லக்கினத்திற்குங்கூட இவ்விதம் பார்க்க வேண்டுமெனக் கூறியது யுக்திக்கும் பொருத்தமாகவே இருக்கின்றது.

> க்ரூராலயே ரிபுக்ருஹே அதவா அபிநீசே
> க்ரூரேக்ஷிதே யதிபுதே வ்யயார்த்ர ஸம்ஸ்தே
> ஷஷ்டங்கதே தநுபதௌ தநுகேக லேவா
> தத்கால ஸம்பவ நரஸ்ய நதேஹ சௌக்யம்.
>
> (ஜாதகானுபவ தருப்பணம்)

(இ-ள்) இலக்கினாதிபதி பாப இராசிகளில் இருந்தாலும், பகைவீட்டி லிருந்தாலும், அல்லது நீச்சத்திலிருந்தாலும், பாவர்களுடன் கூடி இருந்தா லும், பார்க்கப்பட்டாலும், 6-8-12-ஆமிடங்களில் இருந்தாலும், இலக்கினத் தில் பாவர்கள் இருந்தாலும், அச்சாதகனுக்குத் தேகசுகம் இருக்காது.

> தநுஸ்தாநாதி பஷ்ஷஷ்டே வ்யயேசாஷ்ட மகோசர:
> கீர்த்திஹீ நோபவேத்தீ நோதநஹீநோ ப்ராகாசக:
>
> (ஜாதகானுபவ தருப்பணம்)

(இ-ள்) இலக்கினாதிபதி 6-8-12-ஆமிடங்களில் ஒன்றில் இருந்தால் அச்சாதகன் கீர்த்தியில்லாதவனும், தரித்திரனும், புத்தியில்லாதவனும் ஆவான்.

இச்சுலோக வசனம் பொதுவிதி. இலக்கினாதிபதி 6-8-12-ல் இருந்த போது அந்த ஸ்தானாதிபதியினால் பார்க்கப்பெற்றாலும், கூடியிருந்தாலும் சுபனே யாவன். இப்படி இருந்தால் அச்சாதகனுக்குக் கீர்த்தியும் புத்தி சாதுர்யமும் யோகமும் உண்டாகும். துலாலக்கின ஜாதகனுக்கு இலக்கி னாதிபதி சுக்கிரன் 6-8 12-ல் இருந்தாலும் அல்லது குருவுடன்கூடினாலும் அதிக போகசுகமும் தீர்க்காயுளும் உண்டாம். இலக்கின அஷ்டமாதிபர்கள் பரிவர்த்தனம் பெற்றாலும் இப்பலனே உண்டாகும். மேஷ விருச்சிக இடப லக்கினங்கட்கும் இப்படியே என்றறிக. இது சிறப்பு விதியாம்.

இலக்கினாதிபன் 6-8-12-ல் இருப்பது பொதுவிதியின்படி கெட்ட பலன் உண்டாகும்; சிறப்புவிதியின்படி நற்பலன் உண்டாகும். இதனையே இசசெய்யுளின் மூன்றாம் அடியின் ஐந்தாம் சீர்முதல் நான்காம் அடியின் ஈற்றுச் சீர்வரைக்கும் இந்நூலாசிரியர் கூறியிருக்கின்றார். யாதுபற்றி எனின்? பாபகிரகங்களுக்கு இலக்கினாதிபத்தியம் நல்லதென்றும், சுபகிரகங் களுக்குக் கெட்டதென்றும் விதியிருத்தலினாலென்க. ஆகவே இலக்கி னாதிபன் சுபக்கிரகமாய் 6 8-12-ல் இருந்தால் கெட்டபலன் உண்டாமென் றும், ஆனால் அந்த 6-8-12-க்குடையவர்கள் சம்பந்தம் நோக்கம்பெற்றாலும், அல்லது சுபசம்பந்த நோக்கம் பெற்றாலும் நல்ல பலன் உண்டாமென்றும்,

இலக்கினாதிபன் பாபக்கிரகமாய் 6-8-12-ல் இருந்தால் நல்ல பலன் உண்டு என்றும் அறிதல்வேண்டும்.

"குரூரஸ் யத்வத கேந்த்ர பத்வம் உருஸௌக் யார்த்தம் ஸபாபோ புத:"

எனவரும் கோபால ரத்நாகர வசனத்தின்படி பாவர்களுக்குக் கேந்திராதி பத்தியம் நல்லதென்று கூறுகிற்கும். மற்றும்,

"கேந்த்ராதி பாயதி அசு பாச்சா சுபம் த்வேதே உத்த யோத்தரம்"

எனவரும் ஜாதக சந்திரிகை வசனம் பாவர்களுக்குக் கேந்திராதிபத்தியம் சுபம் எனக் கூறுகிற்கும். இதனால் இலக்கினம் கேந்திர ஸ்தானங்களில் ஒன்றாகையினாலும், பாவர்களுக்குக் கேந்திராதிபத்தியம் நல்லதாகையினாலும் இலக்கினாதிபதி பாபகிரகமானால் நற்பலன் உண்டாமென்றும் தெளிவாக அறியப்படுகின்றது.

**இதற்குப் பதகம்**

| இலக்கினம் | இலக்கினாதிபதி | | |
|---|---|---|---|
| | 6-ல் | 8-ல் | 12-ல் |
| மேடம் | கன்னி | விருச்சிகம் | மீனம் |
| * மிதுனம் | விருச்சிகம் | மகரம் | மேடம் |
| † கடகம் | தனுசு | கும்பம் | மிதுனம் |
| சிம்மம் | மகரம் | மீனம் | கடகம் |
| ‡ கன்னி | கும்பம் | மேடம் | சிம்மம் |
| விருச்சிகம் | மேடம் | மிதுனம் | துலாம் |
| மகரம் | மிதுனம் | சிம்மம் | தனுசு |
| கும்பம் | கடகம் | கன்னி | மகரம் |

† பாபயுத புதன், ‡ க்ஷீண சந்திரன்.

"உத்தரோத்தரம்" என்ற பதப்பிரயோகத்தினால் இலக்கினாதிபன்:—

| | | | |
|---|---|---|---|
| சூரியனானால் | 12 கலை | அளவு | சுபபலனும் |
| க்ஷீண சந்திரனானால் | 24 ,, | அளவு | சுபபலனும் |
| பாபயுத சந்திரனானால் | 86 ,, | அளவு | சுபபலனும் |
| செவ்வாயானால் | 48 ,, | அளவு | சுபபலனும் |
| சனியானால் | 60 ,, | அளவு | சுபபலனும் |

உண்டென்று அறியவும்.

அதாவது: சனி இலக்கினாதிபதியானால் முழு சுபனும், சூரியனானால் மூன்றுவீசம் அளவுள்ள சுபனும் ஆவர் என்பது கருத்து.

திசகேந்தி ராதிபதி நீதிசுப ரானால்
அசுபபல மேகொடுப்பர் அல்லால்—இசைகேந்
திரபதிகள் பாவிகளாய்ச் சேரில்அதி சுபங்கள்
பாவியிடக் கொடுப்பர் பார். (சந்திரகாவியம்)

(இ-ள்) இவ்வெண்பாவும் இதனை நன்கு விளக்காநிற்கும் சனி இலக்கினாதிபதியால் முழுசுபன் என்பதை இதனால் நன்கறியலாம்.

லக்நாதிபோ அஷ்டமேசோவா சநிச்சேச் சுபஸம்யுதஃ
பூர்ணயுஃ கதிதம்ஸ்ருணும் ஜ்யோதிச் சாஸ்த்ர விசாரதஃ

(இ-ள்) இலக்கினம்; அல்லது எட்டுக்கு அதிபதி சனியாகி சுபசம்பத்தைப் பெற்றால் தீர்க்காயுளுண்டாம்.

பாவர்களுக்குக் கேந்திராதிபத்தியம் நல்லது எனவே, அவர்கள் கேந்திரத்திலிருப்பது கெட்டதென்றும், சுபர்களுக்குக் கேந்திராதிபத்தியம் கெட்டது எனவே, அவர்கள் கேந்திரத்திலிருப்பது நல்லதென்றும் பெறப்பட்டமையால் இந்நூலாசிரியர் இலக்கினாதிபதி பாவனாய் 6-8-12-ல் இருப்பின் நல்லதென்று கூறினாரென்று அறியவும்.

பூர்வ பாராசாரிய கிரந்த வியாக்கியானத்தில் சுபர்களுக்கு கேந்திராதிபத்தியம் தோஷமானாலும் அவர்கள் அந்தக் கேந்திரங்களில் ஆட்சியாய் இருப்பின் தோஷமில்லை என்றும், சுவக்ஷேத்திரமான கேந்திரங்களைத் தவிர்த்து ஏனைய கேந்திர ஸ்தானங்களில் இருந்தால் பூர்த்தியாக பாப பலனையே தருவார்கள் என்றும், பாபகிரகங்கள் கேந்திராதிபதிகளாய் கேந்திரங்களில் இருந்தபோது பாப பலனையே தருவார்கள் என்றும், கேந்திரங்களைத் தவிர்த்த ஏனைய யிடங்களிலிருப்பின் சுபபலனைத் தருவார்கள் என்றும் கூறப்பட்டிருக்கின்றது.

இதுகாறும் கூறிப்போந்தவற்றால் இலக்கினாதிபதி 6-8 12-ஆமிடங்களில் இருப்பதனால் உண்டாம்பலன் இன்னதென்று தெற்றென விளங்காநிற்கும். இனி இந்த ஸ்தானங்களைத் தவிர்தது ஏனைய ஸ்தானங்களில் இருப்பதனால் உண்டாம் பலனை எடுத்து விளக்குவோமாக.

தநுஸ்தாநாதிபஃ கேந்த்ரே லாபேகோணே கதோயதி
த்யாகவான் தநவாந்போகி ந்ருபபூஜ்யோ ப்ரகாசகஃ
(ஜாதகானுபவ தருப்பணம்)

(இ-ள்) இலக்கினாதிபதி 1-4-5-7-9-10-11 இந்த ஸ்தானங்களில் இருந்தால் அச்சாதகன் தியாகியும், தனவந்தனும், சுகபோகமுடையவனும், இராசபூசிதனும், கீர்த்தியுடையவனும் ஆவான்.

இச்சுலோகம் இலக்கினாதிபதி பாபனாயிருந்தாலும் சுபனாயிருந்தாலும் 1 4 5-7-9-10-11-ல் இருந்தால் நற்பலன் உண்டாமென்று கூறுகின்றது; இது பொதுவிதி. சிறப்புவிதி இலக்கினாதிபதி சுபனாயிருந்தால்மட்டும் இப்பலனும், பாவனாயிருப்பின் கெட்ட பலனும் என்று அறிக.

இலக்கினாதிபதி சுபனாய்:—1-4-5-7-9-10-11-ல் இருப்பின் பூரண நற்பலன். 2-3-8-ல் இருந்தால் மத்திம நற்பலன், 6-8-12-ல் இருந்தால் பூர்ண துர்ப்பலன்.

இலக்கினாதிபதி பாவனாய்:—1-4-7-10-ல் இருந்தால் பூரண துர்ப்பலன், 2-3-5-9-11-ல் இருந்தால் மத்திம நற்பலன், 6-8-12-ல் இருந்தால் பூரண துர்ப்பலன் உண்டாகும் என்று அறியவும்.

இப்படலத்தின் 16-வது செய்யுட்கருத்தும் இதுவேயாதலின் அதற்கு விருத்தியுரை இதுவேயாகுமென்று அறியவும். இலக்கினாதிபன் கேந்திர கோணத்திலேனும், நட்பு ஆட்சி உச்சத்திலேனும் இருப்பின் நற்பலனும், 6-8-12-ஆமிடங்களிலேனும், பகை நீசம் அஸ்தமனங்களிலேனும் இருப்பின் துற்பலனுண்டென்றும் பொதுவிதியுளது. விரிவஞ்சி அவற்றை ஈண்டு எழுதவில்லை ஆதலின் இந்தவிருத்தியுரையை யூகத்தாலறிந்து அறிஞர்கள் பலாபலன்களைக் கூறுவார்களாக. (433)

பாவர்கள் சன்மத்திலுஞ் சன்மத்தாதி
பலமின்றிப் பயிலநோய் கேந்திரகோணத்
தீவர்களுற் றுற்கோபி யாவன்சென்மத்
திறைநின்ற வீட்டோனெட் டாறீராறில்
மேவிதுர்ப் பலன்சன்ம கன்மனெட்டோன்
மிகைச்சனியிந் நால்வர்திசை யெய்தும்போது
மேவிடுந்துர்ப் பலர்திசைக்குட் சனிசஞ்சார
மெய்திடிலோ வரிட்டமென விளம்புமாறே.

(இ-ள்) தீயகோட்கள் ஜெனனலக்கினத்திலும் ஜெனனலக்கினாதிபதி பலமற்றிருக்க அந்த ஜாதகன் நோயுள்ளவனாக இருப்பான். கேந்திர திரிகோண ராசிகளில் தீயகிரகங்கள் சம்பவித்திருந்தால் அந்த ஜாதகன் மிகுந்த சினமுடையவனாவன் ஜெனன லக்கினாதிபதி நின்ற ராசிக்கு உடையவன் 6-8-12-ஆம் ராசிகளிலிருந்தால் தீயபலனே விளையும். ஜென்மாதிபதி கர்மாதிபதி அஷ்டமாதிபதி சனி இவர்கள் திசைவருங்காலம் தீயபலனை விளைவிக்குமென்றும், 1-8-9-10-ஆம் வீட்டுக்குடையவர்கள் திசைவருங்காலம் அவ்விராசியில் சனி இரண்டரைவருஷம் வாசம்செய்யும் காலம் அந்த ஜாதகனுக்கு கெண்டாதிபிணியும நேரும் எ-று.

(வி-ரை) மேதினியிற் கேந்திர கோணந் தனிலேகாறி
வீற்றிருக்கி லதிகீர்த்தி ராஜசன்மானங்கள்
சோதிமிகு ஆபரணம் வஸ்திர லாபங்கள்
சுகமதிக மாமுண்டு வாக்கெட்டுவியத்தில்
நீதியிலா தவனிருக்க அரசரால் நாசம்
நீங்காது களத்திரத்தின் பீடைதொழில் நாசம்
மோதியிடில் விவசாயத்தால் பூமி லாப
முற்றசயரோக மாதியில் களத்ரம்போமே.

என்றபடி கேந்திர திரிகோணங்களிலே சனி நின்று அவன் திசை வரும்போது கீர்த்திப் பிரதாபமும், இராஜாக்கள் மூலமான சன்மானங்களும், பிரகாசமான ஆபரணம்முதலிய ஆடைகளும், மேலான சுகங்களும் உண்டு. மேலேசொன்ன சனிபகவான் 2-8-12 இவ்விடங்களிலிருந்து அவன் திசை வரும்போது ராஜாக்களால் துன்பமும், களத்திரபீடையும், செய்தொழில் பின்னமும், அல்பபலிதமும், க்ஷயரோகங்களும் உண்டென்றும் இந்ததிசை முதலிலேயே களத்திர நஷ்டங்களும் உண்டு என்று பாராசாரியத்தில் கூறியபடி திசைபுக்திகளையும் ஆராய்ந்து சொல்லுதல் வேண்டும். சனியும் சந்திரனும் ஒன்றுசேர 7-ல் செவ்வாய் நிற்க, சூரியனும் புதனும்

குருவுக்கு எட்டில் நிற்க, சனிக்கு எட்டில் சுக்கிரனிருக்க அவன் உடனே இறந்துபோவானென்றும் கூறுவர். (434)

ஆறிற்செங்கதி ரதற்கேழ்சனி செவ்வாய்நிற்கில்
அரிட்டமாகுங் காரியர வொடுசன்மத்து
வீறுசெவ்வாய் நான்கிற்செங் கதிரோனேழில்
மேவியநா டனிலுடனே வியமதேயாகும்
கூறுசசிக் கிருபாலுந் தீயோரேநிற்கில்
குழவியொடன்னைக் கரிட்டமே கூறலாகும்
சீறுகர்க்கட லக்னமாய்மூன் ருறிற்றீயோர்
செம்மையோர் பன்னிரண்டிற் றீதென்பரருளோர்.

(இ-ள்) ஜெனன லக்கினத்திற்கு 6-ஆமிடமான ரோகஸ்தானத்தில் செம்மை பிரகாசமுடைய சூரியனும், சூரியனுக்கு 7-ல் சனியும் குஜனும் நிற்கில் அந்த ஜாதகனுக்கு கெண்டம் உண்டாகும். சனியும் இராகுவும் சேர்ந்து ஜெனன லக்கினத்துற்று வீரம்பொருந்திய குஜன் சுகஸ்தானத்திலும், சூரியன் 7-ஆம் ராசியிலும் நிற்கப் பிறந்தவனுக்கு உடனே கெண்டம் சம்பவிக்கும். சந்திரனுக்கு இருபுறங்களிலும் தீயகிரகங்கள் சூழ்ந்திருக்குமானல் தாயும் பிள்ளையுமாக மரணமடைவார்கள். சிறப்புபொருந்திய கடக லக்கினம் ஜெனனமாக 3-6 இவ்விடங்களில் தீயகோட்களிருந்து சுபக்கிரகங்களெல்லாம் 12-ல் மோக்ஷம் பெற்றால் துன்பமே சம்பவியுமென்று சோதிடவல்லோர் கூறுவர் எ-று.

(வி-ரை) சரீர காரகனுகிய சூரியன் ரோகஸ்தானம் பெற்றால் நீங்காத ஜாட்டியமுள்ளவனுகவே இருப்பான். சூரியனுக்கு 7-ல் ஆயுள் காரகனுகிய சனி குஜனேடு சம்பந்தப்பட்டு நிற்கில் குழவிக்கே ஈனமென்று சொல்லப்பட்டன. இதில் முன் சொன்னபடியே கிரகமிருந்தாலும்,

*நீலனு முச்சமாக நிலவது வாக்ஷியாக*
*மேலெனு மரசன்சுங்க னிவர்க்குமே நான்காய்நின்றால்*
*பால்பெ ரும் செல்வமுண்டு பாக்கிய வானுமாக*
*எம்பெரு யோகமுண்டிங் கிவனுக்கே வயது நூறு.*

என்று கூறியதால் முன்செய்யுளில் சொன்னபடியே சனி உச்சம்பெற்றும், சந்திரன் ஆக்ஷிபெற்றும், குருவும் சுக்கிரனும் நான்காமிராசியில் நின்றால் அந்த ஜாதகன் பால்பாக்கிய விருத்தியுள்ளவனும், பாக்கியசாலியும், நூறு வயது வரையில் ஜீவித்திருப்பானென்று கேரளத்தில் சொல்லியபடியும், சந்திரனுக்கு இரண்டு பக்கத்திலும் தீயகிரகம் சூழ்ந்திருக்குமானல் தாயும் பிள்ளையும் மரணமென்பது நிச்சயமேயாயினும் சந்திரன் பலம்பெற்றிருந்து தீயகிரகங்கள் பாராமல் மாதுரு ஸ்தானத்தில் குரு நின்று சத்துரு கிரகங்கள் பாராதிருக்க அந்த ஜாதகன் தாய் தீர்க்க வயதாய் இருப்பாளென்றும் கூறுவர். (435)

அருள்சன்மலக்கினுதிபதி பாவனுய்வியமாறெட்டில்
மருவின்மெய்தனக்குநன்மை வருஞ்சவுக்கியமுமுண்டாம்
உருவமாமிலக்கினுதிபதி யுத்தமத்ததிபனுகிப்
பெருமைசேரைந்தொன்பானிற் பலனெனவிரைவிற்சொல்வாய்.

(இ-ள்) மருத்துவம் பொருந்திய லக்கினாதிபதி தீயகோளாகவிருந்து 6-8-12 என்னும் க்ஷேத்திரங்களிலிருக்க அந்த ஜாதகனுக்கு நன்மையே விளையும். நற்பலனும் உண்டு. இலக்கினாதிபதி சுபனாகவிருந்து மேன்மை பெற்ற 5-9 என்னுமிடங்களில் இருந்தால் தீர்க்க பலனே உண்டு என்று கூறுவாய் எ-று.

(வி-ரை) இச்செய்யுளில் பாவகிரகங்கள் கொடிய இடங்களிலும் சுபக் கிரகங்கள் நற்க்ஷேத்திரங்களிலிருந்தால் நன்மை யுண்டென்றும் தீயகோட்கள் நற்க்ஷேத்திரங்களில் நின்று சுபர்கள் கொடிய க்ஷேத்திரங்களிலுமிருந்தால் பலனில்லை என்றும் கூறியதாகும். இவ்வாறே எல்லாராசிக்கும் சுபன் அசுபனெனத் தேர்ந்து கூறுதல் நலம். (436)

வேறு

விரவியதோர் சரீரகாரகனும் வெய்யோன்
வியமாறெட் டினிற்சனிதன் வீட்டிலுற்றால்
உருவுகுறைந் திடுமங்க மூனமாகும்
ஒன்பதுபன் னொன்றிரண்டி லுற்றிட்டாலும்
பரவியதோ ரரிமேஷத் துறினும்மெய்யிற்
பழுதறவே சவுந்தரிய பானுமாவான்
வரியுலவுங் குழற்கொவ்வை மதுரச்செவ்வாய்
மட்டுலவுஞ் செங்கமல மலரின்மானே.

(இ-ள்) வண்டுகளை பழிக்கும் கூந்தலும், இனிமையான குரலும், கோவைக்கனியை யொத்த வாயும், யாவரும் மகிழத்தக்க ருசிபொருந்திய வார்த்தையும், சிவந்த செங்கமலமென்னும் தாமரை மலர்போன்ற விசாலமான முகமுடையவளே! மேன்மைபெற்ற சரீர கர்த்தாவான சூரியன் 6-8-12 இவ்விடங்களில் சனி வீடாகவிருந்து அதில் சம்பந்தப்பட்டால் அந்த ஜாதகன் உருவம் குறைந்த அங்கமும், அங்க ஈனமும் உடையவனாக இருப்பான். மேற்சொன்ன சூரியன் மேஷராசியிலிருந்தாலும் சிங்கராசியிலிருந்தாலும் அவன் லக்கினத்திற்கு 2-5 ஆனாலும் அந்த ஜாதகன் தேகத்தில் யாதொரு பழுதுமின்றி சவுந்தரியவானாக ஜெனிப்பானென்று சொல்வாய் எ-று.

(வி-ரை) இச்செய்யுளில் கூறியபடி சூரியன் 6-8-12 இவ்விடங்களில் சம்மந்தப்பட சூரியன் நின்ற வீட்டிற்குடையவன் ஆக்ஷிபெற்றும், ஜெனன லக்கினத்தை குரு பார்த்தாலும் அங்கவீனனாகான் என்பது கருத்து. சுபக்கிரகங்கள் பாராமலும் சேராமலும் லக்கினாதிபதிமாத்திரம் ஈனமடைந்தால் மாத்திரமே அங்கப் பழுது உள்ளவனென்று கூறுக. (437)

வேறு

இடபமேடநண் டிம்மூன்றிராசியும்
அடரும்லக்கின மாகவதனுளே
தொடருமாவிட ராகுறச்சூழ்ந்திடப்
படருமுத்தம மென்றுபகர்வரே.

(இ-ள்) மேடம்-ரிடபம்-கடகம் இம்மூன்றில் ஒரு இராசி ஜெனன லக்கினமாக யிருந்து இராகு லக்கினத்திலிருக்கப் பிறந்தவன் பிரபல்ய யோகங்களையே அனுபவிப்பான் என்றும் கூறுவர் எ-று.

(வி-ரை) இச்செய்யுளில் யோகபடலத்தில் 298-ஆம் செய்யுளின்படி ஒத்திருப்பதாலும் நல்ல யோகமென்று கூறப்பட்டன. (438)

இதுவுமது

பகருலக்கினமன் பத்தில்ரெண்டினில்
வகையினிற்க வலதுலாபாதியும்
இகலிற்பத்தி லிரண்டிலிருந்திடத்
துகளினூலெந்திற் றேன்றுஞ்சுகமதே.

(இ-ள்) ஜெனன லக்கினாதிபதி கார்ய ஸ்தானத்திலாவது தனஸ்தானத்திலாவது நின்றாலும், அல்லது 11-ஆமிடத்து அதிபனான லாபாதிபதி மேற்சொன்ன 10-ஆமிடம் 2-ஆமிடம் இவ்விடங்களிலிருக்க அர்தஜாதகன் வயது 20-க்குமேல் யோகமுண்டாகும் என்றும் கூறுவர் எ-று. (439)

வேறு

சுகந்தருஞ்சன்மலக்கினஞ்சரமாய்த் தோன்றிலாபத்தினுதிபனும்
மிகுந்திடுந்திரமேற்பாக்கியாதிபனும் விரும்பியவுபயலக்கினமேல்
உகந்திடுமேழாமதிபதிமூவறுதிசை வாதைசெய்விக்கும்
பகர்ந்திடுமூவர்பதிமூவர்பதியுமிம்மூவர் பற்றியவிடங்களுந்தீதே.

(இ-ள்) சௌக்கியத்தைத் தரப்படாநின்ற ஜெனனலக்கினம் சரலக்கினமாகயிருந்து, சரலக்கினங்கள் ஒன்றில் இலக்கினாதிபதி யிருந்து, மேன்மையுடைய ஸ்திர லக்கினங்களில் 11-ஆம் வீட்டதிபனான லாபஸ்தானாதிபதியும், ஷை ராசிகளான ரிடபம்-சிங்கம்-விருச்சிகம்-கும்பம் இவற்றில் 9-ஆம் வீட்டோனும் 7 ஆம் வீட்டதிபதி உ ய லக்கினங்களிலு மிருந்தால் மேற்சொன்ன கிரகங்களின் திசை முடிவு வரையிலும் கொடிய பலனையே விளைவிக்கும். இம்மூவரும் வர்க்காதி பத்தியப்படி எங்கெந்த ஸ்தானங்களில் நின்றார்களோ, அந்தந்த ஸ்தானிகருக்கு துன்பத்தையே விளைவிக்கும் எ-று.

(வி-ரை) சரம் என்பது மேஷம்-கடகம்-துலாம்-மகரம், ஸ்திரம் என்பது ரிஷபம்-சிங்கம்-விருச்சிகம்-கும்பம், உபயம் என்பது மிதுனம்-கன்னி-தனுசு-மீனம், பற்றியவிடங்களும் தீது என்பது வர்க்கஸ்தானாதிபதிகள் என்பனவாம். உதாரணமாக உபய லக்கினத்தில் சப்தமாதி சேர்ந்தால் மேற்படி லக்கினம் பிதுர்லக்கினமாயின் பிதாவுக்கும், சகோதர லக்கினமாயின் சகோதரனுக்கும் தீமையாம். இவ்வாறே ஒவ்வொரு ராசியும் கண்டு கொள்ளுக. (440)

தீதறுஞ்சென்மகாலையிலெட்டிற் செங்கதிர்நிற்கிலோசுரமாம்
கோதறுதிங்களுறில்சலகண்டங் குசனுறிலாயுதபீடை
சோதிசேர்புந்தியியாதிபொன்மிருத்தியு சுக்கிரனுற்றரித்திரமாம்
ஓதியசனிதாயர்க்குறுந்தோஷ மொருவருநிற்கவொண்ணதே.

(இ-ள்) தீமையை யகற்றி நன்மையை விளக்கும் ஜெனன லக்கினத்திற்கு 8-ஆமிடத்தில் சூரியனிருக்கப் பிறந்தவனுக்கு எந்நாளும் ஜுரம் வியாபிக்கும். நன்மையைத் தரும் சந்திரனிருக்கில் ஜலத்தால் அரிட்டம் சம்பவிக்கும். குஜனிருக்கில் ஆயுதங்களால் தோஷமும் உண்டு. புதன் இருக்கில் ரோகமுள்ளவன் ஆவான். குருவிருக்கில் அகால மரண தோஷம் உண்டு. சுக்கிரனிருக்கில் வறுமையை உண்டுபண்ணும். சனி இருக்கில் மாதாவுக்கு கெண்டாதி தோஷம் உண்டு. ஆகையால் 8-ஆம் இராசியில் எந்த கிரகமும் சேரக்கூடாதென்று கூறுவாய் எ-று.

(வி-ரை) எட்டாமிடமென்பது ஆயுள் லக்கினமாகும். அந்த ராசியில் கிரகங்கள் வரில் மேற்சொல்லிய பலனும், கிரகமின்றி இருக்குமாகுல் அவ்வீட்டோன் எவ்விதமிருக்கிறுனென ஆராய்ந்து சொல்லுதல்வேண்டும்.

எப்படியெனில்,

ஆளுவான் அஷ்ட மாதிபன் கேந்திரம்
கோளினுல் பகை செய்யினு நோக்கினும்
தேறு மாமதி மகர்கூட மாயினும்
நாள மேவய தாண்டு மனுகுமே.

என்றபடி அஷ்டமாதிபதி கேந்திரம்பெற்று அக்கேந்திர ராசியானது கடகம்-விருச்சிகம்-மகரம் இப்படிப்பட்ட ராசியாகவிருந்து கேந்திரம்பெற்ற அஷ்டமாதியை தீய கிரகங்கள் பார்த்தாலும் அல்லது சேர்ந்தாலும் அஷ்டம ஸ்தானத்திலேயே பகை பெற்று நின்றுலும் (மேற்செய்யுளில் சொன்னபடி) தோஷம் உண்டாளுலும் தீர்க்காயுள் உண்டென்றும் இன்னம் 8-ஆம் பாவகத்தையும் ஆராய்ந்து கூறுதல் நலம். (441)

**தேவர்கள்முதல்சந்திரன்முதலாய்ச் செங்கதிரளவிமட்டெண்ணி**
**மேவியதொகையைமூன்றினிற்கழித்து மீந்ததொன்றுக்கவன்பிதா**
**ஏவியதாழ்ச்சியிரண்டதேயாயி னினியதாதைக்கிணையோகம்**
**பூவுன்மூன்ருறிற்பிதாவினுக்கதிகம் புத்திரற்கென்றறிந்திடுமே.**

(இ-ள்) சந்திரனின்றராசிமுதல் சூரியனின்ற ராசிவரையில் எண்ணிக் கூட்டிய தொகையை 3-ல் வகுத்து நின்ற சேடம் ஒன்றுயின் அந்த ஜாதகன் பிதாவின் யோகத்தைவிட கொஞ்சம் குறைந்த யோகமுடையவனுக இருப்பான். இரண்டாயின் தகப்பனுக்கு இணையான யோகமுண்டு. மூன்றுயின் தகப்பனைவிட மேலான யோகத்தை அனுபவிப்பான் எ-று. (442)

வேறு

**அறிந்த லக்கினத் தாதிப னுச்சமே**
**செறிந்து கேந்திரஞ் சேர்ந்துநல் லோருடன்**
**குறைந்து தூய ருறைமனை யுற்றிட**
**நிறைந்த சீவன் பெறுவது நிச்சயம்**

(இ-ள்) சிறப்பு பொருந்திய பெண்பாவாய்! ஜெனன லக்கினுதிபதி உச்சம்பெற்று சுபகிரகங்களோடு சேர்ந்து 1-4-7-10 என்னும் இவ்விடங்களில் நற்கோளுடைய கேந்திரங்களிலிருந்தால் அந்த ஜாதகன் பூரண ஆயுளைப்படைத்து வாழ்வானென்று பெருமையோடு கூறுவாய் எ-று.

(இ-ள்) லக்கினாதிபதி உச்சம் பெறுவதே ஓர் விசேஷமாகும். அதிலும் கேந்திரம்பெற்றால் முன் 20-ஆம் செய்யுளில் சொல்லியபடி தீர்க்க ஆயுளுடன் முக்கால் ராஜயோகம் நடக்கும் என்றும் கூறுவர். (443)

வே று

நிச்சயமாய்ச் சன்மாதிபதி திரலக்கினத்தும்
நீடுதிரவங்கிசத்து மவைதான் கேந்திரமாய்
இச்சையுடனிருக்கி லவனிருந்த லக்கினந்தன்னில்
இனியவெகு பலன்பெறுவனவை சுபாங்கிசமாய்
அச்சமற நிற்கிலவன் சீவபரியந்தம்
ஆபரணத் துடன்கூடி யம்புவியில் வாழ்வன்
மெச்சிய சன்மாதி பலமறக் கேந்திரத்தின்
மேவிற் கோபியுமாகி வியாதியு முற்றிடுவன்.

(இ-ள்) ஜெனன லக்கினாதிபதி 1-4-7-10 என்னும் கேந்திரம் பெற்று கேந்திரம்பெற்ற ஸ்தானங்கள் ஸ்திர ராசிகளென்னும் ரிஷபம்-சிங்கம்-விருச்சிகம்-கும்பம் இந்நான்கு ராசிகளில் ஒன்றாக இருக்க, அவன் பிறந்த இடத்திலேயே மேலான யோகபலனை அனுபவிப்பான். அன்றியும் மேலே சொன்னபடியே கிரகமிருந்து சுபாங்கிசம் பெற்றிருந்தால் அவன் ஆயுள் உள்ளளவும் நிறைந்த பொன் பூஷண ஆபரணங்களோடு வாழ்வன். மெச்சத்தகுந்த லக்கினாதிபதி பலமிழந்து மேலே சொன்ன கேந்திரங் களில் இருந்தால் அந்த ஜாதகன் கோபியும் ரோகமுள்ளவனுமாகவும் இருப்பான் எ-று. (444)

உற்றிடுஞ்சென்மத் தாதியீரைந்தி லிருக்க
உண்மையுடன் பத்தாதியுறுபல வீனனுமாய்ப்
பற்றிடும்வியமா றெட்டிற் சுபர்நோக்கநிற்கில்
பயில்தத்து புத்திரனும் பகருவெகுவயதே
வெற்றிகொளும் லக்கினத்தின் மிகுபாவரிருக்க
மேவிய சன்மாதிபதி மிகுபலவானாகக்
குற்றமுறும் பிணிகொள்வன் சுபர்சன்மங்கண்டால்
குணமாமப் பிணிவேறு கொடுமையுஞ் செய்யாதே.

(இ-ள்) ஜெனன லக்கினாதிபதி 10-ஆம் இடம்பெற 10-ஆம் வீட்டு அதிபதி பலமற்றிருக்க 6-8-12 இவ்விடங்களிலிருந்து சுபக்கிரகங்களின் நோக்கமுற்றிருக்க, அந்த ஜாதகன் தத்து புத்திரனாக வளருவான். வெற்றியையுடைய லக்கினத்தில் கொடிய தீயகோட்கள் நின்று இலக்கினாதிபதி பலம்பெற்றுநிற்க, அவன் குற்றமான வியாதிகளையுடையனாகுவன். ஜெனன லக்கினத்தை சுபக்கிரகங்கள்நோக்கில் அப்பிணியானது நிவர்த்தியாகுமென்றும், கெண்டத்தை தரமாட்டாதென்றும், சௌக்கியத்தோடு இருப்பானென்றும் சொல்லுக எ-று.

(வி-ரை) இலக்கினாதிபதி தீயவிடங்களில் இருந்தாலும் தீயருடன்கூடி இருந்தாலும் லக்கினத்தை சுபர் நோக்கில் எல்லா தோஷமும் பரிகாரம் உண்டு. அன்றியும் 10-ஆம் வீட்டதிபதி பலமற்று 6-8-12-ல் நிற்கவும்

இலக்கினாதிபதி 10-ஆம்வீட்டிலிருந்தாலும் தத்துபுத்திரனாவான் என்றதை சூரியன் பார்க்கில் பிதுரு வகையராக்களிலும், சந்திரன் பார்க்கில் மாதுரு வகையராக்களிலும், குஜன் பார்க்கில் சகோதர வகையராக்களிலும், புதன் பார்க்கில் அம்மான் வகையராக்களிலும், குரு பார்க்கில் தன் சுற்றத்தாராலும், சுக்கிரன்பார்க்கில் களத்திரவழியிலும்போஷிக்கப்படுவானென்றும் மேற்சொன்னவர்களின் பூஸ்திதியுடையவனென்றும் சொல்லுக. (445)

செய்யபுதன் பாவரங் கிசையி னின்றாலும்
செறிந்தந்த வுபயவங்கிசத் திலானாலும்
ஐயமறவே நிற்கிற்பிள்ளை யிரட்டையதாம்
ஆந்தனுவே லக்கினமாய்ப் பிற்பாதியாகில்
பையவதி னின்றவர்சிங் காங்கிசத் திற்றானே
பரிந்துநிற்கப் புதன்சனியப் பதியதனைப்பார்க்கத்
துய்யகருக் கொண்டிருந்த பையுடனே கூடத்
தோன்றவே சிறுகுழவிதான் தோன்றுந்தானே.

(இ-ள்) ஜெனன காலத்தின்போது புதனானவர் தீயகிரகங்கள் அங்கிசைப் பெற்றாலும், உபய கிரகங்களின் அங்கிசையிலிருந்தாலும் அந்த ஜாதகன் இரட்டைப் பிறப்பாகப் பிறப்பான். ஜெனனலக்கினம் தனுசாகயிருந்து அந்த லக்கினத்தின் 3 அல்லது 4-ஆம் பாதமாகவும் தனுசில்நின்ற கிரகஙகள் சிங்க அங்கிசம் பெற்றும், புதனும் சனியும் தனுசு என்னும் இராசியைப் பார்க்க அக்குழவி தன் தாயின் கருப்பையோடு ஜெனனம் ஆகுவன் எ-று.

(வி-ரை) தனுசுராசி புத்திர காரகரான குருவின் ஆக்ஷிவீடாகையாலும் சிங்கராசியானது சூரியனுக்கு ஆக்ஷியானதாலும, அவரங்கிசம் பெற்ற கிரகங்கள் இலக்கினததில் நின்றால் சிஙகராசிக்கு ஐந்தாம்வீடாக வருவதால் கருப்பையோடுஜெனனமாகுவன் எனக்கூறப்பட்டன. மேற்சொன்னபடியே கிரகமிருந்து சுபர்கள் அஙகிசமும், சுபர்களோடு லக்கினாதிபதியும் சேர்ந்தால் சுத்தமாய் பிறக்கும் என்றும் கூறுவர்.

இரட்டைப் பிறப்பு என்பதை,

சேருமுதயர் திரிகோணத் தினிற்றிகழ் செவ்வாய்
சாரும்சனி ரவிபார்த்திட ரெட்டைத்தலை யாவன்.

என சாதக சிந்தாமணியில் கூறியபடி ஜெனன லக்கினத்திற்கு திரிகோணஸ்தானங்களில் குஜனிருந்து சனி-சூரியன் இவர்கள் பார்க்கில் இரட்டைத் தலையாக இருப்பானென்றும் கூறுவர். (446)

வேறு

தோன்றுஞ் சன்மத் திரவிபுதன் வெள்ளியரசன்
தொடர்ந்தே யுற்றிடில் வலப்பக்கத்தின் மறுச்சொல்லே
ஊன்றுசெவ்வாய் திங்கள சனிக்குலவு மிடபக்கத்
துறையுமறு வென்றென்றே யுரைப்பரதைக் கேண்மின்
ஏன்றசுடர்க் கதிபனுற்றால் வயிற்றின் மதிசிரத்தில்
இயல்செவ்வாய்க் கிருப்பிடத்தி லெழிற்புதன் பக்கத்தில்

ஆன்றமறு வரசனுக்கு முகத்தில்வெள்ளி துடையில்
அருஞ்சனிக்குக் காலிடத்தி லாமறுவா மென்னே.

(இ-ள்) ஜெனன ராசியில் சூரியன்-புதன்-சுக்கிரன்-குரு இவர்கள் ஒன்றாகூடி சேரில் அவனுக்கு வலப்புறத்தில் மருவென்னும் அடையாளம் உண்டு எனவும், சந்திரன்-சனி-குஜன் இம்மூவரிருந்தால் இடப்பக்கத்தில் மருவுண்டென்றும், சூரியன் தனித்திருந்தால் தொந்தியிலும், சந்திரனிருக்கில் சிரசிலும், செவ்வாய் நிற்கில் இருபீடங்களிலும், புதனிருக்கில் விலாப் பக்கத்திலும், குருவிருக்கில் முகத்திலும், சுக்கிரனிருக்கில் துடையிலும், சனி இருக்கில் காலிலும் உண்டென்று சொல்லுக எ-று.

(வி-ரை) மருவென்பது ஓர் அடையாளமாகும். மேற்சொன்ன ஒவ்வொரு கிரகங்களுக்கும் ஒவ்வொரு அவயவத்தைக் குறித்து மருவுண்டு என்று சொன்னபோதிலும் குருபகவான் ஆகூதி உச்சம் பெற்றும், புதன் கேந்திரம்பெற்றும் லக்கினத்தைப் பார்த்தால் சுத்தமாய் பிறக்குமென்றும்,

அற்புத லக்கின மைந்தினி லொன்பதிற்
பொற்புள புந்தி பொருந்தா நின்றவர்
தூர்ப்பல மாயிடிற் றேன்றுங கைகளிற்
கற்பி லதிக விரல்களைக் காட்டுமே.

என சாதக சிந்தாமணியில் கூறியபடி லக்கினத்திற்கு 5-9 என்னும் இவ் விடங்களில் பலமற்ற புதனிருக்கில் கையில் அதிக விரலோடு பிறப்பான் என்றும் முன்சொல்லிய 61-ஆம் செய்யுள்முதல் 70-ஆம் செய்யுள்வரையில் சொல்லியபடி ஆராய்ந்து சொல்லுக (447)

மறுவிலாச் செங்கதிர்நின் றிடத்தனுவிற் பிறந்தான்
வார்த்தை பிரசண்ட னதிசூரனுமா யிருப்பன்
உறுகலை யீனனறனமு மில்லான் சிங்கத்தில்
உதித்தவ னிராக்கணிலான் மேடத்திரவி நிற்கப்
பிறந்தவன் கண்டத்திமிராய்த் தனந்திர ளார்ச்சிப்பன்
பிறைவீடே லக்கினமாய்க் கதிரிருக்கப் பிறந்த
சிறுவன்விழி யுன்னதவான் றிரவியவான் போலே
சென்மமாய்க் கதிர்நிற்கத் திரவியங் கண்ணிலனே.

(இ-ள்) தன்கலைகளில் யாதொரு குற்றமும் இல்லாத சூரியன் தனுசில் நின்று அதுவே லக்கினமாக ஜெனித்தவன [illegible] வாக்கு வார்த்தையுள்ளவனும் பிரசண்ட சூரனுமாக யிருப்பான். சிங்கத்தில் நிற்கப் பிறந்தவன ஆடையிலலாதவனும் தனமிலலாதவனும் இல்லமில்லாதவனுமாம். மேஷராசியில் சூரியன் உச்சம்பெற ஜெனித்தோன் அநேக பந்து திரன் உள்ளவனும் அளவிறந்த தனத்தைச் சம்பாதிப்பவனுமாம். கடகலக்னமாக விருந்து அதில் சூரியன் நிற்க உறபவித்தவன் உன்னத விழிகளை யுடையவனும் தனவந்தனுமாக யிருப்பவனும், துலாம் ஜெனனமாக அதில் சூரியன் சேரப பிறந்தவன் திரவியம் இல்லாதவனுகுவன் எ-று.

(வி-ரை) ஜெனன ராசியில் சூரியன் நிற்பது விசேஷமாகும்.

எப்படியெனில்,

உதய பானுவு சூரபி மானியா
மூத்தமன் மதிபோக வான்சிலர் சேய்
மூதியகோபி புதன் ஞானி யந்தணன்
மூத்தி யன்பன் குலவேந்தன் சுங்கனே
யதிக செல்வன் சனிமன ரோகியா
மாயுபீடை கொடியர் கடும்பிணி
மதியணிந்த சடையர் வீமே சர்தாள்
வணக்கிளட்கி வலியறிந் தோதுமே.

(இ-ள்) ஜனன லக்கினத்தில் சூரியன் நிற்கில் உத்தமன் சூரன் அபிமானி என்றும், மதிநிற்கில் போகவான் தாக்ஷிண்யனென்றும், குஜன் நிற்கில் கோபவான் அபிமானியும், புதன் நிற்கில் ஞானி புத்திர விஸ்தார னும், குரு நிர்கில் உத்தியோக குல சிரேஷ்டனும், சுக்கிரனிற்கில் செல்வ முடையவனும், சனி நிற்கில் மனோவியாதியும் ஆலஸ்யமும் உள்ளவன் என்றும் வீமேசுர உள்ளமுடையானில் கூறியபடி கிரகங்களுக்கு ஏற்றவாறு ஆராய்ந்து கூறுதல் நலம்.

## கொடிசுற்றிப் பிறந்தல்

இதனை வடநூலார் "நாளவேஷ்டனம்" என்று கூறுவர். ஸ்திரீகள் பிரசவிக்கும்போது சில சமயங்களில் பிறந்த குழந்தையின் தேகத்தில் கொடிபோலவும், மாலைபோலவும் சுற்றிக்கொண்டிருக்கும். அதைக் கண்ட வுடன் நம் தேயத்து மக்கள் திடுக்கிட்டு மனங்கலக்கி உடனே சோதிடர் களிடம் விசாரித்தறிவது தொன்றுதொட்டு சிறந்தவழக்கமாயிருக்கின்றது. அநேகமாய் இது அனுபவசித்தமாயுமிருக்கின்றது. சோதிட சாஸ்திரத்தில் இதன் காரணம் கெட்ட கிரகங்கள் லக்கினத்தைப் பார்ப்பதனாலும் வேறு சில காரணங்களாலும் உண்டாகின்றது என்று கூறப்பட்டிருக்கின்றது.

ஜாதக சிந்தாமணி நூலுடைய ஆசிரியர் தில்லைநாயகனாரவர்கள் கூறியிருப்பன வருமாறு:

குறித்த லக்கினத்தில் ராகுகுளிகனுங் கூடிநிற்க
எறித்தலக் கினத்தோன் எட்டாமிடத் துடையவனுங்கூடிச்
செறிப்புறு குரூரராசித் திரேக்காணந் தன்னில்நிற்க
புரப்படுங் கொடியேசுற்றிப் பிறந்திடுமென்று சொல்வார்.

(இ-ள்) இலக்கினத்தில் ராகு குளிகன் இருந்து, லக்கினாதிபனும் எட்டாம் வீட்டிற்கதிபனும் கூடி, குரூரமான திரேக்காணத்தில் இருந்தால் கொடி சுற்றிக்கொண்டு பிறக்கும் என்பதாம்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| மேஷம் | குரூரம் | சிங்கம் | குரூரம் | தனுசு | குரூரம் |
| ரிஷபம் | சௌமியம் | கன்னி | சௌமியம் | மகரம் | சௌமியம் |
| மிதுனம் | குரூரம் | துலாம் | குரூரம் | கும்பம் | குரூரம் |
| கடகம் | சௌமியம் | விர்ச்சிகம் | சௌமியம் | மீனம் | சௌமியம் |

அனையசர்ப்பத் திரேகாணம் ஆனலக்கினத் திரேகாணம்
புனையிலக் னேசன்றுனே பொருந்திய திரேகாணந்தான்
தனையிலக் கினமதாக தகும்நல்லோர் பாராராயின்
வினைபுறு கொடியேசுற்றி மண்ணின்மேற் பிறக்குமென்னே.

(இ-ள்) இலக்கினம் சர்ப்பத்திரேகாணமாக லக்கினாதிபன் இருக்கும் திரேகாணமும் அப்படியேயாக, நல்லோர் (சுபர்கள்) பார்வையில்லாது இருந்தால் கொடிசுற்றிக்கொண்டு பிறக்கும் என்பதாம்.

சிந்தைகூ ரிடபமேடஞ் சிங்கமே யுதயமாகப்
புந்தியுஞ் சனியுங்கூடப் பொருந்திடு மகவேதோன்றில்
கொந்தவிழ் உடலிற்பின்னிக் கொடிசுற்றிப் பிறக்குமென்பர்
அந்தர மின்னைப்போலும் அழகிய இடையினாளே.

(இ-ள்) இடபம்-மேடம்-சிங்கம் லக்கினமாகி புதனுஞ் சனியுங் கூடி அதிலிருக்க குழந்தை கொடிசுற்றிக்கொண்டு பிறக்கும் என்பதாம்.

விரவுலக் கினத்திற்பாவர் மேவிடக் கொடியோர் பார்க்கக்
கரியராக் கேதுகூடிக் கடியகோள் வீடுதானே
பரவிலக் கினமதாகிற் பண்புறு தேகமீதில்
தரணியின் மாலையிட்டுத் தான்கொடி சுற்றுந்தானே.

(இ-ள்) இலக்கினத்தில் பாபக்கிரகங்கள் இருக்க, பாவர்கள் பார்க்க, அல்லது ராகு கேதுக்களில் ஒருவர் லக்கினத்திலிருக்க பாபக்கிரகங்களுடைய வீடு லக்கினமாகில் தேகத்தில் மாலை சுற்றிக்கொண்டு பிறக்கும் என்பதாம்.

நடக்கும்லக் கினந்தீக்கோட்கு நடுவாகப் பாம்புமிருக்கத்
தொடுத்தலக் கினத்தைச் செவ்வாய் சூரியன்பார்க்கிற் றானும்
வடுத்தவிர் உதயந்தன்னை மந்தன்சேய் பார்க்குமேனும்
தடுத்திடாக் கொடியேசுற்றித் தரணியிற் பிறப்பன்மாதே.

(இ-ள்) இலக்கினம் பாவர் மத்தியமாய் அதில் பாம்பிருக்க (ராகு-கேது) லக்கினத்தை அங்காரகன் சூரியன் பார்த்தாலும், அல்லது சனி செவ்வாய் பார்த்தாலும் கொடி சுற்றிக்கொண்டு பிறக்குமென்க.

இப்படி கிரகங்கள் நின்றால் கொடியோ மாலையோ சுற்றிப் பிறக்கும் என்று ஏற்படுகின்றது. கொடிசுற்றிப் பிறந்தால் கோத்திரத்திற்கு ஆகாது; மாலைசுற்றிப் பிறந்தால் மாமனுக்கு ஆகாது என்று உலகோர் வழங்கி வருகின்றனர். சிலர் கொடிசுற்றிப் பிறக்குமாயின் சிசுவின் சரீரத்தில் எப்படி சுற்றிக்கொண்டிருந்ததோ அப்படியே வெள்ளியில் ஓர் கம்பிசெய்து போட்டு திரை ஒன்று கட்டி அதன் ஒருபுறம் தாயினிடம் சிசுவைக் கொடுத்து நிற்கச்செய்து இரும்புப் பாத்திரத்தின் நிரம்ப எண்ணெய் பூரித்து அதில் தோன்றும் சிசுவின் உருவை திரையின் மற்றொருபுறம் நிற்கும் தோஷமுடையவர்களைப் பார்க்கச்செய்து பின்பு அந்த வெள்ளிக் கம்பியையும், எண்ணெய்ப் பாத்திரத்தையும் சத்புருஷர்களுக்குத் தானஞ் செய்து வருகின்றனர். சிலர் மாலை சுற்றிவந்தால் உடனே அம்மான் கையில் ஓர் கத்தியைக் கொடுத்து படர்ந்துள்ள ஓர் கொடியின் அடி வேரினை அறுத்துவிடும்படி செய்கின்றனர்.

த்ரிரா விருத்யா சிசும்ஹந்தி த்விராவ்ருத்யாது மாதரம்
ஏகாவ்ருத்யா மாதுலஞ்ச பார்ஸ்வயோ: பிதாந்ததா
ப்ராதரந்த க்ஷீணேபாஹௌஸ்வ ஸாரம்வா மகேததா
தத்தோஷ பரிஹாராயசாந் திங்குர்யாத் விசக்ஷண:

(இ-ள்) பிரசவகாலத்தில் சிசுவி னுடைய தேகத்தில் மூன் றுதரம்சுற்றி யிருந்தால் சிசுவுக்கும், இரண்டுதரம் சுற்றியிருந்தால் மாதுருவுக்கும், ஒரு தரம் சுற்றியிருந்தால் அம்மானுக்கும், பக்கங்களில் சுற்றியிருந்தால் தகப்ப னுக்கும், வலக்கையில் சுற்றியிருந்தால் சகோதரர்கட்கும், இடக்கையில் சுற்றியிருந்தால் குழந்தைக்கும் தோஷமுண்டாகுமென் று சாந்தி ரத்னுகரம் சாற்றுகின்றது. ஆதலால் இத்தோஷ பரிகாரத்தின்பொருட்டு சாஸ்தி ரோக்தமாக சாந்தி செய்துகொள்வது அறிவுடையோர் கடமையாகும். சில சாமான்ய ஜனங்கள் இவ்வகை கொடி மாலைசுற்றி பிறப்பதைக் கண்டு மிகவும் பயந்து கலங்கி துக்கிக்கின்றனர். இவை பாபக்கிரகசம்பவங்களால் தோன் றுங் குறியென் று அறியாது மயங்கித் தியங்குகின்றனர். ஆதலால் இதுவிஷயமாய் பயம் ஒன் றும் கொள்ளற்க. சாதாரண தோஷமெனக் கருதி சாந்திசெய்து நலமெய்துவார்களாக. (448)

### வேறு

கண்ணுரிடபந் தகர்சிங்கங் கண்டசன்ம லக்கினமாய்ப்
பண்ணுர் சனிசெவ்வாய் கூடிப்பார்க்கிற் கொடிரண்டுளதாகும்
தண்ணுர் செவ்வாய்கண் பார்வைதான்செங் கொடியொன்றேசுற்றும்
எண்ணுர்சவுரி பார்வைக்கே யிருக்குங் கரியகொடியொன்றே.

(இ-ள்) மேடம்-ரிடபம்-சிங்கம் இவை ஜெனன ராசியாகயிருந்து அந்த லக்கினத்தில் சனி-குஜன் இருவரும் கூடி நோக்கினுலும் அந்த குழவி இரண்டு கொடிகள் சுற்றிப் பிறப்பான். குஜன் மாத்திரம் பார்த்தால் செம்மை நிறமான கொடியொன் று சுற்றிப் பிறப்பான். சனி மாத்திரம் பார்த்தால் கருமை நிறமுள்ள கொடிசுற்றிப் பிறப்பான் எ-று.

(வி-ரை) மேலே சொன்ன சனி - குஜன் பார்த்தால் கொடிசுற்றிப் பிறப்பான் என்பதை மற்ற கிரகங்களுக்குச் சொல்லவேண்டுமாயின் லக்கி னத்தில் இராகுவும் குளிகனும் நின் றும் அஷ்டமத்ததிபதி திரிகோண ராசியிலிருந்தாலும், மேற்படி கொடிசுற்றியே பிறப்பன். மேடம்-ரிடபம்-சிங்கம் இவை ஜெனன லக்கினமாக சனியும் புதனும் கூடினுலும் கொடி சுற்றியே பிறப்பான். ஜெனன லக்கினத்தில் ராகு நின் று 10-ல் குரு நின்ருல் கால் முன்னுக பிறப்பான் என் றும் கூறுவர். (449)

கொடியபாம்பி னுடனிரவி கூடியிருக்கிற் கொடிதலையாம்
நெடியசன்ம மெட்டாதி நெருங்கில்ரோக சரீரனுமாம்
படியிற்செவ்வாய் சனிசன்மம் பற்றியிருக்கிற் கல்லெரிப்பாம்
உடனேயவன்றன் விழிதனக்கே யுறக்கமிகுதி யுண்டாமே.

(இ-ள்) கொடுமையான இராகு கேதுவோடு சூரியன் கூடியிருக்கப் பிறந்தவன் மேற்சொன்ன கொடி தலையில் சுற்றிப் பிறப்பவனுவான். ஜெனன ராசி யதிபதியும் 8-ஆம் வீட்டோனும் சேர்ந்திருக்கில் வியாதி யுள்ளவனுவான். சனியும் குஜனும் இலக்கினத்தி லிருந்தால் கல்லெரிப்பு என்னும் துர்வியாதி சம்பவிக்கும். உடனே அவன் கண்களுக்கும் துக்கம் சம்பவிக்கும் என்பதாகும் எ-று.

(வி-ரை) 'தூக்கம்' என்பதை பிறக்கும்போதே கண் குருடாகவும் பிறப்பான் என்றும் சிலர் கூறுவர். 'சொரி தலை' என்பதைத் தலையில் ரோகம் உள்ளவன் என்றும் கூறுவர். (450)

உண்டாஞ்சன்மந் திரமாயி னதிலேசன்மத் தோனுமுறப்
பண்டேசனித்த கிராமத்தின் பதியாயிருப்ப னட்டமந்தான்
மிண்டார்திரமாகிச் சனித்தவீட்டின் மரிப்பன் சன்மசரம்
கண்டால்விதேச சஞ்சாரங் காணுமென்றே கருதிடுமே.

(இ-ள்) ஜெனனராசி ஸ்திரராசியாக விருந்து லக்கினாதிபதி ஆகூடி பெறப்பிறந்தவன் தான் ஜெனித்த கிராமத்திலேயே அதிபதியாக இருந்து வாழ்வான். அஷ்டமாதிபதி என்னும் ஆயுள் ஸ்தானாதிபதி ஸ்திர லக்கினம் பெற அந்த ஜாதகன் ஜெனித்த வீட்டிலேயே மரிப்பன் என்றும், ஜனன லக்கினம் சரமாகில் அந்நிய தேசங்களிலேயே இருந்து காலங் கழிப்பான் எ-று.

(வி-ரை) இத்துடன் குடும்பாதிபதி 5-ஆம் வீட்டதிபதி இவர்களையும் ஆராய்ந்து கூறுதல் வேண்டும். (451)

கருதுஞ்சன்ம முபயமதாய் கண்டாற்சிலநாள் விதேசத்தில்
பரிதிசன் மாதிபனாகிற் பரவுங்கிரியிற் சஞ்சாரம்
சிரரோகஞ்சற் றுண்டென்பர் செவ்வாய் சன்மாதிபனாகில்
உருவாயுதத்தா லக்கினியா லுறுநோய் காட்டுமுண்மையிதே.

(இ-ள்) ஜெனனராசியானது உபயமாக விருந்தால் கொஞ்சநாள்வரையில் அந்நிய தேசசஞ்சாரம் செய்வானென்றும், லக்கினாதிபதி சூரியனாகில் அடர்ச்சிபொருந்திய குன்றுகளில் வாசம் செய்பவனும் தலைநோய் உள்ளவனென்றும் சொல்வர். இலக்கினாதிபதி குஜனாகில் பல கருவிகளாலும் நெருப்பினாலும் வியாதி காட்டுமென்றும் சொல்வாய் எ-று.

(வி-ரை) 'கிரி' என்பது குன்றுகள்; ஆகையால் குன்றுகளில் வாசம் செய்வோர் ஞானி என்றும் கூறலாம். ஜன்மாதிபதியோடு 3-கிரகங்கள் கூடி இருந்தால் சந்நியாசி யாவானென்றும், ஒரு கிரகம் கூடி இருந்தால் குருகடாக்ஷம் உள்ளவனென்றும், ஞானியும் ஆவானென்றும் கூறுவர். ()

உண்மைப்புதன் சன்மாதிபனே வுளதுலித்தை கணிதமுடன்
வண்மைவியா பாரத்தொழிலே வரும்பொன்வெள்ளி மனையாலும்
பண்மைசுருதி யுணர்தனவான் பரங்கிற்சனித்த பதிநீங்கான்
தண்மைபகரச் சுபகர்மத் தலைவனென்றே சாற்றிடுமே.

(இ-ல்) ஜெனனலக்கினாதிபதி புதனாகில் கணிதசாஸ்திரமுள்ளவனும், கல்வியாளனும், மேன்மைதங்கிய வியாபாரத்தொழில் செய்பவனுமாவான். ஜெனன லக்கினாதிபதி சுக்கிரனாகவும் குருவாகவு மிருந்தால் மேன்மையை யுடைய சாஸ்திரத்தொழில் செய்பவனாவானும், சாஸ்திரங்களை கற்றுணர்பவனும் ஆவான் அன்றியும் தான் ஜெனித்த இடத்திலேயே இருந்து வாழ்பவனும், குற்றத்தைச் சொல்லப்படமாட்டாத மேலான சுபகாரத் தொழிலை யுடையவனும், மேம்பாடுடையவனென்றும் சொல்வாய் எ-று.

(வி-ரை) இடபம் அல்லது துலாம் ஜெனன லக்கினமானால்தான் சுக்கிரன் லக்கினாதிபதியாவன். ஷை இடபம்-துலாம் இவற்றில் ஜெனனமாவோருக்கு தான் ஜெனித்த இடத்தைவிட்டு நீங்கானெனவும் குறிப்பிட்டாலும் கீழே தலைவன் என்றுசொன்னதால் அந்த ஜாதகன் பிரதமபுத்திரனாவான். பிதுரார்ஜித பூஸ்திதி இழக்கானென்றுங் கொள்வதுடன் லக்கினாதிபதி இருக்கும் சுபாசுபம் தெரிந்து சொல்லுதல் வேண்டும். (453)

சாற்றுமதி சன்மாதிபனே சரீரகாந்தியுளன் சுகவான்
நேற்றீச்சரக்கை விற்றுண்பன் நிலவுசன்மத்தைப் பார்க்கில்
போற்றுந்தந்தை யருகிருக்கச் சனித்தானென்றே புகல்வார்கள்
ஆற்றுஞ்சரத்தின் மதியிருக்க வந்தான்றந்தை யன்றெனவே.

(இ-ள்) ஜெனன ராசியதிபதி சந்திரனாகவிருக்கப் பிறந்தவன் தன் திரேகமானது பிரகாசமும் காந்தியுமுள்ளவனாக இருப்பதுடன் அழகும் உன்னதமான சரக்குகளை விற்று ஜீவிக்கும் தன்மையு முடையவனாகுவன். இலக்கினத்தை சந்திரன்நோக்கில் தன்தகப்பன் அருகிலிருக்கப்பிறந்தான் என்றும், சரலக்கினங்களில் சந்திரனிருந்தால் அவன் தந்தை அன்றுதான் வீடுவந்தானென்றும் சொல்லுக எ-று. (454)

எனவும்வெள்ளி புதனடுவி லிந்துவிருக்க வந்தருகே
வினவிற்றந்தை யிருந்திடுவன் வெய்யோன்சரத்தின் மதிபத்தில்
தனதாயிருக்கப் பிதாவிருக்குந் தலத்திற்சனித்தான் ருனென்பர்
சினமார்சனி சன்மத்தேழிற் செவ்வாயேனும் பிதாதேசம்.

(இ-ள்) சுக்கிரனுக்கும் புதனுக்கும் நடுவில் சந்திரனிருக்க உதித்தவன் அவன் ஜெனிக்கும்போது தன் தந்தை சமீபத்திலேயே இருப்பான் என்றும், சரலக்கினத்தில் சூரியனும் சந்திரன் 10-ஆமிடமான ஜீவனஸ்தானத்திலிருந்தால் தன் பிதுரார்ஜிதமனையிலேயே பிறப்பான் என்றும், லக்கினத்திற்கு ஏழில் சனியேனும் செவ்வாயேனும் இருக்க அவன் பிதா தேசாந்திரத்திலும் இருப்பான் எ-று.

(வி-ரை) 'பிதுரார்ஜித மனை' என்பதை பிதாவின் சொந்த இல்லத்தில் பிறப்பானென்றும், சந்திரனுக்கு இருபக்கமும் சுபக்கிரகங்கள் நின்றதால் மாளவயோகமென்றும் சொல்லுதல் வேண்டும். (455)

தேசார் * மனிதலக்கினமாய்ச் செவ்வாய் பார்க்கச் சனித்தவனும்
மாசார் மசானக் கரையென்றே வழுத்தலாகுஞ் சனிசெவ்வாய்
நேசார் திரிகோணத்தின் மதிநிற்கப்பிறந்த நேயனையே
கூசாளன்னை யெறிவாளிந்தக் குருநோக்கிற் கைக்கொள்வாளே.

(இ-ள்) ஜெனன லக்கினமானது மிதுனம்-கன்னி-துலாம்-கும்பம் இவைகளாகவிருந்து லக்கினத்தை குஜன் நோக்க, அந்த பிள்ளையானது சுடுகாட்டின் கரையில் பிறக்குமென்றும் சொல்லவேண்டும். சனி-சந்திரன்-அங்காரகன் இம்மூவரும் 5-9 என்னும் திரிகோண ராசிகளிலிருந்து பிறக்கும் குழவியை அவன் மாதா அவனைக் கூச்சமில்லாது எறிந்துவிடுவாள்

* மனித லக்கினம்=மிதுனம்-கன்னி-துலாம்-கும்பம்.

என்றும் சந்திரனைக் குருபார்த்தால் மேற்சொன்னபடி இன்றி போஷிப்பவ ளாவள் எ-று.

(வி-ரை) இச்செய்யுளில் சொல்லிய 'கூசா ளன்னை எறிவள்' என்பதை தாயானவள் அக்குழந்தையைப் போட்டுவிடுவாள் என்று குறிக்கப்பட்டன. இதோடு திரிகோண ஸ்தானத்தில் சந்திரனிருந்தாலும் நீச்சமடைந்திருக் கிறானென்றும், சூரியன் மறைவிடம் பகை நீச்சமடைந்திருக்கிறானென் றும் ஆராய்ந்து சொல்லுதல் வேண்டும் என்பதாம். (456)

**கொள்ளும்பாவமதிசன்மங் குறுகச்செவ்வாய்சனியேழில்**
**மெள்ளவிருக்கிற்குருநோக்க விரும்பியெடுத்தார்வளர்க்கவுய்வன்**
**தெள்ளும்புதன்பாம்பரசன் மதிசேர்ந்துசன்மத்திருந்திடவே**
**பிள்ளைபிறக்கில்வம்சத்தைக் கெடுப்பனெனவும்பேசுவரே.**

(இ-ள்) ஜெனன லக்கினத்தில் சந்திரனும் சனியும் சுக்கிரனும் சேர, சப்தமத்தில் லக்கினத்தையும் குரு நோக்கப் பிறந்த ஜாதகன் தன்னை யார் ஆசையுடன் கொள்ளுகிறார்களோ அவர்களால் போஷிக்கப்படுவான். ஜெனன லக்கினத்தில் தெள்ளிய சந்திரனும் இராகு-கேது புதன்-குரு இவர்கள் சேர்ந்திருக்கில் பிறந்த பிள்ளைக்கு பற்பல தொந்தரவும் அக் குடும்பமே நசிந்து கருவறுந்துபோகும் எ-று.

(வி-ரை) முன் செய்யுளில் மாதா அக்குழவியை எறிந்து விடுவாள் என்று சொன்னதைப்போலவே இந்தச் செய்யுளிலும் கைக்கொள்ளுபவர் களே வளர்ப்பார் என்று சொல்லப்பட்டன. மேலே எழுதியபடியே சந்திர னும் சனியும் நீச்சம்பெற்று லக்கினத்தைப் பார்த்து லக்கினாதிபதியும் அசுப க்ஷேத்திரத்திலிருந்தால் குழந்தையை எறிந்துவிடுவாளென்றும், இம்மே லக்கினத்தைக் குருபார்க்க அக்குழவியைப் பாராது எவர் ஆசைப்படு கிறார்களோ அவர்களால் போஷிக்கப்படுவான். குரு பார்வை இல்லாது லக்கினாதிபதியும் தீயருடன் சம்மந்தப்பட்டு அஷ்டமாதிபதி திசையில் ஜெனனமாகி அஷ்டமாதிபதியும் கொடிய இராசிகளிலிருந்தால் அந்தக் குழவியை எறிந்தவுடனே இறந்துபோம் என்றும் சொல்லுக. (457)

**பேசும்லக்கினஞ்சசிலக்கினம் பிறங்கத்தூமனிருந்திடவே**
**வீசும்வாணாள்குறையும் விதிபாதனிருக்கிற்புகழ்நாசம்**
**மாசில்பரிவேடனிருக்க மதிபோஞ்சக்கிரசாபனுறின்**
**மேசின்குலங்கணசிக்குந்துசன் மேவிற்றனம்போமெனப்பேசே.**

(இ-ள்) சந்திரன் வீடே ஜெனன லக்கினமாக யிருந்து லக்கினத்தில் தூமனிருக்க அந்த ஜாதகன் வாழ்நாள் குறைந்து அற்ப ஆயுள் உடையவன் ஆவன். விதிபாதனிருக்கில் தன் புகழ்ச்சி மேம்பாடெல்லாம் நாசமாகும். பரிவேடனிருக்கில் தன் அறிவு குறைவாகும். சுக்கிரசாபனிருக்கில் அந்தக் குலமானது அழிந்துபோகும் துசனிருக்கில் தன் பொருளெல்லாம் அழிந்துபோகும் என்றும் கூறுவர் எ-று.

(வி-ரை) இவை உபயராசி கிரகமெடுத்து அவ்விராசியிலுள்ள கிரகங் களைக் கொண்டு கூறவேண்டுவதாகும். (458)

பேசும்லக்கினமீனண்டிற் பிறந்தவர்களுக்கெல்லாம்
பாசமாம்மகாதிசையின் பலன்களைப்பார்க்கும்போது
தேசுறுகரியபாம்பின் றிசைவரிற்பார்க்கும்போது
தூசுபொன்சோபநற் சுபபலன்பெறுவர்தாமே.

(இ-ள்) கடகம் மீனம் இவைகளில் ஜெனித்தபேருக்கு மகாதிசைகளில் எந்த திசைபலனைத் தருமென்றால் துன்பத்தைத்தரும் ராகுதிசை வந்தால் பாக்கிய யோக்கிய சிலாக்கியங்களும், பொன்னுணய விருத்தியும், நல்ல மேம்பாடான பலனைத்தரும் எ-று.

(வி-ரை) இராகுதிசை மீனம் கடகம் இந்த லக்கினத்தோர்க்கே மேலான பலனும், மறறோருக்கு அற்பபலனும் அல்ப லாபமும் உண்டாகுமென்பது கருத்தாகும். (459)

தார்செறிமகரங்கன்னி தனிற்பிறந்தோர்கட்கெல்லாம்
பார்செறிமகாதிசையின் பலன்களைப்பார்க்கும்போது
சீர்பெறுகேதுவான திசைவரும்போதுசெல்வம்
ஊர்திசையரசராற்சனமான முண்டாங்கண்டீரே.

(ஆ-ள்) செல்வத்தை அளிக்கப்படாநின்ற மகரம் கன்னி இந்த லக்கினததில் ஜெனிததோருக்கு யோகமான திசை எதுவெனில், சிறப்பு பெறற கேதுதிசை வரும்போது மேலான செல்வமும் பொருளையும் செல்வததையே ஆபரணமாக அணிந்திருக்கும் இராஜாக்களால சன்மானக் கீர்த்திகளும உண்டென்று சொல்லுக எ-று.

(வி-ரை) கேதுபகவான் திசை மகரம் கன்னி இந்த லக்கினத்தாருககே யோகத்தைத் தரும் என்பதாம். (460)

வேறு

பேசுஞ்சன்மசரராசி பிரியாச்சரத்திலாதிபனும்
பாசஞ்சரததிலுறத்தோன்றிப் பார்க்கிற்றாலசரீரனுமாம்
வீசுலககினஞ்சரமாயவ் வீட்டுக்குடையோன்சரத்திருக்க
தேசமவிடுத்தேசஞ்சாரந் திகழத்திரிவனெனச்சொல்வாய்.

(இ-ள்) சரராசியில் ஜெனனமாகி மேற்படி இராசியிலேயே லக்கினாதிபதி இருந்தாலும் அல்லது நோக்கினும் அந்த ஜாதகன் தடித்த சரீரமுள்ளவனாகுவன. மேலே சொன்ன சரலக்கினமே ஜெனனமாகி ஜெனனராசிநாதன தன் சுய வீட்டிலேயே இருக்க அந்த ஜாதகன் தேசாந்தரங்களில் திரிவானென்றும் சொல்வாய் எ-று.

(வி-ரை) இவை லக்கினப் பொதுவாய் சொன்னதாகும். இத்துடன் 2-ஆம் பாவகத்திலும் ஆராய்ந்து சுயக்ஷேத்திரத்தில் வாழ்வானென்றும், அந்நிய க்ஷேத்திரததில் வாழவானென்றும் கூறுதல் நலம். (461)

முதற்பாவகம் முற்றிற்று.

# இரண்டாம் பாவகம்

## நேத்திர பலன்

['இரண்டாம் பாவகம்' என்பது குடும்பம், நேத்திரம், வாக்கு, தனம், உத்தேசம் இவைகளைப்பற்றி பேசலாமென இந்நூலின் பொது பாவகத்தில் கூறியபடி இந்நூலாசிரியர் இரண்டாம் இடத்தால் நேத்திர பலனைக் கூறுவாராயினர்.]

எழிற்கண்ணுதிபன்றீக்கோளா யெட்டினிற்சனியோடிந்தும்
பழிகொளாருமிடத்திற் பானுவேற்பூனைக்கண்ணும்
விழிகள்கோன்பாவனாய் லக்கினதிசைமேவியாறெட்
டொழிவியத்துகூலோகப்பத் துறுங்குருடாகத்தானே.

(இ-ள்) அழகு பொருந்திய நேத்திர ஸ்தானாதிபதியான இரண்டாம் வீட்டதிபதி அஷ்டமஸ்தானம்பெற்று சனி சந்திரன் சகிதம் பெற்றும், பழி பாவங்களையுடைய ஆறுவது வீட்டில் சூரியனும் நிற்கப் பிறந்தவன் பூனைக்கண்ணுடையவனாவன். மேலே சொன்ன நேத்திர ஸ்தானாதிபதி பாவகிரகமாகி லக்கினாதிபதியோடு கூடி ஜெனனராசிக்கு 6-8-12 ஆகிய சஷ்டம அஷ்டம விரயம்பெற்று நிற்கப் பிறந்தவன் கருப்பையி லிருக்கும் போதே அந்தகனாக (பிறவிக்குருடனாக) இருந்து ஜெனிப்பான் எ-று.

(இ-ள்) நேத்திர ஸ்தானாதிபதி பாவகிரகமாகி என்பதை சூரியன்-அங்காரகன்-சனி-இராகு-கேது என்றும் கொள்க. மேலே சொன்ன பாப கிரகங்கள் நேத்திர ஸ்தானாதிபதியோடு சேர்ந்து 2-ஆம் ராசிக்கு 6-8-12-ல் நீச்சம்பெற்றால் நேத்திரப் பழுதுள்ளவனென்றும் சொல்லுக. (462)

சுக்கிரநேத்திராதி பதியெனத்தோன்றியெட்டில்
நிற்கவோராறில்வெய்யோ னிற்கிற்கண்ணோய்பிற்காலம்
தக்கவேறரிமேஷத்திற் சனிகுசன்றானுற்றாலும்
மிக்கதாமதரத்தூன மெழிற்கொடிசுற்றித்தோன்றும்.

(இ-ள்) நேத்திர ஸ்தானாதிபதி சுக்கிரனாக இருந்து அவர் 8-ல் நிற்க ரோகஸ்தானத்தில் சூரியனிருக்க அந்த ஜாதகனுக்கு தன் அந்திய வயதில் நேத்திரரோகங்காட்டும். சனி அங்காரகன் இவர்கள் சிங்கம்-ரிஷபம்-மேஷம் இவ்விடங்களில் நின்றால் மேன்மையான கொடுமை விளைவிக்கக் கூடிய கொடிசுற்றிப் பிறப்பான் எ-று.

(வி-ரை) சுக்கிரன் நேத்திராதிபதியாகி 8-ல் நின்றால் பிற்காலங்களில் கண்ணோய் சம்பவிக்கும் என்று கூறப்பட்டதற்குக் காரணம்: முன்பு விஷ்ணு வாமன அவதாரியாய் தானம் கேட்டபோது அவர் தாரை வார்க்கையில் சுக்கிரபகவான் வண்டுஉருவமாய் அத்துவாரத்தை அடைத்த போது விஷ்ணு ஓர் குச்சியால் குத்த அதனால் சுக்கிரனுக்கு ஓர் கண் பழுது ஏற்பட்டது. ஆகையால் சுக்கிரன் சுபனாகவிருந்தும் 8 ல் நின்றால் பிற்கால நேத்திர ஊனன் என்றும் சொல்லப்பட்டன. (463)

**லக்கினத்ததிபனோடு மிரண்டிடத்ததிபன்சுங்கன்**
**திக்கெனக்கூடமூன்றிற் செங்கதிர்நிற்குமாயின்**
**ஒக்கவேகண்ணில்லாம லுதிப்பனுதித்தனல்லால்**
**மைக்கணும்மதியமுற்றுன் மாலைக்கண்ணாகுமென்றே.**

(இ-ள்) *மைதீட்டிய கண்களை யுடையவளே! ஜெனனராசி அதிபதியோடு தனாதிபதியாகிய இரண்டாம் ராசிநாதனும், நேத்திரகாரகனாகிய சுக்கிரனும் சகிதம்பெற்று இருக்க, சூரியன் திரிதிகை ஸ்தானத்திலிருக்கப் பிறந்தவன் நேத்திரமின்றிப் பிறப்பன். சூரியன்மாத்திரம் 3-ல் இல்லாது மற்றும் ஜெனனராசி அதிபதியும் சுக்கிரனும்கூடி இருக்கப் பிறந்தவன் மாலைக்கண் உள்ளவனென்றும் சொல்லுவாய் எ-று*

(வி-ரை) *'இலக்கினம்' என்பது உடல் என்று முன்னமே கூறப்பட்டு உள்ளன. லக்கினாதிபதியான சரீர ஸ்தானாதியோடு ஓர் கண்ணானவனான சுக்கிரன் சேரில் மாலைக்கண்ணாகும் எனவும், சிங்க லக்கினமாகவிருந்து லக்கினத்தில் சூரியனும் சந்திரனுமிருக்க சனியும் அங்காரகனும் பார்க்க இரண்டு கண்ணும் நாசமாம். பாவகிரகங்கள் ஆனாலும் சுபவர்க்கமேறி லக்கினத்தைப் பார்க்கில் கண்களில் ஓர்வித அழுக்குநீர் வடிந்துகொண்டே இருக்குமென்றும் மூழு சுபர்களாக இருந்து பார்த்தால் கண்ணோய் கண்டு தீருமென்றும் கூறுவர்.* (464)

**குறைவிநேத்திராதிசுங்கன் லக்கினத்தோனுங்கூடி**
**நிறையமூன்றுமிடத்தி னிற்கினேத்திரநோயாகும்**
**நறைகுழலக்கினாதி யிரண்டிடத்ததிபன்வெள்ளி**
**அறையவோரிடத்தினிற்கி லந்தகனவன்கண்டீர்.**

(இ-ள்) *ஓர் கண் பழுதுடைய சுக்கிரனும் ஜெனனராசி அதிபதியும் சேர்ந்து 3-ஆம் வீட்டிலிருக்கப் பிறந்தவன் நேத்திர நோயுள்ளவனாக இருப்பான். ஜெனனராசி அதிபதியும் சுக்கிரனும் கூடி எந்தராசியில் இருந்தாலும் அந்த ஜாதகன் அந்தகனாகவே இருப்பான் என்று கூறுவர் எ-று.*

(வி-ரை) *'மூன்றுமிடம்' என்பது மறைவிட ஸ்தானமாகையால் அந்த ராசியில் சுக்கிரனிருந்தால் அந்தகனென்றனர். இரண்டாம் வீட்டை குரு ஆக்ஷி உச்சம்பெற்று பார்க்கில் உடனே அந்த தோஷம் நிவர்த்தியாகும்.* ()

*வேறு*

**நேத்திரத்தா னத்தாதி சுங்கனாகி**
**நிறைசன்மா தியைக்கூடி மூன்றில்நின்றால்**
**நேத்திர ரோகமந்த நேத்திராதி**
**நிலவாகிப் புகருடனே யிரண்டினின்றால்**
**நேத்திரத்தா னிசிகடோறு மொளிகொடாது**
**நின்றகட கந்தனிலுற் பவித்தபோதும்**
**நேத்திரத்தான் மதிசுங்கன் கூடிநின்றால்**
**நிகழ்பிறவிக் குருடனுமாய் நிற்பன்றானே.**

(இ-ள்) நேத்திர ஸ்தானாதியென்னும் இரண்டாம்வீட்டதிபதி சுக்கிரனாகயிருந்து லக்கினாதிபதியோடு சேர்ந்து திருதிகை ஸ்தானம்பெற, நேத்திர வியாதி யுள்ளவனாகுவன். சந்திரன் நேத்திர ஸ்தானாதியாக இருந்து சுக்கிரனுடன் சேர்ந்து இரண்டில் நின்றாலும், இராக்காலங்களில் பார்வை இருக்காதென்றும் கூறுவர். கடகலக்கினமாகயிருந்து இரண்டாம் ராசிநாதனும் லக்கினாதிபதியான சந்திரனும், சுக்கிரன் இம்மூவரும் கூடி இருக்கில் அந்த ஜாதகன் ஜெனனமுதல் அந்தகனாகவே இருப்பானென்று சொல்வாய் எ-று.

(வி-ரை) சதயம்-திருவாதிரை-பூரம்-விசாகம் இந்த நக்ஷத்திரங்களில் சுக்கிரனும், சுவாதியில் சனியும், கார்த்திகை-மூலம் இந்தநக்ஷத்திரங்களில் கேதுவும். இவர்கள் நின்ற ராசியை நேத்திர ஸ்தானமாகயிருந்தால் ஒரு கண்மாத்திரம் குருடென்றும் பிரித்துச் சொல்லுதல் வேண்டும். இவை சாதக சிந்தாமணியில் கூறியபடி என்க. (466)

சிங்கமே நேத்திரத்தா னந்தானாகிச்
செங்கதிர் சுங்கன்கூடிச் சிங்கத்தேற
அங்கவரோ டெந்தத்தா னாதிபதியேனு
மவரவர்தங் காரகராயினும் வந்துற்றாலும்
தங்கியபேர்க் குரியர்தமக் கெய்துநேத்திரநோய்
தனதுபதி யாகிலுச்சந் தானாகில்நன்மை
துங்கமதி வியத்துறிலோ விழியொன்றேயூனம்
சூரியனுங் கூடில்விழியோ விரண்டும்போமே.

(இ-ள்) நேத்திர ஸ்தானமென்னும் இரண்டாமிடம் சிங்கமாகயிருந்து அந்த ராசியில் சூரியனும் சுக்கிரனுமிருக்க, அவர்களோடு எந்த ஸ்தானத்திற்குடையவன் வந்து சேர்ந்தானோ அவன் எந்த காரகனாக யிருக்கிறானோ அந்தந்த காரகர்களுக்கு நேத்திரநோய் சம்பவிக்கும். சிங்கத்தில் சேர்ந்த கிரகங்கள் ஆக்ஷி உச்சனாக யிருந்தால் அந்தந்த காரகர்களுக்கு நற்பலன் உண்டு. பிரகாசம் நிறைந்த சந்திரன் 12-ல் இருந்தால் ஒருகண் ஊனம் எனவும், சூரியனும் சேர்ந்தால் இரண்டு கண்களும் ஊனமென்று சொல்லுக எ-று.

(வி-ரை) உதாரணமாக சிங்கராசியில் சூரியனும் சுக்கிரனும் இருப்பதாக வைத்துக்கொள்வோம். கடகலக்கினம் ஜெனனமானால் சிங்கம் நேத்திர ஸ்தானமாகும். சிங்கத்தில் அவ்வீட்டிற்கு ஐந்தாமதிபதி குஜன் வந்து சேரில் சகோதரனுக்கு கண்ணூனமென்றும் இவ்வாறே சிங்கத்தில் நின்ற ஒவ்வொரு காரகனை ஆராய்ந்து கூறுவதோடு ஆக்ஷி உச்சமறிந்தும் சுபாசுபம் கூறுக. (467)

வேறு

சோதிலக்கினத்திற் குசன்சூழ்ந்திட
ஓதுமட்டமத்தோன் கேந்திரத்துறப்
போதஅட்டமத்திற் பாவர்போந்திட
ஏதநேத்திர நோயும்வந்தெய்துமே.

(இ-ள்) பிரகாசம் கொடுக்கும் இரண்டாமிடம் என்னும் நேத்திர ஸ்தானத்தில் குஜனிருக்க அஷ்டமாதி என்னும் 8-ஆம்வீட்டதிபதி 1-4-7-10 என்னும் இவ்விடங்களிலிருக்க 8-ஆம் வீட்டில் பாவகிரகங்களுமிருக்கப் பிறந்த ஜாதகனுக்கு நேத்திரவியாதி உண்டாகுமென்றுகூறுவாய் எ-று. ()

**சேருஞ்சுங்கன்சன்மாதி திங்கள்கூடியாறெட்டில்**
**நேரும்வியத்திற்பலமற்றே நிற்கின்மாலைக்கண்ணாகும்**
**ஏருங்கதிரோன்சன்மாதி யிரண்டாமாதிவெள்ளியொன்றாய்த்**
**தீரும்வியமாறெட்டிலுறச் செப்பும்பிறவிக்குருடனுமாம்.**

(இ-ள்) ஜெனன லக்கினாதிபதி சுக்கிரன் சந்திரன் இம்மூவர்களும் சேர்ந்து 6-8 12 என்னும் இவ்விடங்களில் தன் வலிவற்று நிற்க அந்த ஜாதகன் மாலைக்கண் உடையவனாவான். பிரகாசம்பொருந்திய சூரியனும் ஜெனனலக்கினாதிபதி இரண்டாம்வீட்டதிபதி சுக்கிரன் இவர்கள் ஒன்று சேர்ந்து மேற்சொன்ன சஷ்டம அஷ்டம விரயமென்னும் இடங்களிலிருந்தால் பிறவிக்குருடனாக இருப்பான் என்றும் கூறுவர் எ-று.

(வி-ரை) (தீரும் என்பது பாட்டின் இசையாகும்) சூரியன்-சந்திரன்-ராகு-கேதுவுடன்கூடி 2-6-8-12 இவ்விடங்களில் சரலக்கினமாக இருந்து அதில் சம்பந்தப்பட்டால் கண்களுக்கு ஜலரோகம் உண்டென்றும், கண்களின் விழி என்னும் உருப்பை பூச்சொரிக்குமென்றும் சோதிடத்தோர் கூறுவர். (469)

**ஆமேயிரவிசுக்கிரன்ரெண் டாதிசென்மத்தாதியிவர்**
**தாமேகூடியவரவர்கள் தானந்தனக்காறெட்டுவியத்**
**தாமேயிருக்கிலவரவர்கள் திருஷ்டிக்கூனம்சார்ந்திடுமே**
**நாமேசொல்லம்பலப்பார்வை நயனபலன்கண்டெனுஞ்சொல்லாய்.**

(இ-ள்) பெருமை பொருந்திய லக்கினாதிபதியும் இரண்டாம் வீட்டதிபதி சூரியன் சுக்கிரன் இவர்கள் அவரவர்கள் சுயக்ஷேத்திரங்களுக்கு 6-8-12-ஆம் ராசிகளில் சேரில் அவர்கள் கண்களுக்கு ஊனம் உண்டாகும் என்றும் கூறுவர் எ-று.

(வி-ரை) முன் 467-வது செய்யுளின்படி பலபாவங்களை ஆராய்ந்து அந்தந்த வர்க்கத்தாருக்கென்றும் கூறுக. (470)

**சொல்லும்பலனேத்திரத்தானஞ் சூழ்ந்தாரதிபராற்பலன்கள்**
**எல்லோன்செவ்வாய்மேனோக்க விந்துங்குருவுஞ்சமபார்வை**
**வெல்லும்புதற்கும்வெள்ளிக்கும் விழிபக்கத்தேநோக்கியிடும்**
**நல்லராகுசனிதனக்கே நயனங்கீழ்நோக்காயிடுமே.**

(இ-ள்) நேத்திரப் பார்வையின் விபாகங்களைச் சொல்லவேண்டுமாயின் நேத்திர ஸ்தானங்களில் சூரியன் குஜன் இவர்கள் நிற்கில் அவரவர்களின் பார்வை மேல்நோக்காகும். சந்திரன் குரு இவர்கள் இரண்டிலிருக்கில் சமபார்வை உடையவனும், வல்லமைபொருந்திய புதன் சுக்கிரன் இவர்கள் நிற்கில் பக்க நோக்குடையவனும், நன்மையையுடைய சனி ராகு இவர்கள் நிற்கில் கீழ்நோக்குடையவன் என்றும் கூறுவர் எ-று. (471)

**இடுஞ்சென்மாதிதனைச்சனிகண் டிடக்கண்ணோயாமிரண்டாதி**
**உடன்சூரியனுங்கூடிநிற்க மற்றுங்குளிகனுடன்சனிதான்**
**அடைந்தேநோக்கக்கண்ணோயா மவ்வீடேசலராசியெனில்**
**தொடர்ந்தேகாணில்நீர்பரவித் துளிக்குமவன்றன்விழிதனிலே.**

(இ-ள்) *உடல் லக்கினதிபதியை சனி காணில் தன் விழிகளுக்கு ரோகம் கா டும். இரண்டாம் வீட்டதிபனும் சூரியனும் நின்றாலும் குளிகனோடு சனி கூடியும் மேற்சொல்லிய கோட்களைப்பார்த்தாலும் கண்ரோகம் உண்டு. சனியும் குளிகனும் ஜலராசிகளில் நின்று காணில் அவன் கண்களில் அடிக்கடி ஜலம் வடிந்துகொண்டே இருப்பன் எ-று.*

(வி-ரை) *மேற்சொல்லியபடி கிரகமிருக்கினும் மேஷ லக்கினமாக இருந்து சனி சகிதம்பெற்று ராகு அங்காரகன் பார்க்கில் கண்களில் பூ விழும் என்று சோதிடவல்லோர் கூறுவர். இரண்டாம்வீட்டோன் சுபனாக இருந்து நேத்திர காரகனை சுக்கிரனோடு சேர்ந்து குளிகன் பார்த்தாலும் கூடினாலும் பித்தம் முதலிய உஷ்ணங்களால் கண்கள் கெடும்; இல்லையேல் இடுக்குடைய நேத்திரங்களாக இருப்பானென்றும் சொல்லுவர்.* (472)

**சோதிரவியும்பாவருடன் சூழ்ந்துபலமற்றேவியத்தின்**
**மீதிலிருக்கவலக்கண்போம் விரவுஞ்செவ்வாய்பலனற்றே**
**ஏதவியத்திலுறைந்திடிலோ விடக்கண்ணூனமிவரிருவர்**
**தீதாம்வியத்திற்கூடிநிற்கத் தெரியாதிரண்டுதிட்டியுமே.**

(இ-ள்) *பிரகாசத்தையுடைய சூரியன் பலமற்று நீச்சம் பகை முதலிய வைகளைப்பெற்று பாவகிரகங்களுடன் சேர்ந்து 12-ல் இருக்க வலது விழி பழுதாகும். மேன்மைபெற்ற அங்காரகன் மேற்சொன்னபடியே பலம் குறைந்து 12-ல் இருக்க இடதுவிழி பழுதாகும் என்றும், மேலே சொல்லியுள்ள சூரியன் அங்காரகன் இவ்விருவரும் பலமற்று 12-ல் இருந்து பாவகிரகங்கள் பார்த்தால் இரண்டு விழிகளும் பழுதாகும் என்றும் கூறுவர் எ-று.*

(வி-ரை) *(மற்றுமொருவிதம்) இரண்டாமிடம் 8-ஆம் இடம் இவ்விடங்களில் தீயகிரகங்கள் சேர்ந்தாலும் பார்த்தாலும் சுபவர்க்கமடையாது பாவவர்க்கம் அடைந்திருக்க அந்த ஸ்தானத்திற்கு உடையோன் பலமற்றிருக்க வலதுகண் மாத்திரம் ஊனமாகும் எனவும், இரண்டாம்வீட்டோன் சுபனாக இருந்து சுக்கிரன் சகிதம் பெற்று சுபவர்க்கமேறி சுபகிரகங்களோடு சேர்ந்து திரிகோணம் கேந்திரம் இவ்விடங்களில் இருக்கின் பரம்பொருள் கிருபையால் விசாலமான கண்களும் ஒளிபொருந்திய விழிகளையுடையவனும் ஆவான்.* (473)

**திட்டமுடனேசனிசெவ்வாய் சேர்ந்திரண்டிற்பனிரெண்டில்**
**கிட்டியிருக்கில்விழிக்கூனங் கிரணரவிசந்திரன்வியத்தில்**
**ஒட்டியிருக்கில்விழிநோயுமுற்று அந்தகனுய்பிறக்கும்வகை**
**துட்டரவிசேய்மதியரசன் சுங்கனைவரெங்குறினும்.**

(இ-ள்) *சமரசமான பாவி என்னும் சனியும் குஜனும் கூடி 2-12-என்னும் தனம் விரயங்களில் இருந்தால் அந்த ஜாதகன் விழிக்கு ஊனம்*

உண்டு. பூரணக் கிரகணமுள்ள சூரியனும் சந்திரனும் கூடி வியமென்னும் 12-ல் இருந்தால் அவன் விழிக்கு ரோகம் உண்டு. அஷ்டகுணமுள்ள சூரியன்-சந்திரன்-குரு வெள்ளி இவர்கள் 5-பேரும் எந்த ராசியிலிருந்தாலும் பிறவிக் குருடனாகவே ஜெனிப்பான் எ-று.

(வி-ரை) சனியும் அங்காரகனும் சேர்ந்து 2-11-ல் இருந்தால் அவன் விழிக்கு ஊனமுண்டு என்பதை அவன் திசைபுக்திகாலங்களில் சொல்லுக.

எங்கோனிரவிவெள்ளிபல னில்லாதிருக்கவவருடனே
பொங்குஞ்சன்மாதிபன்கூடிற் பொருந்திற்பிறவியந்தகனும்
தங்குமைந்தாமாருதி தானுஞ்சன்மந்தனிலிருக்கச்
சுங்கனிரண்டாதியைக்கூடிற் சொல்கண்பிடுங்கப்படுங்கண்டீர்.

(இ-ள்) உலக ஆதியந்தம் அரசு செய்யப்படும் சூரியனும் அவனோடு சுக்கிரனும் பலமிழந்திருக்க, அவ்விருவரோடு ஜெனன லக்கினாதிபதிசேரப் பிறந்த ஜாதகன் கண்ணில்லாதவனாக இருப்பான். ஜெனன லக்கினத்தில் 5-ஆம் அதிபதியும் 6-ஆம் அதிபதியும் சேர, சுக்கிரன் இரண்டாம் வீட்டு அதிபதியோடு சேரப் பிறந்தவன் கண்கள் பிடுங்கப்படும் எ-று.

(வி-ரை) மேலே சொல்லியுள்ள சூரியனும் சுக்கிரனும் பலமற்று பாவ கிரகங்களோடு சேரில் பிறவிக் குருடனுவான் என்பதை சூரியனும் சுக்கிரனும் பகை நீச்சம்பெற்று சனி-இராகு-கேது இவர்களோடு சேர்ந்து நின்றாலும் பிறவிக்குருடரென்றும் மேலோர் கூறுவர்.

5-ஆம் வீட்டோனும் 6-ஆம் வீட்டோனும் ஒன்றுசேர என்பதை,

சொல்லுமை ராசிதனக் கைந்தாருக் குடையோர்
சுகமாகச் சுங்கனுடன் கூடிவியத் தூரவே
கொல்லுமையா இவன்கண்ணைக் கொடிய நோயாலே
குவலயத்தி லாயுதத்தாலே எடுப்பர் பாரீர்.

என்றபடி 5-6-க்குடையோர் சுக்கிரனோடு சேர்ந்து 12-ல் இருக்க அவன் கண்கள் கொடிய நோய் பாதையால் ஆயுதத்தால் பிடுங்கிப்போடுவர் என்றும் கூறுவர். (475)

காணும்நேத்திரரோகமினிக் கதிர்சேர்மதியுங்காரியிவர்
வேணுமிரண்டிலாறெட்டில் வியத்தில்நிற்கரோகமிகத்
தோணுமிரண்டிற்பன்னிரண்டிற் சோமன்பரிதிகூடுகினும்
பூணுமெட்டிலிரண்டதனிற் பொல்லாரிருக்கக்கண்ணோயே.

(இ-ள்) நேத்திர வியாதியைப்பற்றிச் சொல்லவேண்டுவதாயின் சூரியன்-அங்காரகன்-சந்திரன்-சனி இவர்கள் குடும்பம்-ரோகம்-அஷ்டமம்-வியம் என்னும் 6-8-12 என்னும். இவ்விராசிகளிலிருக்க நேத்திரரோகம் உண்டு. 2-12 இவ்விடங்களில் தீயகிரகங்கள் இருக்கினும் கண்ரோகம் சம்பவிக்கும் எ-று.

(வி-ரை) 'கதிர் சேர்' என்பதை வேறு சாதகாலங்கார நூலைப் பார்க்குமிடத்து 'கதிர்சேய் என்றிருப்பதால் சூரியனும் குஜனும் என்று உரை எழுதப்பட்டன. (476)

வேறு

வேல்விழிமாதே விளம்புவலக்கண்
சாலவிரண்ட தாமிடங்கொண்டும்
ஏலுமிடக்கண் ணீராருலும்
சீலசுபாசுபங்களைத் தேர்ந்தே.

(இ-ள்) வேலைப் பழித்த கண்களை யுடையவளே! இரண்டாம் ராசியால் வலது விழியின் திறத்தையும், விரயமாகிய 12 ஆம் ராசியால் இடது விழியின் திறத்தையும், அந்தந்த கோட்களினல் சுபம் அசுபம் பிரித்துச் சொல்லுவாயாக எ-று. (477)

ஊமை ஜெனனம்

வாக்குபலன்

வேறு

குடும்பத்தானுதியோடு குலவியபுதனுங்கூடி
உடன்படவாருந்தானத் துற்றிடிலூமையாகும்
இடும்புறுமூன்றுமாதி லக்கினத்ததிபன்றுனும்
திடம்பெறக்கூடிலூமை யாகியேதிரிவன்றனே.

(இ-ள்) தனஸ்தானமென்னும் இரண்டாம் வீட்டதிபதியோடு புதன் சேர்ந்து லக்கினத்திற்கு ஆறுமிடமென்னும் ரோகஸ்தானம்பெற அந்த ஜாதகன் ஊமையாய்ப் பிறப்பன். துன்பத்தைத் தரப்பட்ட 3-ஆம் வீட்டு அதிபதியும் ஜெனனராசிக்குடையோனும்சேர்ந்து எந்தராசியிலிருந்தாலும் ஊமையாய் இருப்பானென்றே கூறுவர்.

(வி-ரை) 'வாக்கு' என்பது ஒவ்வொருவருக்கும் பேசும் ஸ்தானமாகும் 'இடும்புறு மூன்றாதி' என்ற பதத்தில் மூன்றுதியும் சேர்ந்தால் ஊமை என்றும், வாக்குஸ்தானத்தில் சுபகிரகங்கள் நின்றும், சுபகிரகங்களால் பார்க்கப்பட்டாலும் ஊமையாகான் என்று சொல்வதால் கிரகங்கள் நின்ற நக்ஷத்திரத்தைக்கொண்டும் வாக்குபலன் சொல்லுதல்வேண்டும் என ஏற்படுகிறது. எப்படியெனில்: கேட்டை அஸ்தம் இவற்றில் கேது இருந்தாலும், திருவோணம் மூலம் கேட்டை இவற்றில் இராகு யிருந்தாலும், அந்த ஜாதகன் கோள் சொல்பவனும், இரண்டாம் வீட்டில் இராகு கேது இவர்கள் நின்றால் விஷவாக்கு உள்ளவனென்றும், ஊமை என்றும் சொல்லுதல் வேண்டும். (478)

வேறு

வாக்குத்தானுதியோடு புதனுங்கூடி
வருஞ்சன்மமூன்றுறின் மருவிலூமை
ஆக்குமவருடனெந்தத் தானத்தாதி
யவரவர்தங்காரக ராகிலும்வந்துற்றால்
ஊக்கமுற வவரவரும் ஊமையாவ
ருற்றவர்தம்பதியாகி லுச்சமாகில்

**வாக்கூனமறமொழிவன் கண்டீர்கண்டும்**
**வனமுறுமுக் கனியுமென வழுத்துமாதே.**

(இ-ள்) மா பலா வாழை என்னும் முக்கனி என்று புகழத்தக்க இன்பமும் அழகும் வாய்ந்த பெண்ணே! குடும்பாதியான இரண்டாம்வீட்டதிபனோடு புதன் சேர்ந்து ஜெனன லக்கினத்தில் நின்றாலும், 3-6 இவ்விடங்களில் இருந்தாலும் வாயில்லா ஊமையாவான். மேற்சொன்ன கிரகங்களோடு எந்த கிரகம் சேர்ந்ததோ அந்த காரகரும் ஊமை யாவார்கள். அவருடன் சேரும் கிரகங்கள் உச்சம்பெற்றாலும் வாக்கு ஊனமின்றி சுத்தமாய்ப் பேசுவன் எ-று.

(வி-ரை) இரண்டாம் வீட்டவனோடு புதன் சேர்ந்து 1-3-6 இவ்விடங்களிலிருந்து குருசேர்ந்தால் பிள்ளையும், சுக்கிரன் சேர்ந்தால் களத்திரமும், குஜன் சேர்ந்தால் சகோதரனும் ஊமையாவார்கள் என்று சொல்வர். இததுடன் மீனமுதல் மேஷம் வரையிலுமுள்ள 12 - ராசிகளுக்கும் மத்தியில் அதாவது கன்னியாராசியில் கொடிய கிரகங்கள் நின்று சந்திரன் சகிதம்பெற்று நின்றால் ஜாதகன் பிறந்த 5-ஆம் வயதில் ஊமையாவான் என்றும் மேலோர் கூறுவர். (479)

வேறு

**மாதுலமன்னனோடு வாக்குத்தானாதிகூடிக்**
**கோதுறுவியமாறெட்டிற் கூடினூமையாவன்**
**ஓதியதந்தைதாய்மற் றோர்தானந்தனக்கவ்வாறு**
**நீதியாயிருக்கிலூமை நிச்சயமென்றுகூறே.**

(இ-ள்) மாதுல காரகனென்னும் புதனோடு லக்கினத்திற்கு இரண்டாம் வீட்டதிபதி சேர்ந்து 6-8-12 இவ்விடங்களில் இருந்தால் ஊமையாகுவன். (இவ்வாறே 479) ஆம் செய்யுளில் கூறியபடி தாய் தந்தையருக்கும் மேலே சொன்ன கிரகங்களோடு சேர்ந்தால் ஸ்தானாதிபதிகளில் பாவபலனறிந்து ஊமையாவான் என்று கூறுக.

(வி-ரை) ஊமை என்பதில் பலவிதமுண்டு. ஜெனன காலத்திலேயே ஊமையா? அல்லது மத்தியவயதில் ஊமையா? அல்லது குளறிபேசுபவனா? வியாதி முதலியவைகளால் ஊமையா? என்று ஆராய்ந்து சொல்லுதல் வேண்டும். எப்படியெனில், ஜெனனகாலப்போது தீக்கோட்களின் ஓரையாக இருந்து அவர்களே லக்கினத்தில் நிற்கில் குளறி பேசுவன் என்றும், வாக்குஸ்தானாதிபதி ரோகாதிபதியோடு சேர்ந்து வாக்கு ஸ்தானத்தைப் பார்த்தால் வியாதியால் ஊமையாகுவனென்றும் பிரித்துச்சொல்லுக. ()

**கூறியலக்கினாதி சுக்கிரன்கூடியாறெட்**
**டேறியவியத்தினிற்க வூமையாமிரண்டாமாதி**
**பேறுடனவரைக்கூடி லூமையாய்ப்பின்மற்றோரும்**
**சீறிடாதவரைக்கூறி லூமையாய்த்திரிவன்றானே.**

(இ-ள்) சுக்கிரன் ஜெனனராசி அதிபதியோடு சேர்ந்து 6 8-12-ஆம் இடமென்னும் கேந்திரம்பெறில் ஊமையாகுவன். வாக்கு ஸ்தானாதிபதி

மேலேசொன்ன கிரகத்தோடுசேர்ந்திருந்தாலும் ஊமையாவான். இன்னும் மற்றகிரகங்களும் அவ்னோடு சேர்ந்திருக்குமாகில் அந்தந்த ஸ்தானாதிபர்கள் ஊமையாவார்கள் எ-று.

(வி-ரை) மேலே சொன்னபடி கிரகம் அமர்ந்தாலும் தீயகிரகங்கள் சேர்ந்தாலும் பார்த்தாலும் தீயராசிகளில் பிரவேசித்துமிருந்தால் அந்த தோஷம் பீடிக்கப்படும். மேற்சொல்லிய கிரகங்களை சுபர்கள் பார்க்கப்பட்டாலும் சேர்ந்தாலும் தோஷமில்லை என்றும் மேலோர் கூறுவர். (481)

## வித்தியா பலன்

வேறு

சனியலாதறுவர் தானுமேகூடிப்
புனிதராயிருக்கப் புலவனுக்கமிதை
இனிதெனவுரைத்தே யெண்டிசையெங்கும்
மனுவுடனீதி மன்னனுகுவனே.

(இ-ள்) சனி ஒருவன் தவிர மற்றுமுள்ள ஆறுகிரகங்கள் ஓர் வீட்டில் இருந்தால் அந்த ஜாதகன் கவித்துவம் செய்யும் வித்துவானாக யாவரும் கண்டு சந்தோஷிக்கத்தக்க உன்னத வித்தை யுடையவனும் நீதி தவராது அரசு செலுத்தும் அரசனும் ஆவான் என்றும் மேலோர் கூறுவர் எ-று.

(வி-ரை) சனியன்றி 6-கிரகங்கள் என்பது சூரியன் சந்திரன் குஜன் புதன் குரு சுக்கிரனும் மேலேசொன்ன சனிபகவான் இரண்டாம் வீட்டைப் பார்த்தாலும் சேர்ந்தாலும் புதன் சுக்கிரனோடு சேர்ந்து இருந்தாலும் அந்த ஜாதகன் கியான வித்தையுளன் என்றும் கூறுவர். (482)

வேறு

பொன்புதனிரண்டின்கோவும் பொருந்தியகேந்திரத்தில்
பின்றிரிகோணமேறிற் பெற்றிடும்வித்தைலாபம
இன்பமாயிவ்ரெட்டாறி லிருந்திடிலில்லைவிதனை
அன்புசேர்கணக்கனுச்ச மாகினல்வித்தைகூறே.

(இ-ள்) இரண்டாம் வீட்டதிபன் புதன் குரு இவர்களோடு கேந்திரங்களிலாவது திரிகோணங்களிலாவது சிறக்கப் பிறந்தவனுக்கு கல்வி விருத்தியும், கல்வியால் லாபம் உண்டு. மேற்சொன்ன கிரகங்கள் 6-8 இவ்விடங்களில் சேரில் அந்த ஜாதகனுக்குக் கல்வி இல்லை எனவும், புதன் கன்னி என்னும் இராசியில் உச்சமேறி இருக்க யாவருமம புகழத்தக்க அருமையும் மேன்மையுமான வித்தை உண்டென்றும் சொல்லுவர் எ-று.

(வி ரை) வித்தை என்பதை புதனோடு சுக்கிரன் சனி இவர்கள் கூடி சமம் பெற்றாலும், குரு அங்காரகன் புதன் இவர்கள் இரண்டிலிருந்தாலும், அநேக ஜனங்களால் கொண்டாடத்தக்க வித்தையுடையவன் ஆவான் என்றும் மேலோர் சொல்வர். (483)

கூறியபுதனுமேழா மதிபனுங்குருவுங்கூடிப்
பேறுடனறிரிகோணங்கள் கேந்திரம்பிடித்திட்டாலும்

வீறியதனதுவீட்டும் விரும்பியவிரண்டாம்வீட்டும்
சீறிடாதிருந்தபோது திடவித்துவானுமாமே.

(இ-ள்) வித்தைக்கு அதிகாரஸ்தனுகிய புதனும் 7-ஆம் வீட்டதிபதியும் குருவுஞ்சேர்ந்து கேந்திரம் திரிகோணம்முதலிய க்ஷேத்திரங்களிலிருந்தும் லக்கினத்தையும் இரண்டாம் வீட்டையும் சியகிரகங்கள் சேராமலும் பார்க்காமலு மிருந்தால், அந்த ஜாதகன் திடமான வித்துவ சாமார்த்திய முள்ளவனுவான் எ-று.

(வி-ரை) 'வித்துவான்' என்பதை பலவிதங்களாகப் பிரித்துச் சொல்லுதல் வேண்டும். பாக்கியஸ்தானத்தில் புதனும் குருவும் கூடியிருந்தாலும், சந்திரனும் புதனும் இரண்டிலிருந்தாலும், அங்காரகனேடு சனி சுக்கிரன் இவர்கள் ஆக்ஷி உச்சம் பெற்றிருந்தாலும், அந்த ஜாதகன் அநேக சாஸ்திரங்களை ஆராய்ந்து நிபுணனுவானென்றும் கூறுவர். (484)

ஆனகேந்திரத்திற்புந்தி யிருக்கரெண்டாம்வீட்டாதி
தானுமேயுச்சமாகத் தகும்புகருபயமேவ
ஊனமின்மூன்றினல்லோ ருறவெள்ளியுச்சமாக
மானிலத்துதித்தகாளை சோதிடம்வழுத்தவல்லோன்.

(இ-ள்) மேன்மையையுடைய கேந்திரமென்னும் 1-4-7-10-ஆம் இடங்களில் புதனிருக்க, இரண்டாம் வீட்டதிபதி உச்சம்பெற, சுக்கிரன் உபய ஸ்தானமென்னும் மீனத்தில் உச்சம்பெற, 3-ஆம் வீட்டில் நற்கோட்கள் உறவும் அந்த ஜாதகன் ஜோதிஷம் என்னும் கணிதசாஸ்திர வித்துவான் ஆவான் எ-று.

(வி-ரை) மற்றும் சிலர் புதன் ஆக்ஷிபெற்று கேந்திர திரிகோணங்களிலிருக்க, குருவோடு குஜன் சேர, சந்திரன் சனி குரு சுக்கிரன் இவர்கள் சிறப்பு பொருந்திய நற்க்ஷேத்திரங்களில் இருக்க அந்த ஜாதகன் கணித சாஸ்திரம் கற்பவனுவான். (485)

வேறு



வல்லரெண்டிடத் தோன்குருசுக்கிரன்
செல்லுமூலத்திரி கோணமுச்சமாம்
அல்லபாவ ரனுகநோக்காவிடில்
நல்லதர்க்கம் படிப்பனலம்பெற.

(இ-ள்) வீரம் வைராக்கியமுடைய இரண்டாம் வீட்டதிபதியும், சுக்கிரன் குரு இவர்கள் உச்சம்பெற்று மூலதிரிகோணராசியில் பாவகிரகங்களால் பீடிக்கப்பட்டாலும் நோக்கப்படாமலும் இருந்தால் அந்த ஜாதகன் தர்க்க சாஸ்திரங்கள் யாவும் ஆராய்ந்தறிவான் என்றும் கூறுவர் எ-று.

(வி-ரை) 'தர்க்க சாஸ்திரம்' என்பது ஜோதிட முதலிய ஞானநூற்களும் மாந்திரீகமுமாகும். இச்சாஸ்திரங்களை அறியவல்லோர் சிங்கராசியை செவ்வாய்பார்த்தாலும் சேர்ந்தாலும், சூரியன் அங்காரகன் புதன் இவர்கள் உபயராசியில் இருந்தாலும், குரு பலம்பெற்றுச் சுக்கிரனைப் பார்த்தாலும் சாஸ்திர வித்துவானென்று கூறுவர். (486)

நலஞ்சிறந்தரெண் டாம்வீட்டதிபனும்
குலஞ்செறிந்த குருவும்பலமதாய்ப்
பலஞ்செறிந்த புகர்பார்க்கநின்றிடில்
பிலஞ்செறிந்த விலக்கணம்பேசுவரன்.

(இ-ள்) நன்மையை விளைவிக்காநின்ற இரண்டாம் வீட்டுக்கதிபதியும், உத்தமகுல விப்ரரெனப் பெயர்பெற்ற குருவும் பலம்பெற்று, யாவரும் புகழும் சுக்கிரனும் பலம்பெற்றிருக்க, அவனை மேற்சொன்ன குரு பார்க்க, அந்த ஜாதகன் யாவரையும் ஜெயிக்கும் மேம்பாடான இலக்கணம் அறிந்து பேசுவான் எ-று. (487)

வேறு

பிரக்கினைசேர் திரிகோண கேந்திரத்தும்
பிரியமுடன்புதனிற்கிற் றமிழ்வித்தைபெருகும்
திருக்குமிலாதுயர்செவ்வா யொன்றிருந்தகாலத்
தெலுங்குவித்துவானுவன் கருங்கோளேநிற்கில்
நிரக்கவேதுருக்கராரியர் பாஷைதமக்கு
நிபுணவித்துவானுவன் வெள்ளிகுருமேவில்
திரக்கனமாஞ்சாஸ்திரங்க டமக்குமதிவல்ல
திடவித்துவானென்றே செப்பிடவுமாகும்.

(இ-ள்) நன்மையையே விளைவிக்காநின்ற திரிகோணத்திலும் கேந்திரஸ்தானங்களிலும் புதனிருக்கப் பிறந்தவன் தமிழ்வித்தை அதிகமாய் வாசிப்போனுவான். மேலே சொல்லியுள்ள க்ஷேத்திரங்களில் மேன்மை பெற்ற குஜன் பலம்பெற்றிருக்க தெலுங்கு பண்டிதன் ஆவன். இராகு விருக்கில் துலுக்கு பாஷையாகவும், கற்றுத் தெளியும் வல்லமை வாய்ந்தவனும் வித்துவானும் ஆவன். குரு சுக்கிரன் இவர்களிருக்கில் வருங்காலம் நிகழ்காலம் இறந்தகாலம் என்னும் முக்காலங்களையும் அறிந்து பேசும் சாஸ்திர வித்துவானென்றும் சொல்வர் எ-று.

(வி-ரை) திரிகோணராசிகளில் இராகுவிருந்தால் துலுக்குபாஷை என்பதைப்போல,

தையலே குளிகனேந்திற் றனிருக்க தனத்தில்ராகு
பையவே இருக்கவெண்டிற் பார்த்திபன் பார்க்குமேனும்
வெய்யவே சத்துருதானத்தின் மிகுசுப ரிருக்குமேனும்
துய்யவெண் மதிநின்றாலும் சொல்வர்மாந் திரீகனென்றே.

என்றபடி 5-ஆம் வீட்டில் குளிகனும் வாக்குஸ்தானத்தில் ராகுவும் இரண்டாம் வீட்டை குஜன் பார்க்கவும், ரோகமென்னும் 6-ஆம் வீட்டில் சுபர் நிற்க, 5 ல் சந்திரன் நிற்க மாந்திரீக வித்துவானென்று சாதகசிந்தாமணியில் சொல்லியபடியாம். (488)

ஆகுமிரண்டாதிபனும் புதனுமுச்ச
மாயிருக்கச்சன்மத்தி லரசனிற்க

ஏகனுய்ச்சனியெட்டிலுறக் கணிதவித்தை
இவனுக்குக்கோபுராங் கிசத்தின்மந்தனிருக்க
வாகுடனங்காரக னங்கிசத்தரசனிற்க
மறையோதுவானிரண்டா மாதிகதிராகத்
தாகமுடன்செங்கதிரைத் தமனியனுங்காணத்
தர்க்கசாஸ்திரப்படிக்குத் தாஷ்டீகனுங்கண்டீர்.

(இ-ள்) இரண்டாமிடமென்னும் தனஸ்தானத்திற்கதிபதியும், புதனும் உச்சவீடேறி இருக்க, ஜெனனராசியில் அந்தணனுகிய குருவிருக்க சனி தனியே லக்கினத்திற்கு அஷ்டமஸ்தானம்பெற கணிதவித்தை யுடையவனுகும் என்றும், ஜெனன லக்கினத்திற்கு கோபுராங்கிசமென்னும் இடங்களில் சனி இருக்க, குருபகவான் குஜனங்கிசம்பெற்றிருக்க அந்தஜாதகன் வேதநூல் ஆராய்சசி செய்பவனுவன். இரண்டாம்வீட்டதிபதி சூரியனுக விருந்து அவனைச் சனி பார்க்க தர்க்கசாஸ்திர ஆராய்ச்சியும் தைரியம் உள்ளவனுமாவான் எ-று.

(வி-ரை) 'மந்த னிருக்க' என்பதை சனி இருக்க என்று கொள்ளவும். மேலே சொன்ன புதன் உச்சம்பெற்று முன் 20-ஆம் செய்யுளின்படி அந்த ஜாதகன் நீண்ட வியாபாரியாயும், இராஜபலத்தில் முக்கால்பலம் உள்ளவனென்றும் கூறுவர். (489)

கண்டசன்மலக்கினத்திற் சுக்கிரன்பொன்னிருவர்
கலந்துநிற்கவேந்தனு நற்கதிரோன்றனுமே
மண்டயசிங்காங்கிசத்தி லேறிநிற்கவந்த
மற்றுஞ்சுக்கிரன்கடக வாங்கிசத்தின்மன்ன
அண்டியிருந்தப்படியிருக்கச் சனித்தான்றனல்ல
அவனியிற்சாத்திரமாறு மறிந்திடுவானென்றே
எண்டிசையெங்கும் பரவுங்கீர்த்திமானுகி
இருப்பனெனக்கலைவல்லோ ரியம்பிடுவர்தாமே.

(இ-ள்) சோதிடநூல் ஆராய்ந்தறிந்த பெரியோர் ஜெனனராசி எந்த ராசியானுலும் அந்தராசியில் சுக்கிரன் குரு இவர்கள்சேர்ந்துநிற்க, குருவும் சூரியனும் சிங்க அங்கிசமென்னும் சூரிய அங்கிசம்பெற, சுக்கிரன் கடக அங்கிசமென்னும் சந்திர அங்கிசம்பெற்றிருக்க அந்த ஜாதகன் இப்பூமியில் ஆறு சாஸ்திரங்களையும் அறிய வல்லவனுகுவன் என்றும் இப்பூவுலகெங்கும் புகழ்ச்சி செய்து பேசவல்லவனென்றும் சொல்லுக எ-று.

(வி-ரை) சனித்தான் என்பதை பிறந்தான் என்று சொல்லுக. (490)

வேறு

வாரேறுமுலையாய்கேள் சன்மந்தன்னில்
மதிமகன்சூரியன்குருவு மகிழ்ந்துநிற்கில்
சீரேறுதனம்படைத்துப் புலவனுவன்
செங்கதிர்சுக்கிரன்புந்தி திங்கள்சுன்னும்
பாரார்பொன்னிவர்களொரு வீட்டிற்கூடில்
பரிமளிக்கும்வித்தை பிரபலனுமாகித்

**தாரேறுபுயவலியன் றனவானுவன்**
**சாந்தகுணவானுமாய்த் தரையில்வாழ்வன்.**

(இ-ள்) *அழகுபொருந்திய பெண்ணே! கேட்பாயாக. எப்படியெனில்: ஜெனன ராசியில் புதன் சூரியன் குரு இவர்கள் (மகிழ்ச்சி பெற்ற) பலம் பெற்று இருந்தால் கீர்த்தியும் மேன்மையும் வாய்ந்த தனத்திற்கு அதிபதி யாவதுமன்றி, எல்லா நூல்களையும் அறிந்த புலவனுகவும் இருப்பான். செம்மை பிரகாசமுடைய சூரியனும், சுக்கிரன்-புதன்-சந்திரன்-சனி இவர்களும் குருவும் ஒன்றுகூடி ஓர் வீட்டிலிருந்தால் யாவரும் மேன்மையோடு பேசத்தக்க பிரபலமான கல்வியையுள்ளவனுவதோடு இப்பூமியில் மேன்மை பெற்ற தைரிய பராக்கிரமம் உள்ளவனும் செல்வவந்தனுகவும் கோபம் இல்லாதவனுமாகி வாழ்ந்திருப்பவனும் ஆவான் எ-று.*

(வி-ரை) *ஆறு கிரகங்கள் ஓர் இராசியிலிருந்தால் கஜயோகமென்றும் கூறுவர்.* (491)

## தனபலன்

**சென்மாதி பதிக்கிரண்டா மிடத்தினல்லோர்**
**திறன்மூன்று மிடத்தீயோர் நான்கினல்லோர்**
**நன்மார்க்க முடனிருந்தாற் றனவான்சன்ம**
**லக்கினத்தோ னுபயத்தி னண்ணினும்பொன்னுளனும்**
**சன்மார்க்க முடனந்த தனபாவத்தில்**
**தரும்பாக்கிய லாபாதி தரிக்கிற்பார்க்கில்**
**துன்மார்க்க மறவளகைக் குபேரன்போலத்**
**தொலைவிலாத் தனம்படைப்ப ரெனச்சொல்வாரே.**

(இ-ள்) *ஜெனன லக்கினுதிபதி எந்த இடத்தில் நின்றுலே அந்த வீட்டிற்கு தனஸ்தானத்தில் நற்கோளும், திருதிகை ஸ்தானத்தில் பாவ கோட்களும், நான்காம்வீடாகிய சுகஸ்தானத்தில் நற்கோட்களும் நன்மை பெற இருந்தால் அந்த ஜாதகன் மிகுந்த செல்வமுடையவனு யிருப்பான். ஜெனன லக்கினுதிபதி உபயமென்னும் மிதுனம்-கன்னி-தனுசு-மீனம் இவ்விடங்களிலிருந்தாலும் தனமுள்ளவனுவான். தனஸ்தானமான இரண்டாம் வீட்டை பாக்யாதியான 9-ஆம் வீட்டதிபதியும், லாபாதிபதி என்னும் 11-ஆம் வீட்டதிபதி பார்த்தாலும் சேர்ந்தாலும் அவன் தீமையின்றி அளகாபுரிக்கு அரசனுன குபேரனைப்போன்ற சம்பத்தைப் படைத்து எந்நாளும் அழியப்படாத செல்வத்தோடு இருப்பான் எ-று.*

(வி-ரை) *முன் கூறிய 461-ம் செய்யுளில் சரராசியாகில் ஸ்தூல சரீரனும், தேசசஞ்சாரம் செய்வானென்று சொல்லப்பட்டன. இங்கு உபயராசிகளில் லக்கினுதிபதி இருக்க தனுதிபதியாவான் என்றனர். இதனுல் சரம் என்பதற்கும் உபயம் என்பதற்கும் உள்ள வித்தியாசம் சரராசியில் ஜெனித்தோர்க்கெல்லாம் இரண்டாம் வீட்டோன் நீச்சம் பகையாகி பலமிழந்து இருந்தால் அவன் குடும்பம் நாஸ்தியாகுமெனவும், உபயமாகில் குடும்பாதி எவ்விதமிருந்தாலும் தன்க்ஷேத்திரம் கெடாதெனவும் அறியலாம். 'குபேரன்' என்பது குணசந்தி பெற்ற வடமொழித்தொடர். குபேரன் நவநிதி நாயகன் ஆதலால் செல்வவான்கட்குத் திருஷ்டாந்தமாவன்,* (492)

சாதகன்லக் கினமுதலாய் லக்கினுதி
தானிருந்த வீடளவு மெண்ணிக்கண்ட
ஓதுதொகை லக்கினுதி பனைத்தொட்டே
உடனெண்ணிக் கண்டமனை பாவர்வீடேல்
ஏதமுறுந் தரித்திரயோ கங்களாகும்
இனிமையுள்ளோர் வீடாயின் றனவானுவன்
போதுசன்மந் தனக்கைந்தீ ராறிரண்டும்
புனிதர்மனை யாகிற்பொன் னுளனேயாவன்.

(இ-ள்) ஒவ்வொருவரும் பிறந்தராசிமுதல் லக்கினுதிபதி எந்தராசியில் சேர்ந்தாரோ அந்தராசிவரையில் எண்ணிக்கண்ட தொகையும், லக்கினுதிபதி நின்ற வீடுமுதல் லக்கினமுதல் எண்ணிவரும் வீடானது கொடியோர்களின் க்ஷேத்திரங்களாய் இருக்கில் கஷ்டத்தைத் தரப்பட்ட வறுமை யோகம் என்பார். நற்கோட்கள் ராசியாயின் செல்வமுடையோனும் ஜெனன லக்கினத்திற்கு 5-12-2 என்னும் இவை நற்கோட்களின் ராசிகளேயாயின் தனமென்னும் பொன் படைத்தவனுகுவன் எ-று.

(வி-ரை) இவை பொதுவாய் கூறிய விஷயமானபடியால் பாவர்களாயின் அவர்கள் திசாபுக்தி காலங்களில் அவரவர் இருக்கும் நன்மை தீமை யறிந்து கூறுக. (493)

வேறு

ஆவன்சன்மத்திற்சனியு மடுத்தநான்கிலம்புலியும்
மேவுமேழிற்செவ்வாயும் விளங்குபத்தில்வெய்யோனும்
கோவும்புதன்சுக்கிரன்ருனுங் கூடியொருவீட்டினிலிருக்கப்
பூவுக்கரசாய்த்தனவானுய்ப் பொருந்திவாழ்வன்கண்டீரே.

(இ-ள்) சனி ஜெனனராசியிலிருக்க சனிநின்ற ராசிக்கு (அதாவது) ஜெனன ராசிக்கு நான்காம் வீட்டில் சந்திரனும், சப்தமமென்னும் 7-ஆம் ராசியில் செவ்வாய் உறவும், 10-ஆம் இடமென்னும் ஜீவனஸ்தானத்தில் சூரியனும், குரு புதன் சுக்கிரன் இவர்கள் ஒன்றுகூடி ஓர் இராசியில் அமர்ந்திருக்க அந்த ஜாதகன் இப்பூமிக்கு மன்னனுகவும் தனவந்தனுகவும் சௌக்கியத்தோடும் இருப்பான் எ-று.

(வி-ரை) குருவும் சுக்கிரனும் ஓர் வீட்டில் சேருவது விசேஷம். குரு தேவ புரோகிதரும், சுக்கிரன் அசுர புரோகிதருமானதால் இருவருக்கும் சத்துருத்துவம் உண்டு. ஆனல் உன்னைவிட நான் அதிகபலனைத்தருவேன் என்று ஒருவர்க்கொருவர் வாதத்தோடு மேலான யோகம் விளைப்பர் என்பது கருத்து. (494)

கண்டுமொழியாயெட்டாறிற் கருதுமூன்றிற்பன்னொன்றில்
மிண்டாரிருந்துலக்கினத்தைப் பாராதிருக்கின்மிகசெல்வம்
கொண்டுவாழ்தற்கனுசாரி குலவியிந்நால்வருநீசம்
அண்டியிருக்கினீசர்மனை யணுகிற்றனவானுவானே,

(இ-ள்) 3-6-8-11 என்னும் இராசிகளில் கொடிய கோட்களிலிருந்தும் ஜெனன ராசியைப் பாராதிருப்பாராகில் அந்த ஜாதகன் அளவிடப்படாத தனத்தை யுடையவனுவான். அந்த ஜாதகன் சகல ஐஸ்வரியமும், வாழ்வுடையவனும், அவன் மேலேசொன்ன நால்வரும் நீச்சம் பெற்றிருந்தாலும் அல்லது நீச்சர் மனையில் சேர்ந்திருந்தாலும் செல்வமுடையோனென்றும் கண்டு சொல்வாய் எ-று. (495)

ஆவரிந்துலக்கினத்துக் கதிபனுச்சராசியினும்
மேவலதுநீசர்மனை விரும்பியிருக்கிற்றனவானும்
தேவர்தொழுஞ்சந்திரனுடனே யுச்சநற்கோள்சேர்ந்திடினும்
தாவுங்குடும்பனுச்சமனை தக்கோர்நிற்கத்தருஞ்செல்வம்.

(இ-ள்) சந்திரன் நின்ற ராசிக்குடையோன் உச்சம்பெற்றும், அல்லது நீசசக்கோட்களின் ராசியிலுமிருக்கில் அந்த ஜாதகன் மிக்க செல்வமுடையவனென்றும் கூறுவர். தேவர்களெல்லாம் போற்றப்படும் சந்திரனேடு உச்சக்கோட்கள் சகிதமானுலும் இரண்டாமிடமான குடும்பாதிபதியின் உச்சக்ஷேத்திரம் எதுவோ அந்த ராசியில் நற்கோளுற்ருலும் தனவந்தன் என்றே கூறுவர் எ-று.

| | | | |
|---|---|---|---|
| லக் சந் | ராகு | | |
| | இராசி | | குரு |
| சூரி | | | |
| | சனி புத | கேது அ-சு | |

(வி-ரை) இலக்கினதிபதி பஞ்சமத்தில் உச்சம் பெற்றும், தனதிபதி அஷ்டமத்தில் ஆக்ஷி இரகத்தோடும்நின்று 3-இரகங்கள் தனஸ்தானத்தைப் பார்த்தும், லக்கினதிபதியை லாபஸ்தானம் பெற்ற சூரியனும் பார்ப்பதால் பூரண ஐஸ்வரியம் உள்ளவனும், இரண்டுகோடி தனமுள்ளவனுமாவான் என்பது கருத்து. (496)

வேறு

செல்வந்தருபத்தாமதிபதி சென்மாதிபனும்
வல்வந்தகுடும்பாதிபனும் வளரங்கிசைமன்னும்
செல்வந்திகழுங்கேந்திரமதனிற் சுபர்காணில்
நல்வஞ்சிறுவயதிற் றனபதியாகநண்ணும்.

(இ-ள்) தானுதித்த ராசிக்கு 10-ஆம் வீட்டதிபதியும், ஜெனன லக்கினதிபதியும், இரண்டாம் ஸ்தானதிபதியும் மேன்மையான செல்வத்தைத் தரப்பட்ட கேந்திரம் பெற்று, நற்கோட்கள் நோக்குற, அந்த ஜாதகன் இளமையிலேயே தனவந்தனுவான் எ-று. (497)

நண்ணுஞ்சென்மத்தாதிப னவின்மூன்ருதிபனும்
ஒண்ணிப்பலமாகப் புருஷக்கோளுறநோக்க
வண்ணந்தருமூன்ருதிபன் மருவப்பதிகாண
அண்ணன்சிறுவன்ருய் பரமாமன்பொன்னும்வருமே.

(இ-ள்) யாவரும் போற்றத்தக்க லக்கினத்ததிபதியும், திரிகோண ஸ்தாஞதிபஞன மூன்ரும் ராசிநாதனும் பலம்பெற்று, புருஷகிரகங்களான சூரியன் புதன் குரு இவர்கள் சேரினும் பார்க்கினும் ஷை திரிகோண ஸ்தாஞதிபதிசேர்ந்தாலும் நோக்குற்ருலும், இந்தஜாதகனுடைய தமையன் மாதுரு அம்மான் இவர்களுடைய பூஸ்திதியும் கிடைக்கும் எ-று. (498)

வருஞ்சென்மலக்கினத்து மாமதியிருந்தவீட்டும்
இருபுறந்தன்னினல்லோ ரிருந்திடிற்றனவாஞவன்
ஒருமனைதன்னிலுற்ரு லோதியபலனிற்பாதி
தருமொருபுறத்தினிற்கிற் றனமுங்காற்பங்கதாமே.

(இ-ள்) ஜெனனராசிக்கும் சந்திரனின்ற ராசிக்கும் வலம் இடமாகிய இருபுறங்களிலும் நற்கோட்கள் சகிதம் பெற்றிருக்க, பூரண செல்வமுடையவஞவான். மேற்சொன்ன இரண்டு ராசியினுள் ஒரு வீட்டில்மாத்திரம் கிரகமிருந்தால் மேற்சொல்லிய யோகத்தில் அரைபலனும், இரண்டு ராசிகளுக்கும் ஒருபக்கம் கிரக மிருக்கில் நான்கில் ஒருபாக பலனும் அனுபவிப்பான் எ-று. (499)

வேறு.

பாங்கதாகு மூன்ருமிடப்பார்த்திபன்
ஓங்குமொன்பதா மாதியுடனுற
ஈங்கிவர்க்கு மினியசினேகஞய்
ஆங்குறத்தமையன் பொன்னனுகுமே.

(இ-ள்) மேன்மை பொருந்திய சகோதர ஸ்தாஞதிபதியான 3-ஆம் வீட்டதிபதி லக்கினத்திற்கு 9-ஆம் ராசிநாதனுடன் சேர்ந்து, நட்புமுதலிய சுபக்ஷேத்திரம்பெற இனிமை பொருந்தும் சினேகத்தோடு தன் மூத்த சகோதரன் பூஸ்திதி கிடைக்கும் எ-று. (500)

வேறு

அணுகிநிதிசேர்வகையா வவனுற்ருதையர்பொன்
அன்னைக்கம்புலிசெவ்வா யாற்றனதுபொருளே
நணுகுபுதனுற்பகைஞர் பொருளரசன்றன்ஞல்
நல்லுறவோர்நிதிசுங்க ஞற்குமனைவியரால்
பணமருவுங்காரியிஞ லடிமையுள்ளோர்பொருளும்
பண்பொடுசேவித்தவர்பொன் பாங்குடன்வந்தடையும்
குணமொடுலக்கினஞ்சோமன் றனக்குப்பத்தாகும்
குடிவீட்டுக்குடையோனைக் கொண்டுபலன்கூறே.

(இ-ள்) சந்திரலக்கினத்தில் 10-ஆம் வீட்டுக்குடைய கிரகங்களைக் கொண்டே தனம் சேரும் வகையறிந்துச் சொல்லுதல்வேண்டும். எப்படியெனில்: சூரியனுகில் அதாவது சந்திரனின்ற ராசிக்கு 10-ஆம்வீட்டதிபதி ரவியாகில் தன் தந்தையின் பொருளும், சந்திரனுகில் மாதாவினுடைய பொருளும், குஜனுகில் தன்னுடைய சுயபொருளென்றும், புதனுகில் தன் விரோதிகளாகிய சத்துருக்கள் பொருளும், குருவாகில் உறவின்முறையார் பொருளும், சுக்கிரனுகில் களத்திரத்தின் பொருளும், சனியாகில் தன்னிடம் ஊழியம் செய்யும் அடிமையாளர் பொருளும் வந்து சேரும் என்று கூறுவர் எ-று. (501)

கூறிலாபாதியொன்ப தாமதிபனுடனே
 கூடிஞற்பழையதனங் குறுகவந்துசேரும்
பேருடன்பத்தாமாதி பாக்கியத்துற்றிடினும்
 பெருமைசெறிபத்தாதி பிரபலநற்கோளாய்
வீறுடனுத்தமர்மனையி லுறத்தருமத்துடனே
 விரவுபிரயாசமறவே நிதியம்படைத்திடுவன்
ஈறில்குருதனஞ்சேரும் பத்தாதிமெலிந்தே
 இருக்கிலொருவரைச்சேவித் தெய்துபொருளற்பம்.

(இ-ள்) லாபாதிபன் என்னும் 11-ஆம் வீட்டதிபதி பாக்கியாதியான 9-ஆம் ராசி அதிபனேடு சகிதம்பெற்று இருக்கில் அந்த ஜாதகனுக்கு தன் பூர்வோத்திரரால் தனம் கொஞ்சமாய் தானுகவே கிடைக்கும். 10-ஆம் வீட்டதிபதி நற்கோளாகி 9-ஆம் ஸ்தானத்திலிருக்க, அவ்வீடு உத்தம கிரகங்களின் வீடாயிருக்கவும், அதிக பிரயாசையோடு தருமார்த்தமாக செல்வத்தைச் சம்பாதிப்பன். குருவாகில் தன் அந்தியகாலங்களிலே தனம் சேரும். கருமஸ்தானுதியான தசமகேந்திரத்தோன் தன் வலிவிழந்து இருக்க, அந்த ஜாதகன் ஒருவரிடம் சேவகத்தொழில் செய்து குறைந்த பொருளைச் சம்பாதித்து வாழ்ந்திருப்பன் எ-று.

(வி-ரை) மேலே பத்தாம்வீட்டோன் வலிவிழந்திருக்கில் சேவகத் தொழில் செய்வான் என்றபடி,

 பேசிய கருமத் தோன்பலங் குறைந்திட
 வீசிய பாவர்கள் வெகுண்டு பார்ப்பரேல்
 மூசிய கருமங்கள் முடிக்கில் விக்கினம்
 தூசிய அல்குலாய் தொகுத்த வ...ந்த.

என சாதகசிந்தாமணியில் கூறியபடி 10-ஆம் வீட்டோன் வலிவிழந்து பாவ கிரகங்களால் பார்க்கப்பட்டால் தான் எடுத்த காரியம் யாவும் அபஜெயப் படும் என்றும் அழகுவாய்ந்த பெண்ணே! கூறுவாய் என்றனர். (502)

பொருள்செறிபத்தாமதிபன் பிரபலவுத்தமனுய்ப்
 பொருந்திப்பத்தினிலிருக்க யாகாதிகருமம்
அருளுடனேபுரிந்துதனந் தேடியினிதிருப்பன்
 அமர்மூன்றுமாதிபல மாகச்சென்மத்தோன்

மருளுந்துர்ப்பலனுக லாபாதிமூன்றில்
மருவிலுடன்பிறந்தவர்தன் பொருள்வந்துசேரும்
தெருள்சன்மஞ்சந்திரலக்கி னத்திருந்தார்வகையில்
சேர்ந்தவராரோவவர்பொன் சேருமிவன்றனக்கே.

(இ-ள்) செல்வத்தை வளரச்செய்யும் 10-ஆம் வீட்டதிபதி மேன்மையைப் படைத்த உத்தமனுகி 10-லேயே ஆக்ஷியாக இருக்க, அந்த ஜாதகன் தேவானுபலத்தால் யாகம்-ஓமம்-எக்கியம் முதலிய யாகாதி செயல்கள் அனைத்தையும் செய்து அநேக செல்வத்தை சம்பாதித்து சந்தோஷித்திருப்பான். மூன்றும் வீட்டதிபதி பலம்பெற்றிருக்க ஜெனன லக்கினுதிபதி அசுப க்ஷேத்திரங்களிலும் லாபாதியான 11-ஆம் வீட்டோன் மூன்றிலிருக்கவும் அந்த ஜாதகனுக்குத் தன் உடன் பிறந்தவர் பொருள் வந்து சேரும். (உடன் பிறந்தவர் பொருள் என்பதை) உடல் லக்கினத்திலும் உயிர் லக்கினத்திலும் நின்ற கிரகங்கள் எந்த காரகனுகிருனே அல்லது ஆண் கிரகமாயின் சகோதரன் பொருளும், பெண் கிரகமாயின் சகோதரி பொருளும் வந்துசேரும் எ-று.

(வி-ரை) மேலே சொன்ன யாகாதி கருமங்களைச்செய்து தனம் சம்பாதிப்பன் என்பதை 10-ஆம் வீட்டதிபதி புதன் குருவாகி கேந்திர திரிகோணங்களில் பலம்பெற அந்த ஜாதகன் ஷை யாகாதி கிருத்தியங்களைச் செய்வான். மேற்படி புதன் குரு இவர்கள் சுபர்களால் பார்க்கப்பட்டிருந்தால் அரசர்களெல்லாம் தன் குடைநிழலில் சாப்பிடத்தக்க மேன்மை பெற்ற யாகங்களைச் செய்வானென சாதகசிந்தாமணியில் கூறியபடியாம். ()

[மேற்கூறிய செய்யுளில் பொதுவாய் தனம் சேரும் என்றதால் இக்கு எந்த திசையில் சேரும் என்பதைக் கூறுவார்.]

தனஞ்சேரும்வகையொன்ப தாமதிபன்றிசையில்
தகும்பத்தாதிபன்புசிப்பி லப்போகோசரத்தில்
இனஞ்சேர்நான்காதிபன் பத்தாமிடத்திலிருக்க
இயல்பத்தாமதிபனுக்கு நாலாம்ராசியினும்
கனஞ்சேருங்குசனுடைய கேந்திரத்திலேனுங்
கலந்துநிற்கப்புராதனமாங் காணிமனையதனில்
முனஞ்சேர்ப்பத்தாமதிபன் றிக்கினினிட்சேபம்
முதற்கொண்டுவாழ்வரென மொழிந்திடுவர்தக்கோர்.

(இ-ள்) நான்காம்ராசி யதிபன் 10-ஆம் வீட்டிலிருந்தாலும், 10-ஆம் வீட்டதிபதி நான்காம் ராசியிலாவது, குஜனுக்கு கேந்திர வீட்டிலாவது சேர்ந்திருக்கில் அந்த ஜாதகனுக்கு 9-ஆம் வீட்டதிபதி திசைவருங்காலம் 10-ஆம் வீட்டிற்குடையோன் புத்தியில் அளவிறந்த தனம் சேருமென்றும், சுயமனையில் 10-ஆம் வீட்டிற்குடையோன் திக்கில் நிக்ஷேபதனமான புதையல் பொருளைக் கொண்டு வாழ்வான் என்றும் சோதிட வல்லோர் கூறுவர் எ-று.

(வி-ரை) மேலே சொல்லியுள்ள கிரகங்களோடு மற்றைய கிரகங்களுக்கும் இவ்வாறே பிரித்துக் கூறுதல் நலம். (504)

தக்கரிஷபத்தின்மதி விருச்சிகத்திலரசன்
  தானிருக்கிற்றனவானுஞ் சுக்கிரன்வீட்டரசன்
மிக்கசுருவிற்குசனு மிருக்கவளர்பிறையும்
  வேந்தனுடனேகூடப் புதனரசன்கூடி
நிற்கலக்கினந்தன்னிற் சுக்கிரனுமிருக்க
  நிறைந்ததனவான்கல்வி நிபுணனுமாயிருப்பன்
சுக்கிரனுச்சம்பெறலக் கினத்தரசநிறைந்த
  சோமனைப்பாவர்கள்காணிற் றுலங்குதனம்படைப்பன்.

*(இ-ள்) மேன்மைபெற்ற இரவுக்கு அரசனான சந்திரன் தனக்கு உச்ச வீடாகிய ரிஷபராசியில் சேர, தேள் என்று சொல்லும் விருச்சிகத்தில் குரு விருக்கப் பிறந்தவன் நல்ல செல்வமுடையோனாகவே இருப்பான். மேற் சொன்ன அந்தணனான குரு சுக்கிரன் வீடாகிய ரிஷபத்திலேனும் துலாத் திலேனும் இருக்கவும், மகரராசியில் குஜன் உச்சம்பெற வளர்பிறைச் சந்திரனோடு குரு சகிதம்பெற்று அல்லது புதனுடன் சேர்ந்து இருந்தாலும் உடல் என்னும் ஜெனனராசியில் சுக்கிரனிருக்க திரண்ட பொருளை யுடையவனாகவும், வித்தையில் மகா பண்டிதனாயும் நிபுணனாயும் இருப்பன். சுக்கிரன் உச்சம்பெற்ற லக்கினத்தில் குருவையும் பூரண சந்திரனையும் தீயகிரகங்கள் பார்க்கில் பிரகாசத்தையுடைய தனமுடையவனாவான் எ-று.*

*(வி-ரை) ரிஷபம் துலாம் சுக்கிரனுக்கு ஆக்ஷிவீடு. அவ்வீட்டில் சுக்கிர னிருப்பதோடு அந்த சுக்கிரனுக்கு 7-ஆம் ஆதிபத்தியமாவது 4-2-ஆம் ஆதிபத்தியமாவது வரின் அந்த ஜாதகனுக்கு களத்திரமூலமான பூஸ்திதி யும், பொன் பூஷண சேர்க்கை யுள்ளவனும், 6-8-12-ஆம் இடம்வரின் களத்திரசுகம்குறைந்தவனும்,பூஷணசேர்க்கை இல்லாதவனெனசொல்வர்.*

படைத்தவொன்பதாமதிப னாறினினின்றிடவே
  பண்புடையமாதுலன்றன் பொன்பரிந்துசேரும்
எடுத்தவொன்பதாமதிபன் பொன்னாகியாறில்
  இருந்தக்காலம்மாமிக் கிசைந்தபொருள்சேரும்
தொடுத்தவைந்தாமதிபதியுஞ் சுபனாய்ப்பாக்கியத்தில்
  சூழ்ந்திருக்கிற்புத்திரிக்குத் துலங்குமணஞ்சூட்டி
அடுத்திருக்குமருமகன் றேடியதனங்களெல்லாம்
  அடைந்துசுகவானாகி யம்புவியில்வாழ்வன்.

*(இ-ள்) லக்கினத்திற்கு 9-ஆம் வீட்டதிபதியான பாக்கியாதிபதி ரோகமென்னும் ஆறும்வீட்டிலிருக்கவும் அந்த ஜாதகனுக்கு அம்மான் பூஸ்திதியும், அம்மான் குடும்ப வாழ்க்கையும் உடையவனாவான். மேலே சொன்ன 9-ஆம் வீட்டோன் குருவாகவிருந்து 6-ஆம் க்ஷேத்திரம் பெற மாமியுடைய பொருளால் யோகமுள்ளவனும் ஆவான் என்றும், இலக்கினத் திற்கு 5-ஆம் வீட்டதிபதி சுபக்கிரகமென்னும் சந்திரன்-புதன்-குரு-சுக்கிர னாகி பாக்கியமென்னும் 9-ஆம் வீட்டிலிருக்க அந்த ஜாதகன் தன் புத்திரியை மேன்மைபொருந்திய அந்தஸ்து வாய்ந்த இடங்களில் மணம் சூட்டி அந்த மருமகன் சம்பாதித்துவைத்த தனம் யாவும் தான் அடைந்து மேன்மைபொருந்திய சுகத்தோடு இருப்பான் எ-று*

(வி-ரை) இச்செய்யுளில் 5-ஆம் வீட்டதிபதி சுபக்கிரகங்களாகி பாக்கியமேறின் மருமகன் பொருள் வாய்க்கும் என்றனர். 5-ஆமிடம் புத்திரஸ்தானமென பொதுவாய்ச் சொல்லும் க்ஷேத்திரமாகையால் அச்சுப கிரகங்கள் ஆணாயின் தான்கொண்ட மருமகளாலும், பெண்ணாயின் சம்பந்தியின் பொருள் என்றும் கூறுவர் என்பதாம், (506)

அம்புவியிற்குருவும் பத்தாமாதிபதியும்
அன்புறுநற்சுபனுமாய் லக்கினத்தாதிக்கு
இம்புவியின்மித்துருவா யிருவருடன்வெய்யோனும்
இசைந்திருக்கிற்பிதாநிதிய மெய்துமிவன்றனக்கே
விம்பமதியங்கூடி லன்னைசெம்பொன்மேவும்
மேதினிமைந்தன்கூடில் மேலவர்பொன்சேரும்
நம்பியமாகூடின்மித் துருதனமாமரசன்
நண்ணியுறிற்பிராதாபொன் றுனயந்துசேரும்.

(இ-ள்) எந்த லக்கினமாயினும் அந்த லக்கினத்திற்கு 10-ஆம் வீட்டோனும் குருவாகி, ஜெனனராசிக்கு யோகத்தைத்தரும் கிரகங்களாகி, அவர்களோடு சூரியன் சகிதம்பெற்றிருக்க, அந்த ஜாதகனுக்கு தன் பிதா தேடிவைத்த திரவியங்களால் மேன்மை அடைவான் என்றும், சந்திரன் கூடியிருக்கின் தன் மாதா தேடிவைத்த பொருளைக்கொண்டு சந்தோஷிப்பன் என்றும், இப்புவியிலும் தேவர்களும் புகழத்தக்க சனி கூடியிருக்கில் பகைவராகிய விரோதிகள் தேடிய பொருளும், யாவரும் ஸ்தோத்தரிக்கத்தக்க விஷ்ணுவென்னும் புதன்கூடியிருக்கில் தன் இஷ்டஜெனங்களுடைய தனமும், குரு இருக்கில் பாட்டன் பாட்டி என்னும் மூதாதையர் பொருளாலும் மேன்மை யடைவான் எ-று. (507)

வேறு

சேருஞ்சுக்கிரன் கூடிற்றெரிவையர்
ஆறுமாஞ்சனியிற் கடுத்தோர்பொருள்
கூறுபாம்புகள் கூடிலீனத்தொழில்
சாரவேபுரிவார் தனஞ்சாருமால்.

(இ-ள்) ஜெனனராசிக்கு 10-ஆம் வீட்டுக்குடையோனை ஜீவனஸ்தானாதியும் குருவும்சேர்ந்திருக்க அவனோடு சுக்கிரன் சகிதம்பெற்றிருப்பானேயானால் களத்திரத்தின் பொருளும், சனி கூடில் தன்னிடம் அணுகினோர்கள் அல்லது சேவைசெய்வோர் பொருளும், பாம்பென்னும் ராகு கேதுக்களிருக்கில் அந்த ஜாதகன் அனாசாரத்தொழிலால் பொருள்சேரும் என்றும், புதன் கூடியிருக்கில் சுய தொழிலாலேயே பொருள் சேரும் என்றும் சொல்லுவர் எ-று. (508)

வேறு

சாருபத்தாமதிபன் சுபக்கோளாகத்
தக்கோர்வீட்டிற்பிறையு மரசன்றுனன்றிச்
சேரும்பொன்னவனீச மத்தமனமாகித்
தீயோர்வீட்டினிலிருக்கத் திரவியங்களில்லான்

நேரும்பத்தாமதிபன் ஞன்கிடத்திலிருக்க
நிட்சேபங்கண்டெடுப்ப னிறைந்தகல்வியாலும்
பாரின்மேவிய றமரோரார்தங்களாலும்
பரிவுடன்பொன்சேருமெனவே பரிந்துகூறே.

(இ-ள்) ஜெனனலக்கினத்திற்கு 10-ஆம் வீட்டதிபதி என்னும் இராஜ்யாதிபதி நற்கோளாகி, மேற்சொல்லிய இடத்தில் சந்திரன்-குரு இவ்விருவரும் சேர, ஷை குரு நீச்சக்ஷேத்திரமாவது அல்லது அஸ்தமயமாவது பெற்று கொடியோர்களின் ராசியிலுமிருக்க, அந்தஜாதகன் தனமில்லாதவனென்றும் சொல்வர். மேற்சொன்ன 10-ஆம் வீட்டதிபதியே லக்கினத்திற்கு நான்காம் ராசியில் சேர, அந்த ஜாதகனுக்கு புதையல் கிடைக்குமென கூறுவதோடு தன் சுய அறிவு முதலிய வித்தையினுலும் பந்துக்களாலும் திரவியம் உண்டென்று கூறுவாய் எ-று.

(வி-ரை) பத்தாம்வீட்டதிபதி சுபனுகயிருந்தால் அந்த ஜாதகன் தான் செய்தொழிலால் யோகத்தை அனுபவிப்பானென்றும், 10-ல் நின்ற கிரகங்களைக் குறித்து இன்னின்னவர் பொருள் சேருமென்று சொன்னுலும், 10-ஆம்வீட்டில் பாவகிரகமும், 10-ஆம் வீட்டோன் கொடிய க்ஷேத்திரமும் பெறின் அந்த ஜாதகனுக்கு ரொக்க தனமிராது என்றும் கூறுவர். (509)

வேறு

கூறும்ரெண்டாமிடக் கேந்திரத்தினில்
வீறுமன்னவன் மேவரெண்டாதிபன்
ஊறுமாறெட் டீராறுவியத்துறில்
ஏறுந்தந்தை தனஞ்சற்றுமில்லையே.

(இ-ள்) இரண்டாமிடமென்னும் தனஸ்தானத்திற்கு கேந்திரஸ்தானங்களில் அந்தணன் இருந்தாலும், இரண்டாம் வீட்டதிபதி 6 8-12 இவ்விடங்களில் சேர்ந்திருக்கில் அந்த ஜாதகனுக்கு பிதுர்தனம் கொஞ்சமேனும் இல்லையென்று மேலோர் கூறுவர் எ-று.

(வி-ரை) தனுதிபதி 6-8-12 இவ்விடங்களில் இருந்தாலும் தனஸ்தானத்தை கேந்திரம்பெற்ற சுக்கிரன் பார்ப்பது நலமாகும். (510)

வேறு

சாலமதி தனக்கிரண்டிற் சனிதானிற்கில்
சந்திரனுர் தனக்குநான் காம்வீட்டாதி
மேலவர்க ளுடன்கூடிக் கேந்திரங்கள்
மீதிருந்தாற் றந்தைபொருள் வேற்ருேர்கொள்வர்
பாலருக்குச் சேராது பாலன்ருனும்
பாக்கியவா னுகிவெகு பணங்கள்தேடி
ஞாலமதில் கீர்த்தியா திபனும்பூமி
ராசரைச் சேவித்திருப்ப னலமாய்த்தாமே.

(இ-ள்) சந்திரனின்ற ராசிக்கு இரண்டாம் வீட்டில் சனி இருக்கவும், சந்திரனின்ற ராசிக்கே நான்காம் வீட்டதிபதி நற்கோளுடன்கூடி நற்பலனைத்தரும் கேந்திரம் பெற்றிருப்பார்களேயானால், அந்த ஜாதகனுடைய பிதாவின் பொருளை வேற்றோர் கைக்கொள்வாரேயன்றி அந்த ஜாதகன் அனுபவியான். அந்த ஜாதகன் பாக்கியசாலியும், அநேக பொருள்களைச் சம்பாதிக்கும் திறமைவாய்ந்தவனும், இப்பூமியில் மிக்க கீர்த்திப்பிரதாபம் வாய்ந்தவனும், அநேக பூமிகளை உடையவனும், நல்ல மேன்மைபெற்ற ராஜசேவை செய்பவனும் ஆவானென்று சொல்வாய் எ-று. (511)

வேறு

மேதருநான்காமாதி விரவுகேந்திரங்கள்தன்னில்
ஆதவனிருக்கவேதா னந்தநான்காமிடத்தில்
ஓதியநல்லோர்மேவி லுறுபிதாதனத்திற்காசு
பாதியுமிவனுக்கில்லை பரதேசத்திடையிற்செல்வன்.

(இ-ள்) ஜெனன ராசிக்கு நான்குக்குடையோன் எந்த ராசியில் நின்றானோ அந்த ராசிக்கு 1-4-7-10 என்னும் ஸ்தானங்களில் கதிரோன் சேர்ந்திருக்க நான்காம் ராசியான சுகஸ்தானத்தில் நற்கோள் சகிதம் பெற்றும் இருக்க அந்த ஜாதகன் பிதா தேடிய பூஸ்திதியில் அரைபாகமாவது இவனுக்குக் கிடையாதென்றும், அந்த ஜாதகன் அந்நியதேச சஞ்சாரம் உடையவனும் ஆவானென்றும் கூறுவர் எ-று,

(வி-ரை) மேலே சொல்லியுள்ள செய்யுளின்படி நான்காம்வீட்டதிபதி சேர்ந்த வீட்டிற்கு கேந்திரஸ்தானங்களில் சுபர்களிருந்தால் மேற்சொன்ன பலனே விளையும். ஆகையால் நான்காம் வீட்டிற்கும் இரண்டாம் வீட்டிற்குமுள்ள வித்தியாசமறிந்து பலன் கூறுதல்வேண்டும். (512)

வேறு

இரண்டாமாதிதான்மிகவே யிருந்துகேந்திரமேறிமிகக்
கொண்டேதனத்துக்காரகனுங் குலவியுச்சமாகியிவர்
மிண்டாயிருக்கத்தனபதியாய் விளங்கியிருப்பனறிவுள்ளோன்
பண்டேசகத்திற்பொன்றேடிப் பதியிலிருப்பனெனச்சொல்லும்.

(இ-ள்) லக்கினத்திற்கு தனஸ்தானாதிபதியான இரண்டாம் வீட்டதிபதி கேந்திரமேறி இருந்தாலும், அல்லது அக்காரகன் உச்சம்பெற்றாலும், அந்த ஜாதகன் மேன்மையோடு தனபதியாகி நல்லறிவும் யுக்தியும் வாய்ந்தவனாகி இப்பூமியில் அநேக பொருள்களைச் சம்பாதித்து தன் சுயதேசத்திலேயே வாழ்ந்திருப்பான் எ-று,

(வி-ரை) தனாதிபதிக்கும் குடும்பாதிபதி என்னும் பெயராகையால் அந்தக் குடும்பாதிபதி உச்சம்பெறின் தனமுள்ளவனும், சுயகிராமத்தை விட்டு அந்நியகிராமவாசஞ்செய்யாதவன் என்றும் கூறுவர் மேலோர். (513)

சொல்லுமிரண்டாமாதிபதி சூழ்ந்துலாபத்தினிலிருக்க
வெல்லும்லாபன்பாக்கியாதி விரும்பியிரண்டிலுற்றிடவே
நல்லகுணமுந்தருமனுமாய் நான்குலட்சம்பொன்றேடி
அல்லலறவேவாழ்ந்துண்டே யவனிதன்னிலிருந்திடுவான்.

(இ-ள்) தனத்ததிபதியான இரண்டாம் வீட்டோன் லாபமென்னும் 11-ஆம் வீட்டிலிருந்தாலும், இரண்டாம் வீட்டதிபனும் பாக்கியாதிபனும் சேர்ந்து இரண்டாம் வீட்டிலிருந்தாலும் அந்த ஜாதகன் உத்தம தருமகுண முடையவனும், தருமார்த்த காரியங்களைச் செய்பவனும், நான்குலக்ஷம் பொன் நாணயங்களைச் சம்பாதித்து துன்பமில்லாது வாழ்வதும் சாப்பிடு வதுமாக மகிழ்ச்சி பெற்றிருப்பான் எ-று.

(வி-ரை) 10-ஆம் வீட்டதிபதி எந்த அங்கிசத்திலிருந்தானோ அந்த அங்கிசாதிபதி குருநின்ற ராசிக்கு திரிகோண ராசியிலிருக்க சுபக்ஷேத் திரம் பெறவும் அந்த ஜாதகன் நூறாயிரம் தனம் உள்ளவன் என்றும் சொல்வர். (514)

இருந்தவில்லேலக்கினமா யிதிலேகுருவுந்தானுறவே
பொருந்துந்துலாத்திற்சனியுச்சம் புகலாபாதிபனுன்கிடத்தில்
திருந்தியிருக்கத்தனந்தேடித் திகழ்வனீதிதவருமல்
தெரிந்துபலரைரக்ஷித்துச் செம்பொன்கோடிதேடுவனே.

(இ-ள்) தனுர் லக்கினமாக இருந்து அவ்வீட்டிற்கு உடையோரான குரு ஆக்ஷிபெற்றிருக்க, மேன்மைபெற்ற துலாராசிக்கு அதிபதியான லாபாதிபதி நான்காமிடமான மீனராசியிலுற ஜெனித்தவன் அநேக தனங் களைச் சம்பாதித்து மேன்மை பெறுவதுடன் அநேகரை பாதுகாக்கத்தக்க செல்வத்தை நீதியோடு தேடி வாழ்ந்துமிருப்பான் எ-று.

(வி-ரை) லாபஸ்தானங்களில் தனுதிபதி ஆக்ஷியாய் இருக்கில் எந்தத் தொழிலிலும் லாபமே உண்டாகும் என்பது இச்செய்யுளின் கருத்தாகும்.

வருமேதனுசுகுடமீனம் வாழுங்கன்னிரிஷபமுடன்
புரமேய்நற்கோளிருந்தமனே புகுந்தாற்றேவர்க்கரிதாய
திரமேயோகநவகோடி செம்பொன்றேடிராச்சியங்கள்
உரகமேயாள்வன்லக்கினமு மோங்குந்தனுசிற்பிறந்திடவே.

(இ-ள்) ரிஷபம்-கன்னி-தனுசு-கும்பம்-மீனம் இவ்விராசிகளில் நற் கோட்களில் ஒருவர் வாசம் செய்வாராயின் அந்த ஜாதகன் தேவர்களும் புகழ்ச்சி செய்யவும், காண்பதற்கு அரிய மேன்மை பெற்றவனும், 9-கோடி செம்பொன் தேடுவதோடு யுக்தி சாதுரியம் இவைகளோடு இராஜ்ஜிய பரிபாலனம் செய்வன். தனுர் லக்கினத்தில் பிறந்தவன் மேன்மையோடு அரசாள்வன் எ-று.

(வி-ரை) மேற்சொல்லிய லக்கினமாயினும் அதில் மேலே சொல்லிய படியே கிரகமிருக்கினும், லக்கினாதிபதி தனஸ்தானமுதல் 6-8-12 ல் இருந்

தாலும், அசுபர்களோடு சேர்ந்து நீசசம் பெற்றாலும், அந்த ஜாதகனுக்கு அநேக செல்வமிருக்கினும், அச்செல்வத்தின் சுகத்தை அனுபவிப்பான் என்றும் கூறுவர். (516)

வேறு

ஏயதிரேக்காணத் திறைபுகர்கூடிட
தூயலாபாதி சுபவர்க்கமேறிட
ஆயவுலகி லரும்பொருள்கோடிதான்
நேயமாய்த்தேடுவ னென்றுமொழிந்திடே.

(இ-ள்) மேன்மையையுடைய லக்கினத்திற்கு திரிகோண ஸ்தானாதிபதியோடு சுக்கிரன் சேரவும், நன்மையை விளைவிக்கும் லாபஸ்தானாதிபதி சுபவர்க்கம்பெற அந்த ஜாதகன் இவ்வுலகில் அருமையானபொருள் கோடி சம்பாதித்து வாழ்வானென்றும் சொல்வாய் எ-று.

(வி-ரை) இச்செய்யுளில் திரிகோண ஸ்தானத்தில் சுக்கிரனிருக்க மேல் எழுதிய பலனே யுண்டாகும் என்பது கருத்தாகும். (517)

பிரகாசம்

வேறு

இலகுமிரண்டின்மூன்றிடத்தி லிரவியுறிற்காரப்புடன்சுடுகை
நிலவுக்குச்சீதளத்துவர்ப்பு நீடுகுசற்குக்குளிர்மைகைப்பே
அலகுபுதற்குச்சலமுமே யாம்பொன்னுக்குமதுரமழல்
கலகச்சனிக்கேகஷாயந்தண் கமற்சுக்கிரற்குப்புளிகுளிர்ச்சி.

(இ-ள்) பிரகாசம் பொருந்திய ஜெனனராசிக்கு இரண்டிலாவது மூன்றிலாவது சூரியனிருக்கில் சுடுகை காரம் முதலியவைகளின்மீதும், சந்திரன் சேர்ந்திருக்க குளிர்ச்சி துவர்ப்பு இவைகளிலும், மேன்மைபெற்ற குஜனிருக்கில் சீதளம் கைப்பு இவைகளிலும், புதனுகில் நீருந்த ஆசையுள்ளவனும், குருவாகில் தித்திப்பிலும், கலகத்தைத் தானின்ற சனிக்கு ஔஷதமுதலிய ருசியில்லா வஸ்துக்களிலும், சுக்கிரனுகில் குளிர்ச்சி புளிப்பிலும் ஆசையுள்ளவனுகுவன் எ-று. (518)

இரண்டாம்பாவகம் முற்றிற்று.

---

# மூன்றும் பாவகம்

## சகோதர பலன்

[இலக்கினத்திற்கு 3-ஆம்வீட்டைக்கொண்டு சகோதரம் வெற்றி கர்ணபூஷணம் பாத்ரம் இவைகளைப்பற்றிப் பேசலாமென முன் பொதுவாக 3-ம்செய்யுளில்கூறியபடி இங்கு சகோதரபலனையும், சகோதரவிருத்தி முதலிய யோகங்களையும் சொல்வாராயினர்.]

**துலங்குமூன்றுமிடந்தன்றற் றுணவர்பலனைச்சொல்லுங்கால்**
**இலங்குமூன்றுமதிபதியு மிருந்தார்கண்டார்தமைக்கொண்டு**
**நலங்கொளுச்சம்பகைநீசம் நட்புமறிந்தேயுரைசெய்ய**
**பலன்கொள்பெண்ணுணண்கிரகங்கள் பார்த்துத்துணைவர்பலன்சொல்லே.**

(இ-ள்) மூன்றுமிராசியால் துணைவரென்னும் சகோதரபலனை சொல்வது எப்படியெனில், இலக்கினத்திற்கு மூன்றும்ராசியதிபனைக்கொண்டும், மூன்றும் வீட்டை நோக்கும் கிரகத்தைக்கொண்டும், மூன்றுமிடத்தில் சேர்ந்த கோட்களிலும், மேற்சொல்லிய ராசிநாதர்களிருக்கும் ஆகூி உச்சம் நீசம் பகை இவைகளைக்கொண்டும் ஆண்பெண் அறிந்துகூறுவாயாக எ-று.

**சொல்லுங்குசன்மூன்றுமிடத்தி லிருக்கிற்பார்க்கிற்றுணைவரற்பம்**
**வெல்லும்பதினொன்றிற்குசனு மேவின்மூத்தோர்மிகவுண்டாம்**
**வல்லவிரண்டாமிடத்திற்சேய் மருவவுடனேவருந்துணைவர்**
**நல்லமும்மூன்றுய்ப்பார்த்து நாரியாணித்தனையுன்னே.**

(இ-ள்) சகோதர காரகனுகிய குஜன் மூன்றும் இராசியில் சேரினும் நோக்கினும் அந்த ஜாதகனுக்கு உடன்பிறந்தோரான துணைவர்கள் கொஞ்சம் என்பர். ஜெயம் பொருந்திய 11-ம் வீட்டில் மேற்சொன்ன குஜன் இருக்கில் இந்த ஜாதகனுக்கு முன்பிறந்தோர் அதிகமுண்டு. இரண்டாம் வீட்டில் குஜனிருக்க இவனுக்கடுத்த சகோதரம் உடனே உண்டென்றும், மூன்றும்வீடுமுதல் மூன்று மூன்று வீடுகளாகப் பார்த்து சகோதரபலனைச் சொல்வாய் எ-று.

(வி-ரை) இலக்கினத்திற்கு 3-ஆம் வீடு பெண் ராசியாயின் இவனுக்கு இளைய சகோதரம் பெண் என்றும், ஆண் ராசியாயின் (அல்லது) ஆண் கிரகமாயின் ஆண் ஜெனிக்குமென்றும், மூன்றும் வீட்டைக்கொண்டே சகோதர பலனைச் சொல்லவேண்டும். ஆயினும் லக்கினத்தைக்கொண்டு பொதுவாக சகோதரம் உண்டா இல்லையா என அறிந்து பிறகு ஆண் பெண் என ஆராய்வதோடு அந்தந்த ஸ்தானத்திற்கு 8 ஆம் வீட்டைக் கொண்டும ஆயுள் சொல்லலாம். குஜன் மூன்றுமிடத்தில் இருந்தாலும் பார்த்தாலும் துணைவர் அற்பம் எனபதை பிறந்தபிறகு இறந்துபோகுமா? அல்லது பிறப்பே இல்லையா? என்றும 525-526-527-ஆம செய்யுளின்படி ஆராய்ந்து சொல்லுதல் வேண்டும். மூன்றும் வீட்டில் சூரியனிற்கில் புத்திமான் சவுந்தரியவானும், சசிக்கில பிராதாவிருத்தியும், குஜனிற்கில்

சகோதர கலகனும், புதன் நிற்கில் பிராதுரு குணமுடையவனும், குரு நிற்கில் பிராதுரு சுகனும், சுக்கி ன் நிற்கில் சிறுபண்ட உற்சாகனும், சனி நிற்கில் சுகித்து வாழ்பவனும், ராகு நிற்கில் மூகரோகியும், கேது நிற்கில் பிராதுரு விருத்தி குறைந்தவனுமென்று வீமேஸ்வர நூலுடையார் கூறிய படியும் கவனிக்கலாம். (520)

வேறு

உன்னுமூன்று மிடத்ததிபன்குசன்
நன்னர்நான்கா மதிபனுங்கூடினும்
தன்னமூவரும் நான்குறத்தந்துணை
அன்பர்பங்கு மனைவந்துசேருமே.

(இ-ள்) சகோதர ஸ்தானுதிபதி என்னும் ஜெனனராசிக்கு மூன்றும் வீட்டதிபதியும், குஜனும் நான்காம் ராசிநாதனும் சேர்ந்திருக்கில் அந்த ஜாதகனுக்கு பிறகு 3-அல்லது நான்கு சகோதரங்கள் உண்டாவதோடு சிநேகிதருடைய பூமியும் கிடைக்கும் எ-று.

(வி-ரை) முன் சொன்ன செய்யுளில் 3-ல் குஜனிருக்கில் அல்லது பார்க்கில் சகோதர அற்பம் என்றும் சொல்லினர். இங்கு மூன்றும்வீட்டதிபதி நான்காம்வீட்டதிபதி இவர்கள் ஒன்றுசேர அவர்களோடு குஜனும் ஷை சகோதர ஸ்தானுதிபதியோடு சேரின் சகோதரன் உண்டாவதோடு அந்நிய மனையும் சேரும் என்றது தனுதிபதி கூடியதனுலேயாம். (521)

வேறு

சேருஞ்செவ்வாய் புடத்தைவைத்துக்கொண்டு
செய்யகருங் கோள் புடத்தையெடுக்கிலப்போ
நேருமந்தராசியிற் பொன்மருவும்போது
நிற்குமிளையோர்க்கரிஷ்டங் கருங்கோள்தன்னைப்
பாருமந்தபுடத்தி லங்காரகனைவாங்கிப்
பண்பொடுநின்றிடுராசி தனிலரசன்வந்தால்
ஊருமுற்றுருமறியச் சேட்டன்பார்விட்டே
உயர்பரமபதியணுகுமென வுரைசெய்வாயே.

(இ-ள்) ஜெனனகாலங்களில் குஜன்நிற்கும் ஸ்புடத்தை கண்டுபிடித்து அதில் ராகுவின் ஸ்புடம்செய்யும்போது அந்தராசியில் குரு பிரவேசகாலம் அந்த ஜாதகனுக்கு இளைய சகோதரனுக்கு கெண்டாதி தோஷம் ஏற்படும். ராகுவின் ஸ்புடத்தில் அங்காரகனுடைய ஸ்புடம் செய்து குஜன்நின்ற ராசியில் குரு ஓர் வருஷப் பிரவேசகாலம் உலகோர் அறிய இந்த ஜாதக னின் முன் பிறந்தவன் பரமபதம் அடைவான் எ-று. 522)

உரைசெறிமூன்றுமாதி லாபாதிபதிக்கே
உறவாகமூன்றுதி யுயர்ந்தபிரபலனுய்
வரவுடன்மித்திரருடனே கூடியேலாப
மதிலிருக்கவவருடனே வந்துதான்கூடித்

திரமுடனேயிருந்த தொகைப்படி துணைவருண்டாங்
திரிபூமானெனக்கிரகச் செயலறிந்துபகர்மின்
கரியகுழன்மதிவதனக் காவியக்கண்ணினிய
கனியமுதம்போலு மொழியாய்கன்னியாரே.

(இ-ள்) லக்கினத்திற்கு மூன்றாம் வீட்டதிபதி லாபஸ்தானாதிபதிக்கு உறவு க்ஷேத்திரம்பெறினும், மூன்றாம் வீட்டதிபதி மேன்மை பிரபலம் பெற்று தன் உறவு கிரகத்துடன் கூடி 11-ஆம் வீட்டிலிருந்தாலும், அவர்களுடன் எத்தனை கிரகங்கள் கூடி இருந்தனவோ அத்தனைத் துணைவருண்டு என்றும், மூன்றாம் வீட்டோன் இருக்கும் சுபாசுபம் அறிந்து கறுத்த கூந்தலும், சந்திரனைப்போன்ற பிரகாசமும், இனிமை பொருந்திய அமுதத்துக் கொப்பாகிய மொழியையுடைய பெண்ணே! சொல்வாய் எ-று.

| | | | |
|---|---|---|---|
| | கே | | சனி |
| | இராசி | | |
| | | | சு-கு<br>பு-கு |
| | அங் | ல-ரா<br>சந் | |

(இ-ள்) சகோதரஸ்தானாதிபதி லாபாதிபதியோடு கூடியும் தனக்குப் பகைவரான புதனோடு லாபஸ்தானம் பெற்றும், மூன்றாம்வீட்டதிபதி சுபக் கோளாயும் இருப்பதால் நான்கு சகோதரம் உண்டு என்றும், முன் 522-ம் செய்யுளின்படி ஸ்புடகணிதத்தால் ஆயுள் சொல்லுக. மூன்றாமதியும் குஜனும் தனம் லாபமென்னும் இடங்களில் நட்பு ஆக்ஷிபெற்று, மேற்சொன்ன ஸ்தானாதிபதியுடன் கூடினும் சகோதர லாபமுண்டு. சகோதர ஸ்தானாதிபதி 6-8-12-ல் இருந்து அஸ்தமயம் பகை நீச்சம்பெற்று க்ஷீணக்ஷேத்திரம் பெற்றாலும், மேற்சொன்ன ராசிநாதர்களுடனே கூடினாலும், சகோதர நஷ்டமென்றும் வீமேசுவர நூலுடையார் கூறியபடி ஆராய்ந்து கூறுக. ()

ஆர்கடகந்தேள்மீன லக்கினத்தைக்கண்டே
அன்புடனேநவபாகம் பண்ணியைந்தாம்பங்கில்
பாரிலுதித்தான்பின்னே பிறந்தகன்னிக்குப்
பக்குவமெப்படியென்னி லக்கடகமாயின்
நாரிவெகுதூலகாய முடையளாவள்
நவிறேளாகிற்பேய்போற் கால்குறுகிப்பருத்துச்
சேரவுருக்குலைந்திருப்பாள் மீனமாகில்
செய்யகான்முடமாகித் திரிந்திடுவனென்னே.

(இ-ள்) கடகம் விருச்சிகம் மீனம் இவ்விராசிகளில் ஜெனனமானவர்களுக்கு மேற்சொன்ன 3-ராசிகளையும் ஒன்பதுபாகமாக்கி இவனுதித்தது 5-ஆம்பங்கானால் இவனுக்கு பின்பிறந்தது பெண்ணெனவும், அப்பெண்ணின் பாவனையைச் சொல்லுமிடத்து அது கடகமாகவிருக்கில் அப்பெண் சகோ

தாம் தடித்த உடல் உடையவளாவள். தேளாகிய விருச்சிகமாகியிருந்தால் அவள் பிசாசின் உருவம்போன்று இருந்தாலும் பருத்த உடலுமாய் தன் அழகு குறைந்துமிருப்பாள். மீனராசியாகில் அவள் கால் ஒடிந்து நொண்டியாக இருப்பாள் என்பதாம் எ-று.

(வி-ரை) இவனுக்கு பிறகு ஜெனிக்கும் சகோதரம் ஆண்பெண்ணென அறிய 519-ஆம் செய்யுளில் கூறியுள்ளார். ஆயினும் சகோதரராசிக்கு அதிபதி (ஸ்திரீகிரகம்) பெண்ராசியுமாய் அதிலே அந்த ஆக்ஷிகிரகமிருந்தாலும் அல்லது சுபக்கிரகத்தோடே கூடினாலும், 3-ஆம்வீட்டோனிருந்த ராசிக்கு அதிபதி ஸ்திரீகிரகமாயினும், நட்பு ஆக்ஷி உச்சம்பெற்றுநோக்கினும், அந்த ஜாதகனுக்குப் பிறகு பெண் பிறக்குமென்றும், 11-ஆம் வீட்டுக்குடையவன் மேற்சொல்லிய கிரகத்துடன் கூடி அந்தகிரகமும் புருஷக்கோளாகி அவர் இருக்கும் ராசியதிபதி பலம்பெற்றிருக்க, அந்த ஜாதகனுக்குப்பிறகு புருஷ ரூபமான பெண் சகோதரம் உண்டென்றும் கிரகவலி அறிந்து சொல்ல வேண்டும். (524)

வேறு

என்னுநன்மூன்றுமதிபதிபுடத்தி லேற்றிடுசேய்புடத்தையுங்கூட்டித்
துன்னிடுராசிகுருவருங்காலந் துணையுறுமிப்புடங்கூட்டி
மின்னியராசியங்கிசமட்டாய் மேஷமேமுதலதாயெண்ண
மன்னியதுணைவர்தொகைவரும்பாவர் மருவிடிலழிந்திடுமென்னே.

(இ-ள்) லக்கினத்திற்கு மூன்றும்வீட்டோனை சகோதரஸ்தானதிபதி ஸ்புடத்தில் குருஸ்புடத்தையும் சேர்த்துக் கணித்துக்காணின், எந்த தொகை வருகிறதோ அந்த ராசிகளில் கோசாரப்படி குரு ஒரு வருஷப் பிரவேச காலம் அந்த ஜாதகனுக்குத் துணைவர் உண்டாவர் என்றும், அந்த ராசி யங்கிசமுதல் மேஷம்வரையில் எண்ண எத்தனை ராசி வருகிறதோ அத்தனைத் துணைவரென்றும், அவ்வீட்டில் தீயகோட்கள் சகிதம் பெறுவதாயின் பிறந்து இறந்துபோவார் என்றும் சொல்வர் எ-று.

(வி-ரை) இவை சகோதரமுண்டாயினும் மறிக்கும் விபரம் தெரிவதாயினும் 3-ஆம்ராசியதிபதியும் குஜனும் 3-ஆம்வீட்டின் ஆக்ஷிநாதனேயாகி புருஷராசியாகி எவ்வனபருவராய் நபு ஆக்ஷிபெற்று தனலாபகேந்திரங்களிலிருக்கினும், கேந்திர ஸ்தானதிபதியோடு கூடினும் பார்க்கினும் இவனுக்குப்பின் பிறக்கும் சகோதரமெல்லாம் சகல பாக்கியமும் ஆயுளும் பொருந்தி இருப்பார். மேற்சொல்லிய கிரமப்படியே கிரகம் அமர்ந்து முற்பாதியில் புருஷக்கோளும், பிற்பாதியில் ஸ்திரீகோளும் கூடியிருக்கின் அவன் சகோதர சகோதரிகளுக்கு அளவில்லை என்றும், சகலரும் மதிக்க வாழ்வரென்றும் வீமேசுர உள்ளமுடையார் கூறியதாகும். (525)

வேறு

ஆறுமிடத்தி லாயகருங்கோள்
வீறுயிருக்க மேவுமவன்றிசை
பேறுய்வரினும் பெலமுள்ளசகோதரம்
நீறுயுயிர்விடும் நேமியோரறிய.

(இ-ள்) இலக்கினத்திற்கு 6-ஆம் ராசியில் இராகு பலம்பெற்றிருக்க அந்த திசை தினசரிப்படி ஷை ராகுதிசை வரும்போது இந்த ஜாதகனுக்கு வலுவைத் தாத்தக்க உடன்பிறந்தோர்கள் பலம் குறைந்து யாவரும் அறியும்படி மரணம் உண்டாகுமென்றும் கூறுக எ-று.

(வி-ரை) ஆறவன் மூன்றில்நிற்க வம்புலி யுடனேபாம்பு
கூறதி யுடனேமூன்றோன் கூடியே எட்டில்நிற்க
கார்கறிக் கேழிற்செவ்வாய் கருநாகங் கூடிநின்றால்
வேறொரு துணையில்லாமல் மேதினி யிருப்பன்மாதே.

என்றதால் ஆறும் வீட்டதிபதி மூன்றிலிருக்க சந்திரனோடு ராகு கேதுக்கள்சேர, சூரியனோடு மூன்றாம்வீட்டதிபதிசேர்ந்து எட்டிலிருக்க, சனிக்கு ஏழில் செவ்வாயும் இராகுவும் இருக்கில் அந்த ஜாதகன் துணைவரன்றி தனித்திருப்பான். ஆயினும் மேலேசொன்ன ஆறும் வீட்டில் ராகு பலம் பெற்று இருக்கில் அவன் திசையில் சகோதர கெண்டமாயினும் அந்த ராகுவை சகோதர ஸ்தானத்திற்கு 7-10-ஆம் ராசிக்குடையோர் நோக்க, சகோதர அஷ்டமாதிபதி பலம்பெறவும், குஜன் அஷ்டகவர்க்கில் கெண்டாந்த ராசிகளில் குரு பிரவேசிக்கவும், அக்கெண்டம் நீங்குமென்றும் சோதிடவல்லோர் கூறுவர். (526)

வேறு

அறிதாதை யொன்பானுக் கொன்பானுலும்
அன்னைக்கோ நான்கினுக்கு நான்கினுலும்
செறிகனிட்டற் கொருமூன்றின் மூன்றினுலும்
சேட்டனுக்குப் பன்னொன்றின் பன்னொன்றாலும்
உறுமாமன் றனக்கும்புத்தி ரர்க்குமைந்திற்
கோரைந்தி னுலுமுயர் சகோதரங்கள்
நறுங்குழலங் கிசராசி யாண்பெண்ணோர்ந்தே
நவிலுவாய் தொகையினள விதுவேயென்று.

(இ-ள்) ஜெனனராசிக்கு ஒன்பதாம் ராசிக்கு ஒன்பதாம் ராசியால் அவன் தகப்பனுக்கும், நான்காம் ராசிக்கு நான்காம் ராசியால் அவன் மாதாவுக்கும், மூன்றாம் ராசிக்கு 3-ஆம்ராசியால் அவன் இளைய சகோதரத்திற்கும், 11-ஆம் ராசியிலும் அதற்கு 11-ஆம் ராசியிலும் அவன் மூத்த பிறவிக்கும், 5-ஆம் ராசியாலும் அதற்கு ஐந்தாம் ராசியாலும் தாய்மாமன் பலனையும், மக்கள் பலனையும், உடன்பிறந்தோர் விருத்தியையும் எண்ணி, அந்த ராசியங்கிசாதிபர்களால் ஆண் எனவும் பெண் எனவும் கணக்கிட்டுக் கூறவேண்டுமென்று வாசனையும் அழகும் இனிய குரலையும் உடைய பெண்ணே! கூறுவாய் எ-று.

(வி-ரை) இத்துடன் அந்தந்த ராசிக்குடையோர் சுபாசுபங்களைப் பிரித்து உயிரோடு இருக்குமெனவும், மறிக்குமெனவும், நீச்சம் பகை முதலியவைகளால் பீடிக்கப்பட்டிருக்கின் உதவி இல்லாதவனென்றும், மேற்சொல்லியதை எண்ணிக் கணக்கிட்டுக் கூறவேண்டுவதாகும். (527)

வேறு

மூன்றுமிடத்திற்சுப்க்கிரக முற்றும்பலமாயுறநோக்க
மூன்றுமாதிபலவானு யிருக்கமூன்றிலுச்சருறத்
தோன்றுகர்ணபூஷணங்கள் சூடியிருப்பன்சுகமாக
ஆன்றகர்ணபரணத்தை யளிப்பாரிவரென்றறைவாரே.

(இ-ள்) ஜெனனலக்கினத்திற்கு 3-ஆம் ராசியான திருதிகை ஸ்தானத்தில் நற்கோட்கள் இருந்தாலும், மேற்படி நற்கோட்கள் பலம்பெற்று அவ்வீட்டைப் பார்த்தாலும், மூன்றும் வீட்டதிபதி பலம்பெற்றிருக்க, 3-ல் உச்சகிரகங்களிருக்க, அந்தந்த கிரகங்களே தன் செவியில் நகைகளை அளிப்பார் என்று மேலோர் கூறுவர் எ-று.

(வி-ரை) மேல் எழுதியபடியே கிரகம் இருப்பினும் 12-6 இவ்விடங்களில் தீயகிரகங்கள் நின்று மூன்றும் வீட்டைப் பார்க்கின் கர்ணபூஷணத்தைக் கொடுத்தும், அவன் திசைகாலங்களில் விரயம் செய்வானென்றும், கணிதவல்லோர் கூறுவர். மூன் செய்யுளில் 'கர்ணபூஷணம்' என்பதை எந்தெந்த கிரகங்களுக்கு என்னென்ன ஆபரணம் என்பதை இனிவரும் செய்யுள்களில் கூறுவார். (528)

## கர்ணபூஷண பலன்

வேறு

அறையும்மூன்றிற்சுக்கிரனே யமர்ந்தால்முத்துக்கடுக்கனுறும்
இறைவனிருக்கிலபரஞ்சி யிரவிசெவ்வாய்க்கிரத்தினங்கள்
அறையும்புதற்குச்சாமவன்ன மணியுஞ்சேருமிதுவல்லால்
நிறையுமதியுற்றிடிற்சகலா பரணம்பெறுவர்நிச்சயமே.

(இ-ள்) சுக்கிரன் ஜெனனராசிக்கு மூன்றிலிருக்கவுமானால் முத்துக்கல்லாலாகிய கடுக்கனும் அடைவனுகுவன். மேற்சொல்லிய 3-ல் குரு இருப்பானுகில் அபரஞ்சியாலிழைத்த நகையை அடைவான். சூரியன் செவ்வாய் இவர்கள் மூன்றிலிருக்கில் ரத்தினவகைகளும், புதனிருக்கில் சாமளவர்ணமான மணிவகைகளும் அணிவன். சுக்கிலபக்ஷத்துச் சந்திரன் சேரில் எல்லா நகைகளையும் உடையவனுகுவன் என்பது நிச்சயம் எ-று. (529)

வேறு

நிச்சயமாங்காரியுறிற் றிருமேனிக்கடுக்கன்
நீள்கருங்கோணீலஞ் செம்பாம்புக்குச்சிவப்பாம்
அச்சமறமூன்றுதி யிருக்கின்றவீட்டுக்
காதிபலனுயிருந்தா லணிசெவிப்பூணுளதாம்
உச்சிதமாமிவையெல்லா மிடக்காதுக்கென்ப
உயரும்லாபாதிபதி யுறைந்தருளும்வீட்டோன்
இச்சையுடன்கேந்திரத்தி னல்லோர்கண்டிடவே
இருக்கில்வலச்செவிவளம்பூ ணியம்பவும்பூண்டிடுமால்.

(இ-ள்) மேற்சொல்லியுள்ள மூன்றும் ராசியில் சனி சேரவானுகில் மூன்று வர்ணங்களையுடைய கடுக்கனும், இராகு இருக்கில் நீலவர்ணமான பூஷணவகைகளும் கேது இருக்கில் சிவப்பு நிறமுடைய ஆபரணமும் உடையவனுவான். மூன்றும் வீட்டிற்கு ஆகூஷிகிரகம் எதுவோ அவன் வலு பெற்று இருந்தால் எந்நாளும் நீங்காத ஆபரணத்தைப் பூண்ட செவி யுள்ளவனும், இவை யாவும் இடது செவிக்கேயாகும். 11-ஆம் ராசிநாதன் எந்த வீட்டில் இருந்தானே அவ்விராசியோன் 1-4-7-10 இவ்விடங்களில் சுப கோட்களால் பார்வைபெற்று இருக்கில் வலக்காதின் ஆபரண விபரம் கூறுவாய் எ-று. (530)

## போஜன பாத்திர பலன்

எண்ணியரெண்டாமாதி லாபமூன்ருதி
இதமிலாப்பாவியர் கண்டிடத்தனியேநின்ருல்
உண்ணவுநற்கலமில்லா னுகந்தரெண்டாம்வீட்டில்
உயருஞ்செங்கதிரோன் பெற்றுலகிலுள்ளோர்காண
நண்ணியதோர்சனிமேவ ரெண்டாம்வீட்டாதி
நண்பொடுமூன்ரும்வீட்டி னயந்துநிற்கத்தானும்
பண்ணுடனேசுபர்பார்க்கில் வரும்வெள்ளிக்கலமே
பாவக்கோள்விழிநோக்கப் படைப்பதுவெண்கலமே.

(இ-ள்) இலக்கினத்திற்கு இரண்டாம் வீட்டதிபதியும் மூன்ருமாதி லாபாதி இம்மூவரில் ஒருவர் தனியே நின்று கொடிய கோட்களால் நோக்குற்றிருக்க அந்த ஜாதகனுக்குச் சாப்பிடவும் பாத்திரமில்லாதவன் எனச் சொல்வர். தனமாகிய இரண்டாம் ராசியில் சூரியனும் சனியும் சகிதம் பெற்று இரண்டாம் வீட்டதிபதி 3-ஆம் வீட்டிலிருக்க நட்பு வீடேறவும், நற்கோட்கள் நோக்கமுறவும், அந்த ஜாதகனுக்கு உலகோர் யாவருங்காண வெள்ளிப்பாத்திரத்தில சாப்பிடுவான் என்றும் கூறுவர். மேற்சொல்லிய கிரகத்தைக் கொடியோர் நோக்குவரேல் வெண்கல பாத்திரத்தில் சாப்பிடுவான் என்றும் கூறுவர் எ-று. (531)

மூன்ரும்பாவகம் முற்றிற்று.

---

# நான்காம் பாவகம்



[நான்காமிடம் என்பது வாகனம், அன்னைசுகம், உறவினர், தேவதானம் இவைகளைப்பற்றி பேசலாம் என முன் பொது பாவகத்தில் நான்காம் செய்யுளில் கூறியபடி இங்கு நான்காம் பாவக பலனைக் கூறுவாராயினர்.]

## வாகன பலன்

சசிவாகனுதிசன்மத்தாதி யிம்மூவர்கூடில்
அசுவவாகனமுண்டாகு மவருடன்வெள்ளிகூடில்
வசையிலாந்தோணியுண்டாம் வாகனத்தானத்தாதி
ஒசிவின்றிவியத்திலின்றி யுற்றிடிற்சிவிகையுண்டே.

(இ-ள்) ஜெனனராசி யதிபதியும் வாகன ஸ்தானாதிபதி என்னும் நான்காம் வீட்டதிபதியும் ஒன்றுசேர, அவர்களோடு சந்திரன் சகிதம் பெற்று இருக்க, இம்மூவரும் ஓர வீட்டிலிருக்க அந்த ஜாதகன் குதிரை வாகனத்தை உடையவனாவான். மேற்சொல்லிய கிரகங்கள் மூவரோடு சுக்கிரனும் கூடி இருக்கில் தோணி என்னும பல்லக்கு உடையவனாவான். 4-ஆம் வீட்டிற்கு உடையோன் 12-ஆம் வீடு தவிர மற்ற ராசியில் இருப்பானாயின் சிவிகை உடையவனுமாவான் எ-று.

(வி-ரை) வாகனாதி ஜென்மாதிபதி சந்திரன் இம்மூவரும் ஒன்றுசேர, அவருடன் சுக்கிரனும கூட, தோணி என்னும் பல்லக்கு உண்டு என்றனர். ஆனதால் அந்தஜாதகனுக்கு மேலான யோகமுண்டு என்பது கருத்தாகும். மேற்சொன்ன 3-பேருடன் சுக்கிரனும்கூட, லக்கினாதிபதி நீச்சமடைந்த கிரகத்தால் பார்வை பெற்றும், சரீரகாரகன் சூரியன 12-லும், நேத்திர காரகன் சுக்கிரன் 6-8-12-லும் இருக்கலாகாது. அப்படி இருப்பரேல் அந்த ஜாதகன் அங்கப்பழுதனும் நேத்திரப்பழுது உடையவனென்றும் கூறுவா. ஆனதால் மேற்சொல்லிய செய்யுளின்படி கிரகம் அமர்ந்தாலும் அவரவர்கள் ஸ்தானபலனையும் யோசித்து தோணி உண்டெனவும், அப்படி உண்டாயினும் அதைத் தான் அனுபவிப்பானா? இல்லையா? என்றும் கூற வேண்டுவது அவசியம். (532)

பரிவுடன்பாக்கியாதி வாகனத்தானத்தில்
குருசுக்கிரனோடுகூடி யிருந்திடிலல்லதுநோக்கில்
கருதியகனகதண்டிகை வருமிவரோடிந்து
பிரியமாய்நிற்கிற் பூச்சக்கிரக்குடைபெறுவர்தாமே.

(இ-ள்) இலக்கினத்திற்கு பாக்கிய ஸ்தானாதிபதி 4-ஆமிடமென்னும் வாகன ஸ்தானம்பெற, அவர்களோடு நற்கோட்கள் என்னும் சுக்கிரன் குரு இவர்கள்சகிதம்பெற அல்லது ஒருவர்க்கொருவர் நோக்கினும், அந்தஜாதகனுக்கு கனகதண்டிகை உண்டாகும் என்பா. மேற்சொல்லியவர்களோடு சந்திரன் கூடி இருக்கினும் அல்லது அவர்களுடன் நட்பு பெற்றாலும் பூச்சக்கிரக்குடை உடையவனாகுவன் என்று உரைப்பாயாக எ-று.

(வி-ரை) பூச்சக்கிரக்குடையை உடையோர் அரசராகையால் அரசயோகம் இவனுக்கு இருந்தாலொழிய பூச்சக்கிரக்குடையைப் பெறுன். ஆகையால் சந்திரனுக்குக் கேந்திரஸ்தானத்தில் ஒரு கிரகமும் (அதாவது) பத்தாம் வீட்டதிபதியாவது லாபாதிபதியாவது இருந்து, அவ்விருவரில் ஒருவர் குருவாக இருக்கில் அவன்வயது 15 க்குமேல் ராஜயோகமுடையவனுவான் என சாதக சிந்தாமணி நூலுடையார் கூறியவண்ணம் ஆராய்ந்து கூறுதல் நலம். இத்துடன் யோகபடலத்தையும் ஆராய்வது நலம் (533)

பூச்சக்கரக்குடைதந்தானைப் பொருந்தியேழதிபனிற்கில்
வீசுசாமரையுண்டாகு மிகுபாக்கியத்தோனுன்கோன்
பாசமாம்பத்தினிற்கப் பத்தாதிபதிசன்மத்தில்
நேசமாய்நிற்கிற்சிங்கா தன்முடனிருப்பன்பாரில்.

(இ-ள்) நான்காம் வீட்டோனுன பூச்சக்கரக்குடையளிக்கும் கர்த்தனேடு லக்னத்திற்கு 7-ஆம் ராசிநாதனும் கூடி இருப்பானுகில் அந்த ஜாதகனுக்கு சாமரை என்னும் கருவியுண்டாகும். 9-ஆம்வீட்டதிபதியோடு நான்காம் வீட்டதிபதிகூடி இவ்விருவர்களும் 10-ல் நட்புபெற்றிருக்கவும், 10-ஆம் ராசிநாதனுக்கு ஜெனனராசி நட்புக்ஷேத்திரமாய் அந்த ஜெனன ராசியிலேயே இருக்க அந்த ஜாதகன் சிங்காதனத்தின்மீது அமர்ந்து இராஜரீகம் செயயும் வல்லமையுடையோனுவான் எ-று.

(வி-ரை) இதனுல் நான்காம்வீட்டோனே பூச்சக்கரக்குடை அளிப்பவனென தோற்றப்படுகிறது. ஜோதிடர்கள் மேற்சொன்ன நான்காம்வீட்டோடு பாக்கியம் கருமம் இவ்விராசியையும், குரு அமர்ந்திருக்கும் வண்மையையும் அனுசரித்தே சொல்லவேண்டும். நான்காம் வீட்டோன் மாத்திரம் பலம்பெற்று மற்றையோர் க்ஷீணம் அடைந்திருப்பரேல் மேற்சொன்ன பூச்சக்கரக் குடையைப் பெறுன. (534)

வேறு

பரவுவாகனுதிபதி பாக்கியத்தினிற்கப்
பாக்கியத்தானுதிபதி கேந்திரத்தைப்பற்ற
இருவர்நிற்குமனேநல்லோ ரிருக்குமனையாயின்
இனியசுபக்கிரகத்தோ டிசைந்துமிகக்கூட
விரவுலக்கினுதிபதி வாகனகேந்திரத்தில்
மேவுகினுங்கனக தண்டிகையுமிகுதனமும்
மருவுமதயானை வாகனங்களுமுண்டாக
வரங்கொடுப்பன்வாகன காரகனுஞ்சுக்கிரனே.

(இ-ள்) பரவுகின்ற நான்காமிடத்தோனுன வாகனஸ்தானுதிபதி 9-ல் இருக்கவும், 9-ஆம் வீட்டோனுன பாக்கியாதிபதி 1-4-7-10 என்னும் கேந்திரம்பெற, இவ்விருவரும் சேர்ந்த மனையானது நற்கோட்களின் க்ஷேத்திரங்களாயும், மேற்சொன்ன இருவரும் நற்கோளுடன் சகிதம்பெற்றிருக்கவும், வாகனஸ்தானமான 4-ஆம் கேந்திரத்தில் ஜெனனராசிநாதன்சேரவும் இருந்தால் அந்த ஜாதகனுக்கு கனகதண்டிகை என்னும் பல்லக்கு வந்து சேரும். மேன்மைபெற்ற பலத்தையுடைய மதயானை என்னும் நாற்கால்

ஜீவஜெந்து விருத்தியும் உண்டாக வாகன காரகனென்னும் சுக்கிரன் நல் வாத்தை அளிப்பான் எ-று.

(வி-ரை) வாகன ஸ்தானாதியும், வாகன காரகனும் மேற்சொல்லிய வண்ணம் இருந்தால் மதயானையும், அதற்குச் சமையதான வாகனமும் உண்டென கூறலாமே யொழிய, வாகனாதிபதி தீயகிரகங்களும், பாக்கியம் கேந்திரமென்னும் இடங்களை அசுபர்கள் பார்ப்பாராயின் வாகனமிருந்தும் க்ஷீணமாகி நாளுக்குநாள் நலிந்துபோகுமென்றும் சொல்லவேண்டும். ()

சுக்கிரனுன்காதி யுடனேகூடினாலும்
துலங்குமிவரிருவர் கேந்திரத்தினிலுற்றாலும்
திக்கெனநான்காதி சசியுடன்லாபத்துறினும்
திறல்பலவாகனமுண்டு தீதகலநான்கில்
தக்ககுருவிருந்திடவே வாகனத்தானத்தான்
தன்னுடன்சுக்கிரன்கூடிற் றண்டிகையுண்டாகும்
மிக்கசுங்கன்றான் வாகனாதியேயாகி
மேருசன்மாதியைக்கூடில் வெறுஞ்சஞ்சாரமேயாம்.

(இ-ள்) சுகாதிபதியான நான்காம் ராசிநாதன் வாகன காரகனாகிய சுக்கிரனுங் கூடி, அல்லது மேற்சொன்ன இருவரும் 1-4 7-10 என்னும் க்ஷேத்திரம் பெற்றிருந்தாலும், சந்திரன் மேற்சொன்ன வாகன ஸ்தானாதி பதியுடன் கூடி 11-ஆம் இடமென்னும் லாபஸ்தானம் பெற்றாலும், அந்த ஜாதகனுக்குப் பலவிதமான வாகனங்களும் சித்திக்கும். தீமையை அகற்றப் பட்ட குரு நான்காம் இராசியில் சேர்ந்திருக்கவும், வாகன காரகனாகிய சுக்கிரனுடன் வாகன ஸ்தானாதியான நான்குக்குடையோன் சகிதம் பெற்றுமிருக்கில் அந்த ஜாதகன தண்டிகை என்னும் பல்லக்கை அடை வான். சுக்கிரனே வாகன ஸ்தானாதிபதியாய் இருந்து ஜெனன ராசிநாத னுடன் சகிதமாயிருக்கில் அவன் நடந்தே செல்லுவான் எ-று. (536)

சாரமுறுஞ்சோமனுக்கு மூன்றிற்சுக்கிரனும்
தானிருக்கச்சுக்கிரனார் தமக்குமேமூன்றில்
வீரமுறுமதியிருக்க வன்றியேபின்னும்
வினவியொருவரையொருவர் பார்த்துமேநிற்கப்
பாரமுறுங்குடும்பத்தா னத்தைநல்லோர்நோக்கிப்
பார்த்தாலுமிலக்கினத்தைப் பார்க்கினும்வாகனங்கள்
சேருமிகவென்றென்றே நல்லோர்கள்சொன்னார்
சிலைப்புருவக்கயலொத்த விழித்தெரிவைகேளாய்.

(இ-ள்) சிலையை யொத்த புருவமும் அழகும் வாய்ந்த பெண்ணே! சந்திரன் நின்ற ராசிக்கு 3-ஆம் ராசியில் சுக்கிரன் அமர்ந்திருக்கவும் அல்லது சுக்கிரனின்ற ராசிக்கு 3-ஆம் ராசியில் பூர்ண கலைகளை யுடைய சந்திரன் இருக்கவும், அல்லது சந்திரனை சுக்கிரன் பார்க்கவும், சுக்கிரனைச் சந்திரன் பார்க்கவுமிருக்க, குடும்பமென்னும் இரண்டாம்வீட்டை நற் கோட்கள் திருஷ்டிக்க அல்லது மேற்சொன்ன நபர்களே ஜெனனராசியை நோக்கினாலும், மேலான வாகன வருத்தம் விருத்தியும் உண்டாகும் எ-று

(வி-ரை) மற்றும் சிலநூற்களில் சந்திரனுக்கு 8-ல் சுக்கிரனும், ஜெனன லக்கினத்தில் குருவும், குருவோடு சூரியனும் சந்திரனும் கூடி இருந்தால் மேன்மையான வாகனத்தை அடைவானென்றும் சொல்வர். (537)

வேறு

நாலிடத்ததிபன்ருனு மிலக்கினத்துறப்பல்லக்கில்
மேலுறுஞ்செல்வமெய்தி மேதினிதன்னில்வாழ்வன்
கோலியலக்கினத்திற் குருவுறவவனைநல்லோர்
சாலவும்பார்க்கமேலாந் தண்டிகைமருவும்வாகாய்.

(இ-ள்) ஜெனனராசியில் நான்குக்குடையோன் இருக்க, அந்தஜாதகன் அநேக செல்வங்களைச் சம்பாதித்து பல்லக்கின்மீது செல்லக்கூடிய மேன்மையோடு இப்பூமியில் வாழ்ந்திருப்பன், ஜெனனராசியில் குரு சேர, அவர் நற்கோட்களால் பார்வை பெற்றிருப்பாராகில் அந்த ஜாதகஸ் மேன்மைபெற்ற தண்டிகையை அடைவானென்று பெருமையோடு சொல்வாய் எ-று. (538)

வேறு

வாகனாதி மருவுமனைதனக்
காகவீரைந் தகத்துக்கதிபனும்
ஏகவீட்டுக் கிறைவனைக்கூடிடில்
போகவான்வெகு பூமிக்கரசனே.

(இ-ள்) வாகனாதிபதியான நான்குக்குடையோன் எந்தவீட்டில் சேர்ந் தானோ அந்த வீட்டிற்கு தசமகேந்திராதிபதி ஓர் வீட்டிற்கு அரசர்களான சூரியன் சந்திரன் இவர்களோடுகூடி இருக்கில் அந்த ஜாதகன் ஸ்திரீபோக சுகங்களை உள்ளவனும் அநேக பூமிகளுக்கும் மன்னனாக விளங்குவான்.

(வி-ரை) விளையும் புகருடனே ரவிகூடில் உழவனுமாம்
வளையும்பல நவதானிய மூடையோனென லாமே.

என்றபடி வாகன காரகனான சுக்கிரனோடு சூரியன்கூடி இருக்கில் உழவுத் தொழில் செய்பவனும், நவதானிய சேர்க்கையும் உள்ளவனாவான் என்று கணிதவல்லோர் கூறுவர். (539)

வேறு

அரசேகேள்வாகனத்தானாதி கின்றராசி
அன்பொடுநல்லோர்வீடாய்ப் பணபரகேந்திரமாய்
உரைசெறியச்சனித்தசிறு குடிசையுமாடரங்காம்
உகந்தருளன்னைக்கின்ப முண்டாம்வாகனத்தோன்
வரிசையாய்ச்சனிகுருவேல் மதகயந்தண்டிகையாம்
வளர்கலைமாமதியாகிற் பூச்சக்கரக்குடையாம்
விரைசெறிசுக்கிரனாகிற் பல்லக்குண்டிரவி
மேவிலெருதாம்புதற்கு விசித்ரபல்லக்காமே.

(இ-ள்) பெருமைபெற்ற நான்கிலுக்குடையோன் நின்ற க்ஷேத்திரம் சுபர்வீடாயும், அது வாகன ஸ்தானத்திற்குக் கேந்திரமாகவோ அல்லது பணபர ஸ்தானமாகவோ இருக்க, அந்த ஜாதகன் ஜெனித்தது அற்ப வீடாயினும், அவ்வீடே மெத்தை மேடைகளாகமுடியும். அவன் மாதாவுக்கும் இனிமையும் சந்தோஷமும் உண்டாகும். நான்குக்குடையோன் குருவாகவோ அல்லது சனியாகவோ இருப்பரேல் அந்த ஜாதகனுக்கு யானையும் தண்டிகை முதலியவைகளும் கிடைக்கும். வளர்பிறைச் சந்திரனுகில் பூச்சக்கரக்குடை உடையவனுவான். நான்காம்வீட்டோன் சுக்கிரனுக இருக்கில் பல்லக்கு உடையவனும், சூரியனுகில் ரிஷபவாகனத்தை யுடையவனும், விஷ்ணுவென்னும் புதனுகில் அழகுபொருந்திய பல்லக்கை உடையவனும் ஆவான் எ-று. (540)

*வேறு*

பலன்றருவாகனுதி பண்புறுபுடத்திஞேடு
கலந்துசுக்கிரன்புடத்தைக் கூட்டியேகண்டராசி
தலந்தனிலரசன்வந்து தான்செறிகேந்திரத்தும்
நலந்திரிகோணமீது நண்ணில்வாகனமுண்டென்பார்.

(இ-ள்) மேன்மையான பலனைத் தரப்பட்ட நான்காம் வீட்டோன் ஸ்புடத்தோடு சுக்கிரன் ஸ்புடத்தையும் சேர்த்துக்கண்டராசியில் குரு ஏற்படவும், அந்த குரு 1-4-7-10 ஆம் க்ஷேத்திரங்களிலேனும், 3-5-9 என்னும் க்ஷேத்திரங்களிலேனும் இருக்கின் அந்த ஜாதகனுக்கு நாற்கால்ஜீவன் சேர்க்கை யுண்டென்றும் கண்டுகொள்வாய் எ-று.

(வி-ரை) குரு மேலே சொன்ன கேந்திரம் திரிகோணம் பெறினும் அவ்விராசி சுபக்ஷேத்திரமாயும் வீடாயும் சுபகிரகங்களின் பார்வையு மிருந்தால் காமதேனு என்னும் பசுவை அடைவானென்றும் கூறுவர். (541)

*வேறு*

பலர்புகழுஞ்சுக்கிரற்கு மூன்றிலேழில்
பண்புடன்சந்திரனிருக்கச் சசிக்கேழ்மூன்றில்
நலமருவுஞ்சுக்கிரன்ரு னிருக்கவேதான்
நண்பொடுவாகனமுண்டு நான்காமாதி
நிலவுநல்லோருடன்கூடிச் சந்திரகேந்திரத்தில்
நிற்கில்வாகனமுண்டு நிதியுமிகத்தேடி
உலகில்நெடுநாளரசன் போலவேவாழ்வான்
உணர்புத்திமானென்றே யுரைத்தனர்நல்லோரே.

(இ-ள்) அநேகர் புகழ்ச்சிசெய்து பேசக்கூடிய சந்திரன் சுக்கிரன் நின்ற ராசிக்கு மூன்றிலேனும் ஏழிலேனும் இருந்தாலும் சந்திரன் நின்ற ராசிக்கு சுக்கிரன் 3-7 இவ்விராசிகளில் சேர்ந்திருக்கினும் அந்த ஜாதகன் மேன்மையான வாகனத்தையே அடைவான் நான்காம்வீட்டதிபதி நற்கோளுடன் சகிதம்பெற்று சந்திரனுக்கு 1 4-7-10 இவ்விடங்களிலிருக்கில் அந்த ஜாதகன் அநேக தனங்களைச் சம்பாதித்து நல்லறி வுடையோனுய்

`நெடுநோன் இவ்வுலகில் அரசன்போன்றுவாழ்ந்திருப்பானென்றும் மேன்மையான வாகனத்தை யடைவானென்றும் சோதிடவல்லோர் கூறுவர் எ-று.

(வி-ரை) மேற்சொல்லியவண்ணம் சந்திரனிருந்து சுபபலனைக்கொடுக்கினும் சிம்ம சந்திரனுகில் அந்த ஜாதகன் அகங்காரியும் முன்கோபியும் கொடியவனும், தன் பிதா பாக்கியமில்லாதவனும், இராஜபகை கடன் முதலியவைகளு முண்டாகுமென்று புலிப்பாணி சோதிடம் 294-ஆம் செய்யுளில் கூறியபடியும், இன்னும் சூரியனின்ற நிலைமையும் அறிந்து பலன் சொல்லுதல்வேண்டும். (542)

உரைத்திடுநான்காமாதி லக்கினுதி
யுடன்கூடத்தீயோர்க ளுடனுங்கூடி
நிரைத்தொருவீட்டினி லிருக்கத்தானந்தவீடு
நீடுசன்மத்தாதிக்கோ ருச்சமனையாயின்
நரைத்தபரிவாகனங்க ளுளன்புத்திமானும்
நண்புடனேமன்னரை யெந்நாளுஞ்சேவிப்பன்
இரைத்திடுசன்மாதிபதி நான்காதிநல்லோர்
இவர்மூவர்கேந்திரத்தி லிருக்கிலின்பமுண்டாம்.

(இ-ள்) ஜெனன லக்கினுதிபதி நான்காம்ராசி யதிபனுடன் கூடி தீய கிரகங்களோடு சேர்ந்து எந்த ராசியிலேனும் ஓர் ராசியிலிருக்க அந்த வீடானது லக்கினுதிபதிக்கு உச்சவீடாயிருக்கவும், அந்த ஜாதகன் மேன்மையையுடைய குதிரை என்னும் வாகனத்தை யுடையோனுவான். மேலும் நல்லறிவுள்ளவனுயும், ராஜ சிநேகமும் சேவை செய்பவனுமாக இருப்பான். ஜெனன லக்கினுதிபதியும், நான்காம்வீட்டதிபதியும் அந்த லக்கினத்திற்கு யோகத்தைத்தரும் கிரகங்களாய், 1-4-7-10 என்னும் இராசியிலிருக்க இன்பம் உடையோனுவான் என்றும் கூறுவாய் எ-று.

(வி-ரை) யோகத்தைத் தரப்பட்டோர் என்பது இந்நூலின் 8-ஆம் பாவகத்தில் 746-ஆம்செய்யுள்முதல் 754-ஆம் செய்யுள்வரையில் ஒவ்வோர் ராசிக்கும் சுபன் அசுபன் அறிந்து கூறுவது நலம். (543)

ஆமிரவிமதிநல்லோர் மூவரொன்றுய்க்கூடி
அன்பொடுகேந்திரத்திருக்கின் மதயானைசேரும்
நேமமொடுசன்மாதி பத்தாமாதிபனும்
நிறைந்தசுபருடன்கூடிக் கேந்திரத்தினிற்கில்
வாமமுறுமதகரி வாகனஞ்சேரும்பருவ
மானசவுந்தரமனையாள் மருவுமறிவினனும்
தீமையிலாச்சன்மாதி லாபாதிநல்லோர்
சேர்ந்துகேந்திரத்திருக்கிற் சிந்துரமுண்டாமே.

(இ-ள்) சந்திரன் சூரியன் இவ்விருவரோடு ஓர் சுபகிரகம் சேர்ந்து ஜெனன லக்கினத்திற்கு 1-4-7-10-ஆம் இடம்பெற, அந்த ஜாதகனுக்கு மதயானை சேரும். 10-ஆம் வீட்டோன் ஜெனனராசிநாதனுடன் கூடி அவர்களோடு நற்கோளும்சேர்ந்து மேற்சொன்ன 1-4-7-10-ஆம் இடமென்

னும் கேந்திரம் பெற்றிருக்க அவன் ஆகாயத்தை அளாவிய மதயானையை அடைவதோடு நல்ல மேன்மையான புத்திசாலியும், அழகுடைய களத்திரம் கொள்வோனும் ஆவானென்று கூறுவர். தீமையைக் கொடுக்கப்படமாட்டாத லக்னாதிபதியோடு லாபாதிபதியும்கூட அவர்களோடு நற்கோட்களும் சேர்ந்து மேற்சொல்லிய 1-4-7-10-ஆம் இடங்களிலிருக்க, அந்த ஜாதகன் சிந்துரமென்னும் யானையை அடைவான் என்றும் கூறுவாய் எ-று. (544)

உண்டாம்விப்பிரதுரையா லதிகதனமுடையன்
உறுசன்மத்திற்பத்தி லுத்தமர்களிருக்க
மிண்டாஞ்சன்மாதிபன் பத்தாமதிபனோடும்
விரும்பியேநல்லோர் தாமும்மேவிநிற்க
வண்டாருங்குழலின் மடவாயரசராலும்
மாணிக்கவகைசேரு மன்னரைச்சேவித்தே
கொண்டாடுசத்திர சாமரைகள்மிகவுள்ள
கோமானுகுவனென்றே கூறுவர்மேலோரே.

(இ-ள்) ஜெனனராசியிலேனும் 10-ஆம் இடத்திலேனும் நற்கோட்கள் இருக்க அந்த ஜாதகனுக்கு விப்ர ராஜாக்களால் அளவிறந்த செல்வத்தை யடைவான் என்றும், வண்டுகளைப் பழிக்கும் கூந்தலும், அரிய குழலு மூடைய நங்கையே! அந்த ஜாதகன் சேவைசெய்யும்தன்மையால் மாணிக்க வகைகளை யுடையவனும், தனவந்தனும், யாவரும் கொண்டாடத்தக்க சத்ர சாமரைகளை யுடையவனும் ஆவானென்றும் மிக்க மேன்மை பெற்றவனாகவும் இருப்பானென்றும் கூறுவாய் எ-று. (545)

கூறுஞ்சன்மாதிபன் பத்தாமிடத்திலிருக்கக்
குலவுபத்தாதிப னுன்காமிடத்திற்கூட
வீறுடனுன்காமாதிபதி யுச்சமாகில்
வேந்தனுகுவன்சுகவான் வெகுலீலாவிநோதன்
பேருடன்பத்தாமாதிபதி நான்கினிற்கப்
பெருமையுடனுன்காதிபதி பத்தினில்நிற்கத்
தேறுசன்மாதிபதி யுச்சமாய்மேவத்
திரசகலவாகனங்கள் சேருமன்னனுமே.

(இ-ள்) 10-ஆம் ராசியில் ஜெனன ராசியதிபதி சேர்ந்திருக்க, சுக ஸ்தானமான நான்காம் இராசியில் 10-ஆம் ராசிநாதனிருக்க, நான்காம் வீட்டதிபதி உச்சம்பெற அந்த ஜாதகன் மன்னனென்னும் பிரக்யாதியும், கலவிசெய்ய ஆசையுடையவனும், சவுக்கியத்தையே அனுபவிப்பவனும் ஆவான். ஜீவன ஸ்தானாதிபதியான 10-ஆம் ராசிநாதன் நான்காமிடமான சுகஸ்தானத்திலும், நான்காம் ராசியதிபதி மேற்சொன்ன ஜீவன ஸ்தானத்திலும், லக்கினாதிபதி உச்சம்பெற்றும் இருக்கப் பிறந்தவன் அரசனும் எல்லாவித வாகன விருத்தியுடையவனும் ஆவான் எ-று.

(வி-ரை) உச்ச கிரகங்களின் பெருமையை யோகபடலத்தில் சொல்லி யுள்ளார். 5-ஆம் வீட்டோன் 10-லும், 10-ஆம் வீட்டோன் நாலிலுமிருக்க, அவ்விருவரும் சுபராகவு மிருக்கில் அந்த ஜாதகனுக்கு அவர்களிட திசை புக்தி வருங்காலம் அளவிறந்த யோகம் உண்டெனவும் கூறுவர். (546)

மன்னியரெண்டாமதிபன் லாபத்திலிருக்க
மற்றுமந்தலாபாதி வந்துரெண்டின்மேவ
உன்னியநான்காமாதி பதியுச்சமாக
உயர்சகலவாகனங்க ளுளவேந்தனுவன்
சொன்னவிரண்டாமதிபன் லாபாதியிருவர்
தொடர்ந்திரண்டாமிடத்திருக்கச் சூழ்பத்தாமதிபன்
பின்னுமுச்சனுயிருக்க வரந்தோளியுண்டாய்
பேருலகில்வாழ்வரெனப் பேசுவர்நூல்வல்லோர்.

(இ-ள்) லக்கினத்திற்கு இரண்டாம் வீட்டதிபதி லாபஸ்தானமாகிய 11-ஆம் ராசியிலிருக்கவும், 11-ஆம் ராசிநாதன் இரண்டாம் ராசியிலும் மேன்மையைத்தரும் சுகாதிபதி என்னும் நான்காம் வீட்டதிபதி உச்சம் பெற்றுயிருக்க பிறந்த ஜாதகன் அரசனுகவும், எல்லாவிதமான வாகனங் களையும் உடையவனுகும். இரண்டாம்வீட்டதிபதியும் 11-ஆம்வீட்டோனும் தனஸ்தானம் பெற்றிருக்க 10-ஆம் ராசிநாதன் உச்சவீடேறவும், பிறந்த வன் தோளி என்னும் பல்லக்கை யுடையவனுகி இப்பூமியில் புகழ்ச்சி பெற சுகித்திருப்பானென்று கணிதசாஸ்திரமறிந்தோர் கூறுவார் எ-று.

(வி-ரை) 10-ம் வீட்டோன் உச்சம்பெறின் யாகாதி கிருத்தியங்களும் செய்வானென்று சொல்வதோடு எந்நாளும் இராஜரீகம் செய்வானென்றும் சோதிடவல்லோர் கூறுவர். (547)

## மாதுருபலன்

### வேறு

அன்னைதன்ருனத்தாதி யதியட்டமத்திற்காரி
தன்னுடன்கூடிற்பின்கோ சரமன்னைக்கைந்தொன்பானின்
மன்னியகாரிமேவின் மாதாவுக்கரிட்டஞ்சொல்லும்
மின்னியநற்கோளுச்ச மெய்திடினன்காம்நல்லாய்.

(இ-ள்) மாதுரு ஸ்தானுதிபதி 8-ல் நின்று அவனேடு சனி சேர்ந் திருக்கில் அந்த ஜாதகனுக்குப்பின் ஓர் மாதா உண்டாவள். மாதுருஸ்தான மென்னும் நான்காம் ராசிக்கு 5-9 என்னும் இராசிகளில் சனி இருக்கில் தன் தாயாருக்கு கெண்டம் சம்பவிக்கும். மேற்சொல்லிய ராசிகளில் நற் கோட்கள் உச்சம்பெற்றிருக்க அவன் தாயாருக்கு மேற்சொன்ன தோஷம் இடையாதெனவும் உத்தமமெனவும் கூறுவர் எ-று.

(வி-ரை) மாதுரு கெண்டம் சொல்வது மாதுருஸ்தானதிபதி மாதுரு காரகன் இவர்களன்றி மாதுருஸ்தானத்தில் வேறு கொடிய கோட்கள் சகிதமாய் சந்திரனை பாவகிரகங்களால் பார்க்கப்பட்டால் அந்த ஜாதகன் வயது வாலிபத்திலேயே மாதா மரணமாவாள். மாதுரு ஸ்தானத்ததிபதி ஆக்ஷிபெற்று மாதுரு லக்கினத்திற்கு எட்டிடத்தோன் சுபர்களோடு ஆக்ஷி பெற்று யிருக்கில் மாதாவுக்கு தீர்க்க ஆயுளென்றும் இன்னும் பற்பல விதமாகவும் பிரித்துக் கூறுவது நலம். (548)

**நாலிரண்டேழிடத்தி னதிபராய்நண்ணுமூவர்**
**நாலிரண்டேழிடத்திற் சனிகுசனுடனேநண்ணில்**
**நாலிரண்டேழிற்செவ்வாய் நண்ணிடிற்காரிபார்க்கில்**
**சாலவன்னைக்கரிட்டஞ் சாற்றுவர்சனியைக்கொண்டே.**

(இ-ள்) *நான்காம் வீட்டோன் இரண்டாம் வீட்டோன் இவர்கள் அவரவர்கள் ஆக்ஷி ஸ்தானத்திலிருந்து, சனி-குஜன் சகிதம் பெற்றாலும், மேலே சொன்ன ஸ்தானங்களில் சனியொருவன் தனித்திருந்தாலும், சனி எந்த ஸ்தானத்திலேனும் இருந்து நோக்கினும், அவன் மாதாவுக்கு மேற்சொன்ன சனி இருக்கும் வன்மையால் கெண்டாந்த விபரம் கூறுவாயாக எ-று.*

(வி-ரை) *முன்சொல்லிய நான்கு 7-ஆம் வீட்டோன் நீச்சம்பெற்று நான்காம் வீட்டிலும் அதற்கு நான்காம் வீட்டிலும் பாவகிரகங்கள் சகிதம் பெற்று, சந்திரன் நீச்சம்பெற்றும் இருக்கப் பிறந்த ஜாதகன் பிறந்தவுடன் அவன் தாய் மரணமடைவாளென்றும், 10-4-7 இவ்விடங்களில் சுபகிரகங் களும், நான்காம் வீட்டோன் பாக்கியமும், அவனோடு குருவும், 12-ல் ஆக்ஷி கிரகமிருக்கில் அவன் மாதா பூரண ஆயுளுடன் இருப்பாளென்று கேரளத் தில் சொல்லியபடி இன்னம் சந்திரன் அஷ்டகவர்க்க சோதனையாலும் மாதாவுக்கு ஆயுள் கூறுக.* (549)

**சனிகுசர்க்கைந்தேழொன்பான் றனிற்சசியுறிற்றாய்இல்லாள்**
**இனியபொன்பார்க்கினிற்ப னிலக்கினத்திந்துநிற்க**
**முனிபவரிந்தைநோக்க முந்துமேழிடத்திற்செவ்வாய்**
**தனியுறவந்தபிள்ளை தனைப்பிறர்வளர்ப்பர்காணாய்.**

(இ-ள்) *சனி குஜன் இவ்விருவரும் நிற்கும் ராசிக்கு 5-7-9-ல் சந்திர னிருப்பரேல் அவன் மாதா மரணமடைவாள். மேற்சொல்லியபடியே சந் திரனிருந்து குரு நோக்குவரேல் பூரண ஆயுளுடையவளாவள். சந்திரன் ஜெனனராசியிலிருக்க, தீயகிரகங்கள் சந்திரனைநோக்க, குஜன் 7-ல் நிற்கப் பிறந்தவனை அந்நிய தாய் போஷிப்பாள் என்றும் கூறுவாய் எ-று.*

(வி-ரை) *மேலேகூறிய செய்யுளில் குருபார்க்கில் தாய்க்குரியதோஷம் நீங்கும் என்றனர். ஆயினும்,*

*குருவது நான்கிற்கூட கொம்பனை யாளேகேளாய்*
*வருவது வன்னைக்காகா வங்கிஷ நாசமாகும்*
*திருகது மில்லைகண்டாய் செல்வரும் பாராராகில்*
*கருவுடன் மாதாநாசம் கண்டிடும் குறிதப்பாதே.*

*என்றபடி நான்கில் குருவிருக்க அன்னைக்கு ஆகாது. இல்லையேல் மாதுரு வம்சமானது நசிந்துபோம், இது தவறாது. குரு நான்கில் இருந்து லக்கி னத்திற்கு சுபகோட்களானவர் குருவைப் பாராவிடில் கருவோடு தாயார் இறந்துபோவாளென்று கேரளத்தில் கூறியிருப்பதால் 550-ஆம்செய்யுளில் குரு பார்க்கில் தாய்க்குரிய தோஷம் நீங்கும் என்பதை எந்த ராசியிலிருந்து பார்க்கிறனென்பதை யோசித்துக் கூறுதல் வேண்டும்.* (550)

கதிரவற்கிரண்டிற்பன் னிரண்டினிற்காரிநிற்க
மதிதனக்கிரண்டிற்பன் னிரண்டினின்மந்தநிற்க
கதிர்குசன்கூடிமற்றுங் காரிசந்திரனைக்கூட
அதிபனுந்தந்தைதாய்க்கு மரிட்டமென்றுரைகள்பன்னே.

(இ-ள்) சூரியனின்ற ராசிக்கு 2-12-ஆம் ராசியில் சனி நிற்கவும், அல்லது சந்திரனிருந்த ராசிக்கு 2-12 என்னும் இடங்களில் சனி சேர்ந்தாலும் சூரியன் சந்திரன் சனி குஜன் இந்நால்வரும் ஒரு ராசியிலும் இருப்பார்களேயானல் அந்த ஜாதகனுடைய மாதா பிதாக்களுக்கு மரணம் சம்பவிக்கும் என்று கூறுவாய் எ-று.

(வி-ரை) மேற்சொல்லியபடியே சந்திரனுக்கு 2-12 இவ்விடங்களில் சனி நின்றாலும்,

சுத்தமும் பாவிகூடி சூரிய னுடனேநிற்க
பத்துமுந் நான்குமேழிற் பனிமதி யொருவனில்லா
அத்தமுந் நான்குநான்கோ ராக்ஷிஇல் லாமலில்லா
நித்தமும் கன்னியாகி நெடுங்கால மிருப்பாளன்னே.

என்றபடி சூரியனோடு பாவகிரகங்கள்கூடாமலும், 7-10-12 இவ்விடங்களில் சந்திரனில்லாமலும், 4-12-க்குடையோர் ஆக்ஷியாய் இருந்தாலும், அவன் மாதா நித்தியகெண்ட முண்டாயினும், பூரண ஆயுளுள்ளவளாகி அநேக நாள் இருப்பாளென்று கேரளத்தில் சொல்லியபடி ஆராய்ந்து சொல்வதோடு இன்னம் அஷ்டகவர்க்கையும் சோதித்து மாதுர் பிதுர்களுக்கு ஆயுள் சொல்லுக. (551)

வேறு

பன்னிரண்டினிலிரண் டினிற்சன்மத்திலிந்து
பாவருடன்கூடிநிற்கப் பயின்றவனைக்கரிட்டம்
அன்னையதிபன்றிசையின மாதுருதானத்துக்
கைந்தொன்பானிற் காரியணுகிலரிட்டமதாம்
மன்னியமாதுருத்தா னந்தனக்கட்டமத்தில்
மந்தநான்காதிபனு மருவியுறிலரிட்டம்
என்னுநான்கதிபனுடனே செவ்வாயேனும்
இரவியதாகிலுங்கூடி லிடர்நோய்புந்தியினில்.

(இ-ள்) சந்திரன் தீயகோட்களுடன்கூடி ஜெனனராசியிலேனும், தனம் விரயமெனனும் ஸ்தானங்களிலேனும் இருக்க, அவனை ஈன்றமாதாவுக்கு கெண்டமுண்டு. மாதுரு ஸ்தானுதிபதி திசை வரும்போது மாதுரு ஸ்தானத்திற்கு 5-9 இவ்விடங்களில் கோசாரப்படி சனி இரண்டரைவருஷ வாசகாலம் அவனை யீன்ற மாதாவுக்கு கெண்டமநேரும். அன்னை க்ஷேத்ரமாகிய நான்காம் ராசிக்கு 8-ஆம் ராசியில் மாதுருஸ்தானுதிபதியான நான்காம்வீட்டோனும் சனியும்கூடியிருக்கில் தாய்க்குகெண்டம் உண்டென்றே கூறுவர். நான்காம் வீட்டானேடு குஜனுவது அருக்கனுவது கூடி இருக்க, அந்தஜாதகனுக்கு புததிசை வரும்போது புற்பல கஷ்டங்களும் வியாதியும் உண்டென்று கூறுவர் எ-று. (552)

புந்தியுநான்காதிபனுந் தீயோர்வீட்டில்
புகழ்க்கோளுேக்கற வருநாளரிட்டமாகும்
சிந்தையுடனுன்காதி யுடன்றனுதி
சேர்ந்தெங்கேநிற்கிலும் பொன்சேதமன்னைக்
கந்தநான்காதியுடன் காரிசெவ்வா
யணுகிலவர்திசையிலன்னைக் கரிட்டமாகும்
வந்துசெவ்வாய்நான்கிலுறிற் சனியுமிந்து
மருவியெங்கேநின்ருலு மரணமற்றங்கதமே.

(இ-ள்) புதனையும் நான்காம் வீட்டதிபனையும் சுபகோட்கள் பாராது கொடியோர்களால் பார்க்கப்பட்டாலும், அல்லது கொடியோர் க்ஷேத்திரத்திலிருந்தாலும், கூடியசீக்கிரம் அவன் தாயாருக்கு கெண்டாதி பீடை காட்டும். நான்காம் ராசியதிபஞேடு இரண்டாம் ராசிநாதன்கூடி ஜெனன ராசிக்கு எந்த ராசியிலிருந்தாலும் அந்த ஜாதகன் தாயாருக்கு பொன் பூஷணவிரயமுண்டாகும் நான்காம்ராசியதிபன் சனி குஜன் இவர்களோடு கூடி இருக்க, சனி குஜன் திசை வரும்போது தாயாருக்கு மரணம் சம்பவிக்கும். நான்காம் வீட்டில் குஜனிருந்து சனி சந்திரஞேடு சேர்ந்து எந்த ராசியில் இருந்தாலும் அவன் தாய் உடனே இறந்துபோவாள் என்றும் கூறுவர் எ-று.

(வி-ரை) மேற்சொல்லிய செய்யுளின்படியே கிரகமிருந்தால் திசை புக்தியின் வலிமை அறிந்து மாதாவுக்கு கெண்டம் கூறுவது அவசியம். ()

வேறு

அத்தங்கமதாய்மாதுருத்தானுதி வியத்திலுறநான்கில்
மெய்த்துங்கலேவெண்மதியிருக்க வதற்கேழ்காரிமேவுகினும்
புத்திசெறிசுக்கிரற்கேழிற் பூமிசுதனும்பொருந்திநிற்கில்
சித்தமன்னைதனக்கரிட்டஞ் சேருநற்கோள்செறியினன்ரும்.

(இ-ள்) நான்காம் ராசியதிபன் அஸ்தமயம் பெற்று, வியமென்னும் 12-ஆம் ராசியில் சேரவும், நான்காமிராசியில் பிரகாச கலைகளையுடைய சந்திரனிருக்க, சனி சந்திரனின்ற ராசிக்கு 7 ல் இருந்தாலும், யுக்தியை விளைவிக்கானின்ற சுக்கிரனின்ற ராசிக்கு சப்தம ராசியின் பூமிசுதனென்னும் குஜன் இருககில் அந்த ஜாதகனைப் பெறற மாதாவுக்கு கெண்டம் உண்டு. மேற்சொல்லியவர்களோடு நற்கோட்கள் சகிதம்பெற்று நிற்கின் உத்தம பலன் உண்டெனவும் கூறுவாய் எ-று.

(வி-ரை) சுபர்கள் பார்க்கின் நன்மை என்பது தாய்க்கு தோஷமில்லை என்றதன் கருத்தாகும்.

சதிர்மதியிடத்தோனேழோன் சப்தமஞ்சுபரேயாகில்
கதிரரவிரவிசேய்க்குக் கண்டுடனிவரைப்பாரா
ததிகறமாறெட்டாகில் அந்தமாதாவின்சுற்றம்
எதிரொருகுறையில்லாமல் இருப்பனேவயது நூருய்.

என்றபடி சந்திரனின்ற ராசிக்குடையவன் ஏழிலும், அவ்வேழில் சுபகிரகங்களும், அவர்களை சூரியன் குஜன் பாராமல் இருந்தாலும், அவ்விருவரும்

6-8-9 இவ்விடங்களில் இருந்தால் அந்தத் தாயின் சுற்றத்தார் ஏதொரு குறைவுமின்றி தீர்க்க ஆயுளுடையவர்களாய் இருப்பாரென கேரளத்தில் சொல்லியபடி ஸ்தான பலனை யறிந்து சொல்லுக. (554)

**செறியுமிரவியுடன்காரி சேர்ந்துகுடும்பத்தினிலிருந்தே**
**அறியுமூன்றுமதிபனையு மன்னைபதிநான்காமிடமும்**
**பிரியமறவேசனிபார்க்கப் பெலமற்றிந்தோடரவிருக்க**
**மறுதீர்க்கோள்நான்காதி யுச்சமானாலும்போம்மாதாவே.**

(இ-ள்) சூரியனோடு சனி சகிதமாய் குடும்பமென்னும் இரண்டாம் ராசியிலிருந்து லக்கினத்திற்கு 3-ஆம் வீட்டோனையும், மாதுருஸ்தானத்திற்கு நான்காம் வீட்டோனையும் பார்க்கவும், சந்திரன் பலமற்று ராகு கேதுக்களோடிருக்க, நான்காம் வீட்டோன் உச்சம்பெற்று தீக்கோளுடன் கூடி இருந்தாலும் அந்த ஜாதகன் தாய் இறந்துபோவாள் எ-று

(வி-ரை) மாதுருஸ்தானத்திற்கு நான்காம் வீடானது மாதாவுக்கு சுக ஸ்தானம் ஆனதால் அவ்வீட்டை தீயகிரகம் பார்த்தாலும் சேர்ந்தாலும் நான்காம் வீட்டோன் க்ஷீணம் பெற்றாலும் இந்த ஜாதகன் யோகத்தை அவன் மாதாவும் கண்டு இறப்பாளென்று சோதிடத்தோர் கூறுவர். (555)

**மாதாபதியிற்சசிவெள்ளி மாநாகம்மூன்றுறவதற்கேழ்**
**மீதானைந்திற்காரியுற வெய்யோனுடன்மூன்றுதியைந்தில்**
**தீதாயிருக்கச்சனியவனைத் தெரிந்துபார்க்கக்குடும்பத்தை**
**ஏதானங்காரகன்பார்க்க வீன்றாட்கரிட்டமெனச்சொல்லே.**

(இ-ள்) யாவரும் போற்றும் சந்திரனும் சுக்கிரன் இராகு இவர்கள் மாதுருஸ்தானத்திற்கு சப்தமமாகிய 7-ஆம்ராசியிலிருக்க, மாதுருஸ்தானத்திற்கு 5-ஆம் ராசியும், ஜெனனராசிக்கு அஷ்டம ஸ்தானமுமான 8-ல் சனி இருக்க 3-ஆம் வீ டதிபனும் கதிரோனும் சகிதம் பெற்றிருக்க, அவர்களுக்கு அப்பகை க்ஷேத்திரமாகவும், மேற்படி 8-ஆம் ராசியில் நின்ற சனி அவர்களைப் பார்க்க, ஜெனனராசிக்கு இரண்டாமிடத்தை குஜன் நோக்க, அவனை ஈன்ற மாதாவுக்கு கெண்டம் உண்டென்றும் கூறுவர் எ-று.

(வி-ரை) மேற்சொல்லிய வண்ணமே கிரகங்கள் இருந்தாலும், நான்காம் வீட்டோன் ஆக்ஷிபெற்று கேது லக்கினத்திற்கு கேந்திரமேறி சந்திரன் அல்லது சுக்கிரன் நின்ற வீட்டிற்கு 6-8-12 ஆவை சுத்தமாயும் இருக்கின் மாதாவுக்கு அரிட்டதோஷம் நீங்குமென சாதக சிந்தாமணியில் சொல்லியபடி ஆராய்ந்து கூறுக. (556)

**சொல்வார்மேடலக்கினத்துக் கன்னைபதியிற்சுங்கன்புதன்**
**உல்லாசங்கள்பெறநிற்க வதற்கேழரசனுறச்சசிக்கும்**
**பொல்லாவேழிற்சனியிருக்க வன்னைக்கன்னைபோமுச்சம்**
**நல்லமதியுநல்லோரு மன்னைக்கரிட்டநல்காரே.**

(இ-ள்) ஜெனன லக்கினம் மேஷமாகயிருந்து அதற்கு நான்காம் ராசியான கடகராசியில் புதனும் சுக்கிரனும் பலம்பெற, அதற்கு ஏழாம்

ராசியில் குருவிருக்க, சந்திரனுக்கு 7-ல் சந்தோஷத்தை விளைக்கப்பட்ட சனி யிருக்க அந்த ஜாதகன் தாய்க்கு தாயார் அதாவது தாயைப் பெற்ற பாட்டியார் மரணமடைவாள். வளர்பிறைச் சந்திரனோடு சுபகிரகங்கள் சேர்வதும், உச்சம்பெற்ற கோள்களிருப்பதும், தாயாருக்கு கெண்டாதி தோஷத்தைத் தரமாட்டார் எ-று.

(வி-ரை) கடகராசியில் புதன் சுக்கிரன் இவர்களில்லாவிடினும்,

உச்சரே நான்கில்நிற்க ஒருநான்குக் குடையோனுச்சம்
மிச்சகேந் திரத்தினிற்க மிகுபாவர் நோக்காராகில்
யச்சமின் றீன்றதாய்க்கே யதிகதீர்க் காயுளென்பார்.

என்றபடி நான்கில் உச்சகிரகங்களிலிருந்து நான்காமாதிபதியும் உச்சனுகி கேந்திரம்பெற, அவன் தாய்க்கு தீர்க்காயுளென்று சாதக சிந்தாமணியில் கூறியபடி யோசித்துக் கூறுக. (557)

**நல்கார்சனிசெவ்வாயிரண்டு நான்காமிடந்தன்னைப்பார்க்கில்**
**ஒல்காதிருக்கிற்காரகனு மொசிவாய்விரையமுற்றிடவே**
**சொல்லாவன்னைதனக்குறுநோய் சினத்தேயரவஞ்சேர்ந்துற்ருல்**
**நில்லாளன்னைபொன்னேக்கில் நிற்பன்சிலநாணீனிலத்தே.**

(இ-ள்) சனி குஜன் இவ்விருவரும் ஜெனனலக்கினத்திற்கு நான்காம் வீட்டையும் இரண்டாம் வீட்டையும் பார்க்க, அல்லது நான்கு இரண்டென்னும் இராசிகளில் சேர்ந்தாலும், மாதுரு காரகனுகிய சந்திரன் விரயஸ்தானம் ஏற, அவன் தாய்க்கு நோயுண்டென்றும், விரயம்பெற்ற சந்திரனோடு இராகு கேதுக்களில் ஒருவரிருக்க தாயார் இறந்துபோவாளென்றும், குரு பார்க்கில் சிலதுகாலம் இப்பூமியில் இருப்பாள் என்றும் கூறுவாய் எ-று.

(வி-ரை) குரு பார்த்தால் என்பதை குரு எந்தராசியிலிருந்து பார்க்க வேண்டுமென்பதை 550-செய்யுளின்கீழ் கூறி இருக்கிறோம் குரு நான்கு ராசிக்குள்ளேயுள்ள ராசிநாதனைக் கூடி சுபக்ஷேத்திரங்களிலும், கேந்திர கோணங்களிலுமிருந்து பாவகிரகங்கள் பாராருயின், அந்த ஜாதகன் தன் மாதாவின் பாதுகாப்பில் இருப்பனென்றும் கூறுவர். (558)

**நிலத்திஞன்காமிடந்தனக்கோ ரிரண்டாமிடத்திலிருந்தவர்கள்**
**பலத்தைக்குடும்பாதிபன்பலத்தைப் பெற்றதாயும்பலன்பெறுவள்**
**நலத்தநான்காமாதிபனுச்ச நண்ணியானங்கிசத்திலிருந்தால்**
**குலத்துக்கொழுநன்றண்டிப்புக் குள்ளாகாளக்கொடிதானே.**

(இ-ள்) ஜெனனராசிக்கு ஐந்தாம்ராசியில் அதாவதுசுகஸ்தானத்திற்கு இரண்டாம்வீட்டில்சேர்ந்தகிரகம் வலிவோடு இருக்கவும், 5-ஆம்வீட்டோன் பலம்பெறவுமானுல் அந்த ஜாதக குடும்பத்திற்கு எவ்வளவு பலன் தருமோ அவ்வளவும் அவனின் தாயடைவாள். நான்காம்வீட்டதிபதி புருஷாங்கிசம் பெற அக்கிரகம் எந்த ஸ்தானுதிபதியேயானுலும், அவர் ஏதேனும் ஒரு ராசியில் உச்சனுய் இருந்தால் அந்தஜாதகன் தாயானவள் தன்கொழுனன் தண்டனைக்கு உடன்படமாட்டாளெனவும் கூறுவர் எ-று.

(வி-ரை) தண்டனைக்கு உடன்படாள் என்பதை பலவிதமாய்ப் பிரிக்கலாம்.

எப்படியெனில்,

திங்களுடன் பாவர்களும் நீசமெய்தப்பாவர்
சேர்ந்துநிற்க நான்கோனும் நீசமுறவல்லோர்
பங்கமுறு நீசருடன் கூடியேநிற்க
பரிந்திவர்க ளச்சாதி பதிகளிந்தப்படியே
சங்கையுற விருக்கப்பொன்ன வர்க்கமிலாதாகிற்
றருவறம் பிலாமல்விப சாரமேசெய்வள்
மங்கையறி லதிகமாது ரெனச்சொல்வர்
மதவேளை மயக்கும்வாட்டங் கண்மயிலே.

என்றபடி மன்மதனை மயக்கும் வாட்டமறிந்த பெண்ணே! சுக்கிரன்-சந்திரன் இவர்கள் நீச்சம்பெற்று பாவர்களோடு சேர, நான்காம் வீட்டோன் நீச்சமடைந்த கிரகங்களோடு சேர்ந்தும், அவர்களடைந்த அங்கிசாதிபதியும் நீச்சம்பெற்று குருவர்க்க மேராமலிருந்தால் அந்த ஜாதகன் தாய் ஸ்திரீ ஜாதிகளில் செய்யத்தகாத விபசாரத்தைச் செய்வாளென்று சாதக சிந்தாமணியில் சொல்லியபடி ஆராய்ந்து தண்டனைக்கு உள்ளாகாளென்பதைக் கூறுக. (559)

**கொடியகதிராதவன்புடத்துக் குள்ளம்புலியைத்தான்வாங்கிப்**
**படியுமிராசிதனிலரசன் பற்றுங்காலநிரியாணம்**
**கடியமதியின்புடத்துக்குள் காரிபுடத்தைத்தான்வாங்கி**
**நெடியராசிதனிற்காரி வருநாளன்னைநிரியாணம்.**

(இ-ள்) கொடுமையை விளைவிக்காநின்ற சூரியன் ஸ்புடத்தை எடுத்து சந்திரனை எடுத்துப்பார்க்க ஏற்பட்ட ராசிகளில் கோசாரப்படி குரு ஒரு வருஷ வாசகாலத்தில் மாதாவுக்கு நிரியாணம் சம்பவிக்கும். சந்திரன் நின்ற ஸ்புடத்தை கண்டுபிடித்து அதனுள் சனியின் ஸ்புடத்தை எடுத்துக் கணக்கிடவரும் லக்கினங்களில் சனி இரண்டரை வருஷம் கோசாரப்படி பிரவேசகாலம் அவன் அன்னைக்கு நிரியாணம் எ-று. (560)

**ஆணிமத்தியந்தனக்கேழிற் செவ்வாயுறிலன்னைக்கரிட்டம்**
**காணியாமாதுருத்தானங் கடகமாகப்பிறைநிற்கில்**
**பூணும்வயதுபூரணமாம் பொல்லாரிரண்டுபுறமிருக்க**
**ஏனுமதியநடுவிருக்க வன்னைக்கரிட்டமிசைந்திடுமே.**

(இ-ள்) ரவிக்கு அரசனாய் விளங்காநின்ற சந்திரன் எந்தராசியில் இருந்தாலும் அந்த ராசிக்கு 7-ஆம் கேந்திரத்தில் குஜன்வரில் அவன் மாதாவுக்கு கெண்டாதி பீடையுண்டு. கடகலக்கினம் மாதுரு ராசியாகி அவ்வீட்டோனுன சந்திரன் ஆக்ஷிபெறில் தீர்க்கவயது உள்ளவளாவாள். சந்திரன் கடகத்திலிருந்தும் இருபக்கங்களிலும் தீயகிரகங்களால் சூழப்பெற்றால் அக்குழவியின் மாதாவுக்கு கெண்டாதிதோஷம் உண்டெனக் கூறுவாய் எ-று.

(வி-ரை) மேற்சொல்லியபடி இருபக்கங்களிலும் தீயகிரகங்களால் சூழப்பெற்ற சந்திரனை மாதுரு லக்கினத்திற்கு 7-ல் குரு நின்று நோக்கினாலும் நான்காம் ராசியில் உச்சகிரகமிருந்தாலும் மேற்சொன்ன தோஷமானது பரிகாரமாகும் எனவும் சோதிடத்தோர் கூறுவர். (561)

**இசைந்தவன்னைபிதாத்தானத் திறைவரிரவியுடன்கூடி**
**அசைந்திடாதெட்டாறு வியத்துறினுநீசமாகவுமே**
**நிசந்தானுறவேயிருக்கிற்ருய் நின்றதந்தையிருவருக்கும்**
**சுசந்தேபிரியமில்லாத கடினமைந்தனுங்கண்டீர்.**

(இ-ள்) ஜெனன லக்கினத்திற்கு நான்காம் வீடாகிய அன்னை ஸ்தானாதிபதியும், 9-ஆம் வீட்டோனான பிதரு ஸ்தானாதிபதியும் சேர்ந்து சூரியனுடன்கூடி 6-8-12 இவ்விடங்களில் நீச்சம்பெற்று இருக்கில் அந்த ஜாதகனுடைய மாதா பிதாக்களுக்கு சந்தோஷமில்லாத கடினமுள்ளவனாக இருப்பான் எ-று. (562)

**கண்டவன்னைபிதாத்தானக் கடவுளிஃசந்தெங்கேயுறினும்**
**மண்டுமிரவிமதிகூடி மாதாதந்தைத்தானத்தில்**
**அண்டியிருக்கிற்பிதாவுடனே யன்னைக்கெய்துமனுமரணம்**
**பண்டுநான்கொன்பதற்கிறைவர் பலத்தார்பாலன்பரிவுசொல்வாம்.**

(இ-ள்) அன்னைஸ்தானாதிபதி என்னும் நான்காமிடத்தோனும், பிதர்ஸ்தானாதியான 9-ஆம் வீட்டோனும்சேர்ந்து ஏதேனும் ஒரு வீட்டிலிருந்து சூரியன் பிதருஸ்தானத்திலும், சந்திரன் மாதுருஸ்தானத்திலும் அல்லது மேற்சொல்லியபடி மாறி இருந்தாலும், அந்த ஜாதகன் பிதாவோடு தாயும் மரணமடைவாள். 9-ஆம் வீட்டோனும் நான்காம் வீட்டோனும் பலம்பெற்றிருக்கில் அந்த ஜாதகன் தாய் தந்தையருக்கு யாதொரு துன்பமும் இல்லை என்று சொல்லுவாய் எ-று.

(வி-ரை) மேலே சொல்லியபடி பிதரு ஸ்தானாதிபதியும், மாதுரு ஸ்தானாதிபதியும் ஓர் வீட்டில் கூடி இருந்தாலும், அவர்கள் நட்பு ஆக்ஷி உச்சம் முதலிய க்ஷேத்திரங்களாயும் இருந்தால் தாய் தந்தையர் உயிரோடு இருப்பார் எனவும், மேற்சொல்லியவர்கள் நீச்சம்பெற்றும் தீயகிரகங்களின் பார்வை பெற்றிருந்தாலும், அல்லது அவரவர்கள் ராசிக்கு அஷ்டமாதிபதி க்ஷீணம்பெற்று இருந்தாலும் மரணம் சம்பவியுமென்று கூறுவர். (563)

**சொல்லுநான்கொன்பதுக்கிறைவர் தொடர்ந்துதனபாக்கியலாபத்**
**தல்லலறவேயிருந்தாலும் அடைவேயுச்சகேந்திரத்தும்**
**வெல்லும்திரிகோணங்களினும் மேவிற்றந்தைதாய்மைந்தர்**
**எல்லையில்லாச்சந்தோஷ மெய்தியிருப்பரென்பாரே.**

(இ-ள்) சுகாதிபதியும் பாக்கியாதிபதியுமான பிதரு மாதுரு ஸ்தானாதிபதிகள் 2-9-11 ஆம் இடமென்னும் க்ஷேத்திரங்களில் ஏதேனும் ஒருராசியிலிருந்தாலும், துன்பமற்று பலம் பெற்றிருந்தாலும், ஷை ராசியில் உச்சம் பெற்ருலும், 1-4-7-10 என்னும் கேந்திரம்பெற்றிருப்பாராயினும் அல்லது திரிகோணங்களாகிய 1 5-9-ல் இருந்தாலும், அந்த ஜாதகனும் அவன் மாதா பிதாக்களும் அளவில்லாத மகிழ்ச்சியடைந்து சுகத்தோடு இருப்பார்.

(வி-ரை) சுகாதிபதியும் பாக்கியாதியும் உச்சம்பெற்று கேந்திரம் அல்லது திரிகோணம் இவ்விடங்களில் இருக்கின் அந்தஜாதகனுக்கு முரசயோகமென்றும், அதன்பலன் மேன்மையையுடைய தாய் தந்தையரின்) பூஸ்திதியும் எந்நாளும் சுகத்தோடு இருப்பவனென்றும் கூறுவர். (564)

**என்பாரொன்பானுதிபதி யினியபலமாய்ச்சன்மாதி**
**முன்பாநான்காமாதிபதி மூவர்பலன்களற்றிருக்க**
**அன்பாயீன்றதாயுதரத் தனுகுங்கர்ப்பத்தந்நாளில்**
**வன்பாய்வருந்திமரிப்பளென வகுத்தார்சுருதிவல்லோரே.**

*(இ-ள்) பிதுரு ஸ்தானுதியும் பாக்கியாதிபுமான ஜெனனராசிக்கு 9-ஆம்வீட்டோன் வலிபெற்று இருந்தாலும், அல்லது அவனுடன் ஜெனன ராசிநாதனும், மாதுரு ஸ்தானுதிபதியும் கூடி மேற்படி மூன்று ராசி யதிபர் களும் தன் வலிவிழந்து இருப்பார்களேயானுல் அவன் தாயானவள் அவனைத் தன் கெர்ப்பத்திலிருந்து உதித்தபோதே இறந்துபோவாள் என்று சோதிடவல்லோர் கூறுவர் எ-று.*

*(வி ரை) மேலே சொல்லிய மூவர்களும் பலனற்று அஷ்டமாதிபத்தி யம்பெற்ற சந்திரன் நீச்சம் பகைபெற்றுப் பார்க்க சீதளமென்னும் ஜன்னி யாலும், சனி மேற்சொல்லிய அஷ்டமாதியாய் நீச்சம் பகைபெற்றுப் பார்க் கப்பட்டால் துர்தேவதைகளாலும், இராகு கேதுவாகில் கட்டிப் பிளவைக ளாலும் மரணம் அடைவாள் என்றும் கூறுவர்.* (565)

**இந்துசேயாருமாதி யிவர்களும்கூடிநான்கில்**
**வந்துதானிருக்கிலீன்ற மாதாவுஞ்சோரம்போவள்**
**அந்தநான்கொன்பதொன்றிற் கதிபர்கள்கூடிக்கோணம்**
**நந்துகேந்திரத்தின்மேவத் தாயுடன்கட்டைநண்ணும்.**

*(இ-ள்) உயிராதியான சந்திரன் ரோகாதி என்னும் ஆறும் வீட்டோ னுடன் குஜன் சகிதமாய் மாதுரு ஸ்தானமான நான்காம் வீட்டிலிருக்கப் பிறந்தவன் தாயானவள் விபசாரமே செய்வாள். அன்னை ஸ்தானுதிபதி யும் லக்கினுதிபதியும் ஒன்பதாம் வீட்டதிபதியும் சேர்ந்து 1-5-9 என்னும் திரிகோணங்களிலேனும், 1-4-7-10 என்னும் கேந்திரங்களிலேனும் இருப் பரேல் அவன் தாயுடன் பிள்ளையாவது பிள்ளையுடன் தாயாவது உடன் கட்டை ஏறுவார் எ-று.*

*(வி-ரை) ஓதுநாலுக் கிறைவன் சனிராகு குளிகனுடன்*
*கூடியபாவர் வர்க்கமுற்று கிற்கச்சுபர்தான்*
*போதுர நோக்காரெனி னின்மாதுரு காரகனும்*
*போற்றிய நாலுக்கிறையும் பொருந்திய வங்கிசரும்*
*கோதுபடு சனிராகு குளிகனும் கூடிக்*
*குறித்திடு சத்துருநீச மூடமடைந் திருக்க*
*மாதுக்கேழ் குருபார்வை யன்றியிருந் தாலும்*
*மாதர்விப சாரியென வகுத்துரைப்பர் தானே.*

*என்றபடி நான்காம் வீட்டோனுடன் சனி ராகு குளிகன் இவர்கள் கூடி பாவவர்க்கமுற்று சுபகிரகங்களால் பார்க்கப்பட்டாலும், மாதுருகாரகனும் மாதுரு ஸ்தானுதிபதியும் அவர்களிருந்த அங்கிசாதிபதியும், சனி ராகு குளிகனோடு கூடி அஸ்தமனம் நீச்சம்பெற்று மாதுருஸ்தானத்திற்கு 7-ஆம் வீட்டை குரு பார்க்கப்படாமலு மிருந்தால் அந்த ஜாதகனின் தாயானவள்*

விபு[illegible]வாவாளென சாதக சிந்தாமணியில் சொல்லியபடி மேற் சொல்லிய [illegible]ம்போவாள் என்பதை பற்பலவிதமாய் ஆராய்ந்து சொல்லவேண்டும்.

## க்ஷேத்திரபலன்

[க்ஷேத்திர மென்பது தனக்கு சொந்த இல்லத்தைக் குறித்துச் சொன்னதேயாம். முன்சொல்லிய இரண்டாம்பாவகத்தில் குடும்பத்தைப்பற்றி விரிவாய் சொல்லப்பட்டன. இங்கு க்ஷேத்திரம் என்னும் இருப்பிட அந்தஸ்துமுதலிய விவரங்களைக் கூறுவார்.]

**பத்துநான்காதிபன்செவ்வா யாறெட்டிற்பன்னிரண்டில்**
**உற்றநீசத்தானத்தி லுறிற்பங்குமனையுமில்லை**
**மற்றிவர்பலமுற்றுக்கால் மனைபங்குலாபமுண்டாம்**
**பெற்றநான்கதிபனுச்சம் பெறின்மாடகூடமுண்டாம்.**

(இ-ள்) ஜெனனராசிக்கு நான்காம்ராசிநாதனும் 10-ஆம்ராசிநாதனும் குஜனும் சேர்ந்தாவது தனியேயாவது வியமென்னும் 12-ஆம் இடம்பெற்று நீச்சமாக இருக்கின் அந்த ஜாதகனுக்குப் பங்குமனை கிடையாதென்பர். மேற்சொல்லிய மூவரும் வலிபெற்று இருப்பாராயின் பங்குமனை இவனுக்கு இடைக்குமென்றும், நான்காம் ராசிக்குடையோன் எந்த ராசியிலேனும் உச்சனாக இருக்கில் அந்த ஜாதகனுக்கு மெத்தைமேடைகள் அமைந்த கட்டடம் உண்டாகும் எ-று.

(வி-ரை) பங்குமனை என்பதை பொதுவாய் சொல்லப்பட்டன வாகையால் மேற்படி பங்குமனை என்பதை நான்காம் வீட்டோன் பலம்பெற்று உச்சம்பெறின் மாதுரு வகையறுவால் பங்குமனை என்றும், குஜன் உச்சம் பெற்றால் தன் உடன்பிறந்த சகோதரரோடு பங்குண்டென்றும் பிரித்துக் கூறுவது நலம். (567)

**கூடமாளிகைசிங்காரங் கொடுப்பனான்கதிபனாங்கில்**
**நீடிவாழ்ந்திடவன்றேனை நெருங்கிநின்றவர்கடாமே**
**நாடுநலலோர்களாயி னன்மனைபாவராயின்**
**ஊடியேவீடுபாழாய்க் கிடக்குமென்றுரைவழங்கும்.**

(இ-ள்) நான்காம் வீட்டதிபன் தன் சுயவீட்டிலேயே ஆக்ஷிபெற்று இருப்பானாகில் அப்பாலனுக்கு அழகிய சித்திர அறைகளையுடைய அரண் மனை உண்டாகும். மேலே சொல்லியுள்ள நான்காம்ராசிநாதன் ஆக்ஷி பெற்று அவனுடன் சேர்ந்தோர் சுபக்கிரகங்களாயின் இன்னும் கீர்த்தி யான கிரகமுள்ளவனாகுவன். பாவ கிரகங்கள் சேர்ந்திருக்குமானாலும் நோக்குவாரானாலும் அந்த வீடானது பாழாய்க் கிடக்குமென்று சோதிடத் தோர் கூறுவர்.

(வி-ரை) நான்காம் ராசியதிபனோடு தீயகிரகங்கள் இருக்கில் அவன் மனை பாழாய்க்கிடக்கும் என்றனர். ஆகையால் தீயகிரகங்களில் ஒன்றான சனி சேரில் அவ்வீட்டில் முனி வாசஞ்செயயும் எனவும், ராகு கேதுக்க ளாயின் புற்று முதலிய சர்ப வாசமுள்ள மனை என்றும், குஜனாகில் ஸ்திரீ கலகம் உண்டென்றும் சோதிடவல்லோர் கூறுவர். (568)

**வழுங்கும்நான்காமதிபதியும் வஞர்சத்துருநீசத்திலுற**
**ஒழுங்கும்வியத்தாதிபன்றனத்தி லுறச்சன்மாதிபெசங்கதிரும்**
**முழங்குநான்காதிபன்கூட நல்லோர்நோக்கமுருதிருக்கத்**
**தழங்கும்பங்குமனையெல்லாந் தானும்பறிபோம்தப்பாதே.**

(இ-ள்) *ஜெனன லக்கினத்திற்கு நான்காம் வீட்டோன் தனக்கு சத்ருக்கள் மனையிலேனும், நீசனையும், தீயவர்கள் க்ஷேத்திரங்களிலேனும் இருக்க, விரயாதிபதியான் 12-ஆம் ராசிநாதன் இரண்டென்னும் குடும்ப ஸ்தானம்பெற, ஜெனன லக்கினதிபதியோடு சூரியனுங்கூடி அவனுடன் சுகாதி என்னும் ராசிநாதன் கூடி இருக்க, அவர்களை சுபர்களால் பார்க்கப் படாமல், தீயர்களால் பார்க்கப்பட்டிருக்கப் பிறந்தவன் வீடு மனை முதலிய வைகளை அன்னியர் கைக்கொள்வார் எ-று.* (569)

**தப்பாதாருமதிபதியுந் தான்பத்தேழிலிருந்திடவே**
**ஒப்பாஞ்சன்மந்தனிற்செவ்வா யுறையச்சுபக்கோளுறப்பார்க்க**
**இப்பார்தன்னிற்சத்துருவா யிருப்பர்மனைபங்குள்ளதெல்லாம்**
**செப்பார்முலையாயிவன்றனக்குச் சேருந்திண்ணந்திறனுலே.**

(இ-ள்) *ஆறும் வீட்டதிபதி சப்தம ராஜ்யமென்னும் 10-7 இவ்விடங்களில் இருக்க, ஜெனனலக்கினத்தில் குஜனிருக்க, அவன்சுபகிரகங்களால் நோக்குற்றாலும் அல்லது சேர்ந்திருந்தாலும் அந்த ஜாதகனுக்கு விரோதிகளாக இருக்கப்பட்டோர் பங்கு பூமியனைத்தும் இவனுக்குத் தப்பாது கட்டாயமாய் கிடைக்குமென்று சொல்வதற்கரிய அழகு பொருந்திய ஸ்தனத்தை யுடையவளே! சொல்வாயாக எ-று.*

(வி-ரை) *நான்கில் ராகுசிற்கில் பந்துஜன துவேஷியும், நலிந்தவாகன முடையவனும், அழகுபொருந்திய வீடு வாசல் உடையவனும், தாயாருக்கு தோஷமும், யாத்திரை சஞ்சாரியும், சிலவாளியும், படபடவென்று பேசக் கூடியவனும் ஆவானென்று சாதக சிந்தாமணியில் கூறியபடி கிரகவலி அறிந்து மேற்படி பலனைச் சொல்லுக.* (570)

**நாலாமிடத்திலுதிபனும் லக்கினதியுடன்கூடி**
**மேலாய்நாலிலுறிலொருவன் வீட்டிலிருந்துமிகவாழ்வன்**
**சேலாநாலாமதிபனுடன் சேரும்பாவரெத்தனையோ**
**மாலாய்கேள்அத்தனைவீடு கட்டிச்சேதம்வழங்குவனே.**

(இ-ள்) *ஜெனன லக்கினதிபதி நான்காமராசியிலிருக்கவும், நான்காம் ராசிநாதன் ஆக்ஷிபெற்றிருக்கவும், அந்த ஜாதகன் அந்நியர் இல்லங்களில் மிக்க சந்தோஷத்துடன் சுகித்திருப்பானெனவும், நான்காம் வீட்டதிபதியோடு தீயர்கள் எத்தனைபேர்கூடி இருக்கின்றனரோ அத்தனைஇல்லங்களை வேய்ந்து அவை இடையூராகி அன்னியருக்கு விட்டுவிடுவான் எ-று.*

(வி-ரை) *மேற்சொல்லியபடியே நான்காம் வீட்டோன் பாவகிரகங்களுடன் சேர்ந்திருந்தாலும், அந்த நான்காம் வீட்டதிபதி க்ஷேத்திரமென்னும் வீட்டை கொடுக்கும் ஆதிபத்தியம் உண்டாமெனப் பார்த்து பிறகு அவனுடன் சேர்ந்த கிரகங்களைக்கொண்டு பலன்சொல்லுதல்வேண்டும் ()*

வேறு

வழங்கும்லக்கினாதி பன்பலனின்றியே
முழங்குமாறின் முந்நாலிலுறைந்திடில்
தழங்குஞ்சன்மந் தனைப்பாவர்கண்டிடில்
பழங்கணுமனைப் பங்குமில்லானென்னே.

(இ-ள்) ஜெனனராசிநாதன் சத்துரு ரோகமென்னும் ஆறும் க்ஷேத்திரத்திலேனும், வியமென்னும் 12-ஆம்க்ஷேத்திரத்திலேனும் இருந்து தன் வலிவிழந்திருக்க, கொடியோர்கள் ஜெனனராசியை நோக்குற்றிருக்க, அந்த ஜாதகனுக்கு பழமையாகிய பிதுரார்ஜித பங்குபாகம் இல்லாதவன் என்றும் சொல்வர் எ-று. (572)

வேறு

பங்கமில்வியத்தின்மன்னன் பரிந்திரண்டாமிடத்தில்
தங்கநல்வீடுகட்டிச் சகலபாக்கியமும்சேர்ப்பன்
இங்கிதவியத்தோன்றன்னோ டெத்தனைகிரகங்கூடும்
சங்கையத்தனையாய்வீடு கட்டிடுஞ்சமர்த்தன்றானே.

(இ-ள்) தனஸ்தானமாகிய இரண்டாம்ராசியில் விரயாதி என்னும் 12-ஆம் ராசிநாதனிருக்க, அந்த ஜாதகன் அழகுபொருந்திய இல்லங்களை வேய்வதும், சகல பாக்கியங்களையும் உடையவனாகுவன். முன்சொல்லிய விரயஸ்தானாதிபதியோடு எத்தனை கோட்கள் சகிதம் பெற்றனவோ அவர்கள் பாவர்களேயாயினும் சுபர்களேயாயினும் அத்தனை இல்லங்களைக் கட்டும் சமர்த்துடையவனாய் இருப்பானென்றும் கூறுவர் எ-று.

(வி-ரை) 12-ஆம் வீட்டோன் குருவாக இருந்து இரண்டிலிருந்து மேற்சொன்ன பலனைக் கொடுத்தாலும், நான்காம் ராசியதிபன் விரயம் பெற்றும், நான்காம் வீட்டைத் தீயகிரகங்கள் பார்க்கின் அந்த ஜாதகன் திண்ணைகளிலும் சத்திரங்களிலும் இருப்பவனாவான். சுபர்கள் காணின் நன்மை அடைவதுடன் அநேக இல்லமும் உடையவனாகுவன் என்றும் கூறுவர். (573)

தானமாம்சன்மவீடு சரமெனிற்பரதேசத்தில்
ஆனதோர்திரங்களாயின் மருவுவன்சுயதேசந்தன்னில்
ஈனமிலுபயமாயின் பரதேசத்திடையிற்பாதி
ஊனமில்சுயதேசந்தன்னிற் பாதிநாளுறைவன்கண்டீர்.

(இ-ள்) மேஷம்-கடகம்-துலாம்-மகரம் என்னும் சரராசியிலுதித்தவன் அந்நிய தேசங்களில் வாழ்பவனும், ஸ்திரராசியாயின் சுயதேசத்திலேயே வாழ்பவனும், உத்தம ராசிகளாகிய உபயமாகில் அரைபாக வயது அந்நிய தேசத்திலும், அரைபாக வயது சுயதேசத்திலும் வாழ்ந்திருப்பான் எ-று.

(வி-ரை) முன் முதலாம் பாவகத்தில் 461-ஆம் செய்யுளில் சரலக்கினமாகி அவ்வீட்டிற்கு உடையோன் சரராசியிலிருக்க அந்தஜாதகன் தேசாந்திரம் திரிவானென்றுகூறினர். ஆகையால் மேற்சொல்லிய செய்யுள் சரம்-

ஸ்திரம்-உபயமென்னும் மூன்று ராசிகளுக்கும் பொதுவாய் சொன்னதாயி னும், அந்தந்த ராசிநாதர்கள் இருக்கும் சுபாசுபம் அறிந்தும் பலன்சொல்ல வேண்டும். (574)

கண்டபன்னிரண்டாம்வீடு கருதுநல்லோர்வீடாயின்
திண்டிறநகரந்தன்னைச் சேர்ந்துஅருகுறவிருப்பன்
பண்டுசூத்திரர்தம்வீடாய் லாபாதிக்குறவுமாயின்
மண்டுசூத்திரரிருக்கு மனைக்கருகிருந்துவாழ்வன்.

(இ-ள்) இலக்கினத்திற்கு வியயமென்னும் 12-ஆம் வீடு சுபர்களான சந்திரன்-புதன்-குரு-சுக்கிரன் இவர்கள் வீடாயின் அந்த ஜாதகன் நகரம் என்னும் பட்டணங்களை சேர்ந்து வாழ்ந்திருப்பன். அதிலும் சூத்திரர் மனையில் வாழ்வன். மேற்சொன்ன 12-ஆம் வீட்டோன் லாபஸ்தானாதி பதிக்கு உறவாகில் சூத்திரர் இருக்கும் மனைக்கு அருகில் இருந்து வாழ்ந்து இருப்பன் எ-று. (575)

இருந்தபன்னிரண்டாமாதி யீன்றதாய்துணைவர்தந்தை
பொருந்தியமனைவிமக்கள் தானத்திற்போய்நின்றாலும்
திருந்துமத்தானத்தாதி தன்னுடன்சேர்ந்துற்றாலும்
அருந்துணையானவீடு மவரவர்தமக்கேயாகும்.

(இ-ள்) 3-ஆம் வீட்டோன் 4-ஆம் வீட்டோன் 9-ஆம் வீட்டோன் இவர்கள் ஆக்ஷிபெற்று அவர்களோடு 12-ஆம் வீட்டோன் சேர்ந்தாலும் அல்லது 12-ஆம்வீட்டோன் ஆக்ஷிபெற்று மேலேசொல்லியுள்ள கிரகங்கள் சேர்ந்தாலும், அப்படிச் சேர்ந்த கிரகம் எந்த காரகாதிபதியோ அவர்கள், அவரவர்களுடைய வீட்டை அவரவர்களே அனுபவிப்பர் எ-று. (576)

## பரவிஷயம்

மாலாய்நாலாமிடந்தன்னை மருவிப்பாவரினிதிருக்க
மேலாய்நோக்கச்சன்மாதி மீண்டும்பலன்களற்றிருக்க
ஏலாம்பாவருடன்கூடி யிருக்கநல்லோர்பார்வையறப்
பாலோன்விஷயம்வேறென்றே பண்பிலுரைப்பர்பாரோரே.

(இ-ள்) நான்காமிடத்தில் தீயகிரகங்கள் சேர்ந்து பலம் பெற்று நிற் கிலும், பலமான பார்வை பெற்றாலும், ஜெனன லக்கினாதிபதி பலமற்று தீயகிரகங்களுடன் கூடி சுபர்களால் பார்க்கப்படாவிட்டால் இவ்வுலகிலுள் ளோர் அந்த ஜாதகனை இவன் விஷயம் வேறு என்று பேசுவர் எ-று. (577)

## வேறு

பாரிலுறுஞ் சன்மாதி நான்காமாதி
　　பாக்கியத்தா னாதியிவர் மூன்றுபேரும்
சேரவே யாறிடத்து மலதாறுதி
　　செறிந்தருளு மங்கிசத்துந் திடமாய்நிற்க

வீரியநாலாதி பதியுடன் பாம்புமேறு
மிக்கசனி தன்னுடனே மேவினும்
தேரிலிது பரவிஷய மென்றுசொல்வர்
சிலைப்புருவக் கயற்கணுற்றுந் தெரிவையாரே.

(இ-ள்) ஜெனன லக்கினாதிபதியும் பாக்கியாதிபதி நான்காம்வீட்டதி பதி இம்மூவரும் வேறு கிரகங்கள் சேர்க்கையின்றி தன் தன் அம்சங்களி லேயே நின்றாலும், நான்காம் வீட்டதிபதி ராகு கேதுக்களோடாவது சனி யோடாவது கூடியிருந்தாலும், அந்தஜாதகனுடைய விஷயமே வேறென்று வில்போன்ற புருவத்தையும் அழகையுமுடைய பெண்ணே! சொல்வாய். ()

வேறு

ஆரனுலாமிடத்ததிப னவடன்குமரன்சன்மத்தில்
சேரவிருக்கவவனுடனே திகழும்பாம்புசெறிந்திருக்கப்
பாரிலறியச்சனித்தவனும் பரவுங்குலபுத்திரனல்லன்
ஏருங்கடைசிக்குலத்துள்ளா னென்பான்றந்தையென்றிலகும்.

(இ-ள்) ஜெனனலக்கினத்தில் ஆருமாதியும், 4-ஆம்வீட்டோனும் சேர்ந் திருந்து அவர்களோடு இராகுவிருக்கப் பிறந்தவன் தன் சுயகுலத்திலுதித் தவன் அல்லவென்றும், இவன் தந்தை கடைகுலத்தோரென்றும் தாழ்ந்த குலத்துள்ளவனென்றும் பேசுவர் எ-று. (579)

வேறு

இலகியமூன்றுமிடத்திற் குசன்கருங்கோள்கூடில்
எழிற்பகினிசங்கம மாருதிபனுனலுஞ்
சலமலியெட்டாதிப னுகிலுஞ்செவ்வாயுடனுஞ்
சசியுடனுங்கூடிலவள் சங்கமமேயாகும்
நலமலியுமிவருடனே கரும்பாம்புநீசன்
நவில்சனிசூத்திரன்வெள்ளி நண்ணிடில்வைசியனும்
குலவியசூரியன்கூடின் மறையவனுமென்றே
கூறினர்இப்படிதெரிந்து கொண்டறியவேண்டும்.

(இ-ள்) ஜெனன லக்கினத்திற்கு மூன்றும்ராசியில் குஜனும் ராகுவும் இருக்க, அவன் தாய் ஜங்கம ஸ்திரீயாக யிருப்பள். இலக்கினத்திற்கு ஆறு எட்டாம் வீட்டிற்குடையோன் குஜனோடாவது சந்திரனோடாவது கூடி இருக்கில் அவன் சங்கமமுடையவனென்றும், மேற்சொல்லியவர்களுடனே இராகு நீச்சம்பெற்று சேர்ந்தாலும், சனி சேர்ந்தாலும், சூத்திரனுக்குப் பிறந்தவனென்றும், சுக்கிரன் நீச்சம்பெற்று சேர்ந்திருந்தால் வைசியனுக் குப் பிறந்தவனென்றும், சூரியன் கூடியிருக்கில் பிராமணனுக்குப் பிறந்தவ னென்றும், இவ்வாறே நீச்சம்பெற்று மேலேசொல்லிய குஜன் சந்திரனோடு கூடிய கிரகங்களைக்கொண்டு ஜாதி அறிந்து சொல்வாய் எ-று. (580)

வேண்டிடுநாலாமாதி யாருமாதிபனும்
மெய்யிற்றுர்ப்பலராக விரைந்துடன்கூடிடினும்

நீண்டபிறையும்பிருகுக் துர்ப்பலரேயாக
  நின்றிடுநான்காமிடத்தைப் பாவர்களேக்கிடினும்
பூண்டநாலாதிசசியொடு கருங்கோள்கூட
  பொருந்தியசன்மாதி நான்காறென்பானதிபன்
ஈண்டியவேழாமிடத்தி லிவர்நால்வர்கூடி
  இருந்தக்காற்பரவிஷய மெனப்புகலுவாரே.

(இ-ள்) யாவரும் போற்றப்பட்ட நான்காம் வீட்டோனும் ஆறாம் வீட்டதிபதியும் சந்திர லக்கினமென்னும் உயிர் லக்கினத்தில் சேர்ந்து, சந்திரனும் துற்பலம்பெற்று, சுக்கிரனும் தன்வலிவிழந்து சுகமென்னும்நான்காம் வீடாகிய கேந்திரத்தை தீயகோட்கள் கண்ணுற்றிருக்க, மேற்படி நான்காம் ராசிநாதன் இரவிற்கு அரசனான சந்திரனோடும் பாம்பாகிய ராகுவோடும் கூடி இருக்க, ஜெனன லக்கினதிபதி நான்காம் ராசிக்குடையோன் ஆறாதிபன் 5-ஆம்ராசியாதிபதி இந்நான்குபேரும் லக்கினமாகிய உடலுக்கு 7-ஆம் ராசி என்னும் சப்தமத்திலிருக்க அந்த ஜாதகனை இப்பூமியிலுள்ளோர் இவன் விஷயம் வேறு, அதாவது பரவிஷயமென்றும்கூறுவர் எ-று. (581)

வேறு

சிறந்தமதியையுஞ் சென்மமனையையும்
அறிந்தபார்வைக ளரசனேக்காவிடில்
உறைந்தகதிர்மதி யொன்பதினுற்றிடில்
பிறந்தசேய்பர சாதகம்போற்றுமே.

(இ-ள்) இவ்வுலகில் சிறப்பு பொருந்திய நற்கீர்த்தியையுடைய நக்ஷத்திரங்களுக்கு அரசனாக விளங்காநின்ற சந்திரனையும், ஜெனனராசி எதுவோ அவ்விராசியையும் குரு பாராதிருக்க, சூரியனும் சந்திரனும் சேர்ந்து பிதுரு லக்கினமும் பாக்கியஸ்தானமென்னும் பேர்பெற்ற 9-ஆம் ராசியில் இருக்க அந்த ஜாதகனை பரசாதகமென்றே கூறுவர் எ-று. (582)

போற்றும்லக்கினம் பொருந்துங்கதிர்மதி
தேற்றியிருக்கத் துரைசூழரசனும்
சாற்றியநீசன் சனிநவாங்கிசையில்
ஏற்றியிருக்க விதுபரசாதகம்.

(இ-ள்) யாவரும் போற்றப்பட்ட ஜெனன லக்கினத்தில் மாதுருகாரகனாகிய சந்திரனும், பிதுரு காரகனாகிய சூரியனும் இருக்க, தேவேந்திரன் முதலியோர் சூழப்பெற்றிருக்கும் தேவ புரோகிதர் என்னும் குரு நீச்சம் அடைந்து, அல்லது நீச்சம்பெற்ற சனி இவ்விருவாங்கிசத்தில் மேலே சொல்லிய சூரியனும் சந்திரனும் இருக்க அந்த ஜாதகனை பரசாதகம் என்றும் கூறுவர் எ-று. (583)

பருதியின்கிழமை பண்புறுசோதி
அருகியதுதிகை அமர்ந்திடிலேனும்
பெருகியபுதனும் பெறுநாளிரேவதி
உருகியசத்தமி யுறும்பரசாதகம்.

(இ-ள்) ஜெனன காலமானது ஆதிவாரமும் 15-ஆம் நக்ஷத்திரமான சுவாதி நக்ஷத்திரமும், இரண்டாம் திதியாகிய துதிகை திதியாகவுமிருக்க பெருமையையுடைய புதன் ரேவதி நக்ஷத்திரம் சாரம்பெற்றிருக்க, சப்தமி என்னும் 7-ஆம் திதியாகவும் இருக்க அந்த ஜாதகனை பாசாதகமென்றும் கூறுவர் எ-று. (584)

உறும்சனிக்கிழமை யுற்றபின்னவிட்டம்
நறுந்துவாதசி நாளினிற்பிறந்தோன்
அறிந்திடுமிதுபர சாதகமென்றே
சிறந்தநூலறிந்தோர் செப்புவர்தாமே.

(இ-ள்) சிறப்பு பொருந்திய சோதிடவல்லோர்கள் சனிக்கிழமையும் 23-ஆம் நக்ஷத்திரமான அவிட்டமும், 12-ஆம் திதியாகிய துவாதசியும் கூடியநாளில் பிறந்தவனை உலகோர் பாசாதகனென்றே கூறுவர் எ-று. ()

மாதாரு அரிட்டம்

செங்கதிரிருக்கும் சேயங்கிசையில்
தங்கியங்கிசையோன் றன்மனைலக்கின
மங்குறிற்சன்ம மதைச்சேய்பார்த்திடில்
பொங்கியசிரசு பொடிபடுவாரே.

(இ-ள்) பிதுர் காரகனாகிய சூரியன் - குஜன் அங்கிசமேறி ஜெனன ராசியிலேனும், அன்னை ஸ்தானமும் சுகஸ்தானமுமான நான்காம் இராசியிலேனும் சகிதம்பெற, ஜெனனராசி எந்த ராசியாயினும் அந்த ராசியை குஜன் நோக்க அவன் அன்னையின் சிரசு பொடியாய்ப்போம் (அதாவது) இறந்துபோவாள் எ-று.

(வி-ரை) மேற்சொல்லியபடியே கிரகமிருந்து குஜன் பார்க்கில் மாதாவுக்கு அரிட்டமாயிரும், அக்காலங்களில் குரு அல்லது சுக்கிரன் சந்திரன் இவர்களில் ஒருவர் திசையாக இருந்து அவர்கள் லக்கினத்திற்கு 4-9-11 இவ்விராசிக்கு உடையோராகவும், அவர்களை சுபகிரகங்கள் பார்த்துமிருந்தால் கெண்டத்திற்குச் சமமான பிணியைக்கொடுத்து நிவர்த்தியாகும். ()

வெண்பா

மூன்ற மதிபதியு மூரிச் சனியுடனே
தோன்றியைந் தாமிடத்திற் சூழ்ந்திடினும்—ஆன்றகதிர்
ஆறஞ்சு நாலிடத்துற் றுலவன்ருய் போமென்றே
கூறுஞ்சா மாண்டிற் குறித்து.

(இ-ள்) ஜெனன ராசிக்கு 3-ஆம் ராசிக்குடையோன் பாவர்களில் ஒருவரான சனியுடன் சகிதமாய் திரிகோணங்களில் ஒன்றான 5-ம் ராசியிலிருக்கவும், பெருமையையுடைய சூரியன் ஜெனனராசிக்கு 4-5-6 இவ்விடங்களிலிருக்க, அவன் இந்தஜாதகன் ஜெனித்த 5-ஆம் ஆண்டில் அவன் தாய் இறந்துபோவாள் எ-று.

(வி-ரை) சாற்றும் வில்லுச் சசிக்குத் தினம்ரெண்டு
தனுவி னுதியா ரெட்டுபனி ரெண்டுற

கூற்று சேய்க்கு மதிபிதா பத்தினிற்
கூறு பன்னூறு மந்தன்பத் தொன்பது
தேற்றுமெட் டாதிபன் னின்ற கோட்களின்
தினத்திற் சூட்ச மதியாதி தேரிடில்
ஆற்று தாயார் முன்னையாதி தேரிடி
லரிபி தாப்பய னூறெழுத் திதே.

(இ-ள்) மாதுரு க்ஷேத்திரம் தனுசாய் அதிலே மதிநிற்க அந்தப் பிள்ளைக்கு பூராடம் இரண்டாங்காலும் 6-8-12 இவ்விராசியில் குருவும் நிற்க மைத்துனன் மாமன் மரணமாவார். எத்தனைநாளிலெனில்: குருவுக்கு 16-நாளுக்குள்ளும், சந்திரனுக்கு 10-நாளுக்குள்ளும், சனியாகில 19-நாளுக் குள்ளும் என்பதாம். மரணவிபரம் எப்படியெனில்: 8-ஆமிடத்தில் எந்த கிரகம நின்றனவோ அந்த திசை வருடத்தை கணக்கிட்டு வருஷம் 1-க்கு ஒவ்வொரு நாளாகக் கூட்டிச்சொல்லவும். அக்காலங்களில் பிதுருகாரகனு வது ஸ்தானாதிபதியாவது வலிவுபெறில் பிதாவுக்குமுன் மாதா மரணம் அடைவாள. மாதுருகிரகம் வலிவுபெறில் மாதாவுக்குமுன் பிதாமரணமடை வாள் என்று வீமேசுர உள்ளமுடையானில் கூறியபடி இன்னும் மற்றுமுள்ள வர்க்கத்தாருக்கும் இவ்வாறே ஆராய்ந்து பலனும் வயதும் கூறுதல்நலம். ()

குறித்ததாய் தந்தை குலவு மனைக்கதிபர்
மறித்தவர்கண் மாறி மனையுறினும்—சிறுத்தேகல்
அத்தமன மாயிடினு மன்னையளு மரணம்
சித்தமெனச் சொற்றிடுநீ தேர்ந்து.

(இ-ள்) பிதுருகாரகனாகிய சூரியனும் மாதுரு காரகனாகிய சந்திரனும் சேர்ந்த ராசியதிபர்கள் தன சுயவீட்டிலன்றி தன் வலிவிழந்து அஸ்தமயம் பெற்றிருக்க அவன் தாயானவள் மரணமடைவாள் என்று நிச்சயமாய்ச் சொல்வாய் எ-று.

மாதுரு தோஷ விபரம்

| | | | |
|---|---|---|---|
| அசுவினி | 1-ஆம் பாதம் | 10-வருடம் | |
| மகம் | 1 ,, | 8-வருடம் | |
| மூலம் | 1 ,, | 4-வருடம் | |
| கார்த்திகை | 1 ,, | 4-வருடம் | |
| உத்திரம் | 1 ,, | 1-மாதம் | |
| உத்திராடம் | 1 ,, | 1-வருடம் | |
| பூசம் | 1 ,, | 9-மாதம் | |
| பூராடம் | 1 ,, | 4-வருடம் | |
| சித்திரை | 1 ,, | 5-மாதமும் | ஆகும். |

சித்திரை முதல்பாதம், அஸ்தம் பரணி இவை மூன்றும்பாதத்தில் பிறந்த ஜாதகன், இரவாகில் மாதா மரணமும், பகலாகில பிதா மரணமும், மாலைவேளையாகில அந்த ஜாதகனுக்கே மரணமாம். (588)

நான்காம்பாவகம் முற்றிற்று.

# ஐந்தாம் பாவகம்

## புத்திர பலன்

அஞ்சிற்கஞ்சிற்காரிமதி யங்காரகனோடிரவியுறில்
துஞ்சுமாமனசுபாநோககிற் றுன்பமில்லைப்பூசத்தில்
விஞ்சுபாதநடுவிரண்டே லன்னைக்கன்னையமாகும்
வஞ்சிபிழைக்கினேயரிட்ட மாமன்றனக்கேவருங்கண்டீர்.

(இ-ள்) ஜெனனலக்கினத்திற்கு 5-க்கு ஐந்தாம்வீடான 9-ஆமிடத்தில் சனி-சந்திரன்-செவ்வாய இவாகளோடு சூரியன நிற்கில் அந்த ஜாதகனின் தாய்மாமனுக்கு கெண்டாதிதோஷம சம்பவிக்கும். ஷைகிரகஙகளைச் சுபர்க ளாகிய சந்திரன்-புதன-குரு-சுக்கிரன் இவாகளிலொருவர் நோக்குவரேல் மேற்படி மாமனுககு தோஷமிலலை. மறறும் மேலே சொன்ன 9-ல நின்ற கிரகஙகள் பூசம 1-2-ஆம பாதததிலிருநதால் அவனது தாய்க்குத் தாயாகிய பாட்டிக்கு மரணம் உணடாக்கும. அவ்வாறு மேற்படி பாட்டிக்கு ஆயுள் விரயமில்லாவிடில் மேற்கூறிய தாயமாமனுக்கு நோயும் அரிட்டமும் உண்டாகுமெனறு கூறுக எ-று.

(வி-ரை) இச்செய்யுளில் 5-க்கு ஐந்தாம் இடத்தைக்கொண்டு அம்மா னுக்கும பாட்டிககும் தோஷம் கூறுவாராயினா. ஏனெனில்: ஐந்தாமிடம் அம்மான் ஸதானமும், 9-ஆமிடம மாதரு ஸ்தானததிற்கு சஷ்டம ஸ்தான முமா ஆனதினாலெனக. (589)

மருவுஞ்சன்மலக்கினத்தில் வாழுஞ்சன்மாதிபனோடும்
அருளுமைந்தாமிடத்ததிப னணுகிறபார்க்கிலன்புடனே
ஒருவர்தமதுவறையினின்மற் றொருவராமாருகவுநிற்கில
பெருமைப்புதல்வர்பிறந்திடுவர் பிறந்தானமனுக்கஞ்சாரே.

(இ-ள்) ஜெனன லக்கினாதிபதி ஆக்ஷியாகயிருந்து அவனோடு புத்திர ஸ்தானாதிபதி எனனும் 5-ஆம வீட்டோன சேர்நதாலும், அலலது லக்கி னததைப் பார்ததாலும், அல்லது ஐந்தாம் ராசிக்குடையோன் ஜெனன ராசியிலும, ஜெனன ராசிககுடையோன ஐந்தாம் ராசியிலு மிருக்க, அநத ஜாதகனுககு பெருமையை யுடைய புததிரர்கள் பிறபபார்களாயினும், அவாகள எமனுககும பயப்படாாகள எ-று.

(வி-ரை) மேற்சொல்லிய செய்யுளில் ஒருவர் வீட்டிலொருவர் மாறி இருககினும் பெருமையையுடைய புதல்வர் உண்டாவர் என்றனர். 5-ல் நினற கிரகத்தைக்கொணடு சொலலவேணடுவதாவது: சூரியன் நிற்கில் பிதா ஈனன் எனறு கூறுவாராயினும், அதனைப் பாாக்கும கிரகங்களாலும் சேர்ந்த கிரகஙகளாலும் பகுத்தறிநது சொல்லவேண்டும். ஆகையால் 5-ல் நின்ற கிரகங்களால் தோஷஙகளை பின்வரும் செய்யுளால் நன்கு அறியலாம். (590)

வேறு

அஞ்சாகு மிடத்திலுறு மவராற்றேஷம்
அனுகும்வகை சனிகுழவிக் கருகன்றந்தைக்கே
துஞ்சாத மதிக்கன்னை புதனலன்னை
சுற்றமதற் கரசனல்தந்தை சுற்றமாகும்
நஞ்சாருங் கரியகோள் சுதற்குச்செவ்வாய்
நண்ணிடிலம் மானுக்குத் தோஷமாகும்
மஞ்சாருங் குழன்மடவாய் யரசனைந்தின்மேவ
வந்திடில்சந் தானமத்திய முதித்தற்றனே.

(இ-ள்) ஐந்தாம் ராசியில் நின்ற பாவகிரகங்களின் தோஷவிபரம் எப்படியெனில்: சனி சேரில் அந்த ஜாதகனுக்கும், சூரியன் சேரில் அவன் பிதாவுக்கு தோஷமெனவும், பிரகாசத்தையுடைய சந்திரனிற்கில் அவன் மாதாவுக்கும், புதன் சேரில் அவன் தாய்க்கு தோஷம் உண்டெனவும், குரு நிற்கில் அவன் பிதாவின் உறவினர்களுக்கும், பாமபாகிய ராகு நிற்கில் அந்த ஜாதகன் புத்திரனுக்கும், குஜன் நிறகில் அவன் தாய்மாமனுக்கும், குரு இருக்கில் அந்த ஜாதகன் புத்திரசந்தானம் குறைந்தவனென்றும், மஞ்சள் முதலிய கலவைச்சந்தனம் கஸ்தூரிமுதலியவைகளால் சிங்காரித்து இனிய குரலோடு பாடும் பெண்ணே! சொல்வாயாக எ-று.

(வி-ரை) ஷை ஐந்தாம்ராசியில் ரவி நிற்கில் பிதா சுகம் குறைந்தவன், கிரகசுகமில்லாதவன், சந்திரன் நிற்கில் மாதாசுகம் இல்லாதவன, குஜன் நிற்கில் புத்திர ஈனன், நன்றி இல்லாதவன், புதன் நிற்கில் ஆத்ம ஞானி, சகலகலை வல்லோன், குரு நிற்கில் மனோபலமுடையோன், புத்திர மித்திர களத்திர சுகமுள்ளோன், கலகன், சனிநிற்கில் புத்திரஈனன் சண்டாளன், ராகு நிற்கில் விஷவாக்குடையோன், புத்திரனில்லாதவன், கேது நிற்கில் உதாரண ஞானி என வீமேசுர உள்ளமுடையானில் கூறியபடியால் 5-ஆம் ராசியில் நின்ற கிரகங்களின் குணமறிந்து பலன் கூறுதல் நலம். (591)

வேறு

உதித்தவொன்றைந்தாமாதி வுற்றவொன்றைந்துறுமல்
மதித்ததோர்நோக்கமின்றேல் மகவில்லைசுபரங்கிசத்தில்
பதித்துறிலாயினுண்டாம் பதியைந்தாமதிபன்மூன்றில
விதித்திடும்படியேநிற்கில் மேவுபுத்திரர்தாமற்பம்.

(இ-ள்) ஜெனனலக்கினாதிபதியும் 5-ஆம் ராசியதிபதியும் தன் சுயக்ஷேத்திரங்களன்றி அந்நியக்ஷேத்திரங்களிலும நின்று தன சுயவீட்டைப்பாராது அந்நியராசிகளையும் பார்க்கப் பிறந்த ஜாதகனுககு புத்திரர்கள் இல்லையாம். சுபராங்கிசம்பெறில் உண்டு. மேலே சொல்லியுள்ள இருவரும் அந்நியர் க்ஷேத்திரங்களிலிருக்கினும் 5-ஆம் ராசியதிபதி 8-ஆம் ராசியான மறைவிடஸ்தானம்பெறின் அந்த ஜாதகனுக்குப் புததிரர் அற்பமெனவும் கூறுவர்.

(வி-ரை) புத்திர ஸ்தானாதிபதி மறைவிடஸ்தானம்பெறின் இருக்கின் புத்திரர் அறபமெனக் கூறினர். அந்த மூன்றாமிடம் எனபது புததிர ஸ்தானத்திறகா? அல்லது ஜெனனராசிக்கா? என ஆராய்ந்து பிள்ளையுண்டு எனவும், இல்லை எனவும் ஆராய்ந்து புத்திரஸ்தானத்திற்கு 8-ல் நிற்கில

புத்திரன் பிறந்து இறந்துபோகுமெனவும், ஜெனன ராசிக்காயின் புத்திர னுக்கும் ஜாதகனுக்கும் சுலப மனக்கஷ்டம் உண்டாகுமெனவும், ஜெனன லக்கினதிபதியும், 5-ஆம் வீட்டோனும், தன் சுயக்ஷேத்திரங்களிலன்றி அந்நிய க்ஷேத்திரங்களில் இருக்கின் புத்திரர் அற்பமென்பதை அவ்வீட் டிற்கு உறவு உச்சம் நீச்சம் பகை முதலியவைகளை ஆராய்ந்து அவ்வாறு கூறுதல் நலமாகும். மேற்சொல்லிய ராசியதிபர்கள் ஆக்ஷி உச்சம்பெற்று பலத்துடன இருப்பாராயின் புத்திரர் உண்டென்றே கூறுவர். லக்கினதி பதியும் ஐந்தாம வீட்டோனும் இவ்விருவரும் தனக்கு பகை க்ஷேத்திரங்களி லிருந்து, இவர்கள் இருந்த ராசியதிபர்கள் 6-8-12-ல் பகை நீச்சம்பெற்று பாவகிரகங்களுடன் சேர்ந்தாலும் பார்த்தாலும் புத்திரர் அற்பமென்றே சொல்லவேண்டும். இப்படிப்பட்ட ஜாதகன் பிறப்பது பூர்வ கர்மமேயாகும். ஆகையால் 5 ஆம் வீட்டோன் சூரியனாகில் சங்கரனுக்கும், சந்திரனாகில் ஈஸ்வரிக்கும், குஜனாகில் வேலவருக்கும், புதனாகில் விஷ்ணுவுக்கும், குரு வாகில் பிரமம ஆலயங்களுக்கும், சுக்கிரனாகில் இந்திரயாகம் செய்தும், சனியாகில் முனி இருளன் வீரபததிரன் முதலிய தெய்வங்களுக்கும், ராகு கேதுவாகில் மாரி முதலிய தேவதைகளுக்கும் அபிஷேகித்து தானம் முதலியவைகளைச் செயயின் இறைவன் அருளால் புத்திரர் உண்டாகும் என சோதிட வல்லவர் கூறுவர் எ-று. (592)

**புத்திரத்தானத்ததி யேகனாய்புதன்வீடேறில்**
**புத்திரரில்லைநல்லோர் கூடிடிற்பிறந்துசாவர்**
**ஒத்திடும்பாபர்சேரின் மகவில்லையெருதுகும்பம்**
**வித்தகயோரையார்க்கு மகவில்லைவிளம்புங்காலே.**

(இ-ள்) புத்திர ஸ்தானதிபதி என்னும் 5-ஆம் வீட்டோன் மிதுனம் கன்னி எனனும புதனுக்கு ஆக்ஷிவீடுகளில் வேறு எந்த கிரகங்களோடும் சேராமல் தனித்து இருப்பரேல் அந்த ஜாதகனுக்கு புததிரரில்லை என்பர். மிதுனம கன்னி இவ்விராசிகளில் 5-ஆம் ராசியதிபனிருக்கினும் சுபகிரகங் கள சேர்நதிருக்கின புத்திரர்கள் பிறந்து இறந்துபோவார். பாவகிரகங்கள் சேர்ந்திருநதாலும் புததிரர்கள் கிடையாது. சுக்கிரன்-சனி-புதன் இவ் வோரையில பிறநதவர்களுக்கு புத்திரர் இல்லை என்று சொல்வர் எ-று.

(வி-ரை) மேலே சொன்ன புத்திர ஸ்தானதிபதி மிதுனம் கன்னி இவ்விராசிகளில் தனித்திருக்கின் புத்திரரில்லை என கூறுவாராயினும், அவ்விரண்டு க்ஷேத்திரஙகளும புத்திர ஸ்தானமாகவே இருந்து அவ்விராசி நாதன் ஆக்ஷி உசசம்பெற்று சுபர்களோடு சேர்ந்து பலம்பெற்றிருக்கினும் புத்திரர்களுண்டு. பாவகிரகங்கள் சேர்ந்து நீசசம் பகை முதலியவைகளா லும பாவர்கள் பார்க்கினும் புத்திரரில்லை. மேற்படி புத்திரஸ்தானதி பதி தனியே புதன் வீடுகளிலிருந்து, அக்கிரகம் ஆண கிரகமாயின் புருஷாள் செய்த தோஷத்தாலும், ஸ்திரீ கோட்களாயின் ஸ்திரீகள்செய்த வினையாலும், குருவாகில் தன் வர்க்கத்தார் செய்த தோஷத்தாலும், இவ னுக்குப் புத்திரரிலலை என்றும், மற்றுமுள்ள கிரகஙகளுக்கும் இவ்வாறே விபரம் அறிந்து, அந்தநத வாரங்களில் ஆலயங்களிலுள்ள நவக்கிரகங் களுககு அபிஷேகித்து ஒரு மண்டலம் காலை மாலை வலம்வரின் இறைவன் அருளால் புத்திரர உண்டெனவும் கூறுக. (593)

**விளம்புமேழாமிடத்தோன் மேவுச்சநீசமின்றிக்**
**களங்கமில்லாதிருக்கிற் கருதுமூத்தாளுக்கில்லை**
**இளங்கொடியாளுக்குண்டா மேழுளோனுச்சநீசம்**
**வளம்பெருமங்கிசத்தின் மருவிடின்மகவுண்டாமே.**

(இ-ள்) *களத்திர ஸ்தாளுதிபதி என்னும் 7-ஆம் வீட்டோன் உச்சம் நீச்சம் முதலிய க்ஷேத்திரங்களில் அன்றி பிரகாசமற்றிருக்க, அந்த ஜாதக னின் மூத்த மனைவிக்குப் புத்திரன் இல்லை எனவும், இளைய மனைவிக்கு புத்திரன் உண்டென்றும், 7-ஆம் வீட்டோன் உச்சம் நீச்சம்முதலிய க்ஷேத் திரங்களிலிருந்து மேன்மைபொருந்திய சுபக்கிரகங்களில் இருக்க, அந்த ஜாதகனுக்கு புத்திரன் உண்டென்று சொல்வர் எ-று.*

(வி-ரை) *இச்செய்யுளில் சொல்லியவண்ணம் கிரகம் அமர்ந்திருக்க ஜெனித்தோர்களை முதன்முதல்களத்திரபாவத்தை ஆராய்ந்தபிறகு புத்திர பலன் சொல்லவேண்டும். எப்படியெனில்: முதல் களத்திரமான கெர்ப்ப சந்தானமில்லாதா? அல்லது பிறந்து இறந்துபோகுமா? வேறு களத்திர மூமே இறந்துபோகுமா? பிரிந்துபோகுமா? என ஆராய்ந்து சொல்லுதல் வேண்டும். பிறகு களத்திரம் இரண்டு எனவும் ஒன்று எனவும் காண வேண்டும். மேற்படி ஜாதகன் புத்திர விருத்தி யுள்ளோளுயினும், இரண்டு தாரம் உடையவளுயின் இரண்டு தாரங்களுக்கும் புத்திரருண்டா? கிரமப் படியே இரண்டு தாரமாக இருந்து மூத்தாளுக்கு புத்திரர் அற்பமும், இளை யாளுக்கு புத்திர விருத்தியும் உண்டெனில், அவன் வர்க்கோத்துமவரிசை எனவும் கூறுவர். இவ்விபரங்களை 7-ஆம் பாவகத்தில் சொல்லிவரும் வண்ணம் அறிந்து சொல்லுக.* (594)

*வேறு*

**அஞ்சாமிடத்திற்செங்கதிரோ டரவுங்கூடித்தானிருக்கின்**
**மஞ்சார்குழலாய்தந்தைக்கும் மைந்தன்றனக்கும்வரும்பகையே**
**செஞ்சாலிகளுந்திரவியமுஞ் சேதமுண்டாந்திறமையுடன்**
**துஞ்சாதிருந்ததலங்கள்விட்டுத் தூரப்போவதிலக்கணமே.**

(இ-ள்) *5-ஆம்ராசியில் சூரியனும், ராகு கேதுக்களில் ஒருவரும் சேர்ந் திருக்க, அந்த ஜாதகனுக்கும் அவன் பிதாவுக்கும் பகையுண்டாகும். அவன் பூர்வோத்திரம் மனை தனம் முதலியவைகள் சேதமாகி விருத்தியில்லாது தன் சுயக்ஷேத்திரம் விட்டு தூரதேசங்களுக்குப் போவானென்று கணித வல்லோர் கூறுவர் எ-று.*

(வி-ரை) *ஒழிவிலான் வலக்கண் பிதாராதிப*
*னுண்ணுமா றெட்டீரா றுநத்தர்தையூ*
*ணழியிற் சேயுதவான் பிதாராதிப*
*னுண்ணு லாயதன கேந்திரகோணமு*
*மொழியுமூல முற்சே யுதவிடான்*
*முற்றுசேய் பிதாதி பன்றுபதி*
*யழிவிலாக் கோளொரு வனேயாயிடி*
*லவமரண மாறின்றிரங் கூறுவாம்.*

என்றதால் பிதுருஸ்தானாதிபதி அஸ்தமனமாய், 6 8-12 ல் இருந்தால் பிதுருகாலத்திற்கு இந்தப் பிள்ளை உதவாது. பிதுருஸ்தானாதிபதி சூரியனுடன் சேராமல், தனம் லாபம் கேந்திரம் திரிகோணம் இவ்விராசியிலிருந்தால் பிதுரு மரணகாலத்துக்குப் பிள்ளை உதவுமென்றும், பிதுருஸ்தானாதிபதியும் மாதுரு ஸ்தானாதிபதியும் ஒருவரேயானால் துற்மரணமென்றும் வீமேஸ்வரர் நூலில் சொல்லியபடியால் மேலே சொல்லிய செய்யுளில் தகப்பனுக்கும் பிள்ளைக்கும் பகை யுண்டாயினும் கருமத்திற்கு உடையவனாக வருவானா எனவும் இல்லையெனவும் பிரித்துக் கூறுதல் நலம். (595)

வேறு

**லக்கினாதி பதிக்குநாலாதிபன்**
**ஒக்கநல்லுற வாகவுந்தானுறில்**
**தக்கதந்தை தனக்குப்பின்மைந்தர்கள்**
**மிக்கபூமியில் மேவுவர்காணுமே.**

(இ-ள்) ஜெனன லக்கினத்திற்கு நான்காம்வீட்டதிபதி உறவுமுதலிய சுபசேஷத்திரங்கள் பெற்றிருக்க, அந்த ஜாதகனுடைய தந்தைக்குப் பிறகு அவன் புதல்வர்கள் மேன்மையைப் பெற்ற இப்பூமியில் சுகத்தோடு இருப்பார் எ-று. (596)

வேறு

**காணும்லக்கினத்திற்செவ்வாய் தனக்கேழிற்காரிபின்னுக்**
**கோணுமுந்நான்கில்வெய்யோ னிப்படிக்குலவிநின்றால்**
**ஆணுடன்பெண்ணுமில்லை யஞ்சாதிபாவனாயேழில்**
**பூணேழோன்பாவனையைந் துற்றிடிற்புதல்வரில்லை.**

(இ-ள்) ஜெனன லக்கினத்தில் குஜனும், அவனுக்கு 7-ல் சனியும், 12-ல் சூரியனும் இருக்கப் பிறந்த ஜாதகனுக்கு ஆண் பெண்முதலிய புத்திரர்கள் இல்லை என்பர். 5-ஆம் வீட்டோன் பாவனாகி 7-ஆம் இராசியிலிருக்கவும், 7-ஆம் வீட்டோனும் பாவனாக இருக்கப் புத்திரர்கள் கிடையாதென்றும் கூறுவர் எ-று.

(வி-ரை) 5-ஆம் வீட்டோன் பாவனாகி 7-ல் இருக்க, 7-ஆம் வீட்டோனும் பாவனாகிநிற்க புத்திரர் இல்லை என்றதன் கருத்து. 5-ஆம் வீட்டோன் 7-ஆம் ராசியிலிருக்க, அவை புத்திர ஸ்தானத்திற்கு மறைவிடமாகும். அந்த 7-ஆம் ராசிநாதனும் பாவனாகில் புத்திர ஈனமென முன்சொல்லிய செய்யுளில் விபரமாகக் கூறியுள்ளோம். 5-ஆம் வீட்டோன் குரு அல்லது சந்திரனாக இருந்தால்,

பாரப்பா இன்னமொரு புதுமைகேளு
பால்மதியும் பரமகுரு எழில்கிற்க
சீரப்பா ஜென்மனுக்கு வேட்டலில்லை
செந்திருமால் தேவியுமோ விலகிநிற்பாள்
கூரப்பா குமரியவ ளில்லாமல்தான்
குமரனிட வங்கிசமும் நாசமாக
ஆரப்பா அயன்விதியைக் கூறலுற்றேன்
அப்பனே புலிப்பாணி பாடினேனே.

என்றபடி சந்திரனும் குருவும் 7-லிருக்கப் பிறந்தவனுக்கு புத்திரவிருத்தி யில்லை. அவன் வீட்டில் வாசஞ்செய்யும் லக்ஷிமியானவள் விலகிப்போய் விடுவாள். ஆகையால் அவன் வங்கிசமானது நாசமாய்ப் போகும். இது பிறப்பு விதியாகுமென்று புலிப்பாணி முனிவர் கூறியபடி 7-ல் நின்ற கிரகங் களைக்கொண்டு வலிது பகை அறிந்து கூறுவது நலம். (597)

**புத்திரத்தானத்தாதி பொருத்துமங்கிலைசயைத்தொட்டு**
**மெய்த்துலக்கினமட்டெண்ணி மேவியேகண்டலக்கம்**
**எத்தனையோதானந்தத் தொகைப்படியினியமைந்தர்**
**சித்தமாய்ப்பெறுவரென்று தெரிந்தவருரைசெய்வாரே.**

(இ-ள்) புத்திர ஸ்தானாதிபதி இருந்த அங்கிசமுதலாக லக்கினம்வரை யிலுள்ள கிரகங்களை எண்ணிக்கண்ட தொகை எவ்வளவோ அத்தனை மேன் மையான புதல்வர்களை பரமன் கிருபையால் பெறுவாரென்று சோதிடம் தெரிந்த மேதாவிகள் கூறுவர் எ-று.

(வி-ரை) புத்திர ஸ்தானாதி நின்றராசி முதல் லக்கினம்வரையில் எண்ணிய தொகைப்படி மைந்தர்களைப் பெற்றாலும்,

*ஒற்றித்த விராசி யைந்தி லொளிமதி செவ்வாய்-பொன்னோன்*
*சுற்றியே பார்ப்பா ராகிற் சொல்லிய புத்திர நாசம்.*

என்றபடி 5-ஆம் ராசியான புத்திரஸ்தானத்தில் பிரகாசத்தையுடைய சந் திரனும் குருவும் அங்காரகன் இவர்கள் சேர்ந்தாலும் பார்த்தாலும் புத்திர நாசமுண்டு.

*வெற்றியைத் துடையோன் றன்னை வெள்ளிவெண் மதியும் கூடிற்*
*றெற்றியே பார்க்கு மேனும் செப்புவார் வெகுபுத்தி ரானே.*

என்றபடி 5-ஆம் ராசியதிபதியை சுக்கிரன் சந்திரன் இவர்கள் கூடினாலும் பார்த்தாலும் வெகு புத்திரருண்டு என சாதக சிந்தாமணியிலும் கூறியதால் மேற்சொல்லிய செய்யுளின்படி பிறந்தாலும், மரிக்கும் மரிக்காதென ஆராய்ந்துகூறுதல்வேண்டும். மேற்சொன்ன புத்திரஸ்தானத்தை சந்திரன் குரு அங்காரகன் சேர்ந்தாலும் பார்த்தாலும் புத்திரநாசமாதலால் 5-ஆம் ராசிக்குரிய வாரமெதுவோ அவ்வாரத்தில் நவக்கிரக அசுடிரங்களை ஜாதக னும் தன் மனைவியும் உபாசனை செய்ய உத்தமம். (598)

**உரைசெறியலியோகங்க ளோண்மதிக்கேழில்வெய்யோன்**
**பரவியேதானின்றலும் பயில்சனிக்கேழிற்புத்தி**
**திறமுடனின்றபோதுந் தீததாமிரட்டைராசி**
**இரவிமேவிடச்செவ்வாய்பார்த் திடிலலியோகமூன்றும்.**

(இ-ள்) அலியோகங்களைச் சொல்லுவதாயின், பிரகாசத்தையுடைய சந்திரனுக்கு 7-ல் சூரியன் நின்றாலும், சனிக்கு 7-ல் புதன் நின்றாலும் கொடியதாகும். இரட்டை ராசியில் சூரியனிருக்க, குஜன் அவனைப்பார்க்க அவன் 3-அலியோகங்களை யுடையவனாவான் என்றும் சோதிட வல்லோர் கூறுவர் எ-று. (599)

மூன்றும்பின்னுதயராசி முதலொற்றையாயதற்குள்
நான்றயிந்துற்றபோது மிரட்டையொற்றையிலுமிந்து
தோன்றிடச்செவ்வாய்புந்தி பார்க்கினுஞ்சோமன்காரி
ஆன்றவங்கிசமும்லக்கின மாயிடினலியுமாமே.

(இ-ள்) ஜெனன ராசியான உடல் லக்கினமும், திருதிகை ஸ்தானம் என்கிற மூன்றும் ராசியும் ஒற்றை ராசியாகி, அதாவது மேடம் மிதனம்-சிங்கம்-துலாம்-தனுசு-கும்பம் இவைகளாகி அவ்விராசிகளிலொன்றில் யாவரும் புகழப்பெற்ற சந்திரனிருக்க, அல்லது மேல் எழுதிய ராசிகள் போக இரட்டை ராசியான ரிடபம்-கடகம்-கன்னி-விருச்சிகம்-மகரம்-மீனம் இவ்விராசிகளில் சந்திரனிருந்து அவனை குஜன் புதன் பார்க்க, மேற்படி சந்திரனும் சனியும் எந்தராசியதிபன் அங்கிசத்தில் இருந்தார்களோ அந்த ராசியே ஜெனன ராசியாகவுமிருக்கில் அவன் அலியோகத்தை யுடையவன் ஆகுவனென்று சொல்வர் எ-று. (600)

அலியட்டமாதியைந்தா மிடத்தினிலிருக்கவைந்தாம்
வலியவீட்டதிபனெட்டில் மருவவேசுபர்நோக்கின்றி
நலியபுத்திரருமில்லை நவிலைந்தாமதிபன்றானும்
மெலிவதாய்வியமாறெட்டில் மேவினுமில்லைமைந்தர்.

(இ-ள்) அஷ்டமாதியும் ஆயுள் ஸ்தானாதிபதியுமான ஜெனன ராசிக்கு எட்டாம் வீட்டதிபதி மேற்படி ஜெனனராசிக்கு பஞ்சமஸ்தானமாகிய ஐந்தாம் ராசியிலிருக்க, ஐந்தாம் ராசிநாதன் வலிவுள்ளவனாய் அவன் 8-ஆம் ராசியிலிருக்க, அவனை சுபகோட்களான சந்திரன்-புதன்-குரு-சுக்கிரன் இவர்கள் பாராது அசுபகோட்களால் பார்க்கப்பட்டால் அந்தஜாதகனுக்கு மகப்பேறில்லை எனவும், மேற்சொன்ன பஞ்சம ஸ்தானாதிபதியான 5-ஆம் ராசிநாதன் என்னும் புத்திர ஸ்தானாதிபதி கொடிய க்ஷேத்திரங்கள் என்னும் 6-8-12 என்னும் க்ஷேத்திரங்களில் இருக்கவும், அந்த ஜாதகனுக்கு மேற்சொல்லியபடியே மகப்பேறில்லை எனக் கூறுவார் எ-று.

(வி-ரை) அஷ்டமாதிபதி அலிக்கிரகமாகி புத்திர ஸ்தானத்திலும், புத்திர ஸ்தானாதிபதி 8-லும் இருந்து பாவகோட்களால் நோக்குற்றால் புத்திரர் அற்பமாயினும்,

எட்டிடனே மூன்றுசனி வீடாக குருபார்க்க விவர்கள் கேந்திர
மட்டவிழ் கோணத்துறினு மஞ்சுசுபமாகச் சுபருட னடைந்திருக்க
தொட்டதா னத்திரையுங் காரகனுஞ் சுபராசி சுபரைக்கூடி
நட்டமுற்று மறையாம லிருக்கில் வெகுபுத்ரரென நவிலலாமே.

என்றபடி லக்கினத்திற்கு 8-ஆம் வீடும், 3-ஆம் வீடும், சனி வீடாக இருந்து குரு பார்த்தாலும், சனி குரு இவ்விருவரும் கேந்திரம் திரிகோணம் இவ்விடங்களிலிருந்து 5 ஆம்வீடு சுபக்ஷேத்திரமாகவும், 5-ஆம் வீட்டோன் சுபனாகவும், அவன் நின்ற ராசியதிபதி சுபருடன் சேர்ந்து விரயம் மறைவிடம் இந்த க்ஷேத்திரங்களில் இருக்கில் அந்த ஜாதகனுக்கு வெகு புத்திரர்கள் உண்டென சாதகசிந்தாமணியில் சொல்லியபடியால் 5-ஆம் வீட்டோன் சுபனா, அசுபனா வென அறிந்து அவனிருக்கும் சுபா சுபத்தால் பலன் சொல்லுக. (601)

**மைந்தர்தானங்கள்காரி புந்திதன்மனையதாக**
**அந்தவீடதனைக்காரி குளிகனோடமரிற்பார்க்கில்**
**சுந்தரத்தத்தனுண்டாம் சுபர்பலமுடனேயைந்தில்**
**வந்திடவைந்தோனேக்க மற்றீடிற்றத்தாய்வாழ்வன்.**

(இ-ள்) புத்திர ஸ்தானமென்று சொல்லும் 5-ஆம் க்ஷேத்திரமானது மகரம் கும்பம் என்னும் சனிக்கு ஆக்ஷிவீடாகவாவது, மிதுனம் கன்னி என்னும் புதனுக்கு ஆக்ஷிவீடாகவாவதிருந்து அவ்வீட்டில் சனி இருக்க, அவனுடன் குளிகனும் சேர்ந்திருக்கினும் நோக்கினும் அந்தஜாதகன் மிக்க அழகுபொருந்திய மைந்தனைப் பெறுவான் என்றும் சொல்வர். மேற் சொல்லிய 5-ஆம் ராசியில் சுபகோட்கள் வலிபெற்றிருக்க, அவர்களை அவ் வீட்டோனை 5-ஆம் ராசியதிபதி நோக்கமில்லாதிருக்கின் தத்து புத்திரனாக வாழ்வானென்றும் கூறுவர் எ-று.

(வி-ரை) புத்திர ஸ்தானமென்னும் 5-ல் சனி ஆக்ஷிபெற்று அவனுடன் குளிகன் சேர்ந்தாலும் பார்த்தாலும் அழகான புத்திரர் உண்டென சொல்வாராயினும்,

> உதயத்துக் கைந்தின்மைந்த னோரெட்டிற் புமிகிற்க
> அதயத்திற் கேழில்ராஜ னைந்தவன் கனலிற்சேர
> மதியத்தி லரவம்சேர்ந்து மைந்தனுக் கேழேயாகில்
> விதியத்தின் மலடனென்று விளம்பினர் நூல்வல்லோரே.

என்றபடி ஜெனன லக்கினத்திற்கு 5-ல் சனி இருக்கவும், 8-ல் புதனும், புத்திர ஸ்தானத்திற்கு 7-ல் குருவும், 5-ஆம் வீட்டோன் சூரியனோடும் சேர்ந்து சனிக்கு 7-ல் இருந்தாலும் அவன் மலடனென்று சோதிடவல்லோர் கூறுவரென கேரளத்தில் சொல்லியபடியால் புத்திர ஸ்தானாதிபதியாக இருந்து ஆக்ஷிபெற்றாலொழிய புத்திர ஸ்தானாதிபதி வேறு கிரகமாக இருந்து அதில் சனிசேரின் புத்திர தோஷமெனறும், மலடனென்றும் சொல்வர். 5 ல் சனி இருந்தாலும், மற்றும் புத்திர ஸ்தானத்தை பார்க்கும் கிரகம், நோக்கும் கிரகம் இவைகளைக்கொண்டும பலன சொல்லவேண்டும். மலடென்னும் பெயரெடுகக கிரகமுள்ளவர்கள் சனிவாரத்தில் நவக்கிரக ஓமம்செய்து பிராமணர் முதலியவர்களுக்கு தானம் கொடுக்கின் புத்திர உற்பவம் உண்டென்று சோதிடத்தோர் சொல்வர். (602)

**வாழ்மீனலக்கினத்துக் கைந்தினில்மன்னனுச்சந்**
**தாழ்விலாதிருக்கிற்பெண்கள் தன்னையேபெறுவனைந்தோன்**
**நீள்குசனுருமாதி மூவரைநேயமில்லார்**
**சூழவேபார்க்கிற் சத்துருக்களாற்சுதர்க்குப்பீடை.**

(இ-ள்) ஜெனன லக்கினம் மீனமாக இருந்து அந்த மீனராசிக்கு ஐந்தாம் ராசியான கடகராசியில் ஜெனன ராசியதிபனாகிய குரு உச்சம் பெற்று நிற்க ஜெனித்தவனுக்கு சோதிடவல்லோர் கூறுவதாவது: அநேகமாய் பெண்களையே பெறுவானெனவும், புத்திர ஸ்தானாதிபதியையும் குஜனையும், ரோகாதிபதியையும், அவரவர்களுககுப் பகையாக இருக்கும் கிரகங்கள் நோக்குவரேல் அவன் மக்களுக்குப பீடையுண்டு என்பர் எ-று.

(வி-ரை) 'பெண்களையே பெறுவான்' என்பதை குரு கடகராசியில் உச்சம் பெற்றாராயினும், புதன் பலம்பெற்று 1-3 இவ்விடங்கள் சுபக்ஷேத் திரமாயும் மேற்படி க்ஷேத்திரத்தில் இருக்கில் 5-பெண்களைப் பெறுவான் என்றும்,

கன்னியில் புதனிருக்க கருதுலக் கினமீனாக
உன்னியர் மற்றுளோர்க ளுபயராசியி லிருக்க
பின்னிய மூன்றாண்பிள்ளை பிறக்குமென் றுரைத்தார்மேலோர்
மன்னிய கமலப்போதின் வளரிள மயிலினாளே.

என்றதால், ஜெனனலக்கினம் மீனமாகயிருந்து கன்னியென்னும் இராசியில் புதனிருக்க, மற்ற கிரகங்கள் உபயராசியிலிருக்க, 3 ஆண்பிள்ளைகளை பெறுவானென்று சாதக சிந்தாமணியில் சொல்லியபடியும், மிதுனலக்கின மாக யிருந்து, புதன் பாவர்களோடுகூட, சுபகிரகங்கள் பார்வைபெற, அவன் ஆண்பெண்ணாகிய இரட்டைப்பிள்ளையைப் பெறுவானென்றும் சொல்வர். (603)

வேறு

பீடிலைந்தா மதிபனுமைந்தினில்
நீடுபாவ ருடன்கூடிநின்றிடில்
நாடுநோக்குற நல்லகுழவியும்
வாடுந்தேவதை வஞ்சனையாலுமே.

(இ-ள்) புத்திர ஸ்தானாதிபதி எந்த கிரகமாக இருக்கினும் அவன் ஆக்ஷிபெற்று பாவகிரகங்களோடுகூடி இருந்தாலும் பார்த்தாலும் அந்த ஜாதகனுக்குப் பிறக்கும் குழந்தைகளானது தேவதைகளின் வஞ்சனையால் நசிந்துபோம் எ-று.

(வி-ரை) ஐந்தாம்வீட்டோன் ஆக்ஷிபெற்றும் தீயகிரகசேர்க்கையாலும் பார்வையாலும் புத்திரதோஷம சொல்லப்பட்டன. ஆதலால் பார்க்கும் கிரகம் எதுவோ அதற்குதக்கபடி பூஜைசெயயின் அத்தோஷம் நிவர்த்தி யாகும். புதன்மாத்திரம 5-ஆம் ராசியிலிருந்து மற்ற கிரகஙகளெல்லாம் தீயக்ஷேத்திரத்தில இருக்கவும், அவர்கள் பலனற்றிருந்தாலும் இரட்டைப் பிள்ளைப் பெறுவனென்று சாதகசிந்தாமணியில் சொல்லியுள்ளன. (604)

வேறு

வஞ்சனைநாலினிலன்பிலர் வந்திடவைந்தினின்மன்னும்
விஞ்சியகாரியோடங்குற வியமதிலன்பிலர்மிண்டியும்
தஞ்சமெனுஞ்சிறுமைநதனுந் தாய்கரந்தன்னிலிறந்திடும்
அஞ்சினவந்தனில்வந்துறு மையர்வெகுண்டிடவுங்கெடும்.

(இ-ள்) ஜெனன லக்கினத்திற்கு நான்காம் இராசியில் அவ்விராசிநாதனின் சத்துரு கோட்களிலிருந்து பஞ்சமஸ்தானத்தில் குருவும் சனியும் இருக்க, 12-ஆம் இடமென்னும் விரயஸ்தானத்தில் அவ்விராசியின் பகைக் கோட்கள் சேரவும், அந்த ஜாதகனுக்கு உதிக்கும் குழந்தைகள் அதன் தாய் கர்ப்பத்திலேயே க்ஷீணித்துப்போம்; இல்லையேல் குழந்தையின் தாய்க்கு தோஷம் உண்டாகும் எ-று.

(வி-ரை) குரு 6-ஆம்ராசியைப் பார்க்கவும், 5-ஆம்வீட்டோன் சனிக்கு 6-ஆம் க்ஷேத்திரத்திலும், 5-ஆம் வீட்டோனுக்கு இருபக்கத்திலும் சூரியன் குஜன் நிற்கில் அல்லது 5-7 இவ்விடங்களைப் பார்க்கில் அந்த ஜாதகனுக்கு உதிக்கும் குழந்தை உடனே மறித்துப்போம் எனவும் சோதிடத்தோர் கூறுவர். (605)

**கேடறுபுத்திரநாதனுங் கிளர்மதிசுக்கிரன்மூவருங்**
**கூடிடமடந்தையிராசியிற் கோதையரங்கிசைமீதினில்**
**நீடியிருந்திடுவோர்களை நேயமிலார்விழிநோக்குறில்**
**நாடியபெண்பிள்ளையேபெறும் நாவலர்கண்டறிவார்களே.**

(இ-ள்) துன்பங்களை நீக்கப்படாநின்ற புத்திர ஸ்தானாதிபதியும் பிரகாசத்தையுடைய சந்திரனும் சுக்கிரன் இம்மூவரும் ஒன்றுசேர்ந்து பெண்ராசிகளாகிய ரிடபம்-கடகம்-கன்னி-விருச்சிகம்-மகரம்-மீனம் இந்த ராசிகளிலிருக்க, அல்லது மேற்சொன்ன ராசியதிபர்கள் அங்கிசத்திலிருக்க அவர்களை தனக்குப் பகை கிரகங்கள் பார்க்க, அவன் ஸ்திரீகளையே பெறு வான் என சோதிடவல்லோர் கூறுவர் எ-று.

(வி-ரை) மேற்சொல்லிய கிரகங்கள் பெண்ராசியிலும் அங்கிசத்திலும் இருந்தாலும் பெண் பிறக்குமென்று சொல்லினர். அப்பெண்ராசி லக்கி னத்திற்கு எந்த ராசியாக இருந்தாலும் பொதுவாகச் சொன்னதாம்.

இருந்தவ னைந்திற் பெண்ணும் இடமவ னேணே யாகில்
பிறந்தவன் புருஷ னாகி பெருமதி யிடத்தோன் பெண்ணாய்
பொருந்தவர் கேந்திர கோணம பொன்னுக்கே யாகி னான்றால்
வருந்தவும் வேறே வேண்டாம் வந்திடு மாணும் பெண்ணும.

என்றபடி புத்திர ஸ்தானமென்னும் 5-ஆம் ராசி பெண்ராசியாக இருந்தா லும், அதில் சேர்நத கிரகம் ஆண் கிரகமாயின் ஆண் பிறக்குமென்றும், சந்திரனின்ற ராசி பெணராசியாய அவ்விராசிநாதன குருவுககு கேந்திரம திரிகோணம் இவ்விடங்களில் இருநதால ஆண் பெண் இவ்விரண்டில் உண்டாகுமெனறும சோளத்தில் சொல்லியபடியாம். (606)

**வார்சடையார்முடிமேலுறு மாமதிமேவுமனைக்குமே**
**ஏர்பெறுசென்மமனைக்குமே யெண்ணியோரைந்துதலத்தையும்**
**பாரினிலுத்தமரானவர் பார்வையுறிற்சிறுபாலராம்**
**காரிமுதற்கொடும்பாவரே காணிலில்லைச்சிறுபாலரே.**

(இ-ள்) சடாபாரத்தையுடைய முக்கண்ணன் தன் சிரசில் அணிந் திரானின்ற சநதிரன எந்தராசியில் இருந்தானோ அந்தராசிமுதல் ஜெனன ராசிவரையிலும் எண்ணிப்பார்க்கின எததனை கிரக மிருக்குமோ, சந்திரன் இருக்கும் ராசிமுதல் 5-ஆம் ராசிவரையில சுபகிரகஙகள் நோக்குவரேல் அந்த ஜாதகனுக்கு மகப்பேறுண்டெனவும், சனி முதலிய தீயகோட்கள் நோக்குவரேல மக்களில்லை எனவும் கூறுவாய் எ-று. (607)

**பாலர்பிறந்திறுமைந்திலே பாரொருகேதுபரிந்துறில்**
**பாலர்பிறந்திறுமைந்திலே பாம்கருநாகமமர்ந்துறில்**

**சீலசன்மாதியைந்தாமிடம் சேரவைந்தாதிதிடம்பெற**
**வாலிபந்தன்னினின்மைந்தரும் வந்துபிறந்துவளருவார்.**

(இ-ள்) *ஜெனனராசிக்கு 5-ஆம் ராசியான புத்திரஸ்தானத்தில் கருநாகமாகிய இராகுவிருக்கில் பாலர்கள் பிறந்து மரணமடைவார். மேற்படி 5-ஆம்ராசியில் கேதுவிருக்கினும் பாலர்கள் பிறந்து இறந்துபோம் என்பர். பரிசுத்தமாகிய ஜெனன ராசியதிபதி புத்திர ஸ்தானமாகிய 5-ஆம் ராசியிலும், 5-ஆம் ராசியதிபனுன புத்திர ஸ்தானுதிபதி ஆக்ஷி உச்சங்களால் வலிபெற்றும் இருப்பரேல் அந்த ஜாதகனுடைய வாலிப வயதில் மைந்தர்களுதிப்பார் என்றும் கூறுவர் எ-று.*

(வி-ரை) *5-ஆம் ராசியில் ராகு இருந்தாலும், அவனேடு லக்கினதிபதியும் 5-ஆம் வீட்டோன் வலிபெற்றுமிருக்க வாலிப வயதில் புத்திரனுண்டாகும் என்றனர். 5-ல் ராகு அல்லது கேது தனித்திருந்து 5-ஆம் வீட்டோனும் பலனற்று இருக்கில் புத்திரரில்லை என்றும், அவர்கள் நாக பிரதக்ஷணம் செய்யின் புத்திரர் உண்டெனவும் சோதிடத்தோர் கூறுவர். 5-ல் அவ்வீட்டோன் ஆக்ஷிபெற்று, ஜெனன ராசிக்குடையோன் சகிதம் பெற, அவன் மேன்மையான ராஜாக்களால் சேவை செய்பவனும், புத்திர விருத்தியும் தீர்க்க ஆயுளும் உள்ளவனென்று ஆராய்வது நலம்.* (608)

**வளருஞ்சன்மாதியுமேழுற மற்றுநாலாதியேழாதியும்**
**கிளரமகிழ்ந்தொருவீடுறக் கேடரவோரிரண்டாதியும்**
**தளர்வறவேசன்மமீதுறத் தான்வருமைந்தர்சமர்த்தராய்**
**ஒளிருமிரண்டிறையைந்தினி லுறமகவுண்டிறைபார்வையே.**

(இ-ள்) *மகுத்துவம் பொருந்திய ஜெனன ராசியதிபதி சப்தம ராசியான 7-ஆம் ராசியிலிருக்க, சுகாதிபதியும் சப்தமாதியும்சேர்ந்து ஏதேனும் ஒரு ராசியிலிருக்கவும், தனுதிபதியாகிய இரண்டாம் ராசியதிபதி ஜெனன ராசியிலிருக்க பிறந்த ஜாதகன் அதிக சமாத்துடைய மைந்தர்களைப் பெறுவன். இரண்டாமதிபதி புத்திர ஸ்தானமாகிய 5-ஆம் ராசியிலிருந்தாலும் கடவுள் கிருபையால் புத்திரருண்டு எ-று.*

(வி-ரை) *7-ல் சேர்ந்த கிரகம் சனியாகி குரு பார்க்காதிருக்க மூன்று வருஷம் கெர்ப்பமாக இருந்து புத்திரன் பிறப்பானென சாதக சிந்தாமணியில் 776-ஆம் செய்யுளில் கூறியபடியாம்.* (609)

**பாரினிலைந்தாமதிபதி பண்புடனின்றபுடத்தையுஞ்**
**சூரியதேவர்புடத்தையுந் தொகையொடுகூட்டியராசியில்**
**தார்புனையம்புயராசனுந் தகைமையுடன்செறிகாலமே**
**வீரியவாெருமைந்தனும் மேவுவனம்புவிமீதிலே.**

(இ-ள்) *ஒவ்வொருவருக்கும் புத்திரனுண்டாகும் கால விபரங்களைச் சொல்லவேண்டுவதாயின் 5-ஆம் ராசிநாதனாகிய புத்திர ஸ்தானுதிபதி நின்ற ஸ்புடத்தோடு சூரியனின்ற ஸ்புடத்தையும் கூட்டிய தொகையில் குரு வருங்காலத்தில் பலசாலியான மைந்தன் ஒருவன் பிறப்பான் என்றும் கூறுவர் எ-று.* (610)

**மீதிலேந்தாதிபுடத்தினி லிரவிமகன்றனைவாங்கியே**
**போதுறுராசியின்மன்னுறும் போதிறுமேசிறுபுத்திரன்**
**கோதறுமன்னன்புடத்தினிற் குளிகனைவாங்கியராசியில்**
**ஏதமில்சனிவருபோதிரா தேகமரித்திடும்பாலரே.**

(இ-ள்) புத்திர ஸ்தானாதிபதி என்னும் 5-ஆம் ராசியதிபதி நின்ற ஸ்புடத்தோடு சனிநின்றவகையும் வாங்கி நேர்ந்தராசியில் குரு வரும்போது அவனுக்கு உதித்த புத்திரருக்கு கெண்டமுண்டு. புத்திர காரகனாகிய குரு நின்ற ஸ்புடத்தில் குளிகனை வாங்கிகண்ட ராசியில் சனி வரும்போது மேலே சொல்லியபடி புத்திரகெண்டம் முதலிய தோஷம் உண்டு எ-று. ()

வேறு

**அறிந்திடும்பரிதி கேந்திரந்தன்னி லம்புலியிருந்திடப்பிதாவில்**
**அற்பமாம்புதல்வர் தரித்திடும்சசிதா னனுகியேபனபரத்திருக்கில்**
**செறிந்திடுந்தந்தை தனக்கிணைசுதனுந் திங்களாபோக்கிலியத்தில்**
**சேர்ந்திடிற்பிதாவி லதிகபுத்திரனுஞ் செங்கதிரோனுறும்பதிக்கே.**

(இ-ள்) சூரியன் எந்த ராசியில் இருந்தானோ அந்த ராசிக்கு 1-4-7-10 என்னும் கேந்திர ஸ்தானங்களில் இராவிற்கரசனாகிய சந்திரனிருக்க அந்த ஜாதகனின் பிதாவோடு எத்தனை சகோதரர்களோ அத்தொகையில் குறைந்த புத்திர உற்பவமுண்டு. மேற்சொன்ன சந்திரன் சூரியன் நின்ற ஸ்தானத்திற்கு (பனபரம்) என்னும் ஸ்தானங்களில் இருப்பாரேயானால் அவன் பிதா எத்தனைப் பிறவியைப் பெற்றானோ அத்தனை மக்கள் உண்டு எனவும், சூரியனின்ற ராசிக்கு ஆபோக்லிய ஸ்தானங்களில் சந்திரனிருக்க தன் பிதாவின் சகோதரர்களைவிட அதிகம் புத்திரர்களைப் பெறுவான்.

இதுவுமது (ஷ தொடர்)

**நிறைந்தருளோந்தே ழௌன்பதுவியத்தினில் வுறநிலவுறுமனைதான்**
**நீடுநட்பாட்சி யுச்சமாயிருக்க நிருபனுமதிதனைக்காண**
**உறைந்திடுந்தந்தைக்கதிகமாஞ்செல்வ முள்ளபுத்திரனெனச்சொல்லும்**
**உலவுமம்மதியைச் சுக்கிரன்காணி லுணர்வெகுபோகவானுமே.**

(இ-ள்) கதிரவனிருந்த ராசிக்கு 5-7-9-12 என்னும் ராசிகளில் சந்திரனிருக்க, அவன் நட்பு ஆக்ஷி உச்ச கேந்திரம்பெற, அவர்களை குரு நோக்க, தன் தந்தையைவிட அதிக தனமுள்ளவனாகுவன். மேற்சொன்ன 5 7 9-12 என்னும் இடங்களில் சேர்ந்த சந்திரனை புகராகிய சுக்கிரன் நோக்கமுற்று இருக்க அவன் திரண்ட யோகவானென்றும் கூறுவர் எ-று. (612)

வேறு

**போகமாயைந்தா மதிபன்லாபாதி பொருந்தியேமித்துருவாக**
**வாகுசேரைந்தா மதிபதியுச்சனுமாய் வளம்பெறுசுபனுமேயாயின்**
**மோகமாய்லாபத் தினிலிருக்க முறைதவிராதபுத்திரர்கள்**
**ஆகவேபலருண் டவருடன்கூடு மத்தனைபுதல்வருண்டாமே.**

(இ-ள்) புத்திர ஸ்தானாதிபதியாகிய 5-ஆம் இராசிக்குடையோனிருந்த ராசிக்கு லாபஸ்தானமான 11-ஆம் இராசியதிபதி தனக்கு உறவு கோட்களின் கேந்திரமாயும், 5-ஆம் இராசியதிபதி நற்கோளாய் லாபஸ்தான மேறி உச்சம்பெற, சத்தியவிதி தவறாத மக்கள் பலர் உண்டாவர். எத்தனை புதல்வர்கள் உண்டாவரெனில், உச்சம்பெற்ற 5-ஆம் வீட்டதிபதியோடு எத்தனை கிரகங்கள் இருந்தனவோ அத்தனைப் புதல்வர்கள் உண்டாவர்.

(வி-ரை) ஐந்தாம்வீட்டோன் லாபஸ்தானத்தில் உச்சம்பெறின் சத்ய விதிதவறாத புத்திரர்களைப் பெறுவாராயினும், ஜனன லக்கினம் மிதுனம்-கன்னி-தனுசு-மீனம் இவையாக லக்கினத்தைச் சுபகிரகங்களால்பார்த்தும் சூரியன்-சந்திரன்-குஜன்-புதன் இந்நால்வரும் கூடியிருக்கின் ஆணும் பெண்ணுமான இரட்டைப்பிறப்பாக பிறக்கும் என்றும் கூறுவர். ஜனன லக்கினத்திற்கு 4-9 இவ்விராசியில் தீயகிரகங்களிருக்க, 1-4 இவ்விராசியில் பாக்கியாதி என்னும் 9-ஆம் வீட்டோன் நீச்சம்பெற்று பலம் தாழ்ந்து பாவகிரகங்களுடன் கூடியும், 1-4-ஆம் ராசியதிபர்கள் சுபவர்க்கமின்றி இருக்க, இவன் மனைவியின்கெர்ப்பத்திலுதித்தபுத்திரனை அந்நியர் பார்த்து இவன் அந்நியனுக்குப் பிறந்தவனென்றும் உலகோர் கூறுவரென சாதக சிந்தாமணியின் 5-ஆம் பாவகத்தில் கூறியபடியாம். (613)

**ஆமெனுமைந்தாதிபனுதித்த னணுகிலோவெகுபிள்ளையுளதாம்**
**ஓமெனுமைந்தாமாதிபனும்பாம்பு மொக்கவேயெட்டினிற்கூடில்**
**தேமெனும்தத்துபுத்திரனுவன் றிருந்துமைந்தாதிபனுடனே**
**தோமெனும்பாம்புமிரவியுங்கூடிற் றொடர்மிருகங்கள்போலிருப்பன்.**

(இ-ள்) மகுத்துவம் பொருந்திய உடலாதி என்னும் ஜனன ராசிக்கு புத்திர ஸ்தானமெனப் பேசும் 5 ஆம் ராசியதிபதி ரவியோடுகூடியிருக்கில் அவன் அதிக புத்திரர்களை உடையவனுவான். புத்திர ஸ்தானாதிபதியான 5-ஆம் ராசிநாதனோடு ராகு கேதுக்களாகிய பாம்புகளில் ஒருவர் சேர்ந்து, அஷ்டம ஸ்தானமான 8-ஆம் ராசியிலிருக்க, அவனுக்கு சத்துபுத்திரன் தான் உண்டாவரென்றும், மேற்சொன்ன 5-ஆம் வீட்டதிபதியோடு ராகு கேதுக்களில் ஒருவரும் சூரியனும் இருக்கில் அவன் மிருகங்களைப்போல் இருப்பானென்றும் கூறுவர் எ-று.

(வி-ரை) 5-ஆம் ராசியதிபனோடு சூரியன் சேரின் அதிக புத்திரர்கள் உள்ளவனென்று கூறியவண்ணம்,

*அஞ்சிடான் சோமன்மந்திரி யவரிருந் திடத்தைப்பாபர்*
*மிஞ்சியே பாராராகில் மிகையஸ்த மானமில்லா*
*தொஞ்சிட முன்பின்பாவர் தோன்றியே யில்லாராகிற்*
*கொஞ்சிட வனேகம்புத்திரர் கொடும்பகை நீசமென்றேல்.*

என்றபடி, 5-ஆம் வீட்டதிபனும், அதற்கு ஐந்தாம் வீட்டதிபனும், குரு இம்மூவர்களும் எந்த ராசியிலிருந்தாலும், அவர்கள் நின்ற ராசியை பாவ கிரகங்களால் பார்க்கப்படாமலும், அஸ்தமயமின்றியும், அவர்கள் நின்ற ராசிக்கு முன்பின் ராசிகளில் பாவகோட்கள் இல்லாதிருக்குமாகில் அவனுக்கு கொஞ்சி விளையாடத்தக்க அநேகம் புத்திரருண்டு; நீச்சம்பெற்றிருக்கில் புத்திரரில்லை எனவும் கேரளத்தில்சொல்லியபடி ஆராய்ந்துகூறுக. ()

இருந்திடுமிதுனலக்கினமாக வினியகோலிடத்தினிற்குசனும் [கும்
பொருந்தியேயிருக்கினிலிவனிவன்முன்ஞேன் புகழ்பெருதந்தைமூவருக்
வருந்தியவிரோதம்விளைந்திடும்பொல்லா வஞ்சகராவர்மாநிலத்தில்
திருந்தியிப்படியல்லாமலேயிருக்கிற் றினமுறவாகிவாழ்ந்திருப்பார்.

(இ-ள்) *ஜெனன லக்கினம் புதன் வீடான மிதுனராசியாக, அதற்கு ஐந்தாம் ராசியான துலாராசியில் குஜனிருக்க, அந்த ஜாதகனுக்கும் அவனுக்கு முன்பிறந்த ஜேஷ்டனுக்கும், அவன் பிதாவுக்கும் வருத்தத்தைத் தரத்தக்க கொடுமையான விரோதங்களும், வஞ்சகங்கள் உள்ளவராயும் இருப்பார். மேற்சொன்னபடி 5-ல் குஜன் இல்லாதிருக்கில் எந்நாளும் பகையின்றி வாழ்வார்கள் எ-று.*

(வி-ரை) 5-ல் குஜன் *நிற்கில் சஞ்சலமுள்ள மனத்தனும், முன்கோபியும், தனநாசமும், புத்திர தனமுள்ளவனும்,* வைராக்கிய முள்ளவனும் ஆவாரென சாதக சிந்தாமணியில் சொல்லியிருக்கினும், 5-ஆம் இராசிநாதன் இருக்கும் வன்மையும், 5-ஆம் இராசியைக் கண்ணுற்ற கிரக பலத்தையும் *அறிந்து மேற்சொல்லிய தோஷம் நீங்கும் நீங்காதெனக் கூறுக.* (615)

வேறு

இருந்தபத்தா மிறைவனைந்தாதிபன்
பொருந்துமித்துரு வாய்ப்புண்ணியனுமாய்ப்
பரிந்தவுத்தமர் வீட்டுறப்பாலனும்
வருந்திடான்றனந் தேடிவழங்குவான்.

(இ-ள்) *ஜெனனராசிக்கு 5-ம் இடத்தோனுகிய புத்திர ஸ்தானுதிபதியும், 10-ஆம் இடத்தோனை ராஜ்யாதிபதியும், ஜெனன ராசியதிபனுக்கு மித்துருவாயும், சுபக்கோளாயும், நற்க்ஷேத்திரங்களையும் பெற்றிருக்கின் அந்தஜாதகன் வருத்தமில்லாதவனும், அநேக பொருள்களைச் சம்பாதித்து தியாகம் கொடுப்பவனுமாவான் எ-று.* (616)

வேறு

வழங்கியவைந்தா மாதிகுசனுங்கூடி
மந்தனேக்குற வைந்தின்மருவிநிற்கில்
முழங்கிடவேதத்து புத்திரனுமாவன்
முயலைந்தாமாதி குசன்சனியம்சத்தில்
தழங்குகுசன்பார்க்க நிற்கிலன்னியர்கள்
தமரிடத்திற் போய்வளர்வன் சனியம்சத்தில்
அழுங்கிடவேயிரவிதா னேறியைந்தில்
அருங்குழவியிலை யென்றேயறையலாமே.

(இ-ள்) *பெருமையையுடைய ஜெனன ராசிக்கு 5-ஆம் க்ஷேத்திராதிபதியும் குஜனும் ஒன்றுகூடி புத்திரஸ்தானமாகிய 5-ஆம் இராசியிலேயே இருக்க, அவர்களைக் கொடியோர்களில் ஒருவரான சனி பார்க்கப் பிறந்தவன் தத்துபுத்திரனுவான். மேற்சொன்ன 5-ஆம் இராசியதிபதி சனி*

அல்லது குஜன் அம்சம் பெற்று, சுக்கிரனுடைய நோக்குற, அவன் அந்நியர் இடத்தில் போய் வளர்வான். சூரியன் சனி யம்சம்பெற்று 5-ஆம் இராசி யான புத்திர ஸ்தானத்திலேயே இருக்க, அவனுக்குப் புத்திரர்கள் இல்லை யென்றே சொல்லலாம் எ-று.

(வி-ரை) 5-ஆம் ராசியதிபதி குஜன் அல்லது சனி அம்சம்பெற்று சுக்கிரன் பார்க்க அந்நியரிடம் போய் வளர்வானுயினும்,

புத்திரகாரகனு மைந்துக் கதிபதி இவர்கள்
    போற்றுமங்கி சாதிபரும் பாபவர்க்க மடைய
வைத்தகுரு வீக்ஷண மிலாதிருக்கு மேனும்
    மதிசெவ்வாய் சத்துருதா னெத்திசையைக் கூடி
வித்தகமாய் நாலினிற்க சுபர்பாரா ரேனும்
    மிகுராகு ரவிகூடி நாலதனி லிருக்க
சுத்தமிலாப் பாவருடன் கூடவே பார்க்க
    சுபர்பாரா திருக்கின்விப சாரிப்புத்திர னென்பார்.

என்றபடி புத்திர காரகனும். புத்திர ஸ்தானுதிபதியும், அவர்கள் இருந்த அங்கிசத்தாரும் பாவவர்க்கமேறியும், குரு பலமற்று சந்திரன் அங்காரகன் இவர்கள் சத்துருவோடுகூடி நான்காம் இராசியிலிருந்து சுபர்களால் பார்க் காமலும் சூரியனும் இராகுவும் கூடி நான்காம் இராசியிலிருக்கவும் பார்க் கவுமானுல் அந்த ஜாதகனுக்கு உதிக்கும் குழந்தைகளைக்கண்டு இவை விபசாரி புத்திரர் எனக் கூறுவாரென சாதக சிந்தாமணியில் கூறியபடி ஆராய்ந்து சொல்லுதல் நலம். (617)

வேறு

**நல்லதோரைந்தா மதிபதியிரவி நற்சனியங்கிசமேறி**
**அல்லலார்சனிகண் டிடவுமைந்திடத்தி லமர்ந்திடிற்பரவிஷயத்தால்**
**வல்லமைபுதல்வ னுளனெனமொழிவர் மற்றுமைந்தாமிடந்தன்னில்**
**சொல்லியகுசனுங் காரியங்கிசத்திற் சூழ்ந்திடக்கருச்சுரோணிதமரம்.**

(இ-ள்) ஜெனனராசிக்கு 5 ம் ராசிநாதனை புத்திர ஸ்தானுதிபதியும் சூரியனும் கூடி கொடியவரில் ஒருவரெனப் பேசும் சனி அங்கிசம்பெற்று நிற்கினும், அல்லது தீய க்ஷேத்திரங்களிலிருந்து மேற்படி சனியால் நோக் குறினும், அந்த ஜாதகனுக்குப் பிறக்க புத்திரனைப்பற்றி இவை அந்நிய விஷயமெனக் கூறுவர். மேலேசொல்லியுள்ள 5-ஆம் ராசியில் குஜனிருக்க அவனோடு சனி சகிதம்பெற, மேற்சொன்ன குஜன் சனி அங்கிசமேற, அவனுக்கு உதிக்கும் புத்திரக்கருவு நாசமாய்ப்போம் என்றும் கூறுவர்.

(வி-ரை) 5-ஆம்ராசிக்குடையோனும் சூரியனும் சனி அங்கிசம்பெற்ற லும், சனியுடன் சேர்ந்தாலும் அவன் புத்திரன் விஷயம் வேறு என்றனர். சந்திரன் சனிவர்க்கமடைய, புதன் பலம்பெற, அவனுக்குண்டாகும் புத்தி ரனை இரண்டு பிதாக்கள் பெற்றவரெனவும், 7-5 இவ்விடங்களில் சந்திரன் இருந்து புதன் பார்க்கினும், அல்லது சந்திரனோடு இருக்கினும் அவன் புத்திரனுக்கு மேற்சொல்லிய தோஷமின்றி பிறப்பானென சாதக சிந்தா மணியில் கூறியபடி ஆராய்ந்து கூறுவது நலம். (618)

ஆனலக்கினத்திற் சந்திரனிருக்க வாறினிற் சுங்கனுற்றிடவும்
தானுறும்புதல்வ னேகனுமிரவி சந்திர னிருவருங்கூடி
ஊனமிலினிய கேந்திரத்திருக்கி னுரிமைசெய்யான் பிதாவினுக்கே
ஈனமின்மரண தகனகாலங்க ளிரண்டெனு முபயராசிக்கே.

(இ-ள்) ஜெனனராசியில் நற்க்ஷேத்திரங்களுக்கு அரசனாகிய சந்திரன் இருக்கவும், ரோகமென்னும் 6-ஆம் இராசியில் சுக்கிரனுமிருக்கப் பிறந்தவனுக்கு ஏகபுத்திரன் (அதாவது) ஒரே பிள்ளைதான் உண்டாகுமெனவும், சூரியன் சந்திரனும் ஒன்றுகூடி ஜெனனராசிக்கு கேந்திரங்களாகிய 1-4-7-10 இவ்விடங்களிலிருக்க அவனுக்கு உதிக்கும் புத்திரன் தன் தந்தைக்குச் செய்யவேண்டிய கடமைகளை செய்யானெனவும், மேற்சொல்லியகிரகங்கள் உபயராசிகளென்னும் மிதுனம்-கன்னி-தனுசு-மீனம் முதலிய ராசிகளில் இருக்க மரண தகனகாலம் இரண்டுநாளெனவும் கூறுவர். (619)

வேறு

நல்லவர்பா ராதிருக்க வைந்தாம்வீட்டில்
நாடுமைந்தா மதிபனுட னண்ணியேனும்
வல்லகரும் பாம்பிருக்க நாகசாப
வகையினுன் மைந்தரில்லை மறித்துநாகம்
ஒல்லையுடன் பிரதிஷ்டை செய்யின்மைந்தர்
உண்டாகு முயருங்கேந் திரகோணத்துள்
மல்லல்சுபக் கிரகத்தின் பார்வையற்றால்
மைந்தரில்லை செபவோம வகையிலுண்டாம்.

(இ-ள்) ஜெனனராசிக்கு ஐந்தாம் ராசியதிபனான புத்திர ஸ்தானாதிபதியை சுபகோட்களால் நோக்குறாமலும், மேற்சொன்ன 5-ஆம் ராசியதிபனோடு பாம்பாகிய ராகு சகிதம்பெற்றிருக்கவும், அந்த ஜாதகனுக்கு நாகசாபத்தால் மக்கட்பிறவி இல்லை எனவும், ஜெனிக்கினும் மறிக்குமெனவும், இதற்கு நாகப்பிரதிஷ்டைசெய்யின் மைந்தர்கள் உண்டெனவும், கேந்திரம் திரிகோணம் என்னும் ராசிகளை சுபகோட்கள் நோக்கின்றி இருக்கில் புத்திரப்பேறு இல்லை எனவும், நவக்கிரக சாந்திசெய்து ஜெபம் செய்யில் புத்திரர் உண்டாவரெனவும் கூறுவர் எ-று.

(வி-ரை) ஐந்தில் ராகு கேதுக்களில் ஒருவரிருந்து வேறு கிரகங்கள் சேராமலும் பார்க்காமலும், ஐந்தாம் ராசியதிபதி 6-8-12 இவ்விடங்களில் நீச்சம் பகை பெற்று குரு அஸ்தமயமாகி இருக்கில் அந்த ஜாதகனுக்கு எவ்வித பரிகாரம் செய்யினும் புத்திரர்கள் இல்லை எனவும், இவ்வாறு உதிப்பது பூர்வ கர்மமெனவும் சோதிடத்தோர் கூறுவர். (620)

உண்டாமைந் தாம்வீட்டோ ருமாதி
உடன்கூடி நல்லோர்கண் ணுறுமனிற்க
அண்டாத சத்துருசா பத்தினாலே
ஆனதொரு மகவில்லை யைந்தாம்வீட்டில்
மிண்டாக வைந்தாதி யிருக்கநல்லோர்
விழிபார்வை யறத்தீயோர் மிகவுநோக்கிக்

**கண்டார்க ளெனிற்றெய்வ சாபத்தாலே**
**காளையர்க ளில்லையோம கன்மஞ்செய்ய.**

(இ-ன்) ஜெனன ராசிக்கு ஐந்தாம் ராசிநாதனுன புத்திரஸ்தானுதிபதியும், ரோகஸ்தானுதிபதி என்னும் 6-ஆம் ராசிநாதனும் ஒன்றுகூடி சுப கோட்களால் நோக்குறாது அமர்ந்திருப்பாரேயானுல் அந்த ஜாதகனுக்குச் சத்துரு சாபத்தினுல் மக்கட்பிறவி இல்லை எனவும், மேற்சொன்ன 5-ஆம் ராசிநாதன் தன் சுயவீட்டில் ஆகூபெற்று சுபகோட்கள் பார்வையற்று அசுபர்களால் பார்க்கப்பட்டிருந்தால் அவனுக்குப் புத்திரப்பேறில்லை எனவும், ஓமம் எக்கியம் முதலியவைகளைச் செய்து தானம் செய்யின் புத்திரனுண்டு எனவும் கூறுவர் எ-று.

(வி-ரை) சத்துரு தோஷத்தால் புத்திரவிருத்தியில்லாதார் 6-ஆம்ராசி நாதன் எவனே அவனுக்குத் தக்கபடி 592-ம் செய்யுளுக்கு இடையில் சொல்லியபடி அந்தந்த தெய்வங்களுக்கு அபிஷேகிப்பதுடன் நவக்கிரக தியானமும் செய்யின் புத்திர உற்பவம் உண்டாகும் என்பதாம்.

மற்றும் பரிகார விவரங்கள் வருமாறு:—

## அசுவத்த பிரதக்ஷணம்

அரசமர பிரதக்ஷணம்

இதுவே நாகபிரதிஷ்டை என்று கூறப்படும்.

அஸ்வத்தஸ் ஸர்வ வ்ருக்ஷாணும் தேவர்ஷீணுஞ்ச நாரதஃ
கந்தர்வாணும் சித்ராதஸ் ஸிததாநாங் கபிலோ முநிஃ.

என்று பகவத்கீதை 10-ஆம் அத்தியாயம் 26 ம் சுலோகத்தில், ஸ்ரீ பகவான் விருக்ஷங்கள் அனைத்திலும் அசுவத்த(அரசு)விருட்சம் தானுக இருப்பதாய் அருள் செய்திருக்கின்றனர். திருமுட்டபுராணத்தில் ஸ்ரீமந் நாராயணமூர்த்தியின் வலது நேத்திரத்திலிருந்து இவ்விருட்சம் பிறந்ததெனவும், சகல விருக்ஷங்களுக்கும் முதன்மையாக இருக்கும்படி அவர் அனுக்கிரகித்து அபிஷேகம் செய்து அரசு எனப் பெயரிட்டனர் எனவும் கூறப்பட்டிருக்கின்றது. இவ்விருக்ஷம் நமது நாட்டில் எவ்விடங்களிலும் இருக்கின்றது. அகன்ற அடியிடமும், நீண்டு வளர்ந்த வெண்மையான செழுங்கிளைகளும் திரண்டுருண்டு ஓங்கி வளர்ந்த உருவமும், பச்சைநிறமாகத் தழைத்த இலையும், அந்த இலையின் அழகிய அமைப்பும், அந்த இலையினூடே மென் காற்று நுழைந்து சலசலவென்று ஒலிக்கும் ஒலியின் காட்சியும் மனோரம்யமாக இருக்கும். இது தன்னைக் காணபோர் கண்ணையும் மனதையும் ஒருங்கே கவறுந் தன்மையதாகும் "பூவாதே காய்க்கு மரமுமுள மக்களும், ஏவாதே நின்றுணர்வார் தாமுளரே" என்றபடி, அத்தி-ஆல்-பலா முதலியவைகளைப்போல் பூவாதே காய்க்கும் மரங்களுள் இதுவும் ஒன்றாகும். பூவாது காய்க்கும் மரம் என்பதை அறிவதற்கு ஓர் அடையாளமுண்டு. அது யாதெனில்: அவ்வினத்துமரங்கள் தளிர்விடும்போது அந்தத் தளிர் மூங்கில் முளைபோல் மூடிக்கொண்டிருக்கும் ஆடைபோன்ற ஒருவித இதழால் மூடப்பட்டிருக்கும். அவ்வாடைதளிர் முதிர முதிர உலர்ந்து உதிர்ந்து போகும். இதுவே அதனை அறிதற்கு ஏற்ற குறியாகும். வஸந்தருதுவாகிய சித்திரை வைகாசிமாதங்களில் இம்மரம் பழைய இலைகளை உதிர்த்துவிட்டு

புதியதாகத் தளிர் எடுக்கும். இதனிடத்தில் தாமிரசத்தும் மின்சாரமும் இருக்கின்றது. நோயினால் துன்பப்பட்டு சௌக்கியமடைந்துவருவோரும், சரீரமும் மனமும் மெலிவடைந்திருப்போரும், காலையும் மாலையும் சுத்தமான நீரில் மூழ்கி ஈரமான உடையுடன் அரசமரத்தைப் பிரதக்ஷணம் செய்துவருவதை நாம் பன்முறைக்கண்டிருக்கின்றோம். அவர்கள் அப்படிச் செய்து வருவதனால் நாளுக்குநாள் நலிவுகள் குறைந்து தெளிவடைந்து பூரணமான சௌக்கியத்தைப் பெறுவதையும் காண்கின்றோம்.

இதற்குக் காரணம் இவ்விருட்சத்தின் காற்றேயாம். மின்சாரமானது கூர்மையான முனைகளின் வழியாகவே நன்கு ஒழுகுந் தன்மையுடையதும், ஈரமான பொருள்களில்மட்டுமே நன்கு பரவுந் தன்மை யுடையதுமாகும். ஆதலால் அரசமரத்திலுள்ள மின்சாரமானது அரசிலையின் கூர்மையான நுனியின் வழியாக நனைந்த ஈரமான உடையுடன் வலம்வருகின்ற வியாதியஸ்தர்களின் சரீரத்தில் சிறிது சிறிதாகப் பரவி நாளுக்குநாள் வலிவைத் தந்து சௌக்கியப்படுத்துகின்றதென்று இரசாயன சாஸ்திரக்ஞர்கள் கூறுகிற்பர். ஆயினும் சரீரத்திலுள்ள வியாதி, விஷக்கடி, பேய்பிடி இவைகளை நீக்குந்தன்மை அரசமரத்தின் காற்றுக்கு அவ்வளவாக இல்லை. வேம்பின் காற்றுக்கே உண்டு. இதுபற்றியே மணிமேகலையில் வேம்புக்கு "அரவாய்க் கடிப்பகை" என்ற பெயர் கூறப்பட்டிருக்கின்றது. அரசமரத்தின் சுள்ளியின் புகையை மோப்பதனால் சரீரத்தின் நரம்பு தளர்ச்சிகள் நீங்கி வன்மையுண்டாகி முறுக்கேறும். மகரிஷிகளும் ஞானிகளும் நாடோறும் பலவகை சமித்துகளுடன் அரசு சமித்தையுஞ் சேர்த்து அக்கினி காரியங்களைச் செய்து சரீரவன்மையும் மனத்தெளிவும் தீர்க்காயுளும்பெற்று நெடுங்காலம் வாழ்ந்திருந்தனர்.

மூலதோ பிரம்ம ரூபாய மத்யதே விஷ்ணு ரூபிணி
அக்ரதோ ஷிவரூபாய விருக்ஷராஜாயதே நமஃ

அசுவத்த விருக்ஷத்தின் அடி-நடு-முடி என்னும் மூன்றிடத்திலும், பிரம்ம-விஷ்ணு-ருத்திரர் என்னும் திரிமூர்த்திகளும் இருந்து வாழ்கின்றனர் என்றும், ஆதலால் இவ்விருட்சத்தைப் பிரதக்ஷணம் செய்தவர்கள் அம்மூவரையும் பிரதக்ஷணம் செய்து சகல நற்பேறுகளையும் பெற்று வாழ்வர் என்றும், பிரம்மசரியவிரதத்தை பிழைபடாமல் காத்து நல்லொழுக்கத்திற் சிறந்து விளங்கிய ஒரு புருஷன் ஊழின்பயனால் உயிரிழப்பின் அவனே அரசமரமாகப் பிறக்கின்றனன் என்றும், இதுபற்றியே இம்மரத்திற்கு இடது பக்கத்தில் நாகப்பிரதிஷ்டை செய்துவைத்துக் கலியாணமும் செய்து வைத்தவர்களுக்கு மகப்பேறு உண்டாகுமென்றும், அரசு ஆணும், வேம்பு பெண்ணும் ஆகுமென்றும், அவ்விரண்டையும் ஒன்றாக நட்டு வளர்த்து கலியாணம் செய்து வழிபடுவோருக்கு அவசியம் புத்திரப்பேறு உண்டாகுமென்றும் சுருதி ஸ்மிருதி புராண இதிகாசங்களில் ஆன்றோர் திருவாய் மலர்ந்திருக்கின்றனர்.

மார்க்கஸீர்ஷே மாகமாஸி வைஸாகே கார்த்திகேததா
விவாஹங் காரயே தேவம் பிப்பலஸ்ய மஹாபலம்
கோடி விப்ர விவாஹே நயஃபலம் லபதே நரஃ
அஸ்வத்தஸ்ய விவாஹேன தத்பலம் லபதே புவி.

என்றபடி, மார்கழி-மாசி-வைகாசி-கார்த்திகை இந்த மாதங்களில் அரசு-வேம்பு ஆகிய விருக்ஷங்களுக்கு விவாகம்செய்ய உத்தமம் என்பதும், கோடி பிராமணர்களுக்கு விவாகம் செய்துவைத்தால் எவ்வளவு புண்ணிய முண்டாகுமோ அவ்வளவு புண்ணியமும் ஒரு அசுவத்தவிவாகத்தினுல் சித்திக்குமென்றும் மகரிஷிகள் கூறியிருக்கின்றனர். முதல் அஸ்வத்த பிரதிஷ்டையும், இரண்டாவது அஸ்வத்த உபநயனமும், மூன்ருவது அஸ்வத்த விவாகமும் முறையே சாஸ்திரவிதிப்படி செய்துவைத்தல் உத்தமம்.

மற்றும், அமாவைஸோ மவாரேண ரவிவாரேண ஸப்தமீ
சதுர்த்தீ பௌமவாரேண விஷுவத் ஸத்ரு ஸம்பவம்.

என்றபடி, அமாவாசையும் திங்கட்கிழமையும் சப்தமிதிதியும் ஞாயிற்றுக்கிழமையும், சதுர்த்தி திதியும் செவ்வாய்க்கிழமையும் கூடிவந்தால் அந்த தினம் விஷுவத் புண்ணியகாலத்தில் ஒப்பானதென்றும், மும்மூர்த்திகளின் சொரூபமாக விளங்கும் புண்ணியாதிதீரங்களிலுள்ள அரசுவிருக்ஷத்திற்கு சோடசோபசார பூசைகளும், அபிஷேக அலங்காரங்களுஞ் செய்து நமஸ்கரித்து 108-பிரதக்ஷணம்வந்து விரதம் இருத்தல்வேண்டும். இதற்கு அசுவத்த பிரதக்ஷண விரதம் என்று பெயர். இவ்விரதம் அனுஷ்டிப்போர் கொடிய வியாதிகள் நீங்கப்பெற்று சுகபோக பாக்கிய புத்திர லாபங்களையடைந்துவாழ்வார்கள். இவ்விருக்ஷத்தின் அடி பிராமணராகவும், கிளைகள் விஷ்ணுபகவானுகவும், இலைகள் ருக்வேதமாகவும் பழங்கள் யக்ஞமாகவும் எண்ணி பூசை செய்யவேண்டும் என்று சாஸ்திரங்களில் கூறப்பட்டு இருக்கின்றன.

## நாக பிரதிஷ்டை

கருங்கற்பலகையில் ஒன்று அல்லது ஐந்து முகமுடைய இரண்டு சர்ப்பங்கள் ஒன்ருேடொன்று இணைந்து சுற்றிக்கொண்டு இருப்பதுபோல் சிற்பிகளைக்கொண்டு சர்ப்ப உருவங்களைச் செய்வித்து, அக்கற்பலகையை சிறிதுகாலம் சுத்த நீர்நிலையில் விட்டுவைத்திருந்து எடுத்து பிரதிஷ்டை செய்ய விரும்பிய கருத்தாவின் ஜன்ம நாமநக்ஷத்திரங்கட்குத் தாரா-சந்திர பலம் சுத்தமுடையதான சுபமுகூர்த்தத்தில் 8-ஆமிடம் சுத்தமான சுப லக்கினத்தில் உத்தராயணத்தில் வேதியர்களைக்கொண்டு சாஸ்திரோக்தமாக பிரதிஷ்டை செய்தல்வேண்டும். அரசு-வேம்பு ஆகிய இவ்விரு விருக்ஷங்களும் ஒன்ருய் வளர்ந்தோங்கி இருக்குமிடத்தில் அதைச் சுற்றிலும் பீடம் அமைத்து, இவ்வித பிரதிஷ்டையைச் செய்துவைப்போர்க்கு தவருமல் புத்திரப்பேறு உண்டாகும். மற்றும் ஆண்மகவுமின்றி பெண்ணுகவே பெறுவோருக்கும் அது விலகி ஆண்மகவு உண்டாகும் என்று மகரிஷிகள் கூறியிருக்கின்றனர். இங்ஙனம் நாகப்பிரதிஷ்டை செய்ய வேண்டிய காரணத்தைச் சிறிது விளக்குவாம்.

மூலத் திருவிரல் மேலுக்கு முன்னின்ற
பாலித்த யோனிக்கு இரவிரல் கீருகின்ற
கோலித்த குண்டலி யுள்ளே செழுஞ்சுடர்
ஞாலத்து நாயிக்கு நால்விரற் கீழே. (திருமந்திரம்)

சகல ஜீவராசிகளினுடைய சரீரத்தினுள்ளேயிருக்கும் நூறு நாடிகளின் மத்தியில் பாம்பு வடிவமாக மண்டலமிட்டுக் கிடக்கும் தன்மையுதான

குண்டலிசக்தி ஒன்றுண்டு. அதுவே மற்றைய சக்திகளுக்கெல்லாம் தலைமையானதும் பரிசுத்தமுடையதும் ஆகும் நமக்கு சஞ்சலம் உண்டாவதற்கு ஏற்ற காரணமாக இருப்பது இந்த சக்தியேயாகும். மனதைச் சேர்ந்திருக்கும் இருதயநாடிகள் யாவும் இக்குண்டலி சக்தியிலேயே இணைக்கப்பட்டிருக்கின்றன. சகல யோகாப்பியாசங்களுக்கும் இக்குண்டலி சக்தியே பிராணுதாரமாக இருக்கின்றது. கசிய பிரஜாபதிக்குக் கத்துருவையிடத்து உதித்த புத்திரர்கள் பலர். அவர்களுள் மூத்தபுத்திரன் ஆதிசேடன். இவன் பூமியை நடுவில்நின்று தாங்கும் வரம் பெற்றவன். பிரளயகாலத்தில் உலகமும் மற்றைய புவனங்களும் நாசமெய்தியபின்னும் இவன் நாசமின்றி சேஷித்து-(மிச்சமாக) இருப்பவனுதலால் ஆதிசேஷன் என்னும் பெயர் பெற்றனன். இவனுடன் வாசுகி, அனந்தன், தக்கன், சங்கபாலன், குளிகன், பதுமன், மகாபதுமன், கார்க்கோடன் என்னும் எட்டு நாகர்களும் முறையே கிழக்கு முதலாக எட்டுத் திக்குகளிலும் பூமியைத் தாங்கி நிற்பர்.

இவர்கள் குலத்தைச் சேர்ந்தன மற்றைய சர்ப்பக்கூட்டங்களுமான படியால் அவற்றைத் துன்பப்படுத்துவதும் கொல்லுவதும் பாபங்களுக்கெல்லாம் தலைமைப்பெற்று சந்தான நாசத்திற்கு ஏதுவாயதுபோலும். சர்ப்பங்களுக்கு காது கிடையாது; கண்ணேயே செவியாக உடையனவாகையால் கட்செவி என்று பெயர் பெறுவதாயின. இதனல் 'கட்செவி எடுத்தாட்டலாம்' என்ருர் தாயுமானுர். ஒலியைக்கேட்டு வெகுஜாக்கிரதையுடன் தன்னைக் காப்பாற்றிக்கொள்ளும் வகையில் நோக்கமுடையதாகையினல் அரவம் என்று பெயர்பெற்றது. தனக்குத் தீங்கிழைத்தவனை அநேககாலம் வரையில் தனது ஞாபகத்தில் வைத்திருந்து அவனை எவ்விதத்திலாவது கடிக்கும் வஞ்சினமுடைய ஜந்துவாகும். அதனைத் தெரியாமல் மிதித்தாலும், அல்லது அடித்தாலும் கடித்துத் துன்பப்படுத்துமேயன்றி தானுக ஒருவரை கடிக்கவேண்டுமென்று கருதிச் செய்யுந் தன்மை யுடையதல்ல. அதன் ஞாபகசக்தியைப் பற்றிய கதைகள் பலவுண்டு. விரிவஞ்சி இங்கே கூறப்படவில்லை. ஆதலால் சர்ப்பங்களை அடித்துத்துன்பப்படுத்தக்கூடாது. இதனை அடித்துக் கொன்றவர்களுக்குப் பிறவிகள்தோறும் புத்திரப்பேறு இல்லாமல் போகுமென்பது பெரியார் கொள்கை, புத்திரப்பேறு இல்லாதவர்கள் எல்லோரும் பூர்வத்தில் நாகத்தைக்கொன்றவர்கள் என்று சொல்ல முடியாது. இதனை வேதத்தின் அங்கங்களில் நேத்திராங்கமாகிய சோதிட சாஸ்திரத்தின் உதவியினுல் நன்கு அறிந்துகொள்ள இயலும்.

முற்காலத்தில் தக்ஷன் இந்திரனிடம் செல்லுகையில் தன் குமாரனை அழைத்துக்கொண்டுபோய் அளகாபுரியின்-(குபேரன் பட்டினம்) அருகில் நிறுத்திவிட்டு தான் உட்சென்றனன். அப்போது அரம்பையின் மனைவாயிலுக்குக் குறுக்காக ஒரு பாம்பு-(தக்ஷன் குமாரன்) இருப்பதைக்கண்டு நளகூபரன் - (குபேரன் மகன்) தன் கைவாளால் வெட்டினுன். அதைக் கண்ட தக்ஷன் நளகூபனைப் பாம்பு கடித்து இறக்கும்படி சபித்துவிட்டுத் தன் புதல்வனை மிருதசஞ்சீவினியால் உயிர்ப்பித்துக் கொண்டு போனுன். அந்நளகூபரன் அம்சத்தில் பிறந்தவனே அரிச்சந்திரனுடைய அருந்தவச் செல்வனுகிய லோகிதாசன். ஆதலால் பூர்வ ஜன்ம சாபத்தினுல் பாம்பு கடித்திறந்தனன் என்ற புராணசரிதம் உலகறிந்த உண்மையாகும்.

தத்தோஷ பரிகாரார்த்தம் நாகபூஜாம் ஸமாரபேத்
ஸ்வக்ருஹ்ம யோக்த விதாநேந ப்ரதிஷ்டாங்கார யேத்ஸுதீ:
நாகமூர்த்திஞ் சுவர்ணேனக்ருத்வாம் பூஜாம் ஸமாசரேத்
கோ பூ தில ஹிரண்யாதி தத்யாத் வித்தாநுஸாரத:
ஏவங்க்ருதேது நாகேந்த்ர ப்ரஸாதாத் வர்த்ததே குலம்.

"என்னும் வசனப்படி நாகதோஷ நிவர்த்தியின்பொருட்டு அவசியம் நாகப் பிரதிஷ்டை செய்து திரிகரண சுத்தியாய் அவரவர்கள் கிருஹியோக்தத் தின்படி மந்திர பூர்வகமாக பூஜாதிகளை நடத்திப் பொன்னால் செய்த சர்ப் பத்தையும் பூசித்து, பசு-பூமி-எள்-பொன் இவைகளைத் தமது சக்தியானு சாரமாக உத்தம புருஷர்களாகிய மகான்களுக்குத் தானஞ் செய்தால் நாகேந்திரனாகிய ஆதிசேஷனுடைய அனுக்கிரகத்தால் சந்ததி விருத்தி யாய் குலவர்த்தனை யாகுமென்று அறியவேண்டியது. (621)

செய்யவொரு நாலிடத்திற் றீயோர்நிற்கச்
சேருமைந்தா மதிபனுடன் சனியுங்கூடப்
பையவே பன்னிரண்டா மிடத்திற்பாவர்
பற்றிநிற்கத் தாய்சாபம் பாலரில்லை
ஐயமற ஓமங்கள் சபங்கடான
மன்புடனே செய்வோர்க்கு மவர்தமக்குத்
துய்யதிரு மைந்தர்பல ருண்டாமென்று
சுருதிகலை யாகமங்கள் சொல்லுந்தானே.

(இ-ள்) ஜெனன லக்கினம் எந்த ராசியானாலும் அதற்கு நான்காம் ராசியில் தீயகோட்கள் சகிதம்பெற, 5-ஆம் ராசிநாதனென்னும் புத்திர ஸ்தானாதிபதியோடு சனி சகிதம்பெற்றிருக்க, விரயஸ்தானத்திலும் கொடி யோரிருக்கப் பிறந்தஜாதகனுக்குத் தனது அன்னையின் சாபத்தால் மக்கட் பேறு இல்லை எனவும், அப்படி இருப்பவர்கள் நவக்கிரக ஓமம் செய்து ஜெபம் முதலிய நற்கருமங்களைச் செய்யின் அநேக புத்திரர்கள் உண்டாகு மென்று நீதிசாஸ்திரங்கள் முறையிடும் எ-று.

(வி-ரை) நான்காம் இராசியில் தீயகிரகம் இருந்து 5-ஆம் வீட்டோன் சனியுடன்கூடி, 12-ஆம் ராசியில் குருவிருந்து மேற்சொல்லியவர்களைப் பார்க்கின் அத்தோஷம் பரிகாரமாம். இன்னும் ஆக்ஷி உச்சங்களாகி நோக்கில் அநேக புத்திரர்கள் உண்டு. (622)

வேறு

சொல்லுமிரண்டிற்பன்னிரண்டிற் சுபக்கோள்பாவர்மனையாயின்
வெல்லும்பாக்கியாதிபதி வியத்திலிருக்கவோரைந்தில்
நில்லும்பாவர்சன்மாதி நின்றேயத்தமனமாகி
ஒல்லிற்கூடிற்குலநாச முண்டாம்புத்திரர்தானுமில்லை.

(இ-ள்) மருத்துவமுடைய ஜெனன ராசிக்கு இரண்டாமிடமென்னும் தனஸ்தானமும், 12-ஆமிடமென்னும் விரயஸ்தானமும் கொடியவர்களின் க்ஷேத்திரங்களாக இருந்து, அவ்விராசியில் நற்கோள் சகிதமாக, பாக்யாதி

என்னும் 9-ஆம் வீட்டதிபதி விரயமாகி 12-ஆம் இராசியிலிருக்கவும், ஜெனன ராசியதிபதி அஸ்தமனம் பெற்றிருக்கவும், 5-ஆம் இராசியில் தீய கிரகமும் இருக்க அவனுக்குப் புத்திரவிருத்தியின்றி அவன் குலமே நாசமாய்ப் போகும் எ-று.

(வி-ரை) 2-12 தீயர்களின் க்ஷேத்திரமாயினும், அவ்விராசிக்குடையோர் ஆகியாகயிருந்து ஜெனன லக்கினதிபதி அஸ்தமனம் பெற்றாலும், குருவால்மாத்திரம் பார்க்கப்பட்டால் மேற்சொன்ன புத்திரதோஷம் இடையாதென்றும்,

ஜென்மத்திற் பாவிநிற்க சீதர னுடனேதீயர்
கன்மத்திற் பகையோராக கருத்துடனோ ரூரெட்டாக
தர்மத்தி லரவம்சேர்ந்து தரைமக னைந்தினின்றால்
துன்பத்தி லுதித்தகாளை தோன்றிய வன்றேநாசம்.

என கேரளத்தில் கூறியபடி லக்கினத்தில் பாவகிரகங்களும், சந்திரனோடு தீயகிரகங்களும், தர்மகர்மஸ்தானமென்னும் 10-ல் இராகுவேனும் அல்லது அதில் நின்ற கிரகம் பகையாயும், 5-ல் குஜனும் நின்றால் கொடிய வேதனையோடு குழந்தை பிறந்தவன்றே இறந்துபோகும் என்பர். (623)

தானுஞ் சன்ம வியமெட்டிற் சனிசேய் பாவ ருறநிற்க
மானே புதவ்வர் தாமில்லை வளஞ்சேர் புந்தி சுக்கிரனும்
ஆன பத்தி லோரெட்டி லமரு மைந்தி லெட்டாதி
ஊன பாவர் சன்மாதி யுற்றே பற்றிற் புதல்வரில்லை.

(இ-ள்) ஜெனன ராசியிலேனும், ஆயுள் ஸ்தானத்திலேனும், விரய ஸ்தானத்திலேனும், சனி குஜன் முதலிய பாவகிரகங்களிருக்க, அந்த ஜாதகனுக்கு மக்கட்பேறில்லை எனவும், சுக்கிரன் புதன் இவர்கள் ஜென்ம ராசிக்கு 10-8 இவ்விராசிகளிலும், 8-ஆம் ராசிக்குடையோன் 5-ஆம் ராசியிலும், ஜெனன ராசியதிபன் தீயருடனும் சேர்ந்திருக்கில் புத்திரர் இல்லை எ-று.

(வி-ரை) 8-ஆம் வீட்டோன் 5-ஆம் ராசியிலிருந்தும், ஜெனனராசிக்கு உடையோன் பாவர்களுடன் சேர்ந்தாலும் புத்திரரில்லை எனக் கூறினர். 'தீயகிரகம்' என்பது சனி-அங்காரகன்-இராகு-கேது இவர்களாகையால் 5-ம் வீட்டோன் இராகு கேதுக்களோடு இருக்க,

ஆச்சப்பா இன்னமொரு சேதிகேளு
அஞ்சுனோன் தீயனும் அரவைக்கூடி
கூச்சப்பா நாடியே மூன்றில்நிற்க
குமரனுட மனைவிஎண்ணங் கருத்தைக்கேளு
பாசசப்பா புருஷனிடம் சண்டையிட்டு
பதறிவிழுந் தோடிடுவாள் கொடியநீலி
எச்சப்பா வெகுபேர்க்கு இவள்மேல்மோகம்
இவளாலே கெட்டவர்க ளனேகம்பேரே.

என புலிப்பாணி முனிவர் கூறியபடி, 5-ஆம் வீட்டோன் தீயனும் இராகு கேதுக்களில் ஒருவருடன் கூடி, இலக்கினத்திற்கு 3-ல் இருக்க, அவன்

மனைவி எண்ணத்தையும் குணத்தையும் சொல்வேன் கேட்பாயாக. அவள் தன் புருஷனிடம்சண்டையிட்டு கொடியனிலித்தனத்தோடு ஓடிப்போவாள். அவள்மீது அநேகருக்கு மோகம் உண்டென்றும், அவளால் கெட்டவர்கள் அநேகரெனவும் கூறுவாய் என்றதாம். (624)

புதல்வர் காரகன் புடத்தில் பொருந்து மைந்தாதிபன் புடமாம்
இதனைக் கூட்டு மிராசிதனில் ஏதமற்ற குருவருங்கால்
மதலை தோன்றும் புடங்கூட்ட வருராசி யங்கிசை மட்டும்
சிதவின் மேடமுத லெண்ணச் சேய்தான் பாபர்காணச் சேதம்.

(இ-ள்) புத்திர காரகனென்னும் குரு நின்ற ஸ்புடத்தோடு 5-ஆம்ராசி நாதனென்னும் புத்திர ஸ்தானாதிபதியின் ஸ்புடத்தையும் கூட்டிக் காணும் இராசியில் குற்றமில்லாத குரு வரும்போது புத்திர உற்பத்தி உண்டாகும். மேலே கூட்டிக்கண்ட இராசியங்கிசையை மேடம்முதல் எண்ணிக்கண்ட இராசிகளை குஜன் முதலிய தீயகிரகங்கள் பார்க்க புத்திரசேதம் உண்டாகும் எ-று. (625)

வேறு

சேத மைந்திற் சிறந்த மதியுறில்
நீதி சேர்பிள்ளை யொன்றுறும் நேமியில்
போது மற்றும் பிழைப்பது தானில்லை
வேத முற்றவ ரோதின ரென்பதே.

(இ-ள்) ஜெனன லக்கினத்திற்கு 5-ஆம் இராசியில் பெருமையைப் படைத்த இரவிற்கு அரசனென்னும் சந்திரன் இருக்கில் நீதி வாய்ந்த பிள்ளை ஒன்றே உண்டாகுமெனவும், மற்றும் பிறக்கும் பிள்ளைகள் மறிக்குமெனவும், வேதமுதலிய சாஸ்திரங்களையறிந்த நிபுணர்கள் கூறுவார் எ-று.

(வி-ரை) இவை பொதுவாகச் சொன்னதேயாம். புத்திர ஸ்தானத்திற்கு 8-ஆம் வீட்டோன் பலம்பெற்று, 3-ஆம் ராசியை சுபகிரகங்கள் பார்த்துமிருந்தால் புத்திர விருத்தியுண்டு. 5-ஆம் இராசி ஆண் இராசியாகவிருந்து அதில் சந்திரன் சனி சேர்ந்து, 5-ஆம் இராசிக்குடையோன் ஏகனாய் அமர்ந்திருக்க, அந்த ஜாதகனுக்கு ஆண் ஒன்றும், பெண் ஒன்றும் நிலைத்திருக்குமெனக் கூறுவர் 5-ல் சந்திரனிருக்க தாய்க்கு இடையூறும், புத்திசாலியும், தயவுமுதலிய தானதருமங்களைச் செய்பவனும், தெளிவான மாந்திரீகம் கற்பவனும், முற்கோபியும், சோம்பல் உள்ளவனும், போகசுகத்தில் மிஞ்சியவனும், பிரகாசம்பொருந்திய சரீ. வானுமென்றும் கூறுவர். ()

ஒன்பதாம் வீட்டுக் குடையவன் குருவாய்
இன்பமாய்ச் சனி யெய்தியே நோக்கிட
அன்பு புந்தியோ டாதவ னங்குறில்
பின்பு பிள்ளையை யன்னியர் பேணுவார்.

(இ-ள்) பிதுரு ராசியதிபனான 9-ஆம் ராசிநாதன் குருவாக இருந்து, ஷை குரு சனியோடு சேர்ந்தாலும், நோக்கினாலும், அன்புடைய புதன் சூரியனுடன் சகிதமாய் ஏதேனுமொரு இராசியிலிருக்க, இவனுக்குப் பின்

இவன் மைந்தனை அந்நியர் கைக்கொள்வார் என்று சோதிடவல்லோர் கூறுவர் எ-று.

(வி-ரை) இச்செய்யுளின் கருத்து புத்திரரின் சுகத்தை இவனுக்குப் பிறகு வேற்றோர் அனுபவிப்பர் என்றதால் புத்திரன் பருவகாலத்தில் இந்த ஜாதகன் பிதா மறிப்பானு? அல்லது விருதாப்பிய திசையா? வாலிப திசையா? என ஆராய்ந்து சொல்லுவது நலம். எப்படியெனில்: 8-ஆம பாவகப்படி இவன் ஆயுள் நிர்ணயம் அறிந்து கூறுவது நலம். (627)

ஐந்தின் வீட்டிற் கதிபதி பாவனுய்
வந்தா றெட்டுப் பனிரண்டின் மன்னரோ
டுந்தி நாலுஞ் சுபர்திட்டி யுற்றிடில்
நந்தும் பனிரண் டாண்டினி ஞசமே.

(இ-ள்) ஐந்தாம் வீட்டோன் பாவக்கோளாயும், அவன் குருவுடன் சேர்ந்து 6-8-12 என்னும் இடங்களிலிருக்க, அவர்கள் நற்கோட்களின் திருஷ்டிபெற்றிருக்க, அவன் வயது 12-ல் அவன்புத்ரன் மறிப்பான் எ-று.

(வி-ரை) புத்திரபலன் சொல்லவேண்டுவது புத்திரஸ்தானம் என்னும் 5-ஆம் ராசியைக்கொண்டும், புத்திர காரகனென்னும் குருவைக்கொண்டும் பேசவேண்டும். ஆதலால் இவ்விருவரும் 6-8-12 இவ்விடங்களில் இருந்து விடில் புத்திரவிருத்தி இல்லை என்றே கூறினுலும், 5-ஆம் வீட்டைப் பார்க்கும் கிரகம் சுபகிரகமாகவும், ஜெனன லக்கினத்திற்கு 10-ஆம் கேந்திரம் சுபகிரகங்களுக்கு உரியதாய் சுபர் சேர்ந்தாலும் பார்த்தாலும் கருமத்திற்கு உரிய புத்திரன் நாள்சென்று ஜெனிக்குமெனவும் கூறுவர். (628)

வேறு

புத்திர னேழாமாதி பொருந்துங் கேந்திர கோணத்தில்
உற்றிடப் பலவாஞகி யோங்குமா றதிபன் ருனும்
சித்தமாய்க் கூடினுலுந் தெரிசினைப் பார்வை யாலும்
சுத்தமாய்ப் புதல்வ ரில்லை யெனமறை சொல்லுந் தானே.

(இ-ள்) புத்திர ஸ்தானுதிபதி என்னும் 5-ஆம் ராசிக்குடையோனும், 7-ஆம் ராசியதிபதி இவ்விருவரும், கேந்திரங்களாகிய 1-4-7-10-ல் இருந்து பலம்பெற, பெருமையையுடைய ஆரும் வீட்டோன் பார்த்தாலும் சேர்ந்தாலும் அந்த ஜாதகனுக்கு சுத்தமாய் புத்திர உற்பவமில்லை என்று சாஸ்திரங்கள் கூறும எ-று. (629)

ஐந்தாம் பாவகம் முற்றிற்று.

---

# ஆரும் பாவகம்

[ஆருமிடம் என்பது சத்துரு ரோக ஞாயாதி தைரியரெனச் சல்லியஸ்தானமென்று முன்பொதுப்பாவகத்தில் கூறப்பட்டன. ஆனதால் இங்கு சத்துருபலனைச் சொல்வாராயினர். சத்துரு என்பது சகோதரர் தாயாதி பகைவர் முதலியோரைக் குறித்த தாகையால், தனக்கு பலமா? எதிரிக்கு பலமா? என்னும் விஷயங்களையும், அப்படிச் சத்துருக்களுண்டாயினும் அவர் யாராக இருப்பார்? என்னும் விபரங்களை ஆருமிடத்தில் நின்ற கிரகத்தைக்கொண்டும், ஆரும் வீட்டோனுடன் கூடியவர்களைக் கொண்டும், ஆரும் இராசிநாதனைக்கொண்டும் கூறவேண்டும்.]

## சத்துரு பலன்

கூறு மாரு மிடத்திற் குறித்திடும் பலன்க ளாறில்
வீறுநல் லோர்கள் தாமும் மேவிடிற் றுயத் தார்கள்
பேறுடன் வழக்கிட் டுள்ள பெருந்தனம் பிரித்துத் தாவென்
றேறியம் பலத்தி னிற்பர் எதிரிக்கே வலிமை யென்னும்.

(இ-ள்) ஆரும் ராசியால் அறியவேண்டிய பலன் என்னவெனில் 6-ஆம் ராசியில சுபகோட்களிருக்கில் தன் தாயாதிகள் மூலமாய் தனக்கு ஏறபடும் பூஸ்திதியை பிரித்துக்கொடு என்று சண்டைஇடுவான். ஆனதால் இந்த ஜாதகன் எதிரிக்கே பலமெனவும், தான் அம்பலமாய் நிற்பான் எனவும் கூறினர் எ-று.

(வி-ரை) மேற்சொல்லிய ஆரும் ராசியில் சுபகிரகமிருந்து ஆரும் வீட்டில் குருவும் பாவகிரகங்களில் ஒருவரும் நிற்க, அவனுக்கு ஏற்படும் தோஷங்கள் யாவும் பரிகாரமாகி சத்துரு விருத்தி குறைந்து இருப்பான். ஆனாலும் எந்நாளும் வியாதி யுடையவனாவான். இதன் விபரம் பின்வரும் செயயுளால் காணலாம். (630)

என்னுமம் புவியு ளுள்ள யாவர்க்கும் வலிய னவன்
துன்னிய விகாத மேதான் சொல்லுவர் எவர்கண் டாலும்
மின்னிய ஞாதி யோரை மெலியவே பண்ணு விப்பன்
கன்னியே யாறி னல்லோர் காதலிற் றிருந்தக் காலே.

(இ-ள்) உலகிற் சிறந்த பெண்ணே! இன்னும் சொல்லுகிறேன் கேட்பாயாக: ஆரும்ராசியில் சுபகிரகங்களிருக்க அந்தஜாதகன் இப்பூமியிலுள்ள யாவருக்கும் பலமுள்ளவனாகி இருப்பன். அவனை யார் பார்க்கினும் விகாத வார்த்தையும் தீங்கையுமே செய்வார்; தன் குலத்தோரையும் நாசம் செய்விப்பவன் என்று கூறுவாய் எ-று.

(வி-ரை) மேலே சொல்லியுள்ள இரண்டு செய்யுளிலும், சுபகிரகங்கள் என பொதுவாய்ச் சொல்லப்பட்டன. ஆதலால் இங்கு அதன் விபரம் கூறு வோம். 6-ல் சந்திரனிருக்க கடன் வாங்கி மீளான். புதன் நிற்கில் தன் துர்ச்செய்கையால் சத்துருக்களுண்டு. குரு நிற்கில் தன் சொல்லால் அவ மானமும், பொசிப்பில் அவமானமும் உண்டு. சுக்கிரன் நிற்கில் சத்துருவை நாசம்செய்யினும் தன் பந்துஜென துரோகியாவன். கலவியால் அவமானம் அடைவன், மனைவியும் விரோதமாவாள் என்று சோதிட வல்லோர் கூறுவர். (631)

காத லாரு மிடத்திற் கடினராந் தீக்கோள் நிற்கில்
ஓதுபொல் லார்க்குப் பொல்லாங் குரைத்து வேலவனைப் போல
ஏதிலார் தங்கட் கெல்லா மிடியென வலிய னாகிப்
பூதலத் தெவரும் வந்து புகழ்ந்திடப் பொருந்தி வாழ்வன்.

(இ-ள்) ஜெனனராசிக்கு 6-ஆம்ராசி என்னும் சத்துரு-ரோக-ருணாதி. தைரிய ஸ்தானத்தில் தீயகோட்களிருக்கில் அந்த ஜாதகன் சண்முகக் கடவுளைப்போன்று (துஷ்டர்களை சிஷ்டைசெய்தும்) பொல்லாங்கு செய் வோருக்கு பொல்லாங்கே செய்தும், நன்மை செய்வோருக்கு நன்மையே செய்தும், தனக்கு பகைவராக இருப்பவர்க்கெல்லாம் தான் ஓர் சிங்கமென பயந்துபோகத் தக்கதாய் இப்பூமியிலுள்ளோர் யாவரும் தன்னை வந்து வணங்கத்தக்கதாய் மேன்மை பெற்றிருப்பன் எ-று. (632)

பொருந்துசிங் கத்தைக் கண்டு புடைமிடு மிபம்போல
இருந்தசத் துருக்க ளெல்லா மிரந்துகை கூப்பி நிற்பர்
திருந்திய குபேரன் போலச் செல்வமுண் டாகப் பாரில்
வருந்திடா திருப்ப னாறின் மருவுதீக் கோளி னாலே.

(இ-ள்) ஜெனன ராசிக்கு 6-ஆம் ராசியில் கொடிய கோட்களோ அல்லது ராகு-கேது இவர்களிருக்க, அவர்கள் தரும் பலனைச் சொல்லு கிறேன் கேட்பாயாக. சிங்கத்தைக் கண்டவுடன் பயந்து நடுக்கங்கொள்ளும் ஆட்டைப்போன்று, அவனுக்கு ஏற்படும் சத்துருக்களெல்லாம் பயந்து நடுநடுங்கி கைகூப்பி நிற்பர். மேலும் அந்த ஜாதகன் குபேர சம்பத்துள்ள வனாக இப்பூமியில் வருத்தமின்றி சுகித்திருப்பான் எ-று.

(வி-ரை) ஆறும் ராசியில் கொடிய கோட்கள் தனித்திருந்தாலன்றி வேறு சுபகிரகங்களுடன கூடி இருக்கில் அவ்வளவு மேன்மைப் பலனைத் தரமாட்டாது. (633)

கோளினிற் கரிய நாகங் கூறுமா றிடத்தி னிற்கில்
தாளினிற் றளைகள் பூண்டே தடைபடுங் காவ லில்லான்
நாளுமே பலரும் போற்ற நண்ணிடுங் கீர்த்தி மானாய்
தேள்முதல் விஷங்கள் சற்றும் தீண்டிடாத் திடவா னாமே.

(இ-ள்) கலசத்தைத் தாங்கின்ற ஜெனன ராசிமுதல் ஆறும் ராசி என்னும் சத்துருஸ்தானத்தில் தீக்கோளென்னும் பாம்பாகிய ராகுவிருக்க

அந்த ஜாதகனுக்கு தன்னை விலங்கு முதலிய கட்டு திட்டமும், காவலாளிகளும் இல்லாதவனாய் எந்நாளும் அநேகரால் போற்றக்கூடிய கீர்த்திப் பிரதாபம் வாய்ந்தவனாய், தேள் முதலிய விஷஜெந்துக்களால் தீண்டப்படாதவனும் தைரியசாலியும் ஆவான் எ-று.

(வி-ரை) 'விலங்கில்லாதவன்'என்பது கட்டுக்காவல் இல்லாதவனென்பதாகும். விலங்கணிவா னென்பதற்கு 2-ஆம் வீட்டோன் பாபியாய் லக்கினாதிபதியுடன் சேர்ந்து ஆரும் ராசியில் முன்சொன்னபடியே சுபகிரகங்களுடன்கூடி 8-ல் குருநிற்க, தனுசு-மீனம் இவ்விராசிகள் பாவர்களுற்று பகைபெற்ற குருநோக்கில் காலில் விலங்கு அணிவானென்றும் கூறுவர். ()

திடமுறு மாரு மாதி பாவனாய்க் கேந்தி ரத்தில்
வடிவுறு நல்லோர் காண மருவின் மந்திரியு மாகிப்
படிமிசை யெவரும் போற்றப் பயில்பிர தாப னாகிக்
கொடியவர் தமக்கு மின்டே கூறுவன் குணவா னாகும்.

(இ-ள்) தைரிய ஸ்தானமென்னும் 6-ஆம் ராசிநாதன் கொடிய கோட்களில் ஒருவனாகி, ஜெனன ராசிக்கு 1-4-7-10 என்னும் கேந்திரங்களில் இருந்து சுபகோட்களால் பார்க்கப்பட்டால் அந்த ஜாதகன் அமைச்சனாய் இப்பூமியிலுள்ள யாவரும் போற்றப்பட்ட பிரதாப முடையவனாகி, துன்மார்க்க குணமுள்ள கொடியவர்கள் இடத்திலும், இனிமையான சொற்களையே கூறத்தக்க குணமுள்ளவனாவான் எ-று.

(வி-ரை) 6-ஆம் ராசிக்குடையோன் கேந்திரம்பெற்று இருக்க, மேற்சொல்லிய பலன்கள் உண்டாயினும்,

ஆரப்பா இன்னமொரு சேதிகேளு
அப்பனே ஆரோனும் கேந்திரகோணம்
சீரப்பா ஜென்மனுக்கு ராஜதோஷம்
செப்புகிறேன் சோரபயம் சோரத்தால்துன்பம்
கூரப்பா குடும்பத்தில் களவுபோகும்
கூச்சலிட்டு வெளிவருவள் குமரிதானும்
வீரப்பா விஷபயமும் வெடியால்துன்பம்
வினையுமடா பலதுன்பம் இன்னங்கேளே.

என கூறியபடி ஆரும் வீட்டோன் கேந்திரம்பெற்றால் இராஜதோஷமும், திருடர் பயமும், சோரத்தால் கஷ்டமும், குடும்பத்தில் களவு போதலும், லக்ஷ்மி வாசம் இல்லாதவனும், வெடி முதலிய விஷங்களால் துன்பம் உண்டாகுமென்று யோகமுனிவர் கூறியிருப்பதால், மேற்சொல்லிய செய்யுளின்படி யோகமுண்டாயினும் கீழ்ச்சொல்லிய கஷ்டமும் உண்டெனக் கூறுவர். (685)

## ரோகபலன்

### வேறு

ஆருரும்வீட்டாதிபன் லக்கினத்தாதிபனும்
அணிகதிரோனுடன்கூடிற் சுரகண்டமாகும்

பேருயிந்துடன்கூடிற் சலகண்டம்குசன்பால்
பெருமையுடன்கூடிலா யுதவிரணகண்டம்
தூருகுஞ்சனிகூடில் நீசர்தன்னுற்கண்டம்
சோரரால்வருங்கண்டம் சுங்கன்கூடினே
வீராகுமடவாராற் கண்டங்கண்டங்கேள்
விடவரவைக்கூடிலந்த விஷப்பாம்பாலேதான்.

(இ-ள்) ஜெனன ராசியதிபதியோடு தைரிய ஸ்தானுதிபதி என்னும் ஆரும் வீட்டதிபன் சேர்ந்து அவர்களோடு சூரியனும் கூடியிருக்கில் அந்த ஜாதகனுக்கு ஜுரத்தால் கெண்டமும், சந்திரன் கூடில் நீரினுல் கெண்டமும், குஜன்சகிதம்பெறில் பற்பல கருவிகளாலும் துன்பத்தைத்தரும் சனி கூடில் நீச்சராலும் கள்ளராலும் கெண்டம் வருமெனவும், சுக்கிரன் கூடியிருக்கில் ஸ்திரியால் கெண்டமும், பாம்புகூடின் விஷத்தினுல் கெண்டமும் வருமெனவும் கூறுவர் எ-று.

(வி-ரை) 1-6-க்குடையவர்களோடு மற்றைய கிரகங்கள் கூடிய பலன் விபரம் சொல்லப்பட்டனவாயினும் அந்தகெண்டம் நீங்குமெனவும், நீங்காதெனவும் கூறவேண்டுவதாகில் 8-ஆம் பாவகப்படியும், அஷ்டகவர்க்ககணிதப்படியும் ஆயுள்வகை தெரிந்து, 2-4-7-10-க்கு உடையோர் சுபராயும், உச்சம் ஆக்ஷி என்னும் பலம்பெற்று பார்க்கின் அத்தோஷம் உண்டாகி நீங்கும் என்றும் ஆயுள் விபரம் சொல்லவேண்டும். சந்திரன் சுக்கிரன் 6-ல் நின்று அங்காரகன் சனி இவர்களில் ஒருவரால் பார்க்கப்பட்டு மேற்சொன்ன சந்திரனும் சுக்கிரனும் 6-7-ல் இராசிநாதருடன் கூடினுலும், 6-ஆம் ராசிநாதன் பார்த்தாலும், 7-ஆம் வீட்டோன் சனி அங்காரகன் இவர்கள் ராகுவர்க்கமடைந்தும், 7-ஆம் வீட்டோனைச் சூரியன் பார்க்கவும், அந்த ஜாதகனுக்கு பிரம்மியமேகம் உண்டாகுமென்று சாதகசிந்தாமணியில் சொல்லியபடி விபரமறிந்து உரைத்தல் நலம். (636)

அறந்திகழுஞ்சன்ம நாலாதிதாமும்
அட்டமத்தாதியைக் கூடினுலும்ஆறில்
உறைந்திடினுமுண்டியசீ ரணத்தாற்கண்டம்
உற்றிடும்லக்கின வாகனுதியோடு
செறிந்துசனியுறிற்விஷபட் சணத்தாற்கண்டம்
செப்பியநாலாதியுடன் சனியும்சேர்ந்து
பிறந்திடுலக்கினத்தாதி வீட்டில்நிற்கப்
பெறில்விஷபட்சணகண்டம் பேசுஞ்சாதகமே.

(இ-ள்) தருமத்தை விருத்தி செய்யாநின்ற ஜெனனராசிக்கு நான்காம் வீட்டோன் அஷ்டமாதி என்னும் 8-ஆம் வீட்டோனைக்கூடினுலும், ரோக ஸ்தானம் பெறினும், அந்த ஜாதகனுக்கு அஜீரணத்தால் கெண்டமுண்டு. ஜெனன ராசியதிபதி வாகனஸ்தானம் என்னும் நான்காம் ராசிநாதனேடு கூடி சனி சம்மந்தப்பட்டிருக்க விஷபக்ஷணம் என்னும் பாஷாண பொசிப்

பில் கெண்டம் உண்டு. நான்காம்வீட்டோன் சனியுடன்கூடி லக்கினத்தில் இருக்கினும் விஷபக்ஷண கெண்டமென்றே சோதிடவல்லோர் கூறுவர்.

(வி-ரை) நான்காம் வீட்டோன் அஷ்டமாதியுடன் கூடினாலும், 6-ஆம் ராசியில் இருக்கினும் அஜீர்ணகெண்டம் என்றனர். அந்த அஷ்டமஸ்தானத்தோன்,

காக்குமெட்டி விரவிசிற்க தனத்தில் சனியுறபாவர் காணுமேனு
ஏர்க்குதய மெட்டினுக்கு விரைவருடன் புதன்கூடி இருக்குமேனும்
கூர்க்குமாறினுக் கதிபனு ரதனிற் புகருடனே கூடுமேனும்
பார்க்குமா றுளன்மதி பொன்கன்னிரவி சனியுறினும் பயித்தியம்தான்.

எனவும் கூறியதால் 8-ல் சூரியனும், இரண்டில் சனிநின்று பாவர்கள்பார்த்தாலும், 1-8 இவ்வீட்டிற்கு உடையவரோடு புதன்கூடியிருந்தாலும், 6-ஆம் வீட்டோன் சுக்கிரனுடன் 6-ல் இருந்தாலும், குரு-சூரியன்-சனி இவர்களுடன்கூடியிருக்கினும் பயித்தியம் உடையவனுவானென சாதகசிந்தாமணியில் கூறியபடி கிரகபலமறிந்து கூறுதல்வேண்டும். (637)

சாதலக்கினத்தாதி வாகனுதி
தம்மிருவருடன்பாம்புந் தானுங்கூடில்
ஓதியபந்தனமரணம் நல்லோர்வீடாய்
உதித்தலக்கினத்தாதி யோரேழெய்த
நீதியுடனேழதிபன் லக்கினத்துள்
நிற்கிலவன்றுதையுட னின்றோன்றுயாம்
பேதையனுமரணம்பண் ணுவன்தானென்று
பேசினர்சாதகநிபுணப் பெருமையோரே.

(இ-ள்) பெருமையையுடைய ஜெனனராசியதிபதியும், வாகனுதிபதி என்னும் சுகாதிபதியோடு பாம்பு சகிதம் பெற்றிருக்கில் அந்தஜாதகனுக்கு பந்தனத்தால் மரணம் நேரிடும். மேற்சொல்லியவர்கள் நின்ற ராசி சுபர் வீடாகி லக்கினத்திற்கு சப்தமத்திலும், சப்தமத்தோன் ஜெனனராசியிலுமிருக்க, அந்த ஜாதகன் தகப்பனுடைய சகோதரமாவது அவர்கள் தாயாவது மரணமடைவாரென கணிதநூல் ஆராயும் நிபுணர்கள் கூறுவார் எ-று.

(வி-ரை) வாகனுதியுடன் பாம்புகூடில் அவனுக்கு தரித்திர யோகமெனவும், அவன் கொள்ளும் வாகனங்கள் நசிந்துபோமென்றும், அவன் அடிக்கடி விஷநோயால் வருந்துவானென்றும் சோதிடத்தோர் கூறுவர். ஆதலால் இன்னம் நான்காம் வீட்டைப் பார்த்த கிரகத்தைக்கொண்டும் அவை நீங்கும் நீங்காதெனவும் கூறுவது நலம். (638)

பெருமைசெறியாருகு மதிபனேடு
பெரும்பாவர்கூடிலக் கினத்திலெட்டில்
அருமையுடனுறிற்சித்தப் பிரமைகொண்டே
அங்கத்திலும்விரண மாகும்பின்னும்

உரிமையுள்ளவரவர்தா னங்களெட்டில்
உற்றிடிலிந்நோயென்றே யுரைக்கவேண்டும்
இருமைசெறிதந்தைதாய் பிராதாமைந்தர்
இவர்க்குமனைவியர்தமக்கு மெனச்சொல்வாரே.

(இ-ள்) பெருமையையுடைய ஆறும் வீட்டோன் கொடிய பாவகிரகங்களுடன்கூடி, ஜெனனலக்கினத்திற்கு 8-ல் அமர்ந்திருக்க, அந்த ஜாதகனுக்குச் சித்த பிரம்மை உண்டாகும். அதோடு தன் திரேகத்திலும் ரணம் உண்டாகும் எனவும், மேற்சொன்ன ஆறும்வீட்டோன் பாவக்கோளுடன் சகிதம் பெற்றிருக்க, அந்த ஜாதகனின் பிதாவுக்கு மேற்சொல்லிய ரோக முண்டாகும். நான்காம் வீட்டிற்கு ஆறும்வீட்டோன் கொடிய கோட்களுடன் சகிதம்பெற்றிருக்க, அவன் தாய்க்கு மேற்சொல்லிய ரோகமும், இவ்வாறே சகோதரம் களத்திரம் இவர்களுக்கும் பிரித்துக்கூறுக எ-று.

(வி-ரை) செப்புமூன்றின் மூன்றோனை செவ்வாய்ராகு சனிகூடி
யப்புக்குயத்தில் விரணமுண்டா மாறுமிடமே யாழ்கன்னி
யொப்பமாகித் தீக்கோளே யுறினுமாறெட் டுடையோரை
தப்பாகுஜனே பார்த்தாலும் சாற்றீர்குய்ய விரணமென்றே.

என்றதால் ஆறும்வீட்டோனை குஜன்-சனி-ராகு இம்மூவரும் கூடினும் அந்த ஜாதகனுக்குக் குய்யத்தில் ரணமுண்டு. 6-ஆம் ராசி மிதுனம்-கன்னி யாகி அதில் மேற்சொல்லிய தீக்கோட்களிருக்கில் குய்ய விரணமுண்டு என்று சாதக சிந்தாமணியின்படி ரோகவிபரம் தெரிந்து கூறுக. (639)

சொல்லியவாறுமிடத்திற் சுபக்கிரகமேவத்
துலங்கியவாறுதிபனும் கேந்திரத்திலிருக்க
நல்லவர்கண்டிடின்ஞாதிக் குபகாரஞ்செய்வன்
நாடுங்காலவனுக்கோர் நலிவுகளுமில்லை
அல்லலறுந்தீக்கோளே யாயினன்மையதாம்
அடைந்திடுவனெதிரிகளுக் கேவலியனுவன்
முல்லைமுகைதரளமணி வீமுறுந்துபோலும்
முறுவல்செறிகமலமலர் முகமுறுமின்னளே.

(இ-ள்) முல்லை அரும்புபோன்ற வெண்மையான அழகியதந்தங்களும், புன்சிரிப்பையுடைய கமலமன்ன முகதேஜஸையுடைய பெண்ணே! 6-ஆம் இடமென்னும் ரோகஸ்தானத்தில் சுபகிரகங்களிருந்து 6-ஆம் வீட்டோன் கேந்திரமாகிய 1-4-7-10 என்னும் இடங்களிலிருந்து நற்கோட்களால் பார்க்கப்பட்டால் அந்த ஜாதகன் தன் சுயஜெனங்களுக்கு உபகாரியாக இருந்து வாழ்வன். அவனுக்கு யாதொரு நோயும் அணுகாது. ஆறும்ராசியில் தீயகிரகங்கள் இருக்கில் அவன் துன்பமெல்லாம் ஒழிந்து நன்மையை அடைவோனும், தன்னை எதிர்த்தவர்களை ஜெயிக்க வல்லவனும் ஆவான் என்று சொல்வாய் எ-று.

(வி-ரை) சத்துருதானத் திரையுடன்செவ்வாய் சாற்றிய ராகுகூடிடினும்
மற்றவரெட்டிற் சேயிராகுறினும் மன்னுமொன் றேழெட்டிலிரவி

*யொத்துளச்சனிதா னிருந்திடச்செவ்வாய் இராகுவும்பார்த்திடவேதான்*
*இத்துடன்உடம்பில் வைசூரியுண்டாந் தேனினு மினியசொல்லமுதே.*

*என்றபடி தேனைப்பார்க்கினும் இனிய வசனங்களையுடைய பெண்ணே! 6-ஆம் வீட்டோனுடன அங்காரகன் ராகு கூடி இருந்தாலும், 8-ஆம் ராசியில் மற்ற கிரகங்கள் இருக்கினும், அல்லது அங்காரகன் ராகு கேது இவர்கள் இருக்கினும் அல்லது பார்க்கினும் அந்த ஜாதகன் தேகத்தில் வைசூரி சம்பவிக்கும் என சாதக சிந்தாமணியில் சொல்லியவண்ணம் சுபாசுபம் அறிந்து கூறுதல் வேண்டும். இன்னும் இதன் விபரம் 8-ஆம் பாவகத்திலும் ஆராய்ந்து கூறுதல் நலம்.* (640)

## அலி பலன்

### வேறு

**இரவியுஞ்சசியு மொருவருக்கொருவ ரிசைந்துபார்த்திடிலலியாகும்**
**பரவியசனியும் புதனுமேயந்தப் படிவிழி நோக்குறி லலியாம்**
**வரவிடுசெவ்வா யிரட்டையொற்றையினில் வந்துசூரியனுடன்மருவ**
**விரவியமதியி னங்கிசத்தேற வெள்ளிவீ டாகவுமலியாம்.**

(இ-ள்) *சந்திரனும் சூரியனும் சமம்பெற்று ஒருவர்க்கொருவர் பார்த்தாலும் அந்த ஜாதகன் அலியாம். பெருமையையுடைய புதனும் சனியும் ஒருவர்க்கொருவர் நோக்கினும் அலி என்பர். அங்காரகன் ஒற்றை ராசியிலாவது இரட்டை ராசியிலாவது சூரியனுடன் சேர்ந்து ரிஷபம் துலாம் இவைகளில் சம்மந்தப்பட்டு சந்திரன் அங்கிசம்பெற்றாலும் அலியேயாவர்.*

(வி-ரை) *'இரவி மதி புதன் வெள்ளி பாம்பு ஏழுக்கும், ஏழுமே பார்வை' என்ற ஜாதகசிந்தாமணியின்படி சூரிய சந்திரர்கட்கு ஏழுக்கு ஏழாமிடமே பார்வையன்றி ஆறுமிடத்தில் பார்வை கிடையாது. ஆனால் மற்ற கிரகங்கட்கும் ஏழுக்கு ஏழாமிடம் திருஷ்டி யுண்டெனினும் அவர்கட்கு விசேஷ திருஷ்டியுண்டு. சூரிய சந்திரர்கட்கோ அங்ஙனமில்லை.*

*ஆதலால்,*

> *இரவிபுதன் மதிவெள்ளி முழுநோக்கில் வலியர்*
> *இயல்செவ்வாய் முக்கால் நோக்கினில் வலியன்காரி*
> *அரைக்கால் நோக்கினில் வலியன் ராகுவுங்குருவும்*
> *அரைநோக்கில் வலியனுஞ் சேய்வில் சிங்கம்.*

*என்ற வசனப்படி சூரியன் சந்திரன் இருவரும் முழு பூரண 60-கலை நோக்கில் வலுவுடையோர் ஆகலின் மேட துலாரம்பங்களில் அல்லது மற்றெந்த ராசிகளிலேனும் சூரிய சந்திரர்களில் ஒருவரிருந்த இடத்துக்கும் மற்றொருவர் சரியாக 180-பாகையில் இருப்பின் முழுநோக்கான 60-கலை திருஷ்டி யுண்டாகுமேயன்றி இதற்குக் குறைந்த இடத்திலிருப்பின் 60-கலைக்குக் குறைந்ததிருஷ்டி தானே ஏற்படக்கூடும். முழு-(பூரண) திருஷ்டி ஏற்படாதன்றோ! சூரிய சந்திரர்களின் சமசப்தம தோஷங் காரணமாக அலியோக பிராப்த முண்டாதற்கு இவ்விருவர்களுக்கு பூரண திருஷ்டி துல்லியமுண்டாதல்வேண்டுமன்றோ! யாதுபற்றி எனின்? இவர்கள் முழு-(பூரண 60-கலை)நோக்கில் வலுவுடையோராகலின் என்க. சூரிய சந்திரர்கள் ஒருவரை*

யொருவர் 59-56-கலை அளவினதாகிய நோக்கினால் பார்க்கின்றனரேயன்றி பூரணமாகிய 60-கலை நோக்கினால் பார்க்கவில்லையே; ஆனால் அர்த்தோத்தரப் படி சொற்பம் குறைவான நோக்கை முழுநோக்கெனபதில் இழுக்கில்லை. ஆண் பெண் ராசி என்ற ஒரு கட்டுப்பாடும், சமதுல்யமும் இதற்கு இடங் கொடுக்கவில்லை. மேட-சிங்க ஆரம்பத்திலிருப்பினும் அரைதிருஷ்டி சாம்ய மாக ஏற்படுமன்றோ.

ரவி 0-1-0, மதி 5-29-59 என்று வைத்து நோக்கினும் முறையே 59-கலை 59-விகலையும், 59-கலை 56-விகலையுமான திருஷ்டியே புண்டாகும்.

மற்றும்,

| (1) கிர. | ரா. | பா. | கலை. | ராசி. | கிர. | ரா. | பா. | கலை. | ராசி. | கதி. |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ரவி | 0 | 1 | 0 | மேடம் | மதி | 3 | 29 | 0 | கடகம் | 29 |
| மதி | 3 | 29 | 0 | கடகம் | ரவி | 0 | 1 | 0 | மேடம் | 31 |
| அந்தரம் | 3 | 2 | 0 | | அந்தரம் | 3 | 28 | 0 | அந்தரம் | 2 |

இதில் அர்த்தோத்தரப்படி ½-க்கு மேற்பட்ட 31-ஐ முழு திருஷ்டி எனக் கூறுதலினால் உண்டாம் இழுக்குதான் என்னே?

| (2) கிர. | ரா. | பா. | கலை. | ராசி. | கிர. | ரா. | பா. | கலை. | ராசி. | கதி. |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ரவி | 0 | 1 | 0 | மேடம் | மதி | 4 | 1 | 0 | சிங்கம் | 30 |
| மதி | 4 | 1 | 0 | கடகம் | ரவி | 0 | 1 | 0 | மேடம் | 30 |
| அந்தரம் | 3 | 0 | 0 | | அந்தரம் | 4 | 0 | 0 | அந்தரம் | 0 |

சமதிருஷ்டி, அல்லது சமதுல்யதிருஷ்டி, அந்நியோன்னிய திருஷ்டி என்பது ஒருகிரகம் மற்றொரு கிரகத்தை எவ்வளவு கலை விகலை அளவுள்ள திருஷ்டியால் நோக்குகின்றதோ அப்படியே மற்றொரு கிரகமும், அந்தக் கிரகத்தை அவ்வளவு கலை விகலை அளவுள்ள திருஷ்டியால் நோக்குதல் வேண்டும். அஃது தராசு எடைபோல இரண்டும் சரியொத்து இருத்தல் வேண்டும் என்பது கருத்து. முழு திருஷ்டிக்கு கலை 60, முக்கால்திருஷ் டிக்குக் கலை-45, அரை திருஷ்டிக்கு கலை 30, கால் திருஷ்டிக்கு கலை-15, அரைக்காலுக்குக் கலை-7½ என்பது வெளிப்படை. மேலே உதகரித்த மேடாதி கடகாந்தங்களிலுள்ள ரவி சந்திரர்கள் முறையே ஆண் பெண் ராசி ஸ்திதியில் சமதுல்ய திருஷ்டியின்றி 3-கலை வித்தியாசத்துடன் ஒரு வரையொருவர் பார்க்கப்படுகின்றனர். இவர்கள் முழு 60-கலை நோக்கிலே தான் வலிவுடையவர்களாதலினால் 1-வது இலக்கமிட்டுக் காட்டப்பெற்ற உதாரணத்தில் சூரிய சந்திரர்கள் சற்றே குறைவான திருஷ்டியுடையவ ராதலின் அவியோகம் சம்பவிக்காது. நாம் எதற்காக இதனை இங்கு உதகரித்தோமெனின்? 60-கலை நோக்கில் சிறிது குறையினும் அதை முழு நோக்கெனக் கூறி, அவியோகத்தைக் கற்பிக்கும் அரை நோக்குக்குச் சற்றேறக்குறைவாகவுள்ள (2) கலை அந்தரநோக்கிலும் அவியோகம் என் சம்பவிக்காதென்பதற்கே யாகும்; இது ஒருபுறமிருக்கட்டும். மேடத்தின் ஆதி நடு கடைகளிலும், அங்ஙனமே கடகத்தின் ஆதி நடு கடைகளிலும் உள்ள கிரகங்கட்குச் சமதுல்யதிருஷ்டி ஒருபோதும் திண்ணமாக ஏற்படா

தென்பது பெறப்பட்டமையால் ஆண் பெண் ராசிகளில் இருக்கும் சூரிய சந்திரர்கட்கு அல்லது இதர கிரகஙகட்கு சமதுல்ய திருஷ்டி ஒருபோதும் ஏற்படாது என்பதாம் ஆண் பெண் ராசிகளில் ரவி 0-1-0 மதி 3-1-0-ல் இருப்பினுங்கூட முறையே 15-45-கலை அளவுள்ள திருஷ்டியால் ஒருவரையொருவர் (அந்யோந்ய) சமதுல்யமின்றி ஏகதரமாகவே நோக்குவர். ஆனால் இருவரும் (ரவி 0-1-0, மதி 4-1-0 ராசிகளான) மேட சிஙகாதியில் இருப்பின் ஒருவரையொருவர் சமதுல்யமாக 30-கலை அளவுள்ள திருஷ்டியினால் நோக்குவர் என்பதை நன்கு ஊகித்து அறிதல்வேண்டும். மேட கடகாதிகட்கு சமதுல்ய திருஷ்டி ஏற்படாமற்போனதையும், மீன கடகாதிகட்கு சமதுல்ய திருஷ்டி ஏற்படுகின்றதையும் விவேகிகள் நன்கு ஊகித்து உணர்தல்வேண்டும்.

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ரவி | 11 | 1 | 0 | மீனம் | மதி | 3 | 1 | 0 | கடகம் | 30 |
| மதி | 3 | 1 | 0 | கடகம் | ரவி | 11 | 1 | 0 | மீனம் | 30 |
| அந்தரம் | 8 | 0 | 0 | | அந்தரம் | 4 | 0 | 0 | அந்தரம் | 0 |

இங்ஙனம் பெண்ராசியிலுள்ள ஓர் கிரகஸ்புடத்திற்குச் சரியாக பெண்ராசியிலுள்ள மற்றொரு கிரகஸ்புடத்தைக் கொண்டால்தான் அவ்விரு கிரகங்கட்கும் சமதுல்ய திருஷ்டி ஏற்படும். இம்முறைக்கு மாறாக ஆண் பெண் ராசிகளில் இருப்பதாகக்கொள்ளின் ஏற்படாது.

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ரவி | 11 | 1 | 0 | மீனம் | மதி | 2 | 1 | 0 | மிதுனம் | 15 |
| மதி | 2 | 1 | 0 | மிதுனம் | ரவி | 11 | 1 | 0 | மீனம் | 45 |
| அந்தரம் | 9 | 0 | 0 | | அந்தரம் | 3 | 0 | 0 | அந்தரம் | 30 |

ஆகவே சமதுல்ய திருஷ்டி இல்லை என்பதுணர்க.

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ரவி | 10 | 1 | 0 | கும்பம் | மதி | 2 | 1 | 0 | மிதுனம் | 30 |
| மதி | 2 | 1 | 0 | மிதுனம் | ரவி | 10 | 1 | 0 | கும்பம் | 30 |
| அந்தரம் | 8 | 0 | 0 | | அந்தரம் | 4 | 0 | 0 | அந்தரம் | 0 |

இருவரும் ஆண்ராசியில் சமபாகத்திலிருக்க சமதுல்ய திருஷ்டி ஏற்படுவதையும், ஆண் பெண் ராசிகளில் சமபாகத்திலிருக்க அங்ஙனம் ஏற்படாமலிருப்பதையும் ஆழ்ந்து நோக்குதலே அறிஞா கடமையாகும். இங்கே உதாரணத்தில் ஆண் ஆண், பெண் பெண் ராசிகளிலிருந்த சூரிய சந்திரர்களது குறிப்பிட்ட ஸ்புட பாகைகளேயன்றி ஷை ராசிகளில் வேறு ஸ்புட பாகைகளில் இருப்பினுங்கூட திருஷ்டி கணிதம இங்ஙனமே ஏற்படும்.

உதாரணம்:—

| | | | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| ரவி | 10 | 15 | 0 | கும்பம் | மதி | 2 | 15 | 0 | மிதுனம் | 30 |
| மதி | 2 | 15 | 0 | மிதுனம் | ரவி | 10 | 15 | 0 | கும்பம் | 30 |
| அந்தரம் | 8 | 0 | 0 | | அந்தரம் | 4 | 0 | 0 | அந்தரம் | 0 |

இங்ஙனமின்றி சூரிய சந்திரர்களில் ஒருவர் ஆண்ராசியிலும், ஒருவர் பெண் ராசியிலுமிருக்க சமதுல்ய திருஷ்டி ஏற்படாதென்பது திண்ணம்.

இவ்வாறு சூரியன் சந்திரனை 59-கலை திருஷ்டியால் நோக்குகின்ற படியால், சந்திரனும் அங்ஙனமே சூரியனை 59-கலை திருஷ்டியில் நோக்குதல் வேண்டும். கணிதத்திலோ அங்ஙனமின்றி 3-கலை அளவு வித்தியாசமிருக்கின்றது. ஆதலால் இது சமதுல்ய திருஷ்டியாவது யாங்ஙனம்? இந்த திருஷ்டி கணிதத்தில் இரண்டு கிரகங்களும் சமதுல்ய ஸ்தானத்தில் இல்லாமல் சற்று விலகியிருப்பின் திருஷ்டிசாம்யம் இருவர்க்கும் சரியொத்திருக்கவே முடியாது. அந்நியோன்யம் என்ற பதப்பிரயோகமின்றி சூரியனைச் சந்திரன் பார்த்தால் என்றுவது, சந்திரனைச் சூரியன் பார்த்தால் என்றுவது தனித்துக் கூறியிருப்பின் சமதுல்ய திருஷ்டி விசாரம் அவசியமில்லை. திருஷ்டி விசாரமனது அந்நியோன்யம் ஏகதரம் என இருவகைப் பிரிவினை யுடையதா யிருக்கின்றது.

இதனை மஹாதேவ தைவக்ஞரால் இயற்றிய ஜாதக தத்துவம் 1-வது, சமிக்ஞா தத்துவம் 61-வது சூத்திரத்தினுல் நன்கறியலாம்.

அதாவது: "அந்யோந்ய த்ருஷ்டௌ ஏகதாத் ருஷ்டௌ
அந்யோந்ய ஸ்தாநஸ்திதௌ ஏகத்ரஸ்திதௌவா
ஸம்பந்தோ அவகந்தவ்யஃ." என்பதாகும்.

சூரியாதி கிரகங்கள் சமசப்தம ஸ்தானங்களிலிருந்து ஒருவரையொருவர் பார்ப்பது அந்நியோன்ய திருஷ்டி, சமசப்தம ஸ்தானங்களிலில்லாமல் இதர ஸ்தானங்களிலிருக்கும் கிரகங்கள் ஒருவரையொருவர் பார்ப்பதும், பார்க்கும் கிரகத்துக்கு பார்க்கப்படும் கிரகத்தினுடைய திருஷ்டி யில்லாதிருப்பதுமாக உண்டாவது ஏகதரதிருஷ்டி, பரஸ்பர க்ஷேத்திரங்களில் அதாவது ஒரு கிரகத்தினுடைய வீட்டில ஒருகிரகம் பரிவர்த்தனமாக மாறியிருப்பது அந்நியோன்ய ஸ்தான ஸ்திதி, ஒரு கிரகத்தினுடைய வீட்டில் ஒருகிரகமிருந்து அந்த கிரகத்தின் வீட்டில் இந்த கிரகமில்லாமற்போவது ஏகதரஸ்திதி. இதுமுதலாகவுள்ள கிரகங்களுடைய சம்பந்தம் யோசிக்க வேண்டியது.

இலக்கினுதி பன்னிரண்டு பாவகங்களில் ஏதேனும் ஒரு பாவகத்தின் மத்தியஸ்புடத்தில் 6-ராசியைக் கூட்டினுல் அதன் சப்தம பாவக ஸ்புடமாகும். அதாவது இலக்கினபாவகஸ்புட ராசி 3-23-3-ல் 6-ராசியைக்கூட்ட அதற்கு 7-ஆம் பாவகஸ்புடம் ராசி 9 23-3 ஆகும். ஒருபோதும் சப்தம பாவகஸ்புடம் இதற்குக் குறைந்தோ அல்லது அதிகப்பட்டோ இருக்கவே இருக்காது அப்படியே 8-ஆம்பாவகஸ்புடம் ராசி 10-23-15-ல் 6-ராசியைக் கூட்ட அதற்கு 7-ஆம் பாவகமாகிய 2-ஆம பாவகஸபுடமாகும். பிறவும் இங்ஙனமே என்பது வெளிப்படை. சப்தமதிருஷ்டி என்பதும் இங்ஙனமே யாகும். அதாவது ஏதேனும் ஒருகிரகமிருந்தராசி பாகை கலையுடன் 6-ராசியைக்கூட்ட வருவதே அந்தக்கிரகத்துக்குரிய 7-ஆமிடத்தின் ஸ்புடமாகும். அந்த ஸ்புடத்திலிருக்கும் கிரகமே சப்தமத்திலிருக்கும் கிரகமாகும்.

பாவாம்சதுல்ய கலுவர்த்தமானோ
பாவோத்பவம் பூர்ணபலம்விதத்தே
பாவோநகேசாப் யதிகேசகேடே
த்ரைராசிகேனாத்ரபலம்விசார்யம்,

எனவரும் ஜாதக பாரிஜாதத்தின்படி பாவக ஸ்புடத்திற்குச் சரியாயிருக்கும் கிரகம் அந்தப் பாவகத்தின் நன்மை அல்லது தீமைப் பலன்களைப் பூரணமாகத் தரும். அதற்கு அதிகமாகவோ அல்லது குறைவாகவோவுள்ள கிரகங்கள் திரையராசிக முறைப்படி அந்தப் பாவகபலத்தைத் தருவார்களென்று கூறப்பட்டிருக்கின்றது. இந்நியதி பாவக பலனுக்கு உரியதே யன்றி திருஷ்டி விசாரத்துக்கு உரியதல்ல. சூரியஸ்புடத்துடன் 6-ராசி கூட்ட வரும் ஸ்புடபாகத்தில் சந்திரனிருப்பின் பூரணதிருஷ்டி கலை-60 ஏற்படும். அதற்கு அதிகமாகவோ அல்லது குறைவாகவோ உள்ள ஸ்புடபாகத்திலிருக்கும் சந்திரன்மீது சூரியனது பூரண திருஷ்டி கலை 60-க்குக் குறைவாகவே வியாபித்திருக்கும். சரியாக 60-கலை திருஷ்டி வியாபகம் ஏற்பட வேண்டுமானால் சூரிய சந்திரர்கட்கு இடைவெளிதூரம் 6-ராசி இருந்தே தீரவேண்டும். அங்ஙனமின்றி குறைவான் இடத்திருப்பின் அதற்குத் தக்கபடி திருஷ்டியும் குறைவாக ஏற்படும். திரய ராசிக திருஷ்டியை சட்பலத்துக்கு உபயோகமெனக் கூட்டி இவ்வித கிரகபலத்தைக் காணவேண்டுமே தவிற பாவக பலத்திற்கு இதைத் தனியே உபயோகப் படுத்துதல் அத்துணைச் சிறப்பின்மை என்க.

மேலும் ஆசிரியர் வராகமிகிரரது சுலோகவியாக்யானமோ ஆண் பெண் ராசியைக் கூறுகின்றது. ஆண் பெண் ராசிகளில் சூரிய சந்திரர்களை அமைத்து நோக்கும்போது ஷை திரயராசி திருஷ்டி 60-கலைக்குக் குறைவாகத்தான் ஏற்படும், சரியாக ஒருபோதும் ஏற்படாதென்பது திண்ணம். சூரியஸ்புடம் ராசி 0-1-0, சந்திரஸ்புடம் 5 29-0, சூரியனில் சந்திரனைக் கழித்தமீதம் ராசி 5-2-0, இது 6-ராசிக்குமேல் 10-ராசிக்குள்ளிருப்பதனால் 10-ராசியில் கழித்த மீதம் 3-28-0, இதன் பாகை 118 + 60 = இதன் கலை-7080, இதற்கு ஜாதக சாகரம் முதல் தரங்கம் 107-ஆம் பக்கத்திலுள்ள 8-வது பதகப்படி 59-கலை அளவுள்ள திருஷ்டி ஏற்படுகின்றது. பூரண திருஷ்டி அதாவது 60-கலை திருஷ்டி ஏற்படவேண்டின் சூரியஸ்புடம்-11-29-0, சந்திரஸ்புடம்-5-29-0 ஆகவோ அல்லது சூரியஸ்புடம்-0-1-0, சந்திரஸ்புடம்-6 1 0 ஆகவோ இருந்தாலன்றி வேறுவகையில் ஏற்படாதுவோ இல்லை. பூரணதிருஷ்டி கலை 60-ல் கொஞ்சக்குறைவாகக்கொண்டால்தான் மேடாரம்ப கன்யாந்தங்களில் இருக்குங் கிரகங்கட்கு முறையே 59-54-கலை அளவுள்ள திருஷ்டி ஏற்படும். 60-கலை திருஷ்டி ஏற்படவேண்டின் ஒரு கிரகஸ்புடத்திறகு மற்றொரு கிரகஸ்புடம் சரியாக 6-ராசி அளவை தூரத்தில் அவசியம் இருத்தல்வேண்டும். கிரகசமாகமம் முதலிய அரிய கணிதங்களில் சமாகமிக்கும் இரண்டுகிரகங்களும் இராசியாதிகாலாந் தம்வரை சரியொத்து இருந்தாலன்றி சமாகமசம்பவம் நிகழாதென்பது சித்தாந்த சம்மதம். அப்படியே கிரகண விஷயத்திலும் என்க.

அமாவாசை அந்தத்தில் சூரிய சந்திரர்கள் ராசியாதி பாகாந்தம்வரை சரியொத்திருப்பார்கள். பூரணை அந்தத்தில் 6-ராசிகள்மாத்திரம் பேதித்து இருப்பார்கள. அதாவது பூரணை அந்தத்தில் 6-ராசி வித்தியாசமாயிருப்பினும் பாகாதிகளில் துல்யமாக (சரியாக)வே இருப்பார்கள். இப்படி இருக்குங் காலத்தில்தான் (ராகு-கேதுக்களின் ஸ்திதியினால்) கிரகணம் ஏற்படும். இதுவே கிரகண சம்பவம் கணிக்கப்படுவதின் இயல்பு பாகைகளில் சிறிது ஏறத்தாழ இருத்தல் கூடாது.

இதுபோல இங்கு திருஷ்டி சாம்யத்தில் மேடாதியிலிருந்த சூரியனை கன்யாந்தத்திலிருந்த சந்திரன் 60-கலை பிரமாணமுள்ள திருஷ்டியாலும், அங்ஙனமே ஷை இடத்திலிருந்த சந்திரனை ஷை இடத்திலிருந்த சூரியன் 60-கலை பரிமாணமுள்ள முழுநோக்காலும் நோக்கினாலன்றி, அதனைத் திருஷ்டி சாம்யமென்று யாவரே கூறுவர்? அங்ஙனங்கூறின் அது அறிஞர் கடமையாகுங்கொல். ஆகவே மேடாரம்பத்தில் 0 1-0 உள்ள சூரியனை கன்யாந்தத்தில் 5-29-0 உள்ள சந்திரன் 0-59 கலை திருஷ்டி செய்கின்றார்; ஆனால் இது பூரண திருஷ்டியல்ல. பூரண திருஷ்டி பெறவேண்டுமானால் சந்திரன் துலாம் ஆரம்பத்தில் 6-1-0 ஒருபாகையில் இருந்தாலன்றி எவ் வகையானும் பூரணதிருஷ்டியாகிய 60-கலை திருஷ்டி ஏற்படுவது முடியாத காரியம். சூரியஸ்புடம் 11-29 0, சந்திரஸ்புடம் 5-29-0. ஆனால் ரவி மீனத் தும், மதி கன்னியிலும் 60-கலை திருஷ்டியை உடையவர்களாவது காண்க.

சூரியன் ஆண்ராசியிலிருக்க சந்திரனும் 7-ல் ஆண்ராசியில் இருந்தால் தான் இவ்விருவர்களில் பூரண திருஷ்டி உண்டாகுமேயன்றி ஒருவர் ஆண் ராசியிலும், மற்றொருவர் பெண்ராசியிலும் இருப்பின் பூரண திருஷ்டி ஒரு போதும் உண்டாகமாட்டாது. ஒரு கிரகம் எந்த ராசியில் எத்தனை பாகை கலையில் இருக்கின்றதோ அத்துடன் 6-ராசியைக் கூட்டிக் கண்ட ராசி பாகையில் இருக்கும் கிரகமே அதற்கு சப்தமத்தில் இருக்கும் கிரகமாகும். அதற்கு வித்தியாசப்பட்டு அதிகமாகவோ குறைவாகவோ இருந்தால் அது சமதுல்ய சப்தமஸ்தானமாகாது. அங்ஙனமிருப்பின் அது நூநாதிக சப்தம ஸ்தானம் ஆகுமேயன்றி சமதுல்ய சப்தமஸ்தானம் ஆகமாட்டாது.

யேக்ரஹா: ப்ரபலாஸ் ஸர்வே ஸப்தமே நிஸ்பலாஸ்திதா:

எனவரும் ஜாதக ராஜீய வசனத்தின்படி ஒருவர்க்கொருவர் 7-ல் இருந்த கிரக தசைகள் இரண்டும் நிஷ்பலதசை எனக்கூறும் வசனப்படி பரிட்சித் துப்பார்க்க பல ஜாதகங்களில் அவ்விரு தசைகளும் இந்த வாக்கியப்படி நிஷ்பல தசையாகாமல் நற்பல தசைகளாகவே நிகழ்ந்திருப்பதை பலர் அறிந்திருக்கின்றனர். (641)

**ஆகியசன்மத் தினின்மதியிருக்க ஆதவன்புதன்சசிமூவர்**
**வாகுசேரிரட்டை ராசியிலிருக்க மற்றுமிம்மூவர்கள்தமையும்**
**மோகமாயங்கா ரகனுமேனோக்க முகிழ்முலைமாதரையிகழ்ந்தே**
**ஏகமாங்குறியற் றண்ணர்களாவ ரென்பதுதிண்ணமென்றுரைக்கும்.**

(இ-ள்) ஜெனன லக்கினத்தில் சனி யிருந்தாலும், புதன்-சூரியன்-சந்திரன் இம்மூவரும் இரட்டை ராசியிலிருந்து குஜன் நோக்க, மாயவலை வீசும் ஸ்தனங்களைப் பழிக்கும் அல்லது எதிர்த்தும் பெண்குறியின்றி அலி யாய்ப் பிறப்பாரெனத்திண்ணமாய்க் கூறுவாய் எ-று. (642)

ஆறும் பாவகம் முற்றிற்று.

---

# ஏழாம் பாவகம்



## களத்திர பலன்

### வேறு

சாதமுறுங்காலையினிற் சுக்கிரன்றன்னோடு
  தக்கபிரகஸ்பதிகூடில் விப்பிரர்கன்னியராம்
சோதிரவிகுசன்கூடில் க்ஷத்திரியர்மயிலாம்
  சோமனூர்சுதன்கூடில் வைசியர்குலத்தோகை
பூதலமேற்சனிகூடிற் சூத்திரர்கன்னிகையாம்
  பொறுமிருபாம்புடன்கூடில் புலையர்குலத்துதித்த
பேதையர்களுடன்கூடி யனுராகம்புரிந்து
  பிரியாமலிருப்பரெனப் பெறும்வரிசைபெறவே.

(இ-ள்) ஒவ்வொருவருக்கும் தான் பிறந்த ராசிகளைக்கொண்டே களத்திரபலன் சொல்லவேண்டுவதாகையால், ஜெனனகாலத்தில் களத்திர காரகனுகிய சுக்கிரனோடு குரு சகிதம் பெற்றிருக்கில் விப்பிரஸ்திரீயை யுடையவனுவான். மேற்சொன்ன சுக்கிரனோடு சூரியனும் குஜனும் கூடி யிருக்க க்ஷத்திரியப் பெண்ணை அடைவான். சந்திரனுடன் சனி சகிதம் பெற சூத்திரப்பெண்ணை அடைவான். இராகு கேதுக்களில் ஒருவர் கூடில் புலைச்சிகளுடன் சேர்ந்து விளையாடி ராக சங்கீதங்களைப் பாடிக்கொண்டு யிருப்பான் எ-று.

(வி-ரை) மேற்சொல்லிய ஜாதி விபரத்தைப் பொதுவாக வைத்துப் பின் களத்திர விஷயங்களை ஆராயவேண்டும் பின்வரும் செய்யுளால் களத்திர மில்லாதவனெனவும், உள்ளவனெனவும் தெரிந்து பிறகு களத்திரம் பிறந்த இடம் முதலியவைகளை அறிவது அவசியம்.

எப்படியெனில்:—

கருதுமிரவித் தலக்கூறிற் காமத்தோனை குருகூடின்
மருவும்தேவா லயமெண்பார் மன்னுபுகரோனு லக்கரையாம்
சருவுமிராகு சனிகுளிகன் றனக்குத்தோட்டம் வழிக்கரையின்
அருணன் றனக்கோ காடுசெடி யல்லோன் றனக்கே சுபகிரகம்.

என்பதால் ஒவ்வொருவருக்கும் தனக்கு ஏற்படும் களத்திரம் பிறந்த இடம் சொல்வதெனில், காமத்தோனுகிய சுக்கிரனோடு குருகூடியிருக்கில் அவள் தேவாலயத்தில் பிறந்தவளாவள். 7-ஆம் வீட்டோனுடன் சுக்கிரன் கூடி யிருக்கில் ஜலக்கரையிலும், இராகு-சனி குளிகன்கூடியிருக்கில் தோட்டம் வழிகளிலும், சூரியன் கூடில் காடு செடிகளிலும், சந்திரன் கூடியிருக்கில் சுபகிருகத்திலும் பிறந்தவளென்று சொல்வர்.

களத்திராதிபனைச் செவ்வாய் கலந்திடிற் றனித்தவீடு
விளக்கிடும் கூரையில்லா வீடுதா னிரதித்தானம்
அளவிலா புதனேயாகி லவன்பிறந் தகவீடென்பார்
வளப்பமாங் கணிதநூலோர் வகுத்துரை செய்தவாரே.

என்றபடி களத்திர ஸ்தானாதிபதியை குஜன் கூடியிருக்கில் விளக்கால் தீப்பற்றி எரிந்த கூரைவீடும் தனிவீடுமென்று சொல்வர். புதன் கூடியிருக்கில் அந்நிய வீட்டில் பிரந்தவளாவள் என சோதிடவல்லோர் கூறுவரென சாதக சிந்தாமணியில் சொல்லியபடி, களத்திரம் பிறந்த அடையாளம் தெரிவதோடு களத்திர ஸ்தானாதிபதி 1-7 முதலிய இடங்களிலும், திரிகோண ஸ்தானம்பெற்ற களத்திராதிபனோடு ராகு-கேது சேரில் தனக்கு அவமானத்தைத் தரும் களத்திரம் கிடைக்குமென்றும், களத்திர ஸ்தானத்திற்கு இரண்டாம் வீட்டோன் அங்காரகன் - இராகு இவர்களுடன் கூடி கொடிய க்ஷேத்திரங்களில் இருக்கில் துஷ்டத்தனமுடைய களத்திரமும், அப்படி இல்லையேல் இரண்டு தாரத்தையடைவதும், களத்திரஸ்தானாதிபதி சந்திரனாகி 6-8-12 இவ்விடங்களில் இருக்க, கடின நெஞ்சு உடையவளும், துன்மார்க்கியும், தினமும் சண்டைசெய்பவளும், களத்திர ஸ்தானாதிபதி புதனாகி பாவகிரகங்களுடன் கூடியும், ஜனனகாலத்தில் மூடம்பெற்று பாவக்ஷேத்திரமும், அம்கிசமுமாகில் அவன் தன் மனைவியால் கொல்லப்படுவானென்றும், தன் குலத்தையே நாசம்செய்யத்தக்க கொடிய தீவினை அடைவானெனவும், சுக்கிரன் நீச்சம்பெற்று பாவவர்க்க மடைந்திருக்க, அவன் மனைவி தாசித்தனம் செய்பவளும், களத்திர ஸ்தானாதிபதி அஸ்தமயமாயும், பாவகோட்களுடன் கூடி நீச்சம்பெற, சுபர் பார்வையற, அவன் மனைவி தனக்கு சூதுமார்க்கமாய் விஷத்தைக் கொடுத்துக் கொல்வாள் என்றும், 7-ல் குஜன்-சனி-ராகுசம்மந்தமாய் சூரியன் அம்கிசம்பெற அவன் மனைவிக்கும் தனக்கும் கஷ்டமுண்டாகி வேறுவார்களென்றும், இன்னம் பலவிதமாய் கிரக ஆராய்ச்சியாலும் ஆராய்ந்து கூறுதல் நலம். (643)

வரிசைபெறுகளத்திரத் தானாதிபனைக்கூடி
வாழ்கிரகமெத்தனையுண் டத்தனைமின்மணப்பன்
உரியகளத்திரத்துக்கா ரகனதிபன்சுபமாய்
உற்றிடினற்கோள்காண்கி லுத்தமமற்றிவர்தாம்
அரியிடத்தும்வியமுறினும் பாவர்களேகாண
அமர்ந்திடினுமத்திமமா மரவுசெவ்வாயிருவர்
பிரியமுடன்களத்திரத்துற் றிடின்மடவார்க்காணில்
பெருகுசுபக்கோணேக்கம் பெற்றிடினுத்தமங்கள்.

(இ-ள்) வரிசையைப்பெற்ற களத்திர ஸ்தானாதிபதியோடு எத்தனை கிரகங்கள் கூடி இருந்தனவோ அத்தனை விவாகம் அந்தஜாதகன் செய்துக் கொள்வன். களத்திரகாரகன் சுபனாகயிருந்து சுபகிரகங்களால் பார்க்கப் பட்டாலும் உத்தமமாகும். மேற்சொல்லிய கிரகம் சிங்கராசியிலேனும், விரயஸ்தானத்திலேனும் இருந்து பாவக்கிரகங்களால் பார்க்கபபட்டும், களத்ரஸ்தானத்தில் பாம்பு குஜனிருக்க களத்திர ஆனியுண்டு மேற்சொல்லியவர்களை சுபக்கிரகங்கள் பார்த்தால் உத்தமமென்று சொல்லுவார் எ-று.

(வி-ரை) 'களத்திர ஆனி' என்பதை 7-ல் குஜனும் இராகு கேதுவும் இருந்தால் நாசமென்று எண்ணுவது கூடாது. சுபகிரகங்கள் காணின் உத்தமமென்று சொல்லியபடி, களத்திர ஸ்தானாதிபதியும் களத்திர கார

75

கனும் சுபவர்க்கம்பெற்று, சுபர்களால் பார்க்கப்பட்டால் மேற்சொன்ன தோஷம் அவன் திசைப்பொசிப்பில் உண்டாகி நிவர்த்தியாகுமெனவும்,

ஏழிடம் சுங்க னுரோ டிருந்தவர் சுபரே யாகி
தாழ்வுட னிவரைப் பாபர் சற்றுமே பாரா ராகில்
வாழ்வுட னுயர்ந்து நின்று வருவதே களத்திர மென்று
நீள்புகழ் குடும்பத் தேவி யாகியே நிற்பள் மாதே.

என 7-ஆம் ராசியில் சுக்கிரனிருந்து அவர்களோடு சுபக்கிரகங்கள் சேர்ந்து பாவர்களால் பார்க்கப்படாமலிருந்தால் நன்மையையுடைய மேன்மையான வாழ்வைப்பெற்ற லக்ஷிமிவிலாசத்தோடு மேன்மையான களத்திரம் ஒன்று உண்டென கேரளத்தில்சொல்லியபடி கிரகவலிவறிந்து கூறுதல்வேண்டும். களத்திர ஸ்தானாதிபதியோடு எத்தனை கிரகங்கள் சேர்ந்தனவோ அத்தனை மணம் செய்வானென்றதால், களத்திரஸ்தானாதியுடன் தீயகிரகங்கள்சேர்ந்திருக்கில் அத்தனை காந்தர்வ விவாகமெனவும், சுபக்கிரகங்கள் சேர்ந்திருக்கினும், அவர்கள் ஆக்ஷி உச்சம்பெறில், எத்தனை கிரகங்கள் சேர்ந்தனவோ அத்தனை களத்திரம் என்று சொல்வதால் அவரவர்களுக்குத் தக்க வலி வறிந்து களத்திர விபரம் கூறுவது நலமாகும். (644)

வேறு

களத்திரலக்கினாதி கலந்துதம்மனையினிற்கில்
கிளர்த்தியாய்ப்பலரைக்கூடிக் கிடைப்பதொன்றேவிவாகம்
களத்திரகுடும்பத்தாதி கனபாவர்வெள்ளிகூடில்
வளத்தியாய்மூன்றொன்றாறில் மருவிடில்மனைவிக்கீனம்.

(இ-ள்) களத்திர ஸ்தானாதிபதியாகிய 7-ஆம் ராசிநாதன் எத்தனை கிரகங்களுடன் கூடியிருக்கினும் தன் சுயவீடாகிய ஏழாம் ராசியிலேயே ஆக்ஷி பெற்றிருப்பரேல் பல ஸ்திரீகளை சேர்வானாயினும் ஏகதாரமென்னும் ஒரே விவாகமுடையவனாவன். களத்திர ஸ்தானாதியாகிய சப்தமராசிநாதனும் குடும்பாதி என்னும் இரண்டாம் ராசிநாதனுங் கூடி அவர்களுடன் கொடிய கோட்களும் கூடி சுக்கிரனிருந்த ராசிக்கு 1-3-6 என்னும் ராசிகளிலிருப்பரேல் அவன் மனைவிக்கு ஈனம் என்பர் எ-று.

(வி-ரை) களத்திர ஸ்தானாதிபுடன் எத்தனை கோட்கள் கூடியிருக்கினும் ஆக்ஷி உச்சம் பெற்றிருக்கின் ஒரே விவாகமெனக் கூறினர். (645)

ஈனமிலக்கினாதி யேழாமாதிபனுங்கூடி
தானமாம்வியமாறெட்டிற் முனுறில்விவாகமில்லை
ஆனவேழிடங்கள்சுத்தி யாயேழாமாதிபனோடு
ஊனமில்பலர்கள்கூடி லொருத்தியென்றுரைவெள்ளிக்கே.

(இ-ள்) மகுத்துவம் பொருந்திய ஜெனனராசியதிபதியும், 7-ஆம் ராசியதிபனுங்கூடி, கொடிய க்ஷேத்திரங்களாகிய 6-8 12 இந்த ஸ்தானங்களில் ஏறிநிற்கில் அந்த ஜாதகனுக்கு விவாகமே இல்லையென்பர். 7-ஆம் இராசி பரிசுத்தமாகி சுக்கிரனுடன் பல சுபகிரகங்கள் கூடி இருக்கில் ஒரே தாரம் உடையவனென்றும் சொல்வாய் எ-று.

(வி-ரை) ஜென்மராசிநாதனும் 7-ஆம் வீட்டோனும் 6-8-12-ல் இருக்க 7-ஆம் ராசியில் சந்திரனிருக்க, பருவ பக்குவமுடையவளையும், சுக்கிரன் இருக்கில் தன் வயதுக்கிணையானவளையும், சனி நிற்கில் தன் வயதுக்கு மூத்தவளையும், சந்திரன்-குரு-சனி இம்மூவரும் கூடிநிற்கில் விருத்தாப்பிய ஸ்தரீயையும், சனி-இராகு-குளிகன் இம்மூவரும் கூடி இருக்கில் விதவை ஸ்திரீயையும் கூடி வாழ்வானெனவும், குரு மூடம்பெற்றும், 7-ல் குஜனும் 7-ஆம் வீட்டோன் இராகு-கேதுவோடும், இராகு கேதுக்கள்நின்ற ராசிக்கு நான்கில் சுக்கிரனும் சனியும் நிற்க, அவன் களத்திரம் மறிக்குமெனவும் சோதிடத்தோர் கூறுவர். (646)

வெள்ளிசேயேழினிற்கில் விதவைமாதரைமணப்பன்
ஒள்ளியமதிசேயாரு மதிப்ஞேடுற்றுநான்கில்
தெள்ளிதாய்நிற்கிலேனும் சென்மமொன்பாளுலாறில்
வள்ளலின்ஞல்வர்கூடின் மற்றுமோர்விஷயமுண்டாம்.

(இ-ள்) களத்திர ஸ்தானமென்னும் 7-ஆம் ராசியில் களத்திர காரகனென்னும் சுக்கிரனும் குஜனும் சேர்ந்திருக்க, அவன் விதவை ஸ்திரீகளை விவாகம் செய்துகொள்வன். பிரகாசியானின்ற சந்திரன் ஆறும் ராசிநாதனுடன் கூடி, நான்காமிராசியில் நின்று பலம்பெற, 1-4-9-6-க்குடையோர் இந்நால்வரும் கூடியிருந்த அவன் மனைவி விபசார புருஷன் ஒருவனையடைவாள் எ-று

(வி-ரை) இலக்கின மேழீராறி லீட்டிய பாவர்நிற்க
றுலக்கிய புத்திரவீனன் சுக்கிரன் சனிசேய்கூடிற்
கலக்குறு மாக்ஷியாக கருதுமே ழிடமாய்நிற்கின்
விலககுவோர் தாசியிக்க விபசார களத்திரமெய்யும்.

என்றபடி 1-7-12 இவ்விராசிகளில் பாவகிரகங்கள் நிற்கில் அவன் புத்திரஈனனுகும். 7-ஆம் ராசியில் சுக்கிரன்-சனி-அங்காரகன் இவர்களில் ஒருவர் ஆக்ஷிபெற, தாசிபோன்ற விபசாரஞ்செய்யத்தக்க களத்திரத்தையடைவான் என சாதக சிந்தாமணியில் சொலலியபடி ஆராய்ந்து சொல்வதோடு சுக்கிரனும குஜனும் 7-ல் இருந்தால் விதவை ஸ்திரீயை மணம் செய்வான் என்றதை 7-ஆம் ராசியைப் பார்த்த கிரகம் ஆக்ஷி உச்சமாயும் சுபனுகவும் இருக்க, அதற்குத் தக்கபடி பின்வருமாறு கூறுக. (647)

ஒரேழில்பாவர்நிற்கக் களத்திரரோகமுண்டு
சூரியனுடனேபாம்பு சூழ்ந்திரண்டிடத்தினிற்கில்
காரிக்கும்வெகுநோய்காட்டும் நவிலிரண்டாமிடத்தைக்
கூரியர்பார்ககனிற்கி னேய்கொளுங்குடும்பமேழை.

(இ-ள்) ஜெனன லக்கினத்திற்கு 7-ஆம்ராசியில் பாவகிரகங்களிருக்க, அவன் களததிரத்தால் அவனுககு வியாதியுண்டு. சூரியனேடு ராகு-கேதுக்களில் ஒருவரிருநது களத்திர ஸ்தானத்திற்கு இரண்டாம் இடம்பெற, அவன் களத்திரத்திற்கும் நோயுண்டு களத்திரஸ்தானத்திற்கு இரண்டாம் ராசியை தீயகிரகங்கள் பார்க்கப்பட்டால் நோய் முதலிய துன்பத்தைக் கொடுப்பதோடு அர்தக் குடும்பமும் ஏழ்மையாக இருக்கும் எ-று.

(வி-ரை) ஏழாம்ராசியில் பாவகிரகங்களிருக்க, களத்திரத்தால் வியாதியுண்டு என்றதை 7-ல் சந்திரனும் சனியும்கூடில் பொல்லாத களத்திரமும், 7-ல் அங்காரகன்நிற்கில் களத்திரத்தால் வியாதியும், 7-ல் குருநின்று நீச்சம் பெறில் துஷ்ட களத்திரமும், மேற்சொன்ன குரு 7-8 இவ்விடங்களில் இருக்கில் தன் குடும்பத்தில் நிலைத்து வாழ்க்கைச் செய்யாத களத்திரம் உடையவனென்றும் சாதக சிந்தாமணியில் சொல்லியபடி கிரகங்களுக்கு ஏற்றவாறு கூறுக. (648)

வேறு

ஏழ்வீட்டி னிற்கதிபன் சரத்தினிற்கில்
இருமனைவி திரமதனி லிருக்கநன்றே
தாழ்விலா வுபயத்தி லிருக்கின்மாதர்
சாவின்றிப் பலருளராந் தானத்தாதி
வாழிடநோக் கியகோளாற் பலன்கள்கூடும்
மற்றுமிலக் கினத்தாதி சுங்கன்வீட்டில்
சூழ்கினுஞ் சுங்கனைக்கூடச் சுங்கன்பார்க்கில்
தூயஸ்திரீ லோலனெனவே சொல்லலாமே.

(இ-ள்) களத்திர ஸ்தானாதிபதியாகிய 7-ஆம் ராசியதிபதி சரராசிகள் என்னும் மேஷம்-கடகம்-துலாம்-மகரம் என்னும் ராசிகளில் இருந்தால் இரண்டு மனைவிகளை உடையவனும், ஸ்திரராசிகள் என்னும் ரிடபம்-சிங்கம் விருச்சிகம்-கும்பம் என்னும் ராசிகளில் இருக்கில் உத்தமமெனவும், உபய ராசிகள் என்னும் மிதுனம்-கன்னி-தனுசு-மீனம் என்னும் ராசிகளில் நிற்கில் அந்த ஜாதகனுக்கு பல மனைவிகள உண்டாவர். ஆயினும் மரணம் அடையமாட்டார் எனவும், அவர்கள் யோகபலன் சொல்வதாகில் 7-ஆம் வீடடோன் நின்ற வலுவையும், மேற்படி ராசியை பார்த்த கிரகவலுவையும் அறிந்து கூறுவதாம். ஜெனனராசியதிபதி சுக்கிரனுக்கு ஆக்ஷி க்ஷேத்திரம் என்னும் ரிடபம்-துலாம் இவ்விராசிகளில் இருந்தாலும், அல்லது மேற்சொனன சுக்கிரனுடன சகிதமபெற்றாலும், அநதஜாதகன் நல்ல மேன்மையையுடைய ஸதிரீகளை சம்போகம்செய்யும் வல்லவனாவான் எ-று.

(வி-ரை) 7-ஆம் வீட்டுக்குடையோன் சரராசிகளிலோ ஸ்திரராசிகளிலோ உபயராசிகளிலோ இருநதாலும் அவை ஜெனனராசிக்கு எத்தனையாவது ராசி என ஆராய்ந்தபிறகே களத்திரவிபரம் சொல்லவேண்டும்.

எப்படியெனில்,

இலகு மேழுக் கிறைகுரு வெள்ளியாய்
குலவு கேந்திர கோணத் திருந்திட
பலமுறுஞ் சனி பார்வை யிராவிடி
லலகி ரண்டுமூன் றாகுங் களத்திரம்.

என கூறியபடி, ஏழாம் வீட்டோன் சுக்கிரன் குருவாக இருந்து லக்கினத்திற்கு கேந்திரம் திரிகோண ராசிகளிலிருந்து சனி பார்வையற்று இருக்க, அவனுக்கு இரண்டு மூன்று களத்திரம் உண்டென்று சாதகசிந்தாமணியில் கூறியபடி ராசிபலம கிரகபலம் அறிந்தே களத்திர சங்கைகளை கூறுவது அவசியம். (649)

வேறு

சொல்லுமேழாமிடத் திந்துசுக்கிரன்
மெல்லமேவினு மிக்கசனிகுசன்
அல்லல்தீர வுறின்மனையாளுமே
இல்லைவந்ததேல் இல்லைபுதல்வரே.

(இ-ள்) களத்திர ஸ்தானமென்னும் 7-ஆம் ராசியில் இரவிற்கு அரசனாகிய சந்திரனும், களத்திர காரகனாகிய சுக்கிரனும் சகிதம்பெற்று இருக்கவும், அல்லது பெருமையும் பலத்தையும்படைத்த சனியும் குஜனும் இருந்தாலும், அவனுக்கு மனைவியே இல்லை என்றும், மனைவி யுண்டாயினும் புத்திரர்கள் இல்லை என்றும் கூறுவர் எ-று.

(வி-ரை) 7-ல் சூரியன் நிற்கில் மனோபலம் இல்லாதவனும், சுக துவேஷியும், சந்திரன் நிற்கில் புத்திர மித்திர களத்திரமும், குஜன்நிற்கில் கடின பிரபலம், துரிதன், வியாதியுள்ளவன், புதன் நிற்கில் மிருது வசனன், களத்திர சுகமுள்ளவனும், குரு நிற்கில் களத்திர சுகத்தில் பிதாவி லதிகனும், குரு விசுவாசனும், சுக்கிரன் நிற்கில் புத்திரசுகமும், பாக்கியமுள்ளவனும், சனி நிற்கில் விருத்த ஸ்திரீயை அடைபவனும், ராகுநிற்கில் விஷ ரோகி புத்திரயீனனும், கேது நிற்கில் விஷகோசமுடையவன் ஆவானென்றும், இவையாவும ஸ்தானபலத்தால் கூறுவாமெயன வீமேசுர உள்ளமுடையானில் கூறியபடி களத்திர ஸ்தானத்திலிருக்கும் கிரகவலி அறிந்தே களத்திரபலன் சொல்லவேண்டும். (650)

வேறு

இல்லேழுமிரண்டாமாதி சுக்கிரனிவர்கள்மூவர்
பொல்லாரோடெய்தியாறி லெட்டிற்பன்னிரண்டிற்போந்து
சல்லாபமுடனின்றோர்கள் தம்முடன்பாவர்கூடில்
சொல்லருந்தொகைக்குமாலை சூட்டுவன்றோகைநில்லாள்.

(இ-ள்) ஜெனன ராசிக்கு சப்தமத்தோன் என்னும் 7-ஆம் ராசிநாதனும், களத்திர லக்கினத்திற்கு இரண்டாம் வீட்டிற்கு உடையவனும், இவ்விருவரோடு சுக்கிரனும் கூடி, ஆக மூவரும் கொடிய கோட்களுடன் கூடி, 6-8-12 என்னும் ராசிகளில் இருக்க, மற்றுமுள்ள சுபஷேத்திரம் பெற்ற கோட்களுடனும், பாவகோட்கள் கூடி இருக்க, அந்த ஜாதகன் சொல்வதற்கரிய ஓர் பெண்ணுக்கு மாலை சூட்டுவானாயினும் மாலை சூட்டிபவள் உயிரோடு இருக்காள் எ-று.

(வி-ரை) தோகை நில்லாள் என்பதை மனைவி பிரிந்துபோவாள் அல்லது இறந்துபோவாள் என்றும் இரண்டுவிதமாய்க் கூறலாம்.

நீலனு மாரல்கூடி நிற்கவே எழிற்றானும்
கோலர் விரவிசுங்கன் கூடியே நின்றாராகில்
மேலெனு மேழோனீரா றிருக்கினு மாதேகேளாய்
காலநேர் களத்திரங்கள் கருவறுங் குறிதப்பாதே.

என கூறியபடி, களத்திர ஸ்தானமென்னும் ஏழாம் ராசியில் சனி குஜன் கூடி இருந்தாலும், ரவி சுக்கிரன் கூடியிருந்து 7-ஆம் ராசியதிபதி மோக்ஷ ஸ்தானம்பெற, அவனுக்கு அநேக களத்திரங்கள் உண்டாயினும் இறந்து போம். இது தப்பாதென்று கேரளத்தில் சொல்லியபடியும், 1-11 இவ்விராசியில் சந்திரன் புதன் இருந்தாலும் உத்தம களத்திர முள்ளவனுவன். சுக்கிரன் நின்ற ராசிக்கு 7-ஆம் ராசியில் புதன் குரு சந்திரன் இவர்கள் சேர்ந்திருக்க நல்ல பாக்கியத்தையுடைய களத்திரம் உண்டாகுமென்றும், மேற்சொன்ன தோஷங்கள் இருந்தாலும் பரிகாரமாகும். சுக்கிரன் நின்ற ராசிக்கு 7-ஆம் ராசியில் சந்திரன் சனி அங்காரகன்கூடி 11-ல் குருவிருக்க பல தாரங்கள் உண்டாயினும் தோஷமில்லை எனவும் சாதகசிந்தாமணியில் சொல்லியபடி ஆராய்ந்து சொல்வாயாக. (651)

**நின்றிரண்டேழாமாதி நிறைந்தகேந்திரகோணத்தில்**
**ஒன்றியேயிருக்கிலேக தாரமாமுற்றவன்ஞேர்**
**வென்றிகொள்பிருகுபாவ ருடன்கூடிமெய்யாறெட்டிற்**
**குன்றிடாதிருக்கில்வேசைக் காந்தனுங்கூறுங்காலே.**

(இ-ள்) சப்தமாதி என்னும் 7-ஆம்வீட்டோனும், இரண்டாம்வீட்டோனும் கேந்திரத்திலேனும் திரிகோணங்களிலேனும் இருந்து, ஆக்ஷி உச்சம் முதலியவைகளால் பலம்பெற்று இருக்க, அந்த ஜாதகன் ஏகதாரம் உடையவனாக இருப்பான். வெற்றியையுடைய சுக்கிரன் பாவகோட்களுடன் சகிதம்பெற்று, 6-8 என்னும் இடங்களிலிருந்து பலம்பெற்றுஇருக்க, அந்த ஜாதகன் வேசிகாந்தன் என்றும் சொல்வர் எ-று.

(வி-ரை) மற்றும் சிலர் 7-ஆம் ராசி சுக்கிரன் வீடாகி, அதில் சனிசேய் நின்று குரு பாராதிருக்க, அவன் மனைவி தன் எதிரிலேயே விபசாரம் செய்யும் திருட்டுத்தனமுள்ள தாரத்தை அடைவான் என்று சோதிட வல்லோர் கூறுவர். (652)

**கூறியவேழாமாதி குடும்பாதிபதியின்ஞேர்கள்**
**ஏறியேதிரிகோணத்துங் கேந்திரத்தினிலுநிற்கப்**
**பேறுடனவர்தம்வீட்டிற் பிரியமாயிருக்கத்தானும்**
**வேறுமோர்தாரம்வேண்டான் விரும்புவனேகதாரம்.**

(இ-ள்) ஜெனன ராசிக்கு சப்தமாதி என்னும் 7-ஆம் ராசிநாதனும், குடும்பாதி என்னும் இரண்டாம ராசிநாதனும், ஜெனனராசிக்கு கேந்திரத்திலேனும் திரிகோணத்திலேனும் இருந்து, அவை அவரவர்களுக்கு ஆக்ஷி வீடாயின் வேறு இரண்டாவது களத்திரத்திற்கு ஆசைப்படான் எனவும், ஒரே களத்திரத்தோடு இருப்பான் எனவும் கூறுவர் எ-று.

(வி-ரை) ஏழாம் வீட்டோன் கேந்திரம்பெற, அவை இலக்கினத்திற்கு லாபஸ்தானம் அல்லது சுகஸ்தானமுமாக இருக்க, அவனுக்குத் தன் களத்திரமூலமாய் அநேக லாபமும், பூஸ்திதிகள் உண்டெனவும் கூறுவர். (653)

**தாரகாரகனுமேழா மதிபனுந்தனித்துங்கூடி**
**ஆரவேபாவர்மத்தி யத்துறவேழிற்பாவர்**

**சேரவேயிவரைப்பாவர் வெறியநோக்குறவிருந்தால்**
**பாரியர்தனக்கரிட்டம் பண்ணுமென்றறிந்துகொள்ளே.**

(இ-ள்) களத்திரகாரகனென்னு சுக்கிரனும், களத்திர ஸ்தானாதிபதி என்னும் 7-ஆம் ராசிநாதனும், வேறு கிரகங்கள் சகிதமின்றி நின்று தான் நின்ற ராசிக்கு இரண்டு பக்கங்களிலும் தீயகிரகங்களால் சூழப்பட்டு, 7-ஆம் ராசியிலும் கொடிய கோட்களிருந்து சுக்கிரனேயும், 7-ஆம் ராசிநாதனேயும் தீயகிரகங்கள் நோக்குவரேல் அவன் மனைவிக்கு சில கண்டாதி தோஷங்கள் உண்டுபண்ணும் எ-று.

(வி-ரை) களத்திரகாரகனும் 7-ஆம் வீட்டோனும் தீயகிரகங்களால் சூழ்ந்து மேற்செய்யுளில் சொல்லியபடியே கிரகங்கள் இருக்கினும் கெண்டாதி தோஷம் உண்டு. சுக்கிரன் ஆக்ஷிபெற்று அந்த ராசிக்கு 7-ஆம் வீட்டோன் நட்புபெற்று குரு சகிதமாய் சுக்கிரனைப்பார்க்க, பாவகோட்கள் சுபர்களுடன் சேராது, 6-8 இவ்விடங்களிலும் சந்திரன் 7 ஆம் ராசியிலும் நிற்க, மேற்சொன்ன தோஷம் நீங்கி அவன் களத்திரமும் அநேகநாள் ஜீவித்திருக்கும் என கேரளத்தில் சொல்லியபடி கிரகவரிசை அறிந்து தோஷம் உண்டாயினும் நீங்கும் நீங்காதென கூறுவது நலம். (654)

**கொள்ளுநற்காரிவெய்யோன் கூடிக்கன்னியிலேநிற்கத்**
**தெள்ளிதாயந்தவீடு சன்மலக்கினமேயாக**
**மெள்ளவேயரசன்றானு மீனத்தின்மேவிநிற்கத்**
**துள்ளியமனைவிதானுந் துன்பமுற்றரிட்டமாவள்.**

(இ-ள்) ஜெனனம் கன்னி என்னும் ராசியாகவிருந்து, அவ்விராசியில் சூரியனும் சனியும் கூடி இருக்க, களத்திர ஸ்தானமான 7 ஆம் ராசியில் சுபகோட்களில் ஒருவரான குரு இருக்க அந்த ஜாதகன் மனைவி பலவித கஷ்டங்களுடன் இறந்துபோவாள் எ-று.

(வி-ரை) களத்திர ஸ்தானத்திற்கு லாப விரயாதியும் ரோகாதிபதியும் களத்திர லக்கினத்தைப் பார்த்தால் இறந்துபோம் என்றனர். இறக்கும் என்ற நிஷ்கரிசையை கூறுவதற்கு களத்திர ஸ்தானத்திற்கு 5-ஆம் வீட்டோன் இரண்டிலேனும், திரிகோணம் கேந்திரத்திலேனும் இருந்தால் பூரண ஆயுளும், பூர்வ தனமும் உண்டு. களத்திர லக்கினத்திற்கு லாபாதிபதி தனஸ்தானமும், அல்லது தனஸ்தானாதிபதியுடன் கூடினாலும், களத்திரம் உயிரோடு இருந்து அந்த தனத்தை அனுபவிப்பாளென வீமேசுர உள்ளமுடையானில் கூறியபடி ஸ்தானபலனை அறிந்து கூறுக. (655)

**ஆமிலக்கினத்துக்கேழி லம்புலிதனக்குமேழில்**
**பூமலிநல்லோர்பார்வை பொருந்திடிலுண்டாம்பெண்டீர்**
**தீமையாங்கடினபாவர் திருட்டியுண்டானபோது**
**மாமினேயார்கள்தம்மை மணந்திடாவஞ்சனுமே.**

(இ-ள்) ஜெனனராசிக்கு ஏழாம் ராசியான களத்திர ஸ்தானத்தையும், சந்திரன்நின்ற ராசிக்கு 7-ஆம் ராசியையும், இப்பூமியில் புகழ்ச்சி செய்யாநின்ற சுபர்களான புதன்-குரு-சுக்கிரன் இவர்கள் பார்ப்பரேல் அவனுக்கு

மனைவி உண்டெனவும், தீயகிரகங்கள் பார்ப்பரேல் அவன் எந்த ஸ்திரீகளை யும் கலியாணம் செய்யாதவனும், வஞ்சகமுள்ளவனுமாவான் எ-று.

(வி-ரை) இச்செய்யுளால் களத்திரம் உள்ளவனென்றும், இல்லாதவன் என்றும் அறியலாம். (656)

ஆமேழாமதிபன்தார காரகனிசமாகித்
தாமிவர்வியமாறெட்டிற் ருனுறமனைவிக்கீனம்
வாமசுக்கிரன்வாழ்வீட்டின் மன்னவன்வியமாறெட்டில்
ஏமமுற்றிருக்கிற்கொண்ட மனைவியர்யார்க்குமீறே.

(இ-ள்) களத்திர ஸ்தானாதிபதி என்னும் 7-ஆம் ராசிநாதனும், களத் திரகாரகனென்னும் சுக்கிரனும் நீச்சம்பெற்று, ஜெனன லக்கினத்திற்கு 6-8-12 இவ்விடங்களிலேறியிருக்க, சுக்கிரனின்ற ராசிக்கு 6-8-12 ம் இவ் விராசிகளில் பிரகஸ்பதியாகிய குருவிருக்க, குருநின்ற ராசியும் நீச்சஸ்தான மாகவுமிருக்க அந்தஜாதகன்கொண்ட மனைவியானவள் பிழைத்திருக்காள்.

(வி-ரை) மேற்சொல்லியபடி கிரகமிருக்கின் களத்திரதோஷம் கூறப் பட்டன. இந்த 6-8-12-ஆம் ராசி ஆகுதி அல்லது உச்சமாய் சுபாங்கிசம் பெற்றிருக்க, வேறுபலனே கூறவேண்டும். களத்திர லக்கினத்திற்கு குடும் பாதிபதியும், 7-ஆம் வீட்டோனும் உச்சம்பெற்று நின்ற ராசிக்கு 7-ல் சந்திரன் இருக்க, பாவகோட்களின் பார்வைபெற்றிருக்க அவன் களத் திரத்திற்கு தோஷமுண்டாயினும் நிவர்த்தியாகி பூரண ஆயுளுடன் இருப் பான் என்றும் கூறுவர். (657)

ஈறிலாவேழாமாதி யேதமாம்பாவர்வீட்டில்
தூறதாய்நிற்கிற்பார்க்கிற் கலியாணந்தூரதேசம்
வீறதாங்களத்திராதி சுபாங்கிசமேவிற்கிட்டல்
பேருடன்திசைகளேழா மதிபனைப்பிடித்துச்சொல்வாம்.

(இ-ள்) குற்றமடையாத சப்தமாதி என்னும் 7-ஆம் ராசிநாதன் குற்ற முடைய பாவர் வீடேறி இருந்தாலும் பார்த்தாலும் அந்த ஜாதகனுக்கு தூரதேசத்தில் கலியாணம் நடக்கும். களத்திர ஸ்தானாதியான சப்தமாதி சுபர் அங்கிசம்பெறில் சமீபத்திலுள்ள தேசங்களில் ஆகுமெனவும், அந்தத் திக்குகளைச் சொல்வதாயின் 7-ஆம்வீட்டோனைக்கொண்டு கீழ்கண்டவாறு கூறுக எ-று. (658)

வாமசூரியன்கிழக்கு மன்னுசுக்கிரற்குகன்னி
பூமிசேய்தனக்குத்தெற்குப் பெரும்பாம்புநிருதியாகும்
தாமதசனிக்குமேற்கு சசிக்குவாயுவின்றிக்காகும்
நேமமாம்வடக்குப்புந்தி நிருபர்க்கீசானதிக்கே.

(இ-ள்) பெருமையைப் பெற்ற சூரியனுக்கு கிழக்கும், புகழ்ச்சியை யுடைய சுக்கிரனுக்கு அக்கினிதிக்கும், பூமிசுதனென்னும் குஜனுக்கு தெற் கும், ராகு-கேதுக்களுக்கு நிருதி என்னும் தென்மேற்கும், சந்திரனுக்கு வாயுதிக்கென்னும் வடமேற்கும், பலத்தில் மிகுந்த சனிக்கு மேற்கும்,

புதனுக்கு வடக்குதிக்கும், குருவாகில் ஈசானியம் என்னும் வடகிழக்கிலும் மேலே சொன்ன விவாகம் நடக்கும் எ-று. (659)

வேறு

திக்கென வேழோன் வியத்திலா றெட்டிற்
செறிந்ததி பாவனு யிருக்கத்
தக்கவன் றனைப்பார்த் தவர்களத் தனையுந்
தாரமாங் களத்திரா திபனும்
ஒக்கவே பாவ ருடனுற வேழி
லொருகரும் பாம்புற வுதற்கு
மிக்ககேந் திரத்திற் பாவர்பார்த் திருக்க
விரும்புவ னுலுகாற் பெண்ணே.

(இ-ள்) ஜெனனராசிக்கு ஏழாம்ராசியதிபதி 6-8-12 என்னும் இவ்விடங்களில் இருக்கவும், அவன் பாவக்கோளாயுமிருக்க, அவனை எத்தனை கோட்கள் நோக்கினவோ அத்தனை களத்திரமாம். களத்திர ஸ்தானாதிபதி பாவகோட்களுடன் சகிதம்பெற்றிருக்க, சப்தம ஸ்தானமென்னும் 7-ஆம் ராசியில் ராகு இருக்க, கேந்திரமேறிய பாவகிரகங்கள் ஷை ராகுவைநோக்க அவன் நாற்கால் ஜீவன்களை இச்சைகொள்வான் எ-று.

(வி-ரை) மேலே மிருக சேர்க்கையை இச்சைகொள்வான் என்பதை 7-ஆம் ராசிக்குடையோனும் சூரியனும் கூடி நாலிலிருக்க, அவன் புஷ்ப வதி ஆகாதவளைச் சேர்வானென்றும், 7-ஆம் வீட்டோன் நாலில்நின்று மற்ற கிரகங்கள் திரிகோண ராசிகளிலும் இருப்பரேல் மிருகப்புணர்ச்சி செய்வானென்றும், இன்னும் இதனை விபரமாகசொல்லவேண்டுவதெனின் ஒவ்வோர் கிரகத்தைக்கொண்டும் இன்னின்ன மிருகமெனக்கூறுவர்.(660)

பெண்ணிசைந் திடுமே ழாமிடத் ததிபன்
பேரொளிக் கதிருடன் கூடில்
எண்ணிசைந் திடுமெட் டாறினில் வியத்தி
லிருக்கில்வா லிபத்திலே மனையாள்
விண்ணிசைந் திடுவள் களத்திரா திபனு
மிக்கநற் கோளுடன் கூடில்
பண்ணிசைந் தருளு மனைவிதீக் கோனை
பார்த்திடிற் பாவியா யிருப்பாள்.

(இ-ள்) களத்திர ஸ்தானாதிபதி என்னும் 7-ஆம் ராசியதிபதி ஒளி பொருந்திய சூரியனுடன் கூடினாலும், ஜெனன ராசிக்கு 6-8-12 முதலிய ஸ்தானங்களில் இருந்தாலும், அவன் மனைவியானவள் வாலிபத்திலேயே இறந்துபோவாள். களத்திரஸ்தானாதிபதி சுபகோட்களுடன் கூடியிருக்கில் நல்ல உத்தமஸ்திரீயை அடைவான். களத்திரஸ்தானாதிபதி தீக்கோளுடன் கூடியிருக்கில் அவன் மனைவி கொடிய பாவியாக இருப்பள் எ-று.

(வி-ரை) பாவியாக இருப்பாள் என்பதைப் பற்பலவிதமாகப் பிரிக்கலாம். எப்படியெனில்: 7-ஆம் வீட்டோனுடன் கொடியவர்கள் சேரில்

*கெட்ட நடக்கை யுள்ளவளும், சூரியன் சேரில் கலகம் செய்பவளும், ராகு நிற்கில் அழகில்லாதவளும், தினமும் வியாதி யுள்ளவளும், கேது நிற்கில் பூர்வஜென்ம கர்ம வியாதியையுடையவளும், குருநிற்கில் உத்தமமென்றும், புத்திரநாசம் அடையுமெனவும், சாதக சிந்தாமணியில் கூறியபடி ஆராய்ந்து கூறுக.* (661)

**பாவியாஞ் சனியே ழாதிப னாகிப்**
**பன்னிரண் டாறிரு நான்கில்**
**மேவிடில் விதவை நாரியைச் சேர்வன்**
**மிக்கவே ழாமிடத் ததிபன்**
**நாவிரண் டான பாம்பொடுங் கூடி**
**நாடியெட் டாறினில் வியத்தில்**
**தாவியே யிருக்கி லீனமாங் குலத்துத்**
**தையலைச் சேர்வனென் றுரைக்கும்.**

(இ-ள்) *தீயகோட்களில் ஒருவனான சனிக்கு களத்திர ஸ்தானாதிபத்தியம் வரவும், ஜெனன லக்கினத்திற்கு 6-8-12-ல் டை சனி நிற்க, அந்த ஜாதகன் விதவை ஸ்திரீயை சேர்வனெனவும், 7-ஆம் ராசியதிபதி இரண்டு நாவைப் படைத்த பாம்புடன் கூடி, மேலேசொன்ன 6-8-12 இவ்விடங்களி லிருக்க, இழிகுலத்துப் பெண்ணைச் சேர்வானென்றும் சொல்வர் எ-று.*

(வி-ரை) *இச்செய்யுளில் சொல்லியபடி கிரகம் அமையப் பிறந்தவனை துர்க்காமி என்று உரைக்கவேண்டுமாகையாலும், ஜெனன லக்கினத்திலும் 2-7 இவ்விடங்களில் சூரியன் குஜனோடு குளிகனும் கூடியிருக்க, அவன் விதவையை சேர்பவனென்றும், சுக்கிரனின்ற ராசியிலும், 2-7-ஆம் இடங்களிலும், சுக்கிரனோடு குளிகன் நிற்கில் கெர்ப்பஸ்திரீயைச் சேர்வானென்றும், அவர்களோடு சூரியன்சேர்ந்திருக்கில் புஷ்பவதியாகாத ஸ்திரீயையும், நான்காம் வீட்டோனும் சந்திரனும் பாவர்களைக் கூடி, 7-ஆம் ராசியில் நின்றாலும், அல்லது 7-ஆம் ராசிநாதனைப் பார்த்தாலும், அவன் தன் மாதா போன்றவளைச் சேரும் சண்டாளனென்றும் சாதக சிந்தாமணியில் சொல்லியபடியாம்.* (662)

**உரைக்குமே ழாதி காரிவாழ் மனையி**
**லுற்றிடக் காரிதான் பார்க்க**
**இருக்கவே ழிடத்துக் கொன்பதா மதிப**
**னெட்டிலா யினுஞ்சனி வீட்டில்**
**பெருக்கவே யிருக்கி லவன்குல மனைவியைப்**
**பிறர்தமைச் சேர்ந்தவ ரவர்கள்**
**பொருள்களை வாங்கி வரச்சொலி புசிக்கும்**
**புண்ணிய வானெனப் புகலும்.**

(இ-ள்) *களத்திர ஸ்தானாதிபதி என்னும் 7-ஆம் ராசியதிபதி சனி வீடேற, அவனைச் சனி திருஷ்டிக்க, 7-ஆம் ராசிக்கு பாக்கியத்தோன் லக்கினத்திற்கு 8-ஆம்ராசியிலேனும், சனிக்கு ஆக்ஷிவீடான மகர கும்பத்தி*

லேனும் இருக்க, அவன் தான் விவாகம் செய்துக்கொண்ட மனைவியை அந்நியரிடம்விபசாரம்செய்வித்து பொருள்வாங்கிவரும்படிசெய்து அதனால் சாப்பிடும் புண்ணியவானென்றும் சொல்வர் எ-று.

(வி-ரை) ஜெனனராசி பெண்ராசியாசி 7-ஆம்வீட்டோனும் சுக்கிரனும் சனி வீடேறி, அவை ஜெனனலக்கினத்திற்கு 6-8 அல்லது 3 இவ்விராசிகளில் நின்று சனி ராகு இவாகளால் பாாக்கப்பட்டால் சுக்கிரனுடன் எத்தனை கிரகங்கள் சோாதனவோ அத்தனை ஸ்திரீகளையும் விபசாரம் செய்வித்து அதனால்வருமபெரும்பொருளைவாங்கி ஜீவிப்பானென்றும்சொல்வர்.

புகனுமே ழாதி பிரபல னாகிப்
பொருநதுமித் துருக்களைக் கூடி
இகவிலா லாபத் தலத்தினி லிருக்க
யிருந்தபோர் தொகைப்படி மனைவி
திகழுட னுளதே யந்தலா பந்தான்
றிரமுப யஙகளே யாயின்
சுகமுட னிருப்பன் சரமெனிற் சிறிது
தோகையர்க் கரிட்டமே சொலலும்.

(இ-ள்) ஜெனனராசிக்கு சப்தமராசியாதிபதி தன் உறவு கிரகங்களைக் கூடி பிரபலம் பெற்று, தாழ்வில்லாத லாபஸ்தானமாகிய 11-ஆம் ராசியில் இருகக, அவனோடு எத்தனைகிரகங்கள் சேர்ந்தனவோ அத்தனை மனைவிகள் உண்டு. அந்த லாபஸ்தானமானது ஸதிரம் உபயம் எனனும் ராசியாயின் அம்மனைவிகள் சுகத்தோடு இருப்பார்கள். சரலக்கினமாயின் சிறிது அரிட்டதோஷம் உண்டாம எ-று.

(வி-ரை) களத்திர சங்கையை நிவர்த்திசெய்யவேண்டுமாயின் தேய்பிறைச் சந்திரனாக யிருநது, மேறபடி சநதிரன் 7-ல் நின்று, பாவ கிரகங்களுடன் கூடி னனுாலும பார்ததாலும் ஏகதாரமாகும. ஜெனன ராசிக்கு 2-7 இவவீட்டோர் தனித்தனியே தன் ஆகூதி வீடுகளிலிருநது தீயகிரகங்களால பார்க்கப்பட்டாமல் இருந்தாலும ஒரேதாரம் உளளவனுகுவன். 7-ஆம் வீட்டோனும் அதறகு 7-ஆம வீட்டோனும சுபர்கள் வீட்டில நீச்சம் பெறறும், 7-ல் தீயகிரகஙகளுமிருக்க, அவன 3-தாரததை யடைவானென்றும, தோஷம்முதலிய கெண்டம கூறுவதேல் சுக்கிரன அஷ்டகவர்க்கைச் சோதித்து, கெண்டாந்தராசிகளில் கோசாரப்படி பாவர்கள் வாசம்செய்யும் காலம் உண்டாகும். அதுசமயம் திசைபுக்தியின் வலுவையும் ஆராய்வது விசேஷம். (664)

சொல்லிய கன்னி லக்கின மாகச்
சோமனுஞ் சனியுங் கேந்திரத்தில்
மெல்லவே யிருககச் சதமனை வியரை
மிகுமணம புரிந்துபூ பதியாய்
வல்லவ னுவ னேழிறசுக கிரனு
மருவுசன் மத்தினிற் குருவும்
அல்லலற் றிருக்கின் மனைவிய ரனேக
ரவரைரட் சிக்கவு மாட்டான்.

(இ-ள்) ஜெனன லக்கினம் கன்னி என்னும் ராசியாகி, லாபாதிபதி என்னும் சந்திரனும், பஞ்சம ரோகாதியான சனியும், லக்கினத்திற்கு 1-4-7-10 என்னும் கேந்திரங்களில் இருக்க, அவன் தசமனைவியரை அடைந்து சுகத்தோடு இருப்பான். 7-ல் சுக்கிரனும் ஜெனனராசியில் குருவும் இருந்தால் அவனுக்கு அநேக களத்திரமுண்டு. அவன் தன் மனைவியரை இரக்ஷிக்கமாட்டான் எ-று.

(வி-ரை) 7-ஆம் வீட்டோனும் சுக்கிரனும் நீச்சமாகி பாவவர்க்கம் பெறின் 3-மனைவி புள்ளவனும், 2-7 இவ்விடங்களைப் பாவகிரகங்கள் பாரா திருந்து, சுக்கிரனும் 7-ஆம் வீட்டோனும் பலம்பெற்றால் இரண்டுகளத்திரமும, 7-ஆம் வீட்டோனும் இரண்டாம் வீட்டோனும் 12-ல் நிற்க, குரு பார்க்க, 7-ல் தீயகிரகங்கள் இருக்க 3-தாரம் உள்ளவனும், 7-ஆம்வீட்டோனுக்கு உச்ச க்ஷேத்திரத்தில பாவகிரகங்களிருந்து, 12-ல் குஜனிருந்து சுக்கிரன் பார்வையறறு இருக்க, முதல் தாரம் இறந்துபோமென்றும், இரண்டாந்தாரம் வலுதகிருககுமெனறும் சாதக சிந்தாமணியில் சொல்லிய படியும், இன்னும் பின்வருமாறு ஆராய்ந்து கூறுதல் நலம். (665)

மாட்டினிற் கிரைசுக் கிரன்குசன் சோமன்
மன்னவ னிரவியோ டைவர்
ஈட்டியோ ரிடத்திற் கூடிடின் மனைவி
யிலாமலே பிணியனுய்த் திரிவன்
நாட்டுமிந் திரவி புதன்சனி வெள்ளி
நயந்துறின் மனைவி மக்களையும்
ஓட்டிவிட் டேதே சாந்தரந் தன்னி
லுறுபிணி யுடனலைந் தலைவன்.

(இ-ள்) இடபராசிக்கு அதிபதியான சுக்கிரனும், குஜன்-சந்திரன்-குரு சூரியன இவாகள் ஐந்தும்பேரும ஒரேராசியில் சேர்ந்திருக்க, அவன் மனைவியின்றி நோயாளனுகத் திரிவான. சந்திரன-சூரியன்-சுக்கிரன்-சனி-புதன் இவர்கள் கூடி இருக்கில அவன் தன் மனைவியையும் மக்களையும் அந்நிய தேசத்திற்கு ஓட்டிவிட்டு பிணிகொண்டு அலைவான் எ-று. (666)

அலைவருஞ் சன்மத் தாதிபன் செறிந்த
வங்கிசா திபன்றனது அகத்தில்
நிலைமையா மனைவி குருவருங் காலம்
நிச்சய மணம்புரிந் திடுவன்
குலமுறுஞ் சன்மந் தனக்குமோ ரேழாம்
ராசியங் கிசத்தினிற் குருவும்
பலமுட னேவந் தணுகிய போதும்
பாரியாய்க் கொள்வநற் பெண்ணை.

(இ-ள்) ஜெனன ராசியதிபதி எவர் அங்கிசத்தி லிருந்தானே அந்த அங்கிசாதிபதி தன் சுயவீட்டில் ஆக்ஷிபெற்றிருக்க, அவனுக்கு களத்திரநிலையுண்டு. அவ்விராசியில் கோசாரரீதியாய் குரு வருங்காலத்தில் விவாகம் செய்துக்கொள்ளுவான். ஜெனனராசிக்கு ஏழாம்ராசியிலும, 7-ஆம்ராசியதி

பதி நின்ற அங்கிசராசியிலும் குரு வரும்போது அவன் அழகுவாய்ந்த பெண்ணை கலியாணம் செய்துகொள்வான் எ-று.

(வி-ரை) இவை தினசரிப்படி ஒவ்வொரு ராசியிலும் குரு ஒரு வருஷ சஞ்சார காலங்களில் விவாகம் நடக்கும் என்பதாம். (667)

வேறு

பெண்கொளுங் காலஞ் சந்திர னிருந்த
பெரும்பதிக் கிறைவனற் புடமும
பிறையுறை மனைக்கே ழாமிடத் ததிபன்
பெற்றநற் புடத்தையுங் கூட்ட
பண்கொளு மெந்த ராசியோ அந்தப்
பதியிலப் பதிதிரி கோணம்
பற்றியே அரச னுற்றிடு காலம்
பயின்மணம் புரிவனக் குருவும்
எண்கொளு முச்சாங் கிசம்பெறின் மனைவி
யினியளீர்ங் கோதையுஞ் சிவப்பாம்
இரணியன் றனுவாங் கிசத்துறின் மனைவி
யிரண்டுமீ னங்கிச மேறில்
தண்கொண் மூன்றுமித் திராங்கிசத் தொருத்தி
சத்துரு வங்கிச மேறில்
தையனேய் நீசாங் கிசத்தினி லரசன்
றரிக்கிலீ னங்குலக் கொடிக்கே.

(இ-ள்) விவாகமாகும் காலங்களைச் சொல்லவேண்டின் பெருமையைப் படைத்த சந்திரன் எந்த ராசியில் நின்றானோ அந்த ராசியதிபதி ஸ்புடத்தையும், சந்திரன் நின்ற ராசிக்கு 7-ஆம் ராசிநாதன் நின்ற ஸ்புடத்தையும் கூட்டிக் கண்டராசியிலும், அவ்விராசிகரு திரிகோண ராசிகளிலும், குரு வரும்போது மணம் செய்துக்கொள்வான். அந்த குரு மேற்சொல்லிய ராசிகளில் உச்ச அங்கிசம்பெறின் மனைவி சிவப்பாயும் யோகமாயும் இருப்பாள். மேற்படி அங்கிசமும் திரிகோணமும் பெற்ற குரு, தனுசு அங்கிசமுமாக இருக்கில் அவனுக்கு மனைவி இரண்டாகும். மீன அங்கிசமாக யிருக்கில் மூன்று களத்திரமாம். குரு நீச்சம்பெறின் அவன் மனைவிக்கு ஈனம் உண்டாகும் எ-று. (668)

கொடியிடை யாய்கே ளிரண்டிடத் ததிபன்
குணகுண காரனற் புடத்தில்
குலவியம கண்டன் புடத்ினை வாங்கி
குறித்த ராசியிற் குருவருநாள்
துடியிடை மனைவிக் கரிட்டமா மின்னுஞ்
சொல்லிரண் டாதிபன் புடத்தில்
சூழ்ந்திடுங் குளிகன் புடந்தனை யெடுத்துத்
தோன்றிய ராசியிற் சனியும்

வடிவுடன் வருநாள் களத்திரந் தனக்கு
வருகிரி யாணமென் றுரைப்பர்
மத்தின மேழா மதிபதி புடத்தில்
வருகால மிருத்துவை யெடுக்கின்
பிடிபடும் ராசி யந்தரா சிக்கே
பெற்றிடு மாதமந் நாளில்
பிறைநுதற் றிலத முகமதி கருங்கட்
பெண்ணணங் கேயெனப் பேசே.

(இ-ள்) தனுதிபதியாகிய இரண்டாம் ராசிநாதனின் குணகுணகார ஸ்புடத்தில் உபய கிரகப்படி எமகண்டன் ஸ்புடத்தில் தினசரிப்படி குரு ஓர் வருஷம் வாசம் செய்யுங்காலம் அந்த ஜாதகனுடைய அழகான மனைவிக்கு கெண்டாதி அரிட்டம் உண்டாம். மேற்சொன்ன இரண்டாம்வீட்டோன் ஸ்புடத்தில் குளிகன் ஸ்புடத்தை வாங்கிக் கண்ட ராசியில் சனி இரண்டரை வருஷ வாசகாலம் களத்திரத்திற்கு கிரியாணம் ஏற்படும். ஜெனனலக்கினத்திற்கு 7-ம்ராசிநாதனுகிய களத்திரஸ்தானுதிபதி ஸ்புடத்தில் காலமித்துருவின் ஸ்புடத்தைக் காணவரும் இராசிக்குரிய மாதமே கெண்டாந்தமாதமென அழகுபொருந்திய பெண்ணே! கூறுவாயாக எ-று.

பேசிய விரண்டா மிடந்தனி லிரவி
பெரிதுறில் விடம்புசித் திடுவள்
பிறைகுறைந் திருக்கிற் சலத்திறுற் கண்டம்
பின்குச னுறிலனல் குளிப்பள்
பாசமாம் புந்தி பாவரைக் கூடிற்
பசிதனைப் பொறுத்தொறுத் திருப்பள்
பாவரை யரசன் கூடிடின் மகிழ்நன்
பரிகலந் தனைவெறுத் திடுவள்
நேசமாம் பிருகு பாவரைக் கூடி
நின்றிடில் விடம்புசித் திடுவள்
நிறைசனி யிருந்தால் வியாதியா யிருப்ப
ணீண்டதோர் பாம்பிரு வரையும்
தேசுடன் கூடிற் பாசபந் தத்தாற்
சீவனை யொழிக்கவே துணிவள்
தெரிந்தநல் லோர்கள் பார்வையுண் டாயின்
றீர்க்க சீவன்பெருந் திருவே.

(இ-ள்) களத்திர ஸ்தானத்திற்கு இரண்டாம் ராசியில் கதிரவனிருக்கில் அவன் மனைவி விஷத்தைப் புசிப்பாள். தேய்பிறைச் சந்திரன் இருக்கில் ஜலத்தால் கெண்டாதிதோஷம் காட்டும். குஜனிருக்கில் நெருப்பால் கெண்டம் உண்டு. புதனிருக்கில் பசி பொறுத்திருப்பாள். குரு கொடிய கோட்களுடன் சகிதம்பெற்று மேற்சொல்லிய ராசியில் இருக்கில், தன் பர்த்தாவின் உறவினரை வெறுத்தும் பராமரிப்பாள். சுக்கிரன் பாவகிரகங்களுடன்கூடி இருக்கில் விஷப்போசிப்பினுல் கெண்டம் உண்டு. சனி நிற்

இல் எந்நாளும் வியாதியாகவே இருப்பான். இராகு கேதுக்கள் இருக்கில் பாசபந்தத்தால் தன் பிராணனை இழக்கத் துணிவான். மேற்சொல்லியபடி இரகமிருந்தால் இந்த தோஷங்கள் உண்டாயினும் சுபகிரகங்கள் பார்வை உண்டாயின் மேற்சொன்ன கெண்டம் யாவும் நீங்கி, பூரண ஆயுள் பெற்று இருப்பானென அழகுவாய்ந்த பெண்ணே! கூறுவாயாக எ-று.

(வி-ரை) 'மகிழ்நன் பரிகலந்தனை வெறுத்திருப்பாள்' என்பதை அநேகர் அநேகவிதமாய்க் கூறுவர். ஆயினும் மகிழ்நன்-புருஷன், பரிகலம்-பரிவாரத்தார் அல்லது உறவினர் என்பது அர்த்தமாகையால், பர்த்தாவின் உறவினரை வெறுத்திருப்பாள் என உரை எழுதினன். மேற்சொல்லிய செய்யுள்படி இரகமமர்ந்தால் கெண்டம் உண்டாகும். ஆனாலும் அவ்வீடு களத்திரத்திற்கு ஆயுள் ஸ்தானமானதால் கெண்டம் உண்டாயினும் நீங்கும் என்பது செய்யுளின் கருத்தாம். (670)

திருவளர் மதிசுக் கிரனுமே ழிடத்திற்
செறிந்தத்த மனமதா யிருக்கில்
சலத்துயி ரிறப்ப னேழிடந் தன்னிற்
செங்கதி ரிருக்க வந்தியளாம்
மருவு சூரியனுந் தூமனுங் கூடின்
மனைவியை மருவிடா வஞ்சன்
மன்னுசக் கரசா பன்னுறின் மரிப்பள்
வளர்பரி வேடமுற் றிடிலோ
சருவியே சண்டைக் காரியா யிருப்பள்
தக்கதோர் குசனுறில் வந்தி
தகைமைசேர் விதிபா தன்னுறிற் கர்ப்பந்
தரித்திடா மற்கலைந் திருப்பள்
ஒருமையாய் நிறைந்த மதியுமே ழேழி
லுற்றிடின் மைந்தரும் குணமும்
உள்ளமெல் லியலை மணந்தினி திருப்பள்
உண்மையீ தெனவுணர்ந் திடுமே.

(இ-ள்) அழகுபொருந்திய சந்திரனும் சுக்கிரனும் சப்தமமென்னும் 7-ஆம் ராசியில் சேர்ந்து அஸ்தமனமாக இருக்க, அவன் மனைவியானவள் ஜலத்தில் வீழ்ந்து உயிரிழந்துபோவாள். மேற்சொல்லிய ராசியில் சூரியன் இருக்கில் மலடியாய் இருப்பள். சூரியனோடு உபயராசிப்படி தூமன் சகிதம் பெற்றிருக்க, அவன் தன் மனைவியை மருவாத வஞ்சக முள்ளவனுவான். மேற்சொன்ன சூரியனுடன் சக்கிரசாபன் சகிதம்பெற மனைவி இறந்து போவாள். பரிவேடன் சகிதம்பெற்றிருக்க, அவன் மனைவி சண்டைக்காரி யாக இருப்பள். குஜனிருக்கில் மலடியாக இருப்பள். விதிபாதன் சகிதம் பெற கர்ப்பம் தங்காதவளும், அப்படித்தங்கினும் கலைந்துபோகும் என்பார். சப்தமராசியில் பூரண கலைகளையுள்ள சந்திரன் இருக்கில் புத்திரவிருத்தி யும், குணசாலியுமான மனைவியை மணந்து சுகித்திருப்பான் எ-று. (671)

உணர்ந்திடும் புந்தி யேழினி லிருக்க
வுருப்பெறும் புதல்வனைப் பெறுவள்
உற்றவே ழாதி யிரவிதூ மனுமே
வுடன்செறிந் தேழினி லிருக்க
மணந்திடு மிகுதி மனைவியத் தனையு
மரிக்குமென் றுரைப்பரே ழிடத்தில்
மன்னுதூ மாதி யைவரி லொருவர்
வந்திடிற் களத்திர ஹானி
அணைந்திடுஞ் சசிலக் கினத்தினுக் கேழு
மப்படி பலனென வறிக
ஆனதோர் மதிதன் னங்கிசத் தேறி
யன்பொடு மேழிடத் திருக்க
குணந்திக ழுந்தார் சுந்தரி நீசர்
குளிர்மனை யேழிட மாகக்
கோதறு கதிரங் கிசமதி யாகிற்
கொழுனரும் பலரெனக் கூறும்..

(இ-ள்) சப்தமராசியென்னும் களத்திரஸ்தானமான 7-ஆம் ராசியில் புதனிருக்க திடமும் அழகும் வாய்ந்த புதல்வனைப் பெறும் மனைவியை அடைவான். 7-ஆம் இராசிநாதனுடன் சூரியனும் தூமனும் கூடி 7-லிருக்க அவன் மணம் செய்யும் மனைவி யாவரும் இறந்துபோவார்கள். 7-ஆம் ராசியில் தூமாதி பஞ்சகிரகங்களில் ஒருவரிருக்க களத்திர ஹானியுண்டு. சந்திரனிருந்த ராசிக்கு 7-க்கு 7-ஆம் ராசியில் மேற்சொன்ன கிரகங்களிருக்கில் பலனுண்டு எனவும். சந்திரன் தன் சுய அங்கிசமேபெற்று 7-ஆம்ராசியானலும் குணசாலியாம். களத்திர ஸ்தானாதிபதி நீசம்பெற்று சந்திரனிருந்த ராசிக்கு 7-ஆம் ராசியிலிருந்து சூரியன் அங்கிசம்பெற அவன் மனைவிக்கு பல புருஷனுண்டு எ-று. (672)

வேறு

குடும்பகளத்திரமாருதி கூடிப்புகரும்பாவருடன்
திடமேசன்மந்தனிலிருக்கச் செனித்தோன்கமனபரதாரம்
வடிவாஞ்செல்விக்கிச்சிப்பன் வாழும்பாக்கியதானத்தில்
அடவேயிவர்கள்தாமுற்று லையருமிப்படியாமென்பார்.

(இ-ள்) ஜெனனராசிக்கு இரண்டாம் ராசிநாதனாகிய தனாதிபதியும், களத்திர ஸ்தானாதிபதியும், 6 ஆம்வீட்டோனும்சேர்ந்து ஓர் ராசியிலிருக்க, சுக்கிரனும் ரோகாதிபதியுடன் கூடி ஜெனனராசியிலிருக்க ஜெனித்தவன் பரதாரங்களையும் தாசிகளையும் இச்சிப்பவனாகுவன். பாக்கிய ஸ்தானமென்னும் 9-ஆம் ராசியில் மேற்சொல்லியவர்கள் இருந்தால் தன் தருமார்த்த காரிய முதலியவைகள் அழிந்துபோம் எ-று. (673)

ஆமேசுக்கிரனேழாதி யாரும்மதிபனுங்கூடி
தாமேமூவரொருவீட்டிற் றங்கிற்போகந்தானில்லை

**தீமேயிரண்டுமூன்ருதி செறிந்தாறெட்டிற்பனிரண்டில்**
**காமேகூடியிருந்திடினே களரோகங்கள்காட்டிடுமே.**

(இ-ள்) *களத்திரகாரகனுகிய சுக்கிரனும், களத்திரஸ்தானுதிபதியான ஏழாம் வீட்டோனும், ஆரும் வீட்டோனுன ரோகாதிபனுடன் கூடி ஓர் வீட்டிலிருக்க அவன் போகமில்லாதவனுவான். இரண்டாம் வீட்டோனும் மூன்ரும் வீட்டோனும் கூடி, 6-8-12 இவ்விடங்களில் இருக்க அவனுக்குக் களத்திரத்தால் ரோகம் காட்டும் எ-று.*

(வி-ரை) *7-ஆம் வீட்டோன் பாவருடன் சேர்ந்து, 6-8-12 இவ்விடங்களிலிருந்து கேதுவால் பார்க்கப்பட்டு நின்ற இடமும், பாவர்கள்க்ஷேத்திரமாயின் இந்திரிய ஸ்கலிதம் உண்டாகுமெனவும் கூறுவர்.* (674)

**காட்டுஞ்சன்மமேழாதி கண்டகேந்திரகோணத்தில்**
**கூட்டியிருக்கவவர்வீட்டோன் கொண்டலக்கினத்தான்மேவி**
**நீட்டும்பலவானிவனென்றே நேயமறிந்தேயவர்திசையில்**
**ஊட்டும்புசிப்பிலிவன்பாரி யுகந்தேயிவனேடனுமரணம்.**

(இ-ள்) *ஜெனனலக்கினுதிபதியும் 7-ஆம் ராசியதிபதியுங்கூடி கேந்திர கோணங்களில் இருக்க, அவர்கள் நின்ற ராசிநாதர்கள் ஜெனனராசியில் இருந்துபலம்பெற, அந்தஜாதகன் பலவானுகவும், பலசாலி என்ற பெயரும் வாய்ந்து மேற்சொல்லியவர்கள் திசைவரும்போது இந்தஜாதகனும் இவன் மனைவியும் மரணமடைவார்கள் எ-று.*

(வி-ரை) *இச்செய்யுளில் சொல்லியபடி கிரகமிருந்தால் அவர் திசை காலங்களில் சனி சுக்கிரன் இவர்கள் அஷ்டகவர்க்கைச் சோதித்து, சேஷ பிந்தின்படி வரும் கெண்டாந்த மாதங்களில் சனி இரண்டரைவருஷ வாச காலம் கெண்டம் ஏற்படும்.* (675)

**சத்தமவட்டமாதி தன்னுடன்பாவரேனும்**
**ஒத்துடனந்தத்தானத் துறுபலபாவரேனும்**
**சித்தமாம்வியத்தின்மன்னன் சேயுடன்கூடினுலும்**
**ஒத்தநல்விவாகம்ரெண்டா யுறுமணம்புரிவனென்றே.**

(இ-ள்) *ஜெனனலக்கினத்திலும் 7-ஆம் வீட்டிலும் 8-ஆம் வீட்டிலும் கொடியவர்கள் சகிதம்பெற்றிருக்க, அல்லது மேற்சொல்லிய ராசிகளுக்குத் தலைவர்கள் கொடியோர்களாய் கொடியோர்களுடன்கூடி வியமென்னும் 12-ஆம் ராசியில் குரு அங்காரகனுடன் கலந்திருக்க அந்த ஜாதகனுக்கு சந்தோஷத்துடன் இரண்டு விவாகம் நடக்கும் எ-று.*

(வி-ரை) *மேற்சொல்லியபடி கிரகம் அமர்ந்தால் 2-விவாகமாயினும்,*

*நிரைகுரு வெள்ளி கேந்திரம் நின்றிட வைந்து மைந்தக்*
*கிரையுமே பாவ வர்க்க மெய்திடச் சனியன் பார்க்க*
*உரையம்லக் கினத்தில் ராகு உறுதியா யிருக்கு மாயின்*
*மறைவின்றி புத்திரி தன்னை மருவுவன் மகிழ்ச்சி யாலே.*

*என்றதால், சுக்கிரன் கேந்திரம்பெற, 5-ஆம் ராசிநாதனும், அதற்கு 5 ஆம் ராசிநாதனும் பாவவர்க்கம்பெற, அவர்களைச் சனிபார்க்க, ஜெனன லக்கினத்தில் ராகு பலம்பெற, அவன் தன் புத்திரியை யாவரும் அறியச் சேருவானென்றும் சாதகசிந்தாமணியில் சொல்லியபடி பிரித்துச்சொல்லுவாய்.*

ஏழுடனிரண்டாமாதி யிருவரிலொருவரேனும்
தாழ்பலவீனராகத் தானுறிலந்தவீட்டில்
ஊழ்பெறும்பாவர்நிற்க வுறுமணமிரண்டுசெய்து
வாழ்பவர்புவியிலென்று வழுத்துவர்மறைவல்லோரே.

(இ-ள்) ஜெனன லக்கினத்திற்கு 7-ஆம் ராசிநாதனும் இரண்டாம்ராசி நாதனும் பகை நீச்சம்பெற்று பலமிழந்து இருக்க, மேற்சொல்லிய 2-7-ஆம் ராசியில் கொடியபாவிகளும் இருக்க, அந்தஜாதகன் இரண்டு மணம்செய்து வாழ்வனென சாஸ்திர நிபுணர்கள் கூறுவார் எ-று.

(வி-ரை) தனமவர் குன்றிநிற்க தாழ்வதே ஏழோனீச்சம்
மதனவன் காரிகூட மங்கள சுங்கன்சேர
இனன்மத னரவங்கூடி இவர்நடு வாகநின்றால்
சினமது நில்லாதாகும் செத்திடும் களத்திரமெல்லாம்.

என்றபடி, இரண்டு ஏழுக்குடையோர் மேற்சொன்னபடி பகை நீச்சம்பெற்றாலும், சுக்கிரன் சனியுடன் கூடினாலும், அல்லது சுக்கிரனும் இராகுவும் கூடி மேற்சொல்லிய இரண்டோனுக்கும் ஏழோனுக்கும் மத்தியில் நிற்க, அவன் எத்தனை விவாகம் செய்யினும் இறந்துபோமென்று கேரளத்தில் சொல்லியபடியாம். (677)

வல்லதிரண்டில்வெகுபாவர் வந்துற்றாலுமோரேழில்
சொல்லும்பாவர்தானுறினுஞ் சுகமாமந்தமனையினிலும்
வெல்லுமிந்தமனையோனை விரும்பிப்பாவர்நோக்கமுற
நல்லமணங்களிரண்டென்று நவில்வர்கணிதநாவலரே.

(இ-ள்) ஜெனனராசிக்கு இரண்டிலும் ஏழிலும் பாவகிரகங்கள் நின்றாலும் சுகமுண்டு. மேர்சொன்ன இரண்டு ஏழுக்குடையவர்களை பாவகிரகங்களால் பார்க்கப்பட்டால் அவனுக்கு இரண்டுதாரம் என்று சோதிட நிபுணர்கள் கூறுவார் எ-று.

(வி-ரை) இரண்டு ஏழுக்குடையோரைத் தீயகிரகங்கள் பார்க்கில் இரண்டு மனைவியாகுலும்,

எழிரு புறமும் நல்லோ ரிருந்துமே பாப ரன்றி
சூழிரு புறமும் சுங்கன் சுபர்பார்க்க விருக்கக் கூட
வாழிரு மேழோ னைந்தில் வலுமையாய் நின்ற ராகுல்
தாழ்வொரு பயமு மின்றி தழைத்தொரு மனைவி நிற்பாள்.

என்றபடி 7-ஆம் ராசிக்கு இருபுறமும் சுபகிரகங்களிருந்து சுக்கிரனுக்கு இருபுறமும் சுபர்களிருந்தாலும் பார்த்தாலும் இரண்டு ஏழுக்குடையோர் பஞ்சம ஸ்தானம்பெற, ஒரு மனைவி பயமின்றி நிற்பள் என கேரளத்தில் சொல்லியபடி சொல்லுக. (678)

ஏற்றியசன்மம்ரெண்டி லேழினிற்பாவரேனும்
நேர்ததியாங்களத்திராதி நீசரத்தமனமேனும்
வேற்றுசத்துருவீடேனும் விரும்பியேநின்றாராகில்
போற்றுவர்களத்திரங்க ளிரண்டெனப்புகல்வர்தாமே.

(இ-ள்) ஜெனனராசியிலேனும் இரண்டாமிடம் ஏழாமிடம் இவ்விடங்களிலேனும் பாவகிரகங்கள் இருந்தாலும், 7-ஆம் வீட்டோனை களத்திர

ஸ்தானாதிபதி நீச்சமும் அஸ்தமனமும் பெற்று சத்துரு வீடேறியும் இருந்தால் அந்த ஜாதகனுக்கு களத்திரம இரண்டெனச் சொல்லுவார் எ-று.

(வி-ரை) மேற்சொல்லியபடியே சுக்கிரன் அஸ்தமனம்பெற்று குருவும் நீச்சம் அடைந்து அவன் நின்ற ராசிக்கேழில் அஙகாரகனும் சனியும் நிற்க, 9-ல் ராகு இருக்க, இந்த ஜாதகன் கெர்ப்பத்தில் இருக்கும்போதே இவன் பிதாவும் இறந்துபோயிருப்பானென பிதுருதோஷம் கூறுவர். (679)

மேவியகளத்திராதி விரும்புகேந்திரகோணத்தில்
பாவியர்க்ஷேத்திரநட்பும் பரிந்துறபபத்தோன்கூடத்
தாவியேவேழோனங்கிசைதரிப்பச் சொக்ஷேத்திரங்கண்டால்
தேவியும்நேசமாகத் திடமணம்புரிவன்றுனே.

(இ-ள்) களத்திர ஸ்தானாதிபதி என்னும் 7-ஆம் வீட்டோன் கேந்திர கோண ராசிகளிலும, பாவகோட்களின்வீடுகளிலும நட்புபெற்றும், ஜெனன ராசிக்கு 10-ஆம் வீட்டோனுடன் கூடி மேற்சொன்ன 10-ஆம் வீட்டோன் 7-ஆம் ராசியோன் அங்கிசமும் பெற்று தன் சுயக்ஷேத்திரத்தைப் பார்ப்பானுகில் அவன் அழகிய பெண்ணை விவாகம் செய்வான் எ-று.

(வி-ரை) அழகிய விவாகமென்றாலும் 1-2-7-10 இவ்வீட்டை சனி செவ்வாய் பார்த்தாலும், அல்லது அவ்வீட்டுக்குடையோரைச்சேர்ந்தாலும், சுக்கிரனைப் பாக்கவும அல்லது சுக்கிரனின்ற ராசிக்கு 7-ல் இருந்தாலும், அருபியாகிய விதவை ஸ்திரீயைச் சேருவான். மேற்சொன்ன 1-2-7-10 இவ்விடஙகளில் தீயகிரகஙகள நிறக, சுககிரனுடன் குளிகன்கூடி கேந்திரம் பெற, தனக்கு மேறபட்ட ஜாதியாரை விவாகம் செய்துக்கொள்வானென்றும் பிரித்துச சொல்வது நலம். (680)

ஆனதோரேழிடத்தி லரசனும்பலமதாகி
ஈனமில்பளிங்குதானு மிருநதிடவலுவதாகத்
தேனிகர்குடுமபவாதி சினேகரங்கிசையிருக்கவேதான்
தானதிருபமுளள தனபதிநாரியென்றே.

(இ-ள்) களத்திர ஸதானமென்னும் ஏழாம்ராசியில் குரு பலம்பெற்று நிற்க, தன்பத்தை விளக்கப்படமாட்டாத களததிரகாரகனுகிய சுக்கிரன் வலுபெற்றிருக்க, குடும்பாதிபதி சிநேகவீட்டிலும், உறவோர அங்கிசையிலுமிருக்க அந்த ஜாதகன் நல்ல ரூபலாவண்யம் உள்ளவளும், தனவர்தன் பெண்ணையும் மணந்துகொளவான் எ-று.

(வி-ரை) அஷ்டமாதிபதி 7-ஆம் ராசியிலிருக்க, அவன் பிறர் தாரங்களை இசசிப்பான். அவர்களால் அநேகவிதமான துன்பமும், நஷ்டமும் உண்டென்றும், இலக்கினுதிபதி 7-ல் நிற்க, மேற்சொன்னபடி செல்வம் நிறைந்த களதத்ரதலைத அடைவானென்றும் சோதிடவல்லோர் கூறுவர்.

ஏயலாபாதியேழோ னிருவரும்பலமாய்க்கூடி
தூயகோணத்திருக்கச் சுபருடைப்பார்வையாகில்
நேயமாமனேகமபெண்க ணிறைசீவனுள்ளராக
ஆயவேமணங்கள்சூட்டி யவனியில்ருப்பன்றுனே.

(இ-ள்) ஜெனனராசிக்கு 7-ஆம் வீட்டோனும், லாபஸ்தானுதிபதி என்னும் 11 ஆம்வீட்டோனும் பலம்பெற்று கோணராசிகளிலிருந்து சுபகிரகன்

கள் பார்வைபெற, அவன் பூரண ஆயுளையுடைய அநேக ஸ்திரீகளை மணம் செய்து சுகத்தோடு இருப்பான் எ-று.

(வி-ரை) மேற்சொல்லிய 7-11-க்குடையோர் பலம்பெற்று சுபக்கிரகங்களால் பார்க்கப்பட்டாலும், இரண்டாமாதியும் மேற்சொல்லியவர்களுடன் கூடி களத்திர ஸ்தானாதிபன் நின்ற அங்கிசாதிபன் சுபனாகவும், குரு-சுக்கிரன-சந்திரன்-புதன் இவர்கள் பார்க்கப்பட்டு, மற்ற கிரகங்களால் பார்க்கப்படாவிட்டால் நல்ல யோகமும், ஆயுள்வாய்ந்த களத்திரம் ஒன்றே நிலைத்திருக்கும் எனவும் கூறுவர். (682)

இருந்திடுமிரண்டேழாதி லக்கினகோபுராங்கிசைக்குள்
பரிந்துறுமபததாமாதி பண்புடனேழிலுற்றால்
தெரிநதநற்களத்திரங்கள் தெசமெனக்கொள்வரென்றே
புரிந்திடுங்கணிதநூலின் புண்ணியரோதினரே.

(இ-ள்) ஜெனன லக்கினத்திற்கு இரண்டாமாதியும், 7-ஆம் ராசியதிபதியும் இலக்கின கோபுர அங்கிசம்பெற, ராஜ்யஸ்தானமென்னும் 10 ஆம் வீட்டதிபதி 7-ஆம் ராசியிலும் நிற்க, அந்த ஜாதகனுக்கு 10-களத்திரம் உண்டென்று சாஸதிரங்களையறிந்த நிபுணர்கள் கூறுவார் எ-று.

(வி-ரை) தானுற்ற வசுரமந்திரி சாமியும் கேந்திரமேற
கோணத்தி லேறிநிற்க கூடும்வாலிப விவாகம்.

என சாதக சிந்தாமணியில் சொல்லியபடி சுக்கிரனும் குருவும் கேந்திர கோணங்களில் இருக்க அவனுக்கு வாலிப விவாகம் நடக்குமெனவும் கூறுவர். இவ்வாறே எததனை விவாகம் நடக்கும் காலமறிந்து கூறுதல் நலம். ()

ஓதியகளத்திராதி யுயர்சுபராசியேறி
மீதுமங்கிசைநல்வீடாய் மேவிடப்பளிங்குதானும்
நீதியிப்படிபோலாக நிறையும்பத்ததிபனோடு
மோதியபலவான்கூட மோகனபபெண்கள்கொள்வான்.

(இ-ள்) சப்தமாதி என்னும் 7-ஆம் ராசியதிபதியான களத்திர ஸ்தானாதிபதி, மேனமையைப்பெறற சுபாகள் க்ஷேத்திரத்திலும் சுபர்கள் அங்கிசத்திலும இருக்க, சுக்கிரனும மேற்சொல்லியவணணம் பலம்பெற்று 10-ம் வீட்டதிபனோடு இருக்க, அந்த ஜாதகன் மோகன மாதருக்கு இணையான அழகுவாய்ந்த பெணணையடைவான் எ-று.

(வி-ரை) களத்திர ஸ்தானாதிபதி சுபவர்க்கம்பெற்றாலும், சுபரங்கிசம் பெற்றாலும, அழகுவாய்ந்த பெண்ணை அடைவான் என்றபடி, 7-ஆம் வீட்டோனும சுக்கிரனும் சுபவர்க்கமடைந்து சுபர்களால் பார்க்கப்பட்டுமிருக்க அவன்மனைவி பதிவிரதையாகஇருப்பாளென றும் சோதிடத்தோர்கூறுவர்.

கொள்ளுநற்களத்திராதி குருவுடன்கூடினாலும்
தெள்ளியபார்வையுற்றுத் திட்டமுளதலமுற்றாலும்
மெள்ளவேபிருகுதானும் வெகுபலமாகவுற்றால்
ஒள்ளியதானதார்ம முள்ளவள்வருவளதானே.

(இ ள்) களத்திர ஸ்தானாதிபதியும் குருவும் ஒன்றுகூடினாலும், சுப க்ஷேத்திரங்கள்பெற்று சுபர்கள்பார்வையுற்று இருந்தாலும், சுக்கிரன் பலம்

பெற்று உச்சம்பெற்றிருந்தால் அவன் நல்ல தானதரும பரோபகார குண முடைய மனைவியை அடைவான் என்றும் கூறுவர் எ-று.

(வி-ரை) 7-ல் குரு சந்திரன் இவர்கள் தவிர வேறு கிரகங்கள் கூடி மேற்சொல்லிய ராசியில் இருந்தால் தருமகுணமுள்ள மனைவியை அடைவான். 7-ல் குரு சந்திரன் இருக்கில் அவன் வங்கிசமே நாசமாகும். 7-ஆம் வீடு தவிர வேறு ராசிகளில் குருவும் சந்திரனும் கூடினால் அவனுக்கு குரு சந்திர யோகமெனவும், அதன்பலன் பொன் விருத்தி யுள்ளவனும், பூமி பலிதமும், ஸ்திரீகள் மூலமான பொருள் சேர்த்திபுள்ளவனும், கீர்த்திப் பிரதாபமும், தெய்வ கடாக்ஷமும் உள்ளவனுவான். குருவும் சந்திரனும் நின்ற ராசிகளுடையோன் 3-ஆம் இடமென்னும் மறைவிட ஸ்தானம் பெற, மேற்சொல்லிய பலனொன்றையும் அடையமாட்டானென புலிப்பாணிமுனிவர் கூறியபடி 7-ல் நின்ற கிரகங்கள் யாரென அறிந்து மேற்சொல்லிய பலனை உரைப்பது நலம். (685)

வந்தலக்கினந்தனுமீனம் வரவேபுதனும்பாவருடன்
இந்துநீசமத்தமன மிருந்தங்கிசைகள்சத்துருவின்
சொந்தமங்கிசையேறுகினுந் தூர்த்தர்பாவர்களத்திரத்தில்
உந்தியிருக்கவேசியரா யுயர்ந்தகுலமுந்தாழ்வாமே.

(இ-ள்) ஜெனன லக்கினம் தனுசு அல்லது மீனமென்னும் ராசியாக இருந்து, புதன் பாவகிரகங்களோடும் நீசமாயும், அஸ்தமயமாயும், தான் இருந்த அங்கிசம் சத்துருவின் சொந்த அங்கிசமாயும் இருக்க, 7-ஆம் ராசியில் பாவகிரகங்கள் இருக்க, அவன் மனைவி விபசாரியாக இருப்பாள். எவ்வித உயர்குலமாயினும் தாழ்ந்துபோம் எ-று.

(வி-ரை) தனுர் மீனம் குருவுக்கு ஆக்ஷி வீடாகையால் குருவோடு சந்திரன் கூடி ஜெனன ராசியிலிருக்க, 7-ஆம் வீட்டோன் பார்க்க, அவன் பிராமண ஸ்திரீகளைச் சேர்வான் என்றும் சோதிடத்தோர் கூறுவர். (686)

ஆமேகளத்திராதிபதி யரசனுகிப்பாவருடன்
தீமேபாவராசியிலுஞ் சிறந்தேயிருக்கப்பாவர்களும்
தாமேநோக்கமானுலுஞ் சனிசேயங்கிசையுற்றுலும்
போமேசோரம்ரகசியமாய்ப் புறம்புமசையாதவள்போல.

(இ-ள்) களத்திர ஸ்தானதிபதி என்னும் 7-ஆம் வீட்டோன் குருவாக இருந்து பாவகிரகங்களுடன் கூடியும், தீயராசிகளிலும் சேர்ந்து தீயகிரகங்களால்பார்க்கப்பட்டாலும் சனிஅங்கிசைப்பெற்றாலும் அவன்மனைவிஉத்தமமுடையபத்தினியைப்போன்றுநடித்து ஒருவருமறியாமல்சோரம்செய்வாள்.

(வி-ரை) களத்திர ஸ்தானதிபதி குருவாகவே இருந்து மேற்சொல்லிய பாவராசியிலும், பாவகிரகங்களாலும் பீடிக்கப்பட்டு, ஜெனன லக்கினத்திற்கு குடும்ப ஸ்தானம்பெறில் அவன் மனைவி கணவனைச் சார்ந்தவர்களையே விபசாரம் செய்வாளென்றும் கூறுவர். (687)

போகுங்களத்திராதிபதி புகராய்ப்பாவருடன்கூடி
ஏகும்பாவர்பார்த்திருக்க யெழிலார்சத்துருவங்கிசையில்
ஆகும்பாவரங்கிசையி லமர்ந்தேயிருக்கஅன்னியர்பால்
தாகமுடனேசஞ்சரிக்கச் சமர்த்தாய்ச்சோரஞ்செய்திடுவள்.

(இ-ள்) 7-ஆம் வீட்டோன் என்றும் களத்திர ஸ்தாஞதிபதி சுக்கிரனுகவே இருந்து பாவகிரகங்களுடன்கூடி பாவகிரகங்களால் பார்க்கப்பட்டு பாவகிரகங்களின் அங்கிசையிலாவது தனக்குச் சத்துருவாயிருக்கும் அங்கிசத்திலாவது இருக்க, அவன் மனைவி அந்நியர்களிடத்தில் விசுவாசித்து சாமர்த்தியத்தோடும் இலகுவோடும் சோரம் செய்வாள் எ-று. (688)

ஏழாமிடத்தோன்பாவருட னிரண்டிலிருக்கச்சேய்பார்க்கச்
சூழும்விபசாரத்தொழிலால் சுதனுமுண்டாமெனச்சொல்வர்
வாழும்லக்கினத்துடையோனும் வரவாறெட்டிற்பன்னிரண்டில்
தாழ்வாயிருக்கப்பெண்ணிரண்டு தானுங்கொள்வன்தப்பாதே.

(இ-ள்) 7-ஆம் ராசியதிபதி பாவகிரகங்களுடன் சேர்ந்து இரண்டில் இருந்து அங்காரகனுல் பார்க்கப்பட்டால் அவன் மனைவி செய்யும் விபசாரத்தினுலே பிள்ளைகளுண்டு எனவும் கூறுவர். ஜெனன லக்கினுதிபதி 6-8-12-ல் இருந்து 7-ஆம் வீட்டோனும் மேற்சொல்லியபடி இருந்தால் அவன் மனைவிசெய்யும் விபசாரத்தினுலே இரண்டு பிள்ளைகளைப் பெறுவாள் எ-று.

(வி-ரை) 7-ஆம் ராசிக்குடையோன் மேற்சொல்லிபடி இருந்தால் விபசாரத்தினுல் புத்திரனுண்டு என்றனர். தனுசு கும்பம் லக்கினமாக இருந்து, மேலே எழுதியுள்ள கிரகமிருந்தாலும் விபசார புருஷனுல் இந்த ஜாதகனுக்குச் சத்துருத்துவம் நேரும் என்பர். (689)

கொள்ளும்லாபாதிகளத்திராதி கூடினுலும்பார்த்தாலும்
தெள்ளும்பலவானுகியிவர் திரிகோணத்திலிருந்திடினும்
உள்ளவிவாகமூன்றென்றே யுரைப்பர்கணிதவல்லோர்கள்
கள்ளவிடம்போல்விழிமருட்டுங் கருமென்குழனற்காரிகையே.

(இ-ள்) அழகிய கறுத்த கண்களும், மன்மதனையும் மயங்கச்செய்யும் அன்னத்தைடபோன்ற நடையும், சந்திரனைப் பழிக்கும் லாவண்யமும், திருட்டுப்பார்வையும், உருட்டிப் பார்க்கும் கண்களையும் உடையவளே! லாபாதிபதியும் களத்திராதிபதியும் ஒன்றுகூடி இருந்தாலும், அல்லது ஒருவர்க்கொருவர் பார்த்தாலும், மேற்சொல்லிய இருவரும் பலம்பெற்று திரிகோணங்களில் இருந்தாலும் அந்த ஜாதகனுக்கு 3-விவாகம் நடக்கும் என்று சாஸ்திர வல்லவர்கள் உரைப்பார் எ-று. (690)

லக்கினந்தனக்கேழ்தன்னில் வியத்தினிற்சோமன்ருனும்
புக்கவேபாவரங்கிசையிற் பொருந்தியேயிருந்தகாலே
சுக்கிரன்பாவரோடுந் துலங்கவேயிருக்கநாரி
கைக்கொளும்புருடனுன கணவனைக்கொள்வள்கண்டீர்.

(இ-ள்) ஜெனன ராசிக்கு 7-அல்லது 12-இவ்விடங்களில் சந்திரனிருந்து அவ்விராசியானது தீயராசியாயும், பாவகிரகங்களின் அங்கிசத்திலும் இருக்க, சுக்கிரன் பாவகிரகங்களுடன் கூடி இருக்க தான் மணந்த மனைவியே தன்னைக் கொல்வாள் எ-று.

(வி-ரை) 5-6-12 இவ்வீட்டோர் அங்காரகனுடன்கூடி 4-ஆம்ராசியில் இருக்க, 2 ஆம வீட்டில் சுக்கிரனிருந்து குரு பார்வையற்றிருக்க அந்தஜாதகன் தன் தாய்க்குச் சமானமான ஸ்திரீயைச்சேர்வான் எனக் கூறுவர். ()

ஏழாம்பாவகம் முற்றிற்று.

# எட்டாம் பாவகம்



[இதுவரையில் ஏழாம் பாவகத்தைக் குறித்து களத்திர பாவகங்களைக் கூறிவந்தனர். இங்கு எட்டாம் பாவகத்தைச் சொல்வாராயினர். எட்டாம் பாவகத்தைக்கொண்டு சொல்லவேண்டிய விவரங்களை முன்கூறிய பொதுப்பாவகத்தில் எட்டாம் செய்யுளில் நன்கு விளக்கினோம். ஆகையால் ஆயுள் விவரத்தையும் ஆயுள் அறியும் வகையையும், ஒவ்வொரு இராசிக்கும் சுபன்-அசுபன்-மாரகன் என அறியுமாறு கூறுவார்.]

## ஆயுட் பலன்

அட்டமத்ததிபன்பாக்கி யாதிபனுகிநிற்கில்
அட்டமத்ததிபன்பாவி யாகிலுமையமில்லை
அட்டமத்ததிபனுச்ச மாகினுமானநற்கோள்
அட்டமத்ததிபன்றன்னைப் பார்க்கினூருண்டிருப்பன்.

(இ-ள்) அஷ்டமத்தோன் என்னும் 8-ஆம் வீட்டோனுகிய ஆயுள்ஸ்தானுதிபதிக்கு 9-ஆம் இடமாகிய பாக்கிய ஸ்தானமும், ஆகவே க்ஷேத்திரமாய் இருந்தாலும், அல்லது 9-ஆம் இராசியிலேயே இருந்தாலும், அவ்வீட்டுக்குடைய கிரகம் கொடிய பாபியாக இருக்கினும் குற்றமில்லை அஷ்டமாதியாகிய 8-ஆம்வீட்டோன் நற்கோளாயும் உச்சனுமாகயிருக்கினும் உச்சனுக இருந்து பார்க்கினும் அவனுக்கு நூறுவயதென்று சொல்லுக எ-று.

(வி-ரை) வயது சொல்வதென்ருல் சகடை பாலஅரிட்டம், இவைகள் உண்டா? இல்லையா? என்று அறியவேண்டும். அப்படி இருந்தாலும் அவை நீங்கும், நீங்காது என தெரிந்தபிறகே வயதின் அளவைக் கூறவேண்டும். பாலாரிட்ட விவரங்களை 72-ம் செய்யுளில் விபரமாகக் கூறப்பட்டன. இங்கு அஷ்டம ஸ்தானத்தைக்கொண்டும், அஷ்டமாதி நின்ற க்ஷேத்திரத்தைக்கொண்டும், எட்டாம் வீட்டோனுடன் கூடிய கிரக சேர்க்கையைக் கொண்டும் ஆராய்ந்து கூறவேண்டுமாகையால் மேலே சொன்ன அஷ்டமாதிபதி சுபனுய் தீயக்ஷேத்திரங்களில் இருந்து அந்த லக்கினத்திறகு மாரகாதிபர்கள் பார்க்கில் அவனுக்கு நூறுவயது என்பது கூடாது.

எப்படியெனில்,

> ஏருகோ லெட்டாம்பாவ ரிருக்கவே இரவிபார்க்க
> கூருமோ ராண்டிற்சாவாங் கொழுங்கன்னி பாகையொன்றில்.

என்றதால் துலாராசி அஷ்டம ஸ்தானமாகி அதில் பாவகிரகங்கள் இருக்க, சூரியனுல் பார்க்கப்பட்டால் அவன் 1-வருஷத்தில் இறந்துபோவான் என ஜாதக சிந்தாமணியில் சொல்லியபடி 8-ஆம் வீட்டோன் பாவனுனுலும் ஐயமில்லை என்ருலும், அவன் நின்ற ராசியையும், பார்த்த கிரகமும் எவ்வாறென அறிந்தே வயது கூறுக. வயது கூறும் விவரங்களை இவ்வாறு அறிந்தாலும் கெண்டாதி தோஷங்களை முக்கியமாய்க் கவனிப்பது நலம். அதன் விபரமாவது: ஒவ்வொருவருக்கும் அடிக்கடி நோய் வருவது சகஜம். சிலர் எந்நாளும் நோய் என்பதே இல்லாமலிருப்பார். இவை இராசி கிரகத்தைக்

கொண்டு நோயுள்ளவனெனவும் நோயில்லாதவனென்றும், 6-ஆம் பாவகத்தில் உள்ளபடி ஆராய்ந்து நோய் உண்டாகுமெனில், எந்த திசை எந்த புத்தியில் உண்டாகும் எனவறிந்து அக்காலம் கோசாரரீதியாய் கெண்டங்களைத் தரவேண்டி இருக்கிறதாவென்றும் ஆராய்ந்து சொல்லவேண்டும். இவ்வாறு கண்டபிறகே ஆயுளை நிர்ணயிப்பது நலம். (692)

பங்குபாதகன்செவ்வாயைப் பற்றியபுசிப்பிற்காரி
தங்கியதிசையிற்செவ்வாய் தானுகந்திடுபுசிப்பில்
அங்கவனட்டமாதி திசையினிலவன்புசிப்பில்
மங்குகோசரநன்றுயின் வருத்துநோய்மாறுந்தானே.

(இ-ள்) சனி அங்காரகன் திசையில் புசிக்குங்காலங்களிலும், ஜெனன லக்கினத்திற்கு அஷ்டமாதிபதி திசையில் அவன் புசிக்கும் காலங்களிலும், சனிதிசையில் அங்காரகன் புசிக்கும்காலங்களிலும் மேற்சொல்லிய கெண்டாதிதோஷங்களுண்டாயினும் அக்காலங்களில் தினசரிகோசாரப்படி நன்மையாயிருக்குமாகில் அவன்படும் நோய்முதலியகெண்டங்கள் பரிகாரமாம்.

(வி-ரை) 'மாரகஸ்தானம்'என்பது ஆயுள்ஸ்தானமென்பதும் ஜெனன ராசிக்கு 8-ஆம் இடமும், அதற்கு எட்டாம்வீடாகிய ஜெனனராசிக்கு 3-ஆம் இடமும் ஆயுள் விபரமறியும் ஸ்தானங்களாகும். அந்த ஆயுள் ஸ்தானங்களுக்கு வியமென்னும் 12-ஆம் இடமாகிய ஜெனனராசிக்கு 2-7 இவ்விடங்களே மாரக ஸ்தானமாகும். 7-ஆம் இராசியைவிட இரண்டாம் இராசியே மிக பிரபல மாரக க்ஷேத்திரமென்றும், அந்த ஸ்தானாதிபதிகளை விட அவர்களோடு சம்மந்தப்பட்ட பாவகிரகங்களும், மாரக ஸ்தானங்களிலுள்ள பாவகிரகங்களும், பிரபலமான மாரகர்களென கண்டறிந்துகூறுக இதனை சோதிட சில்லரைக்கோர்வை என்னும் சோதிட சாராமிர்த சாரத்தில் விவரமாய் அறியலாம். (693)

வேறு

ஆறெட்டுபனிரெண்டா மதிபரோடு
மலதிவர்மூவர்க்கைந் தொன்பானிலேனும்
வீறிட்டசனிமேவிற் சரீரபீடை
மேவியவெட்டாதிபன் கேந்திரத்திலேனும்
பேறிட்டசன்மாதி பதியும்துர்ப்பலனாய்ப்
பெறினுலெட்டாண்டென்று பேசலாகும்
கூறிட்டசன்மாதி பலவானுகிற்
குலவும்வெகுவயதென்றே கூறலாகும்.

(இ-ள்) ஜெனன ராசிக்கு 6 8-12 என்னும் ராசியதிபர்களோடும் அல்லது இம்மூவர்கள் நின்ற ராசிக்கு 5-9 இவ்விடங்களிலும் வீரபராக்கிரமம்பொருந்திய சனி இருக்கப் பிறந்த ஜாதகனுக்கு சரீரபீடை உண்டு. 8-ஆம் ராசியதிபனென்னும் ஆயுள் ஸ்தானாதிபதி கேந்திரமாகிய 1-4-7-10 ஆம் ராசிகளில் இருந்து பெருமையைப்படைத்த ஜெனனராசியதிபதி துர்ப்பலமாய் இருக்க, அந்த ஜாதகனுக்கு 32-வயது தான் என்று சொல்ல வேண்டும். இலக்கினாதிபதி பலம்பெற்றிருக்க, அவனுக்குப் பூரண ஆயுள் என்று சொல்லவேண்டும் எ-று.

(வி-ரை) பூரண ஆயுளை அறியும் விபரம் எப்படியெனில், ஜெனன லக்கினாதிபதி சந்திரன்நின்ற லக்கினாதிபதி அஷ்டமாதிபதி சனி இவர்கள் எவ்விதங்களாலும் தன்பலமிழக்காதிருந்து, அவர்கள் சுக்கிரன்-புதன்-குரு இவர்களோடு சேரவும் பார்க்கவும் இருந்தால் அவனுக்கு எல்லா கெண்டமும் நீங்கி, பூரண ஆயுளுடன் இருப்பானென கேரளத்தில் சொல்லியபடி அஷ்டமாதிபதி பலம்பெற்றும், லக்கினாதிபதி பலமிழந்தும், தீயகிரக சேர்க்கையுடன் இருந்தால் அவனுக்கு அற்ப ஆயுளென்றே கூறவேண்டும். மேற்சொல்லிய மூவரும் நீச்ச சத்துருக்களாய் பாபக்ஷீணம் பெற்றாலும், நீச்சம் பகை பெற்ற கோட்களுடன் கூடி இருந்தாலும், 6-8-12 இவ்விடங்களில் இருக்கினும் ஆயுள் மத்திபமென்றே கூறுவர். மேற்சொல்லிய கோட்கள் பலம் குறைந்து எந்தராசியில் நின்றார்களோ அந்த ராசிவர்க்கத் ததிபர்களும் நாசமாவர். நாசமுண்டாகும் காலம் எதுவெனில், அவர்கள் அஷ்டகவர்க்க கோசாரரீதியாய் பார்வையுண்டாகும் காலங்களில் உண்டாகும். 8-ஆம் வீட்டோன் 12-ல் இருந்து 8-ஆம் அதிபதி திசையே ஜெனன காலத்தில்வரின் அத்திசையிலேயே ஜாதகன் மரணம் அடைவானென்றும் இவை பிரம்மா விதித்ததெனவும் வீமேசுர உள்ளமுடையானில் சொல்லியபடி ஆராய்ந்து கூறுக. (694)

வேறு

கூறுங்கடகமுதலாறு ராசிக்குள்ளேகுருவிருக்க
வீறுமகரமுதலாறுக் குள்ளேகாரிமேவுகினும்
பேறுங்கடககேந்திரத்திற் பிருகும்புதனும்பெறநிற்கில்
மாறுதுறுந்தீர்க்காயுளுடன் வையந்தன்னில்வாழ்வாரே.

(இ-ள்) குருவுக்கு உச்சவீடாகிய கடகமுதல் ஆறு ராசிக்குள் குரு இருக்கவும், சனிக்கு ஆக்ஷிவீடான மகரம் கும்பம் முதல் ஆறு ராசிக்குள் சனி இருந்தாலும், கடகராசிக்கு கேந்திரமென்னும் 1-4-7-10-ஆம் இடமாகிய கடகம்-துலாம்-மகரம்-மேஷம் இவ்விராசிகளில் சுக்கிரனும் புதனும் பலம்பெற்று நிற்க, அந்த ஜாதகனுக்கு எவ்விதத்திலும் ஆயுள் அழிவில்லாமல் பூரண ஆயுளோடு இப்பூமியில் வாழ்ந்திருப்பான் எ-று. (695)

வாழுமகரமுதலாறின் மந்தனிருக்கக்கடகமுதற்
சூழும்ராசியாறுக்குட் சோமனிருக்கக்கேந்திரத்தில்
வீழுமரசனுறிற்றீர்க்க வயதாமெட்டிற்குசனிருக்க
ஏழுங்கதிரோரைகளாக வேழிற்கேந்திரநூருண்டே.

(இ-ள்) மகரம்முதல் ஆறு ராசிகள் என்னும் மகரம்-கும்பம்-மீனம்-மேஷம்-ரிஷபம்-மிதுனம் இந்தராசிகளில் ஒன்றில் சந்திரனும், கடகமுதல் ஆண் ராசிக்குள் குரு இருக்கவும் பிறந்தவனுக்கு தீர்க்கவயதென்று சொல்லுவார். ஜெனன காலங்களில் சூரிய ஓரையும், ஜெனன ராசிக்கு ஏழாம் கேந்திரத்தில் குருவும், 8-ல் குஜனும் இருப்பரேல் அவனுக்கு நூறு வயது என்றும் கூறுவர் எ-று.

(வி-ரை) மகரகும் பத்தின் மைந்தன் மதிநீச்ச வம்சை யின்றி
உயருச்ச வம்சை யாகி யோங்கியே நின்றா ராகில்

*சகரமொத் ததுபோல் செல்வம் சேர்ந்தநின் றுலகில் வாழ்வன்*
*விபரமுற் றுடையோ னுகி மேதினியில் இருப்ப னூருய்.*

என்றபடி, மகர-கும்பத்து ஆகுதிநாதனை சனி, பகை நீச்சம் அஸ்தமய மின்றி உச்சம்பெற்றும் பலம்பெற்றும் இருந்தால் மலைகளைப்போன்ற குவியலையுடைய செல்வத்தைப்படைத்த நூறுவயதோடுவாழ்ந்திருப்பானென்று கேரளத்தில் சொல்லியபடி, மகரம் முதல் ஆறுராசிக்குமேல் சனி இருந்தாலும் உச்சம் முதலியவைகளால் பலம்பெற்று இருக்கிறுனு என்று அறிந்து சொல்லுக. (696)

**ஆண்டமிதுனமுதலாறில் அரசனிருக்கத்தனுமுதலாய்**
**தீண்டும்ராசியோராறில் திரிகோணங்கேந்திரந்தன்னில்**
**நீண்டபுதனுஞ்சுக்கிரனு நிற்கிற்றீர்க்கசீவனுமாம்**
**பாண்டியரசன்மின்கொடியைப் பழித்தகருங்கட்பைங்கொடியே.**

(இ-ள்) மிதுனராசிமுதல் ஆறு ராசிக்குள் குரு இருக்கவும், தனுசு முதல் ஆறும்ராசியான ரிடபத்திலும், ரிடபமுதல் கேந்திரம் திரிகோணம் என்னும் ராசிகளில் பொருமையைப்படைத்த புதனும் சுக்கிரனும் நிற்க, தீர்க்க ஆயுளுண்டாகுமென்று பாண்டியன் கொடியிலுள்ள மகரமீன்களைப் பழிக்கத்தக்க அழகான கண்களை யுடையவளே! சொல்வாயாக எ-று.

(வி-ரை) *செங்கரு நீல நின்ற சேர்மனைக் காரே ழெட்டில்*
*சுங்கனும் புந்தி பொன்னும் சுபமதா யிருக்க மற்றோர்*
*எங்கனு மிருந்த ராசி இவனுக்கே வயது நூறு.*

என கேரளத்தில் சொல்லியபடி, சனி நின்ற ராசிக்கு 6-7-8 இவ்விராசியில் குரு-புதன்-சுக்கிரன் இவர்கள் பலம்பெற்று இருந்தால் அந்த ஜாதகனுக்கு வயது நூறு என்றபடி ஆயுள்ஸ்தானுதிபதியும் மற்ற கிரகங்களும் எவ்வாறு இருக்கிறரென அறிந்து ஆயுள் சொல்லுக. (697)

**கொடியேகுருசுக்கிரநான்கா மிடத்திற்குடிகொண்டேயிருக்க**
**நெடியசன்மலக்கினத்தி னிலவுமிருக்கவிவர்க்குநடு**
**கடியசனியீச்சுரனிருக்கக் கண்டவயதாமொருநூறே**
**பிடியுமிளம்பேடன்னமுமுன் பின்னேதொடருநடையாளே.**

(இ-ள்) பிரக்கியாதி பெற்ற ஜெனன ராசிக்கு நான்காமிராசி என்னும் சுகஸ்தானத்தில் குரு-சுக்கிரன் கூடியிருக்க, ஜெனனராசியில் இரவிற்கு அரசனை சந்திரனிருக்க, அந்த ஜாதகனுக்கு வயது நூறென அன்னத்தைப்பழித்த நடையுடைய பெண்ணே! சொல்வாயாக எ-று.

(வி-ரை) *தேய்மதி யுதய நிற்கச் சிறந்தநா லெட்டில் வெய்யோன்*
*வாய்மலர்ந் திருக்கி லெட்டாம் வருடத்தி லரிட்டம் காட்டும்*
*மாய்மதி இரவி எழி லாகநீக் கோட்கள் நோக்க*
*வேய்மதி மூர்த்தி பாம்போ டிருக்கிலெட் டாண்டில் சாவே.*

என்றபடி ஜெனனராசியில் சந்திரன் நிற்க, 4-8 இவ்விடங்களில் சூரியன் நிற்க, அந்த ஜாதகன் பிறந்த 8-ஆம் வருடம் கெண்டம்காட்டும். 7-ல் சூரிய

னும் சந்திரனும் இருந்து தீயகிரகங்களால் பார்க்க, 8-ஆம் ஸ்தானாதிபதி பாம்புடன் கூடியிருக்கினும் 8-ஆம் ஆண்டில் சாவென்று சாதக சிந்தாமணி யில் கூறியபடியால் ஜெனன லக்கினத்தில் இருக்கும் சந்திரன் வளர்பிறை உள்ளவனா? தேய்பிறை உள்ளவனா? என்றும் ஆராய்ந்துசொல்லவேண்டும்.

**நடிக்குஞ்சன்மமுதனான்கா மிடத்துநடுவேநாற்கலையும்**
**படுக்கும்புதன்சுக்கிரனரசன் பரிந்தேயிருக்கிற்தசவருஷம்**
**துடிக்கும்புதனொன்றேனின்றால் தொடர்முப்பத்துமூன்றாகும்**
**அடிக்கும்வெள்ளிக்கறுபத்தா றரசனிருந்தானூருமே.**

(இ-ள்) நான்கு வேதங்களையும் ஆராய்ந்து அறிந்த புதன்-குரு-சுக்கி ரன் இவர்கள் ஜெனனராசிமுதல் நான்கு ராசிக்குள்ளிருக்க, அந்த ஜாதக னுககு வயது 10 எனவும, புதன்மாத்திரம் தனித்திருந்தால் 33-வயதும், சுக்கிரன் தனித்திருந்தால் 66-வயதும், குரு தனித்திருந்தால் நூறு வயது என்றும் கூறுவாய எ-று.

(வி-ரை) குருசனி மதிசேய் கூடிற் குலவைந்தா மாண்டில் கெண்டம்
முருகுசேய் கேந்திர மேற மூர்த்தியோன் பலகே டாக
வருகுமோ ரைந்தி லெட்டில மதங்கிறக வருட மைந்திற்
பெருகுமோரா குழவிக் கீனம் பேசுவர் பேதை மாதே,

என்றபடி, குரு-சனி-சந்திரன்-அங்காரகன் இவர்கள்கூடி எந்தராசியிலிருந் தாலும ஐந்தாம் ஆணடில் கெண்டம. அங்காரகன் கேந்திரம் பெற்றும், லக்கினாதிபதி பலயீனம்பெற்றும, 5-8 இவவிடங்களில் சந்திரனிருகக, அநத குழவி பிறநத 5-ஆமவருடத்தில் கெணடமென்று சாதக சிந்தாமணி யில் சொல்லியபடியால் 4-8-ல இருக்கும் கிரகத்திற்கு ஏற்றவாறு வயது கூறுவது நலம். (699)

**ஆமட்டமத்திநாதிபனும் அட்டமத்திலமர்ந்திருக்க**
**சோமனபாவருடனகூடி யிரண்டாறெட்டிற்சூழ்ந்திருக்கில்**
**தாமுமவயதைமபத்தெட்டாந் தருமஞானிதானவன்**
**காமன்கணையைப்பழிததயிலைக கடிநதுமருட்டுங்கண்ணாளே.**

(இ-ள்) மன்மதன் ஏவும் கணைகளை விறட்டி உருட்டி மருட்டுங் கண் களை யுடையவளே! அஷ்டமாதிபனனும ஆயுள ஸ்தானாதிபதி தன் சுய வீட்டில ஆக்ஷிபெற, சநதிரன் பாவகிரகஙகளுடன் கூடி, 2-6-8 இவ்விடங் களிலிருகக, அந்த ஜாதகனுக்கு வயது 58 எனறும், அவன் உண்மையும் தருமாரத்த ஞானியும ஆவானென்று சொல்வாய் எ-று.

(வி-ரை) ஜெனனராசிக்கு எட்டாம்ராசிக்கும் அதற்கு எட்டாம்ராசிக் கும் இருபககஙகளிலும சுபகிரகங்களிருக்க, அவன் மேன்மையான மேதா வியும், நூறுவயதுடையவனும் ஆவானென்றும் கூறுவர். (700)

**கண்ணார்குமபலக்கினமே கண்டசன்மலக்கினமாய்ப்**
**பணணாரதறகெட்டாஙகிசையிற பயிலுமரசன்பரிந்துநிற்க**
**எண்ணார்பாவர்கேந்திரததி லில்லாதிருக்கஇவ்வுலகில்**
**தண்ணார்வருஷமறுபதுககுந் தானுறறிடுவர்தப்பாதே.**

(இ-ள்) ஜெனனலக்கினம் சனிக்கு ஆக்ஷிவீடாகிய கும்பமாகவிருந்து அதற்கு எட்டாம் ராசியான கன்னி என்னும் இராசியில் குருவிருக்க, கும்ப ராசிக்கு கேந்திரங்களாகிய 1-4-7-10 ஆம் ராசிகளில் பாவக்கிரகங்களன்றி சுபக்கிரகங்கள் இருக்க அந்த ஜாதகன் 60-வயது வரையில் ஜீவித்திருப்பா னெனக் கூறுவர் எ-று.

(வி-ரை) மேற்சொல்லியபடி கேந்திரங்களென்னும் கும்பம்-ரிடபம்-சிங்கம்-விருச்சிகம் இவ்விராசிகளில் பாவகிரகங்களிருந்து கும்பலக்கினம் ஜெனனமாகப் பிறந்தவன்,

கேந்திரமாம் பாவர் நிற்க இளர்சுபர் பாரா ராக
சாய்ந்தசந் திரனு ரெட்டில் சரியுலாண் டிருபதிற் சார்.

என்ற சாதக சிந்தாமணி வாக்கியப்படி, கேந்திரங்களில் பாபக்கிரகங்கள் இருந்து சுபக்கிரகங்கள் பாராமலிருக்க அவனுக்கு வயது 20 என்பர். ஆதலால் கேந்திரம்பெற்ற கிரகங்கள் சுபனு? அசுபனு? என ஆராய்ந்தும், மாரகாதிபர் என ஆராய்ந்தும் கூறுவது நலம். (701)

**தப்பாவில்லேலக்கினமாய் தன்னிற்குருவுந்தானிருக்க**
**இப்பார்குசனுந்தொடுகரும்பாம் பிவர்மூவோருந்தாங்கூட**
**மெய்ப்பாரெழுபத்தைந்தாகு மேவும்பாவர்கேந்திரத்தில்**
**ஒப்பார்சன்மத்தாதியெட்டி லுறிலாண்டிருபத்தெட்டாமே.**

(இ-ள்) ஜெனனராசி தனுசு என்னும் ராசியாய், அவ்வீட்டிற்கு ஆக்ஷி நாதனுகிய குரு ஆக்ஷிபெறினும, சந்திரனேடு குஜனும் ராகுவும் இம்மூவ ரும் கூடியிருக்க, அந்தஜாதகனுக்கு வயது 75 என்பதாம். பாவக்கிரகங்கள் மேற்சொல்லிய கேந்திரங்களிலும், ஜெனன ராசியதிபதி ஆயுள் ஸ்தான மான 8-ஆம் ராசியிலுமிருக்க அந்த ஜாதகனுக்கு வயது 28 என்பர் எ-று.

(வி-ரை) மேற்சொல்லிய குரு ஆக்ஷிபெறில் பாவகிரகங்கள் கேந்திரம் பெறினும் வயது பூரணமெனறும, லக்கினதிபதி 8-ல் நின்று கேந்திரங் களில் பாவகிரகங்கள் இருக்க அற்பவயது என்பதும் இச்செய்யுளின கருத்தாம்.

சாவது மெய்தான் சொல்வாய் சனிக்கெட்டி லிரவி நிற்க
ஆவது கலையு யர்ந்த பூரண மதியைப் பாம்பு
நாவது நீட்டிப் பார்க்க நாளிலத் துதித்த காலே
போவது மெய்தான் சாவே பொலலாத கெடுதி மாதே.

என்றபடி, வளர்பிறைச சந்திரனே ராகு கேதுக்கள் பார்த்தாலும், சனிக்கு எட்டாம் ராசியில் சூரியன் இருந்தாலும், அந்தக் குழவியானது அநேக கெடுதியுடன் நிச்சயமாய் இறந்துபோகுமென கேரளத்தில் சொல்லியபடி கேந்திரம்பெற்ற கிரகங்கள சுபாசுபம் அறிந்து சொல்லுக. (702)

**எட்டாம்பாவரங்கிசையில் இனியோரிருக்கக்கேந்திரத்தில்**
**மட்டார்பாவர்தாமிருக்க வயதுமறுபத்தாருகும்**
**கெட்டார்சுபரங்கிசைதன்னிற் சென்மாதிபனுந்தானிருக்க**
**எட்டாறிலெட்டாதிபதி யிருக்கிலேம்பதென்பாரே.**

(இ-ள்) சுபகிரகங்கள் அஷ்டம ஸ்தானாதிபதியின் அங்கிசம்பெற்றும், 1-4-7-10 என்னும் கேந்திர ராசிகளில் சுபக்கிரகங்கள் இருக்கவும், அந்த ஜாதகனுக்கு வயது-66 ஆகும். ஜெனன ராசியதிபதி சுபகோட்களின் அங் கிசம்பெற்று, அஷ்டமாதிபதி தன் சுயக்ஷேத்திரத்தில் ஆக்ஷிபெற்றாலும், அல்லது 6-ஆம் ராசியிலுமிருக்க அந்த ஜாதகனுக்கு வயது 50 என்பர்.

(வி-ரை) அஷ்டமாதிபதி ஆக்ஷிபெற்றால் வயது 50 என்று கூறினர். ஆனதால் 8-ல் நின்ற கிரகங்கள் வலிவறிந்தே சொல்லவேண்டும்.

ஏனெனில்,

எட்டிற் காரி குஜன்கூடி இருக்கப் பாவி மனையேறில்
தொட்ட லக்கி னேசனுடன் சூழ குஜனும் தானிருக்க
எட்டே ஆண்டு தப்பாது இனிய தகப்பன் புத்திரனும்
வட்ட மறவே மனைவேகும மனையும் பாழா மென்றுரையே.

என்றபடி, எட்டாம்ராசி பாவர் மனையாகி அதில் சனி செவ்வாய்கூடி இருந் தாலும், லக்கினாதிபதியோடு குஜன்கூடியிருக்க, அந்தஜாதகன் தகப்பனும் புத்திரனும் கட்டாயம் தப்பாமல் இறந்துபோவார். அவ்வீடும் தீப்பட்டு எறிந்து பாழாய்ப் போய்விடும் என்று வீமகவி நூலுடையார் கூறியபடி ஆராய்ந்து கூறுவாயாக. (703)

என்பாரெட்டாமதிபதியு மிலக்கினத்திறைதிபனும்
ஒன்பாறுதிநற்கோளேல் உயிர்போந்தந்தைக்கருகின்மைந்தர்
அன்பாயிருப்பர்சன்மத்தி லரவுங்கதிர்சந்திரனிருக்க
வன்பாம்வியத்திற்குருவிருக்கில் வயதுமிருபத்தெட்டாமே.

(இ-ள்) ஜெனன ராசியதிபதியும் அஷ்டமாதிபதியும் இவர்களோடு 9-ஆம் ஸ்தானாதிபதியாகிய பிதுரு ஸ்தானாதிபதி இம்மூவரும சுபனாகவே இருககில் அநத ஜாதகன் பிதா இறநதுபோவான எனறும், புத்திரன் செளககியத்தோடிருப்பான என்றும், ஜெனனராசியில் ராகு-கேது-சூரியன் சந்திரன் இவர்களிருக்க, 12-ல் குரு இருக்க, அந்த ஜாதகனுக்கு வயது 28 என்பார எ-று.

(வி-ரை) 1-8-9 இவ்வீட்டிற்கு உடையோர் சுபனாகில் தந்தைக்கு தோஷமென்று சொன்னதால், பிதுரு ஸ்தானத்திற்கு 4-12 இவ்விடத் ததிபதி சுபனாகிலும், அவ்வீட்டில் இருக்கும் கோட்களின் இயல்பறிந்து மேற்சொன்ன தோஷங்களைக் கூறவேண்டும். அவர்கள் ஆக்ஷி உச்சம் பெறின் பிதாவுக்கு தோஷம் சொல்வது கூடாது. இதன்விபரம் பின்வரும் செயயுளில் காணலாம. (704)

வேறு

ஆகும்லக்கின மெட்டாதிகூடியே
வாகுகேந்திரத் தெய்தமற்றெட்டினில்
தாகுமேடெவ ராயினுந்தானுறில்
ஏகுவன்பன்னி ரெண்டினிற்கண்டமே.

(இ-ள்) ஜெனன ராசியதிபதியும், 8-ஆம் வீட்டோனுன ஆயுள் ஸ்தானாதிபதியும் கூடி கேந்திரம்பெற, 8-ஆம் ராசியில் ஏதேனும் ஒரு கிரகம் கூடில் அந்த ஜாதகன் ஜெனித்த 12-ஆம்வருடத்தில் இறந்துபோவான்.

(வி-ரை) ஜெனன ராசியில் சுபகோட்களும், குருவோடு பாவகோட்களும், சுக்கிரன்-ராகு-கேதுவோடுக்கூட, சனி நின்ற ராசிக்கு 7-ஆம் ராசியில் ஜெனன ராசியதிபதியும் நிற்க, அவன் 25-ஆம் வயதில் இறந்து போவான் என்றும் சொல்வர். (705)

வேறு

கண்டவேழெட்டாறிடத்திற் கதித்தநல்லோர்தாமிருக்க
அண்டின்மூன்றிற்பன்னொன்றில் சுபருற்த்தீர்க்காயுளுண்டாம்
கொண்டவெட்டாதிபனுச்சங் கொளச்சென்மாதிபன்றானும்
மிண்டியினியோர்காணக்கேந் திரத்திலிருக்கவெகுவயதே.

(இ-ள்) ஜெனன ராசிக்கு 6-7-8-ஆம் ராசிகளில் மேன்மையைப்பெற்ற சுபகிரகங்கள் இருக்க, 3-11 இவ்விராசிகளில் சுபகிரகங்களும் இருக்க, அந்த ஜாதகனுக்கு தீர்க்க ஆயுளுண்டு. 8-ஆம் வீட்டோன் உச்சம் பெற்று, ஜெனன லக்கினாதிபதி நல்லோர் பார்வைபெற்று கேந்திரம்பெற்று இருந்தால் அந்த ஜாதகனுக்கு தீர்க்க வயதாமென்று உரைப்பார் எ-று.

(வி-ரை) 8-ஆம் வீட்டோனும் அதற்கு எட்டாம் வீட்டோனும் சந்திரனுடன் சேர்ந்து லக்கின கேந்திரம்பெற, பாவவர்க்கமும் நீச்சம் பகை முதலியவைகளால் பீடிக்கப்படாத குரு பார்க்க, அவனுக்குப் பரமன் கொடுத்த வயது 100-என்றும் சோதிடவல்லவர் கூறுவர். (706)

தேரும்வயதினளவுரைப்பக் கேண்மின்சன்மாதிபன்றனக்கும்
ஊரும்பரித்தேரோன்றனக்கும் உறவாகிற்றீர்க்காயுளுண்டாம்
ஏருஞ்சமமேன்மத்திமமா மெட்டெட்டாண்டேயினிதிருப்பன்
நேரும்பகையதாகிலற்ப நிலத்தினிலுலெட்டாண்டிருப்பன்.

(இ-ள்) வயதின் அளவைச் சொல்லவேண்டுவதெனில், ஜெனனலக்கினாதிபதிக்கும், குதிரைத்தேருடைய சூரியனுக்கும் உறவாகில் தீர்க்க ஆயுள் என்றும், சமமாகில் மத்திம வயதென்றும், அவன் 8-ஆண்டுகள் வரையிலுமே உயிரோடு இருப்பானென்றும், மேற்சொன்ன இருவருக்கும் பகையாகில் அற்பமென்றும், 32-ஆண்டு வரையிலுமே உயிரோடு இருப்பான் என்றும் கூறுவர் எ-று. (707)

இருக்குமற்பவயதுள்ளோன் இறப்பன்விபத்துதாரைதனில்
வருக்கமுடன்பூரணவயதோன் மரணவதைநட்சத்திரத்தில்
பெருக்கமுடனமத்திமவயதோன் பிரத்தியக்குத்தாரைதனில்
தருக்கும்அற்பவயதில்அற்பம் சாற்றககேண்மின்தரைமீதே.

(இ-ள்) அற்பவயது உடையவனுக்கு ஜனனநட்சத்திரத்திற்கு மூன்றாவது நட்சத்திர தசையிலும், பூரண வயதுடையவனுக்கு ஏழாவது நட்சத்திர தசையிலும், மத்திம வயதுடையவனுக்கு ஐந்தாவது நட்சத்திரதசையி

னும் ஆயுள் பூர்த்தியாகும். அற்பத்தில் அற்ப வயதை இரண்டுவலகிற் சொல்வேன் கேட்பாயாக எ-று.

(வி-ரை) ஜனன நட்சத்திரத்திற்கு 8-12-21-வது நட்சத்திரங்கள் விபத்து தாரைநட்சத்திரங்களாகும். 5-14-23-வது நட்சத்திரங்கள் பிரத்தியக்கு, அல்லது பிரத்தியா தாரை நட்சத்திரங்களாகும். 7-16-25-வது நட்சத்திரங்கள் வதைதாரை நட்சத்திரங்களாகும்.

இதனை, "அல்பாயுர் யோகஜாதஸ்ய விபத்தாயே ம்ருதிர்பவேத்
மத்யாயுர் யோக ஜாதஸ்ய ப்ரத்யக்தாயே ம்ருதிர்பவேத்
நைதநே தசாநஷ்டம் பூர்ணாயுர் யோக ஜஸ்யச."

(ஜோதிஷார்ணவ நவநீதம்)

அற்பாயுள் யோக ஜாதகத்திற்கு விபத்துதாரை தசையிலும், மத்திமாயுள் யோக ஜாதகத்திற்கு பிரத்தியக்குதாரை தசையிலும், பூர்ணாயுள்யோகஜாதகத்திற்கு நைதன-(வதை) தாரை தசையிலும் ஆயுள் பூரணமாகும்.

சிலர் அற்ப மத்திம பூரணாயுளில் பிறந்தவர்கள் முறையே விபத்து, பிரத்தியக்கு, வதைதாரை நாட்களில் ஆயுள் பூர்த்தியைப் பெறுவரெனவுங் கூறாநிற்பர்; அது எட்டுணையும் பொருந்தாது. இந்நூலாசிரியர் ஷை செய்யுளில் யாண்டும் தசையென்ற பிரயோகஞ் செய்யாமலிருக்க, தசையெனக் கூறத்துணிந்தது யாங்ஙனம் எனின்? கூறுதும். எடுத்துக்காட்டிய சுலோக வசனம் இறைவன் இறைவிக்கு அருட்செய்த ஜோதிஷார்ணவ நவநீதம் என்ற கிரந்தத்திலுள்ளது. ஷை சுலோக வசனத்தில் 'தாயே' எனவும், 'தசா' எனவும் பிரயோகம் இருத்தலினாலும், அவற்றிற்குத் தசை யென்பதே வண்மைப்பொருளாதலினாலும் நன்கு அறியலாம். "புலந்தரு தூவில்லாப் பொருளினைப் புகல்கிற் பானும்" என்ற திருவாக்குக் கிலக்காகப் பொருள் கூறி மயங்கவைத்தல் கற்றோர் கடமையாகுமா? என்பதை அறிஞர்கள் நோக்குவார்களாக.

"அல்பாயுர் யோக ஜாதஸ்ய விபத்தாராம் ம்ருதிம்வதேத்
தீர்க்காயுர் யோக ஜாதாநாம் வதபேதும் ருதிர்பவேத்
ஜாதஸ்ய மத்யமே யோகே ப்ரத்யாரிஸ்து ம்ருதிர்பவேத்."!

(பிருகத் பராசர ஓரை)

உதாரணக் கதை:—

ஒரு நகரில் விவேகமற்ற உபாத்தியாயர்கள் சிலர் இருந்தனர். அவர்களின் விவேகத்தை பரிட்சித்துப் பார்க்கவேண்டுமென்று அவர்கட்குத் தலைமை அதிகாரி இன்ன நாளில் இன்ன இடத்திற்கு நீவிர் பரிட்சிக்கப்படுதற்காக வருதல்வேண்டும் என அறிக்கையிட்டார். விவேகமும் சூட்சும ஞானமும் இல்லாத தடித்தபுத்தியையுடைய அவ்வுபாத்தியாயர்கள் பலரும் ஒன்றுகூடி நமது தலைவர் என்ன கேள்வி கேட்பாரோ தெரியவில்லையே என ஆலோசித்தனர். அப்போது அவர்களில் தேர்ந்த மந்தமதி ஒருவர் கற்றவர்களைப் பார்த்து, நான் முதலில் கேள்விக்கு பதில் எப்படி சொல்லுகின்றேனோ அதை ஒட்டியே நீங்களும் சொல்லுங்கள் என்று தீர்மானித்து குறிப்பிட்ட நாளில் பரிட்சை இடத்திற்குச் சென்றனர். தலைவர் வாயிற் பேசாமல் குறிப்பாக தலையை (ட) அக்கரம்போல அசைத்தனர். அவரது சூட்சும கருத்து 'வாரும் பக்கத்தில் உட்காரும்' என்ற பொருளில் இருந்

தை உணராது மந்தமதி உபாத்தியாயர் (ட) என்றவுடன், மற்றவர்கள் ட, டா, டி, என்று அரிச்சுவடி வரிக்கால்பாடம் முதலியவைகளை ஒரே மூச்சாக ஒருவர்பின் ஒருவராக நெட்டுருவாகச்சொல்லி முடித்தனின்றனர். அதுகண்ட பரிட்சைத்தலைவரும் ஏனையோரும் குலுங்க நகைத்தனர்.

இதற்கொப்பாக இந்தச் செய்யுளில் 'விட நட்சத்திரம்' என்பதற்கு விபத்து தாரை என்ற உண்மைப்பொருளை புணராது ஒருசிலர் அசுவினி யாதி நட்சத்திரங்களின் விஷகடிகை அமிர்தகடிகைகளை இதன் பொருள் எனக்கூறி மயங்குகின்றனர். அந்தோ! இவர்கள் அறியாமை இருந்தவாறு என்னேயோ?. வேறுசிலர் "பெருக்கமுடன் மத்திமவயது பிரத்தியதாரை அதுதன்னில்" என்பதற்கு மத்திம வயதுடையோர் பிரத்தியத்தாரைதசை யில் அதாவது ஜனனதசைக்கு 5-வதுத்தசையில் மரணமாவர் என்ற உண் மைப்பொருளை புணராது மத்திம வயதுடையவன் தாரையில் என்று பொருள் கூறுகின்றனர்; அது பொருத்தமுடையதல்ல. ஆதலின் இந்தச் செய்யுளின் உண்மைப்பொருளை அறிஞர்கள் நோக்கிப் பயனுறுவார்களாக. இந்த விபத்து, வதை, பிரத்தியக்குத் தாரைகளின் வயதில்லாதவர்கட்கு இத்தசை சம்பவிக்கின், அதாவது பூரணாயுர் யோகத்திற்கு வதை தாரை கெட்டது. அஃதின்றி விபத்து, பிரத்தியக்குதாரை தசைகள்வரின் அப் போது பிணி-நஷ்டம்-கஷ்டம் முதலிய தீயபலன்கள் உண்டாமென அறிக.

தருஞ்சன்மாதி பாவரங்கிசந் தரிக்கில்வயதற் பத்திலற்பம்
வருஞ்சன்மாதி சுபரங்கிசத்தில் வரஅற்பத்தின் மத்திமமாம்
அருள்சன்மாதி தனைநல்லோர் காணஅற்பத் தினில்தீர்க்கம்
உருமத்திமந்தீர்க் கந்தனக்கும் உளவிப்படிக்கண் டுரைமானே.

(இ-ள்) பிறந்த இலக்கினாதிபதி பாபக்கிரகங்களுடைய நவாம்சத்தில் இருந்தால் அற்பத்தில் அற்பவயதாகும். சுபகிரகங்களுடைய நவாம்சத்தில் இருந்தால் அற்பத்தில் மத்திம வயதாகும். சுபக்கிரகங்களுடைய பார்வை அல்லது சேர்க்கைப்பெற்றிருந்தால் அற்பத்தில் தீர்க்காயுசுஆகும். மற்றைய மத்திபத்தில் மத்திமம், தீர்க்கம், அற்பம் என்னும் வயதுகளுக்கும், தீர்க் கத்தில் தீர்க்கம், மத்திமம், அற்பம் என்னும் வயதுகளுக்கும் இந்த முறை யாகவே கண்டு சொல்லுவாய் பெண்ணே! எ-று.

(வி-ரை) இதன் விளக்கத்தைப் பின்வரும் 'சாதிகிரம ஆயுர்த்தாய சக்கரம்' என்ற பதகத்தினால் நன்கு அறியலாம். (709)

ஓராலக்கினம்

கதிரோன் உதயம் முதற்சனன காலை அளவுங் கடிகைதனை
எதிராய் எண்ணி இரண்டரையில் ஈந்தால் ஒரை லக்கினமாம்
சதிராய் சன்ம வீடுஒற்றை தானாகிற் சூரியன் முதலாம்
அதிராய்ச் சன்ம வீடுஇரட்டை ஆகிற் சன்மம் முதல்சரியே.

(இ-ள்) சூரியோதயமுதல் பிறந்த நேரம்வரை ஏற்பட்ட நாழிகையை $2\frac{1}{2}$-ஆல் வகுத்துக்கண்டது ஓராலக்கினமாகும். ஜனனலக்கினம் ஒற்றித்த இராசியாயின் சூரியன்முதலும், இரட்டித்த ராசியாயின் இலக்கினமுதலும் எண்ணி அறிதல்வேண்டும் எ-று.

(வி-ரை) 'ஓரை' என்பது இரண்டரைநாழிகை கால அளவை யுடைத்தானது. இதையே ஆங்கிலபாஷையில் (ஹவர்) என்றும், கிரீக் லாடின் பாஷையில் (ஓரா) என்றும் வழங்குகின்றார்கள். அஹோராத்ர சப்தத்தினுடைய பூர்வ வர்ணமான அகாரமும், பரவர்ணமான த்ராகாரமும் நீக்கப்படுவதனால் (ஹோ ரா) ஹோரா என்னும் அக்ஷரத்துவயங்கள் சேஷிக்கின்றது. இதுவே ஓரை என்பதன் சிறந்த பொருளாகும். இஃதுவே இக்காலத்தில் கடிகாரத்தைக்கொண்டு அறியப்படுகின்ற மணி என்பது ஆகும்.

'ஒற்றை' ஒன்று என்ற மென்றொடர் குற்றியலுகரம் வன்றொடராய் ஐகாரச்சாரியை பெற்றது. (நன்-உயிர்-34-35) 'இரட்டை' என்பதும் இப்படியே. இச்செய்யுளில் ஆசிரியர் ஓஜை ராசிக்குச் சூரியமுதலும், உக்கும ராசிக்கு லக்கினமுதலும் எண்ணிக் காணும்படி கூறியுளார். வேறு நூற்களில் பின்வருமாறு கூறப்பட்டிருக்கின்றது.

"ததாஸார்த் த்விகடிகா மிதாத்காலாத் விலக்னபாத்
ப்ரயாதி லக்நம்தந்நாம ஹோராலக்நம் ப்ரசக்ஷதே." (காரிகை)

ஜனன நாழிகையை இரண்டரையால் வகுத்து லக்கினமுதல் எண்ணிக் கண்டது ஹோராலக்கினம் என்று அறியவும். இதற்கு பாஷியம் "லக்ந மாரப்ய ஜந்மலக்நே ஓஜேந்ர மேணயுக்மே வ்யுத்க்ரமேண" என செய்யப்பட்டிருக்கின்றதுணர்க.

திண்டிறல் கதிரோன் உதயமே முதலாய்ச்
சென்மநா ழிகைவரை எண்ணிக்
கண்டநா ழிகையை இரண்டரை யதனில்
கழித்ததே ஓரைலக் கினமாம்
எண்டிசை உதயம் ஓரையே ஆகில்
இலக்கின முதலதாய் எண்ணல்
அண்டிய உதயம் உக்குமம் ஆகில்
அப்பிர தட்சணம் ஆமே. (சாதக சிந்தாமணி)

சூரியோதயமுதல் ஜனனகாலம்வரை சென்ற நாழிகையை இரண்டரையால் வகுத்துக் கண்டது ஓரை லக்கினமாகும். லக்கினம் ஒற்றித்த ராசியானால் லக்கினத்திலிருந்து சவ்வியம் வலமாகவும், இரட்டித்த ராசியானால் லக்கினத்திலிருந்து அபசவ்வியம் இடமாகவும் எண்ணிக் காணுதல் வேண்டும்.

இரண்டரையால் வகுத்தல் நிரட்சஸ்தலங்களாகிய இலங்கை யவகோடி முதலிய நகரங்கட்கு உரியது. யாதுபற்றி எனின்: ஆங்கு பகல் இரவு சமகாலம். மற்ற இடங்களில் அங்ஙனம் இல்லை. ஆதலின் பகல் இரவு பிரமாணங்களை தனித்தனி 12-ஆல் வகுத்து ஓராகால பிரமாணத்தை அறிந்துக் கொள்ளுதல் முறை. இங்ஙனம் பார்த்துணராமல் சூரிய உதயாதி 31-நாழிகைக்கு அக்ஷய௵ ஆனி௴ 1௳ ஜனனம். அன்று பகல் அகசு 31-36 ஆகும். $31 \div 2\frac{1}{2} = 12$ மீதம் 1 ஆகவே லக்கினம் விருச்சிகம், இரட்டித்த ராசி ஆதலின் விருச்சிகாதி துலாந்தரம்வரை ராசி-12, போக மீதம் 1-க்குள் விருச்சிகமே ஓரா லக்கினமாகும். இது ஸ்தூலமுறை.

சூக்ஷுமமுறை வருமாறு:—

அற்றைய பகல் பிரமாணம் 31-36÷12=ஓராகால பிரமாணம் நாழிகை 2-38, ஜனன நாழிகை 31-ஐ÷2-38-ஆல் வகுத்தல் வேண்டும். வகுக்கும் எண் இரண்டுஸ்தானம் ஆதலால் அதை ஓரினமாக விநாடியாக்கி பின்னர் ஜனனநாழிகை 31-ஐயும் விநாடியாக்கி வகுத்தல்வேண்டும் அஃது வருமாறு: 2-38×60=158÷31×60=1860=11, மீதம் 122. ஓராலக்கின பிரமாண விநாடி-158. ஓராலக்கின ராசியில் சென்ற பாகையை அறியும் வழி வருமாறு: ஓராலக்கினத்தில் சென்ற விநாடியை 30-ஆல் பெருக்கி ஓராலக்கின பிரமாணவிநாடியால் வகுத்த ஈவுபாகையும், மீதியை 60-ஆல் பெருக்கி 158-ஆல் வகுத்த ஈவு கலையுமாம். இதுவே ஓராலக்கினத்திற் சென்ற பாகாதிகளாகும்.

உதாரணம் வருமாறு:—

முன்காட்டிய உதாரணத்தில் மீதம் 122×30=3660÷158=பாகை 23, மீதம் 26×60=1560÷158=10. இலக்கினம் விருச்சிகம் ஆகவே ஓராலக்கினஸ்புடம் ராசி 6-23-10 ஆயிற்று. உக்குமத்திற்கு விருச்சிகாதி சவ்வியமாக எண்ண கன்னி 11 ராசி, துலாத்தில் 23-பாகை, 10-கலையில் ஓராலக்கினம் ஆயிற்று. அகசு பிரமாணத்தைக் கணக்கிடாமல் 2½-ஆல் வகுக்க ஓராலக்கினம் விருச்சிகமாக வந்ததையும், பகல் இரவு அகசு கொண்டு கணித்தவகையில் ஓராலக்கினம் கன்னியாக வந்ததையும், நுண்ணறிவுடைய சோதிட வித்தியா விநோத விற்பன்னர்கள் நன்கு ஆலோசித்து உண்மையை உணர்தல்வேண்டும். ஆகவே இந்த உதாரணத்தில் ஏற்பட்ட இலக்கினாதி சவ்விய ஓராஸ்புடம் 11 பாகை, 23-கலை, 10-விகலை, மேடாதி ஓராஸ்புடம் 6-பாகை, 23-கலை, 10-விகலை என்று வித்தியார்த்திகள் அறிவார்களாக. இங்ஙனமே பிற ஜாதகங்கட்கும் சூக்குமவகையான ஓராலக்கினத்தை அறிதல்வேண்டும்.

> "சக்ரஞ் சதுர்விதம் க்ஞேயம் அத்யம் ஔதயிகம் ஸ்ம்ருதம்
> த்வீதியர்து ப்ரக்ருத்யாக்யம் விக்ருத்யாக்யம் த்ருதீயகம்
> க்ரஹசக்ரஞ் சதுர்தாக்யம் ஏவம் சக்ரஸ்ய நிர்ணயః"

எனவரும் காரிகை வசனத்தினால் இராசி சக்கரங்கள் நான்கு வகைப்படும் என்று அறியப்படுகின்றன. அவை 1-உதய சக்கரம், 2-பிரகிருதி சக்கரம், 3-விக்கிருதி சக்கரம், 4-கிரக சக்கரம் என்பனவாகும்.

> "பாவா த்வாதச லக்நாத்யாச் சக்ரம் ஔதயிகம் பவேத்
> ஓஜாநாங்க்ரம சஸ்ஸங்க்யா யுக்மாநாம் வ்யுத்க்ரமேணது
> இதி ஸங்க்யாக்ர மேணைவ சக்ரம் ப்ரக்ருதி ஸம்ஜ்ஞிகம்
> லக்நம்த்வ யுக்சக்ரே சவ்யுத்க்ர மேணைவ கண்யதே"

> "ப்ரக்ருத்யா சைவபுக்மேது ஸங்க்யா விக்ருதி சக்ரகம்
> லக்நாதிபம் ஸமாரப்ய க்ரஹாணாங் கணநேக்ருதே
> க்ரஹாஏவது பாவாஸ்யுர் லக்நவித்தாதி ஸம்ஜ்ஞிகா
> அபேதேநக்ருதஞ் சக்ரம் க்ரஹசக்ரம் விகச்சிதம். (காரிகை வசனம்)

இராசி சக்கரமே உதயச் சக்கரம் என்னப்படும். இலக்கினம் ஆண் ராசியானால் உதயச் சக்கரம்போல சவ்வியமாகவும், பெண் ராசியானால் அபசவ்

வியமாகவும், அதாவது 1-12-11 என்ற முறைப்படியும் கணிதஞ்செய்வது பிரகிருதி சக்கரம் எனப்படும். இலக்கினம் ஆண் ராசியானல் அபசவ்விய மாகவும், பெண் ராசியானல் சவ்வியமாகவும் கணிதஞ் செய்வது விக்ருதி சக்கரம் என்னப்படும். இலக்கினதிபதியை முதலாக வைத்துக்கொண்டு உதய சக்கரத்தின்படி கிரக கிரமமாக கணிதஞ்செய்வது கிரக சக்கரம் என்னப்படும்.

| | | | |
|---|---|---|---|
| கே | | சனி | சந் |
| | 1 உதய சக்கரம் | | ல-கு பு-கு |
| | | | |
| | | | செ ரா-ச |

| | | | |
|---|---|---|---|
| | | செ ரா-ச | |
| | 2 பிரகிருதி சக்கரம் | | ல-கு பு-கு |
| | | | சுக் |
| | கே | | சனி |

| | | | |
|---|---|---|---|
| கே | | சனி | சுக் |
| | 3 விக்கிருதி சக்கரம் | | ல-கு பு-கு |
| | | | |
| | | | செ ரா-ச |

| | | | |
|---|---|---|---|
| கே | | சனி | சுக் |
| | 4 கிரக சக்கரம் | | பு-கு சூரி |
| | | | |
| | | | ச-ரா செ |

4-வது சக்கர விபரம்:— மீனம்-ஆயுள், ரிடபம்-சத்துரு, மிதுனம்-சந்ததி, கடகம்-பிராதுரு, விரயம், மாதுரு, பிதுரு, கன்னி-தனு, கர்மம், லாபம் மனைவி.

பிரகிருதி=இயல்பு, விக்கிருதி=இயல்புக்கு மாறுபடுதல். எனவே லக்கினம் ஆண் ராசியானல் இயல்பு சவ்வியமாகவும், பெண் ராசியானல் மாறுபாடு அபசவ்வியமாகவும், கிரகங்களை ராசிகளில் ஏற்படுத்துவதாகும். இங்கு பிரகிருதி விக்கிருதிசக்கரங்களை ஏற்படுத்தியிருக்கும் முறைப்படியே பிற ஜாதகங்கட்கும் ஏற்படுத்திக்கொள்க.

இனி கிரக சக்கரம் ஏற்படுத்தும் முறை வருமாறு:—

குறிப்பு:— இலக்கினதிபன் எந்தக் கிரகமோ அந்தக்கிரகம் இருக்கும் ராசியே லக்கினபாவகம். லக்கினதிபதிக்கு அடுத்த 2-வதுகிரகம் இருக்கும் ராசி தனபாவம். (இம்முறையில் கிரக வரிசைக்கிரமம் சூரியன்-சந்திரன்-செவ்வாய்-புதன்-குரு-சுக்கிரன்-சனி-ராகு-கேது எனறறியவும்) மற்றைய கிரகங்கள் இருக்கும் ராசிகள் சகோதர, மாதுரு, புத்திர, சத்துரு, களத்ர, ஆயுள், பிதிர் பாவங்களாம். மறுபடி லக்கினதிபன் இருந்த ராசியே கர்ம பாவமும், தனபாவமே லாபபாவமும், சகோதரபாவமே விரயபாவமும் என்று ஏற்படுத்துதல் வேண்டும்.

பின்னர் 2-வது ஆகிய பிரகிருதி சக்கரத்தில் அஷ்டம ஸ்தானத்தையும், ஓரா லக்கினத்தையும் தெரிந்துகொள்க. இலக்கின அஷ்டமாதிபதிகளாலும், இலக்கின சந்திரர்களாலும், இலக்கின ஹோரார்க்க கிரகங்களாலும், சராதிராசிகளின் நியமங்களின்படி சம்வாத வசத்தினுல் தீர்க்க மத்ய அற்ப ஆயுசுகளைத் தெரிந்துகொள்ளல் வேண்டும். அஷ்டமாதிபதியைத் தெரிந்துகொள்வதில் ஒரு விசேஷவிதி இருக்கின்றது. அது எங்ஙனம் எனின்? ஸ்திரராசிகளில் பிறந்தவர்களுக்கு ஜெனன லக்கினத்திற்கு ஏழாவது ராசி முதல்கொண்டும் விக்கிருதி சக்கரத்தினுல் அஷ்டம ஸ்தானத்தைத் தெரிந்துகொள்ள வேண்டியது. அதாவது ரிஷபத்துக்கு மிதுனமும், விருச்சிகத்துக்கு தனுசும், சிங்கத்துக்கு கடகமும், கும்பத்துக்கு மகரமும், அஷ்டமஸ்தானங்களாகும். ஏனைய சர உபயராசிகளுக்கு இவ்வித வித்தியாசம் இல்லாமல் எட்டாம்ராசியே அஷ்டமஸ்தானமாகும். இங்கு கூறிய நான்கு ஸ்திரராசிகளில் ரிஷப விருச்சிகம் பெண்ராசியாதலால் அவற்றிற்கு சவ்வியமாக கணக்கிட, ஏழாமிடங்கள் முறையே விருச்சிகம் ரிஷபம் ஆதலின் இவற்றில் எட்டாமிடங்கள் முறையே மிதுனம் தனுசுகளாயின என்றறிக. சிங்கம்-கும்பம் ஆண்ராசியாதலால் அபசவ்வியமாகக் கணக்கிட, ஏழாமிடங்கள் முறையே கும்பம் சிங்கமாதலின் இவற்றின் எட்டாமிடங்கள் அபசவ்வியமாக எண்ண முறையே கடகம் மகரங்கள் ஆயின என்றறிக.

(710)

வேறு.

சரமதனில் சரந்தீர்க்கந் திரந்தான்மத் திமமாம்
　　தங்கியதோர் உபயமெனில் தான்அற்ப மாகும்
திரமதனில் திரம்அற்பம் சரந்தான்மத் திமமாம்
　　திரத்தில்உப யம்பெறினும் தீர்க்கவயது ஆகும்
வரும்உபயம் தனில்உபயம் மத்திமமே ஆகும்
　　மற்றுமதில் சரம்ஆகில் வயதுஅற்ப மாமே
பெருமையுடன் உபயத்தில் திரம்தீர்க்க வயதே
　　பெற்றிடிற்பூ ரணவயது பெற்றிடுவர் தாமே.

(இ-ள்) சரம் சரமானுல் தீர்க்கத்தில் தீர்க்கமும், சரம் திரமானுல் தீர்க்கத்தில் மத்திமமும், சரம் உபயமானுல் தீர்க்கத்தில் அற்பமும், திரம் திரமானுல் மத்திமத்தில் அற்பமும், திரம் சரமானுல் மத்திமத்தில் மத்திமமும், திரம் உபயமானுல் மத்திமத்தில் தீர்க்கமும், உபயம் உபயமானுல் அற்பத்தில் மத்திமமும், உபயம் சரமானுல் அற்பத்தில் அற்பமும், உபயம் திரமானுல் அற்பத்தில் தீர்க்கமும் ஆகிய வயதை உலகோர் பெறுவார்கள்.

(வி-ரை) இரண்டாம் அடியின் இரண்டாஞ்சீர் உபயங்கள் என பன்மையாகக் காணப்படுதலின் அதை 'உபயமெனில்' என்று திருத்தி யமைக்கப்பட்டது. இச்செய்யுளில் ஆசிரியர் இன்னர் சரத்திலிருக்க, இன்னர் சரத்திலிருந்தால் தீர்க்காயுள் என்று கூறினரில்லை. ஒருசிலர் காரணமின்றி இலக்கினம் சரராசி அஷ்டமாதிபன் சரத்திலிருக்க தீர்க்கத்தில் தீர்க்க வயதென மனம்போன போக்காய் பொருள் கூறுகிற்பர். அஃது அறிஞர்க்கழகன்று. இலக்கினுதிபன்சரத்திலிருக்க அஷ்டமாதிபன் சரத்திலிருந்தால் தீர்க்காயுள் என்றுகூறின் அதுபொருத்தமாகும். அல்லது இலக்

கினம் சரமாகி, சந்திரலக்கினம் சரமானால் தீர்க்காயுள் என்று கூறினாலும் பொருந்தும். இதனை விடுத்து வேறு வகையாகக் கூறுவது எட்டுணையும் பொருந்தாதென்ப.

"லக்நம் இந்த்வோஸ் ததீசயோர் அபிமிதோ லக்நேச ரந்த்ரேசயோ:
த்ரேகாணாத்ஸ்வ நவாம்சகாத் அபிமிதஸ்த த்வாதசாம் சாத்க்ரமாத்
ஆயுர் தீர்க்க ஸமால்பதாம் சரநகத்வயம் கைச்சரே அதஸ்திரே
ப்ரூயாத் த்வம்த்வச ரஸ்திரைர் உபயஸ்தாநஸ்து த்விதே ஹாடனை:"

(பலதீபிகை 13-அத், 14-சூத்)

இலக்கினம் சந்திரலக்கினம், லக்கினாதிபதி சந்திரலக்கினாதிபதி, லக்கினாதிபதி அஷ்டமாதிபதி, லக்கினம் திரேகாண லக்கினம், லக்கினம் நவாம்ச லக்கினம், இலக்கினம் துவாதசாம்ச லக்கினம் ஆகிய இவைகள் சரம் சரமானால் தீர்க்காயுசு, சரம் திரமானால் மத்திம ஆயுசு, சரம் உபயமானால் அற்பாயுசு, இவ்வடைவே ஸ்திரம் உபயங்கட்கும் ஆயுள் நிர்ணயம் செய்து கொள்ளவும்.

"லக்நேசாந்த்ர பத்யோச்ச லக்நேந்த்வோர் லக்நஹோரயோ:
வாக்யமேதத் ப்ரயம்ஜீத ஸம்வாதா தாயுஷஸ்தித:
த்ரயாணாம் பிந்நபிந்நத்வே லக்நஹோரா கதம்த்ருவம்
சரேசரஸ்திர த்வம்த்வா ஸ்திரேத்வம் த்வசரஸ்திரா:
த்வம்த்வே ஸ்திரோபயசரா தீர்கமத்யால் பகாயுஷ:
சந்த்ரலக்நம் க்ருதம் க்ராஹ்யம் சந்த்ரேஸ்த இதிகேசந." (காரிகை)

இலக்கின அஷ்டமாதிபர், லக்கினம் சந்திரலக்கினம், லக்கினம் ஓராலக்கினம், ஆகிய இந்த மூன்றும் சரம் சரமானால் தீர்க்காயுசு, சரம் திரமானால் மத்திம ஆயுசு, சரம் உபயமானால் அல்பாயுசு என்று அறிக. இந்த மூன்று வகையில் இரண்டு வகைகள் ஒன்றாக இருந்தால் பிரமாண ஆயுர்த்தாயம் என்று அறிக. இந்த மூன்று வகைகளும் வெவ்வேறு வகைகளாக இருந்தால் லக்கின ஓராலக்கினங்களினால் வந்த ஆயுர்தாயத்தை பிரமாண ஆயுர்த்தாயமாகக் கொள்க. மூன்றுவகையும் ஒரேவகையாக இருந்தபோது அற்பாயுள் என்று அறிக.

"ஓராலக்நேய யோரேகம் அபரம் சசிலக்நயோ:
லக்நாஷ்டமே சயோரந்யத் ஸம்வாதா தாயுருச்யதே
த்வயோ ஸ்த்ரயாணாம் ஸம்வாதே ததேநா யுச்ச க்ருஹ்யதாம்
பேதே பூர்வோக்தமே வாயு: ஸ்யாச்சராதி விபேதத:"

(கிரந்தாந்தரம்)

இலக்கினம் ஓராலக்கினம், லக்கினம் சந்திரலக்கினம், லக்கினாதிபதி அஷ்டமாதிபதி இவைகளால் (சராதி கிரமமாக) ஏற்பட்ட ஆயுர்த்தாயத்தை இவற்றுள் இரண்டு மூன்றுவகையில் ஒரேவகையான ஆயுர்த்தாயம் ஏற்பட்டால் அவைகளை சமவாத ஆயுள் என்றும், எல்லாம் வெவ்வேறு வகையாக இருந்தால் அவைகளை விசம்வாத ஆயுள் என்றும் அறிந்துகொள்ள வேண்டியது

"சரத்துடனே சரம்தீர்க்கர் திரந்தான்மத் திபமாம்
சாற்றுசரம் உபயமெனில் தான்அற்ப மாகும்

திரத்துடனே திரம்அற்பம் திரஞ்சர மத்திபமாம்
திரத்தில்உப யந்தீர்க்கம் செழுங்கயற்கண் மயிலே
வரத்தில்உப யத்துடனே உபயம்அற்ப மாகும்
வரும்உபயம் சரமெனின்மத் திபமாகும் என்பர்
உரத்துபயத் துடன்திரமே தீர்க்கவய தாகும்
ஓராசா ரந்தனிலே உரைத்ததிவை யாமே

(சாதக சிந்தாமணி-152)

சரம் சரமானால் தீர்க்காயுசு, சரம் திரமானால் மத்திமாயுசு, சரம் உபயமானால் அற்பாயுசு, திரம் திரமானால் அற்பாயுசு, திரம் சரமானால் மத்திமாயுசு, திரம் உபயமானால் தீர்க்காயுசு, உபயம் உபயமானால் அற்பாயுசு, உபயம் சரமானால் மத்திமாயுசு, உபயம் திரமானால் தீர்க்காயுசு ஆகும் என்று ஓராசாரம் என்னும் சோதிட நூலில் சொன்னது இவையாகும்.

தேடுசென்ம லக்கினமும் ஓரையின் லக்கினமும்
தெரிந்தபின்னர் அட்டமத்தோன் உதயவிரா சிக்கும்
நீடுமதி லக்கினமும் அஷ்டமா திபன்றான்
நின்றவிலக் கினத்துடனே நிகராகக் கண்டே
நாடுமிந்த மூவகையும் உத்தமமாய் உறுமேல்
நண்ணும்அற்ப வயதாமேல் மூன்றும்அற்ப மென்னில்
வாடுறுமத் திமவயதாய் வகுக்குமிந்த மூன்றும்
மத்திபமேல் தீர்க்காயுள் என்பர் இளமயிலே.

(சாதக சிந்தாமணி-153)

ஜனன லக்கினமும் ஓராலக்கினமும் கொண்டு (முன்சொன்ன சராதிகிரமப்படி ஆயுள் நிர்ணயததைத் தெரிந்தபின்பு அஷ்டமம் ஜனனலக்கினம் இவைகளைக்கொண்டும் சந்திரலக்கினம் அஷ்டமாதிபதி இந்த ராசி இவைகளைக்கொண்டும் ஆயுர்த்தாயத்தை அறிந்து இந்த மூன்று வகையிலும் தீர்க்காயுளாக இருந்தால் அற்பாயுள் என்றும், மூன்று வகையிலும் அற்ப ஆயுளாக இருந்தால் மத்திமாயுள் என்றும், மூன்று வகையிலும் மத்திமாயுளாக இருந்தால் தீர்க்காயுள் என்றும் சொல்லுவார்கள்.

சாதக சிந்தாமணி நூலுடையார் ஜயமுனி கொள்கைக்குச் சற்று மாறுபாடாக கூறியிருக்கின்றனர். பலதீபிகை நூலுடையார் மதம் ஒரு வகையாக இருக்கின்றது. ஆதலின் இங்கு ஜயமுனிவர்மதத்தைத்தழுவியே சராதி கிரமமான ஆயுர்த்தாயத்தை அறிதல் சிறப்பாகும்.

## பலதீபிகை மதம்

| | |
|---|---|
| இலக்கினம் | சந்திரலக்கினம் |
| இலக்கினாதிபதி | சந்திரலக்கினாதிபதி |
| இலக்கினாதிபதி | அஷ்டமாதிபதி |

## வராகமிகிரர் மதம்

| | |
|---|---|
| இலக்கினம் | திரேகாணலக்கினம் |
| இலக்கினம் | நவாம்சலக்கினம் |
| இலக்கினம் | துவாதசாம்சலக்கினம் |

## ஐயமுனிவர் மதம்

| | |
|---|---|
| இலக்கினம் | ஓராலக்கினம் |
| இலக்கினம் | சந்திரலக்கினம் |
| இலக்கினாதிபதி | அஷ்டமாதிபதி |

## ஜாதக சிந்தாமணி மதம்

| | |
|---|---|
| இலக்கினம் | ஓராலக்கினம் |
| இலக்கினம் | அஷ்டமம் |
| சந்திரலக்கினம் | அஷ்டமாதிபன் |

இந்த இராசி இவைகளைக்கொண்டு சராதி கிரம ஆயுர்த்தாயத்தை நிர்ணயிக்கும்படி கூறுகின்றது.

## சராதி கிரம ஆயுர்த்தாய சக்கரம்

| இராசி | இராசி | ஆயுள் | வருஷம் | இலக்கினாதிபதி |
|---|---|---|---|---|
| சரம் | சரம் | தீர்க்கத்தில் தீர்க்கம் | 100 | சுபர்நோக்க |
| ,, | திரம் | ,, மத்திமம் | 88 | சுபாம்சம் |
| ,, | உபயம் | ,, அற்பம் | 77 | பாபாம்சம் |
| திரம் | உபயம் | மத்திமத்தில் தீர்க்கம் | 66 | சுபர்நோக்க |
| ,, | சரம் | ,, மத்திமம் | 55 | சுபாம்சம் |
| ,, | திரம் | ,, அற்பம் | 44 | பாபாம்சம் |
| உபயம் | திரம் | அற்பத்தில் தீர்க்கம் | 33 | சுபர்நோக்க |
| ,, | உபயம் | ,, மத்திமம் | 22 | சுபாம்சம |
| ,, | சரம் | ,, அற்பம் | 11 | பாபாம்சம் |

முன்னே கூறியபடி சராதி கிரமங்களில் மூன்று வகைகளினால் ஏற்பட்ட ஆயுர்த்தாயம்:—

தீர்க்கம், தீர்க்கம், தீர்க்கம் } 1-ஆகவரின் அற்பாயுள்
100
100
100
3÷300=0

மத்திமம், மத்திமம், மத்திமம் } 1-ஆகவரின் மத்திமாயுள்
66
66
66
3÷198=66

தீர்க்கம், தீர்க்கம், மத்திமம் } 1-ஆகவரின் தீர்க்காயுள்
100
100
66
3÷266=88

மத்திமம், மத்திமம், தீர்க்கம் } 1-ஆகவரின் மத்திமாயுள்
66
66
100
3÷132=44

| | | | | | |
|---|---|---|---|---|---|
| தீர்க்கம் | 1-ஆகவரின் | 100 | மத்திமம் | 1-ஆகவரின் | 66 |
| தீர்க்கம் | தீர்க்காயுள் | 100 | மத்திமம் | மத்திமாயுள் | 66 |
| அற்பம் | | 33 | அற்பம் | | 33 |
| | | 3÷233=77 | | | 3÷165=55 |
| அற்பம் | 1-ஆகவரின் | 33 | அற்பம் | 1-ஆகவரின் | 33 |
| அற்பம் | தீர்க்காயுள் | 33 | அற்பம் | மத்திமாயுள் | 33 |
| அற்பம் | | 33 | தீர்க்கம் | | 100 |
| | | 99 | | | 3÷166=55 |
| அற்பம் | 1-ஆகவரின் | 33 | தீர்க்கம் | 1-ஆகவரின் | 100 |
| அற்பம் | மத்திமாயுள் | 33 | மத்திமம் | தீர்க்காயுசு | 66 |
| மத்திமம் | | 66 | அற்பம் | | 33 |
| | | 3÷132=14 | | | 3÷199=66 |

இவ்வகையாக சராதி கிரமசுத்த ஆயுர்த்தாயத்தை நிர்ணயித்தல் வேண்டும்.

குறிப்பு:—இந்த முறையில் மத்திம ஆயுள் விஷயத்தில்மட்டும் அற்ப, மத்திம, தீர்க்காயுர்தாயத்திற்கு மத்திமாயுளாகவே ஏற்பட்டிருப்பதையும், அற்பத்தில் தீர்க்க மத்திமாயுளாகவே ஏற்பட்டிருப்பதையும், தீர்க்கத்தில் அற்பம், தீர்க்காயுளாகவே ஏற்பட்டிருப்பதையும் அறிஞர்கள் ஆழ்ந்து நோக்குதல்வேண்டும் மூன்று வகையிலும் தீர்க்காயுளாகவரின் அதை அற்பாயுள் எனவிடுத்து, ஏனையவற்றின் மூன்றுவகை ஆயுர்த்தாயங்களேயும் கூட்டி, மூன்றிஞல் வகுத்த ஈவே ஆயுர்த்தாய வருடங்களாகும். இதஞல் எத்தனை வகையில் ஆயுர்த்தாய நிர்ணயஞ் செய்யப்படுகின்றதோ அத்தனை யும் கூட்டிவைத்து நான்கு வகையில் ஏற்படின் நான்காலும், ஐந்து ஆறு இப்படி எத்தனை வகையில் ஏற்படுகின்றதோ அத்தனை எண்களாலும் வகுத்த பலம் சுத்தாயுர்த்தாயம் என்னப்படும்.

## சராதி கிரம ஆயுர்த்தாயம்

### பராசர ஓரையின்படி

லக்னேசாஷ்டம நாதாப்யாம் ஆயுர்த்தாயம் விசிந்தயேத்
தீர்க்கமத்யால் பயோகத்வம் யதாவத் கததோமம
சரேசரேஸ்திதௌ த்வௌச லக்நாந்தராதி பௌயதி
பூர்ணயுர்யோகோ விக்ஞேயோ நிர்விம்சகம் த்விஜோத்தம.
ஸ்திரர்க்ஷே லக்நாதோஹி லயேசேத்வ த்வயேஸ்திதே
ததாயு பூர்ணயோகச்ச ஸபவேத் கணிதாக்ரணீ:
தந்வதீசே ஸ்திதேத்வத்வே ஸ்திரஸ்தேச லயாதிபே
பூர்ணயுர்யோகோ விக்ஞேயோ நிர்விம்சகம் த்விஜோத்தம.
அதாஅதஸம்ப்ர வக்ஷ்யாமி மத்யாயுர்யோக முத்தமம்
சரேலக்நாதி பேவிப்ர ஸ்திரேரந்த்ர பதிர்யதி
விபர்யயேவா மத்யாயுர் த்வௌத்வந்த்வே மத்யமாயுஷ:
அதுநால் பாயுர்யோகஞ்ச தவாக்ரே கதயாம்யஹம்.

*அங்காதீசச் சரேயஸ்ய த்வம்த்வபே ரந்த்ராயகே*
*விபரீதோபி ஸ்வல்பாயுர் நிர்விம்சகம் த்விஜோத்தம*
*ஸ்திரேஸ்திரே ஸ்திதேத்வௌச லக்நாந்த்ராதி பௌத்விஜ*
*ஸ்வல்பாயுஸ்த த்ரவிக்ஞேயம் ஸ்ருஷ்டிகர்த்ரா ப்ரஞோதிதம்.*

இச்சுலோக அர்த்தத்தை கீழ்கண்ட சக்கரத்திஞல் அறியவும்.

## சுலோகார்த்த சக்கரம்

| | | |
|---|---|---|
| தீர்க்காயு<br>1 லக்கினேசன் சரம்<br>1 அஷ்டமேசன்-சரம் | மத்திமாயு<br>1 லக்கினேசன்-சரம்<br>2 அஷ்டமேசன்-திரம் | அல்பாயு<br>1 லக்கினேசன்-சரம்<br>3 அஷ்டமேசன்-உபயம் |
| தீர்க்காயு<br>2 லக்கினேசன்-திரம்<br>3 அஷ்டமேசன்-உபயம் | மத்திமாயு<br>2 லக்கினேசன்-திரம்<br>1 அஷ்டமேசன்-சரம் | அல்பாயு<br>2 லக்கினேசன்-திரம்<br>2 அஷ்டமேசன்-திரம் |
| தீர்க்காயு<br>3 லக்கினேசன்-உபயம்<br>2 அஷ்டமேசன்-திரம் | மத்திமாயு<br>3 லக்கினேசன்-உபயம்<br>3 அஷ்டமேசன்-உபயம் | அல்பாயு<br>3 லக்கினேசன்-உபயம்<br>1 அஷ்டமேசன்-சரம் |

எண் குறிப்பு:—1-சரம், 2-திரம், 3-உபயம் என்பன.

*லக்நேசா தஷ்டமேசாக்ச யோகைகஃ கதிதோத்விஜ*
*ஹோராலக்நாப்யாம் த்விதீயம் யோகமேவ விசிந்தயேத்*
*த்ருதீயம் லக்நசந்த்ராப்யாம் சிந்தநீயம் ஸதாத்விஜ.*

என்றதால், இலக்கினுதிபதி அஷ்டமாதிபதி. லக்கினம் ஓராலக்கினம், லக்கினம் சந்திரலக்கினம் இவைகளால் சராதி கிரம ஆயுர்த்தாயம் நிர்ணயித்தல் வேண்டும்.

### சராதி கிரமாயுசு

[ஜயமுனி மதப்படி மற்ரெருவகை]

*லக்நேச ரந்த்ர பத்யோச்ய ரந்த்ர ரந்த்ர பயோஸ்ததா*
*சந்த்ர சந்த்ர பத்யோச்ய ரூத்ரமாத்யம் ப்ரயோஜயேத்.* (காரிகை)

இலக்கினுதி அஷ்டமாதியினுலும், அஷ்டமஸ்தானம் அஷ்டம ஸ்தானுதிபதியினுலும், சந்திரலக்கினம் சந்திரலக்கினத்திற்கு அஷ்டம ஸ்தானத்திஞலும் சராதி கிரமாயுர்த்தாயத்தை அறிதல் வேண்டும்.

கவனிப்பு:— இலக்கினஷ்டமாதிபதி இருவரும் ஒரே கிரகமானுல் லக்கினுதிபதி இருந்த ராசிக்கு அஷ்டமாதிபதியை ரந்த்ராதி (அஷ்டமாதி) பதியாக அறிதல்வேண்டும். அவனும் தானேயானுல் ஓரா லக்கினத்திற்கு அஷ்டமாதிபதியைக் கொள்ளுதல் வேண்டும் என்ப.

சராதி கிரமாயுர்த்தாயம் தீர்க்கம், மத்திமம், அற்பத்தில் ஓர் முக்கிய கவனிப்பு இருக்கின்றது. அதாவது: லக்கினம் ஓராலக்கினம் சரமானுல்

தீர்க்காயுசு, இதன் வருடம்-100. இதில் மேற்படி இரண்டு லக்கினமும் ஜனன காலத்தில் முதல் பாகையிலிருந்தால் 100-வருடம் ஆயுள் பிரமாணமாகும். கடைசி பாகையில் 30-ல் இருந்தால் தீர்க்காயுள் பிராம்பமாத்திரம் உண்டாகும். மத்தியபாகையில் 15-ல் இருந்தால் திரயராசிகமூலமாக ஆயுள் பிரமாணதைத் தெரிந்துகொள்ளுதல் வேண்டும். இந்தப்படியே மத்திம அற்பாயுள் முதலியவற்றிற்கும் அறிந்துகொள்க.

உதாரணம்:— இலக்கினதிபதி சரம், அஷ்டமாதிபதி சரம், ஆகவே தீர்க்காயுள் வருடம்-100. லக்கினதிபதி ஸ்புடம் 3 20-0, அஷ்டமாதிபதி ஸ்புடம் 0-5-0, இதற்கு அநுபாதம் (திரயராசிகம்) செய்முறை, லக்கினதிபதிக்கு 50-வருடம், அஷ்டமாதிபதிக்கு 50-வருடம் ஆகபாகித்துக்கொள்க. பின்பு 30-பாகைக்கு 50-வருடம் ஆனால் 25, 20-பாகைகளுக்கு எத்தனை வருடம் என்று அறிதல்வேண்டும். $50 \div 30 = 1$-வருடம், மீதம் $20 \times 12 = 240 \div 30 = 8$-மாதம் ஆகவே பாகை 1-க்கு 1-வருடம் 8-மாதம் ஆயிற்று. $1\text{-}8\text{-}0 \times 25 =$ வருடம் 41-8-0, $1\text{-}8\text{-}0 \times 20 = 33\text{-}4\text{-}0$ ஆக வருடம் 75-0-0 ஆதல் அறிக. அல்லது லக்கினதிபதி அஷ்டமாதிபதிகளின் பாகைகளைக் கூட்டி வைத்துக்கொள்க. அதனால் ஆயுள் பிரமாணவருடத்தைப் பெருக்கி 60-ஆல் (இரண்டு ராசியிலிருந்த இரண்டு கிரகங்களால் ஏற்பட்ட ஆயுள் ஆதலால் இரண்டு ராசிகளுக்குரிய 60 பாகைகளால்) வகுத்து வரும் ஈவு ஆயுள் பிரமாணமாகும். உதாரணம்:-லக்கினதிபதி பாகை-20 அஷ்டமாதிபதி பாகை-25 ஆக-45. மேற்படி ஜாதகம் தீர்க்காயுசு வருடம்-100 இதை 45-ஆல் பெருக்க, $4500 \div 60$-ஆல் வகுக்க ஈவு ஆயுர்த்தாயம் வருடம்-75 ஆகும், இப்படியே மத்திமாயுசுக்கு 77-ஐ வைத்தும், அற்பாயுசுக்கு 33-ஐ வைத்தும் பெருக்கி 60-ஆல் வகுத்துக் காணுதல் வேண்டும். (711)

பெறுந்திரிகோ ணங்களிற்கேந் திரத்தில்நல்லோர்நிற்க
பின்னுஞ்சன் மாதிபன்பொன் னுடன்நான்கில்நிற்க
உறுவதுநூறு ஆண்டுஅளவும் உலகில்மிகவாழ்வர்
உற்றசன்மம் ஒரெட்டா திபனுமுடன்கூடி
மறுவுறஆரும் இடத்தில்சனி பார்க்கநிற்கில்
வாலையிலே அரிட்டம்என வேவமுத்தல்ஆகும்
சிறுகுழவி இலக்கினத்தில் சேய்எட்டில் திங்கள்
செறியும்இரு வரைக்காரி தெரிசிக்கில் அரிட்டம்.

(இ-ள்) இலக்கினத்திற்கு ஐந்து ஒன்பதாமிடங்களாகிய திரிகோணத்திலும், ஒன்று நான்கு-ஏழு-பத்து இடங்களாகிய கேந்திரத்திலும் சுபக்கிரகங்கள் இருக்க, மற்றும் லக்கினதிபதி குருவுடன் சேர்ந்து நான்காம் வீட்டில் இருக்கப் பிறந்தவன் நூறுவருடம் வரையில் இந்நிலவுலகத்தில் வாழ்ந்திருப்பான். இலக்கினத்திற்கு அதிபன், அஷ்டமத்திற்கு அதிபன் ஆகிய இவர்கள் ஒன்றாய்க்கூடி ஆறாம்வீட்டில் சனியினால் பார்க்கப்பட்டு இருந்தால் இளமவயதிலேயே அரிட்டம் உண்டாகுமென்று சொல்ல வேண்டும். பிறந்த குழந்தையின் இலக்கினத்தில் செவ்வாயும், எட்டாம் வீட்டில் சந்திரனும் இருக்க இவர்கள் இருவரையும் சனி பார்த்தால் அரிஷ்டம் உண்டாகும் எ-று. (712)

மானிடருங்கு அயன்விதித்த ஆண்டைமூன் றுக்கின்
வருமுப்பான் மூள்ருகும் அஃதுஅற்பம் என்ப
தானறுபத் தாருமத் திமந்தீர்க்கம் இதன்மேல்
தாழ்வுஅறமுன் வகுத்திடுபங்கு ஒனறினைமூன்று ஆக்கில்
பான்மொழியாய் பன்னொனறுஆம் பங்குஒன்று தனக்கே
பகர்ந்திடுவாய் அற்பத்தில் அற்பமத்யந தீர்க்கம்
ஆனமத்யந் தீர்க்கத்தை இவ்வாறே பிரித்து
அறிந்திடுநீ அவரவர்கள் ஆயுளினைக் கண்டே.

(இ-ள்) மக்களுக்கு நான்முகப் பிரமன் நியமித்த (ஆயுள் பிரமாண வருடம் நூற்றினை) மூன்று பங்காகப் பிரிக்க முப்பத்திமூன்று வருடங்கள் ஆகும். அஃது அற்பவயது எனப்படும். மத்திம வயது வருடம் அறுபத் தாறு, தீர்க்க வயது வருடம் நூறு ஆகும். இதற்குப்பின் பகுதத பங்கு ஒவ்வொன்றையும் மும்மூன்றாகப்பிரித்து, அங்ஙனம் பிரித்த பாகம் ஒன்றுக்கு அற்பத்தில் அற்பம், அற்பத்தில் மத்திமம், அற்பத்தில் தீர்க்கம் என்றும், மற்றும் மததியந் தீர்க்கத்தையும் இவவடைவே பகுத்தும் அவரவர்களின் ஆயுட்பிரமாணத்தை அறிதல் வேண்டும் எ-று.

(வி-ரை) இதன் விரிவை முன்கூறிய 20-வது செய்யுள் விருத்தியின் கீழ் சக்கரத்தில் நன்கு விளக்கிக் காட்டப்பட்டு இருத்தலின் ஆண்டு அறியவும்.

க்ருதத்ரே தாத்வாபரேஷு அமிர்தாயுர் பவிஷ்யதி
சதவிம்சதி பூர்ணாயுஃ ந்யூநமேவா திகம்நஹி. (விருத்த பராசரர்)

கிரேத, திரேத, துவாபர யுகங்களில் அமிர்தாயுர்த்தாயம் வருஷம்-120 என்ப; இதற்குக் குறைந்த ஆயுளையன்றி உயர்ந்த ஆயுள் கிடையாது.

## பூர்ணாயுள் மூவகைப்படும் என்பது

ஆயுர்யோகாஸ் த்ரிதாப்ரோக்தா ஸ்வல்பமத்ய சிராயுஷஃ
த்வாத்ரிம் சத்பூர்வம் அல்பாயுர் மத்யமாயுஸ்ததோ பவேத்.
(சர்வார்த்த சிந்தாமணி)

ஆயுசு-அற்பாயுசு என்றும், மத்யமாயுசு என்றும், பூர்ணாயுசு என்றும் இப்படி மூன்றுவிதமாகச் சொல்லப்படும். அவற்றுள் 32-வருடம் அற்பாயுளாகும்.

"ஸப்த த்யாப்ரோக்தநம் பூர்ணம்" எனவே 70-வருடத்திற்குமேல் பூர்ணாயுள் என்று அறியவும். இதனால் சர்வார்த்த சிந்தாமணி நூலுடையார் மதம் 32-வரை அற்பாயுள் என்றும், 70-வரை மத்திமாயுள் என்றும், 100-வரை தீர்க்காயுள் என்றும் அறியப்படுகின்றது.

ஏனையோர் மதம் 100-வருடம் என்றும், 120-வருடம் என்றும் இரு திறப்பட்டிருக்கின்றது. இவற்றுள் தசாபுத்தி 120-வருடமெனவும், கால சக்கரம் 118-வருடமெனவும் கூறுநிற்கும். எது எப்படியாயினும் இந்நூலாசிரியர் மதம் பரமாயுள்-100 என்பதேயாம். இங்கு ஆயுர்த்தாயம் என்னும் விஷயத்தைப்பற்றி சுருதி யுகதி அநுபவ வாயிலாக சிறிது விளக்கப்படும். இதனை சோதிட ஞான சூக்கும தரிசிகள் நன்கு ஆராய்ந்து உண்மை

புணர்தல்வேண்டும். கூடியமட்டும் இவ்விஷயத்தை மிகவும் சுருக்கமாக எடுத்து விளக்குவேமாக.

## ஆயுள்தாயம்

இவ்வடமொழித்தொடர் ஆயுః+தாயம், என்று பிரிக்கப்படும். ஆயுః என்பதற்கு ஜீவன், பிராணன், ஜீவிதகாலம் என்றும், தாயம் என்பதற்குக் கொடுப்பது என்றும அர்த்தமாகும். எனவே ஜீவன் தேகத்தோடு கூடி வாழ்ந்திருக்கும் கால அளவுக்கு ஆயுர்த்தாயம் என்று பெயர். இது நம் தாய்மொழியில் வயது வாழ்நாள் என்று வழங்கப்படும். சரீரத்தில் உயிர் இயக்கப்பெறும் காலமென்பது இதன் சிறந்த பொருளாகும்.

ஆயுள்=வாழ்நாள்; அல்லது ஜீவியகாலம், தாயம்=உரிமை எனவே ஆயுளின உரிமை; அல்லது சம்பந்தமெனினும் ஒக்கும். "பாபீ ராசியுః சுகிர்தீ கதாயுః" என்ற சுருதி வசனத்தின்படி ஆயுளே பாபமென்றும், போகமே மாரகமென்றும் அறியப்படும். சுகிர்த-(புண்ய) த்தினால் தன் சுகார்த்திகளை உடையவர்கள் சீக்கிரம் மரணமடைவர் என்றும், பாபத்தினால் கொடிய செய்கைகளைப் புரிபவர்கள் அதிககாலம் இருப்பரென்றும், அர்த்த காமங்களை விட்டவர்கள் அமிர்தத்துவத்தைப் பொருந்துவர்கள் என்றும், கூறும் வேதாந்த கூடார்த்தத்தை வேதாங்கமான சோதிட சாஸ்திரம் தெரியசெய்கின்றது. பராசராதிமுனிவர் மதங்களில் இப்படிப்பட்ட சூரிய சூசக பாவங்கள் கூடமாக - (இரகசியமாக) இருத்தலினால் சோதிட சாஸ்திரத்தின் பூர்வாசாரியர்களாகிய புத்திமான்கள் இவற்றைச் சற்குரு முன்னிலையில் கேட்டு கோப்பியமாக - (மறைவாக) வைத்துக்கொண்டே கால நிர்ணயத்தில் புத்தியைச் செலுத்தி இருக்கின்றார்கள் என்பது நன்கு விளங்கும்.

> செய்ததீ வினையி னோடு நல்வினைப் பயன்கள் தீர்ந்தால்
> எய்திய புவியிற் றத்தம் வினைவழி யெடுப்பன் சென்மம்.

என்ற மச்சபுராணத்தின்படி வினைப்பயனால் தேகம் உண்டாகின்றது. ஜீவான்மா தேகத்தோடு கூடியிருந்து பயனுகர்ச்சியை அடைவதற்கே வாழ்நாள் என்று பெயர். வினைப்பயனை அடைந்து தேகத்தைவிட்டு நீங்கப் பெறுவதற்கே மரணமென்றுபெயர். இதனாலும் ஜீவான்மாவானது வினைப் பயனால் உண்டான தேகத்திலிருந்து இயங்கும காலமான ஆயுளுக்குப் பாபமெனபதும், தேகத்தைவிட்டு நீங்கும் காலத்திற்கு போகமென்பதும் பொருத்தமாக இருக்கின்றதை விவேகிகள் அங்கீகரிப்பார்கள்.

மற்றும் சோதிட சாஸ்திரங்களில் ஒன்பதாமிடத்தைப் பூர்வ ஜன்ம விஷயங்களை உணர்த்தும் ஸ்தானமென்று கூறப்பட்டிருக்கின்றது. இது பற்றியே இந்த ஒன்பதாமிடம் தர்மஸ்தானமென்று சொல்லப்படுகின்றது. தர்மத்திற்கு எதிர்மொழி அதர்மமாகும். தர்மத்திற்கு அதாவது புண்ணியத்திற்கு விய-(விரய)ஸ்தானமான 8-ஆமிடம் அதர்மஸ்தானமாகும். அதாவது பாபஸ்தானமாகும். இப்படியே வினைப்பயனால் தேகத்தையடைந்த ஆன்மா தேகத்தோடு கூடி இன்பத்தை அடையும் விஷயத்தை உணர்த்தும் ஸ்தானம் நான்காம் இடம். அவ்வித இன்பத்திற்கு வியஸ்தானம் மூன்றும் இடமாகும். ஆகவே மூன்றுமிடமும் ஆயுள்ஸ்தானம் என்று பெயர். இந்த

3-8-ஆம் இடங்களாகிய ஆயுள்ஸ்தானங்களுக்கு வியஸ்தானங்களாகிய 2-7ம் இடங்கள் மாரக ஸ்தானங்களாகும். ஆதலால் ஆயுள்ஸ்தானம் என்பது. ஆயுளைக் கொடுக்கும் ஸ்தானமென்றும், மாரகஸ்தானமென்பதை ஆயுளைக் கெடுக்கும் ஸ்தானம் என்றும் அறிதல்வேண்டும். ஆயுளை மூன்றுவிதமாகப் பகுக்கப்பட்டு இருக்கின்றன. அவை அற்பாயுள் மத்திமாயுள் தீர்க்காயுள் என்பவைகளாம். மக்களுக்குப் பிரமதேவனால் விதிக்கப்பெற்ற ஆயுள்காலம் நூறு வருடம் என்று இந்நூல் ஆசிரியர் வசனத்தினால் நன்கு அறியப்படும். இதனை 'மானிடற்கு வயது நூறல்ல தில்லை' என்ற கபிலர் அகவற்பாவினாலும் அறியலாம். அங்ஙனமானால் நூறு வருடத்திற்குமேல் மக்கள் ஜீவித்து இருக்க முடியாதோ எனின்? ஜீவித்திருக்க முடியும். அங்ஙனஞ் ஜீவித்து இருப்பது அமிர்தாயுள்முறையைச் சார்ந்ததாகும். அற்ப மத்திம பூரணாயுள் என்பது சாதாரண மிதாயுள் என்றும், அதற்குக் காலவரையறை நூறு வருடமென்றும், பூரணாயுளுக்கு மேற்பட்டது அமிர்தாயுள் என்றும், அதன் காலவரையறை நூற்றுக்குமேல் என்றும், சோதிட பல சாஸ்திரமாகிய ஜாதக ஸ்கந்தங்களால் நன்கு அறியலாம். மக்களின் ஆயுள் நீட்சிக்குங் குறைவிற்குஞ் சுவாசம் - (பிராணவாயுவே) முக்கிய காரணமாகும். காய கற்பஞ் செய்துக்கொண்டவர்களும், பிராணாயாமம் பழக்கமுடையவர்களும் மிதாயுட் காலத்திற்குமேல் ஜீவித்திருப்பார்கள்.

"பெருமலை விடரகத் தருமிசைக் கொண்ட
சிறியிலை நெல்லித் தீங்கனி குறியா தாதகின் அகத்தடக்கிச்
சாதல் நீங்க எமக்கீந் தனையே."

என்ற புறநானூற்றில் வரும் ஔவையார் பாடலால் ஔவையாருடைய தேக மெலிவைக் கண்டிரங்கி, அதிகன் என்னும் அரசன் கொடுத்த கருநெல்லிக் கனியை வாங்கி உண்டு காயசித்திப் பெற்று நீண்டநாள் வாழ்ந்திருந்தனர் என்பதை அறியலாம். மக்களுக்குத் தினமொன்றுக்கு இயல்பாக எழுகின்ற 21,600-சுவாசங்களையும் திருமூலர் பிராணாயாமப் பழக்க (யோகாப்பியாச)த்தினால் தினமொன்றுக்கு 700 ஆக அடக்கி மூவாயிரம் வருடம் உயிரோடு இருந்ததையும் அறியலாம். மகரிஷிகளும் இங்ஙனமே ஆயுள் நீட்சியைப் பெற்றனர். இவ்வித ஆயுள் நீட்சியைப்பற்றி சோதிட சாஸ்திரத்தில் சில விதிகள் கூறப்பட்டுள்ளன. அவைகளுள்,

ஐம்பதுமால் புகர்பொன்விது தமதுவர்க் கோத்தமத்தில்
ஆகமற்றோர் திரமாகில் ஆண்டொரைந் நூற்அருணன்
உம்புகர்பொன் வைசேடி காங்கிசமாகித் திரத்தில்
உற்றிட மற்றவர்உபயம் உறிலயுகப மீபாக்குளதே.

என்ற குமாரசுவாமீய வசனத்தின்படி வெகு ஆயுள் முதலியவற்றின் கிரக நிலைகளை அறிந்துகொள்ளவும். தசரத சக்கரவர்த்தியார் அறுபதினாயிர வருடமும், ஸ்ரீராமமூர்த்தி 11-ஆயிரம் வருடமும் உலகபரிபாலனஞ்செய்த விஷயம் இதிகாசத்துள் ஒன்றாகிய இராமாயணத்தினால் அறிந்துயயலாம். இவ்வித ஆயுள் நீட்சிக்குக் காரணம் சுவாசமே எனறும், அதற்கு முக்கிய காரணம் ஜனனகால கிரகநிலைகளேயென்றும் இதனால் விளங்காநிற்கும்.

"க்ருதத்ரேதா த்வாபரேஷு அஸ்திகா ப்ராணஸந்ததிः
அமிர்தாயுர் பவேத்தேஷாம் அர்கமாச்ச யதேகலௌ."

ஹாரீதஸமிருதியில் கிரேத திரேத துவாபர யுகங்களில் மக்கள் அஸ்தி-(எலும்பு) நசிக்கும்வரையில் ஜீவித்திருப்பார்கள் என்றும், அவர்களுக்கு அமிர்தாயுர்த்தாயம் உண்டாகுமென்றும், கலியுகத்தில் மக்கள் அன்னுதிகள் புசிக்கும்வரைக்குமே ஜீவித்திருப்பார்கள் என்றும் சொல்லப்பட்டிருத்தலின், இங்கு நாம் ஆராய்ச்சிக்கு எடுத்துக்கொண்ட விஷயம் மிதாயுள் என்பதைப் பற்றியேயாகும்.

| | | |
|---|---|---|
| அற்பாயுள் வருடம் | 1-முதல் | 33-வரை |
| மத்திமாயுள் வருடம் | 33-முதல் | 66-வரை |
| தீர்க்காயுள் வருடம் | 66-முதல் | 100-வரை |

நூறு வருடம் மிதாயுர்த்தாயம் என்றும், நூற்றுக்கு மேற்பட்ட வருடம் அமிதாயுர்த்தாயம் என்றும் அறிக.

| | |
|---|---|
| அற்பத்தில் அற்பாயுள் | வருஷம்-11 |
| அற்பத்தில் மத்திமாயுள் | ,, 22 |
| அற்பத்தில் தீர்க்காயுள் | ,, 33 |
| மத்திமத்தில் அற்பாயுள் | ,, 44 |
| மத்திமத்தில் மத்திமாயுள் | ,, 55 |
| மத்திமத்தில் தீர்க்காயுள் | ,, 66 |
| தீர்க்கத்தில் அற்பாயுள் | ,, 77 |
| தீர்க்கத்தில் மத்திமாயுள் | ,, 88 |
| தீர்க்கத்தில் தீர்க்காயுள் | ,, 100 |

தசாயுர்த்தாயம் வருஷம் 120-ஆகவும், காலசக்கராயுர்த்தாயம் 118-எனவும் சோதிட சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டிருப்ப, தீர்க்காயுள் காலவரையறை 120 அல்லது 118 ஆக கூறவேண்டியது நியாயமாகும்.

அதைவிட்டு ஆசிரியர் நடராஜனுரவர்கள் 100 என்று கூறியிருப்பது என்னையெனின்? மக்களில் பெரும்பாலோர் (நூற்றுக்குத் தொண்ணூற்றைந்து வீதம்) 100-வருடத்தின்மேல் ஜீவித்திருப்பது அரிதினும் அரிது ஆகலின் இங்ஙனம் கூறியிருக்கின்றனர்போலும். இந்த ஆயுர்த்தாயம் எழு வகைப்படும் என்று சோதிட சாஸ்திரங்களில் சொல்லப்பட்டிருக்கின்றது.

அஃது வருமாறு:—

சாதகம் ஆயுர்த்தாயஞ் சாற்றிடின் நிசர்க்கத்தோடு
ஏதமில் பயிண்டிகம்பங் கிசகிர ணத்திஞேடு
சேதமில் காலசக்ரந் திசைபட்ட வர்க்கமுந்தான்
பேதமில் எழுவாக்கத்தால் பேசுவ தாயுளென்பர்.

இலக்கினம் பெலக்கின் அம்சம் இரவிக்குப் பயிண்டிகந்தான்
கலக்கமா மதிநைசர்க்கங் கணக்கற்கே கிரணஞ்சேய்க்குத்
துலங்குறும் அட்டவர்க்கஞ் சுங்கற்குக் காலச்சக்ரம்
மலக்கமில் சனிதனக்கு மாதசை யாகுமாதோ.

என்ற தில்லைநாயகனுர் சாதக சிந்தாமணி வசனத்தின்படி 1-வது நைசர்க்கிக ஆயுர்த்தாயம், 2-வது பிண்டாயுர்த்தாயம், 3-வது அம்சாயுர்த்தாயம், 4-வது கிரணுயுர்த்தாயம், 5-வது காலசக்ராயுர்த்தாயம், 6-வது தசாயுர்த்தாயம், 7-வது அஷ்டவர்க்காயுர்த்தாயம் என எழுவகைப்படும்.

| | |
|---|---|
| இலக்கினம் பலமாயிருந்தால் | அமிசாயுர்த்தாயமும் |
| சூரியன் பலமாயிருந்தால் | பிண்டாயுர்த்தாயமும் |
| சந்திரன் பலமாயிருந்தால் | நைசர்க்கிக ஆயுர்த்தாயமும் |
| புதன் பலமாயிருந்தால் | கிரணாயுர்த்தாயமும் |
| செவ்வாய் பலமாயிருந்தால் | அஷ்டவர்க்காயுர்த்தாயமும் |
| சுக்கிரன் பலமாயிருந்தால் | காலசக்கிராயுர்த்தாயமும் |
| சனி பலமாயிருந்தால் | மகாதசாயுர்த்தாயமும் |

முக்கியமாகும்.

இந்த எழுவகையில் இரண்டு அல்லது மூன்றுவகையில் பலம் ஏற்பட்டிருந்தால் அவ்வித இரண்டு மூன்றுவகை ஆயுர்த்தாயங்களைக் கணித்து 2-அல்லது 3-ஆல் வகுத்துக் கண்டதே சுத்தாயுர்த்தாயம் என்னப்படும். மேற்காட்டிய இரண்டு செய்யுள்களில் 2-வது செய்யுளின்பின் இரண்டு அடிகளைப் பாடபேதமாக திருத்திக் காட்டப்பட்டுள்ளது.

ஆயுர்த்தாயம் முன்னே கூறியபடி எண்வகைப்படினும் சோதிடவல்லவர்களாகிய மய, யவன, மணித்த, ஜீவசயம, சித்தசேன, வராகமிகிராதியோர், அவற்றுள் பிரதானமாக 1-வது நைசர்க்கிக ஆயுர்த்தாயத்தையும், 2-வது பிண்டாயுர்த்தாயத்தையும், 3-வது அமிசாயுர்த்தாயத்தையுமே சித்தாந்தப்படுத்தி இருக்கின்றார்கள்.

இதனை, பாருலகில் சாதகருக்கு ஆயுர்த்தா யந்தான்
பண்புடைய சத்தியா சார்சித்த சேனர்
பேருடைய வாதாராயணர் தெய்வ சுவாமிப்
பெருமணித்த ஆசாரி மயன்பட்டோத் பலராங்
கூறும்யவ னாசாரி இவர்கள் எண்மருந்தான்
சூலவுதர்க்க வாதமுடன் மறைமுதல் சம்மதியாய்ச்
சீருடனே மூன்றுவகை ஆயுர்த்தா யந்தான்
செப்பியதோர் வடமொழியைச் செந்தமிழால் சொல்வாம்.

என இந்நில உலகத்தின்கண் பிறந்த மக்களின் வாழ்நாளின் எல்லையாம் ஆயுர்த்தாயத்தை சிறந்த நற்குணம் வாய்ந்த சத்தியாசாரியர், சித்த சேனாசாரியர், வாதராயணாசாரியர், தெய்வசுவாமியாசாரியர், மணித்த ஆசாரியர், மயாசாரியர், பட்டோத்பல ஆசாரியர், யவனாசாரியர் ஆக இந்த எட்டு ஆசாரியர்களும் நியாயவாதத்துடன், சோதிட சாஸ்திரத்தின் முதல் நூற்களுக்கு ஒப்பாக சிறந்த மூன்றுவிதமான ஆயுர்த்தாயங்களை, ஆரிய மொழியில் அருள் செய்திருப்பதை அமிர்தினு மினிய நம் தாய்மொழியாகிய சிறந்த தமிழ்மொழியில் கூறுவாம்.

எனவரும் சாதக சிந்தாமணி எட்டாம்பாகச் செய்யுளின்படி நன்கு அறியலாம். இம்முறையின்படி ஆயுர்த்தாய நிர்ணயஞ் செய்வது சுலப சாத்தியமான காரியமல்ல. இது மிக்க கணிதப் பிரயாசையின்மீது அறிதற்குரியது ஆகும். இம்முறைக்கு கிரகஸ்புடம், பாவகஸ்புடம், கிரகங்களின் இடம், திக்கு, காலம், சேஷ்டை, நிசர்க்கம், பார்வை என்னும் சட்பல நிர்ணயம் முதலிய அரிய பெரிய கணிதங்கள் அவசியம் வேண்டற்பாலது.

ஒரு ஜாதகத்தில் சட்பல கணிதத்தின்படி லக்கினம் பலமுடையதாய் இருந்தால் அமிசாயுர்த்தாயமும், சூரியன் பலவானுயிருந்தால் பிண்டாயுர்த் தாயமும், சந்திரன் பலவானுயிருந்தால் நைசர்க்கிக ஆயுர்த்தாயமும் பிர தானமென்று முன்னரே கூறப்பட்டிருப்பதனுல் அறிந்துகொள்ளலாம். ஒரு ஜாதகத்தில் இம்மூவகை (இலக்கினம்-ரவி-மதி)க்கும் சட்பலத்தில் பல சாம்யமுண்டாயின், அதாவது மூன்றும் பல பிண்டத்தில் சரியாக இருந் தால் மூன்றுவகை ஆயுர்த்தாயத்தையுங் கணித்து ஒன்ருகக் கூட்டி 3-ஆல் வகுத்துக் கண்டது ஸ்புடாயுர்த்தாயமாகும் என்பது பலர் சம்மதம்.

| | ரவி | மதி | குஜ | புத | குரு | சுக் | சனி | | ஷ |
|---|---|---|---|---|---|---|---|---|---|
| பிண்டாயுர்த்தாயம் | 19 | 25 | 15 | 12 | 15 | 21 | 20 | = | 127 |
| நிசர்க்காயுர்த்தாயம் | 20 | 1 | 2 | 9 | 18 | 20 | 50 | = | 120 |

இம்மூன்றுவகை அயுர்த்தாயங்களில் லக்கினத்துக்கும் ஆயுர்த்தாய விபாகமுண்டு; அது கணிதத்தினுல் ஏற்படும். இவ்விச ஆயுர்த்தாய கணித விஷயங்கள் முற்றும் இங்கு எடுத்துரைக்கப்புகின் விஷயம் மிகவும் விரிவு ஆகுமென்பது திண்ணம்.

"யேதர்ம கர்ம நிரதாவி ஜிதேந்த்ரியாயே
யேபத்ய போஜந ஜுஷ்டே த்வஜதேவ பக்தா:
யேமாநவா ததஇயே குலசீல யுக்தா:
தேஷாமிதம் கதிதமாயுர் உதாரதீபி:" (ஸ்ரீபதி)

எவன் தருமத்திலும், சரியை யாதி கிரமங்களிலும், அதிக ஆசக்தி உள்ளவ னுடம், கர்மயோகாதிகளான தன் மனத்தை இந்திரியாதிகளின் வசப்படுத் தாத ஜிதேந்திரியனுயம், பத்தியமான பதார்த்தங்களைப் புசிப்பதில் ஆசை யுள்ளவனுயம், பிராமணர்கள் இடத்திலும், தெய்வத்தினிடத்திலும், பக்தி உள்ளவனுயும், தருமவழியில் கிடைக்கப்பெற்ற போக போக்கியங்களை அனுபவிப்பவனுயும் இருக்கின்ருனே அவன் கணிதாயுர்த்தாய எல்லைவரை யில் ஜீவித்திருப்பான். இதற்கு விரோதமான அதர்மாதி துராசாரங்களை உடையவனுக்கு இந்த கணிதாயுர்த்தாயத்திலும் கொஞ்சம் குறையும். பல தீபிகை நூலுடைய மந்திரேசமுனிவரும் இதையே தமது நூலின் 22-வது அத்தியாயத்து 30-வது சுலோகத்தில் ஆதரித்துக் கூறியிருக்கின்ருர்.

இதனை உற்றுணர்ந்து நோக்குங்கால் மக்கட்கு சோதிட சாஸ்திரத்தி னுல் கணிதவிதிப்படி ஏற்பட்ட ஆயுர்த்தாயங்கூட அவர்களின் பக்தி ஒழுக் கத்தின் பெருக்கத்திற்கேற்ப அதிகரித்தலும், சுருக்கத்திற்கேற்ப குறைவு படுதலும் உண்டென்பது விளங்கா நிற்கும். இது கருதியே,

கோள்சாரங் கொண்டு குறிப்பதல்லால் மானவர்தம்
நாள்பலனன் நான்முகனை அன்றியே—வாள்கண்ணுய்
ஆர்வல்லார் கூறுதற்கு ஆர்வல்லார் கேட்பதற்கு
ஆர்வல்லார் ஆராய்வ தற்கு.

என்றதால் மக்கட்கு இன்னநாளில் இன்னபலன்தான் நடக்குமென்பதைச் சோதிடர்கள் கிரக சாரங்களைக்கொண்டு யுக்தியாக-(ஸ்தூலமாக) சொல்லு வார்களேயன்றி தார தம்மியங்களைப் பிறவினையாகச் சொல்லவேண்டு

மென்றால், அதாவது இந்தஜாதகன்வாழ்க்கை இத்தனைநாள்தான் என்றும் இன்னபலன் இன்ன தேதியில்தான் உண்டாகுமென்றும் சொல்லவேண்டு மென்றால் பிரமதேவன் ஒருவனைத் தவிர சொல்லுவதற்கும் கேட்பதற்கும் ஆராய்வதற்கும் வல்லவர்கள் வேறில்லை என்ற திருவாக்கும் எழுந்தது போலும். சோதிட பலசாஸ்திரத்தில் வல்லவர்களாகிய மகரிஷிகள் மக்கள் வாழ்நாளின் வரையறையாகிய ஆயுர்த்தாயத்தை அறியும் கணிதமுறைகளை யும், சில கிரகவிதி முறைகளையும் கூறியிருக்கவும், ஸ்ரீ தாயுமானர் முதலி யோர் "இன்றைக்கு இருப்பாரை நாளைக்கு இருப்பர் என்று எண்ணவோ திடமில்லையே" என்று அருள்செய்திருப்பதை நோக்கின், மக்கள் வாழ் நாளின் வரையறை அவர்களது பிறப்புக்காலத்தின் கிரகநிலைகளால் ஒரு வாறு ஸ்தூலமாகத்தான் அறிந்துகொள்ள இயலுமேயன்றி, திண்ணமாக அறிந்துக்கொள்ள இயலாதென்பதும் நன்கு போதரும். இதனை அறி வுடைய பெரியார் நுண்மதியால் ஓர்ந்து நுவலுவார்களாயின் மிக்க நலமா யிருக்கும். உண்மை இங்ஙனமானால் சோதிட சாஸ்திரங் கொண்டு சாதகம் கணித்து ஆயுள் நிர்ணயஞ்செய்வது வீண்காரியந்தானே? அதனால் என்ன பயன்? என்ற ஆசங்கை யுண்டாகின்றது; அப்படிக்கல்ல. மஹான்கள் சோதிட சாஸ்திரம் என்னும் கட்டடத்தை சாந்திபலம் என்னும் அஸ்தி வாரத்தின்மேல் கட்டி இருக்கின்றார்கள் என்று சாஸ்திரங்களால் அறியப் படுகின்றது. ஆகவே சாதகங்கொண்டு கிரகநிலைகளை நோக்கி இச்சாதக னுக்கு ஜனனகாலம்வரை பாலாரிஷ்டம் இன்னின்ன காலத்தில் ஆயுள் தோஷத்தைச் செய்யத்தக்க கிரகதசை புக்திகள் வருகின்றது. ஆகவே அக்காலத்தில் மகரிஷிகள் கூறியுள்ள சுருதிகளின்படி இன்னின்ன சாந்தி ஜபம் தபம் தானங்கள் செய்யின் தோஷநிவர்த்தியும் சுகப்பிராப்தியும் உண்டாகும் என்பதை அறிந்து மக்கள் நன்மை அடையும்பொருட்டே சோதிட பல சாஸ்திரத்தைச் செய்யப்பட்டு இருக்கின்றதென்பது நன்கு விளங்காநிற்கும்.

இதனை, குறித்திடு ஜாதகமென்ப தவரவர்தம் வினையின்
குணங்கள்அறிந்து அயன்விதித்த கொள்கையுள தன்றோ
மறித்துமவர் அவர்தமக்கு வரும்பல பாவகத்தின்
வகை அறிந்து பெரியோர்கள் வழுத்தியசொல் அதனைப்
பிறித்தறிந்து சுபம்வரும்மேல் உளமகிழ்ச்சி பொங்க
பின்னசுபம் வரில்அதற்கு பிரீதிஎன்கொல் என்று
நெறித்தரும சாஸ்திரத்தின் விதிசாந்தி செய்தே
நிறைந்தசுபம் பெறுவதற்கே நிகழ்த்தினர் சாதகமே.

எனவரும் சாதகாலங்கார வசனத்தினால் நன்கு அறியலாம். ஆகவே இது காறுங் கூறிப்போந்தவற்றால் மக்களின் வாழ்நாள் நிச்சயமாக இத்துணைத் தான் என்று திண்ணமாக அறிந்துகொள்ள சோதிடசாஸ்திரத்தில் ஆயுர்த் தாயகணிதமுறை இருந்தும், அஃது மக்கள் பக்தி ஒழுக்கங்களின் விருத்தி க்ஷீணங் காரணமாக மிகுதல் குறைதலை யுடைத்தாயிருக்கின்றதென்பதும் சோதிட சாஸ்திரத்தின் மூலமாக மக்கள் வாழ்நாளை ஸ்தூலமாக அறிய முடியுமேயன்றி சூட்சுமமாக அறிய முடியாதென்பதும் போதரும்.

அங்ஙனமானால் "அலரவன் இட்டிவைத்த ஆயுளின் அளவை காறும்" எனவரும் புராணவசனத்தின்பயன் என்னே? என்ற சங்கை நிகழாநிற்கும்.

அதாவது பிரமதேவன் மக்கள் இத்துணை நாட்கள்வரை இப்பூவுலகத்தில் வாழ்வார்கள் என அவரவர்கள் தலையில் எழுதியிருப்பதென்னும் கருத்துக்கு முரணுகின்றதன்றோ எனின்? முரணாது. யாதுபற்றி எனின், 'மிருத்து' என்பது ஒருபெண்தேவதை; இவள் பூமிதேவி பூபாரம் பொறுக்காது வேண்டச் சிவாக்ஞையினால் பிரமதேவனுடைய வீரியத்தினின்று தோன்றியவள். இவள் ஆன்மாக்களின் கால இறுதியில் மாய்க்கும் அதிகாரமுடையவளாய் இயமனிடம் இருப்பவளாகும். இவள் பக்தி ஒழுக்கங்களில் மேம்பட்ட ஆன்மாக்களை அவற்றின் வினைக்கீடாப் பிரமதேவனால் நியமிக்கப்பட்ட காலமுடிவில் தேக நீக்கம் அடையச் செய்விப்பவள். அவைகளில் கீழ்பட்ட ஆன்மாக்களை அக்காலவரையறைக்குள்ளாக அகாலமிருத்துவை அடையச்செய்பவள். காலமிருத்துவை அடைந்த ஆன்மாக்கள் தேகத்தை விட்டு நீங்கியபின் வேறு உலகங்களைச் சென்றடையும். அகாலமிருத்துவை யடைந்த ஆன்மாக்கள் தேகத்தைவிட்டு நீங்கியபின் வினைக்கீடாய் பிரமதேவனால் விதிக்கப்பட்ட காலமுடிவுவரையில் அந்தராத்மாவாய் வாயுவின வடிவத்தைப் பெறறு பூலோகத்திலேயே சஞ்சரிக்கும். பின்பு பிரமதேவனால் விதிக்கப்பட்ட காலவரையறைமுடிந்ததற்பின் தான்செல்லவேண்டிய வேறு உலகத்தைச் சென்றடையும் என்று அறியப்படுதலினால் என்க.

ஆகவே மக்களின் வாழ்நாள் இத்துணைக்காலமென்று பிரமதேவனால் அவரவர்கள் தலையில் விதிக்கப்பட்டிருப்பது "போமோ தலையில் பொறித்தான் பிறழ்ந்து கினைக்கினுமே" என்றதனால் உண்மை யென்பதும், அங்ஙனம் விதிக்கப்பட்டிருக்குங் காலவரையறைச் சோதிட சாஸ்திரத்தினால் அறிந்துக்கொள்ள முடியுமென்பதும், அங்ஙனம் அறிந்துகொண்ட ஆயுள் அளவையிலும் மக்கள் பக்தி ஒழுக்கங்களின் சுருக்கம் பெருக்கங்களால் குறைதலும், அதிகரித்தலும் உண்டென்பதும் நன்கு போதரும். மக்களின்வாழ்நாளாகிய ஆயுர்த்தாயமென்பது அரிஷ்டத்தின் ஆதீனத்தில் இருக்கின்றதென்றும், அரிஷ்டம் நீங்கிய ஜாதகங்களுக்கே ஆயுர்த்தாய நிர்ணயம் செய்யவேண்டியதென்றும், சோதிட சாஸ்திரங்களில் மகரிஷிகளும் பூர்வாசாரியர்களும் அருள்செய்திருக்கின்றனர். ஆதலால் இனி அரிஷ்டத்தின தன்மையையும், அதன் காலவரையறையையும், அதன் சாந்தியையும்பற்றிச சிறிது கூறியபின்னர் ஆயுர்த்தாய விருத்திக்கு ஏதுவான கிரகயோகங்களையும் மற்றவைகளையும் பின்பு விளக்குவாம். (713)

வேறு

அட்டமா திபனுங் குசனுமே கூடி
யாறுபன் னிரண்டிடத் திருக்கில்
துட்டரர யுதத்தால் மரணமுற் றினியோர்
சூழ்ந்துகண் டிடப்படுங் காயம்
எட்டிறை திபன்பாம் புடனவிய மெட்டா
றெய்திடிற் கள்ளரா லரிட்டம்
தொட்டலக் கினமெட் டாதிசேர்ந் துதகஞ்
சூழ்மனை யுறிற்சல கண்டம்.

(இ-ள்) அஷ்டமாதிபதியும் குஜனும் கூடி 6-12 என்னும் இராசிகளில் இருக்க துஷ்டர்களின் ஆயுதத்தால் மரணம் உண்டாகும். மேற்சொல்லிய

இருவரோடு சுபகிரகங்கள் சகிதம்பெறினும் பார்க்கினும் அவனுக்கு காயம் படுமென்றும், மேலேசொன்ன அஷ்டமஸ்தானாதிபதி கேதுக்களுடன் கூடி 6 8 இவ்விடங்களில் இருக்கில அவனுக்கு கள்வரால் மரணமென வும், ஜெனனராசியதிபதியும, அஷ்டமாதியான 8-ஆம் வீட்டோனும் சேர்ந்து 6-ஆம் ராசியில் இருக்க ஜலத்தினாலும் உயிரிழப்பான் எனக் கூறுவா எ-று.

(வி-ரை) இவை ஆயுளை நிர்ணயித்தபிறகு எவ்விதமாய் உயிர் விடுவாய் என அறியும் செய்யுள ஆகையால் இதற்கு விசேஷமாய் கூறவேண்டியது இல்லை. (714)

கண்டவெட் டாதி வாகனா திபனைக்
கலந்துபன் னிரண்டேர்டா றெட்டில்
மிண்டிய நீசர் சத்துரு மனையில்
மேவில்வா கனங்களால் மரணம்
மண்டியெட் டதிபன் காரியங் கிசத்தில்
வரின்மரத் தேறிவீழ்ந் திறப்பன்
அன்றியொன் றெட்டோ னீசரங்கி சம்புக்
கற்சன்னி வாதமாஞ் சூரும்.

(இ-ள்) ஜெனன ராசிககு 8-ஆம ராசியதிபதியும், வாகனாதிபதியான நான்காமிடத்தோன் என்னும் சுகஸதானாதிபதியும் சேர்ந்து 6-8-12 இவ் விடங்களில் இருந்தாலும, தன்பததைவிளககும சத்துரு வீட்டிலும் நீசர் களுடைய வீட்டிலும இருந்தாலும், அந்த ஜாதகன வாகனஙகளால் உயிர் விடுவான. மேறசொலலிய அஷ்டமாதிபதி சனியஙகிசம்பெற்றிருகக, அந்த ஜாதகன் மரததின்மேலேறி வீழ்ந்திறபபன. மேறசொன்ன அஷ்டமாதி பதி சனி யஙகிசமபெற்ற நீசசகிரகஙகளின் அஙகிசையிலும் இருக்க, அந்த ஜாதகன சீதள வாத ஜனனியால் உயிா விடுவான் என்றும் கூறுவர் எ-று. (715)

சூரனுங் கால மிர்த்தியோ டெட்டாந்
துறைலக்கி னாதியுங் கூடிப்
பாரமாங் கல்லா கினுமிடி யேனும்
பட்டிறந் திடுவனமற் றிணணம்
சேரவே யட்ட மாதிநீ சத்திற்
செறிந்துபன னிரணடிலா றெட்டில்
வீரமாங் கருங்கோ ளேக்கவே குனம
வியாதியால வியமடைந் திடுவன்.

(இ-ள்) வீர சூர பராக்கிரமம்பொருந்திய காலமிருத்யு அஷ்டமாதிபதி யோடும, ஜெனனராசி யதிபதியோடும் கூடி இருககப்பிறநதவன பாரமான பெரிய கலலாலும, அலலது இடியினாலும மாிப்பன். மேலே சொன்ன அஷ்டமாதிபதி விரயஸதானம் பெறறிருநதாலும், அல்லது நீசசம பெறறு இருநதாலும அவன குனமவியாதியால மரணமடைவான என்று சொல்வர் எ-று. (716)

அடைந்திடுஞ் சன்மத் தாதிப னேனு
மட்டமத் தாதிப னேனும்
மிடைந்திடுங் குளிகன் தன்னுடன் கூடி
வியமெட்டா றிடத்தினின் மேவ
நடந்தகால் கரங்கள் பின்னமே பட்டு
நலிவனந் நோயினுன் மடிவன்
தொடர்ந்த நல்லோர்கள் பரிவுடன் காணிற்
சொல்கைகா லூனமுற் றிருப்பன்.

(இ-ள்) ஜெனன ராசியதிபதியாவது அஷ்டமாதி என்னும் 8-ஆம்வீட்டோனாவது ஜனபங்களை விலககுவிக்கவல்ல குளிகனுடன் கூடி 6-8-12 இவ்விடங்களில இருக்க, அவன் நடந்துசெல்லும் கால்களும் கரங்களும் பின்னமாகி துன்பமுற்று அந்த நோயினுல் மரணம் அடைவான். மேற் சொல்லியவாகளை சுபகிரகங்கள் பார்க்கின் கை கால்கள் ஊனத்தோடு உயிரோடிருப்பான் எ-று.

(வி-ரை) அவயவ பின்னங்களைப்பற்றி சொல்லவேண்டுவதாயின் 5-ம் வீட்டோன் ஜெனனராசிக்கு 6-ம் வீட்டிற்குள்ளும், 10-ஆம் வீட்டோன் அஙகிசமும், 10-ஆமவீட்டோனும் குருவுமகூடி 6-ஆம்வீட்டிலும், ஜெனன ராசியை குஜன் நோகக, 1 4-7-10-க்குடையோர் ஜெனனலக்கினத்திலும் இருகக, அவன் அஙகப்பழுது உடையவனென்றும் சொல்வர். 6-11-க்குடையோர் 10-ஆம் வீட்டோனைக் கூடி 6-8-12-ல் இருகக, 6-ஆம வீட்டோன் சூரியனுடன்கூடி மேற்சொல்லியவாகளைப் பாரகக, 3-ல் செவ்வாய் நிற்க, அவன் செவியறாது துன்பப்படுவான். ஜெனன லகனுதிபதியும், 2-7-8 12 இவ்வீட்டாரும், சூரியனும் சந்திரனும் கொடிய க்ஷேத்திரம் பெற்று, 10-ஆம வீட்டோனவது குஜனவது பார்த்தால் அவன் தன கண் விழிகளை இழப்பன். இரண்டாம் வீட்டோன் பாவவர்க்கம் பெற்று சேய் கூடினும் பாாத்தாலும, 6-8-12-ஆம் ராசியிலேனும் அவ்வீட்டோனுடன் கூடினல் அவன மூக்கு அறாந்துபோம. ஜெனன ராசிககு 6-8-ஆம வீட்டோனும் சுககிரனும ஜெனன லக்கினத்தில் நின்று 10-ஆம் வீட்டோன் கூடினும் பார்ததாலும் அவன் கண்களை இழப்பான். மகரததில் செவ்வாயும, சிங்கத்தில் சூரியன் சந்திரன் சுக்கிரன கூடில் நேத்திர நோயுள்ளவனுவான். 5-ஆம் வீட்டோனும், ஜெனன லக்கினுதிபதியும் பலமற்று, பாவவர்ககமேறி 10-ஆம வீட்டோனுடன்கூடி சூரிய அஙகிசமபெற்று 6-ம் வீட்டோனும புதனும சனியும் கூடினும் பார்த்தாலும் அவன சிரம் அறுந்துபோம் என சாதக சிந்தாமணியில சொல்லியபடி அவயவ பின்னங்களைப்பற்றி நன்கு ஆராய்வதே உத்தமமாம். (717)

இருந்திடுஞ் சன்மந் தனிற்சனி குளிகன்
இருவருங் கூடியே நிற்க
மருவிய வியமா றெட்டலிந் திருக்க
மன்னுதன் மரணமே யாகும்
பொருந்துமா தித்தன் புடத்திலஎம கண்டன்
புடத்தையுங் கூட்டுமி ராசியினில்

அருந்தவ மன்னன் பொருந்தநோய் கொண்டே
அவனியிற் றுன்பமுற் றிடுவன்.

(இ-ள்) ஜெனனராசியில் சனி குளிகன் இருவரும் இருக்க, 6-8-12 இவ்விடங்களில் சந்திரன் இருக்க, அவன் ராஜாக்களால் மரணம் அடைவான். புகழ்ச்சிபெற்ற சூரியன் ஸ்புடத்தில் எமகண்டன் ஸ்புடத்தையும் கூட்டிககண்ட ராசியில் அருமையான தவத்தையுடைய குரு வரும்போது அந்த ஜாதகன் அதிக வியாதியால் பீடிக்கப்பட்டு துன்பததோடு இருப்பான் எ-று. (718)

இடும்பையா தித்தன் புடத்துடன் குளிகன்
இசைந்திடும் புடத்தையுங் கூட்டி
நடந்தரா சியிற்சூ ரியன்வருங் காலம்
நலியதாஞ் சந்திரன் புடமும்
கடுந்திறற் குளிகன் புடத்தையுங் கூட்டிக்
கண்டரா சியிற்பிறை வருநாள்
அடுஞ்சரங் கடுமா வடுவரி குவளை
அயில்கய லானகண் ணளே.

(இ-ள்) பெருமைபெற்ற சரங்களை அடுக்கியதைப்போன்ற செதிலானது வரியாகவும் அடுக்கி அழகுடன் காணப்படும் குவளை என்னும் பெரிய மச்சத்தன் கணகளைப் பழிக்கசசெய்யும் பெண்ணே! சூரியன்னின்ற ஸ்புடத்துடன் குளிகனன்ற ஸ்புடத்தையும் கூட்டிக்கண்ட ராசியில் சூரியன் ஒருமாதம கோசாரப்படி பிரவேசகாலமும், சந்திரன்னின்ற ஸ்புடத்துடன் குளிகன்னின்ற ஸபுடததையும் கூட்டிககண்ட ராசியில் கோசாரப்படி இரணடேகால் நாள் சந்திரன் பிரவேசகாலமும், அவரவர்களுக்கு நோய் முதலிய பீடைகள உண்டாகும் எ-று.

(வி-ரை) ஒவ்வொரு ஜாதகங்களுக்கும் ஆயுர்த்தாயம் சொல்வதை ஆதிகாலஙகளில் உமையவள், சனகர், விஸ்வாமித்திரர், வராநாராயணர், தெய்வசாமிப்புலவா, மாயன, பிரமமன, யவனுசாரி இவர்களால் ஒருவர்க்கொருவா வாதித்து வேதாந்தவிதிப்படி மூன்று வகைகளாகப் பிரிதது வடமொழியால இயற்றியுளளார். அதனை அநேக மகாத்துமாக்கள் எளிய செந்தமிழ நடையிலே வரைந்து நம்போன்ற சிற்றறிவுடையோர்க்கு பயன் அடையுமவணணம் பற்பலர் பற்பல நூல்களாக எழுதியுள்ளதை யாம் அறிவோமாயினும் இநநூலாசிரியர் கீழ்வரும் செய்புள்முதல் வயது சொல்லும் விவரஙகளைச் சொல்வாராயின். (719)

நாளினிற் சன்ம லக்கினங் குளிகன்
நவிலெம கண்டகன் முதலாம்
கோளுடன் கால மிததுருயிந நாலுங்
கூட்டிய ராசிலக க்னத்தில்
மாஜுநா ளாமிந நாள்வரைக கூட்டும்
வகையதிற் குளிக லக்கினத்தில்
நீளமட டளவு மசுபதி முதலாய்
நிறைநத நக்ஷத்திரங் கண்டே.

(இ-ள்) ஜெனனராசியதிபதி குளிகன் எமகண்டன் காலமித்ரு இந்த நால்வர் நின்ற ஸ்புடங்களைக் கூட்டிக்கண்ட ராசி மாதமே அந்த ஜாதகன் மரிக்கும் மாதமெனவும், இந்த நால்வரையும் கூட்டும் வகையோடு குளிகன் இருந்த நக்ஷத்திர காலத்தைக் கண்டுகொள்வாய் எ-று. (720)

கண்டபின் குளிகன் நின்றலக் கினத்தில்
கடிகையிற் சென்றமட் டறிந்து
கொண்டது நக்ஷத் திரங்களைக் கண்டு
குதிரைமட் டெண்ணிமுன் னிருந்த
திண்டிறற் றெகையுங் கூட்டுதல் புடமாந்
தெரிந்துமுன் சொன்னநால் வருக்கும்
மண்டுயிப் படியெண் ணியபுடங் கூட்ட
வந்திடு மரணலக் கினமே.

(இ-ள்) குளிகன் இருந்த நக்ஷத்திரத்தைதெரிந்து குளிகனிருந்த ராசியில் சென்றதுபோக இருப்பையுங் கூட்டி, அஸ்வனிவரையாக எண்ணி மேற்சொன்ன நக்ஷத்திரத்தைக் கூட்டிக்கண்டதே ஸ்புடமென்பார். அதையறிந்து முன்செய்யுளில் சொல்லிய குளிகன் எமகண்டன் காலமித்துரு ஜெனனராசியதிபதி இவர்களுக்கும் ஸ்புடம் செய்ய மரணகால இராசியும் வந்தடையும் எ-று. (721)

வேறு

லக்கினந்தனக்கெட் டாதிபன்குளிக னவிலிருபத்திரண்டான
நனிதிரையக்கா ணுதிபன்காரி நால்வருமிருந்தவங்கிசையோன்
தக்கதோர்பலன்க ளன்றியுற்றிடுவோன் றன்மகாதிசைவருநாளில்
தரித்தலக்கினமிரண் டாமிடமெட்டாம் தானமும்வியமனைதனிலும்.

(இ-ள்) ஜெனனராசிக்கு அஷ்டமாதி என்னும் 8-ஆம் ராசிக்குடையோனும் குளிகனும், 22-ஆம் திரேகோண ஸ்தானாதிபன் சனி இவர்கள் இருந்த அங்கிசாதிபதி தன வலிவிழந்து இருக்க, மேற்சொல்லிய கோட்களின் திசை வரும்போது 1-2-8-12 இவ்விராசிகளில் எ-று.

திக்கெனச்சனியீச் சுரன்வருங்காலஞ் சீவனுக்கரிட்டமாமென்றே
செப்பினர்வராக மேயரேயந்நாள் செகத்திலுள்ளோர்களுமறிய
மிக்கதோர்குளிகன் சனிகருநாகம் விரவுசன்மத்தினிலிருக்க
வியத்தினிலட்ட மாதிசன்மாதி மேவிநோயான்மெலிந்திடுவன்.

(இ-ள்) கோசாரப்படி சனி இரண்டரைவருடம் வாசம்செய்யும் காலம் அந்த ஜாதகனுக்கு அரிட்டமெனறு இப்பூமியிலுள்ளோர் அறியும்படி அக்காலத்தில் வராகமேயர் உரைத்தருளினா. ஜெனன லக்கினத்தில் குளிகன் சனி இராகு இவர்களிருக்க அவன் நோயால் மெலிந்திருப்பான்.

(வி-ரை) வராகமேயர் என்பவர் இச்சோதிட ஆசிரியருள் ஒருவராம். இவ்விரண்டு செய்யுட்களும் ஒருதொடர். (722)

**இடமுறுஞ்சென்மத் தாதியெட்டதிபன் இருவருங்கூடிலாபத்தில்**
**திடமுடன்லாபத் தாதிமூவருமாய்ச் சேர்ந்திடிலவர்கடன்னுடனே**
**வடிவுடனெவர்பா வாதிகளேனும் வந்துதான்கூடினுல்வருத்தத்**
**துடனுயிர்விடும்போ தருகினிலிருப்பர் சொல்லும்லாபத்திசைமரணம்.**

(இ-ள்) *ஜெனனராசியதிபதியும் லாபாதிபதியும் சேர்ந்து லாபஸ்தான மென்னும் 11-ல் இருந்தாலும், லாபாதிபதியோடு மேற்சொன்ன இருவரும் கூட அவர்களோடு ஏதேனும் ஒரு பாவகிரகங்கள் சகிதம்பெற்றால் அந்த ஜாதகன் வருத்தத்தோடு உயிர்விடும்போது அநேகர் அருகில் இருப்பார். அவனுக்கும் 11 ஆம் வீட்டுக்குடையோன் திசையே மாரகதிசையாகும்.* ()

**மரணமார்கண்ட மறிவதுபத்தா மதிபதிதுர்ப்பலனுகக்**
**கிரணமாரகப்பேர் வருதிசையதனிற் கிட்டியபுசிப்பவர்பலனுய்**
**முரணுறுமிருவர்தமக்குமேவிரோத மூண்டிடுபகையதாயிருக்கில் [டுமே.**
**தரணிவிட்டண்டர் பதியினிற்செல்லுந் தகைமையென்றுரைக்கவேண்டி**

(இ-ள்) *மரணகாலம் கண்டறிவது எப்படியெனில், 10-ஆம் வீட்டதிபதி துர்ப்பலம்பெற்று இருக்கில் அவனேமாரகாதியாகையால் அவன்திசையில் தனக்குச் சத்துருவாயிருப்போர் புக்திகாலங்களில் அந்த ஜாதகன் இப்பூமியை மறந்து அன்பென்னும் பரம சொரூபமாய் விளங்குவோரிடம் அவனுத்துமாபோய்ச் சேருமெனக் கூறுவர். மேற்சொல்லியபடி சத்துருக்களின் புக்திவரினும் அப்புக்திநாதன் பகைபெற்று இருக்கவேண்டும் எ-று.*

(வி-ரை) *10-ல் சனி ராகுகூடி இருக்க, அவர்களை நீச்சம் பகைபெற்ற பாவக்கிரகங்கள் பார்க்க, அவனுக்கு இப்புவியை அரசாக்ஷிசெய்யும் ராஜாக்கள்ால் ஆயுள் முடிவும், அவயவபின்னமும் உண்டாகுமென் சோதிடவல்லவர்கள் கூறுவர்.* (724)

**வேண்டிடுநான்கா மதிபதியுடனும் மேவுமெட்டாதிபன்ருனும்**
**ஈண்டியேதனது வீட்டினிலிருக்க விறப்பதுதாதைவாழ்பதியில்**
**தூண்டியேவியத்தி லாறினிலிருக்கிற் றூரதேசத்தினிலிறப்பன்**
**நீண்டகாதளவுஞ் சென்றுகூரயிலை நிகர்த்திடுங்கருங்கணுரணங்கே.**

(இ-ள்) *நான்காம் வீட்டதிபதியோடு 8-ஆம்வீட்டோனும்சேர்ந்து தன் சுயவீட்டில் ஆக்ஷிபெற, அந்த ஜாதகன் தன் தந்தை வாழ்ந்த இல்லத்திலேயே உயிர் விடுவான். மேலேசொன்ன கிரகங்கள் 6-12 இவ்விடங்களில் இருக்க, அவன் தூரதேசத்தில் உயிர்விடுவானென்றும் சொல்வர் எ-று.* ()

**ஆரணங்கேகேள் பகலுதித்தானுக் கடற்குளிகன்னுறைவீட்டுக்**
**கேரணியைந்தொன்ப திற்சனிவருநா ளிடுக்கணுமிரவினிலுதித்தால்**
**சீரணிகுளிகற் கேழிடந்தனக்குத் திரிகோணத்திற்சனிவருநாள்**
**தாரணியறியக் கண்டமென்றுரைப்பர் சாதகநிபுணமாதவரே.**

(இ-ள்) *அழகுடைய பெண்ணே! சாஸ்திரநூல் வல்லோர் கூறுவது எப்படியெனில், பகலில் பிறந்த ஜாதகனுக்கு சூரியன்நின்ற ராசிக்கு 5-9 என்னும் க்ஷேத்திரங்களில் சனி இரண்டரை வருஷகாலம் பிரவேசிக்கும்*

போது நீயபலன் உண்டாகுமென்றும், இரவிற் பிறந்தவர்களுக்கு குளிகன் நின்ற ராசிக்கு 7-ஆம் ராசிமுதல் திரிகோணங்களான 1-5-9 இவ்விராசி களில் மேலே சொன்னபடி சனி பிரவேசகாலம் இப்பூமியறிய கண்டமுண் டாகும் என்று சொல்வர் எ-று. (726)

மாதவமேஷ முதற்கருநாகம் வாழ்மனையள்வுமட்டெண்ணி
மீதிமீனமட்டு மிருதொகைதன்னில் விளங்கவேபெருக்கிமுன்னான்கில்
போதவேகழித்து மீந்தலக்கினத்தில் புணர்திரிகோணராசியினில்
ஏதமாங்காரி மருவுநாட்கண்ட மிவையெல்லாங்கோசரந்தனக்கே.

(இ-ள்) மகாதவத்தினையுடைய மேஷராசிமுதல் ராகுநின்ற ராசிவரை யில் எண்ணிக்கண்ட தொகையை ராகுநின்ற ராசிமுதல் மீனராசிவரையில் எண்ணிக்கண்ட தொகையால் பெருக்கி, 12-ஆல் வகுத்து மிகுந்ததை மேஷ முதல் 1-5-9 என்னும் ராசிகளில் சனி இரண்டரை வருஷ பிரவேசகாலம் கண்டமுண்டென்றும் இவையாவும் கோசாரத்திற்கென்றும் சொல்லுவர்.

தனக்குமோரெட்டா மதிபதியுடனுக் தபனனுங்குசனுமேகூடி
இனக்கதிர்குசனு மெட்டினிலிருக்க விருவருமெட்டிடம்பார்க்க
கனத்துயர்வெற்பி லேறிவீழ்ந்திறப்பன் காணிவரொடுபுகர்கூடில்
சினத்துறுவிலங்கு பூண்டுகொண்டிருந்து சீவனை விடுத்திடுவார்கள்.

(இ-ள்) ஆயுள் ஸ்தானாதிபதி என்னும் 8-ஆம்வீட்டதிபதியுடன் சூரிய னும் குஜனும் சகிதம் பெற்றாலும், சூரியனும் குஜனும் 8-ஆம் ராசியில் இருக்கினும் பார்க்கினும் அந்த ஜாதகன் மலையின்மீசேறி வீழ்ந்திறந்து போவான். மேற்சொல்லிய ஆயுள் ஸ்தானாதிபதி சூரியன் குஜனோடும் சுக்கிரனோடும் கூடி இருக்க, தன் கோபத்தால் ஏற்படும் விலங்குடன் உயிர் விடுவான் என்றும் கூறுவர் எ-று.

(வி-ரை) 8-ஆம் ராசி சரலக்கினமாகி அஷ்டமாதி சனியுடன் கூடி உபயராசியில் நிற்கில் அவன் வீடுகளில்லா மைதானங்களில் உயிர்விடுவான் என்றும், 8-ஆம்ராசி உபயராசியில் இருக்கில் அஷ்டமாதி சனியுடன் சேர்ந்து சரராசியில் இருக்க, காடுகளில் உயிர்விடுவானென்றும் கூறுவர்.

வாருறைமுலையாய் சனிமதியிருவர் மருவியட்டமத்தினிலிருக்கக்
காரிசந்திரனெட் டதிபனைக்கூடக் கண்டிடக்கிணற்றில்வீழ்ந்திறப்பன்
சூரியசெவ்வாய் சனிசசிமூவர் கூடிமுன்போலவேயிருக்கில்
பாரினிற்றன்கை யாலுயிர்மாய்ப்பன் பலர்களும்பழித்திடும்படியே.

(இ-ள்) அழகுபொருந்திய ஸ்தனபாரங்களை யுடையவளே! சனியோடு சந்திரன் சகிதமாய் அஷ்டமமென்னும் ஆயுள் லக்கினத்திலும், மேற் சொன்ன சனி சந்திரன் இவ்விருவரும் அஷ்டமாதியைக் கூடினாலும், பார்த்தாலும், அவன் கிணற்றில் வீழ்ந்து உயிர் இழப்பான். கொடுமை யாகிய சனி-சந்திரன்-குஜன் இம்மூவரும் அஷ்டமத்தில் இருந்தாலும் அஷ்டமாதியோடு கூடினாலும், அஷ்டம ஸ்தானத்தைப் பார்த்தா அவன் யாவரும் பழிக்கும்படி தன் கையாலேயே உயிரை மாய்த்து கொள்வன் எ-று.

(வி-ரை) 6-8-12 இவ்விடங்களில் சந்திரன் இருக்க, சனியும் இராகுவும் ஒன்று சேர்ந்திருக்க, அக்குழவியானது 1-நாழிகைக்குள் இறந்துபோமென்று சொல்வர். (729)

வேறு

படிதருஞ் செவ்வாய் சனியிவ ரெட்டிற்
பறிந்துறி லக்கினந் தன்னில்
கொடியவெய் யோனிந் தெட்டினி லிருக்கக்
கொடுமையாய்ச் சலத்தில்வீழ்ந் திறப்பன்
முடவனுங் கதிரு மெட்டினி லிருக்க
மூண்டிடு மகோதர வியாதி
அடல்சனி கதிர்தேய் பிறையுமெட் டுறையில்
அக்கினி யாயுத மரணம்.

(இ-ள்) சனி-அங்காரகன் இருவரும் 8-ஆம் ராசியில் இருந்தாலும், ஜெனன லக்கினத்திலிருந்தாலும், கொடுமையான சூரியனும் சந்திரனும் கூடி ஜெனன ராசியிலேனும் எட்டிலேனுமிருந்தால் அவன் பிறர் செய்யும் கொடுமையால் ஜலத்தில் வீழ்ந்து இறந்துபோவான். சனியும் சூரியனும் 8-ஆம் ராசியில் சேர்ந்திருக்க, அவனுக்கு மகோதர வியாதியுண்டு. சனி சூரியன்-தேய்பிறைச் சந்திரன் இம்மூவரும் 8 ஆம் ராசியிலிருக்க அவன் அக்கினி ஆயுதத்தால் உயிரிழப்பன் எ-று.

(வி-ரை) ஜலத்தில் வீழ்ந்திருப்பானென்பதை பற்பலவிதமாகப் பிரித்துச் சொல்லவேண்டும்.

பரவுமீ னுதயமாக பானுவு மதியுநிற்கிற்
றருமயில் பாவர்பார்க்கின் தண்ணீரில் வீழ்ந்துசாவான்.

என்றபடி மீனலக்கினமாக இருந்து அதில் சந்திரனும் சூரியனும் இருக்க, அவர்களைப் பாவர்கள் பார்க்க தண்ணீரில் வீழ்ந்திறப்பானென்றும்,

நீறுத யத்திற்பானு நீசர்க ணிற்கப்பாவர்
தாளுறப் பார்க்கக்கூட தண்ணீரில் வீழ்ந்துசாவான்.

என உபயராசிகளில் சூரியன் நீச்ச கிரகங்களுடன் சேர்ந்திருக்க, பாவ கிரகங்களே பார்க்க, அவன் தண்ணீரில் வீழ்ந்திறந்து போவானென்றும்,

மீனும்கர்க் கடகநாலாய் வெஞ்சனி நிற்குமேனும்
வாழும்சத் ரேசன்தன்னை மதிகூடிற் சலத்தாற்கண்டம்.

என்றபடி, கடகலக்கினமாயும் நாலில் சனி உச்சம்பெற மேற்சொன்ன நான்காம் வீட்டோனுடன் சந்திரன்கூடி இருந்தாலும், ஜலத்தாற் கண்டமெனவும்,

இலக்கினம் தன்னிற்றிங்க ளிறவியும் நிற்கவேதான்
கலக்குநா லுதயந்தன்னிற் காரிதா னுறவதாகில்
சலக்குரு முதலேயாலே தான்மாய்வன் குளிகனஞ்சம்
பெலக்கும் வீட்டினுக்கேழாய் தேய்பிறைநிற்கில் ஜலத்தால்கண்டம்.

என்றபடி ஜெனனராசியில் சூரியன் சந்திரனிருந்து உபயராசிகளான மிதுனம்-கன்னி-தனுசு-மீனம் இவ்விராசிகளில் சனிநிற்க, அந்த ஜாதகன் ஜலத்தில் வாசம் செய்யும் முதலையால் மாய்வன். குளிகன் பலம்பெற்ற ராசிக்கு 7-ஆம் ராசியில் தேய்பிறைச் சந்திரன் நிற்கில் அவனுக்கு ஜலத்தினால் கண்டம் உண்டென்று சிந்தாமணியில் சொல்லியபடி கிரகமிருக்கும் நோக்கமறிந்து சொல்வாராக. (730)

மரணமார் வகையே மொன்பதி லிரவி
மந்தனுங் கூடியே யிருக்கக்
கரணமா றெட்டிற் குசனுற வெய்திற்
கமழ்சுரோ ணிதமெலா முலர்ந்து
திரணமா யெலும்புக் கூடதா யிறப்பன்
றேய்பிறை சனிகுச னெட்டில்
தரணியோ ரறியப் பாசபந் தத்தாற்
றன்னுயிர் மாய்ப்பனென் றுரைப்பார்

(இ-ள்) மரணமாகும் விபரம் எப்படியெனில், சூரியனும் சனியும்கூடி 7-9 இவ்விடங்களில் இருக்க, 6-8 இவ்விடங்களில் குஜனிருக்க, அவன் தன் உடலிலுள்ள சுரோணிதங்களெல்லாம் உலர்ந்து எலும்புக் கூட்டோடு இறந்துபோவான். தேய்பிறைச்சந்திரனும் சனி குஜன் இம்மூவரும் 8-ஆம் ராசியிலிருக்க, இப்பூமியோர் அறிய அந்த ஜாதகன் தன் பந்தபாசத்தால் உயிரிழப்பானென்றும் சொல்வர் எ-று.

(வி-ரை) சந்திரனோடு சனிகூடி 8-ஆம்ராசியிலிருக்க, பாசபந்தத்தால் உயிர்விடுவான் என்று கூறினர். அதை மற்றோர்விதமாகவும் கூறலாம்.

எப்படியெனில்,

சயமதி தன்னைச் செவ்வாய் சனிராகு கேதுகூடில்
பயமிகு வருத்தமாகி பசாசுபீ டையினாற் கண்டம்.

என தேய்பிறைச் சந்திரனோடு குஜன்-சனி-இராகு-கேது கூடி இருக்கில் பிசாசு பீடையால் கெண்டம்.

வரமிரண்டினிற் பலந்தான் மாலையா ருடையோன் பார்க்கில்
செயமிகு போரிலுத்தம் செய்துதான் மரணமாவன்.

என மேற்சொல்லியபடி கிரகமிருந்து அவனைச் சூரியன் பார்க்கில் தான் ஜெயத்தைப்பெற யுத்தம்செய்து மரணமடைவான் என்றும் சாதக சிந்தாமணியில் சொல்லியபடியாம். (731)

உரைத்திடும் பாவ ரொன்பதி லேழில்
உரைத்திட அட்டமந் தன்னில்
நிரைதிரை யக்கா ணுதிப னிருக்க
நீடுமிம் மூன்றுவீட் டினையும்
விரைத்திடு நல்லோர் பார்வையற் றிருக்க
விலங்குட னிருந்தவன் றனது

கரத்தினுற் சீவன் றனைவிடுத் திடுவன்
காணெனச் சொல்லுவர் கண்டீரே.

(இ-ள்) பாவர்களென்று சொல்லும் சூரியன் சனி அங்காரகன் ராகு கேது இவர்களாவது அல்லது ஜெனன லக்கினத்திற்குப் பாவர்கள் 7-9 என்னும் இடங்களிலும் அஷ்டம ஸ்தானுதிபதி இருந்த, அங்கிசாதிபதி அஷ்டம ஸ்தானத்திலும், இம்மூன்றுராசியையும் நல்லோர் பார்வையின்றி, பாவர்களால் பார்க்கப்பட்டும் இருப்பவன் விலங்குடன் இருப்பான். அப்போது தன் கரத்தினுலேயே தன் ஜீவனை விடுவானென்றும் சொல்வாய்.

(வி-ரை) (விலங்கிடும் காலம்) அவ்வப்போது உண்டாகும் திசைப்படி மேற்சொல்லிய 3-ராசிக்குடையோர் புக்தி காலங்களிலும் உண்டாகும். ஆகையால் திசைபுக்தி அறிந்து இன்னகாலங்களில் நடக்குமென்றுகூறுக.

கண்டலக் கினங்கள் கன்னியா யதனிற்
கருதிடாப் பாவரு மிருக்க
எண்டிசை புகழ்மீ னத்தினிற் பாவ
ரிருந்திட வட்டமந் தன்னில்
மண்டிய பிறையுஞ் சுங்கனு மிருக்கின்
மாதர்செய் வாதையால் மடிவன்
கெண்டையம் பயின்மா வடுவிடம் போர்கட்
கிஞ்சுகம் போலுமென் மொழியாய்.

(இ-ள்) ஜெனனலக்கினம் கன்னியாக இருந்து அவ்விராசியில் பாவ கிரககள் இருக்க, அஷ்டதிக்கிலும் புகழத்தக்க மீனராசியில் பாவகிரகங் கள் இருக்க, அஷ்டமமென்னும் மேடராசியில் சந்திரனும் சுக்கிரனும் இருகக, அந்த ஜாதகன் ஸ்திரீகள் செய்யும் துன்பத்தால் உயிரிழப்பான் எனறு சேல்கெண்டைகளின்விழியையும், பிறையையொத்த புருவத்துடன் ஆடவரை மயக்கும் பெண்பாவாய்! சொல்லுவாயாக எ-று.

(வி-ரை) ஸ்திரீகள் வாதையால் மடிவனென்றபடியால் முன் களத்திர பாவகத்தில் சொல்லியபடி, இந்த ஜாதகனுக்கு எவ்வித குணமும் செய்கை யும் வாய்ந்த களத்திரம் கிடைக்குமென அறிந்து அந்த களத்திரம் விபசா ரம்செய்யும் புருடனுலா? அல்லது மருந்து முதலிய துர்ச்செய்கையினுலா? என ஆராய்ந்து சொல்லவேண்டும். அஷ்டமாதிபதியும் லக்கினுதிபதியும் கேந்திரம்பெற்று சுபர்களால் பார்க்கப்பட்டால் மேற்சொல்லிய துன்பம் ஏற்படினும் மரணம் அடையானென்றும் பிரித்துச் சொல்லுக. (733)

மொழிகதிர் சனிதேய் பிறைகுச னுல்வர்
முயற்சியாய்க் கூடிலக் கினத்தில்
மொழிதிரி கோணந் தன்னிலே மேவப்
புண்ணியர் கண்டிடா திருக்க
கழிபடும் புகையாற் றீயினுற் கொள்ளிக்
கட்டையால் மருவலர் சுடவே
அழிபடு மெய்யில் வருத்தமுற் றிறப்ப
னவன்றனை நாள்விதி வசமே.

(இ-ள்) சனி-சூரியன்-தேய்பிறைச்சந்திரன்-குஜன் இந்நால்வருங்கூடி ஜெனனராசியிலாவது திரிகோணராசியிலாவது இருந்து சுபகிரகங்களால் பார்க்கப்படாமல் அசுபகிரகங்களால் பார்க்கப்பட்டுமிருக்கில் அந்த ஜாதகனுடைய மாரககாலம எதுவெனில், தன் பகைவரால் சுடப்பட்டும், புகை தீ கோள் இவைகளாலும் வருத்தத்தோடு உயிரிழப்பான் எ-று.

(வி-ரை) மேற்சொல்லிய லக்கினம் திரிகோணம் இவைகள் கடகம் என்னும் ராசியாய், அவன் ஜெனித்தபோதும் அமாவாசையாகவும், கடகத்தில் சூரியன்-சந்திரன்-ராகு இம்மூவரும் நிற்க, ஜெனனலக்கினத்தில் சனி நிற்க, அவன்சத்துருக்களால் அவன் உடலை கருவியாலும் ஆயுதங்களாலும் அறுப்பதால் இறப்பான் என்றும் சொல்லுக. (734)

வசமுட னெட்டிற் கதிர்சனி செவ்வாய்
மருவவே லக்கினந் தன்னில்
இசைபுதன் றேய்ந்த பிறைகரு நாக
மிருக்கின்மெய் புழுத்துடன் மடிவன்
புசபல காரி தேய்பிறை யெட்டிற்
பொருந்திடி லவர்தம்மைச் செவ்வாய்
நிசமுடன் பார்க்கில் அரசனற் கிருமி
நிறைந்திடுந் துயரினு லிறப்பன்.

(இ-ள்) ஜெனன ராசிக்கு அஷ்டமஸ்தானமாகிய 8-ஆம் ராசியில் குஜன்-சனி-சூரியன் இம்மூவரும இருக்க, ஜெனன ராசியில் புதனும், அவனுடன் தேய்பிறைச்சந்திரன் ராகு இவர்கள் இருக்க, குஜன் நோக்க அந்த ஜாதகன் உடல் அநேக ரெணங்களால் புழுத்து வாதைப்பட்டு இறந்து போவான் எ-று.

(வி-ரை) பராக்கிரமம் பொருந்திய சனியும், தேய்பிறைச் சந்திரனும், 8-ல் நின்று அவனை குஜன் பார்க்க, அவன் உடல் மேன்மையான கிருமிகளால் சின்னபின்னப்படுத்தி அதனுல் இறப்பான். (735)

வேறு

மருவியபத்திற்சூரியனுறின் மங்கலன்வியத்தினிற்காரி
விரவியவிரண்டிற்கரியகோளிருக்க மேவலர்சூனியகுணத்தால்
சருவியகுளிசக்கட்டினுல்வருந்திச் சஞ்சலமுற்றிருந்தவன்றன்
கருவிகளபிரிந்தேசோபமுற்றிறபபன் காசினியகன்றிடுங்காலே.

(இ-ள்) ஜெனன ராசிக்கு 10-ல் சூரியனும், 6-ல் குஜனும், 12-ல் சனியும், 2-ஆம இடத்தில ராகு இருக்கப் பிறந்தவன் சூனிய குணத்தாலும், அவனுக்கென்று தன் பகைவர்செய்யும் அஷ்டபந்தனத்தாலும், துன்பமும் துயரத்துடன் தன் கையிலுள்ள பொருள்களையும் ஆயுதங்களையும் இழந்து வியாகூலத்துடன் உயிரிழப்பான் என்றும் கூறுவர் எ-று.

(வி-ரை) பாபபலனைக் கொடுக்கும்பங் கொள்வோ ருடனே
சேர்பலதரா வெல்லோரையும் செரிந்து—தீபமாய்

*கொல்வ னெனக்கோதாய் குவலயத்தி லுள்ளவர்கட்*
*கில்லிவற் றிலையமியம்பு.*

எனப் பெரியோர் சொல்லியபடி பாபபலனையே விளைவிக்கும், சனி மாரக கிரகங்களுடனே கூடிய வலிமையால் எல்லோரையும் தள்ளி தனியே சீக்கிரத்தில் கொல்வான் என்றபடியால், 12-ல் சனிநின்றது மோக்ஷஸ்தானம் ஜெனன ராசிக்கு 8-ஆம் இடமும், அதற்கு எட்டாம் இடமுமான ஜெனன ராசிக்கு 3 ஆம் இடமும் மாரகஸ்தானம் என்றதால், அதற்கு மோக்ஷஸ்தானத்தில் ராகு நின்றதாலும், 6-ல் நின்றது சத்துரு ஸ்தானமாகையாலும், சத்துருக்களால் உயிர் இழப்பானென்றும் கூறினர். இதனைப் பற்பலவிதமாக யூகித்துச் சொல்லவேண்டும். (736)

**காலையோரேழிற்சூரியன்செவ்வாய் கருதுமெட்டினிற்சனியாறில்**
**சாலவேகுறைந்தபிறையுறச்சென்மந் தன்னிலேழெட்டினிற்புதனும்**
**சீலமாயிருக்கிலிடியினுல்மடிவன் றிரயக்காணுதிபர்தன்னில்**
**மேலிருபத்திரண்டுளாந்தனது வீடுலக்கினமெனவிளம்பும்.**

(இ-ள்) ஜெனன லக்கினத்திற்கு 7-ஆம் ராசியில் ரவி குஜனும், அஷ்டமஸ்தானமாகிய 8-ல் சனியும், 6-ஆம் ராசியில் தேய்பிறைச்சந்திரனும், 1-7-8-ஆம்ராசியில் புதனும் நிற்க, அவன் மேககூட்டங்களால் உண்டாகும் இடியால் மரணமடைவான் என்பர். திரேகாண ஸ்தானுதிபர்கள் நின்ற இருபத்திரண்டு ராசிக்குள்ளும் லக்கினமென்று சொல்வார் எ-று.

(வி-ரை) *ஆமே இருநான் கிடத்துள்ளோ ராகும்சனியும் பாவியுடன்*
*தாமோ றெட்டீராரில் நிற்கச்சுபர்கள் சாராதார்*
*போமேவயது மற்பாயுள் புந்திசேரி லாறெட்டிற்*
*சாமேஎனவு முன்னோர்கள் சாற்றும்பலன்கள் தப்பாதே.*

என்னும் சந்திராபரணத்தின் செய்யுளின்படி அஷ்டமாதியும் சனியும் 6-8-12-ஆம் ராசியில் நின்று சுபர்கள் பார்வையற்றால் அற்ப ஆயுள் என்றும், மேற்சொல்லிய 6-8-ல் புதன் நின்றால் சீக்கிரம் இறந்துபோவான் என்றும் சொல்லுவார். (737)

**விளம்புமாறெட்டுப்பன்னிரண்டதிபன் மேவியபாவிதானுகில்**
**உளம்செறியற்பாயுள்சுபர்பார்க்கி லோதுமதீர்க்கமாமென்றே**
**களம்செறிநல்லோர்பாவருமாகிக் கண்டதுமத்திமவயதே [கே·**
**இளம்பிறைநுதல்வேற்பொருகயற்கண்ணுக்கிசைந்திடுவிழியிணுரணங்**

(இ-ள்) ஜெனனராசிக்கு 6-8-12-ஆம் ராசியதிபர்கள் பாவக்கோட்கவேயாகில் அவனுக்கு அற்ப ஆயுளென்றும், மேற்சொன்ன கிரகங்களை சுபர்பார்க்கில் தீர்க்க ஆயுளென்றும், தீயரும் சுபரும் கலந்துபார்க்கில் மத்திமவயதென்றும், இளம்பிறையை யொத்த புருவமும், வேலைப்பழித்த கண்களும் உடையவளே! இவ்வாறு சொல்லுவாயாக எ-று. (738)

நாளெனும்வியமாறெட்டினிலதிப னன்றுகேந்திரத்தினிலிருக்கில்
வாள்விழியணங்கேயற்பவாயுசுதான் மத்திபம்பணபரத்திருக்கில்
தான்செறியணங்கேயாபோக்கிலீயந் தானுறிலாகுநூருண்டே
கோளினிற்குளிகன்மனேவருங்காரி குலவியநாள்களுந்தீதே.

(இ-ள்) வியமென்னும் 12-ஆம் ராசிக்குடையோனும், 6-ஆம் ராசிநாதனென்னும் ரோகாதிபதியும், 8-ஆம் இடமென்னும் ஆயுள்ஸ்தானாதிபதியும் கேந்திரம் என்னும் 1-4-7-10-ஆம் ராசிகளில் இருக்க, வாள்விழிபோன்ற கண்களை உடையவளே! அவனுக்கு அற்ப ஆயுளாகும். பணபர ஸ்தானங்களில் இருக்கில் மத்திபமென்றும், ஆபோக்லிய ஸ்தானங்களில் இருக்கில் நூறு வயதென்றும், குளிகனோடு சனி வருங்காலம் துன்பமென்றும் கூறுவர் எ-று. (739)

தீதெனும்வியமாறெட்டினிலதிப னிவர்களிற்பலன்களிலில்லாப்
போதுறுந்தனக்கேயவன்மகாதிசையிற் பொருந்தியகண்டகாலமதாம்
ஈதினில்வியமாறெட்டினிலதிபன் மேவியதிசைகளுங்கூடி
ஏதுறுநடக்குமவர்திசையந்த் தியல்புடன்கண்டகாலமுமாம்.

(இ-ள்) கொடிய க்ஷேத்திரங்களாகிய 6-8-12-ஆம் ராசியதிபர்கள் நற்பலனைத் தரமாட்டார் என்றும், அவர்கள் திசை நடக்கும் காலங்களிலும், மேற்சொன்ன 6-8-12-ஆம் ராசியதிபர்கள் நின்ற ராசிநாதர்கள் திசை நடக்கும் காலங்களிலும் நிச்சயமாய் கெண்டத்தைத் தருவாரென்றும் சொல்லுக எ-று.

(வி-ரை) இவை ஒவ்வொரு லக்கினத்திற்கும் பொதுவாகச் சொன்னதாகையால் இவைகளைக்கொண்டே பலன்முதலியவைகளும் சொல்லலாம்.

காலமாம்பரிதிலக்கினு திகளுங் கருதுமித்துருவதேயாயின்
தூலமாந்தீர்க்கவயதெனவுரைப்பர் சொல்லியசமமதேயாயின்
மூலமாமத்திமம்பகையாயி னுறுவதுமுப்பத்துமூன்றே
கோலமாம்லக்கினநவாங்கிசைபதிக்குக் கூறியசனிவரிற்றுன்பம்.

(இ-ள்) ஜனனராசியதிபனோடு சூரியனும் உறவாக இருக்கின் அந்த ஜாதகனுக்கு எந்நாளும் அழியப்படாத தீர்க்கவயதென்றும், மேற்சொல்லிய இருவரும் சமம்பெறில் மத்திம வயதென்றும், பகையாகில் வயது 33-எனவும், நவாங்கிச லக்கினத்தில் சனி வரும்போது துன்பம் உண்டாகும் எனவும் கூறுவர் எ-று.

(வி-ரை) கிரகங்களின் சமம்-பகை-உறவு என்பதை முன் 27-ஆம் செய்யுளின்படி ஆராய்ந்துச் சொல்லுக. (741)

துன்பமேயில்லாவுச்சலக்கினத்தைத் தொடர்ந்துமுப்பதுபங்கதாக்கி
வன்பொடுசூரியன்பத்தாம்பங்கு மதிமூன்றுசனிருபத்தெட்
டின்பமாம்புதன்மூவைந்துபன்னேழா மெழிற்குருபுகரிருபத்தேழ்
முன்புசனிவிஞ்சபூரணவயதே முழுநீசமற்பமென்றுரையே.

(இ-ள்) தன்பத்தைத் தரப்படமாட்டாத உச்சமென்னும் ராசியை 30 கூறுசெய்து சூரியன 10-ஆம் கூறிலும், 15-ஆம் கூறில் புதனும், 3-ஆம் கூறில் சந்திரனும், 28-ஆம் கூறில் குஜனும், 15-ஆம்கூறில் புதனும், 17-ம் கூறில் குருவும், 27-ஆம் கூறில் சுக்கிரனும், 20-ஆம் கூறில் சனியுமிருக்க, அந்த ஜாதகனுக்கு நீண்ட ஆயுளுண்டென்றும், முழுநீச்சம் பெற்றிருக்கில் குறைந்த வயதென்றும் கூறுவர் எ-று. (742)

**சென்மதாரகைக்காறெட்டுநட்சத்திர திசையதாமாரகமதனுள்**
**வன்மமோரெட்டிற்கெட்டாறுமின்னம் வருமாறினுக்குமாறெட்டாம்**
**பன்மைதாரகையின்றிசையின்மாரகமாம் பார்க்கவேயிரட்டியாய்வந்தால்**
**தின்மைகாலமுமாமவருடைபுசிப்பிற் சேதமேயாகுங்கண்டாயே.**

(இ-ள்) மாரகதிசை அறிவது எப்படியெனில், ஜெனன நக்ஷத்திரத்திற்கு 6-வது நக்ஷத்திரமும், 8-வது நக்ஷத்திரத்தின் திசைகளிலும், எட்டாவது நாளுக்கு எட்டாவதுநாள் திசையும், ஆறுக்கு ஆறும்நாளின் திசையும், எட்டாம்நாளின் திசையும் மாரகதிசை என்பர். மேற்சொன்ன நக்ஷத்திரங்கள் இரட்டை நக்ஷத்திரமாகவரின் அந்நாளுக்குரிய திசையே கெண்டம் செய்யும் எ-று. (743)

வேறு

**கண்டசன்மஞ்சரராசி கருதியாருதிபன்பார்க்க**
**கொண்டசெவ்வாய்லாபத்திற் கூறுந்திரராசிக்குடையோன்**
**பண்டேயொன்பதிலிருக்கப் பாக்கியாதிதிறத்திலுற**
**உண்டாஞ்சத்துருநாகத்தா லோமம்பண்ணவருமரணம்.**

(இ-ள்) ஜெனனராசி சரராசிகள் என்னும் மேஷம்-கடகம்-துலாம்-மகரம் என்னும் ராசிகளாய் மேற்சொன்ன ஜெனன ராசியை ரோகாதிபதி நோக்கவும், அங்காரகன் லாபஸ்தானம் என்னும் 11-அம்ராசியில் நிற்கவும், 9-ஆமிடமாகிய பாக்கிய ஸ்தானத்தில் ஸ்திரராசி யதிபர்களான சுக்கிரன் சூரியன்-குஜன்-சனி இவர்கள்இருக்கவும், ஸ்திரராசிகளான ரிடபம்-சிங்கம் விருச்சிகம்-கும்பம் என்னும் ராசிகளிலொன்றில் மேற்சொன்ன 9-ஆம் வீட்டோன் இருக்க அந்த ஜாதகனின் சத்துருக்கள் செய்யும் நாக ஓமத்தால் மரணம் அடைவானென்று சொல்லுக எ-று.

(வி-ரை) சரராசிகளில் ஒன்றான துலாராசி ஜெனனமாக அதற்கு 7-ல் சனியும், ஜென்னராசியில் பாவகிரகங்களும் இருக்க, இரத்த காசத்தாலும் சனி முதலிய பாவகிரகங்கள் கேந்திரம்பெற்றால் தாயார் கோபத்தினாலும் மரிப்பானென்றும் கூறுவர். (744)

**வருகாலிடத்திலக்கினத்தில் வளருங்கேதுகுளிகனுடன்**
**அருள்சேர்ந்திருக்கச்சூனியமு மபிசாரத்தாலுறுமரணம்**
**திரளாம்வியத்திற்கேதுவுறத் தேடிப்பாவர்மிகநோக்கப்**
**புரவேயம்மையான்மரணம் பொன்பார்த்திடிலோவடுவுண்டாம்.**

(இ-ள்) ஜெனன ராசியிலும் நான்காம் ராசியிலும் கேது குளிகனுடன் சேர்ந்து பலம்பெற்றிருக்கவும், அந்த ஜாதகன் செய்யும் அப்சாரத்தாலும் குனியத்தாலும் மரணமடைவான். 12-ல் கேது இருக்க, அவனைப் பாப கிரகங்கள் பார்க்க; அந்த ஜாதகனுக்கு வைகுரியால் மரணமுண்டாகும் என்றும், கேதுவை குரு திருஷ்டிக்கில் அந்த தோஷம் நீங்கும் என்றும் ஆயினும் வைகுரியால் மரணம் என்றும் கூறுவர் எ-று.

(வி-ரை) ஊனுதயத் தின்மூன்றி லுயர்மதி இருக்கவேழில்
சேணுரும் செவ்வாய்நிற்க தினகரன் பார்வையுற்றால்
காணுரும் வழிநடப்பிற் களையினால் மூர்ச்சையாகி
வீணுரு மரணமாவான் வேற்றிடங் கண்ணினுளே.

என 1-3-ஆம் ராசியில் சந்திரனும், 7-ல் குஜனிருந்து சூரியன் பார்க்கில் அந்த ஜாதகன் வழிநடையாலும் களைப்பாலும் மரணம் அடைவானென்றும் சொல்வர். (745)

## 12-ராசிக்கும் சுபாசுபக்கிரக மாரகபலன்

### வேறு

சாற்றியதுவாதசமாம் லக்கினந்தன்னையோர்ந்து
நேர்த்தியாய்சுபரும்பாவர் நிறையோகமாரகங்கள்
போற்றியேயவர்தம்வீட்டிற் பின்பலனுரைக்கும்நூலின்
தேற்றமேயறிந்துகொண்டு செய்பலனுரைப்பாய்தானே

(இ-ள்) துவாதச லக்கினங்களை அறிந்து ஒவ்வொரு ராசிக்கும் சுபன்-அசுபன்-மாரகன் என அறிந்து அவரவர்கள் கொடுக்கும் சுபாசுபங்களைத் தெரிந்துகொண்டு கட்டாய பலனைச் சொல்வாயாக.

(வி-ரை) ஐந்தொன்பா னதிபரா யாவர் வரினுமவர்
அந்தமி லின்பப்பலனை யாற்றுவர்—அந்தமூரும்
அற்ப பலனுற்று அம்மூன்றும் பதினொன்
றூற்பதிக ளிவ்வுலகு ளோர்க்கு.

என உலகில் ஜெனித்தோர்க்கு ஜெனன ராசிக்கு 5-9-ஆம் இடத்திற்கு அதிபர்கள் சுபனாக இருந்தாலும், பாபியாக இருந்தாலும், அவர்கள் நற்பலனையே தருவார். 3-6-11 இவ்விடத்ததிபர்களாய் எந்தகிரகங்கள்வரினும் துன்பபலனையே தருவாரென்று தாண்டவமாலையில் சொல்லியபடி 5-9-ம் இடத்ததிபதி திசைவராத ஜாதகன் யோகங்களைப்பற்றி விசேஷம் பேச வேண்டுவதில்லை எனவும் கூறுவர். (746)

தானுறுமேடத்தோர்க்குச் சனிபுகர்புந்திபாவர்
வானுறும்பரிதிதேவ வான்குருசுபனுமென்றே
கானுறுமிவர்கள்கூடக் கடினமாம்பலன்களற்பம்
தேனுறுஞ்சுக்கிரன்றன் றிசையிற்றுன்மாரகங்கள்

வேறு

களமேரிஷபஞ்சன்மத்தோர்க் கரசன்புகர்சூரியன்மூவர்
உளவாம்பாவிகதிர்சனியு முயர்ந்தசுபனும்யோகங்கள்
வளமார்புகருந்தான்குடும்ப மாரகத்தோனும்பாவி
புளகாதிதலையுறுங்கொங்கை பூவைக்குரலாயம்மானே. (748)

மானேமிதுனலக்கினத்திற் கரசன்செவ்வாய்கதிர்பாவர்
தானேசுங்கன்சுபனுரு மதியுஞ்சனியுமற்பபலன்
வானுர்பாவர்திசையதனின் மன்னுமாரகஞ்சொல்லே
தேனேயனையமதுரமொழிச் செவ்வாய்முறுவல்சிறுநுதலாய். (749)

நுதலுங்கடகம்புந்திபுகர் நோய்செய்பாவர்குருசெவ்வாய்
இதமார்சுபனுஞ்சேய்யோகம் இருக்கும்பரிதிமாரகனும்
முதலேசிங்கம்புகர்புந்தி மோதும்பாவர்சேய்சுபனும்
மதலையோகம்பொன்வெள்ளி மழைக்கோனுடன்மாரகன்மாலே. (750)

மாலேகன்னிசேய்மதிபொன் மன்னும்பாவர்புதன்சுபனும்
காலேயோகம்புந்திபுகர் கன்மாரகன்சுக்கிரன்பாவி
கோலாந்துலாத்திற்சேய்பரிதி குருவும்பாவர்சனிபுதனும்
மேலாஞ்சுபர்கண்மதிபுந்தி யோகமாரகனுஞ்செவ்வாயே. (751)

ஏயதேள்புதன்சேயும்பளிங்கே யியன்றபாவரிந்துசுபன்
தூயயோகமதிகதிராந் தொடர்ந்தகுருவேமாரகனும்
ஆயதனுசில்புகர்பாவி யாரல்பரிதிசுபராகும்
நேயயோகபுந்திபுகர் நீண்டசனியும்மாரகனே. (752)

மாகஞ்சுருவிற்குருசெவ்வாய் மதியும்பாவர்புகர்புந்தி
ஆகுஞ்சுபராமாயோக மருளுஞ்சுங்கமாரகன்சுன்
பாகார்கும்பங்குருமதிசேய் பாவர்சுக்கிரன்சுபனும்
தாகார்யோகம்பளிங்குபுதன் றன்னுமரசன்முன்பாவி. (753)

பாவிமீனங்காரிபுதன் பளிங்குசூரியன்பாவியரே
மேவுஞ்செவ்வாய்மதிசுபராம் விளங்கும்யோககுருவந்தால்
தா[illegible]மாரகன்சேயென்றே சாற்றுந்துவாதசலக்கினத்தை
ஆவலோரிந்தேசுபாசுபங்க ளறிந்துகூறப்பண்பாமே.

௸ 747-வது செய்யுள்முதல் 754-வது செய்யுள்களின் உரையைக் கீழ்க்கண்ட அட்டவணையிற் காணவும்.

## 12-ராசிகளுக்கும் சுபன் அசுபன் மாரகன் யோகன் இவைகளைக் காட்டும் ஜாபிதா

| நெம்பர் | ராசிகளின் பெயர் | சுபன் | பாவன் | மாரகன் | யோகன் |
|---|---|---|---|---|---|
| 1 | மேடம் | சூரி-குரு-அங் | சனி-புத-சுக் | சுக்கிரன் | சந்திரன்-குரு |
| 2 | ரிஷபம் | சூரி-சனி | சூரி-சுக்-குரு | சுக்கிரன் | சூரியன்-சனி |
| 3 | மிதுனம் | சந்-சனி | குரு-அங்-சூரி | சந்திரன் | சுக்கிரன் |
| 4 | கடகம் | குரு-அங் | புத-சுக் | சூரியன் | அங்கார-குரு |
| 5 | சிங்கம் | அங் | சுக்-புத | சூரியன் | குரு-சுக்கிரன் |
| 6 | கன்னி | புத | அங்-சந்-குரு | சுக்கிரன் | புத-சுக்கிரன் |
| 7 | துலாம் | சனி-புத | அங்-சூரி-குரு | அங்காரகன் | சந்திர-புதன் |
| 8 | விர்ச்சிகம் | சந் | புத-அங் சுக் | குரு | சூரிய-சந்திர |
| 9 | தனுசு | அங்-சூரி | சுக் | சனி | புதன்-சுக்கிர |
| 10 | மகரம் | கு அ-ச-பு-சு | | சனி | புதன்-அங்கா |
| 11 | கும்பம் | சுக்-அங் | குரு-சனி-அ | புதன் | சுக்கி-அங்கா |
| 12 | மீனம் | சந்-அங் | சனி-பு-சு-கு | சனி-அங் | குரு-அங் |

மேடலக்கினத்திற்கு குரு-சூரியன் சுபர்களாயினும் அவர்களோடு சனி சம்பந்தப்படின் சனியைப்போன்ற பலனே கொடுப்பர். சுக்கிரன் கொல்லான். சனி முதலியவர்களே கொல்வார்களென தாண்டவமாலையில்சொல்லியபடியும், ரிடபத்திற்கு குருவே கொல்வானென்றும், மிதுனத்தோர்க்கு குரு-சனி சேர்ந்திருப்பாரேயாகில் அவர்களே அந்த லக்கினத்தோனைக் கொல்வானெனவும், சந்திரனுக்கு 2-ஆமிடம் தோஷமிருந்தாலும் அவன் கொல்வானெனவும், கடகலக்கினத்தோர்க்கு சூரியனுக்கு அதிகாதிபத்யம் வரினும் புதனேகொல்வானென்றும், சிம்மலக்கினத்தோர்க்கு செவ்வாயும் புதனும் கூடினால் அவர்கள் தீயபலனையே விளைவிப்பாரெனவும், புதனே கொல்பவனென்றும், கன்னியாராசியோரை சுக்கிரன் கொல்வான். புதன் முதலியவர்கள் கொல்வாரென்றும், விருச்சிகத்தோர்க்கு குருகொல்லான் புதன்முதலியோர் கொல்வாரென்றும், தனுசு லக்கினத்தோர்க்கு சனி கொல்லாவிடில் சுக்கிரன் முதலியோர் கொல்வாரெனவும், மகரத்தோர்க்கு செவ்வாய் கொல்வான் என்றும் கூறியிருப்பதால், மாரகாதி என்று குறிப்பிட்டவர் நற்க்ஷேத்திரமாயும் நலமாயிருந்து பலம்பெற, அவர்கள் கொல்லார். மற்றவர்களே கொல்வரென்றும் கூறுக.

மாரகன் தன்திசையில் மன்னுஞ் சுபர்பொசிப்பில்
மாரகத்தைப் பண்ணுனிம் மானவற்கு—மாரகத்தை
பண்ணுவான் றன்திசையில் பற்ற வகத்தார்கள்
துண்ணும் பொசிப்பிற் றுணிந்து.

என மேற்சொல்லியபடி மாரக திசைகளில் தன்னுடன் சம்மந்தமுற்ற கோட்களின் திசைகளில் சுபகிரகங்களின் புத்தியில் மாரகம் செய்யான். தன்னுடன் சம்மந்தமில்லாத பாவகிரகங்களின் புத்தியில் துணிந்துகொல்வான் என்றும் கூறுக. (754)

**பண்பாறதிபன்லக்கினதி பாவனாகிப்பலமறவே**
**நண்பாமேழிலுற்றிருககக நல்லோர்காணார்மாதமிரண்**
**டென்பார்லக்கினதிபதிக் கெட்டின்மிகவேபாவர்களும்**
**திண்பாய்நோக்கமுற்றிடவே திங்கணான்கில்வருமரணம.**

(இ-ள்) ஆறும் வீட்டதிபதியும் ஜெனன ராசியதிபதியும் பாவியாகவும், பலமற்றும் 7-ஆம்ராசியில் நட்புபெற்றும், நற்கோட்களின் பார்வை இல்லா விட்டால் அந்த ஜாதகன் இரண்டு மாதத்தில் இறந்துபோவானென்றும், லக்கினதிபதிக்கு 3-ஆம் ராசியில் பாவகிரகங்கள் இருந்து நோக்கம் பெற்றால் நான்காம் மாதத்தில் கெண்டம் உண்டாகும் எ-று.

(வி-ரை) ஒன்பதோ டொன்றுநாலுக் குடையவ ராருளோனை
ஒன்பமாய் கூடிஎட்டி லிருந்திடி லவர்திசைக்குட்
பின்புரு சித்திரத்திற் பேணிய பிதாவும்தாயும்
வன்புடன் மரணமெய்தும் வாட்டடங் கண்ணினாளே.

என 9-1-4 இவ்விராசிக்குடையோர் 6-ஆம் ராசிநாதனைக்கூடி 8-ல் நிற்க, அந்த 8-ஆம் வீட்டோன் திசைக்குள் தீயர்களின் புக்தியில் தாய்-தந்தை-குழவி இம்மூவரும் மரணமடைவார். (755)

**இவன்றன்லக்கினதிபதி யிதுவேபாவன்பலமறவே**
**சுவனேபார்வைவர்ச்சிதமாய்ச் சொல்லுமாறுதிங்கள்தனில்**
**தவமாறெட்டிற்பன்னிரண்டிற் றங்கபாவர்நோக்கமுறக்**
**கவனமுடனேயிருநான்கிற் காணுமரணங்கண்டீரே.**

(இ-ள்) ஜெனனராசியதிபதி பாவனாயும் நீச்சம் பகையால் பலமற்றும் சுபர்களால் பார்வையற்றுமிருக்க அந்தஜாதகனுக்கு 6 வதுமாதததிலேயே கெண்டம் உண்டென்றும், மேற்சொல்லிய லக்கினதிபதியை 6-8-12-ல் நின்ற பாவகிரகங்கள்பார்த்தால் கட்டாயமாய் மாரகமென்று சொலலுக.

(வி-ரை) ஜெனன லக்கினதிபதி பாவனாகவும், நீச்சம் பகையால் பலமற்றும் இருக்கில் 6-மாதத்தில கெண்டம் என்றனா. சந்திரன் இருந்த வீட்டோனும், ஜெனன லக்கினத்தோனும் நட்பு ஆக்ஷியாயும, அஷ்டமாதிபதி பலம்பெற்றும் பார்க்க, அவர்களுககுப் பூரண ஆயுளென்றே சொல்ல வேண்டும். ஜெனன லக்கினதிபதி சந்திரன் இருநத வீட்டோன் அஷ்டமாதிபதி இம்மூவரும் பலமிழந்து முன் சொல்லியபடி 6-8-12-ல் நிறக அற்ப ஆயுளென்றே கூறுவர். (756)

**கண்டவமரபக்கத்திற் காணுஞ்சோமனெட்டாறில்**
**கொண்டசன்மமிதிறபாவர் கூடிநோக்கவீரைந்தே**
**மண்டுமெட்டிற்சென்மத்தில் வந்தேபாவர்தானிருக்க**
**மிண்டாய்நல்லோர்நோக்கமிலா மேவின்வருடமொன்றிலுமே.**

(இ-ள்) ஜெனன காலங்களில் தேய்பிறைச் சந்திரனாக இருந்து, அந்த சந்திரன் 6-8 இவ்விடங்களிலும ஜெனன லக்கினத்தில் பாவகிரகங்கள் இருந்தாலும் பார்த்தாலும் அவனுக்கு 10 வது மாதம் கெண்டம் உண்டு என்றும், மேற்சொல்லிய இராசிகளில் நின்ற பாவியை 6-8-12-ல் நின்ற

பாவகிரகங்கள் பார்க்க, சுபகிரகங்கள் பாராதிருக்க, அவனுக்கு ஒரு வருஷத்தில் கெண்டம் உண்டு எ-று.

(வி-ரை) ஜெனன ராசியில் நின்ற பாபியை 6-8-12-ல் நின்ற பாவகிரகங்கள் பார்க்கினும், ஆக்ஷி உச்சம்பெற்ற சுபகிரகங்கள் சேர்ந்துபார்த்தால் அவனுக்கு அத்தோஷம் நீங்கும் என்றும் கூறுவர். (757)

ஒன்றேகாரிவக்கிரமா யோதும்புந்திசெவ்வாயும்
அனறேயொருவீட்டினிலுறவே யாறைந்தெட்டுப்பனிரெண்டில்
நின்றேசனமமோரிரண்டி னிற்கக்குசன்ருனுற்ருலும்
நன்றேசுபர்கணேக்கமிலா நாளும்வருஷமிரணடினுமே.

(இ-ள்) வக்ரம்பெற்ற சனியோடு புதனும் குஜனும் சேர்ந்து ஒரோராசியில் நின்றாலும், அல்லது 1-2-5-6-8-12 இவ்விடங்களில் நின்று சுபர்கள் பார்வையற்றிருந்தாலும், அந்த ஜாதகனுக்கு இரண்டு வருஷமே ஆயுள் என்றும் சொல்வாயாக எ-று.

(வி-ரை) ஆயுள் விஷயமாய் கிரகங்களைக்கொண்டு சொல்வது கிரகத்தின் சுபாசுபம் தெரிந்தே சொல்லவேண்டும். ஆகையால் ஆயுள் காரகன் சனி வக்ரம்பெற, குஜன்-புதன் சம்மந்தப்பட அல்லது மேலே எண்களால் குறிக்கப்பெற்ற ஸ்தானங்களில் மேற்சொன்ன கிரகங்கள் இருக்கில் 2-வருஷத்தில் மரிப்பான் என்றபடி, எந்த வியாதியினுல் மரிப்பான் என நோக்குமிடத்து சூரியனுக்கு வயிறு, குஜனுக்கு முகம், புதனுக்குத்தோள், குருவுக்குத தொடை, சுக்கிரனுக்குக் கண்டம், சனி ராகுவுக்குக் கணைக்கால், சந்திரனுககு மார்பு, என்று அஙக அதிகாரம்பெறறும், ரோக விபரங்களைக் கவனிககுமிடத்து குஜனுக்குத் தலைநோய், வெதுப்பு கிராணி, குருவுக்கு மூலரோகம், வயிற்றுநோய், உதிரப்பாடு, புதனுககுக் கண்டமாலை, சுக்கிரனுக்குக் கண்ணோய், குலைப்பு, வெப்புநீர், கொப்பளம், ராகுவுக்குச் சோற்றுமந்தம், சீதம், சனிக்கு வாதம், சூலை, ஈளை, கேதுவுக்கு சோகைபீடை, சூரியனுக்கு வயிற்றுநோய் அரையாப்புமுதலியவைகள் உண்டாகும் என்று வீமேஸ்வர உள்ளமுடையானில் சொல்லியபடி இவ்வாறு இன்னின்ன கிரகங்களுக்கு இம்மாதிரி வியாதி உண்டாகுமெனவும், அவை நீங்கும் நீங்காது என்றும் ஆராய்ந்து ஆயுள் விபரமும், உயிர்விடுங்காலம் இன்ன வியாதியால் மரிப்பான் என்றும் கூறுவது நலம். (758)

நாளுஞ்செவ்வாய்தனக்கெட்டில் நண்ணிகுருவுந்தானிருக்கக்
கோளும்பரிதிசெவ்வாயுங் கொண்டமதியைப்பார்த்திடவே
மீளுஞ்சுங்கன்கண்ணுட்டி மேவிநோக்கமில்லாத
ஆளும்வருஷமுன்றெனவே யறைவர்கணிதவல்லோரே.

(இ-ள்) குஜன் எந்த ராசியில் நின்ருனே அந்த ராசிக்கு 8-ஆம் ராசியில்குருவும், சூரியனும் அங்காரகனும் சந்திரனைப்பார்க்க, சுக்கிரன் தனக்கு ஆட்சி வீடான கன்னியாராசியிலிருந்து பாராமலும் இருப்பரேல் அந்த ஜாதகனுக்கு ஆயுள் 3-வருஷமெனவும் கணிதவல்லோர் கூறுவர் எ-று.

(வி-ரை) மூன்று வருஷம் ஆயுளை உடையவர்களைப்பற்றி சோதிக்குமிடத்து,

பெற்றிடு மிலக்கினத்தோன் பெலவீன மாகப்பாவ
னுற்றிட மாந்திகேந்திர முறிலாண்டு மூன்றிற்சாவாம்.

என லக்கினுதிபதி பலயீனம் பெற்று பாவர்களோடு சேர, கேந்திரங்களில் குளிகனிருக்க அவன் 3-ஆம் ஆண்டில் இறப்பான். (759)

**வல்லசன்மந்தனக்கெட்டு வாழுமதற்கோரெட்டதனை**
**நல்லோர்பார்க்கக்கோணத்தை நாடும்பாவரொருநான்கே**
**சொல்லுஞ்சன்மராசிக்குச் சுபர்கோள்திருஷ்டிவர்ச்சிதமாய்**
**ஒல்லும்பாவர்பார்வையுற வோரங்குவருஷமைந்திற்சாமே.**

(இ ள்) ஜெனன ராசிக்கு 8-ஆம் இடமும், அதற்கெட்டாம் இடமான மூன்றும் ராசியை சுபகிரகங்களால் பார்க்க, கோணராசிகளில் பாவகிரகங்கள் நிற்க, அவன் தான் ஜெனித்த நான்காம் வருஷமே இறந்துபோவான் என்றும், ஜெனன ராசியை சுபர்கள் பாராது பாவகிரகங்களால் பார்க்கப் பட்டும் இருந்தால் அவன் 5-ஆம் ஆண்டில் இறப்பானென்றும் சொல்வர்.

(வி-ரை) கற்றபனிரெண் டெட்டாறாய் கடகமாய் புதனேநிற்க
நற்றிய மதியும்பார்க்கி னுலாண்டி லரிட்டம்தானே.

என்ற சாதக சிந்தாமணியின் வாக்கியப்படி கடகராசியிலும், 6-8-12-ஆம் ராசியிலும் புதன் நிற்க, சந்திரன் பார்க்க, அவன் ஜெனித்த நான்காம் வருஷம் இறந்துபோவான் என்றும்,

படிதுலாந் தன்னில்நாலாம் பாகையில் மதிதானிற்கில்
கொடியபா வக்கோள்பார்க்க கூடினு லாண்டிற்சாவாம்.

என துலாம் நாலாம்பாகையில் சந்திரனிருந்து பாவகிரகங்களால் பார்க்க, அவன் நாலாம் வயதிலேயே மரிப்பானென்றும்,

துடியைந்திற் பாவர்நிற்க சுகர்மூட மாகப்பாவ
ரடியுற பெலக்கிலேந்தா மாண்டினி லரிட்டமாமே.

என்றபடி, 5-ஆம் இடத்தில் பாவகிரகங்களும், பலம்பெற்ற பாவகோட்களு டன் மூடம்பெற்ற சுக்கிரனுனவன் சேர, அந்த ஜாதகன் 5-ஆம் ஆண்டில் இறந்துபோவானெனவும் சிந்தாமணியிற்சொல்லியபடி ஆராய்ந்துகூறுக. ()

**சாமேவியமாறெட்டதனிற் சனிசூழ்பரிதிராகுமதி**
**ஆமேயிருக்கச்சுபர்திருஷ்டி யல்லால்வயதோராறுதரும்**
**தாமேசன்மமுன்பின்னுந் தங்கபாவரிருந்திடவே**
**போமேநல்லோர்பார்வையிலாப் போதுமரணமேழ்தனிலே.**

(இ-ள்) சஷ்டம அஷ்டம விரயமென்கிற 6 8 12 ஆம் ராசிகளில் சனியோடு சூரியன்-சந்ரன்-இராகு இவர்கள் சம்மந்தப்பட்ட, அவன் ஜெனித்த 6-வது ஆண்டிலேயே இறந்துபோவான். ஜெனனராசிக்கு முன்பின் என்னும் 2-12 இவ்விடங்களில் பாவகிரகங்கள் இருக்க, சுபகிரகங்கள் பாராது இருக்க, அவன் 7-ஆம் வயதிலேயே இறந்துபோவான் எ-று.

(வி-ரை) இன்னம் சோதிக்க வேண்டுவதாயின் சிங்கம் 5-6-பாகையில் தேய்பிறைச் சந்திரனிருக்க, பாவகிரகங்களால்பார்க்க, அவன் 5-ஆம் ஆண்

டிலும்; ஷ ராசியில் சுக்கிரன் இருந்து பாவகிரகங்கள் சேர, அவன் 6-ஆம் ஆண்டிலும் இறப்பானென்று சோதிடவல்லோர் கூறுவர். (761)

**தனிலேசன்மஞ்சேயுமதி தன்னிலொருவர்நின்றாலும்**
**இனியநான்கிற்பாவர்களு மெட்டிற்பரிதிசேய்மதியும்**
**மனுசூழ்ந்திருக்கயின்னமொரு மதிவீட்டரசன்சன்மாதி**
**சனிசூழ்பரிதியுறநல்லோர் தானும்பாராரேன்மரணம்.**

(இ-ன்) ஜெனனராசி எந்த ராசியானாலும் அந்த ராசியில் குஜன் சந்திரன் இவர்களில் ஒருவர் நின்றாலும், நான்காம்ராசியில் பாவகிரகங்களும், அஷ்டமத்தில் ரவி மதி-குஜன இவர்கள் கூடியும், சந்திரன் எந்த ராசியில் நின்றானோ அந்த வீட்டுக்குடையவனும், ஜெனன லக்கினாதிபதியும் சனி சூரியனோடு சேர்ந்து சுபகோட்கள் பாராவிட்டாலும், அந்த ஜாதகன் மழலைசொல் மாறுமுன்னமேயே இறந்துபோவான் எ-று.

(வி-ரை) ஐந்துட னுயர்ந்தவீட்டி லம்புலி சனியும்கூட
மிஞ்சியேழ் விடத்தில்பூமன் வெங்கதி ரிரவிநின்றால்
கொஞ்சமாம் பாட்டன்பாட்டி குலமுள்ளோர் குழவிமாதா
வஞ்சியே மூன்றுமாதம் மடிவது நிஜமாமாதே.

என ஐந்து வீட்டிற்கு அப்பால் சனி சந்திரனும், 7-ல் புதனும் சூரியனும் நிற்க, அந்த ஜாதகன் வர்ககத்தாரும் பாட்டன்-பாட்டி-மாதா-குழவியும் பிறந்த மூன்றுமாதத்தில் இறந்துபோவார். இது நிச்சயம் என கேரளத்தில் கூறியபடி ஆராய்ந்து சொலலுக. (762)

**மரணஞ்சன்மமிதுனதுலாம் வாழுமெட்டிற்குருபுகரும்**
**திரமாய்பாவர்நோக்கமுறத் தெரிந்தவயதுமெட்டுளதாம்**
**பரிதிமதியுமட்டமஞ்சேர் பண்பாங்காரிபதினொன்றில்**
**வரவேயொன்பதிலுமரணம் வகையாயுலகீரறிந்திடுமே.**

(இ-ன்) ஜெனனலக்கினம் மிதுனம் அல்லது துலாமாகயிருந்து அந்த ராசிக்கு 8-ல் நற்கோட்களில் மிக்க புகழ்பெற்ற குருவும் சுக்கிரனுமிருக்க, பலம்பெற்ற பாவர்களால் பார்க்கப்பட்டால் அவனுக்கு வயது 8 எனவும், அஷ்டமமென்னும் 8-ஆம் ராசியல் சூரியனும் சந்திரனும இருக்க, சனி 11-ல் நட்புபெற, அவன 9-ஆம்வயதில மரணமடைவானென்றும் சோதிடவல்லவர்கள் கூறுவார் எ-று.

(வி-ரை) தாயலக் கினத்தில் செவ்வாய் சூரியன் மதியும் கூடி
செய்யாத கோளே பாரா விடிலெட்டா மாண்டிற் சாவாம்.

என்றபடி ஜெனனராசியில் சூரியன்-சந்திரன்-குஜன் கூடியிருக்க, அவனை சுபகிரகங்கள் பாராதிருக்க, அவன் 8-ஆம் ஆணடில் இறப்பானென்றும்,

மெய்யும்கோ லிடப மேழா மிடமாய்த்தேய் மதியும் நிற்க
உய்யும்பொன் பார்க்கி லேழெட் டொன்பதா மாண்டிற் சாவாம்.

என்றபடி, துலாம் அல்லது ரிடபம் 7-ஆம் இடமாக, அதில் தேய்பிறைச் சந்திரன் நிற்க குரு பாரகக அவன் 7-8-9-ஆம் ஆண்டில் இறப்பானென்றும் சாதக சிந்தாமணியில் கூறியபடியாம். (763)

**அறிந்தேயெட்டிற்கதிர்புகரு மரசன்பார்வைதானுமிலாச்
செறிந்தேயிருக்கயின்னமொரு செப்புநாலிற்சந்திரனே
பிறிந்துபார்க்குஞ்சேய்பரிதி பின்புநல்லோர்பாராதால்
இறந்தேயிறக்குமொன்பதினி னினியகோளின்பலனிதுவே.**

(இ-ள்) *ஜெனன லக்கினம் எந்த லக்கினமோ அந்த லக்கினத்திற்கு 8-ஆம் ராசியில் சூரியனும் சுக்கிரனுமிருக்க, அவனை குரு பாராதிருக்க, நான்காம் ராசியில் சந்திரன் நிற்க, அவனை சூரியன்-குஜன் பார்க்கவும் சுபகோட்கள் காணதிருக்கவும், அந்த ஜாதகன் ஜெனித்த 9-ஆம் ஆண்டில் இறந்துபோவான், கிரகங்களின் பலன் இதுவேயாம் எ-று.*

*(வி-ரை) மேற்சொல்லிய 8-ஆம் ராசியிலாவது மிதுனம்-கன்னியிலாவது சந்திரன்நிற்க, அவனை குஜன்தவிர வேறு சுபகிரகங்கள் பாராதிருக்க அவன் 9-ஆம் ஆண்டில் இறந்துபோவானென்றும், சந்திரனிருந்த ராசிக்கு 12-ஆம் ராசிக்குடையவன் பாவிபாகிய சனி அம்சம்பெறின் அவனும் 9-ஆம் ஆண்டில் இறப்பானென்றும் சாதக சிந்தாமணியிற் சொல்லியபடியாம்.* (764)

**இதுவேகேந்திரமேறி யிவரிராகுகேதுமிருந்திடவே
அதுசூழ்பாபர்நோக்கமுற வானபத்திலுறுமரணம்
மதிசேர்பரிதிகூடியொரு மனையிலிருக்கச்சன்மத்தைத்
துதிசேர்நல்லோர்பாராக்காற் சொல்லும்பதினொன்றுறுவயதே.**

(இ-ள்) *1-4-7-10-ஆம் இடங்களென்னும் கேந்திரங்களில் ராகு-கேது இவர்கள் இருக்க, அவர்களை கொடிய பாவிகள் பார்க்க, அவன் ஜெனித்த 10-ஆம் ஆண்டில் இறந்துபோவான். சூரியனும் சந்திரனும் ஒன்றுகூடி இருக்க. ஜெனனலக்கினத்தை சுபகிரகங்கள் பாராதிருக்க, அவனும் 11-ம் வயதிலேயே மரிப்பானென்றும் சொல்வர் எ-று.*

*(வி-ரை) பிறைதேய்ந் தெட்டிற் காரியுடன்
பெலநோக் கின்றி யுதையாதி
சிறையிற் றிரவி புடன்கூடி
செவ்வாய் மதியிடத் தானுடனே
இறைபூந் தெட்டோ னரவமுடன்
ஞறெட் டாக நிற்கிலுமே
குறைசேர்ந் திருக்க கொடுங்கூற்றன்
கூறுங்குழவி இரவு நில்லா.*

*எனவும், தேய்பிறைச் சந்திரனோடு சனி சேர்ந்து சுபர்கள் பார்வையற்று ஜெனன லக்கினாதிபதி சூரியனுடன் சேர்ந்து குஜன் அல்லது சந்திரன் நின்ற வீட்டோனுடன் சேர, அஷ்டமாதிபதி ராகு கேதுவுடன் சேர்ந்து 6-8-ஆம் ராசியில் இருக்க அந்த குழவி பிறந்த இரவே இறந்துபோகும்.* ()

**வயதேசன்மங்கேதுகதிர் மதிதானிருக்கச்சுபர்திருஷ்டி
சயமேயில்லாப்பன்னிரண்டிற் சாறுங்குழவிறிறுமரணம்
நயமாமொன்றிலெட்டாதி நண்ணியிருக்கவோராறில்
நியமேநான்கிற்சேயுறவே நிற்பன்பதின்மூன்றெனச்சொல்லும்.**

(இ-ள்) ஜெனன ராசியதிபதியுடன் சூரியன்-சந்திரன்-கேது இவர்கள் கூடி, வியமோக்ஷ ஸ்தானமென்னும் 12-ஆம் ராசியில் இருந்து சுபகிரகங் களின் பார்வை இல்லாதிருக்க, அந்தக் குழவி உடனே இறந்துபோம். ஜெனன லக்கினாதிபதி 6-8-ஆம் ராசியில் இருக்க, 4-ஆம் ராசியில் குஜன் இருக்க, அவனுக்கு வயது 13 என்றும் சொல்வர் எ-று.

(வி-ரை) சனிதுலாங் கிசமாய்நிற்கச் சற்குரு பார்க்கப்பன்மூன்
றினிற்பிதுர் துவேஷியாகி யிறந்திடு மதலையென்பார்.

என சனி துலா அம்சம்பெற, குருபார்க்க, அந்தஜாதகன் தன்பிதாவுக்கு துவேஷியாக இருந்து 13-ஆம் வருஷம் இறந்துபோவான் என்றும்,

சனியும்பொன் னங்கிசத்தில் காரிதான் நிற்கமாலோன்
வனியுறப் பார்க்கில்பன்னால் வருடத்தி லரிட்டமாமே.

என குரு அம்சத்தில் சனியும், அவனை புதன் பார்க்க, அவன் 14-ஆம் வருஷமே இறந்துபோவான் என்றும் சாதக சிந்தாமணியில் கூறியபடி யாம். (766)

சொல்லுமாறெட்டிற்பாவர் சூழ்ந்தேயிருக்கச்சன்மாதி
வெல்லுமாபோக்கிலியத்தின் மேவியிருந்தாற்பதினாறும்
வல்லோரதிபன்சென்மாதி வரவேபரிதியுடன்கூட
நல்லோர்பாராக்கேந்திரத்தி னண்ணும்பாவர்நாலைந்தே.

(இ-ள்) சஷ்டம அஷ்டம ஸ்தானங்கள் என்னும் 6-8-ஆம் ராசிகளில் கொடிய பாவிகள் இருக்க, ஜெனனராசியதிபதி ஆபோக்லீய ஸ்தானத்தில் இருக்க அந்த ஜாதகனுக்கு வயது 16-ஆகும் குருவும் ஜெனனராசியதிபதி யும் சூரியனுடன் கூடி கேந்திரம்பெற, அவர்களை சுபகிரகங்கள் பாராது இருக்க அவனுக்கு வயது 20 என்றும் கூறுவார் எ-று.

(வி-ரை) ஏழுட னுதயம்பத்தி லிருக்கவே சனிசேய்தீயர்
வாழ்மதி நல்லோராண்டில் வருந்தவத் திடத்திருந்தால்.

எனவும், 1-7-10 இவ்விடங்களில் சனி குஜன் முதலிய தீயகிரகங்களிருக்க, சந்திரன் அசுபக்ஷேத்திரம் பெற, அந்த குழவியானது பிறந்த ஓராம் ஆண்டில் மரிக்குமெனவும்,

ரூழ்வுட னறவுமெட்டிற் றனர்ந்திடா திருந்ததானால்
வாழ்வுடன் கூடப்போமே வந்தரா வதனிற்சாகும்.

என மேற்சொன்ன கிரகங்களோடு 8-ல் ராகு பலம்பெற, அக்குழவியானது பிறந்தவன்றே இறந்துபோகுமென்றும் கேரளத்தில் சொல்லியபடி ஆராய்ந்து கூறுக. (767)

நாலேசோமற்கிருபுற மிராகுசெவ்வாய்சனிகேது
ஆலேயிருக்கச்சன்மாதி யாயபலன்களற்றிடவே
மேலாம்பாவருடன்கூடி வேண்டியிருக்குமிப்படியே
சீலாயையந்தினின்மரணஞ் செப்புங்கணிதமாதவரே.

(இ-ள்) ஜெனன ராசிக்கு நான்காம் ராசியில் சந்திரனிருக்க, அவனுக்கு இருபுறமும் குஜன் கேது சனி சூரியன் இவர்கள் இருக்க, ஜெனன லக்கினாதிபதி பலனற்று பாவகிரகங்களுடன் கூடி இருக்க, அந்த ஜாதகன் ஜெனித்த 25-ஆம் வருடம் இறந்துபோவான் என்றும் கணிதவல்லோர்கள் கூறுவார் எ-று.

(வி-ரை) மன்னவ னுதயர்தன்னில் மதியுடன் காரிநிற்க
அன்னரித் தாரபூம னணுகியே இரவிக்கேழில்
நின்றவர் சுங்கற்காரி நிலையதிற் பாம்பேயாகில்
சொன்னதோ ரீராறாண்டிற் சோதனை யாகப்போவான்.

என ஜெனன லக்கினத்தில் குருவும், சந்திரனுடன் சனியும், சனி நின்ற வீட்டில் புதனும், சூரியனுக்கு 7-ஆம் ராசிநாதர்கள் சுக்கிரனுக்கு 6-ஆம் ராசியிலும், அவர்களுடன் ராகுவும்கூடி இருக்க, அந்த ஜாதகன் 12-ஆம் வருஷம் இறந்துபோவான் என்றும் கேரளத்தில் சொல்லியபடியாம். (768)

மாதேகன்னிலக்கினமாய் வந்துசனியுந்தானிருக்கப்
போதேயரசன்வியமெட்டிற் போகவிருபத்தாறும்
சாதிசன்மமெட்டதிபன் சரியாய்ப்புடமேதானிருந்தும்
ஓதுங்கேந்திரமுறவெட்டி லுற்றேகேதுமூவொன்பான்.

(இ-ள்) அழகு பொருந்திய பெண்ணே! ஜெனனலக்கினம் கன்னியாக இருந்து அவ்விராசியில் சனி இருக்க, குருபகவான் ஜெனன லக்கினமான கன்னியா ராசிக்கு 6-8-12 என்னும் கும்பம்-மேஷம்-சிங்கம் இவ்விராசிகளில் இருக்க, அவனுக்கு வயது 26 என்பர். ஜெனனலக்கினத்திற்கு 8-ம் ராசிநாதனை சரியாய் ஸ்புடம் செய்துபார்க்க, அவன் கேந்திரம்பெற்றும், கேது ஜெனனராசிக்கு 8-ஆம் ராசியில் இருக்க, அவனுக்கு வயது 27 என்றும் கூறுவார் எ-று.

(வி-ரை) சனியைக்குறித்து நன்கு ஆராய்ந்துணர்ந்து ஆயுள் சொல்வதே கணித வல்லவர்களின் கடமையாகும் ஆதலால் சனிபகவான் கன்னியாராசியில் இருந்தாலும், அவன் யார் அம்சம் பெற்றிருக்கிறானென ஆராய்ந்து, குரு அம்சம்பெற்றிருந்தாலும் இவனுடன் ராகு குரு அம்சம் பெற்றும், இவ்விருவரில் ஒருவர் ஜெனனலக்கினாதியைப் பார்க்க, அந்தக் குழவியானது உடனே இறந்துபோமென்றும், சனிநின்ற ராசிக்குடையோன் உச்சம்பெற்றும், அவனை குரு ஆட்சி நட்புமுதலியவைகளால் பலம் பெற்றுப் பார்க்கின் மேற்சொன்ன 1-ஆம் ஆண்டில் நேரும் கெண்டாதி தோஷமானது நிவர்த்தியாகும் என்றும் சொல்வர். (769)

பானுபுதல்வன்கேதுகரும் பாம்புசெவ்வாயொன்றெட்டில்
தேனேயிருக்கப்புகர்புந்தி தேவர்குருவுங்கேந்திரமில்
லானேயுற்றாலிருபத்தெட் டாகுமெட்டிற்கதிர்மூன்றில்
ஊனேமதியுஞ்சனிபாவ ருடனேக்கிருபத்தொன்பானே.

(இ-ள்) சூரியன்புதல்வனென்றுசொல்லும்சனியும், ராகு கேது-குஜன் இவர்கள் ஆயுள்ஸ்தானமென்னும் 8-ம் ராசியிலிருக்க, சுக்கிரன்-புதன்-குரு இவர்கள் கேந்திரமின்றி மற்றைய க்ஷேத்திரங்களில் இருக்க, அவனுக்கு

வயது-28 என்றும், 8-ஆம் ராசியில் சூரியனும், திருதிகை ஸ்தானமாகிய 8-ல் சந்திரனும், மற்றுமுள்ள பாவகிரகங்களோடு சனியும் சேர்ந்திருந்தாலும் பார்த்தாலும் 29-வயதென்றே சாஸ்திரவல்லோர் கூறுவர்.

(வி-ரை) சுக்கிரன்-புதன்-குரு முதலியவர்கள் கேந்திரமில்லாதிருந்தால் தனக்கு மேற்சொன்னபடி 29-ஆம் வயதில் கெண்டம் என்றாலும் மேலேசொன்ன சுபகிரகங்கள் கேந்திரம்பெற்று லக்கினத்தைப் பார்க்க அதற்கு ஏற்ற வயது சொல்லவேண்டும். அதிலும் சனி 8-ல்நிற்க, அவன் தந்தைக்கு தோஷமும், ஜாதகனுக்கு வாலிபமரணமும், அப்படி மரணமடையாவிடில் பட்டினி முதலிய துக்கசாகரத்தையே அனுபவிப்பானென்றும், இருநேத்திரரோகியும் குஷ்டரோகியும் ஆசனவியாதியும் அபமிருத்தியுதோஷமும் உண்டாகுமென்றும் சாதகசிந்தாமணி 1282-ஆம் செய்யுளில் சொல்லியபடி சொல்லுக. சனியோடு மற்றும் பாவகிரகங்கள் சகிதம்பெற்று இருந்தால் எவ்வித பலனைத் தருவானென்பதை கவனித்துச்சொல்லுக. ()

ஒன்பான்றேய்பிறைசுபத்தர்ன முற்றேயட்டமாதிபதி
அன்பாய்கேந்திரமுறவெட்டி லானபாவர்தானிருக்கப்
பின்பாம்லக்கினதிபதி பலன்களில்லாதிருந்திடவே
துன்பாமுப்பதெனவறிந்து சுகமாயுரைத்தேன்மிகவாழும்.

(இ-ள்) தேய்பிறைச்சந்திரன் 9-ஆம் இடமென்னும் சுபக்ஷேத்திரத்திலேனும், மற்றுமுள்ள நற்க்ஷேத்திரங்களிலேனும் நிற்க, அஷ்டமாதிபதி கேந்திரம் பெற்றும் அஷ்டமஸ்தானத்தில் பாவகிரகங்களும் இருக்க, ஜெனன லக்கினதிபதி பலமற்றுமிருக்க, அந்த ஜாதகனுக்கு வயது-30 என்றும், அதுவரையில்தான் இப்பூமியில் வாழ்வானென்றும் கூறுவாய்.

(வி-ரை) இதுவரை ஆயுள் கூட்டும் விஷயங்களைப் பேசிவந்தோம். ஆயுள் கூட்டும் விதம் எப்படியோவென்று அநேகர் சந்தேகிக்கலாம். ஏனெனில்: 1-வது கிரகங்கள் இருக்கும் சுபாசுபத்தைக்கொண்டும், 2-வது காலச்சக்கரதசையாலும், 3-வது அஷ்டவர்க்கங்களாலும், இன்னம் பற்பல ஆராய்ச்சியாலும் சொல்லவேண்டும் என்பது உண்மை. ஆயுள் விபரங்களைப் பற்பல நூல்களில் பற்பலவிதமாகக் கூறியிருப்பதையும் அறியலாம். இந்த ஆயுள் பாவத்தைப்பற்றி விவாதித்த 8-மேதாவிகளின் பெயரையும் முன்னதாகவே குறிப்பிட்டுள்ளோம். அவர்கள் விவாதித்து நீக்கவேண்டியவற்றை நீக்கியும், சேர்க்கவேண்டியவற்றைச சேர்த்தும், நம்மவர்க்கு பயன்படுமாறு நிருபித்தவர் ஐவர். சிவன்-விஷ்ணு-குரு-சத்யாசாரர்-தெய்வசாமி இவர்கள் ஐவரும் ரவிமுதல் 7-கிரகங்களுக்கும் ஏற்பட்டுள்ள மகாதிசை வருடம்-120 7-கிரகங்களுக்கு சமமாய் பாகிக்க பங்கொன்றுக்கு ஏற்படும் வருஷம்-17, மாதம்-1, நாள்-22, கடிகை-8, தற்பரை-20. இவ்வாறு உச்சம்பெற்ற கிரகங்களுக்கும், ஆக்ஷிபெற்ற கிரகங்களுக்கும் அவர்கள் பாகம் எவ்வளவோ அதுபோல் 3-பாகமும், சுயதிரிகோண, சுபாம்கிசம் பெற்றவர்களுக்கு 2-பாகமும், இவ்வாறு கிரகங்களிருக்கும் தாரதரம் அறிந்து ஆயுள் சொல்ல வேண்டும். இவை சாதக சிந்தாமணியிலும் காணலாம். (771)

வாழும்நான்கிற்சுக்கிரனும் வந்தேயெட்டிற்பாவருறச்
சூழும்நல்லோர்பார்வையறத் தொடர்ந்தேநிற்கவக்கினியால்

ஊழிமனையாடன்றலு மோங்கும்பாம்பின்கடியாலும்
ஆழியுலகோர்தாமறிய லாகுமரணங்கண்டீரே.

(இ-ள்) ஜெனனராசிக்கு நான்காம்ராசியாகிய சுகஸ்தானத்தில் சுக்கிரனும், 8-ஆம் ராசியில் பாவகிரகங்களும் நின்று, சுபகோட்களின் பார்வையின்றி இருப்பார்களேயானால் அந்தஜாதகன் அக்கினியாலும் தன்பெண்டீராலும் விஷங்களுடைய சர்ப்பக்கடியாலும் இப்பூமியிலுள்ளோர் அறிய மரணம் அடைவார்கள் எ-று.

(வி-ரை) நான்கில் சுக்கிரன் இருந்தால் களத்திரசுகம் உண்டாகும். ஆயினும் 8-ல் நிறை சனி சுக்கிரனைப் பாரப்பானுகையாலும், சுபர்கள் பார்வை இலலாததாலும், மேலே தோஷங்கூறப்பட்டன என்பதாம். (772)

கண்டவிரண்டிற்பன்னிரண்டிற் காணுஞ்செவ்வாய்சோமனுற
பண்டேயேழிலெட்டில்கரும் பாம்புமரசனுறின்முப்பான்
கொண்டமட்டமாதிபதி கேந்திரமேவிலக்கினுதிபதி
மண்டுபலன்கள்வர்ச்சிதமேல் வயதுமுப்பத்திரண்டாமே.

(இ-ள்) ஜெனனராசிக்கு இரண்டு பன்னிரண்டாகிய தனம் விரயம் என்னும் ஸ்தானங்களில் குஜனும் சந்திரனும் இருக்க, 7-8-ஆம் ராசிகளில் இராகுவும் குருவுமிருக்க அவனுக்கு வயது 30 ஆகும். அஷ்டம ஸ்தானாதிபதியும ஆயுள் ஸ்தானாதியுமான 8-ஆம் வீட்டோன் கேந்திரம்பெறறு, ஜெனன லக்கினாதிபதி பலமிழந்து இருப்பானாகில் அவனுக்கு வயது-32 என்றும் சோதிடவல்லவர் கூறுவார் எ-று. (778)

ஆமேயரசன்சுக்கிரனு மனுகிக்கேந்திரந்தான்மேவத்
தாமேலக்கினாதிபதி தானும்பாவருடனகூட
தீமைசூழாபோக்கிலியந் தேய்ந்தமதியுந்தானிருக்கத்
தோமேமரணமாறுறிற் சொலவர்கணிதவல்லோரே.

(இ-ள்) ரிடப துலாத்திற்கு ஆதிபாதனாகிய சுக்கிரனும், தனுர் மீனத்திற்கு ஆதிபாதனாகிய குருவும், ஜெனன ராசிக்கு கேந்திரம்பெற்று, ஜெனனராசியதிபதி கொடிய கோட்களுடன் சம்மந்தப்பட்டு, தீமையை விளைவிக்கும் ஆபோக்லீய ஸ்தானங்களில் இருக்க, அவனுடன் கிருஷ்ண பக்ஷத்துச சந்திரனிருக்க அந்த ஜாதகன் 36-ஆம் வயதில் இறந்துபோவானெனறும் கணிதவல்லவாகள் கூறுவார் எ-று.

(வி-ரை) விதியற்று போனபேர்க்கு மதியதைப் பார்த்துச்சொல்லு
மதியற்று போனபேர்க்கு சனியதைப் பார்த்துச்சொல்லு
சனியறறு போனகாலை யுதயத்தைப் பார்த்துச்சொல்லு
சனிமது யுதயந்தப்பா தகப்பு மரணகாலம்.

என மரணகாலங்களைப்பற்றி அறியசந்திரனை ஆராய்ந்துசொல்லவேண்டும் சந்திரன் பலமில்லையேல் சனியை கவனித்து ஆயுள் சொல்லவேண்டும். சனிக்கும் பலமில்லையேல் உதயலக்கினத்தைப் பார்க்கவேண்டும். சனியையும் சநதிரனையும உதயலக்கினத்தையும் கவனிக்கில் மரணகாலம் தப்பாது கிடைக்குமென்று கேரளததில் சொல்லியபடி இம்மூவரையும் கவனித்தே ஆயுள் சொலலவேண்டும் என்பதை கவனிக்கவும். (774)

**வல்லமிதுனலக்கினமாய் வாழும்பரிதிதானிருக்கப்**
**பொல்லாரிரண்டுபாரிசமும் புகவாறரசன்முப்பத்தேழ்**
**ஒல்லும்பாவகேந்திரத்தி லுறச்சன்மாதிபன்னிரண்டில்**
**வெல்லுமெட்டோன்லக்கினத்தில் மேவின்முப்பத்தெட்டாமே.**

(இ-ள்) *வல்லமைபொருந்திய மிதுனராசியில் ஜெனனமாக அவ்விராசியில் அருக்கன் இருக்க, அவனுக்கு இரண்டுபக்கமும் தீயகிரகங்களிருந்து குரு சேராமலும் பாராமலுமிருந்தால் அவனுக்கு வயது-37 என்றும், பாவ கிரகங்கள் கேந்திரத்திலும், ஜெனன ராசியதிபதி 12-ஆம் இடமென்னும் விரயஸ்தானத்திலும், அஷ்டமாதியாகிய 8-ஆம் வீட்டோன் ஜெனனராசியிலுமிருந்தால் அவனுக்கு வயது-38 என்றும் சொல்வாயாக எ-று.* (775)

**மேலாஞ்சன்மந்திரராசி மேவுமொன்றிலெட்டாதி**
**சாலவிருககச்சுபரெட்டிற் றந்தால்வயதுமெண்ணைந்தாம்**
**சேலெட்டாதிகேந்திரமே செவ்வாய்லககினந்தானிருக்கக்**
**காலவாறின்மூன்றுசனி கதிர்சூழெண்ணைந்தாம்வயதே.**

(இ-ள்) *மேன்மையைப் பெற்ற ஜெனன ராசியானது ஸ்திரராசிகளில் ஒன்றாகவும், ஜெனனராசியில் அஷ்டமாதிபதிசேரவும், அஷ்டமம் என்னும் 8-ஆம் ராசியில சுபகிரகஙகளும் இருக்க, அந்த ஜாதகனுக்கு வயது-40 ஆகும். மேறசொன்ன ஜெனனராசிக்கு 8-ஆம் வீட்டோன் 1-4-7-10 என்னும் கேந்திரம்பெற்றும், ஜெனன ராசியில் குஜன் இருக்கவும், 3-6-ஆம் ராசியில் சனியும், அவனோடு சூரியன் சேர்ந்திருந்தாலும் வயது 40 என்றே கூறுவர் எ-று.*

(வி-ரை) 1-4-7-10-க்குடையோர் 8-6-ஆம் *ராசிகளில் இருந்தாலும் வயது 40 என்றனர்.*

*நன்றிய கேந்திரகோண நகருளோ ராறெட்டாக*
*நின்றிட வீராறெட்டோர் நிற்கவே கேந்திரகோணம்*
*அன்றிய மதியோடீன மாயினுன் மாதேமீளாய்*
*சென்றிடச் செய்வதெல்லாம நின்றிடா திருக்கும்ஜீவன்.*

*என கேந்திரகோண ராசியோர் 6-8-லும், 6-8-ஆம் ராசியோர் கேந்திர கோணத்திலும் நின்று சந்திரன் ஈனமபெற்றாலும் அந்த ஜாதகனுக்கு எவ்வித கெண்டாதிதோஷம் ஏற்படினும்நீங்கி ஆயுளுடன் இருப்பானென்ற கேரள சுலோகப்படி கேந்திரத்தோர் 8-ல் இருந்தாலும் 8-ஆம் ராசியோர் இருக்கும் தாரதரம் அறிந்து கூறுதல் நலம்.* (776)

**வயதேசோமன்லக்கினத்தில் வர்க்கோத்தமனுயுறிற்பாவர்**
**நியமேபார்க்கச்சுபர்திருஷ்டி நேசமில்லாவாறெட்டில்**
**பயமேசென்மனெட்டாதி பதியங்கிசையிற்பாவருடன்**
**சயமேநிற்கவெட்டாதி சன்மத்திருக்கிலைம்பதுவே.**

(இ-ள்) *பாவகிரகங்களான சனி-குஜன்-ராகு முதலியோர் சந்திர லக்கினத்திலும், அல்லது சந்திரன் இருந்த வீட்டோன் அங்கிசத்திலும்நின்று, 6-8-ஆம் ராசியில் இருக்க, அவர்களைச் சுபகோட்கள் நோக்கவும், 1-8-க்குடையோர் அங்கிசம்பெற்று பாவகிரகங்களுடன் கூட, அஷ்டமஸ்தானாதிபதி ஜனனலக்கினத்திலுமிருக்க, அவனுக்கு வயது 50 என்றும் கூறுவார்.*

வேறு

அன்பாமுபய ராசிக்கதிபதி
இன்பாய்லக்ன மிசைந்தேயுற்றிட
பன்பாமதிசனி பனிரெண்டெட்டுறில்
துன்பமைம்பத் திரண்டினிற்சொல்லுமே.

(இ-ள்) ஜெனனராசியில் உபயராசிக்கு அதிபர்களான புதன்-குரு இவர்கள சேர, சனியும் சந்திரனும் விரய ஸ்தானமென்னும் 12-ஆம் ராசியிலிருக்க அவன் துன்பமும் வருத்தத்துடன் அவன் வயது 52-ல் இறந்து போவான் எ-று.

(வி-ரை) ஆயுள் பாகத்தைத் தீர ஆராய்ந்து சொல்பவரே தெய்வம் என்று சொன்னதால் வேதமூர்த்திகள் உரைத்த வாக்குப்படி கிரகங்களின் வரிசையை நன்கு ஆராய்ந்து சொல்வார்களாயின் ஆயுள் நிலை யறியலாம். ஆகையால் சனியும சந்திரனும் 12-ஆம்ராசியிலிருக்க வயது 12 என்றனர். சனிக்கு அவயவங்களில் தொடை என்றும், சந்திரனுக்கு மார்பு என்றும், முன்கூறிய செய்யுளின் விருத்தியுரையில் விளககிக் காட்டினோம். இப்பால் சரீரத்திறகு எதுவான வஸ்துக்களைச் சோதிக்குமிடத்து சந்திரனுக்கு இரத்தமும், சனிக்கு நரம்புகளுமாகும். இவ்விருவரும் மோக்ஷஸ்தானம் என்னும 12-ஆம் ராசியில் இருக்கில் அந்த ஜாதகனுடைய பலம் எவ்வள வில் இருக்கும என்புதைக் கற்றறிந்தோர் அறிவார். உபயராசியதிபர் லக்கி னத்தில இருந்தாலேயே வயது 52 என்றனர். உபயராசி என்பது மிதுனம் கன்னி-தனுசு-மீனம் இவ்வீட்டிற்கு உடையோர் புதனும் குருவும் ஆவார். குரு புதனனறி வேறு பாவகிரகங்கள் சேரின் 52-வயதென்று எண்ணுவது கூடாது. அந்தந்த கிரகங்களின் கிரக நோக்காநோக்கம் அறிந்து கூறுதல் வேண்டும். (778)

சொல்லுஞ்சன்மாதி சூழ்ந்தேயெட்டுற
வல்லசநதிரன் மனையிற்கதிபதி
வெல்லுசந்திரர்க் கெட்டினின்மேவிடிற்
புல்லர்கூடிற்போ மைம்பததினாலதே.

(இ-ள்) ஜெனன ராசியதிபதி அஷ்டம ஸ்தானம் என்னும் 8-ஆம் ராசியில இருக்க, வல்லமை பொருந்திய சந்திரன் நின்ற வீட்டிற்குடை யோர் சந்திரன் நின்ற ராசிக்கு 8-ஆம் ராசியில் இருந்து கொடிய கிரகங்க ளுடன் சேர்ந்திருகக, அவன் ஜெனிதத 54-ஆம்வயதில் இறந்துபோவான் எ-று. (779)

நாலாஞ்சன்ம காடுந்தனுசினில்
மேலாயரசன் விரும்பியிருந்திடச்
சேலாரிராகுவுஞ் செவ்வாயெட்டுறிற்
காலமேழெட்டிற கனகண்டமே.

(இ-ள்) ஜெனன ராசிக்கு சுகஸ்தானம் என்னும் நான்காம்ராசி தனுசு ஆகவும, அவவிராசியில் குரு ஆக்ஷிபெறவும், அஷ்டம ஸ்தானமென்னும் 8-ஆம் ராசியில் குஜனும் ராகுவும் இருக்க, அந்த ஜாதகன் ஜெனித்த 56-ம் வயதில் கெண்டம உண்டாகும் எ-று.

(வி-ரை) சிலர் தனுசுராசியாகி அதில் குரு இருக்க என்றும் அர்த்தம் கொள்வர். அப்படியானல் நாலாக என்ற பதத்திற்கு உரையில்லை. ஆயுள் விஷயங்களைப்பற்றிய இடம் முக்கியமானஇடம் மூன்று ஆகும். அம்மூன்று க்ஷேத்திரமும் தவறுமாயின், மற்றுமுள்ள காலசக்கரம் தசவர்க்கம் முதலியவைகளைச சோதிக்கவேண்டும் ஆகையால் நான்காம்ராசி என உரை எழுதப்பட்டன. அப்படியாயின் 1-4-ஆம் ராசிக்குடையோன் குருவே யாகும் இவ்வாறே மற்றுமுள்ள பலனையும் அறிக. (780)

கண்டவாறு கருதிடுமெட்டினில்
கொண்டகோள்களே கூடியதுதனில்
மண்டியிருக்கில் வயதைம்பத்தெட்டென
அண்டர்மாதவ ரறிந்துரைத்தானரோ.

(இ-ள்) ஜெனன லக்கினத்திறகு சஷ்டம அஷ்டம ஸ்தானமாகிய 6-8-ஆம் ராசிகளில் தீயகிரகங்களான சனி-ராகு-கேது முதலியோர் கூடி மேற்சொன்ன ராசிகளிலேயே இருக்கில் அந்த ஜாதகனுக்கு வயது-58 என தேவர்களால் தெரிந்தெடுக்கப்பட்டார் எ-று. (781)

உரைத்திடும்பத்தி லுறுகதிரோனும்
திரைத்தகாரி சென்மமேவிடிற்
புரைத்தவெட்டினிற் புரவலனுற்றிட
நிரைத்தேயாண்டு நிற்பனறுபதே.

(இ-ள்) மேன்மையான பிரகாசத்தையுடைய சூரியன் ஜெனனராசிக்கு 10-ஆம் இடமென்னும் கரும ஸ்தானத்திலும், கறுத்த நிறத்தையுடைய சனி ஜெனனராசியிலும், ஆயுள் ஸ்தானமென்னும் 8-ஆம் ராசியில் புதனும் இருக்க, அந்த ஜாதகனுக்கு வயது-60 என்றும் கூறுவர் எ-று. (782)

அறுபதிலின்ன மாண்டினிற்காரி
நறுமலர்ச்சன்ம நாலினிற்சந்திரன்
பறுவெழிற்செவ்வாய் பத்தினிற்கதிர்குரு
இறுபுகாபுந்தி யிவருடன்கூடிடில்.

(இ-ள்) வாசனை நிறைந்த புஷ்பங்களைத் தரித்தவளே! ஜெனன லக்கினத்தில் சனியும், நான்காமிடமான சுகஸதானத்தில சந்திரனும், 7-ஆம் ராசியாகிய சப்தமததில் குஜனும், 10-ல நினற சூரியன்-குரு இவர்களோடு புகர்-புதன் இவர்கள் கூடி இருக்கில் அந்தஜாதகனுக்கு வயது-60 என்றும் சொல்வார் எ-று.

(வி-ரை) சநதிரன் இருந்த ராசிநாதன் புதன்-சுக்கிரன்-சனி இவர்கள் கூட்டம் கூடியிராமல், ஒவ்வொருவரும் அவரவர்க்கு 4 5-ஆம் ராசியில் இருப்பாரானல் அந்த ஜாதகன் மேனமையான செல்வத்தைப் படைத்து நூறு வயதுடன் இருப்பாரென்றும் சொல்வர். இவை கேரளத்தில் சொல்லியபடியாம். (783)

கூடியவெட்டா மதிபதிபாவனுய்
நாடியசந்திர னணனிடுங்கோணத்
தாடியகேந்திரந் தன்னிறகூடிடில்
ஆடியவறுபத் தைந்தினிற்போகுமே.

(இ-ள்) ஜெனன ராசிக்கு 8-ஆம் வீட்டோனும் ஆயுள் ஸ்தானாதிபதியுமான அஷ்டமாதிபதி பாவகிரகமாகவும், சந்திரன் நின்ற ராசிக்கு கேந்திரத்திலாவது கோணங்களிலாவது கூடி இருக்க, அந்த ஜாதகனுக்கு வயது-65 என்றும் கணிதவல்லோர் கூறுவர் எ-று. (784)

போகிடுங்காரி புகுமனைநீச
மாகியகேந்திர கோணமாகிடில்
மேகமிலக்கின மெழின்மனைநல்லோர்
ஆகியசுபருட னணுகிலெழுபதே.

(இ-ள்) ஆயுள்காரகனாகிய சனிபகவான் நின்றவீடானது நீச்சமாகவும் அவை ஜெனன ராசிக்கு கேந்திரம் அல்லது திரிகோணமாகவும் இருக்க, ஜெனன லக்கினத்திற்கு 7-ஆம் ராசியானது நல்லோர் வீடாகவும் இருக்க, அவ்வீட்டோன் சுபகிரகங்களுடனும் கூடியிருக்க, அந்த ஜாதகனுக்கு வயது-70 என்றும் கணிதவல்லோர் கூறுவர் எ-று.

(வி-ரை) நாலுகேந் திரத்துமன்னர் நலமாய்முக் கோணம்சேர
ஏலுகத் திருக்கநீல நிவர்க்கேழிற் றீயோரைந்தில்
மேலுகந் தனத்தோன்மீறி மேருவி லெட்டோனானல்
ஆலுகந் தமர்ந்தமாதே யவன்நூறு வயதுள்ளோனும்.

என்றபடி நான்கு கேந்திர வீட்டிற்குடையோரும் 1-5-9-ல் இருக்க, அவர்களுக்கு 7-ல்சனிநிற்க, தனாதிபதி பலம்பெற்று 8-ம்ராசியில் இருக்க, அந்த ஜாதகனுக்கு வயது-100 என்றும் சொல்வரென கேரளத்தில் சொல்லியபடியாம். (785)

எழுந்திடுலக்கினத் தெய்தநற்கோளுறத்
தழுந்தியகேந்திரஞ் சந்திரன்மேவிடில்
அழுந்திடுங்கோணக் காரியமர்ந்துறில்
எழும்பிடுஞ்செல்வமோ ரெழுபத்தினாலே.

(இ-ள்) ஜெனன லக்கினத்தில் சுபகிரகங்களாகிய சந்திரன்-புதன்-சுக்கிரன் முதலியோரும், பலத்தைப்பெற்ற கேந்திரங்களில் சந்திரனும், திரிகோணங்களில் சனியும் இருக்கப் பிறந்தவன் நல்ல செல்வத்தோடு 74-வயதுவரையில் வாழ்ந்திருப்பன் என்று சோதிடவல்லவர்கள் கூறுவார் ()

நாலாஞ்செவ்வாய் நாடியைந்தினில்
ஏலாம்பரிதி யேழிலமர்ந்திட
நீலாங்காரி நீசமுற்றிடில்
மாலாயெழுபத் தைந்தினின்மரணம்.

(இ-ள்) ஜெனனராசிக்கு நான்காம்வீட்டின் ஆதிபத்தியம் பெற்ற குஜன் 5-ஆம்ராசியிலும், 7-ஆம் ராசியில் சூரியனும், சனி மேஷராசியில் நீச்சமும் பெறப் பிறந்த ஜாதகன் ஜெனித்த 75-வயது வரையில் ஜீவித்திருப்பான் என்றும் கூறுவர் எ-று. (787)

மரணமறியும் வகைகேந்திரத்தில்
குருவுடன்மதியுங் கூடியிருந்திட
திரள்சுபர்நோக்கத் தேசத்தரசாய்ப்
புரிபுவிலெழுபத் தொன்பதுபொருந்துமே.

(இ-ள்) மரணகாலத்தை அறியவேண்டியவிதம் எப்படியெனில் ஜெனன ராசிக்கு 1-4-7-10-ஆம் இடங்களாகிய கேந்திரங்களில் சூரியனோடுசந்திரன் கூடி இருக்க, அவனைச் சுபகிரகங்கள் பார்க்க, அந்த ஜாதகன் இந்ததேசத்திற்கு அரசனாக இருந்து 75-வயதுவரையில் ஜீவித்திருப்பான் எ-று.

(வி-ரை) குருவும் சந்திரனும் ஒன்றுசேரின் குரு சந்திரயோகம் என்பதை முன்கூறிய யோகபடலத்தில் காணலாம். (788)

மேவியலக்கின வீடாறளவும்
தாவியநல்லோர் தானுறவேழ்முதல்
பாவர்களுறிலே பரதேசத்தரசாய்
சாவதுயெண்பதிற் சாற்றிடுவாயே.

(இ-ள்) ஜெனனராசிமுதல் 6-ராசிவரையில் சுபகிரகங்களும், 7-முதல் 12-ஆம் ராசிவரையில் பாவகிரகங்களும் இருக்க அந்த ஜாதகன் அந்நிய தேசங்களுக்கு அரசனாக இருந்து 80-வயது வரையில் ஜீவித்திருந்து இறந்துபோவான் எ-று. (789)

சாற்றிடுமின்னந் தானெண்பதினில்
ஏற்றிடுலாபத் திருந்தங்கிசாபதி
போற்றுமவ்வீட்டினிற் புகஅதற்குடையோன்
நேற்றியகேந்திரத் துறியனிச்சயமே.

(இ-ள்) ஜெனன ராசிக்கு 11-ஆம் வீட்டோன் அங்கிசம்பெற்ற கிரகம் எந்த ராசியில் இருந்தானோ அந்த வீட்டிற்கு உடையவர்கள் கேந்திரம் பெற்றிருக்க, அந்த ஜாதகன் ஜெனித்த 80-வது வயது வரையிலிருந்து மரிப்பானென்றும் கணிதவல்லோர் நிச்சயிப்பார் எ-று. (790)

நிச்சவொட்டாறு நிலவுடன்சன்மம்
இச்சைநற்குருவும் லாபமூன்றினில்
துச்சபாவர் தொடர்ந்தேயிருந்திடில்
அச்சமிரெண்ணூ ருண்டினிலிறுமே.

(இ-ள்) சந்திரனுடனாவது அல்லது ஜெனனராசியிலாவது 6-8-ஆம் ராசியிலாவது குரு இருக்க லாபஸ்தானமாகிய 11-ஆம் ராசியிலும் 3-ஆம் ராசியிலும் தீயகிரகங்கள் இருக்கப் பிறந்தவன் எவ்விதத் தீங்குமின்றி 90-வயது வரையிலிருந்து இறந்துபோவான் எ-று. (791)

இறுஞ்சன்மாதி யிதுவேபலனாய்
நறுஞ்சுபர்நோக்க நண்ணிக்கேந்திரத்
துறினேலட்சுமி தொடர்ந்துபூவரசாய்
தெரிந்திடுநூறெனச் செப்புமாதவரே.

(இ-ள்) ஜெனன லக்கினாதிபதி தன் பூரணபலம் பெற்றும், சுபகிரகங்களால் பார்க்கப்பட்டும் கேந்திரம் பெற்றும் இருக்க, அந்த ஜாதகன் லக்ஷிமீகரத்தோடு அநேக செல்வங்களைப் படைத்து நூறுவயது வரையில் இருப்பான் என்றும் கணிதவல்லவர்கள் கூறுவார் எ-று. (792)

எட்டாம் பாவகம் முற்றிற்று.

# ஒன்பதாம் பாவகம்

[ஒன்பதாம்பாவகமென்பது பிதாவைக்குறித்தும், பாக்கியத்தைக் குறித்தும், புத்திர விருத்தியைக் குறித்தும், தான தரும பரோபகார விஷயங்களைக் குறித்தும் அறியவேண்டிய ஸ்தானமென முன்கூறிய பொது பாவகத்தில் 9-ஆம் செய்யுளில் கூறியபடி, முதன்முதலாக பிதாவின் அந்தஸ்து ஆயுள் முதலியவைகளைக் குறித்துச் சொல்லுவார்.]

## பிதுர் பலன்

ஓதுமைந்தொன்பானுதி பதிகதிருடனேகூட
ஓதிடுங்காரிபார்க்க வுறும்பிதாவிற்கரிட்டம்
ஓதிமைந்தொன்பானுதி பதிகதிருடனேகாரி
ஓதுசேயிவர்தாமுன்றி லுறிற்றந்தையுடனேபோமே.

(இ-ள்) பிதுரு காரகனாகிய சூரியனோடு 5-ஆம் வீட்டதிபதியும், பிதுரு ஸ்தானாதிபதியான ஒன்பதாம் ராசியதிபதியும் கூடி இருக்க அவர்களைச் சனிபார்க்க, அந்த ஜாதகன் பிதாவுக்கு அரிட்டமுண்டாகுமென்று சொல்வாயாக. முன்சொன்ன 5-9-ஆம் ராசியதிபதி சனி-சூரியன்-குஜன் இம் மூவர்களுடன்கூடி 3-ஆம் இடமென்னும் மறைவிட ஸ்தானத்தில் இருக்க அவன் பிதா உடனே இறந்துபோவான் என்று கூறுக எ-று.

(வி-ரை) ஒன்பதுக் கொன்பதைந்தில் வெள்ளிபு மரசனிற்க
இன்பதிக் கினியரோடே இந்துவுங் கூடப்பார்க்க
தன்பதிக் கிரணாகஷி தானுமே லாபமாகில்
அன்பதுக் கன்பதாகி மவன்பிதா இருப்பநூறாய்.

என ஒன்பதுக்கு ஒன்பதாம் ராசியிலும், 5-லும், சுக்கிரன் குரு நிற்க, சந்திரன் சுபகிரகங்களுடன் கூடினாலும் பார்த்தாலும், சூரியன் தன் வீட்டிற்கு 11-ல் நின்றால் அவன் பிதா நூறுவயதுள்ளவன் என்று கேரளத்தில் கூறியபடியால் 5-9-ஆம் ராசியதிபர்கள் சூரியனுடன் கூடி 3-ஆம் ராசியில் இருந்தாலும், 5-9-வது ராசிகளில் சேர்ந்திருக்கும் கிரகத்தையும் ஆராய்வதோடு

அஷ்டமஞ் சரமேயாக வதற்குளோன் சராங்சமேற
விட்டபாக் கியனேபார்க்கி லினியபிதா தேசாந்திரம்.

என அஷ்டமராசி சரராசியாகவும், அவ்வீட்டோன் சரராசி அங்கம்பெற்று அவனை 9-ஆம் வீட்டோன் பார்க்க, அவன் பிதா தேசாந்திரம் செல்வான் என்றும்,

இரவிமுன் னீலன்பின்சேய் இருநான்கில் வெள்ளிபொன்னும்
அரவுமோர் நவத்தோன்கூடி யந்தீலர்க்கே எழில்.
பரவிய சோமன்புந்தி பாம்புக்கு நான்கேயாகில்
மருவுருங் குழவிமுன்னே மாண்டிடு பிதாவுமாமே.

என சூரியன் இருந்த ராசிக்கு முன்னால் சூரியனும், பின்னால் குஜனும், 8-ல் சுக்கிரன் குருவும், 9-ஆம் வீட்டதிபதி ராகு-கேதுவுடன் கூடி சனி நின்றராசிக்கு 7-லும், சந்திரனும்-புதனும் ராகு கேதுக்களுக்கு நான்கிலும் இருக்க, அந்த ஜாதகன் பிறக்கு முன்னே இறந்துபோவான் என்றும் இன்னும் பற்பலவிதமாகவும் ஆராய்ந்து பலன் சொல்லுக. (793)

உடன்சன்மலக்கினத்துக் கொன்பதிலைந்திற்பத்தில்
முடவன்சேயிரவியிந்த மூவரிலொருவர்நிற்கத்
திடமுறுபிதாவுக்கீனஞ் சன்மத்திற்செவ்வாயேழில்
அடல்கதிர்க்கையம்பொன்னூர்க் காண்டுமுன்றிருப்பன்றந்தை.

(இ-ள்) ஜெனன ராசிக்கு 5-9-10 என்னும் ராசிகளில் சூரியன்-குஜன் சனி இம்மூவரில் ஒருவர் நிற்க, அவன் பிதாவுக்கு ஈனம் உண்டாகும். ஜெனனராசியில் நிலமகனாகிய குஜனும், 7-ஆம்ராசியில் சூரியனும் இருக்க துன்பம் உண்டாகும். குரு இருக்க பிதா 3-ஆண்டுகள்வரையில் இருப்பான் என்றும் கூறுவர் எ-று.

(வி-ரை) ஈனம் என்பதை கெண்டம் என்றும் கொள்ளலாம் கெண்டம் செய்யாவிடில் ஈனம் உண்டு. இதனை அப்போதைய திசாபுத்தி அறிந்து கூறுதல் வேண்டும்.

இரவிபு முச்சமாகி கோணரு மாகஷியாக
பரவிய கோணந்தன்னிற் பருமதி யரசனிற்க
அரவுசேய் முடவன்புந்தி யாறெட்டு பனிரெண்டாகில்
திரவிய முடையோனாகி தீர்க்கமாய் இருப்பன்றந்தை.

என்றபடி சூரியன் கோணராசிகளில் உச்சமாகவும், கோணராசிக்குடையோர் ஆகஷியாகவும், அந்த கோணராசிகளிலேயே வளர்பிறைச் சந்திரனும் குருவும் இருக்க, 6-8-12-ஆம் ராசிகளில் இராகு-சனி-புதன்-குஜன் இவர்கள் இருப்பாரேயானால் அந்த ஜாதகன் பிதா திரண்ட செல்வத்துடன் தீர்க்க வயதோடு இருப்பான் என்றும் கேரளத்தில் சொல்லப்பட்டன. ஆதலால் 5-9-10-ஆம் இடம் சூரியனுக்கு ஆகஷியா, உச்சமா, பகை நீச்சமா என்றும், இன்னும் பற்பலவிதமாகவும் ஆராய்ந்து சொல்லவேண்டும்.

கொண்டகதி ரொன்பதிலிருக்க குளிகன்பல ஈன்மூன்றினிற்கிற்
கண்டபிதா வின்வழி சுபர் கர்மியாவன்.

என்ற சாதக சிந்தாமணியின் செய்யுளின்படி 9-ல் சூரியன் நிற்க, குளிகன் மூன்றிலிருக்க, அந்த ஜாதகன் தன் பிதுர்வழியில் சுபகர்மியாவன் என்றும் சொல்லுக. இவ்வாறே ஒவ்வோர் கிரகங்களைக்கொண்டும் பிதுர் பலன் சொல்வது அவசியமாகும். (794)

வேறு

தந்தைபதி யினிற்சவுரி நிற்கச்செவ்வாய்
தானுங்கேந் திரத்துறி லரிட்டந்தைக்
கந்தவனுக் கட்டமத்துஞ் சன்மாதியுடனும்
ஆதவன்செவ் வாய்க்கூடி யணுகிலையர்க்கரிட்டம்

பந்துசன்மத் துக்கைந்தோன் பானிற்பாவர்
பாம்புகேந் திரத்திலுறத் தந்தைக்கீனம்
விந்தமலர் நண்பனுக்கேழ் சனிசேய்நிற்கில்
மேலோர்நோக் கறநிற்கில் வியமொன்பானே.

(இ-ள்) பிதுரு ஸ்தானமென்னும் 9-ஆம்ராசியில் சனிநிற்க, கேந்திரங்களிலொன்றில் குஜனிருக்க, அவன் பிதாவுக்கரிட்டமுண்டாகும், ஜெனன ராசிக்கு அஷ்டம ஸ்தானத்தில் சூரியனும், சூரியனோடு ஜெனன ராசியதிபதியும குஜனும் கூடி இருக்கினும், அவன் தந்தைக் கரிட்டமுண்டாகும். ஜெனனராசிக்கு 5-9-ஆம ராசியில் பாவர்களும், 1-4-7-10-ஆம் இடங்களில் ராகுவும் கூடி இருந்தாலும் அவன் பிதாவுக்கு ஈனமுண்டு. சூரியனுக்கு 7-ஆம் ராசியில் சனி குஜன் நின்றும், சுபர்கள் பார்வையற்று மிருந்தால் அந்த ஜாதகன் ஜெனித்த 9-ஆம் வருடம் பிதா மரிப்பான் எ-று.

(வி-ரை) கேந்திரத்திற் பத்தாம் கிளர்திரிகோணத் தொன்பதாம்
ஆய்ந்தபெல மாம்பெயர்க ளோந்ததிபர்—சேர்ந்திருக்க
பார்க்கஒரு வர்க்கொருவர் பார்யோக காரகராம்
யார்க்கு மரிதா மறி.

என்றபடி கேந்திரமென்றுபேசும் 1-4-7-10 இந்நான்குக்ஷேத்திரங்களிலும் 10-ஆம் இடம் கேந்திரமே முக்கியமெனவும், 3-6-9 என்னும் திரிகோணங்களில் 9-ஆம இடமே மேலானதென்றும், இவ்விரண்டு க்ஷேத்திராதிபர்களும் ஒன்று சேர்நதாலும பார்த்தாலும், யோகத்தைத் தருவாரென்றும், மேற்சொன்ன இருவரும் அவவாறிருப்பது அரிதென்றும் சந்திராபரணத்தில் கூறியபடி 9-10-ஆம் இடங்களில் உள்ளவர்கள் சேர்ந்தாலும் பார்த்தாலும் நல்ல யோகமே உண்டாகும் 1-4-7-10-ஆம் இடங்களில் ராகு இருக்க, அவனபிதாவுக்கு ஈனமுண்டு என்றனர். மேற்சொன்ன கேந்திரங்களில் இருந்து ஒன்பதாம் வீடு தனுசு மீனமாகவும், அவ்வீட்டோனை குரு பலமபெறறும், பிதுருகாரகன் புதன்-சுக்கிரனோடும் இருக்க, மேற்சொன்ன தோஷம்நீங்கும் என்றும் சோதிடம் சொல்வோர் பற்பலவிதமாகவும் பிரிதது சொல்லவேண்டும். (795)

வேறு

ஒன்பானிடத்திற்சனியைந்தி லிரவியுடனேயுறுபாம்பு
அன்பாயிருக்கத்தந்தைதனக் கரிட்டமைந்தாமாதிபதி
இன்பமுச்சமாயிருக்க யில்லையரிட்டம்பிணிகாட்டும்
பொன்பார்த்தருளச்சனியிரவி நின்றூர்பிணிபோங்கண்டீரே.

(இ-ள்) தந்தை ஸ்தானமாகிய ஒன்பதாம் ராசியில் சனியும், 5-ஆம் இடத்தில் பிதுர்ககாரகனாகிய சூரியனும், அவனோடு ராகு கேதுக்களில் ஒருவரும் இருந்தால் அவன் பிதாவுக்கு கெண்டம் உண்டாகும். மேற்சொன்ன கிரகங்கள மேறசொன்னராசிகளிலேயே உச்சமபெற்றால் கெண்டம நீஙகும எனறும், பிணி முதலியவைகளை கொடுக்கும் சூரியனோடு சனிசேர்ந்து எந்தராசியில் இருந்தாலும் அவனை குரு பார்க்க மேற்சொல்லிய பிணியும் நீஙகும.

(வி-ரை) அருந்து பாக்கியத்துளோனும் அருக்கனும் சரராசிக்குள்
இருந்துதான் சரரங்கிசத்தி லேறிடிற் பிதூர்தேசாந்திரம்.

என்பதால் சூரியனும், பாக்கியாதியான ஒன்பதாம் வீட்டோனும் சரராசியி லிருந்து சரராசி நாதர்களின் அங்கிசம்பெற, அவன் பிதா தேசாந்திரங்களி லேயே வாசஞ்செய்வானென்று சாதக சிந்தாமணியில் சொல்லியபடியும்,

ஒன்பானுக் குடையவன்போய் பாவருட னூரத்திய
ரொன்மூன் றுறவல்லா விடினென் றிலாத
ஒன்பான்பத் தினிற்பாப ருறத்தாதை மரிப்பானு
மொன்பானுஞ் செழுவணியி லொளிபழுத்த குழையாளே.

என ஒன்பதாம் வீட்டோன் பாவருடன் சேர்ந்தாலும், மற்றுமுள்ள பாவர் கள் 3 9-ஆம் ராசியில் இல்லாதிருக்க, 9 அல்லது 10-ஆம் வருஷம் அவன் தந்தை இறந்துபோவான் என்று சாதக சிந்தாமணியில் சொல்லியபடியால், மேலெழுதிய 3-9-ஆம் ராசியில் பாவர்களிருந்தும் மேற்சொன்னபடியே கிரகம் இருக்கினும் தந்தைக்கு தோஷமில்லை என்பது கருத்தாகையால், கிரக பலத்தைத் தெரிந்து இன்னும் பலவிதமாக ஆராய்ந்தறிந்தே மரிப் பான் அல்லது மரிக்கான் என்பதை புணர்க. (796)

**கண்டசனியுங்கதிரோனுங் கதித்தவொன்பானுதிபனும்**
**அண்டியொருவீட்டினிலிருக்க வையர்க்கரிட்டமவரைப்பொன்**
**மண்டிநோக்கவைந்தாதி மனையோனுச்சமாயிருக்க**
**மிண்டாய்ச்சிலநாளிருந்தரிட்டம் மேவுவிடம்போல்விழிமானே.**

(இ-ள்) மகரம்-கும்பத்திற்கு ஆக்ஷிநாதனாகிய சனியோடு சூரியனும், பிதுரு ஸ்தானாதிபதியாகிய 9-ஆம் வீட்டோனும் ஆக மூவருங்கூடி ஓர் ராசியில் இருக்க, அவன் பிதா மரணமடைவான். மேற்சொல்லிய மூவரை யும் குரு பார்க்க, ஐந்தாம் வீட்டோன் உச்சம்பெற அவன் பிதா சிலநாள் இருந்து (அதாவது) கிரகத்திற்கு ஏற்றவாறு ஆயுளுடன் இருந்து மரிப் பான் எ-று.

(வி-ரை) தருமொன்பதி லரவெய்திட தானாதிபன் பாவரால்
வருமாதவன் பிதுர்த்தானத்தை மருவப்பாவருடனே
இருமூன்றினில் மும்மூன்றினி லீராறினிற் றந்தை
அருளாயிசு ஈசியும்சொல வமைத்தா ரறிவுள்ளார்.

என்ற சந்திராபரணச் செய்புளின்படி 9-ஆம் ராசியில் ராகுவும், 9-ஆம் வீட்டோன் பாவகிரகங்களால் சூழப்பட்டு அல்லது புதன் பாவகிரகங்க ளுடன் கூடி, பிதுரு ஸ்தானத்திலிருந்தாலும், அவன் ஜெனித்த 6-9-12-ம் ஆண்டுகளில் அவன் தந்தை இறந்துபோவான் எனறபடி சனி-சூரியன் 9-ம் வீட்டோன் இம்மூவரும் கூடிய ஜாதகங்களை பின்வரும் 802-ஆம் செய்யு ளின்படி ஸ்புடம்செய்து சூரியன் அஷ்டவர்க்கையும் சோதித்துப் பலன் சொல்லவேண்டுவது அவசியம். (797)

**மானேபிதுர்காரகனென்பான் மனையாதிபனுஞ்சனியாகித்**
**தானேபாவருடன்கூடித் தருமுந்நான்கெட்டாறிலுறத்**
**தேனேபிதுர்ஸ்தானந்தன்னிற் செம்பாம்பிருக்கவமமனையில்**
**ஊனேசெறியுஞ்சனிவருநா ளுடனேதந்தைக்குறுமரிட்டம்.**

(இ-ள்) பிதுர்ஸ்தானாதிபதி என்னும் 9-ஆம் வீட்டதிபதி சனியாக இருந்து, பிதுரு காரகனாகிய சூரியனுடன் சனி சேர்ந்து 3-6-8-12-ஆம் ஸ்தானங்களில் இருக்க, பிதுருஸ்தானத்தில் கேது இருக்க, அந்தஜாதகன் ஜெனித்த வீட்டில் பலவித கஷ்டம் உண்டாகி சனிதிசை வரும்போது அவன் பிதாவுக்கு கெண்டம் உண்டாகும் எ-று. (798)

உறுஞ்சன்மத்திற்செவ்வாயு மொன்பானிடத்திற்சனியிருக்கப்
பெறுந்தந்தைக்குவருமரிட்டம் பிதாத்தானாதிபதியுடனே
குறுஞ்செவ்வாயுஞ்சனிமூவர் கூடியிருக்கநல்லோர்கள்
அறிந்தெங்கேதானிருந்தாலு மையர்க்கரிட்டமென்பாரே.

(இ-ள்) ஜெனனராசியில் நிலமகனென்னும் செவ்வாயும் பிதுருஸ்தானமென்கிற 9-ஆம் ராசியில் சனியும் நின்றால் அவன் பிதாவுக்கு கெண்டம் உண்டு. பிதுரு ஸ்தானாதிபதியோடு சனி குஜனும்கூடி இருக்க, சுபகிரகங்கள் எந்த ராசியில் இருந்தாலும் அவன் பிதாவுககு அரிட்டமுண்டு எ-று.

(வி-ரை) திகழ்பாக் கியத்திற் சேயிருக்கிற் செல்வநாசம் பிதுர்தோஷம்
தகமையிலாதான் றூர்க்கர்மி சகலநிந்தைகளை யுடையான்
சுகமாந்துணைவர் தங்களுக்குதோஷம் பிதுர்க்குங்குருவுக்கும்.

என்றபடி 9-ல் குஜனிருக்க பிதுர்ச்செல்வநாசமும், குருதோஷமும், அறிவில்லாதவனும், தூர்க்கருமியும், சகலவிதமான நிந்தைகளை யுடையவனும், சகோதரங்களுக்கு துன்பமும் உண்டாகுமென்று சாதக சிந்தாமணியில் சொல்லியபடியும், இதனை வீமேஸ்வர உள்ளமுடையானில் தருமயீனனும் சுகம் குறைந்தவனுமாவான் என்றார். இத்தோஷமானது பிதுருஸ்தானாதிபதி பலம்பெற்று பிதுர்ஸ்தானத்தை உச்சம்பெற்ற சுபர்களால் பார்க்கப்பட்டு சூரியன் அஷ்டவர்க்கப்படி பிதாவுக்கு பிந்து குறையாதிருந்தால் நீங்குமேயொழிய மற்றபடி நீங்காதென்றும் கூறுக. (799)

என்பார்சன்மந்தனிற்காரி யிரவிசசிமூவருமிருக்கத்
தன்பாரைந்திற்குசனிருக்கத் தந்தைக்கரிட்டந்தான்பின்னும்
அன்பார்குசன்செம்பாம்பிரவி யாகமூவருடன்கூடிப்
பின்பாராமல்மூன்றாண்டிற் பிதாவுக்கரிட்டம்பேசுவரே.

(இ-ள்) ஜெனனராசி எந்த ராசியானாலும் அந்த ராசியில் சனியும் அவனோடு சூரியன்-சந்திரன் இம்மூவரும் சகிதம் பெற்றிருக்க, 5-ம்ராசியில் குஜன் இருக்க, அவன் பிதாவுககு அரிட்டம் செய்யும். குஜனோடு ராகு-சூரியன் இம்மூவரும் கூடியிருகக, ஜாதகன் ஜெனித்த 3 ஆம் வருஷத்தில் அவன் பிதாவுக்கு அரிட்டமெனறும கூறுவார் எ-று.

(வி-ரை) ஜெனன லக்கினம் துலாமாகவும், அவ்வீட்டில் சனி உச்சம் பெற்று சூரியன் துலாராசியிலன்றி சிங்கராசியில் ஆக்ஷிபெற, புதன் தன் சுயவீட்டில் ஆக்ஷிபெற, குருபார்த்தால் ஆயுள் தீர்க்கமென்று சோதிடவல்லோர் கூறுவார். (800)

பேசுமெட்டொன்பதுபத்திற் பெரியபாவருறவொன்பான்
நேசமெட்டாறெருடுவியத்தி னிற்கப்பலன்கணீங்கியுற

வோரைசயொன்பதிற்குசனே யுலவுங்கதிரோனுற்றிடினும்
வீசுமொன்பதினிற்பாவர் மேவபிதாமெய்யுயிர்பிரியும்.

(இ-ள்) அஷ்டமம் பாக்கியம்-கரும்ம் என்று சொல்லும் ஜெனன ராசிக்கு 8-9-10 இவ்விடங்களில் கொடியபாவிகள் இருக்க, 9-ம்வீட்டோன் 6-8-12-ஆம் ராசியிலிருந்து பலமற்றிருக்க, 9-ஆம் ராசியில் குஜன் சூரியன் இருந்தாலும், அல்லது மற்றுமுள்ள சனி ராகு-கேது முதலிய கொடியவர்கள் இருந்தாலும், அவன் பிதாவினுடைய உயிர் பிரிந்துபோம் எ-று.

(வி-ரை) பாரப்பா பாக்கியனும் ஆரேன்வீட்டில்
பகருகின்ற சனியோடு வெய்யோன்மேவ
கூறப்பா குழவிக்கு பாக்யமுண்டு
குவலயத்தில் பிரசங்கி செய்யுளுள்ளோன்
வீரப்பா மற்றவிடங் தனிலேகிற்க
வினோதனும் கூத்தாடி வேஷக்காரன்
சீரப்பா போகருட கடாக்ஷத்தாலே
செயலறிந்து புவியோர்க்குச் செப்புவாயே.

என சூரியன் சனி இவ்விருவரும் 9-ஆம் ராசியிலிருந்தால் மேற்செய்யுளில் சொல்லியபடி பிதுர்தோஷமே ஆயினும் அந்த ஜாதகனுக்கு அநேக பாக்கியமுண்டு. இப்பூமியில் பிரசங்கம்செய்யும் வித்துவானும், விநோதநாடகம் நடிப்பவனும், இவனுக்கு கடவுள் கிருபையால் எல்லா நன்மையும் உண்டு என போகமுனிவர் கூறியபடி நன்மை தீமை அறிந்து கூறுக. (801)

வேறு

பிரியமுட னொன்பதா மிடத்ததிபன்புடத்தில்
பெருங்குளிகன் றனைவாங்கிப் பெற்றிடுராசியிலே
நெறிபயிலுந் தமனியனூர் தாமருவுங்காலம்
கிரியாண மந்தவரு டத்தில்வருமவர்தம்
குறிகாணும் படிவெய்யோன் புடத்தைவைத்துக்கொண்டு
குலவுமொன்ப தாமிடத்தோன் புடமதனைவாங்கிச்
செறியுமந்த ராசியே மாதங்களாகத்
தெளிந்துபிதா கிரியாணந் தனையருளுவீரே.

(இ-ள்) ஒன்பதாம் ராசியதிபன் ஸ்புடத்தில் குளிகனை வாங்கிக்கண்ட ராசியில் சனி தினசரி கோசாரப்படி இரண்டரை வருஷகாலம் பிரவேசிக்கும்போது பிதாவுக்கு கிரியாணகுறிகாணும்வருடமாம். சூரியன்ஸ்புடத்தை வைத்துக்கொண்டு, 9 ஆம்ராசிநாதன் ஸ்புடத்தை வாங்கிக்கண்ட தொகையை மாதமாகக் கணக்கிட்டு அம்மாதத்தில் பிதா மரணம் அடைவார் என்று சொல்வாயாக எ-று. (802)

வேறு

அருளுந்தந்தைகாரகனை யறிந்தேபலன்களுரைசெய்ய
பரிதிக்கிருபுறமாரேனும் பாவரிருக்கப்பாவர்களும்
துரிதாய்நோக்கமிருந்ததனுற் சொல்லுங்குழவிகருப்பத்தில்
தெரியவிருக்கப்பிதாவரிட்டஞ் செப்புங்கணிதவல்லோரே.

(இ-ள்) பிதுருகாரகனாகிய சூரியனைக்கொண்டு பலன் சொல்லவேண்டுவது எப்படியெனில், சூரியனுக்கு இருபுறத்திலும் பாவகிரகங்கள் சேர்ந்து பலம்பெற்றுப்பார்க்க, அந்தஜாதகன் கெர்ப்பத்தி லிருக்கும்போதே அவன் பிதா இறந்துபோவான் என்று கணிதசாஸ்திரவல்லோர் கூறுவர் எ-று. ()

## பாக்கிய பலன்

### வேறு

உறுமொன்ப தாமிடத்தோன் வெகுபலவானாகி
உற்றவிடத் ததிபதிகேந் திரத்திற்பாக்கியவான்
பெறுந்தந்தை தனிலதிகன் கீர்த்திமானரசன்
பிரியமுறச் சஞ்சரிப்பன் பிரதாபசாலி
அறிவுறுபாக் கியாதிபிதுர் காரகனைக்கூடி
ஆறிலுறப் பிதாவுரைகேட் டருள்வனென்பானதிபன்
பிரியாம லிருந்தநவாங் கிசத்தாதிபதியைப்
பிதுர்கார கன்பார்க்க குருபத்திப்பிரியன்.

(இ-ள்) ஜெனனராசிக்கு 9-ஆம்வீட்டோன் மேன்மையான பலம்பெற்றும், டை ராசிக்குடையோன் கேந்திரத்திலும் இருக்க, அந்த ஜாதகன் மிகுந்த பாக்கியவானாவான். அன்றியும், அவன் தந்தையைவிட மேலான அந்தஸ்தும் கீர்த்தியும் உடையவனாய் அரசர்களெல்லாம் இவனைப்பார்த்து சந்தோஷிக்கத் தக்கவிதமாய் நடந்துகொள்ளுபவனும், பிரதாபசாலியாகவும் இருப்பான். பாக்கியாதி என்னும் 9-ஆம ராசியதிபதி பிதுர்காரகன் என்னும் சூரியனைக்கூடி ரோகமென்னும் 6-ஆம் ராசியிலிருக்க, பிதாவின் சொல்லைத் தவறான். 9-ஆம்வீட்டோன் இருந்த அம்சாதிபதியை சூரியன் பார்ப்பானாகில் அந்த ஜாதகன் தன் குருமுதலிய மேலானவர்களின்மீது பக்தி விசுவாசத்தோடு இருப்பான் எ-று.

(வி-ரை) 9-ஆம் வீட்டோனைப்பற்றிய பலனையே மேலே சொல்லினராயினும், நின்ன கிரகமென்று குறிப்பிடவில்லை. 9-ஆம் வீட்டோன் பலம்பெற்றும், அவன் நின்ற ராசிநாதன் கேந்திரத்திலும் இருக்க, அந்த ஜாதகன் தன் தந்தையைவிட மேலானவனென்று சொல்லினா.

பாரென்று சொன்னபோது பாக்கிய ஸ்தானந்தன்னில்
சாரென்று குருவினோடே சந்திரன் பகைத்துநின்றால்
வாரென்று கேட்டபேர்க்கு மாமனார் வீட்டிற்சேர்வன்
கூறென்று முனிவர்சொன்ன குறிதப்பா தென்றுகூறே.

என 9-ஆம் இடமென்னும் பாக்கியஸ்தானத்தில் குருவும் சந்திரனும் பகைத்து நின்றால், அந்த ஜாதகன் தன் மாமனார்வீடு போய்ச்சேர்வான் என்றும், இவை தப்பாதென்றும் கூறியதால் 9-ஆம் ராசியில் நின்ற கிரகம் முன் சொன்னபடி பலம் பெற்றிருந்தால் பிதாவினால் அதிக செல்வாக்கு உடையவன் என்றும், பகை முதலியவைகளால் பலமிழந்திருந்தால் அதற்குத்தக்க பலனும் சொல்லுக. (804)

பிரியமுடன் பிறைக்கைந்தாம் வீடுசரமாகப்
பெருகியலக் கினத்துக்கைந் தாம்வீடுசரமாய்
நிறையபூ ரணமான வயிஸ்வரியனென்பர்
நீள்சரமுந் திரமாகி னிகழ்த்துபலன்பாதி
அருமைபெருஞ் சரத்துபய மாகிற்காற்பங்காம்
அயிஸ்வரிய மெனப்பகர்வ ரம்புலிக்கஞ்சானக்
குருமனைகண் முதற்கொண்டு லக்கினத்துக்கைந்தைக்
குணமுடனே கண்டுபலன் கூறிடவேவேண்டும்.

(இ-ள்) சந்தோஷத்தைத் தரானின்ற சந்திரன் நின்ற ராசிக்கு 5-ஆம் வீடும், ஜெனனராசிக்கு 5-ம்ராசியும் சரராசியாக இருந்தால் அந்தஜாதகன் பூரண ஐஸ்வரியனவான். மேற்சொன்ன இரண்டு க்ஷேத்திரமும் சரம் ஸ்திரமாக இருக்கில் மேற்சொன்ன பலனில் அரைபலன் உண்டு. சரமும் உபயமுமாக இருக்கில் கால் ஐஸ்வரியவான் என்றும், சந்திரன் நின்ற ராசிக்கு 5-ஆம் ராசியையும், ஜெனனராசிக்கு 5-ஆம் ராசியைக் கொண்டே அவன் ஐஸ்வரியத்தையும் யோகத்தையும் கூறவேண்டும் எ-று.

(வி-ரை) மேற்சொன்னபடியே லக்கினத்திற்கு 5-ஆம் ராசியும், சந்திரனின்ற ராசிக்கு 5-ஆம் ராசியும் கொண்டு சொல்வதோடு அவ்வீட்டிற்கு உடையோர் இருந்த நக்ஷத்திரத்தைக்கொண்டும் சொல்லவேண்டுவது அவசியம்.

உத்திர மிரேவதிக்கு ளுயர்வெள்ளி இருக்குமேனும்
சித்தியாம் விசாகநல்லுத் திராடத்திற் குருநின்றாலும்
புத்திசேர் பூராடத்தில் புதன்செவ்வா யிருக்குமேனும்
மத்திபம் பூரட்டாதி மால்கேட்டை ரவிக்குசெல்வம்.

என உத்திரம்-ரேவதி இந்த நக்ஷத்திரத்தில் சுக்கிரன் இருக்க நன்மையும் சித்தியும் உண்டு. விசாகம் உத்திராடத்தில் குரு நின்றாலும், பூராடத்தில் புதன் செவ்வாய் நிற்க மத்திய பலனுகும். பூரட்டாதியில் புதனும், கேட்டையில் சூரியனும் இருக்க, செல்வவான் ஆகுவனென்று சாதகசிந்தாமணியில் சொல்லியபடியும் ஆராய்ந்து கூறுக. (805)

வேண்டியதோ ரொன்பதா மதிபதியுங்குருவும்
விரும்பியகேந் திரத்திரிகோ ணங்களிலேமேவில்
ஆண்டகையே பாக்கியவா னிவரிருவருடனும்
அன்புடனென் பானிடத்தி லனுகினுமிவர்மூவர்
பூண்டுவரு மகாதிசையி லாபாதிபுசிப்பிலேதான்
பூர்ணபாக் கியஞ்சேரு மேழாமதிபனைத்
தீண்டியலா பாதியுற வாய்க்கூடினல்லோர்
செறியுமனை யுறிலவர்க டிசையிற்பாக்கியமே.

(இ-ள்) யாவரும் கோரப்பட்ட செல்வத்தை தரவேண்டிய ஒன்பதாம் வீட்டதிபதியும் குருவும் கூடி, கேந்திரம் திரிகோணம் இவ்விராசிகளில் இருக்க, தன் வாழ்நாள் வரையில் பூரண செல்வவந்தனுகவே இருப்பான்.

மேற்சொல்லிய மூவரும்சேர்ந்து 9-ஆம் வீட்டிலேயே யிருக்கில், இம்மூவர்களின் திசைபொசிப்பில், அதாவது கேந்திரம் அல்லது திரிகோணாதிபதி பாக்கியாதிபதி இம்மூவர்களின் திசையில் 11-ஆம் வீட்டோன் புத்தியில் அந்த ஜாதகனுக்கு பூரண ஐஸ்வரியம் சேரும். 7-ஆம் ராசிநாதனை 11-ஆம் ராசிநாதன் உறவாகக்கூடி சுபர்களின் க்ஷேத்திரங்களில் இருக்க, அவர்கள் திசையில் பலனையும் பாக்கியத்தையும் கொடுப்பார் எ-று.

(வி-ரை) பாக்கியமடையுங் காலங்கள் மேற்சொன்னபடியே திசையைக்குறித்துச் சொல்லவேண்டுவதோடு வயதையும் குறித்துச் சொல்ல வேண்டுவது அவசியம்.

எப்படியெனில்,

*சாமிதான் சுபனேயாகி சதிருடன் சுபரைக்கூடித்*
*தோமிவர் கோத்தமத்திற் சொலுமுச்ச மாக்ஷிற்கிற்*
*பூமியும் கேந்திரமேற பொன்னவ னுதயமிற்கிற்*
*சேமிய ஜனனத்தொட்டே சிறந்தபாக் கியவானாவான்.*

என ஜெனனராசியதிபதி சுபனாகவும் அவன் சுபர்களோடும், சுபவர்க்கோத்தமத்திலும் உச்சம் ஆக்ஷியாய் நிற்க, குரு ஜெனனராசியிலும், புதன் கேந்திரத்திலுமிருந்தால் அவன் தனது ஜெனனுதி வயது முதற்கொண்டே பாக்கியவானாகுவான் என்று சாதக சிந்தாமணியில் கூறியபடி ஆராய்ந்து இன்னின்ன காலங்களில் உண்டாகுமென்று சொல்லுக. (806)

**மேயலா பாதியுமே ழாதியுமித்துருவாய்**
**மேலோர்கள் வீட்டிலுறச் சன்மாதிபதியும்**
**ஆயுமிவர் மூவருமொன் றுய்க்கூடியிருக்கில்**
**ஐஸ்வரியஞ் சீவபரியந்த மட்டுண்டென்னும்**
**நேயமுட னென்பதா மிடத்ததிபன்சாதி**
**நிசமறிந்தே யவர்மரபின் னிருபர்களினாலே**
**தூயசவு பாக்கியங்கள் சேருமென்றேநல்ல**
**சோதிடநூ லினையுணர்ந்தோர் சொல்லுவர்கண்டீரே.**

(இ-ள்) லாபஸ்தானாதிபதி என்னும் 11-ஆம் வீட்டோனும் 7-ஆம் வீட்டிற்குடையவனும் மித்துருவாகி, மேன்மைபெற்ற சுபகோட்களின் ராசிகளில் அமர்ந்திருக்க, ஜெனன ராசியதிபதியும் மேற்சொன்ன இருவருடனும் சேர்ந்து இருக்கில் அந்த ஜாதகனுக்கு தன் ஜீவபரியந்தம் ஐஸ்வரியம் உண்டென்று கூறுவர் 9-ஆம்வீட்டிற்குடையவன் யாரெனவறிந்து அந்தந்த * கிரகங்களின் ஜாதி அறிந்து, அந்தந்த மரபினராலும் செல்வமுள்ளவர்களாலும் அந்த ஜாதகனுக்குச் சகல சௌக்கிய பாக்கிய முண்டாகுமென்று சோதிடநூலறிந்தோர் கூறுவர் எ-று.

* கிரக ஜாதிகளாவன

| | |
|---|---|
| குரு-சுக்கிரன் | பிராமணன் |
| சூரியன்-செவ்வாய் | க்ஷத்திரியன் |
| புதன்-சந்திரன் | வைசியன் |
| இராகு-கேது-சனி | சூத்திரன் |

சிலர் சனி - இராகு - கேது இவர்களை நீச்சஜாதி என்றும் கூறுவர். இவ்வாறே கிரகங்கள் இருக்கும் அளவறிந்து இன்ன ஜாதியாரால் பாக்யம் சேருமென்று கூறுக. (807)

கண்டிடுலா பாதிபதி பாக்கியாதிபனும்
களத்திரத்தா னத்திருக்கப் பாக்கியலாபத்தான்
மிண்டியதோர் கேந்திரமா யுச்சவீடாக
மேவியவே ழாமதிபன் சுபக்கிரகமாகி
மண்டியபாக் கியலாபத் தானத்திலிருக்க
வரும்பலபாக் கியமவன்றன் மனைவிக்குச்சுகமாம்
திண்டிறலாங் தோணியதா மிவர்களொடுஞ்சான்றோர்
செறியும்பா வாதியற்குச் செல்வமிகச்சேரும்.

(இ-ள்) லாபாதிபதி என்னும் 11-ஆம் வீட்டோனும் பாக்கியாதி என்னும் 9-ஆம் வீட்டோனும், களத்திரஸ்தானமென்னும் 7-ஆம்ராசியிலிருக்க அவனுக்கு லாபமுண்டு மேற்சொன்ன 7-ஆம் இடமானது கேந்திரம் உச்ச வீடாகவும், 7-ஆம் வீட்டிற்குடையோன் சுபகோட்களில் ஒருவனாகவும் இருந்து பாக்கிய ஸ்தானம்பெற, அந்த ஜாதகனுக்கு பற்பலவிதமான பாக்கியம் உண்டாவதோடு அவன் மனைவிக்கும் சுகம் உண்டு. பல்லக்குமுதலியவைகளும், ஓடம் தோணி முதலியவைகளும் உண்டு. இவர்களோடு பாவ கிரகங்கள் கூடியிருக்கினும் அளவிறந்த செல்வம் சேரும் எ-று.

(வி-ரை) ஒன்பதுபத் துக்குடையா றெட்டுபதி ஞென்றதிபர்
இன்பயோ கங்களில்லை என்றிடினும்—பின்னர்திரி
கோணேசர் சம்மந்தங் கூடிலும்யோ கங்களுண்டா
மாணேறு யோகமுடை யோர்க்கு.

என்றபடி 9-10-ஆம் ராசிக்குடையோர் 6-8-11-ஆம் ராசிநாதர்களாகில் அவர்களுக்கு யோகமில்லை என்றாலும், அவர்களோடு திரிகோணராசிக்கு உடையோர் கூடினால் அவனுக்கு யோகமுண்டென்றும் சொல்லுவாயாக வென்று சந்திரகாவியத்தில் சொல்லியபடி 9-7-11-க்குடையோர் தன்பலம் குறைந்திருந்தாலும், அவர்களோடு சேர்ந்த கிரகம் 5-9-க்குடையவர்களாக இருந்தால் திரண்ட செல்வமும் யோகமுமே அளிப்பார் என்று ஆராய்ந்து கூறுக. (808)

சேருமொன்பா னிடத்திருந்த பாக்கியவாதிபனும்
திறல்குருமூ வருநீச மத்தமனஞ்செறியக்
கூறியபா வியுமாய்ச்சத் துருவீட்டிலிருக்கக்
குலவுவிய மாறெட்டிற் கூடியேநின்றாலும்
நேரும்பாக் கியநட்டம் பாக்கியவாதிபனும்
நிருபனுநின் றிடுவீட்டோ னீசமத்தமனமாய்
பாரினிலிரப் பான்பாக்கி யாதிகுருவுடனே
பாவிகள்கூ டினும்புசிப்பன் பலிகரத்திலெடுத்தே.

(இ-ள்) ஒன்பதாம் வீட்டோனான பாக்கியாதிபதியும், 9-ஆம் ராசியில் நின்ற கிரகமும் குருவும் நீசசம்பெற்று அஸ்தமயமாகியும், கொடிய பாவிக ளுடன் கூடியும், தனக்குச் சத்துரு வீட்டிலும் நிற்க, அந்த ராசி ஜெனன ராசிக்கு 6-8-12-ஆம ராசியாக அந்த ஜாதகனுககு தன பாக்கிய முதலிய செல்வங்களுக்கு நஷ்டமும், பாக்கியாதிபதியும் லக்கினாதிபதியும் நின்ற வீட்டிற்குடையோன் நீசசம் அஸ்தமனம் பெற்று இருக்க, அநத ஜாதகன் இப்பூமியில் இரந்து உண்பவனுவான். பாக்கியாதிபதி குரு இவர்களோடு பாவிகள் இருககில கரபாத்திரத்தால் சம்பாதித்து உண்ணுவான் என்றும் சொல்லுக எ-று.

(வி-ரை) பேசும்ராசி யிடத்ததிபன் பேணிக்கோணத் திருந்திடவே
காசும்பணமும் பூஷணமும் க்ளத்திரபுத்திர சுகமுண்டாம்.

என்றவாக்கியப்படி, லக்கினாதிபதி 5-9 இவ்விடங்களில் இருக்க, அவனுக்கு பொன் பூஷணம், களத்திர புததிர சுகம் இவைகள் உண்டென்றும்,

நல்லவழிற் குஜன்சனியும் நாடியிருக்க சுங்கன்றனைப்
பொல்லாரிருநது நோக்கினுமே போலான்குடும்பர் தனைவிட்டே
இல்லாள்மகவும் நில்லாது வரும்பக்கம் மனைகனிலே
எல்லாம்போகும் களத்திரமும் எமனூருக் கேகுவனே.

என 7-ஆம் ராசியில் குஜன் சனியும், சுக்கிரனைப் பாவகிரகங்கள் பார்க்க, அந்த ஜாதகன் குடும்பததைவிட்டுப் பிரிந்துபோவான். புத்திர களத்திரம் சொல்லாமல் இறந்துபோவார்கள். தன் மனையிலுள்ள பொருளும், மறறு முள்ள எல்லா வஸதுவும் நாசமாய்ப்போகும் என்றும், 6-10-12 இவ்விடங் களில் இராகு சனி-சூரியன் இவர்கள்சேர்நதால் அவனபிதாவின் பெருமை யிழந்து, பாககியமில்லாது எல்லாம் நசித்துப்போமென்றும் மற்றும் வேறு விதமாகவும் பகுத்துச் சொல்வாயாக. (809)

வேறு

எடுத்தபத்தா மதிபதியேழிறை
கடுத்தமித்திர ராகிப்பலனுடன்
கொடுத்தவுத்தமர் வீட்டினிற்சூழ்ந்திடப்
படைத்தபாரியி னுல்வரும்பாக்கியம்.

(இ-ள்) 10-ஆம் ராசியதிபனுக்கும் 7-ஆம் ராசியதிபனுக்கும் மித்துரு வாகி பலம்பெறறு, பலனைத தரத்தகக உததமர் வீடுகளில் இருக்க, அந்த ஜாதகனுககு தன் மனைவியால் மேலான செல்வம் புகழ் கீர்ததி உண்டாகு மென்று சாஸதிரவல்லோர் கூறுவர் எ-று.

(வி-ரை) இவ்வாறே பத்தாம் வீட்டோனுடன் வந்த கிரகம் சேர்ந் தாலும், அவர்கள மித்துருவாகவும் பலம் பெற்றும இருப்பார்களேயானால் அவர்கள எநத ஸ்தானததிறகு உடையவாகளென அறிந்து அவர்களால் செல்வம உண்டென்றுங் கொள்க. (810)

வேறு

பாக்கியஞ்சேர் வகைபிருகு மதியரசன்கூடிப்
  பத்தாகு மிடத்திருக்கும் பலன்றனவானவன்
தேக்கியசத் தியவசனன் கல்விசெறிநிபுணன்
  திரராஜர் வெகுமானஞ் செய்யமகிழ்ந்திருப்பன்
தாக்கியபொன் சனிபுந்தி மதிசெவ்வாயைவர்
  தானொருவீட் டினிலிருக்கத் தனவானுமாகி
ஊக்கமுறு முடியரசர் சன்மானஞ்செய்ய
  உலகில்வெகு பாக்கியமு முண்டாகுங்கண்டீர்.

(இ-ள்) ஒவ்வொருவருக்கும் பாக்கியம் சேரும் வகை விபரங்களை ஆராயவது எப்படியெனில், சுக்கிரன் - குரு - சந்திரன் இம்மூவரும் கூடி ஜனனராசிக்கு 10-ஆம் ராசியில் இருக்க, அதன்பலன் தனவானாக இருப்பான். மேலும் சத்திய வசனமுடையவனும், கல்வி நிறைந்த நிபுணனும், மேன்மையைப் படைத்த இராஜாக்களால் சன்மானம் செய்யவும், அதனால் சந்தோஷத்தோடு இருப்பான். குருவோடு சனி-புதன்-சந்திரன்-குஜன் இவர்கள் ஐவரும் ஓர் வீட்டில் இருக்க, அந்த ஜாதகன் தனவந்தனாவதோடு ஊக்கத்துடனும், முடிகளை அணிந்திரானின்ற இராஜாக்களால் சன்மானமும், இவ்வுலகில் அநேக பாக்கியத்தோடும் வாழ்ந்திருப்பான் எ-று. (811)

வேறு

கண்டபத்தாமாதிபதி கருதுமுச்சர்வீட்டிலிருந்
தண்டிப்பத்தாமிடம்பார்க்கி லவனுக்குண்டாம்பூமிசெல்வம்
மிண்டிநீசர்சத்துருக்கள் வீட்டிலிருந்தேமிகநோக்க
அண்டுந்தூரதேசத்து அன்னியராலுமயிஸ்வரியம்.

(இ-ள்) கருமஸ்தானாதி என்னும் 10-ஆம் வீட்டதிபதி உச்சவீட்டிலேயே இருந்து தன் சுயவீடான 10-ஆம் ராசியைப்பார்க்கில் அந்த ஜாதகனுக்குத் தன பூமியிலேயே நிறைந்த செல்வம் உண்டு. நீச்சம் சத்துரு முதலிய க்ஷேத்திரங்களில் இருந்து மேற்சொல்லிய 10-ஆம் ராசியைப் பார்க்க, தூரதேசத்தில் இருக்கும் அன்னியஜனங்களால் ஐஸ்வரியம் உண்டென்றும் சொல்வாய் எ-று.

(வி-ரை) 10-ஆம் வீட்டில் உச்சகிரகம் நிற்கும் பலன் விபரங்களை அடுத்த 10-ஆம் பாவகத்தில் காணலாம். (812)

ஒன்பதாம் பாவகம் முற்றிற்று.

# பத்தாம் பாவகம்



[பத்தாம் பாவகத்தைக் குறித்து விசேஷமாய் அவரவர்கள் செய்யும் தொழிலைக்குறித்தும், யோகத்தைக் குறித்தும், அந்தஜாதகனுடைய யோக பாகங்களைக் குறித்தும், செய்கை முதலியவைகளைக் குறித்தும் யோசிக்கவேண்டிய இடமென முன் கூறிய பொதுப்பாவகச்செய்யுளில் கூறியுள்ளார். இதையே கர்மம் என்றும் கூறுவர். ஆகையால் கன்ம பலனைக் குறித்துப் பேசுவார்.]

## கன்ம பலன்

பத்தாமிடத்திலட்டமத்தோன் பாவருடனேகூடிநிற்கப்
பத்தாமாதிபலம்பெறவே பாவர்பார்க்கத்துர்க்கன்மம்
பத்தாமதிபன்பலவானுய்ச் சுபக்கோளுடனும்பரிந்தேழில்
ஒத்தநான்கிற்சன்மத்தி லுறினற்கருமமு ளனுவன்.

(இ-ள்) அஷ்டமாதி என்னும் 8 ஆம் வீட்டோன் பாவகிரகங்களுடன் கூடி 10-ஆம் இடமென்னும் கன்மஸ்தானத்தில் இருக்க, 10-ஆம் ராசியதிபதி பலம்பெற்று பாவகிரகங்களால் பார்க்கப்பட்டால் துர்க்கருமங்களையே செய்வான். 10-ஆம் வீட்டோன் பலம்பெற்றும் சுபகோட்களுடன் சகிதம் பெற்றும், 7-ஆம் இடமென்னும் சப்தம கேந்திரம்பெற நற்செயல்களையே செய்வான் எ-று

(வி-ரை) அஷ்டமாதிபதி 10-ஆம் ராசியில் இருக்க, துர்க்கருமம்செய்வான் என்றனர் துர்க்கருமம் என்றால் என்ன என்பதை ஆராயுமிடத்து

சாதக சிந்தாமணியின் 1507-ஆம் செய்யுளில்,

அஷ்டமா திபனேபத்தி லன்புட னிருப்பானுகில்
இஷ்டமாம் பிதுர்செல்வத்தை யெய்துவா னென்னலாகும்.

என்றனர். அதாவது பிதுர் செல்வங்களை நாசம்செய்வான் என்பதாகும். அவ்விதம் பிதுர் செல்வத்தை நாசம் செய்வான் என்பதை, எவ்விதத்தில் நாசம் செய்வானென்பதை அறியவேண்டின், அஷ்டமாதியின் குணமறிந்து ராஜவழக்காலென்றும், ஸ்திரீகளால் என்றும், மற்றும் வேறுவிதங்களால் என்றும் ஆராய்ந்து சொல்லுக. (818)

ஆவன்ஞானிசனிநாலி லமர்ந்தாலந்தச்சனிபத்தில்
மேவிற்றீர்த்தயாத்திரையை விரும்பித்தவமேசெய்திடுவன்
தாவுஞ்சன்மாதிபன்பத்திற் றரிக்கிற்கன்மமுளன்பத்தில்
கோவுங்கன்மகாரகனும் பலமேற்கன்மங்குறைவில்லான்.

(இ-ள்) மகர கும்பத்திற்கு ஆகூஷிநாதனுகிய சனி சுகஸ்தானமாகிய நான்காம்ராசியில் இருக்கின் ஞானியாவான் என்றும், மேற்படி சனி 10 ம் ராசியில் இருந்தால யாத்திரை செய்ய விரும்புவதோடு தவம்செய்யவும் ஆசைப்படுவான். மேற்படி 10-ஆம் ராசியில் ஜனனராசியதிபதி இருக்க

செய்தொழிலை யுடையவனும், மேற்சொன்ன பத்தாம் ராசியில் குருவும் அவ்வீட்டிற்கு உடையோனும் சேர்ந்திருக்கில் எதொரு தொழிலையும் குறைவின்றி புரிவான் எ-று.

(வி-ரை) நான்காம் ராசியில் சனி நிற்கில் ஞானியும், 10-ஆம் ராசியில் நிற்கில் யாத்திரை தவம் உண்டென்றனர்.

பரிவாம்வியத்தில் ராகுநினும் பத்துநாலுஞ் சரமாக
விரிவாய்சனிய னிருந்திடினும் வெள்ளிமதியி னுடன்கூடி
அரியகருமம் வியத்துறினும் மானராகு சனிநாலிற்
செரியவரினுங் குருவியத்திற் செறிந்தேதேசாந் திரமென்பார்.

என 12-ல் ராகுநின்று 10-4 இவ்விராசிகள் சரராசியாக அவ்விடங்களில் சனி நின்று சுக்கிரனோடு சந்திரனும் கூடி 10-12-ஆம் ராசிகளில் இருக்க, சனியும் ராகுவும் நானகாம் இராசியில் நின்றாலும், 12-ல் குரு நின்றாலும், அவன் அந்நிய தேசங்களிலேயே இருப்பனென சாதக சிந்தாமணியில் சொல்லியபடி யாத்திரை என்பதை நன்கு ஆராய்ந்து கூறுக. (814)

**குறைவிலொன்பதாமிடத்திற் கோவும்பலமாய்ச்சுபர்வீட்டில்**
**உறையைச்சுபக்கோள்பார்க்கமதி யுகந்துசலராசியிலிருக்க**
**நிறைந்தகங்காநதிதோய்வன் பின்னும்நிலவுச்சம்பெறவே**
**அறையும்பத்திற்சுங்கனுற தீர்த்தம்பலவுமாடுவனே.**

(இ-ள்) தீமையை விளைவிக்கப்படமாட்டாத 9-ஆம் வீட்டதிபதி பலம் பெற்று நற்கோட்களின் க்ஷேத்திரங்களில்நின்று நற்கோட்களின் திருஷ்டி பெற்றும் சந்திரன் ஜலராசியில் இருக்க, அந்த ஜாதகன் கங்காநதிசென்று தீர்த்தமாடுவன். ஜலராசியில நின்ற சந்திரன் உச்சம்பெற்று இருந்தும், 10-ஆம் ராசியில் சுக்கிரன் இருக்க, மேற்சொன்னதைப்போன்ற பற்பல தீர்த்தங்களாடுவான் எ-று.

(வி-ரை) போந்தகர் மாதி யொன்பதிற் கூடியே
புக்கநல்ல பாக்கியாதியை கூடினும்
மேந்து பொன்குரு தர்மங்க ளால்வரு
மிசையும் கர்மாதி பாக்கிய கேந்திரமுற
வாய்ந்த செல்வம் பிரதாபநற் கீர்த்தியும்
வருத்தமின்றி வருந்தன போகமும்
சார்ந்த சூரியர் சம்மந்தரோ றருக்கு
மன்னரா றனுவுக் கன்பரே.

என 10-ஆம் வீட்டோன் 9-ஆம் ராசியில் பலம்பெற, அதாவது நட்பு-ஆக்ஷி உச்சம்பெற, அல்லது 9-ஆம் ராசிநாதனுடன் கூடி நறக்ஷேத்திரங்களில் இருந்தால் அவனுக்குப் பிரயாசை இல்லாமல் தருமதலத்திலும், குரு தலத்திலும், அர்ச்சனைகள் பிரயாசையின்றி சித்திக்கும். 10-ஆம் வீட்டோன் ஆக்ஷியாய் சுபனும் பிரபலனாகவும் இருக்க, எக்கிய கருமங்களும் தனமும் உண்டு. 10-ஆம் வீட்டோன தனலாப கேந்திரத்தில் பலம்பெற பிரயாசை யின்றி எல்லா லாபமும், ஐஸ்வரியப் பிரதாபமும் உண்டாகும். 10-ஆம் வீட்டோன் விரயஸ்தானத்தில் இருந்தால் அல்லது 10-6-ஆம் வீட்டோன்

பிரபலம் பெற்று நிற்க, அவன் சற்கருமங்களிலேயே தன் பொருளை செல வழிப்பான். 10-ஆம் வீட்டோன் ரவி மதியோடு சிங்கம் கடகம் இவ்விராசியில் இருந்தாலும் பார்த்தாலும் பட்டாபிஷேக மன்னர்களால் ஜீவிப்பான் என்றும் வீமேஸ்வர உள்ளமுடையானில் கூறியபடி 10-ஆம் ராசிநாதன் பலம் பெற்றாலும், அவை யாருடைய ராசியென ஆராய்ந்து அவனவன் கருமங்களைக் கூறுவது நலம். 10-ஆம் ராசியில் ராகு நின்றாலும், 10-ஆம் ராசி மீனமாக அதில் குரு நின்றாலும், அல்லது சந்திரன் இருந்தாலும், அவனுக்கும் கங்கா தீர்த்த முதலிய புண்ணிய ஸ்தானங்கள் கிடைக்கும் என்றும் கூறுவர். இதனை சாதக சிந்தாமணியில் 1440-ஆம் செய்யுளில் காணலாம். (815)

வேறு

ஆடிடும்பத்தா மதிபன்சுபருடன்
கூடிமற்றிரு பாலுற்றகொளற்றவர்
நீடிநிற்க நிரந்தரமன்பொடும்
தேடியேசிவ பூசைகள்செய்வனே.

(இ-ள்) பத்தாம்ராசியாதிபதி சுபகிரகங்களுடன்சேர்ந்தும், அவனுக்கு இருபக்கமும் சேர்ந்திருக்கும் கிரகங்கள் பலம்பெற்றும் இருப்பாரேயாகில் அந்த ஜாதகன் எந்தகாலத்தும் நீங்காத அன்போடு பூஜைகளைப் புரிவான்.

(வி-ரை) 10-ஆம் ராசிநாதன் சுபகிரகங்களுடன் கூடி என்பதை அவனோடு சேர்ந்த கிரகம் யாரென அறிந்து,

இந்து மந்த னிரவி குருபுதன்
வந்து பத்திர மற்றிடங் கூடினும்
உந்து பத்தெட்டுக் குள்ளவர் கூடினும்
மந்தரி லவமா னம்செய் கர்மியே

என சந்திரன்-சனி-சூரியன்-குரு-புதன் இவர்கள் கூடி 10-ஆம் ராசியில் இருந்தாலும், அல்லது 10-ஆம் ராசிக்குள் எந்த ராசியில் ஒன்றுகூடி இருந்தாலும், அவன் மனிதர்களை அவமானம் செய்யும் துர்க்கருமியாவான் என்றும் சாதக சிந்தாமணியில் சொல்லியபடியாம். (816)

செய்யசந்திரன் சன்மந்தனக்குமே
துய்யபத்தா மதிபதிசூழ்ந்திடும்
மெய்யிலங்கிலை சயோன்பலமேபெறில்
பொய்யறச்சுப கன்மம்புரிவனே.

(இ-ள்) கடகத்திற்கு ஆகுதிநாதனாகிய சந்திரன்நின்ற ராசிக்கு 10-ஆம் ராசிக்குடையவன் எவர் அங்கிசையில் இருந்தானோ அந்த அங்கிசாதிபதி பலம்பெற்று நிற்பானேயாகில் அந்த ஜாதகன் பொய்யின்றி நற்கருமங்களையே செய்பவனாவான் எ-று.

(வி-ரை) சந்திரனைக்கொண்டு இன்னும் பலவிதமாகவும் ஆராய்ந்து சொல்லவேண்டும். எப்படியெனில், ஜனன காலங்களில் மேடராசியில் சந்திரன் இருந்து அவனை குஜன்பார்த்தாலும், கன்னியில்நின்ற சந்திரனை சூரியன் பார்த்தாலும், மிதுனத்தில் நின்ற சந்திரனை சூரியன்பார்த்தாலும்,

ரிஷபம்-கடகம்-மேடம் இவற்றில் நின்ற சந்திரனை குரு பார்த்தாலும், மிதுனம் கன்னி இவற்றில் நின்ற சந்திரனை புதன் பார்த்தாலும், அந்தஜாதகன் நற்பதிக்குச் சமானமாய் இருப்பான் என்றும் கூறுக. இவை சாதக சிந்தாமணியில் சொல்லியபடியாம். (817)

புரிகுசன்சனி பொன்மால்பளிங்குமே
பரிவுடனொரு வீட்டினைப்பற்றிட
அரியசற்குண சன்மார்க்கனாகியே
தெரியுஞான சிந்தைச்சிவயோகியாம்.

(இ-ள்) மேஷ விருச்சிகத்திற்கு ஆதிநாதனாகிய குஜனும், அவனுடன் சனி-குரு-புதன்-சூரியன் இவர்கள் ஐவரும் கூடி ஓர்வீட்டிலிருக்க, அந்த ஜாதகன் தேடுதற்கரிய சன்மார்க்க குணமுள்ளவனாகி ஞானமார்க்கங்களை அறிந்த நற்சிந்தையையுடைய சிவயோகியாவான் என்றும் கூறுவர் எ-று. ()

வேறு

ஆமெனும்பத்தாமதிபனற்கோளே யாய்த்தனலாபபாக்கியத்தில்
நேமமாயுச்சகேந்திரங்களிலு நிற்கனற்கன்மமேபுரிவன்
தோமுறும்பாவனாய்நீசமத்தமனாய்ச் சொல்லுமாறெட்டினில்வியத்தில்
தாமுறில்நல்லோர்தம்மையும்பழித்துத் துக்கதுர்க்கன்மமேபுரிவன்.

(இ-ள்) கருமாதிபதி என்னும் 10-ஆம் ராசிநாதன் நற்கோட்களில் ஒருவனாய் தனம் என்னும் இரண்டாம் ராசியிலாவது, பாக்கியமாகிய 9-ஆம் ராசியிலாவது, லாபமென்னும் 11-ஆம்ராசியிலாவது உச்சகேந்திரம்பெற்று இருந்தால் அந்த ஜாதகன் நற்செய்கைகளையே செய்வான். 10-ஆம் ராசிநாதன் கொடிய கோட்களில் ஒருவனாய் நீச்சம் அல்லது அஸ்தமயம்பெற்று ஜெனனராசிக்கு 6-8-12-ஆம் ராசிகளில் இருக்க, அந்த ஜாதகனுக்கு நல்லவர்களை பழிக்கவும், அவர்களுக்கு கொடிய சேஷ்டைகளையும், துன்பம் முதலியவைகளையுமே விளைவிப்பான் எ-று. (819)

புரியுமீறைந்தாமதிபனற்கோளாய் புகழ்பலவானுமாய்ப்பத்தில்
தெய்யவுற்றிடில்யாகாதிகன்மங்கள் செய்வனீரைந்திடத்ததிபன்
பரிவுடன்வியத்தானதியைக்கூடிப் பண்புறுஞ்சுபபலமுடனே
அறியதோர்வியத்திலுறிற்றனபதியா யானநற்கன்மமேசெய்வன்.

(இ-ள்) ஜெனன ராசிக்கு தசமகேந்திராதிபதி நற்கோட்களுள் ஒருவனாகி பலம்பெற்று, தன் சுயவீடாகிய 10-ஆம் ராசியிலேயே இருக்க, அந்த ஜாதகன் பற்பல யாகாதிகிருத்தியங்களைச் செய்குவான். 10-ஆம்ராசிநாதன் விரய ஸ்தானாதிபதியைக் கூடி சுபனாயும் பலம்பெற்றும், 12-ஆம் ராசியிலேயே இருக்க, நல்ல தனத்தையுடையவனும் நற்செயல்களைச் செய்பவனும் ஆவான் எ-று. (820)

செய்யகன்மாதிகுருவுமாயுச்சஞ் செறிந்தசுக்கிரனுடன்கூடில்
துய்யயாகாதிகன்மமேபுரிவன் சூழ்ந்தகன்மாதியைத்தானும்
பய்யவேகுருசுக்கிரனுமேபார்க்கில் பண்ணுவன்யாகமேபலவும்
மெய்யகன்மாதிகுருவுமாய்நல்லோர் வீடுறவிரும்புவன்மகமே.

(இ-ள்) கன்மாதிபதி என்னும் 10-ஆம்ராசிக்கதிபன் குருவாகவிருந்து உச்சம்பெற்ற சந்திரனுடன் கூடில் அந்த ஜாதகன் யாகமுதலிய நற்செயல்களைச் செய்குவன். 10-ஆம் ராசியதிபதியை குரு சந்திரன் பார்க்கில் அந்த ஜாதகன் அநேக யாகங்களைச் செய்வான். 10-ஆம் ராசிநாதன் குருவாக இருந்து நற்கோட்களின் வீடுகளில் இருக்க, அவன் நற்கருமங்களையே செய்ய ஆசைப்படுவான் எ-று.

(வி-ரை) பன்னு மொன்பது பத்தி லிரவிசேய்
பொன்னுங் கூடிடில் புவியி லமைச்சனும்.

என மேற்சொன்னபடியே குரு 10-ஆம் ஆதிபத்தியம்பெறின் யாகங்களைச் செய்வான் என்றாலும் குருவோடு சூரியன் செவ்வாய் கூடி 9-10 இவ்விடங்களில் இருந்தால் அவன் மந்திரியாவான்.

மன்னுங் காரி மதிபுகர் கூடிடில்
தன்னில் வேந்தர் சமானமு மாவனே.

என்றபடி, குருவோடு சனி-சந்திரன்-சுக்கிரன்கூடியிருக்க, அரசர்களுக்குச் சமமாக இருப்பான் என்ற சாதக சிந்தாமணி வாக்கியப்படி குருவோடு நின்ற கிரக பலத்தையும் ஆராய்ந்து சொல்வது அவசியம். (821)

விரும்புசுக்கிரனுங்குருவுமேபலமாய் மேவும்வீட்டதிபனற்கோளாய்
இரும்பலவாணுயிருக்கமற்றவரோ டெத்தனைசுபக்கிரகங்கள்
பெரும்பலமுடனேகூடினவிலக்கம் பெருமகம்புரிவனென்றுரைக்கும்
அரும்புகன்மாதிகுருவுமாய்ப்பலமே யாகில்வேதங்கள்மூன்றறிவன்.

(இ-ள்) அசுரகுருவென்னும் சுக்கிரனும், தேவகுருவென்னும் குருவும் பலம்பெற்றிருக்க, அவர்கள் நின்ற ராசிக்குடையவர்கள் சுபகிரகமாகவும் அவர்கள் பலம்பெற்றும் இருந்து, அவர்களோடு எத்தனை கிரகங்கள் இருந்தனவோ அத்தனை யாகங்களைச் செய்வானென்று சாஸ்திரங்கள் கூறும். 10-ஆம் ராசியதிபதி பலம்பெற்றுநிற்க, மூன்று வேதங்களைத் தெரிந்து கொள்ளுபவனுகுவன் எ-று.

(வி-ரை) 10-ஆம் ராசிநாதன் உச்சம் முதலியவைகளால் பலம்பெறுவது விசேஷம். பத்தாம் ராசியதிபதி சனியுடன்சேரில் அந்த ஜாதகன் சூத்திரர் அண்டையிலும், வனவிருக்ஷங்களை வெட்டியும், பாபகர்மங்களைச் செய்வான் 10-ஆம்வீட்டோன் சுபருடன் கூடுவானுகில் தெய்வங்களாலும் பிராமணர்களாலும், பிரம்ம வித்தையாலும் நல்ல மேலானபலனை அனுபவிப்பான். (822)

அறியுங்கன்மாதிபாவனும்பாவ ரகத்தினிலிருந்துகன்மத்தைக்
குறியுடன்பார்க்கிற்சூத்திரகன்மங் கூசிடாப்பாவதுர்க்கன்மம்
நெறியுடன்புரிந்தீங்கிசைபெறவிருப்ப னிறைந்திடுங்குரூரசாகசமும்
செறியுமவ்வினையாற்சுபபலஞ்சிறிதாந் தீங்குறுபலன்திரளாமே.

(இ-ள்) ஜெனனராசிக்கு பத்தாம்வீட்டிற்குடையோன் சனி-சூரியன் குஜன் முதலிய பாவகிரகங்களில் ஒருவனுகவும், கொடிய கோட்களின் ராசியில் இருந்து 10-ஆம் ராசியைப் பார்க்கில் அவன் சூத்திர ஜெனங்க

ளுடன்கூடி பாவச்செயல்களைக் கூசாமல் செய்குவன். இன்னம் நீயகிரகங்களினுடைய அங்கிசையிலும் சாரத்திலும் இருக்க, அவன் செய்யும் வினையால் பலன் அற்பமாவதோடு துன்பத்தைத் தரத்தக்க பலனே அதிகமாக விளையும் எ-று.

(வி-ரை) 10-ஆம் ராசியில் கேது நிற்கத் தன் சுயஜென விரோதனும் பலமில்லாதவனும், ஞானி லோபி அந்நியதேசசஞ்சாரன் ஸ்தூலசரீரம் ஆசாரம் சிலேத்ம ரோகம் சேவகத்தொழில் செய்பவன் யாசகம்செய்து ஜீவிப்பவனென்று சோதிடவல்லோர் கூறுவார். (823)

திரமுறுமொன்பானதிபதிகுருவாய்ச் செய்யவொன்பதிற்குருவுறினும்
வரமுறும்பலர்களிடத்துபதேச வசனமும்வித்தையும்பெறுவன்
உரமுடனொன்பானதிபதிமரபி லுறையுபதேசமும்பெறுவன்
பரமுறுமிவர்களுச்சகேந்திரத்திற் பற்றிடில்ஞானமேபலிக்கும்.

(இ-ள்) ஜெனனராசிக்கு பாக்கியஸ்தானமென்னும் 9-ஆம்ராசியதிபதி குருவாகவும், பாக்கியமாகிய 9-ஆம் ராசியிலேயே அமர்ந்திருக்க, அந்தஜாதகனுக்கு வரப்பிரசாதமும், பலர்கள் இடத்தில் உபதேசமும் வித்தையும் அடைவான். உபதேசம் தருவது யாரெனில், 9-ஆம் ராசிக்கு உடையவர் வகோ அவர்களாலேயே உபதேசம் பெறுவான். 9 ஆம் ராசியதிபதி உச்சனாகவும் கேந்திரம் பெற்றும் இருக்க, அவனுக்கு ஞானமார்க்கம் பலிக்கும் எ-று. (824)

வேறு

பலிக்குமேடமிடபமுடன் பகர்ந்தசிங்கம்பத்தாக
வலிக்குஞ்சுபக்கோணின்றிடினு மன்னுமவர்நோக்குற்றிடினும்
ஒலிக்கும்வேதமதிற்சொன்ன வுத்தமத்தன்மங்கள்தனைச்
சலிக்கச்செய்வனெனச்சொல்வர் தக்ககணிதவல்லோரே.

(இ-ள்) ஜெனன லக்கினத்திற்கு கரும ஸ்தானமென்னும் 10 ஆம்ராசியானது மேடம்-ரிடபம்-சிங்கம் இவைகளில் ஒன்றாக, இவ்விராசிகளில் நற்கோட்கள் நின்றாலும், அல்லது அவர்கள் தன் சுயவீடான 10-ஆம்ராசியை பார்த்தாலும், பிரகாசமாகிய வேதாந்தங்களிற் சொல்லிய உத்தம தரும மார்க்கங்களை தான் சலிக்கும்படி செய்வானென்று சோதிட வல்லோர்கள் கூறுவார்கள் எ-று. (825)

ஆகுஞ்சன்மலக்கினத்தி லணுகும்ராகுமோரேழிற்
வேகமுடனேதானிருக்க வேண்டுங்கேந்திரம்காரிபுகர்
தாகமுடனேபுதன்மூவர் தானுங்கூடச்சண்டாள
யோகமெனவேதானுரைப்ப ருண்மைகன்யமனாசாரம்.

(இ-ள்) ஜெனனராசி எந்த ராசியானாலும் அந்தராசியில் கேதும், 7-ம் ராசியில் ராகுவும் அமர்ந்திருக்க, கேந்திரக்ஷேத்திரமென்னும் 1-4-7-10-ம் ராசிகளில் சனி-சுக்கிரன்-புதன் இம்மூவரும் கூடி இருக்க, அவன் சண்டாள யோகமென்னும் அனுசாரகருமங்களைச் செய்பவனென்றும் சொல்லுவார் எ-று.

(வி-ரை) ஜெனனராசியில் கேதுநின்றதைக் குறித்து முன்சொல்லிய 823-ஆம் செய்யுளின் விருத்தியுரையில் சொல்லப்பட்டன. அப்படிப்பட்ட ஜாதகன் சண்டாளத் தொழிலையே செய்வான் என்பதாம். (826)

உண்மைபாக்கியாதிபனு முற்றேசன்மத்துறுகதிரும்
வண்மைபெறவேயோரைந்தில் வந்துசுபக்கோணேக்கமிலாத்
திண்மையாறிலொருமூன்றிற் றீயோர்வந்துதானுறைய
எண்மையுடனேயநாசார மெய்துநீசக்கன்மீயவனே.

(இ-ள்) ஒன்பதாம் ராசிநாதன் ஜெனனராசியிலும், 5-ஆம் ராசி என்னும் திரிகோணத்தில் சூரியனும் நின்று அவனை சுபகிரகங்கள் பார்க்கப் படாமலும், 6-3 என்னும் ராசிகளில் தீய கிரகங்களும் இருக்க, அந்த ஜாதகன் நீசகருமங்களைச் செய்யும் அனுசாரம் உள்ளவனுவான் எ-று.

(வி-ரை) ஈராறிற் சனியிருக்க எட்டினிற் பத்திற்கேது
வோராம விருக்குமேனு முதயத்தின் மதியைமற்றோர்
நேராகப் பார்க்கப்பத்தி னிகர்செவ்வா யிருக்குமேனும்
வாரார்பூண் முலைபாய்ப்பாரின் மாபாவ கன்மியாமே.

என 12 ல் சனியும், 8-10-ல் கேதுவும், ஜெனன ராசியில் சந்திரனும் இருந்து மற்ற கிரகங்கள் பார்க்க, 10-ல் குஜனிருக்க, அந்த ஜாதகன் பல பாவ கருமங்களைச் செய்குவானென்று சிந்தாமணியிற் சொல்லியபடியால் கிரகங்களின் அளவு அறிந்து கூறுக. (827)

## சன்னியாசி யோகம்

### வேறு

தேசுறுபத்தாமாதி நான்கிடத்திலிருக்கச்
செப்பியநாலாதிபதி திரிகோணத்தெய்தப்
பூசலுறும்பாம்பல்லா தொருநான்குகிரகம்
பொருந்திப்பத்தினிலிருக்கும் போதுசந்நியாசியுமாம்
ஓசைகொளுன்காம்வீடு முதற்பத்தாமனைமட்
டோரேழுவீட்டினுங்கோ ளொழியாமலிருக்கில்
காசினியில்வாழ்பவர்க்குத் தேசிகனேயாகிக்
கதித்திடுசந்யாசியென வேகருதல்வேண்டும்.

(இ-ள்) பிரக்கியாதிபெற்ற 10-ஆம் ராசியதிபதி நான்காம் இடமென்னும் சுகஸ்தானத்தில் இருக்க, நான்காம் ராசியதிபதி திரிகோணஸ்தானங்களில் இருக்க, ராகு தவிர மற்றுமுள்ள நான்கு கிரகங்கள்கூடி 10-ஆம் ராசியில் இருக்க, அந்த ஜாதகன் சந்நியாசியாவான். மேலேசொன்ன நான்காம் ராசிமுதல் 10-ஆம் ராசி வரையிலுமுள்ள 7-ராசிகளிலும் கிரகங்கள் இடைவிடாதிருக்க, அந்த ஜாதகன் இப்பூமியிலுள்ளவர்களுக்கு குருவாகி நல்ல மேன்மையைப்பெற்ற சந்நியாசியாவான் என்று சொல்வாய் எ-று. ()

வேண்டிடுசெவ்வாயிரவி மதிமூவர்கூடி
விரும்புபத்தாமிடத்திருக்க மின்னூர்பொன்றனக்கும்
ஈண்டியதோர்விரிவில்லாச் சந்யாசியாவன்
இனியபுதன்கதிரோனு முச்சமாயிருக்கத்
தாண்டுவியத்தானத்திற் சுக்கிரனெய்திடவும்
சனியொருவனுகிச்சுக் கிரன்றன்னைப்பார்க்கப்
பூண்டுவருஞ்சன்மமுத லாதியந்தமாகப்
புகழ்ந்திடுசந்நியாசியெனப் போற்றிடவாழ்ந்திருப்பன்.

(இ-ள்) சிங்கத்திற்கு ஆகூதிநாதனுகிய சூரியன்-சந்திரன்-குஜன் இம் மூவரும் கூடி 10 ஆம் ராசியில் இருந்தாலும், அல்லது குரு இருந்தாலும், அந்த ஜாதகன் எக்காலும் அழிவில்லாத சந்நியாசியாவான். புதனும்-சூரியனும் உச்சம் பெற்றிருக்க, 12-ஆம் ராசியில் சுக்கிரன் இருக்க, அவனைத் தனித்து நின்ற சனிபார்க்க, அந்த ஜாதகன் தான் ஜெனித்ததுமுதல் ஆயுள் உள்ளளவும் சந்நியாசி என்று யாவரும் போற்றும்படி வாழ்ந்திருப்பான் எ-று. (829)

பத்தாம் பாவகம் முற்றிற்று.

# பதினோராம் பாவகம்

## ஆதாய பலன்

வேறு

வியமாறெட்டாதிபன்கூடி மேவினுலுந்தனியேனும்
நயமாய்ப்பாவத்துறிற்பாவர் நண்ணிற்பார்க்கில்லாபமில்லை
சுயலாபாதிவுச்சனுமாய்ச் சுபர்மத்தியிலேதானிருக்கில்
சுயலாபத்திற்சுபரிருக்கச் சாரும்லாபந்திரளாக.

(இ-ள்) 11-ஆமிடமென்னும் லாபஸ்தானத்தில் 6-8-12-க்குடையோர் சேர்ந்து நின்றாலும், அல்லது தனித்துநின்றாலும், பாவராசிக்குடைய கோட்கள் சேர்ந்து நின்றாலும் பார்த்தாலும், அந்த ஜாதகனுக்கு லாபமென்பது சற்றேனும் இல்லையாம். 11-ஆம் ஸ்தானாதி உச்சம்பெற்று சுப கோட்களின் மத்தியில் இருக்க, 11-க்கு 11-ஆம் ராசியிலும் சுபகிரகங்கள் இருக்க, அந்த ஜாதகனுக்கு லாபங்கள் அநேகமாய் உண்டு எ-று.

(வி-ரை) 11-ல் 6-8-12-ஆம் ராசியதிபர்கள் இருக்கினும் என்பதை கிரகபலம் அறிந்து சொல்லவேண்டும். 11-ல் சூரியனிருக்கில் பொன்-முத்து-பவளம் முதலியவைகளை கிரயம்செய்து தனம்தேடுவான். சந்திரன் இருக்கில் மாமிசவகையாலும், குஜனிருக்கில் பிறருக்கு கடன் கொடுத்து அவர்களை இம்சித்து, அவர்கள் பொருளை அபகரிப்பவனென்றும், கிரகங்களுக்குத் தக்கபடி பிரித்துச் சொல்லவேண்டும். (830)

திரலாபாதியுச்சத்திற் செறிந்துலாபத்தினிலிருக்க
மரவாய்ச்சென்மாதிபன்பலமாய் மருவலாபமவருஞ்சுகிப்பன்
விரவாய்லாபாதிபனிருந்த வீட்டுக்கிறைகேந்திரமேவ
உரவோரவனைக்கூடக்கண் ணுறலாபங்களுண்டாமே.

*(இ-ள்) 11-ஆம் இடமான லாபஸ்தானாதிபதி தன் சுயக்ஷேத்திரத்திலேயே உச்சம்பெற, ஜனன ராசியதிபதி பலம்பெற்று இருக்க, அந்த ஜாதகனுக்கு வரும் அளவிறந்த லாபத்தால் சுகித்திருப்பான். லாபாதிபதி சேர்ந்த வீட்டுக்குடையவன் கேந்திரம் பெற்றிருக்க, அவனை உறவு கிரகங்கள் பார்க்க, அநேக லாபங்கள் உண்டாகும் எ-று.* (831)

உண்டாம்லாபாதிபனிருந்த திக்கிற்பலன்களுரைசெய்வாய்
தண்டாமரைநண்பன்கிழக்குத் தருஞ்சுக்கிரற்கக்கினிமூலை
கண்டாய்குசன்தெற்கராமூலை காரிமேற்குச்சசிவாயு
கொண்டேயிருக்கும்புதன்வடக்கு குருவீசானங்கொண்டுவரும்.

*(இ-ள்) லாபம் உண்டாகும் திக்கு விபரங்களைச் சொல்லவேண்டுவதாயின், லாபாதிபன் யாரோ அவனுடைய திக்கைக் குறித்ததேயாகும். எப்படியெனில், சூரியனுகில் கிழக்கும், சுக்கிரனுக்குத் தென்கிழக்கும், குஜனுக்குத் தெற்கும், தென்மேற்கு மூலையும், சனிககு மேறகும, சந்திரனுக்கு வடமேற்கும், புதனுக்கு வடக்கும், குருவுக்கு வடகிழகறு திக்குகளிலும் லாபம் உண்டாகும் எ-று.*

*(வி-ரை) மேலே சொல்லியபடி 11-ஆம் ராசியில் புதன் இருக்க,*

*போற்றிய லாபத்திற் புதனி ருந்திடிற்*
*பார்த்திடும் சிற்பத்தாற் பஞ்சலோ கத்தாற்*
*றேற்றும் வாத்தி மையினுர் சோதிடத்தினுற்*
*சாற்றுமந் திரத்தினுல் தனத்தைத தேடுவன்.*

*என 11-ல் புதனிருக்க, சிற்பத்தொழிலாலும் பஞ்சலோகத்தாலும் வாத்திமைத்தொழிலாலும, சோதிடம் மாந்திரீகம்முதலியவைகளாலும் தனத்தை சம்பாதிப்பான் என்றும் சாதக சிந்தாமணியில சொல்லியபடியாம்.* (832)

*வேறு*

வரும்லாபா திபன்லாபத் தானத்திலிருந்தோன்
மதியிரவி யிவர்நால்வர் மகிழ்பலமேபெற்றுப்
பெருமையுள்ளோர் வீட்டில்நின்ற கிரகத்தோடிருக்கப்
பெரும்வீட்டுக் கதிபதியு மேபலவானுயின்
கிருஷிகணன் ருய்ப்பலிக்கும் ஐஸ்வரியனுவான்
கிட்டியிவர் மகாதிசையிற் கிளர்தனங்கள்சேரும்
தரும்லாபா திபனிரவி யாகிமதியுடனும்
தான்கூடப் பார்க்கவெகு தனலாபமுண்டாம்.

(இ-ள்) 11-ஆம் வீட்டோனை லாபஸ்தானாதிபதியும், 11-ஆம்வீட்டில் இருந்த கிரகமும், சூரியன்-சந்திரன் இந்தாால்வரும் பலம்பெற்று பெருமை பெற்ற வீடுகளில் இருக்கும் கிரகங்களுடன் சேர, அவ்வீட்டிற்கு உடையோனும் பலம்பெற்றிருக்க, அந்த ஜாதகனுக்குக் கிருஷி என்னும் பூமி பலிதம் அதிகமாய் ஐஸ்வரியவானாக இருப்பான். அவர்கள் திசை வரும்போது பொருள்சேர்க்கை உண்டுபண்ணும். லாபாதிபதி சூரியனாகி சந்திரனுடன் கூடி இருக்க, அல்லது பார்க்க, அவனுக்கு தனலாபம் உண்டு எ-று.

(வி-ரை) 11-ஆம் ராசியுடன் அதற்குப் பதினோராம் வீடான ஜெனன ராசிக்கு 9-ஆம் வீட்டையும் கவனிப்பது நலம். 9-ஆம் வீட்டோன் சனியாகில் நீச்சர்களால் லாபமும், அவ்வீட்டில் ராகு இருக்கில் திருடர்களால் தனம் சேரும். சந்திரன் அஸ்தமனம் அல்லது 10-ஆம் ராசியில் இருந்தால் தானியங்களால் லாபமுண்டு என்றும் கூறுவர். (833)

உண்டான லாபாதி பதியாகுஞ்சசியை
உம்பர்கோ னைகுருவு முகந்துநோக்க
மிண்டான சகலபாக் கியலாபஞ்சேரும்
மிக்கலா பாதியெவர் வீட்டிலிருந்தாலும்
கொண்டாடு மவரவர்க்கு வெகுலாபமுனதாம்
குறித்தசென்மா திபன்லாபத் தானத்திற்குலவ
கண்டாய மொழியாய்லா பாதிநின்றதிசையில்
கருதியலா பங்கள்வருங் காணுமெனப்புகல்வார்.

(இ-ள) 11-ஆம்ராசிக்குடையோன் சந்திரனாக இருந்து அவனை தேவபுரோகிதனும் தேவகுருவுமான குரு பார்க்க, அந்த ஜாதகனுக்குச் சகல விதமான பாக்கியங்களும் உண்டாகும். லாபஸ்தானாதிபதி யார் வீட்டில் இருந்தானோ அந்த ராசி எந்த வர்க்கத்தாருடையதோ, அவருக்கு அநேக லாபஙகள் உண்டாகும். ஜெனன லக்கினாதிபதி லாபஸ்தானம்பெற்றிருக்க அந்த ஜாதகனுக்கு லாபாதிபன் திசையில் வேணுமான லாபம் கிடைக்கும் என்றும் கூறுவார எ-று.

(வி-ரை) லாபங்களைப்பற்றி இன்னும் பற்பல விதமாகவும் சோதிக்க வேண்டும். ஜெனன காலங்களில் குஜன் ஆயில்ய நக்ஷத்திரத்திலிருந்தால் அவனுக்கு மாந்திரீக லாபம் உண்டு. கேட்டையில் சுக்கிரன் இருந்தால் தானியலாபமுண்டு. இரண்டில் சூரியன் இருந்தால் பற்பல விதங்களாலும் லாபம் உண்டு என்றும் சோதிடவல்லோர் கூறுவர். (834)

பதினோராம் பாவகம் முற்றிற்று.

---

# பன்னிரண்டாம் பாவகம்

## சயன பலன்

### வேறு

கூறியவியத்திற்காரி சனிகதிர்குருசேய்வெள்ளி
ஏறிடிற்குழவியன்னை பிதாமகன்றுணைவரில்லாள்
ஆறுபேருக்கரிட்ட மப்பதிசரமேற்றீதாம்
மாறிலாவவர்வீடுச்சம் நன்றெனவழுத்துவாரே.

(இ-ள்) 12-ஆம் இடமென்னும் விரயஸ்தானத்தில் சனி-சந்திரன்-அங்காரகன்-குரு-சுக்கிரன்-சூரியன் இவர்கள் ஒன்றாகூடி இருக்கில் அந்த ஜாதகனின் பிதா மாதா சகோதரம் களத்திரம் புத்திரன் இவ்வறுவகை வர்க்கத்தாருக்கும் அரிட்டம் உண்டு. மேலே சொல்லியுள்ள 12-ஆம் ராசியானது சரராசிகளில் ஒன்றாக இருந்து, மேற்சொன்ன ஆறு கிரகங்களும் இருக்கில் வெகு கொடியது என்றே கூறுவர். அவர்கள் உச்சம்பெற நன்மை உண்டாகுமென்றும் சொல்வார்கள் எ-று.

(வி-ரை) 12-ஆம் ராசியில் மேற்சொன்ன கிரகங்கள் கூட்டம் கூடி இருந்தாலும் தனித்திருந்தாலும், அந்தந்த வர்க்கத்தாருக்கு தோஷமேயாயினும், அவ்விராசியில் அவர்கள் இருக்கும் திறத்தாலேயே அதனை நிலை கூறவேண்டும்.

எப்படியெனில்,

வீம நாதரைப் போற்றார் விரயாதிபர்
வெய்ய பாவ பகைநீச மூடராய்
தாமி ருக்கநற் கோட்டன பாக்கியஞ்
சாரவீ ராறிற் சத்வ நீசத்தராய்
தீமை கோளூர செல்வம் பொருளெலாம்
சினத்த கோளேக்க சோரரால் சேதமா
ரேம நல்லார் பொல்லார் சர்வநாசமே
நீச உச்சஞ் சரிகொடுத் தீங்கதே.

என்றபடி, 12-ஆம் ராசி சம்மந்தக்கிரகம் பகை நீச்சம் சமமாயும், க்ஷீணம் மூடமாகவும் இருக்க, நற்கோள்கள் தனபாக்கியங்களில் இருக்க, டை 12-ல் பகை நீச்சம்பெற கோட்கள் இருக்க, அவன் செல்வம் பொருளெல்லாம் சத்துருக்கள் கொண்டுபோவார்கள். சோரராலும் சேதமுண்டு. சுபகிரகம் நீசவுச்சாாக திற்கில் நன்மையும் தீமையும் சரியாய் வரும் என்று வீமேசுர உள்ளமுடையானில் கூறியபடியும்,

பொற்பாம் வியத்திற் சேயிருக்கிற் பூமி யதனூற் றுணைவரினுல்
மற்பாற் சோர ராக்கினையான் மன்னும் தனநாச மடைவான்.

என 12-ல் குஜன் இருக்க அவன் பூமியாலும், சகோதரராலும், திருடர் ஆக்கினையாலும் அவன் தனம் நாசமாம் என்றும்,

கற்பார் புதனே வியத்திருக்கிற் கணக்கு வழக்கு விரோதத்தால்
நற்பா ரதனில் வியாபார நடத்த லாலும் தனநாசம்.

என 12-ல் புதனிருக்க கணக்கு வழக்காலும் அர்த்த விரோதத்தாலும் வியாபாரத்தாலும் தனம் நாசமாகும் என்றும் சாதக சிந்தாமணியார் உரைத்தபடி ஆராய்ந்து கூறுக. (835)

வார்மைசேர்வியத்தானத்தின் மன்னவன்சுபக்கோளாகிச்
சீர்மைசேர்கேந்திரத்து முச்சத்துஞ்செறிந்துநிற்கில்
யார்மைசேர்வியத்தினல்லோர் பரிந்துநிற்பார்க்கில்மேலாம்
கூர்மைசேர்பரியங்கத்திற் குலவுபூச்சரங்கள்சூழ.

(இ-ள்) விரயஸ்தானாதிபதியான 12-ஆம் ராசியதிபன் நற்கோட்களில் ஒருவனாக இருந்து, சிறப்பு பொருந்திய உச்சமாவது கேந்திரங்களிலாவது இருக்க, 12-ஆம் ராசியில் சுபகிரகங்கள் இருந்தாலும் பார்த்தாலும் நல்ல மேன்மையையுடைய குதிரைமீது ஏறுவதும், பூச்சக்கிரக் குடைகளுடனும் வாழ்ந்திருப்பான் எ-று.

(வி-ரை) 12-ஆம் ராசிநாதன் நற்கோட்களில் ஒருவனாக இராமலும் உச்சம் கேந்திரம் பெறாமலும், சுபகிரகங்களில் ஒன்றான குரு மாத்திரம் 12 ல் இருந்தால் சோம்பேரியும், அந்நியதேசசஞ்சாரனும், இருவிதவித்தையும், பிராமணர்களின் பொருள்மீது ஆசையுள்ளவனும், அவை கைக்கடாமையும், சேவகாவிருத்தியும், சயனசுகம் உள்ளவனும், மாசபையில் பேச வல்லவனும் ஆவானென்று சோதிடத்தோர் சொல்வார் என சாதக சிந்தாமணியில் சொல்லியபடி, 12-ஆம் வீட்டோன் சுபகிரகமாக இருந்து உச்ச கேந்திரங்களில் இருக்கின் கீழ்கண்டவாறு பலன் கூறுக. (836)

சூழுஞ்செம்பட்டுமெத்தை தூக்கமேற்கட்டிதூபம்
தாழுஞ்சங்கிலியிற்றொங்குஞ் சப்பிரமஞ்சமீது
ஏழுநல்லிசையாழ்கொண்டே யேந்திழைமாரிசைப்ப
வாழுமன்னவனுமென்று வழுத்துவர்மறைவல்லோரே.

(இ-ள்) மேற்சொன்னபடி கிரகமிருக்கப் பிறந்தவன் சிவப்பு வர்ண பட்டாடைகளை அணிந்து, அடுக்கு நிறைந்த மெத்தைமேடைகளில் உறங்குபவனும், மெத்தைகளி லமைத்துள்ள சங்கிலிகளால் கோர்க்கப்பட்ட சப்ரமஞ்சக் கட்டிலின்மீது 7-விதமான இனிய யாழ் முதலிய கருவிகளோடு பெண்கள் பாடவும் உபசரிக்கவும் அரசனாகி வாழ்வான் என்று சாஸ்திர வல்லோர் கூறுவர் எ-று. (837)

வல்லதோர்வியத்தானாதி மற்றுமெட்டாறில்நிற்க
சொல்லியசனியும்பாம்புஞ் சூழ்ந்துபன்னிரண்டில்நிற்க
நல்லவர்பார்வைசற்று நயந்திடாதிருக்கிற்பாரில்
புல்லதுமெத்தையாக விருவிழிதுயில்வன்போந்தே.

(இ-ள்) வல்லமை பொருந்திய விரய ஸ்தானாதிபதி ஜெனன லக்கினத்திற்கு 6-8-ஆம் ராசிகளில் நிற்க, சனி-ராகு இவர்கள் சேர்ந்து 12-ஆம் ராசி

யில் இருக்க, அவர்களைச் சுபகிரகங்கள் பாராதிருக்க, அந்த ஜாதகன் இப் பூமியில் புல்நிறைந்த இடத்தையே மெத்தை என்று தன் இரண்டு கண்களை யும் மூடி உறங்குவான் எ-று.

(வி-ரை) இதனை கொடிய யோகமென்றும், அந்த ஜாதகன் நித்திரை செய்யவும் இடம் கிடைக்காதென்பதும் இச்செய்யுளின் கருத்தாகும். பொதுவாய் 12-ஆம் ராசியதிபதி கெடுவானாகில் எவ்விதமும் அவனுக்கு நித்திரை குறைவென்றே சொல்லவேண்டும். (838)

## விரய பலன்

வேறு

**போந்தசெறிபாக்கியத்தாதி பொருந்துபன்னொன்றின்மேவ**
**ஏந்தும்பிதிர்லாபாதிபதி யிருவர்தமக்குமுறவாக**
**ஆர்ந்தபிதிரின்றனம்போல வதிந்துவிகுணம்பொன்தேடி**
**வேந்தனுவன்மைந்தருக்கு மியைந்தேவிருக்கும்வெகுதனங்கள்.**

(இ-ள்) புகழ்ச்சியையுடைய பாக்கியஸ்தானாதிபதி என்னும் 9-ஆம் ராசியதிபதி 11-ஆம் ராசியில் நிற்க, பிதுர்லக்கினத்திற்கு லாபாதிபதி இவ் விருவருக்கும் உறவாகயிருக்க, இறந்துபோன தன்பிதா எவ்வளவுபொருள் தேடினானோ அவ்வளவு பொருளையும் சம்பாதித்து அரசனுகுவானென்றும் அச்செல்வமானது இவன் புத்திரனுக்கும் பொருந்தி இருக்குமென்றும் கூறுவார் எ-று. (839)

வேறு

**கோலலாபக் குரிசில்வியத்துற**
**மேலவியத்தனும் மேவுதனத்துற**
**ஆலுமேதனத் தாதிபலமறச்**
**சாலமன்னர் தனங்கொள்வர்தண்டமாய்.**

(இ-ள்) ஜெனன லக்கினத்திற்கு 11-ஆம் இடமான லாபஸ்தானாதிபதி விரயஸ்தானம்பெற, விரயஸ்தானாதிபதி தனஸ்தானம் என்னும் இரண்டாம் வீட்டிலிருக்க, தனாதிபதி பலமிழந்திருக்க, அந்தஜாதகன் தனங்கள் யாவை யும் அநியாயமாய் அரசர்கள் கைக்கொள்வார்கள் எ-று.

(வி-ரை) இத்துடன் நட்பு ஆட்சி உச்சம் என்னும் வகையறிந்து அவ்வீடு அசுபர் வீடாயின் வழக்கு முதலியவைகளால் இழப்பானென்றும் கூறுவர். (840)

**மாய்வியத்தனும் வந்துதனத்துற**
**ஏய்தனாதி வியந்தனிலேயுற**
**நேய்சென்மாதி நிரிக்கணமன்றினெய்**
**தூய்தனங்களெல் லாந்துரைகொள்வரே.**

(இ-ள்) மோக்ஷஸ்தானமென்னும் 12-ஆம் ராசியதிபதி இரண்டாம் இடமென்னும் தனஸ்தானத்திலிருக்க, இரண்டாம் வீட்டோனும் தன் சுய

க்ஷேத்திரத்திலேயே ஆட்சிபெற்றிருக்க, ஜென்ன லக்கினாதிபதி பலம் இழந்துமிருந்தால் அவன் தனங்கள் யாவையும் மன்னர்கள் கைக்கொள்ளு வார்கள் எ-று. (841)

வேறு

கொள்ளுமிரண்டாமதிபதியுங் குலவுநவாங்கிசாதிபனும்
மெள்ளக்கூடிப்பலமறவு மெய்யாதிபனுந்துர்ப்பலமாய்
உள்ளிருக்கவவன்றேடு முடைமைப்பொருள்களுள்ளவெல்லாம்
கள்ளாரசரக்கினியுங் கலந்துகொள்வர்கண்டாயே.

(இ-ள்) ஜென்ன ராசியதிபதி துர்ப்பலம்பெற்றும் இரண்டாம்வீட்டதி பதியும் அவன் இருந்த அங்கிசாதிபதியும் கூடி பலமற்றிருக்கப் பிறந்த ஜாதகனுடைய திரவியம்முழுதும் திருடர்களாலும் அக்கினியாலும் அரசர் களாலும் நாசம் உண்டாகும் எ-று.

(வி-ரை) கலந்துகொள்வார்கள் என்பது கொஞ்சம் அக்கினியாலும் கொஞ்சம் அரசர்களாலும் நாசமாகும் என்பதாம். (842)

வேறு

கண்டபன்னிரண் டாமிடக்காவலன்
கொண்டலக்கின மேழிற்குடிகொள
மண்டுபொன்னணி தானியமாறிடும்
கெண்டைபோல்விழிக் கிஞ்சுகவஞ்சியே.

(இ-ள்) 12-ஆம் ராசியதிபதி ஜென்னலக்கினமுதல் 7-ஆம் ராசியான களத்திர ஸ்தானத்திலிருக்க, அந்தஜாதகனுடைய பொன் ஆபரணங்களும் பொக்கிஷம் தானியம் முதலியவைகளை அந்நியர் கைக்கொள்வார் என்று மீன்கண்களையொத்த அழகும், இனிமையான சுகத்தைத்தரும் பெண்ணே! சொல்வாயாக எ-று. (843)

வஞ்சியேபத் ததிபதிபாவனாய்
விஞ்சியேபல னன்றிவியத்துறில்
அஞ்சியேயைம்ப தாம்வயதாயவன்
தஞ்சமான தனங்கள்வழுவுமே.

(இ-ள்) அழகுபொருந்திய பெண்ணே! 10-ஆம் ராசியதிபதி பாவகிரக மாகவும் பலமறறும் 12-ஆம் ராசியிலிருக்க, அந்த ஜாதகன் வயது 50-ல் அவன் தனங்கள் யாவும் அவனிடமிருந்து விரயமாகிப்போம் எ-று. (844)

வேறு

வழுத்தியபன்னிரண்டா மனைக்குமன்பாவனாகி
அழுத்தியவவனைப்பாவ ரணுகியும்பார்த்துநிற்க
முழுப்பொலாப்பரவசிந்தை முயற்சியாலவன்பொன்னெல்லாம்
இழுக்குறுந்தொழிலுள்ளார்க்கே யீந்தவன்கீர்த்தியேற்பன்.

(இ-ள்) விரய ஸ்தானாதிபதி என்னும் 12-ஆம் ராசியதிபதி பாவகோட்களில் ஒருவனாக இருந்து அவனைப் பாவகிரகங்களால் பார்த்தும், அவனுடன் சேர்ந்திருக்க, அந்த ஜாதகனுடைய நிறைந்த பொல்லாத பாவச் செயல்களின் முயற்சியால் அவன் தனங்கள் யாவும் இழிவான தொழிலையுடையோர்க்குக் கொடுத்து கீர்த்தி பெறுவான் எ-று. (845)

ஏற்கவேபன்னிரண்டி லிரணியன்வெள்ளி தூய
தீர்க்கசந்திரன்பொல்லாரைச் சேராதபுதன்இந்நால்வர்
மார்க்கமாய்க்கூடிற்றன்ம வகையினாற்செலவாமென்று
ஒழ்கநாற்சுருதிவல்ல வேதியரோதினரே.

(இ-ள்) 12-ஆமிடமான விரயஸ்தானத்தில் இரணியனென்னும் குருவும் சுக்கிரனும் சமமந்தப்பட்டு பூரண கலைகளையுடைய சந்திரன் தீயகோட்களோடு சுங்கம்பெறாமலும், புதனும் இந்நால்வரும் கூடியிருக்கில், அந்த ஜாதகனுடைய திரவியமானது தருமார்த்த காரியங்களிலேயே செலவாகும் என்று சாஸ்திர வல்லோர்கள் கூறுவார் எ-று.

(வி-ரை) தருமார்த்த காரியங்களில் செலவு செய்பவனுக்கு தியாகி என்றும் பெயராதலால், அந்த தியாகி என்னும் பட்டம் வாய்ந்தவர்கள் 10-ஆம் வீட்டோன் உச்சம்பெற்றும், தனாதிபதி பலம்பெற்றும், நான்காம் வீட்டோன் விரயாதியுடன் கூடியும், 9-ஆம் வீட்டோன் ஆட்சிபெற்று மிருக்க, அந்த ஜாதகன் திரவியமானது தருமார்த்த காரியங்களிலேயே செலவழிப்பான் என்றும் சோதிடவல்லவர்கள் கூறுவார்கள். இதனை இன்னும் பற்பலவிதமாகவும் யோசித்துச் சொல்லுக. (846)

ஓதியபன்னிரண்டா மதிபனோடுற்றபாவர்
நீதியநல்லோர்வீட்டி னிற்கினல்லோரைக்கூடில்
தீதறப்பலவானாகத் திகழ்வியத்ததிபன்ரெண்டில்
போதவேசெம்பொன்றேடிப் புதைப்பன்மற்றொருவர்க்கீயான்.

(இ-ள்) மோக்ஷ ஸ்தானாதிபதியாகிய 12-ஆம்ராசிநாதனுடன் பாபிகள் சேர்ந்து சுபகிரகங்களுடைய வீட்டில் நின்றாலும், அல்லது சுபர்களுடன் கூடினாலும், 12-ஆம் ராசியதிபதி தனஸ்தானமான இரண்டாம் வீட்டில் பலம்பெற்றிருக்க அவன் போதுமான திரவியங்களையும், பொன் நாணயங்களையும் சம்பாதித்து ஒருவருக்கும் கொடாமல் பூமியில் புதைத்துவைப்பான் எ-று. (847)

ஆனதோர்பாக்கியாதி தனாதியைந்தாமிடத்தும்
ஊனமிலைந்தாமாதி யொன்பதிலிரண்டினிற்கத்
தானமிம்மூன்றுபேரு மிலக்கினந்தன்னினிற்க
ஈனமிலவன்பொன்னெல்லாங் கடன்கொடுத்திழந்துபோவான்.

(இ-ள்) (நற்பலனையே தரும்) யாவரும் புகழத்தக்க பாக்கியாதி என்னும் 9-ஆம் ராசியதிபதியும், தனாதிபதி என்னும் இரண்டாம் வீட்டதிபதி

யும், 5-ஆம் இராசியிலிருக்க, 5-ஆம்ராசியதிபதி 9-அல்லது இரண்டாம்ராசியில் சேர்ந்திருந்தாலும், அல்லது இம்மூவரும் கூடி ஜெனன லக்கினத்தில் இருந்தாலும் அந்த ஜாதகன் பொருள் யாவையும் பிறருக்குக் கடனாகக் கொடுத்து இழந்துபோவான் எ-று. (848)

**வன்புறுமிரண்டாமாதி மார்த்தாண்டனுடனேகூட**
**இன்புறுவியத்தானாதி யினியரெண்டிடத்தினிற்கத்**
**துன்புறுமட்டமத்தி லாபாதிசூழ்ந்துநிற்கப்**
**பொன்பலவெல்லாஞ்சேதம் போய்விடும்புகழுமில்லான்.**

(இ-ள்) அன்பு நிறைந்த தனஸ்தானாதிபதி என்னும் இரண்டாம் வீட்டதிபதி சிங்கராசிக்கு ஆட்சிநாதனாகிய சூரியனுடன் சேர, 12-ஆம் வீட்டோன் இரண்டாமிடம் என்னும் தனஸ்தானத்தில் இருக்க, துன்பத்தைத் தரும் அஷ்டமஸ்தானம் என்னும் ஜெனனராசிக்கு எட்டாம்ராசியை 11-ம் ராசியதிபன்சேர, அவன் தேடிய பொருள்யாவும் அழிந்து சேதமாவதோடு அந்த ஜாதகன் புகழ்ச்சியின்றி வாழ்குவான் எ-று.

(வி-ரை) இவை யாவும் கிரக அடவியைக்கொண்டு பேசவேண்டியதோடு கிரகங்கள் இருக்கும் இடத்தையும் அறிந்து பேசவேண்டியது சிலாக்கியமாகும். (849)

வேறு

**புகழும்வெள்ளியும் பொன்னும்பிறைதனை**
**மகிழநோக்குற மந்தன்துலாத்துற**
**நிகழும்லோபத் தனமுடனேமியோர்**
**இகழவேயொரு காசொன்றுமீவிலான்.**

(இ-ள்) யாவரும் போற்றப்பட்ட சுக்கிரனும், தேவ புரோகிதரான குருவும், கடகராசிக்கு ஆட்சிநாதன் என்னும் சந்திரனை பலம்பெற்று பார்க்க, சனி துலாராசியில் உச்சம்பெற, அவன் தன் ஆயுள்வரையில் லோபத்தனத்தோடு உலகிலுள்ளோர் இகழ்ச்சிசெய்யவும், ஒருவருக்கும் ஒரு காசாவது கொடுக்கான் எ-று. (850)

**ஈதலீவ தெவர்க்கென்றுரைப்பது**
**ஓதுமொன்பதாம் வீட்டுக்குடையவன்**
**சாதிவர்க்கத் தவர்தமக்கேநிதி**
**வாதியாமன் மகிழ்ந்துவழங்குவன்.**

(இ-ள்) ஒவ்வொருவரும் தன் தனத்தை யாருக்கு கொடுப்பார் என ஆராயவேண்டுவதாயின் 12-ஆம் வீட்டோன் 9-ஆம் வீட்டதிபனாகில் தன் தந்தை வர்க்கத்தாருக்கு தன் தனத்தைத் தருவான் என்றும் சோதிட வல்லவர்கள் கூறுவார்கள் எ-று.

(வி-ரை) இவ்வாறே தனாதிபதி சுகாதிபதி விரயம்பெற்று, விரயாதிபதி பாவனாகவும் இருந்து, 9-ஆம் வீட்டோன் பலம்பெற, தந்தை வர்க்கத்

தாருக்கும், 8-ஆம் வீட்டோன் பலம்பெற, மாமன் வகையராக்களுக்கும், 7-ஆம் வீட்டோன் பலம்பெற, களத்திர வர்க்கத்தாருக்கும், 3-ஆம் வீட்டோன்பலம்பெற, சகோதரவர்க்கத்தாருக்கும் சந்தோஷத்துடன் கொடுப்பான் என்று சொல்லுக. (851)

வேறு

ஓதுகதிருந்தேய்ப்பிறையுங் கூடிவியத்திலுறதனத்தை
நீதியரசர்கைக்கொள்வர் நிலவுங்குருவும்வியத்திலுற
போதுதனங்கண்மிகத்தேடிப் பொருந்துந்தன்மம்புரிந்தருளி
மீதிசிறிதுதனமிருக்க வாழ்வன்புவியில்வெகுகாலம்.

(இ-ள்) சூரியனுடன் தேய்பிறைச் சந்திரன் சகிதம்பெற்று 12-ஆம் இடமாகிய மோக்ஷஸ்தானத்தில் இருக்க, அவன் தேடிய தனத்தை முடிகளை அணிந்த அரசர்கள் கைக்கொள்வார்கள். சந்திரனோடு குரு சேர்ந்து 12-ல் நிற்க, அவன் அநேகதனங்களைச் சம்பாதித்து சிறிதளவு தனத்தைத் தன் வாழ்நாளுக்காக வைத்துக்கொண்டு மிகுதியுள்ள தனத்தை நல்ல தரும பரோபகாரங்களுக்குச் செலவழித்து நெடுநாள் இப்பூமியில் வாழ்ந்து இருப்பான் எ-று. (852)

வேறு

காலமாம்வியந் தன்னிலங்காரகன்
சாலநிற்கத் தனித்துங்கண்ணோக்குறில்
ஞாலமீதிற் புதைத்திடுநற்பொருள்
வாலைகேட ரியாமன்மறக்குமே.

(இ-ள்) ஜனனகாலங்களில் மேஷ விருச்சிகங்களும் ஆட்சிநாதனுகிய குஜன் 12-ஆம் இடமாகிய மோக்ஷ ஸ்தானத்தில் இருந்தாலும், அல்லது தனித்திருந்தாலும், 12-ஆம் ராசியை நோக்கினாலும் அவன் இப்பூமியில் புதைத்த பொருளை இடம் தெரியாது மறந்து அலைந்து திரிவான் எ-று. ()

பன்னிரண்டாம் பாவகம் முற்றிற்று.

# கர்ப்பாதானம் அறிய



'கெர்ப்பாதானம்' என்பது, சந்திரன் அப்புவின் அம்சமும், செவ்வாய் தேயுவின் அம்சமும் எனப்படுவார். ஆகையால் அப்புவின்கூறு இரத்தமும், தேயுவின்கூறு பித்தமும் ஆகும். இர்த முறையால் பித்தத்தினால் இரத்தம் அதிகரித்தபோது ஆர்வம் உண்டாகும். இதன்முறையை சொல்லுமிடத்து ஜெனனகால சந்திரா லக்கினத்திற்கு கோசார வசத்தில் சந்திரன் அனு உபயராசிகளான 1-2-4-5-7-8-9-12 இவ்விடங்களில் பிரவேசித்து செவ்வாயின் பார்வைபெற்றால் மாதந்தோறும் பூப்புருங் காலமாம். கருவுண்டாகும் கருவியானது வாய்மலர்ந்திருக்குந் தன்மையால் பூப்புவதி அல்லது புட்பவதி எனவும், கருதரிக்கும் பக்குவமுடையவள். ஆதலால் இருது மதி எனவும், சுரோணிதம சிவப்பு நிறமாகத தோன்றும் காரணத்தால் ரஜசுவலை எனவும் கற்றோர் கூறுவர். அப்பிண்டமானது தாய் அருந்திய அன்ன ரசத்தைத் தான் அருந்தி வளர்த்தலால் கர்ப்பம் என்றும் பெயராகும்.

ஆண்பால் இடத்துள்ள சுக்கிலத்தோடு விளங்கும் ஆத்மாவை பெண்பால் இடமுள்ள சுரோணிதத்துடன் கலப்பதால் கர்ப்பாதானம் என்றும் மற்றொருபெயராகும். பூப்பிற்கும் காமத்திற்கும் பெண்தன்மைக்கும் காரணபூதனாய் காமதேவனுடைய தசாங்கிசத்தில் குடையாய் விளங்குபவர் சந்திரனாகையால், சந்திரன் இருந்த நிலையைக்கொண்டே கர்ப்ப நிலையைக் கூறுவது அவசியமாகும்.

கர்ப்போற்பத்தி சந்திரனால் சொல்லவேண்டும் என்பதற்கு மற்றொரு காரணமும் கூறலாம். புண்ணியாத்துமாக்கள் சூரியமார்க்கத்தில் சென்று முத்தி பெறுவார். பாப ஆத்துமாக்கள் சந்திர மார்க்கத்தில்சென்று தமது வினைப்பயனுக்கு ஏற்றவாறு உலக போகங்களை அனுபவித்து சந்திரமார்க்கத்திற்கு வந்து புனர் ஜெனனத்தைப் பெறுவாரென வேதாந்தங்களில் கூறியிருப்பதனால் சந்திரனிருக்கும் பலத்தைக்கொண்டே மனிதர்களின் ஜெனனகாலத்தை அறியவேண்டியது ஒழுங்காகும்.

மனிதர்கள் தாயின்கெர்ப்பத்தில் வசிக்குங்காலம் சூரிய சௌரமானத்தினால் 9-மாதமும் சந்திர சௌரமானத்தினால் 10-மாதம் என்றும் பொதுவாகக் கூறவேண்டிய விதியாகும். சிலர் தாய்கருவில் 3-வருடம் 12-வருடம் கெர்ப்பமாக இருப்பார்கள் என்று முன்சொல்லிய 5-ஆம் பாவகத்திலும் காணலாம்.

சந்திரன் ஜீவர்களுக்கெல்லாம் பிராணசொருபனும், ஜீவசொருபனும் ஆகிறான் என்பதற்கு இதுவே போதுமான அத்தாக்ஷியாகும். ஆண் பெண்கள் கூடிக் கலந்த இரவில் சுக்கில சுரோணிதம் கலப்புறுகின்றன. 5-இரவில் வர்த்துலாகாரமாகி இலந்தைப்பழம் பிரமாணமும், அதன்பிறகு மாமிசபிண்ட வடிவமும், முட்டை வடிவமும் ஆவதால் சம்போககாலமே கர்ப்போற்பத்தி சமயமென்று கொள்ளாமல் அதன்பின்னர் சிலநாட்கள் சென்றே கர்ப்போற்பத்தி என நிகழ்த்தல்கூடும. கர்ப்போற்பத்தி சம்போக காலமுதல் ஐந்துதினங்கள் செல்லுமென பாகவதவசனத்தால் காணலாம். அதாவது மாதவிடாயாகி ஸ்நானம்செய்து 5-நாள் பிந்தியே கர்ப்பாதானம்

உண்டாகுமென்பது மேல்நாட்டோராலும், நம் நாட்டுக் கணிதவல்லோர்களாலும் ஆராய்ந்தறிந்த உறுதியாகும் - ஜெனனகால சந்திர ஸ்புடமானது லக்கினத்திற்குச் சரியாகயிருந்தால் 273-தினத்திலும், 7-ஆம்பாவகஸ்புடத்திற்குச் சரியாக இருந்தால் 258-தினத்திலும், 8-9-ஆம் பாவகஸ்புடத்திற்குச் சரியாக இருந்தால் 288-தினத்திலும் பிரசவமாகுமெனச் சொல்லப்பட்டிருக்கின்றன. 245-தினங்களுக்குமேல் 301-தினங்கள் வரையில்தான் தாய் கர்ப்பத்திலிருப்பார் என்று மேல்நாட்டு வைத்தியர்களின் கொள்கையாகும். அஷ்டாங்க ஹிருதயம் 1-வது அத்தியாயத்தில் 8-ம்மாதம் முடிந்து ஒருநாள் கழிந்தாலும், அதன்பிறகு எத்தினமும் பிரசவகாலத்திற்கு ஏற்ற நாளென்றே சொல்லப்படுகின்றன. இதன்விபரம் காணுவதாகில் சந்திரன் விருத்திகலையுடன் லக்கினத்திற்கு மேல்புறத்திலிருந்தால் அல்லது கூடிய கலையுடன் லக்கினத்திற்கு கீழ்ப்புறத்தில் இருந்தாலும் கர்ப்பவாசகாலம் 273-நாட்களுக்குக் குறைவாகும் சந்திரன் விருத்திகலையுடன் லக்கினத்திற்குக் கீழ்ப்புறத்தில் இருந்தாலும், கூடியகலையுடன் மேல்புறத்தில் இருந்தாலும் 273-தினங்களுக்கு அதிகமாகும். இவ்வாறே கெர்ப்போற்பத்தி அறிவது நன்றாகும்.

கர்ப்பத்தானலக்கினத்தில் கிளரும்பலன்கள்புரவலனும்
கர்ப்பத்திரிகோணத்திருக்கக் கருவிலுதித்ததாணாகும்
இர்ப்பச்சசிக்குஞ்சூரியற்கு மேழிற்சனிசெவ்வாயிருந்தால்
பொர்ப்புநிறையும்புருடனும் பூவைதனக்குநோய்வருமே.

(இ-ள்) கெர்ப்பஸ்தான லக்கினத்தில் சொல்லவேண்டிய பலன்கள் என்னவெனில், கெர்ப்ப லக்கினாதிபதி குரு கர்ப்ப ஸ்தானத்திற்கு திரிகோணமென்னும் 1-5-9-ஆம் ராசியிலிருக்க அவன் கருவில் உண்டாவது ஆண்பிள்ளையாகும். சந்திரன்-சூரியன் இவர்கள்நின்ற ராசிக்கு 7-ம்ராசியில் சனி-குஜன் இவர்களிருந்தால் சேர்க்கையையுடைய புருடனுக்கும் அவன் மனைவிக்கும் நோய் உண்டாகும் எ-று. (854)

வருஞ்சூரியர்க்குமுந்நான்கி லிரண்டின்மந்தன்செவ்வாயும்
தெரிந்தேகூடும்வேளையினிற் சேர்ந்தாற்கரிட்டஞ்செழுமதிக்கும்
பரிந்திரண்டின்முந்நான்கிற் பங்குபாதன்குசன்கூடி
இருந்தபோதுபுணர்ந்திடவே யேழைக்கரிட்டமெய்திடுமே.

(இ-ள்) சூரியன் நின்ற ராசிக்கு 2-12-ஆம் ராசிகளில் சனி-செவ்வாய் கோசாரப்படி சேருங்காலங்களில் சம்போகம் செய்வானாகில் அவனுக்கு அரிட்டம் சம்பவிக்கும். சந்திரனுக்கு 2-12-ஆம் ராசிகளில் பங்குபாதனும் குஜனும் கோசாரப்படி கூடும்நாட்களில் சேர்ந்தால் அந்த ஸ்திரீக்கு அரிட்டம் ஏற்படும் எ-று.

(வி-ரை) இவை அவரவர்களுடைய ஜாதக கிரமப்படி சூரியனுக்கு 2-12-ல் சனி-செவ்வாய் தினசரி பஞ்சாங்கப்படி ஓர்வீட்டில் பிரவேசிக்குங் காலம் புணர்ச்சி செய்யின் புருடனுக்கு அரிட்டமும், சந்திரனுக்கு 2-12-ல் குஜன் பங்குபாதன் வாசகாலம் ஸ்திரீக்கும் அரிட்டம் உண்டாகும். இதை இராசு நோக்கத்தால் காண்பது நன்றாகும். (855)

எய்தியிளைத்தமதிதனக்கு நான்கில்வியத்திலிரவிகுசன்
வய்திக்கூடிலிருக்கிலந்த மாதுக்கரிட்டம்புணர்நாளை
செய்துமதிக்கோரிருபுறமுந் தீயுரிருக்கத்திருக்கரிட்டம்
உய்துமுதயத்தான்கிரக மாணுங்கிசையிலுறவாணும்.

(இ-ள்) தேய்பிறைச் சந்திரனுக்கு 4-12 இவ்விராசிகளில் சூரியன் குஜன் வாசகாலம் புணர்ச்சி செய்யின் அந்த பெண்ணுக்கு அரிட்டமுண்டு. சந்திரனுக்கு இரண்டுபுறமும் தீயகிரகங்கள் சேருங்காலம் புணர்ச்சி செய்யினும் அந்த ஸ்திரீக்கே அரிட்டமுண்டு. சேர்க்கை காலங்களில் இரண்டரை நாழிகைக்கு ஒருவராக மாறிவரும் காலே ஓரைப்படியும், உதயகாலம் ஆண் கிரகமாகவும், ஆண் கிரக அம்சிசையிலும் புணர்ச்சிசெய்யின் ஆண் என்றும் கூறுவர் எ-று. (856)

## பெண்கிரகமிருந்து பெண்ணங்கிசம்பெறின் பெண்ணாம்

ஆனமதியின்கலைக்குப்பெண் ணுகுங்கடிகையைந்துக்குள்
தானுங்குறையாதிடிற்சீவன் றன்னிக்குறையாதிருந்திடுமே
தேனின்மொழியாயிரவிகலை செல்லிற்செல்வனப்போது
ஊனங்கடிகைசென்றபடி யுயிருண்டென்பாருறவோரே.

(இ-ள்) சந்திரன் கலையாகவிருந்து அக்காலங்களில் புணர்ச்சிசெய்யின் பெண் என்றும், அக்கலையானது 5-கடிகைக்கு குறையாமல் இருக்கில், அக்குழந்தைக்கு தீர்க்க ஆயுள் உண்டு. தேனுக்கும் மேன்மையான இனிப்புடையவளே! சூரிய கலையாகில் ஆண் என்றும், அக்கலையில் எத்தனை கடிகை சென்றனவோ அத்தனை வயதென்றும் கூறுவாயாக எ-று. (857)

உயரும்பவனனெதிராகி லுபயமாகுமிருபுறமும்
பெயரப்பாவர்சுழிபுகுதப் பெற்றதலியாம்பின்னுமவர்
உயரமளவேயுறுக்காணு முபயருதரமுறமலத்தில்
பெயருந்தகைமைதனைப்போலிப் பிள்ளைக்குணமும்பெற்றிடுமே.

(இ-ள்) ஆகாயத்தில் உலாவும் காற்று எதிராகவரின் அல்லது இருக்கின் இரண்டு குழவிகளுண்டு. இருபக்கங்களிலும் கலைவளர்ந்து சுழியின் உள்ளாக இருக்க, அக்காலத்தில் சேர்ந்து ஏற்படும் கெர்ப்பம் அலியாகப் பிறக்கும். மேற்சொல்லியவர்கள் எவ்வளவு உயரம் இருந்தார்களோ, அவ்வளவு உயரம் உருவே இருக்கும். அன்றியும், சேர்க்கை காலங்களில் மலசிக்கல் உண்டாயின் அக்காலங்களில் பிறந்தது பேதமையை யுடைய பிள்ளையே பிறக்கும் எ-று. (858)

கர்ப்பாதானம் முற்றிற்று.

---

# பெண்கள் ஜாதகம்

வேறு

திருவனைய மடவார்க ளம்புவியின்மீது
செனித்தபல சாதகத்தின் திறமைகூறும்
கருவுதய காலலக்கினஞ் சசிலக்கினமுங்
கண்டுவடி வுடனிறமுங் கருதியிடவேண்டும்
மருவியசத் தமராசியா லாடவன்தன்குணமும்
மகிழ்நற்குண முந்தெரிந்து வழுத்தலுமேவேண்டும்
உருவுதய லக்கினத்திந் திருக்கிலழகுள்ளாள்
ஒரேழிற் சசியுறப்பார்த் தாவழகுள்ளானே.

(இ-ள்) இப்பூமியின்கண் பிறக்கும் பெண்களின் ஜாதகங்களைப்பற்றி பேசுவது எப்படியெனில், ஜெனன லக்கினம் என்னும் உடல் லக்கினத்தைக்கொண்டும், சந்திரன் நின்ற ராசியான உயிராகிய சந்திரலக்கினத்தைக்கொண்டும், அக்குழவியின் வடிவம் நிறம் முதலிய அடையாள விபரங்களைச் சொல்லவேண்டும். 7-ஆம் ராசியைக்கொண்டே அந்தக் குழவியின் குணமும், அவள் பர்த்தாவின் குணத்தையும் கண்டு சொல்லவேண்டும். உடல் லக்கினமென்னும் ஜெனனலக்கினத்தில் சந்திரன் இருக்கில் அழகு உடையவள் ஆவாள். 7-ஆம் ராசியில் சந்திரன் இருக்கில் அவள் பர்த்தா அழகுடையவன் என்றே கூறுவர் எ-று.

(வி-ரை) சிலர் 7-ஆம்ராசியை போகஸ்தானம் என்றும், 8-ஆம்ராசியை பர்த்தா ஸ்தானம் என்றும் கூறுவர். 8-ஆம் ராசியை பர்த்தா ஸ்தானம் என்பதின் கருத்தென்னவெனில். பர்த்தா ஸ்தானம் ஏதொரு குரூரமும் இன்றி இருக்குமாகில் அந்த ஜாதகி ஏதொரு துன்பமுமின்றி அநேகநாள் சுமங்கிலியாய் இருப்பாள் என்பதன் கருத்தாம். (859)

உள்ளபிறை லக்கினமுஞ் சன்மலக்கினமும்
உறுமிரட்டை யாகில்வடி வுடையமயிலாகும்
தெள்ளியவம் மனையிரண்டு நல்லோர்கள்காணில்
திரளாகப் பணியணிவள் செகத்ததிருபியுமாம்
கொள்ளுமிரு மனையொற்றை யாகிலாண்சொரூபி
கூறுநல்லோர் கண்டிடினற் குலஞ்செல்வங்குலவும்
கள்ளமுறும் பாவரந்த ராசியிரண்டினிலே
கலந்திருக்கிற் கண்டிடிற்பொல் லாப்பாவக்கன்னி.

(இ-ள்) சந்திரா லக்கினமும் ஜெனன லக்கினமும் இரட்டைராசியாக இருக்கின் அப்பெண்குழவி அழகுடையதாகவே இருக்கும். மேற்சொன்ன இரண்டு லக்கினங்களையும் சுபகிரகங்கள் பார்க்கில் அப்பெண் அநேக நகைகளை அணிந்துகொள்பவளாவள். அன்றியும் இப்பூமியில் அதிக ரூப லாவண்ய முடையவளாகவும் இருப்பாள். சந்திரன் நின்ற லக்கினமும்,

ஜெனன லக்கினமும் ஒற்றைராசியாகயிருக்கின் ஆண் வடிவுள்ளவளாவாள். அவ்விரண்டு ராசிகளையும் சுபகிரகங்கள் பார்க்கில் அவள் உத்தம குலமென்னும் மேலான குலத்தில் பிறந்தவளும் செல்வம் உடையவளும் ஆவாள். கள்ளத்தனமுடைய பாவகிரகங்கள் சேர்ந்து இருந்தாலும் பார்த்தாலும், பொல்லாதவளும் பாவமுடையவளும் ஆவாள் எ-று.

(வி-ரை) பாவகிரகங்கள் பார்த்தால் பொல்லாதவளும், பாவமுடையவளும் ஆவாள் என்பதை, லக்கினத்தில் சூரியன் செவ்வாய்நிற்கில் விதவையும், தரித்திரமுடையவளும், குருவுக்குப் பின்புறம் சுக்கிரன் இருந்தாலும் விதவையாவாள். ஆயினும் போகமுடையவளாவாள். மகர கும்பம் ஜெனன லக்கினமாக அதில் சுக்கிரன் இருந்து பாவ கிரகங்களால் பார்த்தால் மலடி என்றும் கூறுக. (860)

கன்னிகேள் சன்மத்திற் பிறைசுங்களிருக்கில்
  கமழ்பெருமை யுடன்சுகியாய்க் காசினியில்வாழ்வள்
உன்னுமுத யத்திலிந்து புதனுமேகூடில்
  உணர்வள்பல கலைபோகி யோதியநற்குணத்தாள்
இன்னஞ்சன் மந்தன்னில் புதனுஞ்சுக்கிரனும்
  இருந்தக்கால் ஞானியதி ரூபியினிதுரைப்பாள்
மின்னுமொரு மூன்றகத்திற் சுபக்கோள்கன்நிற்கில்
  வெகுதனநற் குணந்தயவு விரவுசுகமுள்ளாள்.

(இ-ள்) அழகு பொருந்திய பெண்ணே! இன்னும் கேட்பாயாக. ஜெனன லக்கினத்தில் சந்திரனும் சுக்கிரனும் இருக்க, நீங்காத பெருமையுடன் சவுக்கியமும், மாங்கல்ய ஸ்திரீயாகவும் நெடுநாள் வாழ்ந்திருப்பாள். ஜெனன லக்கினத்தில் புதனும் சந்திரனும் இருக்கில் அந்த ஜாதகி பற்பல வேதங்களைத் தெரிந்துகொள்ளுபவளும், போகமும் நற்குணமும் உடையவளாக இருப்பாள். ஜெனன லக்கினத்தில் புதனும் சுக்கிரனும் இருக்கில் அந்த ஜாதகி ஞானமார்க்கங்களை அறிபவளும், அதிக ரூபலாவண்ய முடையவளும், இனிமையான மொழிகளைச் சொல்லுபவளும் ஆவாள். லக்கினத்திற்கு 3-ஆம் ராசியில் சுபகிரகங்கள் இருக்கில் அதிக தனத்தைப் படைப்பவளும், நற்குணமும் தயவும் மேன்மையான சுகத்தை யுடையவளுமாக இருப்பாள் எ-று.

(வி-ரை) ஜெனன லக்கினத்தில் உச்சகிரகமிருந்து அவனோடு புதன் கூடினாலும், அல்லது புதன் உச்சம்பெற்று லக்கினாதிபதி ஆகிபெற்றாலும் சுகமும் தனமும் உடையவளென்றும், பாவகிரகங்கள் உச்சம் பெற்றாலும் மேற்சொல்லிய பலனுக்கு தோஷமில்லையாம். (861)

உள்ளபல பாவரெட்டி லிருந்தக்கால்விதவை
  உளதாவ தென்றெனி லோரெட்டாமதிபன்
தெள்ளியவங் கிசைக்கிறைவ னஷ்டகவர்க்கத்தில்
  சேர்வருட மெத்தனையோ வத்தனையாண்டதனில்
மெள்ளவித வையுமாவ ளிரண்டினில்நல்லோர்கள்
  மேவிலவள் கணவனைத்தான் விட்டுமுன்போய்விடுவள்

கள்ளமுறுந் தேளிடபங் கன்னியெனுமூன்றில்
கலைமதிமே வில்புத்திர ரற்பந்தான்காணும்.

(இ-ள்) ஜெனன லக்கினத்திற்கு 8-ஆம்ராசியில் பாவகிரகங்கள் இருந்தால் விதவையாவாள். அவை எத்தனை வருடத்தில் விதவையாவாளெனில், 8-ஆம் ராசிநாதன் இருந்த அங்கிசாதிபதி அஷ்டவர்க்கப்படி அவர்கள் நின்ற ராசியில் எத்தனை பிந்துகள் இருந்தனவோ அத்தனை வருடத்தில் விதவையாவாள். இரண்டில் சுபகிரகங்கள் இருக்கில் அவள் தன் கணவனுக்கு முன்னே இறந்துபோவாள். பெண்களுக்குக் கொடிய க்ஷேத்திரமான விருச்சிகம்-ரிடபம்-கன்னி என்னும் இம்மூன்று ராசிகளில் ஒன்றில் கலைகளையுடைய சந்திரன் இருக்கப் பிறந்தவள் புத்திரதோஷம் உடையவளாக இருப்பாள் எ-று.

(வி-ரை) பெண்கள் ஜெனனத்திற்கு 8-ஆம் ராசி விசேஷமென்று முன்னமே கூறியுள்ளேன். ஆனதால் 8-ல் நின்ற கிரகங்களைப்பற்றியும், 8-ஆம் ராசியைப்பற்றியும் நன்கு ஆராய்ந்துணரவேண்டும். எப்படியெனில், 8-ல் பாவகிரகங்கள் இருக்கில் அவள் சீக்கிரம் விதவையாய்விடுவாள், 8-ல் புதன் இருக்கில் அவள் புருடன் துர்மரணமாகுவன். சுபரும் பாவரும் பார்க்கின புருடன் இறந்த 3-ஆம் மாதம் தானும் இறந்துபோவாள் என கிரகபலம் அறிந்து பிரிததுச் சொல்லுக. (862)

காணியாஞ் சனியனுமே பலத்திருக்கவேதான்
கணக்கன்மதி பிருகீனக் காரரகத்திருக்க
ஆணியந்த ராசியொற்றை யாகவுமேசன்மம்
அடுக்கமற்றோ ரொற்றைகளி லன்புடனேயிருக்க
நீணிலத்திற் பிறந்தாள்தன் புருடனுக்கோரரசாய்
நிருபதியாய்ச் சுவாமியாய் நேசமுடனிருப்பள்
பேணியதோ ரேழிற்றீக கோளுமுமமூன்றில்
பெருமையுள்ளோ ருறச்சந்நி யாசிப்பெண்ணுவள்.

(இ-ள்) ஜெனன காலத்தின்போது ஜெனன லக்கினம் ஒற்றை ராசியாகவும, சனி பலம்பெற்றும், புதனும் சந்திரனும் ஈனகிரகங்களின் ராசியிலிருக்க, மற்ற கிரகங்கள் ஒற்றை ராசியில் இருக்க பிறந்த ஸ்திரீயானவள் தன் புருடனுக்கு அரசனாகவும, கடவுள்போனறவளுமாக அதிகபாசபந்தத்துடன் இருப்பாள். லக்கினத்திறகு 7-ஆம் ராசியில் பாவகிரககளும், 3-ம் ராசியில் பெருமையையுடைய சுபகிரககளும் இருக்க, அவள் சந்நியாசித்தனம் உள்ளவளாவாள் எ-று.

(வி-ரை) 7-ஆம் ராசியில் பாவகிரகங்கள் இருந்தால் சந்நியாசி என்பதையும் பற்பலவிதமாக பிரிததுச்சொல்வது நலமாகும். 7-ல் சனி இருக்க அவள் பிறரால் கொலை செய்யப்படுவாள். குஜன் இருக்கில் விதவை, குரு இருக்கில் சிறைவாசம், செவ்வாய் புதன் இருகக தனநாசம் உடையவள், சூரியன் நிற்கில் வியாதியுடையவள், இராகு நிற்கில் தன்னைப் பெற்றோர் நாசமாகுவா. சந்திரனும் சுக்கிரனும் சோநது நிற்கில் அந்நியதேசங்களில் மரணம என்றும், இன்னும் 7-ஆம ராசியைப் பார்த்த கிரகங்கள் பலமறிந்தும் 7-ம் ராசிநாதனைக்கொண்டும் மேற்கண்ட பலனைச்சொல்லுக. (863)

ஆகரெட்டை ராசிதனிற் குருசெவ்வாய்புந்தி
அதிபலமா யிருந்தக்கா லவனியிற்மேற்குலமும்
வாகுடனே பலகலைக ளறிந்திடுநற்குணமும்
மாதருக்குள் முக்கியமா மயிலுமாகுவளே
சேகரமாம் பரிதிமதி கூடியேநிற்கிற்
றெரிந்துபல விதத்தொழிலே செய்துஜீவிப்பள்
மோகமுடன் கதிர்செவ்வாய் கூடியுமேநிற்கில்
முழுப்பாவி யாவளென்றே மொழிந்திடுவர்பலரும்.

(இ-ள்) ஜெனன காலங்களில் இரட்டை ராசிகளில் குஜன்-புதன்-குரு இவர்கள் பலம்பெற்றிருக்க, அவள் மேலான நற்குலத்தில் பிறந்தவளும், பற்பல சாஸ்திரங்களை அறிபவளுமாக இருப்பாள். மேலும் நற்குணமுடையவளும், ஸ்திரீகளில் முக்கியமானவளும், மேலான அழகைப்படைத்தவளுமாக இருப்பாள். சூரியன்-சந்திரன் இவர்கள் சேர்ந்து நிற்கில் அவள் பற்பலவிதமான தொழில் செய்து ஜீவிப்பவளாவாள். சூரியனும் குஜனும் கூடியிருக்கில் அவளைப் பலரும் பார்த்து இவள் கொடியபாவி என்றும் சொல்ல பெயரெடுப்பாள் எ-று.

(வி-ரை) ஜெனன லக்கினாதிபதியை புதன்-குரு-சுக்கிரன் பார்க்கில் அந்த ஸ்திரீயானவள் குறைவில்லாத செல்வத்தைப்படைத்தவளும், பொற்குவியலும், சனி கூடி நிற்கில் அற்ப ஆயுளுடையவளும், பேதைமையும் ஆவாளென்று சோதிடவல்லோர் கூறுவர். (864)

வேறு

பலரும்பணி கதிர்புந்திகண் மருவும்பொழு தெழில்சேர்
பலர்சிந்தனை யறிவாள்புகழ் பரவுஞ்சுக சரீரி
அலருங்கதிர் குருவொன்றிடி லதிவஞ்சனை யாள்முன்
அனுகுந்தொழி லறியாள்பிற கறிவான்வரு கருமம்
மலரம்புய வதிபன்பிரு குடன்வந்துறின் மற்போர்
வனையுங்கொடி யவளாயுத வகையானிதி தேடும்
சலமுண்டிடு கதிர்மந்தனை யனுகும்பொழு துலகிற்
றகுபித்தளை செம்போடு தராவிற்று மிருப்பாள்.

(இ-ள்) யாவரும் போற்றும் சூரியனும் புதனும் கூடி இருக்க, மேன்மையைப்படைத்த பற்பலகாரியங்களை அறிபவளும், பிரக்யாதியைப்படைத்தவளும், சுகசரீரம் உடையவளும், சூரியனும் குருவும் கூடி இருக்க முன் அனுபவித்ததை அறியாதவளும், மறந்துபோகுபவளும், இனி வருங் காரியத்தை தெரிந்துகொள்ளுபவளும், இப்பூமிக்கு அரசனாய் விளங்கும் சூரியனோடு சுக்கிரனும் கூடி இருந்தால் சண்டைக்காரியும் ஆவள். ஆயுதக்கருவி என்னும் வாள் முதலியவைகளால் செல்வத்தைச் சம்பாதிப்பவளும், சூரியன் சனியுடன் சேர்ந்திருக்க, அவள் இப்பூமியில் பித்தளை முதலிய செம்பு தராவென்னும் உலோக வகைகளை விற்று ஜீவிப்பாள் எ-று.

(வி-ரை) குருவும் சூரியனும்சேரில் பின்வருங்காரியத்தைத் தெரிந்து சொன்னதோடு ஜனனலக்கினத்திற்கு 7-ஆம் ராசியாகில் அவள் அரசரிமை

செய்பவளும், அழகுடைய குணவானும் நிறைந்த செல்வத்தைப் படைத்த பர்த்தாவையும் அடைவாள் என்றும் கூறுக. (865)

உய்யுமெரு தொடுகோலிவை யுதயமதின் மதியம்
உறையக்குச திரையெத்திசை யுறுமங்கிசை யாகில்
மையுந்திய குவளைச்செழு மலர்போலிரு கண்ணுள்
வகையுந்தொகை யறிவாள்சில வழிசால வுரைப்பாள்
எய்யுஞ்சனி திரையைத்தச மெனுமங்கிசை யென்னில்
இருவோர்கண வோர்தாமுள ரென்னும்மட வார்க்கே
மெய்யஞ்சொடு ரெண்டாமிரு வீட்டுக்கிறை யிருவர்
மிளிர்கேந்திர லாபத்துற வேவாகன முண்டாம்.

(இ-ள்) ஜெனன லக்கினம் ரிடபம் துலாமாகவும், அதில் சந்திரன் இருக்க, குஜன் திரிகோண ராசிகளிலும், திரிகோண ராசிக்குடையோர் அங்கிசையிலும் இருக்க, மைதீட்டிய கண்களும், அழகிய வாயும், இனிய சொற்களும் மலர்போன்ற இரண்டு கண்களையுடைய பெண்ணனவள் பற்பலவகை கணக்கு முதலியவைகளைத் தெரிந்துகொள்பவளும், பற்பல ஆலோசனைக் கூறுபவளுமாவாள். கொடியவனுகிய சனி திரிகோண ராசிகளில் தசாங்கிசம் பெற்றுமிருக்க, அவளுக்கு இரண்டு புருடன் உண்டென்றும், உயிர் லக்கினத்திற்கு இரண்டாவது வீட்டிற்குடையோனும், 5-ஆம் வீட்டிற்குடையோனும் கேந்திரங்களிலாவது லாபஸ்தானமென்னும் 11-ம் வீட்டிலாவதிருக்கின் அவளுக்கு வாகனங்கள் சித்திக்குமென்றும் கூறுவர்.

உண்டாகிய வைந்தாமிறை யுச்சக்குரு வாகி
உணர்வாலிப யவ்வன்ன வுருவமுள னுவன்
நண்டாகிய மனையுற்றிடி னுரிக்கிலை கணவன்
நரவாகன முளனுகுவ னவில்சுக்கிர னுகில்
மிண்டாகிய வெள்ளிக்கிசை பல்லக்குள வேந்தன்
விரவுஞ்சனி யாகிற்பரி வெண்சாத்திர முள்ளான்
கொண்டாடிய கன்மாதிபன் குருசுக்கிர னுகில்
கூறைந்தினி லேநின்றுற கொழுநன் சதசீவி.

(இ-ன்) ஜெனனலக்கினத்திற்கு 5-ம்வீட்டோன் குருவாகவும், அவன் கடகராசியில் உச்சம்பெற்றுமிருக்க, அவள்வாலிபனும் எவ்வர்ணகாந்தியையுடைய புருடனையும் அடைவாள். ஜெனனலக்கினம் கடகமாகவிருந்து அதில் குரு உச்சம்பெற, அவளுக்குக் கிடைக்கும் புருடனுனவன் நரவாகனங்களை யுடையவனுக இருப்பான். சுக்கிரன் 5-ல் உச்சம்பெற, வெள்ளி பல்லக்குடைய அரசனை யடைவாள். சனி உச்சம்பெறின் குதிரைகளும் பிரகாசமான வெண்மை சத்திரகூடம் உடையவனை அடைவாள். கொண்டாடப்பட்ட 10-ஆம் வீட்டோன் குரு சுக்கிரனுகவிருந்து அவன் 5-ஆம் ராசியிலிருக்க பூர்ண ஆயுளையுடைய கணவனை யடைவாள் எ-று.

(வி-ரை) 7-ஆம் ராசியில் சுக்கிரனும் சந்திரனும் இருக்கில் கிழவனை மணம் செய்துக்கொள்வாள் என்றும் சிந்தாமணியில் கூறுகின்றன. மேற் செய்யுளில் குரு 5-ஆம் இராசியில் இருந்தால் அல்லது உச்சம் பெற்றதால்

வாலிபனும் எவ்வர்ண காந்தி யுடையவனும் என்றபடி புருடன் கிடைக்கும் வயது அழகு முதலியவைகளைப்பற்றியும் ஆராய்வது நலம். (867)

சீவித்திடு குருசுக்கிர ஞருமனை சேரில்
தெரிவைக்கிசை கணவன்பிணி செறிமெய்யின னுவன்
பூவைக்குமுன் நான்கிற்குரு புரிசுக்கிரன் மேவில்
போந்தேவிடு மற்பாயசு புல்லாடன்மெய் யாவன்
பாவைக்குறு மைந்தாமிறை பரிவாயினி யவராய்ப்
பண்பாகிய வொன்பான்மனை பற்றப்பயி லொன்பான்
ஏவுற்ற மனைக்காதியி லாபத்துறி னீன்றோன்
எய்தும்பொரு ளுண்டானவை யெல்லாமிவ ளுக்காம்.

(இ-ள்) ஜெனன லக்கினத்திற்கு ஆறுமிடமான ரோகஸ்தானத்தில் சுக்கிரனும் குருவும் இருக்க அவளுக்குக்கிடைக்கும் கணவன் ரோகமுள்ளவனாக இருப்பான். 12-ஆம் ராசியில் குரு சுக்கிரன் இருக்கில் அவளுக்கு அற்ப ஆயுளுள்ளவனும், மெல்லியசரீரமும், நலிந்தவனாகவுமுள்ள கணவன் கிடைப்பான். 5-ஆம் ராசிக்குடையவன் சுபகிரகமாகவும், அவன் 9-ஆம் ராசியிலும் இருக்க, 9-ஆம்ராசிக்குடையவன் லக்கினத்திற்கு லாபஸ்தானம் பெற்றிருக்க, அவள் தன் தாய் தகப்பன் பூஸ்திதி யாவையும் அவளே அடைவாள் எ-று.

(வி-ரை) அம்புலி யாறினிற்கி லழகுண்டாம் புந்திகிற்கிற்
றெம்புட னழிவுண்டாகுஞ் சிகிகிற்கில் ரணமுமுண்டாம்.

எனவும் சந்திரன் ஆறில் இருக்கில் அழகும், புதன் கிற்கில் சந்தோஷமும் விரயமும் உண்டாகும். குரு கிற்கில் தனமுண்டு என்ற சாதக சிந்தாமணியின் வாக்கியப்படி ஆராய்ந்து கூறுவது நலம். (868)

ஆமெட்டதி பன்காரியொ டணுகிப்பதி னொன்றெட்
டமரிற்சத வயதாமவ ரத்தங்கத மாயின்
போமற்பம தாயாயுசு பொன்றும்விய மன்னன்
புரிகேந்திர லாபத்திரி கோணப்பதி புக்கி
தாமெத்தனை பேரோடுறி லாமத்தனை மனையாள்
தரிலற்றிடு வியநற்பதி சரமேலச லூரில்
நிமத்திர மாகிற்றம தூரத்தக மணமே
நிறைவாமுப யம்மென்னிலோ நீடுமதி தூரம்.

(இ-ள்) எட்டாம் ராசியதிபன் சனியுடன் சேர்ந்து 11-8 இவ்விடங்களில் இருக்க தீர்க்க வயதும், மேற்சொல்லியவர்கள் அஸ்தமயம பெற்று இருக்க அற்ப ஆயுளுடையவள் என்றும், 12-ஆம் ராசிக்குடையோன் குருவாகவும், லக்கினத்திற்கு கேந்திரம் லாபம் திரிகோணம் இவ்விராசிகளில் இருந்து அவனுடன் எத்தனை கிரகங்கள் சேர்ந்தனவோ அத்தனையாவது மனைவியாக இந்த ஜாதகி போய் அடைவாள். கொடுமையை விளைக்கும் அல்லது பர்த்தாவின் சுகத்தைக் கெடுக்கும். 12-ஆம் வீட்டுக்குடையோன் சரலக்கினங்களில் இருக்க, அந்த ராசிக்குடையவனுக்கு எவ்வளவுதூரமோ அவ்வளவு தூரத்தில் மணம் செய்துக்கொள்வாள். மேற்சொல்லிய 12-ஆம்

ராசியதிபதி உபயலக்கினத்தில் இருக்க, இன்னும் அதிக தூரத்தில் மணம் செய்துகொள்வாள் எ-று.

(வி-ரை) 8-ஆம் ராசியதிபதியைக்கொண்டு 8-ல் புதன் இருக்க அவள் நீண்டநாள் இருந்து மாங்கல்யம் இழப்பவளும், சந்திரனும் சுக்கிரனும் இருக்க அற்ப ஆயுளும், சூரியன் இருக்கில் சமவயதும், குஜன் இருக்கில் விதவையும், சனி நிற்கில் பிள்ளைகளைப்பெற்று இழப்பவளுமாக இருப்பாள் என்றும் சொல்க. (869)

வேறு

தூரமுறும் பனிரெண்டா மதிபன்றானும்
சுபகோளாய்ப் பலவானுய்ச் சுகவானுயின்
பாரமனே மேன்மெத்தை மாடங்கூடம்
பரிவுடனே யுண்டாமப் பதியினிலே வாழ்வள்
சேருமுத யந்திரமா யேழைந்தாம்வீட்டில்
சேர்ந்தவரெத் தனையுண்டத் தனைசேயுண்டாகும்
பாரறியச் சென்மம்வா மியமாகின்மூன்றும்
பதியுற்று ரெத்தனையப் பாலருளராகும்.

(இ-ள்) 12-ஆம் ராசிக்குடையவன் சுபகிரகமாக பலம்பெற்றும், சுபர்கள் வீட்டிலும் நிற்கப் பிறந்தவள் பெரிய குடும்பமும், அடுக்குயர்ந்த மெத்தையும், மாடகூடமுள்ள அலங்காரமான வீட்டில் வாழ்பவளாகுவள். ஜெனனராசி ஸ்திரராசியாகவும், 7-5 இவ்விடங்களில் எத்தனைகிரகம் இருந்தனவோ அத்தனை குழவிகளை பெறுவாளென்று சோதிடத்தோர் கூறுவார் எ-று.

(வி-ரை) கணவன் இருக்கும் அந்தஸ்தை கவனிப்பதோடு ஜாதகியின் குணம் பாவனை இவைகளையும் கவனிப்பது மிக்க நலம். 7-ல் சனி மூடம் பெற்றிருக்கப் பிறந்தவள் தன்கணவனை வஞ்சித்து விபசாரம்செய்பவளும், 7-ஆம் ராசி குஜன் வீடாகவும், அவ்வீட்டை பாவக்கோட்கள் நோக்க, தரித்திரமுடைய கணவனை யடைவாள். 7-ஆம்ராசி குருவீடாகவும், அவன் சுபவர்க்கம் பெற்றிருக்க, அறிவும் அழகும் கல்வி செல்வம் படைத்த முகவிலாசனை கணவனை அடைவாள் என்றும், 7-ஆம் வீட்டைக் குறித்துப் பேசுவது நலம். (870)

தாகமுட னேழைந்தா மூன்றதிபருடனே
சதிகூடி லோகுழவி தனக்கற்பவயதாம்
ஆகமகி ழொன்பதா மதிபதியாறெட்டில்
அமரிற்சூத் திரர்தமக்குற்ப வித்திடுசேயாகும்
ஏகும்வியத் தினிலிருக்கில் விப்பிரர்சேயாகும்
ஏழிலொன்பான் மனைக்ககிப னிரவியுடன்கூடில்
பாகவிய மெட்டாறைப் பற்றிலொன்பான்மனையோன்
பரிந்திருந்த வீட்டோனப் படியிருக்கில்விதவை.

(இ-ள்) 7-5-3-ஆம்வீட்டிற்குரிய கிரகங்களுடன் கூடியிருக்க, அவளின் குழந்தைகளுக்கு அற்ப வயதாகும். 9-ஆம் வீட்டுக்குடையோன் 6-8 இவ்விடங்களிலிருக்க, சூத்திரற்கு உற்பவித்த குழந்தையாகும். மேற்சொன்ன

9-ஆம் வீட்டோன் 12-ஆம் ராசியில் இருக்கில் பிராமணருக்குப் பிறந்தாகும். 9-ஆம் வீட்டோன் சூரியனுடன் கலந்திருந்து 12 8-ஆம் ராசிக் குடையவன் கூடி இருக்க, அல்லது 9-ஆம்வீட்டோன் நின்ற வீட்டுக்குடையோன் மேற்சொன்ன 12-8-ஆம் ராசிக்குடையோரைக் கூடி இருக்க விதவையாவாள் எ-று. (871)

வையகமெண் ணென்பதா மாதிபனேநல்லோர்
மனையிலுற மத்திமைமி லேவிதவையாவள்
செய்யவொன்பா றுதியுச்ச ளுகிப்பாவனுமாய்த்
தெரிவைசுமங் கலியாகித் தீர்க்கவயதுள்ளாள்
துய்யசன்ம மொன்பதா மாதியிவரிருவர்
தொடர்ந்துமா றுகநிற்கிற் றேன்றலுடனிறப்பள்
வெய்யதோ ரெட்டினிற்சந் திரபகவானிருக்கில்
விதவையெனப் பேர்படைத்து மேதினியிற்றிரிவள்.

(இ-ள்) உலகத்தோர் போற்றும் 9-ஆம் ராசிக்குடையோன் சுபகிரகங்களின் வீட்டிலிருக்க, அவள் மத்திமவயதில் விதவையாவாள். 9-ஆம் ராசியதிபதி பாவகிரகமாகவும் உச்சனுகவும் இருக்க, அந்த ஜாதகி தீர்க்கவயது உடையவளும், சுமங்கிலியாகவும் இருப்பாள். ஜெனன லக்கினுதிபதியும் ஒன்பதாம் வீட்டதிபதியும் சேர்ந்து அல்லது ஒருவர் வீட்டில் ஒருவரிருக்க அவள் தன் புருடனுடன் (உடன்கட்டை ஏறுவாள்) இறந்துபோவாள். அஷ்டமஸ்தானமென்னும் 8-ஆம் ராசியில் சந்திரன் இருக்க, அந்தஜாதகி விதவை என்ற பெயரெடுத்துத் திரிவாள் எ-று.

(வி-ரை) இத்துடன் 7-ஆம் இடத்தைக்கொண்டும் சிற்சில சேர்த்து எழுதப்பட்டன. 7-ல் சுக்கிரன் சந்திரனிருந்து இரண்டில் சுபகிரகங்கள் இருக்குமாளுல் அவள் தன் புருடனுக்குமுன் மரணமடைவாள். விர்ச்சிகம் புத்திரஸ்தானமாகவும், அதில் சந்திரன் இருக்கப் பிறந்தவர்களுக்கு ஆண் சந்ததி அற்பமாகும். 7-ஆம் வீடு சுக்கிரன் வீடாகவிருக்க அவள் காமாந்தகாரத்தில் அமிழ்ந்தவனை மணம் செய்துக்கொள்வாள் என்றும் சோதிடவல்லோர்கள் கூறுவார்கள். (872)

திருசெவ்வா யிருமனையுஞ் சனனமதாயதனில்
திங்களுற வேசெவ்வாய் திரியங்கிசாங்கிசமாய்
பரிவில்லா பாவிசனி திரிங்கிசாங்கிசமாய்ப்
பாலரிலா ளடிமைப் படுவளெனச்சொல்லும்
குருதிரியாங் கிசமாகிற் பதிவிரதையாகும்
குளிமேதை யங்கிசமா சாரமுளகோதை
விரிவெள்ளி யங்கிசைக்கு மெய்யதிருபியுமாய்
வெகுவயதாய்ப் பரபோகம் விரும்புமினியவளாம்.

(இ-ள்) குஜனுக்கு ஆக்ஷிவீடான மேஷம்-விருச்சிகம் இவை ஜெனன லக்கினமாகவும், அதில் சந்திரனிருக்க லக்கினுதிபதியாகியகுஜன் திரிசாங்கிசம்பெற, துக்கத்தைத்தரும் சனியும் திரிசாங்கிசம்பெற அவள்மகப்பேறு

இல்லாது அல்லது அமைப்பட்டு இருப்பாள். குருபகவான் திரிசாங்கிசம் பெற்றிருக்க, அவள் மிக்க பதிவிரதையாக இருப்பாள். குளிகன் அங்கிச மாகில் அவள் ஆசாரமுடையவளாக இருப்பாள். சுக்கிரன் அங்கிசமாக இருக்க அவள் அர்கியர் போகத்தை இச்சிப்பவளும், அதிக ரூபலாவண்ய முடையவளும் தீர்க்க வயதும் உடையவளாவாள் எ-று. (873)

இனியவெள்ளி யிருமனையுஞ் சென்மமதாயதனில்
இந்திருக்கச் செவ்வாயங் கிசமாயிற்கொடியாள்
சனியினங் கிசமாகிற் கணவனையும்விட்டே
சஞ்சலமாய் வேறொருவன் றனக்குப்பாரியுமாம்
நனிகுருவங் கிசமாகி னற்குணமேயுள்ளாள்
நாடுபுத னங்கிசத்தி னல்வகைஞானியுமாம்
கனிமொழியாள் சுக்கிரனங் கிசமாயிற்றன்சொல்
கருத்தினிய ளாயிருப்பள் காசினியோர்போற்ற.

(இ-ள்) சுக்கிரனுக்கு ஆக்ஷிவீடாகிய ரிடபம் துலாம் ஜெனன லக்கின மாகவும், ஜெனன லக்கினத்தில் சந்திரன் இருக்க, அவன் குஜன் அங்கிசம் பெற அவள் கொடியவளாகுவள். சனி அங்கிசம்பெற அவள் தன்கணவனை மனவியாகூலத்தால் விடுத்து இன்னொருவனுக்கு மனைவி ஆகுவாள். குரு அங்கிசமாக இருக்க, நல்ல உத்தமகுணமுடையவள் ஆவாள். புதன் அங்கி சம்பெற்றிருக்க, அவள் நான்குவித கலையுணர்ந்த ஞானியாவாள். சுக்கிரன் அங்கிசமாகில் உள்ளன்புடன் பேசுபவளாவாள். மேலும் உண்மையான நல்ல வசனமும் இவ்வுலகத்தோர் போற்றும்படி சுகத்தை அனுபவித்து இருப்பாள் எ-று. (874)

போற்றுபுத னிருமனையுஞ் சன்மமதாயதனில்
புனிதமதி யேயிருக்கப் பூசுதனங்கிசமாம்
ஏற்றமதாய் வேலைசெய்வள் சனிதனக்கங்கிசையாய்
இருப்பளலி வடிவாகக் குருவாகிலினியாள்
நாற்றிசையெண் ணும்புதனங் கிசைதனக்கேஞானி
நாடுஞ்சுங்க னங்கிசைக்கு நற்குணமுமுள்ளாள்
தேற்றுகட கஞ்சென்ம மாய்த்திங்களிருக்கச்
செவ்வாயங் கிசமாகிற் சேர்வள்பலருடனும்.

(இ-ள்) யாவரும் போற்றும் புதனுக்கு ஆக்ஷிவீடான மிதுனம் கன்னி ஜெனன லக்கினமாக, அதில் சந்திரன் இருந்து குஜன் அங்கிசம்பெற்று இருக்க, அவள் மனமிடையாது எந்த வேலைகளையும் செய்வாள். சனி அங்கிசமாகில் அவள் அலிவடிவாகவும் இருப்பாள். குரு அங்கிசம் பெற்று இருக்கில் நன்மையும் நல்லவளும் ஆவாள். புதன் அங்கிசம்பெற்று இருக் கில் ஞானியாவாள். சுக்கிரன் அங்கிசையாகில் நற்குணமுடையவளாவாள். கடகலக்கினமாக இருந்து அதில் சந்திரனிருக்க பலருடனும்சேர்வாள். ()

உடன்கடகஞ் சென்மமதா யதிலிந்துமிருக்க
உயர்சனியங் கிசையாயி னுறுகணவன்றனையே
திடமுடனே கொல்வதற்குச் சினமாகியிருப்பள்
சேர்புதனங் கிசந்தனக்கே சிற்பத்தொழிற்செய்வாள்

அடல்குருவங் கிசையாயிற் குணமினியாள்வெள்ளி
அங்கிசையா கிற்சாது வாகியுமேயிருப்பள்
மடமயிலே கேளங்கிசை யென்றுரைத்தவெல்லாம்
வருந்திரங்கி சாங்கிசையாய் மனதிற்கண்டுணர்வாய்.

(இ-ள்) சந்திரனுக்கு ஆக்ஷிவீடாகிய கடகம் ஜெனன லக்கினமாக இருந்து, ஜெனன லக்கினத்திலேயே சந்திரன் இருந்து சனி அங்கிசம் பெற்றிருக்க, அவள் தன்னை மணந்த கணவனை கோபத்தோடு கொல்ல தைரியமுள்ளவள் ஆவாள். புதன் அங்கிசம்பெற்றிருக்க சிற்பத்தொழில் செய்யும் சக்தி வாய்ந்தவளாக இருப்பாள். மேன்மைபெற்ற குரு அங்கிசமாக இருக்க, அவள் நற்குணமுடையவளாக இருப்பாள். சுக்கிரன் அங்கிசமாகில் அவள் சாதுவாகுவள். அழகு பொருந்திய பெண்ணே! அங்கிசம் என்று சொன்னதெல்லாம் ஸ்திராங்கிசை என்று சொல்வதை அறிந்து மேற்சொன்ன பலனைச் சொல்வாயாக எ-று. (876)

உணர்சிங்கஞ் சென்மமதா யதிலிந்துமிருக்க
உயர்செவ்வா யங்கிசையா யிருக்கிலஞசாரி
பிணிசனிசுங் கன்னிருவ ரங்கிசமேயாயின்
பிறர்முகம்பார்ப் பாளரசன் பின்னுறமங்கிசைக்குத்
தனியரசர்க் கேதேவி தானுகியிருப்பள்
தக்கபுத னங்கிசைக்கே சரீரவருத்தமுமாய்ப்
பணிபலவுஞ் செய்தொருவர்க் கேயடிமையாகிப்
பரதவித்தே யிருப்பளெனப் பகருவர்தக்கோரே.

(இ-ள்) ஜெனனலக்கினம் சிங்கராசியாகவும், அதில் சந்திரனிருந்தும் அவன் குஜன் அங்கிசம் பெற்றிருக்க அவள் அஞசார முடையவளாக இருப்பாள். சுக்கிரன் அல்லது சனி அங்கிசம்பெற அவள் அந்நிய புருடர்கள்மீது இச்சைப்படுபவளாக இருப்பாள். குரு அங்கிசம் பெற்றிருந்தால் ஓர் அரசனுக்கு மனைவியாகயிருப்பாள். மேன்மையையுடைய புதன் அங்கிசமாகில் தன் சரீரகஷ்டத்துடன் பிறருக்கு ஊழியவேலை செய்து அடிமைப்பட்டு பரதவித்துத் திரிவாள் என்று சோதிடவல்லவர்கள் கூறுவார் எ-று.

தக்கதனு மீனமிவை யேசன்மமாகிச்
சந்திரனப் பதியிலுறத் தான்குருசெவ்வாயின்
மிக்கதிரி யாங்கிசமே யாகிடினற்குணத்தாள்
வீறுசனி யங்கிசமேல் வெகுகாமியாவள்
சுக்கிரனங் கிசையாகி லரோசிகமாம்புருடன்
தோளணைவள் சோமனுர் சுதனுமங்கிசைக்குப்
பக்குவமெய்ஞ் ஞானியாய்ச் சுபகர்மங்கள்
பண்ணுவளென் றேயுரைப்பர் பாரினினல்லோரே.

(இ-ள்) ஜெனன லக்கினம் தனுசு மீனமாக இருந்து லக்கினத்தி சந்திரன் இருக்க, குரு அல்லது செவ்வாயின் திரிசாங்கிசம் பெற்றிருக்க அவள் நல்ல உத்தமகுண முடையவளாக இருப்பாள். சனி அங்கிசமாகி

அதிகமான போகத்தில் அமிழ்ந்தவளாக இருப்பாள். சுக்கிரன் அங்கிசமாக இருக்க, அவள் தன் புருஷனிடம் சேர மனமில்லாத போகசுகத்தை அடைவாள். புதன் அங்கிசமாக இருக்க, உண்மையான நன்மார்க்க ஞானியாய் அநேகவிதமான நற்கருமங்களைச் செய்வாளென்று சோதிடவல்லவர்கள் கூறுவார் எ-று. (878)

நல்லசனி வீடிரண்டும் லக்கினமா யதனில்
நாடுபுதன் றந்தையுறக் குசனுரங்கிசைமேல்
அல்லலுறுந் தாதியாங் காரியினங்கிசமாய்
அவனியிற்கீழ் சாதியரோ டணுகிமணந்திடுவள்
வல்லகுரு வங்கிசைக்கே பதிவிரதையாவள்
மகிழவெள்ளி யங்கிசைக்கே மலடியுமேயாவள்
சொல்வரி சைப்புதனு ரங்கிசமாயெப்போதும்
சுகமுடனே கணவனுடன் றேயுமனப்பரிவாள்.

(இ-ள்) வல்லமை பொருந்திய சனிக்கு ஆக்ஷிவீடாகிய மகரம் கும்பம் ஜெனன லக்கினமாகவும், அதில் சந்திரன் இருக்க, குஜன் அங்கிசம் பெற்றிருக்க அந்த ஜாதகி துன்பத்தை யடையும் பணிப்பெண்ணுக இருப்பாள். சனியங்கிசம பெற்றிருந்தால் தனக்குக் கீழ்ப்பட்ட ஜாதியாரைச் சேர்ந்து மணம் செய்துக்கொள்ளுவாள். வல்லமையையுடைய குரு அங்கிசமாக இருக்க நல்ல உத்தம பதிவிரதையாக இருப்பாள். சுக்கிரன் அங்கிசமாகில் மலடி என்று சொல்வர். புதன் அங்கிசம பெற்றிருக்கில் எக்காலமும் தன் கணவன் மனதைப்போல் நடந்து சுகத்துடனிருந்து வாழ்வாள் எ-று. ()

பரிவாகச் சனிபுதனே ழாமிடத்தினிற்கப்
பயில்குருவுக் கேழ்வீடு பரவுசரமாயின்
திரிவனவன் பர்த்தாவெந் நாளும்வழிநடந்தே
திரராசிக் கூரைவிட்டுச் செல்லாமலிருப்பன்
வருராசி வுபயமாய்ச் சிலநாளூரினிலும்
வழிநடையிற் சிலநாளும் வருந்தியுமேதிரிவன்
அரியேழா மிடத்திருக்கப் பாவருமேபார்ககின்
அவண்மீதிற் கொழுநனுக்கன் பின்றியிகழ்ந்திடுவன்.

(இ-ள்) ஜெனன லக்கினத்திற்கு 7-ஆம் இடமான பர்த்தா ஸ்தானத்தில் சனியும் புதனும் இருக்க, குரு நின்ற ராசிக்கு 7-ஆம் ராசியானது சரராசியாக இருக்க, அவள் கணவன் எந்நாளும் திரிந்துகொண்டே இருப்பான் ஸ்திரராசியாக இருக்க அவள் கணவன் தன் இல்லததைவிட்டகலாதிருப்பான். உபயராசியாக இருக்கில் சிலநாள் தன் இல்லத்திலும் சிலநாள் வழிநடைகளில் கஷ்டப்பட்டு திரிபவனுவான். 7-ஆம் ராசியில் சூரியனிருந்து பாவர்களால் பார்க்க அவள் கொழுநன் அன்பில்லாது இகழ்ந்து பேசுபவனுக இருப்பான் எ-று.

(வி-ரை) 7-ஆம் ராசியில் நின்ற கிரகங்களைக்கொண்டு முன்கூறிய செய்யுளுக்கு முறையே கூறியுள்ளேன். 7-ஆம் ராசிக்குடையோன் நின்ற ராசிக்கு 7-ல் சுக்கிரனும், சுக்கிரனுக்கு 9-ல் பாவகிரகங்களும் இருக்க, அவள் தன் கணவனறிய விபசாரம் செய்வாள். சுபர்கள் பார்க்கில் பிறரும்

*தன் புருஷனும் அறியாமல் விபசாரம்செய்வாள். சுபரும் பாவரும் சேர்ந்து பார்க்க அவளோடு விபசாரம் செய்வாளென்றும் சோதிடத்தோர் கூறுவர்.*

இடுசெவ்வாய் கதிர்கூடி யெங்கேனின்றாலும்
இவளும்வா லிபந்தன்னி லமங்கலையேயாவள்
வடுவாகுஞ் சனிகதிரைக் கூடியுமேநிற்கில்
மன்னியதீக் கோள்பார்க்க வாலிபத்தினரைக்கும்
கொடுமையுளோர் பலரேழா மிடத்திருக்கில்பார்க்கில்
கொழுநன்வா லிபத்திறப்பன் கொடியநல்லோர்கூடில்
சடுதியின்மீண் டொருவனுக்கே பாரியுமேயாகித்
தானிருக்க வேண்டுமென வேசாற்றலவேண்டும்.

(இ-ள்) *கொடிய சூரியனும் குஜனும்கூடி லக்கினத்திற்கு எந்த ராசியிலிருந்தாலும் அவள் வாலிபததில் அமங்கலையாவாள். சூரியன சனியுடன் கூடியிருகக (வடு) குற்றமுடையவளாவாள். மேலும் தீயகிரககள் பார்த்தால வாலிபவயதில நரைபபுண்டாகி யிருப்பாள். 7-ஆம்ராசியில் தீயகிரககள் பல கூடியிருந்தால் அவள் கணவன வாலிபத்தில் இறந்துபோவான். சுபகிரகங்கள் பார்கில் மறுபடியும அதிசீககிரமாக மற்றொருவனுக்கு பாரியாவாள் எனறும் கூறுவாயாக எ-று.* (881)

வேண்டிடும்பா வக்கிரகம் பலன்களுமேயன்றி
விருமபுமே ழிடத்திருக்க வவரையுமேநல்லோர்
ஈண்டியே தான்பார்க்கி லக்கணவன்வேண்டா
திகழ்ந்தோட்டி விட்டிடுவனே யின்னஞ்சொல்வாம்
நீண்டகுசன் வெள்ளியுந்தன் அங்கிசத்தினிற்க
நிகழ்ததுமிவர் மாருகி நிற்கிலுமவ்வீடு
பூண்டிடுமே ழாமிடமே யாகிலவள்வேறோர்
புருடனையே யிச்சித்துப் போய்விடுவளென்றார்.

(இ-ள்) *7-ஆம்ராசியில் நின்ற பாவகிரககள் யாவும் பலமற்று இருக்க அவாகளைச சுபகிரககள் பார்க்க, அவளுக்கு ஏற்படும் கணவன் அவளை வேண்டாது இகழ்சசியாய் பேசி ஓட்டிவிடுவான். அதன்விபரம் சொல்வோம கேட்பாயாக. குஜன்-சுக்கிரன அங்கிசம் பெற்றிருந்தாலும் அல்லது குஜன் வீட்டில் சுக்கிரனும், சுக்கிரன் வீட்டில் குஜனும மாறிநிற்க, அவை லக்கினத்திற்கு 7-ஆம் ராசியாகவுமிருந்தால் அவளே வேறு புருடனை இச்சித்து ஓடிப்போயவிடுவாள் எ-று.* (882)

என்றுமே ழாமிடத்திற் சனிசெவ்வாய்சோமன்
இநதமூவ ருங்கூடி யிருக்கிலவம்போவள்
வென்றசனி செவ்வாயின வீடேலக்கினமாய்
விரவுகுச னங்கிசமா கச்சென்மந்தன்னில்
துன்றுமிரு ளகற்றுமதி சுக்கிரனுமிருக்கச்
சூழ்ந்ததீக் கோள்பலருந தொடர்நதுமேநோக்க
நின்றிடிலோ மலடியா மவளுமவள்தாயும்
நேமிதனிற் பலபேரை நேசித்தேசேர்வள்.

(இ-ள்) லக்கினத்திற்கு 7-ஆம் ராசியில் சனியும் குஜன் சந்திரன் இம் மூவரும் கூடியிருக்க, அவள் சோரம்போகும் தன்மையுடையவளாவாள். சனி அல்லது குஜன்வீடுகளாகிய மேஷம்-விருச்சிகம்-மகரம்-கும்பம் இவை ஜெனன லக்கினமாக, இருளை நீக்கும் சந்திரன்-சுக்கிரன் இவர்கள் குஜன் அங்கிசம் பெற்றிருக்க, அவர்களைப் பல தீயகிரகங்கள் பார்க்க, அல்லது சேர்ந்திருக்க மலடியாவாள் மேலும் அவளும் அவள் தாயும் பலபேரை நேசித்துச் சேரும் குணமுடையவர்களாவார்கள் எ-று. (883)

சேருதய லக்கினவங் கிசத்திற்கோரேழில்
செவ்வாயும் சனியிருவர் சேர்ந்துமேகிற்க
நாரியகந் தனிற்பிணிகொண் டிருந்துபரதவிப்பாள்
நாடுமிவர் நல்லோர்க ளங்கிசையினன்றும்
பாரியதோ ரிடைதொடைகள் சோபனமுள்ளவளாய்ப்
பர்த்தாவி னிதயத்திற் பட்சமுறவிருப்பள்
சாருதயந் தனக்கேழு சனிவீடதாகில்
தாலிதரிப் பவன்கிழவன் சற்குணமில்லானே.

(இ-ள்) ஜெனனகால ஸ்புடம் செய்துக்கண்ட அங்கிசத்திற்கு சப்தம ஸ்தானமான 7-ஆம் ராசியில் குஜன் சனியாகிய இவ்விருவரும் சேர்ந்து நிற்க, அந்த ஜாதகி பூர்வ கர்ம பிணியால் கஷ்டப்பட்டு அலைந்து பரதவித்துத் திரிவாள். மேற்சொல்லிய குஜன் - சனி இவ்விருவரும் சுபகிரகங்களாகிய குரு-சந்திரன்-புதன்-சுக்கிரன் இவர்கள் அங்கிசையிலிருக்க நன்று எனவும், தன் கணவன் சொல் தவறாது நடந்துக்கொள்பவளும், பருத்த அழகிய இடை தொடையை யுடையவளுமாவாள். ஜெனனலக்கினத்திற்கு ஏழாம்வீடு கடகம் அல்லது சிம்மராசியாகி, சப்தமராசி என்னும் 7-ஆம் வீடானது சனி வீடாக இருக்க, அவளை விவாகம் செய்துக்கொள்பவன் சன்மார்க்க குணமில்லாத விருதாப்பியவானுவானென்றும் சொல்வாயாக.

சற்குணஞ்சேர் லக்கினத்திற் கேழாகும்ராசி
தரைசுதன்வீ டாகிலவன் றன்னுடையங்கிசையால்
சிற்குணமா யவள்கணவன் ஸ்திரீலோலனுவன்
செறிபிருகு ராசியா யங்கிசமேசேரில்
நற்குணஞ்சேர் சீமானு யழகுடையனுவன்
நாடுபுத னங்கிசையாய் ராசியுமேயாகில்
சொற்கலைஞா னியுமாவன் சோமனுமேயாகில்
தோகைபல ருடன்கூடிச் சுகித்துவாழந்திருப்பன்.

(இ-ன்) பர்த்தா ஸ்தானமென்னும் நன்மையைத்தரும் அல்லது சுக போகததைத்தரும் லக்கினத்திறகு 7-ஆம் ராசியான சப்தம ஸதானுதிபதி குஜனுகவும், அவன் தன் சுய அஙகிசமான குஜன் அஙகிசமே பெற்றிருகக, அவளுக்குக் கிடைககும் கணவன் சிற்றின்பமென்னும் ஸ்திரீலோலனும், அற்ப புத்தியை யுடையவனுகவும் இருப்பான். மேற்சொல்லிய 7 ஆம் ராசி யதிபதியான குஜன் பெருமைபெறற ரிடபம் துலாத்திலிருந்து அவ்வீட்டிற்கு ஆதிபாதனுன சுக்கிரன் அஙகிசம்பெற்றிருக்க, அவளுக்குக் கிடைக்கும் கணவன் அளவிறந்த தனங்களையுடைய சீமானும், அழகுடையவனு

மாக இருப்பான். ஜெனனலக்கினத்திற்கு 7-ஆம்ராசி மிதுனம் கன்னியாக வும், அவ்வீட்டிற்கு ஆக்ஷிநாதர்கள் புதன் அம்கிசம் பெற்றிருப்பாராகில் அவளுக்குக் கிடைக்கும் கணவன் பற்பல வேதாந்தங்களை அறிந்தவனும், ஞானியுமாக இருப்பான் என்று சொல்லுக. 7-ஆம் வீட்டோன் சந்திரனாக இருக்கில் அவள் கணவன் பற்பல பெண்களுடன் கூடி சுகித்து வாழ்ந் திருப்பவனாக இருப்பான் எ-று. (885)

வேறு

இந்துவசுரகுருவுடனே ஏழிலிருக்கக்கிழப்புருடன்
வந்தேபொல்லாரேழிலுற விதவையாவளவாலிபத்தில்
நொந்தேகும்பந்தேள்மேடம் நுதலுஞ்சுறுமீனலக்கினமாய்
பந்தமதியமபுகர்கூடிப் பாவர்பார்க்கிலவிபசாரி.

(இ-ள்) இரவிற் கரசனாகிய சந்திரன் அசுரகுருவாகிய சுக்கிரனோடு கூடி, பர்த்தா ஸதானமாகிய லக்கினத்திற்கு 7-ஆமராசியில் இருக்க அவள் கிழவனை மணம் செய்துகொள்வாள். மேற்சொன்ன 7-ஆம் ராசியில் பாவ கிரகங்கள் இருக்க, அதாவது சூரியன்-அங்காரகன்-ராகு-கேது இவர்கள் இருக்க, அப்பெண்ணானவள் தனவாலிபவயதில் விதவையாகுவள். ஜெனன லக்கினமானது தாபபலனைத்தரும். கும்பம்-விருச்சிகம்-மேடம்-துலாம்-மகரம்-மீனம இவவாறுராசிகளில் ஒனறாகவும், லககினத்தில் பிரகாசத்தை யுடைய சந்திரனும் சுககிரனும் கூடியிருகக, அவர்களை மேலே சொல்லி யுள்ள பாவகிரககைள் பார்ப்பாராயின் அவள் விபசாரம் செய்பவளாக இருப்பாள் எ-று. (886)

சாரவெட்டிற்பாவர்களுந் தானுமிருக்கவிரண்டதனில்
ஊருஞ்சுபர்களிருந்திடவே யோங்குமரணஞ்சுமங்கிலியாய்
நேருமேழாமிடந்தானும் நிறைந்தபுகரின்மனையாயின்
பாரோரறியவனுகூலப் பாவையாகுங்கண்டிரே.

(இ-ள்) ஜெனனலக்கினம் எந்தராசியாக இருந்தாலும் லக்கினத்திற்கு 8-ஆமராசயாகிய போகஸதானத்தில் பாவகிரககைள இருக்க, சுபர்களாகிய சநதிரன்-புதன்-குரு-சுக்கிரன் இவர்கள் ஜெனனலக்கினத்திற்கு இரண்டா மிடமாகிய குடும்பஸதானத்தில இருக்க, அநதஜாதகியானவள் தான் மரண மடையும்போது மாங்கல்யத்துடன் மரிப்பள். மேலேசொன்னபடி ஜெனன லக்கினம் எந்தராசியாக இருநதாலும் லக்கினத்திற்கு 7-ஆம்ராசி பிரகாசம் நிறைநத சுககிரன் வீடாகிய ரிடப துலாமாக இருக்க, அந்த ஜாதகி இப் பூமியிலுள்ளோர் காண அனைவருக்கும் அனுகூலமுடைய பெண்ணாக இருப்பாள் என்றும் கூறுவா எ-று. (887)

கண்டவேழாமனையுரைக்குங் கதிரோன்வீடாயிருந்திடவே
மிண்டேசொல்வானவள்கணவன் வினவுமபரிதியதிலிருந்தால்
கொண்டோனோட்டிவிடுவனெனக் கூறும்புதனின்மனையாயின்
பண்டேபுலவராவர்குரு பண்பாமனையிற்குணவானே.

(இ-ள்) ஒவ்வொரு பெண்கள்மீதும் அவன் புருஷன் பழிபாவ வசனங் களைக் கூறவும் கேட்கவும இருக்கப் பிறந்தவர்கள் ஜெனனலக்கினம் கும்ப

மாகவும், 7-ஆம் ராசியானது சூரியன் வீடாகவும் இருந்தால்தான் அவன் புருஷன் பழிபாவவசனங்களைச்சொல்லுவான். முன்சொன்னபடி ஜெனன லக்கினம் கும்பமாகவும், 7-ஆம் ராசி சூரியன் வீடாகவும், சூரியன் தன் சுய க்ஷேத்திரம் பெற்றிருப்பானாகில் அவள் கணவன் அவளை தன்னைவிட்டு ஓட்டிவிடுவானென்றும் சொல்லவேண்டும். 7-ஆம் ராசி புதன் வீடாகில், அதாவது தனுசு.மீனம் ஜெனன லக்கினமாகவும் இருக்க, அவளுக்குக் கிடைக்கும் கணவன் தன் வீட்டில் சிநேகத்தோடு நற்குணமுடையவனு மாகக் கிடைப்பான் எ-று. (888)

குணமாமேழிற்பாவர்களுங் கூடிப்பலன்களற்றிடவே
மணமார்நோக்கமுற்றதனால் மகிழ்நனழகில்லாதவனே
இனமாரேமேசாமனையா யிருக்கவகிபன்சரத்திலுறச்
சினமேசராங்கிசயாத்திரையாந் திரமேயாகிற்றீர்க்கமுளன்.

(இ-ள்) ஜெனன லக்கினம் எந்த ராசியாயினும், பெண்களுக்குரிய பர்த்தா ஸ்தானமென்று சொல்லும் 7-ஆம் ராசியில் பாவகிரகங்களாகிய குஜன்-ராகு-கேது-சனி இவர்கள் கூடியிருக்க, அவளுக்குக் கிடைக்கும் புருடன் அரூபியாகவும் அழகில்லாதவனுமாக இருப்பான். மேற்சொல்லிய 7-ஆம்ராசியானது மேடம்-கடகம்-துலாம்-மகரம் என்னும் சரராசியாகவும், அவ்வீட்டிற்குரிய கிரகங்கள் சரராசியிலும் இருக்க அவளுக்குக்கிடைக்கும் புருடன் கோபமுடையவனாக இருப்பான். மேற்சொன்ன 7-ஆம்ராசிநாதன் சரராசியிலும், சரலக்கினங்களுக்குரிய கிரக அங்கிசையிலும் இருக்க, அவளுக்குக் கிடைக்கும் புருடன் யாத்திரைவாசியாவன். ஸ்திரராசியாகில் தீர்க்க வயதும் மனோதிடம் உள்ளவனாகவும் இருப்பான் எ-று. (889)

தீர்க்கமேழிற்சனிசெவ்வாய் செறிந்தால்விதவைவாலிபத்தில்
நீர்த்தவேழிற்சுபர்பாபர் நின்றால்கமனம்பரபுருடன்
ஊர்த்தலக்கினமுப்பாக முறைந்தாற்றிரியங்கிசாதிபதி
ஏர்த்தபலன்கள்ஸ்திரீகளுக்கு யியல்பாயறிந்துவுரைத்திடுமே.

(இ-ள்) மாங்கல்ய ஸ்தானமாகிய சப்தம ஸ்தானமென்னும் 7-ஆம்ராசியில் சனியும் குஜனும் கூடியிருக்க, அந்தப் பெண்ணானவள் வாலிபத்தில் விதவையாகுவள். மேற்சொன்ன 7-ஆம் ராசியில் சுபகிரகமும் பாவகிரகமும் சேர்ந்திருக்க, அவள் அந்நிய புருடர்களின்மீது இச்சையுடையவளாக இருப்பாள். ஜெனன லக்கினம் எந்த ராசியாயினும் மும்மூன்று பாகமாகிய அதாவது ஜெனன லக்கினத்திற்கு 3-6-9-12-ஆம் ராசிகளில் ஸ்திரராசிக்குடைய அங்கிசையில் இருக்கும் கிரகங்கள் இருக்கப்பிறந்த பெண்களுக்கு அந்தந்த ஸ்தானங்களுக்கு ஏற்றவாறு அளவறிந்து பலன் சொல்லுவாயாக.

உரைக்குங்கதிர்மதியங்கிசையா லோங்குந்தன்னில்விபசாரி
நிரைக்குஞ்செவ்வாய்தானாகி னீண்டலக்கினமவ்வீடாய்
மரிக்கும்பிள்ளையுள்ளவெல்லாம் வாழும்புந்தியங்கிசையில்
நரைத்தகிழவியானாலும் நாடுங்கமனம்பரபுருடன்.

(இ-ள்) ஜெனனகாலங்களில் சூரியன் சந்திரன் அங்கிசம்பெற்று பலம் பெற்றிருக்கப் பிறந்தவள் சோரத்தனம் செய்பவளாக இருப்பாள். பிரகாசமுடைய குஜன் அங்கிசமாகவும், ஜெனனலக்கினத்திலும் ஜெனனலக்கினம்

மேடம் விருச்சிகமாகவும் இருக்கப் பிறந்தவர்களுடைய பிள்ளைகளானது இறந்துபோகும். புதன் அங்கிசம்பெற்றிருந்தால் பிள்ளைகள் சுகத்தோடு இருக்குமானாலும் வயது முதிர்ந்து நரைத்த கிழவியானாலும் அவள் அன்னிய புருடர்கள்மீது இச்சையுடையவளாக இருப்பாள் எ-று. (891)

புருடக்கிரகங்குருவங்கிசையிற் பிறந்தான்மகவுந்தனமுண்டாம்
குருடப்புகரினங்கிசையேற் கூறும்போகந்தனமுளதே
வருடக்காரியங்கிசையில் வளருஞ்சனிவீடிலக்கினமாய்
திருடிக்கமனம்பரபுருடன் சிந்தைநோக்கவரும்பலனே.

(இ-ள்) ஜனன லக்கினம் எந்த ராசியாக இருந்தாலும் புருடக்கிரகங்களாகிய சூரியன் செவ்வாய் குரு இவர்கள் குரு அங்கிசம் பெற்றிருந்தால் அவளுக்கு மேன்மையைத்தரும் செல்வமும் புத்திரப்பேறும் உண்டாகும். மேற்சொன்ன மூன்று கிரகங்களும் ஓர் நேத்திரப்பழுதுடைய சுக்கிரன் அங்கிசம்பெற்று இருந்தால் சம்போகசுகமும் தனமும் உண்டு. அல்லது சம்போகத்தால் தனமுண்டென்றும் சொல்லுவாயாக. இரண்டரைவருடத்திற்கு ஓர்முறை மாறிவரும் சனி வீடாகிய மகரம் கும்பம் ஜெனனலக்கினமாகவும், மேற்சொல்லிய புருடக்கோட்கள் சனி அங்கிசமும்பெற்று இருந்தால் அவள்பலமுடையவளும், அந்நியபுருடர்கள்மீது ஆசைவைத்து நோக்கத்துடனிருப்பவளும், திருடியாகவும் இருப்பாள் என்றும் சொல்வாயாக.

பலங்களுரைக்கும்ஸ்திரீகளுக்குப் பகருமெட்டாமிடம்விதவை
துலங்குமேழாமிடந்தன்னூற் சுகமுமகிழ்நன்பலமறியப்
பிலங்கொள்லக்கினமழகறிந்து பேசுமொன்பான்புத்திரரும்
தலங்களறிந்தேமிகவுரைப்பர் தக்ககணிதவல்லோரே.

(இ-ள்) கணித சாஸ்திரமாகிய ஜோதிமயத்தைக்கண்ட சோதிடவல்லவர்கள் ஜெனன லக்கினத்தைக்கொண்டும், 9-ஆம் ராசியின் தாரதாரமறிந்தும், அவள் புத்திரி புத்திரர்களின் அழகு முதலிய விருத்தியையும், 7-ஆம் ராசியைக்கொண்டு அவளின் சௌக்கியங்களையும், அவளுக்குரிய பர்த்தாவின்பலன்களையும், மாங்கல்யம் எவ்வளவுநாள்வரையில் உண்டு என்பதைப் பற்றி 8-ஆம் இடத்தையும் கொண்டும் சொல்லுவார் எ-று. (893)

வல்லமதியமிவள்சன்மம் வருமேஸ்திரீகள்மனையாயின்
நல்லசுபருநோக்கமுற நாடும்வடிவுமாபரணம்
சொல்லுமிவ்வீடிரண்டொற்றை தோன்றப்புருடக்கிரகமிதை
ஒல்கிப்பார்க்கப்புருடவடி வுற்றேயிருக்குமிவடனக்கே.

(இ-ள்) வல்லமைபொருந்திய ஜெனன லக்கினமானது பெண்கள்ராசி என்னும் ரிடபம்-கன்னி-விருச்சிகம்-மகரம்-கும்பம்-மீனம் என்னும் 6-ராசிகளில் ஒன்றாகவும், அந்தலக்கினத்தைச் சுபகிரகங்களாகிய சந்திரன்-புதன் குரு-சுக்கிரன் இவர்கள் பார்க்கப்பட்டால் அவள் நல்ல அழகுடையவளும், அளவிறந்த ஆபரணங்களையும் அடைவாள். ஜெனன லக்கினமானது மேற்சொன்ன இரட்டை ராசியான பெண்ராசியானாலும், அல்லது மற்றுமுள்ள 6-ராசிகளான ஆண்ராசியாக இருந்தாலும், ஜெனனலக்கினத்தைப் புருடக்கிரகமாகிய சூரியன்-செவ்வாய்-குரு இவர்கள் சேர்ந்தாலும் பார்த்தாலும் அவள் ஆண்வடிவமுற்றிருப்பாள் என்றும் சொல்லுவாயாக எ-று. (894)

தனமார்குருசுக்கிரர்சென்மந் தன்னைச்சந்திரலக்கினத்தை
முனமேநோக்கவாலிபத்தின் முற்றும்போசுநன்மணமும்
தனிசூழ்மதிலக்கினத்தைச் சனிசேய்பாவர்நோக்கமுற
மனமேசலிக்கத்தலைநரைத்தும் வாழ்க்கைப்படாளிம்மாநிலத்தே.

(இ-ள்) தனத்தையும் செல்வத்தையும் அளித்து சுகத்தைத் தாராநின்ற குருவும் சுக்கிரனும் உடல்லக்கினமான ஜெனன லக்னத்தையாவது சந்திர லக்கினமென்னும் உயிர் லக்கினத்தையாவது பார்ப்பார்களாகில் அவளுக்கு வாலிப காலங்களிலேயே விவாக முதலிய எல்லாவித சுகத்தையும் அனுப விப்பாள். உயிர் லக்கினமாகிய சந்திரன் நின்ற ராசியை சனி-குஜன் முத லிய பாவகிரகங்களால் பார்க்கப்பட்டால் அவள் மனவியாகுலத்தையே அனுபவிப்பவளும், அவளுக்கு விருத்தாப்பிய காலம் அணுகி தலை ரோமம் நரைத்து தடியூன்றி நடக்கும் காலங்களிலும்கூட இப்பூமியின்கண் ஓர் கணவனுக்கு வாழ்க்கைப்படமாட்டாளென்றும் சொல்வாயாக எ-று. (895)

மானேசுங்கன்செவ்வாயின் மனையிலிருக்கமதிதானும்
ஊனச்சனியின்வீட்டிலுற வோங்கும்பாவர்மிகநோக்கித்
தானேயிவர்கள்லக்கினத்திற் றரித்தாலிவளும்விபசாரி
தேனேர்மொழியாய்சரிகுழலாய் சிந்தையறிந்துசொல்லுகவே.

(இ-ள்) தேனைப்போன்ற இனிய மொழிகளைப் பேசும் பெண்ணே! சாஸ்திர சுருதிகளின் முறைப்படி கிரகங்களின் சுபாசுபமறிந்தே யோகம் பலம், நன்மை தீமை, சுபம் அசுபம் முதலியவைகளும், அவரவர்கள் குணங் களையும் கூறவேண்டும். எப்படியெனில், சுக்கிரன்-குஜன் வீடாகிய மேஷ விருச்சிகத்தில் இருக்க, சந்திரன்-சனி வீடாகிய மகரம் அல்லது கும்பம் இவைகளில் இருக்க, அல்லது மேல் எழுதிய ராசிகளே ஜெனன லக்கின மாக முன்சொல்லிய கிரகங்களும் அப்படியே இருக்க, ஜெனன லக்கினம் எந்த ராசியானாலும் அந்தராசியில் குஜன்-சனி இவர்களிருக்க, அவர்களைப் பாவகிரகங்களாகிய சூரியன்-இராகு-கேது இவர்கள் பார்க்க, அந்த ஜாதகி யானவள் விபசாரம் செய்யும் தன்மை யுடையவளாக இருப்பாள் எ-று. ()

சொல்லும்நவாங்கிசைக்கேழ்மனையுந் தொடருஞ்செவ்வாய்மனையுளதா [ய்
வல்லசனியுமிருந்திடவே வருமேயோனிரோகமுடன்
நல்லமதியுஞ்சுக்கிரனும் நயந்தேகூடிலக்கினத்தில்
அல்லலறவேயிருந்ததனு லழகுஞ்சுகமுமுண்டாமே.

(இ-ள்) அம்சா லக்கினப்படி, அம்சா லக்கினத்திற்கு 7-ஆம் ராசியான சப்தம ராசியானது குஜன் வீடாகவும், அவ்வீட்டில் வல்லமையும் பராக்கிர மமும் பொருந்திய சனி சிறக்கப் பிறந்தவள் ரோகயோனி யுடையவளாக இருப்பாள். இவை தொத்துவியாதி என்றும் சொல்லலாம். உத்தம கிரகங் களும் நற்பலனையேதரும் சந்திரனும் சுக்கிரனும் ஒற்றுமையுடன் கூடி மேற்சொன்ன நவாம்ச லக்கினத்தில் இருக்க, அவ்விருவரும் சுபகிரகங் களால் பார்க்கப்பட்டும், ஆகுதி உச்சம்பெற்றும், சத்துருத்துவமின்றி இருக் கப்பிறந்தவள் அழகுடையவளும் இப்பூமியின்கண் எல்லாவித சுகங்களையும் அனுபவிப்பாள் என்றும் கூறுவார் எ-று. (897)

உண்டாமதியும்புதனிருவ ருற்றசென்மத்திருந்திடவே
கண்டேவித்வத்தன்மையுள்ளா ளென்றும்பகர்வர்மறைவல்லோர்
கண்டேபுதனுஞ்சுக்கிரனுங் காணும்லக்கினமுற்றதனுல்
கொண்டமகிழ்நன்பிரியமெனக் கூறுஞ்சௌரியமுள்ளவளே.

*(இ-ள்) சாஸ்திரங்களையறிந்த மேதாவிகள் ஜெனன லக்கினம் எந்த ராசியாக இருக்கினும் ஜெனன லக்கினத்திலேயே சந்திரனும் புதனும் சேர்ந்திருப்பார்களாகில் அவள் ஆதி புராணமாகிய பற்பல சாஸ்திரங்களை யறியும் தன்மையுடையவளாகுவள் என்றும், மேற்சொன்ன புதனும் சுக்கிரனும் லக்கினத்தில் கூடி இருக்கப் பிறந்தவர்கள் தன்னை மணந்த கணவன் சொல் வழுவாது இல்லறத்தை நடத்தி சந்தோஷப்படுவதோடு சௌரியம் அழகு தன்மை தாராதரம் அறிந்தவளாவாள் என்றும் கூறுவர் எ-று.* (898)

உள்ளசுபர்கள்மூன்றுமனை யுற்றசென்மமுதற்கொண்டு
மெள்ளவிருக்கத்தனலாபம் விரும்புஞ்சுகமுமழகுள்ளாள்
துள்ளும்பாவரெட்டிலுறச் சூழ்ந்தேவிதவையாயிருப்பள்
கள்ளவிழியினமுதவிஷங் கருதிநோக்குங்கணவனே.

*(இ-ள்) ஜென்மலக்கினமுதல் 3-ராசிவரையில் சந்திரன்-புதன்-சுக்ரன் குரு முதலிய சுபர்கள் வரிசையாய் அமர்ந்திருக்கப் பிறந்த பெண்ணானவள் அளவிறந்த செல்வமும் லாபங்களும் உண்டாவதோடு எந்நாளும் சவுக்கிய முதலிய இன்பங்களை அனுபவிப்பவளும் அழகுவாய்ந்தவளுமாக இருப்பாள் என்றும், திருட்டுத்தனமுடைய கூர்மையான கண்களால் இவை அமுதம், இவை விஷமென்றசொல்லும் சாயலான கண்களை யுடையவளே! கொடிய பாவிகளான சனி-குஜன்-ராகு-கேது இவர்கள் மாங்கல்யஸ்தானமென்னும் 8-ஆம் ராசியில் இருப்பார்களேயானால் அவள் விதவையாகத் திரிவாள் என்றும் கூறுவர் எ-று.* (899)

கண்ணுறெட்டினதிபதியுங் காணுமொருவனங்கிசத்தில
நண்ணியிருக்கவவ்வீட்டோ னயந்தேயெட்டிலிருந்ததினுல்
எண்ணுஞ்சுமங்கலிமரணமென வினிதாங்கன்னிதேளிடபம்
ஒண்ணுஞ்சிங்கமதின்மதியு முற்றுலற்பபுத்திரனே.

*(இ-ள்) அழகுபொருந்திய கண்களை யுடையவளே! மாங்கல்ய ஸ்தானமாகிய 8-ஆம் ராசியாதிபதி தன் சுய அங்கிசம்பெறுமல் வேறுகிரகங்களின் அங்கிசம் பெற்றும், 8-ஆம் வீட்டோனின்ற அங்கிசாதிபதி மேற்சொன்ன 8-ஆம் ராசியிலும் இருக்கப்பிறந்தவள் தான் மரணகாலம்வரையில் மாங்கல்யத்தோடு இருந்து மரிப்பாள். அதாவது தான் முன்னும், புருஷன் பின்னும் இறப்பான். இனிமையாகிய கன்னி - விருச்சிகம் - ரிடபம் - சிங்கம் இவ்விராசிகளில் சந்திரன் நிற்கப் பிறந்தவளுக்கு அற்ப புத்திரனென்றும் கூறுவார் எ-று.* (900)

பெண்கள் ஜாதகம் முற்றிற்று.

---

# வியாதி அறியும்விதம்



*[முன்சொல்லிய 6-ஆம் பாவகத்தில் ஒவ்வொருவருக்கு நேரிடும் வியாதிகளைப்பற்றிச் சொல்லியுள்ளார். ஆயினும் அங்கு பொது வான விஷயங்களைமட்டும் கூறினாரேயன்றி வியாதிகளின்விபரம் கூறப்படாமையால் இங்கு அதன் விபரம் கூறுவார். இதை ஜெனன காலம்முதல் அந்திய வயதுவரையில் ஒவ்வொருவருக் கும் உண்டாகும் சரீரத்தன்மையும், நோயின் விபரமும், மரண காலங்களில் உண்டாகும் நோயின் விபரங்களையும் கூறுவார்.]*

வேறு

**பூவையேலக்கினாதி புதன்குசன்மிதுனங்கன்னி**
**மேவிடிற்புந்திபார்க்கில் விளக்குமாசனத்தில்ரோகம்**
**ஏவுறுசசிக்குமூன்று மதிபனோடிரவிகூடில்**
**பாவைபோனேஞ்சையாகிப் பலர்முலைப்பாலுங்கொள்வன்.**

(இ-ள்) *இவ்வுலகத்தையே உன் மாயவலையில் சொக்கிக் கிடக்கும்படி வலைவீசும் அழகுவாய்ந்த பெண்ணே! ஜெனனலக்னாதிபதி புதன் அல்லது அங்காரகனாகவும், அவர்கள் ஜெனன லக்கினத்திற்கு எந்த ராசியானாலும், மிதுனம்-கன்னி இவ்விரண்டு ராசிகளில் ஒன்றில் இருப்பார்களேயானால் அந்த ஜாதகனுக்கு ஆசனத்தில் வியாதியுண்டாகும். சந்திரா லக்கினத் திற்கு திரிதிகை ஸ்தானமென்னும் 3-ஆம் ராசிநாதனோடு வெய்யவன் கூடி இருக்க, அந்தஜாதகன் குழந்தையைப்போல் தன் உடல்மெலிந்து சிறுத்து பலர் முலைப்பாலையும் சாப்பிடுவான் என்றும் சொல்வாயாக எ-று.* (901)

**பத்துமுன்றதிபன்றன்னைப் பயில்சசிபார்க்கிற்கூடி**
**மெத்தியவேகராசி மேவிடின்மேவுபத்தாம்**
**அத்தலத்தீரைந்திசைக்கு ளனுகுநீரிழிவிரோகம்**
**உத்தமர்சென்மமெட்டோ டெட்டுறிலற்பாயுள்தான்.**

(இ-ள்) *ஜெனன லக்கினத்திற்கு ராஜ்ய ஸ்தானாதிபதியான 10-ஆம் ராசியதிபதியும் சகோதர வெற்றி உபசார பாத்திர ஸ்தானமென்னும் 3-ம் வீட்டதிபனோடும் எல்லா வல்லமையும் உடைய சந்திரன் பார்த்தாலும் அல்லது அவர்களுடன் கூடி ஒற்றை ராசிகளாகிய மேடம்-மிதுனம்-சிங்கம் துலாம்-தனுசு-கும்பம் இவ்விராசிகளிலொன்றில் நின்று, அவன் நின்ற ராசிக்கு 10-ஆம் ராசியதிபதி எவனோ அவன் திசை வருவதற்குள் அந்த ஜாதகனுக்கு நீரிழிவு வியாதி சம்பவிக்குமென்று சொல்வர். சுபகிரகங்க ளாகிய சந்திரன்-புதன்-குரு-சுக்கிரன் இவர்கள் ஜெனன லக்கினத்திற்கு 8-ஆம் ராசியான லக்கினத்திற்கு 8-ஆம் ராசியிலாவது இருக்கின் அந்த ஜாதகனுக்கு அற்ப ஆயுளென்றும் கூறுவர் எ-று.* (902)

**முன்றென்றுமதிபனோடு மொழிபுதன்குசனுங்கூடில்**
**தோன்றுநீர்விடுத்துநின்ற துவாரமுமிரண்டதாகும்**

சான்றிடுமிவர்களோடே சவுரியுமிசைந்துகூடில்
கான்றிடுசலத்துவாரங் கல்லடைப்பாகுமன்றே.

(இ-ள்) ஜெனன லக்கிறைதிபதியோடும் மூன்றும் வீட்டதிபதியோடும் புதன்-செவவாய் இவர்கள் கூடி இருப்பார்களேயாமானுல் அந்த ஜாதகனுக்குக் கழிவுஜலதுவாரம் இரண்டுண்டு என்றும்சொல்வாயாக. மேற்சொன்ன லக்னதிபதி மூன்றும் வீட்டதிபதி செவ்வாய் புதன் இவர்களோடு சனியும் நட்புபெற்றுசேர்வானுகில் அந்தஜாதகனுக்கு மேற்சொன்ன ஜலத்துவாரம் கல்அடைப்பு உண்டாகுமென்றும் கூறுவர் எ-று.

(வி-ரை) ஜெனன லக்கினதிபதியுடனும் 3-ஆம் வீட்டதிபதியுடனும் மேற்சொன்ன கிரகங்கள சம்மந்தப்படாமல் ஜெனனலக்கினம் மிதுனமாகவும், புதன் கேந்திரம்பெற்று சுக்கிரன் பாவவர்க்கம்பெற்று 6-ஆம்ராசி ஜல ராசியாகவும, அதில் குஜன் சுக்கிரனுமிருக்க, குருவுடன் பாவகிரகங்களும் கூடியிருப்பார்களானுல் மூத்திரக்கிரிச்சனம் உண்டாகுமென்றும் சோதிட வல்லோர் கூறுவார்கள். (903)

மறையவன்லக்கினதி வாழ்கருங்கோளுமூன்றில்
உறையின்மூன்றதிபனோ டமறிலண்டவாதரோகம்
நறைகமழ்குசன்சன்மத்தி னண்ணிடிற்சனியும்பார்க்கில்
முறைமையாறசிரம்பிளந்து முந்துமந்நோயால்மாய்வன்.

(இ-ள்) இலக்கினதிபதியுடன் சனியும் குருவும் சேர்ந்து லக்னத்திற்கு 3-ஆம் ராசியான வெற்றிஸ்தானத்தில் மூன்றும வீட்டதிபனுடன் சேர்ந்து இருக்க அந்த ஜாதகனுக்கு அண்டவாதமென்னும் வியாதி வந்து சேரும். பரிசுத்தமும் சுகந்த வாசனையும் உடைய ஜெனன லக்கினத்தில் குஜனும், அவனை சனி பார்ப்பானுகில் அவன் ஓர் சண்டையில் பிரவேசித்து அவனவன் தலை பிளவுபட்டு அந்த நோயினுல் இறந்துபோவானென்றும் கூறுவர் எ-று.

(வி-ரை) இரணம் என்பதை பற்பலவிதமாகவும் ஆராய்ந்து கூறுதல் நலம். 1-2-8 இவ்விராசியில் கேதுவிருந்தாலும் 6-ஆம் வீட்டோனுடன் பாவகிரகங்கள் கூடி 8-ஆம் ராசியிலிருந்தாலும் அவன் சரீரம் காயம்பட்டு அந்த ரெணத்தால் இறந்துபோவானென்றும் கூறுவர். (904)

வேறு

மாயுஞ்சசியுந்தீயோரை மருவிப்பாவர்மத்தியத்தில்
ஏயுமிருக்கசென்மாதிக் கிலலைபலமேலெழும்பிணியாம்
தீயபாவர்மத்தியத்திற் றிகழ்சென்மாதியுறிற்சென்மம்
தாயபாவர்சசிபலமற் றமர்ந்தாற்பிணியராவாரே.

(இ-ள்) உயிர் லக்கினதிபதி என்னும் சந்திரன் தீயகிரகங்களாகிய அங்காரகன்-சனி-ராகு-கேது இவர்களுக்குமத்தியிலிருக்க ஜெனனலக்னம் எந்த ராசியாக இருந்தாலும் அந்த லக்கினதிபதி பலமின்றி இருக்க அந்த ஜாதகனுக்குத் தசையைப்பற்றிய மேற்கண்ட வியாதியுண்டாகும். ஜெனன

லக்கினாதிபதி கொடிய பாவகிரகங்களில் அதாவது மேற்சொல்லிய பாவ கிரகங்களின் மத்தியிலுமிருக்க ஜெனன லக்கினாதிபதி பாவகிரகமாகவும் சந்திரன் பலமிழந்தும் இருக்கப் பிறந்த ஜாதகன் எந்த நாளும் நீங்காத பிணியாளனாக இருப்பான் என்றும் கூறுவர் எ-று. (905)

வாரெட்டாதிசத்துருநீ சத்திலிருக்கமகிழ்பாவத்
தோருஞ்சென்மத்துறச்சென்ம முடையோன்பாவருடன்கூடி
ஏர்சென்மாதிகுளிகனுட னிருக்கவிந்துசனிகூடி
சேருமாறில்வியத்தினிற்கச் சிறுவன்பிணியாலுறுமரணம்.

(இ-ள்) மகிழ்ச்சிபொருந்திய ஜெனனலக்கினாதிபதி தீயகோட்களாகிய சூரியன்-அங்காரகன்-சனி-இராகு-கேது இவர்களுடன் கூடி இருக்க மேற் சொன்ன பாவகிரகங்களே ஜெனன லக்கினத்திலிருந்தாலும் அல்லது ஜெனனலக்கினாதிபதி குளிகனுடன் கூடி இருக்க ரோகஸ்தானமாகிய 6-ம் ராசியில் சந்திரனோடு சனி கூடி இருக்க, அவையாவன: 12-ஆம் இடமான விய மோக்ஷ விரய ஸ்தானததி விருந்தாலும், ஆயுள் லக்கினாதி என்னும் 8-ஆம் வீட்டோன் சதரு க்ஷேத்திரங்களில் நீச்சம்பெற்று இருப்பார்களே யாமானால் அந்தஜாதகன் பற்பல வியாதியால் தன் உயிரிழப்பான் என்றும் கூறுக எ-று. (906)

மருவெட்டாதிசென்மத்தில் மற்றுமிரண்டோனேரெட்டில்
தருஞ்சென்மாதிசனிகூடச் சசியும்பாவருடன்கூட
உருவில்லாதரோகமதா மொன்றிலெட்டிலிரவியுடன்
பெருஞ்சென்மத்தாதியுறிற் பித்தரோகப்பிணிகுளிப்பன்.

(இ-ள்) கீர்த்தி மூர்த்திகரமாகிய ஜெனனலக்கினாதிபதி தீயகிரகங்களி லொன்றாகிய சனியுடன் கூடி இருக்க ஆயுள் ஸ்தானாதிபதியாகிய அஷ்ட மாதிபதி ஜெனன லக்னத்திலும, அஷ்டமஸ்தானத்தில் குடும்பாதிபதி என்னும் இரண்டாம் வீட்டதிபதியும் இருக்க, சந்திரன்-சனி-ராகு-கேது-குஜன் என்னும தீய கரகங்களுடன் கூடி இருக்கப் பிறந்தவன் வாதரோக சரீரமுள்ளவனாக இருப்பான். ஜெனன லககனாதிபதி இரவியுடன் கூடி ஜெனன லக்கினத்திலாவது 8-ஆம் இடமான ஆயுள் ஸ்தானத்திலாவது கூடி இருக்கின் அந்த ஜாதகன் எந்நாளும் பித்தரோகம் என்னும் வியாதி யால் பீடிக்கப்படுவான் எ-று. (907)

குளிகன்கருங்கோள்சென்மாதிபதி கூடிஜென்மத்திருந்தாலும்
குளிகன்றிரிகோணங்களினு மெட்டாமிடத்துங்குலவுகினும்
குளிகன்செவ்வாய்நான்காதி யுடனேகூடியிருந்தாலும்
தெளியோர்விதையிற்சிற்றண்டத் திரண்டுதிரண்டுபெருத்திடுமே.

(இ-ள்) ஜெனனராசிக்குடையோன் ஆட்சிபெறவும், அவனுடன் குளி கன் ராகு இவ்விருவரும் சகிதம்பெறவும், அல்லது 5-9-ஆம் இடங்களாகிய திரிகோணராசிகளில் மேற்சொன்ன குளிகன் தனித்திருந்தாலும் அல்லது 8-ஆம் இடமாகிய ஆயுள் ஸ்தானத்திலிருந்தாலும், சுகாதிபதி என்னும் 4-ம் வீட்டதிபதியோடு அங்காரகனும் குளிகனும் கூடி லக்கினத்திற்கு எந்த

ராசியிலிருந்தாலும் அந்த ஜாதகனுக்கு விரைவாதமென்னும் வியாதி அடிக்கடி மூட்டையைப்போல் நாளுக்குநாள் அதிகரித்துக்கொண்டே வருமென்று சொல்வாயாக எ-று. (908)

பெருக்குஞ்சன்மாதிபனுடனே பெரும்பாவக்கோளுடன்குசனும்
இருக்கப்பார்க்கக்கல்லதனு லிடியும்பட்டுமிரணமதாம்
தரிக்கும்வைசூரிதன்னாலுஞ் சரீரந்தன்னில்வடிவுண்டாம்
முருக்கங்கொவ்வைக்கனியுமென முதிரச்சிவந்தவிதழ்மானே.

(இ-ள்) பெருமையும் புகழும் பிரக்யாதியும்வாய்ந்த ஜெனனலக்கினாதிபதியோடு கொடிய பாவிகளாகிய சனி-ராகு-கேதுவும், அவர்களுடனே குஜனும் கூடியிருந்தாலும், அல்லது லக்கினாதிபதி வேறு ராசிகளிலிருக்கினும், மேற்சொன்ன நால்வரும் பார்ப்பார்களேயானால் அந்தஜாதகனுக்கு அபாரமான கற்களால் மோதுண்டு பெருத்த இரணமுண்டாகும். மேலும் வைசூரி என்னும் கொடிய வியாதியால் அவன் சரீரங்களில் அடையாள வடுவு உண்டாகும் என்று கோவைப்பழங்களை யொத்த சிவந்த இதழ்களையுடைய பெண்ணே! சொல்லுவாயாக எ-று. (909)

மானேலக்கினாதிபன்ராகு மதிசேய்புதனோடைவர்களும்
தானேலக்கினமாறெட்டிற் றரிக்கிற்காணாவிடந்தன்னில்
ஈனமாயவெண்குட்ட மிரவிசேய்மால்சன்மாதி
தேனுமிவர்களாறெட்டிற் சேரிற்செங்குட்டமுமாமே.

(இ-ள்) இவ்வுலகிலுள்ள யாவரையும் மயங்கும்படி செய்யும் மாதே! ஜெனனகால ஸ்புடம் செய்துக்கண்ட லக்னைத்ததிபனும், சந்திரன்-ராகு-குஜன் புதன் ஆகிய 5-கிரகங்களும், ஜெனனலக்கினத்திற்கு 6-ஆமிடமான அஷ்டம ஸ்தானத்திலும் அமர்ந்தார்களேயானால் அந்த ஜாதகனுக்குத் தனக்குத் தெரியாத இடங்களில் மேகம் 21-ல் ஒன்றாகிய வெண்குஷ்டமென்னும் வியாதி சம்பவிக்கும். மேற்சொல்லியபடியே ஜெனனலக்னாதிபதியும், சூரியன்-குஜன்-புதன் இந்நால்வரும் 6 அல்லது 8-ஆம் ராசியில் சேர்ந்திருப்பார்களேயானால் அந்த ஜாதகனுக்குச் செங்குஷ்டம் என்னும் வியாதி புண்டென்றும் கூறுக எ-று. (910)

வேறு

குட்டமாஞ்சனி ராகுசென்மாதியும்
எட்டிலாறி லிந்துபலன்கெடில்
கெட்டதாகிய காலிற்செங்கருங்
குட்டமெய்து வெனக்கண்டுகொள்கவே.

(இ-ள்) மூடவனென்று சொல்லும் சனியுடன் ராகுவும் ஜெனன லக்கினத்ததிபதியும் சேர்ந்து, கொடிய க்ஷேத்திரங்களாகிய 6-8-ஆம் ராசியில் சேர்ந்து நீச்சம் பகை முதலியவைகளால் தன் பலமிழந்திருப்பார்களாகில் அந்த ஜாதகன் தனக்கு முக்கிய உறுப்பாகிய கால்களில் குஷ்டவியாதி புண்டாகுமென்றும் கண்டுகொள்வாயாக எ-று. (911)

## வியாதி தோன்றுமிடம்

[இதுவரையில் வியாதிகளைப்பற்றிச் சொல்லினும், எந்த இடங்களில் வியாதி உண்டாகும் என்று சொல்லவில்லை. ஆதலால் அதன் விபரம் கூறுவோம்.]

வேறு

**கொள்ளுமாங்கிரகஞ்சென்னி ரவிமதிகுளிர்ந்ததிங்கள்**
**ஒள்ளியகண்டத்தங்கா ரகனிடக்கரத்திற்புந்தி**
**வள்ளலாம்வலக்கைமன்னன் மார்பிற்சுக்கிரன்முழந்தாள்**
**தெள்ளியசனிகால்பாம்பு செறிந்ததோரிடத்திற்குட்டம்.**

(இ-ள்) சூரியன்-சந்திரன் இவ்விருவரும் மேற்சொன்னபடி பலமிழந்து இருப்பார்களேயானால் சிரசிலும் பூர்ண சந்திரனுகில் கண்டத்திலும், குஜனுகில் இடது கையிலும், புகழ்ச்சி பொருந்திய புதனுகில் வலதுகையிலும், குருவாகில் மார்பென்னும் இருதயத்திலும், சுக்கிரனுகில் முழங்காலிலும், கிரகங்களில் மேன்மை பொருந்திய வள்ளலாகிய சனியாகில் கால்களிலும், ராகு-கேதுவாகில் தன் தேகங்களில் எந்த இடத்திலாவது ஓரிடத்தில் மேற்சொன்ன வெண்குட்டம் உண்டாகுமென்றும் கூறுவர் எ-று.

(வி-ரை) 8-6 இவ்விடங்களில் சனி இருக்க கடிரோயும் குட்டமும், சந்திரன் தவிர மற்ற கிரகங்களிருந்தாலும் குட்டமுண்டாகும். சித்திரை நக்ஷத்திரத்தில் குஜன் இருந்தாலும், அனுஷத்தில் சனி இருந்தாலும், பூரட்டாதியில்குஜனிருந்தாலும் குட்டவியாதியுண்டாகுமென்றும் சோதிட வல்லோர் கூறுவர். (912)

வேறு

**குட்டமாங்கருங் கோளுஞ்சென்மாதியும்**
**கிட்டிலக்கின மேழுறக்கேடிலா**
**எட்டினிற்சனி யெய்தமுன்சொன்னநோய்**
**மட்டிலாமல் வருமென்றுரைக்குமால்.**

(இ-ள்) ஜெனன லக்னத்திற்கு 7-ஆம் ராசியில் கருங்கோளாகிய ராகுவும், ஜெனன லக்கினத்ததிபதியும் சேர்ந்திருக்கவும், ஆயுள் ஸ்தானமாகிய 8-ஆம் ராசியில் சனியும் சேர்ந்திருக்க முன்சொல்லிய கொடிய வியாதியாகிய குஷ்டரோகம் தவறுமல் சம்பவிக்குமென்று சொல்லுவாயாக எ-று. (913)

வேறு

**மாலாயரசன்பாவருடன் மருவியிரண்டாறெட்டிலுறச்**
**சாலவவரைலக்கினத்தைச் சாவர்நோக்கிற்சயரோகம்**
**சீலமுடனேதேய்ந்தபிறை சலராசியிற்பாவரைக்கூடிக்**
**காலாறெட்டிலொன்றிலுறச் சயரோகங்கள்காட்டிடுமே.**

(இ-ள்) மேன்மையான அழகுபொருந்திய பெண்ணே! நவக்கிரகங்களில் மிக்க புகழ்ச்சியாய்ப் பேசும் குரு பாவர்களாகிய சனி-குஜன்-ராகு-கேது ஆகிய பாவகிரகங்களில் ஒருவருடன் கூடி இரண்டாமிட தன ஸ்தானத்திலாவது ரோகஸ்தானமென்னும் 6-ஆம் ராசியிலாவது 8-ஆம் ராசியி

லாவது இருந்து அவர்களை மேற்சொன்ன பாவகிரகங்கள் பார்க்கவும், ஜெனனலக்கினத்தையும் பாவகிரகங்கள் பார்ப்பார்களேயானால் அந்தஜாதகனுக்கு க்ஷயரோகம் உண்டாகுமென்று கூறுவார். மேற்சொன்ன பாவகிரகங்கள் சேர்க்கைப்பட்ட கிருஷ்ணபக்ஷத்துச் சந்திரன் ஜெனனலக்னத்திலேனும், 6 அல்லது 8-ஆம் ராசி ஜலராசிகளிலும் சேர்ந்திருப்பானாகில் அந்த ஜாதகனுக்கு க்ஷயரோகம் உண்டாகும் என்றும் கூறுக எ-று.

(வி-ரை) 'மருவி யிரண்டா ரெட்டிலுற' என்பதை சந்திரன் 12-8-ம் ராசியிலிருக்க என்றும் சிலர் அர்த்தங்கொள்வர். (914)

காட்டுங்குசன்சன்மத்திலுறக் கணக்கன்பரவருடன்கூடிச்
சூட்டுமிரண்டெட்டினிலிருக்கச் சுரரோகங்கள்சன்மாதி
யீட்டும்பிருகினுடன்கூடி யெட்டிலிருக்கச்சென்மாதி
மீட்டுநீசசத்துருத்தா னத்திலிருக்கப்பிரமியநோய்.

(இ-ள்) புதன் தீயகிரகங்களாகிய சனி-குஜன்-ராகு-கேது இவர்களுடன்கூடி பெருமைபொருந்திய தனமென்னும் இரண்டாம் வீட்டிலாவது அஷ்டமஸ்தானமென்னும் 8-ஆம்ராசியிலாவதிருக்க; ஜெனனலக்கினத்தில் தீயகிரகங்களில் ஒன்றான குஜனிருக்க, அந்தஜாதகனுக்கு ஜுரரோகங்கள் காட்டும். மேற்சொன்ன ஜெனன லக்கினாதிபதி பெருமைபெற்ற சுக்கிரனுடன் கூடி, 8-ஆம் இடமான ஆயுள் ஸ்தானத்திலும், ஜெனன லக்கினாதிபதி தனக்குச் சத்துரு கிரகங்களின் க்ஷேத்திரத்திலும், நீச க்ஷேத்திரங்களிலும் இருப்பாரேயானால் அந்தஜாதகனுக்கு பிரம்மியமென்னும் வியாதி வந்தணுகும் எ-று. (915)

நோயுமாறெட்டாதிபனும் நுவலுங்கருங்கோளுடன்கூடிப்
போயுமிரண்டாமிடத்திருக்கப் புகல்சன்மத்திற்குசனிருக்க
ஆயும்பாவர்சன்மத்தை யடர்ந்துநோக்கக்குருமுளைத்துச்
சேயும்வாதைப்படுமென்று சொன்னார்செகத்திற்றெரிந்தோரே.

(இ-ள்) துன்பத்தைத்தரும் ஆறும்வீட்டதிபனும், கொடிய கிரகங்களிலொன்றான ராகுவுடன்கூடி, தன் குடும்பக்ஷேத்திரமென்னும் இரண்டாம் வீட்டிலிருக்க, மேன்மைபெற்ற ஜெனன லக்கினத்தில் குஜனுமிருக்க, சூரியன் அங்காரகன் சனி-ராகு-கேது என்னும் பாவகோட்கள் சேர்ந்து ஜெனன லக்கினத்தை திருஷ்டிக்க, அந்த ஜாதகன் தேகத்தில் கட்டிப் பிளவை முதலிய நரம்பு வியாதிகள் உண்டாகி அதிக துன்பப்படுவான் என்று சோதிடங்களை யறிந்த மேதாவிகள் கூறுவார் எ-று. (916)

வேறு

தெரிந்துகாரியுந் தேய்பிறைபாவரோ
டிருந்துலக்கினத் தெய்தவாறுதிபன்
பொருந்திரண்டா மிடத்தினிற்புக்கிட
வருந்திடக்குன்ம ரோகமும்வந்திடும்.

(இ-ள்) பிரக்கியாதிபெற்ற ஜெனனலக்கினத்தில் கிருஷ்ணபக்ஷத்துச் சந்திரனுடன் சனியும், மற்றுமுள்ள பாவக்கிரகங்களும் சேர்ந்து நிற்க,

*ரோகாதிபதி என்னும் 6-ஆம் வீட்டதிபன் இரண்டாமிடமாகிய குடும்ப ஸ்தானத்திலுமிருக்க, அந்த ஜாதகன் கொடிய வருத்தப்படும்படி குன்ம வியாதி வந்தணுகும் எ-று.* (917)

வேறு

வந்தவாருமதிபதியு மருவுஞ்சன்மம்பத்தேழில்
ஐந்திலிருக்கச்சன்மமதி லங்காரகனுமமர்ந்திடவே
முந்திநல்லோர்பாராமற் கூடாதிருக்கமுதலோமம்
வந்தவாபிகாசத்தா லாகம்வருந்தும்பிணியாமே.

(இ-ள்) *ஜெனனலக்கினத்தில் குஜனிருக்க அவனை நல்லோரென்னும் சந்திரன்-புதன்-சுக்கிரனால் பார்க்கப்படாமல் கொடிய கிரகங்களாகிய சூரியன்-சனி-ராகு-கேது இவர்களால் பார்க்கப்பட்டு ரோகாதிபதி என்னும் 6-ஆம் வீட்டதிபதி ஜெனன லக்கினத்திலாவது 7-ஆம் ராசியிலாவது பஞ்சம ஸ்தானத்திலாவது காரியஸ்தானமென்னும் 10-ஆம் ராசியிலாவது இருக்க அவன்தேகமாவது வருத்தமும் கஷ்டமும் உண்டாகும்படி வாபி காசம் என்னும் நோய்வந்து சம்பவிக்கும் எ-று.* (918)

வேறு

பிணிகொளாரு மதிபன்சன்மாதியும்
மணிகுசனுடன் கூடிச்சன்மத்தினில்
தணியுமூவர் தங்கியிருந்திடிற்
பிணியுமபிசா ரத்திஞற்பீடையாம்.

(இ-ள்) *வியாதியைத்தரும் ரோகாதிபதி என்னும் ஆறும் இராசியதிபதி ஜெனனலக்கினம் எந்த ராசியானாலும் எந்த ராசியதிபனுடன்சேர்ந்து பலத்தைத்தரும் குஜனும் ஆகிய மூவரும் சேர்ந்து பெருமையைப்பெற்ற லக்கினத்தி லிருப்பார்களேயானால் அந்த ஜாதகனுக்குப் பற்பல வியாதியும் முன்சொன்ன அபிசாரத்தால் பீடையும் உண்டாகுமென்றும் கூறுவார்.* ()

வேறு

பீடுயரும்லக்கினத்திற் கருங்கோண்மூன்றிடத்தில்
பெருகுசனியுறவண்டம் பெருக்குமவன்றனக்கே
கூடியசன்மத்திரவி குசனுமேகூடிற்
குன்மவலியாம்பார்க்கிற் கொடுமூச்சுண்டாகும்
நீடுசன்மாதிபன்செவ்வா யிருவருமேகூட
நின்றிடுதீயோர்காணி னிறைந்துமிகக்கூடில்
கேடுபடுங்கல்லெறியுந் தலையதனிற்பட்டுக்
கிளறுநோயாற்றுன்ப மேகிடைக்குந்தானே.

(இ-ள்) *செய்த வினைகளையும் துன்பங்களையும் நீக்கப்பெற்ற ஜெனன லக்கினத்தில் இராகுவும் சகோதரவெற்றி உபசாரப் பாத்திரஸ்தானமாகிய 3-ஆம்ராசியில் சனியுமிருக்க தன் மர்மஸ்தானமான விரையில் வீக்கம்காட்டும் என்று சொல்லுவர். மேற்சொன்ன ஜெனன லக்கினத்தில் குஜனும்-*

சூரியனும் சேர்ந்திருப்பார்களேயானால் குன்மவியாதியும் மேற்சொன்ன இருவரும் நோக்குவாராகில் பெருமூச்சுண்டாகும் என்றும் சொல்வர். ஜெனன லக்கினாதிபதி எவரானாலும் அவருடன் செவ்வாய்-சனி-ராகு-கேது என்னும் கொடியபாவிகளும் சேர்ந்திருப்பார்களேயானால் கற்களால் அவன் சிரசில் அடிபட்டு அதனால் உண்டாகும் இரணகாயத்தால் மெத்த வருத்தமும் துன்பமும் பலவித கஷ்டங்களையும் அனுபவிப்பான் என்றும் கூறுவர் எ-று. (920)

தானமெனும்லக்கினத்திற் சனிராகுமிற்கில்
சருவியேபேய்பிடித்துச் சஞ்சலமுற்றிடுவன்
ஆனவமாவாசிதனிற் குசன்சன்மத்திருக்க
அவனைத்தீயோர்காணி லடிவயிற்றில்வலியாம்
நானிலமென்சனிசன்மத் திருக்கச்சூரியனும்
ராகுவுங்கூடிப்பார்க்க நலன்செறியாயுதத்தால்
ஊனமுறும்வயிற்றி லதனாலேயதாகும்
உலகினிலிப்படிப்பிணிகண் டுரைபகருவீரே.

(இ-ள்) கொடியோர்களாகிய சனியும் ராகுவும் சேர்ந்து மேன்மை பெற்ற ஜெனன லக்கினத்தில் இருப்பார்களேயானால் அந்தஜாதகன் திடீர் என்று பேய் முதலிய துஷ்டக்கிரகங்களால் பீடிக்கப்பட்டும் துன்பப்பட்டு மிருப்பான். ஜெனனகாலம் அமாவாசையாகவும் ஜெனன லக்கினத்தில் குஜனும் நின்று அவனைத் தீய கிரகங்களாகிய சனி இராகுவால் திருஷ்டிக் கப்பெற்றால் அந்த ஜாதகனுக்கு அடிவயிறு மூலமாக நோய் உண்டாகும். எத்திக்கிலும் போற்றப்பட்ட சனிபகவான் தனித்து ஜெனன லக்கினத்தி லும், அவனை ராகுவும் சூரியனும்சேர்ந்து எந்தராசியில்நின்று பார்த்தாலும் பலத்தகாயத்தைத்தரும் ஆயுதங்களால் காயமுண்டாகி அதனால் அவனுக்கு வயிற்றில் நோய் உண்டாகும் என்றும் உலகில் பிறந்த அனைவருக்கும் இவ்வாறே அளவறிந்து கூறுக எ-று. (921)

உரைபகருங்கருங்கண்ணாய் கருநாகந்தானும்
உரைவீட்டாதிபதி யாருகுமதிபதியும்
பெருமையுடனிவர்மூவர் தாமுங்கூடிடிலோ
பேசியரெண்டாமதி பதிமகாதிசையில்
மருவியவன்றன்புசிக்கு மந்தநாடன்னில்
வலியதந்தரோகமே வருமெனவும்பகர்வர்
பரிவுடனேபுதன்கூடில் ரோகசரீரனுமாய்
பரிந்துநல்லோர்விழிநோக்கப் பரிகாரமாமே.

(இ-ள்) உரை சொல்லவேண்டுமெனக் கேட்டுக்கொண்ட அழகிய கறுத்த விழிகளை யுடையவளே! இராகுவும் அவன் எந்த நக்ஷத்திரத்தில் இருந்தானோ அந்த நக்ஷத்திராதிபதியும், ரோகாதி என்னும் ஆறும்வீட்டு அதிபதியாகிய மூவரும் நீச்சம் பகை முதலியவைகளால் பலம் இழக்காமல் பெருமையைப்பெற்று நிற்க, 2-ஆம் வீட்டதிபதியாகிய தனஸ்தானாதிபதி எவனோ அவன் திசையில் அவனுக்கு ஏற்படும் புக்திநாட்களில் அவனுக்கு கொடிய நோயாகிய பல்நோய் உண்டாகும். மேற்சொல்லிய மூவரும் மிது

னம்-கன்னி என்னும் புதன் க்ஷேத்திரங்களில் இருப்பானாகில் வியாதியை யுடையவனாகவே இருப்பான். அவர்களைச் சந்திரன்-புதன்-குரு-சுக்கிரன் முதலிய சுபர்களால் பார்க்கப்பட்டால் மேற்சொல்லிய தோஷம் யாவும் பரிகாரமாகும் என்று சொல்வாயாக எ-று. (922)

பரிதிசனியுடன்கூடி யட்டமத்திலிருக்கப்
பரவுமகோதரநோயால் பரதவித்தேயிடுவர்
கருதியசன்மமுமேநா லாமிடங்கடம்மில
கதிரோனுங்குசனுனுங் கவ்வியுமேநிற்க
திருவுறைபததாமிடதத்திற் சவுரியுமேநிற்கத்
திகழ்தனபாவந்தனனிற், றேய்ந்தபிறையிருக்கத்
துரிதசிறுபாம்பர்திரி கோணததிலிருக்கச்
சூலைநோயாலாவி சோருமெனச்சொல்லும்.

(இ-ள்) ஆயுள்ஸ்தானம் என்று சொல்லப்படும் அஷ்டமஸ்தானமாகிய ஜெனன லக்கினத்திற்கு 8-ஆம்வீட்டில் சூரியனும் ஆயுள்காரகனாகிய சனியும் சேர்ந்திருப்பார்களேயாமானால் அந்த ஜாதகன் மகோதரநோயால் அவஸ்தைப்படுவான். மேன்மைபொருந்திய ஜெனனலக்கினத்திலும், சுகஸ்தானமாகிய நான்காமிராசியிலும் பாவகிரகங்களாகிய சூரியனும குஜனும் சேர்ந்திருக்க, கருமஸ்தானமாகிய 10 ஆம ராசியில் மேற்சொல்லிய ஆயுள் காரகனாகிய சனிசேர, கிருஷ்ணபக்ஷததுச் சந்திரன் தனஸ்தானமாகிய 2-ம் இராசியிலிருக்க, திரிகோணராசிகளாகிய 5-9-ஆம் இடத்திலும் 6-ஆம் இடததிலும இராகு அல்லது கேதுவிருக்க அந்த ஜாதகன் ஆவியானது சூலைநோயால் நீங்குமென்றும் கூறுவர் எ-று. (923)

வேறு

தந்தலக்கினத் ததிபதிசனியுமே
இந்தவாறெட்டுப பனனிரண்டிசைந்திடில்
அந்தவிரணஞ் சிரசினிலாமெனச்
சிந்தைமாதவர் தெளிந்துகண்டாரே.

(இ-ள்) கணிதசாஸ்திரமென்னும் சோதிடத்தைக்கற்றுணர்ந்த மேதாவிகள் முதன்மையாகிய ஜெனன ராசியதிபதியும சனியும் சேர்ந்து ஆறும் இடமான ரோகஸ்தானத்திலாவது அஷ்டமஸ்தானமென்னும் 8-ஆம்ராசியிலாவது விரயஸ்தானமென்னும் 12-ம் ராசியிலாவது இருப்பார்களேயானல் அந்த ஜாதகன் சிரசில் இரணம் உண்டாகுமென்றும் கூறுவர் எ-று. (924)

வேறு

கண்டசன்மலக்கினமுங் காணுமைந்துமொன்பதினில்
கொண்டபரிதிமதியிருக்கக் கூறுநாலேழீரைந்தில்
திண்டாயரசன்சனியிருக்கச் செவ்வாய்மந்தன்வாரமதில்
அண்டிசனித்தோனுன்மத்த னுகுஞ்சடவானுவானே.

(இ-ள்) உலகமெங்கும் அரசாக விளங்காநின்ற சூரியனும் சந்திரனும் சேர்ந்து ஜெனன லக்கினத்திலாவது திரிகோணங்களிலொன்றான 5-ஆம்

ராசியிலாவது 9-ஆம் ராசியிலாவது கூடியிருக்க, சுகஸ்தானமாகிய 4-ஆம் ராசியிலும், 10-ஆம் இடமென்னும் காரியஸ்தானத்திலாவது மேன்மையையுடைய குருவும் சனியும்கூடியிருக்க, அந்தஜாதகன் ஜெனித்தவாரமானது செவ்வாய் அல்லது சனிவாரமாகவுமிருக்க, அவன் உள்நெஞ்சமுடையவனும், கொடிய வஞ்சகம்செய்வதில் தேர்ந்தவனுமாகவும் இருப்பான் எ-று.

**ஆவார்சன்மலக்கினத்துக் கணுகிக்கேந்திரஞ்சோமனுறில்**
**பாவாய்கிரகநோக்கமிலாப் பசாசயோகமுன்மத்தம்**
**பூவேன்சன்மங்கேந்திரத்தில் புகருமதியுந்தானிருக்க**
**நாவோர்பாவரைந்தெட்டி னண்ணிமுயலகண்டமுமாம்.**

(இ-ள்) ஜெனன லக்கினத்திற்கு 1-4-7-10-ஆம் ராசிகளாகிய கேந்திரங்களில சோமனாகிய சந்திரனிருக்க, அவனைச சுபகிரகங்களாவது பாவகிரகங்களாவது பார்க்காவிடில் அவனுக்குப் பசாசயோகமென்றும் பெயர். அதன்பலன் என்னவெனில், எந்தகாரியங்களையும் வெளிவிடாமல் மௌனமாக இருப்பான். அதாவது பேய்பிடித்தவனைப்போல் இருப்பானென்றும் கூறுவா. மேறசொல்லியபடியே கேந்திரங்களில் சுக்கிரனும் சந்திரனும் கூடியிருக்க, அவர்களைப் பாவகிரகங்களாகிய சனி-ராகு-கேது-குஜன் இவர்கள பாரததாலும் அல்லது அவர்களுடன் சேர்ந்திருந்தாலும் அவனுக்கு உடனே கெண்டம் உண்டென்றும் சோதிடத்தோர் கூறுவர் எ-று. (926)

**கண்டவேனைபரிவேடங் காணுஞ்சன்மந்தானுறவே**
**செண்டாயெட்டிலிருமுன்றிற் செவ்வாயென்றுதானிருக்கக்**
**கொண்டசன்மநதிரிகோணங் குருவுமில்லாதேயிருந்தால்**
**பண்டேகுமரகண்டமெனப் பகாவாய்வலிப்புந்தான்வருமே.**

(இ-ள்) ஸ்புடம் செய்துக்கண்ட ஜெனன லக்கினத்தில் தூமாதிபஞ்சகிரகங்களில் ஒன்றாகிய பரிவேடனும் ஜெனன லக்கினத்திலாவது 3-ஆம் இடமான சகோதரவெற்றி உபசார பாத்திரஸ்தானங்களன்றி வேறு எநத ராசியிலேனும் குருவிருக்க ரோகஸ்தானமெனறு சொல்லும் 6-ஆம் வீட்டிலாவது அஷ்டமமெனனும் 8-ஆம் வீட்டிலாவது குஜனிருக்க, செண்டு போனற கொண்டையை புடையவளே! அவர்கள் முனனோர்முதல் மாறிவரும குமரகண்ட வலியும் வாய் நோயும் உண்டாகு மென்று தெரிந்துச் சொல்வாயாக எ-று.

(வி-ரை) குரு 1-3-ஆம் இராசிகளிலிருந்தால் மேற்சொன்ன நோய் பரிகாரமாகும எனறறிக. (927)

**வருமேசன்மஞ்சனிசெவ்வாய் வந்திரண்டிற்பன்னிரண்டில்**
**புரவேயெட்டிலக்கினத்பதி புகவேகேந்திரத்தினியோர்கள்**
**உரவோரில்லாதானிருக்க வுண்டாமீனரோகமுடன்**
**தருமேசரீரவாதியந்தந் தானும்பிணிகொள்சாற்றிடுமே.**

(இ-ள்) இலக்கினத்திற்கு 1-4-7-10 என்னும் கேந்திரங்களில் சுபக்கிரகங்களாகிய சந்திரன்-புதன-குரு-சுக்கிரன் இவர்களிருக்க அவர்கள் ஒரு

வருக்கொருவர் மித்ருவன்றிருக்க, ஜெனனலக்கினத்தில் சனியும் குஜனும் சேர்ந்து நிற்க, ஆயுள் ஸ்தானாதிபதியாகிய 8-ஆம் வீட்டதிபதி 2-ஆம்ராசியி லேனும் அல்லது 12-ஆம் ராசியிலேனும் நிற்க, அந்த ஜாதகனுக்குச் சரீர முழுதும் ரணங்களுமே யாவரும் பார்த்து அருவருக்கத்தக்க ஈனமாகிய ரோகத்தைத் தருமென்று சொல்வாய் எ-று. (928)

சாற்றுந்தனமீனமகரமுடன் ருனுமிந்தராசியிலும்
நேற்றியங்கிஸைசயானாலும் நின்றேபாவர்தானிருக்கப்
போற்றுமதனுளிலக்கினாதி புகவேகுட்டரோகமென
ஆற்றிலினியநாவலர்க ளறிந்தேயுரைப்பர்பெருமையினால்.

(இ-ள்) நவகோட்களில் பாவ கோட்களெனச் சொல்லும் சனி குஜன் ராகு கேது இவர்கள் தனுசு மீனம் மகரம் என்னும் ராசிகள் ஜெனனலக் கினத்திற்கு எந்த ராசியானாலும், அந்த ராசியில் சம்மந்தப்பட்ட அல்லது அவ்வீட்டுக்குடையோர் அங்கிசையிலுமிருக்க அவர்களோடு யாவரும்போற் றப்பெறும் ஜெனன லக்கினாதிபதி சேர்ந்திருக்க அந்த ஜாதகனுக்குக் குஷ்டவியாதி வருமென்று சோதிடவல்லோர்கள் கூறுவார் எ-று. (929)

பெருமைநன்றுவிருச்சிகமும் பேணுமேடமிடபமுடன்
ஒருமைராசியானாலு முற்றவங்கிசந்தன்னாலும்
வருமேபாவருடன்கூடி வந்துசன்மத்தாதிபனும்
புரவேநிற்கிற்குட்டமெனப் புகல்வாரறிவுக்கினியோரே.

(இ-ள்) ஜெனனலக்கினாதிபதி பாவக்கிரகங்களாகிய குஜன்-சனி-ராகு கேது இவர்களுடன் கூடி பெருமைபெறற மேடம்-விருச்சிகம்-கடகம் இவ வீராசிகளில் இருந்தாலும் அல்லது அவை எத்தனையாம் ராசியாக இருந்தா லும் மேற்சொன்ன மேடம்-ரிடபம்-விருச்சிகத்திற்கு அதிகாரிகளாகிய சந்திரன் குஜன் முதலியோர் அங்கிசத்தில இருந்தாரானால் அந்த ஜாதக னைக்குறித்து அறிவிற்சிறந்த சோதிடவல்லோர் குஷ்டவியாதி வருமென் றும் கூறுவர் எ-று. (930)

இனியசோமன்கிராணத்தி லியன்றபாவர்மிகவுறவே
தனியேயொன்பத்தெட்டுவியஞ் சசிதானிருக்கிலுன்மத்தம்
குனியேகலகப்பிரியனெனக் கொள்வன்கோபிதானாகி
நனியேசோம்பித்திரிவனிவ ளுறுங்குழற்சீர்வல்லியரே.

(இ-ள்) உயிர் லக்கினமாகிய சந்திர லக்கினத்தில் கொடிய பாவர்க ளாகிய சனி-ராகு-கேது-குஜன் இவர்களிருக்க ஜென்ன லக்கினத்திற்கு 8-9-10என்னும் ஆயுள் பாக்கியம் விரயம் என்னும்ஸ்தானங்களில் சந்திரன் மாத்திரம்தனித்திருக்க, அந்த ஜாதகன் மௌனமுடையவனாக இருப்பான் என்றும் நீங்காத வியாதியுள்ளவன் என்றும் கூறுவர். மேலும் கலகம் செய் வதில் மிக்க சாமர்த்தியனும் முன்கோப முடையவனாகி மிக்க மெலிந்து எந்த வேலையும் செய்ய திடமில்லாத சோமபேரி எனனும் பட்டம்பெற்று திரிவானென்று இனிமையான சிறப்பும் பெருமையும் வாய்ந்த பெண்ணே! சொல்லுவாயாக எ-று, (931)

வல்லயிரண்டிற்சனிராகு வந்தேயிருக்கவிரண்டாதி
சொல்லும்பலன்களற்றிருக்கச் சூழும்வீட்டிற்குடையோனும்
நல்லவிரண்டைநோக்கமுற நாடுங்காரிகருநாகம்
வெல்லுந்திசையிலிரண்டாதி மேவத்தொந்தரோகமிதே.

(இ-ள்) வல்லமையும் மகுத்துவமும் உடைய ஜெனன லக்கினத்திற்கு 2-ஆம் ராசியில் கொடிய பாவர்களிருக்க, அவையாவன சனியும்-ராகுவும் கூடி இருக்க, இரண்டாம் வீட்டிற்குடையோர் எந்த ராசியிலாவது நின்று 2-ஆம் ராசியைப் பார்க்க, அந்த ஜாதகனுக்கு சனி-இராகு இவர்கள் திசை வருங்காலம் 9-ஆம் வீட்டுக்குடையவன் எவனோ அவன் புக்தியில் அவனுக்குப் பல்நோய் உண்டாகுமென்று சொல்வாயாக எ-று. (932)

## நாய்கடி அறிதல்

### வேறு

தக்கரண்டா மிடத்திற்சனியுடன்
ஒக்கபாவர்கள் கூடியுறைந்திட
மிக்கபாவர் வெகுண்டதைப்பார்த்திட
குக்கல்கண்டு பயந்துகுலைவனே.

(இ-ள்) மேன்மையும் பிரக்கியாதியும் வாய்ந்த சனியோடு பாவகிரகங்களாகிய குஜன்-ராகு-கேது இவர்களில் யாரேனும் சம்மந்தப்பட்டு மகுத்துவம் பொருந்திய வாக்குஸ்தானமாகிய இரண்டாம்வீட்டில் நிற்க, அவனை மேற்சொன்ன கொடிய பாவிகளே நீசசம பகை முதலியவைகளால் ஈனம் பெற்றுப் பார்க்க, அந்த ஜாதகன் நாயைக்கண்டு பயந்து அல்லது கடித்து இறந்துபோவானென்றும் கூறுவார் எ-று. (933)

நேயரெண்டா மிடத்தினீசனும்
தூயரெண்டா மதிபனுஞ்சூழ்ந்திட
ஆயபாவ ரணுகிடநோக்கிட
நாயுமேகடித் திட்டிடநாணுவார்.

(இ-ள்) தன் குடும்ப நேத்திர வாக்குஸ்தானாதிபதியாகிய இரண்டாம் வீட்டதிபதி நீச்சம்பெற்ற கிரகமாவது அல்லது நீச்சகிரகங்களான சனி ராகுடனாவது சேர்ந்து, மற்றும் பாவர்கள் அவர்களோடு சேரவும், அல்லது பாாகும்படி மேற்சொன்ன இரண்டாம் வீட்டிலேயே நிற்பார்களேயானால் அந்த ஜாதகனை நாய் கடிக்குமென்றும், அதனால் துன்பப்படுவான் என்றும் சோதிடத்தோர் கூறுவார் எ-று. (934)

## பாம்புகடி அறிதல்

### வேறு

எட்டாமிடத்திற்கொடியவிட ராகுவிருக்கிலினியரெண்டில்
துட்டர்கூடநோக்கமுறத் தொடர்ந்துவிஷதிருஷ்டங்களுமாம்
மட்டார்சன்மாதிபனுரு மன்னன்கருங்கோளிவர்மூவர்
பட்டாபெருவீட்டினிலிருக்கப் பாம்பாலரிட்டம்படுவாரே.

(இ-ள்) பற்களினிடையே கொல்லத்தகுந்தவிஷத்தை மறைத்துவைத் திருக்கும் தினசரி பாவகிரகங்களில் ஒன்றாகிய ராகு ஆயுள்ஸ்தானமாகிய 8-ஆம் ராசியிலிருந்து துன்பத்தைத்தரும் கெட்ட குணமுடைய தீயகிரகங் கள் மேற்சொன்ன 8-ல் நின்ற இராகுவுடன் சேர்ந்தாலும் பார்த்தாலும் அந்த ஜாதகனை விஷம் தீண்டுமென்றும், ஜெனன லக்கினம் எந்த ராசி யானாலும் அந்த ராசியதிபதியும், ரோகாதிபதியான 6-ஆம் ராசியதிபதியும் நவக்கிரகங்களில் மிக்க புகழ்ச்சியாய்ப் பேசும் குரு ஆகிய மூன்றுகிரகங் களும் ஏதேனுமொரு ராசியில் சேர்ந்திருப்பார்களாகில் அந்த ஜாதகன் மேற்சொன்ன விஷப்பாம்பால் இறந்துபோவான் என்றும் கூறுவர் எ-று.

வேறு

பார்செறிசசி கரும்பாம்புகூடியே
ஏற்செறியேமினில் எட்டிலுற்றிடில்
சீர்செறிகுமனியன் ஜென்மமேவினும்
கார்செறிவிஷத்திறு லெட்டிற்கண்டமே.

(இ-ள்) இப்பூமியிலுள்ள அனைவரும் புகழ்ந்துபேசத்தக்க சந்திரனோடு கொடிய விஷத்தைக்கொண்டிராநின்ற பாம்பென்னும் இராகுகூடி கேந்தி ரங்களிலொன்றும், சப்தமராசியென்னும் 7-ம் ராசியிலாவது ஆயுள் ஸ்தான மென்று சொல்லும் அஷ்டமத்திலாவது கூடி இருக்க, சிறுஞ்சிறப்பும் பிரக் கியாதியும் வாய்ந்த ஜெனன லக்கினத்தில் சனியம் நிற்க, மேகம்போன்ற கறுத்த கூந்தலுடையவளே! மேலேசொன்ன விஷத்தால் அவன் வயது 32-ல் மரணம் அடைவான் எ-று. (936)

## துர்க்குணம் அறிதல்

வேறு

இந்துடன்பா வக்கிரகங் கூடியேநான்கில்
 இருந்தக்கால் திருடனு மிரண்டாம்வீட்டில்
வந்துகுளி கன்செவ்வாய் பாவரிவர்கூடில்
 வழுத்துவன்பொய் துர்ப்பலவான் மனைவிவிபசாரி
சுந்தரவிந்தை யவாவினன் துர்வியாபாரன்
 துர்ப்போச னங்கடனைச் சுவையுடனேபுசிப்பன்
சந்ததமு நாய்போலக் கூப்புவதல்லாற்
 சற்றுமிதம் பேசறியான் சினன்ரோகிதானே.

(இ-ள்) காடு மலை வனம் முதல் ஏக வெளிச்சத்தைத் தரும் சந்திரபக வான் பாவகோட்களான சனி-ராகு-கேது-குஜன் இவர்களுடன்கூடி சுகத் தைத்தரும் ஜெனன லக்கினத்திற்கு 4-ஆம் ராசியிலிருந்தால் அவன் வழி மறித்து அபகரிப்பவனாவான். குளிகனுடன் குஜன் முதலிய மேற்சொன்ன பாவகிரகங்கள் கூடி தன் குடும்ப மகுத்துவமென்னும் 2-ஆம் வீட்டிலிருப் பானாகில் அந்த ஜாதகன் அழகுபொருந்திய வித்தையான பொருள்களின் மீது ஆசையுடையவனும் கெட்ட நடவடிக்கையும் கெட்ட பொருள்களை விலை கூறுபவனும் விசேஷபொய்சொல்லுபவன் திரேகபலம் இல்லாதவன்

சோரத்தனமுடைய மனைவியையுடையவன், நன்மொழிகளைப் பேசாதவன் கெட்ட பதார்த்தங்களை போஜனம் செய்பவன் அதாவது நீச்சபோஜனவா னென்றும், அவைகளை இன்பமாகப் புசிக்கப் பிரியமுள்ளவனும், எக்கால மும் நாயைப்போல் சீறி அழைப்பவன், அதுவுமல்லாமல் கொஞ்சமாவது தயவு தாக்ஷிண்ணிய வசனங்களைப் பேசாது கோபமுடையவனும் வியா தியை யுடையவனும் ஆவானென்று சொல்லுக எ-று. (937)

## நெய்யிற் கையிடுகை

வேறு.

ஏருஞ்சன்மமிரண்டேழி லெட்டிலிரவிதானிருக்கப்
பாருஞ்செவ்வாயல்லாமன் மற்றையோர்கள்பார்த்தருள
நேருங்கனலிற்காய்ந்திட்ட நெய்யிற்கையும்வெந்துவிடும்
சேரும்வைசூரிதன்னாலும் வாதையென்றுசெப்பிடுமே.

(இ-ள்) உஷ்ணத்தையும் பிரகாசத்தையும் தரானின்ற சூரியன் ஜெனன லக்கினத்திலாவது அல்லது குடும்பமென்னும் இரண்டாம் க்ஷேத்திரத்தி லாவது சப்தமஸ்தானம் என்னும் 7-ஆம் கேந்திரத்திலாவது நிற்க அவனை குஜன் தவிர மற்ற சனி-ராகு-கேது-புதன் இவர்களால் பார்க்கப்பட்டால் அந்த ஜாதகனுக்கு அம்மை முதலிய கொடிய வைசூரியாலும் மெழுகு போல் கொதிக்கக் காய்ந்த நெய் முதலிய ரசங்களாலும் அவன் கைகள் வேகுமென்றும், அதனால் கஷ்டத்தையும் விசனத்தையும் அடைவானென் றும் கூறுக எ-று. (938)

குளிகன்செவ்வாய்தன்னுடனே கூடிச்சன்மவியமாறில்
அளியநண்டிற்றானிருக்க வாதித்தன்கண்பார்வையுறில்
தெளியென்றுலகோர்பழிசுமத்தத் தெய்வச்சபையிற்செந்தழலில்
ஒளியிற்காய்ந்தநெய்யிற்கை யிடுவன்தப்பாதுண்மையிதே.

(இ-ள) பூமிக்குள் ஜலமிருக்குமிடந்தேடி வளைசெய்து அதனுள் வாசம் செய்யும் நண்டுபோன்ற உருவமுடைய கடகராசியிலாவது ஜெனனலக்கி னம் எந்த ராசியோ அந்த ராசியிலாவது ரோகத்தைத்தரும் 6-ஆம் ராசியி லாவது மோக்ஷஸ்தானமாகிய 12-ம்ராசிலாவது குளிகனிருக்க அவனுடன் தீயகிரகங்களில் ஒன்றான குஜனிருக்க அவ்விருவரையும் சூரியன் எந்த ராசியிலிருந்து பார்த்தாலும், அவன் இவ்வுலகிலுள்ளோர் நீதிமார்க்கமற்று சொல்லும் பழிவசனத்தால் தெய்வசபை என்னும் ராஜாக்கள் மத்தியில் அனலால் கொதிக்கப்பட்டிருக்கும் நெய்யில் தவறாது உண்மையாய்க் கையிடுவானென்றுங் கூறுக எ-று. (939)

## ஆயுத விரணம் அறிதல்

வேறு

ஏயதேய்பிறை யேழுறவாறிடத்
தூயனும்வியத் துற்றிடப்பாவர்கள்
ஆயபேர்க ளடர்ந்துகண்ணோக்குறக்
காயம்பட்டொரு கைதுண்டாய்விடும்.

(இ-ள்) தீயகிரகங்களான சனி குஜன் இராகு கேது இவர்கள்சேர்ந்து அல்லது தனித்து விய மோக்ஷ ஸ்தானமாகிய 12-ஆம் ராசியில் நின்ற ரோகாதிபதி என்னும் 6-ஆம் வீட்டதிபதியை பார்க்க கிருஷ்ணபக்ஷத்துச் சந்திரன் கேந்திரங்களில் ஒன்றான சப்தமராசியிலிருக்க அந்தஜாதகனுக்கு அபாயமாகிய காயத்தால் ஓர் கை துண்டாகும் என்றும் சொல்வர் எ-று. ()

ஏற்றலக்கின மெட்டாதியாயினும்
கூற்றன்றனக் குளிகனைக்கூடியே
போற்றப்பன்னிரண் டாறெட்டிற்புக்கிடில்
தோற்றங்காலிரு துண்டமதாகுமே.

(இ-ள்) வாதையையும் பக்ஷத்தையும் கொடுக்கும் 8-ஆம் ராசியதிபதியாவது ஜெனனலக்கினம் எதுவோ அந்த ராசியதிபதியாவது எமனிட ஸ்தானத்திலிருக்கும் குளிகனுடன் கூடி புகழும்படி மோக்ஷஸ்தானமென்னும் 12-ஆம் ராசியிலாவது அஷ்டமமென்னும் 8-ஆம் ராசியிலாவது சேர்ந்திருப்பார்களேயானால் அந்த ஜாதகனுக்கு நடக்கக்கூடிய கால் ஒன்று இரு துண்டாக வெட்டுப்படும் என்றும் கூறுக எ-று. (941)

எட்டிறைகிசெவ் வாயிருவோர்களும்
முட்டவாறின்முந் நான்கிலுமைந்திடில்
சுட்டர்கையிற் சுரிகையிலுமே
வெட்டவாவி விடுவதுதிண்ணமே.

(இ-ள்) ஆயுள் ஸ்தானாதிபதியான 8-ஆம் ராசிக்குடையவர் எவரோ அந்த கிரகமும், தீயகிரகங்களெனப் பேசிவரும் குஜனும் ஆகிய இருவருங் கூடி ஆறாமிடமான ரோகஸ்தானத்திலாவது மோக்ஷஸ்தானமான 12-ஆம் ராசியிலாவது நின்றிருப்பார்களேயானால் அந்த ஜாதகன் துஷ்டர்களென்னும் வேடர் குறவர் திருடர் இவர்கள் வைத்திருக்கும் ஆயுதமாகிய கத்தி வாள் முதலிய கருவிகளால் வெட்டுண்டு தன் உயிரை இழந்துபோவது நிச்சயமென்றும் கூறுக எ-று. (942)

வேறு

திண்ணியசன்மத்திற்சனிபாம்பு தெரிவையிற்சுக்கிரன்றனும்
நண்ணவும்மமாவாசையிற்பிறந்தோ னடந்தகால்கரந்தறிபடுமே
எண்ணியகரும்பாம்பிரவியும்பிறையு மிசைந்ததொருவீட்டினிலிருக்க
விண்ணினிலாவிசெல்லவேசென்னி தேறுபட்டவனியில்விழுமே.

(இ-ள்) ஜெனனகாலப்போது பூரண அமாவாசையாகவும், பெருமை பெற்ற ஜெனனராசி எந்த ராசியானாலும் அந்த ராசியில் கொடுமையை விளைவிக்காநின்ற சனியும் இராகுவும் கூடி, பெண்களுக்குரிய ராசியாகிய கன்னி என்னும் இராசியில் ஓர் கண் பழுதுடைய சுக்கிரனிருக்கப் பிறந்த ஜாதகன் தான் நடக்கும் கால்களானது வெட்டுபடும் என்றும், கொடிய கிரகங்களாகிய இராகு அருக்கனுடன் சுபனாகிய சந்திரன் சேர்ந்து எந்த ராசியிலாவது ஓர் ராசியிலிருக்க, அவன் உயிரிழக்குங் காரணம் எப்படியெனில், சிரசு அறுபட்டு இப்பூமியில் வீழ்ந்திறப்பான். இவை சத்துருக்களாலும் அகஸ்மாத்தான ஆபத்தாலும் உண்டாகும் எ-று. (943)

விழுமியகதிர்சன்மத்துறச்செவ்வாய் மேவியட்டமத்தினிலிருக்க
வழுவுறத்தேய்ந்தமதிகரும்பாம்பு மருவியோர்காலினிலிருக்கச்
செழுமையிற்பிறந்தோனுடலிருபிளவாஞ் சென்மமீதிற்சனியிருக்கத்
தழுவியசசிபாம்பிரவியும்கூடிற் சரீரமேபிளந்திருகூறும்.

(இ-ள்) மேன்மையும் பிரக்கியாதியும் வாய்ந்த ஜெனன லக்கினத்தில் சூரியன் நிற்கவும், அவன் லக்கினத்திற்கு எந்த ராசிக்குடையவனாக இருந்தாலும் ஆயுள் லக்கினமென்னும் 8-ஆம்ராசியில் குஜனிருக்க அவன் உடல் வெட்டுண்டுபோம். தன்பத்தைத்தரும் சந்திரன் எந்த ராசியிலாவது ராகுவுடன் சேர, அவ்விருவரும் பாதசாரங்களின்படி ஒரோராட்களிலும் காலிலுமிருக்க, அந்த ஜாதகன் உடலானது இரண்டு கண்டங்களாகும். மேற்சொன்ன ஜெனன லக்கினத்தில் தீமையைவிளைக்கும் சனியிருக்க, குளிர்ச்சியும் வெளிச்சத்தையும் தரத்தக்க சந்திரன் ராகு கேதுக்களில் ஒருவருடனும் கூடி ஓர் வீடடிலிருந்தாலும் அவன் சரீரமானது பிளவுபட்டு இரண்டுதுண்டாகும் எ-று. (944)

வேறு

கூறும்லக்கினத் தாதியெட்டாதியும்
வீறுகால மிருத்துவுங்கூடிடில்
சீறுமேகத் திரளிடிவீழ்ந்துடல்
நீறதாக நிலத்திடைமாள்வரே.

(இ-ள்) உடல் லக்கினமென்னும் ஜெனன லக்கினாதிபதி எந்தக்கிரகமோ அவனும் கிரகபுத்திரர்களான காலன் கலைக்கியானபாதன் காரேசன் அர்த்தப்பிரகாணன், எமகண்டன் விஷகடிகன் குளிகன் அமுர்தகடிகன் அவமிருத்து என்னும் 9-ல் ஒருவரான அவமிருத்துவும், அஷ்டமாதியாகிய 8-ஆம்வீட்டதிபதியும் ஓர்வீட்டில் கூடி இருப்பார்களேயானால் அந்த ஜாதகன் ஆகாயங்களில் கர்ஜித்து உலாவிவரும் கறுத்த மேகங்களாலுண்டாகும் இடியால் அவன் உடல் சாய்ந்து சாம்பலாகுவான் எ-று. (945)

வேறு

கூறியவிரண்டிலரசனுமிருக்கக் குலவுமும்மூன்றினிற்சனியும்
ஆறுபன்னிரண்டிலரசனுமிருக்க வறுபடுங்கரங்குசனரசன்
சீறுமெட்டேழிலுறவுமீரைந்திற் சேய்புதன்சனியிராகுறவே
வீறுடன்கால்கடுணிபடுமென்றே விளம்பினர்வேதவேதியரே.

(இ-ள்) பாக்கியத்தையும் மேன்மையையும் தானின்ற தந்தைலக்கினமென்னும் லக்கினத்திற்கு 9-ஆம் ராசியில் மருத்துவம்பொருந்திய சனியும் குடும்ப மருத்துவ ஸ்தானமான 2-ஆம் வீட்டில் நற்பலனைத் தரும் குருவும் இருக்க ரோகம் மோக்ஷமென்னும் 6-12-ஆம்ராசிகளில் உலககர்த்தாவான சூரியனிருக்க அந்த ஜாதகனின் கைகளானது வெட்டுபடும். 8-ஆமிடமான அஷ்டமஸ்தானத்திலாவது கேந்திரமென்னும் 7-ஆம் ராசியிலாவது நற்கோளாகிய குருவும் அசுபனாகிய குஜனும்சேர்ந்துமிருக்க, அல்லது 10-ஆம் இடமென்னும் காரியம் கர்மம் என்னும் ராசியில் குஜன்-புதன்-சனி-ராகு

ஆகிய நால்வரும் கூடியிருக்க, அந்த ஜாதகனுக்கு பலத்தைத் தாரானின்ற கால்கள் அறுபடுமென்று வேதங்களை ஆராய்ந்த மேதாவிகள்கூறுவர் எ-று.

**வேதனுங்குருசுக்கிரனுமோராறின் மேவிடக்காரியும்பார்க்க**
**ஒதியகருங்கோளிலக்கினத்திருக்க விற்றசன்மாதியாருறவும்**
**தீதறுசிரம்போமுடலினிற்காரி செறியமற்றோர்மனைதன்னில்**
**ஆதவன்கருங்கோள்சந்திரனிருக்க வணியுதரம்இருபிளவாம்.**

(இ-ள்) சாஸ்திரங்களுக்கெல்லாம் முதல்வனாகிய குருவும், தேவலோக அரசனாகிய சுக்கிரனும், ஜெனன லக்கினத்திற்கு 6-ஆம் வீடான ரோக ஸ்தானத்திருக்க, சனி எந்த ராசிகளில் நின்றாலும், மேற்சொன்ன இருவரையும் பார்க்க தீயபலனைத் தருவாரென்றும், இராகு ஜெனன லக்கினத்தில்சேர, அவன் ஜெனனலக்கினாதிபதி எவனோ அவனுக்கு மித்துருவாக அல்லது உறவாக, அந்த ஜாதகனுக்குச் சிரசானது ஆயுதங்களால் பிளவுபடும். உடல் லக்கினத்தில் சனி நிற்க, சூரியனுடன் கருநாகமென்னும் இராகுவும் சந்திரனும் கூடி எந்த ராசியிலிருந்தாலும் அவன் உடலில் உதிரம் பெருகும்படி இருதுண்டாக வெட்டுப்படும் எ-று. (947)

*வேறு*

**பிளவுபட்டிடும் பேருடல்ரெண்டினில்**
**வளமைசூரியன் மற்றும்வியக்குசன்**
**இளவதேய்பிறை யெட்டிலுறசனி**
**களவதாய்ப்பிறை தன்னையேகண்டிடில்.**

(இ-ள்) அஷ்டம ஸ்தானமாகிய 8-ஆம் ராசியில் தேய்பிறைச் சந்திரன் இருக்க, அவனைச் சனி எந்த ராசியில் நின்றாலும், மேற்சொல்லிய தேய்பிறைச் சந்திரனைப் பார்க்க, தன் குடும்ப நேத்திர ஸ்தானமான இரண்டாமிராசியில் கதிரோனிருக்க, மோக்ஷ ஸ்தானமாகிய 12-ஆம் ராசியில் தீய கிரகங்களில் ஒருவரான குஜனிருக்க, அந்த ஜாதகன் உடலானது ஆயுதங்களால் வெட்டுப்படும் என்றும் கூறுவர் எ-று. (948)

**கண்டதேய்பிறை சூரியன்காரிசேய்**
**மண்டிநால்வரு நாலெட்டில்வந்துறப்**
**பண்டுநல்லவர் பாராதிடிற்கைகால்**
**துண்டமாகித் துயரின்மடிந்திடும்.**

(இ-ள்) நான்காமிடமான சுகஸ்தானத்திலாவது 8-ஆமிடமென்னும் ஆயுள் லக்கினத்திலாவது நாளுக்குநாள் தன் கலை குறைந்த சந்திரனோடு சூரியன்-சனி-குஜன் ஆகிய இவர்கள் சேர்ந்துநிற்க, அவர்களை நற்பலனைத் தரும் சுபக்கிரகங்களாகிய சந்திரன்-புதன்-சுக்கிரன் இவர்கள் பாராமலிருப்பாரானால் அந்த ஜாதகனுடைய கரங்களும் கால்களும் வெட்டுப்பட்டு துண்டாகும். அந்த வேதனையால் அந்த ஜாதகன் இறந்துபோவான் என்றும் கூறுவர் எ-று. (949)

**மடிந்ததேய்பிறை வந்துசன்மத்துறப்**
**படிந்தவெட்டினிற் பானுகுசன்சனி**

தொடர்ந்துமூவருங் கூடியுறத்துரை
கடிந்துவாளினுற் கண்டதுண்டஞ்செய்வன்.

(இ-ள்) உலகெங்கும் அரசுசெய்யும் சூரியனேடு துன்பத்தைத் தரும் சனியும் குஜனும் சேர்ந்து இம்மூவரும் கூடி, ஜெனன லக்கினத்திற்கு எந்தராசியிலிருந்தாலும் பெருமைபெற்றசந்திரன் கிருஷ்ணபக்ஷத்தோனுகி ஜெனன லக்னத்தில் இருக்க, அந்த ஜாதகன் பிறருடன் சண்டையிட்டு அந்த வாளால் கண்டதுண்டமாகுவன் என்றும் சோதிடத்தோர் கூறுவர் எ-று. (950)

## இவை இலங்கை ராசிமான சங்ஙை

### ·12-ராசிக்கும் இலங்கை விநாடிகள்

வேறு

மீனமேடங்கன்னிதுலாம் விரும்புமிருநூற்றெழுபதுடன்
ஆனவெட்டேவிடைசிங்க மாகுங்குடந்தேண்முந்நூறில்
ஈனமொன்றுநண்டுதனு வெழில்சேர்மிதுனமகரமிவைக்
கானமுந்நூற்றிருபான்மூன் ருகுமிலங்கைவிநாடியென்பர்.

விபரம்

| மேடம் | ரிஷபம் | மிதுனம் | கடகம் | சிம்மம் | கன்னி | துலாம் | விர்ச்சிகம் | தனுசு | மகரம் | கும்பம் | மீனம் |
|---|---|---|---|---|---|---|---|---|---|---|---|
| 278 | 301 | 323 | 323 | 301 | 278 | 278 | 301 | 323 | 323 | 301 | 278 |

## தேச விழுச்சாயை

என்னுந்தேசவிழுச்சாயை யியன்றமதுரைக்கொருநூறும்
மன்னுமையேழாங்காஞ்சிக் கறைவர்நூறேடைம்பானேழ்
பன்னுஞ்சோழநாட்டிற்கே பகர்வாய்நூற்றுநாற்பானுன்
கென்னபெங்களுர்தனக்கே இருநூற்றிருபதெனச்செப்பே.

விபரம்

| மதுரை | காஞ்சி | சோழநாடு | பெங்களுர் |
|---|---|---|---|
| 135 | 157 | 144 | 210 |

இவ்விரண்டு செய்புளும் உலகத்திற்குப் பொதுவான செய்புளாதலால் அதிகம் எழுதவில்லை. மேற்கண்டபடி காட்டியிருப்பது தெரியாதவர்களும் வரிசையாய் அறியலாம்.

வேறு

செப்பியதோர்சரபிண்ட முதலிருபானுன்கும்
திகழிரண்டோபதினுருஞ் செவிமூன்றினுக்கோ
ஒப்புறுமாரேடரையே வீசமாகும்
உயர்ந்துருவமிவைமூன்றை விழுச்சாயைதன்னல்
தப்பாமற்றனித்தனியே பெருக்கிவருந்தொகையை
சார்மேடம்விடைமிதுனந் தன்னின்முறையாக
இப்புவியோர்புகழிலங்கை காசிதனிற்களைய
இயறேசராசியள வாகுமெனலாமே.

*(இ-ள்) துருவமென்பவை மூன்றுவகைப்படும். அவையே முதல் சரபிண்டமென்றும் இரண்டாம் சரபிண்டமென்றும் மூன்றும் சரபிண்டமென்றும் பேசுவார். இவை ஒவ்வொன்றிற்குரிய விநாடிகள்முதல் சரபிண்டத்திற்கு-24, இரண்டாம் சரபிண்டத்திற்கு-11, மூன்றும் சரபிண்டத்திற்கு ஆறரையேவீசம். இந்த மூன்று சரபிண்டங்களையும் தேசத்திற்குத் தக்கபடி முன்செய்யுளில் சொன்ன தேசவிழுச்சாயை எண்களால்பெருக்கி வந்த தொகையை இலங்கை ராசிமான சங்கைகளால் வகுக்க வருவதே தேச ராசியளவாம். இவ்வாறே முறையே மேடம்-ரிடபம்-மிதுனத்தோர்க்கும் களைந்து பார்க்கவும் எ-று.* (953)

வேறு

ஆனபெண்ணு மரியுடனண்டினும்
வானகோலுந் தேளுந்தனுவும்முறை
ஆனவாறுடன் கூட்டிடுமீன்குடம்
மானுஞ்சொன்ன முறைப்படிவாங்கியே.

*(இ-ள்) மேற்சொன்ன 3-ராசிகள் போக மற்றும் மிகுந்துள்ள கடகம்-சிங்கம்-கன்னி - துலாம்-விருச்சிகம்-தனுசு-மகரம் - கும்பம்-மீனங்களுக்கும் இவ்வாறு மேற்சொல்லியபடி கண்டுகொள்ளவும் எ-று.* (954)

---

## சீவனம் அறிதல்

வேறு

அம்புவியோர்செய்தொழிலாற் சீவனமுண்டாரும்
அவையன்றிலக்கினஞ்சோம னுதவன்மும்மனைக்கும்
தம்பமொடுபத்தாம்வீட் டாங்கிசையிலிருந்தோர்
தம்மிலதிகப்பலமாய்த் தரித்தவரங்கிசைதான்
வெம்புரவித்தேரோ னங்கிசத்தனையன்பலமே
மேவிபுல்வைக்கோலும் விற்றுணவேகொள்வன்
செம்பொன்விற்பதுராசிப் பலனூலுக்கோரை
திக்குபலமுண்டாயிற் செய்வன்வயித்தியங்கள்.

(இ-ள்) இவ்வுலகின்கண்ணுள்ள ஒவ்வொருவரும் எத்தொழில் செய்வார்கள்? எவ்விதம் ஜீவிப்பார்கள்? என்று பார்க்கவேண்டுமாயின் முதன் முதலாக ஜெனன லக்கினத்திற்கு 10-ஆம் வீட்டோன் அங்கிசம், இரண்டாவது சந்திராலக்கினத்திற்கு 10-ஆம் வீட்டோன் அங்கிசம், மூன்றாவது சூரியன் நின்ற ராசிக்கு 10-ஆம் வீட்டோன் அங்கிசம், ஆக இம்மூன்று விதங்களையும் அறிந்தே மேற்சொன்ன விபரம் கூறவேண்டும். எப்படியெனில், மேற்சொன்னபடி எவராவது 10-ஆம் வீட்டோன் அங்கிசம்பெற்றிருக்கிறாரவென அறிந்து அந்த 10-ஆம் வீட்டோன் அங்கிசையைக்காட்டிலும் சூரியன் அங்கிசையில் பலக்கப்பட்டிருந்தால் அந்த ஜாதகன் புல் விழல் முதலிய தலைச்சுமைகளை விற்று ஜீவிப்பவனாகுவன் முன்சொன்ன குதிலாத் தேரையுடைய சூரியன் அங்கிசம்பெற்ற கிரகம் எவனோ அவன் நின்ற ராசி உத்தம பலம்பெற்ற ராசியாயின் செம்மை நிறத்தையுடைய பொன்வகைகளை விற்பவனாகுவான். அவன்பிறந்த ஓரையும் நாற்புறமாகிய திக்குகளில் கிரகம் வலுப்பெற்றிருக்க, அவன் வைத்தியமென்னும் தொழிலால் மேன்மையடைவான் எ-று. (955)

களங்கமில்லாவெண்டிங்க ளங்கிசமேயாக்கி
கமழுமிலக்கினத்திரையைக் காணமுதலாகில்
விளங்கியநற்பயிர்த்தொழிலே புரிந்துணவுகொள்வன்
மேவியரெண்டாதிரையைக் காணமேயாயின்
வளங்கெழுசிந்துவிற்சம்பான் கப்பல்சோங்கோட்டி
வாழ்வன்மூனருந்திசையைக் காணமுமேயாயின்
இளம்பிடியோதிமந்தனையும் பழித்தநடைமடவார்
இணக்கத்தாற்சீவனமுண் டென்பரினியோரே.

(இ-ள்) முன் சொன்னபடியே 10-ஆம் வீட்டோன் சந்திரனாகயிருந்து அவன் அங்கிசமபெற்ற கிரகம், இராசிகிரகப்படி ஜெனன லக்கினங்களுக்கு திரிகோணங்களில் இருப்பானாகில அந்த ஜாதகன் செல்வத்தை விருத்தி செய்யும் சக்திவாய்ந்த உழவுத்தொழிலாகிய பயிர்த்தொழில் செய்து அதனால் ஜீவிப்பானென்றும், திரேகாணம் என்பது லக்கினத்தை மூன்று கூரிட்டு ஜெனன லக்கினம் சரமாயின் 1-5 9, ஸ்திரமாகில் 9-1-5, உபயத்துக்கு 5-9-1 எனக் கொள்க. இவ்வாறு கண்ட இரண்டாந் திரேகாணமாகில் அவன் சமுத்திரங்களிலுள்ள கப்பல் படகு முதலியவைகளை ஓட்டி ஜீவிப்பான். 3-ஆம் திரேகாணமாயின் ஸ்திரீகளின்சேர்க்கையாலும் நேசத்தாலும் அவர்கள் பொருளைக்கொண்டும் ஜீவிப்பான் என்றும் கூறுக எ-று.

இனியசெவ்வாயங்கிசத்தி லக்கினமேபலமாய்
இரும்புவெள்ளிசெம்பொனும் விற்றிருப்பனவாங்கிசைதான்
நனியபலமாயிடிலக் கினியிலுறுதொழிலே
நடத்திடுவன்றிரிங்கிசாங் கிசம்பலமேயாயின்
கனியுறுமாயுதம்பிடித்துச் சேவிப்பனேழாம்
தானமதுபலனுயிற் றக்கதொழில்செய்வன்
கனிமொழியாயிரவிமுதல் சனிமட்டுமெண்ணிக்
கண்டதுசத்தாங்கிச மேழாம்பலன்கண்டீரே.

(இ-ள்) முன் சொல்லியபடியே 10-ஆம் வீட்டிற்குடையோன் ருசி பொருந்திய செவ்வாய் என்னும் குஜன் அங்கிசம் பெறவும், அவன் நின்ற லக்கினம் சுபராசியாகவும் பலமும் பெற்றிருப்பானாகில் அவன் உலோக வகையான இரும்பு செம்பு வெள்ளி பொன் முதலியவைகளைக்கொண்டு வியாபாரம் செய்பவனாவான். நவாங்கிசமென்னும் ஜெனன லக்கின நாழிகையை 9-பேருக்கு பாகித்து லக்கினத்தில் சென்ற நாழிகைபோக மீதம் உள்ள நாழிகை முன்சொன்ன 245-ஆம் செய்யுளின்படி கண்ட லக்கினம் சுபராசியாகவும் பலமும் பெற்றிருக்க, அவன நெருப்பினிடம் வாசம் செய்யும் தொழிலால் ஜீவிப்பான். திரிசாங்கிசமென்னும் லக்கினம் வலிபெற்று இருக்குமேயானால் கத்தி கேடயம் வாள் முதலிய ஆயுதங்களைப் பிடித்து சேவகம்செய்து ஜீவிப்பவனாவான். சூரியனிலிருந்துராசிமுதல் எண்ணிக்கண்ட சப்தமாங்கிசமென்னும் 7-ஆம் ராசி வலுபெற்றிருக்கப் பிறந்தவன் அந்த ராசி அல்லது கிரகத்திற்குரிய தொழில் எதுவோ அத்தொழிலால் ஜீவிப்பான் என்றும் கூறுவர் எ-று. (957)

கண்டபுதனங்கிசத்தின் பலனவாங்கிசையே
காவியங்கற்பன்றுவாத சாங்கிசமேயாயின்
மிண்டுசிற்பசாஸ்திரமே யறிந்துணவுகொள்வன்
மேவுந்திரிசாங்கிசமே யெழுதுந்தொழிலான்
கொண்டவறுபதிலோரை யங்கிசமேற்கணிதங்
குறித்திடுவன்புதனிருந்த ராசிதனைப்பிரித்து
மண்டியறுபதுபங்குசெய் யதிலொற்றைப்பங்கில்
வந்துபுதனிருக்கிலெனவே வழுத்தல்வேண்டும்.

(இ-ள்) ஜெனன காலப்போது அங்கிசம் அல்லது நவாங்கிசங்கள் புதனாக ஜெனித்தோர் பற்பல புராணங்களைத் தெரிந்துகொள்வோனும், துவாதசாங்கிசம் புதனாகில் மனை சாஸ்திரமாகிய சிற்பங்களில் வல்லவனாகி உணவு கொள்பவனாவான். புதனுக்குத் திரிசாங்கிசம்வரில் கல்வி மூலமாக வரையும் தொழில் மூலமாக காலங்கழிப்பான். 60-ஆம் ஓராங்கிசம் பெற்றிருக்க அவன் கணக்குமுதலிய சோதிடவகையில் புசிப்பவனாவான. புதன் எந்த ராசியிலிருந்தாலோ அந்த ராசியை அறுபது கூறுசெய்து ஒற்றைப் படைகளில் புதன் வாசம்செய்யில் சோதிடமென்னும் கணக்கு முதலிய வகைகளால் புசிப்பான் என்றும் கூறுவர் எ-று. (958)

வேண்டுகுருவங்கிசத்தின் முதற்றிரையக்காணம்
விப்பிரராற்பலனிரண்டாந் திரையக்காணந்தான்
பூண்டதேவதைகளினாற் பலன்மூன்றுங்காணம்
புண்ணியத்தாற்பயனாகுஞ் சுக்கிரனங்கிசைக்குத்
தாண்டுசுரபிகளெருமை பெறுமூன்றுங்காணம்
தக்கவெள்ளிவிற்பனடுத் திரையக்காணந்தான்
மீண்டுமுதற்றிரையைக் காணம்மதுவேயாயின்
விரவுநவரத்தினமே வியாபாரஞ்செய்வன்.

(இ-ன்) முன் 956-ஆம்செய்யுளின்படி யாவரும் போற்றும் பிரகஸ்பதி முதல் திரேகாணம் பெற்றிருப்பாராகில் அந்த ஜாதகன் தொழுகுலத்தோ

ராகிய விப்பிரரால் போசிப்பை நடத்துபவனும், இரண்டாம் திரேகாண மாகில் மாயா சக்திவாய்ந்த தேவதைகளாலும், மூன்றாந் திரேகாணமாகில் தன் பூர்வ நற்கருமத்தாலும் தன் ஜீவனத்தை நடத்துவான். வெள்ளி யங்கிசமாகில் எமவாகனங்களாலும் ரிஷபவாகனங்களாலும் ஜீவிப்பான். திரேகாணங்களில் சுக்கிரன் 3-ஆம் திரேகாணம் பெற்றிருக்க, மேன்மை பெற்ற வெள்ளி உலோகங்களால் வியாபாரம்செய்வான். திரேகாணங்கள்3, நடுத்திரேகாணமாகில் இரண்டாம் திரேகாணமும் முதல் திரேகாணமும் ஒன்றாயின் ஒன்பது வகையான நவரத்தினங்களைக்கொண்டு வாங்கவும் விற்கவும் ஆவான் என்று சொல்லுக எ-று. (959)

செய்யசனியங்கிசத்திற் பலன்சிறுவன்றனுஞ்
செப்பியமித்திராங்கிசமேற் பிரயாசத்தொழிலாம்
வெய்யபாவக்கிரகம் லக்கினத்தைப்பார்க்கில்
மெத்தவேசுமைசுமந்து மெய்க்குணவுகொள்வன்
ஐயவிலக்கினந்தன்னை நீசருங்கண்டக்கால்
ஆகாதகாரியங்க ளவத்தொழிலேசெய்வன்
துய்யசனியங்கிசத்திற் சுபக்கிரகங்கள்கூடில்
துலங்கிடவேதான்சிறப்பத் தொழில்செய்துவாழ்வன்.

(இ-ள்) எல்லா வல்லமையும் பொருந்திய சனியங்கிசத்தில் பிறந்தவன் சனியங்கிசம் பெற்ற கிரகமும், சனியும் மித்துருவாக இருந்தால் அந்த ஜாதகனுக்கு எத்தொழிலும் பிரயாசையுடன்கிடைத்தலும் அசனல் ஜீவிப்பவனும், கொடுமையை விளைக்கும் தீயோரான சனி-ராகு-கேது-குஜன் இவர்கள் ஜெனன லக்கினத்தைக் காணில் பாரமான கட்டு சுமைகளைத் தூக்கிக் கஷ்டப்பட்டு தன் சரீரத்தை வளர்ப்பவனும், ஜெனன ராசியை சனி-ராகு-கேது என்னும் நீசர்கள் பார்க்கப் பிறந்தோன் தனக்குச் சுகத்துடன் கைகூடிவராத கொடிய தொழில்களைச் செய்து ஜீவிப்பவனவான். சுபர்களான சந்திரன்-புதன்-சுக்கிரன் இவர்கள் முடவன் அங்கிசம்பெற்று இருப்பாராகில் பிரகாசத்துடன் சிறப்ப காரியங்களால் தன் வாழ்நாளைக் கடந்துகொள்வான் எ-று. (960)

வேறு

ஆதவன்சசிலக் கினமிவைமூன்றுக்
கதிபரிலதிகமாம் பலத்தோன்
அடைந்தவங்கிசந்தான் பரிதியங்கிசமா
யம்பொன்னும் வைக்கலும்விற்று
நீதியாய்வயித்தி யங்களுஞ்செய்வன்
நீள்பிறை யங்கிசமாயின்
நீரினிற்சோங்கு நடத்தியேயுய்வன்
நிலமக னங்கிசையாயின்
ஓதுமக்கினியால் இரும்புபொன்வெள்ளி
யுருக்கலாயுதங்களினலும்

உணவுகொண் டிடுவன் புந்தியங் கிசமே
லுரைத்திடு கணிதமுங் கணக்கும்
தீதறுசிற்பத் தொழில்கள் காவியத்தால்
சீவனம் வேந்தனங் கிசைக்குத்
தெய்வமா மறையோர் பெரியவ ராலும்
சீவனம் புரிந்தினி திருப்பன்.

(இ-ள்) ஜீவனத்தைப்பற்றி அறியவேண்டின் ஜெனனலக்கினத்து அதிபதியைக்கொண்டும், கதிரோன் மதி இவர்கள் நின்ற ராசிநாதனைக் கொண்டும் பேசவேண்டும் என்று கூறியுள்ளார். அம்மூவரில் மேன்மையான சக்திவாய்ந்த கிரகம் எதுவோ அந்த கிரகம் கதிரோன் அங்கிசம் பெற்றிருப்பானாகில் அருமையான பொன்னையும் விழலையும் கொண்டு வியாபாரம் செய்வதோடு பண்டிதனாகவுமிருந்து தன் வாழ்நாளைச் சுகத்தோடு கழிப்பான். கலைகளையுடைய குளிர்ச்சியான மதி அங்கிசம்பெற்று இருக்க அவன் ஜலத்தால் பற்பல ரகங்களையும் செய்து ஜீவிப்பன். குஜன் அங்கிசம்பெற்றிருக்க, பொன் வெள்ளி இரும்பு முதலிய உலோகங்களை அக்கினியாலுருக்கி அதைக்கொண்டும் பற்பல ஆயுதங்களாலும் ஜீவிப்பவனாவான். மாதுரு காரகனாகிய புந்தி அங்கிசம் பெற்றிருக்க சோதிடங்களாலும் கணக்குமுதலியவைகளாலும் துன்பமில்லாத மனைசாஸ்திரங்களாலும் பற்பல கட்டுரைகளாலும் பிழைப்பான். அரசனான அந்தணன் அங்கிசையிலிருக்க தெய்வத்தன்மை யுடைய மேதாவிகளாலும் விப்பிரகுலத்தோராலும் இப்பூமியில் சௌக்கியத்தோடு புசித்து வாழ்வான் எ-று. (961)

வேறு

இருந்த சுக்கிர னங்கிச மேறிலோ
தெரிந்த ரத்தினம் வெள்ளியாற் சீவனம்
பொருந்த சுன்னங் கிசம்புக வீனமாய்
வருந்திடுந் தொழில் செய்வன் வளமிலான்.

(இ-ள்) மேற்சொல்லிய மூன்று ராசியதிபருள் வெள்ளியாகிய அசுரகுரு அங்கிசம்பெற்றிருக்கப் பிறந்தவன் இவ்வுலகில் மதிக்கத்தக்க உயர்ந்த இரத்தின வகையாலும், வெள்ளி உலோகத்தைக்கொண்டும் வியாபாரம் செய்து தன் வாழ்நாளைக் கழிப்பான். மகர கும்பத்திற்கு ஆக்ஷிநாதனான அந்தகன் அங்கிசம்பெற்றால் உடல் கஷ்டப்படத்தக்க கீழ்மைத்தொழிலால் புசிப்பவன் என்றும், விருத்தி யில்லாதவன் என்றும் கூறுவாயாக எ-று. (962)

# கேந்திர பலன்



['கேந்திரம்' என்பது 1-4-7-10-ஆம் இராசிகளையே கேந்திரம் எனப்படும். அவற்றில் 10-ஆமிடம் கேந்திரமே விசேஷமென்றும் கூறியுள்ளோம். ஆனால் இந்த நான்குராசியிலுமுள்ள கிரகங்களுக்கு பலம் ஒன்றேயாயினும், நான்கு ராசியிலுமிருக்கும் கிரகபலமே விசேஷமாம். இதைக்கொண்டே நம் நூலாசிரியர் திக்கு என்று கூறினார்.]

**கேந்திரம் என்பது யவனசப்தம்**

இதனை வடமொழி எனக்கொண்டு பின்வருமாறு
நமது நண்பர் ஒருவர் பொருள் கூறுகின்றார்.

அஃதி வருமாறு:

கேந்திரம் என்னும் பதம் க: + இந்திரம்=கேந்திரம்

எனவே, (க) சப்தம் பிரமனையும், (இந்திர) சப்தம் ஐஸ்வரியத்தையும் தரும் பெற்றியை யுடைத்தாகலின், இதற்கு பிரம்ம ஐஸ்வரியம் என்பது பொருள் ஆகும். அஃதி எங்ஙனமெனின், பிரம்ம ஐஸ்வரியம் என்பது நான்முகப் பிரமனை நாபிக்கமலத்தில் தந்தவரும், உலகத்துக்கு பரம ஐஸ்வரியங்களைத் தந்து இரக்ஷிப்பவருமாகிய காத்தற்கடவுளாம் ஸ்ரீமகாவிஷ்ணு என்று அறியத்தக்கது. ஆகவே விஷ்ணுஸ்தானம் என்பதற்கு கேந்திரஸ்தானம் என்பது சிறந்த பொருளாகும், திரிகோணஸ்தானம் என்பதற்கு இலக்குமி ஸ்தானம் என்று பொருளாகும். இதனை,

"லக்ஷ்மீஸ்தாநம் த்ரிகோணம் ஸ்யாத்விஷ்ணு ஸ்தாநஞ்ச கேந்த்ரகம்
தயோ ஸம்பந்த மாத்ரேண ராஜயோகா திகம்பவேத்"

எனவரும் பராசர ஓரை சுலோகத்தினால் நன்கு அறியலாம். வராகமிகிரர் கலியாணவர்மர் முதலிய ஆசிரியர்கள் கேந்திர பணபர ஆபோக்லீயங்கள் இன்னின்னஸ்தானங்களென முறையே பிருகஜ்ஜாதகம் சாராவளிமுதலிய நூர்களில் ராசி சீல அத்தியாயத்தில் கூறிப்போயினர். மற்ற அத்தியாயங்களில் சிற்சிலவிடங்களில் திரிகோண சப்த பிரயோகங்கள்மட்டும் காணப்படுகின்றன. கேந்திரம் திரிகோணம் என்னும் இவ்விரண்டு பதங்களும் முறையே 1-4-7-10-ஆம் இடங்களையும், 5-9-ஆம் இடங்களையும் குறிக்கு மொழிகளென்பது நாம் உலகவழக்கிலும், நூல் வழக்கிலும் நன்கு அறிந்த விஷயம். இவற்றுள் கேந்திரம் என்பது யவனதேசத்து மொழியாகும். திரிகோணம் என்பது அத்தேசத்து மொழியல்ல; அது வடமொழியாகும். திரி=மூன்று, கோணம்=மூலை எனவே, மூன்று மூலைகள் என்பது திரிகோணத்தின் சிறந்த பொருளாகும். அவை இலக்கினம் பஞ்சமம் நவமம் என்பவைகளாம். ஆகவே திரிகோணம் என்ற சப்தத்திற்கு 1-5-9-ஆமிடங்கள் என்ற பொருள் சித்திக்கின்றது. உலகவழக்கிலோ இலக்கினத்தை நீக்கி 5-9-ஆமிடங்களைமட்டும் திரிகோணம் அல்லது கோணம் என்று வழங்கப்பட்டுவருகின்றது. இலக்கினத்தை அங்ஙனம் திரிகோணம் என்று வழங்கப்படவில்லை.

கேந்திரம் பணபரம் ஆபோக்லீயம் என்பவைகள் யவனதேசத்து மொழி. அவைகட்கு யாது காரணம்பற்றி அத்தேசத்தவர்கள் இப்பெயரிட்டு வழங்கினர்கள் என்று அறியக்கூடவில்லை. வடமொழி பூர்வசோதிட நூல் ஆசிரியர்களும் அதையே ஆதரித்து வழங்கிப்போயினர். கேந்திரம் என்பது 1-4-7-10-ஆமிடங்கள் என்று அனைவரும் கூறுவர். திரிகோணமெனின் 1-5-9 எனக்கூறவேண்டியிருப்ப, 5-9-ஆமிடங்கள் எனக்கூறுதல் தவருகுமன்றோ? ஆகவே, இலக்கினத்தை கேந்திரமெனவும், திரிகோணமெனவும் வழங்கவேண்டியிருப்ப, கேந்திர விஷயத்தில்மட்டும் இலக்கினத்தை வழங்கி திரிகோண விஷயத்தில் இலக்கினத்தை வழங்காது விடுத்த காரணம் யாதோ அறியகில்லேம். திரிகோணம் என்ற சப்த பிரயோகத்துக்கு 1-5-9 ஆமிடங்களே எனப் பொருள் கூருது 5-9-ஆமிடங்கள் எனப் பொருள்கூறலும் உண்டோ எனின்? கூறுதும். சாராவளி அரிஷ்டாத்தியாயத்தில் 'லக்நே சந்த்ரே' என்ற தொடக்கத்துச் சுலோகத்தில், 'த்ரிகோண நிதநேஷு' என்ற சப்த பிரயோகத்துக்கு ஐந்து ஒன்பது எட்டாமிடங்களெனவும், மற்றும் பிருகஜ் ஜாதகம் 6-வது பாலாரிஷ்டாத்தியாயத்தில் 'த்ரிகோண விநாசகைர்' என்றவிடத்தில் ஸ்ரீயுத பட்டோத்பலர் 5 9-8-ஆமிடங்களெனவும் பொருள்கொண்டு வியாக்கியானம் செய்திருத்தலினுல் நன்கு அறியலாம்.

வேறு

திக்குப்பலமாவது சேய்கதிர்பத்தில்
தொக்கக்குருபுந்தி யிலக்கினத்துற்ருல்
துக்கச்சனியேழினில் சூழ்ந்திடின்வல்லன்
வக்கிரன்சனிநான்கில் வலியெனச்சொல்லே.

(இ-ள்) நான்கு திக்குகளிலும் பலம் என்று சொல்லும் நான்கு கேந்திரங்களான தசமகேந்திரத்தில் சூரியனும் செவ்வாயும்நிற்க, அவர்களுக்கு பலமாகும் 1-ஆம இடமான ஜெனனராசியில் புதனும் குருவும்சேர்ந்தாலும் பலமாகும். சப்தம கேந்திரமான 7-ஆம் ராசியில் துக்கத்தைத்தரும் சனி நிற்கில் அவனுக்கு பலமாம். சதுர்த்தகேந்திரமாகிய 4-ம் ராசியில் வெள்ளியும் மதியும் நிற்க அவர்களுக்கு மிகுந்த பலமென்றும் கூறுக எ-று. (963)

வேறு

பத்தாகுமதிபதியை யிரவிசசிபார்க்க
பரிந்திவர்மூவருங்கூடப் பத்தாம்வீட்டதிபன்
மெத்திரவிசசியின் வீட்டினிலுமிருக்க
வெற்றிமுடியரசர்பக்கன் மேவியவர்தம்மைப்
புத்தியுடனேசேர்ந்து சீவனமேசெய்வன்
புகழ்பத்தாமதிபன் பூபுத்திரனைக்கூடில்
சித்தமாய்ச்சேனுதி பதிகடமைச்சேர்ந்தே
சீவனம்பண்ணுவனென்றே தெரிந்துரைசெய்வாரே.

(இ-ள்) கேந்திரங்களில் மகுத்துவம் பொருந்திய தசமஸ்தானமான 10-ஆம்ராசியதிபதியை கடகம்-சிங்கம் இவ்விரண்டிற்கும் ஆதிநாதர்களான ரவியும் சந்திரனும் நோக்கினும், அல்லது 10-ஆம் ராசிநாதனை ரவி மதி

இவர்கள் ஒன்றுகூடினாலும், அல்லது 10-ஆம் ராசிநாதன் மேற்சொன்ன ரவி மதி வீடாகிய கடகம் சிங்கம் இவற்றிலிருந்தாலும் அந்த ஜாதகன் வெற்றியையே செங்கோலெனவும் கொண்ட தேசாதிபதிகளைக் கூடி வாழ்வான், புகழ்ச்சியாய் போற்றப்பட்ட 10-ஆம்ராசியதிபதி மேடம் விருச்சிகம் இந்த ராசிக்கு ஆதிநாதனான செவ்வாயைக் கூடியிருக்க, அவன் ஓர் படைத்தலைவனாகக்கூடிப் பிழைப்பானென்று சோதிடத்தோர்கள் அறிந்து உரைப்பார் எ-று. (964)

செய்யப்பத்தாதிபன்புதனைச் சேர்ந்துமேநிற்கில்
ஸ்திரீகளினாற்புத்திரியால் தெரிகணிதத்தாலும்
துய்யகுருவுடன்கூடில் புராணசாத்திரத்தால்
சுருதியாலமைச்சரா ரியர்துரைகடமமால்
வையமெலாம்புகழ்பாக்கி யத்தோடுசீவிப்பன்
மகிழுஞ்சுக்கிரனுடனே வந்துமிகக்கூடில்
பையமறையோரமைச்சர் பரிகரியவெருமை
படைத்துமரத்தினக்கிரயம் பண்ணியுஞ்சீவிப்பன்.

(இ-ள்) தசமகேந்திரமென்னும் 10-ம்ராசியதிபதி மிதுனம் கன்னிக்கு ஆதிநாதனான புதனோடு கூடியிருந்தால் அந்தஜாதகன் தன் புத்திரியாலும் (பெண்களாலும்) சோதிட சாஸ்திரத்தாலும் ஜீவிப்பவனாவான். மேன்மையைப்பெற்ற அரசனென்னும் வியாழனுடன் 10 ஆம ராசிநாதன் கூடியிருக்க, இப்பூமியோர் சந்தோஷிக்கும்படி மந்திரிகளாலும் குருவாலும் அரசர்கள் மூலமாகவும், வேதகாவியஙகளாலும், மேன்மையான செல்வத்துடன் வாழ்ந்திருப்பவனாவான். சந்தோஷத்தைத்தரதக்க வெள்ளியுடன் கூடியிருக்க, குறறமற்ற விப்பிரராலும, மந்திரிகளாலும, இரத்தின வியாபாரத்தாலும், அஸ்வததாலும், யானை முதலிய எமவாகனங்களாலும் ஜீவனம் செய்பவனாக இருப்பான் எ-று. (965)

சீவியமார்ச்சனியும் பத்தாதிபனும்கூடில்
சிலம்பங்கள்படிப்பித்துந் திருடியுமேதிரிந்து
பாவங்கடமையொருவர் தமக்குப்போதிப்பித்தும்
படர்வனத்திலிங்கிசைகள் பண்ணிமரம்வெட்டிப்
பூவுலகிற்சீவிப்பன் பத்தாதிசெவ்வாய்
பொருபாமபுமூவர்களு மேபொருந்திநிற்கில்
தாவுகளில்விஷப்பிர யோகங்களேயேசெய்துந்
தரணியிலேதிருடியுமே சீவிப்பன்றானே.

(இ-ள்) பலத்த கேந்திரமான 10-ஆம் ராசிநாதன் சனியுடன் கூடியிருக்க, அந்த ஜாதகன் பற்பல புராணங்களை அறிந்தவனாயினும், கள்ளத்தனங்களில் ஈடுபட்டும், கொடிய தீயமார்க்கங்களைப் பிறருக்கு உபதேசித்தும், காடுகளிலுள்ள விருக்ஷங்களைப் பிளந்து இம்சித்தும், அதனால் ஜீவிப்பான் என்றும் கூறுவர். மேற்சொன்ன 10-ஆம் ராசிநாதன் விஷப்பாம்புகளான ராகு-கேது-குஜன் இம்மூவருடன் சேர்ந்திருப்பானாகில் இப்பூமியில் விஷங்களை இறைத்தும், கள்ளத்தனத்தோடு குதுமார்க்கங்களைச் செய்தும் ஜீவித்திருப்பான் என்றும் கூறுவர் எ-று. (966)

தானமாமைந்தாகு மதிபதிபாவியுமாய்த்
தக்கவாளெயிற்றரவந் தன்னையுமேகூடி
ஈனமிலாதிருமூன்றி லேயிருந்தக்காலும்
எண்ணியமூன்றுமதிபன் பாவியுமேயாகி
ஊனமுறும்பாம்புடனே கூடியெங்கேயேனும்
உற்றலுமவன்மனையா ளுடனேமற்றோரை
மானமறக்கூட்டியவன் கைப்பொருளைவாங்கி
வயிறுவளர்ப்பானெனவே வழுத்துவர்மாதவரே.

(இ-ள்) மாதுருஸ்தானாதி என்னும் பஞ்சமஸ்தானாதிபதி கொடிய கிரகங்களென்னும் சூரியன் சனி-குஜன்-ராகு-கேதுக்களில் ஒருவனாகி மேற்சொல்லிய பாவககிரகங்களில் ஒன்றான செம்பாம்பு என்னும் கேதுவுடன் சேர்ந்து தைரியஸ்தானமென்னும் 6-ஆம் ராசியிலிருந்தாலும், வெற்றிஸ்தானாதிபதி என்னும் 3-ஆம்ராசியதிபதி மேற்சொன்னபடியே கொடியவனாகிய ராகுவைச்சேர்ந்து ஜெனனலக்கினத்திற்கு எந்தராசியிலிருந்தாலும் அந்த ஜாதகன் தன் பெண்சாதியையும், மற்ற பெண்களையும் அவமானமின்றி அன்னியர்களிடம்சேர்வித்து அவன் கையிலுள்ள பொருளை வாங்கி ஜீவிப்பவனென்றுங் கூறுக-எ-று. (967)

வழுத்தியசுக்கிரன்செவ்வாய் சனிபுந்தியரசன்
மருவுவினைத்தொழிலாய் வயிறுவளர்த்திடுவான்
செழித்தபிறைசனிவெள்ளி செவ்வாய்புந்தியுமே
செறியுமரம்வெட்டிவிற்றே சீவனமேசெய்வன்
இழுத்தமுடன்வெள்ளி குருசெவ்வாய்கூடில்
ஏழைதுக்கமுளன்கணக் கெழுதியுஞ்சீவிப்பன்
பழித்தசனிகுருவெள்ளி பதங்கன்செவ்வாயும்
பரிந்துநின்மந்திரவித்தை பண்ணியினிதிருப்பன்.

(இ-ள்) மகுத்துவம்பொருந்திய குருவோடு சுக்கிரன்-சனி-புதன்-குஜன் ஆகிய ஐவருங்கூடி லக்கினத்திற்கு எந்த ராசியிலிருந்தாலும், அந்தஜாதகன் துர்க்காரியங்களைச்செய்து தன் குக்ஷியை நிரப்புவன். பிரகாசத்தையுடைய சந்திரனோடு மேற்சொன்ன சனி-புதன்-சுக்கிரன்-குஜன் இந்த ஐவரும் சேர்ந்து எந்தராசியிலிருந்தாலும் காடுகளிலும் மேடுகளிலும் செழித்தோங்கும் விருக்ஷங்களை வெட்டி வியாபாரம் செய்து வாழ்வான். கொடிய சனியோடு சுக்கிரன்-குரு-குஜன் இந்த நால்வரும் கூடி எந்தராசியிலிருந்தாலும் அந்த ஜாதகன் விசனத்தையே அனுபவிப்பவனும், பணமில்லாதவனும் எண்களை வரைந்து காலம் கழிப்பவனுமாவான். மேற்சொன்னபடியே பழி பாவங்களையுடைய சனி-ராகு-சுக்கிரன்-குஜன்-குரு இந்த 5-கிரகங்களும் சேர்ந்து எந்த ராசியிலிருந்தாலும், அந்த ஜாதகன் மாந்திரீக வேடிக்கை செய்து வாழ்பவனாவான் எ-று. (968)

இருந்ததனலாப பாக்கியாதிகுசனானல்
இயலசேவகவிருத்தி யினியவர்களுக்குச்செய்வான்
செறிந்தபுதனாயின்விதவிதமான வாகனங்களுண்டு
சொல்லரியகுருவாயின் சகலபாக்கியவான்

அருந்தவஞ்சேர்பிருகாயின் புவிலாபமேவும்
அரவுசனியாயிற்சோர ரங்களினேதியினால்
வருந்துமீனத்தொழிலே புரிந்துசீவிப்பன்
மதிவதனத்திலதநுதல் வளர்வஞ்சியரே.

(இ-ள்) சகோதரகாரகனாகிய குஜனுக்கு தனஸ்தானமென்னும் இரண்டாம் க்ஷேத்திரமாவது பாக்கியஸ்தானமான 9-ஆம்க்ஷேத்திரமாவது லாபஸ்தானமான 11 ஆம் க்ஷேத்திரமாவது அதிகாரம்பெற, அல்லது ஆக்ஷி பெற, அந்த ஜாதகன் நல்ல உத்தமர்களிடம் மேன்மையான அடிமைத் தொழில் செய்பவனாவான். மேற்சொன்ன மூன்று க்ஷேத்திரங்களில் ஒன்றுக்கு புதன் ஆக்ஷிநாதனாக விருக்க நல்ல கல்வியும் நாற்கால் ஜீவன்களும் உண்டு. சொல்வதற்கரிய குருபகவானுக்கு மேற்சொன்ன மூன்று க்ஷேத்திரங்களில் ஒன்றுக்கு ஆக்ஷிநாதனாக எல்லா சௌக்கிய பாக்கியங்களையும் அடைந்தவனாக இருப்பான். கிடைப்பதற்கு அரிய தவத்தையுடைய சுக்கிரனுக்கு மேற்சொன்ன ஸ்தானங்களுக்கு ஆக்ஷிநாதனாக இருக்க, அநேக புவிலாபத்தை யடைவான். பாம்பாகிய ராகு அல்லது சனிக்கு மேற்சொன்ன அதிகாரம்வரின் கள்ளத்தனத்தால் செய்யப்படமாட்டாத கொடிய காரியங்களைச் செய்து வாழ்வானென்று சந்திரனைப்போன்ற பிரகாசமும் முகவிலாசமும் பொட்டணிந்த நெற்றியையு முடைய பெண்ணே! சொல்வாயாக எ-று. (969)

வேறு

வஞ்சியேசனி செவ்வாய்மதிமகன்
செஞ்சொல்சுக்கிரன் தேவர்கடன்குரு
அஞ்சுபேருமொன் றுகவமர்ந்திடில்
துஞ்சுமீனத் தொழில்செய்துவாழ்வனே.

(இ-ள்) மகர கும்பத்திற்கு ஆக்ஷிநாதனான சனியுடன் சந்திரன் மைந்தனான புதன நற்பலனைததரும் சுக்கிரன், தேவபுரோகிதரான வியாழன் இவர்கள் ஐவரும்சேர்ந்து ஜெனனலக்கினத்திற்கு எந்தராசியிலிருந்தாலும் அந்த ஜாதகன் கொடிய நீச்சகாரியங்களில் பிரவேசித்து ஜீவிப்பானென்று மேன்மையும் புகழும் வாய்ந்த பெண்ணே! சொல்வாயாக எ-று. (970)

வேறு

கண்டசன்மங்கேந்திரத்திற் காணுமைந்தெட்டொன்பதனில்
பண்டேசோமன்புகரிருக்கப் பாரிதனக்குமறுபுருடன்
கொண்டேவிடுத்துச்சீவனமாய்க் கொள்வன்கூறும்புவியோர்க்குக்
கெண்டைவிழியின்பார்வையினாற் கிட்டியணையுந்தனத்தாளே.

(இ-ள்) ஜெனனகாலஸ்புடம் செய்துக்கண்ட ராசியிலும், 1-4-7-10 என்னும் கேந்திரங்களிலும், 5-ஆம் இடமென்னும் பஞ்சமஸ்தானத்திலும், 8-ஆம் இடமான ஆயுள் ஸ்தானத்திலாவது, பாக்கிய ஸ்தானமான 9-ஆம் ராசியிலாவது நற்பலனை விளைக்கும் மதியாவது வெள்ளியாவது இருப்பார்

கனேயாகுல் அந்த ஜாதகன் தான் மணந்த ஸ்திரீக்கு அன்னியபுருஷனைக் கொண்டு சேரவிடுத்து அந்த பொருளால் வாழ்பவனென்று மீன்போன்ற விழிகளால் பிறரை மயக்கும் சக்திவாய்ந்த ஸ்தனபாரங்களை யுடையவளே! சொல்லுவாயாக எ-று. (971)

## துர்ப்பிக்ஷ காலம் அறிதல்

இவ்வுலகில் கிரகங்களின் சேர்க்கையால் பஞ்சமும் க்ஷேமமும் உண்டாவது உலகோர் அறிந்த விஷயமே. இதன் விபரத்தை ஒவ்வோர் வருஷமும் வெளியிட்டுவரும் அமரம்பேடு இராஜரத்தின முதலியார் மலர்மகள் விலாச அச்சுக்கூடத்தில் அச்சிட்டு, ராதா-ருக்மணி படம்வைத்துள்ள சர்வமுகூர்த்த நிர்ணய வாக்கிய பஞ்சாங்கத்தில் நன்கு அறியலாம். ஆயினும் சோதிடம் கற்றோரும் மற்றோரும் கிரகம் எவ்விதம் அமர்ந்தால் பஞ்சம் உண்டாகுமென்று தெரியும்பொருட்டு நம் நூலாசிரியர் நவக்கிரகங்களின் அடவி சேர்க்கையைக்கொண்டு விபரம் கூறுவார். இதையறிந்தே ஒவ்வோர் வருஷமும் உண்டாகும் உலக இயற்கையை அறியவேண்டும். இத்துடன் நவக்கிரகங்களுக்கு குறிக்கப்படும் தேசங்களையறிந்து, அதாவது 41-ஆம் செய்யுளின்படி அந்த கிரகங்கள் கீழ்வருமாறு பீடிக்கப்பட்டிருந்தால் அந்த தேசங்களுக்கு கொடிய துர்பலனும், மற்றைய தேசங்களுக்கு உறவு பகை யறிந்தும் இப்பலனைச் சொல்லுதல் வேண்டும்.

வேறு

மந்தனு மிருபாதி யரசனிந் நால்வர்
மாறியே கூடிடில் விளைவும்
மழைபயி ரற்ப மிவரிரு வர்க்கு
மற்றெரு பத்தினி லொருவர்
இந்தவா றிருக்கின் வெட்டைகா லமதா
மிடபந்தேள் கோள்சிங்க மீனம்
இனியகும் பத்தி லிருக்கிலிப் புவியில்
இறைபுதன் மனுஷியரு மடிவர்
அந்தவீ டாறின் முன்சொன்ன நால்வர்
ஆதித்தன் குசனெடுங் கூடி
அமரவே குடிக ளிருந்தவூ ரெங்கும்
அலகைநாய் நரிகுடி கொள்ளும்
தந்திரஞ் சுருதி மொழிப்படி புரிந்து
தக்கதோர் வேள்விக ளெல்லாம்
தான்மறுத் திடுமம் புவிகள்கா டாகுந்
தானெனச் சாற்றுவர் பெரியோர்.

(இ-ள்) சனியோடு பாம்புகளாகிய ராகு கேதும், அரசனுகிய குருவும் ஆன நான்கு கிரகங்களும் ஒருவர்க்கொருவர் சேர்வதும், உடனே மறுராசியில் பிரவேசிப்பதும், மறுபடியும் வேறு அந்த நான்கு கிரகங்களில் ஒன்று மறுபடியும் கூடுவதுமாக இருந்தால் அவ்வருஷம் பூமியில் உற்பவிக்கும்

தானியங்கள் விருத்தி குறைவாகும். ஏனெனில்: மேகங்களால் உண்டாகும் மழையும் குறைவுபடும், விளைவும் குறைவுபடும் என்பதாம். ஓர் ராசியில் மேற்சொன்ன நான்கு கிரகங்களில் இரண்டு கிரகம் ஒன்றுசேர்ந்து மறு ராசிக்கு மாறுவதற்கும், மற்றோர்கிரகம் அவர்களுடன் சேர்வதுமாகயிருக்க இவர்கள் நின்ற ராசிக்கு 10-ஆம் ராசியில் சத்துரு கிரகங்கள் இரண்டும் ஒன்றுசேர்வதும், அவன் மறுராசிக்கு போனவுடன் மற்றுமோர் கிரகம் அவனுடன் சேர்வதுமாக இருக்கில் அவ்வருஷம் சூரிய உஷ்ணம் அளவிட முடியாது. ரிஷபம்-சிங்கம்-துலாம்-விருச்சிகம்-மீனம் என்னும் இராசிகள் வருஷ ஜெகத்ஜாதகப்படி புதனிருக்க, அநேக ஜனங்களும் அந்த புலியரசனும் அநேகமாய் மரிப்பார். புதன் நின்ற ராசிக்கு 6-ஆம் ராசியில் மேற்சொன்ன சனி-ராகு-கேது-புதன் இவர்களும், சூரியன் குஜன் இவர்கள் சேர்ந்திருந்தால் குடிஜனங்கள் இருந்த தேசமெங்கும் பிசாசு-சுணங்கன்-நரி முதலிய ஜெந்துக்கள் குடிகொள்ளுவதோடு வேதாந்த வாக்கியப்படி உலகோர் புரியும் யாகம் முதலியவைகளுக்கு விக்கினம் வரும். அதனால் அத்தேசமானது புலி சிங்கம் முதலிய பயங்கரமான மிருகங்கள் வாழும் கானகமாகுமென்றும் கூறுவார் எ-று. (972)

சாற்றிய வரச னொடுசனி யாதல்
தரைசுத னுதல்பாம் பாதல்
தானுறக் குருவுக் கேழினின் றுலுந்
தகர்க்கிறை யோடுபாம் புறினும்
போற்றிய குசனைக் காரிகூ டிடினும்
புலவுமீன் தேள்கடை யினினும்
புணர்ரிஷ பத்தின் மத்தியி லேனும்
பொருசிங்கத் தாதியி லேனும்
கூற்றமாஞ் சனிநின் றுன்மழை யின்றிக்
குவலயத் துளபல வுயிரும்
கொடும்பசி யாலுஞ் சமர்க்களத் தாலுங்
குறுகிமாண் டிடுமெனக் கூறே
ஏற்றமன் னிடபந் தேள்தனுசு சிங்கம்
இவையினிற் காரிசே யாதல்
இருந்துவக் கிரந்தா னுகில்மன் னவர்க்கே
யிடுக்கமுண் டெனவுரைத் திடிரே

(இ-ள்) அரசனென விளங்கும் அந்தணனோடு சனி சேர்ந்தாலும் அல்லது குஜன் சேர்ந்தாலும், ராகு சேர்ந்தாலும், அல்லது குரு நின்ற ராசிக்கு 7-ம் ராசியான கேந்திரத்தில்நின்று குருவைப்பார்த்தாலும், மேஷ ராசிக்குடையோனை குஜனோடு சனி கூடியிருந்தாலும், அல்லது மீனம் விருச்சிகமென்னும் ராசிகளுக்கு 4-ம்பாதத்திலும் இரண்டாம்பாதத்திலும் சிங்கம் முதல்பாதத்திலும் கொடுமையைத்தரும் சனி நிற்பானாகில் அந்த வருஷம் மழையில்லாமல் இப்பூதலத்திலுள்ள பற்பல ஜீவர்களும் அன்ன ஆகாரமில்லாமலும், ரணக்களத்திலும்நொறுங்கி அவர்கள் ஆவிமுடியுமென சொல்லவேண்டும். மேஷமுதல் 5-ஆம்ராசியான சிங்கராசியிலாவது, 8-ஆம்

ராசியான விருச்சிகராசியிலாவது, இரண்டாம் ராசியான ரிடபத்திலாவது, 9-ஆம் ராசியான தனுசிலாவது, 12-ஆம் ராசியான மீனராசியிலாவது நக்ஷத்திர பாதசாரப்படி வக்ராரம்பம்பெற்ற குஜனாவது சனியாவது இருக்க மன்னவர்களுக்கும் பற்பல கஷ்டமும் கொடுமையும் உண்டாகு மென்றுங் கூறுவர் எ-று. (973)

இடும்பைசேர் வெள்ளிக் கேழினிற் குருவு
மிருந்திடின் மாரிபெய் யாதாம்
இரும்புதன் வெள்ளி நாப்பணி னிரவி
யிருக்கவெய் யோர்க்குமுன் சனிசேரா
உடன்கலந் திருக்க மாரியு மறுத்தே
யுலகினிற் பஞ்சமென் றுரைக்கும்
உயர்சனி தனக்கு மூன்றுபன் னொன்றில்
உம்பர்கோன் குருவும்வந் துறையில்
நெடும்புவி தன்னில் நரர்பசு முதலாய்
நின்றநாற் காலுயிர் தனக்கும்
நேமியாள் பவர்க்குந் துன்பமே யாகும்
நின்றிடு பங்குபா தற்கே
திடம்பெற வைந்தாம் வீட்டினி லரசன்
சேர்ந்தவ ரிருந்தகா லையினில்
செகமொரு மூன்றில் உளபல வுயிர்க்குந்
தீங்குறு மென்றுரை செய்வர்.

(இ-ள்) இராக்ஷசகுருவாகிய சுக்கிரனின்ற ராசிக்கு 7-ஆமிட கேந்திரத்தில் அரசனாகிய குருநிற்கில் அக்காலம் பூமியில் மாரிபெய்யாதென்றும் சொல்லவேண்டும். சூரியனின்ற ராசிக்கு முன்னும் பின்னும் புதனும் சுக்கிரனுமிருக்க, சூரியனின்ற ராசிக்கு முன்வரிசையில் குஜன்னின்று அவனுடன் சனி கூடியிருந்தாலும் அக்காலம் மழையின்றி உலகங்களில் வறுமையால் கஷ்டப்படுவாரென்றும் கூறுவர். சனி எந்தராசியில் நின்றாலும் அவன் நின்ற ராசிக்கு திருதிகை ஸ்தானத்திலாவது பாக்கிய ஸ்தானத்திலாவது தேவகுருவென்னும் வியாழன் நின்றிருப்பானாகில், அவ்வருஷம் அரசாளும் இராஜாக்களுக்கும், அவர்கள் ஆளுகைக்கு உட்பட்ட மனிதர்களுக்கும், ஆவு முதலிய நாற்கால் ஜீவராசிகளுக்கும் கஷ்டமுதலிய துன்பங்கள் உண்டாகும். சனிநின்ற ராசிக்கு பஞ்சமஸ்தானத்தில் மருத்துவம் பொருந்திய குரு நிற்கில் இம்மூவுலகங்களிலுமுள்ள ஜீவகோடிகளுக்கு எல்லாவித கஷ்டங்களும் உண்டாகுமென்று சொல்லுவாயாக எ-று. (974)

## மறுமையில் ஊழுடையுமிடம்

### வேறு

பன்னிரண்டாமதிபனைச் சேர்ந்தவராற்சொல்லும்
பலன்குருசுக்கிரனாயிற் றெய்வலோகம்
மின்னுகதிருடன்கூடி லிராஜயோகம்
வெண்மதியமுடன்கூடிற் பிதிர்லோகந்தான்

மன்னுகுசனைக்கூடில் வீரசொர்க்கம்
மந்தன்பாம்புடன்கூடின் மாலிபதியாகும்
உன்னுபுதன்கூடி லெங்கெங்கேதாம்போய்
உற்றிருக்கவேண்டுமெனி லங்குறையலாமே.

(இ-ள்) உலகிற் பிறந்த ஒவ்வொருவரும் தன் ஆவி நீங்கியவுடன் அடையவேண்டிய மோக்ஷம் நரகம் முதலியவைகளைப்பற்றி கூறுவதாயின் ஜெனன லக்கினத்திற்கு மோக்ஷ ஸ்தானமென்னும் 12-ஆம் ராசியைக் கொண்டே சொல்லவேண்டும். அந்த 12-ம் வீட்டதிபதி சுபக்கிரகங்களான குரு அல்லது சுக்கிரனாகவிருந்தால் அவன் மோக்ஷமாகிய தேவலோகத்தைப்பெறுவான். அந்த 12-ம்ராசிநாதன் பிரகாசத்தையுடையசூரியனுடன் கூட ராஜயோகலோகமும், வெண்மைப்பிரகாசத்தையுடைய சந்திரனுடன் கூடி பிதுர் உலகமும், குஜனுடன் கூடி இருப்பாரானால் அநேக கட்டுக் காவலுடன் போஷிக்கப்பட்டும், வைராக்கியசொர்க்கமும், 12-ம்வீட்டோன் சனியாகவும், அவன் ராகு கேதுவுடன் கூடினால் எமபட்டணமென்னும் நரகமும், புதனுடன் கூடியிருக்க தான் எவ்விடம் செல்லவேண்டுமோ அந்த க்ஷேத்திரங்களையும் காணுவான் என்று சோதிடத்தோர் கூறுவார் எ-று. (975)

## மாரகதிசை அறிதல்

### வேறு

மாரகத்தின்றிசையறிய வருநான்காந்திசைசனியேவந்துற்றாலும்
பார்தனக்குச்சுதன்செவ்வாயைந்தாகுந் திசைதானேபரிந்துற்றாலும்
பேருகித்தவாறாகுந் திசையரசராகுலும்பின்புராகு
சீருதித்தவேழாகுந்திசையாகுலும் மரணந்திண்ணந்தானே.

(இ-ள்) மாரகதிசை என்று பொதுவாகச் சொல்லும்விதம் எப்படியெனில் ஜெனனகாலம்முதல் முறையே 1-2-3-4-ஆம் திசைகள் என்று வரும் திசைகளில் 4-வது திசை சனி திசையாக இருந்தால் அது மாரக திசையாகும். பூமிசுதனென்னும் குஜதிசையானது 5-வது திசையாகவரினும் அவை மாரகதிசையாகும். ஆறாவதாக குருதிசைவரினும் அதுவும் மாரகதிசையாகும். இராகு மகாதிசை 7-வது திசையாகவரினும் அவையே மாரகதிசையென்றும் அத்திசையில் கட்டாயம் மரணமுண்டாகுமென்றும் சோதிடவல்லோர் கூறுவர் எ-று. (976)

## கிரகதிசை அறிதல்

### வேறு

கார்த்திகைமுதலொன்பானாள் களும்பகல்திங்கள்செவ்வாய்
கார்த்தவிராகுபொன்சுன் கவின்புந்திகேதுவெள்ளி
சீர்த்தவர்க்கிம்முறையாகச் செப்பியதிசைகளாகும்
ஏர்த்தமற்றையகாண்மீறு மிவ்வாறேகொள்ளற்பால.

(இ-ள்) கார்த்திகைமுதல் ஒன்பதாம்நக்ஷத்திரமும் அதற்கு ஒன்பதாம் நக்ஷத்திரமும் சூரியதிசை என்றும் இவ்வாறே சந்திரன்-குஜன்-ராகு-குரு-

சனி-புதன்-கேது-சுக்கிரன் என மேற்சொன்னபடி ஒன்பதுக்கு ஒன்பதாக மும்மூன்று நக்ஷத்திரங்களாகப் பங்கிட்டு வரிசையாகச் சொல்லிய கிரக வரிசைப்படி திசையறிந்துகொள்ளும் விபரம்,

| | | | |
|---|---|---|---|
| கார்த்திகை | உத்திரம் | உத்திராடம் | சூரியதசை |
| உரோகணி | அஸ்தம் | திருவோணம் | சந்திரதசை |
| மிருகசிரம் | சித்திரை | அவிட்டம் | குஜதசை |
| திருவாதிரை | சுவாதி | சதயம் | இராகுதசை |
| புனர்பூசம் | விசாகம் | பூரட்டாதி | குருதசை |
| பூசம் | அனுஷம் | உத்திரட்டாதி | சனிதசை |
| ஆயிலியம் | கேட்டை | ரேவதி | புததசை |
| அசுவனி | மகம் | மூலம் | கேதுதசை |
| பரணி | பூரம் | பூராடம் | சுக்கிரதசை |

என வரிசையாய்க் கண்டுகொள்க. இத்திசைகளின் வருடத்தொகை பின் வரும் செய்புளாலும் காண்க எ-று. (977)

## கிரக திசாவருடம் அறிதல்

சூரியன்றிசைக்காண்டாறு திங்கட்குப்பத்துசெவ்வாய்க்
காருமோரேழிராகுக் கறைபதினெட்டுப்பொன்னுக்
கேருறீரெட்டுமந்தற் கியம்பத்தொன்பதாகும்
சீருரில்புந்திக்கோர்பானேழ்ச்சிக் கேழ்வெள்ளிக்கைந்நான்கே.

(இ-ள்) சூரியமகாதிசைக்கு 6-வருடமும், சந்திரமகாதிசைக்கு வருடம் 10, குஜமகாதிசைக்கு வருடம்-7, இராகுமகாதிசைக்கு வருடம்-18, குரு மகாதிசைக்கு வருடம்-16, சனிமகாதிசைக்கு வருடம்-19, புதன்மகா திசைக்கு வருடம்-17, கேதுமகாதிசைக்கு வருடம்-7, சுக்கிரமகாதிசைக்கு வருடம்-20 எனவும் சாஸ்திரங்களையறிந்த மேதாவிகள் கூறுவர் எ-று. ()

## புத்தி பிரிக்கும் வகை

கோள்களின்றிசையிற்புத்தி குறித்திடிற்றிசையோனுண்டை
நீள்புத்திநாதனுண்டா னேர்படப்பெருக்கிக்கண்ட
வாளமர்தொகையொன்றிற்கு மருவுநாண்மூன்றதாகும்
வாள்தடங்கெண்டைவண்டு வனசமாம்விழியினளே.

(இ-ள்) மேற்சொல்லியபடி திசையறிந்தவுடன் அவரவர்களுக்கு உண்டாகும் புத்தி வருடம் மாதம் நாள் இவைகளை அறிவது எப்படியெனில், ஒவ்வோர் திசைக்குரிய மொத்த ஆண்டுகளை நாம கோரிய புத்திநாதன் திசையான மொத்த வருடத்தால் பெருக்கிக் கண்ட தொகை ஒன்றுக்கு 3-நாட்களாகக் கணக்கிட்டு மொத்த வருடம் மாதம் தினத்தைக் கண்டு கொள்ளவும் எ-று.

உதாரணம்:—சுக்கிரதசையில் புதன் புக்தியைக் காணுவதெனில்,

சுக்கிரதசை மொத்த வருடமான 20-ஐ
புதன் திசை மொத்த வருடம் 17-ஆல் பெருக்க

340 ஆகும்
அதனை மூன்றால் பெருக்க ×3

1020 நாள் என்றறிக.

அவையாவன: வருஷம்-2, மாதம்-10, ஆகும். இவ்வாறே ஒவ்வோர் திசைக்கும் கண்டுகொள்க. (979)

## சித்திரம் பிரிக்கும் வகை

அவரவரபகாரத்தி னுண்டொன்றின்மூன்றுநாளும்
நவிலுமாதங்காலநாளும் நாளொன்றிற்பாதிக்கன்னல்
இவைமூன்றுதொகையுங்கோட்க டிசையாண்டாற்பெருக்கிவந்த
தவலறுத்தொகையைச்சேர்க்கத் தான்வருஞ்சித்திரந்தான்.

(இ-ள்) ஒவ்வொருவருக்கும் வரும் புத்தியின் வருடமறிந்து வருடம் ஒன்றாகுக்கு தினம் மூன்றாகவும், தினம் ஒன்றுக்கு நாழிகை 15-ஆகவும், நாழிகை ஒன்றுக்குஅரைவிநாடியாக அவனுக்குரியமொத்த வருடம் மாதம் நாள் இவைகளுக்கு கணக்கிட்டு நாம் கோரிய திசை மொத்த வருடத்தால் பெருககிக் கண்ட தொகைகளை முன் கூறியபடி வருடம் மாதம் நாள் எனப் பிரிதது கண்டுகொள்வதே சித்திரமெனப்படும் எ-று. (980)

## உள்சித்திரம் பிரிக்கும் வகை

வேறு

புத்திதொகை நாள்கட்குப் போந்தக் கடிகரையாம்
நத்திய நாழிக்கரை விநாடியாம்—எததிசைக்கும்
இந்தப் படிககே யிவர்வருடங் கொண்டெண்ணச்
சிந்தனைக்குட் சிததிரத்தைச் செப்பு

(இ-ள) உள்சித்திரம் பிரிகரும் வகை எப்படியென்றால் மேற்சொன்ன சித்திரத்தைப் பிரிதது அவரவாகளுக்கு ஏற்படும் நாள் நாழிகைகளுக்கு நாள் ஒன்றுக்கு 60-விநாடியாகவும அதாவது ஒருகடிகையாகவும், கடிகை ஒன்றுக்கு அரை நாழிகையாககொண்டு அவரவர்களுக்குரிய மொத்த வருடம் மாதம் நாள்களுக்கும் இவ்வாறே கணக்கிட்டுச் சொல்வதே உள் சித்திரம் எனபதாம் எ-று. (981)

## போதகன் வேதகன் பாசகன் காரகன் அறிதல்

கூறு பலனைக் கொடுவென்பான் போதகனும்
வேறுபண்ணித் தட்டுவிப்பான் வேதகனும்—தேறுபலன்
கூட்டுவிப்பான் பாசகனுங் கோல மகாதிசைக்கே
ஈட்டுபொருள் காரக னீவான்.

(இ-ள்) ஒவ்வொருவருக்கு திசை புக்தி வருங்காலங்களில் போதகனென்றும் வேதகனென்றும் பாசகனென்றும் காரகனென்றும் நால்வர் உளர். அவர்களில் ஓர்திசையில் போதகனென்பவன் அவன் பலன் யாவையும் கொடு என்பவனும், பலனைத் தரவேண்டாமென்று கெடுப்பவன் வேதகன் என்பவனும், அவன் கொடுக்கும் பலனுடன் இன்னும் அதிகமாகக் கொடு என்பவன் பாசகனும், காரகனென்பவன் அவரவர்கள் செய்யும் பலனுக்குத் தக்க பொருள்களைக் கொடுத்துக் காப்போனுமென வறிந்து திசைபுக்தி பலன் அறிக. இராகு கேதுக்களுக்கு மேற்சொல்லிய நால்வர்கள் இல்லையாம் எ-று. (982)

சூரிய திசைக்கு

பானு திசைக்குமந்தன் பாசகனுஞ் சுக்கிரனே
மானேகேள் வேதகனு மன்னவனும்—தேனனையாய்
காரகனுஞ் செவ்வாயுங் காசினியோர் தாமறிய
ஏரணியும் போதக னுமே. (983)

சந்திர திசைக்கு

இந்து திசைக்குவெள்ளி யேற்றதோர் பாசகனும்
விந்தைமலர் நண்பனே வேதகனும்—மந்தனே
கங்கா நதிபுடைசூழ் காசியினிற் காரகனும்
அங்கார கன்போத கன். (984)

செவ்வாய் திசைக்கு

மங்களனுர் தந்திசைக்கு மார்த்தாண்டன் பாசகனும்
திங்களரும் போதகனுஞ் சேயிழையீர்—பொங்குபுகழ்
மேயபுதன வேதகனு மித்தரணி யோரறிய
ஆயசனி காரகனே யாம். (985)

புத திசைக்கு

புந்தி திசைக்குப் புரவலனே போதகனும்
சந்திரனே பாசகனுந் தானவன்—இந்துநுதல்
மின்னனையீர் செவ்வாயும் வேதகனும் வெள்ளியோ
மன்னுபுகழ் காரகனு மாம். (986)

குரு திசைக்கு

வேந்தன் மகாதிசைக்கு வெய்யவனே வேதகனும்
போந்துவருஞ் செவ்வாயே போதகனும்—காந்திசெறி
சந்திரனே காரகனுந் தையலே தாரணியில்
மந்தனே பாசக னுமே. (987)

சுக்கிர திசைக்கு

வெள்ளி மகாதிசைக்கு வேந்தனே போதகனும்
தெள்ளுபுதன் பாசகனுஞ் செங்கதிரும்—மெள்ளவரும்
காரகனே தானுகுங் காரியே வேதகனும்
வாரணியுங் கொங்கை மயிலே. (988)

சனி திசைக்கு

சனியின் றிசைக்குச் சசிபோ தகனும்
இனியசெவ்வாய் வேதகனென் றேத்தும்—கனிமொழியாய்
வெள்ளியே பாகசனும் வேந்தனே காரகனும்
தெள்ளுதமி ழோருரைத்த சீர். (989)

| சூரியன்-சந்திரன்-குஜன்-புதன்-குரு-சுக்கிரன்-சனி இத்திசைக்குரிய போதகன் வேதகன் பாசகன் காரகன் விபரம் | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|
| பெயர் | சூரிய திசை | சந்திர திசை | குஜ திசை | புத திசை | குரு திசை | சுக்கிர திசை | சனி திசை |
| போதகன் | குஜன் | குஜன் | சந்திர | குரு | குஜன் | குரு | சந்திர |
| வேதகன் | சுக்கிர | சூரியன் | புதன் | குஜன் | சூரியன் | சனி | குஜன் |
| பாசகன | சனி | சுக்கிர | சூரியன் | சந்திர | சனி | புதன் | சுக்கிர |
| காரகன் | குரு | சனி | சனி | சுக்கிர | சந்திர | சூரியன் | குரு |

## பொது

ஒருவர் மகாதிசைக்கு ளுற்ற பலனுண்ண
வருவர் நவக்கிரகர் மாதே—அவரவரில்
போதகனும் பாசகனும் போற்றுபொருள் காரகனும்
வேதகனு மாகிவரு வார்.

(இ-ள்) நவக்கிரகங்களின் ஒவ்வோர் திசாநாதன் பலனையும் சாப்பிட போதகனென்றும் வேதகனெனறும் பாசகனென்றும் காரகனென்றும் பெயரோடு வருவார்கள். இதை அறிந்தே உலகோர்க்குப் பலன் சொல்ல வேண்டும் எ-று. (990)

இந்தப் படிநால்வ ரெய்தியொரு வர்திசைக்குள்
வந்துபல னுண்ணும் வகையறிந்தே—சிந்தித்
துரைத்தபல னுைத்திருக்கு மொண்டொடியே கேளாய்
தரைததமிழோா தாமறியத் தாம்.

(இ-ள்) அழகுபொருந்திய பெண்ணே! மேற்சொன்ன நால்வரும் ஒவ்வொருவர் திசைப்பலனையும் உண்ணும்விதம் அறிந்து சொல்லும் பலன்கள் ஒவ்வானது தவறாது. ஆகையால் இவ்விதம் பலன் சொல்வதே நன்றெனவும் சோதிடவல்லோர் கூறுவர் எ-று. (991)

# திசாபுத்தி பலன்கள் அறிதல்



[திசைகளிலுள்ள புத்தி மாதங்களை பின்னால் காட்டியபடி ஒவ்வொரு திசைக்குரிய புத்தியின் வருடம் மாதம் தினமறிந்து இப்பூமியிற் பிறந்த ஒவ்வொருவருக்கும் பலன் சொல்லுதல் வேண்டும். இப்பலன்சொல்லுவதோடுகிரகங்களிருக்கும்நோக்கா நோக்கம் அறிந்தும் பலன்சொல்லவேண்டும். ஆகையால் அதன் விபரங்களைக் கீழ்க்கண்டவாறு அறிந்துசொல்லுதல்வேண்டும்.]

## சூரிய திசாபுத்தி பலன்

### வேறு

அருக்கனிலருக்கன்புத்தி யறியநானூற்றெட்டுக்கும்
கருக்கொடுமுற்றார்கேடு கலகமந்தணனாற்பீடை
வருத்தமாந்தலைநோயுண்டாம் வலக்காதில்வலிப்புமின்றி
பெருக்கநீரிழிவுமேட மாதத்திற்பீடைதானே.

(இ-ள்) அருக்கனென்னும் உஷ்ண பிரகாசத்தையுடைய வெய்யவன் திசை வருஷம் 6-ல் அவன் சுயபுக்தியாகிய நாள் 108-க்கு பலன் விபரம் கூறுவாம். தன்னை ஈன்ற தாய்தந்தையருக்குப் பலவித துன்பமும் சோர் உண்டாதலும் மேலும் விப்பிரஜெனத்தால் பலவித கஷ்டங்களுண்டாகும். மனவியாகூலமும் தலைவலியும் உண்டு. வலது செவியில் வலிகாட்டும். நீரிழிவு ரோகம் காட்டும். இப்புக்தியில் மேஷமாத பிரவேசகாலம் பலவித துன்பம் உண்டாகும் எ-று.

(வி-ரை) இவை மேற்சொன்ன புக்திநாதனுக்குரிய பொதுப்பலனாகும். ஷை சூரியன் ஸ்வக்ஷேத்திரம் கேந்திரம் திரிகோணம் இவைகளிலிருந்தால் அரசசேவை பூமிபலிதம் முதலிய வாகனபலிதம் உண்டு. 3-11 இவ்விடங்களிலிருந்தால் தலைநோய் காய்ச்சல் பிரயாணம் ராஜகலகம். சூரியனுடன் சுபக்கிரகங்கள் கூடியிருக்க அற்பசுகமுண்டு. மேற்சொன்னபடி சூரியன் 8-11 இவ்விடங்களில் சூரியன் நீச்சம்பெற்றால் பீடை மனஸ்தாபம் இவைகள் உண்டாகும். சூரியன் ஜெனன லக்கினத்தோனைக்கூட புக்தி முதலில் சஞ்சலம் மனவியாதி மத்தியில் சுகமும் கடைசியில் இலட்சுமிகடாட்சமும் வாகனலாபம்க்ஷேத்திரலாபம் ஜெபம் முதலியவைகளைச் செய்வானென்றும் கூறுக. (992)

இரவியிலிந்துபுத்தி யினியநூற்றெண்பதுக்கும்
அரசரான்மகிழ்ச்சிலாப மதிகவாகனமுமுண்டாம்
பரவியமணமாம்பெண்ணாற் பகையிடக்கண்ணிநோயாம்
திரமெனுங்கடசத்திங்க டவினைகாணுந்தானே.

(இ-ள்) சூரியமகாதிசையில் சந்திரனுண்ணும் புக்தி நாள்-180. இதில் அவன் தரும் பலன் விபரம். இராஜாக்களால் சந்தோஷத்தை யடைதலும்,

ஆதாயமுண்டாதலும் விசேஷ வாகன சேர்க்கையும் உண்டு. தன் குடும்பத்திலுள்ள பெண்களுக்கு கலியாணமும் சிற்சில விரோதங்களும் இடதுவிழிக்கு உபத்திரவமும் தேர்ந்தெடுக்கப்பட்ட ஆடிமாதத்தில் கொடிய துன்பங்கள் உண்டாகும் எனறும் கூறுவர் எ-று.

(வி-ரை) மேலும் சந்திரன் தன் சுயவீட்டிலாவது திரிகோணத்திலாவது இரண்டாம் ராசியிலாவது சப்தமாதியுடன்கூடி இருந்தால் பாக்கியமும், செல்வமும் உடையவனுகுவான். நான்காம் வீட்டோனுடன் கூடி இருந்தால் நல்ல யோகமும் உண்டு. அமரபக்ஷச் சந்திரனுகிலும் அவன் தீயருடன் கூடியிருந்தாலும் காய்ச்சல் தலைநோயும் புத்திர மித்திர களத்திராதியருக்குப் பீடையும் காட்டும் 8-ல் சந்திரனிருந்தால் மனவியாதி, ரோகம், சண்டை இவைகள் உண்டாகும். 9-10-ல் சந்திரன் இருந்தால் வாகன லாபமும், தானியலாபமும், செல்வம் புத்திரலாபம் கலியாணம் சந்தோஷம் இவைகளுண்டு. (993)

ஆதித்தன்தன்னிற்செவ்வாய் புத்திநூற்றிருபத்தாறும்
வாதித்தவியாதிசண்டை வழக்குநாவரட்சிபீடை
சாதித்தவுற்றூர்கேடு தனம்பொருட்சேதமாகும்
போதித்தபொருளுஞ்சாயும் பூமியின்பலனுகாதே.

(இ-ள்) சூரிய மகாதிசையில் குஜன் புக்திக்குரிய நாட்கள் 126-ஆகும். அக்காலங்களில் சண்டை உண்டாகும். நீங்கப்படாத ஜாட்டியத்தைகொடுக்கும். ஏதேனும் ஒருவழக்கை உண்டுபண்ணும் உஷ்ண சம்பந்தமான நாவரட்சியை உண்டுபண்ணும். மேலும் துர்ப்பலனையும் தன்னை ஈன்ற பெற்றோருக்கு பல தீங்குகளைக் கொடுக்கும். தன் ரொக்க ஸ்திதிக்கு விரயம் வரும். எவ்வளவு தனமிருந்தாலும் தன் கைவிட்டுப்போம். தன் பூமி மூலமான பலிதங்களையும் குறைவுபடுத்தும் எ-று.

(வி-ரை) மேற்சொன்ன குஜன் லக்கினுதிபுடன் கூடியிருக்க மேற்சொன்ன துர்பலனைத் தரான். அதிலும் குஜன் சப்தமாதியாக இருக்க அவன் சுப்பிரமணிய ஜெபமும், ஆபரண பூஷணங்களும் உண்டாகும். 6-8-12-ல் நீச்சம்பெற்றிருப்பானுகில் ஜலதோஷமும், அபகீர்த்தியும், கட்டட விரயமும் உண்டாகுமென்றும், அவன் நிற்கும் தானபலன்களை யறிந்து சொல்லுக என்பதாம். (994)

சூரியன்றனிலேராகு சுகத்தையேசொல்லவென்றல்
ஏருற்றநாண்முந்நூற்றே டிருபத்துநான்கதாகும்
பாரியகடிவிஷத்தாற் படைபயம்பிறந்தார்பின்னம்
வீரியமைந்தன்றேசாந் திரத்தினின்மேவுவானே.

(இ-ள்) சூரியமகாதிசையில் இராகுவின் புக்தியான மாதம்-10, தினம் 24 க்கும் அவன் சரும் பலன்களைச் சொல்லுமிடத்து கொடிய விஷத்தாலும், ஆகாயத்திலிருந்து விழும் இடி முதலியவைகளாலும் துன்பமுண்டு. அல்லது தன் உறவினருக்கு கஷ்டமுண்டு. தன் புத்திரவர்க்கங்களுக்கு கெண்டாதிதோஷம் சம்பவிக்கும். அந்த ஜாதகனவன் அன்னிய தேசங்களுக்குச் சென்றுவிடுவான் என்றும் சொல்லுவர் எ-று.

(இ-ள்) இராகுபகவான் சுபகிரகத்துடன் சேர்ந்தாலும், சுபக்கிரகங்களால்பார்த்தாலும் அல்லது உச்சம்பெற்றிருந்தாலும், திரிகோணஸ்தானங்களிலிருந்தாலும் ராஜாக்களால் கீர்த்தியும், வஸ்திர பூஷண லாபங்களும், 6-8-12-ல் நின்றால் பந்துஜனப் பீடையும் பயித்தியமும் உண்டாகும். 11-ல் ராகுநின்று சுபக்கிரகங்களால் பார்த்தால் புத்திரர்களுக்கு விவாகம்முதலிய பலன்கள் சேருமென்றும் கூறுவர். (995)

எதிருறுங்கதிரிற்பொன்னி இருநூறேடெண்பத்தெட்டும்
கதிபெறுமுற்றார்நட்புங் கல்வியுஞ்செல்வமுண்டாம்
மதியுறுமிராசசேவை மக்களுஞ்சுற்றமுண்டாம்
அதிகசத்துருவைவெல்லு மதிசயமிகுதியாமே.

(இ-ள்) பகலில் வெளிச்சமும் உஷ்ணம் முதலியவைகளைத்தரானின்ற சூரியமகாதிசையில் குருபுத்தியின் புசிப்புகாலமான இருநூற்றெண்பத்தெட்டு நாட்களிலும், அவன் தரும் பலன் என்னவெனில் புகழ்ச்சியும் செல்வமுமுடைய ஜனசிநேகமும், திரண்ட வித்தையும், தனமும் உண்டாகும். நல்லறிவு விருத்தியும், அரசர்களைக் காணுதலும் புத்திரப்பேறும், தன் பந்துக்களும் சேருவர். தனக்கு எதிர்த்த பகையாளிகளை ஜெயிக்கும் திறமும், காணுதலைக் காணுதலும் உண்டாகும் எ-று.

(வி-ரை) மேற்சொன்ன குரு 5-11-ல் பலம்பெற்ற கிரகங்களுடன் கூடி இருந்தால் விவாகமும், ராஜபேட்டியும், நவரத்தின லாபமும் உண்டாகும். 9-10-க்குடைய கிரகங்களுடன்கூடி இருக்க ராஜ்யலாபமும், மகா சந்தோஷமும், நூதன கிரக கட்டடமும் உண்டாகும்.

குரு நீச்சம் அஸ்தமயமாக இருப்பானுகில் பல கஷ்டமும், ராஜாக்களால் தொந்தரவும் பயமும் உண்டு. 1-4-7-10-ல் இருந்தால் மேன்மையான சுகமும், தன் கஷ்டம் யாவும் நீங்கும் என்பதாம். 6-8-12-ல் இருந்தால் சோராக்கினிபயமும், அந்நியதேசசஞ்சாரமும், காதுநோயும் உண்டு என்று கூறுக. (996)

நன்கதிர்சனிமுந்நூற்று நாற்பதோடிரண்டினுக்கு
மன்பயமக்கள்பீடை மனத்துயர்பகைவருண்டாம்
தன்பொருட்சேதமுந்தி யடுப்பதுசரீரபீடை
இன்பமேயில்லைமண்ணி லெவர்களும்பகைவராமே.

(இ-ள்) உலகில் மேன்மையாய் விளங்கும் சூரியமகாதிசையில் சனிபுத்திக்கு ஏற்படும் நாட்களான 342-ல் அவன்தரும் பலன் என்னவெனில், ராஜாக்களால் பயங்கரமும், தன் புத்திரவர்க்கங்களுக்கு துன்பமும், மனவியாகூலமும் உண்டாகும். தனக்குச் சத்துருக்கள் பலர் உண்டாதலும், கைப்பொருள் விரயங்களும், சரீர ஜாட்டியமானது நீங்காதிருத்தலும், தனக்கு அந்த புத்திவரையில் நற்பலன் என்பதே இடையாதென்றும், இப்பூமியிலுள்ள அனைவரும் தனக்குச் சத்துருக்களாகவே இருப்பார் என்றும் கூறுவாய் எ-று.

(வி-ரை) மேற்சொன்ன புத்திநாதனை சனி நான்காம்வீட்டோனைக் கூடி இருக்கில் சில திரவியம் வஸ்திர பூஷணலாபம் நூதன கிரகம் சுப

சோபனம் தானியலாபம் ராஜபிரீதி இவைகளும் அவனைப் பாவகிரகங் களால் பார்க்க, இராஜகோபத்தால் பயம் உயிர்ச்சேதம் விலங்கு கிலேசம் சஷ்டாடகம் பெற்று வயிற்றுநோய் முதலியவைகளும் உண்டு. பாவருடன் கூடி திரிகோணங்களிலிருந்தால் மார்பில் காயம் புத்திரநாசம் தனது புத்திரரே தனக்குச் சத்துருவாகவும் இருப்பார். சனி 11-ல் இருந்தால் களத்திர புத்திர லாபமும் அரியபூஷணங்களும் செல்வமுடையோனுகவும் இருப்பானென்றும் கூறுக. (997)

நற்கதிர்தன்னிற்புந்தி நாளதுமுந்நூற்றாறும்
வற்கமும்பகையதாகும் மனத்திகில்சரீரபீடை
கற்கருவிறுசமுந்திக் கடுப்புநோய்வழக்குமுண்டாம்
சொற்புகழ்மன்னனுசந் துக்கமுமிகுதியாமே.

(இ-ள்) நன்மையைத்தரும் சூரியன் திசையில் புதன் புத்தியின் நாட்க ளான 306-ல் அவன்தரும்பலன் என்னவெனில், தன் உறவினரால் விரோ தமும் மனவியாகூலமும், சரீர ஜாட்டியமும், பற்பல பொருள் சேதமும், உந்தி மூலமான ரோகம், கைப்பொருள் நாசமும், புகழ்ச்சியைப் படைத்த தன் பிதாவுக்கு கெண்டமும், ஏராளமான விசனத்தையும் அனுபவிப்பான் என்றும் கூறுக எ-று.

(வி-ரை) மேற்சொன்னபுதனுடன் 2-9-11-க்குடையோன்கூடியிருக்க அவன் திரண்ட செல்வமும் சொல்வதற்கரிய பூஷணங்களும் தான தரும மும் உண்டாகும்.

6-8-12-ல் இருந்தால் முதலில் சவுக்கிய பலனுண்டாயினும் மத்தியில் வியாதியும், அரசகோபமும், அந்நியகிராமப் போக்குவருத்தும் உண்டாகும். புதன் 2-7-ஆம் வீட்டோனுக இருக்கில் அவன் புத்தியில் கொடிய கண்ட முண்டு. அதுகாலம் அப்போதுவிஷ்ணுஜெபம்செய்ய பரிகாரமாகும். (998)

ஆதித்தன்றனிலேகேது வணுகிநூற்றிருபத்தாறும்
சோதித்தநினைவுகுன்றுந் தூரதேசத்திற்போவசர்
வாதித்தவிஷமுமுண்டாம் வழக்குண்டுமனைவேருகும்
பேதிக்குமுற்றார்கேடு பிணக்குண்டுபலன்செய்யாதே.

(இ-ள்) சூரியன் திசையில் கேது உண்ணும் நாட்களாகிய 126-லும் அவன்கொடுக்கும்பலன் என்னவெனில் தான் மிகுந்த ஆலோசனைசெய்து கண்ட விஷயத்தை மறந்துபோதலும், அந்நியதேசங்களில் போய் சஞ்சரித் தலும், துன்பத்தைத்தரும் கொடிய விஷங்களால் துன்பமும், ஏதேனும் ஒரு காரியமாக சண்டை முதலியவைகளும், தன் சுயக்ஷேத்திரத்தைவிட்டு அந்நியகிரகம் செல்லுதலும், தன் சுயபந்துக்கு கஷ்டங்களும் சஷ்டாடகங் களும் துர்ப்பலனும் உண்டாகும் எ-று.

(வி-ரை) மேற்சொன்ன கேது அஷ்டமஸ்தானம் பெற்றிருக்கில் கொடிய வியாதியும் வீட்டைவிட்டுப்போதலும் பொருள்நாசமும் உண்டு.

3-10-11 இவ்விடங்களில் இருந்தால் தனலாபமும் கலியாணமும் பிதுர் பாக்கியமும் உண்டாகும். 11-ஆம் வீட்டோனுடன் கூடி இருக்க

சவுக்கியமும், 3-ஆம் ராசிநாதனைக் கூடியிருக்க சகோதரநாசமும், தான் தொடுத்த காரிய அபஜெயமும் உண்டாகும். (999)

அருக்கனில்வெள்ளிமுந்நூற் றறுபதுநாளிலாபம்
திருக்கலியாணஞ்செல்வஞ் செம்பொன்னுமிகவுமுண்டு
வருத்தமாஞ்சரீரநோயு மலர்க்கண்ணில்வியாதிதோன்றும்
உருக்கியபிணியுந்தீரு முண்மையாய்க்கருமநன்றே.

(இ-ள்) சூரிய மகாதிசையில் சுக்கிரன் புக்தியாகிய நாட்கள் 360-லும் அவன் தருமபலன் என்னவெனில், விவாகமுதலியவைகளும் தனம்முதலிய பொன்னுணயசோகசையும், விசனத்தைததரத்தக்க திரேகஜாட்டியமும், மலர்போனற விழிகளுககு உபத்திரவமும, தனக்குக் கஷ்டத்தைத்தரும் பிணி நிவாத்தியாதலும, நற்செயல்களும உண்டாகுமென்று உண்மையாய்ச் சொல்லுவர்யாக எ-று,

(வி-ரை) மேற்சொன்ன புத்திநாதனுன சுக்கிரன் பாவகிரகங்களுடன் சோந்து நீச்சம அல்லது 6-8-12-ஆம் இடங்களிலிருந்தாலும், அஸ்தமயகிர கங்களுடன் கூடினுலும், களத்திரபீடையும் பூமிநாசமும் வாகனநஷ்டமும் செய்வதாழில் பினனமும் கொடுக்கும். கேந்திரம் அல்லது திரிகோண ஸதானஙகளிலிருநதால லாபமும், ராஜசன்மானமும், களத்திர சௌக்கிய மும் உண்டாகுமென்றும் சொல்லுக. (1000)

## சந்திரதிசையில் கிரகபுக்தி பலன்

சந்திரன்தனிலேசோமன் றனக்குநாள்வருமுந்நூறும்
விந்தையாஙகன்னிசேர்வள் வீரமன்னேககமுண்டாம்
முந்தியகாரியங்க ணினைத்ததுமுடியுமேலும்
இந்திரனறனைப்போன்மைந்த னினிதுடனுண்டாங்கண்டீர்.

(இ-ள்) சந்திரமகாதிசை வருஷம் 10-ல் தன்சுயபுத்திக்குரிய நாளான 300-ல் அவன் தரும் பலன் என்னவெனில, அழகுபொருந்திய ஸ்திரீகள் வந்து சேர்தலும், வீரபராக்கிரமமான தைரியநெஞ்சம், தான் ஆலோசித்த விஷயங்கள் கைகூடுதலும் உண்டாவதோடு அநதஜாதகனுக்கு இந்திரனுக் கொப்பான அழகிய மக்களும் ஜெனிப்பாரென்று கூறுவாயாக எ-று.

(வி-ரை) சந்திரபுக்தி காலஙகளில் ஆலோசிக்கவேண்டியது என்ன வெனில, ஜெனன காலங்களில் வளர்பிறைச சநதிரனுகயிருநதால் பூரண மாக மேறசொல்லிய பலனையேதருவான். சநதிரன 9-10-ஆம வீட்டோனை சோந்திருப்பானுகில் அவனுககு மதம்பொருநதிய யானை முதலியவைகளை ஈதிக்கும். 7-ஆம் வீட்டோனுடனும் செவவாயுடனும் கூடியிருக்க அவன் தன சததுருககளுடன் சண்டையிடுதலும், தன்படைத்துணைவரால் விரோ தமும் வியாதியும உணடாகுமென்றும கூறுவர். (1001)

நண்புறுமதியிற்செவ்வாய் நாளிருநூற்றுப்பத்தும்
பண்பிலாவழக்குச்சண்டை பயித்தியங்களவுநோயாம்

தண்பொருள்சேதங்குட்டந் தழற்பயமேடமாதம்
திண்பெருந்தளேயேபூணு மேந்திழைக்கலகஞ்சேரும்.

(இ-ள்) மேற்சொன்ன சந்திரதிசையில் குஜன் புத்திக்குரிய நாளானது 210-ஆகும். அக்காலங்களில் நேசத்தைத் தராத சச்சரவும் சண்டையும் உண்டாகும், மனவிகாதம் உண்டாகும், தன் வீட்டில சோரம்போகும, வியாதியைததரும, தன ரொக்கஸ்திதி விரயமாகும், குஷ்டமெனனும வியாதியைக் காட்டும. ஒதநிலைமாதம் வருமபோது நெருப்பால் பயங்கரம் உணடு. அபாரமான குற்றத்தால கட்டுண்டுமிருப்பான். ஸதிரீஜனங்களால் கலகோட்கள் உண்டுபண்ணும் எ-று.

(வி-ரை) குஜன் 6-8-12-முதலிய க்ஷேத்திரங்களிலிருக்கில் அவனுடன் சுபகிரகஙகள் கூடினுலும நோக்கினுலும், மற்றும் 9-5-க்குடையோர் சேர்ந்தால் சிவிகை பலலக்கு முதலியவைகள் சேரதலும் விருத்திபும் உண்டு என்றும் கூறுவர். (1002)

அம்புலிதனிலேராகு வைந்நூற்றுநாற்பதுக்குள்
செமபொனுஞசேதமாகுஞ செறற்லர்பயமவியாதி
நமபியாதுனபமராச நிஷ்டூரமிகவுமாகும
வம்பலாகுழலினுளே மதலேயர்பீடையாமே.

(இ-ள்) அம்புலியாகிய சந்திர மகாதிசையில் ராகுவின் புக்திநாட்கள் 540-ஆகும. அககாலஙகளில் செழுமையான பொன்பூஷணமும், நாணயமும கைவிட்டுப்போகும். தனக்கிருககும் சத்துருக்களுக்கு பயந்திருககவும் நேரும. மேலும சரீரவியாதியை உணடுபணணும தான் பெரிய மலேபோல் ஸ்நேகத்திருந்தவரால் கஷ்டம் உண்டாகும. அல்லது தன ஜேஷ்டனுல் கஷ்டம எனறும கூறலாம். இராஜாக்களால் குற்றம் சாட்டப்படும் பழிக்கு ஆளாகுவோனும் ஆவானெனறு இனிய வணடுகளின் குரலேப்பார்க்கினும் இனிய குரலுடையவளே! அவன புத்திரவர்ககங்களுககும் தோஷமுண்டு என்று கூறுவாயாக எ-று.

(வி-ரை) சந்திரனில் ராகுபுத்தி காலங்களில் 1-4-7-10-11 இவ்விடங்களில் ராகு இருபபானுகில் மேறசொன்ன கொடிய பலன்கள் மூன்று மாதம்வரையிலும் எனறு கூறுவர். அதற்குமேல் தனதான்னிய லாபமும், இராஜாக்களால சந்தோஷமும் ஜெயமும இன்னும் அநேக நற்பலனும் உண்டாகுமெனறும் கூறுவா. (1003)

நன்றிசேர்மதியிற்பொன்ன ஞுனூற்றேடெண்பதுக்கும்
வெனறிசேர்குதிரையானே மேன்பொருடாணியங்கள்
குன்றெனுமுலேயாய்ச்சேருங் கொற்றவனுலேயின்பம்
கன்றுநன்காலியுண்டாங் காளேயைப்பெறுவர்தாமே.

(இ-ள்) நற்பலனேத்தரும் திசாநாதனுன சந்திரனில் குரு உண்ணும் நாட்களான 480 ல் அவனதரும்பலன் என்னவெனில், வெற்றியைத்தரும் குதிரை யானே வந்துசேர்தலும், அளவிறநத செலவமும், தன வகைகளும், பருவதத்தைப்போன்ற ஸ்தனத்தை யுடையவளே! தானுகவே வந்து சேருமென்றுசொல்வாய். ராஜரீகம் புரியவரால் சந்தோஷமுண்டு, நன்மையைத

தரும் நாற்கால் ஜீவனும் கன்று காலிகளும் சேரும். குரு புக்தியிலேயே ஆண்குழவியைப் பெறுவான் எ-று.

(வி-ரை) குரு உச்சம் அல்லது கேந்திரம் கோணம் இவைகளைப்பெற்றிருக்க இராஜாக்களால் பூஜிதனும், அநேகவிதமான லாபங்கள் உண்டாகுமென்றும், 6-8-12 இவ்விடங்களிலிருக்க களத்திர புத்திரநாசமும், அநேக துக்கமும் உண்டாகும். அவனுடன் 6-ம் வீட்டோன் கூடியிருக்க சண்டையும் கிலேசமும் உணடாகுமென்றும் கூறுவர். (1004)

மதிதனிற்காரிபுத்தி மாதம்பத்தொன்பதுக்கும்
பதிகெடுங்கன்றுகாலி புற்றறுமனத்திற்றுக்கம்
விதியுறுமனையாளோடு மெய்ப்பொருட்சேதமாகும்
சதிபெறுகறுத்தோனாலே கோள்வருஞ்சாற்றினேன்கேள்.

(இ-ள்) சந்திரதிசையில் சனி யுண்ணும் புக்தி மாதம் பத்தொன்பதிலும் நாற்கால் ஜீவன்களான கன்று காலிகள தன் வீட்டைவிட்டு அல்லது கைவிட்டு போதலும், மனவிரக்தியும் அல்லது வியாகூலமும் உண்டாகும். தன் மனைவிக்குகெண்டமும், தன் கையிலுள்ள பூஸ்திதிவிரயமும், கறுத்த சரீரமுடையவனால் மோசமும் கலகமும் உண்டாகுமென்று சொல்வாயாக.

(வி-ரை) மேற்சொல்லிய சனி கேந்திர கோணங்களிலிருக்கினும் 11-ஆம் வீட்டிலிருக்கினும் பலம்பெற்ற கிரகங்களுடன் சேர்ந்தாலும் உச்சம் ஆக்ஷி பெற்றிருந்தாலும் அவனுக்கு தனலாபமும் நூதன கிரகக்கட்டமும் உண்டு. (1005)

சந்திரன்றன்னிற்புந்தி தான்பதினேழுமாதம்
அநதரக்கலகம்போக மழகியமககட்பேறும
சிநதைசேரிராசயோகஞ் சேர்ந்திடுநினைத்ததெல்லாம்
முந்தியவிதைதலாபம் புரட்டாசிமுடிவிற்றுனே.

(இ-ள்) சந்திரன் மகாதிசையில் புதன் உண்ணும் புக்தி மாதங்களான 17-லும கொடுக்கவேண்டிய பலன் என்னவெனில், திடீரென்று பிறரால் கோள் வருதலும், அழகுடைய புத்திரர் உண்டாதலும், தன் மனத்திற்குச் சந்தோஷததைத் தரத்தக்க இராஜயோகத்திற்குச் சமானமானயோகமும், தான் கோரிய காரியங்களும் பொருளும் கைகூடுதலும், மேன்மையான கல்வி விருத்தி யடைதலும், இவையாவும் புரட்டாசிமாதத்தின் கடைசியில் உண்டு எ-று.

(வி-ரை) மேற்சொன்ன புக்திநாதனகிய புதன் 6-8-12முதலியக்ஷேத்திரங்களிலும் நீச்சம் அல்லது அஸ்தமயமபெறற தீயகோட்களின்சேர்க்கையாலும் பீடிக்கப்பட்டால திரோகபீடையும் களததிரபீடையும் ஜுரபீடையும் அரசராலும் திருடராலும் துன்பமுண்டாகுமென்றும்கூறுவர். (1006)

நிலவினிற்கேதுவேழு மாதமுநெருப்பாற்பீடை
தொலைவிலாச்சரீரம்வீங்குஞ் சுற்றஞ்சாமிடக்கண்ணேயாம்
அலைச்சலும்பயமுமுண்டா மதிகதணடனையுமுண்டாம்
பலசெனவெறுப்புவந்து நாசமாம்பகையுண்டாமே.

(இ-ள்) சந்திரமகாதிசையில் பாம்பாகிய கேது உண்ணும் புக்திமாதங்களான 7-லும் அக்கினியால் துன்பமும், திரேக ஆதியந்தமும் வீக்கம் உண்டாகும். தன உறவினர்கள் இறந்துபோதலும், இடது விழிக்கு பாதையும், எக்காரியத்திலும் பிரமிக்கும்படியான திகில் மனதில் உண்டாகும். சொல்லுதற்கரிய அபவாதம் கிடைக்கும். அநேக ஜனங்களால் தூஷிக்கப்படுபவனும் விரயமும் விரோதம் முதலியவைகளும் உண்டாகும் எ-று.

(வி-ரை) மேற்சொன்ன கேது 4-12 இவ்விடங்களில் சுபகோளுடன் கூடினாலும், நல்லோர் பார்த்தாலும, வாகன லாபமும், சுகமும் வாழ்வும் உண்டாகும் என்றும் சோதிடத்தோர் கூறுவர். (1007)

வட்டமாமதியில்வெள்ளி மாதங்களிருபதுக்கும்
திட்டமாய்வியாதியுண்டாம் சேர்ந்திடுவிதனங்காட்டும்
நட்டமாமர்த்தநாச நாளிலேவிரோதமுற்ருர்
கட்டமாஞ்சத்துருவாலே காரியஞ்சேதமாமே.

(இ-ள்) பெரிய வட்டத்தைப்போன்ற வடிவமுடைய சந்திரமகாதிசையில் சுக்கிரன் உண்ணும் புக்திமாதங்களான 20-லும் தன்சரீரத்தில் சமரச ஜாட்டியம உண்டாம. தனசையிலுள்ள பொருளை விரயம்செய்யும். நஷ்டங்களும் அர்த்தநாசமும் உண்டாகும. திடீரென்று அயல் ஜனங்களே பகைவராவர். தன பகைவரால் பற்பல கஷ்டங்களும், தான் தொடுத்த வேலைகள் யாவும் கைகூடாதென்றும் கூறுவர் எ-று.

(வி-ரை) சுக்கிரன் ஜெனன காலங்களில் இரண்டிலிருந்தால் அவன் புக்திநாதனாக வருங்காலம் புதையலும், அரசரால் சந்தோஷமும், பொன் பூஷணலாபமும உண்டு. கொடியக்ஷேத்திரங்களிலும் தீயகிரகங்களுடனும் சேர்ந்தால் கொடிய பலனே கொடுப்பான். (1008)

வெண்மதிதனிலேவெய்யோன் வேண்டியவாறுமாதம்
உண்மதிசுரமும்பித்த முருவமுங்குலைந்துவேருய்
கண்மதியங்கந்தனளிற் கடுவலிநோயுமுண்டாம்
பண்புறுகுணத்திநாளிப் பலனுண்டுபலன்செய்யாதே.

(இ-ள்) வெண்மைப் பிரகாசமுடைய சந்திரமகாதிசையில் சூரியன் உண்ணும் புக்தி 6-மாதங்களில் உட்கண்ட வியாதியும், ஜுரமும் பித்தம் முதலியவைகள பீடிக்கப்படும். தன சரீரங்குலைந்து மாறுருபமாகுவன். நேத்திரத்திலும் மனதிலும் திரேகத்திலும் கொடிய உபத்திரவமான வியாதி உண்டாகும். சிநேக வாஞ்சையையுடைய பெண்ணே! சூரியனுக்கு நல்ல பலனைத்தரும சக்தி இருந்தாலும் தரமாட்டான் எ-று.

(வி-ரை) மேற்சொன்ன சூரியன் லக்கினதிபுடன் கூடினாலும் 2-11 இவ்விடங்களிலுமிருந்தால் தன புக்தி அந்தரகாலங்களில் நல்ல பலனைத் தருவானென்றும், ஆனாலும் பிதுர்நாசமுண்டாகும் கேந்திர கோணங்களிலிருந்தால் இராஜசேவையும் சந்தோஷமும் புத்திரலாபம் முதலிய நற்பலனையே தருவாரென்றும் சோதிடத்தோர் கூறுவார். (1009)

## செவ்வாய் திசையில் கிரகபுக்தி பலன்

நன்றிசெய்சேயின்மாத நாலுநாளிருபத்தேழும்
கன்றிடுங்காலினய்கன் கடித்திடுமேடமாதம்
வென்றிசேர்மன்னரச்சம் வெப்புநோய்நீசராலே
கொன்றிடுந்தேளின்மாதத் துடன்வெட்டுங்குத்துமாமே.

(இ-ள்) குஜமகாதிசை வருஷம் 7-ல் குஜன் சுயபுக்தியாகிய மாதம்-4, நாள் இருபத்தேழிலும் அவன் தரும்பலன் என்னவெனில், குட்டிப்போட்ட சுணங்கனால் தன் காலில் கடிபடுதலும், வெற்றியையுடைய இராஜாக்களால் சித்திரைமாத பிரவேசகாலங்களில் அச்சமும், தான் அதிக வருத்தப்படத் தக்க நோய் நீச்சரால் உண்டாதலும், கார்த்திகைமாதம்வந்தபோது பெரிய சண்டை முதலியவைகளால் அடிபடுதலும், மரணத்திற்கேதுவான தோஷ மும் உண்டாகும் எ-று.

(வி-ரை) மேற்சொன்ன குஜன் நீச்சம் அஸ்தமயம் அல்லது 6-8-12 இவ்விராசிகளிலிருந்தால் தீயால் பயமும், சுபனங்கிசம்பெற்றும், சுபனுடன் கூடியும் இருந்தால் நாற்கால் வாகனலாபமும் சுபபலன்களாகவே நடக்கும் என்றறிக. (1010)

செவ்வாயில்ராகோராண்டுஞ் சேர்ந்தநாள்பதினெட்டுக்கும்
ஒவ்வாதவிஷத்தாற்றேளாற் றிங்களிலுற்றார்நாசம்
இவ்வாறுமேகக்கட்டி யிருந்திடுந்தலம்வேறாகும்
கொவ்வைவாய்மானேகுட்டங் குரூரமாம்பீடையாமே.

(இ-ள்) குஜமகாதிசையில் பாம்பாகிய இராகு உண்ணும் வருடம்-1, நாள் 18-ல் அவன் தரும் பலன் என்னவெனில், கொடிய விஷங்களால் துன்பப்படுதலும், தன் தாய் தந்தையர் முதலிய பந்துவர்க்கத்தாருக்கு கார்த்திகைமாதம் வந்தபோது கெண்டாதி தோஷங்கள் உண்டாவதோடு தன் சுயக்ஷேத்திரத்தை விட்டு அந்நிய க்ஷேத்திரத்திற்கு மாறுதலும், அவயவக்குறைவை உண்டுபண்ணும் குஷ்டவியாதியும், கொடியதுன்பமும், பீடையும் உண்டாகுமென்று கோவைக்கனியை யொத்த இதழ்களையுடைய பெண்ணே! சொல்வாயாக எ-று.

(வி-ரை) மேற்சொன்ன ராகு கிரகங்களுடன் கூடினும், பார்வை பெற்றாலும், 3-10-11 இவ்விடங்களில் இருந்தாலும், இராஜப்ரீதியும் பூமி மூலமான லாபமும், களத்திர புத்திர சுகமும் உண்டென்று சொல்லுவது சாஸ்திரசித்தம். ஆனதால் இராகு எந்தக்ஷேத்திரத்தில் இருக்கிறனென்று ஆராய்ந்து கூறுக. (1011)

முழங்கியசேயிற்பொன்னன் முன்னூற்றுமுப்பத்தாறும்
வழங்கிடுமர்த்தநாச மன்னராற்பகையுமுண்டு
தழங்கிடுந்திசைதொடங்கி சத்துருபலருமாவர்
அழங்கலிநாளிற்செல்வ மரசராலுறவுமாமே.

(இ-ள்) முழக்கத்தையுடைய குஜமகாதிசையில் குரு உண்ணும் நாட்க ளான 336-ல் அவன்தரும் பலன் என்னவெனில், அர்த்தநாசத்தை யுண்டு

யண்ணும். மேலும் இராஜாக்களால் விரோதத்தைக் கொடுக்கும். மேல் எழுதிய குஜதிசை ஆரம்பமுதல் தன்சத்துருக்கள் அநேகமாய் உண்டாவர். அந்தியகாலங்களில் தனத்தைக் கொடுப்பதோடு இராஜாக்களால் சிநேகம் உண்டாகுமென்றும் சொல்வாயாக எ-று.

(வி-ரை) மேற்சொன்ன குரு உச்சம் ஆகஷிபெற்று சுபனம்சம் பெற்றாலும், அல்லது சுபன் வீடுகளிலிருந்தாலும் மேற்சொன்ன தியபலனைத் தரான். இராஜ சன்மானமும், பால்பாக்கிய விருத்திடம், பாக்கியசேர்க்கை பெரியோர் உறவு சிநேகம் உண்டாகுமென்றும் கூறுவர். (1012)

மருவியசேயிற்காரி மாதமீராறுமொன்றும்
கருதியநாளொன்பானுங் கலகமாம்வழக்குச்சண்டை
பொருபடையர்த்தநாசம் பொருந்தியமெய்யிற்குட்டம்
மருவியநிலையுங்கெட்டு மனத்தினிற்கிலேசமாமே.

(இ-ள்) அங்காரகமகாதிசையில் சனி உண்ணும் காலங்களான மாதம் 13, நாள்-9 ஆகும். அக்காலங்களில் அவன்தரும் பலன் என்னவெனில் கோள் உண்டாதலும், பற்பலவித விவகாரங்களும் சண்டை நேருதலும், தனக்கு உதவிசெய்வர், அல்லது உறவினர்களுக்குக் கொஞ்சம் விரயமும் தன் திரேகத்தில் குஷ்டவியாதியும், தான்நிலைத்திருக்கும் க்ஷேத்திரத்தை விட்டுவிடுதலும் மனச் சஞ்சலங்களையும் உண்டாக்கும் எ-று.

(வி-ரை) மேற்சொன்ன சனி காரியாதியாயும் அல்லது சொக்ஷேத்திரம் திரிகோணம் உச்சம் உச்சனம்சம் இவ்வாறு இருப்பானாகில் மேற்சொன்ன தியபலனைத் தரான். மகா கீர்த்தியும் புத்திர களத்திர லாபமும் உண்டு. நீச்சம் பெற்றும் 6-8-12 இவ்விடங்களிலும் இருப்பானாகில் இராஜ பயமும் துடுக்கர் மூலமான ஆபத்தும் உண்டாகுமென்றும் கூறுக. (1013)

முந்தியசேயிற்புந்தி முன்னூற்றேடைம்பத்தேழும்
செந்திருவரிவைசேர்வள் செல்வமுமிகுதியாகும்
வந்திடுநோயுந்தீரு மருவியகன்னிமாதம்
நிந்தையாமரவுதீண்டு நீடியபலன்செய்யாதே.

(இ-ள்) முன்சொல்லிய குஜன் மகாதிசையில் புதன் உண்ணும் நாட்களான 357-ம் அவன் தரும் பலன் என்னவெனில், அழகு லக்ஷணம் பெருமை முதலியவைகள் வாய்ந்த ஸ்திரீயை அடைதலும், தனவிருத்தியும் தனக்குண்டாயிருக்கும் வியாதி நிவர்த்தியாதலும், திடீரென நிந்தையைத் தரும் விஷப்பாம்பானது இப்புத்தியில் புரட்டாசிமாதத்தில் கடித்தலும், தான் எவ்வளவு முயர்சிசெய்யினும் பலனைத் தராதெனவும் கூறுவர்.

(வி-ரை) புத்திநாதனானபுதன் நீச்சமாகவும் அஸ்தமயமாகவும், 6-8-12 என்னும் இடங்களிலுமிருந்தால் அவனுக்கு அபமிருத்தும் மனைவி-புத்திர நாசம் நாறகால் ஜீவவிரயம் முதலிய தியபலனையும், கேந்திரம் கோணம் உச்சம் முதலிய க்ஷேத்திரம்பெறின் உத்தியோகலாபமும் களத்திரசுகமும் சாஸ்திரக் கேள்வி முதலிய நற்பலனையும் தருமென்றும் பெரியோர் சொல்வர். (1014)

செய்யவன்றனிலேகேது சேர்ந்திடுமாதநான்கு
உய்யுநாளிருபத்தேழு முடன்பகைமாதராலே
மெய்யிலேவியாதிதோன்றும் விஷபயமிகுதியாகும்
தையலர்பொருட்டானிந்தை சத்துருமிகுதியாமே.

(இ-ள்) குஜன் மகாதிசையில் புக்திராதகை வரும் கேது உண்ணும் மாதம்-4, நாட்கள் 27-லும் அவன் தரும் பலன்களைச் சோதிக்குமிடத்து ஸ்திரீ ஜனங்களால் விரோதமும், திரேக ஜாட்டியமும், கொடிய சர்ப்பங்களாகிய விஷங்களால் அச்சமும், ஸ்திரீகள் மூலமான பழிபாவ வசனங்கள் உண்டாதலும், தன்னை துவேஷிக்கும் பகைவர் அநேகமாய் உண்டாவர் என்றும் கூறுவர் எ-று.

(வி-ரை) மேற்சொன்ன புக்திராதனை கேது உச்சம் கேந்திரகோணம் இவ்விராசிகளிலிருக்க தனதானியலாபமும், நாற்கால்ஜீவலாபமும், ராஜாக்களால் தயவும் உண்டாகும் என்று மேலோர் கூறுவர். (1015)

நாடியசேயிற்சுங்க னற்றிங்களீரேழுக்கும்
மீடியபொருளுஞ்சேரு நேரிழைவந்துசேர்வள்
தேடியதெய்வபூசை செய்வன்மாதவர்கள்சேர்வர்
வாடியசிரங்குதேமல் வாகனம்பெறுவர்தாமே.

(இ-ள்) குஜன்மகாதிசையில் புக்திராதகை மாறிவரும் சுக்ரன் உண்ணும் மாதங்கள் 14-ஆகும், அக்காலங்களில் நிறைந்த செல்வம்பெறுதலும், அழகுபொருந்திய ஸ்திரீகள் வந்தடைதலும் பகவஸ்துதி யுண்டாதலும், பெரிய தவசி முதலிய ஞானிகள் கூடுதலும், வாட்டத்தைத் தரும் சிரங்கு முதலிய மேற்கண்ட ரணங்களை உண்டுபண்ணுதலும், நாற்கால் ஜீவன்களை வாங்குதலும் இப்பலனை அடைவான் எ-று.

(வி-ரை) மேற்சொன்ன சுக்ரன் 6-8-12 இவ்விடங்களில் நீச்சம் பெற்றிருப்பானாகில் தெற்குதிக்கு பிரயாணமும், கஷ்டம் துக்கம் முதலிய பலன்களை உண்டுபண்ணுவான் என்றும் மேலோர் கூறுவர். (1016)

அங்கியிற்பருதிதிங்க ளுலுநாளாறுமாகும்
மங்கியகுட்டங்கண்ட வியாதியாமனத்திற்றுக்கம்
செங்சனற்பயமுண்டாகுஞ் சீர்மறையவராற்றுன்பம்
இங்கிதமனையாள்நோயு மெவர்களும்பகைவராமே.

(இ-ள்) குஜமகாதிசையில் பருதியாகிய சூரியனுண்ணும் மாதங்கள்-4, நாட்கள் 6 லும் அவன்தரும்பலன். உருவங்களைக் குறைவுபடுத்தும் குஷ்டவியாதியும், கழுத்து மார்பு வயிறு முதலிய கண்டரோகமும், மனவியாகுலமும், செழுமை நிறமுள்ள நெருப்பால் அச்சமுண்டாதலும், சிறப்புபெற்ற விப்பிரரால் கஷ்டமும், இனிமையைத்தரும் பெண்சாதிக்கு ரோகமும், யாவரும் விரோதமுள்ளவர்களாகவே இருப்பார் என்றும் கூறுவர் எ-று.

(வி-ரை) மேற்சொன்ன புக்திராதனை சூரியன் 6-8-12 இவ்விடங்களில் தீயகோட்களுடன் கூடி இருந்தால் பந்துஜனகலகம், புக்தி முதலில்

கஷ்டமும், மத்தியில் அதிக கொடுமையும், அந்தியில் பரதேச சஞ்சாரமும் செய்வான். 3-10-11 இவ்விடங்களிலிருந்தால் தன தானிய லாப முதலிய நற்பலனையே தருவார் என்றும் கூறுவர். (1017)

நலமுறுசேயிலிந்து நாடியதிங்களேழும்
பலமுறும்பூமிலாபம் பலித்திடுங்கன்றுகாலி
இலகியபொன்னுமுத்து மின்பமாமாடையுண்டாம்
தலமதுபேதம்பின்பு தளர்ச்சிவந்தெய்துந்தானே.

(இ-ள்) நற்பலனையே சரும் குஜமகாதிசையில் சந்திரனுண்ணும் காலமான மாதங்கள் 7-லும் பூமிமூலமான லாபத்தால் மேன்மை பெறுதலும், வாகன முதலிய விருத்தியுண்டாதலும், பிரகாசத்தையுடைய முத்து பொன் முதலியவைகளால் சந்தோஷமும் ஆடை விருத்தியும் பிற்காலங்களில் தன் க்ஷேத்திரத்தைவிட்டு அந்நிய க்ஷேத்திரம் போதலும், தரித்திரமும் உண்டாகுமென்றும் சொல்லுக எ-று.

(வி-ரை) மேற்சொன்ன புக்திநாதனை சந்திரன் உச்சம் லாபம் சுபர் வீடு திரிகோணம் இவ்விடங்களிலிருப்பாராகில் புண்ணிய தீர்த்தஸ்நானம் தேவாலய தரிசனம் இவைகளை உண்டுபண்ணும். 6-8-12-ல் பாவகிரகங்களுடன் கூடியிருந்தால் இராஜகோபம் முதலிய பலனைத்தரும். (1018)

## இராகு திசாபுக்தி பலன்

இராகுவிலிராகுமாத நாலெட்டுநாளீராறும்
வாகுருவேந்தனுச மனத்துயர்விஷத்தால்பீடை
ஏகமாமனையாடுன்ப மிகுந்திடுந்தலபேதங்கள்
காகநேர்நிறத்தனாலே கலகமுங்கோளுண்டாமே

(இ-ள்) இராகுமகாதிசையில் தன் சுயபுக்தியான வருடம்-2, மாதம்-8, நாள்-12 ஆகும். அக்காலம் அவன் தரும் பலன்களைச் சொல்லுமிடத்து (தன் பெற்றோரென்னும்) இராஜனுக்கு கெண்டமும், சஞ்சலமும், விஷங்களால் துன்பமும், தன் சுகத்திற்கு ஈடுபட்ட பெண்சாதிக்கு கஷ்டமும் தன் வீட்டைவிட்டு அந்நிய வீட்டிற்கு ஏகுதலும், காகத்திற்கொப்பான கறுப்புநிறமுடையவனால் சண்டை முதலியவைகளை உண்டுபண்ணுமென்றும் கூறுவாயாக எ-று.

(வி-ரை) மேற்சொன்ன இராகுபகவான் உச்சனாகவும் சொக்ஷேத்திரமாகவுமிருந்தால் மேற்சொன்ன துர்பலனைத் தராது. மேலான யோக பலனைத் தருவானென்று கூறியிருப்பதால் அவன் இருக்கும் இடமறிந்து அதற்கு ஏற்றவாறு பலன் சொல்லுக. (1019)

பாரியவிராகின்மன்னன் பரிவுடன்புசிக்குந்திங்கள்
நாரியேயிருபத்தெட்டு நாளுமூவெட்டினின்பம்
ஆரியராலேசெல்வ மரசரான்மகிழ்ச்சியுண்டாம்
காரியமெல்லாங்கூடும் காரிகைமணமுண்டாமே.

(இ-ள்) பெருமைபெற்ற ராகுவின் திசையில் புக்திநாதனுக மாறிவரும் குரு உண்ணும் மாதங்கள்-28 நாட்கள்-24 ஆகும். அக்காலங்களில் அவன் தரும் பலன்களைச் சோதிக்குமிடத்து சந்தோஷம், பிராமணரால் தனம் உண்டாதலும், இராஜாக்களால் சந்தோஷமும், தான் தொடுத்த வேலைகள் யாவும் ஜெயமடைதலும், பெண்களைக் கலியாணம் செய்துக்கொள்ளுதலும் உண்டாகும் எ-று.

(வி-ரை) மேற்சொன்ன புக்திநாதனை குரு 6·8-12-ல் இருந்தாலும் அவ்வீட்டோன் பார்வைபெற்றாலும் நற்பலனைத் தரமாட்டான். ஸ்ரகாச மும் நோய் முதலிய துனபங்களையே தருவானென்றும் கூறுக. (1020)

வடிவுளவிராகிற்காரி மாதமுப்பத்துநான்கும்
படிமிசைநாளாறுககும் பகைமனத்திடர்வியாதி
முடிவிலாவழக்குச்சண்டை மூண்டிடும்வாதபித்தம்
இடியுறுசெங்கைசோதி சதயமுமிகுதிநோயே.

(இ-ள்) கறுத்த நிறத்தையுடைய இராகுவின் திசையில் சனியுண்ணும் புக்தி மாதம்-34, நாள்-6 ஆகும். அககாலஙகளில் அவன் தரும் பலனைச் சோதிககுமிடத்து சத்ருத்துவமும் தைரியக்குறைவும் ரோகமும் நீககப்பட மாட்டாத விவகாரங்களும் சணடையும், தனதிரேகத்தில் பிததம் என்னும் வியாதியும் ரோகததையும் தரும். நக்ஷத்திரஙகளைச் சோதிககுமிடதது சதயம் சுவாதி திருவாதிரை எனனும் 3-நக்ஷத்திரங்களில் வியாதி யுண்டா கும் எனவும் அழகுவாயாத பெணணே! சொலவாயாக எ-று.

(வி-ரை) புத்திநாதனை சனி லாபம் உச்சம் சுபக்கிரகங்களின் அங்கி சம் முதலியவைகளில் இருப்பாரானல ஆபாண பூஷணலாபம், விஷ்ணு பக்தி பட்டாபிஷேகம், இராஜம்யாகததிற்கு சமமானயோகமும் அனுபவிப் பான. பாவிகளுடன் கூடி 6-8-12-ல் இருபபானுகில் மேறசொன்ன பலன் களைத் தவிர்தது துன்பபலனையே தருவான. (1021)

வந்திடுமிராகிற்புந்தி மாதமுப்பதின்மேனுட்கள்
முந்தியமூவாறுக்கு முயற்சியாம்வாழ்வுண்டாகும்
சிந்தையிறதெய்வபக்தி சிலபொருள்வந்துசேரும்
விந்தையாமழலைசேரு மேலுறுபகையுணடாமே.

(இ-ன்) மேற்சொன்ன இராகுமகாதிசையில் புக்திநாதனுக மாறிவரும் புதன் உண்ணும மாதஙகளான 30-ம், நாட்கள 18-லும அவனதரும் பலன சோதிககுமிடதது எககாரியஙகளையாவது ஆரம்பிததலும, அதனமூலமாக நற்பலனும், தன மனதில கடவுளை தியானித்தலும், பற்பல தனஙகளை யடைதலும அழகுடைய புததிரர் உணடாதலும், கொடிய சத்ருததுவமும் உணடாகும் எ-று.

(வி-ரை) மேற்சொன்ன புக்திநாதனை புதன் 2-11 இவ்விடங்களில் இருந்தாலும், அவ்வீட்டோன் பார்த்தாலும், மேறசொன்ன பலனிலும் இரணடும் அதிகமான சவுக்கியமும் இஷடபோஜனமும், புஷ்ப அலஙகார மும் உண்டாகும். 6-8-12 இவ்விடங்களில் இருப்பாரானுல் களத்திரரோக

மும், சூரியனால் பார்க்கப்பட்டால் தனவிரயமும் கஷ்டம் முதலிய தூர்ப் பலனும் அடைவானென்று கூறுக. (1022)

மருவியராகிற்கேது மாதமீராறுமிக்க
கருவியநாண்மூவாறு கடிவிஷத்தாலேதுன்பம்
தருமகவுக்குப்பீடை சரீரமேவீங்குநோயாம்
அரிவையர்தமகத்துன்ப மரசராலச்சமாமே.

(இ-ள்) இராகு மகாதிசையில் புத்திநாதனாக மாறிவரும் கேது உண்ணும் மாதம-12, நாட்கள்-18 ஆகும். அக்காலங்களில் அவன் தரும் பலனைச் சோதிககுமிடத்து விஷஜெந்துவின் கடியால் துன்பமும், தன் புத்திரவர்க்கங்களுககு இடையூறும, தன உடல ஸ்தூலிக்கத்தக்க வீக்கத்தால் உபத்திரவமும, தன மனைவிக்குக் கஷ்டமும, இராஜாக்களினால் பயங்கரமும் உண்டாகுமென்றும கூறுவா எ-று.

(வி-ரை) மேற்சொன்ன புக்திநாதனாகிய கேது சுகாதிபதியுடன் கூடியிருந்தால முதலிற்பலனக்கு மாறானதும, சுபருடன கூடினாலும் பார்க்கப் பட்டாலும அரசனுககுச சமானமானவனென்றும் கூறுவா. (1023)

மன்னியவிராகில்வெள்ளி மாதமோமுப்பத்தாறும்
பொனனுடன்பொருளுஞ்சேரும் பூஷணமிகுதியுண்டாம்
அன்னியமங்கைசேர்வ ளரசரால்மகிழ்ச்சியுண்டு
பின்னும்வஞ்சனையாற்றுன்பம் பீடைவந்தகன்றுபோமே.

(இ-ள்) இராகு மகாதிசையில் புக்திநாதனாக மாறிவரும் சுக்கிரனுண்ணும் மாதஙகள-36, அககாலஙகளில் அவன் தரும் பலன்களைச் சோதிக்குமிடதது பொன் நாணயஙகள் முதலிய பறபல செல்வவிருத்தியும், நகைகள் அநேகமாயச சேர்தலும், அழகிய பெணகள் வந்தடைதலும், இராஜரீகம் புரிபவரால சநதோஷமும, தனனைப் பிறர் மோசம்செய்வரென்றும்கூறுக. ஆனால பலவித கஷ்டஙகளும் நஷ்டங்களும் உண்டாகி நிவர்த்தியாகும் எனறும் கூறுவர் எ-று.

(வி-ரை) புக்திநாதனாகிய சுக்கிரன் சுபனாக இருக்கினும் அவன்நின்ற க்ஷேத்திரத்திறகுத் தககபடியே பலனை அளிப்பானாகையால் அவன் தன சொக்ஷேத்திரத்திலும் உசசனாகவும், சுபகிரகங்களுடன் கூடியுமிருந்தால் நறபலனைத தருவானெனெயாழிய கொடிய க்ஷேத்திரங்களிலும் தீயகிரகங்களுடனும்கூடி யிருப்பானாகில அவன் நற்பலனைத தரான். (1024)

ராகுவிலிரவிமாதம் பத்துடன்நாள்மூவெட்டும்
வாகுறுகுலததாற்சண்டை மன்னராற்றஞ்சமாகும்
சேகுறுமனையாளபிள்ளை பிராதுருசிலுகதாகும்
ஆகமூவிதத்தாலேய மிருப்பிடமகலுந்தானே.

(இ-ள்) இராகு மகாதிசையில் புக்திநாதனாக வரும் சூரியனுண்ணும் மாதஙகளான-10, நாட்கள் 24-ல் அககாலம அவன் தரும்பலனைச்சோதிககுமிடத்து அரசர்களால் ஜீவனமுண்டாதலும், தன் சுயஜென விகாதமும,

தனக்கு உதவியாளாகிய மனைவி புத்திரர் சகோதரர் இவர்களால் மனவியா குலமும் கஷ்டமும் உண்டாகும் மேற்சொன்ன மூன்றுவிதத்தாலேயே தன் வீட்டைவிட்டு அன்னியவீடு போகவும் செய்யும் எ-று.

(வி-ரை) இராகு திசையில் புக்திநாதனுகவரும் சூரியன் உச்ச சொஸ்தத்திரம்பெற்றிருந்தால் இராஜாக்களால் அபிமானம் உண்டாகும். அன்றியும் மேற்குதிசையில் சுபகாரியார்த்தமாய் பிரயாணம் செய்யவும் நேரும் என்றும் கூறுவர். (1025)

உதித்திடுமிராகிலிந்து உயர்திங்களீரொன்பானும்
மதித்திடும்பந்துநாச மனைவியாலபொருளுஞ்சேதம்
கதித்திடுமத்தமோணத் திசையினிற்காலகணேவு
விதித்திடும்தலம்விட்டேகும் விஷத்திஞற்றுன்பமாமே.

(இ-ள்) இராகு மகாதிசையில் புக்திநாதனுகவரும் சந்திரனுண்ணும் மாதங்களான 18-லும் அவன் தரும் பலனைச் சோதிக்குமிடத்து தனக்கு உதவியாக இருக்கும் உறவினருக்கு தோஷங்களும், தனச்சேதம் தன் மனைவியாலுண்டாதலும், அஸ்தம் திருவோணத்திற்குரிய வடக்கு மேற்கு திசையில் பிரயாணம் செய்து தன பாதம் நோகுதலும், தன் பூர்வோத்திரமாய் இருந்த இல்லத்தைவிட்டுப் போதலும், விஷவகையால் கஷ்டங்களும் உண்டாகுமென்றும் கூறுவர் எ-று.

(வி-ரை) புக்திநாதனுன சந்திரன் ஜெனனகாலங்களில் திசாநாதனுடனும் 5-ஆம் வீட்டோனுடனும் கூடி அவ்விருவரும் பாவகிரகங்களாகவே இருக்கில் மேற்சொலியதைவிட மேலான துர்பலனையே தரும். உச்ச சொஸ்த்திரம் பெற்றாலும், 3-10 இவ்விடங்களில் இருந்தாலும் மேற்சொன்ன துர்பலன் யாவும் நீங்கி நற்பலனே விளையும். (1026)

இன்புறுமிராகிற்செவ்வாய் மாதமீராறுமிக்க
வன்புறுநாண்மூவாறு மக்கினிபயங்கிலேசம்
மன்பகைவிஷத்தாற்பீடை மருவுசண்டாளரின்பம்
துன்பமாங்களவுசண்டை துயர்மனைகிலேசந்தானே.

(இ-ள்) இன்பத்தைத்தரும் ராகுமகாதிசையில் புக்திநாதனுக மாறி வரும் குஜன் உண்ணும் மாதம்-12, நாட்கள்-18, அக்காலம் அவன் தரும் பலன்களாவன: நெருப்பால் துன்பமும், மருவிய கூலமும், இராஜாக்களால் விரோதமும், விஷங்களால் துன்பமும், தன்னை எதிர்த்த கொடியவர்களுக்கு சந்தோஷமும், பலவித துன்பங்களும், தன்வீட்டில் திருடுபோதலும், வாக்குவாதமும், தன் இல்லத்திலேயே துயரங்களும் சந்தேகங்களும் உண்டாகும் எ-று.

(வி-ரை) ஜெனனகாலங்களில் அங்காரகன் உச்சனுகவும், சொஸ்த்திரனுகவும், சுபகிரகங்களாலநோக்கம்பெற்றும் இருந்தால் அவன்புக்தியில் சவுக்கியங்களும், பூமிலாபமும், நாற்கால்ஜீவ லாபமும், இராஜ பேட்டியும் தேவபிரசாத முதலிய நற்பலனையும் தருவாரென்றும் கூறுவர். (1027)

## குருதிசையில் கிரகபுக்தி பலன்

மருவியபொன்னின்மன்னன் மாதமையைந்துநாளோ
ஒருபதினெட்டினுக்கு முயர்பிரதாபமிக்க
பொருளுடன்தானியங்கள் பூஷணம்பூமிலாபம்
அரிவையர்சேர்த்தியின்ப மரசரான்மகிழ்ச்சியாமே.

(இ-ள்) குருமகாதிசையில் தன் சுயபுக்தியான வருடம்-2, மாதம்-1, நாட்கள்-18, அக்காலம் அவன அடையவேண்டிய பலன் என்னவெனில், கௌரவம் உண்டாதலும், தனச்சேர்க்கையும், தானியபவிசமும், ஆபரண விருத்தியும், மண் மனை லாபமும் உண்டாவதோடு ஸ்திரீ சேர்க்கையால் சந்தோஷங்களும் நற்பலனையும விளைவிப்பான எ-று.

(வி-ரை) ஜெனனகாலங்களில் குரு உச்சம் ஆக்ஷி கேந்திர கோணம் இவற்றிலிருந்தால் மேற்சொலலிய பலனைவிட மேன்மையான பலனே விளையும். நீசராசி அல்லது 6-8-12 இவற்றிலிருந்தால் தாயாதி விரோதமும், தானிய நாசமும், அன்னியதேசம் செல்லுதலும், அபமிருத்து தோஷம முதலிய பலன்ன விளைவிககும் என்றும் கூறுவர். (1028)

பொருந்தியகுருவிற்காரி புகழ்திங்களாகும்பத்து
வருநதியநாளீராறும வாகனம்பொருளும்வாய்க்கும்
திருந்தியகால்கைவாதஞ் சேயிழைதனக்குத்துன்பம்
இருநதிடம்வெறறியில்லை யிடர்வநதுநீங்குந்தானே.

(இ-ள) குருமகாதிசையில் புகதிநாதனாக மாறிவரும் சனியுண்ணும் வருடம்-2, மாதம் 6, நாள-12, அககாலம் அவன தரும் பலனைச சோதிககுமிடதது நாறகால ஜீவசேரககையும் தனச்சேர்க்கையும் உண்டாவதோடு கால காங்கள முதலிய பூட்டுகளில முடககும் வாதமும் உண்டு. தன்பெண் சாதிக்கும் பற்பல கஷ்டங்களும் தன சுயம்க்ஷேத்திரததில் வெற்றி முதலிய சுகம் குறைவென்றும் பலவித கொடிய பலனுணடாகி பரிகாரமாகும் என்றும் கூறுவா எ-று.

(வி-ரை) மேறசொனன சனி ஜெனனகாலங்களில் 11-5-9 இவ்விராசியில் பலம்பெறற கிரகங்களுடனகூடி இருபபானாகில அவன முனசொன்ன கொடியபலனைத் தராது நறபலனைத தருவான. நீசசம் பெற்று 6-8-12 இவ்விராசியிலும் சம்பநதப்படுவானாகில அதிககஷ்டமும், களத்திர புத்திர நாசமும் உணடாகுமெனறும் கூறுவர். (1029)

மருவியகுருவிறபுநதி மாதமோவிருபத்தேழும்
அருகுறுநாளோராறு மாடலும்பாடல்ஞானம்
வருவதுபூசையாலும் வளமுளமாதர்மைந்தர்
பெருகிடுஞ்செலவமனனர் பெருமையும்புகழுண்டாமே.

(இ-ன்) பெருமையும் பிரக்யாதியையுமுடைய குருதிசையில் புக்திநாதனாக மாறிவரும் புதன் உணணும் வருடம் 2, மாதம்-3, நாள்-6, அககாலம் அவன தரும் பலனைச சோதிககுமிடத்து சந்தோஷங்களால் கொண்டாடு

தலும், சங்கீதங்களைக் கற்றுகொள்ளுதலும், தத்துவப்பயிற்சி செய்தலும், தேவாலயங்களுக்கு அபிஷேகித்தலும், வளமைபொருந்திய களத்திரபுத்திர விருத்தியும், தனவிருத்தியும், மன்னரால் பெருமையும், சந்தோஷமும் உண்டாகுமெனவும் கூறுவார் எ-று.

(வி-ரை) புதன்னின்ற இராசிக்குடையோன் நீச்சம்பெற்றாலும் அஸ்த மயம் பெற்றிருந்தாலும், பாவகிரகங்களுடன் கூடியிருந்தாலும், தேக பீடையும், புத்திரபீடையும், களத்திர புத்திர நாசமும் உண்டாகும். புதன் கேந்திரத்திலும் கோணங்களிலும் ஆக்ஷி உச்சம்பெற்றும் சுபரால் பார்க்கப் பட்டுமிருந்தால் பால் அன்னம் புசித்தலும், நினைத்த காரியசித்தியும், களத் திர புத்திர சந்தோஷமும் உண்டாகுமென்றும் கூறுவர். (1030)

பரவியகுருவிற்கேது பதிஞெருமதிநாளாறும்
திரமுளமாதர்க்கேடு திரிச்சலாந்தேசமெங்கும்
உரமுளஉற்றூர்மற்றை யுறவினர்பகையதாகும்
நிரவியமனையாடன்ஞ னிலைவிட்டுப்போவதாமே.

(இ-ள்) உலகெங்கும் போற்றும் குருமகாதிசையில் கொடியோனுன கேது உண்ணும் மாதங்கள்-11, நாட்கள் 6-லும் அவன் தரும் பலன்களைச் சோதிக்குமிடத்து தனக்குச் சுகத்தைத்தரும் பெண்களுக்கு கெண்டாதி தோஷங்களும், அன்னிய தேசங்களில் சஞ்சாரம் செய்தலும், தன் பந்து ஜெனமும், அன்னிய ஜெனமும் விரோதமாதலும், தாய் தந்தை விரோத மும், தன்களத்திரத்தால் தான் தனது சுயக்ஷேத்திரத்தைவிட்டு அன்னிய தேசம் போகவும் நேரும் எ-று.

(வி-ரை) ஜெனனகாலங்களில் கேது சுபகிரகங்களுடன்கூடில் அவன் புத்தியில் அற்பபலனை விளைவிப்பான். இரவியுடன்கூடி 6-8-12 லிருந்தால் களத்திரநாசம் பயம் முதலிய தீயபலனே விளையும் என்று சொல்லுக. ()

மருவியகுருவில்வெள்ளி மாதமுப்பத்திரண்டு
நிறைபரிகட்டுவர்க்கம் நிலைமையாம்பொருளுஞ்சேரும்
புரையுளகன்னிமாதம் பூமியும்போகமுண்டாம்
குரைகடற்சுற்றத்தோடு குணமுடன்வாழ்வர்தாமே.

(இ-ள்) குருமகாதிசையில் புத்திநாதனுக வரும் சுக்கிரன் உண்ணும் வருடங்கள்-2, மாதம்-8, அக்காலம் அவன்தரும்பலனைச் சோதிக்குமிடத்து பலத்தைப் படைத்த யானை குதிரை முதலிய வாகனங்களை யடைதலும், தனநிக்ஷேபமும், அந்த திசையில் புரட்டாசிமாத காலங்களில் பூமி வாங்கு தலும், சிற்றின்பத்தை அனுபவித்தலும், இக்கடல்சூழ்ந்த உலகின்கண் அவன் பந்து ஜெனங்களோடு சந்தோஷமாய் வாழ்ந்திருப்பான் என்றும் கூறுவர் எ-று.

(வி-ரை) மேற்சொன்ன சுக்கிரன் ஆக்ஷி உச்சம் திரிகோணம் இந்த ராசியிலிருப்பானுகில் அவன் புத்தியில் யானை குதிரை லாபமும், நாற்கால் விருத்தியும், கலியாணம் செய்துகொள்ளுதலும் நடக்கும். 6-8-12-ல் இருந் தால் பந்துஜெனகலகமும் களத்திரபீடையும் ராஜநிஷ்டூரமும் உண்டு. ()

உலகுறுகுருவிற்பானு வொன்பதுநாண்மூவாறும்
நலமுறுமர்த்தலாபம் நாடியகருமங்கூடும்
பிலக்குறைநெருப்பிற்காற்றிற் பிணிபலர்பகையும்பீடை
கலகமாமகத்திற்பின்பு காரியநன்மையாகும்.

(இ-ள்) உலகத்தோர் யாவரும் கொண்டாடத்தக்க குருமகாதிசையில் ஆதித்தன் எனும் சூரியன் உண்ணும் மாதங்கள்-9, நாட்கள்-18, அக் காலங்களில் அவன் தரும் பலனைச் சோதிக்குமிடத்து நன்மையும் அர்த்த லாபமும், தான் தொடுத்தவேலை ஜெயம் அடைதலும், அக்கினியாலும் காற்றினாலும் பல கஷ்டமும், தன் வீட்டிலுள்ள பலருக்கு வியாதியும், சத்ருத்துவ கஷ்டமும், தன் இல்லத்தில் அநேக கோள் உண்டாதலும், அந்திய காலங்களில் தான் தொடுத்த காரியம் கைகூடுதலும் உண்டாம் எ-று.

(வி-ரை) சூரியன் கேந்திரகோணம்பெற்றிருந்தாலும் அஷ்டமாதிபதி பார்ப்பானாகில் முதலில் ஜுரம் சிரரோய் தன் வீட்டு லக்ஷ்மீகரம் குறைவு, பாவம் செய்ய எண்ணம், கட்டுதிட்டம் தெய்வஸ்துதி யுண்டு. (1033)

நின்றதோர்குருவிலிந்து நேர்பதினாறுமாதம்
வென்றிநற்சிவிகைமுத்து வெண்குடைபணியுமுண்டாம்
அன்றுநன்மனையாள்மைந்த ரறிவுளோர்பொருளுஞ்சேரும்
என்றுநற்கருமமெல்லாந் தெய்வத்தாலெய்துந்தானே.

(இ-ள்) குருமகாதிசையில் புத்திரதசை வரும் சந்திரன் புசிக்கும் திங்கள்-16, அக்காலம் அவன் தரும் பலனைச் சோதிக்குமிடத்து வெற்றியும், சிவிகை முத்து லாபமும், வெண்சாமரம் குடை முதலியவைகளும், பூஷணங்கள் விருத்தியாதலும், களத்திர புத்திர சந்தோஷமும், உத்தமர் நேசமும், தனச்சேர்க்கையும், தேவானுபலத்தால் அவனுக்கு எல்லா நன்மையும் உண்டு எ-று.

(வி-ரை) மேற்சொன்ன சந்திரன் 6-8-12 இவ்விடங்களில் இருந்தால் தனநாசம், கௌரவக்குறைவு, இராஜாக்களால் கோபம், பீனிசரோகம் உண்டாகும். 9-5 இவ்விடங்களில் இருந்தால் நற்பலனே யுண்டு. (1034)

பாங்குளபொன்னிற்செவ்வாய் பதினொன்றுமதிநாளாறு
தீங்குறுவினைகளுண்டாந் திருடரானற்றழலாற்றுன்பம்
ஆங்குறுமுற்றார்சேத மல்லதுபிணியுமுண்டாம்
நீங்கியேநிலைவிட்டேகும் நினைத்ததுமுடிந்திடாதே.

(இ-ள்) குருமகாதிசையில் புத்திரதசை வரும் குஜன் உண்ணும் மாதம்-11, நாள்-6, அக்காலம் அவன் தரும் பலனைச் சோதிக்குமிடத்து கொடுமையை விளைவிக்கும் துன்பங்களும், தன் தாய் தந்தையர் முதலிய உறவினர்களுக்கு கெண்டாதிதோஷமும் இல்லையேல் கெண்டத்திற்குச் சமமான ரோகமும், தன் வீட்டைவிட்டுப் போகுதலும், தான் தொடுத்த வேலை அபஜெயமும் உண்டாகுமென்றும் கூறுவாயாக எ-று.

(வி-ரை) மேற்சொன்ன குஜன் ஜனனகாலங்களில் ஆட்சி உச்சமாயும் கேந்திரம் திரிகோணங்களிலும் இருந்தால் சொற்பலாபமும், முற்பாதியில்

தனநாசமும், பிற்பாதியில் தனதானியலாபங்களும், தன்வீட்டில் கலியாண சம்பிரமங்களும் உண்டாகும். (1035)

மாதங்கக்குருவில்ராகு மாதமோரிருபத்தெட்டும்
ஓதியநாண்மூவெட்டு முடன்பகைசிறுவழக்குச்
சேதமாம்பொருள்விரோதஞ் சேயிழைதனக்குத்துன்பம்
சூதுகண்மிகவுண்டாகுந் தொடர்ந்திடுஞ்செல்வம்போமே.

(இ-ள்) மகுத்துவம் பொருந்தியவரெனப் பெயர் விளங்கும் குருமகா திசையில் இராகு உண்ணும் வருடம்-2, மாதம்-4, நாள்-24, இக்காலங்களில் அவன் தரும்பலனைச் சோதிக்குமிடத்து கொல்லத்தக்க சத்துருத்துவமும் கொஞ்சம் விவகாரங்கள் உண்டாதலும், தன் கைப்பொருள் நாசமும், சத்ருத்துவமும், களத்திரத்திற்குப் பற்பல கஷ்டமும், அநேகர் வஞ்சிப்பதும், தன் பொக்கிஷத்திலுள்ள தனம் யாவும் விரயமாகும் எ-று.

(வி-ரை) மேற்சொன்ன புக்திநாதனாகிய இராகு சுபனுடனும் அசுபனுடனும் கூடி கேந்திரகோணங்களிலிருந்தால் தாயாதி ஜனவிரோதமும், அந்தியில் கஷ்டமும், மத்தியில் வெகு சவுக்கியமும், பற்பல நன்மையும் உண்டாகும். (1036)

## சனிதிசையில் கிரகபுக்தி பலன்

காரியிற்காரிமாதங் கருதியமுப்பத்தாறும்
வீரியமூன்றுநாளு மெய்யினில்வியாதிதோன்றும்
சீரியவடிமைமைந்தர் செல்வமுங்குறையும்பின்னும்
கூறியவுறவுதன்னாற் கொடும்பகைதாமுண்டாமே.

(இ-ள்) சனிமகாதிசையில் சுயபுக்தியான வருடம்-3, நாள்-3 ஆகும். அக்காலம் அவன் தரும் பலனைச் சோதிக்குமிடத்து தேகத்தில் வியாதியுண்டாதலும், தன் ஆளடியார் குறைதலும், புத்திரன் நாசமாதலும், தனம் விரயமாதலும் உண்டு. தனக்குப் பகைவர்களும், தன் சுயபந்துக்களே தனக்குச் சத்துருவாகவும் இருப்பாரென்றும் கூறுவாயாக எ-று.

(வி-ரை) மேற்சொன்ன சனிபுக்திக்குரிய பலனை ஒவ்வொருவருக்கும் தன் இராசி கிரகப்படி இருக்கும் தாரதரமறிந்து கூறுதல்வேண்டும். எப்படியெனில், தன் சுயவீட்டிலும் 4-7-10-ஆம் ஸ்தானங்களிலும் சுபகிரகங்களின் அங்கிசையிலும் இருக்க நல்லகீர்த்தியும், குதிரை யானைமுதலிய வாகனங்களும் இராஜாக்களால் பற்பல அனுகூலங்களும் உண்டு. (1037)

பங்கினிற்புந்திமாத நாலெட்டுநாளொன்பானும்
இங்கிதகல்விஞான மெழிலுடைப்பொருளுஞ்செல்வம்
மங்கையர்மருவிகூடு மைந்தருஞ்சுற்றமுண்டாம்
பொங்கமாய்மன்னராலே புகழ்ந்துவாழ்ந்திருப்பர்தாமே.

(இ-ள்) சனிமகாதிசையில் புசிக்கவரும் புக்திநாதனென்னும் புதன் உண்ணும் வருடம்-2, மாதம்-8, நாள்-9 ஆகும். அக்காலங்களில் அவன் தரும்பலனைச் சோதிக்குமிடத்து தாழ்வடையாத வித்தை அப்பியாசமும்,

பூர்வக்கியானமும், மேன்மையான பற்பல திரவியமும், தனங்களும், தன் வீட்டில் பெண்ணால் கலியாணம் கூடுதலும், புத்திரப்பேறுண்டாதலும், உறவினர் கூட்டுறவு உண்டாதலும், மன்னர்களால்சந்தோஷமும், சவுக்கிய மும் உண்டாகுமெனவும் மேலோர் கூறுவர் எ-று.

(வி-ரை) மேற்சொன்ன புக்திநாதனுகிய புதன் மிதுனம் கன்னி 11-9- இவ்விடங்களிலிருந்தால் மேற்சொல்லிய பலனுடன் இன்னும் அநேக நற் பலனை விளையும். 6-8-12 இவ்விடங்களில் பாவகோட்களுடன் கூடில் நற்பலனைத் தரான். (1038)

படிமிசைசனியிற்கேது பதின்மூன்றுமதிநாளொன்பான்
கடியதோர்வலக்கால்வாதங் காணுமேபித்தரோகம்
மிடிவருமைந்தனலே விஷபயமர்த்தநாசம்
கொடியிடையவாரற்றுன்பங் கோளினுற்கலகமாமே.

(இ-ள்) சனிமகாதிசையில் கேது உண்ணும் வருஷம்-1, மாதம்-1, நாள்-9 ஆகும். அக்காலங்களில் அவன் தரும் பலனைச் சோதிக்குமிடத்து முக்கிய உறுப்பான வலதுகாலில் வாதம் உண்டாதலும், மேகசம்பந்தமான பித்தம் அதிகமாகுதலும், தன்புத்திரனல் கொடிய துன்பம் உண்டாதலும், விஷஜெந்துக்களால் ஆபத்தும், அர்த்தநாசமும் பெண்களால் பல கஷ்டங் களும், பிறரால் உண்டாகும் கலக வார்த்தையால் சண்டையும் உண்டாகு மெனவும் கூறுவார் எ-று.

(வி-ரை) மேற்சொன்ன கேது எந்த லக்கினமாக யிருந்தாலும் அந்த லக்கினதிபுடன் கூடியிருந்தால் அவன்புக்தி ஆதியில் சவுக்கியமும், கங்கா தீர்த்த ஸ்நானமும் கிடைக்கும். 5-9-6-8 12 இவ்விடங்களில் இருந்தால் அபமிருத்து உண்டு, இதற்கு சனி விரதம் 48-நாள் இருக்கில் பரிகாரமாம்.

முனிவுறுசனியில்வெள்ளி மாதமோமுப்பத்தெட்டு
இனியதோர்பணிநல்லார்த மின்பமும்வெற்றியுண்டாம்
வனிதையர்சேர்வர்ஸாப மக்களுஞ்சுற்றமுண்டாம்
தனியொருபகையுமுண்டாந் தன்னையும்வெல்லலாமே.

(இ-ள்) கோபத்தையுடைய சனி மகாதிசையில் சுக்கிரன் உண்ணும் வருடம்-3, மாதம்-2 இக்காலங்களில் அவன் தரும் பலனைச் சோதிக்கு மிடத்து நல்ல மேலான ஆபரணங்களை அணிதலும், உத்தமர்களால் சந்தோஷமும், ஜெயமும் ஸ்திரீகள்கூடுதலும், ஆதாயமும் புத்திரப்பேறும் உறவினர் உண்டாதலும், நூதனமாகசத்ருத்துவம் உண்டாதலும், மரணம் முதலிய காரியங்களைச் செய்யவும், அதிகாரம் வாய்ந்தவனென்றும் கூறுவர் எ-று.

(வி-ரை) ஜெனன காலங்களில் சுக்கிரன் 2-7-க்குடையவனுக இருக்க களத்திரசந்தேகமும், குன்மவலியும் உண்டாகும். 6-8-12-ல் மூடம்பெற்று இருந்தால் நாசம் மனவியாதி மனைவிரயம் முதலியவைகள் உண்டு. (1040)

பரவியசனியிற்பானு பதினென்றுநாளிரும்
இரமுளரத்தமேக முதரத்திற்சூலைகண்ணோய்

திரமுளமனையாண்மக்கள் சிறுத்திடுநோயினாலே
கரமதுவெரிவாங்காலுங் கடுவலிவாதமாமே.

(இ-ள்) மேன்மையைப் படைத்த சனி மகாதிசையில் சூரியன் உண்ணும் மாதம்-11, நாட்கள்-12, இக்காலங்களில் எவ்விதத்திலும் நீங்காத மேகசம்பந்த உதிரப்பெருக்கும், தொந்திமுதலியவிடங்களில் சூலை என்னும் உஷ்ணமும், நேத்திர ரோகமும், தனகுச் சொந்தமான பெண்டிரும் புத்திரரும், சரீரம் மெலிந்து வியாதியால் அவஸ்தைப்படுதலும், அஸ்தங்களில் உஷ்ணமும், காலில் கொடியநோயும் வாதமும் உண்டாகுமென்றும் கூறுவர் எ-று.

(வி-ரை) சூரியன் ஜெனனகாலங்களில் சுபக்கிரகங்களுடன் கூடியும் பார்க்கப்பட்டும் இருந்தால் மேற்சொல்லிய கொடிய பலனைத் தராது நற்பலனையே தருவான். (1041)

மதமுறுசனியிலிந்து மாதம்பத்தொன்பதுக்கும்
விதமதாங்கலகம்பீடை வீட்டினில்வழக்குசண்டை
பதனமாம்பணிபூணாரம் பல்வளம்பொருளுஞ்சேதம்
அதனமாந்தலங்கள்விட்டே யவதியான்மீள்வர்தாமே.

(இ-ள்) பலம்படைத்த சனி மகாதிசையில் சந்திரன் உண்ணும் வருடம்-1, மாதம்-7, அக்காலங்களில் அவன் தரும் பலனைச் சோதிக்குமிடத்து பற்பலவிதங்களாலும் கோள் உண்டாதலும், தரித்திரமும், தன் இல்லத்திலேயே சச்சரவு ஏற்படுதலும், விவகாரங்களும் தன் ஜீவியத்திற்கென்று வைத்திருக்கும் பூஷணங்களென்னும் தான் அணியும் அணியணிகளும், இன்னும் பல தனம் பொருள் இவைகள் தன் சுயஸ்தலத்தைவிட்டு அந்நிய ஸ்தலத்திற்குப் போவான் என்றும் கூறுவர் எ-று.

(வி-ரை) கடகத்திற்கு ஆக்ஷிநாதனான சந்திரன் பாவகோட்களுடன் கூறி இருக்கில் களத்திரநாச முண்டாதலும், அல்லது மாதுருநாச முண்டாதலும், பீடை முதலிய துர்பலனும் 6 8-12-ல் இவ்விடங்களில் பலம் பெற்று இருப்பானாகில் உத்தம போஜனமும் சவுக்கியமும் உண்டாகும். ()

பலனிலாச்சனியிற்செவ்வாய் பதின்மூன்றுநாளொடீன்பானும்
குலங்களிலீனமிக்க கொடும்பகைபழியுங்காட்டும்
அலைந்திடுந்தேசமெங்கு மனைவரும்விரோதமாவார்
தலங்களிற்பொன்னுற்சோரந் தலம்விட்டுப்பிரியுந்தானே.

(இ-ள்) நற்பலனைத்தரப்படமாட்டாத சனிமகாதிசையில் குஜன் உண்ணும் வருடம் 1, மாதம்-1, நாட்கள்-9, அக்காலங்களில் அவன்தரும்பலனை சோதிக்குமிடத்து தன் குலாசாரக் குற்றம் உண்டாதலும், கொடுமையான சத்துருத்துவமும் நிந்தை உண்டாதலும், அன்னியதேசங்களிற் சென்று உலாவுதலும், எல்லா ஜனங்களும் தனக்குச் சத்ருத்துவமாகவே இருத்தலும், தன் வீட்டில் பொன் முதலிய நாணயங்கள் களவுபோதலும், தன் க்ஷேத்திரத்தைவிட்டு அன்னிய க்ஷேத்திரங்களுக்குச் செல்லுதலும், துர்ப்பலனுமே விளையும் எ-று.

(வி-ரை) மேற்சொன்ன குஜன் லக்கினாதிபடன்கூடி 3-6-11 இவ்விடங்களில் உச்சம்பெற்றாலும் சந்தோஷம் வஸ்திரலாபம் ராஜஉத்யோகம் தனலாபம் பாக்கியம் இவைகள் உண்டாதலுமாம். லக்கினாதிபதியே குஜனாகில் நூதன மண் மனைசேர்க்கையும் 8-7-ஆம் ராசிக்குடையோனாகில் சத்துரு பயமும் உண்டாகும். (1043)

முன்னமேசனியில்ராகு முப்பத்துநரன்குமாதம்
மின்னுநாளாறிற்சேதம் விஷமதுதுரத்தித்தீண்டும்
இன்னமுஞ்சரீரமெங்கு மேருதவியாதியுண்டாம்
அன்னியர்பகையதாகும் மல்லலுமிகுதியாமே.

(இ-ள) முன் சொல்லிய சனிமகாதிசையில் புக்திநாதனாகவரும் ராகு உண்ணும் வருடம-2, மாதம-10, நாட்கள-6, அக்காலம் அவன்தரும்பலனை சோதிக்குமிடத்து செம்பு நாணயங்களும் பாத்திரங்களும் விரயமாதலும், விஷத்தையுடைய அரவம்துரத்திக்கடித்தலும், இன்னும அளவிடமுடியாத நோய் சரீரத்திலுண்டாதலும், பந்து வல்லாதார் விரோதமாகுதலும், விசேஷ அலைச்சல உணடாகுமென்றும கூறுவர் எ-று.

(வி-ரை) மேற்சொன்ன ராகு லக்கினத்திலிருந்தாலும், லக்னாதிபுடன் கூடினாலும மத்தியிலும் கடைசியிலும் கஷ்டமும தனநாசமும், 3-6-10-11 இவவிடஙகளிலும் ரிஷபம்-கடகம் மகரம இவ்விராசிகளிலும் இருப்பானாகில் ராஜாக்களால் சனமானமும் வஸதிரபூஷணமும் உண்டாகும் (1044)

முன்புறுசனியின்மன்னன் முப்பதுநாளீராறும்
அன்புறுமடியார்சேர்வ ராடையாபரணங்கைமேல்
இனபமாமரசராலே யெண்ணியகருமமாகும
மின்கொடியுடனேசுற்ற மிகுதியாம்பலனுண்டாமே.

(இ-ள்) முன்சொல்லிய சனி மகாதிசையில் குரு உண்ணும் காலமான வருடம-2, மாதம-6, நாட்கள்-12. அககாலஙகளில அவன் தரும் பலனைச் சோதிக்குமிடத்து சந்தோஷஙகள் உண்டாகுதலும், சில வேலையாட்கள் வைத்து வேலை வாங்குதலும், வஸதிரஙகள உணடாதலும், பூஷணஙகள விருத்தியடைதலும், இராஜாக்களால சநதோஷம் உணடாதலும், தான் தொடுதத காரியம ஜெயமடைதலும, களத்திரமும் சுறறத்தாரும வந்து சேர்தலும், இன்னும் அநேக பலனகளையும் உணடாக்குமென்றும் கூறுவர்.

(வி-ரை) மேறசொன்ன குரு ஜெனனலக்கினத்திற்கு இரண்டு ஏழுக்குடையோனாயிருந்தால் அநத ஜாதகனுககு அபமிருதது தோஷம் உண்டாகும் என றும், அதற்கு துர்க்காதேவி பூஜைசெய்யின் நிவர்த்தியாகும் என்றும் கூறுவா. (1045)

## புததிசையில் கிரகபுக்தி பலன்

வலம்புரிபுதனிற்புந்தி மாதமோரிருபத்தெட்டும்
துலங்குநாண்மூவொன்பானுஞ் சுற்றமுநதுணையுமுண்டாம்
பணநதருமர்த்தலாபம் பாக்கியமிகவுமுண்டு
நமைபெறுஞானங்கல்வி நாடியகருமமாமே.

(இ-ள்) யாவரும் வலம்வந்து தொழுதுவணக்கும் மகாவிஷ்ணுவென்னும் புதன் மகாதிசையில் தன் சுயபுக்திக்குரிய வருடம்-2, மாதம்-4, நாட்கள்-27 ஆகும். அக்காலங்களில் அவன் தரும் பலன் என்னவெனில், தன் சுற்றத்தார் சேர்தலும், தனக்கு உதவிபுரிவோர் அநேகர் சேர்தலும், நல்ல பலன் உண்டாதலும், குறைந்த ஆதாயம் உண்டாதலும், அநேகமான தன சம்பத்து உண்டாதலும், நன்மையை விளைக்கும் ஞானமார்க்கங்களும், வித்தை அப்பியாச விருத்தியுண்டாதலும், தான்தொடுத்த காரியம் ஜெயம் அடைதல் முதலிய நற்பலனும் விளையும் எ-று.

(வி-ரை) மேற்சொன்ன புதன் சஷ்டமம் அஷ்டமம் மோக்ஷம் இவ்விடங்களில் இருக்கினும் பாவகோட்களுடனும் சகிதம்பெறினும் தன்குலத்தோர் நாசமும், குன்ம வியாதியும், விலங்கு ராஜவிரோதமும், தனநாசமும் ஆகும். உச்சம் ஆக்ஷி கேந்திரம் கோணம் இவற்றிலிருந்தால்மேன்மையான நற்பலனே விளையும். (1046)

பரிந்திடும்புதனிற்கேது பதினொருமாதம்பின்னும்
வருந்துநாண்முவொன்பானு மாதலந்தனைவிட்டேகும்
பொருந்திடும்வியாதிபீடை பொருட்சேதமுற்றார்கேடு
மருந்திடுகுணத்தாற்றுன்ப மனமதுகிலேசந்தானே.

(இ-ள்) யாவரும் பரிந்து கொண்டாடத்தக்க புதமகாதிசையில் கேது உண்ணும் மாதங்கள்-11, நாள்-27 ஆகும். அக்காலங்களில் அவன் தரும் பலனைச் சோதிக்குமிடத்து பெருமைபெற்ற தன் சுயக்ஷேத்திரத்தைவிட்டு அந்நிய க்ஷேத்திரம்போய் சேர்தலும், எந்நாளும் நீங்காத வியாதியும், தரித்திரமும், தனவிரயங்களும், தன் தாய்தந்தையர் உறவினர் முதலியோருக்கு அரிட்டமும் துன்பமும், விஷத்தைப் புசித்தவர்போன்று கஷ்டப்படுதலும், மனச்சஞ்சலமும் உண்டாகுமெனவும் கூறுவாயாக எ-று.

(வி-ரை) கேதுஜெனனகாலங்களில் சுபகிரகங்களோடாவது அல்லது லக்கினதியுடனாவது கூடி சுபகிரகங்களால் பார்க்கப்பட்டால் அற்ப சவுக்கியமும், சொற்பலாபமும், நாற்கால்ஜீவ லாபமும், மேற்குதிசைப் பிரயாணமும், இராஜாக்கள் பேட்டியும் உண்டு. சராராசிகளில் இருந்தால் இன்னும் மேலான சவுக்கியமும் விளையும். (1047)

வாசமாம்புதனில்வெள்ளி மாதமுப்பதுமோநான்கு
நேசமாமக்கட்பேறு நேரிழையுடனேயின்பம்
பாசமாஞ்சுற்றம்வித்தை பலவணிமற்றுமுண்டாம்
தேசமேபோனார்மீள்வர் சேயிழைமணமுமாமே.

(இ-ள்) புதன் மகாதிசையில் வெள்ளியாகிய சுக்கிரன் வாசம்செய்யும் காலமான வருஷம்-2, மாதம்-10 ஆகும். அக்காலங்களில் அவன் தரும்பலன்கள் என்னவெனில், சிநேகிதம் புத்திர உற்பவம், தன் களத்திரத்துடன் சந்தோஷத்தோடிருத்தலும் உறவினர்கள்மீது மிகுந்த ஆசையும், வித்தையில் முயற்சியும், அநேக பூஷணங்களும், ஆனனும பலசெல்வங்களும் உண்டாகும தூரத்திலுள்ள தேசப்பிரயாணம் செய்திருந்தவர் வீடுவந்து சேர்தலும், தன் வீட்டில் பெண்ணால் கலியாணங்களும் உண்டாகும் எ-று.

(வி-ரை) மேற்சொன்ன சுக்கிரன் ஜெனனகாலங்களில் கன்னி-விருச்சிகம்-சிங்கம்-மேடம்-தனுசு இவ்விடங்களிலிருந்தால் அவன் புத்தியில் தலைவலி காய்ச்சல் களத்திரதுவேஷம், வடகுதிசைப்போக எத்தனம், நாற்கால் ஜீவநாசம், பாவக்கோட்களுடன் கூடியிருந்தால் அற்பசவுக்கிய முண்டாகுமென்றும கூறுவர் (1048)

நேருற்றபுதனிற்பானு நீடியமாதம்பத்தும்
சீருற்றநாட்களாறுஞ் செந்தழற்பயங்கிலேசம்
பாருற்றமனையாள்பீடை பகைவருமிடையூறுண்டாம்
வாருற்றகொங்கையாளே மன்னராற்றுன்பமாமே.

(இ-ள்) நற்பலனை விளைவிக்கும் புதமகாதிசையில் புத்திநாதனாகவரும் சூரியன் உலகனும் மாதம்-10, நாள்-6 ஆகும், அக்காலம் அவன் தரும்பலன்களைச் சோதிக்குமிடத்து நெருப்பினால் ஆபத்தும், மனதில்சந்தேகங்களும் தன் உயிர்க்கிணையாகிய களத்திரத்திற்குப் பல கஷ்டங்களும் வியாதியும் விரோதம் உண்டாதலும், கொடியபலன்களுண்டாவதோடு அழகுபொருந்திய பெண்ணே! இராஜாக்கள் மூலமான கஷ்டங்களும் உண்டாகுமென்று கூறுவாயாக எ-று.

(வி-ரை) சூரியன் ஜெனனகாலங்களில் லக்கினாதிபதியால் பார்வை புற்று இருப்பானாகில் சௌக்கியமும் தனலாபமும், மத்தியிலும் அந்தியிலும் நறபலனே விளையும். சனி-குஜன்-இராகு இவர்களுடன்சேரினும் பாரக்கினும் மனவியாதியும் தேகபீடையும், சுயஜெனவிரோதங்களும் உண்டாவதோடு அநேக துர்பலனும் விளையுமென்றும் கூறுவர். (1049)

வாரணப்புதனிற்சோமன் மாதமேபதினேழுக்கும்
பூரணமானசோகை கண்டபின்புறங்கால்வீங்கும்
காரணக்கலகம்பெண்ணாற் கனபீடைசிலுகுமுண்டு
தாரணிதன்னின்மாந்தர் தமக்கெல்லாம்பகையதாமே

(இ-ள்) யானைக்கு ஒப்பாகிய புதமகாதிசையில் புத்திநாதனாக வரும் சந்திரன உலகனும் வருஷம் 1, மாதம்-5 ஆகும். அக்காலங்களில் அவன் தரும் பலனைச் சொல்லுமிடத்து தன் புத்தி சபலப்படத்தக்க ஆயாசம் உண்டாவதுடன் காலின் பின்பக்கம் வீக்கத்தைக் கொடுக்கும். ஸ்திரீகள் மூலமான கோள் உண்டாகும். கொடிய தரித்திரமும் ஓர்நாளுக்கோர்விதமான பலனைக் காட்டும். இப்பூமியிலுள்ள எல்லா ஜனங்களுக்கும் விரோதமுடையவனாகவே இருப்பானென்றுங் கூறுவர் எ-று.

(வி-ரை) சந்திரன்-புதன்-சுக்கிரன் பார்வைபெற்று கேந்திர திரிகோணங்களிலிருப்பானாகில் தென்திசைப் பிரயாணமும், கலியாண சம்பிரமங்களும், நீச்சம் சத்துரு க்ஷேத்திரம் பெற்றிருப்பானாகில் தனநாசம் கட்டடவிரயம் மனஸ்தாபம் காரியவிக்கினம் பந்துஜனதுவேஷம் இராஜாக்களால் துவேஷம் அபஜெயம் முதலிய துர்பலனே விளையுமென்றும் கூறுவர். ()

பன்னியபுதனிற்செவ்வாய் பதினொன்றுநாள்முவொன்பான்
தன்னிலேபித்தரோகங் காமாலைதலைநோக்காடு

வன்னியபகைவிரோத மாயுதத்தாலேபீடை
முன்னொருபகையுமுண்டு முடியவேகலகந்தானே.

(இ-ள்) நற்கோட்களில் ஒருவரான புதமகாதிசையில் புத்திராதனுக வரும் குஜன் உண்ணும் காலமான மாதம்-11, நாள்-27 ஆகும். அக்காலங்களில் அவன் தரும்பலனைச் சோதிக்குமிடத்து பித்த வியாதியும், சிரபாதை முதலிய காமாலை யுண்டாதலும், தன் பந்துவல்லாத ஜனங்களால் சத்ருத்துவமும், கருவிகளால் கஷ்டங்களும், இப்புத்திக்கு முன்னாலேயே தனக்கு சத்துருக்கள் உண்டாவரென்றும், அந்தியவரையில் உண்டாகிக்கொண்டே இருக்குமென்றும் கூறுவர்.

(வி-ரை) குஜன் லக்கினாதிபதியாயும் கேந்திரம் திரிகோணம் இந்த இராசிகளிலும் ஆக்ஷியாக இருந்தாலும் தன்களத்திரத்தால் சந்தோஷமும் இராஜ்யலாபங்களும் செய்தொழில் மூலமான லாபமும் உண்டு. (1051)

நற்புதன்றனிலேராகு முப்பத்துநான்மூவாறும்
நிற்பதோர்நிலைவிட்டேகும் நீசரால்விஷத்தாலேயம்
மற்பொருபூசலுண்டா மனத்திடரர்த்தஹானி
சொற்பனந்தலைநோய்பித்தஞ் சூட்சமாமன்னந்தானே.

(இ-ள்) நற்பலனைத்தரும் புதமகாதிசையில் ராகு உண்ணும்வருடம்-2 மாதம்-6,நாட்கள்-18 ஆகும். அக்காலங்களில் அவன் தரும்பலனைச்சொல்லுமிடத்து இல்லத்தைவிட்டுப்போகுதலும், துடுக்கர்முதலிய நீச்சமனுஷரால் கஷ்டங்களும், விஷஜெந்துவால் பயங்கரமும், எந்நாளும் நீங்காத சத்ருத்துவமுதலிய விவாதங்களும், தைரிய குறைவும், கெண்டங்களும், சொர்ப்பனம் அதிகமாய்க் காணுதலும், சிரபாதையும், பித்தத்தினால் ஆகாரக் குறைவு முதலிய பலனை விளைவிக்கும் எ-று. (1052)

புந்தியிற்பொன்னன்மாதம் புசழ்பெறவிருபத்தேழும்
வந்தநாளாறுமின்ப மன்னராலன்மகிழ்ச்சியாகும்
சிந்தையிற்கிலேசமில்லை சிறுவருஞ்சுற்றமுண்டாம்
பைந்தொடிமணமதாகும் பாக்கியமிகவுண்டாமே.

(இ-ள்) புதமகாதிசையில் தனுர்மீனத்துக்கு ஆக்ஷிநாதனான குரு உண்ணும் வருடம்-2, மாதம்-3, நாட்கள்-6, அக்காலம் அவன்தரும் பலன்கள் என்னவெனில், சந்தோஷங்களும், மன்னரால்மகிழ்ச்சியும் மனச்சந்தோஷமும், குழந்தைகளுண்டாதலும், உறவினர்களுண்டாதலும், பெண்களைகலியாணம்செய்வதும் அநேகபொருள்கள்வந்து சேருமென்றும்கூறுவர் எ-று.

(வி-ரை) மேற்சொன்ன குரு உச்சம் ஆக்ஷியாக இருப்பானேயானால் சவுக்கியம் கலியாணம் பால் அன்னம் புசித்தல் முதலிய நற்பலனும் நீச்சம் பகையாலும் 6-8-12-லும் இருப்பானேயானால் சண்டை பிதுரு துவேஷம் ராஜகோபமும் உண்டு. (1053)

நன்றிசேர்புதனிற்காரி நாலெட்டுமதிநாளொன்பான்
இன்றிடுநன்மைநாளு மெதிர்த்திடும்பகையுமுண்டாம்

சென்றிடும்வலக்கால்நோயாங் திசையுத்திராடந்துன்பம்
மன்றிடுமுற்றார்கேடு மனமதிற்கிலேசமாமே.

(இ-ள்) நற்பலனையே தரும் புதமகாதிசையில் சனிபுண்ணும் வருஷம் 2, மாதம்-8. நாள்-9 ஆகும். அக்காலங்களில் அவன்தரும்பலனைச் சொல்லு மிடத்து தன்னை எதிர்க்கும் சத்துருக்கள் பலர் உண்டாவதோடு வலது காலில் பாதையுண்டாகலும், உத்திராடத்திசையென்னும் மேற்கு திக்கில் கஷ்டங்களும் தன்னைப் பெற்றோர் முதலிய உறவினர்களுக்குத்துன்பமும், சந்தேகமுடைய மனத்தனுமாக இருப்பானென்றும் கூறுவர் எ-று.

(வி-ரை) மேற்சொன்ன சனி ஜெனனகாலங்களில் ஆக்ஷி உச்சமாகவும் 3-10-6 இவ்விடங்களிலுமிருக்கில் முன்சொன்ன துர்ப்பலனைத் தராது, இராஜ்யலாபம் சுகம் இவைகள் உண்டாகுமென்றும் கூறுவர். (1054)

## கேதுதிசையில் கிரகபுக்தி பலன்

ஈண்டியகேதிற்கேது நாலுநாளிருபத்தேழும்
வேண்டியமனையாண்மக்கட் சகோதரவெறுப்புண்டாகும்
பூண்டிடும்விலங்குகாலில் புரட்டாசியுள்ளதோறும்
ஆண்டதுவருஷத்தார்க்குத் திசையதுவவதிதானே.

(இ-ள்) கேதுமகாதிசையில் தன்சுயபுக்தியான மாதங்கள்-4, நாள்-27 அக்காலங்களில் அவன்தரும் பலனைச் சோதிக்குமிடத்து தன் இஷ்டகளத் திரத்தின்மீதும் உடன்பிறந்தார்மீதும் புத்திரர்களின்மீதும் விரக்தியை உண்டாக்கும். இராஜாக்களால் காங்களில்விலங்கிடுகலும், புரட்டாசிமாதங் களுக்குள்ளேயே ஜெனிக்கும் மைந்தர்களுக்கு அந்த திசையில் கொடிய பலனும் பற்பல துன்பங்களும் உண்டாகும் என்றும் கூறுவாயாக எ-று.

(வி-ரை) மேற்சொன்ன கேது என்பதுக்குடையோனுடன் கூடினு லும், லக்கினாதிபதியுடன் சம்பந்தப்பட்டிருந்தாலும் சுபகிரகங்களின் பார் வையும் பெற்றால் நதி தீர்த்தம் விவசாயலாபம் தானதருமம் லாபம்முதலிய நற்பலனை விளையுமென்றும் கூறுக. (1055)

பூரியகேதில்வெள்ளி புத்தியீரேழுமாதம்
பாரியுமக்கட்பேறு பலித்திடுங்கன்றுகாலி
காரியமெல்லாங்கூடும் கடைசியிற்பீடையுண்டு
வீரியமனையாள்நோயா மீளவுமகன்றுபோமே.

(இ-ள்) கேதுமகாதிசையில் புத்திரதனை வரும் சுக்கிரன் உண்ணும் வருடம்-1, மாதம்-2 ஆகும். அவன் தரும்பலனைச் சோதிக்குமிடத்து தன் களத்திர விருத்தியும், புத்திர உற்பவமும், பால்பாக்கிய விருத்தியும் தரும்; வாகன முதலிய பசுக்கன்று விருத்தியும், தான் தொடுத்த வேலைகள் யாதொரு விக்கினமின்றி கைக்கூடுகலும், இப்புத்தியின் அந்தியில் பலகஷ் டங்களும், அன்புடைய களத்திரத்திற்கு கொடிய ரோகங்களும் உண்டாகி மறுபடியும் நிவர்த்தியாகும் எ-று.

(வி-ரை) மேற்சொன்ன சுக்கிரன் பாக்கியாதி என்னும் 9-ம்வீட்டோ னுடன்கூடி இருப்பாரானால் சம்பத்தும் நீச்சம் அஸ்தமயம் பெற்றிருந்தால்

பல ராஜவிரோதமும், தானியநாசமும், சர்ப்பம் முதலியவைகளால் பயமும் இடி வீழ்தலும் உண்டாகும் என்பதாம். (1056)

அந்தமாங்கேதிற்பானும் நாற்றிங்களாறுநாளும்
சிந்திடும்பூமிவிட்டுத் தேசம்போய்வருவன்பின்பு
சுந்தரமேனியெங்குஞ் சுரந்தலைநோயுண்டாகும்
மந்தரமுலையினுளே மனமதிற்கிலேசந்தானே.

(இ-ள்) அழகுபொருந்திய கேதுமகாதிசையில் புக்திநாதனாக வரும் சூரியனுண்ணும் மாதம்-4, நாள்-6 ஆகும். அக்காலங்களில் அவன் தரும் பலன்கள் என்னவெனில், தன் கையிலுள்ளவைகள் யாவும் இழந்து தன் சுயக்ஷேத்திரத்தைப்பிரிந்து அந்நிய தேசங்களுக்குப்போய் மறுபடியும் தன் சுயக்ஷேத்திரத்திற்கு வந்து சேர்தலும், அழகுடைய தன் சரீரம் முழுவதிலும் வியாதி என்னும் ஜுரம், சிரபாதை முதலியவைகளால் பீடிக்கப் படும் எனவும் அழகுவாய்ந்த பெண்ணே! இப்பலன் உண்டாகும் என்றும் கூறுக எ-று.

(வி-ரை) புக்திநாதனாகிய சூரியன் ஜெனனகாலங்களில் உச்சமல்லது ஆக்ஷியாயும், சுபர்களுடன் கூடினாலும் அல்லது பார்த்தாலும் அவனுக்கு ராஜ சன்மானங்களும் நூதனகிரக கட்டடம் உண்டாகுமென்றும் 6-8-12-கேந்திரதிரிகோணம் இவைகளிலிருந்தாலும் நீச்சம் பெற்றாலும் தலைநோய் ஜுரம் களத்திர புத்திரபீடை மாதுருநாசம் மனவியாகூலம் இவைகள் உண்டாகும் என்றும் சொல்லுக. (1057)

சாதககேதிலிந்து தன்புத்தியேழுமாதம்
மாதரால்வழக்குசண்டை மைந்தர்க்குப்பீடையுண்டாம்
போதவேகன்றுகாலி பொன்னுமாபரணமுண்டாம்
சீதளமுகத்தினுளே தீங்குவந்தகன்றுபோமே.

(இ-ள்) வல்லமையையுடைய கேதுமகாதிசையில் புக்திநாதனாக வரும் சந்திரன் உண்ணும் மாதங்கள்-7 ஆகும். அக்காலங்களில் அவன் தரும் பலன்களைச் சோதிக்குமிடத்து ஸ்திரீகள் மூலமான விவகாரங்களும் தன் புத்திரர்களுக்கு வியாதி துர்பலனும், பசு முதலிய வாகன விருத்தியும், பொன் பூஷண சேர்க்கையும் உண்டாகும். குளிர்ந்த முகத்தையுடையவளே! பல கஷ்டங்கள் உண்டாயினும் நிவர்த்தியாகும் என்றறிக எ-று.

(வி-ரை) மேற்சொன்ன சந்திரன் ஜெனன லக்கினத்திற்கு 6-8-12-இவ்விராசிகளில் நின்றானாகில் கலகங்களும், தானிய நஷ்டமும், பூஷண நஷ்டமும், பலவித தீங்கும் உண்டாகுமென்றும் கூறுவர். (1058)

கடையரவதனிற்செவ்வாய் கலந்திடுமாதம்நாலு
இடையுறுமிருபானேழ்நா ளிடர்பயமர்த்தஹானி
படையுறுவழக்குச்சண்டை பலபலவிரோதமாகும்
தடையுறும்பெண்ணாற்கேடு தழல்பயமிகவுண்டாமே.

(இ-ள்) கருநாகமென்று சொல்லும் கேதுமகாதிசையில் குஜன் உண்ணும் மாதம்-4, நாள்-27 ஆகும். அக்காலங்களில் அவன் தரும் பலன்களை

சோதிக்குமிடத்து பல கொடிய கஷ்டங்களும், மனபீதியும், அற்ப சவுக்கிய மும், பொருள் விரயமும், விவாதங்களும், சண்டை முதலியவைகள் உண்டாகும். பலவிதமான சத்துருத்துவங்களாலும் ஸ்திரீஜனங்களால் தடையுண்டாதலும், அபமிருத்துவும் நெருப்பால் பெருத்த ஆபத்தும் உண்டாகும் எ-று.

(வி-ரை) குஜபகவான் ஜெனன காலங்களில் சுபாங்கிசம் பெற்றும் உச்ச சொக்ஷேத்திரங்களாகவும் இருந்தால் அவன் விவசாய லாபமும், தன லாபங்களும், சவுக்கியமும், அந்திய காலங்களில் அகால போஜனமும், களத்திர ஈனம் உண்டுபண்ணும் என்றறிக. (1059)

கேதுவிலிராகுபுத்தி கேள்பன்னிரண்டுமாதம்
மீதியீரொன்பானாளும் விஷபயம்வந்துதீரும்
மாதர்கடமக்குப்பீடை மன்னவனுசமாவான்
போதவேயர்த்தநாசம் புகழ்நிலைநின்றிடாதே.

(இ-ள்) கேதுமகாதிசையில் தன்னைப்போன்ற செம்பாம்பென்னும் இராகு உண்ணும் வருடம்-1, நாள்-18 ஆகும். அக்காலங்களில் அவன் தரும் பலன் என்னவெனில், பயங்கரமும், விஷந்தீண்டுதலும், தன் குடும்ப ஸ்திரீகளுக்குப் பலகஷ்டமும், ஜாட்டியங்களும், மன்னவனென்னும் தன் பிதா இறந்துபோதலும், எந்நாளும் நீங்காத அர்த்தநாசமும், தன் மானாபிமானமும் இழந்துபோவானென்றும் கூறுவர் எ-று.

(வி-ரை) மேற்சொன்ன இராகு ஜெனனகாலங்களில் சுபாங்கிசமும் சுபர்கள் பார்வையும் பெற்றிருப்பாராகில் மிலேச்ச ராஜாக்களால் லாபமும், சுயகிராமத்திலேயே பற்பல நன்மையும் 6-8-12 என்னுமிடங்களில் இருப்பாரேயானால் திரேகத்தில் வடுவுண்டாகுதலும், இஷ்டஜனநாசம் சிரபாதை குளிர்காய்ச்சல் இவைகள் உண்டாகுமென்றும் கூறுவர். (1060)

பருவுலகேதுவுக்குள் பாங்குள்ளமன்னன்புத்தி
ஒருபதினொன்றுநாட்க ளோராறுமர்த்தலாபம்
மருவியமன்னர்சேர்த்தி விஷபயம்வந்துதீரும்
திருவெனமனையாள்சேர்வள் செல்வமும்மிகுதியாமே.

(இ-ள்) உத்தமபலனை விளைவிக்கும் கேதுமகாதிசையில் உத்தமகிரகங்களில் ஒன்றான குரு உண்ணும் காலமான மாதம் 11, நாள்-6 ஆகும் அந்தக் காலம் அவன் தரும் பலன்களைச் சொல்லுமிடத்து சமரச வருமானமும், அன்புடைய இராஜாக்களை வந்தடைதலும், விஷஜெந்துவால் நீங்குண்டாதலும், அழகுடைய களத்திரசேர்க்கையும், தனசம்பத்து உண்டாகுமென்றும் கூறுவர் எ-று.

(வி-ரை) மேற்சொன்ன குரு கேந்திர திரிகோணங்களில் இருப்பாரேயானால் இராஜாக்களால் வருமானமும், வஸ்திராபரணமும், தண்டிகையும், குதிரை யானையும் நற்பேறும் உண்டாகும் என்றும், 6-8-12-ல் இருப்பாராகில் ஆதியில் கஷ்டமும், பாவிகள் பார்த்தால் மித்துரு குரோதமும், நேத்திரவியாதியும், சோராக்கினிமுதலிய துர்க்கருமங்களும் உண்டாம். (1061)

சதியுறுகேதுவுக்குட் சனிபுத்தியானமாதம்
பதின்மூன்றுநாளொன்பானும் பலபொருட்சேதமாகும்
அதிதலம்பேதமாகும் அங்கத்திற்சொறிசிரங்கு
மதிமுகத்தரிவைபீடை மனமதுகிலேசமாமே.

(இ-ள்) சதியை விளைவிக்கும் கேதுபகவான் திசையில் உண்ணவரும் சனிக்குரிய வருடம்-1, மாதம்-1, நாள்-9 ஆகும். அக்காலங்களில் அவன் தரும் பலன்களாவன, பற்பல திரவியங்களும் தன் கைவிட்டுப்போகும். தன் சுயக்ஷேத்திரத்தைவிட்டு அந்நிய க்ஷேத்திரம்போய் சேர்வன். தன் உடலில் அடையாளங்களை உண்டுபண்ணும் சொறி சிரங்கு உண்டாகும். தன் குடும்ப ஸ்திரீக்கு பல் கஷ்டங்களும் தான் எந்த காரியங்களிலும் சந்தேக முள்ளவனுகவே இருப்பான் என சந்திரனைப் பழிக்கும் முகவிலாசத்தையுடைய பெண்ணே! இவ்விதம் சொல்வாயாக எ-று.

(வி-ரை) மேற்சொன்ன சனி ஜெனனகாலங்களில் மூலத்திரிகோணத்திலும் உச்ச சொக்ஷேத்திரங்களிலும் இருப்பானுகில் சனிவாரங்களில் ஆபரணவருத்தும், லாபங்களும் உண்டாகுமென்றும் கூறுவர். (1062)

குலமுளகேதிற்புந்தி குறித்திடும்புத்திமாதம்
நலமுறுபத்துமொன்று நாளிருபத்தேழுக்கும்
தலமதுவிட்டுப்போகுந் தமரினுற்பயமுண்டாகும்
நிலைமையாய்புத்ரசோபம் நினைத்ததுமுடிந்திடாதே.

(இ-ள்) நீச்சகுலத்தோனென்னும் கேதுமகாதிசையில் உண்ணவரும் புதனுக்குரிய மாதம்-11, நாள்-27 ஆகும். அக்காலங்களில் அவன் தரும் பலனைச் சொல்லவெனில், தன் க்ஷேத்திரத்தைவிட்டு மாறுதலும், தன்சுய பந்துக்களென்னும் உறவினரால் ஆபத்தும், எந்நாளும் நீங்காத மக்கள் வியாகூலமும் உண்டாகும். தான் மனத்தில் உத்தேசித்த காரியம் அபஜெயமும் உண்டென கூறுவாயாக எ-று.

(வி-ரை) மேற்சொன்ன புதன் கேந்திரகோணம் உச்சம் ஆக்ஷியாக இருக்கில் ராஜாக்களால் நல்ல மேம்பாடான பலனும், புத்திர சவுக்கியமும், புராண காவியக்கேள்வியும், தருமசிந்தையும், வாகனுதியுடன் கூடியிருக்கில் நூதன கிரகமும் இஷ்டஜென விசுவாச முதலியதும் சுபபலனும் நடக்கும் என்றறிக. (1063)

## சுக்கிர திசையில் கிரகபுக்தி

வண்மையாம்புகரில்வெள்ளி மாதங்கள்நாற்பதுக்கும்
உண்மையாம்பணிகள்முத்து உயர்குடைபுரவியானை
தண்மையாம்புன்மைநீங்கி நாளிலேதனமுஞ்சேரும்
எண்மையங்கிசத்திற்றுக்க மெய்துமைப்பசியிற்றுனே.

(இ-ள்) நற்பலனையே தரும் சுக்கிரமகாதிசையில் தன் சுயபுக்தியான வருடம்-3, மாதம்-4 ஆகும். அக்காலங்களில் அவன் தரும் பலன்களைச் சொல்லுமிடத்து கட்டாயமாய் நல்ல நகைகளையும், முத்து பவழமென்று சொல்லும் பிரகாசமான பொருள்கள் உண்டாவதோடு குதிரை யானை முத

லியவைகளும், பூச்சக்கிரக்குடைகளும், தன் தார்பலன்யாவும்நீங்கி நற்பலன் தருவதோடு நாளுக்குநாள் நல்ல மேலான பொருள்களைச் சேர்க்குதலும், ஆட்டுருவையுடைய மேஷராசிநாதன் என்னும் குஜன் அங்கிசம்பெற்றிருப் பானாகில் அவன் துக்கசாகரங்களை அனுபவிப்பானென்றும், அவை உண் டாகும் காலம் ஐப்பசிமாதத்திலென்னும் தெரிந்துகொள்வாயாக எ-று.

(வி-ரை) அநேகருக்குச் சுக்கிரதிசை என்றால் வெகு பிரமாதமான திசை என்றும், அதைவிட யோகத்தைத்தரும் திசை வேறில்லை என்றும் அனேகர் கூறுவதுண்டு. சோதிடம் கல்லாதாருங்கூட சுக்கிரதிசைநடக்கிற தென்றால் உனக்கென்ன குறைவு என்று பதிலளிப்பார். சுக்கிரனது பண் டைய புராணக் கதையில் மகாவிஷ்ணுவானவர் மாபலியிடம்சென்று மூன்றடி மண் தானம் கேட்டபோது மாபலி தாரைவார்க்கையில் சுக்கிரன் ஓர் வண்டுருவாய் நீர்த்துவாரத்தை யடைக்க, மகாவிஷ்ணு இது தெரிந்து ஓர் குச்சியால் குத்த, அதனால் ஷை சுக்கிரனுக்கு ஓர்கண் பழுதென்பது பாகவத புராணங்கள் கூறும். சுக்கிரனுக்கு நேர் சத்ரு சூரியனும் சந்திர னும் ஆவார்களென முற்கூறிய 27-ஆம் செய்யுளால் அறியலாம். அவ்வாறு பகை கிரகங்களுடனும், பகை க்ஷேத்திரங்களிலும் கொடியவர்களால்பார்க் கப்பட்டு யிருந்தால் மேற்படி சுக்கிரன் எவ்வித பலனைத்தருவானென்பதை சோதிடர்கள் நன்கு அறிந்து பலன் சொல்வதுநலம். இதனாலேயேசோதிட ஆசிரியருள் ஒருவரான நடராஜ தம்பிரானும்,

> உச்ச மித்திர சொக்ஷேத்திரத்திற் பலவானும்
> இச்சுவை சுங்கனூர் திசைவங்தெய்தினு—சச்சமற
> வாழ்வுடைய மாடாடு வாகனமுண்டா நீசம்
> தாழ்வுவரும் வெள்ளிதிசைத் தான்.

என்று கூறியுளார். சுக்கிரன் உச்சனாகவும் ஆக்ஷியாகவும் பலம் பெற்று இருநதால் நல்ல வாழ்வும், நாற்கால் சுகமும் உண்டு. நீச்சனாகி இருந் தாலோ தாழ்வையே உண்டுபண்ணும் என்றபடி சுக்கிரனிருக்கும் தரா தரம் அறிந்து கூறல்வேண்டும்.

(1064)

> **சிறந்திடும்புகரிற்பானு திங்களீராறுந்துன்பம்**
> **குறைந்திடுந்தனமும்நாளிற் கொடும்பகைஅரசராலே**
> **பறந்திடுமனையாண்மக்கள் பலருடன்வழக்காமென்க**
> **உறைந்திடுதெய்வமுள்ளு முறவதுபகையதாமே.**

(இ-ள்) சிறப்புற்றோங்கிய சுக்கிரன் மகாதிசையில் சூரியன் உண்ணும் வருடம்-1 ஆகும். அககாலங்களில் அவன் தரும் பலனைச் சொல்லுமிடத்து கஷ்டங்களும் நாளுக்குநாள் தன் செல்வம் யாவும் குறைந்துபோகும். கொடிய விரோதங்கள் மன்னரால் உண்டாதலும், தன் களத்திர புத்திரர் களை விட்டுப் பிரிதலும், பற்பலரோடு வழக்கு, தெய்வங்களால் சீற்றம், தன் பந்துஜனங்களும் சத்துருவாகவே இருப்பார் எ-று.

(வி-ரை) மேற்சொன்ன சூரியன் உச்சம் ஆக்ஷிபெற்று சுபனுடன்கூடி யிருந்தால் திரேக சவுக்கியமும், வீட்டில் கலியாண சம்பிரமமும், இராஜ அபிமானமுண்டு. திரிகோணம் கேந்திரம் இவவிடங்களிலிருந்தால் பிதுர் பாக்யமும், பிதுர்கிலேசமும், தாயாதி ஜெனப்பகை இவைகள் உண்டாகும்.

மருவியபுகரிற்சோமன் மாதமோரிருபதுக்கும்
கருதியகருமநாளில் வந்துகைகூடுமென்க
அருகுறுமனையாளாலே அடர்பகைவந்துதீரும்
சருவியவின்பமாதர் தம்மொடுமிணக்கமாமே.

(இ-ள்) சுக்கிரன் மகாதிசையில் புத்திரநாதனாகவரும் சந்திரன் உண்ணும் வருடம்-1, மாதம்-8 ஆகும். அக்காலம் அவன் தரும் பலனைச் சோதிக்குமிடத்து, தான் நினைத்த காரியம் ஜெயமடைதலும், தன் உயிர்க்கிணையான மனைவியால் கொடிய பகை வந்து சேர்தலும், இன்பமாதர் என்று சொல்லும் நற்சொற்களைக் கூறும் ஸ்திரீகளுக்குக் கட்டுபட்டு அவர்கள் சொல்லின்படி நடக்கவும் செய்யும் என்றறிக எ-று.

(வி-ரை) மேற்சொன்ன சந்திரன் ஜெனனகாலங்களில் நீச்சம்பெற்று இருந்தாலும் அஸ்தமயமடைந்த கிரகங்களுடன் கூடி இருந்தாலும் மேற்சொன்ன நற்பலனைத் தவிர்த்து தன நஷ்டமும், அந்நிய கிராம வாசமும், மனநோய் வடக்குதிசைப் பிரயாணம் முதலிய பலனையே விளைவிக்கும். ()

புண்ணியபுகரிற்செவ்வாய் புகழ்திங்களீரேழுக்கும்
நண்ணியபூமியுண்டாம் நாரியாற்கருமநாசம்
எண்ணியதேவர்சேவை யிருவராற்பகையுண்டென்னும்
கண்ணிநோய்மெய்யிற்குட்டங் கண்டதுதீருந்தானே.

(இ-ள்) புண்ணியபலனையுடைய சுக்கிரமகாதிசையில் குஜன் உண்ணும் வருடம்-1, மாதம்-2 ஆகும். அக்காலங்களில் அவன் தரும் பலனைச் சோதிக்குமிடத்து தான் நினைத்த பூமிவந்து சேர்தலும், தான் நினைத்த காரியம் ஸ்திரீகளால் அபஜெயப்படுதலும், தான் எண்ணிய கடவுளைக் கும்பிடுதலும், சத்துருத்துவம் இருவரால் உண்டாதலும், விழிகளுக்கு பாதையும், உடலில் குஷ்டம் காணுதலும், பிறகு நிவர்த்தியாகுதல்முதலிய பலனுண்டாகுமென்றும் கூறுவர் எ-று.

(வி-ரை) குஜன் ஜெனனகாலங்களில் 9-ஆம் வீட்டோனுடனும் சுபகிரகங்களுடனும் கூடி இருக்கில் லக்ஷ்மி கடாக்ஷம், தான் நினைத்த பூமியை வாங்குதலும், அநேக பொருள் சேர்தலும், ஆடையாபரணமும் 6-8-12 இவ்விடங்களில் இருந்தால் இராஜகோபம், சண்டை, அபஜெயம் இவைகள் உண்டாகும் என்க. (1067)

திருந்தியபுகரில்ராகு திங்களோர்முப்பத்தாறும்
பொருந்தியமுனியைப்போல பூமியிற்றபசுசெய்வன்
வருந்தியமைந்தராலே வருங்கலகங்கள்மெத்த
அருந்தியமருந்தினாலே விஷமதாயலைவன்றானே.

(இ-ள்) நற்கோட்களி லொருவரான சுக்கிரன் மகாதிசையில் இராகு உண்ணும் வருடம் 3-லும் அவன் தரும் பலன்களைச் சொல்லுமிடத்து வசிஷ்டர், விசுவாமித்திரர், ரோமரிஷி என்னும் ரிஷிகளைப்போல் இப்பூமியில் தவம் செய்தலும், தான் வருத்தப்படும்படியான கோள் தன் புத்திரர்களாலேயே உண்டாதலும், தான் புசித்த ஔஷதமே விஷமாகி இப்பூமியில் அலைந்து திரிந்துக்கொண்டு மிருப்பான் என்றும் கூறுவர் எ-று.

(வி-ரை) இராகு 11-5-9 இவ்விடங்களிலும், உச்சக்ஷேத்திரங்களிலும் 6-3-10 இவ்விடங்களிலுமிருந்தால் சத்துருநாசமும், சந்தோஷம், இராஜ சன்மானம், புத்தி முதலில் ஜுரநோய் மனஸ்தாபம், மத்தியிலும் கடைசியிலும் பொன் முத்துச்சிவிகை இவை லாபமும், நிருதிதிசைசென்று உத்தியோகம் செய்வானென்றும் கூறுவர். (1068)

முன்புறுபுகரின்மன்னன் முப்பத்திரண்டுமாதம்
இன்புறுதானியங்க ளெய்துமேயர்த்தலாபம்
அன்புறுமறையோராலே யதிசயமிகவுமுண்டாம்
மன்புகழ்தோணியவிட்டத் திசையினில்வருத்தமாமே.

(இ-ள்) முன்சொல்லிய சுக்கிரமகாதிசையில் குரு உண்ணும் வருடம்-2 மாதம் 8-ஆகும். அக்காலங்களில் அவன் தரும் பலனைச் சோதிக்குமிடத்து சந்தோஷங்களும், நவதானியங்கள் சேர்தலும், தன் வருமானம் அற்பமும், பிராமணர்களால் சந்தோஷம் உண்டாதலும், இராஜாக்களால் கொண்டாடும் கடற்பிரயாணம் செய்யும் தோணி என்னும் கருவி வந்தடைதலும், அவிட்டத்தின் திக்கான மேற்கு திசையில் சுலப சஞ்சலமும் உண்டாகும் என்றும் கூறுவர் எ-று.

(வி-ரை) குரு 6-8-12-ல் இருந்தால் மேற்சொன்ன நற்பலனைத்தரான். திருடராலும் அக்கினியாலும் பயமும், சண்டைமுதலிய மனவியாகூலமும், இல்லம் கைவிட்டுப்போதலும், இராஜ விரோதமும், குரு 2-7-க்கு ஆகஷிநாதனுக இருந்தால் நீங்காத பீடையும் உண்டு. இவை நீர ஏழைகளுக்கு அன்னதானம் செய்க. (1069)

சாலவேவெள்ளிதன்னிற் சனிமாதமுப்பத்தெட்டும்
மூலமாம்நோயினுலே முயங்கியேமீளுங்கைகால்
வேலெனும்விழியாய்துன்ப மெய்யினில்ரோகமுண்டு
ஆலமாம்விஷம்போலன்ன மரோசிகமாகுந்தானே.

(இ-ள்) போதுமான நற்பலனைத்தரும் சுக்கிரமகாதிசையில் சனி உண்ணும் வருடம்-3, மாதம்-2 ஆகும். இக்காலங்களில் அவன் தரும் பலனைச் சோதிக்குமிடத்து சரீரத்தின் உட்கண்ட வியாதியால் கால் கரங்களுக்கு முடக்கைக் கொடுத்து மறுபடியும் சவுக்கியப்படுத்துதலும், பற்பல கஷ்டங்களும், உடலில் வியாதியும், உணவைக் கண்டால் விஷத்தைப்போன்ற வெறுப்பும் உண்டாகுமென வேலைப்போன்ற விழிகளை யுடையவளே! சொல்வாயாக எ-று.

(வி-ரை) சுக்கிரன் வீட்டில் சனியும், சனி வீட்டில் சுக்கிரனும் இருக்கில் இராஜ்ஜிய லாபமும், சவுக்கியமும் குலநாசமும், அபகீர்த்தியும் உண்டாகுமென்றும் மேலோர் கூறுவர். (1070)

வெள்ளியிற்புந்திமாதம் விரும்புமுப்பத்துநான்கும்
தெள்ளியமனையாள்மக்கள் சீருடன்பொருளுண்டாகும்
வள்ளியகல்விஞானம் வாக்கினுற்பாடலாகும்
நள்ளியசிவப்பனுலே நன்மைகள்பலவுண்டாமே.

(இ-ள்) சுக்கிரன் மகாதிசையில் புக்திநாதனாக உண்ணவரும் புதனுக்கு உரிய வருஷம்-2, மாதம்-10 ஆகும். அக்காலங்களில் அவன் தரும் பலன்களைச் சொல்லுமிடத்து நல்ல களத்திரமும், அழகுடைய புத்திரரும் விருத்தி யடைவதோடு தனமும் விருத்தியாகும். தெள்ளிய வித்தை அப்பியாசமும், நல்ல கீர்த்தனைகளைத் தன் வாக்கினால் பாடுதலும், சிவப்பு நிறமுடைய மனிதனால் பற்பல உபகாரங்களும் க்ஷேமமும் உண்டாகும் எ-று.

(வி-ரை) மேற்சொன்ன புதன் 1-4-7-10 என்னும் இடங்களிலாவது 5-9 என்னுமிடத்திலாவது இருந்தால் இராஜபேட்டியும், நல்லபோஜனமும் உண்டாகும். 6-8-12-ஆம் ராசிகளிலிருந்தால் மனவியாகூலமும், முற்பாதியில் சவுக்கியமும், பிற்பாதியில் கஷ்டங்களும் உண்டாகுமெனக்கூறுவாய்.

இட்டமாம்வெள்ளிதன்னிற் கேதுவீரேழுமாதம்
துட்டமாமிருகத்தாலே துன்பமுமிகவுண்டாகும்
அட்டமாமனையாள்தன்னி னனுபோகத்தாலேநோயாம்
திட்டமாய்விஷந்தான்வீட்டிற் றீண்டியேமீளுந்தானே.

(இ-ள்) யாவரும் கோரப்பட்ட சுக்கிரமகாதிசையில் புக்திநாதனாக வரும் கேது உண்ணும் வருஷம்-1, மாதம்-2 ஆகும். அக்காலங்களில் அவன் தரும் பலன்களாவன: துஷ்டகுணமுடைய மிருகங்களால் பல கஷ்டங்கள் உண்டாகும். களத்திர விரோதமும், மனையாள் சேர்க்கையால் பிணி பீடைகளும் தன் வீட்டிலேயே விஷம் தீண்டி கஷ்டமுண்டாகி நிவர்த்தியாகுமென்றும் கூறுவர் எ-று.

(வி-ரை) கேதுபகவான் ஜெனன காலங்களில் 1-5-4-9-7-10 இவ்விடங்களிலிருந்தால் தேவாலய தரிசனமும், மன்னர் பேட்டி, சத்துரு ஜெயம், தனதானிய லாபம் உண்டாகுமென்றும் கூறுவர். (1072)

## பொது

புத்தியின்பலன்கடம்மைப் பொதுமையாயுரைத்தாரேனும்
சித்தமாய்கோள்கள்நின்ற திரிகோணங்கேந்திரமுச்சம்
தத்தியவியமாறெட்டுப் பகைநீசந்தான்சேரம்சம்
ஒத்தநல்லாதிபத்தியம் வர்க்கமோடவஸ்தைவக்ரம்.

(இ-ள்) இதுவரையில் பலன் சொல்லியது ஒவ்வொரு புக்திக்கும் பொதுவாகையால் ஒவ்வொருவர் ஜாதக கிரமப்படி கோட்கள் நின்ற விபரமறிந்து 1-5-9-ஆம் இடங்களைத் திரிகோணமென்றும் 1-4-7-10-ஆம் இடம் கேந்திரமென்றும், ஒவ்வொரு கிரகங்களிருக்கும் பலமுடைய ஸ்தானங்களான உச்சத்தையும் ரோகம் அஷ்டமம்விரயமென்னும் 12-8-6 இவ்விடங்களும் நீச்சம் முதலிய விவரங்களை யறிந்தும், ஒவ்வொருவருக்கும் உரிய ஆகஷி அம்சம் பலம் வர்க்கம் நக்ஷத்திர பாதசாரப்படி உண்டாகும் வக்ரம் கொடிய க்ஷேத்திரங்களால் பீடித்தல்முதலியவைகளறிந்தும் எ-று. (1073)

## இதுவுமது

பாவத்திற்கண்டயோக மவயோகந்தன்னைப்பார்த்தும்
பூவருமானேநல்ல பலன்களைப்புகலவேண்டும்

**தாவறுசித்ரமுட்சித் திரத்திற்கும்புத்திபோல**
**ஓவறப்பலன்கள்சொல்வ ருயர்மதிவல்லோர்தாமே.**

(இ-ள்) ஒவ்வோரிடங்களுக்கும் உள்ள நல்ல யோகம் கொடிய யோக மென்னும் தரித்திரம் இவைகளையறிந்தும், திசாபுத்திகளுக்குப் பலாபலன் சொல்லவேண்டும். (மேலும் 980-981-ஆம் செய்யுளின்படி) சித்திரம் உள் சித்திரம் இவைகளை யறிந்தும், புக்திபலன் சொல்லவேண்டிய முறையாக ஆராய்ந்து நிர்ணயமாய்ப் பலன் சொல்லவேண்டுமென அழகு வாய்ந்த பெண்ணே! சோதிட வல்லோர்கள் கூறுவார் எ-று.

(வி-ரை) சோதிடர்கள் கவனிக்கவேண்டிய முக்கிய விஷயங்கள் என்னவெனில்? நமது நூலாசிரியர் புக்தி ஒன்றுக்கு ஒவ்வொரு செய்யுளாக பொதுவாய்க் கூறியுள்ளார். யானும் அதைக் கைக்கொண்டு உரை எழுதியதோடு சோதிட நூலாசிரியருள் ஒருவரான பராசரர் என்பவரால் இயற்றப்பட்ட நூலினின்று ஒவ்வொரு ஸ்தானங்களுக்கும் தக்கபடி ஸ்தானபலன் எழுதியுள்ளேன். திசாபுக்தி பலனென்றால் குமாரமுதல் எவ்வன பருவம் வரையில் உள்ள நான்கு பருவங்களுக்கும் ஏற்றவாறு பலன் சொல்வதே முறையாகும். எனெனில்? ஜெனனகாலப்போதே சுக்கிரதிசையில் புதன்புக்தி வந்ததாக வைத்துக்கொள்வோம். அவன் தரும் பலன் நல்ல களத்திரமும் அழகுடைய புத்திரரும் விருத்தி யடைவதோடு வித்தை, அப்பியாசம், ஞானமார்க்கங்களும் தன் வாக்கால் நல்ல கீர்த்தனைகளைப் பாடுதலும், சிவப்புநிற மனிதனால் பற்பல உபகாரமும், க்ஷேமமும் உண்டாகுமென 1071-ஆம் செய்யுளில் கூறியுள்ளார். பிறந்த சிசுவுக்கு இவ்வித பலனுண்டாகில் அப்பலனை யார் அடைவாரென ஆராய்ந்து கூறுவதே சோதிடாகளின் கடமையாகும். இலக்கினத்திற்கு 9-ஆம் வீட்டோன், திசாநாதனுக்கும் புக்திநாதனுக்கும் 6-8-12-ஆம் இடங்களிலாவது, 3-ஆம் இடத்திலாவது மறைந்து நீசசம் பகை சத்ருசேர்க்கை முதலியவைகளால் பீடிக்கப்பட்டிருந்தால், அவன் பிதா அனுபவிப்பான். மாதுரு பிதுர் ஸ்தானாதிபர்களும் காரகர்களும் நல்ல க்ஷேத்திரங்களிலும், நற்கோட்களுடனும் கூடினாலே யொழிய பிதுரு மாதுருக்கள் அந்த சுகத்தை அனுபவியார்கள். பிதுரு மாதுருக்கும் அக்குழவியால் சுகமுண்டு. இவ்வாறே நற்பலனையும் துர்பலனையும் கூறவேண்டும். இத்துடன் முக்கியமாய் சோதிடர்களின் கடமை ஒன்றாகும். பிறந்த குழந்தை தன் மாதாவை மணம்செய்த புருடனுக்கே பிறந்ததா? என்று உணர்ந்து ஆராய்ந்து திசை புக்தி பலனையும், மற்றும் யோகங்களையும் சொல்லவேண்டும். அப்படி வேறுவிதமாய் உதித்ததாயின், அப்படிப்பட்ட பிதாவுக்கே இப்பலனைச் சொல்லவேண்டுவதும் அறியவேண்டுவதும் கடமையாகும். இவை அறியவேண்டுமெனில், வருடம் மாதம் தேதி பக்ஷம் திதி நக்ஷத்திரம் உதய லக்கினம், கிரக அடவி, கிரகங்கள் நின்ற ஆக்ஷி உச்ச நீசம் பகை சமம், கிரகங்கள் நின்ற சத்துரு சமம், உதயம் அஸ்தமனம், கிரக பார்வை, மகாதிசை, காலசக்கரம், உயிராதி கணிதம்; உடலாதிகணிதம், சவ்வியம் அபசவ்வியம், அஷ்டகவர்க்கு, இராசி குணகாரம், கிரககுணகாரம் ஆக குண சமுகம், பகல் இரவு இவைகளை ஆராய்ந்தே ஜாதகபலன் சொல்லவேண்டும்.

(1074)

# மகாதிசை பலன் அறிதல்



வேறு

சீரார் திசாபலனைத் தேர்ந்துபின் சொல்லவெண்பாப்
பாரோர்முன் னேயானும் பாடவே—மோராருங்
கையா னளித்தமலர் கையானைக் காய்ந்தமழுக்
கையான் சுதன்முன்னோன் காப்பு.

(இ-ள்) கடல்சூழ்ந்த இவ்வுலகிலுள்ளோர் அனைவருக்கும் சிறப்புற்று ஓங்கிய திசைபுத்தியின் பலனையறிந்து பிறகு (வெண்பாவென்றும்) புலவர்களும் புலி என அச்சங்கொள்ளத்தக்க வெண்பாவாக பாடுவதற்கு இப்பூவுலகெங்கினும் படியளக்கும்கர்த்தாவும், பரப்பிரம்மசொரூபமாய்விளங்காநின்ற மகாவிஷ்ணுவின் மைந்தனை மலர்களையொத்த பாணங்களையுடைய இருள் நிறத்தோனை மதன் என்பவனை தன் நெற்றிக்கண்ணினால் தன் மருமகனென்றும் பாராது சாம்பலாய் போகும்படி எரித்த பரம்பொருளாகிய ஆதிசிவனுக்குப் பிறந்த யானை முகத்தையுடைய விக்நேஸ்வரரின் இருபாத கமலங்களுக்கு என் சிரசு சாஷ்டாங்கமாக வந்தனம் எ-று.

(வி-ரை) மகாதிசை என்பதை அநேகர் தெரிந்தும், அநேகருக்கு தெரியாமலுமிருக்கலாம் மகாதிசை என்பது ஜெனனகால வகுப்பின்படி கெர்ப்பத்தில் சென்றதுபோய் மிகுந்துள்ள திசை இருப்பை கண்டுகொள்வதேயாகும். இதையே உடுமகாதிசை என்றும் கூறுவர். மகா=ஆதிகாலம்; அல்லது முன்காலங்களின்திசை. திசைகள் உடு=விட்டது என்பது உரையாகும். அதாவது: கெர்ப்பத்தில் சென்றது போக இருப்பு வருடத்தை கண்டுகொள்வதேயாம். ஜெனனகால நக்ஷத்திரத்தைக்கொண்டு திசை அறியும் விபரங்களை முன்கூறிய 977-ஆம் செய்யுளிலும் திசைக்கு உரிய மொத்த வருடங்களை 978-ஆம் செய்யுளிலும் விபரம் கூறியுள்ளோம்.

ஆயினும் ஜெனனகால ஆத்யந்த நாழிகைகளை சொல்லுமிடத்து

| | | | | | |
|---|---|---|---|---|---|
| அசுவனி | 65 | மகம் | 54 | மூலம் | $63\frac{1}{2}$ |
| பரணி | 56 | பூரம் | 58 | பூராடம் | 62 |
| கார்த்திகை | 56 | உத்திரம் | 56 | உத்திராடம் | 55 |
| உரோகணி | 59 | அஸ்தம் | 57 | திருவோணம் | $65\frac{1}{2}$ |
| மிருகசிரம் | 56 | சித்திரை | 60 | அவிட்டம் | $66\frac{1}{2}$ |
| திருவாதிரை | 56 | சுவாதி | 65 | சதயம் | $58\frac{1}{2}$ |
| புனர்பூசம் | 62 | விசாகம் | 61 | பூரட்டாதி | $66\frac{1}{2}$ |
| பூசம் | 52 | அனுஷம் | 60 | உத்திரட்டாதி | $63\frac{1}{2}$ |
| ஆயிலியம் | 56 | கேட்டை | 62 | ரேவதி | 64 |

ஆக மொத்த நாழிகை - $1481\frac{1}{2}$.

முன்கூறிய கிரக திசாவருடப்படி மொத்த வருஷம்-120 ஆகும்.

ஜெனன நக்ஷத்திரத்தை அறிந்து அந்த நக்ஷத்திரத்திற்கு முன் நக்ஷத்திரம் முன்னாளில் சென்றதுபோக மிகுந்த நாழிகையும், ஜெனன நக்ஷத்திர நாழிகையும் ஒன்றுசேர்த்து கூட்டிக்கண்ட தொகையே ஆத்தியந்த மெனப்படும். அவ்வித நக்ஷத்திரத்திற்குரிய திசை வருடத்தை ஆத்தியந்த நாழிகை எவ்வளவோ அத்தனைபெருக்கும் பாகித்து, ஜெனனநக்ஷத்திரத்தில் சென்றுபோன கடிகையின் அளவுப்படி கழிதது மிகுந்துள்ள நாழிகையை ஒன்றுசேர்த்துக் கண்ட மொத்தமே ஜெனன காலதிசை இருப்பு ஆகும். இதையறிந்து சென்ற வருடம் மாதம் தேதியை முன்கூறிய திசா புத்தி விபரத்தில் உள்ளபடி கழித்து மிகுந்ததே திசைபுத்தியின் இருப்பு ஆகும். (1075)

சூரிய மகாதிசை பலன்

அக்கினியால் பீடை யமைவிருத்தி பொன்சேத
மிக்கபயஞ் சத்துருவால் மேவுபகை—யொக்கவே
கண்ணோய் சிரரோகங் காதற் பிதாமிருத்தி
யெண்ணு மிரவி திசைக்கே.

(இ-ள்) நெருப்பால் ஆபத்து அபமிருத்து என்னும் திடீரென ஆபத்து வருதலும், பொன் பூஷண நாணயங்கள் விரயமும், பெரிய அச்சங்களுண் டாதலும், தன் பகைவரால் கொடிய துன்பங்களும், எந்நாளும் நீங்காத விழிகளுக்கு ரோகமும், சிரபாதையும், ஆசையையுடைய தந்தைக்குதோஷமும் என்னும் பலன்களே இந்தச் சூரியதிசைக்கு உண்டாகும் என்றும் கூறுவர் எ-று. (1076)

சந்திர மகாதிசை பலன்

ஆரோக் கியங்கள் சுபமர்த்தலா பம்பிரியஞ்
சீரார் புவிலாபஞ் செல்வருண்டாம்—பாராளப்
பாக்கியமு மின்பம் பரவுவிவா கங்களுடன்
றேக்கு சசியின் றிசை.

(இ-ள்) திரேக சுகமும், கலியாணமும், அர்ப வருமானங்களும், சந்தோஷமும், சிறப்புற்றோங்கிய பூமி ஆதாயமும், செல்வத்தைத்தரும் புத்திரப்பேறு உண்டாகும். மேலும் இப்பூமியை அரசாக்ஷிசெய்ய விசேஷ தன சந்தோஷங்களும், தனக்கு கலியாணம் செய்வதுடன் உண்டாகுமென்று மேன்மை பொருந்திய சந்திரமகாதிசைக்கு சொல்வாய் எ-று. (1077)

செவ்வாய் மகாதிசை பலன்

சித்தப் பிரமைவருஞ் செங்கோலால் சோரரால்
மெத்த பயமிருத்தி வெண்குட்டம்—மத்தப்
பிரமிய மீளப் பெருகிவருஞ் செவ்வாய்
பரவுசேய் திக்கில் பார்.

(இ-ள்) மனத்தில் எவ்வித ஆலோசனையும் இல்லாத நிர்ச்சிந்தையும், செல்வம் பொருந்திய நீதிக்கோலைப்பிடித்த மன்னர்களாலும், திருடர்களா

தும், மிகுந்த அச்சமும், அபமிருத்தும், திரேகத்தில் வெளுப்புநிறமுடைய குஷ்டவிபாதியும் பயித்தியமும் ஈளையும் நாளுக்குநாள் அதிகமாகும். இவை குஜமகாதிசையில் சூரியன் பொசிப்புநாளில உண்டாகுமென்றும் கூறுவர் எ-று. (1078)

இராகு மகாதிசை பலன்

துற்சேட்டை பீடைநட்டந் துக்கந் துர்விருத்தி
யற்றமனத் தஞ்சொய மக்கினியால்—செச்சையுட்
காசுவிநா சம்பார்க்கில் தலமறப் பாக்கியமாந்
தேசுகரும் பாம்பின் றிசை.

(இ-ள்) கொடிய காரியங்களை செய்குதலும், தரித்திரமும், விரயமும், மனவியாகூலங்களும், கெட்டகாரியங்களில் பிரவேசிக்குதலும், மனவெறுப்புண்டாகுதலும், நெருப்பினுல்மனவியாகூலங்களும் மயககமும் தன்கையில் இரானிறை பொருள் விரயமும், தன் சுயக்ஷேத்திரத்தைவிட்டு அன்னிய க்ஷேத்திரங்களில் பாக்கியமுண்டாகுதலும் உணடாகுமென்று கரும்பாம்பு என்னும் இராகுமகாதிசைக்கு சொல்வாயாக. சிலர் 'தலமறப் பாக்யமாம்' என்பதை பிற்பாகங்களில் சௌக்கியமென்றும் கூறுவர் எ-று. (1079)

குரு மகாதிசை பலன்

வித்தைசெயம் புத்திரசம் பத்துமிகு மரசர்
சித்தமகிழ் சன்மானஞ் சேருமே—மெத்த
அபிடேக பூடணமு மாதிபத்தி யங்கள்
பவுசாங் குருதிசைக்குப் பார்.

(இ-ள்) கல்விமூலமான பரீக்ஷையும், மக்கட்பேறும், மேன்மைபொருந்திய இராஜாக்களால் சந்தோஷமுண்டாகுதலும், சன்மானம்கொடுத்தலும், மேன்மையாய் புகழ்ச்சிசெய்தலும், ஆபரணம் விருத்தியாதலும் முதலிய நற்பலன்களே இந்த பெருமைபெற்ற குருமகாதிசையில் உண்டாகுமென்றும் கூறுவர் எ-று. (1080)

சனி மகாதிசை பலன்

சோகம் பயமிலங்குந் துக்க மகோதரமுண்
டாகுமபி மானமது கெடுமே—வாகன
மாட்டுக் குஞ்சேதம் வருமுயிர்த்த முண்டாகுந்
தீட்டு சனியின் றிசை.

(இ-ள்) சனிமகாதிசை வருஷம் 19-லும் அவன் தரும் பலன்களைச் சோதிக்குமிடத்து மயக்கமுண்டாகும், மனத்தில் பயங்கரத்தை யுண்டுபண்ணுவதோடு பலவித வியாகூலங்களை யுண்டுபண்ணும். தன் திரேகத்தில் மகோதரமென்னும் வியாதி புண்டாவதோடு கேடு முதலிய துன்பங்கள் உண்டாவதோடு தனக்கு அழிவும் உண்டாகும் அதன்றி தன் வீட்டிலுள்ள அருமையான வாகனங்கள் கைவிட்டுப் போவதோடு உயிர்ச்சேதமும் உண்டாகுமெனக் கூறுவர் எ-று. (1081)

புத மகாதிசை பலன்

பண்ணியதோர் செட்டும் பயிர்ச்செலவுந் தான்போசிக்கும்
நண்ணுவிர கம்பூமி லாபமாம்—எண்ணுந்
தனலாபம் பங்குகொள்ளத் தானும் வெகுலாபங்
கனமாம் புதன்றிசைக்குள் காண்.

(இ-ள்) *புதன் திசை வருஷம் 17-க்கு அவன் தரும் பலன்களைச் சோதிக்குமிடத்து பூமிலாபமும், தனலாபமும், பங்கு சேருவதால் வெகு லாபமும், இவ்வகைப்பலன்கள உண்டாகுமென்றுங் கூறுவர் எ-று.* (1082)

கேது மகாதிசை பலன்

பித்தஞ் சயரோகம் பெண்மருந்தி ளுளிளைப்பன்
சுத்தந் தரித்திரமுஞ் சூனியமு—மெத்த
வருபாடு மாயுமே வாய்த்திறல் கேது
உருவாய் மருவுதிசைக் குள்.

(இ-ள்) *கேது மகாதிசை வருஷம் 7-க்கு அவன் தரும் பலன் என்ன வெனில், பித்தம் க்ஷயரோகம், பெண்களால் மருந்திட்டு அதனால் சேதம், இளைத்தல, அதிக தரித்திரமும், பகைவரால் சூனியமும், வருமானக் குறைவும் ஆகிய இவைகள் உண்டாகுமென்று கூறுக எ-று.* (1083)

சுக்கிரன் மகாதிசை பலன்

மன்னர்மறை யோர்தமிழர் வாஞ்சிப்பர் வாகனமு
முன்னுசத்தி சாமரைபொன் னுண்டாகு—மின்னும்
விவாகஞ் சுபம்பிரிய மெய்தும் பிணிபோஞ்
சுவாகப் புவிலாபச் சுக்கிரன்.

(இ-ள்) *சுக்கிரதிசையில் அரசர் பிராமணர் தமிழர் இவர்கள் வாஞ்சை வாகனமுண்டாதல், சத்திரம் சாமரை செல்வம் உண்டாதல், கலியாணம் சுபகாரியம், பிறரால் அன்பு உண்டாதல் முதலிய சுபபலன்கள் உண்டாகு மென்றுங் கூறுவர் எ-று.* (1084)

---

# கோசார பலன்

[‘கோசாரம்’ என்பது ஜாதகமுன்ளோருக்கும், ஜாதகமில்லாதாருக்கும் பிரயோஜனப்படுவதாகும். கோசாரத்தைக் கொண்டு அஷ்டகவர்க்க பலன் சொல்வதோடு திசைபுத்தி காலங்களிலும் பலன் அறிய ஏதுவாகும். ஆதலால் கோசாரம் என்பதையும் ஜோதிடர் கவனித்தே மற்றும் பலன்களை புரைக்கவேண்டும்.]

### கோசாரப்படி ஒவ்வோர் வீட்டிலும் கிரகங்கள் வாசம்செய்யும் காலங்களை சொல்லுமிடத்து

| | | | | | |
|---|---|---|---|---|---|
| ராசி 1-க்கு | சூரியன் | 1 மாதம் | கோசார பார்வை விபரம் | | |
| ” | சந்திரன் | $2\frac{1}{4}$-நாள் | சூரியனுக்கு | நாள் | 5 |
| ” | குஜன் | $1\frac{1}{2}$-மாதம் | சந்திரனுக்கு | நாள் | $\frac{1}{4}$ |
| ” | புதன் | 1-மாதம் | குஜனுக்கு | நாள் | 8 |
| ” | குரு | 1-வருடம் | புதனுக்கு | நாள் | 7 |
| ” | சுக்கிரன் | 1 மாதம் | குருவுக்கு | மாதம் | 2 |
| ” | சனி | $2\frac{1}{2}$ வருடம் | சுக்கிரனுக்கு | நாள் | 7 |
| ” | ராகு-கேது | $1\frac{1}{2}$-வருடம் | சனிக்கு | மாதம் | 6 |
| | | | இராகுவுக்கு | மாதம் | 3 |
| | | | கேதுவுக்கு | மாதம் | 8 |

என்றும் கூறுவர்.

இப்பால் அவர்கள் பலன்தரும் காலம் கூறுவார்.

வேறு

ஓதிய கோசரந்திசை சக்கரங்க டம்மில்
உதித்தநவக் கிரகத்தா லுண்டாகும் பலன்கள்
ஆதவன்செவ் வாயிருவர்க் காதியிலே பலன்கள்
அம்புலிக்கும் புதனுக்கும் அனுதினமும் பலனே
பீதகன்சுக் கிரன்பலன்கள் மத்தியத்திற் றருவர்
பெருகுசனி பாம்பிரண்டும் பிற்பலனே தருவர்
சூதுமத கரிக்கோட்டைக் கமலமா முலையைச்
சுந்தரப்பொற் கிரியைவென்ற துணைமுலைமா மயிலே.

(இ-ள்) தினசரி பஞ்சாங்க கணிதப்படி கோசார சக்கிரம் அறிந்து அதிலிருக்கும் 9-கோட்களும் பலனைத்தரும் காலங்களை சொல்லுமிடத்து குஜனும சூரியனும் தான் ஓர் இராசியில் வந்தவுடனே பலனைத் தருவார். சந்திரனும் புதனும் எக்காலங்களிலும் பலனைத்தருவார். இராகு கேது சனி இவர்கள் அவர்களுக்குரிய வயது கடைசியில் தருவார். சுக்கிரன் குரு இவ்விருவரும் தன் கால அளவின் மத்தியிலும் பலனைத் தருவாரென அழகிய ஸ்தனங்களும் உச்சித நடையுடைகளையுமுள்ள பெண்ணே! சொல்வாய். ()

## கோசார வேதை

### வேறு

இரவியைந்தின்மதி யெட்டினேழிற்சேய்
பரவுமூன்றிற்பொன் பார்க்கவனாறிலும்
விரவுபுந்திநான் கொன்பானிராகுசுன்
உரவுசென்ம முறிற்கடுங்கேடுறும்

(இ-ள்) ஜெனன நக்ஷத்திரத்திற்குத் தக்கபடி கண்ட இராசிக்கு 5-ல் சூரியனிருந்தாலும், சந்திரன் 8 லிருந்தாலும், குஜன் 7 லிருந்தாலும், புதன் 9-லிருந்தாலும், குரு 3-லிருந்தாலும, சுக்கிரன் 6-லிருந்தாலும், சனிஜென்மத்திலிருந்தாலும், ராகு 9-லிருந்தாலும் துர்பலனையும் அவகேட்டையும் தருவாரெனக் கூறுவர் எ-று. (1086)

## கோசார நற்பல ஸ்தானம்

### வேறு

கதிர்பதினொன்றுமூன்று கருதுபத்தாறில்நல்லன்
மதியொன்றுமூன்றேராறு மனனுமேழ்பதுபன்னொன்றும்
பதிபுகன்சேய்சுனிராகு பதினொன்றுமூன்றுறுகும்
மதிமகறகிரண்டேராறு மன்னெட்டுபதுபன்னொன்றே.

(இ-ள்) மேலே சொல்லியபடி நக்ஷத்திர ராசிக்கு 3-11-ல் சூரியன் வரும்போது நற்பலனை தருவான். 1-3-6-7-10-11 இவ்விடங்களில் சந்திரன் வாசம் செய்யுங்காலம் நற்பலனை தருவான். இப்பூமியில் புகழ்ந்து பேசும் குஜன் சனி இராகு இவர்கள் 3-6-11 இவ்விடங்களில் வாசகாலம் நற்பலனைத் தருவார். 2-6-8 10-11 இவ்விடங்களில் புதன் வாசம் செய்யுங்காலம் நற்பலனை தருவாரென்றும் கூறுக எ-று. (1087)

பொன்னவன்பதினொன்றென்பான் பொருந்துமேழைந்திரண்டாம்
துன்னுசுக்கிரற்கொன்றுதி யைந்துமோரெட்டொன்பானும்
பன்னொன்றீராறுதன்னிற் பற்றிடில்நல்லராவர்
அன்னமேவேதைக்கோள்க ளுறிற்றீயராவரென்னே.

(இ-ள்) 2-5-7-9-11 இவ்விடங்களில் குரு வாசம் செய்யும்போது நற்பலனை தருவாரெனவும், 1 2-3-4-5-8-9-11-12 இவ்விடங்களில் வாசகாலம் நற்பலனையே தருவாரெனவும், அழகுவாய்ந்த பெண்ணே! இவர்களுக்கு தீயராசிகளில் தீயகிரகங்கள் இருந்தால் இந்த ராசியே அவர்களுக்கு துர்பலனைத் தரும் நக்ஷத்திரம் என்று சொல்வாய் எ-று. (1088)

## வேதை ஸ்தானம்

சூரியற்குரைத்தவீட்டிற் கேழினிற்கோள்நின்றாலும்
கூரியமதிகளைந்தொன்பான் குலவுமீராறிரண்டும்
ஏர்பெறுமொருநாள்கெட்டு மிராகுசன்சேய்தமக்குக்
கார்பெறுங்குழலாயைந்தீ ராறென்பானெனுங்கணக்கும்.

(இ-ள்) சூரியனுக்கு நற்க்ஷேத்திரமெனச் சொல்லிய இராசிக்கு 7-ஆம் இராசியில் கிரகமிருக்கினும் சந்திரனுக்கு 2-4-8 5-9-12 இல்விராசிகளில் கிரகமிருந்தாலும், இராகு-சனி-குஜன் இவர்கள் நற்பலனைத் தருவாரென உரைத்த இராசிக்கு 5-9-12 என்னும் இராசிகளிலும் கிரகமிருந்தால் அழகுவாய்ந்த பெண்ணே! அவரவர்களுக்கு வேதை ஸ்தானம் என்று கூறுவாய் எ-று. (1089)

புந்திக்கைந்தொன்பானைன்றெட் டீராறிற்புனிதப்பொன்னுக்
கந்தமாமெட்டுப்பத்து மூன்றுநான்கீராறும்
சந்தமார்புகருக்கெட்டே ழொன்றுபத்தொன்பத்தைந்தும்
உந்துபன்னொன்றுமூன்றே ராறுமுன்முரைக்குவேதை.

(இ-ள்) புதனுக்கு நற்க்ஷேத்திரமென்று உரைத்த இராசிக்கு 5-8-9-12 இவ்விடங்களில் கிரகம் இருக்கினும் குற்றமில்லாத குருவுக்கு 3 4-8-10-12 இவ்விடங்களில் கிரகமிருந்தாலும், சுக்கிரனுக்கு 5-7-8-9-10 3-6-11 இவ்விடங்களில் கிரகமிருந்தாலும் அவரவர்களுக்கு வேதைஸ்தானமெனச் சொல்வாய் எ-று. (1090)

---

# அஷ்டகவர்க்கம்



['அஷ்டகவர்க்கம்' என்பது சிலத்தில் 12-வீடுகள்கீறி, மொத்தம் 337-பிந்தையும், கிரகங்கள் ஏழுபேருக்கும் பாகித்து, அவரவர் களுக்கும் செம்பர்வரிசைப்படி இலக்கினமுதல் ஒவ்வொன்றாய்க் கீறி கணக்கிட்டுக்கொள்வதே யாகும்.]

ஆதித்தன்றனக்காறெட்டா மம்புலிக்கதன்மேலொன்றும்
வாதிக்குஞ்செவ்வாய்மந்தன் றமக்குமாமுப்பத்தொன்பான்
போதிக்கும்புதற்கைம்பானே டொருநான்குபொன்னேழெட்டாம்
கோதற்றபுகர்கைம்பானே டிரண்டட்டவர்க்கங்கூறே

(இ-ள்) சூரியனுக்குரிய மொத்த பிந்து-48, சந்திரனுக்கு அவனுக்கு மேல் ஒன்று, அதாவது 49. துர்மார்க்கர்களான குஜனுக்கும் சனிக்கும்-39 வித்யாகாரகனாகிய புதனுக்கு-54, குருவுக்கு-56, குற்றமில்லாத சுக்கிரனுக்கு-52, என்றும் அதனதன் அஷ்டகவர்க்கு விபரமென்று கூறுவாயாக.

## சூரியன் அஷ்டகவர்க்க விபரம்

வேறு

கூறிய விரவி தனிலரி சேய்சுன்
குலவுமொன் றிரண்டுநான் கோரேழ்
கூடிரு·நான்கொன் பான்பது பன்னொன்று
மதிதனக் கோவொரு மூன்றும்

ஆறுபத் துடன்பன் னொன்றதாம் புந்திக்
கானமூன் றைந்துட னாறும்
அடுத்திடு மொன்பத்து பன்னொன் றிராறு
பொன்னினுக் கைந்துமா றாறு
வீறுறு மொன்பா னேடுபுன் னொன்றே
விளங்கிய புகரினுக் காறு
மேவுமே ழிரா றும்லக் கினமோ
விரும்புமூன் றும்வரு நான்கும்
ஆறுமீ ரைந்தும் பத்துட னொன்றீ
ராறிரண் டாகுமென் றறிவாய்
அன்னநடை மயிலின் சாயன்மான் விழியு
மமைகிகர் தோளுடை யணங்கே.

(இ-ள்) கூறப்படும் சூரியன் அஷ்டகவர்க்கில் சூரியனுக்கும் குஜனுக்கும் சனிக்கும் 1-2-4-7-8-9-10-11 ஆகும் சந்திரனுக்கு 3-6-10-11 ஆகும். புதனுக்கு 3 5-6-9-10-11-12, குருவுக்கு 5-6-9-11, பிரகாசமுடைய சுக்கிரனுக்கு 6-7-12, லக்கினத்திற்கு 3-4-6-10-11-12 ஆகுமென்று அன்னத்தைப்போன்ற நடையையும், மயிலை யொத்த சாயலும, மான் விழிகளைப் போன்ற கண்களும், அழகுபொருந்திய தோள்களையும் உடையவளே! இதை சூரியன் அஷ்டகவர்க்கெனக் கூறுவாயாக எ-று (1092)

## சந்திரன் அஷ்டகவர்க்க விபரம்

மதியினி லிரவி மூன்றுட னாறேழ்
வருமெட்டு பத்துபன் னொன்றும்
மதியொன்று மூன்று மாறுட னேழு
மன்னுபத் துடன்பதி னொன்றும்
துதிகுச னிரண்டு மூன்றுட னைந்தா
றொன்பதீ ரைந்துபன் னொன்றும்
சொல்லுமாற் கொன்று மூன்றுநான் கைந்துந்
தொடருமே ழெட்டுமீ ரைந்தும்
பதினொன்றும் பொன்னிற் கொன்றிரண் டொருநான்
காகுமே ழெட்டுபத் துடனே
பகருபன் னொன்றும் புகர்க்குமூன் றொருநான்
கைந்துட னேழுமொன் பானும்
அதிகமாம் பதுமன் னொன்றுசுன் மூன்று
மைந்திரு மூன்றுபன் னொன்றும்
அமருலக் கினமூன் றுறுமீ ரைந்து
மாம்பதி னொன்றென வுரைவாய்.

(இ-ள்) சந்திரன் அஷ்டகவர்க்கை சொல்லுமிடத்து சந்திரனில் சூரியனுக்கு 3-6-7-8-10-11, சந்திரனுக்கு 1-3-6-7-10-11, அதிக்கப்பெற்ற செவ்வாய்க்கு 2-3-5-6-9-10-11, மால் என்னும் புதனுக்கு 1-3-4-5-7-8-10

11, பொன்னிறமுடைய குருவக்கு 1-2-4-7-8-1`-11 ஆகும். சுக்கிரனுக்கு 3-4-5-7-9-10-11, சனிக்கு 3-5-6-11, ஜெனன லக்கினத்திற்கு 3-6-10-11 எனச் சொல்வாயாக எ-று. (1093)

## குஜன் அஷ்டகவர்க்க விபரம்

சேயினி லிரவிமுன் றைந்திரு மூன்று
செப்பிய பத்துபன் னென்றும்
செழுமதி யொருமூன் றாறுபின் னென்றுஞ்
சேர்குச னென்றிரண் டொருநான்
காயவே ழிருநான் கொருபது பன்னென்
றுருநற் புலவன்மூ வைந்தே
அழகுறு மிருமூன் றொருபதி னென்று
மணிகொள்பொன் மூவிரண் டீரைந்
தேயபன் னென்றீ ராறுசுக் கிரர்க்கோ
வியலிரு மூன்றெட்டுப் பதினென்
றேதமற் றிடுமீ ராறுமந் தனுக்கொன்
றீரிரண் டேழ்முத லெட்டெண்
தூயலக் கினத்திற் கொன்றுமூன் றாறு
சொலத்தகு பத்துபன் னென்றும்
தோடிவர் செவியைத் தாவிமீன் டிகலுந்
துணைவிழிப் பணைமுலை மயிலே.

(இ-ள்) குஜன் அஷ்டகவர்க்கை சொல்லுமிடத்து சூரியனுக்கு சூரியன் நின்ற ராசிமுதல் 3-5-6-10-11, சந்திரனுக்கு சந்திரன் நின்ற ராசிமுதல் 3-6-11, குஜனுக்கு குஜன்நின்ற ராசிமுதல் 1 2 4-7-8-10-11, புலவனாகிய புதனுக்கு அவன்நின்ற ராசிமுதல் 3-5-6-11, மணிகளை அணிந்திரா நின்ற குருவுக்கு தான்நின்ற ராசிமுதல் 6-10-11-12, சுக்கிரனுக்கு 6 8-11 12, மைந்தனாகிய சனிக்கு 1-2-7-8 9-10-11, பரிசுத்தமாகிய லக்கினத்திற்கு 1-3-6-10-11 ஆகுமென தோடு அணிந்த செவியுடையவர்களைச் சேர்ந்து துணைவிழிப் பணைமுலை பெண்ணே! அறிக எ-று. (1094)

## புதன் அஷ்டகவர்க்க விபரம்

புந்தியி லிரவிக் கைந்திரு மூன்றொன்
பான்பதி னென்றுபன் னிரண்டாம்
புகழ்மதி யிதியிரண் டீரிரண் டிருமூன்றெட்
டொருபது புகல்பதி னென்றும்
வந்துசேய் மந்தற் கொன்றிரண் டொருநான்
கொளிருமே ழாதியைந் தெண்ணும்
உயர்புகற் கொன்றோர் மூன்றுநல் லைந்தா
றெண்பஃ தாதிநான் கெண்ணும்
சந்தமார் பொன்னுக் காறிரு நான்கு
சாற்றுபன் னென்றுபன் னிரண்டே

தருபுகர் தனக்கொன் ருதியைந் தெண்ணுந்
தானெட் டொன் பதுபதி னொன்றும்
தந்தலக் கினத்திற் கொன்றிரண் டொருநான்
காறிரு நான்குசார் பத்துத்
தருபதி னென்றுந் தன்மல ருறைபொன்
தன்னைநேர் தார்குழ லாளே.

(இ-ள்) புதன் அஷ்டகவர்க்கு 54-ல் சூரியனுக்குரிய பரல் 5-6-9-11-12 யாவரும் புகழத்தக்க சந்திரனுக்கு ?-4-6-8-10-11, குஜனுக்கும் சனிக்கும் 1-2-4-7-8-9-10-11, புதனுக்கு 1-3-5-6-9-10-11-12, குருவுக்கு 6-8-11-12 சுக்கிரனுக்கு 1-2-3-4-5-8-9-11, லக்கினத்திற்கு 1-2-4-6-8-10-11 ஆகும் என தாமரை கமலங்கள்போன்ற இதழ்களையுடையவளே! சொல்வாய். ()

## குரு அஷ்டகவர்க்க விபரம்

பொன்னினி லிரவிக் கொன்ருதி நான்கெண்
புகலுமே ழாதியைந் தெண்ணும்
புதுமதிக் கிரண்டே ழைந்தொன்பான் பதினொன்
ருய்ப்புகல் சேய்தனக் கொன்று
துன்னிரண் டொருநான் கேழிரு நான்கீ
ரைந்துபன் னொன்றுபுந் திக்கோ
சொல்லுமொன் றிரண்டு நான்குநல் லைந்தோ
ருறென்ப தாதிமூன் றெண்ணும்
நன்னயப் பொன்னுக் கொன்ருதி நான்கெண்
ணவிலுமே ழெட்டொரு பஃது
நாட்டுபன் னொன்றும் புகர்க்கிரண் டைந்தா
றென்பஃ தாதிமூன் றெண்ணும்
சுன்னினுக் கொருமூன் றைந்திரு மூன்றீ
ராறுலக் கினத்தினுக் கொன்று
துய்யரண் டொருநான் கைந்திரு மூன்றே
ழொன்பஃ தாதிமூன் றெண்ணும்.

(இ-ள்) குரு அஷ்டகவர்க்கு பரல் 56-ல் சூரியனுக்குரிய பரல் 1-2-3-4-7-8-9-10-11, சந்திரனுக்கு 2-5-7-9-11 என்றும், குஜனுக்கு 1 2-4-7-8-10-11 என்றும், புதனுக்கு 1-2-4-5-6-9-10-11, நன்மையைத்தரும் குருவுக்கு 1-2-3-4-7-8-10-11 என்றும், சுக்கிரனுக்கு 2-5-6-9-10-11 என்றும், சனிக்கு 3-5-6-12 என்றும், லக்கினத்திற்கு 1-2-4-5-6-7-9-10-11 என்றும் கூறுவர் எ-று.

(1096)

## சுக்கிரன் அஷ்டகவர்க்க விபரம்

புகரினி லிரவிக் கெட்டுபன் னொன்றீ
ராறுதிங் கட்கொன்று முதலாப்
புகலுமைந் தெண்ணு மெட்டுமொன் பான்பன்
னொன்றுபன் னிரண்டதாஞ் சேய்க்குத்

த்தவுறு மூன்று நான்கிரு மூன்றோன்
பான்பதி ஞென்றுபன் னிரண்டாம்
சார்புதன் மூன்றைந் தாறுநல் லொன்பான்
றங்குபன் ஞென்றுபொன் னவர்க்கு
இகலுறு மைந்தெட் டொன்பஃ தாதி
யேற்றமூன் றெண்ணதாம் புகருக்
கியலுமொன் ருதி யானவைந் தெண்ணு
மெட்டுமுன் ஞனநான் கெண்ணும்
நகருமங் நற்கு மூன்றுநான் கைந்து
நவிலுமெட் டாதிநான் கெண்ணும்
நாட்டுலக் கினமொன் ருதியைந் தெண்ணு
நாலிரண் டொன்பொன் பன்ஞென்றே.

(இ-ள்) *சுக்கிரன் பரல்* 52-*க்கு சூரியனுக்குரிய பரல்* 8-11-12, *சந்திரனுக்கு* 1-2-3-4-5-8-9-11-12, *குஜனுக்கு* 3-4-6-9-11-12 *என்றும், புதனுக்கு* 3-5-6-9-11, *குருவுக்கு* 5-8-9-10-11 *என்றும், சுக்கிரனுக்கு* 1-2-3-4-5-8-9-10-11, *மூடவனுன சனிக்கு* 3-4-5-8-9-10-11 *எனவும், லக்கினத்திற்கு* 1-2-3-4-5-8-9-11 *எனவும் கூறுவர் எ-று.* (1097)

## *சனி அஷ்டகவர்க்க விபரம்*

சனியினி லிரவிக் கொன்றிரண் டொருநான்
கேழுட னெட்டுநற் பத்து
தங்குபன் ஞென்று மம்புலிமூன் ருரும்
பதிஞெறு சேய்த னக்கே
இனியமூன் றைந்தா றீரைந்து பதிஞென்
றீராற தாகும்புந் திககோ
இயலுறு மாறு மெட்டாதி யைந்தெண்
ணிமயவர் குருவினுக் கைந்து
கனியுமோ ராறு பதிஞென்றீ ராறுங்
கவிக்குநல் லாறுபன் ஞென்று
காட்டுமீ ராறுங் கனவரை வனச
மாமுகை நேர்முலை யாளே
புனைகரு மேனிச் சனியொரு மூன்றைந்
தாறுபன் ஞென்றெனப் புகல்வர்
போற்றும்லக் கினத்திற் கொன்றுமூன் றொருநான்
காறுபத துப்பதி ஞென்றே.

(இ-ள்) *சனிக்குரிய மொத்த பரல்* 30-*க்கு சூரியனுக்கு* 1-2-4-7-8-10 11 *எனவும், சந்திரனுக்கு* 3-6-11 *எனவும், குஜனுக்கு* 3-5-6-10-11-12 *எனவும். புதனுக்கு* 6-8-9-10-11-12 *எனவும், குருவுக்கு* 5-6-11-12 *எனவும், சுக்கிரனுக்கு* 6-11-12 *எனவும், சனிக்கு* 3-5-6-11 *எனவும், லக்கினத்திற்கு* 1-3-4-6-10-11 *எனச் சொல்வாய் எ-று.*

(வி-ரை) அஷ்டகவர்க்கசக்கரம் என்பதும், அதை அறிந்துகொள்வதும் எப்படியெனில்? நிலத்தில் கோடுகளால் இராசி சக்கரப்படி 12-அறைகள் செய்துக்கொண்டு முன் சொல்லிய அஷ்டகவர்க்க விபரப்படி கோடு இட்டு மொத்தம் காண்பதே ஒவ்வொருவர்க்குரிய சமுதாய பிந்து விபரம் எனப்படும் அதன்பின்னர் திரிகோணம் காணவும வேண்டும்.

உதாரணம்: சூரியன் பரல் 48 ஐ சோதிப்போம்.

| | | | |
|---|---|---|---|
| ல-3 | சனி 3 | 6 | 5 |
| 4 | சமுதாயம் 48 | | 5 |
| 4 | | | அ-ச கு-4 |
| 3 | 5 | 1 சந் | 2 பு-கு |

**சூரியன் பரல் 48-க்கு விபரம்**

| | | | | | | | | |
|---|---|---|---|---|---|---|---|---|
| சூரியன் | 1 | 2 | 4 | 7 | 8 | 9 | 10 | 11 |
| சந்திரன் | | | | | 3 | 6 | 10 | 11 |
| குஜன் | 1 | 2 | 4 | 7 | 8 | 9 | 10 | 11 |
| புதன் | | | 8 | 6 | 9 | 10 | 11 | 12 |
| குரு | | | | | 5 | 6 | 9 | 11 |
| சுக்கிரன் | | | | | | 6 | 7 | 12 |
| சனி | 1 | 2 | 4 | 7 | 8 | 9 | 10 | 11 |
| லக்கினம் | | | 3 | 4 | 9 | 10 | 11 | 12 |

மேற்சொன்னபடி சமுதாயத்தைக் கண்டபிறகு திரிகோணம் காண வேண்டும். திரிகோணம் காணும விபரம் பின்வருமாறு. (1098)

---

# திரிகோண சோதனை விபரம்

வேறு

கோணமூன்றிற்பரல்சரியாக் குலவின்மூன்றுமெடுத்திடுக
கோணநதனிலொன்றிறகுறையிற் குறைந்தபடியேகுறையிரண்டும்
கோணந்தனிலொன்றிறபரலே கூடாதிருக்கிற்சோதனையாம்
கோணந்தனக்குமில்லையெனக் கூறுவனசமலர்மானே.

(இ-ள்) கோணங்கள் என்கிற மேஷம் சிங்கம் தனுசு-1, ரிஷபம் கன்னி மகரம்-2, மிதுனம் துலாம் கும்பம்-3, கடகம் விர்ச்சிகம் மீனம் இவ்வாறான கோணராசிகளில் 3 இராசிகளிலும் பரல் என்னும் எண்கள் சரியாக இருந்தால் அம்மூன்றிலுமுள்ள பரலை எடுத்துவிடவேண்டும். அம்மூன்று ராசிகளிலொன்றில் பரல் குறைந்திருக்குமாகில், குறைந்தபடி மற்ற இரண்டு ராசிகளையும் சரிசெய்யவேண்டும. மூன்று ராசிகளிலொன்றில் பரல் இல்லாதிருந்தால் சோதனையே கிடையாதெனக் கூறுவாய் எ-று.

(வி-ரை) கோணங்கள் மூன்றிலொன்றில் பரல் குறைந்து இருந்தால் குறைந்த மற்ற இரண்டையும் சரிசெய்யவும் என்றதால் நாம் சோதித்தபடி மேஷம் சிங்கம் தனுசு இம்மூன்றில் மேஷத்திலும் தனுசிலும் மூன்றும், சிங்கத்தில் மாத்திரம் 4 இருப்பதால் அதில் ஒன்றை எடுத்துவிட்டோமானால் மூன்றுராசியும் 3-பரலேநிற்கும். ரிஷபம் கன்னி மகரம் இம்மூன்றினுள் கன்னியில்மாத்திரம் இரண்டு பிந்தும், ரிஷபத்தில் 6-ம், மகரத்தில் நான்கும் இருப்பதால் கன்னியாராசியிலுள்ள இரண்டுபிந்தின்படியே மற்ற இரண்டையும சமப்படுதத ரிஷபத்தில் ஐந்தும், மகரத்தில் இரண்டும் எடுத்துவிடவேண்டும் இவ்வாறே மற்றைய மிதுன துலா கும்பம் கடக விருச்சிக மீனம் இவைகளையும் சரிபடுத்துவோமாகில் கீழ் கண்டவாறு அமையும்.

| | | | |
|---|---|---|---|
| 3 | 3 | 2 | 1 |
| 1 | திரி கோணம் | | 3 |
| 2 | | | 3 |
| 3 | 3 | 1 | 2 |

இதையே திரிகோணம் எனப்படும். (1099)

---

# ஏகாதிபத்திய சோதனை

மானேயிரண்டுமனைதனிலு மருவிக்கோள்களின்றாலும்
தேனேகோணின்றிடுமனையிற் பரலுற்றென்றினிலதெனினும்
தாஞரிரண்டிற்கோளின்றி மன்னுமொன்றில்பரலுறினும்
காஞர்சிங்ககடகத்திற் கனமேசோதித்திடுதலிலே

(இ-ள்) அழகு பொருந்திய பெண்ணே! ஏகாதிபத்திய சோதனை எவ்விதமெனில்? முன்சொன்ன திரிகோணபரலைவைத்து இரண்டு மனைகளான எதிர் எதிர ராசி என்னும் மேடம் விர்ச்சிகம்-1, ரிஷப துலாம்-2, மிதுனம் கன்னி-3, கடகம் சிங்கம்-4, தநுசு மீனம்-5, மகரம் கும்பம்-6, எனனும் இடங்களைப் பார்க்கும்போது இரண்டு ராசிகளிலும் கிரகமிருந்தாலும், அவவிரண்டு இராசிகளிலும் பரல் ஏற்றகுறைச்சலாக இருந்தாலும், இரண்டு இராசிகளிலும் கிரகங்களில்லாதிருந்து ஒன்றுக்கொன்று பரல் ஏற்றக்குறைவாக இருந்தாலும் குறைந்தபடியே சரிசெய்யவேண்டும். கடக சிங்கம் இவ்விரண்டிற்கு மாத்திரம் சோதனை செய்யவேண்டியதில்லை எ-று.

இல்லாதிரணடுராசியிற்கோ ளியலும்பரல்கள்சரியுறினும்
வல்லாக்கோளுற்றிடுமனைபா மூாகிமற்றென்றுற்றிடினும்
வில்லாக்கோளுற்றிடும்பரற்கு மேவுமெதிரிற்சமன்குறையேல்
அல்லாகுழலாயப்பரலே யகற்றுமென்பாரறிவோரே.

(இ-ள்) மேற்சொன்னபடியே எதிர் எதிரான இரண்டு ராசிகளிலும் கிரகமிருந்து பரல்கள் ஒன்றுக்கொன்று ஏற்றக்குறைவின்றி சரியாக இருந்தாலும், அல்லது இரண்டிலும் கிரகமிருந்து ஒன்றில்மாத்திரம் பரலிருந்து மற்றொன்றில் பரலில்லாதிருந்தாலும், கிரகங்களிருந்த இரண்டு ராசியிலும் குறையாமல் பரல் சரியாகயிருந்தாலும், இனிமையான குரலையுடையவளே! அப்பரலை மொத்தம் எடுத்துவிடவேண்டும என கற்றறிந்தோர் கூறுவார் எ-று. (1101)

ஒராய்கோளோர்மனையுறமற் றொன்றிலதிகப்பரலுறினும்
சீராார்கோளின்றிப்பரல்கள் சேர்ந்தொன்றிற்கதிகமதேல்
வாரார்கொங்கைமதிவதன மானேர்விழிநன்மடமாதே
ஏரார்பரலைநேராக விருக்கச்செய்வாயெனவுரைத்தார்.

(இ-ள்) அழகு வாய்ந்த பெண்ணே! மேற்சொன்ன இராசிகளிரண்டினுள் ஓர் இராசியில் கிரகமிருந்து மற்றோர் இராசியில் கிரகமில்லாதிருக்க, இவ்விரண்டினுள் பரல் ஏற்றக்குறைவாக இருக்குமானால் கிரகங்களே இல்லாதிருந்து ஒன்றிற்கொன்று ஏற்றக்குறைவான பரல் இருந்தாலும், குறைந்தபடியே மற்றதை சரிசெய்ய வேண்டுமென நீண்ட பார்வையையுடையவளே! சொல்வாய் எ-று. (1102)

---

# சர்வா அஷ்டகவர்க்க விபரம்

வேறு

உரைத்தகோள்க ளுறுஞ்சமுதாயமாய்
விரைத்தவார்குழ லவ்வவ்விராசியில்
நிரைத்தபிந்தையொன ருய்ச்செறித்திட்டதே
திரைததநற்சரு வாட்டகஞ்சேருமே.

(இ-ள்) அழகுவாய்ந்த பெண்ணே! கிரகங்கள் இருந்தாலும் இல்லாவிடினும் சூரியனமுதல் சனிவரையிலும் ஏழுபேர் அஷ்டகவர்க்கையும் மேஷமுதல் மீனம்வரையில் பன்னிரண்டு ராசியிலுள்ள பரலையும் கூட்டிக் கண்டதே சர்வா அஷ்டகவர்க்கம என்பா எ-று.

(வி-ரை) சூரியன் முதல் சனியாதியான ஏழுபேர் அஷ்டகவர்க்கையும், மேடம் 7-ராசியும், ரிஷபம் 7-ராசியையும், மிதுனம் 7-ராசியையும் கூட்டிக் கண்ட தொகையாம். (1103)

## அஷ்டகவர்க்க யோகம் சொல்லும் விதம்

வேறு

இலக்கினமாதி நந்நான்குவிட்டி விருந்திடுபரல்களைக்கூட்டி
உலப்பறுமுன்று தொகையினின்முறையே யுயர்பரலைக்கொடுபலன்கள்
நலப்பறுமுன்றுகூறிட்டே நலம்பெறமொழிந்திடவேண்டும்
சிலைப்புருவத்தன்மதிநுதற்கருங்கட் செய்யவாய்பைந்தொடியாளே.

(இ-ள்) ஜெனனராசி எதுவோ அந்த ராசிமுதல் நான்கு நான்கு ராசியாகக் கூட்டிக் கண்ட தொகை மூன்றில் எந்த தொகை அதிகப்படுகிறதோ அக்காலம் அவனுக்கு ஏற்படும் வயதை மூன்றுகூறிட்டு, பரல் அதிகமான கண்ட மெதுவோ அவ்வயதில் யோகம் உண்டென சிலையையொத்த அழகும் புருவமும் வாய்ந்தவளே! சொல்வாயாக எ-று. (1104)

## கெண்டாகால நக்ஷத்திர விபரம்

### வேறு

இரவிக்கொன்பான்மதிக்கும் புந்திக்குமீரிரண்டாம்
குருவினுக்கைந்துசேய்க்கு மூன்றுசுக்கிரனுக்கோரேழ்
வருசனிக்கிருநான்காகு மிராசியின்சமுதாயத்தை
விரவுசேர்த்திடத்தாற்ருக்கு மேவுமூவொன்பாற்கீந்தே.

(இ-ள்) சூரியன் நின்ற ராசிக்கு-9, சந்திரனுக்கும் புதனுக்கும்-4, குருவுக்கு 5, சுக்கிரனுக்கு-7, சனிக்கு-8, இவ்விடங்களில் சமுதாயத்திலுள்ள பிந்துவினால் யோகாதிபத்திய மொத்தத்தை பெருக்கி 27-ஆல் வகுத்து மிகுந்துள்ளதே கெண்டாகால நக்ஷத்திர விபரமாம் எ-று. (1105)

வருபலன்வளர்பிறைக்கே மகிழசுபதிமுன்னாகத்
திருவுறுதேய்பிறைக்கே சேரவிட்டம்முன்னாக
விரவுடனெண்ணிக்கண்ட நாள்குருமேவுங்காலம்
பரவுநற்பலன்தான்கூடிற் பகர்காரகர்க்குக்கண்டம்.

(இ-ள்) மேற்சொல்லியபடி 27-ல் வகுத்து மிகுந்தவை ஜெனனகாலம் வளர்பிறைச் சந்திரனில் அஸ்வனி முதலும், தேய்பிறைச் சந்திரனில் அவிட்டமுதலாகவும் எண்ணிவந்த நக்ஷத்திரராசிகளில் குரு கோசாரப்படி ஓர் வருட சஞ்சாரகாலம் சவுக்கியமுண்டாகுமென்றும், சனி இரண்டரை வருடம் வாசகாலம் அந்தந்த வர்க்கத்தாருக்கு அரிட்டம் என்றும் கூறுவர் எ-று. (1106)

## சர்வா அஷ்டகவர்க்கைக் கொண்டு வயது சொல்லும் விபரம்

தான்சமுதாயமுப்பான் மேலுறிற்பூரணஞ்சாற்றும்
ஆன்வையைந்தின்மீதி லடுததிடின்மத்திமந்தான்
ஈனமாமிதன்கீழற்பமாம் பலன்வியமீரைந்தில்
வான்பரல்குறைந்திலாபம் வருஞ்சன்மமுயரில்யோகம்.

(இ-ள்) சர்வா அஷ்டகவர்க்கம் பரலில் ஒவ்வொரு வர்க்கத்தார் ராசியிலும், பிந்துகள் முப்பதுக்கு மேலிருந்தால் பூரணயோகமென்றும், பிந்துகள் 25-க்குமேல் இருந்தால் மத்திபயோகம் என்றும், இருபத்தைந்துக்கும் குறைந்திருக்குமாகில குறைந்த யோகமென்றும், காரியஸ்தானத்திலும் விரயஸ்தானத்திலும் பிந்துகள் அதிகமின்றி இருக்குமாகில் வருமானம் உண்டென்றும் ஜெனனராசி எதுவோ அந்த ராசியில் மிகுந்த பிந்திருந்தால் யோகமுண்டென்றும் கூறுவர் எ-று. (1107)

பதிஞென்றில்வியமிருந்தாற் பகர்ந்திடுசெலவுமேலாம்
துதிபெறுபத்தின்மேலாம் வியமெனிற்சகடம்தோற்றும்
வதியுமாறெட்டீராறின் மென்பரற்றெகைக்குமேலாய்ப்
பதிபுகழிரண்டொன்பான்பன் ஞென்றுறிற்பகர்வர்யோகம்.

(இ-ள்) லாபஸ்தானமான 11-ஆம் இராசியைவிட விரயஸ்தானமான 12-ஆம் ராசியில் பிந்துகள் அதிகமிருக்குமாகில் வருமானத்திற்கு மேலான விரயம் உண்டென்றும், 10-ஆமிடமான காரியஸ்தானத்தைவிட 12-ஆம் ராசியில் உயர்வாய் பிந்திருக்குமாகில் சக்கரங்களுடைய ரதம் உண்டாகும். ரோகம் அஷ்டமம் விரயம் என்னுமிடங்களைவிட தனம் பாக்கியமென்னும் 2-9 இவ்விராசிகளில் பிந்துகள் உயர்ந்திருக்குமாகில் யோகத்தையே தரும்.

## இராசி குணகாரம்

இடபஞ்சிங்கமீரைந்தா மியன்மேடங்கோளீரேழாம்
கடகமோர்நான்கும்மீனங் கருதுமீராறேயாகும்
மடஞ்சேர்கன்னிசுறுவைந்தா மன்னுந்தனுவொன்பானும்
குடம்பன்ஞென்றுமிதுனந்தே ளெட்டாம்ராசிகுணகாரம்.

(இ-ள்) ஏகாதிபத்திய பிந்தை 10-ஆல் ரிடபம் சிங்கம் இவ்விரண்டு ராசிகளிலுள்ள பிந்தையும் துலாம் மேஷம் இவ்விரண்டுராசியையும் 7-லும் நான்கிஞல் கடகராசியையும், 12-ஆல் மீனராசியிலுள்ள பிந்தையும், 5-ஆல் மகரம் கன்னி இவ்விராசியிலுள்ள பிந்தையும், 9 ஆல் தனுவிலுள்ள பிந்தையும், 8 ஆல் மிதுனம் விருச்சிகம் இவ்விராசியிலுள்ளபிந்தையும் கும்பராசியிலுள்ள பிந்தை பதிஞென்ருலும் பெருக்கிக் காணுவதே இராசி குணகாரமெனக் கூறுவர் எ-று. (1109)

## கிரக குணகாரம்

### வேறு

நற்றவக்குருபத்துசேய்
உற்றவெட்டுநற்சுக்கிரன்
முற்றவேழுமோரைந்துமே
மற்றையோர்குணகாரம்.

(இ-ள்) ஏகாதிபத்திய ராசியிலுள்ள பிந்துக்களை மேன்மையான தவங்களையுடைய குரு எந்தராசியிலிருந்தாலோ அந்தராசியிலுள்ள பிந்தை 10-லும், குஜனிருந்தலக்கின பிந்தை 8-ஆலும், சுக்கிரனிருந்த லக்கினத்திலுள்ள பிந்தை 7-ஆலும், மற்றுமுள்ள சூரியன் சந்திரன் புதன் சனி இவர்கள் இருந்த லக்கின பிந்தை 5-ஆல் பெருக்கி காணுவதே கிரக குணகாரம் என்று கூறுவர் எ-று. (1110)

## மாதங்க லப்தம்

### வேறு

குணகாரத் தொகையிரண்டை யொன்ருய்க்கூட்டி
குலமுந்நூற் றிருபானுன் கதனுற்றுக்கும்
கணமதனை முந்நூற்ரு டறுபானெந்தில்
கழித்துவருஞ் சேடத்தை முவொன்பானில்

உணக்கமற வேகழித்த பலனுண்டாகும்
உயர்சேடந் தனையிரா றதனிற்றக்கி
இணக்கமுடன் முன்போல வியற்றிக்கொண்ட
வீவுமதி சேடமுப்பா னேயத்தாக்கே.

(இ-ள்) *ராசிகுணகாரம் கிரககுணகாரம் இவ்விரண்டிலுமுள்ள பிண்டத்தை ஒன்றசேர்த்துக் கூட்டி 324-ஆல் பெருக்கிவரும் தொகையை 365-ல் வகுக்க நேரும் ஈவு தொகையை 27-ஆல் வகுக்க வருவதே வருஷமெனப்படும். மேற்சொன்னபடி கண்டதுபோக மிகுந்துள்ள எண்களை 12-ஆல் பெருக்கி 27-பேருக்கு கொடுத்தது போக மிகுந்துள்ளது திங்களெனப்படும். அதில் வரும் மிச்சத்தை 30-ஆல் பெருக்கவேண்டும் எ-று.* (1111)

தாக்குதொகை தனைமுன்போ லீந்தபேறு
தானுளாஞ் சேடத்தை யறுபான்றன்னில்
தாக்கிவரு பேறுகன்ன லாமிவ்வாறே
தான்காணும் வாய்மற்றை வினாடியாதி
போக்கருமவ் வவர்வருட மாதமாதி
புறம்பாக வைத்ததனை யரணஞ்செய்யும்
தாக்கணங்கே வகையதனை விரித்துச்சொல்வர்
சாதகநூ லுணர்ந்தபெரி யோர்கடாமே.

(இ-ள்) *முப்பதால் பெருக்கிக்கண்ட தொகையை 27-ஆல் வகுத்த தேன் தினம் என்றும், அதில் மிகுந்துள்ள தொகையை 60-ஆல் பெருக்கிக்கண்டது நாழிகை எனவும், மற்றும் விநாடி முதலியவைகளும் இவ்வாறே பெருக்கிக் காண்பதே வருடமென்றும் மாதமென்றும் நாள் நாழிகை விநாடி எனவும், ஜோதிடமறிந்தோர் குணகாரங்களை கூறுவரெனச்சொல்வாய் எ-று.*

(வி-ரை) *அஷ்டகவர்க்கைக்கொண்டு வயது சொல்லும் விபரம்: மேற்சொன்ன கிரக குணகாரங்களைக்கொண்டு வயது சொல்லும் விபரம் சாதக சிந்தாமணி நூலுடையார் ஓர்விதமாகக் கூறியிருக்கிறார். அதாவது சாதக சிந்தாமணி அஷ்டகவர்க்கப்படலத்தில் 1575-ம் செய்யுள்முதல் 1577-ஆம் செய்யுள் வரையிலுள்ள மூன்று செய்யுளில் கிரக குணகாரத்தையும், ராசி குணகாரத் தொகை இரண்டையும் ஒன்றுசேர்த்து 7-ல் பெருக்கி 27-ஆல் வகுத்தது ஆண்டெனவும், மிகுந்த எண்ணை 12-ஆல் பெருக்கி 27-ஆல் வகுத்து வருவது மாதமெனவும், மிகுந்த எண்ணை 30-ஆல் பெருக்கி 27-ல் வகுத்ததே தினமெனவும், மிகுந்ததை 60-ஆல் பெருக்கி 27-ல் வகுத்ததே நாழிகை எனவும், அதில் மிகுந்ததை 60-ஆல் பெருக்கி 27-ஆல் வகுத்ததே விநாடி எனவும் கூறினர். அந்த வருடம் மாதம் தினம் நாழிகை விநாடி இவைகளை அறிந்து 364-ல் பெருக்கி 365-ல் வகுத்த வருடம் மாதம் நாள் நாழிகை விநாடி என்றனர். ஆனால் சாதகஅலங்காரத்தில் குறுக்கிசொல்லினர். இவர் பெருகச்சொன்னர். ஆதலால் ஜோதிடர்கள் எதைக்கொண்டாலும் ஒன்றேயாம். இதனால் வயதுவிபரம் பின்வருமாறு அறிக.* (1112)

*வேறு*

ஓர்மனைதனிலிரண்டு கோள்கணின்றிடினுநீசம்
ஏறுமத்தமானம் பகையினுங்கடகத்தோனும்

ஆர்மதிகூடினுலு மலதுநேர்நோக்கினுலும்
தார்குழலாளேயக்கோளாயுளிற்பாதிதள்ளே.

(இ-ள்) இரண்டு கிரகங்கள் சேர்ந்து ஒரே ராசியிலிருந்தாலும், கூடி நீச்சம் பெற்றாலும், தன் பலமிழந்து இருக்கிறன் என்று சொல்லத்தக்க அஸ்தமயமாகயிருக்கினும் அல்லது பார்த்தாலும் அழகுவாய்ந்தபெண்ணே! அந்த வயதில் அவர்கள் கொடுக்கவேண்டிய ஆயுளில் அரைபாகம் தள்ளுக.

தள்ளுநண்டதிற்சுபக்கோ டங்கிடின்மூன்றிலொன்று
தள்ளுநட்பதனினின்ற கோளுக்குநான்கிலொன்று
தள்ளுபாபக்கோணீசம் பகையுறிலெட்டிலொன்று
தள்ளுபாபக்கோணட்புத் தானுறினுன்கிளென்றே.

(இ-ள்) சுபகிரகங்கள் சேர்ந்து கடகராசியிலிருந்தால் மூன்றில் ஒரு பாகம்வயதும், எந்தராசியாயினும் கிரகங்கள் நட்புபெற்றிருந்தால் நான்கில் ஒருபாகமும், பாவக்கிரகங்கள் ஐவரும் பகை நீச்சம் பெற்றிருப்பாராயின் 8-ல் ஒருபாகமும், பாவகிரகங்கள் நட்புபெற்றிருந்தால் நான்கில் ஒருபாகமும் தள்ளி மிகுந்ததைச் சேர்த்து வயது சொல்லுக எ-று. (1114)

ஒன்றியகோள்கணின்ற வோரைக்குவியத்திற்பாவர்
நின்றிடிலவர்கொடுத்த வாயுள்களெல்லாநீங்கும்
துன்றபன்னென்றிற்பாதி சொல்பத்திஞன்கிலொன்று
நன்றுபாக்கியமெட்டொன்று நவிலெட்டிற்பதிஞருமே.

(இ-ள்) கிரகங்கள் எந்த ஓரையில் இருந்தார்களோ அந்த ஓரைக்கு விரயஸ்தானத்தில் சனி அங்காரகன் ராகு கேது முதலிய பாவகிரகங்கள் இருப்பார்களேயானால் அவர்கள் கொடுக்கும் முழு ஆயுளும் வீணேயாம். லாபமாகிய 12-ஆம் ராசியில் பாவகிரகங்களிருந்தால் அரைபாக வயது போம். ஜீவனஸ்தானமும் கேந்திரங்களில் ஒன்றுமான பத்தாமிடத்தில் பாவகிரகங்களிருந்தால் நான்கில் ஒருபாக வயது போகுமென்றும், 1-8-9 இவ்விராசிகளில் பாவகிரகங்களிருந்தால் அரைக்கால்பாகமும் வீசம்பாகமும் போகும் எ-று.
(1115)

ஆம்வகைசுபக்கோளாயின் பாபருக்கறைந்தவெண்ணில்
தாமதிற்பாதிநீங்குஞ் சார்பாபராட்சியச்சம்
எழுறிலரணமில்லை விரும்புகோளாட்சியச்சம்
வாமமார்குழலாய்பத்தி னென்றுமேற்கூட்டுவாயே.

(இ-ள்) மேற்சொன்னபடியே சுபக்கிரகங்கள்சேர்ந்து முன்சொல்லிய வண்ணம் இருப்பார்களேயானால் பாவகிரகங்களுக்கு சொல்லியதில் அரை பாகத்தைத் தள்ளி மற்றதை சேர்த்துக்கொள்ளவும். ஆகஷி உச்சம் ஏறிய பாவக்கிரகங்களாயின் அவர்கள் கொடுக்கும் வயதுக்கு குறையாதிருக்கும். சுபகோட்களான சந்திரன் புதன் குரு சுக்கிரன் இவர்கள் ஆகஷி உச்சம் ஏறி இருப்பார்களேயானுல் 10-ல் ஒருபாகத்தைதள்ளி ஒருபாகத்தைக் கூட்டுவாய் எ-று.
(1116)

# கால சக்கர விபரம்



['கால சக்கரம்' என்பதை சொல்லும்படி உமையவள் கேட்க, சிரசில் கங்கையையும் சந்திரனையும் அணிந்த பரமசிவன் சொல்லுகிறார். அதை முற்காலங்களில் வடமொழியில் இருந்ததை தமிழில் மொழிபெயர்த்து அநேகர் கூறியுள்ளார். ஆயினும் அதனில் பல குற்றங்கள் உண்டு. அதனைப் பொருட்படுத்தாது சோதிடர்கள் பின்வருமாறு அறிதல் நலம்.]

வேறு

சேய்க்கேழு பொன்பத்துச் சேரரவிக் கைந்தாகும்
வாய்ந்தபுகர்க் கீறெட்டா மாலுக்கோ—ஏய்த்தொன்பான்
சந்திரற்கு மூவேழாஞ் சாற்றுஞ் சனிக்கோநான்
கிந்தமுறை ராசிகளுக் கெண்.

(இ-ள்) சூரியனுக்கு-5, சந்திரனுக்கு-21, குஜனுக்கு-7, புதனுக்கு-9, குருவுக்கு-10, சுக்கிரனுக்கு-16, சனிக்கு-4, இவ்வாறே ஒவ்வொரு கிரகங்களுக்கு தன் சுயவீடுகளின் ஆண்டு எனக் கூறுவர் எ-று. (1117)

வலவோட்டு இடவோட்டு நக்ஷத்திர விபரம்

கேள்சகடு மான்றலையாழ் கேடின்மக முன்மூன்றும்
நீள்சுளகு தேள்கேட்டை நேரோணம்—வாளவிட்டம்
செக்குமிட வோட்டாகுஞ் சேராப் பதினைந்தும்
இங்குமொழி யாய்வல வோட்டே.

(இ-ள்) இடவோட்டு நக்ஷத்திரங்கள்-12. அவையாவன: ரோகணி-1, மிருகசிரம்-2, திருவாதிரை-3, மகம்-4, பூரம்-5, உத்திரம்-6, விசாகம்-7, அனுஷம்-8, கேட்டை-9, திருவோணம்-10, அவிட்டம்-11, சதயம்-12 ஆகிய இவைகளாம். இவைபோக மற்றுமுள்ள அசுவணி-1, பரணி-2, கார்த்திகை-3, புனர்பூசம்-4, பூசம்-5, ஆயிலியம்-6, அஸ்தம்-7, சித்திரை-8, சுவாதி 9, மூலம்-10, பூராடம்-11, உத்ராடம்-12, பூரட்டாதி-18, உத்ரட்டாதி-14, ரேவதி-15, ஆகிய இவைகள் வலவோட்டென்று கூறுவர் எ-று.

காலசக்கர நக்ஷத்திர திசை விபரம்

ஏயபரி யாரலெரி யேதமறு சோதியா
வாயவத்த மூலமுத்தி ராடமுடன்—தூயநடை
நான்புரட்டை மீரைந்தி னன்முதற்காற் காட்சி
நீளதனு வீருகவரு நேர்.

(இ-ள்) மேடம் ரிஷபம் மிதுனம் சுகம், சிங்கம் கன்னி துலாம் விருச்சிகம் தனுசு இந்த அதிபதிகள் அசுவனி கார்த்திகை புனர்பூசம் ஆயிலியம் அஸ்தம் சுவாதி மூலம் உத்திராடம் பூரட்டாதி ரேவதி என்னும் தச நக்ஷத்திரங்களின் முதற்கால புண்ணும் எ-று.

(வி-ரை) இதனை சுவாதி என்றும், இதற்குரிய 9-இராசிகள் 9-கால சக்கரம் 5-க்கு அபகாரம் வருஷம் 100-க்கு சுவுநாள்-25, நாழிகை 12-க்கு உடல்-மேடம், உயிர்-தனுசு.

| புக்தி விபரம் | வரு | மா | நாள் | நாழி |
|---|---|---|---|---|
| மேஷ குஜன் | 0 | 5 | 29 | 24 |
| ரிஷப சுக்கிரன் | 1 | 1 | 13 | 12 |
| மிதுன புதன் | 0 | 7 | 19 | 48 |
| கடக சந்திரன் | 1 | 5 | 19 | 12 |
| சிங்க ரவி | 0 | 4 | 6 | 0 |
| கன்னி புதன் | 0 | 7 | 19 | 48 |
| துலா சுக்கிரன் | 1 | 1 | 13 | 12 |
| விருச்சிக செவ்வாய் | 0 | 5 | 29 | 24 |
| தனுசு குரு | 0 | 8 | 12 | 0 |

(1119)

நேரிரண்டாங் காருக்கு நீண்மகரங் கும்பஞ்சேல்
சீரறுதேள் கோலரிவை தேர்கடகம்—வார்சீயம்
தணடாகு மூன்றுங்காற் றுனிடப மேடமீன
கொண்டகும்ப மகரம்தனுசு கூறு.

(இ-ள்) மேலெழுதிய அசுவனி-கார்த்திகை-புனர்பூசம்-ஆயிலியம்-அஸ்தம்-சுவாதி-மூலம்-உத்திராடம்-பூரட்டாதி-ரேவதி என்னும் 10-நக்ஷத்திரங்களின் இரண்டாங்காலையும், மகரம்-கும்பம்-மீனம்-விர்ச்சிகம்-துலாம்-கன்னி கடகம்-சிங்கம்-மிதுனம் என்னும் இக்கோட்களுண்ணும் எ-று.

(வி-ரை) மீனத்தில் நின்று விருச்சிகத்தில் பாய்வதனால் சிங்க விலோகதி எனப்படும். இதனை சோதிக்க அசுவனி இரண்டாங்காலில் ரிஷப வெள்ளி காலசக்கரவருடம் அபகாரம்-85, சவு மாதம்-2, நாள்-7, நாழிகை 45, விநாடி-52, முக்காலே மூன்றுவீசம். இதற்கு உடல்-மகரம், உயிர்-மிதுனம்.

| புக்தி விபரம் | வரு | மா | நாள் | நாழி | விநாடி | |
|---|---|---|---|---|---|---|
| மகர சனி | 0 | 9 | 0 | 3 | 32 | |
| கும்ப சனி | 0 | 9 | 1 | 8 | 32 | |
| மீன குரு | 1 | 9 | 17 | 28 | 49 | |
| விருச்சிக செவ்வாய் | 1 | 3 | 24 | 21 | 6 | |
| துலா சுக்கிரன் | 3 | 0 | 4 | 14 | 7 | |
| கன்னி புதன் | 1 | 8 | 9 | 52 | 56 | |
| கடக சந்திரன் | 3 | 11 | 18 | 3 | 22 | மண்டூககதி |
| சிங்க ரவி | 0 | 11 | 8 | 49 | 24 | சர்ப்பகதி |
| மிதுன புதன் | 1 | 8 | 9 | 52 | 56 | குக்குடகதி |

முன்சொன்ன அசுவனி-கார்த்திகை-புனர்பூசம்-ஆயில்யம்-அஸ்தம்-சோதி-மூலம்-உத்திராடம்-பூரட்டாதி-ரேவதி என்னும் 3-ஆம் காலே ரிஷபம்-மேஷம்-மீனம்-கும்பம்-மகரம்-தனுசு. (2) மேஷம்-ரிஷபம்-மிதுனம் என்னும் ராசிக்கோட்களுண்ணும்.

அறிவிப்பு:— (2) என்று குறிக்கப்பட்டது மேல் எழுதிய நக்ஷத்திரங்களின் மூன்றுங்காலுக்கு 1121-ம் செய்யுளிலும் மேஷம்-ரிஷபம்-மிதுனம் என்னும் மூன்று ராசிகள் சொல்லப்பட்டிருக்கின்றன. ஆதலால் அவை மேற்சொன்ன 3-ஆம்பாதத்திற்குரிய ராசிகளாகையால் எடுத்துக்கொள்ளப்பட்டு பின்வரும்செய்யுளுக்கு 4-ஆம் பாதத்திற்குமாத்திரம் உரை கூறப்

பட்டன. இதனை தவறு என்று எண்ணுமல் பின் செய்புளை வாசித்து தெரிந்துகொள்ளுக. மேற்காட்டிய 3-ஆம் காலுக்கு மிதுன புதன் திசை வருடம் 9-க்கு அபகாரம் 83-க்கு ஈவுமாதம்-1, நாள்-9, நாழிகை-2, விநாடி பத்தே அரைக்கால். இதற்கு உடல்-ரிஷபம், உயிர்-மிதுனம்.

| புக்தி விபரம் | வருடம் | மீ | நாள் | நாழி | விநாடி | |
|---|---|---|---|---|---|---|
| ரிஷப சுக்கிரன் | 1 | 8 | 24 | 34 | 42 | |
| மேஷ செவ்வாய் | 0 | 9 | 3 | 15 | 11 | |
| மீன குரு | 1 | 1 | 9 | 21 | 41 | |
| கும்ப சனி | 0 | 5 | 5 | 8 | 41 | |
| மகர சனி | 0 | 6 | 6 | 8 | 41 | |
| தனுசு குரு | 1 | 1 | 10 | 21 | 41 | |
| மேஷ செவ்வாய் | 0 | 9 | 2 | 5 | 11 | சிங்கதி |
| ரிஷப சுக்கிரன் | 1 | 8 | 24 | 34 | 32 | |
| மிதுன புதன் | 0 | 11 | 21 | 19 | 32 | (1120) |

கூறுமேடம் மிடபங் கோப மிதுனமாம்
வீறுநாற் காலுக்கு மேலவன்—நாறுமலர்க்
கோதாய் முதலாகக் கொண்மீன ராசிவரை
ஏகமறு புத்திக் கினம்.

(இ-ள்) முன் சொல்லிய அசுவனி-கார்த்திகை-புனர்பூசம்-ஆயிலியம்-அஸ்தம்-சோதி-மூலம்-உத்திராடம்-பூரட்டாதி-ரேவதி இவைகளின் 4-ம் காலை கடகம்-சிங்கம்-கன்னி-துலாம்-விர்ச்சிகம்-தனுசு-மகரம்-கும்பம்-மீனம் இந்த அதிபதி கோட்களென்பர் எ-று.

(வி-ரை) இவைகட்கு கடக சந்திரன் திசை வருஷம் 21-க்கு அபகாரம் 86-க்கு ஈவுமாதம்-2, நாள்-27, நாழிகை-54, விநாடி-52. உடல்-கடகம், உயிர்-மீனம்.

| புக்தி விபரம் | வருடம் | மீ | நாள் | நாழி | விநாடி | |
|---|---|---|---|---|---|---|
| கடக சந்திரன் | 5 | 1 | 16 | 2 | 48 | |
| சிங்க ரவி | 1 | 2 | 19 | 32 | 5 | |
| கன்னி புதன் | 2 | 2 | 11 | 10 | 0 | |
| துலா சுக்கிரன் | 3 | 10 | 29 | 30 | 42 | |
| விருச்சிக குஜன் | 1 | 8 | 15 | 20 | 56 | |
| தனுசு குரு | 2 | 5 | 9 | 4 | 11 | |
| மகர சனி | 0 | 11 | 21 | 37 | 40 | |
| கும்ப சனி | 0 | 11 | 21 | 31 | 40 | |
| மீன குரு | 2 | 5 | 9 | 4 | 11 | (1121) |

இனமரர் பரணியேழிற் பூசஞ்சித் திரையோ
டனமேசீர் நாளுத்தி ரட்டாதி—எனுமைந்தின்
முதற்காறேன் கோணிவை முன்னுகட கஞ்சீயம்
மிக்கதண் டேராடு மீனம்.

(இ-ள்) விருச்சிகம்-துலாம்-கன்னி-கர்க்கடகம்-சிங்கம்-மிதுனம்-ரிஷபம் மேஷம்-மீனம என்னும் இராசிக்கோட்கள் பரணி-பூசம்-சித்திரை-பூராடம் உத்திரட்டாதி என்னும் நாட்களின் முதற்காலை உண்ணும்.

(வி-ரை) இவைகட்கு சிங்காதித்தன் கால சக்கிரவருடம்-5. அதில் அபகாரம்வருடம்-100, ஈவுநாள்-18 இதற்கு உடல்-விர்ச்சிகம், உயிர்-மீனம்.

| புக்தி விபரம் | ௵ | ௴ | நாள் | நாழி | விநாடி | |
|---|---|---|---|---|---|---|
| விருச்சிக செவ்வாய் | 0 | 4 | 6 | 0 | 0 | |
| துலா சுக்கிரன் | 0 | 9 | 18 | 0 | 0 | |
| கன்னி புதன் | 0 | 5 | 20 | 0 | 0 | |
| கடக சந்திரன் | 1 | 0 | 18 | | | மண்டூககதி |
| சிங்க ரவி | 0 | 3 | 0 | | | சர்ப்பகதி |
| மிதுன புதன் | 0 | 5 | 12 | | | குக்குடகதி |
| ரிஷப சுக்கிரன் | 0 | 9 | 18 | | | |
| மேஷ செவ்வாய் | 0 | 4 | 6 | | | |
| மீன குரு | 0 | 6 | 0 | | | |

(1122)

மீயிரண்டே கும்பமான் வின்மேடந் தெட்டரிவை
ஆயாரு மூன்றிற்கோல் தொட்டாறும்—ஏயதேள்
கோலரிவை யாகுங் குளிர்ச்சீயந் தண்டுமுதல்
ஏலவின்மட் டாமிடமா யீறு.

(இ-ள்) மேற்சொன்ன பரணி-பூசம்-சித்திரை-பூராடம்-உத்ரட்டாதி என்னும் நக்ஷத்திரங்களின் இரண்டாங்காலே கும்பம்-மகரம்-தனுசு-மேஷம் ரிஷபம்-மிதுனம்-கர்க்கடகம்-சிம்மம்-கன்னி இந்தஅதிபதிகோட்களும் 3-ம் காலே துலாம்-விருச்சிகம்-தனுசு-மகரம்-கும்பம்-மீனம்-விருச்சிகம்-துலாம்-கன்னி இந்த ராசியதிபக்கோட்களும், 4-ம்காலே கர்க்கடகம்-சிம்மம்-மிதுன ரிஷப-மேஷ-மீன-கும்ப-மகர-தனுசு இந்தராசிக்கோட்களுமுண்ணும்எ-று,

(வி-ரை) மேற்சொன்ன நக்ஷத்திரங்களின் 2-ம்காலுக்கு கன்னிபுதன் காலசக்கர வருடம் 6-ல் அபகாரம் 85-க்கு ஈவு மாதம்-1, நாள்-8, நாழி-7, விநாடி மூன்றரையே மூன்றுவீசம். இதற்கு உடல்-கும்பம், உயிர்-கன்னி.

| புக்தி விபரம் | ௵ | ௴ | நாள் | நாழி | விநாடி | |
|---|---|---|---|---|---|---|
| கும்ப சனி | 0 | 5 | 2 | 28 | 0 | |
| மகர சனி | 0 | 5 | 2 | 28 | 0 | |
| தனுசு குரு | 1 | 0 | 21 | 10 | 6 | |
| மேஷ குஜன் | 0 | 8 | 29 | 48 | 25 | சிங்கவிலோ |
| ரிஷப சுக்கிரன் | 1 | 8 | 9 | 58 | 0 | கனம் |
| மிதுன புதன் | 0 | 11 | 13 | 3 | 32 | |
| கடக சந்திரன் | 2 | 2 | 20 | 28 | 17 | |
| சிங்க ரவி | 0 | 6 | 10 | 25 | 18 | |
| கன்னி புதன் | 0 | 11 | 13 | 8 | 32 | |

மேற்சொன்ன நக்ஷத்திரங்களின் 3-ஆம் காலுக்கு துலா சுக்கிரன் வருடம் 16-க்கு அபகாரம் ஈவு 83-க்கு மாதம்-2, நாள்-9, நாழிகை-28, விநாடி-51¼. இதற்கு உடல்-துலாம், உயிர்-கன்னி.

| புக்தி விபரம் | ௵ | ௴ | நாள் | நாழி | விநாடி |
|---|---|---|---|---|---|
| துலா சுக்கிரன் | 3 | 1 | 1 | 21 | 41 |
| விருச்சிக குஜன் | 1 | 4 | 5 | 46 | 59 |
| தனுசு குரு | 1 | 11 | 9 | 58 | 33 |
| மகர சனி | 0 | 9 | 7 | 35 | 6 |

| புத்தி விபரம் | ஞூ | மீ | நாள் | நாழி | விநாடி | |
|---|---|---|---|---|---|---|
| கும்ப சனி | 0 | 9 | 7 | 35 | 26 | |
| மீன குரு | 1 | 11 | 8 | 58 | 33 | |
| விருச்சிக செவ்வாய் | 1 | 4 | 5 | 46 | 59 | சிங்கவிலோ |
| துலா சுக்கிரன் | 3 | 1 | 0 | 21 | 41 | கனம் |
| கன்னி புதன் | 1 | 8 | 24 | 34 | 42 | |

மேற்சொன்ன நக்ஷத்திரங்களின் 4-ம் காலுக்குச் சொல்லியபடி விர்ச்சிக செவ்வாய் வருடம் 7-க்கு அபகாரம்-86, ஈவு நாள்-29, நாழிகை-18, விநாடி எட்டேகாலே அரைக்கால். உடல்-கடகம், உயிர்-தனுசு.

| புத்தி விபரம் | ஞூ | மீ | நாள் | நாழி | விநாடி | |
|---|---|---|---|---|---|---|
| கடக சந்திரன் | 1 | 8 | 15 | 20 | 56 | |
| சிங்க ரவி | 0 | 4 | 26 | 30 | 56 | |
| மிதுன புதன் | 0 | 8 | 23 | 43 | 15 | குக்குடகதி |
| ரிஷப சுக்கிரன் | 1 | 3 | 18 | 50 | 14 | |
| மேஷ செவ்வாய் | 0 | 6 | 25 | 6 | 59 | |
| மீன குரு | 0 | 9 | 23 | 1 | 24 | |
| கும்ப சனி | 0 | 8 | 27 | 12 | 32 | |
| மகர சனி | 0 | 8 | 27 | 12 | 34 | |
| தனுசு குரு | 0 | 9 | 23 | 1 | 24 | (1123) |

ஈருமுரோ கணிமகமேர் சுவகோண மிவற்றின்
வீருமுற் காற்குவில் லாதிதண்டும்—கூறுசிங்கம்
நண்டிரண்டாங் கால்கன்னி நற்கோறேண் மீனகும்பம்
அண்டுசுரு விற்றேள் கோலாம்.

(இ-ள்) தனுசு-மகரம்-கும்பம்-மீனம்-மேடம்-ரிஷபம்-மிதுனம்-சிம்மம்-கர்க்கடகம். இவைகள் உரோகணி-மகம்-விசாகம்-திருவோணம் இவற்றின் முதற்காலையுண்ணும், 2-ம்காலை கன்னி-துலாம்-விருச்சிகம்-மீனம்-கும்பம்-மகரம்-தனுசு-விர்ச்சிகம்-துலாம் இவ்விராசி கோட்கள் உண்ணும் எ-று.

(வி-ரை) மேற்சொன்ன நக்ஷத்திரங்களின் முதற்காலுக்கு விருச்சிக செவ்வாய் காலசக்கரவருடம் 7-க்கு அபகாரவருடம்-86 ஈவுநாள்-29, நாழி 18, விநாடி எட்டேகாலேஅரைக்கால், இதற்கு உடல்-தனுசு, உயிர்-கடகம்.

| புத்தி விபரம் | ஞூ | மீ | நாள் | நாழி | விநாடி | |
|---|---|---|---|---|---|---|
| தனுசு குரு | 0 | 9 | 28 | 1 | 24 | |
| மகர சனி | 0 | 8 | 27 | 12 | 33 | |
| கும்ப சனி | 0 | 8 | 27 | 12 | 38 | |
| மீன குரு | 0 | 9 | 23 | 1 | 24 | |
| மேஷ குஜன் | 0 | 6 | 25 | 6 | 56 | |
| ரிஷப சுக்கிரன் | 1 | 3 | 18 | 50 | 15 | |
| மிதுன புதன் | 0 | 8 | 23 | 43 | 15 | |
| சிங்க ரவி | 0 | 4 | 26 | 30 | 42 | குக்குடகதி |
| கடக சந்திரன் | 1 | 1 | 8 | 20 | 56 | யூககதி |

மேற்செய்புளில் சொல்லியபடி 2-ம் காலுக்கு துலாம்-வெள்ளி காலசக்கர வருடம் 16-க்கு அபகாரவருடம்-83, ஈவுமாதம்-2, நாள்-9, நாழி-23, விநாடி 55-ம் காலேவீசமுமாம். இதற்கு உடல்-கன்னி, உயிர்-துலாம்.

| புக்தி விபரம் | ௵ | ௴ | நாள் | நாழி | விநாடி | |
|---|---|---|---|---|---|---|
| கன்னி புதன் | 1 | 8 | 24 | 34 | 42 | |
| துலா சுக்கிரன் | 3 | 1 | 0 | 21 | 41 | |
| விருச்சிக குஜன் | 1 | 4 | 5 | 46 | 59 | |
| மீன குரு | 1 | 11 | 8 | 58 | 33 | தாரகதி |
| கும்ப சனி | 0 | 9 | 7 | 35 | 26 | |
| மகர சனி | 0 | 9 | 7 | 35 | 26 | |
| தனுசு குரு | 1 | 11 | 8 | 58 | 33 | |
| விருச்சிக குஜன் | 1 | 4 | 5 | 46 | 9 | |
| துலா சுக்கிரன் | 3 | 1 | 0 | 21 | 41 | (1124) |

ஆமூன்றுங் காலுக் கரிவையரி நண்டுதண்டும்
வாமிடப மாடுதனு மான்குடமாம்—தேமொழிகேள்
மீனு டெருது மிதுனஞ்சிங்க நண்டரிவை
தானுங்கோ றேள்கடைக்கால் சாற்று.

(இ-ள்) முன்செய்யுளில் கூறிய ரோகணி-மகம்-விசாகம்-திருவோணம் இவற்றின் 3-ம்காலை கன்னி-சிம்மம்-கர்க்கடகம்-மிதுனம்-ரிஷபம்-மேடம்-தனுசு-மகரம்-கும்பம் இவைகள் உண்ணுமெனவும், மீனம்-மேடம்-ரிஷபம்-மிதுனம்-சிங்கம்-கடகம்-கன்னி-துலாம்-விர்ச்சிகம் இவைகளுண்ணும் எ-று.

(வி-ரை) மேற்சொன்ன நக்ஷத்திர 3-ம்காலுக்கு கன்னி-புதன் கால சக்கர வருஷம் 9-ல் அபகாரவருடம் 85-க்கு ஈவுமாதம்-1, நாள்-8, நாழி-7, விநாடி மூன்றரையேகால் ஆகும். இதற்கு உடல்-கன்னி, உயிர்-கும்பம்.

| புக்தி விபரம் | ௵ | ௴ | நாள் | நாழி | விநாடி | |
|---|---|---|---|---|---|---|
| கன்னி புதன் | 0 | 11 | 13 | 3 | 32 | |
| சிங்க ரவி | 0 | 6 | 10 | 35 | 18 | |
| கடக சந்திரன் | 2 | 2 | 20 | 28 | 14 | |
| மிதுன புதன் | 0 | 12 | 13 | 3 | 32 | |
| ரிஷப சுக்கிரன் | 1 | 8 | 9 | 52 | 56 | |
| மேஷ குஜன் | 0 | 8 | 26 | 46 | 25 | |
| தனுசு குரு | 1 | 0 | 21 | 10 | 35 | சிங்கவிலோ |
| மகர சனி | 0 | 5 | 2 | 28 | 14 | கனம் |
| கும்ப சனி | 0 | 5 | 2 | 28 | 14 | |

மேற்சொன்ன நக்ஷத்திரங்களின் 4-ம்காலுக்கு சிம்ம சூரியன் கால சக்கர வருடம் 5-ல் அபகார வருடம் 100-கு ஈவு நாள்-18. இதற்கு உடல்-மீனம், உயிர்-விருச்சிகம்.

| புக்தி விபரம் | ௵ | ௴ | நாள் | நாழி | விநாடி | |
|---|---|---|---|---|---|---|
| மீன குரு | 0 | 6 | 0 | 0 | 0 | |
| மேஷ குஜன் | 0 | 4 | 6 | 0 | 0 | |
| ரிஷப சுக்கிரன் | 0 | 9 | 18 | 0 | 0 | |
| மிதுன புதன் | 0 | 5 | 12 | 0 | 0 | |
| சிங்க ரவி | 0 | 3 | 0 | 0 | 0 | |
| கடக சந்திரன் | 1 | 0 | 18 | 0 | 0 | குக்குடகதி |
| கன்னி புதன் | 0 | 5 | 12 | 0 | 0 | வாரணகதி |
| | | | | | | மண்டூககதி |

| புக்தி விபரம் | வரு | மீ | நாள் | நாழி | விநாடி | |
|---|---|---|---|---|---|---|
| துலா சுக்கிரன் | 9 | 0 | 18 | 0 | 0 | |
| விருச்சிக குஜன் | 0 | 4 | 6 | 0 | 0 | (1125) |

சாற்றுமக சிரம்யாழ் சார்பூர முத்திரமும்
போற்றுமனு டங்கேட்டை போரவிட்டம்—ஏற்றுமுதற்
காலுக் கிடமாக் கயலாதி ஞண்டுவரை
கோலக் குவிமுலையாய்க் கூறு.

(இ-ள்) கயலென்ற மீனராசிமுதல் ஞெண்டு என்னும் கடகம்வரையிலுள்ள மீனம்-கும்பம்-மகரம்-தனுசு-விர்ச்சிகம்-துலாம்-கன்னி-சிம்மம்-கர்க்கடகம் என்னும் ராசிக்கோட்கள் மிருகசிரம்-திருவாதிரை-பூரம்-உத்திரம்-அனுஷம்-கேட்டை-அவிட்டம்-சதயம் என்னும் 8-நக்ஷத்திரங்களின் முதற்காலை புண்பார்கள் எ-று.

(வி-ரை) இதற்கு காலசக்கரம் கடகசந்திரன் வருஷம் 21-ல் அபகாரம் வருடம்-86, ஈவுமாதம்-2, நாள்-27, நாழிகை-54, விநாடி-25. உடல்-மீனம், உயிர்-கடகம், (1126)

கூறுதண்டு குண்டைமறி கூன்சிலைதொட் டேறளவும்
வீறுமிரு காற்காமே லாங்காற்கு—மீறும்
அரிமதியாம் பெண்கோ றேளாமீன் குடமாம்
கரிகுழலா யாமெனவே சொல்.

(இ-ள்) முன் சொல்லிய நக்ஷத்திரங்கள் 8-க்கும் இரண்டாங்காலை மிதுனம்-ரிஷபம்-மேஷம் - தனுசு மகரம்-கும்பம் - மீனம்-மேஷம்-ரிஷபம் இவ்விராசிக் கோட்கள் உண்ணும், மிதுனம்-சிங்கம்-கர்க்கடகம்-கன்னி-துலாம்-விர்ச்சிகம்-மீனம்-கும்பம்-மகரம் இவ்விராசிக் கோட்கள் மேற்சொன்ன நக்ஷத்திரங்களின் 3-ஆம்காலை உண்ணுமெனவும் கூறுவர் எ-று

(வி-ரை) மேற்சொன்ன இரண்டாங்காலுக்கு மிதுனபுதன் காலசக்கிர வருடம் 9-க்கு அபகாரம் 83-க்கு ஈவுமாதம்-1, நாள்-9, நாழிகை-2, விநாடி 10-க்கும் உடல்-மிதுனம், உயிர்-இடபம். மூன்றாங்காலுக்கு இடப வெள்ளி காலசக்கிர வருடம் 10-க்கு அபகாரம்-85, ஈவுமாதம்-2, நாள்-7, நாழி-45, விநாடி 5-க்கு உடல்-மிதுனம், உயிர்-மகரம். (1127)

சொல்லுநா லாங்காற்குத் தூயதனு வாதியாய்
வல்லமே டம்வரையொன் பான்மனையும்—நல்லாய்
இடவோட்டாக் கொள்வ ரீராறு காலுக்கும்
விடமார்தே ளாதிவின் மட்டே.

(இ-ள்) முன்சொல்லிய நக்ஷத்திரங்கள் 8-லும் நாலாம்காலை தனுசு விர்ச்சிகம்-துலாம் - கன்னி-சிங்கம்-கர்க்கடகம் - மிதுனம்-ரிஷபம்-மேஷம் இவ்விராசிக்கோட்கள் உண்பர். இதனை அதாவது தனுசுமுதல் இடமாகக் கொண்டு விர்ச்சிகமுதல் தனுசுவரைக் கொள்க எ-று.

(வி-ரை) இதற்கு மேஷ செவ்வாய் காலசக்கிர வருஷம் 7-ல் அபகாரம் 100, ஈவுநாள்-25, நாழிகை-12, உடல்-தனுசு, உயிர்-மேஷம். (1128)

மட்டாருஞ் சக்கரத்தின் வானுண்டிற் கும்புத்தி
தொட்டாரு மாண்டிற்குந் தோகாய்கேள்—நட்டார்

தொகைதம்மை மாறிச் சொலுந்திசை யாண்டுக்கு
மிகைவரும் பேறேபுத்தி மேல்.

(இ-ள்) முன் 1117-ஆம் செய்யுளின்படி காலசக்கிர வருடத்தை மொத்தமாய் அதாவது நக்ஷத்திரபாதப்படி கூடி வருடதிசையை கழித்த மிச்சமாக வருவது ஒவ்வொரு புக்திக்கும் உரியதாகும் எ-று.

(வி-ரை) ஒவ்வொரு நக்ஷத்ரங்களுக்கும் முறையே ராசிகளை சொல்லப் பட்டனர். ஆதலால் இதைப்போலவேஜோதிடர்கள் காலசக்கிரவருடத்தை கூட்டி கணக்கிட்டுசொல்லவேண்டும் என்பதே செய்யுளின் கருத்தாகும். ()

மேடந்தனுசு மீனம்விருச் சிகஞ்சிங்கக் கதியாம்
நாடரிவை நண்டுசிங்க நற்றண்டு—கூடும்
தவளைக் கதிவலநேர் தான்சர்ப்ப வோட்டம்
திவளிடமே மர்க்கடமாச் செப்பு.

(இ-ள்) சிம்மகதி என்பது மீனத்திலிருந்து விர்ச்சிகத்தில் பாய்வது தனுசில் நின்று மேஷத்தில் பாய்வதுவாம். கன்னி-சிம்மம்-கடகம்-மிதுனம் இவற்றில் ஒன்றுக்கொன்று பாய்வது தவளைகதி, வலதுபாக ராசிகளில் எங்கும் ஒரேவரிசையாய் ஓடுவது சர்ப்பகதி, இடதுபக்கம் ஓடுவது மர்க்கட ஓட்டமெனக் கூறுவர் எ-று.

(வி-ரை) இதனை சோதிடர்கள் பலவாறு பிரிக்கவேண்டும். இடமாவது வலமாவது அடுத்து நடப்பது ஜலகதி. மீனத்திலிருந்து விர்ச்சிகத்தில் பாய்வது, தனுசில் நின்று மேடத்தில் பாய்வது சிம்மவிலோகதி. விர்ச்சிகத்தில் நின்று மீனத்தில் பாய்வதும், மேஷத்தில் நின்று தனுசில் பாய்வது தாரககதி. கடகத்திலிருந்து சிம்மத்தில் புரள்வது சர்ப்பகதி. சிம்மகதியிலிருந்து கடகத்தில் புரள்வது யூககதி. சிம்மத்திலிருந்து மிதுனத்தில் பாய்வதும், மிதுனத்திலிருந்து சிம்மத்தில் பாய்வதும் குக்குடகதி கன்னியிலிருந்து கடகத்தில்பாய்வது மண்டூககதி எனவும் ஆராய்ந்துகூறவேண்டும். இதனை சோதிடக் களஞ்சியம் என்னும்நூலில் விபரம் காணலாம். (1130)

செப்புவல வோட்டுக்குச் சேர்ந்தொட்ட லக்கினமெய்
ஒப்பரிய சீவன்விடு மோரையே—தப்புமிட
ஒட்டிற்கு மாரு யுரைவயிற்றி லேசுபர்கள்
கூட்டமுறின் நற்பலனே கூறு.

(இ-ள்) உடல் உயிர் அறிவது எப்படியெனில், வலவோட்டு நக்ஷத்திரங்களுக்கு அதாவது 1118-ஆம் செய்யுள்படி 12-நக்ஷத்திரங்களுக்கும் தான் முதல் லக்கினமே உயிர்விடும் ஓரை என்றும், இடவோட்டு நக்ஷத்திரங்கள் 15-லும் மத்தியில் அல்லது நடுராசியில் சுபகோட்கள் கூடியிருந்தால் மேற்சொன்னபடியே ஆராய்ந்து கூறுவாயாக எ-று.

(வி-ரை) காலசக்கிர மகாதிசைக்கு போதகன் வேதகன் பாசகன் காரகன் முதலியோர் இல்லை என்று அறிக. (1131)

ஆக செய்யுள் பாயிரம் உள்பட - 1146.

சாதக அலங்காரம் மூலமும் விருத்தியுரையும் முற்றிற்று.

உ

மீனாக்ஷி துணை

## சாதக அலங்கார

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி



சாதக அலங்கார செய்யுள் முதற்குறிப்பு அகராதி

முற்றிற்று.

மலர்மகள் பதிப்பு

# அமரம்பேடு. இராஜரத்தின முதலியார்

அச்சிற் பதிப்பித்த

# புத்தக விளம்பரம்

## பெரிய வருஷாதி நூல் விலை ரூ 3

இருக்கு வேதத்தின் சாரமான சோதிட சாஸ்திரத்தை யாவரும் எளிதில் உணருவதற்குச் சுலபமான அறிகுறிபோன்ற பெரிய வருஷாதி நூல் என்னும் இந்நூலை, "விருதுபட்டி பாலய்யாவென்றும், இராமலிங்க சுவாமிகளென்றும் வழங்குகின்ற ஸ்ரீமான் இராமலிங்கக்குருக்கள் அவர்களால் அச்சிட்டபிரதிக்கிணங்க சுத்தமாக வெளியிட்டுள்ளது. இப்புத்தகம் நூதனமுறையில் கிரௌன் சைஸில் பிழைபற பரிசோதித்து அச்சிட்டு பயிண்டுசெய்து இருப்பதால் ஒவ்வொரு சோதிடர்களிடத்திலும் முக்கியமாய் இருக்கவேண்டிய புத்தகம்.

## சோதிட அரிச்சுவடி 4-பாகம் விலை ரூ. 3

இந்நூல் ஒவ்வொரு சோதிடர்களும் எளிதில் உபயோகப்படுத்தும்படியான முறையில் 1-2-ஆம் பாகம் கே. எஸ். வி. மூர்த்தி அவர்களால் எழுதப்பட்டு, டி. எஸ. பார்த்தசாரதி முதலியார் பி. ஏ. அவர்களால் பரிசோதித்தும, பின் 3-4-ஆம் பாகம் காவேரிப்பாக்கம் கே. எம். தெய்வசிகாமணி சோதிடர் அவர்களால் எழுதப்பட்டு அச்சிட்டு ஆக 4-பாகமாக ஒன்றுசேர்த்து அழகிய பையிண்டு செய்தது.

## சோதிட பாலபாடம் விலை ரூ. 3

சகல ஜீவகோடிகளுக்கும் இன்றியமையாத வடமொழியாகிய பல சாஸ்திரங்களாலுங்கூடிய அருமபொருளான அனேக கணிதசாஸ்திரங்களை ஆராயச்சிசெய்து பெருமபாடுமபிரயாசையெடுத்து அனேக சோதிடரைக் கொண்டு ஆராய்ச்சிசெயது சேகரித்து ஆங்கிலம கற்ற ஆடவரும் பெண்களுங்கூட சோதிடத்தின் மர்மததைததெரிந்து, தஙகள் தஙகளது வாழ்நாளின சுகதுக்காதிகளை பிறர் உதவியின்றித் தாமே தெரிந்துகொள்ளும் முறையில் செஞ்சி. ஏகாம்பரமுதலியார அவர்களால் எழுதி முடிவுபெற்ற இந்த சோதிட பாலபாடம் என்னும இந்நூலை, சோதிட நண்பர்கள் விருப்பப்படி ஆரம்பசோதிடாகளமுதல் கணிதசோதிடர்கள்வரை பயனபடும்படி இந்நூலினகண சோதிட ரகஸயஙகளையும பலாபலன முதலியவறறையும் காவேரிபபாககம், கே. எம். தெய்வசிகாமணி சோதிடரைக்கொண்டு எழுதுவித்து, பிழையறப் பரிசோதிதது அச்சிட்டிருக்கிறது.

## அனுபோக ஆரூட சிந்தாமணி விலை ரூ 1

வியாசமகாமுனிவரால் அருளிச்செய்த அனுபோக ஆரூட சிந்தாமணி என்னும் இந்நூல, செஞ்சி. ஏகாம்பரமுதலியார் அவர்களால் சில சோதிட நூற்களைக்கொண்டு எழுதப்பட்டு ஆங்காங்கு சக்கரங்களுடன் சுத்தப்பிரதியாய் அச்சிட்டு இருகலர் ராப்பர் பையிண்டு செய்தது.

**அனுபோக ஜாதக ரகசியம் — விலை ரூ 3**

மனிதர்களுக்கு எல்லாவிஷயத்திலும் உதவியாக இருப்பது சாதகமே தவிர வேறொன்றும் இடையாது. வேதத்தின் ஆறு அங்கங்களின் ஒன்றான ஜோதிஷ சாஸ்திரத்தின் உதவி இல்லாவிடில் நம்முடைய நித்திய கர்ம அனுஷ்டானங்களை சரிவர நடத்த இயலாது இந்த சாஸ்திரத்தை 18- மகரிஷிகள் செய்திருக்கின்றனர். சப்தரிஷிகள் திருவாய்மலர்ந்தருளிய "அனுபோக ஜாதக ரகசியம்" என்னும் இந்நூலை செஞ்சி ஏகாம்பர முதலியார் அவர்கள் ஏற்கெனவே எழுதியதை, காவேரிப்பாக்கம். தெய்வசிகாமணி சோதிடரால் பரிசோதித்து சில அவசியமான அம்சங்களைச் சேர்க்கப்பட்டு நூதனமுறையில் யாவருக்கும் பயன்படுமாறு அச்சிட்டிருக்கிறது.

**பெரிய ருதுநூல் சாஸ்திரம் — விலை ரூ 1-50**

இந்நூல் காவேரிப்பாக்கம் தெய்வசிகாமணிசோதிடர் அவர்களைக் கொண்டு ருதுவாகும் காலம், ருது என்பது என்னவென்பதையும், பன்னிரண்டு பாவ விசேஷத்தால் தன் வாழ்க்கை விஷயம், புத்திரவிஷயம், பர்த்தா விஷயம், பொருள் விஷயம் என்னும் விசேஷங்களும், மாதபலன்-நக்ஷத்திரபலன்-திதிபலன்-வாரபலன்-இலக்கினபலன் என்னும் விசேஷங்களையும், சில முக்கிய நூல்களிலிருந்து தகுந்த மேற்கோளகளுடன் விரிவாகவும், வெள்ளைச் சொற்களாகவும், சோதிடம் கற்போரும கற்றோரும் மற்றுமுள்ள ஆண் பெண்களும் ஓர் ருது ஜாதகத்தைக்கொண்டு அவளின் குணநிசயமும், சுமங்கலி அமங்கலி என்னும இரகசிய விசேஷங்களையும் விரிவாய் எழுதுவித்து சுத்தப்பிரதியாய் அச்சிட்டு அழகிய பையிண்டு செய்திருக்கிறது.

**ஹஸ்தரேகை சாஸ்திரம் 3-பாகம் — விலை ரூ. 3**

இந்த ஹஸ்தரேகை சாஸ்திரம் நமது கைகளிலுள்ள ரேகைகளைப் பார்த்து பலாபலனை அறிந்துக்கொள்ளும வகையில் 1-ஆம் பாகமாகிய ஹஸ்த விமரிசைப் பகுதியும், 2-ஆம் பாகமாகிய ஹஸ்தரேகை விமரிசைப் பகுதியுடன் சுமார் 41-ரேகைப் படங்களின் மூலமாய் தெளிவாய் எடுத்துக் காட்டியும், 3-ஆம் பாகமாகிய சாமுத்திரிகா லக்ஷண சாஸ்திரமும், ஆக மூன்று பாகங்களுடன் விரல்களில் காணப்படும் இரேகை சித்திரத்துடன் அதன் விபரமும் அடங்கியுள்ளது. இந்நூல் எளிதில் அறிந்துக்கொள்ளும் படியான நூதனமுறையில் அச்சிட்டு அழகிய மூவர்ண கலர் முகப்புடன் அழகிய பையிண்டு செய்யப்பட்டது.

**சிற்பசாஸ்திரம் என்னும் மனையடிசாஸ்திரம் — விலை ரூ. 1-50**

மயனென்பவர் அருளிய இந்நூல் சகலமானவருக்கும் உபயோகமாகும் பொருட்டு இராஜமயேந்திரம் சாகரபக்தி அனுசிங்க ராஜ இராமகிருஷ்ண சித்தார்தியார், சுகர்நாடி ஜோதிஷர் ஐயாசாமிப்பிள்ளையவர்கள் இவ்விருவரால் சனத்குமாரவாஸ்து கடகவாஸ்து வீமேசுர உள்ளமுடையான் காலாமிர்த நூல்களைக்கொண்டு ஷை சாஸ்திரத்தைக் கோர்வையாக்கி முன்னர் அச்சிட்ட பிரதிக்கிணங்கியது. இதில் சிலவிடங்களில் சக்கரங்களும் சேர்த்து அச்சிட்டிருக்கிறது.

**புலிப்பாணி சோதிடத் தாய்மகளேசல் 300 விலை ரூ 1-50**

*புலிப்பாணி சோதிடத் தாய்மகளேசல் என்னும் இந்நூலை, திரிசிரபுரம் ஜோஸியம் அரங்கசாமிப்பிள்ளை அவர்களால் ஏட்டுப்பிரதிக்கிணங்க எழுதியதை, இதனுடன் மீன்கால்பலன் என்னும் நக்ஷத்திரபாதபலனும் யோக மஞ்சரியும் சேர்த்து தக்க சோதிடர்களின் உதவியைக்கொண்டு பிழையறப் பரிசோதித்து அச்சிட்டிருக்கிறது.*

**வைத்திய அரிச்சுவடி 4-பாகம் விலை ரூ. 1-25**

*இவை தமிழ்ப்பண்டிதரும், நேடிவ் டாக்டரும், பஞ்சபக்ஷி கணித ஜோதிடருமாகிய கொரக்கோட்டை ப. வடிவேல் செட்டியார் அவர்களால் எழுதப்பெற்று நான்கு பாகங்கள் ஒன்றுசேர்ந்தது. ஆதலால் இதை ஒவ்வொருவரும் மிக எளிதில் தெரிந்துகொள்ளும் முறையில் விளக்கமாய் சரக்கு செய்பாகம் உபயோகிக்கும்முறை நோய்வியாதி பத்தியம் இவைகள் சுத்தப்பிரதியாய் அச்சிட்டிருக்கிறது.*

**கைமுறை குழந்தை வைத்தியம் என்னும்**
**ஹிந்து பால வைத்திய போதினி விலை ரூ 2**

*தற்கால நிலைமைக்கு இயன்றவாறு முதனூல் வழிநூல் என்னும் சித்தர்கள் நூலும் மற்றவர்கள் நூலும்கொண்டே ஆராய்ச்சிசெய்து அனுபவ திருஷ்டாந்தங்களைக்கொண்டு குழந்தைகளுக்கு இசைந்த சிகிச்சாபக்குவங்களைமாத்திரம் ஒருங்கேதிரட்டி, செய்யுட்களாயுள்ளனவற்றை அகராதிகள் வேண்டாது யாவரும் எளிதில் அறியத்தக்க வசனரூபமாக மொழிபெயர்த்து அவ்வசனங்கடோறும் வினாவிடைகளாக வகுத்து, ஏனைய புல்லறிவினர்க்கும் எளிதில் விளங்கும்படி வெள்ளிய பாவனையாக வரையப்பட்டது. இதில் மாந்தவகுப்பு, கணவகுப்பு, கரப்பான்வகுப்பு, குளிகை வகுப்பு, கண்டாவிழ்தவகுப்பு, பாலகிரகதோஷவகுப்புகள் தனித்தனியாக பிரித்து எழுதியுள்ளன. ஆகையால் ஒவ்வொருவரும் ஆ, ச. சி. பாலஞான பரதேசி, செழுமணவை. நல்லண்ணபரதேசி இவ்விருவராலும் கையாண்டு வந்த அனுபவமுறைகள் யாவும் ஷையார்களின் சிஷ்யர் ஞானசுந்தர சுவாமிகள் உத்தரவின்படி சிறுமணவூர். முனிசாமி முதலியாரால் எழுதப்பெற்று சுத்தப்பிரதியாய் அச்சிட்டு அழகிய பையிண்டு செய்துள்ளது.*

**பச்சிலைவர்க்க பசுமூலி அகராதி விலை ரூ 1-50**

*இந்நூல் ககோள சித்தாந்த கணித சதாவதானம் செழுமணவை சித்திரக்கவி தேவேந்திரநாதபண்டிதர் அவர்களால் நூதனமாய்ச் சில ஏட்டுப்பிரதிகளிலிருந்தும் அகராதிகளிலிருந்தும் பல முறைகட்கு இணங்க ஒன்றுசேர்த்து, வாதம் வைத்திய முதலிய விஷயங்கட்கு ஆடுஞ்சரக்கு-64, கூடும் உபரசம்-120, நாடுங்கடைச்சரக்கு-64, அட்டகாமமூலிகை 60-க்கும் தொன்றுதொட்டுப் பழமையாய் வழங்கிவருவனவற்றுள் ஒன்றேனுஞ் சிதறாது வரிசைக்கிரமமாய் அமரவர்க்கமோடு அமைத்து யாவரும் எளிதில் கண்டறிய நுணுக்கமாய் இயற்றியதை சுத்தப் பிரதியாய் அச்சிட்டு அழகிய பையிண்டு செய்யப்பட்டுள்ளது.*